# சத்தியாக்கிரகம்

## மகாத்மா காந்தி
## எழுதியது

தமிழாக்கம் :
ரா. வேங்கடராஜுலு
ஜெயமணி சுப்பிரமணியம்

# பதிப்புரை

சத்தியாக்கிரகம் என்பது மகாத்மா காந்தியடிகள் உலகுக்கு அளித்த தனிச் செய்தியாகும். உலக சரித்திரத்தில், பல நாடுகளில், பல காலங்க்ளில் ஸ்தூல வலிமை குறைந்தவர்கள், ஸ்தூல வலிமை உள்ளவர்களால் தாக்கப்பட்டும், அழிக்கப்பட்டும் இருக்கிறார்கள். ஆன்மிக பலத்தின் மூலம் ஸ்தூல பலத்தை வெல்லலாம்; தனி மனிதர் வாழ்க்கையில் மாத்திரமல்ல, சமூகங்களுக்கும் இது பொருந்தும்; கத்தியின்றி, ரத்தமின்றி செய்யப்படும் போர் வெற்றி கொடுப்பதுடன் வெறுப்பை அகற்றி அன்பும், இன்பமும், பெருவாழ்வும் கொடுக்கின்றது என்ற மகத்தான செய்தியை மக்களுக்கு அளித்தார் காந்தியடிகள். இப்பொழுது அமெரிக்கா, ஆப்பிரிக்கா முதலிய நாடுகளிலும் ஏழை எளியவர் இச் செய்தியால் ஆண்மை பெற்று, நிமிர்ந்து நின்று, அக்கிரமங்களையும் அநீதிகளையும் காந்தியடிகளின் முறை கொண்டு வெற்றி பெற்று வருவதைக் காண்கிறோம். ஈடு இணையற்ற இந்தச் சத்தியாக்கிரகத்தின் தத்துவங்களை விளக்கி மகாத்மா எழுதியிருப்பவைகளையும், பேசியிருப்பவைகளையும் ஒருங்கு திரட்டிக் கொடுப்பதே இந்நூல்.

அன்பையும், சத்தியத்தையும், அகிம்சையையும், துன்பங்களைத் தாமே அனுபவித்துக் கொள்ளுவதையுமே ஆயுதமாகக் கொண்ட இந்தத் தெய்விகப் போர் முறையை, மகாத்மா காந்தி முதன் முதலில் தென்னாப்பிரிக்காவிலே பரீட்சித்து வெற்றி கண்டார். ஏராளமான மக்கள் அம் முறையைக் கையாளுவதில் முதல் அனுபவத்தை அவர் பெற்றதும் அங்கேதான். ஆகையால், தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தைக் குறித்து அவர் எழுதியிருக்கும் வரலாற்றில், சத்தியாக்கிரகத் தத்துவத்தைக் குறித்து அவர் கூறியிருக்கும் அனுபவப் பொன்மொழிகளும் இந்நூலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவில் காந்தியடிகள் நடத்திய ஒவ்வொரு சத்தியாக்கிரகப் போராட்டத்தைக் குறித்தும் அவர் எழுதியவையும், பேசியவையும் வரிசைக் கிரமத்தில் இந்நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இதுவரை வந்த தொகுதிகளை வரவேற்ற தமிழ் மக்கள், இத் தொகுதியையும் ஏற்றருள்வார்களாக.

சென்னை, **தி. சு. அவினாசிலிங்கம்.**

2, அக்டோபர், 1961.


THE TANJORE MAHARAJA SERFOJI'S SARASWATHI MAHAL LIB.
RECEIVED.

# பொருளடக்கம்

பக்கம்

## பகுதி நான்கு

### சத்தியாக்கிரகத்திற்குக் கட்டு திட்டங்கள்



## பகுதி ஐந்து

### சத்தியாக்கிரகத்தின் முக்கிய விதிகள்

## பகுதி பன்னிரண்டு

### இந்திய சமஸ்தானங்களில் சத்தியாக்கிரகம்

## பகுதி பதின்மூன்று

### யுத்தத்தை எதிர்த்துத் தனிப்பட்டவர் சத்தியாக்கிரகம்



## பகுதி பதினான்கு

### சத்தியாக்கிரகத்தில் உண்ணாவிரத தவம்

பக்கம்

## பகுதி பதினைந்து

### சமூகத்தைச் சீர்திருத்த சத்தியாக்கிரகம்



## பகுதி பதினாறு

### கேள்விகளும் பதில்களும்



## பகுதி பதினேழு

### முடிவுரை



### பின்சேர்க்கைப் பகுதி

# மகாத்மாவின் சத்தியாக்கிரகப் போர்கள்

[சத்தியாக்கிரகப் போர்முறையின் கர்த்தாவான மகாத்மா காந்தி, தமது வாழ்நாளில் தென்னாப்பிரிக்காவிலும், பிறகு இந்தியாவிலும் நடத்திய சத்தியாக்கிரகங்களின் விவரங்கள், வரிசைக்கிரமத்தில் கீழே சுருக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

## தென்னாப்பிரிக்காவில்

### 1

### அநீதியான பதிவுச் சட்ட எதிர்ப்பு - 1906

1906-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் டிரான்ஸ்வால் அரசாங்கம் நிறைவேற்றிய இந்தியர்கள் பதிவுச் சட்டம் விசேஷ கெஜட்டில் பிரசுரமாகியது. அந்தச் சட்டத்தின்படி இந்தியர்களும் மற்ற ஆசியாக்காரர்களும் ரிஜிஸ்திராரிடம் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொண்டு, கைரேகை முத்திரைகள் வைத்துச் சீட்டு (குடியேற்றப் பத்திரம்) பெற வேண்டும். அவ்விதம் பதிவு செய்துகொள்ளாதவர்கள் டிரான்ஸ்வாலில் வசிக்கத் தங்களுக்குள்ள உரிமையை இழப்பதுடன், 100 பவுன் அபராதத்துக்கோ அல்லது மூன்று மாதம் சிறைத் தண்டனைக்கோ உள்ளாக வேண்டும். ஆசியாக்காரர்களைத் தனியாக ஒதுக்கும் அந்தச் சட்டத்தை எதிர்த்துப் போராடுவதென்று காந்திஜியின் தலைமையில் முடிவாயிற்று. அந்தப் போராட்டத்துக்குத்தான் முதன் முதலாகச் சத்தியாக்கிரகம் என்ற பெயர் கண்டுபிடிக்கப்பட்டது. தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ள மறுத்த காந்திஜி உள்பட சுமார் இருநூறு பேர்கள் சிறைத் தண்டனை அடைந்தனர். தென்னாப்பிரிக்க அரசாங்கம் எவ்வளவோ மிரட்டியும்கூட, 13,000 பேர்களில் சில நூற்றுக்கணக்கானவர்களே அந்தச் சட்டத்தின்படி தங்களைப் பதிவுசெய்து கொண்டார்கள். சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்தே தீருவதென்று பிடிவாத

மாக இருந்த ஜெனரல் ஸ்மட்ஸ், சத்தியாக்கிரகம் காரணமாக இறுதியில் இறங்கி வந்து காந்திஜியுடன் சமரசம் செய்து கொள்ள நேர்ந்தது. அதன் பலனாக, அந்தச் சட்டத்தில் மாறுதல்கள் ஏற்பட்டுச் சத்தியாக்கிரகம் வெற்றி பெற்றது.

# 2

## மீண்டும் போராட்டம்

பின்னர், ஜெனரல் ஸ்மட்ஸ் காந்திஜியிடம் வாக்களித்தபடி பழைய சட்டத்தை மாற்றாததால், மறுபடியும் ஜோஹன்னஸ்பர்க்கில் நடந்த சத்தியாக்கிரகத்தில் இரண்டாயிரம் இந்தியர்கள் தங்களுடைய குடியேற்றப் பத்திரங்களை, 1908-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 16-ஆம் தேதி நடந்த பொதுக்கூட்டத்தில் வைத்து எரித்தனர். அதன் விளைவாக, காந்திஜி உள்படப் பல சத்தியாக்கிரகிகளுக்கு அபராதமும் தண்டனையும் கிடைத்தன. காந்திஜிக்குச் சிறை உடைகளுடன் மண் வெட்டும் வேலையும் தோட்டி வேலையும் கொடுத்தனர். "இறுதி வரையில் உறுதியுடன் இருங்கள். நமது கஷ்டங்களுக்கு மருந்து துன்பத்தை ஏற்பதுதான். நமக்கு வெற்றி நிச்சயம்" என்று காந்திஜி சிறையிலிருந்து டிரான்ஸ்வால் மக்களுக்கு ஒரு செய்தி அனுப்பியிருந்தார். விசாரணையின்போது அவரை அதிகாரிகள் கை விலங்குகளுடனேயே தெருக்களின் வழியாகக் கோர்ட்டுக்கு அழைத்து வந்தார்கள். சிறையிலும் அபாயகரமான கைதிகள் இருந்த அறையிலேயே அவரை வைத்திருந்தனர். காந்திஜி உள்படச் சிறைபட்ட சத்தியாக்கிரகிகள் யாவரும் பல்வேறு கொடுமைகளுக்கு உள்ளானார்கள். சத்தியாக்கிரகிகளுக்குச் சவுக்கடி கொடுத்ததுடன், போலீசார் அவர்கள்மீது துப்பாக்கிப் பிரயோகமும் செய்தனர். காந்திஜி விடுதலையடைந்த பின், அவர் தம்மைப் பதிவு செய்துகொண்டு குடியேற்றப் பத்திரம் எடுத்துக் கொள்ளவில்லை என்பதற்காக மறுபடியும் கைதியாகித் தண்டனை அடைந்தார்.

# 3

## மூன்றும் முறையும் சத்தியாக்கிரகம்-1913

மறுபடியும் 1913-ஆம் ஆண்டில் குடியேறியவர் கட்டுப்பாடு சட்டம் நிறைவேறியபோது, தென்னாப்பிரிக்காவில் காந்திஜி மூன்றாவது முறையாகச் சத்தியாக்கிரகம் செய்யும்படியான அவசியம் ஏற்பட்டது. அவ்விஷயமாக அரசாங்கத்திற்குச் சமரச

நோக்கம் இராததால், காந்திஜிக்குச் சத்தியாக்கிரகம் செய்வதைத் தவிர வேறு வழியிராமல் போயிற்று.

நேட்டால் மாகாணத்தில் உள்ள நியூகாஸிலிலிருந்து டிரான்ஸ்வால் எல்லையைத் தாண்டிச் சென்ற ஆயிரக்கணக்கான சத்தியாக்கிரகிகளின் அணி வகுப்பிற்குக் காந்திஜி தலைமை வகித்தார். ஏராளமான பெண்கள் உள்பட ஆறாயிரம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். அவர்களில் பலர் சிறைத் தண்டனை அடைந்தனர். ஆடவர்களும் பெண்களும் குழந்தைகளுமாக 2,250 இந்தியர்கள் குடியேற்றச் சட்டத்தை மீறி டிரான்ஸ்வால் பிரதேசத்திற்குள் சென்றார்கள். பின்னர் டிரான்ஸ்வால் அரசாங்கம் கொடிய அடக்குமுறைகளில் இறங்கியது. எனினும், சத்தியாக்கிரகிகள் உறுதியாக இருந்ததால், பிடிவாதமாக இருந்த ஜெனரல் ஸ்மட்ஸ் இறுதியில் பணிந்து காந்திஜியுடன் சமரசம் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. அதன் பலனாக 1914 ஜனவரி 21-ஆம் தேதி சத்தியாக்கிரகம் நின்றது. சிறைத் தண்டனை அடைந்தவர்களை அரசாங்கம் விடுதலை செய்தது. மூன்று பவுன் ஆள் வரியும் ரத்தாயிற்று. இந்தியர்களின் மற்றக் கோரிக்கைகளும் நிறைவேறின. தென்னாப்பிரிக்காவில் நிகழ்ந்த சத்தியாக்கிரகங்களில் இதுதான் கடைசியாகும்.

# இந்தியாவில்

## 1

## கத்தியவார் சுங்க வரி ஒழியப் போர்–1914

கத்தியவாருக்குச் செல்லும் பிரயாணிகளிடமிருந்து அதிகாரிகள் சுங்க வரி வசூலிக்கத் தொடங்கியதால், பிரயாணிகள் கஷ்டத்திற்கு உள்ளாக நேர்ந்தது. இவ்விஷயத்தில் காந்திஜி அக்கறை எடுத்துக்கொண்டு, பிரயாணிகளின் தொல்லைகள் பற்றி வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதினர். சுங்க வரி ஒழியாவிடில், அதை எதிர்த்து சத்தியாக்கிரகம் செய்யத் தயாராக இருக்க வேண்டுமென்றும் அவர் மக்களைக் கேட்டுக்கொண்டார். தென்னாப்பிரிக்காவில் காந்திஜியின் தலைமையில் நடந்த சத்தியாக்கிரகங்களைப் பற்றி பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் அறிந்திருந்ததால் சுங்க வரிகளை உடனே புத்திசாலித்தனமாக ரத்துச் செய்து, சத்தியாக்கிரகத்திற்கு அவசியம் ஏற்படும்படி செய்யாமல் தவிர்த்தது.

## 2

## சம்பாரண் சத்தியாக்கிரகம்-1917

பீகாரைச் சேர்ந்த சம்பாரணில் விவசாயிகள் அவர்களுடைய நிலங்களின் ஒரு பகுதியில் அவுரி பயிர் செய்து தீர வேண்டுமென்று ஐரோப்பியத் தோட்ட முதலாளிகளால் வற்புறுத்தப் பட்டனர். அப்போது செயற்கை சாயம் வர ஆரம்பித்ததால், அவுரி உற்பத்தி லாபகரமானதாக இல்லை. அதற்குப் பிரதியாக வேறு லாபகரமான பயிர்களை வேளாண்மை செய்ய விவசாயிகள் அனுமதிக்கப்படவில்லை. அவ்விதம் செய்வதாயின் அதற்குப் பெருந்தொகை ஈடாகச் செலுத்த வேண்டுமென்று ஐரோப்பிய முதலாளிகள் வற்புறுத்தினர். அவ்விதம் செய்ய மறுக்கும் விவசாயிகளைப் பல விதத்திலும் துன்பப்படுத்தினர். அவர்களுடைய நிலையை விசாரிப்பதற்காகக் காந்திஜி அங்கே சென்றார். அவருக்கு அதிகாரிகள் தடையுத்தரவு பிறப்பித்தனர். காந்திஜி அதை மீறினார். எனினும், அவர் அதற்காகத் தண்டிக்கப்படவில்லை. நிலைமை முற்றுமுன் அரசாங்கம் சம்பாரண் பிரச்னையை விசாரிக்க ஒரு கமிட்டியை நியமித்தது. அந்தக் கமிட்டி தீர விசாரித்துச் செய்த சிபாரிசுகளை அரசாங்கம் அங்கீகரித்ததன் பலனாக, விவசாயிகளின் கஷ்டங்கள் நீங்கின.

## 3

## ஒப்பந்தத் தொழிலாளர் முறை ஒழிப்பு-1917

இத்தனை ஆண்டுகள் வேலை செய்து தீர வேண்டும் என்ற ஒப்பந்தத்தின் மீது வெளிநாடுகளுக்குச் செல்லுவோரே ஒப்பந்தத் தொழிலாளர்கள் என்று கூறப்பட்டு வந்தனர். அதாவது, ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு அவர்கள் அடிமைகளாக இருந்து தீர வேண்டும். அந்த ஒப்பந்தத் தொழிலாளர் முறையை ரத்துச் செய்துவிட வேண்டும் என்பதை இந்தியா முழுவதும் ஆதரித்தது. ஆனால், 'அதை உரிய காலத்தில் ரத்துச் செய்துவிடுவதாக' வைஸ்ராய் லார்டு ஹார்டிஞ்ஜ் கூறினார். 1917 ஜூலை 31-ஆம் தேதிக்குள் அதை ரத்துச் செய்துவிட வேண்டும் என்று இந்தியா முழுவதும் பொதுக்கூட்டங்களில் தீர்மானங்கள் நிறைவேறின. அந்தத் தேதிக்குள் ரத்துச் செய்யாவிடில், சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க காந்திஜி திட்டமிட்டிருந்தார். ஆனால், அதற்கு முன்பே ஒப்பந்தத் தொழிலாளர் முறையை யுத்தம் முடியும்வரை நிறுத்திவைத்திருப்பதாக அரசாங்கம் அறிவித்து, சத்தியாக்கிரகத்தைத் தவிர்த்தது. பிறகு, ஒப்பந்தக் கூலி முறை 1920-ஆம் ஆண்டு அடியோடு ஒழிக்கப்பட்டது.

## 4

## மில் தொழிலாளரின் சத்தியப்போர்-1918

அகமதாபாத் மில் தொழிலாளர்கள் கோரிய சம்பள உயர்வைக் கொடுக்க முடியாதென்று மில் முதலாளிகள் 1918 பிப்ரவரி 22–ஆம் தேதியிலிருந்து மார்ச்சு 11–ஆம் தேதி வரையில் கதவடைத்து விட்டார்கள். பின்னர் அவர்கள் மில்களைத் திறந்தபோது, தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ய முற்பட்டார்கள். தங்கள் சம்பளத்தை 50 சத விகிதம் உயர்த்த வேண்டுமென்று தொழிலாளர்கள் கோரினர். 20 சத விகிதம் உயர்த்துவதாக மில் முதலாளிகள் கூறினர். அப்பிரச்னையைக் காந்திஜி தீர விசாரித்து, 35 சத விகிதம் சம்பள உயர்வு கொடுக்க வேண்டியது நியாயமென்று கருதி, தொழிலாளர்கள் அதை ஒப்புக்கொள்ளும்படியும் செய்தார். ஆனால், முதலாளிகள் அதற்கு இணங்க மறுத்துவிட்டார்கள். எனவே, வேலை நிறுத்தம் தொடர்ந்து நடந்தது. சில நாட்களுக்குப் பிறகு தொழிலாளரின் மன உறுதி தளரத் தொடங்கியதாலும், வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்கள் பட்டினி கிடக்கும்படியான நிலைமை ஏற்படும்போல் தோன்றியதாலும் காந்திஜி உண்ணா விரதம் இருக்க முற்பட்டார். அதைக் கண்ட தொழிலாளர்கள், முதலாளிகள், பொதுமக்கள் எல்லோரும் அதிர்ச்சியடைந்தனர். முதலில் பிடிவாதமாக இருந்த முதலாளிகள், காந்திஜி உண்ணா விரதத்தை ஆரம்பித்ததும் மனம் மாறி, காந்திஜி கூறிய சம்பள உயர்வைக் கொடுக்க இசைந்தனர். 21 நாட்கள் நடந்த அந்த வேலை நிறுத்தம் தொழிலாளர்களின் வெற்றியில் முடிந்தது.

## 5

## ஏழை விவசாயிகளின் சத்தியாக்கிரகம் - 1918

அகமதாபாத் மில் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் முடிந்ததும் முடியாததுமாக, குஜராத்தைச் சேர்ந்த கேடாவில் ஒரு பிரச்னை எழுந்தது. கேடா ஜில்லாவில் பயிர்கள் விளையாததால் பஞ்ச நிலைமை ஏற்பட்டது. எனவே, அந்த வருடத்தில் நிலவரி வசூலை நிறுத்திவைக்க வேண்டுமென்று குடியானவர்கள் கேட்டுக்கொண்டனர். அதற்கு இணங்க அரசாங்கம் மறுத்து விட்டது. காந்திஜி பல கிராமங்களுக்கு நேரில் சென்று பார்த்தார். அதை விசாரிக்க ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டுமென்று கோரினார். அதையும் ஏற்க அரசாங்கம் மறுத்து விட்டது. பாதி வரியையாவது வஜா செய்ய வேண்டுமெனக் காந்திஜி கூறியதற்கும் அரசாங்கம் செவிசாய்க்கவில்லை. இறுதி

யாக கேடா விவசாயிகள் வரி கொடுக்க மறுத்து, சத்தியாக்கிர கத்தில் இறங்கினர். அரசாங்கம் விவசாயிகளைப் பல விதத்திலும் மிரட்டியது. நான்கு மாதப் போராட்டத்திற்குப் பிறகு அதிகாரிகள் சமரசத்திற்கு இணங்கினர். செல்வவந்தர்களான விவசாயிகள் வரி செலுத்திவிட்டால், ஏழை விவசாயிகளுக்கு வரி வஜா செய்கிறோம் என்றார்கள். அதன் பலனைச் சத்தியாக்கிரகம் வெற்றிகரமாக முடிவடைந்தது.

# 6

## முதலாவது அகில இந்தியப் போர் - 1919

ரௌலட் சட்டம் அமலுக்கு வருவதை எதிர்த்து 1919-இல் காந்திஜி நடத்திய சத்தியாக்கிரகம்தான் முதலாவது அகில இந்தியப் போராட்டமாகும். ரௌலட் சட்டம் இந்திய மக்களின் மூலாதார உரிமைகளையே அபகரிப்பதாக இருந்தது. அந்தக் கொடிய சட்டம் அமலுக்கு வருவதை எதிர்த்து இந்திய மக்கள் சத்தியாக்கிரகம் செய்யவேண்டுமென்று காந்திஜி கட்டளையிட்டார். அதாவது ஏப்ரல் மாதம் 6-ஆம் தேதி, வயது வந்த இந்தியர் யாவரும் 24 மணி நேரம் உண்ணாவிரதம் இருக்க வேண்டும். பொது மக்களுக்கான பணிகளைத் தவிர, மற்ற வேலைகளில் ஈடுபட்டுள்ள சகலரும் அன்று வேலை நிறுத்தம் செய்ய வேண்டும். கிராமங்கள் உள்பட இந்தியாவில் உள்ள சகல இடங்களிலும் அன்று பொதுக்கூட்டங்கள் கூடி ரௌலட் சட்டங்களை வாபஸ் செய்துகொள்ளும்படி அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள வேண்டும். இவையே சத்தியாக்கிரகப் போராட்ட நடவடிக்கைகளாகும். மக்கள் இந்த நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்காக ஏப்ரல் 6-ஆம் தேதியிலிருந்து 13-ஆம் தேதி வரையில் ஒரு வாரம் ஒதுக்கிவைக்கப்பட்டது. அப்போது பல இடங்களில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். ஆத்திரமடைந்த மக்களும் பலாத்காரச் செயல்களில் இறங்கினர். அப்போது அமிருதசரஸ் ஜாலியன்வாலா பாக்கில் கூடியிருந்த ஜனங்கள் மீது ஜெனரல் டயரின் தலைமையில் இருந்த ஆங்கிலப் படைகள் சுட்டதால் நூற்றுக்கணக்கான மக்கள் பலியாயினர்; ஆயிரக்கணக்கானவர் காயமடைந்தனர். ஏப்ரல் 18-ஆம் தேதி காந்திஜி சத்தியாக்கிரகப் போராட்டத்தை நிறுத்திவைத்தார்.

## 7

## ஒத்துழையாமை ஆரம்பம்-1920

இந்த ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட ஒத்துழையாமை இயக்கம் இரண்டாவது அகில இந்தியப் போராட்டமாகும். மக்களின் மனக்கொதிப்புக்குக் காரணமான அமிருதசரஸ் படுகொலை, கிலாபத் பிரச்னை இவ்விஷயங்களையொட்டி அரசாங்கத்தின் இரக்கமற்ற போக்கைக் கண்டித்து, காந்திஜி அப்போது வைஸ்ராயாக இருந்த லார்டு செம்ஸ்போர்டுக்கு ஒரு கடிதம் எழுதியதுடன், தாம் பெற்றிருந்த கெய்சர்-இ-ஹிந்த் தங்கப் பதக்கம், ஜுலு யுத்தப் பதக்கம், போயர் யுத்தப் பதக்கம் முதலியவற்றையும் அரசாங்கத்தினிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார். பட்டம், பதவிகளைத் துறத்தல், கல்விச்சாலைகளிலிருந்தும் கலாசாலைகளிலிருந்தும் மாணவர்களை வாபஸ் பெறுதல், பிரிட்டிஷ் கோர்ட்டுகளை வக்கீல்கள் பகிஷ்காரம் செய்தல், மெஸபடோமியாவுக்குச் சிப்பாய்களாகவோ, குமாஸ்தாக்களாகவோ, தொழிலாளர்களாகவோ செல்ல மறுத்தல், சட்ட சபை பகிஷ்காரம், அந்நியநாட்டுச் சாமான்கள் பகிஷ்காரம், காங்கிரஸ் அங்கத்தினர்களின் தொகையைப் பெருக்குதல், கதரைப் பரப்புதல் முதலியவைதான் ஒத்துழையாமைப் போராட்டத்தின் முக்கிய அம்சங்களாகும். ஒத்துழையாமை இயக்கம் காரணமாக 1921-இல் முப்பதாயிரம் பேர் சிறைப்பட்டனர். பர்டோலி தாலுகாவில் வரிகொடாமை இயக்கமும் ஆரம்பமாயிற்று. சௌரி சௌரா என்ற இடத்தில் ஜனங்கள் பலாத்காரத்தில் ஈடுபட்டதால், காந்திஜி பர்டோலி போராட்டத் திட்டத்தைக் கைவிட்டார். 1922-இல் காந்திஜி ஆறு வருடம் சிறைத்தண்டனை அடைந்ததால், அவ்வருடம் நவம்பர் மாதம் ஒத்துழையாமைப் போராட்டம் நிறுத்திவைக்கப்பட்டது.

## 8

## வைக்கம் சத்தியாக்கிரகம்-1924

திருவாங்கூரைச் சேர்ந்த வைக்கம் என்ற ஊரில், கோவிலைச் சுற்றியுள்ள சாலைகளில் செல்ல சாதி ஹிந்துக்களைப் போல் தீண்டாதாருக்கும் உரிமை அளிக்க வேண்டும் என்று கோரி, காங்கிரஸ் தொண்டர்கள் சத்தியாக்கிரகம் செய்தனர். அதையொட்டி காந்திஜியும் திருவாங்கூருக்கு விஜயம் செய்தார். நம்பூத்ரிமாரையும் மகாராணியையும் கண்டு பேசினர். பல மாதங்கள் வரையில் சத்தியாக்கிரகம் நடந்த பிறகு அதிகாரிகள் பிடிவாதத்தைக் கைவிட்டு, கோவிலைச் சுற்றியுள்ள சாலைகளைத்

தீண்டாதாருக்குத் திறந்துவிட்டனர். வைக்கம் சத்தியாக்கிரகம் இறுதியில் வெற்றியைக் கொடுத்தது.

## 9

## நீல் சிலையை அகற்றப் போர் - 1927

1927 செப்டம்பர் மாதம் 3-ஆம் தேதி மகாத்மா காந்தி சென்னைக்கு விஜயம் செய்தார். அப்போது சென்னையில் இளைஞர்கள் நீல் சிலையை அகற்றுவதற்காகச் சத்தியாக்கிரகம் செய்து கொண்டிருந்தார்கள். 1857-ஆம் ஆண்டில் நடந்த முதலாவது இந்திய சுதந்திர யுத்தத்தின்போது பல கொடுமைகள் இழைத்த ஜெனரல் நீலின் சிலை பிரிட்டிஷாரின் பயங்கர ஆட்சிக்கும் பொய்க்கூற்றுக்கும் சின்னமாக இருக்கிறதென்று காந்திஜி கூறினர். அதையொட்டிப் பல சத்தியாக்கிரகிகள் சிறைத் தண்டனை அடைந்தார்கள். அந்தச் சத்தியாக்கிரகத்தின் பலனுக்கு உடனடியாக வெற்றி கிடைக்கவில்லையெனினும், பத்து ஆண்டுகளுக்குப் பிறகு காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டபோது அந்தச் சிலை சென்னை மவுண்ட் ரோடிலிருந்து அகற்றப்பட்டது.

## 10

## பர்டோலி சத்தியாக்கிரகம் - 1928

பம்பாய் அரசாங்கம் நிலவரியை 22 சத விகிதம் உயர்த்தியது. குறிப்பாக பர்டோலி தாலுகாவைச் சேர்ந்த விவசாயிகள் வரி உயர்வு மிகவும் அநீதியானதென்று கண்டித்தார்கள். சர்தார் வல்லபாய் பட்டேலின் தலைமையில் சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. நிலச்சுவான்தார்கள், வரி செலுத்த மறுத்துவிட்டார்கள். அரசாங்கம் பட்டாணியர்களைக்கொண்டு வந்து விவசாயிகளை மிரட்டியும் அவர்களுடைய சொத்துக்களை ஜப்தி செய்தும் தொல்லை கொடுத்தது. சத்தியாக்கிரகிகள் சிறைத் தண்டனை அடைந்தனர். அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட புரூம் பீல்ட் கமிஷனும், வரி உயர்வைக் கண்டித்து, 5 சத விகிதம் உயர்த்தினல் போதும் என்று சிபாரிசு செய்ததால், சத்தியாக்கிரகம் வெற்றிகரமாக முடிவடைந்தது.

# 11

## உப்புச் சத்தியாக்கிரகம் - 1930

பண்டித ஜவாஹர்லால் நேரு தலைமையில் லாகூரிலே நடந்த காங்கிரஸ் மகாசபையில், இந்தியாவின் லட்சியம் பூரண சுதந்திரமே என்று பிரகடனம் செய்யப்பட்டது. காங்கிரசின் தீர்மானத்திற்கிணங்க, 1930 ஜனவரி மாதம் 26-ஆம் தேதி இந்தியாவெங்கும் சுதந்திர தினம் அனுஷ்டிக்கப்பட்டது. காந்திஜி அகமதாபாத்திலிருந்து உப்புச் சத்தியாக்கிரகம் செய்வதற்காக டண்டிக்குப் புறப்பட்டார். ஏப்ரல் மாதம் 6-ஆம் தேதி இந்தியா முழுவதும் லட்சக்கணக்கானவர்கள் உப்புச் சட்டத்தை மீறிச் சிறை சென்றார்கள். பல இடங்களில் மக்கள் உப்புக் கிடங்குகளையும் மறியல் செய்தனர். அரசாங்கத்தின் அடக்குமுறையும் போலீஸ் தடியடியும் துப்பாக்கிப் பிரயோகங்களும் தாண்டவமாடின. 1931-இல் 95,000 பேர் சட்ட மறுப்புச் செய்ததற்காகத் தண்டனை அடைந்தனர். மே மாதம் காந்திஜி சிறைப்பட்டார். இறுதியாக, பல நாட்கள் வரையில் பேச்சு வார்த்தைகள் நடந்த பின் மார்ச்சு 5-ஆம் தேதி காந்தி-இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டது. அவசரச் சட்டங்கள் வாபஸ் பெறப்பட்டன. உப்புச் சட்டத்திலும் அரசாங்கம் மாறுதல் செய்தது. அதன் பலனாக, ஏழை மக்கள் யாதொரு தடையுமின்றி உப்பு எடுத்துக்கொள்ள உரிமை பெற்றனர்.

# 12

## வரி கொடா இயக்கம் - 1931

கர்னாடகப் பிரதேசத்தைச் சேர்ந்த சிர்ஸி, சித்தாப்பூர், ஹிரேகேரூர் இந்த மூன்று தாலுக்காக்களிலும் பயிர் விளைச்சல் பாழ்த்துவிட்டதால், அவ்வருடத்துக்கு நிலவரியை வஜா செய்ய வேண்டுமென்று கோரி, விவசாயிகள் அதிகாரிகளிடம் முறையிட்டுக்கொண்டார்கள். விவசாயிகளின் கோரிக்கையை அதிகாரிகள் வெறும் அரசியல் கிளர்ச்சி என்று கூறி, அதற்கு இணங்க மறுத்துவிட்டார்கள். அதன் விளைவாக, விவசாயிகள் சட்ட மறுப்பை ஆரம்பித்தார்கள். அவர்களுடைய சொத்துக்களை ஜப்தி செய்தும், பறிமுதல் செய்தும் அதிகாரிகள் அவர்களுக்குப் பல கஷ்டங்களை விளைவித்தார்கள். எனினும், விவசாயிகள் உறுதியுடனிருந்தனர். இப்போராட்டத்திற்குக் காந்திஜியின் தார்மிக ஆதரவும் கிடைத்தது. இறுதியில் அப்போராட்டம் பலனைக் கொடுத்தது. பறிமுதலான சொத்துக்களை அதிகாரிகள் சொந்தக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுத்தனர். சிறை

களிலிருந்தவர்களும் விடுதலையடைந்தார்கள். பூர்த்தி பெறுமல் நடந்துகொண்டிருந்த வழக்குகள் ரத்துச் செய்யப்பட்டன. விவசாயிகளுக்கு அதிகாரிகள் பல சலுகைகளை வழங்கினர்.

## 13

## பொதுஜன சத்தியாக்கிரகம்-1931

லண்டன் வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றிருந்த காந்திஜி, *1931* டிசம்பர் மாதம் *28*-ஆம் தேதி பம்பாயில் வந்து இறங்கியபோது, இந்தியா மிகுந்த கொந்தளிப்பான நிலையில் இருந்தது. காந்திஜி வருவதற்கு முன் எல்லைக் காந்தி அப்துல் கபார்கான், டாக்டர் கான் சாகிப், ஜவாஹர்லால் நேரு முதலிய தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். அவசரச் சட்டங்கள் பற்றியும் அடக்குமுறைகள் பற்றியும் பேட்டி கண்டு பேச வேண்டுமெனக் காந்திஜி கேட்டதற்கு இணங்க, வைஸ்ராய் லார்டு வில்லிங்டன் மறுத்துவிட்டார். வைஸ்ராயைக் கண்டு பேச காந்திஜி செய்த முயற்சிகள் யாவும் வீணாயின. எனவே, மறுபடியும் சட்ட மறுப்பு இயக்கம் ஆரம்பிப்பதைத் தவிர வேறு வழியிராமற் போய்விட்டது. பிறகு இந்தியாவெங்கும் அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. காந்திஜி, வல்லபபாய் பட்டேல் முதலிய பல தலைவர்களும் கைதியாயினர். காங்கிரஸ் கமிட்டிகள் உள்படப் பல ஸ்தாபனங்கள் சட்ட விரோதமானவை என்று பிரகடனம் செய்யப்பட்டன. மொத்தம் ஒரு லட்சம் காங்கிரஸ் ஊழியர்கள் சிறைப்பட்டார்கள். அந்நிய ஜவுளிக் கடை பகிஷ்காரம், கள்ளுக்கடை பகிஷ்காரம் முதலியவை தீவிரமாயின. பின்னர் *1933*-இல் பொதுஜனச் சட்ட மறுப்பு நிறுத்தப்பட்டு, தனி நபர் சட்ட மறுப்பு ஆரம்பமாயிற்று. *1934* ஜூலை மாதம்தான் சட்ட மறுப்பு இயக்கம் நின்றது.

## 14

## ராஜ்கோட் சத்தியாக்கிரகம் - 1931

ராஜ்கோட் சமஸ்தானதிபதி தாகூர் சாகேப் சமஸ்தானப் பிரஜைகளுடன் செய்துகொண்ட புனிதமான ஒப்பந்தத்தை மீறியதால் அங்கே சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. அன்னை கஸ்தூரிபாய் உள்பட ஏராளமானவர்கள் சிறைப்பட்டனர். சமஸ்தானத்தின் போக்கையும், அரசாங்கத்தின் அடக்குமுறைகளையும், பிரிட்டிஷ் ரெஸிடென்டின் யதேச்சாதிகாரத்தையும்

காந்திஜி கண்டித்து, மார்ச்சு மாதம் 3-ஆம் தேதி, இறக்கும் வரை உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். இறுதியில் வைஸ்ராய் லார்டு லின்லித்கோ தலையிட்டு, ராஜ்கோட் பிரச்னைகளை இந்தியாவின் பிரதம நீதிபதி சர் மாரிஸ் குவையரின் மத்தியஸ்தத்திற்கு விட்டதால், காந்திஜி திருப்தியடைந்து மார்ச்சு மாதம் 7-ஆம் தேதி உண்ணாவிரதத்தைக் கைவிட்டார்.

# 15

## தனி நபர் சத்தியாக்கிரகம் - 1940

இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்தபோது, யுத்தத்தை எதிர்த்து ஒருவர் தமது அபிப்பிராயத்தைச் சொல்லவும் பிரசாரம் செய்யவும் உரிமை உண்டா? 1940-ஆம் ஆண்டில் இந்தக் கேள்வி எழுந்தது. உரிமை இல்லை என்று கூறியது அரசாங்கம். அதை ஒத்துக்கொள்ள காந்திஜி தயாராக இல்லை. எனவே, தனி நபர் சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. காந்திஜி, வினோபா பாவேயை முதலாவது சத்தியாக்கிரகியாகத் தேர்ந்தெடுத்தார். 1940 அக்டோபர் 21-ஆம் தேதி வினோபா கைதியாகித் தண்டனை அடைந்ததும், ஒருவர் பின் ஒருவராக இருபத்தையாயிரம் சத்தியாக்கிரகிகள் சிறைப்பட்டனர். காந்திஜி மட்டும் கைது செய்யப்படவில்லை. ஒரு வருட காலம், தனி நபர் சத்தியாக்கிரகம் தீவிரமாக நடந்தது. பின்னர், யுத்தத்தில் ஜெர்மனியின் கையும், ஜப்பான் கையும் ஓங்கவே, இந்திய மக்களை விரோதிகளாகக் கருதுவது ஆபத்தானது என்பதை உணர்ந்த பிரிட்டிஷ் சர்க்கார், தங்கள் பிடிவாதத்தைக் கைவிட்டு, தாங்களாகச் சமரசத்திற்கு வந்து சிறைப்பட்டிருந்த சத்தியாக்கிரகிகளையெல்லாம் விடுதலை செய்தனர்.

# 16

## இறுதியான சத்தியப் போர் - 1942

கிரிப்ஸ் - காந்திஜி பேச்சு வார்த்தைகள் முறிந்தபின், இந்தியாவைவிட்டுப் பிரிட்டிஷார் வெளியேற வேண்டுமென்ற இயக்கத்தைக் காந்திஜி ஆரம்பித்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் ஆட்சி அதிகாரத்தைக் கைவிட்டு இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிக்க வேண்டும் என்பதே அந்த இயக்கத்தின் நோக்கமாகும். எனவே, காந்திஜியின் தலைமையில் மறுபடியும் அகிம்சைப் போர் ஆரம்பமாயிற்று. போரை ஆரம்பிக்கும் விஷயமாக வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதக் காந்திஜி உத்தேசித்திருந்தார்.

ஆனல், அதற்குள்ளேயே காந்திஜி உள்படத் தலைவர்கள் யாவரும் கைதியாயினர்; காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களையும் கைது செய்தனர். அவர்களை எந்தச் சிறைக்குக் கொண்டு போனர்கள் என்பதே ரகசியமாக இருந்தது. ஆயிரக் கணக்கான காங்கிரஸ்வாதிகளும் கைதியானர்கள். வழக்கம் போல் அவசரச் சட்டங்கள் தாண்டவமாடின. 1944-இல் கடுமையான நோய் காரணமாகக் காந்திஜி விடுதலையடைந்தார். 1945-ஆம் ஆண்டில் உலக மகாயுத்தம் முடிந்த பிறகுதான் மற்றத் தலைவர்கள் விடுதலை அடைந்தனர்.

பகுதி ஒன்று

# தியாகத்தின் முக்கியம்

## 1

## கதி மோட்சத்திற்கு விலை

*[சத்தியாக்கிரகத்திற்கு முதலில் வேண்டியது தியாக உணர்ச்சி. ஆகையால் சத்தியாக்கிரகப் போர் முறையை வகுத்துத் தென்னாப்பிரிக்காவில் சோதனை செய்த காந்திஜி, அப்போராட்டம் ஆரம்பமாவதற்கு முன்னாலேயே தியாகத்தின் முக்கியத்தைக் குறித்து மக்களுக்கு எடுத்துக் கூற ஆரம்பித்தார். இப்படி தியாகத்தின் மேன்மையை வற்புறுத்தி அவர் அக்காலத்தில் எழுதிய சில கட்டுரைகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]*

தியாகமே வாழ்க்கையின் நியதியாகும். அது வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஊடுருவி ஆதிக்கம் செலுத்துகிறது. வியாபார நடைமுறையில் கூறுவதாயின், ஒரு விலை கொடுக்காமல் நாம் எதுவும் செய்ய முடியாது; எதையும் பெறமுடியாது. அதாவது, தியாகமின்றி நாம் எதுவும் செய்யமுடியாது; எதையும் பெற முடியாது. நம்முடைய சமூகத்தின் கதி மோட்சத்துக்கு அதுதான் வழி செய்யும். கதி மோட்சத்தைப் பெற நாம் விலை கொடுக்க வேண்டும்; அதாவது, தன்னையே தியாகம் செய்ய வேண்டும்.

சமூகத்திற்காக ஊழியம் செய்கையில், நமக்குக் கிடைத்ததில் ஒரு பகுதியை மாத்திரமே நமக்கென்று வைத்துக்கொள்ள வேண்டும். அதற்காக அதிகமாக எதுவும் வைத்துக்கொள்ளக் கூடாது. இதில்தான் தியாகம் இருக்கிறது. சில சமயங்களில் நாம் மிகவும் அதிக விலை கொடுக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். ஒரு செய்கையில் எவ்வளவு அபாயம் இருப்பினும், அதைச் செய்வதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைவதே உண்மையான தியாகமாகும். கால்வரி என்ற இடத்திலே ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டு மாண்டார். ஆனால், அந்தத் தியாகத்தின் மூலம் அவர் மகத்துவம் பொருந்திய சொத்தான கிறிஸ்தவ

மதத்தை அளித்துச் சென்ருர். ஹாம்ப்டன்* மிகுந்த துன்பத்திற்கு உள்ளாஞர். ஆனல், அவர் எதிர்த்துப் போராடிய கப்பல் கட்டணம் ஒழிந்தது.

ஜோன் ஆப் ஆர்க்கை† ஒரு சூன்யக்காரியென்று கூறி எரித்துக் கொன்ருர்கள். எனினும், அதனல் அவள் அழியாப் புகழும் பெருமையும் பெற்ருள். அவளைக் கொலை செய்தவர்கள் தான் என்றென்றும் இழிச்சொல்லுக்கு ஆளாயினர். அந்தப் பெண் புரிந்த ஆன்மத் தியாகத்தின் பலனை உலகம் அறிந்திருக்கிறது. ஏன், அமெரிக்கர்கள் சுதந்திரத்திற்காக உதிரம் சிந்தவில்லையா?

இவர்களின் மகத்தான தியாகங்களுடன் ஒப்பிடும்போது, இந்தியர்கள் தங்கள் சமூகத்தின் மகத்தான நன்மைக்காக அற்பத் தியாகமே செய்ய வேண்டியவர்களாக இருக்கிருர்கள். மேற்கண்டவர்கள் செய்த மாபெரும் தியாகங்களைக் காட்டவே, அந்த உதாரணங்களைக் கொடுத்திருக்கிருேம். பொதுவாக தென்னுப்பிரிக்காவிலும், குறிப்பாக டிரான்ஸ்வாலிலும் உள்ள இந்தியர்கள் பல கஷ்டங்களை அனுபவித்து வருகிருர்கள். டிரான்ஸ்வாலில் அவர்களுடைய விதி அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருக்கிறது. அவர்களுடைய ஜீவனத்திற்கான சாதனங்களே அவர்களிடமிருந்து ஈவிரக்கமின்றி அபகரிக்கப்படலாம். அவர்கள் மதிப்போ, மரியாதையோ இல்லாமல் சேரிகளுக்கு விரட்டப்படலாம். எனவே, தங்களுடைய கஷ்டங்களுக்குப் பரிகாரத்தை எதிர்பார்க்குமுன் பிரிட்டிஷ் இந்தியர்கள் என்ன தன்னலத் தியாகம் செய்யவேண்டும்? தாம் ஒவ்வொருவரும் பாதிக்கப்பட்டிருப்பது போல் இக்கேள்வியை ஒவ்வோர் இந்தியரும் கருதவேண்டும். ஒவ்

---

* பார்லிமெண்டின் சம்மதம் பெருமல் முதலாவது சார்லஸ் மன்னனல் பிரிட்டிஷ் துறைமுகங்களுக்கு விதிக்கப்பட்ட அக்கிரமமான வரியை ஹாம்ப்டன் என்ற பிரிட்டிஷ் தேசபக்தர் எதிர்த்தார். அதன் காரணமாக அவர் மன்னனின் கோபாவேசத்துக்கு இலக்காகி உயிருக்குப் பயந்து ஓட நேர்ந்தது. எனினும், ஹாம்ப்டனின் நாவன்மையினுலும் வாதத் திறமையினுலும், அவர் அநீதியான ஒரு வரியையும், மன்னனின் கொடுங்கோன்மையையும் எதிர்த்துப் போராடுகிருர் என்பதை மக்களும் பார்லிமெண்டும் அறிந்துகொண்டனர். இறுதியில் ஹாம்ப்டன் வெற்றி பெற்ருர். கொடுங்கோன்மை காரணமாக உள்நாட்டுச் சண்டை ஏற்பட்டு சார்லஸ் மன்னன் சிரச்சேதம் செய்யப்பட்டார்.

† ஜோன் ஆப் ஆர்க் என்ற சிறுமியின் வீரத்தனத்தினல் உந்தப்பட்டு பிரெஞ்சுக்காரர்கள் பிரெஞ்சு நகரான ஆர்லியன்ஸைக் கைப்பற்றிய ஆங்கிலேயர்களை அந்நகரிலிருந்து விரட்டியடிப்பதில் வெற்றி பெற்ருர்கள். அதன் பலனுகவே சார்லஸ், மன்னராகப் பிரகடனம் செய்யப்பட்டார். ஆனல், அவளது விரோதிகள் அவளை மத விரோதியென்று கூறி எரித்துக் கொன்றுவிட்டார்கள். அப்போது அவளுக்கு வயது பத்தொன்பதுதான்! எனினும், பின்னர் எல்லோரும் செய்துவிட்ட தவறை உணர்ந்து அவளைத் தெய்வப் பெண்ணுகக் கொண்டாட முற்பட்டனர். இன்றும் மேல் நாடுகளில் ஜோன் ஆப் ஆர்க் ஒரு தெய்வப் பெண்ணுகவே கருதப்படுகிருள்.

வோர் இந்தியரும் தம்மால் இயன்றதை உதவுவதுடன், தம்முடைய நேரத்தையும் சக்தியையும் கொடுக்க வேண்டும். பொதுவான அபாயத்தின் முன்னிலையில் சொந்த வேற்றுமைகளைஒழித்து விட வேண்டும். சொந்த சுகத்தையும் சொந்த லாபத்தையும் கைவிட்டு விடவேண்டும். இவையெல்லாவற்றுடனும், பொறுமையையும் தன்னடக்கத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இங்கே சித்திரிக்கப்பட்டுள்ள ஒடுக்கமான, குறுகிய பாதையிலிருந்து எள்ளளவு தவறினாலும் நாம் பாறையுச்சியிலிருந்து பள்ளத்தில் விழும்படி நேரும். ஏனெனில், நமது நோக்கம் சிறிதும் அநீதியானதோ அல்லது பலவீனமானதோ அல்ல என்றாலும், நமக்கு விரோதமாக உருவாகியுள்ள எதிர்ப்பு நம்மைத் திக்குமுக்காடச் செய்வதாக இருக்கிறது.

எந்த நிறத்தாரும் அல்லது சமூகத்தாரும் சமுதாய உணர்ச்சியின்றி எக்காலத்திலும் எதையும் சாதித்ததில்லை. ஒரு தேசீய லட்சியம் முன்னேற்றம் அடையவேண்டும் என்ற ஆசை இருந்து கொண்டிருக்கலாம். ஆனால், வெறும் ஆசை, லட்சியத்தின் முன்னேற்றத்தில் ஓர் அவசியமான கட்டமேயாகும். மேற்கொண்டு நடவடிக்கையில் ஈடுபடாவிடில், வெறும் ஆசை மாத்திரம் பலனற்றதாகிவிடும். லட்சியம் வெற்றி பெறுவதற்குத் தேவையான முறைகளைக் கைக்கொள்ளச் சித்தமாக இருக்கவேண்டும். ஒரு சங்கிலியின் பலம், அதில் உள்ள மிகவும் தேய்ந்த வளையத்தின் நிலையையே பொறுத்தது. பலவீனமான வளையத்தைக் காட்டிலும் சங்கிலி அதிகப் பலம் பொருந்தியதாக இருக்க முடியாது. எனவே, நாம் தயக்கமின்றியும், தாற்காலிக ஏமாற்றங்களைக் கண்டு அஞ்சாமலும் தோளோடு தோள் நின்று வேலை செய்யத் தயாராக இருந்தாலொழிய, நமக்குத் தோல்விதான் தகுந்த வெகுமதியாக, கடமையை முற்றிலும் அலட்சியம் செய்ததற்குத் தண்டனையாக வந்து சேரும்.

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வசிக்கும் சமூகங்கள் வீரத்தனமான தியாகம் எதுவும் செய்ய வேண்டிய அவசியமில்லை. நீடித்த, இடைவிடாமல் தொடர்ந்த, மிதமான ராஜீய முயற்சியே முக்கியத் தேவையாகும். அக்கறையும் ஆர்வமும் ஊக்கமும் இருந்தால் எந்த இடத்திலும் வெற்றி பெறலாம்; அதிலும் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் அதிக வெற்றியும் பலனும் பெறலாம். பிரிட்டிஷார் இயற்கையாகவே மாறுதலை விரும்பாத இயல்பு உடையவர்கள். எனவே, பிரிட்டிஷ் யந்திரம் மெதுவாகவே அசைந்து கொடுக்கிறது. எனினும், அக்கறை, ஊக்கம், ஒற்றுமை இவற்றைச் சட்டென அறிந்துகொள்ளும் ஆற்றலும் பிரிட்டிஷாருக்கு உண்டு. தாயார்கூட, அழுத பிள்ளைக்கே பால் கொடுப்பாள் என்று ஓர் இந்தியப் பழமொழி உண்டு. கேட்டாலொழிய, தாயார்கூட எதுவும் கொடுக்கமாட்டாள். இந்த நிலையில், கேட்காமலேயே கொடுப்பவர்கள் பிரிட்டி

ஷாரா? ஆகையால், தென்னப்பிரிக்கா முழுவதுமுள்ள நம் தேச மக்கள் பிரிட்டிஷ் அரசியலின் இந்த அம்சத்தை உன்னிப்பாகக் கவனித்துக்கொள்ளுவார்கள் என்றும், பூரண நீதி கிடைக்கும் வரையில் ஓய்வு எடுத்துக் கொள்ளமாட்டார்கள் என்றும் நம்பு கிறோம்.

—'இந்தியன் ஒப்பீனியன்' - 21—1—1904

# 2

# தன்னலத் தியாகம்

மிகவும் சாதாரண விஷயங்களை மனிதன் கவனிப்பதில்லை. அவனது இயற்கை சுபாவம் அப்படி இருக்கிறது. உணவும் தண் ணீருமின்றி மனிதன் ஒரு விநாடிகூட உயிர் வாழ முடியாதென்று நாம் கூறுகிறோம். நாம் அவ்விதம் சொல்லும்போது, உணவையும் தண்ணீரையும்விட காற்று அதிக முக்கியமானது என்பதை நாம் உணருவதில்லை. நாம் எப்போதும் மூச்சுவிட்டுக்கொண்டிருப்ப தால், அந்த உண்மையை ஒட்டி நாம் கவனம் செலுத்துவதில்லை. ஆனல், அப்போதைக்கப்போது நமக்குப் பசியும் தாகமும் எடுப் பதால் நாம் அடிக்கடி அவற்றை மனத்தில் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறோம். தியாகம் சம்பந்தப்பட்ட வரையிலும் இதுதான் உண்மையாகும். தியாகத்தினலேயே வாழ்க்கை இயங்குகிறது. அப்படியிருந்தும் அவ்விஷயத்தில் யாதொரு கவனமும் செலுத் தப்படுவதில்லை.

தியாகத்தில் பல விதங்கள் உண்டு. இன்று நாம் தன்னலத் தியாகத்தைப் பற்றி மாத்திரமே விவாதிப்போம். தியாகத்தின் மகத்துவத்தைப் பற்றி ஒவ்வொருவரும் அறிவார். ஒரு மனிதன் அதைப் பற்றி எவ்வளவு அதிகமாகச் சிந்திக்கிருனே, அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக அவன் அதைப் பற்றி அறிந்து கொள் ளுகிறான்; அதன் அவசியத்தையும் உணருகிறான். நாகரிக மற்ற மக்கள் அதைப் பற்றிச் சிந்திக்க முற்படுவார்களாயின், அவர்களும் அதை அவசியம் உணர்ந்து கொள்ளுவார்கள். புத்தி சாலிகள் அதை அறிந்து மனத்தில் அனுபவிப்பதுடன் நிற்கமாட் டார்கள்; அதைப் பற்றி அறிந்துகொண்டபின், அத்தகைய தியாகம் புரியத் தாங்கள் முன்வரவும் செய்வார்கள்.

குழந்தைப் பருவத்திலிருந்து இதை நாம் அறிவோம். அதனல்தான், உழைப்பின்றி எதையும் பெற முடியாதென்று நாம் அடிக்கடி கூறுகிறோம். நமக்கு மேன்மேலும் வயதாகும் போது, சொந்த அனுபவத்தின் மூலமும் சரித்திர ஆராய்ச்சியின் மூலமும் நாம் மேன்மேலும் சிந்திக்கும்போது, அந்தச் சாதாரண

வாக்கியத்தின் கருத்தை நாம் மேன்மேலும் நன்கு அறிந்து கொள்ளுகிறோம்.

ஒரு மணற் குன்றின்மீது ஏற ஓரளவு முயற்சி தேவையாக இருக்கிறது. ஆனால், ஒரு மலைமீது ஏற மிகவும் அதிக முயற்சி செய்யவேண்டியிருக்கிறது. ஒரு சிறிய வேலையைச் செய்ய சிறிதளவு பிரயாசையும் துணிவும் தேவையாக இருக்கின்றன. ஆனால், ஒரு பெரிய காரியத்தைச் சாதிக்க அதிகப் பிரயாசையும் அதிகத் துணிச்சலும் வேண்டியிருக்கின்றன. ஒரு மலைமீது ஏற வேண்டிய அவசியம் ஏற்படும்போது, நாம் மகத்தான முயற்சியைப் பொருட்படுத்துவதில்லை. அதுபோலவே, ஒரு பெரிய வேலையை நாம் செய்ய விரும்பினால், அதில் உள்ள அபாயத்தையோ, கஷ்டத்தையோ நாம் சிறிதும் சட்டை செய்வதில்லை. அதாவது, ஒரு காரியத்தைச் செய்ய வேண்டியது அவசியமென்று நாம் கருதிவிட்டால், அதற்கான தியாகம் செய்ய நாம் பின்வாங்குவதில்லை.

இந்த நாட்டில் வாழ்ந்து வரும் நம் சகோதரர்களுக்கு, சிந்தனையின் அத்தகைய போக்கு புதிதல்ல. அவர்கள் இந்த நாட்டிற்கு வருவதும், கொஞ்சம் சம்பாதிப்பதும் அவர்களுடைய தியாகத்தின் பலனேயாகும். அவர்கள் வீடு வாசல்களையும் உற்றார் உறவினரையும் விட்டுவிட்டு, மகாசமுத்திரத்தைத் தாண்டி இங்கே வந்துள்ளனர். இந்தத் தியாகத்தை அவர்கள் தீர்க்காலோசனையின் மீதே செய்துள்ளனர். அவர்கள் துணிவுடன் இந்தத் தியாகத்தைச் செய்ததால் மாத்திரமே, அவர்கள் இந்த நாட்டுக்கு வந்து தங்கள் நிலைமையை அபிவிருத்தி செய்து கொள்ள முடிந்தது. இதையே வேறு விதமாகச் சொல்லலாம். அதாவது, புத்திசாலித்தனமான தியாகத்தினால் சிறந்த பலன்கள் ஏற்படுகின்றன என்பதை அவர்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் அப்போதைக்கப்போது தியாகங்கள் செய்து தங்கள் நிலையை அபிவிருத்தி செய்துகொள்ள முயற்சிக்கிறார்கள். இடைவிடாத, புத்திசாலித்தனமான தியாகத்தின் மூலம், அவர்கள் தங்கள் சொந்த நிலையையும், சமூகத்தின் பொதுவான நிலையையும் நாளுக்கு நாள் அபிவிருத்தி செய்து கொள்ளுவார்கள் என்று நம்புகிறோம்.

ஒவ்வொருவரும் தியாகம் செய்யவேண்டிய கடமைபற்றி நாம் இன்று எழுதுவதற்குக் காரணம் என்னவெனில், இந்த நாட்டில், குறிப்பாக டிரான்ஸ்வாலில், நம்முடைய நிலைமையை நாம் முற்றிலும் சகிக்க முடியாதவாறு செய்ய வெள்ளையர்கள் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். நம்முடைய பொதுவான உரிமைகள் ஒவ்வொன்றாக நம்மிடமிருந்து அபகரிக்கப்பட்டு வருகின்றன. அப்படியிருந்தும்கூட, நமது சார்பில் சக்தி வாய்ந்த ஒரு போராட்டத்தை யாரும் நடத்தவில்லை. ஆகையால், நம்மை

ஆதரவற்றவர்கள் என்றும், பலவீனர்கள் என்றும் வெள்ளையர்கள் கருதுகிறார்கள். அவர்களுடைய மமதை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இங்குள்ள அரசாங்கம் வெள்ளையர்களின் ஆதிக்கத்தில் இருக்கிறது. வெள்ளையர்களுக்கு அதிருப்தி ஏற்படும்படி செய்ய அந்த அரசாங்கம் விரும்பாததால், அவர்களுடைய வக்கிரமான போக்கு எவ்வளவு ஒழுங்கற்றதாயினும், அநீதியானதாயினும், அதை அரசாங்கம் ஒப்புக்கொண்டு உறுதி செய்கிறது. பின்னர், பொதுமக்களின் அபிப்பிராயத்திற்கு மரியாதையாகத்தான் அவ்விதம் செய்ய நேர்ந்ததாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அறிவித்துவிடுகிறது. நமது துரதிருஷ்டம் காரணமாக, பிரிட்டிஷ் அரசாங்கமும் தனது அதிகாரத்தை உபயோகிப்பதில்லை; பொதுஜன அபிப்பிராயத்தைத் துஷ்பிரயோகம் செய்யும் இந்தக் காரியத்தை எதிர்த்து நிற்பதில்லை.

இந்த நாட்டில் உள்ள நமக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது இந்திய அரசாங்கத்தின் விசேஷக் கடமையாகும். ஆனால், இங்கே நடக்கும் அக்கிரமத்தைக் கண்டிக்க அதற்குத் தைரியமில்லை. இந்திய அரசாங்கம் சிற்சில சமயங்களில் தனது கண்டனக் குரலைச் சிறிதளவு எழுப்புகிறது; சிறிதளவுதான் எழுப்புகிறது.

நமது சார்பில் இந்த அரசாங்கத்தை நெருக்க முற்பட்ட போதும், இந்தியத் தொழிலாளர்கள் தேவையாக இருப்பதாக லார்டு மில்னர் கூறியபோதும், நமது கஷ்டங்களை எடுத்துக்கூற நமக்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அவர், இங்குள்ள இந்தியர்களின் நிலையில் அபிவிருத்தி ஏற்படும்படி செய்தால், சிறிது காலத்திற்கு அடிமைத்தனத்தை ஏற்க விரும்பும் தொழிலாளர்களை இந்தியாவிலிருந்து அனுப்புவதாக இந்தியா கூறியது! நமது உரிமைகளுக்கும் தொழிலாளர்களின் அடிமைத்தனத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. அப்படியிருந்தும், அத்தகைய ஒரு நிபந்தனை கூறப்பட்டது. இதிலிருந்து ஒரு விஷயத்தை அறிந்துகொள்ளலாம். அதாவது, இங்கே அடிமைகளாக வேலை செய்வதற்காக இந்தியத் தொழிலாளர்களைத் தருவிக்கும் யோசனையை டிரான்ஸ்வால் வாபஸ் செய்துகொள்ளும் பட்சத்தில், டிரான்ஸ்வாலில் குடியேறியுள்ள இந்தியர்களின் நிலையை இந்திய அரசாங்கத்தினால் அபிவிருத்தி செய்ய முடியாது என்பது தான் அது. நேட்டால் அல்லது ஆரஞ்சு ரிவர் காலனி முதலிய பிரதேசங்களில் பாலும் தேனும் வழிந்தோடி வருவது போல், அவை பற்றி எவ்விதப் புகாரும் நம் செவிகளில் விழுவதில்லை!

நமது நிலைமை மிகவும் துரதிருஷ்டகரமானது. அதனாலேயே நம் கடமைகளையும் பொறுப்புகளையும் பற்றி நாம் அடிக்கடி எழுத வேண்டியவர்களாக இருக்கிறோம். நமக்குத் துக்ககரமான அனுபவங்கள் ஏற்படும்போது, "நீ இறந்தாலொழிய சுவர்க்கத்திற்குச் செல்ல முடியாது", "பிறரை அண்டிக்கொண்டிருப்

பது எப்போதுமே ஏமாற்றத்தில் முடிகிறது" என்பன போன்ற நம் மூதாதையர்களின் பழமொழிகள் நம் ஞாபகத்திற்கு வருகின்றன. அந்தப் பழமொழிகளின் கருத்தை நாம் நன்கு உணர்கிறோம்.

எனினும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கங்கள் நேர்மையானவை என்பதையும் அது நீதி வழங்கவே விரும்புகிறது என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இங்கே 'பிரிட்டிஷ் ஆட்சி இருந்து வருகிறது. எனவே, பிரிட்டிஷ் ராஜீய விஷயங்களை அறிந்துகொள்ளவேண்டியது நமது கடமையாகும். பிரிட்டிஷ் அரசாங்க நிர்வாக விவகாரங்களையும், அதன் விதிகள், கட்டுப்பாடுகளையும் நாம் ஆராய்ச்சி செய்தால், நமது கோரிக்கைகளை நாம் எந்தவிதமான முறையில் சமர்ப்பிக்க வேண்டும் என்பதை அறிந்துகொள்ளுவோம். அதை நாம் அறிந்துகொண்டு விட்டால், பின்னர் நமது அபிலாஷைகள் நிறைவேறுவதில் அதிகக் கஷ்டம் எதுவும் இராது.

அதற்குக் காலம் ஆகும். எனினும், நமது அபிலாஷைகள் நியாயமானவையாக இருக்கும் பட்சத்தில் அவை இறுதியில் நிறைவேறும். நீதி பெறுவதில் தாமதம் ஏற்படுவது, இந்தியர்கள் சம்பந்தப்பட்ட வரையில் மாத்திரம் நிகழும் விஷயமல்ல. அயர்லாந்தின் உதாரணத்தைச் சிந்தித்துப் பாருங்கள். பிரிட்டிஷாரின் இயற்கை சுபாவம் அப்படி இருக்கிறது. எனவே, இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, மேற்கொண்டு முயற்சிக்க வேண்டியது இப்போது நமது கடமையாகும். நம் உள்ளத்தில் உயர்ந்த சிந்தனைகளுடன் நாம் மற்றவர்களுடைய ஆனந்தத்தை நம்முடைய ஆனந்தமாகவும், மற்றவர்களுடைய லாபத்தை நம் சொந்த லாபமாகவும் கருதி, ஒரே மனத்துடன் நமது வேலையைச் செய்துகொண்டு போவோமாயின், நாம் நிச்சயமாக நமது லட்சியத்தை அடைவோம். ஏனெனில், நாம் நீதி கிடைக்க வேண்டுமென்று கேட்கிறோமேயன்றி, சலுகை வேண்டுமென்று கோரவில்லை.

[குஜராத்தியிலிருந்து எடுக்கப்பட்டது]

—'இந்தியன் ஒப்பீனியன்' • 21—1—1904

# 3

# தியாகத்தினுல் நிர்மாணிக்கப்பட்டதே சமுதாயம்

ஒற்றுமையே பொது நலனை அபிவிருத்தி செய்கிறது என்பதை நம்மில் பெரும்பாலோரும் அனுபவத்தின் மூலம் அறிந்துகொண்டிருக்கிறோம். இருபது ஆண்டுகளுக்கு முன் நேட்டாலில் உள்ள இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் மிகவும் அதிகமாகிவிட்டதால், அவ்விஷயமாக அரசாங்கம் ஒரு விசேஷ கமிஷனை நியமிக்கவேண்டியிருந்தது. நீண்ட கால விசாரணைக்குப் பிறகு அந்தக் கமிஷன் நமக்குச் சாதகமாகத் தீர்ப்பு அளித்தது.

எனினும், வெள்ளையர்கள், முயற்சி, ஒற்றுமை முதலிய குணங்கள் மிகுதியாக உள்ளவர்களாதலால், கேட்பாரின்றி இந்தியர்களுக்குத் தொடர்ந்து கொடுமைகள் இழைக்கப்பட்டு வந்தன. தனி இடங்களில் இந்தியர்களை வைக்க வேண்டுமென்றும் அடிக்கடி வற்புறுத்தப்பட்டது. அப்போது தேவையான ஒற்றுமை இந்தியர்களிடையே இராததால், இந்தியர்களின் கஷ்டங்கள் தீரவில்லை. அதற்கு மாருக, அக்கஷ்டங்கள் மிகக் கடுமையாகி விட்டன. நேட்டால் சுயாட்சி பெற்றதும், இந்தியர்களை அவமதித்துத் தொல்லைக்கு உள்ளாக்கும் நோக்கம் கொண்ட சட்டங்கள் நிறைவேறத் தொடங்கின. காலம் கடந்தாயினும் இந்தியர்கள் விழித்துக்கொண்டார்கள். அவர்கள் உற்சாகத்துடனும், கண்காணிப்புடனும் வேலை செய்ய ஆரம்பித்ததால், மேற்கொண்டு கொடுமைகள் இழைக்கப்படுவது நின்றது. அவ்விதம் வேலை செய்திராவிட்டால், ஒவ்வோர் இந்தியரும் இன்று ஒதுக்கமான தனிப் பிரதேசத்தில் வாழும்படி நேர்ந்திருக்கும். துரதிருஷ்டவசமாக அந்த உற்சாகம் மூன்று ஆண்டுகள்தான் நீடித்தது. அப்படி யிருந்தும்கூட, நாம் அதனுல் மிகுந்த பலனடைந்தோம். அந்த உற்சாகம் இன்று காணப்படவில்லையெனினும், அவர்களுடைய நோக்கத்தில் ஓர் ஒற்றுமை உருவாகி வருகிறது. அந்த ஒற்றுமை பலமடையுமாயின், நமது நிலைமையில் அபிவிருத்தி ஏற்படாமலிருக்க முடியாது. யோசித்துப் பார்த்தால், இங்கேதான் தியாகத்தின் முக்கியத்தை உணருவது சுலபமாகும். நம் ஜனங்கள் தன்னலத்தை தியாகம் செய்ய ஆரம்பித்தபோது, உயர்ந்த நோக்கங்கள் பற்றிய உணர்வு அவர்கள் மனத்தில் மலர்ந்து இறுதியில் நல்ல பலனளித்தது. சிறிதாவது தியாகமின்றி ஒற்றுமையோ, உருவான நடவடிக்கையோ ஏற்பட முடியாது. மனித சமுதாயமே, தியாகத்தினுல்தான் நிர்மாணிக்கப்பட்டதாகும்.

இந்தக் கட்டுரையையொட்டி, குறிப்பாக டிரான்ஸ்வாலில் உள்ள நமது சகோதரர்களின் கவனத்தை இழுக்க விரும்பு கிறோம். ஏனென்றால், அங்கே நிலைமை கட்டுக்கோப்பில்லாமலும் சோகத்தை உண்டுபண்ணுவதாகவும் இருக்கிறது. அரசாங்கம் நமக்கு நிச்சயமாக நீதி வழங்குமென இதுவரையில் நாம் நம் பிக்கை கொண்டிருந்தோம். எனவே நாம் கோர்ட்டிற்குப் போவது பற்றிச் சிந்திக்கவில்லை. அரசாங்கம் வெள்ளையர்களின் செல்வாக் கில் மதி மயங்கியிருந்தால், நீதி வழங்க விருப்பமோ அல்லது சக்தியோ இராமலிருந்தால், சமூகம் முழுவதும் ஒன்று சேர்ந்து ஓரிடத்தில் கூடி ஆலோசித்து, தகுந்த முறைகளை கைக்கொள்ள வேண்டியது முற்றிலும் அத்தியாவசியமாகும். அவ்விதம் செய் யும்போது, அவர்கள் அவசியமாயின் நேரத்தையோ, செல்வத் தையோ, அல்லது இரண்டையுமோ நிச்சயமாகத் தியாகம் செய் வார்கள்.

இப்போது நிலைமை மிகவும் நெருக்கடியாக இருந்து வரு கிறது. கிடைத்த சந்தர்ப்பத்தை ஒரு தடவை இழந்துவிட்டால் அதை மறுபடியும் பெறுவது முடியாத காரியம். இவ்விஷயத்தை நமது டிரான்ஸ்வால் சகோதரர்கள் மனத்தில் இறுத்தி, தங் களைப் பாதுகாத்துக்கொள்ள பூரண முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்கள் அவ்விதம் முயற்சி எடுத்துக்கொள்ளுவார் கள் என்பதே நமது நம்பிக்கையாகும்.

நமது கோரிக்கை நியாயமானது. நாம் விவேகத்துடன் நமது இயக்கத்தை நடத்துவோமாயின், இறுதியில் நாம் வெற்றி பெற்றே தீருவோம். நாம் ஒற்றுமைப்பட்டு, நமது லட்சியத்துக் காக நேரத்தையும் பொருளையும் கொடுக்க இதுதான் தருண மாகும். நாம் நமது கடமையைச் செய்து தீரவேண்டும். பிறகு கடவுள் சித்தப்படி நடக்கும். நாம் குழந்தைப் பருவத்தில் வாசித்த ஒரு வண்டிக்காரனைப் பற்றிய கதையை இப்போது ஞாபகப்படுத்திக்கொள்ளுவது தகும். அவனுடைய வண்டியின் சக்கரங்களில் ஒன்று சேற்றில் சிக்கிக்கொண்ட போது, அவன் கடவுளைப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினான். அப்போது கடவுள் தோன்றி, வெறும் பிரார்த்தனையால் மாத்திரம் அவன் வேலை நடந்துவிடாதென்றும், அவன் முயற்சி செய்தால் அம் முயற்சி வெற்றி பெறக் கடவுள் உதவிபுரிவாரென்றும் கூறி அருளினார். பிறகு அந்த வண்டிக்காரன் மிகவும் கஷ்டப்பட்டுத் தூக்கியதில், சக்கரம் சேற்றிலிருந்து வெளியே வந்தது. இந்தக் கதையின் அருமையான கருத்தை வியாக்கியானமின்றி நாமெல் லோரும் அறிந்துகொள்ள முடியும். சாத்தியமான எல்லா முயற்சியும் எடுத்துக்கொள்ள வேண்டியது நம்முடைய கடமை யாகும். பலன் கடவுளின் கையில் இருக்கிறது.

[குஜராத்தியிலிருந்து எடுக்கப்பட்டது]

'இந்தியன் ஒப்பீனியன்' —28 - 1 - 1904

பகுதி இரண்டு

# சத்தியாக்கிரகம் பிறந்த வரலாறு

## 1

## கருத்து உறுதிப்பட்ட விதம்

பூஜ்யர் ஜோசப் டோக், மகாத்மா காந்தியின் வாழ்க்கைச் சரித்திரத்தை அவர் தென்னாப்பிரிக்காவில் இருந்த போதே எழுதினார். காந்திஜியைப் பொறுத்த வரையில் இந்தச் சத்தியாக்கிரகக் கொள்கை எவ்விதம் அவர் உள்ளத்தில் பிறந்தது, வளர்ந்தது என்பதைக் கூறும்படி ஸ்ரீ டோக் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறிய பதிலைக் குறித்து ஸ்ரீ டோக் கூறுவதாவது :

"நான் குழந்தையாக இருந்தபோது பள்ளிக்கூடத்தில் கற்ற குஜராத்திப் பாடல்களில் ஒன்று என் மனத்திலேயே எப்பொழுதும் இருந்து வந்தது. அதன் கருத்து வருமாறு :

> 'தாகத்திற்கு நீர் கொடுத்தவருக்கு நீ திரும்ப நீர் கொடுத்துவிடுவதில் பெரிது எதுவுமில்லை.
>
> ஆனால், தீமை செய்தவருக்கு நன்மை செய்வதிலேயே உண்மைப் பெருமை உண்டு.'

"குழந்தையாக இருந்த காலத்திலேயே இப்பாட்டு என் மனத்தில் அதிக மாறுதலை உண்டாக்கியது; நடைமுறையில் அதன்படி நடக்க முயன்று வந்தேன். பிறகு ஏசுவின் 'மலை உபதேசங்கள்' என் கவனத்திற்கு வந்தன" என்றார், காந்திஜி.

"ஆனால், நிச்சயமாகப் பகவத் கீதை அதற்கு முன்னால் உங்கள் மனத்தில் வந்திருக்கக்கூடும்" என்றேன். அதற்குக் காந்திஜி கூறியதாவது :

"இல்லை. சமஸ்கிருதத்தில் இருக்கும் பகவத் கீதையை நான் நன்றாகவே படித்திருக்கிறேன். ஆனால், அதன் போதனை

களை நான் அந்த வகையில் பயின்றதில்லை. பைபிளின் புதிய சித்தாந்தமே உண்மையில், நியாயமாக நடப்பதில் எனக்கு விழிப்பை உண்டாக்கியதோடு சாத்விக எதிர்ப்பின் மேன்மையை யும் உணரும்படிச் செய்தது. 'மலை உபதேச'த்தில், 'தீயவனை யிருப்பவனை எதிர்க்காதே; உன்னை யாராவது வலது கன்னத்தில் அறைந்தால் இடது கன்னத்தையும் திருப்பிக் காட்டு' என்று கூறியிருந்ததையும், 'உன்னுடைய விரோதிகளிடமும் அன்பு செலுத்து, உன்னைத் துன்புறுத்துகிறவர்களும் பரலோகத்தில் இருக்கும் உன் பிதாவின் மக்களாக வேண்டுமென்று அவர் களுக்காகப் பிரார்த்தனை செய்' என்று சொல்லி யிருப்பதையும் படித்துப் பேரானந்தம் கொண்டேன். நான் கொஞ்சமும் எதிர் பாராத இடத்திலிருந்து என் கருத்துக்கள் உறுதி செய்யப்பட் டிருப்பதைக் கண்டுகொண்டேன். பகவத் கீதை என் எண் ணத்தை உறுதிப்படுத்தியது. டால்ஸ்டாயின் 'உன்னுள் இருக் கும் கடவுளின் ராஜ்யம்' என்ற நூல் அதற்கு நிரந்தரமானதோர் உருவை அளித்தது.

"டால்ஸ்டாய், ரஸ்கின், தோரோ, இங்கிலாந்தில் நடந்த சாத்விக எதிர்ப்பு இயக்கம் இவை உயர்ந்த சக்தியும் பற்று தலும் உள்ள லட்சியப் படிப்பினைகளாக நிரூபணமாகி யிருக் கின்றன. என்னுடைய லட்சியம், தீமையைச் சாத்விகத்தினால் எதிர்ப்பது என்பது மாத்திரமல்ல; தீமைக்குப் பதிலாக நன்மை யையே செய்வதென்பதையும் தீவிரமாகக் கொண்டது. 'சாத்விக எதிர்ப்பு' என்று கூறப்படுவதை நான் விரும்பவில்லை. அதற்கு நான் கொண்டுள்ள பொருளை அது முழுவதும் வெளிப்படுத்துவ தாயில்லை. அது ஒரு முறையை விவரிக்கிறது. ஆனால், அது எந்த ஒரு முறையின் பகுதியாயிருக்கிறதோ அதன் கிரமத்தைப் பற்றியது இதில் எதுவுமில்லை. தீமைக்கு எதிராக நன்மை யையே செய்துவிடுவது என்பதிலேயே உண்மையான அழகு இருக்கிறது; அதுதான் என்னுடைய நோக்கம். என்றாலும், இச் சொற்களே இப்பொழுது எல்லோருக்கும் தெரிந்தவையாகவும் சுலபத்தில் புரியக் கூடியவையாகவும் இருப்பதோடு, என் மக்க ளில் பெரும்பாலானவர்கள் இச்சமயத்தில் இந்தக் கருத்தையே கொள்ளக் கூடியவர்களாயும் இருப்பதால் அதையே நான் மேற் கொள்ளுகிறேன். குஜராத்திப் பாடலிலும், ஏசுவின் மலை உப தேசத்திலும் இருக்கும் கருத்து, வாழ்க்கை முழுவதையுமே அடி யோடு மாற்றி விடவேண்டும் என்பதே என் ஆர்வம்."

## 2

# ஆன்ம சக்தியும் மிருகபலமும்

மிருக பலத்திற்கு எதிராக வெற்றியடைய ஆன்ம பலத்திற்குள்ள சிறப்புக்களைக் குறித்துத் தென்னுப்பிரிக்காவில் மற்ருெரு சந்தர்ப்பத்தில் கூறுகையில் காந்திஜி சொன்னதாவது :

"சாத்விக எதிர்ப்பு, எல்லா முனையிலும் கூர்மையுடைய ஒரு வாள்; அதை எந்தவிதமாகவும் உபயோகிக்கலாம். அது தன்னை உபயோகிப்பவரை வாழ்த்தும்; அது யாருக்கு எதிராக உபயோகிக்கப்படுகிறதோ அவரையும், ஒரு சொட்டு ரத்தத்தைக் கூடச் சிந்தவிடாமல் வாழ்த்தும். அது எவ்வளவோ பெரிய நன்மைகளையும் உண்டாக்கும். என்றுமே துருப்பிடித்து விடாதது, அவ்வாள். அதைத் திருடிக்கொண்டு போய்விட முடியாது. சாத்விக எதிர்ப்பாளர்களிடையே ஏற்படும் போட்டியினுல் களைப்பு ஏற்படுவதும் இல்லை. சாத்விக எதிர்ப்பு என்னும் வாளுக்கு உறை வேண்டியதில்லை. பலவந்தத்தினுல் அதை யாரும் பறித்துவிடவும் முடியாது."

## 3

# சாத்விக எதிர்ப்பின் மேன்மை

டிரான்ஸ்வாலில் ஜெர்மிஸ்டன் இலக்கிய விவாத சபையில் ஐரோப்பியர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில் 1908–இல் மகாத்மா காந்தி பேசினுர். அப்பொழுது அவர் கூறியதாவது :

"சாத்விக எதிர்ப்பு என்பது இதற்குச் சரியான பெயரல்ல. ஆனுல், இப்பெயர் வெளியிடும் கருத்தையே பலர் நீண்ட காலமாக நிறைவேற்றி வந்திருப்பதாலும், இதுவே எல்லாருக்கும் தெரிந்திருப்பதாலும், இச்சொற்ருெடர் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இக் கருத்தைப் பூரணமாகவும், சரியாகவும் கூறுவதானுல், 'ஆன்ம சக்தி' என்று சொல்வதே சரியானதாகும். மனித வர்க்கம் எவ்வளவு தொன்மையானதோ அவ்வளவு தொன்மையானது இதுவும். ஏசு கிறிஸ்து, டேனியல், சாக்ரடீஸ் ஆகியவர்கள் பரிசுத்தமான சாத்விக எதிர்ப்பு அல்லது ஆன்ம சக்தி நிரம்பி விளங்கினுர்கள். இந்த உபதேசகர்களெல்லோரும், ஆன்மாவோடு ஒப்பிட்டால் உடல் மிக மிக அற்பமானது என்று கருதினுர்கள். இந்தத் தத்துவத்தை இக்காலத்தில் மிகப் பிரகாசமாகவும் சிறப்பாகவும் விளக்கியவர்

டால்ஸ்டாயே. அவர் இதைக் கூறியதோடு நில்லாமல் அதன் படி நடந்தும் காட்டினர். இதைப் பற்றி ஐரோப்பா அறிவதற்கு வெகு காலத்திற்கு முன்பே இந்தியா இந்தத் தத்துவத்தை அறிந்து அனுசரித்தும் வந்திருக்கிறது. உடலின் சக்தியைவிட ஆன்ம சக்தி நிச்சயமாக உயர்வானது என்பதை அறிவதும் எளி தாயிருந்தது. தீய காரியங்களின் தொந்தரவிலிருந்து நிவாரணம் பெறுவதற்கு மக்கள் இந்த சக்தியையே உபயோகிக்க முற்படு வதாயிருந்தால், இன்று இருந்துவரும் எத்தனையோ துன்பங் களைத் தவிர்த்துக்கொண்டு விடமுடியும். இந்தச் சக்தியை உப யோகிப்பதனுல் மற்றவர்களுக்குத் துன்பங்கள் ஏற்படுவதே இல்லை. ஆகையால், இந்தச் சக்தி எப்பொழுதாவது தவருக உபயோகிக்கப்பட்டு விட்டாலும், அப்பொழுது இதை உப யோகித்தவர்களுக்குத் தான் சிரமம் இருக்குமேயன்றி இது யாருக்கு எதிராக உபயோகிக்கப்பட்டதோ அவர்களுக்குத் துன் பத்தை உண்டாக்குவதில்லை. நற்செய்கையைப் போல, இதற்கு ஏற்ற வெகுமதி என்றும் உண்டு. இத்தகைய சக்தியை உப யோகிப்பதில் தோல்வி என்பது வருவதே இல்லை. 'தீமையை எதிர்க்காதே' என்ருல், தீமையைத் தீமையினுல் எதிர்க்கக் கூடாது, நல்லது செய்வதனுலேயே எதிர்க்க வேண்டும் என்பது பொருள். அதாவது, மிருக பலத்தை, அதைப் போன்றதொரு பலத்தினுல் எதிர்க்கக் கூடாது; ஆன்ம பலத்தினுல் எதிர்க்க வேண்டும். இந்தக் கருத்தே இந்திய வேதாந்தத்தில், 'எந்த ஜீவராசிக்கும் தீங்கிழைக்காத தன்மை' என்று விவரிக்கப்பட் டிருக்கிறது. இந்தத் தத்துவத்தை மேற்கொள்ளுவதாயின், இதை அனுசரிப்பவர்கள் சரீர துன்பங்களை அனுபவிக்க நேரும். ஆனுல், இந்தத் துன்பங்களையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், உலகத் துன்பங்களைவிடக் குறைவானதே என்பது தெரிந்த உண்மை. ஆகையால், ஆன்ம பலத்தின் அபார சக்தியை அறிந்தவர்களெல்லாம் சரீர துன்பங்களை அனுபவிப்பதே தங்கள் கடமை என்ற முடிவுக்கு மனமாரவும், திடத்துடனும் வந்துவிடு வது அவசியமாகும். இப்படிச் செய்தால், இந்தக் கஷ்டங்களே அவைகளை அனுபவிப்பவர்களுக்கு இன்பத்தின் ஊற்ருகிவிடும். சாத்விக எதிர்ப்பை இந்த வகையில் கொண்டு வந்துவிட்டால், மிருக பலத்தைவிட அது மிக உயர்ந்ததாகவே ஆகும். இதற்கு மிருக பலத்திற்கு வேண்டியதைவிட அதிக தீரமும் வேண்டும் என்பது மிகவும் தெளிவானது. சாத்விக எதிர்ப்பு மிருக பலமாக மாறுவதற்குச் சாத்தியமே இல்லை. இந்தச் சக்தியை வெற்றி கரமாக உபயோகிப்பதற்குள்ள ஒரு நிபந்தனை, உடலினின்று ஆன்மா வேருனது என்பதையும், அது நிரந்தரமானது, உயர்வா னது என்பதையும் உணர்வதேயாகும். இந்த உணர்வானது, வாழ்வின் லட்சியமாக இருக்க வேண்டுமேயன்றி வெறும் அறிவு ஆராய்ச்சியாக மாத்திரம் இருக்கக் கூடாது."

# 4

# சத்தியாக்கிரகத்தின் உதயம்

*[காந்திஜி சத்தியாக்கிரக ஆயுதத்தை முதன் முதலில் கையாண்டது தென்னுப்பிரிக்காவில்தான். அங்கே டிரான்ஸ்வால் அரசாங்கம் இந்தியருக்கு எதிரான அவசரச்சட்டம் ஒன்றை 1906-இல் கொண்டுவந்தபோது, அதை எதிர்ப்பது என்று டிரான்ஸ்வால் இந்தியப் பிரதிநிதிகள் கடவுளின் பெயரால் பிரதிக்ஞை செய்துகொண்டனர். அச்சட்டத்தைக் குறித்தும், அப்பிரதிக்ஞை செய்துகொள்ளுவதிலுள்ள முக்கியத்தைப்பற்றியும் தாம் பேசியதை காந்திஜி, தாம் எழுதிய 'தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூலில் கூறியிருக்கிறுர். சத்தியாக்கிரகத்தின் தத்துவம் என்று அப்பொழுது காந்திஜி கூருவிட்டாலும், அக்கருத்திற்கும், அத்தத்துவ சாரத்திற்கும் அவர் அப்பொழுது கூறிய விளக்கம், அதையே அப்படியே கூறுவதாக இருக்கிறது. சத்தியாக்கிரகத் தத்துவத்தைப் பற்றி 1906-இல் காந்திஜிக்கு இருந்த உள்ளக்கிடக்கையை இது வெளிப்படுத்துவதாக இருப்பதால், இப்பகுதி இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

"1906-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 11-ஆம் தேதி தென்னுப்பிரிக்க இந்தியரின் கூட்டம் நடந்தது. டிரான்ஸ்வாலின் பல பாகங்களிலிருந்தும் பிரதிநிதிகள் அதற்கு வந்திருந்தனர். தீர்மானங்கள் செய்ய நான் உதவி செய்திருந்தபோதிலும், அவற்றின் முழுப் பொருளையும் நானே அப்பொழுது அறியவில்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். அவை, எந்தவிதமான முடிவுகளுக்கு நம்மைக் கொண்டுவிடும் என்பதையும் நான் அளந்து பார்க்கவில்லை. பழைய எம்பயர் அரங்கு முழுதும் ஜனங்கள் நிறைந்திருந்தனர். ஏதோ அசாதாரணமான காரியமொன்று செய்ய வேண்டும் அல்லது நடக்கும் என்று எதிர்பார்த்தார்களெனக் கூட்டத்திலிருந்த ஒவ்வொருவர் முகத்திலும் புலனுகியது. டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்திய சங்கத்தின் தலைவரான ஸ்ரீ அப்துல் கனி தலைமை வகித்தார். அவர் டிரான்ஸ்வாலின் மிகப் பழைய இந்திய வாசிகளில் ஒருவர்; பெயர் பெற்ற மாமத் காஸிம் கம்ருதீன் கம்பெனியின் ஜொஹன்னஸ்பர்க் கிளை ஆபீசின் கூட்டாளியும் நிர்வாகியும் ஆவார். தீர்மானங்கள் எல்லாவற்றிலும் முக்கியமானது, பிரசித்தி பெற்ற அந்த நான்காவது தீர்மானமாகும். இந்தியர்களுடைய எதிர்ப்புக்கு விரோதமாய் அவசரச் சட்ட மசோதா சட்டமாக நிறைவேற்றப்

பட்டால், இந்தியர்கள் அதற்குக் கீழ்ப்படியமாட்டார்கள் என்றும், கீழ்ப்படியாததால் வரும் எல்லாத் தண்டனைகளையும் ஏற்றுக்கொள்ளுவார்களென்றும் அத்தீர்மானம் கூறியது.

"அத்தீர்மானத்தின் பொருளைக் கூட்டத்துக்கு நான் எடுத்துரைத்தேன். அங்கே கூடியிருந்தவர்கள் பொறுமையுடன் கேட்டார்கள். கூட்டத்தின் நடவடிக்கை ஹிந்தியிலோ, குஜராத்தியிலோ நடந்தது. ஆதலால் கூட்டத்திலிருக்கும் எவருக்கும் அது விளங்காமலிராது. ஹிந்தி தெரியாத தமிழர்களுக்காகவும் தெலுங்கர்களுக்காகவும், அவர்களுடைய மொழிகளில் விளக்கமாய் எடுத்துச் சொல்லுவதற்குத் தமிழ், தெலுங்கு உரையாளர் இருந்தனர். அத்தீர்மானத்தை முறைப்படி பிரேரேபித்து, ஆமோதித்துப் பலர் பேசினார்கள். அவர்களில் ஒருவர் சேட் ஹாஜி ஹபீப். இவரும் அனுபவம் வாய்ந்த ஒரு பழைய தென்னப்பிரிக்காவாசி. இவர் மிகவும் மனவெழுச்சியுடன் பேசினார். இவர் அதிகமான உணர்ச்சி வசப்பட்டிருந்தார். இத்தீர்மானத்தைக் கடவுள் சாட்சியாகச் செய்ய வேண்டுமென்றும், அவமானம் இழைக்கும் இந்தச் சட்டத்திற்குக் கோழைத்தனமாய் என்றுமே கீழ்ப்படிந்துவிடக் கூடாதென்றும் சொன்னார். இச்சட்டத்திற்குத் தாம் எப்பொழுதும் கீழ்ப்படியப் போவதில்லையென்று கடவுள் சாட்சியாகச் சொல்லுவதாகக்கூறி, மற்றவர்களையும் அப்படியே செய்யக் கேட்டுக்கொண்டார். மற்றவர்களும் கடுமையாகவும் கோபத்துடனும் பேசி அத்தீர்மானத்தை ஆதரித்தனர். சேட் ஹாஜி ஹபீப் தம்முடைய உரையில் பிரதிக்ஞையை எடுத்துக்கூறிய சமயம் நான் திடுக்கிட்டு விழிப்படைந்தேன். அப்பொழுதுதான் என்னுடைய பொறுப்பையும், சமூகத்தினுடைய பொறுப்பையும் நான் முழுதும் அறிந்தேன். சமூகம், இதற்கு முன் பல தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது. பல தீர்மானங்களை அதிக யோசனையின் பேரிலும் அல்லது புதிய அனுபவத்தின் பேரிலும் அது திருத்திக் கொண்டிருக்கிறது. நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் எல்லோராலும் அனுசரிக்கப்படாதவையும் பல உண்டு. தீர்மானங்களை மாற்றுவதும், தீர்மானங்களை ஒப்புக்கொண்டவர்கள் அவைகளை அனுசரிக்காமலிருப்பதும் இவ்வுலகமெங்கும் வாழ்க்கையில் சாதாரண அனுபவங்களாகும். ஆனால், இம்மாதிரி தீர்மானங்களில் எவரும் கடவுளின் பெயரைப் புகுத்துவதில்லை. உண்மையில் ஒரு தீர்மானத்திற்கும், கடவுள் பெயரால் எடுக்கப்பட்ட ஒரு பிரதிக்ஞைக்கும் யாதொரு வித்தியாசமும் இருக்கக் கூடாது. அறிவாளி, ஆலோசித்து ஒரு தீர்மானத்தை மேற்கொள்ளுவானானால், மயிரளவும் அதினின்று பிறழான். ஒரு தீர்மானம், கடவுள் சாட்சியாகச் செய்யப்பட்ட ஒரு சபதத்தைப் போல் அவ்வளவு மதிப்புடையதாகவே அவனுக்கு இருக்கும். ஆனால், உலகம் இத்தத்துவங்களைக் கவனிப்பதில்லை. ஒரு சாதாரணத் தீர்மானத்திற்கும், கடவுள் பெயரால் எடுத்துக்

கொண்ட பிரதிக்ஞைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதாக மக்கள் நினைக்கின்றனர். ஒரு சாதாரணத் தீர்மானத்தைச் செய்தவர், தாம் அதினின்றும் வழுவும்போது, தாம் குற்றம் செய்ததாக நினைத்து வெட்கப்படுவதில்லை. ஆனால், தாம் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞையினின்றும் பிறழும்போது, அவர் தாமே வெட்கப்படுவது அல்லாமல், சமூகத்தாலும் பாவியெனக் கருதப்படுகிறார். இந்த நினைவில் மாத்திரமே இருக்கும் வித்தியாசம், மனிதன் மனத்தில் எவ்வளவோ ஆழமாக ஊன்றியிருக்கிறது. இதனால் ஒரு நியாயாதிபதியின் முன் ஒருவன் பிரதிக்ஞை செய்து சொல்லும் விஷயம் பொய் என்று நிரூபிக்கப்பட்டுவிட்டால், அவன் சட்டப்படி குற்றம் செய்ததாகக் கருதப்பட்டு, கண்டிப்பான தண்டனையும் அடைகிறான்.

"இந்த எண்ணங்கள் என் மனத்தில் நிறைந்திருந்ததால், புனிதமான பிரதிக்ஞைகளின் அனுபவங்களைப் பெற்று, அவைகளினால் பயனையும் நான் அடைந்திருந்ததால், பிரதிக்ஞையைப் பற்றி சேட் ஹாஜி ஹபீப் சொல்லியபோது திடுக்கிட்டேன். அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை ஒரு கணத்தில் நினைத்துப் பார்த்தேன். தடுமாற்றம் போய் அதற்குப் பதிலாக எனக்கு உற்சாகமே உண்டாயிற்று. கூட்டத்திற்குப் போனபோது பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றோ, மற்றவர்களைப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளும்படி சொல்ல வேண்டுமென்றோ எனக்கு எண்ணமில்லாவிடினும், சேட் அவர்களின் யோசனையை நான் மகிழ்ச்சியுடன் ஆதரித்தேன். ஆனால், அதே சமயத்தில் ஒரு பிரதிக்ஞையினுடைய எல்லா விளைவுகளையும் பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொல்வதுடன், பிரதிக்ஞை என்றால் என்ன என்பதைத் தெளிவாக விளக்கிக் காட்ட வேண்டுமென்றும் எனக்குத் தோன்றிற்று. அவற்றை அறிந்த பிறகும் அவர்கள் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதற்குத் தயாராயிருந்தால், அப்பொழுது பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளும்படி அவர்களைத் தூண்டலாம். இல்லாவிடில் கடைசிச் சோதனைக்கு இன்னும் அவர்கள் தயாராகவில்லை என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும். ஆதலால் சேட் ஹாஜி ஹபீபின் யோசனையில் அடங்கியிருக்கும் எல்லாப் பொருள்களையும் கூட்டத்திற்கு எடுத்துரைப்பதற்குத் தலைவரின் அனுமதி கேட்டேன். அவர் அனுமதி அளிக்கவே நான் எழுந்து பேசினேன். நான் அப்பொழுது சொன்னதை நினைவிருக்கும் வரை கீழே குறிப்பிட்டுள்ளேன் :

"இந்தத் தீர்மானத்திற்கும், இதுவரை நாம் நிறைவேற்றியிருக்கும் மற்றெல்லாத் தீர்மானங்களுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் இருக்கிறதென்பதையும், தீர்மானம் செய்யும் விதத்திலும் ஒரு பெரிய வேறுபாடு இருக்கிறதென்பதையும் இக்கூட்டத்திற்கு விளக்கிக் காட்ட நான் விரும்புகிறேன். நாம் இப்பொழுது

செய்யும் தீர்மானம் மிகவும் முக்கியமானது. ஏனெனில், நாம் தென்னுப்பிரிக்காவில் வாழ்வது, இதை முழுதும் நாம் அனுசரிப் பதைப் பொறுத்திருக்கிறது. தீர்மானம் செய்யும் விததைதைப் பற்றி நமது நண்பர் சொல்லியது எவ்வளவு புதுமையானதாக இருக்கிறதோ அவ்வளவு புனிதமாகவும் இருக்கிறது. இவ் விதத்தில் தீர்மானத்தைக் கூட்டத்தில் நிறைவேற்ற வேண்டு மென்ற எண்ணத்துடன் நான் கூட்டத்திற்கு வரவில்லை. அதன் பெருமை சேட் ஹாஜி ஹபீப் அவர்களுக்கு உரியது; அதற்குரிய பொறுப்பும் அவர்பால் உள்ளது. இதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன். அவருடைய யோசனையை நான் மிகவும் மெச்சுகிறேன். நீங்களும் அதை ஏற்றுக்கொள்ளுவீர்களானல், அவருடைய பொறுப்பில் நீங்களும் பங்கெடுத்துக்கொள்பவர் களாவீர்கள். இப்பொறுப்பு என்னவென்று நீங்கள் அறிய வேண்டும். சமூகத்துக்கு ஆலோசகனுகவும் அதன் ஊழியனுகவும் நான் இருப்பதால், அதை விவரமாக எடுத்துரைப்பது என் னுடைய கடமையாகும்.

"ஹிந்து, இஸ்லாம் என்று நம் மதங்களின் பெயர்களில் வித்தியாசம் இருந்தபோதிலும், நாம் எல்லோரும் ஒரே கடவு ளையே நம்புகிறோம். கடவுள் பெயரால் அல்லது அவரைச் சாட்சியாகக்கொண்டு ஒரு சபதம் செய்வது அல்லது பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவது என்பது விளையாட்டான விஷயமன்று. பிரதிக்ஞை எடுத்துக்கொண்ட பிறகு அதற்கு விரோதமாக நடந்தோமானல், நாம் கடவுள் முன்னிலையிலும், மனிதர் முன்னிலை யிலும் குற்றம் செய்தவர்களாவோம். ஒரு மனிதன் மனப்பூர்வ மாகவும் புத்தி பூர்வமாகவும் ஒரு பிரதிக்ஞை எடுத்துக்கொண்ட பிறகு அதினின்றும் தவறுவானுனல், அவன் தனது மனிதத் தன்மையை இழக்கிறன் என்பது எனது சொந்த அபிப்பிராயம். ஒரு செப்புக் காசின் மேல் பாதரசத்தைத் தடவி அதை வெள்ளி போல் காட்டினல், அக்காசு மதிப்பற்றுப் போவதோடு, அது கண்டுபிடிக்கப்பட்டால் அதன் சொந்தக்காரனையும் தண்டனைக்கு உள்ளாக்குகிறது. அம்மாதிரியே ஒருவர் விளையாட்டாகப் பிரதிக்ஞை செய்து, பிறகு அதினின்றும் தவறினல் அவர் மனிதருள் பதராகி, இம்மையிலும் மறுமையிலும் தண்டனை அடையத்தக்கவராகிருர். இம்மாதிரி ஆழ்ந்த கருத்துள்ள ஒரு பிரதிக்ஞையை, சேட் ஹாஜி ஹபீப் உங்களிடத்தில் பிரயோ கிக்க விரும்புகிருர். குழந்தைகள் என்ருே அல்லது அறிவில்லா தவர்கள் என்ருே சொல்லத்தக்க எவரும் இக்கூட்டத்தில் இல்லை. நீங்கள் எல்லோரும் வயதானவர்கள்; உலக அனுபவம் பெற்றவர்கள். உங்களில் பலர் பிரதிநிதிகளாயிருக்கிறீர்கள். உங்கள் கடமைகளை அதிக அளவிலும், குறைந்த அளவிலும் செய்து வந்திருக்கிறீர்கள். ஆதலால், இங்கிருப்பவர் எவரும், தாங்கள் பிரதிக்ஞைகள் செய்யும்போது, விவரம் தெரியாமல் செய்ததாகச் சாக்குப் போக்குச் சொல்ல முடியாது.

"பிரதிக்ஞைகளையும், சபதங்களையும் ஒரு சில சந்தர்ப்பங்களில்தான் எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதும் எனக்குத் தெரியும். அடிக்கடி பிரதிக்ஞைகள் எடுத்துக்கொள்ளும் ஒருவர் தவறிவிடுவது நிச்சயம். தென்னாப்பிரிக்காவிலிருக்கும் இந்திய சமூகத்தின் சரித்திரத்தில் பிரதிக்ஞைகள் எடுத்துக் காண்பிக்க வேண்டிய நெருக்கடியான ஒரு சந்தர்ப்பத்தை நான் நினைக்க முடியுமெனில், அந்நெருக்கடியான சந்தர்ப்பம் நிச்சயமாய் இதுவே. பொறுப்பான நடவடிக்கைகளை மிகுந்த ஜாக்கிரதையுடனும் அவசரப்படாமலும் மேற்கொள்ளுவது அறிவுடைமையாகும். ஆனால், ஜாக்கிரதைக்கும், அவசரப்படாமல் இருப்பதற்கும் எல்லை உண்டு. அவைகளை நாம் கடந்துவிட்டோம். அரசாங்கம் தங்கள் யோக்கியப் பொறுப்பு முழுவதையும் கைவிட்டுவிட்டனர். நம்மைச் சுற்றியிருக்கும் ஆபத்தை எதிர்த்து, நாம் நமக்குள்ள அனைத்தையும் தியாகம் செய்ய முன்வராமல், கையைக் கட்டிக்கொண்டு சும்மா பார்த்துக்கொண்டிருப்போமானால், நம்முடைய தகுதியின்மையையும் கோழைத்தனத்தையும் வெளிப்படுத்தியவர்களாவோம். ஆதலால் பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ளுவதற்கு ஏற்றது இச்சந்தர்ப்பம் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதற்கு அவசியமான மனோதிடமும், சக்தியும் இருக்கின்றனவா என்று நம்மில் ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்த்து முடிவு செய்ய வேண்டும். இம்மாதிரித் தீர்மானங்களைப் பெரும்பான்மையோரின் வோட்டுக்களால் நிறைவேற்ற முடியாது. பிரதிக்ஞைகள் எடுத்துக்கொள்ளுவோர்தாம் இதற்குக் கட்டுப்பட்டவர்களாவார்கள். வெளியாரைப் பிரமிக்க வைக்கும் நோக்கத்துடன் பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ளுவது கூடாது. இந்நாட்டு அரசாங்கம், பிரிட்டிஷ் அரசாங்கம் அல்லது இந்திய சர்க்காரிடம் இத்தீர்மானம் என்ன எண்ணத்தை உண்டாக்கும் என்று எவரும் கவலைப்பட வேண்டியதில்லை. ஒவ்வொருவரும் தங்களுடைய உள்ளத்தையே பரிசோதித்துக்கொள்ள வேண்டும். தமக்கு இப் பிரதிக்ஞையைக் கொண்டு செலுத்துவதற்குப் போதுமான சக்தி இருக்கிறதென்று தங்களுடைய மனச்சாட்சி அறிவுறுத்தினால்தான் அவர்கள் பிரதிக்ஞை செய்ய வேண்டும்; அப்போது தான் அவர்கள் பிரதிக்ஞைக்குப் பலன் ஏற்படும்.

"இப்போது இதன் விளைவுகளைப் பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். எல்லாம் நன்மையாகவே முடியுமானால், இந்தியர்களில் பெரும்பான்மையோர் இச்சட்டத்தை எதிர்ப்பதாகப் பிரதிக்ஞை செய்து, அப்பிரதிக்ஞை செய்வோர் எல்லோரும் தங்களுக்குத் தாங்களே உண்மையாகவும் நடந்துகொள்ளுவார்களானால், இந்த அவசரச் சட்டம் நிறைவேற்றப்படாமலே போகலாம்; அல்லது நிறைவேற்றப்பட்டாலும் சீக்கிரத்தில் அது ரத்து செய்யப்படலாம். ஒரு வேளை நாம் கஷ்டப்பட வேண்டியிருக்காமலும் போகலாம். ஆனால், ஒரு பக்கம், பிர

திக்ஞை செய்துகொள்ளும் ஒவ்வொருவரும் எதிர்காலத்தில் மிகுந்த நம்பிக்கை உடையவராக இருக்க வேண்டும்; மற்றொரு பக்கம், எக்கஷ்டங்களுக்கும் தயாராகவும் இருக்க வேண்டும். ஆதலால்தான் நமது இப்போதைய போராட்டத்தில் நமக்கு நேரக்கூடிய துன்பத்தின் அளவை இங்கே உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இங்கே கூடியிருக்கும் மூவாயிரம் பேரும் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதாக வைத்துக்கொள்ளுவோம். மீதியிருக்கும் பத்தாயிரம் இந்தியர்கள் இத்தகைய பிரதிக்ஞை செய்துகொள்ளுவதில்லை என்றும் வைத்துக்கொள்ளுவோம். ஆரம்பத்தில் நாம் ஏளனத்திற்கு உள்ளாவோம். தவிர, இப்பொழுது எச்சரிக்கை செய்யப்பட்டிருந்தாலும், பிரதிக்ஞை செய்துகொள்ளுவோரில் சிலர் அல்லது பலர், ஆரம்பச் சோதனையிலேயே பலவீனம் அடைந்துவிடவும் கூடும். நாம் சிறைக்குப் போக வேண்டியிருக்கலாம். அங்கே நாம் அவமதிக்கப்படலாம். நாம் பசியால் வாட நேரிடலாம். மிகுந்த வெம்மையிலும் குளிரிலும் துன்புற நேரலாம்; கடினமான வேலைகளை நாம் செய்ய வேண்டி இருக்கும். முரட்டுச் சிறைச் சேவகர்களால் நமக்கு சவுக்கடி கொடுக்கப்படவும் கூடும். அதிகமான அபராதங்களைப் போட்டு, நம் சொத்துக்களை ஜப்தி செய்துவிடலாம். இச்சட்டத்தை எதிர்ப்பவர்கள் மிகச் சிலராகவே இருந்தால் அச்சொத்துக்கள் ஏலம் போடப்படலாம். இன்று செல்வவந்தர்களாக இருக்கும் நாம், நாளை மிக ஏழைகளாக்கப்படலாம். நாம் நாடு கடத்தப்படலாம்; பசிப்பிணி முதலிய கொடுமைகளால் சிறையில் கஷ்டப்பட்ட காரணத்தால் நம்மில் பலர் நோய்வாய்ப்படலாம்; அதனால் மரித்தும் போகக்கூடும். சுருங்கச் சொல்லின், நாம் ஊகிக்கக்கூடிய எல்லாவிதமான துன்பங்களையும் அனுபவிக்க நேரிடலாம். ஆதலால், நாம் இவற்றையும், இவற்றிற்கும் மோசமானவற்றையும் சகிக்க வேண்டி வரும் என்று நினைத்தே பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதுதான் விவேகமாகும். யாராவது ஒருவர் இப்போராட்டம் எப்பொழுது, எப்படி முடியுமென்று என்னைக் கேட்டால், சமூகம் முழுதும் ஆண்மையுடன் இச்சோதனையைச் சமாளித்து நிற்குமானால், முடிவு சமீபத்தில் இருக்கிறதெனச் சொல்லுவேன். நம்மில் பலர் கஷ்டத்தில் பின்தங்கிவிடுவார்களானால், போராட்டம் நீடிக்கும். ஆனால், ஒன்று மட்டும் நான் நிச்சயமாகக் கூற முடியும். ஒரு சிறு தொகையினராவது தாங்கள் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞையில் உண்மையுடன் இருக்கும் காலம் வரை இப்போருக்கு ஒரே ஒரு முடிவுதான் காண முடியும்; அதுதான் வெற்றி.

"என்னுடைய சொந்தப் பொறுப்பைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். இப்பிரதிக்ஞை செய்வதால் நேரிடக்கூடிய ஆபத்துக்களைக் குறித்து உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன் என்றால், அதே சமயத்தில் உங்களைப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளும்படியும் சொல்லுகிறேன். இவ்விஷயத்தில் எனக்

குரிய பொறுப்பும் எனக்கு நன்ருகத் தெரியும். இங்கிருப்பவர்களில் பெரும்பான்மையோர் உற்சாகத்திலுலோ அல்லது ஆத்திரத்திலுலோ இப்பிரதிக்ஞையை எடுத்துக்கொள்ளலாம். ஆனல், சோதனை வரும்போது அவர்கள் பலவீனம் அடையலாம். இப்போரில் கடைசி வரை எதிர்ப்பதற்கு ஒரு சிறு தொகையினரே மீதமாக இருக்கவும் கூடும். அப்பொழுதுங்கூட என்போன்றவர்களுக்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, செத்தாலும் சாவதேயன்றி இச்சட்டத்திற்குப் பணிந்து விடுவதில்லை என்பதுதான் அது. மற்றெல்லோரும் இப்போரிலிருந்து விலகினலும் - அது நேரிடக்கூடியதல்ல-இக்கஷ்டங்களை எதிர்க்க என்னைத் தனியே விட்டுவிட்டாலும், நான் என்னுடைய பிரதிக்ஞையினின்று பிறழமாட்டேன் என்பது நிச்சயம். தயை செய்து என்னைத் தவருகப் புரிந்துகொள்ளாதீர்கள். நான் இதை அகம்பாவத்தினல் சொல்லவில்லை. ஆனல், உங்களை, முக்கியமாக மேடை மேல் இருக்கும் தலைவர்களை உஷார் செய்கிறேன். நான் உங்களுக்கு மரியாதையுடன் ஒன்றைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதாவது, மற்றவர்களால் கைவிடப்பட்டுத் தன்னந்தனியாக நிற்க நேர்ந்தாலும் உறுதியாக நிற்கும் மனோதிடமும், சக்தியும் உங்களுக்கு இல்லாவிடில், நீங்கள் இப்பிரதிக்ஞையை எடுத்துக் கொள்ளக்கூடாது. அதுமாத்திரமல்ல, தீர்மானம் இக்கூட்டத்தின் முன்னிலையில் முடிவு செய்ய வைக்கப்படுவதற்குமுன், கூட்டத்தினர் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள ஆரம்பிப்பதற்கு முன்னல், தீமானத்திற்கு உங்கள் ஆட்சேபத்தையும் தெரிவித்துவிட வேண்டும். இத்தீர்மானத்தை நிறைவேற்றுவதில் நீங்கள் உதவி அளிக்கக்கூடாது; இப்பிரதிக்ஞையை நாம் ஒரு கூட்டமாய் எடுத்துக்கொண்டாலும், ஒருவர் அல்லது பலர் இதினின்றும் பிறழுவதும், மற்றவர்களை அவர்களுடைய பொறுப்பிலிருந்து விடுவிக்காது. ஒவ்வொருவரும் தங்கள் முழுப் பொறுப்பையும் உணர வேண்டும். அதன் பிறகுதான் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள வேண்டும். மற்றவர்களுடைய அபிப்பிராயங்களைக் கருதாமல், ஒவ்வொருவரும் சுதந்திரமாக முடிவுக்கு வர வேண்டும். மற்றவர்கள் எது செய்தாலும், தாம் இறக்க நேரினும் தமது பிரதிக்ஞையில் உண்மையுடன் இருக்கவேண்டும் என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும்."

நான் இவ்விதம் பேசிவிட்டு என் இடத்தில் உட்கார்ந்தேன். கூட்டம் பூரண அமைதியுடன் என்னுடைய ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டது. மற்றத் தலைவர்களும் பேசினர்கள். ஒவ்வொருவரும் தங்கள் பொறுப்பைப் பற்றியும், கூட்டத்திற்கு வந்திருப்பவர்களின் பொறுப்பைப் பற்றியும் பேசினர்கள். அக்கிராசனதிபதி எழுந்தார். அவரும் நிலைமையைத் தெளிவாக்கினர். கடைசியில் கூட்டத்தில் இருந்தவர்கள் எல்லோரும் எழுந்து நின்று, மேல் தூக்கிய கைகளுடன், அந்த அவசரச் சட்ட மசோதா சட்டமாக்கப்பட்டால், அதற்குப் பணிந்து விடுவதில்லை

யெனக் கடவுள் சாட்சியாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர். அக்காட்சியை நான் என்றும் மறக்க முடியாது. நான் இதை எழுதும்போதும், அது என் மனக்கண் முன் நிற்கிறது.

# 5

# பெயர் வந்த விதம்

"எங்கள் இயக்கத்திற்கு என்ன பெயர் கொடுப்பதென எங்களில் யாருக்கும் தெரியவில்லை. அப்போது 'சாத்விக எதிர்ப்பு' என்னும் சொல்லை உபயோகித்து எங்கள் இயக்கத்தைக் குறிப்பிட்டிருந்தேன். அப்பெயர் கொடுத்தபோது 'சாத்விக எதிர்ப்பின்' முழு அர்த்தத்தையும் நான் உணரவில்லை. ஒரு புதுத் தத்துவம் பிறந்திருக்கிறது என்பதை மட்டுமே நான் அறிந்தேன். போராட்டம் முன்னேறிக்கொண்டிருந்தபோது, 'சாத்விக எதிர்ப்பு' (Passive Resistance) என்ற சொற்றொடர் குழப்பத்தை உண்டாக்கியது. இப்பெரிய போராட்டம் ஓர் ஆங்கிலப் பெயரால் மாத்திரம் வழங்கப்படுவது வெட்கமாகத் தோன்றிற்று. தவிர, இந்த அந்நிய நாட்டுச் சொற்றொடரைச் சமூகத்தில் எல்லோராலும் உபயோகப்படுத்த முடியவில்லை. ஆதலால், எங்கள் போருக்கு மிகவும் நல்ல பெயரைக் கண்டு பிடிக்கும் வாசகருக்கு ஒரு சிறு பரிசளிக்கப்படுமென 'இந்தியன் ஒப்பீனிய'னில் பிரசுரம் செய்யப்பட்டது. பலவிதமான யோசனைகள் கூறப்பட்டன. இப்போராட்டக் கருத்துக்கள் 'இந்தியன் ஒப்பீனிய'னில் முழுதும் எடுத்துரைக்கப்பட்டிருந்தன. இப்பரிசுக்குப் போட்டி போட்டவர்களிடத்தில் தங்கள் ஆராய்ச்சிக்கு அடிப்படையாக இருக்கப் போதுமான ஆதாரங்கள் இருந்தன. ஸ்ரீ மகன்லால் காந்தி இதில் போட்டி போட்டவர்களில் ஒருவர். **'சத்கிரஹ'** என்ற வார்த்தையை அவர் சொன்னார். **'ஒரு நல்ல விஷயத்தில் உறுதி'** என்பது அதற்குரிய பொருள். அவ்வார்த்தை எனக்குப் பிடித்தமாயிருந்தது. ஆனால், நான் எதிர்பார்த்த முழுக் கருத்தையும் அது தெரிவிக்கவில்லை. ஆதலால் அதைச் **'சத்தியாக்கிரகம்'** என்று திருத்தினேன். 'ஸத்யம்' என்னும் வார்த்தையில் அன்பு என்னும் பொருள் மறைந்து நிற்கிறது; 'ஆக்ரஹ' என்றால் உறுதி. உறுதி சக்தியை உண்டாக்குவதால், சக்தி என்ற அர்த்தத்துடன் விளங்குகிறது. இவ்விதம் இந்திய இயக்கத்தைச் 'சத்தியாக்கிரகம்' என்று கூற ஆரம்பித்தேன். அதாவது உண்மையிலிருந்தும் சத்தியத்திலிருந்தும், அல்லது அகிம்சையிலிருந்தும் பிறந்த சக்தி என்பது அதன் பொருள். 'சாத்விக எதிர்ப்பு' என்னும் சொற்றொடரின் பிரயோகத்தை அதிலிருந்து விட்டுவிட்டேன். ஆங்கிலக்

கட்டுரைகளில் அவ்வார்த்தையை அதிகமாக விலக்கி, அதற்குப் பதிலாகச் 'சத்தியாக்கிரகம்' என்னும் சொல்லேயோ அல்லது அதற்குத் தகுந்த வேறு ஆங்கிலச் சொற்களையோ உபயோகித்தோம். இதுதான் சத்தியாக்கிரகம் என்று சொல்லப்பட்ட இயக்கத்தின் ஆரம்பம்; அதற்குப் பெயராகவே உபயோகப்படுத்தப்பட்ட வார்த்தையின் ஆரம்பமும் இதுவே. நாம் நம் சரித்திரத்தில் மேலே தொடர்வதற்கு முன், சாத்விக எதிர்ப்புக்கும் சத்தியாக்கிரகத்துக்குமுள்ள வித்தியாசத்தை அறிவது நலம். அதுவே அடுத்த அத்தியாயத்தின் விஷயமாகும்.''

[ 'தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்'— மகாத்மா காந்தி நூல்கள் முதற் தொகுப்பு ]

# 6

# சத்தியாக்கிரகமும் சாத்விக எதிர்ப்பும்

'தென்னுப்பிரிக்காவில் இயக்கம் முன்னேற முன்னேற, ஆங்கிலேயர்களுங்கூட அக்கறையுடன் அதைக் கவனிக்கத் தொடங்கினர்கள். டிரான்ஸ்வால் ஆங்கிலப் பத்திரிகைகள் சாதாரணமாக ஐரோப்பியர்களையும் கறுப்புச் சட்டத்தையும் ஆதரித்து எழுதினலும்,பிரபல இந்தியர்களின் கட்டுரைகளையும் அவை விரும்பி வெளியிட்டன. இந்தியர்கள் அரசாங்கத்திடம் எடுத்துரைத்த விஷயங்களையும், முழுவதுமோ அல்லது சுருக்கமாகவோ பிரசுரித்தன. சில சமயங்களில் இந்தியர்களுடைய முக்கியமான கூட்டங்களுக்குத் தங்கள் நிருபர்களையும் அனுப்பின. அங்ஙனம் அனுப்பாத சமயங்களில், நாங்கள் அனுப்பிய சுருக்கமான அறிக்கைகளுக்கும் இடம் தந்தன.

'இந்தச் சௌகரியங்கள் சமூகத்துக்குப் பயன் அளிக்கத்தக்கவைதாம். இயக்கம் வளர்ந்து வரவே, சில முக்கியமான ஐரோப்பியர்களும் இயக்கத்தில் அக்கறை காட்டத் தொடங்கினர்கள். இவர்களில் ஒருவர் ஹோஸ்கன். இவர் ஜொஹன்னஸ்பர்க்கைச் சேர்ந்த பெரிய தனவந்தர்களில் ஒருவர். இவருக்கு நிறத் துவேஷம் என்பது எப்பொழுதுமே கிடையாது. ஆனல், சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்ட பிறகு, இந்தியப் பிரச்னையில் இவருக்கு ஊக்கம் அதிகமாயிற்று. ஜெர்மிஸ்டன் என்பது ஜொஹன்னஸ்பர்க்கைச் சேர்ந்தாற் போலுள்ள ஓர் ஊர். அங்குள்ள ஐரோப்பியர்கள் என் பிரசங்கத்தைக் கேட்க விரும்புவதாகத் தெரிவித்தார்கள். ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. என்னையும், நான் ஆதரிக்கும் இயக்கத்தையும் அறிமுகம் செய்து பேசும்போது ஸ்ரீ ஹோஸ்கன் பின்வருமாறு சொன்னர்: ''தங்கள் குறைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்கான மற்றெல்லா

வழிகளும் பயனற்றுப் போனதால், டிரான்ஸ்வால் இந்தியர்கள் சாத்விக எதிர்ப்பைக் கைக்கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு வோட்டுரிமை இல்லை. எண்ணிக்கையில் அவர்கள் மிகச் சிறிய தொகையினர். அவர்கள் பலவீனமாக இருப்பதுடன், அவர்களிடத்தில் ஆயுதங்களும் இல்லை. ஆதலால் பலமற்றவர்களின் ஆயுதமான சாத்விக எதிர்ப்பை அவர்கள் கைக்கொண்டிருக்கின்றனர்." இம்மொழிகள் என்னை வியப்புறுத்தின. இதன் காரணமாக நான் செய்யவிருந்த சொற்பொழிவு முற்றிலும் வேறு வகையாகத் திரும்பியது. ஸ்ரீ ஹோஸ்கன் கூறியதை மறுத்து, எங்களுடைய சாத்விக எதிர்ப்பை 'ஆன்ம சக்தி' என்று விவரித்தேன். 'சாத்விக எதிர்ப்பு' என்ற சொற்றொடரைப் பிரயோகம் செய்வது ஒரு விபரீதமான பொருளுக்கு இடங் கொடுக்கக்கூடுமென்பதை அக்கூட்டத்தில் கண்டேன். விஷயங்களைத் தெளிவாக்குவதற்காக அக்கூட்டத்தில் சொன்ன வாதத்தை விவரித்து, சாத்விக எதிர்ப்புக்கும், ஆன்ம சக்திக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக்காட்ட முயற்சி செய்கிறேன்.

''சாத்விக எதிர்ப்பு' என்ற சொற்றொடர் எப்போது, யாரால் முதலில் ஆங்கிலத்தில் உபயோகப்படுத்தப்பட்டதென எனக்குத் தெரியாது. ஆனால், ஆங்கில மக்களில் ஒரு சிறுபான்மையோர், கொடிய சட்டம் ஒன்றை அங்கீகரிக்காத சமயமெல்லாம், அச்சட்டத்தை எதிர்த்துப் புரட்சி செய்வதற்குப் பதிலாகச் சாந்தமான அல்லது அமைதியான வழியில், அச்சட்டத்திற்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அப்படிக் கீழ்ப்படியாததனால் ஏற்படும் தண்டனையை, தங்கள் மீது ஏற்றுக்கொள்ளுவர். பிரிட்டிஷ் பார்லிமெண்டு சில ஆண்டுகளுக்கு முன் கல்விச் சட்டத்தை நிறைவேற்றியபோது, 'நான்-கன்பார்மிஸ்டு'கள் (Non-Conformist), டாக்டர் கிளிப்போர்டு என்பவர் தலைமையின் கீழ், சாத்விக எதிர்ப்பைக் கைக்கொண்டனர். வோட்டுரிமை பெறுவதற்காக ஆங்கில மாதர் நடத்திய பெரிய இயக்கமும் சாத்விக எதிர்ப்பு என்று சொல்லப்பட்டது. இவ்விரண்டு உதாரணங்களைக்கொண்டே, சாத்விக எதிர்ப்பு பலவீனர்கள் அல்லது வோட்டுரிமை இல்லாதவர்களுடைய ஆயுதம் என்று ஹோஸ்கன் விவரித்தார். டாக்டர் கிளிப்போர்டுக்கும், அவர் நண்பர்களுக்கும் வோட்டுரிமையிருந்தது; ஆனால், அவர்கள் பார்லிமெண்டில் சிறுபான்மையோராயிருந்ததால், கல்விச் சட்டம் நிறைவேற்றப்படுவதைத் தடுக்க அவர்களால் முடியவில்லை. அதாவது, அவர்கள் எண்ணிக்கையில் பலவீனர்களாயிருந்தனர். தங்கள் லட்சியத்தை அடைவதற்கு அவர்கள் ஆயுதங்களை உபயோகப்படுத்துவதில் வெறுப்புக் கொண்டவர்களல்ல. ஆனால், ஆயுதத்தின் பலத்தால் வெற்றி அடைய முடியும் என்ற நம்பிக்கை அவர்களுக்கில்லை. ஒழுங்காக அமைந்த ஆட்சி நடக்கும் ஒரு நாட்டில், பொது மக்களுக்குரிய உரிமைகளைப் பெறுவதற்காக அடிக்கடி ஆயுதங்களை உபயோகப்படுத்துவது அவ்வியக்கத்தின் நோக்கத்தையே தோற்கடித்து

விடும். தவிர, அது அனுபவத்தில் சாத்தியமானதாகவே இருந்தாலும், சில 'நான் கன்பார்மிஸ்டு'கள் பொதுவாக ஆயுதம் கையாளுவதை ஆட்சேபிப்பவர்கள். பெண்களுக்கு வோட்டுரிமை இல்லை. அவர்களும் எண்ணிக்கையிலும், உடல் உறுதியிலும் பலவீனர்கள். இவ்விதம் அவர்களுடைய உதாரணமும், ஹோஸ்கனுடைய அபிப்பிராயங்களுக்கு ஆதரவு அளித்தது. பெண்கள் வோட்டுரிமை பெற ஆரம்பிக்கப்பட்ட இயக்கம் (Suffragist Movement) பலாத்காரத்தை உபயோகிப்பதை விலக்கவில்லை. சில பெண்கள் கட்டடங்களைக் கொளுத்தினர்கள்; ஆண்களையும் தாக்கினர்கள். அவர்கள் யாரையும் கொல்லப் பார்த்தனர் என்று நான் நினைக்கவில்லை. ஆனல், சந்தர்ப்பம் கிடைத்தபோது அவர்கள் ஆண்களை அடிக்கப் பார்த்தனர். இவ்வாறு அவர்களைத் துன்புறுத்த நினைத்தார்கள்.

'ஆனல், இந்தியர்களின் இயக்கத்தில் எவ்விதச் சந்தர்ப்பத்திலும் மிருக பலத்துக்குச் சிறிதேனும் இடமில்லை. எவ்வளவு அதிகமாய்க் கஷ்டப்பட்டாலும் சத்தியாக்கிரகிகள் ஒரு பொழுதும் பலாத்காரத்தை உபயோகப்படுத்தவில்லை என்பதையும், மிருக பலத்தைச் சரியானபடி உபயோகிக்கக்கூடிய வாய்ப்பு அவர்களுக்கு இருந்தபோதிலும், அவர்கள் அதை உபயோகப் படுத்தவில்லை என்பதையும், மேலே போகப் போக நம் வாசகர்கள் அறிவார்கள். இந்தியர்கள் வோட்டுரிமை இன்றி வலிவற்றவராய் இருந்தபோதிலும், இவைகளுக்கும் சத்தியாக்கிரக இயக்கத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இந்தியர் ஆயுதங்களும், வோட்டுரிமையும் பெற்றிருந்தாலும், அவர்கள் சத்தியாக்கிரகம் செய்திருப்பார்கள் என்று சொல்லுவதற்கில்லை. அவர்களுக்கு வோட்டுரிமை இருந்திருந்தால், ஒரு வேளை சத்தியாக்கிரகம் அனுஷ்டிப்பதற்கு யாதோர் அவசியமுமே நேர்ந்திருக்காது. அவர்களிடத்தில் ஆயுதம் இருந்திருந்தால், அவர்களைப் பகைத்துக் கொள்ளுவதற்கு முன் எதிரிகள் பன்முறை யோசித்துப் பார்த்திருப்பார்கள். ஆதலால் ஆயுதங்களைப் பெற்றிருக்கும் மக்களுக்குச் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டிய சந்தர்ப்பங்கள் மிகச் சிலவே இருக்கும் என்பதை உணரலாம். இந்திய இயக்கத்தின் திட்டத்தைப் போடுவதில், ஆயுதம் கொண்டு எதிர்ப்பது சாத்தியம் என்பது பற்றியோ, வேறு விதத்தைப் பற்றியோ யோசனைக்கு இடம் அளிக்கப்படவில்லை என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியும் என்பதே நான் குறிப்பிட விரும்புவது. சத்தியாக்கிரகம் என்பது வெறும் (கலப்பற்ற) ஆன்ம சக்தி என்பது தெளிவு. ஆயுதப் பிரயோகம் அல்லது பலாத்காரம் அல்லது மிருக பலம் உபயோகப்படுத்துவதற்கு எவ்வளவிற்கு, எப்பொழுது இடம் இருக்கின்றதோ, அப்பொழுதெல்லாம், அவ்வளவிற்கு ஆன்ம சக்திக்கு வாய்ப்புக் குறைந்துவிடும். பலாத்காரமும் ஆன்ம சக்தியும் ஒன்றுக்கொன்று முரணனவை என்பது என்னுடைய அபிப்பிராயம். சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்

பட்ட சமயத்திலும் இம்முரண்பாட்டை நான் முற்றிலும் உணர்ந்திருந்தேன்.

'இக் கருத்துக்கள் நேரானவையா அல்லது தவருனவையா என்று யோசிக்க நாம் இங்கே நிற்க வேண்டியதில்லை. சாத்விக எதிர்ப்புக்கும் சத்தியாக்கிரகத்துக்கும் உள்ள வித்தியாசத்தை இங்கே குறிப்பிடுவதே நம் வேலையாகும். இவ்விரண்டிற்கும் அடிப்படையான ஒரு பெரிய வித்தியாசம் இருப்பதையும் கண்டோம். இதை அறியாமல் தங்களைச் சாத்விக எதிர்ப்புக்காரர்கள் அல்லது சத்தியாக்கிரகிகள் என்று சொல்லிக்கொள்ளுபவர்கள், இவ்விரண்டும் ஒன்றென நினைத்தால், இரண்டிற்கும் குறை ஏற்பட்டு, இதனுல் எதிர்பாராத தீமைகளுக்கு இடம் உண்டாகலாம். தென்னுப்பிரிக்காவில் நாங்கள் 'சாத்விக எதிர்ப்பு' என்னும் சொற்றெடரை உபயோகப்படுத்தியதன் விளைவு என்னவெனில், எங்களைப் பாராட்டிய மக்கள், பெண்கள் வோட்டுரிமை வாதிகளுக்கு இருந்த துணிவு, தியாகம் போன்ற குணங்கள் எங்களிடமும் தென்பட்டதற்காக மெச்சியதன்று; பெண்கள் வோட்டுரிமை வாதிகளைப் போல நாங்களும், மக்களுக்கும் பொருள்களுக்கும் சேதம் விளைவிக்கக்கூடியவர்களென்று தவருகக் கருதப்பட்டதேயாம். ஸ்ரீ ஹோஸ்கன் போன்ற தாராளம் மிக்க ஒரு நண்பரும் எங்களைப் பலவீனர்களென நினைத்தார். சிந்தனைக்குரிய வலிமை எத்தகையதெனில், ஒரு மனிதன் தன்னைப் பற்றி எவ்வாறு நினைக்கிருனே அவ்வாறே முடிவில் ஆகிருன். நாம் பலவீனர்களென்றும், உதவியில்லாதவர்களென்றும், இதனுலேயே சாத்விக எதிர்ப்பு செய்கிறேமென்றும் நம் மனத்தில் இடைவிடாமல் நினைத்து, மற்றவர்களையும் அங்ஙனமே நினைக்கச் செய்வோமாளுல், இந்த எதிர்ப்பு நமக்கு எப்போதும் பலத்தை உண்டாக்காது. சாத்விக எதிர்ப்பு பலவீனர்களின் ஆயுதமென நினைத்து, சீக்கிரத்திலே அதைக் கைவிட்டுவிடுவோம். அதற்கு மாருக, நாம் சத்தியாக்கிரகிகளாக இருந்து சீக்கிரத்திலேயே சக்தி படைத்தவர்களென நம்பிச் சத்தியாக்கிரகம் செய்வோமானுல், இரண்டு தெளிவான விளைவுகள் அதிலிருந்து தோன்றும். நாம் பலமுள்ளவர்கள் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்ளுவதால் நாளுக்கு நாள் அதிக பலம் அடைகிறேம். நமக்குள்ள சக்தி அதிகம் ஆக ஆகச் சத்தியாக்கிரகத்தின் வலிமையும் வளர்கிறது. அதை விட்டுவிடுவதற்கு ஒரு சந்தர்ப்பத்தை ஒரு பொழுதும் தேடிக்கொண்டிருக்கவும் மாட்டோம்.

'தவிர, சாத்விக எதிர்ப்பில் அன்பிற்கு இடமில்லை. அதற்கு மாருகச் சத்தியாக்கிரகத்தில் துவேஷத்திற்கு இடமில்லாமலிருப்பதோடு சத்தியாக்கிரகத்தின் ஆதார தத்துவத்துக்கே அது விரோதமாகவும் ஆகிறது. சாத்விக எதிர்ப்பில் தகுந்த தருணம் ஏற்பட்டால் ஆயுதப் பிரயோகத்துக்கு இடம் உண்டு. ஆனுல், மிகவும் அனுகூலமான சந்தர்ப்பங்களிலுங்கூடச் சத்தி

யாக்கிரகத்தில் பலாத்காரம் விலக்கப்பட்டிருக்கிறது. சாத்விக எதிர்ப்பு பலாத்காரத்தின் உபயோகத்திற்கான தயாரிப்பு என்றே பல சமயங்களிலும் கருதப்படுகிறது. ஆனால், சத்தியாக்கிரகத்தை எப்பொழுதும் அப்படி உபயோகப்படுத்த முடியாது. ஆயுதத்தின் பிரயோகத்துடன் சேர்ந்தே சாத்விக எதிர்ப்பும் செய்யப்படலாம். சத்தியாக்கிரகமும் மிருக பலமும் ஒன்றுக்கொன்று எதிர்மறையாக இருப்பதால் இவ்விரண்டும் சேர்ந்திருக்க முடியாது. மிகவும் நெருங்கிய உறவினர், அன்பர்களிடத்திலும் சத்தியாக்கிரகம் செய்யப்படலாம். அவர்கள் அன்பர்களாக இருப்பது போய், விரோதிகளானால் ஒழியச் சாத்விக எதிர்ப்பு இவ்விதம் அவர்களிடம் செய்ய முடியாது. சாத்விக எதிர்ப்பில் எதிரியைத் துன்பப்படுத்த வேண்டுமென்ற எண்ணமும், அங்ஙனம் செய்தால் ஏற்படும் கஷ்டங்களைச் சகிக்கத் தயாராக இருக்கவேண்டுமென்ற தன்மையும் எப்பொழுதும் கூடவே காணப்படுகின்றன. ஆனால், சத்தியாக்கிரகத்தில் பகைவனுக்குத் தீமை செய்ய வேண்டுமென்ற எண்ணம் சிறிதளவும் இல்லை. தான் துன்பங்களுக்கு உட்படுவதன் மூலம் எதிரியை வெல்லலாம் என்பதையே சத்தியாக்கிரகம் சித்தாந்தமாகக் கொண்டிருக்கிறது.

'இவ்விரண்டு சக்திகளுக்கும் உள்ள வித்தியாசம் இவையே. முன் சொல்லப்பட்டிருக்கிற சாத்விக எதிர்ப்பிற்குரிய குணங்கள், அல்லது நீங்கள் அப்படி நினைத்தால் குற்றங்கள், அப்பெயரால் வழங்கும் ஒவ்வோர் இயக்கத்திலும் காணப்படுகின்றன என நான் சொல்ல விரும்பவில்லை. ஆனால், சாத்விக எதிர்ப்பு நடத்திய பலவிடங்களில் இக்குறைகள் காணப்பட்டிருக்கின்றன என்று நிரூபிக்கலாம். சாத்விக எதிர்ப்புச் செய்தவர்களில் தலையாயவர் ஏசு கிறிஸ்து என்று சொல்லப்படுகிறது. ஆனால், அவர் விஷயத்தில் அந்தச் சாத்விக எதிர்ப்பைச் சத்தியாக்கிரகம் என்றே கொள்ள வேண்டும். சாத்விக எதிர்ப்புக்களின் சரித்திரத்தில் அக்கருத்துடைய சாத்விக எதிர்ப்புக்கள் பல தோன்றவில்லை. அவைகளில் ஒன்று டால்ஸ்டாயால் குறிப்பிடப்பட்டிருக்கிற ருஷிய தேசத்து டௌகோபார் (Doukhobars)*

---

* டௌகோபார்: ஆன்மப் போரில் வல்லவர்கள் என்பது இதன் பொருள். 18 - ஆம் நூற்றாண்டில் ருஷியாவில் தோன்றிய ஒரு சமயக் குழுவினர் இவர்கள். இவர்களுடைய சமயக் குரவர் பீட்டர் வெரிகின். கிறிஸ்துவின் கடவுள் தன்மையை மறுப்பவர்; சுவிசேஷச் செய்திகளை உருவகப் பொருளில் கொள்வோர்; எந்தவிதமான அதிகாரத்துக்கும் உட்படாதவர். இறைவன் முன்பு எவரும் சமம் என்று கருதுபவர். ஜார் கால ருஷிய அரசாங்கம் இவர்களைக் கடுமையாக நடத்தியது. டால்ஸ்டாய், இவர்களைத் தம் நண்பரெனப் போற்றினர். ருஷிய அடக்குமுறையிலிருந்து தப்ப கனடாவிலுள்ள ஸஸ்கட்சிவானில் குடியேறினர். அங்கே கனடா சமுதாயத்துடன் கலந்துவிட்டனர். அவர்கள் பயின்ற சில சாதனைகள் - நிர்வாணமாக இருத்தல், குழந்தைக் கல்வி - இவை சம்பந்தமாக அரசாங்கத்துக்கும் இவர்களுக்கும் இடையே மனத்தாங்கல் மூண்டது.

இயக்கம். [கிறிஸ்தவ மதத்தின் ஆரம்ப காலத்தில் ஆயிரக் கணக்கான கிறிஸ்தவ பக்தர்கள் கொடுமைகளைப் பொறுமை யுடன் சகித்ததற்குச் சாத்விக எதிர்ப்பு என்ற சொற்றொடர் உபயோகப்படுத்தப்படவில்லை. ஆதலால், அவர்களைச் சத்தி யாக்கிரகிகள் என்ற பிரிவில் சேர்ப்பேன். அவர்களுடைய செய்கை சாத்விக எதிர்ப்பே என்று சொல்லப்படுமானால், சாத்விக எதிர்ப்பு சத்தியாக்கிரகம் என்ற அர்த்தத்தையே கொள்கிறது. மக்கள் சாதாரணமாகச் சாத்விக எதிர்ப்பு என்னும் ஆங்கிலச் சொற்றொடரால் எந்தக் கருத்தைக் கொண்டிருக் கின்றனரோ, அதிலிருந்து சத்தியாக்கிரகம் அடிப்படையாக மாறுபட்டிருக்கிறதென்பதை இந்த அத்தியாயத்தில் எடுத்துக் காட்டுவது எனது நோக்கமாகும்.

'சாத்விக எதிர்ப்பின் தன்மைகளைப்பற்றிச்சொல்லும்போது, அதை அனுசரிப்போர் மீது நியாயமின்றிக் குறை சொல்லாமல் இருக்கும் பொருட்டு, நான் ஓர் எச்சரிக்கை விடுக்க வேண்டி யிருக்கிறது. சத்தியாக்கிரகிகள் என்று தங்களைச் சொல்லிக் கொள்ளும் எல்லோருக்கும், சத்தியாக்கிரகத்தின் தன்மைகள் என்று நான் விவரித்துள்ள எல்லா நற்பண்புகளும் பொருந்தி யிருக்கின்றன என்று நான் உரிமை கொண்டாடவில்லை. சத்தி யாக்கிரகிகள் என்று கூறிக்கொள்ளும் பலர், சத்தியாக்கிரகத் தின் தத்துவங்களுக்கு முற்றிலும் புதுமையானவர்கள் என்பதை யும் நான் அறியாதவனல்ல. சத்தியாக்கிரகம் பலவீனர்களுடைய ஆயுதம் என்று பலர் நினைக்கின்றனர். அதை ஆயுதத்தோடு கூடிய எதிர்ப்புக்குத் தயார் செய்யும் முறையென மற்றவர்கள் சொல்லியிருக்கின்றனர். சத்தியாக்கிரகிகள் இப்பொழுது இருக் கின்ற மாதிரியை விவரிப்பது என்னுடைய நோக்கமல்ல. ஆனால், சத்தியாக்கிரகத்தின் உட்பொருளையும், உண்மைச் சத்தியாக் கிரகிகளின் குணாதிசயங்களையும் எடுத்துரைப்பதே என்னுடைய நோக்கமென்று இங்கே மறுபடியும் சொல்ல விரும்புகிறேன்.

'டிரான்ஸ்வாலில் இந்தியர்களின் இயக்கத்தைக் குறிப்பதற் காகவும், அது சாதாரணமாகச் சொல்லப்படும் சாத்விக எதிர்ப் போடு குழப்பப்படாமல் இருப்பதற்காகவும், நாங்கள் ஒரே சொல்லுடைய ஒரு பெயரைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. அக்காலத்தில் அப்பெயரின் பொருளுக்கு அடிப்படையாகக் கரு தப்பட்ட பல தத்துவங்களையும் இவ்வத்தியாயத்தில் காட்ட முயன்றுள்ளேன்.'

['தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்' - மகாத்மா காந்தி நூல்கள் - முதற் தொகுப்பு.]

பகுதி மூன்று

# சத்தியாக்கிரகம் என்பது என்ன ?

## 1

## சத்தியாக்கிரகம், சட்ட மறுப்பு, சாத்விக எதிர்ப்பு, ஒத்துழையாமை

சத்தியத்தைக் கடைப்பிடிப்பது என்பதே சத்தியாக்கிரகம் என்பதன் சாதாரண பொருள். ஆகையால், சத்தியத்தின் சக்தி என்று அது பொருள்படும். சத்தியமே ஆன்மா. எனவே, அது ஆன்ம சக்தி என்று சொல்லப்படுகிறது. பலாத்காரத்தை உபயோகிப்பதென்பதை இது விலக்குகிறது. ஏனெனில், பரிபூரணமான சத்தியத்தை அறியும் ஆற்றல் மனிதனுக்கு இல்லாததனால், அவன் தண்டிப்பதற்கு வேண்டிய தகுதி இல்லாதவனாகிறான். இங்கிலாந்தில் பெண்களின் வோட்டுரிமைக்காகப் போராடியவர்களும் மற்றவர்களும் அப்பொழுது அனுசரித்து வந்த 'சாத்விக எதிர்ப்பு' வேறு, இது வேறு என்பதைக் காட்டுவதற்காகத் தென்னாப்பிரிக்காவில் இதற்குச் சத்தியாக்கிரகம் என்று பெயர் கொடுக்கப்பட்டது. பலவீனர்களின் ஆயுதமாக நாங்கள் இதைக் கருதியதே இல்லை.

'சாத்விக எதிர்ப்பு' (Passive Resistance) சம்பிரதாயம் ஆங்கில அர்த்தத்தில் உபயோகிக்கப்பட்டது. பெண்கள் வோட்டுரிமை இயக்கத்தினரும்* நான்கன்பார்மிஸ்டுகள்† என்ற கிறிஸ்

---

*இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரிட்டனில் பெண்கள் வோட்டுரிமை இயக்கம் (Women's Suffrance Movement) என்ற ஓர் இயக்கம் நடந்து வந்தது. பார்லிமெண்டுக்கு வோட்டுக்கொடுக்கும் உரிமையைப் பெறுவதற்காக இந்த இயக்கத்தினர் போராடினார்கள். இவர்களில் சிலர் தீவிரமான பலாத்காரச் செய்கைகளிலும் ஈடுபட்டனர். இதனால் அதிக சொத்துக்கள் நாசத்தையும் கலவரங்களையும் உண்டாக்கினர். பலர் சிறை சென்றதோடு உண்ணாவிரதம் இருந்தனர். 30 வயதிற்கு மேற்பட்ட பெண்களுக்கு 1918 - இல் வோட்டுரிமை அளித்த பிறகு இந்த இயக்கம் முடிவுற்றது. 1928 - இல் நிறைவேறிய சட்டம், ஆண்களுக்கு இருப்பதைப் போன்ற வோட்டுரிமையைப் பெண்களுக்கும் அளித்தது ஸ்ரீமதி பாங்கர்ஸ்ட், அவருடைய இரு குமாரிகளான ஸில்வியா, டேம் கிறிஸ்டாபெல், ஸ்ரீமதி பாஸட், நெல்லி கென்னி முதலியவர்கள் இந்த இயக்கத்தின் தலைவிகள்.

† நான்கன்பார்மிஸ்டுகள் அல்லது ஆட்சேபக்காரர்கள் என்போர், இங்கிலாந்து கிறிஸ்தவாலயக் கோட்பாட்டிற்கு உடன்படாதவர்களாவர். 1662 - இல் யூனிபார்மிடிச்

தவப் பகுதியினரும் சாத்விக எதிர்ப்பை அனுசரித்து வந்தார்கள். சாத்விக எதிர்ப்பு, பலவீனர்களின் ஆயுதமாகவே கொண்டு வரப்பட்டு அந்த வகையிலேயே கருதப்பட்டு வந்தது. பலவீனர்களால் இயலாதது என்பதற்காக இது பலாத்காரத்தைத் தவிர்த்தாலும், சந்தர்ப்பத்திற்கு அவசியமானல் பலாத்காரத்தை உபயோகிப்பது என்பதை இது நிராகரித்து விடவில்லை. இதுவே சாத்விக எதிர்ப்பாளர்களின் கருத்து. என்ருலும் ஆயுதங்களைக் கொண்டு எதிர்ப்பதற்கும் இதற்கும் எப்பொழுதும் வித்தியாசம் இருந்தே வந்திருக்கிறது. மதத்திற்காக உயிர்த் தியாகஞ் செய்த கிறிஸ்தவப் பெரியார்களின் முறைக்கு ஒத்ததாக இம்முறையும் ஒரு சமயம் இருந்துவந்தது.

சட்ட மறுப்பு என்பது, ஒழுக்கத்திற்கு மாருன சட்டங்களைச் சாத்விக முறையில் மீறுவதாகும். நான் அறிந்தவரையில், இந்தக் கருத்தை முதன் முதல் கூறியவர் தோரோ‡ ஆவார். அடிமை முறையை வைத்திருந்த ஓர் அமெரிக்க அரசாங்கத்தின் சட்டங்களை அவர் எதிர்த்ததன் முக்கியத்தைக் குறிப்பிடவே இதை உபயோகித்தார். சாத்விக சட்ட மறுப்பின் கடமையைப் பற்றி மிகத் திறமை வாய்ந்த விளக்க நூல் ஒன்றை அவர் எழுதியிருக்கிருர். ஆனல், தோரோ முழுக்க முழுக்க அகிம்சையை வற்புறுத்துபவராக இல்லாமலும் இருக்கலாம். இவர், தமது சட்ட மறுப்பை நிலத் தீர்வை சம்பந்தமான சட்டங்களை மீறுவது, அதாவது வரி கொடுக்க மறுப்பது என்பதோடு நிறுத்திக்கொண்டார். ஆனல், 1919-இல் அனுசரிக்கப்பட்ட சட்ட மறுப்போ, எந்தச் சட்டத்தையும், ஒழுக்கத்திற்கு மாருன சட்டத்தையும் மீறுவது என்பதைக் கொண்டது. சாத்விக முறையில், அதாவது அகிம்சையோடு கூடிய வகையில் சட்ட மறுப்பாளர் சட்டத்தை எதிர்க்க வேண்

---

சட்டம் நிறைவேறிய காலம் வரையில் இவர்கள் 'பூரிடன்ஸ்' என்று அழைக்கப்பட்டு வந்தனர். இந்த நான்கன்பார்மிஸ்டுகள் பல சமயங்களில் கடுமையான நடவடிக்கைகளுக்கு உட்படுத்தப்பட்டுத் துன்புறுத்தப்பட்டனர். ஆனல், பிற்காலத்தில் அவர்கள் விஷயத்தில் அதிகச் சகிப்புத் தன்மை காட்டினர்கள்.

‡ ஹென்றி டேவிட் தோரோ (1817 – 62) - இவர் இயற்கைத் தத்துவஞானி; இயற்கையையே வழிபடுபவர். இவர் தாம் செய்து வந்த தொழிலை விட்டுவிட்டு அமெரிக்கக் காடுகளுக்குப் போய் புராதன கால வாழ்க்கையை நடத்தி வந்தார். இவர் எமர்ஸன் என்ற அறிஞரின் நண்பர். கொஞ்ச காலம் அவருடன் இருந்து வந்தார். ஆனல், 1845 - இல் தமது ஏகாந்த வாழ்வை மேற்கொண்டார். இயற்கையை ஆராயவும் முற்பட்டார். இது அவருடைய கீர்த்தியை அதிகரித்தது. அநியாயமான சட்டங்களுக்கு உட்பட மறுப்பது, அப்படி மறுப்பதனுல் ஏற்படும் சிறைத் தண்டனை போன்ற துன்பங்களையும் இன்பமாக ஏற்பது என்ற தத்துவத்தைக் கடைப்பிடித்துச் சிறைப்பட்டவர் தோரோ. தாம் உடன்பட முடியாத சட்டங்களை எதிர்த்து, உடன்பட மறுக்கும் உரிமை மனிதனுக்கு உண்டென்று உறுதியுடன் வற்புறுத்தி வந்தார். தோரோவின் இக்கருத்தே காந்திஜிக்குச் சத்தியாக்கிரக ஆயுதத்தை உருவாக்கித் தந்தது என்று கூறுவதும் மிகையாகாது.

டும் என்பதை இது முக்கியமானதாக்குகிறது. இது, சத்தியாக் கிரகத்தின் ஒரு கிளை.

மோசமானதாகிவிட்டது என்று ஒத்துழையாதார் கருதும் அரசாங்கத்துடன் ஒத்துழைக்காமல் இருந்துவிடுவதே முக்கிய மாக ஒத்துழையாமையாகும். மேலே விவரிக்கப்பட்டிருக்கும் கடுமையான ரகத்தைச் சேர்ந்த சட்ட மறுப்பு இதில் விலக்கப் படுகிறது. ஒத்துழையாமை, அதன் இயல்பின் காரணமாக குழந்தைகளும்கூட புரிந்துகொள்ளக்கூடியது. பொதுஜனங்கள் எந்தவிதமான அபாயமுமின்றி அதை அனுசரிக்கலாம். சட்டங் களை, அவற்ருல் ஏற்படக்கூடியவைகளைக் குறித்த பயம் எதுவும் இல்லாமல் விரும்பி அச்சட்டங்களுக்குப் பணியும் பழக்கம், சட்ட மறுப்புக்கு முன்னல் இருந்தாக வேண்டியதாகும். ஆகையால், தீராக் குறையாகக் கடைசியாகத்தான் இதை அனுசரிக்க முடி யும். எப்படியும் எடுத்த எடுப்பில் குறிப்பிட்ட சிலர் மாத்திரமே இதை அனுசரிக்க முடியும். சட்ட மறுப்பைப் போலவே ஒத்து ழையாமையும் சத்தியாக்கிரகத்தின் ஒரு கிளையே ஆகும். சத்தி யத்தை நிலைநாட்டுவதற்காக அகிம்சையோடுகூடிய எல்லா எதிர்ப்பையும் கொண்டது இது.

—'எங் இந்தியா' - 23—3—1921

   

[காந்திஜி, தாம் எழுதிய 'சுயசரிதை'யில் 'குடும்ப சத்தியாக்கிரகம்' என்ற தலைப்பிலுள்ள அத்தியாயத்தில் உப்பும் பருப்பும் சாப்பிடாமல் தாம் செய்த ஒரு சத்தியாக் கிரகத்தைப் பற்றிக் குறிப்பிடுகிருர். "இந்தச் சம்பவத் தைச் சத்தியாக்கிரகத்திற்கு ஓர் உதாரணமாகவே கொள்ள விரும்புகிறேன். என்னுடைய வாழ்க்கையின் இனிமையான நினைவுகளில் இது ஒன்று" என்கிருர். கஸ் தூரிபாய் நோயுற்றிருந்தபோது உப்பும் பருப்பும் சாப்பி டாமலிருக்கும்படி காந்திஜி அவருக்கு யோசனை கூறினர். ஆனல், இதற்குச் சம்மதிக்க அவர் மறுத்துவிட்டார். 'அந்த இரண்டையும் சாப்பிடாமல் உங்களாலும் இருக்க முடி யாது' என்றும் அவர் காந்திஜிக்குக் கூறினர். உடனே மகாத்மா, உப்பையும் பருப்பையும் ஓராண்டுக்கு உட் கொள்ளுவதில்லை என்று விரதம் கொண்டுவிட்டார். அதன் பேரில் கஸ்தூரி பாயும் இவ்விரண்டையும் சாப்பிடுவதை விட்டுக் குணமடைந்தார். இந்தக் 'குடும்ப சத்தியாக்கிரக'த் தைக் குறித்துக் காந்திஜி கூறும் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'—மூன்ரும் தொகுப்பில் 420-29—ஆம் பக்கங் களில் காண்க.]

# 2

# துன்பங்களை அனுபவிப்பதன் தத்துவம்

*[துன்பங்களை அனுபவிக்கத் தயாராயிருப்பது ஏன் என்பதை மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்க சத்தியாக் கிரகப் போராட்டக் காலத்தில் விளக்கினார். அதோடு சாத்விக எதிர்ப்பின் தத்துவத்தையும் விவரித்தார். காந்திஜி இவற்றைப் பற்றி அப்பொழுது எழுதிய ஒரு கட்டுரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

சிறைக்குப் போனால் அங்கே எத்தனையோ கட்டு திட்டங்களுக்கெல்லாம் உட்பட்டுக் கிடக்க வேண்டும். கொலைக் குற்றத்திற்குத் தண்டனை அடைந்தவனுக்குக் கொடுக்கப்படும் விகாரமான முரட்டு உடையை அங்கே நாமும் அணிய வேண்டியிருக்கிறது. கொஞ்சமும் ஊட்டம் தராத உணவை அரை வயிறு தான் உண்ண வேண்டும். நாம் விரும்பினாலும், வெறுத்தாலும், அங்கே நமக்கு இடப்படும் வேலைகளையெல்லாம் நாம் செய்தாக வேண்டியிருக்கிறது. நம் வீட்டு வேலைக்காரனைவிட எந்தவிதத்திலும் சிறப்பு இல்லாத வார்டரின் கட்டளைப்படியெல்லாம் நாம் நடந்தாக வேண்டியும் இருக்கிறது. நண்பர்களும் உறவினர்களும் வந்து பார்த்துப் பேசவும் அனுமதிக்கப்படுவதில்லை. அவர்களுக்குக் கடிதமும் எழுத முடியாது. வாழ்க்கைக்கு வேண்டிய சாதாரண வசதிகளும் அங்கே மறுக்கப்படுகின்றன. சில சமயங்களில் திருடர்களும் கொள்ளைக்காரர்களும் இருக்கும் கொட்டடிகளிலேயே நாமும் இருந்து அங்கேயே தூங்கவும் வேண்டியிருக்கிறது. அப்படியிருக்கையில் நாம் ஏன் சிறை செல்ல வேண்டும் ; நாம் ஏன் இத்தகைய துன்பங்களையெல்லாம் அநுபவிக்க வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. இத்தகைய துன்பங்களையெல்லாம் அனுபவிப்பதைவிடச் சாவதே மேல் என்பது இவர்களுடைய வாதம். இப்படிச் சிறையில் கிடப்பதைவிட அபராதத்தைச் செலுத்திவிடுவது எவ்வளவோ மேலானது என்கிறார்கள். சிறைகளில் இவ்விதம் துன்பப்படுவதிலிருந்து தாம் படைத்த மனிதரைக் கடவுள் காப்பாராக என்றும் எண்ணுகிறார்கள். உண்மையில், இத்தகைய எண்ணங்கள் ஒருவரைக் கோழை ஆக்கிவிடுகின்றன. சிறை வாழ்க்கையைப் பற்றி ஒருவருக்கு இடைவிடாது இருந்து வரும் பயம், தேசத்தின் நன்மைக்காக ஒருவர் செய்தாக வேண்டிய ஒப்பற்ற சேவையை அவர் செய்ய முடியாதபடி தடுத்துவிடுகிறது.

தன்னுடைய நாட்டுக்காகவும் மதத்தின் பொருட்டும் ஒருவர் சிறையில் இருக்க நேருவது, ஒருவரின் சிறந்த அதிருஷ்டம் என்பது மற்றொரு கருத்து. அன்றாட வாழ்க்கையில் அனுபவிக்க

வேண்டியிருக்கும் கஷ்டங்களில் மிகச் சிலவே அங்கே உள்ளன. சிறையில் ஒரு வார்டரின் உத்தரவுப்படி நடக்க வேண்டியிருக்கிறது. வெளியிலோ, பலருடைய கட்டளைப்படியே நடந்தாக வேண்டியவர்களாயிருக்கிறோம். அன்றாடச் சாப்பாட்டுக்குச் சம்பாதித்துச் சமையலும் செய்துகொள்ள வேண்டும் என்பது சிறையில் இல்லை. இவற்றையெல்லாம் அரசாங்கம் கவனித்துக்கொள்ளுகிறது; இத்தகையோரின் தேக நிலை குறித்தும் அரசாங்கம் கவனித்துக்கொள்ளுகிறது. இதற்காகக் கொடுக்க வேண்டியது எதுவுமில்லை. உடல் வலுப்பெறுவதற்குத் தேவையான உடலுழைப்பும் சிறையில் கிடைக்கிறது. அவனுடைய கெட்ட பழக்கங்களுக்கெல்லாம் இடந் தருவதில்லை. இவ்விதம் ஆன்மா சுதந்திரத்துடன் இருக்கிறது. கடவுளைப் பிரார்த்திப்பதற்கும் நிறைய நேரம் இருக்கிறது. கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்தப்பட்டிருப்பது உடலேயன்றி ஆன்மாவல்ல. காலாகாலங்களில் தன் காரியங்களைச் செய்துகொள்ளும் பழக்கமும் ஏற்படுகிறது. உடலைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பவர்கள் அதைக் கவனித்துக்கொள்ளுகிறார்கள். சிறை வாழ்க்கையைப் பற்றி இத்தகைய கருத்துடன் இருப்பவர், தாம் சுயேச்சையுடன் இருப்பதாகவே எண்ணுகிறார். தமக்கு ஏதாவது துரதிருஷ்டம் ஏற்பட்டாலோ அல்லது மோசமான ஒரு வார்டர் தம்மிடம் பலாத்காரத்தை உபயோகித்துவிட்டாலோ, அப்பொழுது பொறுமையின் முக்கியத்தை உணர்ந்து அதைக் கடைப்பிடிக்கவும் கற்றுக்கொள்ளுகிறார். தன்னைத் தானே அடக்கிக்கொள்ளுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்ததற்காகவும் திருப்தி அடைகிறார். இவ்வழியில் எண்ணுகிறவர்கள், சிறை வாழ்க்கையிலும் நன்மைகள் உண்டு என்பதை நிச்சயமாக உணர்ந்துகொள்ளுவர். இவைகளை நன்மைகளாக எடுத்துக்கொள்ளுவதா, இல்லையா என்பது அவரவர்களையும், அவரவர்களின் மனோபாவங்களையுமே முக்கியமாகப் பொறுத்தது. என்றாலும், டிரான்ஸ்வால் சிறையில் என்னுடைய இரண்டாவது சிறை அனுபவத்தைக் குறித்துப் படித்தவர்கள், உண்மையான ஆனந்தத்திற்குச் சிறந்த வழி ஒருவருடைய நாட்டிற்காகவும் மதத்திற்காகவும் சிறைக்குச் சென்று அங்கே துன்பங்களையும் துயரங்களையும் அனுபவிப்பதுதான் என்ற முடிவுக்கு வந்திருப்பார்கள் என நம்புகிறேன்.

இதே போன்ற ஒரு நிலைமையில் தமக்கு விதிக்கப்பட்டிருந்த தலைவரியைக் கொடுக்க மறுத்த அமெரிக்கப் பிரஜையான தோரோ, 1849-இல் இதே கருத்தையே வெளியிட்டிருக்கிறார். தம்மை அடைத்துவைத்திருந்த சிறையின் சுவரை, இரண்டு அல்லது மூன்று அடி அகலக் கருங்கற்களால் கட்டியிருப்பதையும், அதன் கதவு மரத்தினாலும் இரும்பினாலும் ஓர் அடி கனத்தில் இருப்பதையும் பார்த்துவிட்டுத் தமக்குள்ளேயே வருமாறு சொல்லிக்கொண்டார்:

"எனக்கும் எங்களூர்க்காரர்களுக்குமிடையே ஒரு கற்சுவர் இருக்கிறதென்றால், நான் இருந்ததைப் போன்ற சுயேச்சையான நிலையை அவர்கள் அடைவதற்கு, அவர்கள் ஏறியாக வேண்டிய அல்லது உடைத்துக்கொண்டு வர வேண்டிய இன்னும் அதிகக் கஷ்டமான சுவர் இருக்கிறது என்பதைக் கண்டேன். நான் அடைபட்டுக் கிடப்பதாகவே கொஞ்சமும் உணரவில்லை. இந்தச் சுவரில் கல்லும் சாந்தும் பெரிதும் வீணாக்கப்பட்டிருப்பதாகவே காணப்படுகிறது. என் ஊராரையெல்லாம்விட நான் ஒருவனே வரி செலுத்தியிருப்பதாகவும் எனக்குத் தோன்றுகிறது. என்னை எப்படி நடத்துவதென்பதே அவர்களுக்குத் தெரியவில்லை; ஆனால், நாகரிகமே இல்லாதவர்கள் போல் நடந்துகொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு பயமுறுத்தலிலும், ஒவ்வொரு பாராட்டுதலிலும் ஒரு தவறு இருந்தே வருகிறது. ஏனெனில், கற்சுவருக்கு மறு பக்கத்தில் நான் இருக்க வேண்டும் என்பதே என்னுடைய முக்கியமான ஆர்வம் என்று எண்ணிவிட்டார்கள். என்னுடைய சிந்தனைகளுக்கு எவ்வளவு சிரமப்பட்டுக் கதவடைத்திருக்கிறார்கள் என்பதை நினைக்கும்போது என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ஆனால், அச்சிந்தனைகளோ எந்தவிதமான தங்கு தடைகளுமின்றி அக்கதவுகளையெல்லாம் தாண்டி வெளியில் பாய்ந்துகொண்டிருக்கின்றன; ஆபத்தானவையாயும் இருக்கின்றன. என் மனத்தை மாற்ற முடியாததனால் என் உடலைத் தண்டிக்கத் தீர்மானித்துவிட்டார்கள். தங்களுக்கு யார் மீது ஆத்திரம் இருக்கிறதோ அவர்களை நெருக்கி ஒன்றும் செய்ய முடியாமல் இருப்பது, சிறுவர்கள் தம் நாயைத் திட்டுவதைப் போலவே இருக்கிறது. இந்த நோய் அரசாங்கத்தைப் பிடித்துக் கொண்டு விட்டதெனக் காண்கிறேன். மடியில் கனத்துடன் தனி வழியே போகும் ஒரு பெண்ணைப் போல அது திகிலடைந்திருக்கிறது. தனக்கு நண்பர்கள் யார், விரோதிகள் யாவர் என்பதே அதற்குப் புரியவில்லை. அதன் மீது எனக்குக் கொஞ்சநஞ்சம் இருந்த மதிப்பும் போய்விட்டது; அதன் நிலை குறித்து நான் வருந்துகிறேன்."

## 3

# தத்துவமும் அனுபவமும்

*1914-ஆம் ஆண்டு 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகையின் பொன் மலருக்கு மகாத்மா காந்தி கீழ்வரும் கட்டுரையை எழுதியிருந்தார்:*

இந்த ஞாபகார்த்த விழா மலர் வெளியாகும்போது நான் தாய்நாட்டில் இருப்பேன்; இல்லையானால், போனிக்ஸிலிருந்து

வெகு தூரத்திலாவது இருப்பேன். என்றாலும், இந்த விசேட வெளியீட்டை எது அவசியமாக்கியதோ அதைப்பற்றிய என்னுடைய ஆழ்ந்த சிந்தனைகளை நான் இங்கே விட்டுச் செல்வேன். 'இந்தியன் ஒப்பீனியன்' சென்ற பதினொரு ஆண்டுகளாக எந்த விதமான ஆடம்பரமுமின்றி எளிய முறையில் என் நாட்டு மக்களுக்கும் தென்னாப்பிரிக்காவுக்கும் சேவை செய்ய முயன்றிருக்கிறது. மிகவும் நெருக்கடியான காலம் அது. இதே நெருக்கடியை எப்பொழுதுமே சமாளிக்க வேண்டியதாக இருப்பினும் இருக்கக் கூடும். ஆகையால், சாத்விக சட்ட மறுப்புப் பற்றிய கட்டுரை இல்லாமல் வேறு எதையும் கொண்ட அழகான 'இந்தியன் ஒப்பீனிய'னின் சிறந்த விசேட வெளியீடு இருக்கவே முடியாது. அகில உலகின் கவனத்தையும் கவர்ந்திருக்கும் சாத்விக எதிர்ப்பின் ஆரம்பத்தையும் வளர்ச்சியையும் அது குறிப்பிடுகிறது.

சென்ற எட்டு ஆண்டுகளாக இந்திய சமூகம் செய்துள்ள காரியங்களுக்கு அப்பெயர் பொருத்தமானதாக இல்லை. அதற்கிருக்கும் சுதேச மொழிச் சொல்லை ஆங்கில மொழியில் கூறுவதாயின், சத்தியத்தின் சக்தி எனப் பொருள்படும். டால்ஸ்டாய் இதை ஆன்ம சக்தி அல்லது அன்பின் சக்தி என்று சொன்னார் என நினைக்கிறேன். அதுவாகவே அது இருக்கிறது. அதிகபட்ச அளவுக்கு அதை நிறைவேற்றுவதாயின், பண பலம் முதலிய மற்ற உதவிகளுக்குப் புறம்பாகச் சுயேச்சையானது இந்தச் சக்தி. ஆரம்ப கட்டத்தில்கூட இது மிருக பலம் அல்லது பலாத்காரத்திற்குப் புறம்பானது என்பது நிச்சயம். இப்பெரும் ஆன்ம சக்திக்குப் பலாத்காரம் முற்றிலும் விரோதமானது. பலாத்காரத்தை அடியோடு போக்கிக்கொண்டவர் மாத்திரமே இதை வளர்த்துக் கையாளவும் இயலும். தனிப்பட்டவர்கள் மாத்திரமேயன்றிச் சமூகங்களும் மேற்கொள்ளக்கூடிய சக்தி இது. வீட்டுக் காரியங்களில் கையாளுவதைப் போலவே ராஜீய காரியங்களிலும் இதை உபயோகிக்கலாம்.

எல்லாவற்றிற்குமே இதை உபயோகிக்கலாம் என்பது, அதனுடைய நிரந்தரத் தன்மையிலிருந்தும், தோல்வியே இராத ஒரு விசேடத் தன்மையிலிருந்தும் வெளியாகிறது. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோர் எல்லோருமே அதை உபயோகிக்கலாம். பலாத்காரத்தைப் பலாத்காரத்தினால் சமாளிக்க முடியாமல் இருக்கும்போது, வேறு வழியின்றிப் பலவீனர்களால் உபயோகிக்கப்படும் ஆயுதமே இது என்பது முற்றிலும் பொய்யானதாகும். அதைக் குறிக்கும் ஆங்கிலச் சொல், அதன் பொருளை முற்றிலும் உணர்த்துவதாக இல்லாததனால் அந்த மூட நம்பிக்கை எழுகிறது. தங்களைப் பலவீனர்களாக எண்ணிக் கொள்ளுகிறவர்கள், இந்த ஆயுதத்தைக் கையாள்வது என்பது சாத்தியமே அல்ல. மனிதனிடம் இருக்கும் மிருக சுபாவத்தை

விடச் சிறந்ததான வேறு ஒன்றும் அவனுள் இருக்கிறது. மிருக சுபாவம் அதனிடம் பணிந்துவிடும் என்பதை உணர்ந்துகொண்டவர்கள் மாத்திரமே சரியான சத்தியாக்கிரகிகளாக முடியும். இருளுக்கு வெளிச்சம் எப்படியோ, அப்படியேதான் இந்தச் சக்தி பலாத்காரத்திற்கும் கொடுமைகளுக்கும் அநீதிகளுக்கும்.

மனமார அறிந்தோ, அறியாமலோ, தாங்கள் ஆளப்படுவதற்கு மக்கள் சம்மதிக்கும் வரையில்தான் மக்களின் ஆட்சி சாத்தியம் என்ற அசைக்கவொண்ணுத தத்துவத்தின் அடிப்படையைக்கொண்டது, ராஜீயத்தில் இந்தச் சக்தியின் உபயோகம். டிரான்ஸ்வாலின் 1907-ஆம் வருட ஆசியாக்காரர் சட்டத்தினுல் ஆளப்பட நாம் விரும்பவில்லை. இந்த மகத்தான சக்தியின் முன்னுல் அது ஒழிந்தே ஆக வேண்டும். நமக்கு இரண்டே வழிகள்தாம் உண்டு. ஒன்று, அச்சட்டத்திற்கு நாம் உடன்பட்டாக வேண்டும் என்று வற்புறுத்தப்படும்போது அதை எதிர்த்துப் பலாத்காரத்தை உபயோகிப்பது. இல்லையானுல் அச்சட்டத்தின்படி விதிக்கப்படும் தண்டனைகளாகிய துன்பங்களை அனுபவித்து, ஆளுவோர் அல்லது கஷ்டம் விளைவித்தோரின் உள்ளுக்குள் இருக்கும் அனுதாப உணர்ச்சி விழிப்படையும் காலம் வரையில், நம்முள் இருக்கும் ஆன்ம சக்தியை வெளியே கொண்டு வந்து காட்ட வேண்டும். நாம் எதை அடைய முன்வந்தோமோ, அதை அடைந்தாவதற்கு நமக்கு அதிக காலம் பிடித்தது. இதற்குக் காரணம், நமது சத்தியாக்கிரகம் முற்றிலும் பூரணமானதாக இல்லாததுதான். எல்லாச் சத்தியாக்கிரகிகளுமே இந்தச் சக்தியின் முழு நன்மையையும் அறிந்தவர்களாக இருக்கவில்லை. பலாத்காரமே கூடாது என்ற உறுதியான லட்சியம் கொண்டவர்களாகவும் எல்லோருமே இருந்துவிடவுமில்லை. எளிமையை மேற்கொள்ளுவது இந்தச் சக்தியை உபயோகப்படுத்துவதற்கு அவசியமாகிறது. அதாவது, நமக்கு வேண்டிய சாப்பாட்டுக்கும் துணிக்கும் வேண்டியதெல்லாம் நமக்கு இருக்கிறதா என்ற கவலை இல்லாமலும் இருக்க வேண்டும். முந்திய போராட்டத்தின்போது, சத்தியாக்கிரகிகளில் அந்த அளவுக்கு யாரும் போகத் தயாராயில்லை. மேலும் சிலர், பேருக்குத்தான் சத்தியாக்கிரகிகளாக இருந்தார்கள். லட்சியத்தில் உறுதியின்றி கலப்படமான நோக்கத்திற்காக, அதுவும் சுத்தமற்ற நோக்கத்தின் பேரில் வந்தவர்களே அவர்கள். உஷாரான கண்காணிப்பு மாத்திரம் இல்லாது இருந்தால், போராட்டத்தின் நடுவிலேயே சிலர் ஆனந்தமாகப் பலாத்காரத்திலும் இறங்கியிருப்பார்கள். இவ்விதம் போராட்டம் அதிக காலம் நடக்க வேண்டியதாகிவிட்டது. பரிசுத்தமான ஆன்ம சக்தி, சரியான முறையில் உபயோகிக்கப்படுமானுல், உடனே நிவாரணத்தை அளிக்கும். இவ்விதம் உபயோகிக்கப்படுவதற்கு ஒவ்வொரு தனி ஆன்மாவும் நீண்ட காலம் பயிற்சி பெற வேண்டியது முற்றிலும் அவசியம். சரியான சத்தியாக்கிரகி, முற்றிலுமே இராது போனுலும்

முடிந்தவரை குற்றமற்ற சிறந்த மனிதனாகவும் விளங்கவேண்டும். நாம் எல்லோரும் திடீரென்று அத்தகைய மனிதர்கள் ஆகிவிட முடியாது. ஆனால், நான் நினைப்பது சரியானதாக இருந்தால் - அது சரி என்பதை நான் அறிவேனாகையால்–நம்முள் எவ்வளவுக்குச் சத்தியாக்கிரக உணர்ச்சி அதிகம் இருக்கிறதோ அவ்வளவுக்கு நாம் சிறந்த மனிதர்கள் ஆவோம். ஆகையால், இச்சக்தியின் பயன் ஆட்சேபிக்க முடியாதது என்று நான் கருதுகிறேன். இந்தச் சக்தி எங்கும் உபயோகிக்கப்படுவதாகிவிடுமாயின், சமூக லட்சியங்களிலேயே இது புரட்சிகரமான மாறுதல்களை உண்டாக்கிவிடுவதோடு, வளர்ந்துவரும் எந்த ராணுவ பலத்தின் கீழ் மேற்கத்திய நாடுகள் துன்புற்று, நசுங்கி, அநேகமாகச் செத்துக்கொண்டும் வருகின்றனவோ, அவைகளோடு கிழக்கத்திய நாடுகளையும் நசுக்கிவிடும் அபாயத்தை உண்டாக்கி வரும் அந்த ராணுவ பலத்தையும் எதேச்சாதிகாரத்தையும் இந்தச் சக்தி ஒழித்துவிடும். சாத்தியமான அளவுக்காவது சரியான சத்தியாக்கிரகிகளாகும் பணியில் தங்களை அர்ப்பணம் செய்துகொள்ளும் ஒரு சில இந்தியரையாவது முந்திய போராட்டம் உண்டாக்கி இருக்குமானால், அவர்கள் முற்றிலும் உண்மையான வகையில் தங்களுக்குச் சேவை செய்துகொண்டதோடு, மனித வர்க்கத்திற்கே சேவை செய்தவர்களும் ஆவார்கள். இதைக் கொண்டு கவனித்தால், சாத்விக எதிர்ப்பு மிகப் புனிதமான, மிகச் சிறந்த படிப்பு. குழந்தைகளுக்குச் சாதாரண எழுத்துப் படிப்புக்குப் பிறகு இது வரக்கூடாது. அதற்கு முன்னாலேயே இப்படிப்பு வரவேண்டும். ஒரு குழந்தை, எழுத்துக்களை எழுத ஆரம்பிப்பதற்கு முன்னால் - உலக அறிவைப் பெற ஆரம்பிப்பதற்கு முன்பு - ஆன்மா என்பது என்ன, ஆன்மாவுக்கு இருக்கும் சக்திகள் யாவை என்பதை அறிய வேண்டும். இதை யாரும் மறுக்க முடியாது. வாழ்க்கைப் போராட்டத்தின் பகைமையை அன்பினால் வெல்லலாம்; பொய்யை மெய்யால் வெல்லலாம்; துன்பங்களை அனுபவிக்கத் தயாராயிருப்பதன் மூலம் பலாத்காரத்தை வெற்றிகொள்ளலாம்; இதையெல்லாம் குழந்தைகள் அறிந்துகொள்ளுவதற்குச் சரியான படிப்பு அத்தியாவசியமானதாக இருக்கவேண்டும். போராட்டத்தின் கடைசி நாட்களில் இந்த உண்மையின் சக்திகளை நான் அறிந்து கொண்டதனாலேயே, டால்ஸ்டாய் பண்ணையிலும், பிறகு போனிக்ஸிலும், இந்த வழியில் குழந்தைகளுக்குப் பயிற்சி அளிக்க என்னால் இயன்ற வரையில் முயன்றேன். சத்தியாக்கிரகி என்ற வகையில் என்னிடம் இருக்கும் குறைபாடுகளில் ஒரு பகுதியை நான் இப்பொழுதே உணர்ந்திருந்தாலும், மேற்கொண்டும் அதை அறிந்தாக வேண்டும். பிறகு என்னை முற்றிலும் திருத்திக்கொள்ள வேண்டும் என்பது, நான் இந்தியாவுக்குப் போகும் காரணங்களில் ஒன்று. இந்தியாவில்தான் குறைகளே இல்லாத நிலையைக் கிட்டத்தட்ட அடைய முடியும் என்பது என் நம்பிக்கை.

# 4

# லட்சியமும் முறையும்

**வாசகர்:** நல்லதான ஒரு லட்சியத்தை, எந்த வழியிலாவது, பலாத்காரத்தைக் கொண்டாகிலும் ஏன் நாம் அடையக் கூடாது? வீட்டுக்குள்ளே இருக்கும் ஒரு திருடனைச் சமாளிக்க வேண்டியிருக்கும்போது, கையாள எந்த முறை நல்லது என்று நான் சிந்திக்க வேண்டுமா? எப்படியாவது அவனை வெளியே விரட்டியாக வேண்டியது என் கடமை. மனுச் செய்துகொள்ளுவதனால் எதையுமே நாம் அடைந்துவிடவில்லை, எதையுமே அடைந்துவிடவும் முடியாது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவதாகத் தோன்றுகிறது. அப்படி இருக்க மிருக பலத்தை உபயோகித்து நாம் ஏன் அப்படிச் செய்யக்கூடாது? மேலும், நாம் அடையப் போவதைக் காத்துக்கொள்ளுவதற்கு அவசியமான அளவுக்குப் பலத்தை உபயோகிக்க முடியும் என்ற பயம் இருக்கச் செய்ய வேண்டும். ஒரு குழந்தை தீயில் காலை விட்டுவிடாமல் தடுப்பதற்கு, தொடர்ந்து பலவந்தத்தை அனுசரிப்பது குறித்து நீங்கள் குற்றங்கூற முடியுமா? எப்படியாவது நமது லட்சியத்தை நாம் அடைந்தாக வேண்டும்.

**ஆசிரியர்:** உங்கள் நியாயம் வெளிக்கு நன்றாகவே தோன்றுகிறது. இது பலரைத் தப்பான வழியில் செலுத்தியிருக்கிறது. இதற்கு முன்னால் நானும் இந்த வாதத்தையே உபயோகித்து வந்தேன். ஆனால், இப்பொழுது நன்றாகப் புரிந்துகொண்டிருக்கிறேன் என நினைக்கிறேன். உங்களை நான் ஏமாற்றாமல் இருக்கவும் முயல்வேன். ஆங்கிலேயர் தங்கள் லட்சியங்களை மிருக பலத்தை உபயோகித்தே அடைந்திருக்கிறார்களாகையால், நாமும் அதே முறையை உபயோகித்து நமது லட்சியத்தை அடைவது நியாயமே என்ற வாதத்தை முதலில் எடுத்துக்கொள்ளுவோம். அவர்கள் மிருக பலத்தை உபயோகித்தார்கள், அதே மாதிரி நாம் செய்வதும் சாத்தியமே என்பது முற்றிலும் உண்மை. ஆனால், அதே போன்ற முறையை உபயோகிப்பதனால், அவர்கள் அடைந்ததைப் போன்றதையே நாமும் அடைய முடியும். நாம் அதை விரும்பவில்லை என்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள். லட்சியத்திற்கும் அதை அடைவதற்காகக் கையாளும் முறைக்கும் சம்பந்தமே கிடையாது என்று நீங்கள் நம்புவது பெரிய தவறு. தெய்வ பக்தியுள்ளவர்கள் என்று கருதப்பட்டவர்கள்கூட, அந்தத் தவறினால் மகா மோசமான குற்றங்களைச் செய்திருக்கிறார்கள். விஷப்

பூண்டை நட்டுவிட்டு, அதிலிருந்து ரோஜா மலரை அடைய லாம் என்பதைப் போன்று இருக்கிறது உங்கள் நியாயம். சமுத்திரத்தை நான் கடக்க வேண்டுமானால் கப்பலைக் கொண்டேதான் கடக்க முடியும். ஆனால், இதற்கு நான் வண்டியை உபயோகிப்பதென்றால், வண்டியும் நானும் உடனே பாதாளத்தில் போக வேண்டியதே. "கடவுளைப் போலவே பக்தனும் இருப்பான்" என்ற கோட்பாடு சிந்திக்கத் தக்கதாகும். அதனுடைய பொருள் சிதைக்கப்பட்டுவிட்ட தோடு மனிதரும் தவறான வழிகளில் போய்விட்டார்கள். அனு சரிக்கும் முறையை விதைக்கும், மரத்தை லட்சியத்திற்கும் ஒப்பிடலாம். விதைக்கும் மரத்திற்கும் இருப்பதைப் போன்றே, அனுசரிக்கும் முறைக்கும் லட்சியத்திற்கும் மீற முடியாத தொடர்பு உண்டு. சைத்தானின் முன்பு நான் அடி பணிந்துகொண்டு, கடவுளைப் பிரார்த்திப்பதால் பொழியப் படும் பலனை நான் அடையவே முடியாது. ஆகையால், எவரா யினும் ஒருவர், "நான் கடவுளைப் பிரார்த்தனைசெய்ய விரும்பு கிறேன். சைத்தானை வழிபடுவதன் மூலம் அதைச் செய் தாலும் பரவாயில்லை" என்று சொன்னால், அதை அறியாத் தனமான தவறு என்றே கொள்ள வேண்டும். எதை விதைக் கிறோமோ அதையேதான் அறுவடை செய்ய முடியும். ஆங்கிலேயர்கள் 1833-இல் பலாத்காரத்தினால் அதிக வாக் குரிமையைப் பெற்றார்கள். மிருக பலத்தை உபயோகிப்ப தனால் தங்கள் கடமையை அவர்கள் அதிகமாக உணர்ந்து கொண்டார்களா? வாக்குரிமை வேண்டும் என விரும்பினார் கள்; உடல் பலத்தை உபயோகித்து அதைப் பெற்றார்கள். ஆனால், உண்மையான உரிமைகள், கடமையைச் செய்வதன் பலனாக ஏற்படுபவை. இந்த உரிமைகளை அவர்கள் அடை யவே இல்லை. ஆகையால், இங்கிலாந்தில் ஒவ்வொருவரும் தமது உரிமையை விரும்புவதோடு அதை வற்புறுத்தி வருவ தையும், தமது கடமையைப் பற்றி யாருமே சிந்திப்பதில்லை என்பதையும் நாம் பார்க்கிறோம். ஒவ்வொருவரும் உரிமை யைக் கேட்டால், அதை யார், யாருக்கு வழங்குவது? இத னால் அவர்கள் கடமையையே செய்யவில்லை என்று சொல்லி விட நான் விரும்பவில்லை. அந்த உரிமைகளுக்கு ஏற்றபடி அவர்கள் கடமைகளை நிறைவேற்றுவதில்லை. தகுதி அடை வது என்ற அந்தக் குறிப்பிட்ட கடமையை அவர்கள் நிறை வேற்றிக்கொள்ளாததனால், அவர்களுடைய உரிமைகளே அவர்களுக்குச் சுமையாய் இருக்கின்றன. அதாவது, அவர் கள் என்ன முறையை உபயோகித்தார்களோ அதற்குரிய சரியான பலனையே அவர்கள் அடைந்திருக்கிறார்கள். லட்சி யத்திற்கு ஏற்றதான முறையை அவர்கள் உபயோகித்தார் கள். உங்களிடமிருந்து உங்கள் கடிகாரத்தைப் பறித்து விட நான் விரும்பினால், அதற்காக உங்களிடம் நான் போரா டித்தான் ஆக வேண்டும். உங்கள் கடிகாரத்தை நான்

விலைக்கு வாங்க விரும்பினால், அதற்குரிய விலையை நான் கொடுக்க வேண்டும். எனக்கு அது இனமாக வேண்டுமாயின், அதற்காக உங்களைக் கெஞ்சியாக வேண்டும். இதற்கு நான் கையாளும் முறையையொட்டி அந்தக் கடிகாரம் திருட்டுச் சொத்தாகவும் ஆகலாம்; என் சொந்தப் பொருளாகவும் மாறலாம்; அல்லது இனமாகக் கிடைத்ததாகவும் ஆகலாம். இவ்விதம் வெவ்வேறு மூன்று வகையான முறைகளினால் வெவ்வேறு மூன்று வகையான பலன்களைக் காண்கிறோம். முறையைப் பற்றி அவசியமில்லை என்றுதான் இனியும் நீங்கள் கூறுகிறீர்களா ?

திருடனை விரட்டியாக வேண்டும் என்ற உதாரணத்தைக் கூறினீர்களே, அதை இப்பொழுது எடுத்துக்கொள்ளுவோம். எந்த முறையைக்கொண்டும் திருடனை விரட்டியடிக்கலாம் என்று நீங்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. திருட வந்தது என் தந்தையாக இருந்தால், ஒருவித முறையை உபயோகிக்க வேண்டும்; தெரிந்தவராக இருப்பின் இன்னொரு முறையை அனுசரிக்க வேண்டும்; முன்பின் தெரியாத புதியவராயிருந்தால் மூன்றாவதான மற்றொரு முறையைக் கையாள வேண்டும். திருட வந்தது வெள்ளைக்காரனாக இருந்தால், ஓர் இந்தியத் திருடனிடம் உபயோகிக்கும் முறைக்கு வேறானதை உபயோகிப்பீர்களென நீங்கள் ஒரு வேளை சொல்லக்கூடும். அவன் பலவீனனாக இருப்பின், அவனைச் சமாளிக்க உபயோகிக்கும் முறை, சம உடல் வலிமையுள்ளவனிடம் உபயோகிப்பதைவிட வேறுபட்டதாக இருக்கும். திருடன் உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையில் ஆயுதபாணியாக இருப்பானாயின், நான் எதுவும் செய்யாமல் சும்மா இருந்துவிடுவேன். இவ்விதம் தந்தையிலிருந்து ஆயுதபாணி வரையில் இவர்கள் விஷயமாக உபயோகிக்க நம்மிடம் பலதரப்பட்ட முறைகள் இருக்கின்றன. மேலும், திருடன் என் தந்தையாகவே இருந்தாலோ, அல்லது பலமுள்ள ஆயுதபாணியாக இருந்தாலோ, தூங்குவதாகக்கூட நான் பாசாங்கு செய்யவும் கூடும். இதற்குக் காரணம், என் தந்தையும் ஆயுதபாணியாக இருக்கக்கூடுமாகையால் இவர்களில் ஒருவரின் பலத்திற்கு நான் பலியாகி சாமான்கள் பறி போவதற்கு இடம் கொடுத்ததாகும். என் தந்தைக்குள்ள வலிமை என்னை அழத் தூண்டும்; ஆயுதபாணியாக இருப்பவனின் பலமோ, எனக்குக் கோபத்தை உண்டாக்கும்; நாங்கள் விரோதிகளாவோம். நிலைமை இவ்விதம் விசித்திரமானது. இந்த உதாரணங்களிலிருந்து, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எந்தவிதமான முறையைக் கையாள்வது என்பதில் நமக்குள் ஒரேவித அபிப்பிராயம் ஏற்பட முடியாமலிருக்கலாம். இந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் செய்யவேண்டியது என்ன என்பதை நான் தெளிவாகக் காண்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆனால், இதற்கான பரிகாரம் உங்களைத் திடுக்கிடச் செய்யும். ஆகையால், அதை உங்களிடம் சொல்லத்

தயங்குகிறேன். நீங்களே அதை ஊகித்துக் கொள்ள விட்டுவிடு கிறேன். அப்படி ஊகித்துக்கொள்ள உங்களால் முடியவில்லை யென்றால், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நீங்கள் வெவ்வேறான வழியைக் கைக்கொண்டாக வேண்டும் என்பது தெளிவாகிறது. திருடனை விரட்ட எல்லாவிதமான உபாயங்களுமே கிடைத்து விடா என்பதையும் நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற முறையையே நீங்கள் அனுசரிக்க வேண்டும். எனவே, திருடனை நீங்கள் விரும்பும் எந்த முறையினாலும் துரத்திவிடுவது என்பது உங்கள் கடமை அல்ல என்றாகிறது.

இன்னும் சற்று மேற்கொண்டு கவனிப்போம். முற்றிலும் ஆயுதபாணியாக இருக்கும் ஒருவன் உங்கள் சொத்துக்களைத் திருடிவிடுகிறான். அவன் செய்த காரியம் உங்கள் நினைவில் அப் படியே இருக்கிறது; உங்களுக்குக் கோபம் மூள்கிறது. உங்க ளுடைய நன்மைக்காக அல்ல, அக்கம் பக்கத்தில் இருப்போரின் நன்மைக்காக அந்தப் போக்கிரியைத் தண்டிக்கவே நீங்கள் விரும்புகிறீர்கள்; ஆயுதபாணிகளான பலரைத் திரட்டிக்கொண்டு விடுகிறீர்கள்; அவனை வீட்டிலேயே தாக்க வருவது அவனுக்குத் தெரிந்துவிடுகிறது; அவன் ஓடிவிடுகிறான்; அவனும் கோபம் அடைகிறான்; தன் துணைவரான கொள்ளைக்காரர்களையெல்லாம் திரட்டிக்கொள்ளுகிறான்; பட்டப்பகலிலேயே கொள்ளையிடப் போவதாக உங்களுக்கு எதிர்ப்பாக ஒரு செய்தியையும் அனுப்பு கிறான். நீங்கள் பலத்துடன் இருக்கிறீர்கள்; அவனுக்கு நீங்கள் அஞ்சவில்லை; அவன் வரட்டும் என்று நீங்கள் தயாராகவும் இருக்கிறீர்கள். இதற்கு மத்தியில் திருடன், உங்களுக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்கெல்லாம் தொந்தரவு கொடுக் கிறான். அவர்கள் உங்களிடம் முறையிடுகிறார்கள். அவர்களுக் காகவே நீங்கள் எல்லாம் செய்து வருவதாகவும், உங்கள் சாமான்கள் திருட்டுப்போவதைக் குறித்துக்கூட நீங்கள் கவலைப் படவில்லை என்றும் அவர்களிடம் கூறுகிறீர்கள். உங்கள் அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களோ, திருடன் இதற்கு முன்னால் தங்க ளுக்குத் தொந்தரவு செய்து வந்ததில்லை என்றும், அவனுக்கு விரோதமாகக் காரியங்களைச் செய்ய நீங்கள் ஆரம்பித்த பிறகே அவன் அட்டூழியம் செய்யத் தலைப்பட்டுவிட்டான் என்றும் உங்களுக்குப் பதில் சொல்லுகிறார்கள். நீங்கள் இருதலைக்கொள்ளி எறும்பு போல் ஆகிறீர்கள். ஒன்றும் அறியாத அவர்களிடம் உங்களுக்கு முழு அனுதாபமும் உண்டு. அவர்கள் சொல்லுவதும் உண்மையே. நீங்கள் செய்ய வேண்டியது என்ன? திருடனை ஒன்றும் செய்யாமல் இப்பொழுது விட்டுவிட்டால் உங்களுக்கு அவமானம். எனவே, எளியவரான அக்கம் பக்கத்தாரிடம் நீங்கள் கூறுகிறீர்கள்: "பரவாயில்லை, வாருங்கள். என் சொத்தே உங்களுடையது. நான் உங்களுக்கு ஆயுதங்களைக் கொடுக்கிறேன். அவற்றை உபயோகிப்பது எப்படி என்பதை

யும் சொல்லிக் கொடுக்கிறேன். அந்தப் போக்கிரிப் பயலை நன்ருக உதைக்க வேண்டும்; அவனை மாத்திரம் விட்டுவிடாதீர்கள்." இவ்விதம் போர் வளர்கிறது; திருடர்கள் தொகை அதிகமாகிறது; உங்கள் அண்டையில் இருப்பவர்கள் தாமே சங்கடங்களை வரவழைத்துக் கொள்ளுகின்றனர். இவ்விதம் திருடன் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளவேண்டும் என்று விரும்பியதன் பயனை, நீங்கள் உங்களுடைய அமைதியையே கெடுத்துக் கொண்டீர்கள். எங்கே கொள்ளையடிக்கப்படுவோமோ, தாக்கப் படுவோமோ என்ற திகில் உங்களுக்கு இடைவிடாமல் இருந்து கொண்டே இருக்கிறது. உங்களுக்கிருந்த தைரியம் போய்க் கோழைத்தனம் உண்டாகிறது. இந்த வாதத்தைப் பொறுமையுடன் ஆராய்வீர்களானல், நான் நிலைமையை மிகைப்படுத்திக் கூறிவிடவில்லை என்பதைக் காண்பீர்கள். இது, முறைகளில் ஒன்று. பிறவற்றையும் கவனிப்போம். ஆயுதபாணியான இத் திருடன், அறிவு கெட்ட உங்கள் உடன்பிறந்தவன் என்று வைத்துக் கொள்ளுங்கள். உரிய சமயத்தில் அவனுக்கு நியாயத்தை எடுத்துச் சொல்ல விரும்புகிறீர்கள். எப்படியானலும் அவனும் நம்மைப் போன்ற மனிதனே என்று நீங்கள் வாதிக்கிறீர்கள். அவனைத் திருடும்படித் தூண்டியது என்ன என்பதும் உங்களுக்குத் தெரியாது. எனவே, முடியும்போது அவனுடைய திருட்டு நோக்கத்தைப் போக்கிவிட வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறீர்கள். இவ்வாறு நீங்கள் நினைக்கும்போது, அவன் மீண்டும் திருடவே வருகிருன்; அவன் மீது கோபங் கொள்ளுவதற்குப் பதிலாக அவனிடம் பச்சாத்தாபப்படுகிறீர்கள். அவனிடம் திருடும் பழக்கம் ஒரு நோயாக இருக்கலாம் என்று எண்ணுகிறீர்கள். ஆகவே, அவன் எளிதில் கவர்ந்து செல்ல, நீங்கள் உங்கள் கதவுகளையும் சன்னல்களையும் திறந்துவைத்துக்கொள்ளுகிறீர்கள். நீங்கள் தூங்குமிடத்தை மாற்றிக்கொள்ளுகிறீர்கள். அவன் சுலபமாக வந்து எடுத்துக்கொண்டு போகக்கூடிய இடத்தில் உங்கள் சாமான்களையும் வைத்திருக்கிறீர்கள். திருடன் வருகிருன்; இதெல்லாம் அவனுக்குப் புதிதாக இருப்பதால் குழப்பம் அடைகிருன்; என்ருலும் உங்கள் சாமான்களை எடுத்துக்கொண்டு போய்விடுகிருன். ஆனல், அவனுடைய மனம் பரபரப்படைகிறது. உங்களைப் பற்றி கிராமத்தில் விசாரிக்கிருன். உங்களுடைய பரந்த அன்புள்ளத்தைப் பற்றி அறிகிருன்; செய்துவிட்ட குற்றத்திற்காக வருந்துகிருன்; உங்களிடம் மன்னிப்புக் கோருகிருன்; உங்கள் சாமான்களைத் திருப்பிக்கொண்டு வந்துவிடுகிருன்; உங்களுக்கு வேலைக்காரனுகிருன்; அவனுக்கு நீங்கள் கௌரவமான வேலையை அளிக்கிறீர்கள். இது இரண்டாவது முறை. இவ்விதம் வெவ்வேறு விதமான முறைகளால் முற்றிலும் வெவ்வேறு விதமான பலன்கள் ஏற்படுவதைக் காண்கிறீர்கள். இதிலிருந்து திருடர்கள், மேற்கண்ட வகையில் நடந்துகொள்ளுவார்கள் என்ருே அல்லது உங்களைப் போலவே எல்லாருக்கும் பச்சாத்தாபமும் அன்பும் இருக்கும் என்ருே முடிவுக்கு வந்துவிட

நான் விரும்பவில்லை. ஆனால், நியாயமான முறைகள் மாத்திரமே நியாயமான பலன்களை அளிக்க முடியும். எல்லோருடைய விஷயத்தில் இல்லாவிட்டாலும், பெரும்பாலானவர்கள் விஷயம் வரைக்குமாவது ஆயுத பலத்தைவிட, அன்பு, அனுதாபம் இவற்றிற்குரிய சக்தி எவ்வளவோ பெரிது என்பதைக் காட்டுவதே என் விருப்பம். மிருக பலத்தை உபயோகிப்பதில் தீமையுண்டு. அனுதாபத்தில் அது இல்லை.

மனுச் செய்துகொள்ளும் விஷயத்தை இப்பொழுது கவனிப்போம். பலத்தின் ஆதரவில்லாத முறையீடு பயனற்றது என்பது ஆட்சேபிக்க முடியாத உண்மை. என்றாலும், காலஞ்சென்ற நீதிபதி ரானடே, முறையிட்டுக்கொள்ளுவதில் மக்களுக்குப் போதிப்பதற்கான உபாயமிருப்பதால் முறையீட்டிலும் பயன் உண்டு என்று கூறி வந்தார். இது, தங்கள் நிலையைப் பற்றி மக்கள் அறிந்துகொள்ளும்படி செய்வதோடு ஆட்சி செலுத்துவோருக்கும் எச்சரிக்கை செய்கிறது. இதைக்கொண்டு பார்த்தால் முறையீடு முற்றிலும் பயனற்றதாகாது. சமமானவர்களுக்குள் முறையீடு, கண்ணியத்தின் சின்னமாகும். அடிமையின் முறையீடோ, அடிமைத் தனத்தின் சின்னம். பலத்தின் ஆதரவோடு செய்துகொள்ளும் முறையீடு, சமமானவர் செய்துகொள்ளும் மனுவாகும். தனது தேவைகளை மனுவின் மீது தெரிவிக்கும் போது அது அவருடைய பெருந்தன்மையை நிரூபிக்கிறது. முறையீடுகளுக்கு இரு வகையான பலங்கள் ஆதரவளிக்கக்கூடும். "இதைக் கொடுக்காவிட்டால் உங்களைத் துன்புறுத்துவோம்" என்பது ஒரு வகையான பலம். இது ஆயுதத்தின் பலம்; அதன் தீய பலன்களைக் குறித்து இதுவரை ஆராய்ந்திருக்கிறோம். இரண்டாவது வகையான பலம், இவ்விதம் கூறப்படுகிறது: "எங்கள் கோரிக்கைகளுக்கு உடன்படாவிட்டால், மேற்கொண்டும் உங்களுக்கு மனுச் செய்துகொள்ளுபவர்களாக நாங்கள் இருக்கமாட்டோம். ஆளப்படுவோராக நாங்கள் இருந்துவரும் வரையில்தான் நீங்கள் எங்களை ஆண்டு வர முடியும்; அதற்குப் பிறகு உங்களுடன் எந்தவிதத் தொடர்பும் வைத்துக்கொள்ள மாட்டோம்." இதில் அடங்கிய பலத்தை அன்பின் பலம், ஆன்ம பலம் என்று சொல்லலாம். அவ்வளவு சரியானதல்ல எனினும், எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்ததான சாத்விக எதிர்ப்பு என்றும் இதை விவரிக்கலாம். இந்தப் பலம் அழிக்க முடியாதது. இதை உபயோகிப்பவன் தன் நிலைமையைச் சரியானபடி அறிந்திருக்கிறான். "ஒரு மாத்திரை முப்பத்தாறு நோய்களைக் குணப்படுத்துகிறது" என்பதே நம் பழமொழி ஒன்றின் நேரான பொருள். அன்பு அல்லது ஆன்மாவின் சக்திக்கு முன்னால் ஆயுத பலம் குன்றிப் போய்விடுகிறது.

குழந்தை தீயில் காலை நீட்டுகிறது என்று நீங்கள் சொன்ன கடைசி உதாரணத்தை இப்பொழுது எடுத்துக்கொள்ளுவோம். இதுவும் உங்களுக்குப் பயன்படாது. உண்மையில் குழந்தையை

நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்களால் ஒன்றும் செய்ய முடியாத அளவுக்கு அதன் உடல் பலத்தை உபயோகித்துத் தீக்குள் போய்விடுவதாக வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது உங்களால் அதைத் தடுக்க முடியாது. இதில் உங்களுக்குப் பரிகாரங்கள் இரண்டேயாகும். ஒன்று, தீயில் நாசமாவதைத் தடுப்பதற்காக அதை நீங்கள் கொன்றுவிட வேண்டும்; அல்லது, உங்கள் கண் முன்னலேயே அது சாவதைச் சகிக்கவில்லையானல், நீங்கள் உங்கள் உயிரையே கொடுக்க வேண்டும். குழந்தையைக் கொல்லமாட்டீர்கள். உங்கள் உள்ளம் முற்றிலும் அனுதாபம் நிறைந்ததாக இல்லாவிட்டால், குழந்தையை முந்திக்கொண்டு நீங்களே தீயில் விழுந்து அதற்கு இரையாகமாட்டீர்கள் என்பதும் சாத்தியம். ஆகையால், நீங்கள் ஒன்றும் செய்ய இயலாது குழந்தை இரையாக இடம் தருகிறீர்கள். இவ்விதம் எப்படியும் உடல் பலத்தை உபயோகிக்கவில்லை. உங்களால் முடிந்தால், நெருப்பை நோக்கிக் குழந்தை வேகமாகப் போவதைப் பலவந்தமாக நீங்கள் தடுப்பது, சற்று தாழ்ந்த ரகமானலும், அது உடல் பலத்தினலேயே என்று இன்னும் நீங்கள் கருதிக்கொண்டிருக்க மாட்டீர்கள் என்றே நம்புகிறேன். அந்தப் பலம் வேறு வகையானது. அது என்ன என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

இவ்விதம் குழந்தையைத் தடுப்பதில், அதன் சொந்த நன்மை ஒன்றையே நீங்கள் கவனிப்பதால், அதன் நன்மைக்கென்றே உங்கள் முழு அதிகாரத்தையும் உபயோகிக்கிறீர்கள் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் உதாரணம் ஆங்கிலேயருக்குப் பொருந்தாது. ஆங்கிலேயருக்கு எதிராக மிருக பலத்தை உபயோகிப்பதில் முற்றிலும் உங்களுடைய, அதாவது தேசீய நன்மையையே கவனிக்கிறீர்கள்; அதில் இரக்கம் அல்லது அன்புக்கு இடமே இல்லை. ஆங்கிலேயரின் காரியங்கள் தீயனவாகையால் அவை தீ போன்றவையாகின்றன. அறியாமையால் அவர்கள் செயல் புரிகின்றனர், அவர்கள் அக்குழந்தையின் நிலைமையில் இருக்கிறார்கள், அத்தகைய குழந்தையை நீங்கள் காப்பாற்ற விரும்புகிறீர்கள் என்று நீங்கள் சொல்லுகிறீர்களா? அப்பொழுது நீங்கள் குழந்தையின் விஷயத்தில் செய்வதைப் போல, இத்தகைய தீய காரியங்களை யார் செய்வதாயினும் தீமையையும் நீங்கள் மேற்கொள்ளவேண்டி வருவதோடு உங்களையே தியாகம் செய்ய வேண்டியும் வரும். அளவில் அடங்காத வகையில் அவ்வளவு இரக்கம் உங்களுக்கு இருக்குமாயின், அதைக் காட்டுமாறு உங்களை வாழ்த்துகிறேன்.

—'இந்திய சுயராஜ்யம்'—['மகாத்மா காந்தி நூல்கள்' —முதற் தொகுப்பு 679-87]

# 5

# சாத்விக எதிர்ப்பு

**வாசகர் :** ஆன்ம பலம் அல்லது சத்தியத்தின் பலம் என்று நீங்கள் சொல்லுகிறீர்களே, அதன் வெற்றிக்குச் சரித்திர பூர்வமான ஆதாரம் ஏதாவது உண்டா? ஆன்ம சக்தியைக் கொண்டு ஒரு நாடு உயர்ந்தது என்பதற்கு எந்தச் சம்பவமும் நிகழ்ந்ததாகக் காணப்படவில்லை. சரீர தண்டனை இல்லாவிட்டால், தீய செய்கையுடையவர்கள் தீயன செய்வதை நிறுத்தமாட்டார்கள் என்றே நான் இன்னும் நம்புகிறேன்.

**ஆசிரியர் :** கவி துளசிதாசர்*, "அகந்தையே சரீரத்தின் வேராவது போல அனுதாபம் அல்லது அன்பு மதத்திற்கு வேர். ஆகவே, நாம் உயிரோடிருக்கும் வரையில் அனுதாபத்தை மாத்திரம் கைவிட்டுவிடக்கூடாது" என்று கூறியிருக்கிறார். இதுவிஞ்ஞான ரீதியான உண்மைஎன்றுஎனக்குத்தோன்றுகிறது. இரண்டும் இரண்டும் நான்கு என்று நம்புகிற அளவுக்கு நான் இதையும் நம்புகிறேன். ஆன்ம அல்லது சத்தியத்தின் பலத்தைப் போன்றது, அன்பின் பலமும். ஒவ்வொரு கட்டத்திலும் அது வேலை செய்கிறது என்பதற்குச் சாட்சியம் நமக்கு இருக்கிறது. அதிகப் பலம் இல்லாவிட்டால் பிரபஞ்சமே மறைந்துவிடும். ஆனால், சரித்திர பூர்வமான ஆதாரம் வேண்டுமென்று நீங்கள் கேட்கிறீர்கள். ஆகையால், சரித்திரம் என்றால் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது. குஜராத்தியில் சரித்திரம் என்பதற்கு 'இதிஹாஸ' (அவ்வாறு நிகழ்ந்தது) என்பதே நேரான சொல். சரித்திரம் என்பதற்கு அதுதான் பொருளென்றால், போதுமான ஆதாரங்களை நாம் கொடுக்கலாம். மன்னர்களும் சக்கரவர்த்திகளும் செய்திருப்பதுதான் சரித்திரம் என்பதாயின், அப்படிப்பட்ட சரித்திரத்தில் ஆன்ம பலம் அல்லது சாத்விக எதிர்ப்புக்கு ஆதாரமே இராது. ஈயச் சுரங்கத்தில் வெள்ளி இருக்கும் என நீங்கள் எதிர்பார்க்க முடியாது. உலக யுத்தங்களின் வரலாறுகளே சரித்திரம் என்பதை நாம் அறிவோம். இதனாலேயே சரித்திரம் இல்லாத, அதாவது யுத்தங்கள் இராத நாடே ஆனந்தமான நாடு என்று ஆங்கிலேயரிடையே ஒரு பழமொழி உண்டு. மன்னர்கள் எப்படி நடந்தார்கள்; ஒருவருக்கொருவர் எவ்விதம் விரோதி

* துளசிதாசர் - 'ராமசரித மானஸ' (ராமன் வரலாறு என்னும் ஏரி) என்ற பக்திச் சுவை மிளிரும் ராம கதையை மக்கள் பேசும் ஹிந்தி மொழியில் செய்தவர், இவர். வட இந்தியாவெங்கும் இந்த நூலை ஒரு தெய்விகப் பனுவலென மக்கள் போற்றிப் பாராயணம் செய்கின்றனர். 16-ஆம் நூற்றாண்டில் காசியில் வாழ்ந்தவர் இவர்.

களானுர்கள் ; ஒருவரையொருவர் எவ்வாறு மாய்த்துக் கொண்டார்கள் ; இந்த வரலாறுகளே சரித்திரத்தில் கூறப் பட்டிருக்கின்றன. உலகத்தில் நடந்தவை யெல்லாம் இவையே என்றால், வெகு காலத்திற்கு முன்பே உலகம் முடிந்து போயிருக்கும். உலகின் கதை போரிலேயே தொடங்கியிருப்பின், இன்று ஒரு மனிதனைக்கூட உயிரோடு பார்க்க முடியாது. ஆஸ்திரேலியாவின் உள்ளே புகுந்த வர்கள், அதன் சொந்த மக்கள் ஒருவரைக்கூட உயிரோடு வைக்காததைப் போல, சண்டையிட்டுக் கொண்டவர்களும் மறைந்து போயிருப்பார்கள். குறிப்பாக ஒன்றைக் கவனத் தில் வைத்துக்கொள்ளுங்கள். இந்தப் பழங்குடிகள் தற்காப் புக்கு ஆன்ம பலத்தை உபயோகிக்கவில்லை; இவர்களைப் போன்ற கதியே ஆஸ்திரேலியருக்கும் ஏற்படும் என்பதை அறியத் தீர்க்கதரிசனம் தேவையில்லை. "வாளெடுத்தவன் வாளாலேயே அழிவான்." "நீச்சலையே பிழைப்பாக்கிக் கொண்டவர்களுக்கு நீரிலேயே சாவு" என்று நம்மிடையே ஒரு பழமொழி வழங்குகிறது.

உலகத்தில் எத்தனையோ மனிதர்கள் இன்னும் உயி ரோடு இருக்கிறார்கள் என்ற உண்மை, ஆயுத பலத்தை அடிப்படையாகக்கொண்டு அவ்வாறு அமையவில்லை, சத் தியம் அல்லது அன்பின் அடிப்படையில் உலகம் இருக் கிறது என்பதையே காட்டுகிறது. ஆகையால், உலகத்தில் யுத்தங்கள் எவ்வளவோ இருந்தும் உலகம் இன்னும் உயி ருடன் இருக்கிறது என்ற உண்மை ஒன்றே இந்தச் சக்தி யின் வெற்றிக்கு மிகப் பெரிய, ஆட்சேபிக்க முடியாத சாட்சியமாகும்.

ஆயிரக்கணக்கானவர், பத்தாயிரக் கணக்கானவர்கள் கூடத் தாங்கள் உயிருடன் வாழ்வதற்கு இந்தச் சக்தி தீவிரமாக வேலை செய்வதையே நம்பியிருக்கின்றனர். தங்க ளுடைய அன்றாட வாழ்க்கையில் லட்சக்கணக்கான குடும் பங்களின் சிறு சச்சரவுகள், இந்தச் சக்தி பிறக்கும்போது மறைந்துவிடுகின்றன. நூற்றுக் கணக்கான நாடுகள் சமா தானமாகவே வாழ்கின்றன. இந்த உண்மையைச் சரித்திரம் கவனிப்பதில்லை ; கவனிக்கவும் முடியாது. அன்பு அல்லது ஆன்ம சக்தி வேலை செய்வதில் கூட, இருந்து வரும் ஒவ் வோர் இடையூறு பற்றிய வரலாற்றைக் கொண்டதே உண் மையில் சரித்திரம். இரு சகோதரர்கள் சச்சரவிட்டுக் கொள்ளுகிறார்கள்; இவர்களில் ஒருவன் தான் செய்துவிட்ட தவறுக்காக வருந்தி, தன்னுள் தூங்கிக் கிடந்த அன்பை திரும்ப எழுப்பிவிடுகிறான் ; இருவரும் மீண்டும் சமாதான மாக வாழ ஆரம்பிக்கிறார்கள். இதைக் குறித்து யாருமே கவனிப்பதில்லை. ஆனால், இரு சகோதரர்கள், வக்கீல்களின்

குறுக்கீட்டினுலோ அல்லது வேறு காரணங்களினுலோ, சண்டைக்கு ஆயுதங்களை எடுத்துக்கொண்டாலோ, அல்லது கோர்ட்டுக்குப் போனுலோ, இது மிருக பலத்தைக் காட்டிக் கொள்ளும் மற்றோர் வகை. இவர்களுடைய காரியங்கள் உடனேயே பத்திரிகைகளில் பிரசுரமாகும். அண்டையில் இருப்பவர்கள் இவர்களைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பார்கள். ஒரு வேளை இவர்கள் செய்கை சரித்திரத்தில் இடம் பெற்றுலும் பெறும். குடும்பங்கள், சமூகங்கள் இவை பற்றிய உண்மை எதுவோ அதுவே நாடுகளின் உண்மையும். குடும்பங்களுக்கு ஒரு சட்டம், நாடுகளுக்கு மற்றொரு சட்டம் என்று எண்ணுவதற்குக் காரணமே இல்லை. ஆகவே, இயற்கையின் போக்கில் ஏற்படும் இடையூறுகளைக் குறிப்பிடுவதே சரித்திரம். ஆன்ம சக்தி இயற்கையானதால் அது சரித்திரத்தில் குறிப்பிடப்படவில்லை.

**வாசகர் :** நீங்கள் கூறுவதிலிருந்து, சாத்விக எதிர்ப்பைப் பற்றிய இவ்வகையான நிகழ்ச்சிகள் சரித்திரத்தில் காணப்படுவதில்லை என்பது தெளிவாகிறது. இந்தச் சாத்விக எதிர்ப்பைப் பற்றி இன்னும் அதிகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியம். ஆகையால், இதைப் பற்றியே நீங்கள் விவரமாகக் கூறுவது நல்லது.

**ஆசிரியர் :** துன்பத்தைத் தானே ஏற்றுக்கொண்டு அதன் மூலம் உரிமைகளைப் பெறும் முறையே சாத்விக எதிர்ப்பு. ஆயுதங்களைக்கொண்டு எதிர்ப்பதற்கு இது நேர்மாறுனது. என் மனச்சாட்சிக்கு வெறுப்புத் தரும் ஒரு காரியத்தைச் செய்ய நான் மறுத்துவிடும்போது, நான் ஆன்ம பலத்தை உபயோகிக்கிறேன். உதாரணமாக. ஆட்சியில் இருக்கும் அரசாங்கம், என்னைப் பாதிக்கும் அளவிற்கு ஒரு சட்டத்தை இயற்றுகிறது. நான் அச்சட்டத்தை விரும்பவில்லை. பலாத்காரத்தை உபயோகிப்பதன் மூலம் அச்சட்டத்தை ரத்து செய்யுமாறு நான் அரசாங்கத்தைக் கட்டாயப்படுத்தினுல், நான் உடல் பலம் என்பதான சக்தியை உபயோகிக்கிறேன். அச்சட்டத்திற்கு உடன்பட நான் மறுத்து, அதை மீறியதற்குள்ள தண்டனையை ஏற்றுக்கொண்டால், நான் ஆன்ம சக்தியை உபயோகிக்கிறேன். தன்னையே தியாகம் செய்வதென்பது இதில் அடங்கியிருக்கிறது.

மற்றவர்களின் தியாகத்தைவிடத் தானே தியாகம் செய்துகொள்ளுவதென்பது நிச்சயமாக உயர்வானது என்பதை ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளுகிறுர்கள். மேலும் நியாயமற்றதான ஒரு காரியத்திற்கு இந்தச் சக்தி உபயோகிக்கப்படுமானுல், அதை யார் உபயோகிக்கிறுரோ அவர் மட்டுமே கஷ்டப்படுகிறுர். தம் தவறுகளுக்காக மற்

றவர்கள் கஷ்டப்படும்படி அவர் செய்துவிடவில்லை. மனிதர் முன்னால் செய்திருக்கும் பல காரியங்கள் தவறானவை என்று பின்னர் தெரியலாயின. தான் செய்வதே முற்றிலும் சரியானது அல்லது தவறு என்று ஒருவன் நினைப்பதால், ஒரு குறிப்பிட்ட காரியம் சரியென்றோ அல்லது தவறென்றோ அவன் சொல்லிக்கொள்ள முடியாது. ஆனால், தவறு என்பது அவனுடைய திட்டமான முடிவாக இருக்குமானால் அது தவறானதே. ஆகையால், தனக்குத் தவறு என்று பட்டதை அவன் செய்யக்கூடாது. இதன் விளைவாக என்ன கஷ்டம் வந்தாலும் அவன் அனுபவிக்க வேண்டும். ஆன்ம சக்தியை உபயோகிப்பதற்கு இதுவே முக்கியமான மந்திரம்.

**வாசகர்:** அப்படியானால் சட்டங்களை நீங்கள் மதிக்கமாட்டீர்கள். இது அரசியல் துரோகம். நாம் சட்டத்திற்குக் கட்டுப்பட்ட மக்கள் என்று எப்பொழுதும் மதிக்கப்பட்டு வந்திருக்கிறோம். நீங்கள் தீவிர வாதிகளையும் மிஞ்சுவீர்களெனத் தோன்றுகிறது. நிறைவேற்றப்பட்டிருக்கும் சட்டங்களுக்கு நாம் உடன்பட வேண்டும் என்று கூறுகிறார்கள். ஆனால், சட்டங்கள் மோசமானவையாக இருந்தால், அத்தகைய சட்டங்களைச் செய்தவர்களைப் பலாத்காரத்தைக் கொண்டாயினும் விரட்டிவிட வேண்டும் என்று சொல்லுகிறார்கள்.

**ஆசிரியர்:** நான் அவர்களையும் மிஞ்சிவிடுகிறேனா இல்லையா என்பது உங்களுக்கோ அல்லது எனக்கோ அவ்வளவு முக்கியமானதல்ல. எது சரியானது என்பதைக் கண்டுபிடித்து அதன்படி நடக்க மாத்திரமே நான் விரும்புகிறேன். நாம் சட்டத்திற்குக் கட்டுப்பட்ட மக்கள் என்று கூறப்படுவதற்கு உண்மையான பொருள், நாம் சாத்விக எதிர்ப்பாளர்கள் என்பதே. சில சட்டங்களை நாம் விரும்பாத போது, அச்சட்டங்களைச் செய்தவர்களின் மண்டைகளை நாம் உடைத்துவிடுவதில்லை. நாம் கஷ்டப்படுகிறோம். அத்தகைய சட்டங்களுக்கு நாம் அடங்கிப்போவதில்லை. நல்லதாக இருந்தாலும், கெட்டதாக இருந்தாலும், சட்டமென்றால் நாம் உட்பட்டேயாக வேண்டும் என்பது ஒரு புதுமையான போக்கு. முன் காலங்களிலெல்லாம் அப்படி எதுவும் இருந்ததில்லை. தாங்கள் விரும்பாத சட்டங்களை மக்கள் மதிப்பதில்லை; இவ்விதம் மீறியதற்கு விதிக்கப்படும் தண்டனைகளை அனுபவிப்பார்கள். நமது மனச்சாட்சி வெறுக்கும் சட்டங்களுக்கு உடன்படுவதென்றால், அது மனிதத் தன்மைக்கே விரோதமானதாகும். அத்தகைய போதனை மதத்திற்கே விரோதமானது, அது அடிமைத்தனமுமாகும். உடம்பில் துணியில்லாமலேயே நடமாட வேண்டும் என்று அரசாங்கம் நமக்கு உத்தரவிடுவதாயின், அப்படியே நாம்

செய்ய வேண்டுமா? நான் சாத்விக எதிர்ப்பாளனுக இருந்தால், அவர்களுடைய சட்டத்திற்கும் எனக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்று அவர்களிடம் சொல்லிவிடுவேன். ஆனுல், நம்மை நாமே மறந்து விட்டதாலும், பணிந்து விடுபவர்கள் ஆகிவிட்டதாலும், மானக்கேடான எந்தச் சட்டத்தைக் குறித்தும் நாம் கவலைப்படுவதில்லை.

தன்னுடைய மனிதத் தன்மையை உணர்ந்துவிட்ட ஒரு மனிதன், கடவுளுக்கு மாத்திரமே பயப்படுவான்; வேறு யாருக்குமே அஞ்சமாட்டான். மனிதன் செய்த சட்டங்கள் அவனைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற அவசியமில்லை. அரசாங்கம் கூட அத்தகைய காரியம் எதையும் நம்மிடமிருந்து எதிர் பார்க்கவில்லை. "இந்தக் காரியத்தை நீ செய்ய வேண்டும்" என்று அவர்கள் சொல்லவில்லை. ஆனுல், "நீ அதைச் செய்யாது போனுல் கண்டிப்போம்" என்கிறது. நாம் கீழான நிலைக்கு வந்திருப்பதால் சட்டம் என்ன விதிக்கிறதோ அதைச் செய்தாக வேண்டியது நம் கடமை, அது நம் மதம் என்று நினைக்கிறோம். நீதியில்லாத சட்டங்களுக்குக் கீழ்ப்படிவது மனிதத் தன்மையற்றது என்பதை மாத்திரம் மனிதன் உணர்ந்துகொண்டு விடுவானுயின், எந்த மனிதனின் கொடுமையும் அவனை அடிமைப்படுத்திவிட முடியாது. சுய ஆட்சி அல்லது நம் ஆட்சிக்கு இதுவே வழிகாட்டி.

பெரும்பான்மையோர் செய்யும் ஒரு காரியம் சிறுபான்மையினரைக் கட்டுப்படுத்துகிறது என்று நம்புவது, மூட நம்பிக்கையாவதோடு, தெய்வத் தன்மையற்றதுமாகும். பெரும்பான்மையினர் செய்த காரியங்கள் தவருனவை; சிறுபான்மையினரின் காரியங்கள் சரியானவை என்பதைக் காட்ட அநேக உதாரணங்களைக் கொடுக்க முடியும். பெரும்பான்மையினருக்கு எதிராயிருந்த சிறுபான்மையினரின் முயற்சியே பல சீர்திருத்தங்களுக்குக் காரணமாகியிருக்கிறது. ஒரு கொள்ளைக் கூட்டத்தினருக்குத் திருடுவதைப் பற்றிய அறிவு அவசியம் என்ருல், அந்த அவசியத்தைத் தெய்வ பக்தியுள்ள ஒருவர் ஒப்புக் கொள்ள வேண்டுமா? அநியாயமான சட்டங்களுக்கு மனிதர் பணிய வேண்டும் என்ற மூட நம்பிக்கை இருக்கும் வரையில், அவர்களுடைய அடிமைத்தனமும் இருந்து கொண்டுதான் வரும். சாத்விக எதிர்ப்பாளர் ஒருவர் மட்டுமே அத்தகைய மூடநம்பிக்கையை நீக்க முடியும்.

மிருக பலத்தை உபயோகிப்பது, துப்பாக்கி மருந்தை உபயோகிப்பது என்பவை சாத்விக எதிர்ப்புக்கு முரணுனவை. ஏனெனில், நாம் விரும்புவதை நம் எதிரி பலாத்

காரத்தைக் கொண்டு செய்யும்படி விடுகிறோம் என்றுகிறது. ஆனால், அவன் அப்படிச் செய்வதில்லை. அத்தகைய பலாத்காரத்தின் உபயோகம் நியாயம் என்றால், அவன் அதே மாதிரி செய்ய நம்மால் உரிமை பெற்றவனாகிறான். குருட்டுக் குதிரை ஆலையைச் சுற்றிச் சுற்றி ஓடி வந்துகொண்டிருப்பதைப் போல, நாம் முன்னேறிக்கொண்டு வருவதாகச் சாதாரணமாக நினைத்துக் கொள்ளுகிறோம். தங்கள் மனச்சாட்சி வெறுக்கும் சட்டங்களுக்குப் பணியத் தாங்கள் கடமைப்பட்டிருக்கவில்லை என்று நம்புவோருக்கு உள்ள ஒரே பரிகாரம் சாத்விக எதிர்ப்புத்தான். மற்றவை அழிவுக்கே கொண்டு போய்விடும்.

'இந்திய சுயராஜ்யம்' [மகாத்மா காந்தி நூல்கள் — முதல் தொகுப்பு - பக்கங்கள் — 688 - 693 ]

# 6

# ஹண்டர் கமிட்டியில் சாட்சியம்

காந்திஜி, ஹண்டர் கமிட்டியிடம்* சமர்ப்பித்த கீழ்க்கண்ட வாக்குமூலம், இந்தியாவில் சத்தியாக்கிரக இயக்கத்தின் ஆரம்பத்தை விவரிக்கிறது. இந்த வாக்குமூலம் 1919 நவம்பர் 5-ஆம் தேதி 'எங் இந்தியா'விலும் அதற்கு அடுத்த இரண்டு அல்லது மூன்று இதழ்களிலும் தொடர்ந்து வெளியாகியது. இதில் காந்திஜி, சத்தியாக்கிரகம் என்றால் என்ன என்பதையும், அதில் பொதிந்துள்ள தத்துவங்களையும் விளக்கிக் கூறி யிருக்கிறார். ஆகவே அவ்விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன :

## பொதுவான கொள்கைகள்

சென்ற முப்பது ஆண்டுகளாக நான் சத்தியாக்கிரகத்தை உபதேசித்தும் அனுஷ்டித்தும் வருகிறேன். இன்று நான் அறிந்த வரையில், சத்தியாக்கிரகத்தின் கொள்கைகள் நாளாவட்டத்தில் ஏற்படும் மலர்ச்சியையே காட்டுகின்றன.

---

* ஜாலியன்வாலா பாக் படுகொலையையும் அதன் பின் பஞ்சாபில் பிரிட்டிஷ் அதிகாரிகள் செய்த அட்டூழியங்களையும் விசாரிப்பதற்காக இந்திய சர்க்கார், நீதிபதி லார்டு ஹண்டர் தலைமையில் ஒரு கமிட்டி நியமித்தனர். எட்டு அங்கத்தினர்கள் அடங்கிய அந்தக் கமிட்டியில், சர் சுல்தான் அகமது, சர் சிமன்லால் செதல்வாட், பண்டித ஜகத் நாராயண் இம்மூவரும் மாத்திரமே இந்தியர்களாவர். பஞ்சாபில் அதிகாரிகள் புரிந்த அக்கிரமங்களை மழுப்பும் விதத்தில் ஹண்டர் கமிட்டியின் அறிக்கை இருந்தது. அதுவும் கிலாபத் பிரச்னையுமே பின்னர் 1921-இல் மாபெரும் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமாவதற்குக் காரணமாக இருந்தன.

வட துருவத்திற்கும் தென் துருவத்திற்கும் எவ்வளவு வேற்றுமையுண்டோ, அவ்வளவு வேற்றுமை சத்தியாக்கிரகத்திற்கும் சாத்விக எதிர்ப்பிற்கும் உண்டு. சாத்விக எதிர்ப்பு பலவீனர்களின் ஆயுதமாகும். அது ஒருவருடைய லட்சியத்தை அடைவதற்கு உடல் பலத்தையோ அல்லது பலாத்காரத்தையோ உபயோகிப்பதை விலக்கவில்லை. ஆனால், சத்தியாக்கிரகமோ மிகவும் அதிக பலம் வாய்ந்தவர்களின் ஆயுதமாக உருவாக்கப்பட்டிருக்கிறது. அது, எவ்விதத்திலும் எந்த உருவத்திலும் பலாத்காரம் கூடாதென்று தடை செய்கிறது. தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் எட்டு வருஷ காலம் வரையில் தங்கள் சக்தியை உபயோகித்தார்கள். அந்தச் சக்தியைக் குறிப்பிடவே சத்தியாக்கிரகம் என்ற சொல் என்னால் கண்டு பிடிக்கப்பட்டது. அப்போது பிரிட்டனிலும் தென்னாப்பிரிக்காவிலும் சாத்விக எதிர்ப்பு என்ற பெயரில் ஓர் இயக்கம் நடந்துகொண்டிருந்தது. அதற்கும் இந்தியர்களின் இயக்கத்திற்கும் உள்ள வேற்றுமை தெளிவாகத் தெரிய வேண்டும் என்பதற்காகவே, சத்தியாக்கிரகம் என்ற சொல் கண்டு பிடிக்கப்பட்டது.

சத்தியத்தைக் கடைப்பிடிப்பதே அதன் அடிப்படையான அர்த்தமாகும்; அதாவது சத்திய சக்தி என்பதே. நான் அதை அன்பு சக்தி அல்லது ஆன்மசக்தி என்றும் குறிப்பிட்டிருக்கிறேன். சத்தியாக்கிரகத்தைச் செயலில் காட்ட ஆரம்பித்தபோதுதான், சத்தியத்தை நாடும்போது எதிரி மீது பலாத்காரத்தைப் பிரயோகம் செய்யக்கூடாது என்பதைக் கண்டுபிடித்தேன்; பொறுமையுடனும் அனுதாபத்துடனும் தவறிலிருந்து எதிரியைத் தடுக்க வேண்டும் என்பதையும் கண்டறிந்தேன். ஏனெனில், ஒருவருக்கு உண்மையாகத் தோன்றுவது மற்றவருக்குத் தவறாகத் தோன்றலாம் அல்லவா? பொறுமை என்பது, தானே துன்பத்திற்கு உள்ளாவதுதான். அதாவது எதிரியைத் துன்பத்திற்கு உள்ளாக்காமல், தானே துன்பத்திற்கு உள்ளாவதன் மூலம் உண்மையை ஸ்தாபிப்பதுதான் சத்தியாக்கிரகக் கொள்கையாகும்.

ஆனால், ராஜீயத் துறையில், ஜனங்கள் சார்பில் நடத்தும் போராட்டம் பெரிதும் அநீதியான சட்டங்களின் உருவத்தில் உள்ள தவறை எதிர்ப்பதுதான். நீங்கள் விண்ணப்பங்கள் போன்ற முறைகளால், சட்டத்தைச் சிருஷ்டித்தவர் தமது தவறை உணரும்படி செய்ய முடியாவிடில், நீங்கள் நாடக்கூடிய பரிகாரம் ஒன்றே ஒன்றுதான் உண்டு. அந்தத் தவறுக்கு உட்பட நீங்கள் விரும்பாவிடில், நீங்கள் எதிரி விஷயத்தில் சரீர பலாத்காரத்தை உபயோகித்து, அவர் உங்களுக்கு இணங்கும்படி வற்புறுத்தலாம். அல்லது நீங்கள் சட்டத்தை மீறுவதன் மூலம் தண்டனை பெற்று, நீங்கள் உங்களையே துன்பத்திற்கு உள்ளாக்கிக்கொள்ளலாம். அதனாலேயே சத்தியாக்கிரகம் பெரிதும் சாத்விக சட்ட மறுப்பு, அல்லது தண்டனைக்கு உரியதல்லாத

எதிர்ப்பாக (Civil Resistance) பொது மக்களுக்குத் தோன்றுகிறது. அது 'சிவில்' நடவடிக்கை, 'கிரிமினல்' நடவடிக்கையல்ல.

சட்டத்தை மீறுவோர் கள்ளத்தனமாக அதை மீறி, தண்டனைக்கு ஆளாகாமல் தவிர்க்க முயற்சிக்கிறார். சாத்விக எதிர்ப்பாளர் அப்படிச் செய்வதில்லை. அவர் தம்முடைய நாட்டின் சட்டங்களுக்கு எப்போதும் கீழ்ப்படிந்து நடக்கிறார். அவற்றை மீறினால் தம்மீது நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுவார்களே என்ற பயத்தினால் அல்ல; மக்கள் சமூகத்தின் க்ஷேமத்திற்கு அவை நன்மையானவை என்று அவர் கருதுவதனால்தான். ஆனால், எப்போதாவது அபூர்வமாகச் சில சந்தர்ப்பங்கள் ஏற்படுவது உண்டு. அவர், அநீதியான சட்டங்களுக்குக் கீழ்ப்படிவது மானக்கேடாகும் என்று கருதும்போது, அவர் பகிரங்கமாகவும் சாத்விகமாகவும் சட்டங்களை மீறி, அவ்விதம் மீறியதற்காக விதிக்கப்படும் தண்டனையைச் சாந்தமாக அனுபவிக்கிறார். அத்தகைய சட்டம் விதித்தவர்களின் நடவடிக்கையைக் கண்டிப்பதற்காக, ஒழுக்கச் சீர்கேட்டிற்கு இடமில்லாத வகையில் மற்றச் சட்டங்களையும் அவர் மீறி, சர்க்காருடன் ஒத்துழைக்க மறுப்பதற்கு வழி இருக்கிறது.

சத்தியாக்கிரகத்தின் பெருமையும் சக்தியும் அபாரமானவை; அக்கொள்கை மிக்க எளிதானதும்கூட. எனவே, அதைக் குழந்தைகளுக்குக்கூட உபதேசிக்க முடியும். அக்கொள்கையை ஒப்பந்தத் தொழிலாளர்கள் என்று கூறப்பட்ட ஆயிரக் கணக்கான ஆடவர்கள், பெண்கள், குழந்தைகளுக்கு நான் உபதேசித்தேன். அதனால் மகத்தான பலன்களும் ஏற்பட்டன.

## ரௌலட் மசோதாக்கள்:

ரௌலட் மசோதாக்கள்* பிரசுரமானபோது, அவை மனித சுதந்திரத்தை மிகவும் கட்டுப்படுத்துபவையாக இருப்பதையும்,

* ரௌலட் மசோதா 1919 மார்ச்சு மாதம் மூன்றாவது வாரத்தில் மத்திய சட்ட சபையில் நிறைவேறி சட்டமாகியது. முதலாவது உலக மகாயுத்தத்திற்குப் பிறகு, யுத்த காலத்தில் அமலில் இருந்த இந்தியா தற்காப்புச் சட்டம் காலாவதியாகியது. இதனால் ஏற்படக்கூடிய நிலைமையைச் சமாளிக்கவே, அந்தச் சட்டத்தின் ஸ்தானத்தில் ரௌலட் சட்டத்தை இந்திய அரசாங்கம் கொண்டு வந்தது. அச்சட்டம் அதிகாரிகளுக்கு எதேச்சாதிகாரம் அளிப்பதாக இருந்தது. அதன்படி அதிகாரிகள், சந்தேகாஸ்பதமானவர்கள் என்று யாரை வேண்டுமாயினும் கைது செய்யலாம்; தண்டிக்கலாம்; சிறையில் வைக்கலாம். காந்திஜி அந்தச் சட்டத்தை அநீதியானதென்றும், மக்களின் நியாயமான உரிமைகளைப் பறிமுதல் செய்வதாக இருக்கிறதென்றும் கருதினார். எனவே, இந்திய மக்கள் அந்த அநீதியான சட்டம் அமலுக்கு வருவதைச் சகித்துக் கொண்டிருக்கக் கூடாது என்றும் கூறினார்.

முதலாவது மகாயுத்தத்தின்போது லாயிட் ஜார்ஜ் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தார். துருக்கி சுல்தானும் முஸ்லிம்களின் மதத் தலைவருமான கலீபின் ஆதிபத்

அவற்றை முழு சக்தியையும் உபயோகித்து எதிர்க்க வேண்டும் என்பதையும் நான் உணர்ந்தேன். அவற்றிற்கு இந்தியா முழுவதும் எதிர்ப்பு இருப்பதையும் நான் கவனித்தேன். ஓர் அரசாங்கம் எவ்வளவு கொடுங்கோன்மையானதாக இருப்பினும், மக்கள் எல்லோருக்கும் வெறுப்பைக் கொடுக்கும் சட்டங்களை நிறைவேற்ற அதற்கு உரிமையில்லை. அப்படியிருக்க, அரசியல் சம்பிரதாயங்களையும் முன்னுதாரணத்தையும் வழிகாட்டியாகக் கொண்ட இந்திய அரசாங்கத்தைப் போன்ற ஓர் அரசாங்கத்திற்கு, அத்தகைய உரிமை எள்ளளவும் இல்லை. எனவே, வரப்போகும் கிளர்ச்சி சீர்குலைந்துவிடாமலோ, அல்லது பலாத்கார முறைகளில் இறங்கிவிடாமலோ தடுக்க வேண்டுமாயின், அக்கிளர்ச்சியைத் திட்டவட்டமான பாதையில் செலுத்த வேண்டியது அவசியமென்றும் எனக்குத் தோன்றியது.

## ஏப்ரல் 6-ஆம் தேதி :

அதனால்தான் நான் சத்தியாக்கிரகத்தைத் தேசத்தின் முன் சமர்ப்பிக்கத் துணிந்தேன் ; அதன் சாத்விக எதிர்ப்பு அம்சத்தையும் வற்புறுத்தலானேன். அது முற்றிலும் சித்த சுத்தி இயக்கமானதால், ஏப்ரல் 6-ஆம் தேதியன்று உண்ணாவிரதம், பிரார்த்தனை, ஒரு நாளைக்கு எல்லா வேலைகளையும் நிறுத்தி வைத்தல் முதலியவற்றை அனுஷ்டிக்க வேண்டுமென்று நான் யோசனை கூறினேன். அப்போது கட்டுக்கோப்பான முயற்சி எதுவும்

---

திய உரிமைக்குத் தாங்கள் எவ்விதக் குந்தகமும் விளைவிக்கப் போவதில்லை என்று லாயிட் ஜார்ஜ் முஸ்லிம்களுக்குப் பிரமாணம் செய்து கொடுத்திருந்தார். அந்த வாக்குறுதியை நம்பி இந்திய முஸ்லிம்கள் துருக்கியில் உள்ள தங்கள் மதத்தினரை எதிர்த்துப் போராடினார்கள். ஆனால், யுத்தத்திற்குப் பிறகு, அந்த வாக்குறுதிகளை பிரிட்டன் நிறைவேற்றவில்லை. துருக்கிக்குச் சொந்தமான பிரதேசங்களை இங்கிலாந்தும் பிரான்சும் பங்கு போட்டுக்கொண்டு விட்டன. இதனால், இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள் மாத்திரமல்ல, மற்ற சமூகத்தினரும் ஆத்திரம் கொண்டனர். கொடுத்த வாக்குறுதியைக் காற்றுவாக்கில் விட்டுவிட்டு, பிரிட்டன் பெரும் துரோகம் செய்துவிட்டதாக எல்லோரும் கருதினர். இதுதான், இந்தியாவில் கிலாபத் இயக்கம் தோன்றியதற்கு மூல காரணமாகும். அந்த இயக்கத்தில், பிரிட்டிஷாரை எதிர்த்து நின்ற முஸ்லிம்களுடன் ஹிந்துக்களும் கலந்துகொண்டு தங்கள் சகோதர உணர்ச்சியைக் காட்டினர்.

இந்த இரு பிரச்னைகளை யொட்டியும், ரௌலட் சட்டத்தைக் கண்டித்துமே இந்தியாவில் 1919 ஏப்ரல் 6-ஆம் தேதியிலிருந்து 13-ஆம் தேதிவரையில் கண்டனக் கூட்டங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடந்தன. அப்போதுதான் அமிருதசரஸில் உள்ள ஜாலியன்வாலா பாக் என்ற இடத்தில் அமைதியாகக் கூடிய இந்தியர்களை எச்சரிக்கை செய்யாமல் இரக்கமின்றி ஜெனரல் டயர் சுட்டுப் படுகொலை செய்தான். அதன் விளைவாக நாடெங்கும் ஜனங்களிடையே மனக்கொதிப்பு ஏற்பட்டது. அதன் காரணமாகவே காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்தார். ஏப்ரல் 6-லிருந்து 13-ஆம் தேதி வரையில் பிரார்த்தனை, உண்ணாவிரதம், பொதுக்கூட்டங்கள் முதலியன நடத்தி அதைத் தேசிய வாரமாகக் கருத வேண்டுமென்றும் கட்டளையிட்டார். அதிலிருந்து ஒவ்வொரு வருஷமும் ஏப்ரல் மாதம் இரண்டாவது வாரம் தேசிய வாரமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

நடைபெறவில்லை. மகத்தான முன்னேற்பாடுகளும் செய்யப்படவில்லை. அப்படியிருந்தும், இந்தியா முழுவதும், சின்னஞ்சிறிய கிராமங்களிலும்கூட மக்கள் அதற்கு ஆச்சரியமாகச் செவி சாய்த்தனர். அந்த இயக்கம், உள்ளத்தில் உருவான உடனேயே சிறிதும் தாமதமின்றி மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. ஏப்ரல் 6-ஆம் தேதி ஜனங்கள் பலாத்காரத்தில் இறங்கவில்லை ; குறிப்பிடத் தகுந்த அளவு போலீசாருடனும் மோதிக் கொள்ளவுமில்லை. மக்கள் யாதொரு தூண்டுதலுமின்றித் தாங்களாக வலுவில் முன் வந்து ஹர்த்தாலில் கலந்து கொண்டனர். ஹர்த்தால் சம்பந்தமான யோசனையை அறிவித்து நான் எழுதிய கடிதத்தை* இத்துடன் இணைத்துள்ளேன்.

---

* காந்திஜி குறிப்பிடும் கடிதமாவது :

"சத்தியாக்கிரகத்தைப்பற்றி விளக்கிக் கூற நான் பல கூட்டங்களிலும் முயற்சித்துள்ளேன். அது, முக்கிய அம்சங்களில் மத சம்பந்தமான ஓர் இயக்கமேயாகும். அது உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக்கொள்ளும் ஒரு தவ முறையே. அது, தன்னைத் தானே துன்பத்திற்கு உள்ளாக்கிக் கொள்ளுவதன் மூலம் சீர்திருத்தங்களைக் கொண்டு வரவோ அல்லது குறைகளை நிவர்த்தித்துக்கொள்ளவோ முயற்சிக்கிறது. எனவே, 1919 ரௌலட் மசோதாவுக்கு வைஸ்ராயின் அங்கீகாரம் பிரசுரமானதிலிருந்து, இரண்டாவது ஞாயிற்றுக்கிழமையை அவமான தினமாகவும் பிரார்த்தனை தினமாகவும் அனுஷ்டிக்க வேண்டுமென்று நான் யோசனை கூறத் துணிகிறேன். அதன் தரத்திற்குத் தகுந்தவாறு, பொதுமக்களின் ஆர்ப்பாட்டங்களும் சக்தி வாய்ந்தவையாக இருக்க வேண்டும் என்பதற்காக நான் கீழ்க்கண்ட யோசனைகளைக் கூறுகிறேன்:

" 1. மத சம்பந்தமான அல்லது ஆரோக்கிய சம்பந்தமான காரணம் தடையாக இருந்தாலொழிய, வயது வந்த யாவரும் 24 மணி நேரம் உண்ணாவிரதம் அனுஷ்டிக்க வேண்டும். அதாவது, முதல் நாள் இரவு கடைசியாக உணவு அருந்திய நேரத்திலிருந்து 24 மணி நேரம் உபவாசம் இருக்க வேண்டும். இதை எவ்விதத்திலும் பட்டினி பயமுறுத்தலாகவோ, அல்லது சர்க்காரை நிர்ப்பந்தப்படுத்தும் நோக்கத்துடன் கூடிய ஒரு நடவடிக்கையாகவோ கருதக்கூடாது. சத்தியாக்கிரகிகள் யாவரும், தாங்கள் எடுத்துக்கொண்டுள்ள பிரதிக்ஞையில் உத்தேசித்துள்ளபடி, சட்ட மறுப்புக்குத் தங்களைத் தகுதியாக்கிக் கொள்ளுவதற்கு அதை ஓர் அவசியமான ஒழுங்கு நடவடிக்கையாகவே கருத வேண்டும். மற்றவர்களோவெனில் அதை, புண்பட்டுள்ள தங்கள் உணர்ச்சிப் பெருக்கின் அற்ப சின்னமாகக் கருத வேண்டும்.

" 2. பொது மக்களின் நலனுக்கு அத்தியாவசியமான நடவடிக்கைகளைத் தவிர, மற்ற அலுவல்கள் யாவும் அன்று நிறுத்தப்பட வேண்டும். மார்க்கெட்டுகளும், மற்ற வியாபார ஸ்தலங்களும் அன்று மூடப்பட வேண்டும். ஞாயிற்றுக்கிழமைகளில் கூட வேலை செய்ய வேண்டியிருக்கும் சிப்பந்திகளும் தொழிலாளர்களும், தங்கள் முதலாளிகளிடம் முன்னதாகவே ரஜா எடுத்துக்கொண்டு மாத்திரமே வேலை நிறுத்தம் செய்ய வேண்டும்.

"இந்த இரண்டு யோசனைகளையும் சர்க்கார் ஊழியர்களும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சிபார்சு செய்ய நான் தயங்கவில்லை. ராஜீய விவாதங்களிலும் கூட்டங்களிலும் அவர்கள் பங்கெடுத்துக்கொள்ளாமல் இருப்பதுதான் முற்றிலும் நியாயமாகும். இருந்தாலும், மூலாதாரமான விஷயங்களையொட்டி, இங்கே குறிப்பிட்டுள்ள குறுகிய

## என்னைக் கைது செய்தனர் :

ஏப்ரல் 6-ஆம் தேதி* ஹர்த்தால் நடந்த பின், அதைத் தொடர்ந்து சட்ட மறுப்பு செய்ய வேண்டுமென ஏற்பாடாகியிருந்தது. அதற்காக சத்தியாக்கிரக சபைக் கமிட்டி, எல்லோரும் மீறுவதற்காகச் சில ராஜீயச் சட்டங்களையும் தேர்ந்தெடுத்திருந்தது. அரசாங்கத்தால் தடை செய்யப்பட்ட, ஆனால் முற்றிலும் நியாயமான பிரசுரங்களை நாங்கள் விநியோகிக்கத் தொடங்கினோம். 'ஹோம் ரூல்'† பற்றி நான் எழுதியிருந்த ஒரு துண்டுப் பிரசுரம், 'கடையனுக்கும் கதி மோட்சம்'‡ என்ற தலைப்பில் ரஸ்கின் எழுதிய நூலின் மொழி பெயர்ப்பு, 'சோக்ரதரின் எதிர் வழக்கும், மரணமும்' இவை போன்ற பிரசுரங்களை விநியோகிக்க ஆரம்பித்தோம்.

அதற்கு முன் எக்காலத்திலும் இராதவாறு, ஏப்ரல் 6-ஆம் தேதி இந்தியா முழுவதும் உற்சாகமும் உத்வேகமும் ஏற்பட்டன என்பதில் ஐயமில்லை. அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்த மக்கள் அதிகாரிகளைக் கண்டு அஞ்சுவது அடியோடு மறைந்தது. அதற்கு முன் பாமர மக்கள் சொரணையற்று இருந்து வந்தனர். தலைவர்கள் செயலில் எதுவும் காட்டவில்லை. அவர்களிடையே கட்டுக்கோப்பும் ஒழுங்கும் இல்லை. அவர்கள் ஒரு புதிய சக்தியைக் கண்டு கொண்டார்கள். ஆனால், அது என்ன, அதை எப்படி உபயோகிப்பது என்பதை அவர்கள் அறியவில்லை.

---

எல்லைக்கு உட்பட்டுத் தங்கள் உணர்ச்சிகளைத் தெரிவிக்க அவர்களுக்கும் உரிமை உண்டு என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

"3. கிராமங்கள் உள்பட இந்தியாவில் உள்ள எல்லாப் பாகங்களிலும் அன்று பொதுக்கூட்டங்கள் நடைபெற வேண்டும். ரௌலட் மசோதாக்களை வாபஸ் பெறும்படி அரசாங்கத்தை வேண்டிக்கொண்டு அக்கூட்டங்களில் தீர்மானங்கள் நிறைவேற வேண்டும்.

"என்னுடைய ஆலோசனை ஒப்புக்கொள்ளத்தக்கதென்று தோன்றினால், பல்வேறு சத்தியாக்கிரகச் சங்கங்களும் அதைச் செயலில் கொண்டு வருவதற்கு அவசியமான அலுவல்களைக் கைக்கொள்ளும் முதல் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும். இந்தச் சத்தியாக்கிரகம் பூரண வெற்றி பெறுமாறு செய்ய மற்ற எல்லாச் சங்கங்களும் துணை புரியுமென நம்புகிறேன்."

* ஹர்த்தால் அனுஷ்டிக்கும் தினம் மார்ச்சு 30-ம் தேதி என்று முதலில் நிர்ணயித்திருந்தார்கள். ஆனால், பிறகு அதை ஏப்ரல் 6-ஆம் தேதிக்கு மாற்றிவிட்டனர்.

† 'ஹோம் ரூல்' பற்றி காந்திஜி எழுதிய துண்டுப் பிரசுரத்தின் விவரங்களை இத் தொகுப்பின் பின்சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

‡ 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற தலைப்பில் ரஸ்கின் எழுதிய நூலின் மொழி பெயர்ப்பு, 'மகாத்மா காந்தி நூல்கள்' - 6-வது தொகுப்பின் பின் சேர்க்கைப் பகுதி 684 - 722 - ஆம் பக்கங்களில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அதற்கு முன் எவ்வித நடவடிக்கையிலும் ஈடுபடாமல் இருந்த இடத்திலேயே இருந்து வந்த ஏராளமான மக்களின் எழுச்சியை, எப்படிக் கட்டுப்படுத்துவது என்பது டில்லியில் உள்ள தலைவர்களுக்குக் கஷ்டமாகியது. நான் அமிருதசரஸிற்குச் சென்று, சத்தியாக்கிரகத்தின் அமைதியான தன்மையை மக்களுக்குக் காட்ட வேண்டுமென டாக்டர் சத்தியபால் ஆர்வத்துடன் இருந்தார். டில்லியிலிருந்து சுவாமி சிரத்தானந்தஜியும், அமிருதசரஸிலிருந்து டாக்டர் சத்தியபாலும், நான் அந்நகரங்களுக்குச் சென்று மக்களைச் சமாதானப்படுத்தவேண்டுமென்றும், சத்தியாக்கிரகத்தின் தன்மையை அவர்களுக்கு விளக்கிக் கூற வேண்டுமென்றும் எனக்கு எழுதினர்கள். பாஞ்சாலத்திற்கோ, அமிருதசரஸிற்கோ நான் அதற்கு முன் ஒருபோதும் சென்றதில்லை. அந்த இரண்டு கடிதங்களையும் அதிகாரிகள் பார்த்தனர். அந்த இரு இடங்களுக்கும் சமாதான நடவடிக்கைகளுக்காக நான் அழைக்கப்பட்டுள்ளேன் என்பதை அவர்கள் அறிவர்.

டில்லிக்கும் பாஞ்சாலத்திற்கும் செல்லுவதற்காக, ஏப்ரல் 8-ஆம் தேதி நான் பம்பாயிலிருந்து புறப்பட்டேன். டில்லியில் என்னைச் சந்திக்கும்படி டாக்டர் சத்தியபாலுக்கும் தந்தி கொடுத்திருந்தேன். அவரை அதற்கு முன் நான் சந்தித்ததே இல்லை. ஆனல், நான் முத்ராவைக் கடந்ததும் டில்லி மாகாணத்தில் நான் பிரவேசிக்கக்கூடாதென்று தடுத்து அதிகாரிகள் எனக்கு ஓர் உத்தரவு பிறப்பித்தனர். அந்த உத்தரவுக்கு இணங்க மறுப்பது எனது கடமை என்று எனக்குத் தோன்றியது. எனவே எனது பிரயாணத்தைத் தொடர்ந்தேன். நான் பம்பாய் மாகாண எல்லைக்கு உள்ளேயே இருக்க வேண்டும் என்றும், பாஞ்சாலத்திற்குள் பிரவேசிக்கக் கூடாதென்றும் பால்வாலில் அதிகாரிகள் எனக்கு ஓர் உத்தரவு பிறப்பித்தனர்.

அந்த ஸ்டேஷனில் போலீசார் என்னைக் கைது செய்தனர். என்னைக் கைது செய்த போலீஸ் சூப்பரிண்டெண்ட் என்னிடம் மிகவும் மரியாதையாக நடந்துகொண்டார். அங்கிருந்து முதலில் புறப்படும் ரெயில் வண்டியில் என்னை முத்ரா ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று, விடியற்காலம் குட்ஸ் வண்டியில் சிவாய் மதுபூருக்குக் கொண்டு சென்றார்கள். அங்கே பிஷாவரிலிருந்து வரும் பம்பாய் மெயிலில் ஏறிக்கொண்டேன். அங்கே சூப்பரிண்டெண்ட் பௌரிங்கிடம் என்னை ஒப்புவித்தார்கள். பிறகு என்னை பம்பாயில் ஏப்ரல் 10-ஆம் தேதி விடுதலை செய்தார்கள்.

ஆனல், குஜராத்திலும், அகமதாபாத், விராம்காம் முதலிய விடங்களிலும், நான் கைது செய்யப்பட்ட செய்தியை மக்கள் கேள்விப்பட்டு மிகவும் ஆத்திரமடைந்தனர். அதன் விளைவாகக் கடைகள் மூடப்பட்டன. கூட்டம் கூட்டமாக மக்கள் கூடினர். கொலை, தீவைத்தல், கொள்ளை, தந்திக் கம்பிகளை அறுத்தல், ரெயில் வண்டிகளைக் கவிழ்க்க முயற்சித்தல் முதலியவை நிகழ்ந்தன.

## அத்துமீறிய செயல்களுக்குக் காரணங்கள்:

அதற்கு முன் தான் கெய்ரா குடியானவர்களிடையே நான் வேலை செய்தேன்; ஆயிரக்கணக்கான ஆடவர்களுடனும் பெண்களுடனும் கலந்து பழகினேன். ஸ்ரீமதி அனுசூயா சாராபாயுடன் அகமதாபாத் மில்தொழிலாளர்களிடையேயும் வேலை செய்திருந்தேன். மில் தொழிலாளர்கள் ஸ்ரீமதி அனுசூயா சாராபாயின் தரும கைங்கர்யத்தைப் பாராட்டி, அவரைப் போற்றி வணங்கினர். அப் பெண்மணி கைது செய்யப்பட்டார் என்று யாரோ பொய் வதந்தியைக் கிளப்பிவிட்டனர். அச்செய்தியைக் கேட்ட தொழிலாளர்களின் ஆத்திரம் எல்லை கடந்துவிட்டது. விராம்கம் தொழிலாளர்கள் கஷ்டத்திற்கு உள்ளான போது, அதில் நானும் ஸ்ரீமதி அனுசூயா சாராபாயும் தலையிட்டு, தொழிலாளர் சார்பில் பேசினோம். எனவே, நான் கைது செய்யப்பட்ட செய்தியும், ஸ்ரீமதி அனுசூயா சாராபாய் கைது செய்யப்பட்டார் என்ற பொய் வதந்தியும்தான், ஆத்திரம் கொண்ட தொழிலாளர்களின் அத்து மீறிய நடவடிக்கைகளுக்குக் காரணம் என்பது எனது நிச்சயமான நம்பிக்கை.

நான், அநேகமாக இந்தியா முழுவதிலும் உள்ள பாமர மக்களுடன் கலந்து பழகியிருக்கிறேன்; அவர்களுடன் மனம் விட்டுப் பேசியுமிருக்கிறேன். மக்களின் மிதமிஞ்சிய நடவடிக்கைகளுக்கு ரகசியமான புரட்சி இயக்கம் எதுவும் காரணம் என்று நான் நம்பவில்லை. அவற்றிற்கு, 'புரட்சிக் கலகம்' என்ற கௌரவப் பெயரும் கொடுப்பதற்கில்லை.

## அடக்கு முறைகள்:

குற்றம் செய்தவர்கள் மீது, அரசாங்கத்தை எதிர்த்து யுத்தம் புரிந்ததாக அரசாங்கம் வழக்குத் தொடர்ந்தது தவறு என்பது என் அபிப்பிராயம். அதன் காரணமாகக் குற்றவாளிகள், நியாயமற்ற, குற்றங்களுக்குப் பொருத்தமில்லாத அதிகக் கஷ்ட நஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தது. ஏழைகளான அகமதாபாத் தொழிலாளர்களுக்கு விதிக்கப்பட்ட அபராதம் மிகவும் அதிகமாகும். அந்த அபராதத் தொகையை வசூலிக்க முற்பட்ட முறை கொடுமையாகவும் ஆத்திரமூட்டத்தக்க விதத்திலும் இருந்தது. அந்தத் தொழிலாளர்களுக்கு ரூ. 1,76,000 அபராதம் விதித்தது நீதியல்ல. பரேஜ்தி குடியானவர்களிடமிருந்தும், நாடியாட் பட்டிதார்களிடமிருந்தும் அதிகாரிகள் வாங்கிய செலவுத் தொகை முற்றிலும் அக்கிரமமானது என்பதுடன், வஞ்சம் தீர்த்துக் கொள்ளுவதாகவும் இருந்தது. அகமதாபாத்தில் ராணுவச் சட்டம் விதித்ததற்கும் சிறிதும் நியாயமில்லை. ராணுவச் சட்டத்தை முன்பின் யோசனையின்றி அமல் நடத்தியதால், நிரபராதிகளான பலர் பலியாக நேர்ந்தது.

அதே சமயம், நான் குறிப்பிட்ட சில விலக்குகளைத் தவிர, பம்பாய் மாகாண அதிகாரிகள் மிகவும் அடக்கத்துடனேயே நடந்துகொண்டனர். எங்கும் பரஸ்பரம் சந்தேகம் தாண்டவ மாடியபோதும், அமைதியை நிலைநிறுத்துவதற்காகத் துருப்புகள் வந்துகொண்டிருந்த ரெயில் வண்டியைத் தகர்க்க முற்பட்டதால் அதிகாரிகள் ஆத்திரமடைந்த போதும்கூட, அவர்கள் அத்து மீறிப் போகாமல் பொறுமையுடன் இருந்தனர்.

# 7

# சத்தியாக்கிரகம் ஆபத்தானதா?

*[1920 ஜனவரி 9-ஆம் தேதி அகமதாபாத்தில் ஹண்டர் கமிட்டி விசாரணை ஆரம்பமாயிற்று. அப்போது லார்டு ஹண்டர் சத்தியாக்கிரக இயக்கத்தைப் பற்றிக் காந்திஜியைக் கேள்விகள் கேட்கத் தொடங்கினர் :]*

**லார்டு ஹண்டர் :** நீங்கள்தான் சத்தியாக்கிரக இயக்கத்தின் கர்த்தா என நான் நினைக்கிறேன்.

**காந்திஜி :** ஆமாம், ஐயா.

**கேள்வி :** அந்த இயக்கத்தின் தன்மையைச் சுருக்கமாக விளக்கிக் கூறுவீர்களா ?

**பதில் :** பலாத்கார முறைகளுக்குப் பிரதியாகவே சத்தியாக்கிரக இயக்கம் உருவாக்கப்பட்டிருக்கிறது. அது முற்றிலும் சத்தியத்தையே அடிப்படையாகக்கொண்டது. என் மனத்தில் உருவாகியுள்ளபடி அது, குடும்ப விதியை ராஜீயத்துறையிலும் விஸ்தரிப்பதாகும்.

**கே :** ரௌலட் சட்டத்தை எதிர்க்கும் விஷயமாக அது உங்களால் கைக்கொள்ளப்பட்டது. அதன் சம்பந்தமாக நீங்கள் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திடும்படி மக்களைக் கேட்டுக்கொண்டீர்கள் அல்லவா ?

**ப :** ஆமாம், ஐயா.

**கே :** அந்த இயக்கத்திற்கு எத்தனை ஆடவர்களைச் சேர்க்க முடியுமோ அத்தனை பேரைச் சேர்க்க வேண்டும் என்று நீங்கள் உத்தேசித்தீர்கள் அல்லவா ?

ப: ஆம். சத்தியத்திற்கும் சாத்விகத்திற்கும் முரணின்றி எத்தனை பேரைச் சேர்த்துக்கொள்ளுவது சாத்தியமோ அத்தனை பேரைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பது என் உத்தேசம். அக்கொள்கைகளுக்கிணங்க பத்து லட்சம் ஆடவர்கள் தயாராக இருந்தாலும், நான் அவர்கள் யாவரையும் சேர்த்துக்கொள்ளத் தயங்கமாட்டேன்.

கே: முக்கியமாக அது அரசாங்கத்துக்கு விரோதமான ஓர் இயக்கம் அல்லவா? அரசாங்கத்தின் விருப்பத்திற்குப் பதிலாக அந்த ஸ்தானத்தில், நீங்கள் சத்தியாக்கிரகக் கமிட்டியின் தீர்மானத்தை ஸ்தாபிக்க முற்படுகிறீர்கள் அல்லவா?

ப: இயக்கத்தை ஜனங்கள் அந்த முறையில் அறிந்துகொள்ளவில்லை.

கே: அரசாங்கத்தின் கோணத்திலிருந்து அவ்விஷயத்தைப் பார்க்கும்படி நான் உங்களைக் கேட்கிறேன். நீங்கள் ஒரு கவர்னராக இருந்தால், உங்கள் சத்தியாக்கிரகக் கமிட்டி தீர்மானித்துள்ளபடி அரசாங்கச் சட்டங்களை மீறும் நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டுள்ள ஓர் இயக்கத்தைப் பற்றி நீங்கள் என்ன சொல்லுவீர்கள்?

ப: அவ்விதம் கூறுவது, சத்தியாக்கிரகக் கொள்கையின் தன்மையைப் பூரணமாகக் குறிப்பிடுவதாகாது. 'அரசாங்க நிர்வாகம் எனது மேற்பார்வையில் இருந்து, பலாத்காரத்தில் ஈடுபடாமல் அநீதியான சட்டங்களுக்குப் பரிகாரம் தேட உறுதிகொண்டு முற்றிலும் சத்தியத்தையே நாடும் ஒரு ஸ்தாபனத்தையே நான் சமாளிக்க வேண்டியிருந்தால், நான் அத்தகைய ஸ்தாபனத்தை வரவேற்பேன். அதைச் சேர்ந்தவர்களையே சட்ட வரம்புக்கு உட்பட்ட சிறந்த அரசியல்வாதிகளாக நான் கருதுவேன். கவர்னர் என்ற ஹோதாவில், அவர்களை நான், ஒழுங்கான பாதையிலிருந்து நான் தவறிவிடாமல் பார்த்துக்கொள்ளும் ஆலோசகர்களாக எடுத்துக்கொள்ளுவேன்.

கே: குறிப்பிட்ட சட்டங்கள் நீதியானவையா அல்லது அநீதியானவையா என்பது பற்றி ஜனங்களுக்குள் அபிப்பிராய பேதம் உண்டு அல்லவா?

ப: பலாத்காரம் தவிர்க்கப்பட்டிருப்பதற்கு அதுதான் முக்கிய காரணம். ஒரு சத்தியாக்கிரகி தன்னைப் போல் எதிரிக்கும் சுதந்திர உரிமையும் விடுதலை உணர்ச்சியும் உண்டு என்று எண்ணுகிறார். சத்தியாக்கிரகி எதிரியை எதிர்த்துப்

போராடும் போது, எதிரிக்குத் துன்பம் விளைவிப்ப தில்லை; தனக்குத் தானே துன்பத்தை அனுபவித்துக் கொள்ளுகிறார்.

**கே:** அரசாங்கம் தொடர்ந்து நடைபெற வேண்டும் அல்லவா? அந்தக் கருத்தை மனத்திற்கொண்டு இவ்விஷயத்தைக் கவனிக்க வேண்டும். அரசாங்கத்திற்கு விரோதமாக நீங்கள் ஒரு குழுவை ஏற்படுத்தி, அக்குழுவினர் அரசாங்கத் தின் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளாமல் சுயேச்சை யான ஒரு கமிட்டியின் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளு வார்களாயின், அரசாங்கம் தொடர்ந்து நடைபெறுவது சாத் தியமாகுமா?

**ப:** தென்னாப்பிரிக்காவில் அரசாங்கத்தை எதிர்த்து எட்டு வருடங்கள் வரையில் தொடர்ந்து போர் நடந்தது. அப் போது நான் பெற்ற அனுபவத்திலிருந்து, அது சாத்தியம் என்பதை அறிந்துகொண்டுள்ளேன். அந்த இயக்கம் முழு வதையும், ஆரம்பத்திலிருந்து இறுதி வரையில் ஜெனரல் ஸ்மட்ஸ் கவனித்து வந்தார். சத்தியாக்கிரகிகளைப் போல் எல்லோரும் நடந்துகொண்டால், அரசாங்கம் பீதி அடைவதற்கே இடமில்லையென்று அவர் கடைசியில் கூறினார்.

**கே:** ஆனால், இங்கே விதிக்கப்பட்டிருப்பது போல், தென்னாப் பிரிக்காவில் பிரதிக்ஞை எதுவும் எடுத்துக்கொள்ளப்பட வில்லை அல்லவா?

**ப:** நிச்சயமாகப் பிரதிக்ஞை இருந்தது. கிரிமினல் சட்டங் களைத் தவிர, சத்தியாக்கிரகிகள் அநீதியானவை என்று கருதும் எல்லாச் சட்டங்களையும் ஒவ்வொரு சத்தியாக்கிரகி யும் எதிர்த்துத் தீர வேண்டியது கடமையாக இருந்தது. ஜனங்களின் விருப்பத்திற்கு அரசாங்கம் வணங்கும்படி செய் வதே, சத்தியாக்கிரகியின் நோக்கமாக இருந்தது.

**கே:** சத்தியாக்கிரகக் கமிட்டி தீர்மானிக்கும் சட்டங்களை மீறுவதென்பதே உங்கள் பிரதிக்ஞையின் நோக்கமென அறிகிறேன்.

**ப:** ஆம். தனி நபரின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதே பிரதிக்ஞையில் உள்ள அந்த அம்சத்தின் நோக்கம் என் பதை, உங்கள் கமிட்டிக்கு நான் தெளிவாகக் கூற விரும்புகி றேன். அதை நான் ஒரு மக்கள் இயக்கமாகச் செய்ய உத் தேசித்ததால், அத்தகைய ஒரு கமிட்டியை அமைப்பது அவ சியமென நான் எண்ணினேன். ஏனெனில், ஒவ்வொருவரும் தங்களுக்குத் தோன்றியதே சட்டமென நினைத்துக்கொண்டு விடக்கூடாது அல்லவா? எனவே, எந்தச் சட்டங்

களை மீற வேண்டும் என்பதைக் கமிட்டி நிர்ணயிக்கும் ஆற்றல் பெற்றிருக்குமென்றே, நாங்கள் அத்திட்டத்தை வகுத்தோம்.

**கே :** டாக்டர்களுக்குள் அபிப்பிராய ஒற்றுமை இருப்பதில்லை யென்று நாம் கேள்விப்படுகிறோம். அது போல், சத்தியாக் கிரகிகளுக்குள்கூட அபிப்பிராய ஒற்றுமை இல்லாமலிருக்க லாம் அல்லவா ?

**ப :** ஆம். என்னுடைய துக்ககரமான அனுபவமும் அது தான்.

**கே :** ஒரு குறிப்பிட்ட சட்டம் நியாயமானது என்று ஒரு சத்தி யாக்கிரகி நினைப்பதாக வைத்துக்கொள்ளுவோம். ஆனால், கமிட்டி அந்தச் சட்டத்தை அங்கீகரிக்கவில்லை. அந்நிலைமையில் ஒரு சத்தியாக்கிரகி என்ன செய்ய வேண்டும் ?

**ப :** அவர், அச்சட்டத்தை மீற வேண்டுமென்ற அவசியமில்லை. எங்களிடையே அத்தகைய சத்தியாக்கிரகிகள் ஏராளமான வர் இருக்கின்றனர்.

**கே :** அது ஓர் ஆபத்தான இயக்கம் அல்லவா ?

**ப :** தேசத்திலிருந்து பலாத்காரத்தை ஒழிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் உருவாக்கப்பட்ட இயக்கம் என்று அதை நீங்கள் கருதுவீர்களாயின், அவ்விஷயமாக எனக்குள்ள அக்கறையில் நீங்களும் பங்கு எடுத்துக்கொள்ளுவீர்கள். என்ன நேர்ந்தாலும், இத்தன்மை பொருந்திய ஓர் இயக்கம் களங்கமின்றிப் பரிசுத்தமாக்கப்பட்ட நிலையில் தேசத் தில் நிரந்தரமாக இருக்க வேண்டியது அத்தியாவசிய மாகும்.

**கே :** உங்களுடைய பிரதிக்ஞையால், நீங்கள் மனிதனின் மனச் சாட்சியைக் கட்டுப்படுத்தவில்லையா ?

**ப:** அவ்விஷயமாக நான் கூறும் விளக்கத்தின்படி, கட்டுப்படுத்த வில்லை என்பதே. பிரதிக்ஞை பற்றிய எனது வியாக்கி யானம் சரியல்ல என்று நான் கண்டால், மறுபடியும் நான் இயக்கத்தை ஆரம்பிப்பேனாயின் எனது தவறைத் திருத் திக்கொள்ளுவேன்.

இச்சந்தர்ப்பத்தில் லார்டு ஹண்டர் இடைமறித்துக் கூறியதாவது : இல்லை, இல்லை. நான் உங்களுக்குப் புத்தி மதி கூறத் துணியவில்லை.

**காந்திஜி :** சத்தியாக்கிரகம் ஓர் ஆபத்தான கொள்கை என்ற கமிட்டியின் தப்பெண்ணத்தை அகற்ற வேண்டும் என்பதே என் விருப்பம். பலாத்காரக் கொள்கையை நாட்டிலிருந்து அகற்ற வேண்டுமென்ற ஒரே நோக்கத்துட்னேயே அது உரு வாக்கப்பட்டது.

இச்சந்தர்ப்பத்தில் லார்டு ஹண்டர், ரௌலட் சட்டம் நிறைவேறுவதற்கு முன் நிகழ்ந்த சம்பவங்களையும், அச்சட் டத்தைப் பொதுவாக இந்தியர் யாவரும் எதிர்த்ததையும் விவரித்துக் கூறியபின், ரௌலட் சட்டத்துக்கு விரோத மாகக் காந்திஜிக்கு உள்ள ஆட்சேபணையின் சாரம் என்ன என்பதைக் குறிப்பிடும்படி அவரைக் கேட்டார்.

**காந்திஜியின் பதில் :** ரௌலட் கமிட்டியின் அறிக்கையையும், வரப் போகும் சட்டத்தைப் பற்றி அதில் குறிப்பிடப்பட்டி ருந்ததையும் கடைசி வரையில் நான் வாசித்தேன். கமிட்டி யின் அறிக்கையில் உள்ள உண்மை விவரங்களைப் பார்த்த போது, சட்டம் கொண்டு வர வேண்டிய முகாந்திரமே இல்லை என்ற முடிவிற்கு வந்தேன். அச்சட்டம் மனித சுதந் திரத்தை மிகவும் கட்டுப்படுத்துவதாக இருக்கிறதென்றும், தன்மானமுள்ள நபரோ அல்லது தேசமோ அத்தகைய சட் டத்தை அனுமதிக்க முடியாதென்றும் எண்ணினேன். அதன் சம்பந்தமாகச் சட்டசபையில் நிகழ்ந்த விவாதங்களை நான் பார்த்தபோது, சட்டத்திற்கு எங்கே பார்த்தாலும் எதிர்ப்பு இருப்பது தெரிந்தது. அதற்கு விரோதமாக உள்ள கிளர்ச் சியை நான் கண்டபோது, தன்மானமுள்ள ஒரு நபர், பரந்த சாம்ராஜ்யத்தின் ஓர் உறுப்பினர் என்ற முறையில், சக்திக்கு இயன்ற வரையில் அந்தச் சட்டத்தை எதிர்ப்ப தைத் தவிர, எனக்கு வேறு எந்த வழியும் இருப்பதாகத் தோன்றவில்லை.

**கே :** அந்தச் சட்டத்தின் நோக்கங்கள் சம்பந்தப்பட்ட வரை யில், புரட்சிகரமான, அராஜகமான குற்றங்களை அடக்கு வதே அந்த நோக்கங்களாகும் என்பதில் உங்களுக்கு ஏதா வது சந்தேகம் இருந்தது உண்டா?

**ப :** அவை போற்றத்தக்க நோக்கங்களேயாகும்.

**கே :** அப்படியாயின், உங்களுடைய புகார், அரசாங்கம் கைக் கொண்ட முறைகளைப் பற்றியதாகவே இருக்க வேண்டும்.

**ப :** முற்றிலும் அப்படித்தான்.

**கே :** அந்த முறை என்னவெனில், அதற்கு முன் இருந்ததைக் காட்டிலும் அதிகாரிகளுக்கு மிகவும் அதிகமான அதிகாரம் கொடுக்கப்பட்டது என்பதே.

ப: அதுதான்.

கே: ஆனால், இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் கீழ் அதிகாரிகளுக்கு என்ன அதிகாரங்கள் இருந்தனவோ, அதே அதிகாரங்கள்தானே ரௌலட் சட்டத்தின்படி அவர்களுக்கு அளிக்கப்பட்டன ?

ப: அது உண்மைதான். ஆனால், இந்தியத் தற்காப்புச் சட்டம் ஓர் அவசரக் காலச் சட்டமாகும். யுத்தத்தை வெற்றிகரமாக நடத்த எல்லோருடைய ஒத்துழைப்பையும் பெறுவதற்காகவும், அதற்கு விரோதமாக எந்தப் பிரிவினராவது பலாத்காரத்தில் இறங்கினால் அதை அடக்குவதற்காகவுமே தற்காப்புச் சட்டம் ஏற்பட்டது. மக்கள் மிகுந்த அதிருப்தியுடன்தான் அச்சட்டத்திற்கு இணங்கினார்கள். ஆனால், ரௌலட் சட்டமோ, முற்றிலும் வேறுவிதமானதாகும். முந்திய சட்டம் அமல் நடத்தப்பட்டதன் சம்பந்தமான அனுபவமானது, ரௌலட் சட்ட சம்பந்தமான எனது ஆட்சேபணைகளைப் பலப்படுத்தியிருக்கிறது.

கே: அராஜகம் நிலவுவதாக ஸ்தல அரசாங்கம் நிச்சயமாகக் கருதினால் மாத்திரமே ரௌலட் சட்டம் அமலுக்கு வரும்.

ப: சில சமயங்களில் இந்தியாவிலே நிர்வாக அதிகாரிகள் வெறி பிடித்தவர்களாகிவிடுவதை நான் அறிந்திருக்கிறேன். எனவே, நான் சட்டசபை உறுப்பினராக இருந்தால், அரசாங்க நிர்வாக அதிகாரியின் கையில் அத்தகைய அதிகாரத்தை விட்டுவைக்கமாட்டேன்.

கே: அப்படியாயின், உண்மையில் உங்கள் ஆட்சேபணை இதுதான்: அதாவது இந்திய அரசாங்கம் போற்றத்தக்க ஒரு நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகத் தவறான முறையைக் கைக்கொண்டது என்பதே. அப்படியாயின், அது அனுசிதமான ஒரு சட்டம் என்று அரசாங்கத்திற்குத் திருப்தி ஏற்படும்படி செய்து, சட்ட வரம்பிற்கு உட்பட்ட முறையில் அதற்குப் பரிகாரம் ஏற்பட முயற்சிப்பது ஒழுங்கான முறையாகாதா ?

ப: நான் வைஸ்ராய் லார்டுசெம்ஸ்போர்டை மண்டியிட்டுக்கேட்டுக் கொண்டேன். அவரிடமும், நான் சந்திப்பதற்கு வாய்ப்புக் கிடைத்த மற்ற ஒவ்வோர் ஆங்கில அதிகாரியிடமும் வேண்டிக்கொண்டு, அவர்களின் முன்னிலையில் எனது அபிப்பிராயங்களை எடுத்துக் கூறினேன். ஆனால், அவ்விஷயமாகத் தாங்கள் எதுவும் செய்வதற்கில்லையென்றும், ரௌலட் கமிட்டியின் சிபாரிசுகளை அமலுக்குக்கொண்டு வந்து தீர வேண்டு

மென்றும் அவர்கள் கூறிவிட்டனர். நாங்கள் மற்றெல்லா முறைகளையும் கைக்கொண்டு பார்த்த பின்தான், சத்தியாக் கிரகத்தைத் தொடங்கினோம்.

**கே:** ஓர் எதிரி உங்கள் கருத்துக்கு இசையாவிடில், அவரை நீங்கள் உடனடியாகத் திருப்தி செய்வது முடியாத காரியம். நீங்கள் சிறிது சிறிதாகத்தான் அவரைத் திருப்தி செய்ய வேண்டும். சட்டத்திற்குக் கீழ்ப்படிய மறுத்து, அவரைத் திருப்தி செய்ய முயற்சிப்பது கடுமையான ஒரு முறை அல்லவா?

**ப:** தங்களுடைய இந்த அபிப்பிராயத்தை நான் ஒப்புக்கொள்ளு வதற்கில்லை என்பதை மரியாதையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். என் மனச்சாட்சி வெறுக்கும் ஒரு சட் டத்தை, எனது தந்தை என் மீது சுமத்தினல்கூட, நான் அதற்குக் கீழ்ப்படிய முடியாது என்று மரியாதையாக அவரி டம் கூறுவதைத் தவிர குறைந்த அளவு கடுமையான முறை வேறு என்ன இருக்க முடியும்? அத்தகைய முறையினல் நான் என் தந்தைக்கு நீதியே செய்தவனுவேன். எந்தவித மரியாதைக் குறைவுமின்றி நான் கமிட்டியிடம் கூறுவதாயின், நானும் அதே முறையையே பின்பற்றி வந்திருக்கிறேன். அதனல் நான் மிகுந்த பலனை அடைந்திருப்பதுடன், வெகு காலமாக அந்த முறையையே உபதேசித்தும் வந்திருக்கி றேன். என் தந்தையிடம் அவ்விதம் கூறுவது அவமரியாதை அல்லவெனில், ஒரு நண்பரிடமோ, அரசாங்கத்தினிடமோ அவ்வாறு கூறுவதும் அவமரியாதையாகாது.

**கே:** ரௌலட் சட்டத்தை எதிர்த்து உங்கள் சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்தியபோது, இந்தியா முழுவதும் ஒரு பொது ஹர்த்தாலை அனுஷ்டிக்க வேண்டுமென்று நீங்கள் தீர்மானித்தீர்கள். அந்த ஹர்த்தால், ஓர் அலுவலும் நடை பெருத நாளாக இருக்க வேண்டுமென்பதும், அன்று ஜனங் கள் சர்க்கார் நடவடிக்கையைத் தாங்கள் ஆதரிக்கவில்லை யென்ற பொதுவான மனநிலையைக் காட்ட வேண்டுமென்ப தும் உங்கள் அபிப்பிராயமாகும். ஹர்த்தால் என்ருல், தேசம் முழுவதும் பொதுவாக வேலை நிறுத்தம் செய்ய வேண்டும் என்பதே. அத்தகைய வேலை நிறுத்தம் ஒரு சங்கடமான நிலைமையை உண்டாக்காதா?

**ப:** நீண்ட காலம் வேலை நிறுத்தம் செய்தால்தான் சங்கடமான ஒரு நிலைமை ஏற்படும்.

இச்சந்தர்ப்பத்தில் காந்திஜி, தேசத்தின் சில பாகங் களில் மார்ச்சு 30-ஆம் தேதியும், தேசம் முழுவதும் ஏப்ரல்

6-ஆம் தேதியும் ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டதற்குக் காரணம் என்ன என்பதை விளக்கிக் கூறினர். அதற்கு, தவருன கணக்கு எதுவும் காரணம் அல்ல என்றும், ரௌலட் சட்டத்திற்கு வைஸ்ராய் சம்மதம் அளித்தது, நாட்டின் மற்ற பாகங்களில் உள்ள ஜனங்களைக் காட்டிலும் ஒரு பாகத்தில் உள்ள ஜனங்களுக்குச் சீக்கிரத்தில் தெரிய வந்ததே காரணமென்றும் கூறினர்.

கே : ஜனங்கள் யாருடைய வற்புறுத்தலுமின்றி முற்றிலும் தாங்களாக வேலைக்குச் செல்லாமல் இருக்க வேண்டும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களா ?

ப : ஆமாம். முற்றிலும் தாங்களாக வேலைக்குச் செல்லாமல் இருக்க வேண்டும். ஹர்த்தால் தினத்தன்று வேலைக்குச் செல்லாமலிருக்கும்படி ஜனங்களைத் தூண்ட யாரும் அனுமதிக்கப்படமாட்டார்கள். ஆனல், வேலைக்குச் செல்லாமல் இருக்கும்படி மக்களைக் கேட்டுக்கொண்டு துண்டுப் பிரசுரங்கள் விநியோகிப்பது போன்ற பிரசார வேலை முற்றிலும் நியாயமானதே. ஆனல், அவ்விஷயத்தில் சரீர பலாத்காரம் எதுவும் இருக்கக்கூடாது.

கே : ஹர்த்தால் தினத்தன்று டோங்கா வண்டிகள் போக்குவரத்தில் ஜனங்கள் தலையிட்டதை நீங்கள் கண்டிக்கிறீர்கள் அல்லவா ?

ப : நிச்சயமாக.

கே : கண்டிக்கத்தக்க விதத்தில் அவ்விதம் நடந்துகொண்ட ஜனங்கள் விஷயத்தில் போலீசார் தலையிட்டதை நீங்கள் ஆட்சேபிக்கமாட்டீர்கள் அல்லவா ?

ப : போலீசார் நியாயமான அடக்கத்துடனும் பொறுமையுடனும் நடந்து கொண்டிருந்தால், நான் ஆட்சேபிக்கமாட்டேன்.

கே : ஹர்த்தால் தினத்தன்று மற்ற ஜனங்களுடன் மோதிக் கொள்ளுவதும், வண்டிகளை நிறுத்துவதும் முற்றிலும் ஒழுங்கீனமான காரியம் என்பதை நீங்கள் அங்கீகரிக்கிறீர்கள் அல்லவா ?

ப : ஒரு சத்தியாக்கிரகி அவ்விதம் செய்வதை 'கிரிமினல்' குற்றமாகவே நான் கருதுவேன்.

கே : உங்களுக்கு அடுத்தபடியாகக் கீழே உள்ள பிரமுகரான சுவாமி சிரத்தானந்தர் ...

காந்திஜி இடைமறித்துக் கூறியதாவது: சுவாமி சிரத்தானந்தர் எனக்குக் கீழே உள்ளவர் அல்ல. அவர் மதிப்பிற்குரிய ஒரு சக ஊழியராவார்.

**லார்டு ஹண்டர்:** அவ்விஷயமாக அவர் உங்களுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாரா? டில்லியிலும் பாஞ்சாலத்திலும் நிகழ்ந்ததைப் பார்த்த பின், நிச்சயமாக பலாத்காரம் ஏற்படாமல் பொது ஹர்த்தாலை நீங்கள் நடத்த முடியாது என்பது தெளிவாகியிருக்கிறது என்று அவர் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாரா?

**காந்திஜி:** அக்கடிதத்தில் அடங்கியிருந்த விவரங்களை நான் ஞாபகப்படுத்திக்கொள்ள முடியாது. ஆனால், அவர் இன்னும் அதிகமாகப் போயிருந்தார் என்றே நான் நினைக்கிறேன். விபரீதமான சம்பவங்கள் ஏற்படாமல், பாமர மக்களிடையே சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்துவது முடியாத காரியமென்று அவர் கூறியிருந்தார். ஹர்த்தாலைப் பற்றி அவர் குறிப்பிடவில்லை. நான் சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்தியபோது, எனக்கும் சுவாமி சிரத்தானந்தருக்கும் அபிப்பிராய வேற்றுமை இருந்தது. என் மனப்படி, மக்கள் போதிய அளவு என் கட்டுப்பாட்டிற்குள் இன்னும் வரவில்லை என்பதற்காகவே சட்ட மறுப்பை நிறுத்த வேண்டியது அவசியமென்று நான் கருதினேன். சுவாமி சிரத்தானந்தர் கூறியது என்னவெனில், சத்தியாக்கிரகத்தைப் பாமர மக்கள் இயக்கமாக நடத்த முடியாது என்பதே. ஆனால், நான் அவரது கருத்தை ஆதரிக்கவில்லை. இன்று அவர் என் கருத்துக்கு மாறிவிட்டாரா என்பது எனக்குத் தெரியாது. சட்ட விரோதமான குற்றங்களுக்கு வழக்குத் தொடருவது எவ்வளவு அவசியமோ, அது போல் சட்ட மறுப்பை நிறுத்திவைப்பதும் அவ்வளவு அவசியமாகும். ஹர்த்தாலுக்கும் சட்ட மறுப்புக்கும் உள்ள தீவிர வேற்றுமையைக் கமிட்டி அறிந்துகொள்ள வேண்டுமென விரும்புகிறேன். ஜனங்களுடைய சிந்தனையையும் அரசாங்கத்தின் சிந்தனையையும் தூண்ட வேண்டும் என்பதே ஹர்த்தாலின் நோக்கமாகும். சட்ட மறுப்பு இயக்கம், சட்ட மறுப்பு செய்வோருக்கு ஒழுங்கைக் கற்பிப்பதாகும். கவர்ச்சியான அத்தகைய ஏதாவதொரு இயக்கத்தின் மூலம்தான் நான் இந்தியாவின் உள்ளத்தை அறிந்துகொள்ள முடியும். அதை அறிந்துகொள்ள அத்தகைய இயக்கத்தைத் தவிர வேறு வழி எதுவுமில்லை. சட்ட மறுப்பை நான் எவ்வளவு தூரம் நிறைவேற்ற முடியும் என்பதற்கு, ஹர்த்தால்தான் சரியான ஓர் அளவு கருவியாகும்.

**கே:** ஒருபுறம் சத்தியாக்கிரகத்தை உபதேசித்து வரும் அதே சமயத்தில் ஹர்த்தாலும் நடந்தால், அது பலாத்காரம் வளருவதற்குக் காரணமாகாதா?

ப: எனது அனுபவம் அதற்கு நேர்மாறுனதாக இருக்கிறது. ஆயிரக்கணக்கில் ஆடவர்களும், பெண்களும், பாலர்களும், பால் குடிக்கும் பச்சைக் குழந்தைகளும்கூடக் கூடி, அமைதியாக அணி வகுத்து ஊர்வலம் சென்ற காட்சி அற்புதமாக இருந்தது. சத்தியாக்கிரகத்தைச் சரியான முறையில் உபதேசித்திராவிடில், அமைதியான ஹர்த்தால்கள் நடப்பது சிறிதும் சாத்தியமாகியிராது. எனினும், நான் கூறியது போல் செயல் முறையில் ஹர்த்தால் சட்ட மறுப்பிலிருந்து வேறுபட்டதாகும்.

லார்டு ஹண்டர் கேட்ட கேள்விக்குக் காந்திஜி மீண்டும் பதில் அளிக்கையில், பால்வாலில் தாம் கைது செய்யப்பட்டதன் சம்பந்தமான சம்பவங்களை விவரித்தார். பால்வாலில் தம்மைக் காவலில் வைத்திருந்ததும், பிறகு பந்தோபஸ்துடன் தம்மைப் போலீசார் பம்பாய்க்கு அழைத்துச் சென்றதும் தாம் கைது செய்யப்பட்டதையே காட்டுகின்றன என்றும், அப்படியிருந்தும் "கைதியானதாகக் கூறப்படுவது" என்று சிலர் குறிப்பிட்டிருப்பது ஆச்சரியமாக இருக்கிறதென்றும் காந்திஜி கூறினர்.

மேலும் காந்திஜி குறிப்பிட்டதாவது: "பாஞ்சாலத்திற்குள் நான் பிரவேசிக்கக் கூடாதென்றும், பம்பாய் மாகாண எல்லைக்குள் நான் இருக்க வேண்டுமென்றும் பால்வாலில் எனக்கு ஓர் உத்தரவு பிறப்பித்தனர். என்னிடம் அந்த உத்தரவைக் கொடுத்த போலீஸ் அதிகாரி, என்னிடம் மிகவும் மரியாதையாக நடந்துகொண்டார். டில்லி மாகாணத்திற்குள் பிரவேசிக்கக் கூடாதென்ற தடை உத்தரவை மீற நான் தீர்மானித்தபோது, என்னைப் பக்கத்திலுள்ள ஒரு சிறு ஸ்டேஷனில் கைது செய்வது எனக்கு எவ்வளவு அசௌகரியமாக இருக்குமென்பதைத் தன்மையாக எடுத்துச் சொன்னர். நான் பால்வாலுக்குச் சென்றபோது, அங்கே டில்லி போலீஸ் சூபரிண்டெண்டைப் பார்த்தேன். அவருடன் அவரது அதிகாரிகளும் ஆட்களும் இருந்தனர். அந்த அதிகாரி என் தோள் மீது கையைவைத்து, 'ஸ்ரீ காந்தி, நான் உங்களைக் கைது செய்கிறேன்' என்றார். ரயில் வண்டியிலிருந்து என் சாமான்களை விரைவில் எடுக்கும்படி கூறினர்கள். என் கோஷ்டியில் வந்தவர்களில் என்னுடன் கூட வர விரும்புவோர் யார் என்பதைக் காட்டும்படியும் கூறினர்கள். நான் அப்படியே காட்டினேன். சில போலீஸ் கான்ஸ்டேபிள்களின் காவலில் நான் வைக்கப்பட்டேன். என்னை ஒழுங்கான முறையிலேயே கைது செய்திருக்கிறார்கள் என்பதை நிச்சயமாக நிரூபிக்கும் ஒரு சம்பவமும் அப்போது நிகழ்ந்தது. இருமி உமிழ்வதற்காக நான் பிளாட்பாரத்தின் ஓரத்திற்குச் சென்றபோது, ஓர் அதிகாரி என்னைத் தடுத்தார். அந்த அதிகாரி செய்தது

தவறு என்று நான் சொல்லவில்லை. அவர் தமது கடமையையே செய்தார்."

பிறகு காந்திஜி, தம் மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார்கள் என்பது தம்மைக் கைது செய்த அதிகாரிக்குத் தெரியாதென்பதை விவரித்தார். அதன் பின் தம்மை சிவாய் மதுபூருக்கு அழைத்துச் சென்றது, தாம் பஞ்சாப் மெயிலில் ஸ்ரீ பௌரிங் என்ற அதிகாரியின் மேற்பார்வையில் வைக்கப்பட்டது, மறுநாள் அதிகாலையில் ஸ்ரீ பௌரிங் அவரைச் சந்திக்க வந்த மற்றோர் அதிகாரியுடன் கலந்து ஆலோசித்தது, பிறகு பம்பாயில் தாம் இஷ்டப்படி செல்லலாமென்று பௌரிங் தம்மிடம் கூறியது ஆகியவைகளையெல்லாம் காந்திஜி விவரித்துக் கூறினார்.

**லார்டு ஹண்டர் :** உங்களிடம் அதிகாரிகள் கோரியதெல்லாம், நீங்கள் டில்லிக்கோ அல்லது பாஞ்சாலத்துக்கோ போகக் கூடாது என்பதுதான்.

**காந்திஜி :** இல்லை. என்னை அதிகாரிகள் கைது செய்தபோது, பால்வாலுக்கு நான் சென்றதன் காரணமாகக் குற்றம் புரிந்தவனாகிவிட்டேன். எனவே, என்னை பம்பாய்க்குத் திரும்பிச் செல்லும்படி அதிகாரிகள் கேட்கவில்லை. காவலில் என்னைப் பம்பாய்க்குக் கொண்டு சென்றார்கள்.

**கே :** அதாவது நீங்கள் டில்லிக்கோ அல்லது பாஞ்சாலத்துக்கோ செல்லக்கூடாதென்றும், நீங்கள் பம்பாய் மாகாணத்தில் இருந்தால் உங்கள் சுதந்திரத்திற்கு எவ்விதக் குந்தகமும் இராதென்றும் ஓர் அரசாங்க உத்தரவின் மூலம் உங்களுக்குத் தெளிவுபடுத்தினார்கள்.

**ப :** ஆமாம்.

**கே :** அதற்கும், உங்களைக் கைது செய்து சிறைப்படுத்துவதற்கும் சிறிது வித்தியாசம் உண்டு அல்லவா ?

**ப :** அதைப் பற்றி யாரும் எதுவும் கூறவில்லை. அரசாங்கத்தின் மீதுள்ள ஒரே புகார் என்னவெனில், சமாதான லட்சியத்துடன் சென்ற என்னைத் தடுத்துத் திருப்பி அனுப்பிவிட்டார்கள் என்பதே.

**கே :** ஏற்கெனவேயே உங்களுடைய கொள்கையால் கொந்தளிப்பு ஏற்பட்டுள்ள ஓரிடத்திற்கு, உங்கள் கொள்கையைப் பிரசாரம் செய்வதற்காகச் செல்ல அனுமதிப்பது சரியல்ல என்று அரசாங்கம் நியாயமாகவும் உண்மையாகவும் கருதுமாயின், அதை நீங்கள் ஆட்சேபிப்பீர்களா ?

ப: அந்தக் கோணத்திலிருந்து பார்ப்பதாயின், அவ்விஷயமாக நான் எதுவுமே சொல்லுவதற்கில்லை.

கே: நீங்கள் கைது செய்யப்பட்ட பிறகு, டில்லியிலும் பாஞ்சாலத்திலும், அகமதாபாத்திலும்கூட மோசமான சம்பவங்கள் நிகழ்ந்தன அல்லவா?

ப: ஆம்.

கே: இப்போது, இங்கே நாம் கவனிக்கவேண்டிய விஷயங்கள், அகமதாபாத் சம்பந்தமானவை மாத்திரமே. அகமதாபாத்தில் மில் தொழிலாளர்களிடையே உங்களுக்கு மிகுந்த செல்வாக்கு உண்டென்று எங்களுக்குக் கூறப்பட்டிருக்கிறது.

ப: ஆம்.

கே: உங்களைக் கைது செய்ததால் மில் தொழிலாளர்கள் மிகுந்த ஆத்திரமடைந்தார்கள். அதன் காரணமாக அவர்கள் ஏப்ரல் 10, 11, 12-ஆம் தேதிகளில் அகமதாபாத்திலும் விராம்காமிலும் மிகவும் துரதிருஷ்டமான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர் அல்லவா?

ப: ஆமாம்.

கே: அந்தச் சம்பவங்கள் சம்பந்தப்பட்ட வரையில், உங்களுக்கு நேரில் எதுவும் தெரியாது?

ப: தெரியாது.

கே: எங்கள் மனத்தில் ஓர் அபிப்பிராயம் உருவாவதற்கு உதவியாக, அச்சம்பவங்களையொட்டித் தாங்கள் ஏதாவது தகவல் அறிவிக்க இயலுமா?

ப: அகமதாபாத்திலும் சரி, விராம்காமிலும் சரி, பாமர மக்களின் போக்கு முற்றிலும் நியாயமற்றதென்ற எனது அபிப்பிராயத்தை உங்களிடம் சமர்ப்பிக்கத் துணிகிறேன். அவர்கள் அங்கே தன்னடக்கத்தை இழந்துவிட்டது மிகவும் வருந்தத்தக்கதாகும். ஆனால், அதே சமயத்தில், நான் எந்த மக்களிடையே, சரியாகவோ, தவருகவோ செல்வாக்கு பெற்றிருக்கிறேனே அந்த மக்கள், அரசாங்கத்தால் கடுமையான சோதனைக்கு உட்படுத்தப்பட்டார்கள் என்று கூற விரும்புகிறேன். இவ்விஷயம் மற்றவர்களைக் காட்டிலும் அதிகாரிகளுக்கே நன்கு தெரிந்திருக்க வேண்டும். அரசாங்கம் தன் நடவடிக்கைகள் பற்றித் தீர்மானிப்பதில் மன்னிக்க முடியாத

ஒரு தவறு செய்துவிட்டதாகவும், மக்கள் எவ்விதத் தவறும் செய்யவில்லையென்றும் நான் கூறவில்லை. அதற்கு மாருக, அரசாங்கத்தைக் காட்டிலும் மக்களே அதிக மன்னிக்க முடியாத குற்றம் செய்துள்ளனர் என்பதே என் அபிப்பிராய மாகும்.

காந்திஜி மேலும் தொடர்ந்து பதில் அளிக்கையில், நடந்து போன தவறைச் சீர்திருத்த அவர் எப்படி முயற்சித்தார் என்பதை விவரித்தார். காந்திஜி கூறியதாவது: "என்னை, நானே அதிகாரிகளிடம் முற்றிலும் ஒப்படைத்துக்கொண்டேன். நான் ஸ்ரீ பிராட்டையும் மற்ற அதிகாரிகளையும் பேட்டி கண்டு நீண்ட நேரம் பேசினேன். 13-ஆம் தேதி நான் ஒரு பொதுக்கூட்டம் கூட்டுவதாக இருந்தேன். ஆனால், அன்று கூட்டம் நடத்துவது சாத்தியமல்ல என்று அதிகாரிகள் கூறிவிட்டார்கள். கர்னல் பிரேசர் விடுத்த உத்தரவு காரணமாக அவ்விதம் கூறவில்லை. கூட்டம் சம்பந்தமாக எனக்கு எல்லா உதவியும் செய்வதாக அவர்கள் வாக்களித்திருந்தார்கள். கூட்டத்தைப் பற்றிய முன் னறிவிப்பு அன்று எல்லா ஜனங்களுக்கும் கிடைக்காது என்பதற் காகவே அன்று கூட்டம் நடத்த இயலாது என்று சொன்னார்கள். பின்னர் கூட்டம் 14-ஆம் தேதி நடந்தது. என்ன நேர்ந்ததென் பதை அங்கே கூட்டத்தில் சுருக்கமாகக் கூறினேன். அங்கே பேசுகையில் நான், 'கட்டுக் கோப்பாக', 'கல்வியறிவுள்ள' என்ற வார்த்தைகளை உபயோகித்தேன். அந்த இரண்டு வார்த்தை களையும் வெகு தீவிரமாக எனக்கு விரோதமாகவும் ஜனங்களுக்கு விரோதமாகவும் எடுத்துக்காட்டியுள்ளனர். நான் குஜராத்தியில் பேசினேன். எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்று நான் கூறினேனேயன்றி, கல்வியறிவுள்ளவர்கள் என்று கூறவில்லை. நான் உபயோகித்த குஜராத்தி வார்த்தைக்கு அதுதான் அர்த்தம் என்பதை சர் சிமன்லால் செதல்வாட்டும்* ஒப்புக்கொள்ளுவார். கூட்டம் நடந்தபோது எனக்குத் தோன்றிய வார்த்தையையும் கருத்தையுமே குறிப்பிட்டேன்.

"ஏற்கெனவே நிறுவப்பட்ட ஒரு ஸ்தாபனம் என்ற பொரு ளில் நான் அந்த வார்த்தையை உபயோகிக்கவில்லை. நான் கூறிய வார்த்தைகளைத் தவருகப் பொருள் கொள்ளுவது முடியாத காரியம். நடவடிக்கைகள் கட்டுக்கோப்பான முறையில் நடை பெற்றுள்ளன என்பதே நான் கூறியதாகும். நான் அகமதா பாத்தைப்பற்றி மாத்திரமே பேசிக்கொண்டிருந்தேன். விராம் காமில் நடந்த சம்பவங்களைப் பற்றிக்கூட அப்போது எனக்கு எதுவும் தெரியாது. அந்தப் பிரசங்கத்தில் கூறிய எதையும் நான் மறுக்கப் போவதில்லையென்பதை வற்புறுத்திக்கூறுகிறேன். அகமதாபாத்தில் பலாத்காரம் கட்டுக்கோப்பான முறையில்

*சர் சிமன்லால் செதல்வாட், ஹண்டர் கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவர்.

நடைபெற்றிருக்கிறது என்பதே எனது அபிப்பிராயமாகும். இதிலிருந்து, அங்கு ஏதோ தீவிரமான சதி நடந்திருப்பதாக அர்த்தம் செய்துகொள்ளக்கூடாது. மற்றும், நான் ஜனங்களுக்கு நிகழ்த்திய பிரசங்கத்தில்தான் அந்த வார்த்தைகள் உபயோகிக் கப்பட்டன. போலீஸ் அதிகாரிகளுக்காக நான் அப்பிரசங்கம் செய்யவில்லே. முக்கியமாக இந்த உண்மையை வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

"ஸ்ரீமதி அனுசூயா கைது செய்யப்பட்டார் என்ற பொல் லாத வதந்தி காரணமாக ஆத்திரமடைந்ததாலேயே ஜனங்கள் பலாத்காரக் குற்றங்களேச் செய்துவிட்டார்கள். அரைகுறை யாகப் படித்த ஒரு பிரிவினர் இருக்கின்றனர். அவர்கள் சினி மாக்களிலிருந்தும், முட்டாள்தனமான நாவல்களிலிருந்தும், சில அரசியல் தலேவர்களிடமிருந்தும் போலிக் கொள்கைகளேக் கிரகித்துக்கொண்டுள்ளனர். அத்தகைய பிரிவினரை நான் அறிவேன். அவர்களுடன் நான் கலந்து பழகியிருக்கிறேன். அந்தப் பாதையிலிருந்து அவர்களேத் தடுக்கவும் முயற்சித் துள்ளேன். அம்முயற்சியில் ஓரளவு வெற்றியும் பெற்றிருக் கிறேன். அதன் பலனுகை இன்று நூற்றுக்கணக்கானவர்கள் புரட்சிப் பாதையை விட்டுவிட்டார்கள்.

"என் பிரசங்கத்தில் கூறியதன் முழு அர்த்தத்தையும் இப்போது நான் கூறிவிட்டேன். கலகங்களுக்குப் பின்னுல் கலா சாலேப் பட்டதாரிகள் இருந்து அவற்றை நடத்தினர் என்று நான் ஒருபோதும் கூறியதில்லே. அவர்கள் அவ்விதம் செய்யக் கூடிய வர்கள் அல்ல என்று நான் சொல்லவில்லே. ஆனுல், உயர்ந்த படிப்பாளிகள் எவரும் பாமர மக்களேக் கலகம் செய்யும்படி தூண்டியதாக எனக்குத் தெரியவில்லே."

கே : நீங்கள் கூறுவதன் அர்த்தம், கலகக்காரர்களிடையே ஒரு பொதுவான நோக்கம் இருந்தது என்பதா ?

ப : நான் அவ்விதம் கூறவில்லே. அது மிகைப்படுத்திக் கூறுவ தாகும். குற்றங்களேத் தூண்டிவிட்ட இரண்டு அல்லது மூன்று நபர்கள் அல்லது கட்சிகள் மாத்திரமே பொதுவான நோக்கம் கொண்டிருந்தனர் என்று நினேக்கிறேன்.

கே : அந்தக் கிளர்ச்சி, ஐரோப்பியர்களுக்கு விரோதமான ஒரு தன்மையை அடைந்ததா ?

ப : நிச்சயமாக அது அரசாங்கத்துக்கு விரோதமான ஓர் இயக் கமேயாகும். அது, ஐரோப்பியர்களுக்கு விரோதமான ஓர் இயக்கம் அல்ல என்று நம்ப நான் மகிழ்ச்சி யடைவே னெனினும், அவ்விஷயமாக நான் இன்னும் திட்டமான ஒரு முடிவுக்கு வரவில்லே.

கே : இந்தக் கேள்விக்கு விடையளிக்க நீங்கள் விரும்புகிறீர்களா, அல்லவா என்பது எனக்குத் தெரியாது. அதாவது, குற்றங்கள் புரிந்த ஜனங்களுக்குச் சிவில் அதிகாரிகள் தண்டனை விதிக்க வேண்டும் என்பது, சத்தியாக்கிரகக் கொள்கையின்படி சரியா ?

ப : அது, விடையளிப்பதற்கு ஒரு கஷ்டமான கேள்வியாகும். ஏனெனில் தண்டனையின் மூலம், வெளியாரின் நிர்ப்பந்தத்தை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். அது தவறென்று சொல்ல நான் தயாராக இல்லை. ஆனால், அதைவிடச் சிறந்த ஒரு முறை இருக்கிறது. எனினும், நியாயமாக ஒன்று கூறமுடியும். அதாவது, ஒரு குற்றவாளிக்கு அளிக்கப்படும் தண்டனையைக் குறித்து ஒரு சத்தியாக்கிரகி ஆட்சேபிக்க முடியாது. எனவே, அந்த அளவில் அவர் அரசாங்கத்துக்கு விரோதமாக இருக்க முடியாது.

கே : ஒரு சத்தியாக்கிரகியிடமுள்ள தகவல், குற்றவாளிகள் தண்டனை அடைவதற்கு உதவியாக இருக்கும். எனினும் அத்தகவலைத் தெரிவித்து அரசாங்கத்துக்கு உதவி செய்வது, சத்தியாக்கிரகக் கொள்கைக்கு விரோதமானது என்றே தோன்றுகிறது.

ப : அத்தகைய தகவல் கொடுப்பது சத்தியாக்கிரக விதிகளுக்கு முரணாகும். அவ்விதம் கூறுவதற்குக் காரணம் சாதாரணமானதே. போலீசார் கைக்கொள்ளும் முறைகளுக்கு உதவியாக இருப்பது ஒரு சத்தியாக்கிரகியின் கடமையல்ல. எனினும், ஜனங்கள் சட்டத்திற்கு அதிகமாகக் கீழ்ப்படியுமாறும், அதிகாரிகளிடம் அதிக மரியாதை காட்டும்படியும் செய்ய, ஒரு சத்தியாக்கிரகி அதிகாரிகளுக்கும் போலீசாருக்கும் உதவியாக இருக்கிறார்.

கே : இந்தக் கலகங்கள் நடந்தபோது தன் கண் முன்னே மிகக் கடுமையான ஒரு குற்றம் நிகழ்ந்ததை ஒரு சத்தியாக்கிரகி நேரில் பார்த்ததாக வைத்துக் கொள்ளுவோம். அந்தத் தகவலைப் போலீஸாருக்கு அறிவிக்க வேண்டியது அவரது கடமையல்லவா ?

ப : ஏற்கெனவே ஸ்ரீ கய்டர் கேட்ட அந்தக் கேள்விக்கு நான் பதில் அளித்திருக்கிறேன். உங்களுக்கும் பதில் அளிக்க வேண்டுமென நான் எண்ணுகிறேன். இந்த நாட்டு இளைஞர்களுக்குத் தவறான வழிகாட்ட நான் விரும்பவில்லை. இருந்தாலுங்கூட, ஒரு சத்தியாக்கிரகி தன் சொந்த சகோதரருக்கு விரோதமாகப் போக முடியாதல்லவா ? சகோதரர் என்று நான் கூறும்போது, தேசம், சாதி, பிரிவு என்று

பாகுபாடு செய்து நான் கூறவில்லை. ஒரு சத்தியாக்கிரகிக்கு அத்தகைய வேற்றுமை சிறிதும் இல்லை. சற்றேறக்குறைய சத்தியாக்கிரகியின் நிலைமை, எதிரியின் சார்பில் வழக்காடும் ஒரு வக்கீலைப் போன்றது. படுபாதகர்களான கிரிமினல் குற்றவாளிகளை நான் அறிவேன். மேற்கொண்டு குற்றங்கள் செய்யாமல் அவர்களைத் தடுக்க நான் காரணமாயிருந்தே னென்று பணிவுடன் நான் கூறிக்கொள்ளலாம். அவர்களில் ஒரே ஒருவருடைய பெயரை நான் வெளியிட்டால்கூட, அவர்களுடைய நம்பிக்கையை நான் இழந்தவனுவேன். குற்றங்கள் செய்வதிலிருந்து அவர்களை என்னுல் தடுக்க இயலவில்லை என்று வைத்துக்கொள்ளுவோம். அடுத்தபடி யாக, நான் போலீசாரிடம் சென்று அவர்களைப் பற்றிய தகவலைக் கொடுக்கவே கூடாது. ஒரு சத்தியாக்கிரகி, தம் கண்முன் நிகழ்ந்த ஒரு குற்றத்தைப் பற்றிக்கூடச் சாட்சியம் கொடுக்காதிருப்பதே முற்றிலும் நேர்மையாகும் என்று கூற நான் தயங்கவில்லை. எனினும், இந்தக் கொள்கையை கடைப்பிடிக்கும்படியான நிலைமை எப்போதாவது மிகவும் அபூர்வமாகவே ஏற்படக்கூடும். கையும் களவுமாகப் பிடி பட்ட ஒரு குற்றவாளிக்கு விரோதமாகச் சாட்சியம் சொல் லக்கூடாதா என்பது பற்றி, இன்றுகூட நான் திட்டமாக எதுவும் சொல்ல முடியாதவனுக இருக்கிறேன்.''

அப்போதிருந்த பொதுவான நிலைமை பற்றிக் காந்திஜியின் அபிப்பிராயத்தைக் கேட்டபோது அவர் கூறியதாவது: ''அப்போது ராணுவச் சட்டம் அமலில் இருந்ததென்றே நினைக் கிறேன். அரசாங்கம், மிகுந்த தன்னடக்கமும் பொறுமையும் உள்ள மக்களைச் சமாளிக்க வேண்டி யிருந்தது. துருப்புகள் சென்ற ரெயில் வண்டி தடம் புரளும்படி செய்ய முயற்சி நடந்த தன் காரணமாகத் துருப்புகள் மிகுந்த ஆத்திரம் கொண்டது இயல்பேயாகும். அதனுல், அவர்கள் கோப வெறி பிடித்து நடவடிக்கைகளில் ஈடுபட்டதை மன்னிக்கவும் என் மனம் இடம் கொடுக்கிறது. ராணுவ அறிக்கையின் வாசகங்கள் முற்றிலும் தப்பெண்ணத்திற்கு இடமளிப்பதாக இருந்தன என்றே எண்ணு கிறேன். யாதொரு எச்சரிக்கையுமின்றி ஜனங்கள் மீது துருப்பு கள் சுட்டன என்பதே என் அபிப்பிராயம்.''

இரண்டு நீதிச் சபைகளின் அலுவல்களைப் பற்றியும் காந்தி ஜியின் அபிப்பிராயத்தைக் கேட்டபோது அவர் குறிப்பிட்ட தாவது: ''அரசாங்கத்திற்கு விரோதமாக யுத்தம் தொடர்ந்ததாக குற்றவாளிகள் மீது அரசாங்கம் வழக்குத் தொடர்ந்தது தவறுகும். நாகரிக நீதியை அடிப்படையாகக் கொண்ட சட்டங் களுக்கு முரணின்றியே நீதிச் சபைகளின் அலுவல்கள் இருந்தன என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆனல், எந்தப் பிரிவுகளின் கீழ் வழக்குகள் தொடரப்பட்டனவோ, அந்தப்

பிரிவுகளைக் கொண்டு வந்திருக்கக்கூடாது. அவசரப்பட்டு அவ்விதம் செய்ததால் எதிரிகள் தகுதியற்ற முறையிலும், அளவுக்கு மீறியும் துன்பத்திற்கு உள்ளாக நேர்ந்தது. அகமதாபாத்திலுள்ள ஏழைத் தொழிலாளர்களுக்கு விதிக்கப்பட்ட அபராதம் அதிகமாகும். அவர்களிடமிருந்து அபராதத்தை வசூலித்த முறை, அனுவசியமான அளவுக்குக் கொடுமையாகவும் கோபத்தை உண்டுபண்ணுவதாகவும் இருந்தது. இவ்விஷயமாக ஸ்ரீ அம்பாலாலின் கருத்தை நான் ஆதரிக்கவில்லை. ஸ்ரீ அம்பாலால் தமது மக்களுக்கு விரோதமாகக் கடுமையான தவறு இழைத்திருக்கிறார் என்பதே எனது அபிப்பிராயமாகும். நாடியாடிலும் பரேஜாடியிலும் அதிகப் போலீசாரைக் கொண்டு வந்த அரசாங்கத்தின் நடவடிக்கை எள்ளளவும் நியாயமற்றது. அபராதம் விதித்ததற்கு ஆதரவாக நாடியாட் கலெக்டர் கூறியுள்ள காரணங்கள், முற்றிலும் பொருத்தமற்றவையாகவும், வஞ்ச புத்தியைக் காட்டுபவையாகவும் இருக்கின்றன. ரெயில் வண்டி தடம் புரளும்படி செய்வதற்காகச் சென்றவர்களுடன் நாடியாட் மக்களுக்கு எவ்வித சம்பந்தமும் இல்லை என்பதை நான் நிச்சயமாக அறிந்து கொண்டுள்ளேன். ஆனால், அதற்கு மாறாக அவர்கள், குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் அரசாங்கத்துக்கு எல்லா உதவியும் அளித்தார்கள். அந்த உதவிக்காகக் கலெக்டர் அவர்களைக் கொண்டாடிப் பெரிதும் போற்றியுள்ளார்."

## நீதிபதி ராங்கின் விசாரணை

பிறகு நீதிபதி ராங்கின், காந்திஜியைக் கேள்விகள் கேட்கத் தொடங்கினார்.

காந்திஜியிடமிருந்து குறிப்பிட்ட சில தேதிகளைத் தெரிந்து கொள்ள விரும்புவதாக ஸ்ரீ ராங்கின் கூறினார். அதற்குப் பதிலாகக் காந்திஜி குறிப்பிட்டதாவது: "பிப்ரவரி மாதம் மூன்றாவது வாரம் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளப்பட்டது. அப்போது ரௌலட் இரண்டாவது மசோதா நிறைவேறவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்."

**ஸ்ரீ ராங்கின் :** அம்மசோதா நிறைவேறுமுன், அதை எதிர்க்கும் முறைகள் பற்றிய யோசனைகள் நாடு முழுவதும் ஒலித்துக் கொண்டிருந்தன. எதிர்ப்பு முறைகளைப் பற்றிய அந்த யோசனைகளில் ஒன்று, வரி கொடுக்க மறுப்பதே அல்லவா ?

**பதில் :** ஆம்.

**கேள்வி :** மாஜிஸ்திரேட்டுகள் விடுத்த உத்தரவுகளை மீறுவதும் அவற்றில் ஒன்று அல்லவா ?

ப: நான் அந்த யோசனையை எதிர்த்தேன். போலீசார் பிறப்பிக்கும் உத்தரவுகளைச் சிறிதும் வழுவின்றி நிறைவேற்ற வேண்டுமென, ஹர்த்தால் அல்லது சட்ட மறுப்பை அனுஷ்டிக்கும் ஜனங்களை நான் கேட்டுக்கொண்டேன்.

கே: நீங்கள் பகிரங்கமாக அவ்விதம் கூறியது உண்டா? அதற்குத் தாங்கள் ஆதாரம் காட்ட முடியுமா?

இதற்குக் காந்திஜி பதிலளிக்கையில், அவ்விஷயமாகத் தம்மிடமுள்ள தஸ்தாவேஜு பூர்வமான ஆதாரத்தைத் தாம் காட்டுவதாக ஒப்புக்கொண்டார்.

கே: நீங்கள் டில்லி சென்றதன் உத்தேசம், அதிகாரிகளுடன் மோதிக்கொள்ள வேண்டும் என்பது அல்ல?

ப: அந்த உத்தேசம் எனக்கில்லை. டாக்டர் சத்தியபால் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். டில்லியில் ஜனங்கள் கட்டுப்பாட்டுக்கு உட்படாததால், அங்கே வர வேண்டுமென சுவாமி சிரத்தானந்தரும் என்னைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

கே: தம்மை மீறிப் போய்விட்ட மக்களைச் சாந்தப்படுத்துவதற்காக அவர் உங்களை டில்லிக்கு அழைக்கவில்லை; ஆனால், சத்தியாக்கிரக இயக்கம் அபிவிருத்தியடைய வேண்டுமென்பதற்காகவே அழைத்தார் அல்லவா?

ப: இல்லை. சத்தியாக்கிரக இயக்கத்தைப் பலப்படுத்துவதற்காக அழைக்கவில்லை. 'நான் தோல்வியடைந்துவிட்டேன்' என்று அவர் குறிப்பிட்டிருந்தார். ஜனங்களைச் சாந்தப்படுத்துவதற்காக நான் அங்கே செல்ல வேண்டுமென்றும் அவர் கூறியிருந்தார். சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையையொட்டி அரசாங்கத்தின் சட்டங்களை மீறுவதற்காக நான் அங்கே செல்லவில்லை. அதிகாரிகளுக்கு உதவியாக இருக்கவே அங்கே சென்றேன்.

இங்கே மறுபடியும் ஸ்ரீ ராங்கின், காந்திஜியின் சமாதான நோக்கத்தை நிரூபிப்பதற்குரிய தஸ்தாவேஜுகளைச் சமர்ப்பிக்கும்படி அவரைக் கேட்டார். மேலும் ஸ்ரீ ராங்கின் கேட்டதாவது:

"நீங்கள் மீண்டும் கைதியாவதற்காக டில்லிக்குச் செல்லும் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு மக்களின் நடவடிக்கை தடையாக இருந்தது என்று, ஏப்ரல் 14-ஆம் தேதி உங்களுடைய பிரசங்கத்தில் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது தாற்காலிகமாக ஏற்பட்ட எண்ணமென நினைக்கிறேன்."

பதில் : அது தாற்காலிகமாக ஏற்பட்ட எண்ணம் அல்ல. அது தான் என் புத்தி பூர்வமான நோக்கம்.

கே : மீண்டும் கைதியாவதை நீங்கள் நாடியதன் நோக்கம் என்ன?

ப : ஆட்சேபகரமான அந்தச் சட்டம் அகற்றப்படும் வரையில், திரும்பத் திரும்பச் சிறைக்குச் செல்ல வேண்டும் என்பதே எனது நோக்கமாகும்.

கே : நான் அறிந்துகொண்ட வரையில், ஒரு சத்தியாக்கிரகியின் நோக்கம் அது அல்லவே?

ப : அது நிரந்தரமான நோக்கம் அல்ல. ஆனல், நானே துன்பத்திற்கு உள்ளாவதை வரவேற்க வேண்டும் என்பதற்காகவே அப்படிச் செய்தேன்.

கே : அது நாடு முழுவதும் கொந்தளிப்பை உண்டாக்கி, சட்டத்தை ரத்து செய்வதற்கு உதவியாக இருக்கும் என்பது உங்களுடைய உத்தேசமா?

ப ; இல்லவே இல்லை. அது என் உத்தேசமாக இருந்திருக்குமாயின், நான் நேராக டில்லிக்குச் சென்றிருப்பேன். அமிருதசரஸிலும் மற்ற இடங்களிலும் என்ன நிகழ்ந்ததென்பது பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. நான் பம்பாய்க்குச் சென்ற மறுதினம், அகமதாபாத்திற்கு வருமாறு எனக்கு அவசரச் செய்திகள் வந்தன.

பிறகு காந்திஜி, சட்டமறுப்பு ஏன் நிறுத்தப்பட்டது என்பது பற்றியும், மறுபடியும் அதை ஆரம்பிக்கத் தாம் எண்ணியதற்குக் காரணம் என்ன என்பது பற்றியும் விளக்கிக் கூறினர். ஆனல், பம்பாய் அரசாங்கத்தின் மூலம் வைஸ்ராய் லார்டு செம்ஸ்போர்டு தெரிவித்திருந்த விருப்பத்திற்கு இணங்க, மறுபடியும் அதை ஆரம்பிப்பதைத் தவிர்த்ததாயும் குறிப்பிட்டார். அந்த இடைக் காலத்தில், மக்களுக்கு அறிவு புகட்டப் பல்வேறு முயற்சிகள் நடைபெற்றன என்பதை வற்புறுத்திக் கூறினர். மற்றொரு பிரதிக்ஞை தயாரித்ததாயும், ஏற்கெனவே எடுத்துக்கொண்டுள்ள பிரதிக்ஞையில் இருக்கும் சத்தியம், பலாத்காரமின்மை இவ்விரு அம்சங்களையும் வழுவின்றி அனுஷ்டிப்பதாக மற்றொரு பிரதிக்ஞை செய்துகொள்ளும்படி மக்கள் கேட்கப்பட்டதாயும் காந்திஜி குறிப்பிட்டார்.

கே : உங்கள் கொள்கையைத் தவருகப் பொருள் கொள்ளுவதன் மூலம், இந்தியா முழுவதும் சட்ட விரோதமான

நடவடிக்கைகளுக்கு அனுதாபம் காட்டும் போக்கு அதிகமாகி வருகிறதென்று நீங்கள் நினைக்கிறீர்களா?

ப : நான் அவ்விதம் நினைக்கவில்லை.

கே : காந்திஜி, இந்தக் கேள்வி கேட்பதற்காக மன்னியுங்கள். இந்தியாவில் மக்களின், சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்ற சுபாவத்தைச் சீர்குலைப்பதற்கான காரியம் எதையாவது செய்துவிட்டதாகத் தாங்கள் கருதுகிறீர்களா?

ப : நான், சில ஜனங்களின் அத்தகைய சுபாவத்தைத் தாற்காலிகமாகச் சீர்குலைக்கும் குற்றம் செய்திருப்பவனாகவே கருதுகிறேன்.

கே : இந்தியாவில் பாஞ்சாலத்தைப் போன்ற சில இடங்கள் இருக்கின்றன. மற்ற இடங்களைவிட அதிகமாகப் பாஞ்சாலத்தில், உங்கள் கொள்கையைத் தவறாகப் பொருள் கொள்ளும் ஜனங்கள் இருக்கிறார்கள் அல்லவா?

ப : தவறாகப் பொருள் கொள்ளும் சில ஜனங்கள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால், பாஞ்சாலம் சம்பந்தப்பட்ட வரையில், சத்தியாக்கிரகத்தை நன்கு அறிந்துகொள்ளக் கூடிய மக்கள் அங்கே இருப்பதைக் கண்டேன். நான் சென்றவிடமெல்லாம், அத்து மீறிய நடவடிக்கைகளைக் குறித்து உண்மையில் வருந்தும் ஜனங்களையே கண்டேன்.

கே : ஜனங்கள் ஒரு கட்டுப்பாட்டிற்குள் இருக்க வேண்டும் என்பதற்காகவே, எந்தச் சட்டங்களை மீறுவதென்பதை ஒரு கமிட்டியின் ஆலோசனைக்குவிட உத்தேசித்ததாக நீங்கள் கூறினீர்கள். ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு கமிட்டி இருக்க வேண்டும் என்று நீங்கள் உத்தேசித்தீர்களா?

ப : ஆம். ஒவ்வொரு மாகாணத்திலும் ஒரு தனிக் கமிட்டி அமைப்பதாக இருந்தது. ஆனால், எல்லா இடங்களிலும் கொள்கை ஒரேவிதமாக இருப்பதற்காக, எல்லா இடங்களுக்கும் நானே தலைவராக இருந்தேன். எனினும், வெவ்வேறு இடங்களிலும் வெவ்வேறு சட்டங்களை மீற வேண்டும் என்பதே என் உத்தேசமாகும்.

பிறகு காந்திஜி, சட்ட மறுப்புக்கும் சாத்விக எதிர்ப்புக்கும் உள்ள வேற்றுமையை விளக்கினார். சாத்விக எதிர்ப்பின் மூலம் கண்டன முறைகள் யாவும் அனுஷ்டிக்கப்பட்டுத் தீர்ந்துவிடுவதில்லை என்று குறிப்பிட்டார்.

## சர் சிமன்லால் செதல்வாட் விசாரணை

பிறகு கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவரான சர் சிமன்லால் செதல்வாட் காந்திஜியை விசாரித்தார். அவர் கேட்ட கேள்விகளும் அவற்றிற்குக் காந்திஜி அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன:

**சர் சிமன்லால்:** நான் அறிந்துகொண்ட வரையில், உங்களுடைய சத்தியாக்கிரகக் கொள்கை சத்தியத்தை நாடுவதே. சத்தியத்தை நாடுவதில் நீங்கள் உங்களுக்கே துன்பத்தை வரவேற்றுக்கொள்ளுகிறீர்கள்; மற்ற எவருக்கும் ஹிம்சை விளைவிப்பதில்லை.

**காந்திஜி:** ஆமாம்.

**கே:** ஒருவர் சத்தியத்தை நாட எவ்வளவு யோக்கியப் பொறுப்புடன் முயற்சி செய்தாலும், சத்தியத்தையொட்டி ஒருவருடைய கருத்துக்கும் மற்றவர்களுடைய கருத்துக்கும் வேற்றுமை இருக்கலாம். அந்நிலையில் சத்தியத்தை நிர்ணயிப்பது யார்?*

**ப:** தனி நபர்தான் அதை நிர்ணயித்துக்கொள்ள வேண்டும்.

**கே:** சத்தியத்தைப் பற்றி வெவ்வேறு நபர்கள் வெவ்வேறு கருத்து உடையவர்களாக இருப்பார்கள். அது குழப்பத்தில் கொண்டு போய்விடாதா ?

**ப:** நான் அவ்விதம் நினைக்கவில்லை.

**கே:** யோக்கியப் பொறுப்புடன் சத்தியத்தை நாடுவதென்பது ஒவ்வொருவர் விஷயத்திலும் வெவ்வேறு விதமாகும்.

**ப:** அதனால்தான் பலாத்காரமின்மை ஓர் அவசியமான அம்சமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அது இல்லாவிடில், குழப்பமும் அதைவிட மோசமான நிலைமையும் ஏற்படும்.

**கே;** சத்தியத்தை நாட விரும்பும் ஒருவர், சீரிய ஒழுக்கமும் உயர்ந்த அறிவும் படைத்தவராக இருக்க வேண்டாமா?

**ப:** வேண்டாம். ஒவ்வொருவரிடமிருந்தும் அதை எதிர்பார்ப்பது அசாத்தியமாகும். 'அ' என்பவர் தமது சொந்த முயற்

---

* சர் சிமன்லால் செதல்வாட்டிற்கும் காந்திஜிக்கும் நடந்த சம்பாஷணை பற்றிய ஒரு விமர்சனக் கட்டுரை, 1920 ஜனவரி 21-ஆம் தேதி 'எங் இந்தியா' வில் வெளியாகியது. "மனச்சாட்சி காரணமாக நானும் துன்பத்திற்கு உள்ளாக வேண்டும்" என்ற தலைப்பில் வெளியான அக்கட்டுரையை, இந்தத் தொகுப்பின் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

சியால் ஓர் உண்மையைத் தெளிவாக்கி, 'ஆ','இ' இருவரும் அதை ஒப்புக்கொள்ளுவதாயின், அவ்விருவருக்கும் 'அ' வின் யோக்கியதாம்சங்கள் இருக்க வேண்டுமென நான் கூறமாட்டேன்.

கே: அதன் அர்த்தம் இதுதான்: அதாவது ஒருவர் ஒரு தீர்மானத்திற்கு வருகிறார். குறைந்த அறிவும் ஒழுக்கமும் உள்ளவர்கள் அவரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்ற வேண்டும்.

ப: கண்மூடித்தனமாக அல்ல. நான் வற்புறுத்த விரும்புவது என்னவெனில், ஒவ்வொரு நபரும், அவர் சுதந்திரமாகச் சத்தியத்தை நாட விரும்பினாலொழிய, ஏற்கெனவே சத்தியத்தை நிர்ணயித்துள்ள யாராவது ஒருவரைப் பின்பற்ற வேண்டியது அவசியம் என்பதுதான்.

கே: உயர்ந்த ஒழுக்கமும் அறிவும் படைத்தவர்கள் சத்தியத்தை நிர்ணயிக்க வேண்டும்; ஏராளமான ஜனங்கள் அவர்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்ற வேண்டும். இதுதான் உங்கள் திட்டமாகும். ஏனெனில், குறைந்த அறிவும் ஒழுக்கமும் உள்ளவர்களுக்குத் தாங்களாக அத்தகைய முடிவுகளைச் செய்யும் ஆற்றல் இல்லையல்லவா?

ப: சாதாரணமான ஒருவரிடமிருந்து நான் என்ன எதிர்பார்க்கிறேனே, அதைக் காட்டிலும் அதிகமாக அவர்களிடமிருந்து நான் எதுவும் எதிர்பார்க்க மாட்டேன்.

கே: ஓர் இயக்கத்தின் பிரசார பலம், அதைப் பின்பற்றுவோரின் தொகையையே பொறுத்திருக்கிறதென நான் அறிகிறேன்.

ப: இல்லை. சரியான யோக்கியதையுள்ள ஒரே ஒரு சத்தியாக்கிரகி இருந்தால்கூட, சத்தியாக்கிரகத்தில் வெற்றி கிடைப்பது சாத்தியமாகும்.

கே: ஸ்ரீ காந்தி, இன்னும் உங்களையே நீங்கள் குறையற்ற ஒரு சத்தியாக்கிரகியாகக் கருதவில்லை என்று கூறினீர்கள். அப்படியிருக்க ஏராளமான ஜனங்கள் உங்களைவிட அதிகமான குறைகள் உள்ளவர்களாகவே இருக்க வேண்டும்.

ப: அப்படியில்லை. என்னை நான் ஒரு அசாதாரண மனிதனைக் கருதவில்லை. சத்தியத்தை நிர்ணயிப்பதில் என்னைக் காட்டிலும் அதிகத் திறமையுள்ளவர்கள் இருக்கலாம். தென்னப்பிரிக்காவில் முற்றிலும் பண்பற்ற நாற்பதாயிரம் இந்தியர்கள், தாங்கள் சத்தியாக்கிரகிகளாக இருக்க முடியும் என்ற

முடிவிற்கு வந்தார்கள். டிரான்ஸ்வாலில் நிகழ்ந்த மனத்தை உருக்கும் அந்தக் காட்சிகளை உங்களுக்கு எடுத்துக் கூறு வேனாயின், தென்னாப்பிரிக்காவில் உங்கள் தேச மக்கள் எவ்வளவு அடக்கத்துடன் நடந்து கொண்டார்கள் என்பதைக் கேட்க நீங்கள் ஆச்சரியம் அடைவீர்கள்.

கே : ஆனால், அங்கே நீங்கள் யாவரும் ஏகமனதாக இருந்தீர்கள்.

ப : தென்னாப்பிரிக்காவைக் காட்டிலும் இங்கே கருத்து ஒற்றுமையும் உறுதியும் அதிகமாக இருக்கின்றன.

கே : அங்கே உங்களுக்குத் திட்டமான ஒரு பிரச்னை இருந்தது. இங்கே அப்படியில்லை ?

ப : இங்கேயும் திட்டவட்டமான ஒரு பிரச்னை இருக்கிறது. அதாவது ரௌலட் சட்டம்தான்.

பின்னர் காந்திஜி, சத்தியாக்கிரகத்தை, பலாத்காரத்தைக் காட்டிலும் மிக மிக அதிக சக்தி பொருந்திய ஒரு கருவியாகத் தாம் சமர்ப்பித்த விதத்தை விளக்கினார்.

கே : துன்பத்திற்கு உள்ளாவதற்கும், மேலும் தொடர்ந்து துன்பத்திற்கு உள்ளாகிக்கொண்டே போவதற்கும் அசாதாரணமான தன்னடக்கம் தேவையல்லவா?

ப : இல்லை. அசாதாரணமான தன்னடக்கம் தேவையில்லை. ஒவ்வொரு தாயும் துன்பத்திற்கு உள்ளாகிறாள். உங்கள் தேச மக்களிடம் அத்தகைய தன்னடக்கம் இருக்கிறது. பெரும் அளவிற்கு அதை அவர்கள் வெளிக்காட்டியும் இருக்கிறார்கள்.

கே : அகமதாபாத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அங்கே அவர்கள் தன்னடக்கத்தைக் காண்பித்தார்களா?

ப : நான் கூறுவதெல்லாம் என்னவெனில், இந்தியா முழுவதும் அங்கே ஒன்றும், இங்கே ஒன்றுமாக பலாத்கார சம்பவங்கள் நிகழ்ந்த சிற்சில இடங்களில் மிகவும் ஏராளமான ஜனங்கள் தன்னடக்கத்துடன் நடந்து கொண்டுள்ளனர் என்பதே. ஒழுங்கான முறையில் நம்மை நாமே கட்டுப்படுத்திக்கொள்ளும் சக்தியை இன்னும் நாம் பெறவில்லை என்பதையே அகமதாபாத்திலும் மற்றவிடங்களிலும் நிகழ்ந்த சம்பவங்கள் காட்டுகின்றன. சென்ற வருடம் மிகவும் ஆத்திரமூட்டும் சம்பவங்கள் நிகழ்ந்தபோதுகூட கெய்ரா மக்கள் மகத்தான தன்னடக்கத்துடன் நடந்து கொண்டார்கள்.

கே : பலாத்காரமான இந்த நடவடிக்கைகள், அகஸ்மாத்தாக நடந்தவை என்று தாங்கள் கூறுகிறீர்களா?

ப : அகஸ்மாத்தாக நடந்தவை அல்ல. அவை எங்கேயோ அபூர்வமாகவே நிகழ்ந்தன. சத்தியாக்கிரகத் தத்துவத்தை மக்கள் தெளிவாகத் தெரிந்து கொண்டு விட்டால், அத்தகைய சம்பவங்கள் மிகவும் குறைந்து விடும். இரண்டாவது பரிசோதனையை நடத்துவதற்கேற்றவாறு, தேச மக்கள் இப்போது அக்கொள்கையைப் போதிய அளவு நன்கு உணர்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். சத்தியாக்கிரகத் தீயினூடே சென்றதால், தேசம் இப்போது அதிகப் பரிசுத்தமான, மிகச் சிறந்த நிலையை அடைந்திருக்கிறதென்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும்.

கே : சாதாரணமாக உங்களுடைய கொள்கை அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதும், இனத் துவேஷத்தை ஒழிப்பதும், தனக்குத் தானே துன்பத்தை வரவேற்பதுமாகும். துன்பத்திற்கு உள்ளாவது பகையை உண்டாக்காதா?

ப : துன்பத்திற்கு உள்ளாவதன் மூலம் ஜனங்களுக்கு, அரசாங்கத்தினிடம் பகை ஏற்படுவதில்லை என்பதே எனது முப்பது வருட அனுபவமாகும். தென்னாப்பிரிக்காவில் கடுமையான போராட்டத்திற்குப் பிறகு இந்தியர்களும் அரசாங்கமும் அன்னியோன்னியமாகவே வாழ்ந்து வந்தனர். இந்தியர்கள் தாங்களாக மனமுவந்து ஜெனரல் ஸ்மட்ஸிற்கு உபசாரப் பத்திரம் கூட வாசித்துக் கொடுத்தார்கள்.

கே : சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை செய்து கொள்ளாமல், இயக்கத்தில் பங்கு எடுத்துக் கொள்ளுவது சாத்தியமா?

ப : பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளாதவர்களை, இயக்கத்தின் சட்ட மறுப்பு அல்லாத வேறு துறைகளில் பங்கு எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுவேன். ஜனங்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டாலன்றிச் சட்ட மறுப்பில் ஈடுபடக்கூடாது. எனவே, சட்ட மறுப்பில் கலந்து கொள்ளாதவர்களுக்கு மற்றொரு பிரதிக்ஞை வகுக்கப்பட்டது. அதாவது, என்ன நேர்ந்தாலும் சத்தியத்தைப் பின்பற்ற வேண்டும் என்பதும், பலாத்காரத்தில் ஈடுபடக் கூடாது என்பதும் தான். அப்போது சட்ட மறுப்பு இயக்கத்தை நான் நிறுத்தியிருந்தேன். பிரதிக்ஞையில் உள்ள ஒரு பாகத்தை வற்புறுத்தத் தலைவருக்கு உரிமை உண்டு. எனவே, மேற்கண்ட காரணத்திற்காக ஜனங்களுக்குப் பொருத்தமல்லாத சட்ட மறுப்பை அகற்றி, அவர்களின் முன்னிலையில் சத்தியத்தைப் பற்றிய பாகத்தை வைத்தேன்.

பிறகு சர் சிமன்லால் செதல்வாட், ரௌலட் சட்டத்தை மீறும் விஷயமும் பிரதிக்ஞையில் சேர்க்கப்பட்டுளதா என்பதையும், அவ்விஷயமாக ஸ்ரீமதி பெசண்டுக்கும் காந்திஜிக்கும் உள்ள கருத்து வேற்றுமையையும் குறிப்பிட்டார்.

காந்திஜி கூறியதாவது: "கமிட்டி சம்பந்தமான அம்சத்தைத் தவிர மற்ற அம்சங்கள் அடங்கிய பிரதிக்ஞையை ஸ்ரீமதி பெசண்ட் எடுத்துக்கொண்டாரென்று நான் பம்பாயில் கேள்விப் பட்டேன். ஆனால், தாம் அவ்விதம் செய்யவில்லை என்று அவர் கூறினர்."

கே: ரௌலட் சட்டத்தை மீறுவது அராஜக முறையாகும் என்று அவர் எடுத்துக் காட்டவில்லையா?

ப: அவர் அவ்விதம் வாதிக்க முற்பட்டது உண்மையே.

சேர்ந்தாற் போல் ஒழுங்கானமுறையில் தீவிரமாக மீறுவதற்கு ரௌலட் சட்டம் இடம் அளிக்காது என்பதே அத்தீர்மானத்திற்குக் காரணம் என்பதைக் காந்திஜி விளக்கினர்.

கே: அரசாங்கத்துக்குத் தரும சங்கடமான நிலைமையை உண்டாக்க வேண்டும் என்பது சட்ட மறுப்பின் அந்தரங்க நோக்கமல்லவா?

ப: நிச்சயமாக இல்லை. கஷ்டங்களுக்குப் பரிகாரம் தேட ஒரு சத்தியாக்கிரகி, அரசாங்கத்தைச் சங்கடத்திற்கு உள்ளாக்குவதில் நம்பிக்கை வைப்பதில்லை. தான் துன்பத்திற்கு உள்ளாவதிலேயே நம்பிக்கை வைக்கிறார்.

கே: அந்நிலையில் ஒழுங்கான அரசாங்க நிர்வாகம் அசாத்தியமானதாகிவிடாதா?

ப: முற்றிலும் சாதுவான ஜனங்கள் சட்டங்களை மீறுவதால் ஒழுங்கான அரசாங்க நிர்வாகம் அசாத்தியமாகிவிட முடியாது. ஆனால், அரசாங்கம் அறிவிழந்து காரியங்களைச் செய்வதை நான் கண்டால், நிச்சயமாக அரசாங்க நிர்வாகம் அசாத்தியமாகும்படி செய்வேன்.

கே: நீங்கள் விடுத்த செய்தியில், பலாத்காரத்தைத் தவிர்க்கும்படி ஜனங்களைக் கேட்டுக்கொண்டீர்கள். அப்படியிருந்தும், பலாத்காரம் ஏற்படத்தான் செய்தது. சாதாரண மனம் படைத்தவர்கள் சாத்விகக் கொள்கையை அனுஷ்டிப்பது மிகவும் கஷ்டமான காரியம் என்பதை அது காட்டவில்லையா?

ப: பல வருடங்களாகப் பலாத்கார முறைகளை உபயோகித்த அவர்கள் அவற்றைத் தவிர்ப்பது கஷ்டமானதே.

கே: கலகங்கள் கட்டுக்கோப்பான முறையில் நடந்ததென் பதற்கு ஆதரவாக உங்களிடம் ஏதாவது சாட்சியம் இருக் கிறதா?

ப: இருக்கிறது. என்னிடம் உள்ள சாட்சிக்கான சாதனங்க ளைக் கமிட்டியின் முன்னிலையில் வைப்பதில் எனக்கு ஆட் சேபனை இல்லை. எனினும், சம்பந்தப்பட்டவர்களின் பெயர் களை நான் வெளியிடமாட்டேன். உயிர்ச் சேதம் விளைவிக்க வேண்டுமென்ற உத்தேசம் யாருக்கும் இல்லை. பொருட் சேதம் மாத்திரமே விளைவிக்க உத்தேசித்தனர். 10, 11–ஆம் தேதிகளில் ஏதோ கட்டுக்கோப்பான ஏற்பாடுகள் நடந்தன. பலாத்காரம் செய்யும்படி தூண்டியவர்கள், பலாத்காரம் செய்தவர்கள், அக்காட்சிகளை நேரில் பார்த்த வர்கள் முதலியோர் கூறிய விவரங்கள் என்னிடம் உள்ளன. நேரடியான சாட்சியமும் என்னிடம் இருக்கிறது. தங்களி டம் உள்ள பட்டாக்கத்திகளை ஒப்படைப்பதற்காகச் சிலர் என்னிடம் வந்தனர். ஆனால், அவ்விதம் செய்ய அவர்களுக் குத் தைரியம் இல்லை. எனக்குத் தகவல் கொடுத்த சிலரை மாத்திரமே நான் அடையாளம் காட்ட முடியும். எல்லோ ரையும் அடையாளம் காட்டுவது இயலாத காரியம். உதா ரணமாக, பக்கத்துக் கிராமங்களிலிருந்து என்னிடம் சிலர் வந்தார்கள். தாங்கள் செய்த காரியங்களைக் குறித்து அவர் கள் வருந்தியதுடன், என் மீதுள்ள அன்பினாலேயே அவர் கள் அவ்விதம் செய்ததாகவும் கூறினார்கள்.

அவர்கள் கூறியது உண்மையா என்பதை எப்படி நிர்ண யிப்பது என்று கேட்டதற்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது: "உண்மையான வாக்குமூலத்திற்கும் பொய் வாக்குமூலத்திற் கும் உள்ள வேற்றுமையை நான் நன்கு அறிந்துகொள்ள இயலு மென்று நினைக்கிறேன். ஜனங்களின் அசாதாரண மனநிலையை அவர்கள் பயன்படுத்திக்கொண்டு, மக்களுடைய மண்டையில் பலாத்கார எண்ணங்களைப் புகுத்திவிட்டார்கள். கெய்ராவில் ரெயில் வண்டி தடம் புரளும்படி செய்ததற்கு, இரண்டு அல்லது மூன்று நபர்களே பொறுப்பாளிகள் ஆவர். அவர்கள் குடி காரர்கள். எனவே, தீர்க்காலோசனையுடனும் கட்டுக்கோப்பா கவும் அந்தக் காரியத்தை அவர்கள் செய்ததாக நான் கூறமுடி யாது. அந்தக் குற்றத்தைப் பற்றி நகரத்தில் உள்ள ஜனங்க ளுக்கு எதுவுமே தெரியாது என்பது எனது உறுதியான கருத் தாகும். அவர்களுக்குத் தெரிந்திருந்தால், அதை அவர்கள் தடுத்திருப்பார்கள். என் அபிப்பிராயம், யாரிடம் நான் மிகவும் அதிக மதிப்பு வைத்திருக்கிறேனோ, அவர்கள் உறுதியாகக்

கூறியதை ஆதாரமாகக் கொண்டதாகும். குற்றத்திற்காகத் தண்டனையடைந்த நபர், உண்மையிலேயே அக்குற்றத்தைச் செய்தவரா என்பது பற்றி நான் எதுவும் கூற முடியாது. ஏனெனில், குற்றம் செய்தவரின் பெயரை நான் அறிந்துகொள்ள வில்லை"

மேலும் தொடர்ந்து காந்திஜி கூறியதாவது: "தற்போதுள்ள நிலையில் சட்ட மறுப்பைப் பாமர மக்களின் இயக்கமாக நடத்துவது விவேகமல்ல என்பதை நான் உணர்ந்துகொண்டதால், சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்தினேன். சத்தியாக்கிரக இயக்கத்தின் உட்கருத்தை ஜனங்கள் உணர்ந்துகொள்ளுவார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனல், அந்த இயக்கத்தில் சேர்ந்துகொள்ள அவர்களுக்கு முடியாவிட்டால், குறைந்த பட்சம் பலாத்காரத்தையாவது தவிர்ப்பது அவர்களுக்கு நன்மையென்பதை அவர்கள் உணர்ந்துகொள்ளுவார்கள் என்றே நான் எதிர்பார்ப்பேன்."

இச்சந்தர்ப்பத்தில் சர் சிமன்லால் செதல்வாட், "சத்தியாக்கிரகம் எப்போது மீண்டும் ஆரம்பிக்கப்படும்?" என்ற தலைப்பில் காந்திஜி எழுதியிருந்த துண்டுப் பிரசுரத்தை வாசிக்கும்படி அவரைக் கேட்டார். சர் சிமன்லால் மேலும் கேட்டதாவது: "ராணுவ ஏற்பாடுகள் பூர்த்தியாகும்போது, சத்தியாக்கிரக இயக்கத்தை ஆரம்பிக்க எல்லோரும் தயாராக இருக்க வேண்டும் என்று தாங்கள் கூறியிருக்கிறீர்கள். ஜனங்கள் உல்லாசமாகச் சட்ட மறுப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்காக, நாடெங்கும் ராணுவம் தயாராக வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது உங்கள் விருப்பமா?"

ப: என் வார்த்தைகள் அவ்வித அர்த்தத்திற்கு இடம் கொடுக்க வில்லை. அவ்வாறு கூறும் குற்றத்துக்கு நான் ஆளாகமாட்டேன். நான் எதிர்பார்த்தபடி ஜூலை 1-ஆம் தேதி நான் இயக்கத்தை மறுபடியும் ஆரம்பிக்கவில்லை. அதனல், என் சக ஊழியர்கள் ஏமாற்றம் அடைந்தனர். இந்தியா முழுவதும் ஒரு ராணுவ முகாமாக இருக்க வேண்டுமென்பது என் விருப்பமா என்றும், அவ்வித விருப்பம் இல்லாவிடில் சத்தியாக்கிரகத்தை நிறுத்திவைக்கும்படியும் வைஸ்ராயும் பம்பாய் கவர்னரும் என்னைக் கேட்டிருந்தார்கள். அதனல் தான் நான் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி வைத்தேன்.

அகமதபாத் தொழிலாளர்களுக்கு விதித்த அபராதம் சம்பந்தமாகக் கேட்டதற்கு, காந்திஜி அளித்த பதில் வருமாறு: "அபராதத்தை வசூல் செய்த முறை முற்றிலும் மோசமாகும்; அபராதத் தொகையை நிர்ணயித்த கொள்கையும் மோசமாகும்; அபராதத்தை வசூலிப்பதற்காக நிர்ணயித்த காலமும் சந்தர்ப்பப் பொருத்தமற்றதாகும். கலகங்களுடன் எவ்வித சம்பந்

தமும் இல்லாத சிலருக்கு அபராதம் விதிக்கப்பட்டிருக்கிறது. அபராதம் சம்பந்தமாக அளிக்கப்பட்டுள்ள விலக்குகள் பற்றி நான் எதுவும் கூறப் போவதில்லை. அதிகாரிகளுக்கு அளிக்கப் பட்டுள்ள யுக்தா யுக்த உரிமையை நான் ஆட்சேபிக்கத் தயா ராக இல்லை. அகமதாபாத் கலெக்டர், தாம் அவசியமென்று கருதிய நடவடிக்கைகளை எவ்வளவு சிறந்த முறையில் எடுத்துக் கொண்டார் என்பதை நான் பாராட்டாவிடில், நான் நியாய மாக நடந்துகொண்டவனாகமாட்டேன்."

## பண்டித ஜகத் நாராயண் விசாரணை

ஹண்டர் கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவரான பண்டித ஜகத் நாராயண், அடுத்தபடியாகக் காந்திஜியை விசாரித்தார் :

**கேள்வி:** மகாத்மாஜி, அராஜகத்தை அடக்க அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுவதை நீங்கள் ஆட்சே பிக்கவில்லை என்று நினைக்கிறேன்.

**பதில்:** நிச்சயமாக இல்லை. எனினும் அராஜகக் குற்றவாளி களுக்கு, சாதாரணச் சட்டத்தின் கீழ் தண்டனை விதிக்க முடியும்.

**கே:** அப்படியாயின், ரௌலட் சட்டத்தைக் குறித்து நீங்கள் ஏன் ஆட்சேபிக்க வேண்டும்?

**ப:** ரௌலட் சட்டத்தைக் குறித்து எனது முக்கிய ஆட்சேபணை என்னவெனில், அது இந்தியா தேசம் முழுவதையும் அவமதிப்பதாக இருக்கிறது என்பதே.

**கே:** எனினும், அச்சட்டம் துஷ்பிரயோகம் செய்யப்படாமல் இருப்பதற்கான பாதுகாப்புகள் இருப்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா ?

**ப:** எனது அனுபவத்திலிருந்து, பாதுகாப்புகள் பற்றி நான் ஒன்று கூற முடியும். அதாவது, அவை வெறும் ஏய்க்கும் வித்தை மாத்திரமல்ல, ஆபத்தான பொறிகளுமாகும். ஏமாற்று வித்தையான பாதுகாப்புகள், நிர்வாக அதிகாரி களை மேலும் அதிகப் பொறுப்பற்றவர்களாகச் செய்துவிடு கின்றன.

**கே:** சத்தியாக்கிரக இயக்கம், அரசாங்கத்தைத் தரும சங்கட மான நிலைமைக்கு உள்ளாக்கிவிடுகிறதென்று கூறப்படு கிறது. உங்களுடைய இயக்கத்தினால், அத்தகைய விபரீத பலன் ஏதாவது ஏற்படுமென நீங்கள் அஞ்சவில்லையா ?

ப: சாதாரண அரசியல் கிளர்ச்சி அத்தகைய நோக்கத்துடன் அடிக்கடி ஆரம்பிக்கப்படுகிறதென்றாலும், சத்தியாக்கிரக இயக்கம் அரசாங்கத்துக்குத் தரும சங்கடமான நிலைமையை உண்டுபண்ண வேண்டும் என்பதற்காக ஆரம்பிக்கப்படவில்லை. எனினும், ஒரு சத்தியாக்கிரகி தமது நடவடிக்கைகளின் பலனாக அரசாங்கத்திற்குத் தரும சங்கடமான நிலைமை ஏற்பட்டுளது என்பதை அறிவாராயின், அவர் அதை எதிர்த்து நிற்கத் தயங்கமாட்டார்.

கே: ஒவ்வொரு ராஜீயக் கிளர்ச்சியின் வெற்றியும், அதைப் பின்பற்றுவோரின் தொகையையே பொறுத்திருக்கிறது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள்?

ப: ஒரு நியாயமான காரணத்துக்கு, தொகையின் பலத்தை அவசியமென நான் கருதவில்லை. அத்தகைய நிலையில், ஒவ்வொருவரும், அவர் உயர்ந்தவராயினும் தாழ்ந்தவராயினும், பரிகாரம் பெறலாம்.

கே: உங்கள் இயக்கத்தில், எவ்வளவு சாத்தியமோ அத்தனை பேர்களைச் சேர்த்துக்கொள்ள நீங்கள் நிச்சயமாக முயற்சி செய்வீர்கள்?

ப: அப்படிச் சொல்லிவிட முடியாது. ஒரு சத்தியாக்கிரகி, சத்தியத்திலும் சத்தியத்திற்காகக் கஷ்டப்படுவதில் தமக்குள்ள சக்தியிலும் மாத்திரமே நம்பிக்கை வைக்கிறார்.

கே: மகாத்மாஜி, ராஜீய விஷயங்களில் ஒரு தனி மனிதரின் குரலை யார் கேட்பார்கள் ?

ப: அந்த எண்ணம் சரியல்ல என்பதை நிரூபிக்கவே நான் முயற்சித்து வருகிறேன்.

கே: ஓர் ஆங்கிலேய அதிகாரி, தனிப்பட்டவரின் முயற்சிகளை கண் எடுத்துப் பார்ப்பார் என்று நீங்கள் நம்புகிறீர்களா ?

ப: ஏன், அது என் அனுபவபூர்வமான உண்மையாகும். கேசவ சந்திர சென்னின் தூண்டுதலால் லார்டு பென்டிங்க், லார்டு பட்டத்தைத் துறந்து ஸ்ரீ பெண்டிங்க் ஆனார்.

கே: ஓ, நீங்கள் ஓர் அசாதாரண மனிதரின் உதாரணத்தைக் கூறுகிறீர்கள்.

ப: சாதாரணத் திறமையுள்ள மனிதர்கள்கூட சீரிய ஒழுக்கத்தை அபிவிருத்தி செய்துகொள்ள முடியும். என் தேச மக்கள்

எழுதப் படிக்கத் தெரியாதவர்களாக இருப்பது வருந்தத் தக்கது என்பதில் ஐயமில்லை. அவர்களுக்குக் கல்வியளிக்க வேண்டியது அவசியமென்றும் நான் கருதுகிறேன். எனினும், முற்றிலும் எழுதப்படிக்கத் தெரியாத ஒருவருடைய மனத்தில் சத்தியாக்கிரகத் தத்துவத்தைப் பதியவைப்பது அசாத்தியம் அல்லவே அல்ல. இது எனது நீண்ட கால அனுபவமாகும்.

இங்கே காந்திஜி, ஹர்த்தாலுக்கும் சத்தியாக்கிரகத்திற்கும் உள்ள வேற்றுமையைச் சுருக்கமாகத் தெளிவுபடுத்தினர். காந்திஜி கூறியதாவது: "ஹர்த்தால், சத்தியாக்கிரகத்தின் முக்கிய அம்சமல்ல. அவசியம் ஏற்பட்டபோது மாத்திரமே அதைக் கைக்கொள்ள வேண்டும். அதை, ஸ்ரீ ஹார்னிமன் நாடு கடத்தப்பட்டபோதும், கிலாபத் இயக்கத்தின்போதும் நான் வெற்றிகரமாகக் கைக்கொண்டேன்."

கே: பொறுப்பற்ற அந்நிய அதிகாரிகளை எதிர்க்க, நீங்கள் வேறு எந்தப் பரிகார முறையையும் கைக்கொள்ள முடியவில்லை. அதனால்தான் நீங்கள் இந்த இயக்கத்தை ஆரம்பித்தீர்கள் அல்லவா?

ப: நான் அவ்விதம் நிச்சயமாகச் சொல்லுவதற்கில்லை. எதிர் காலத்தில் பூரணப் பொறுப்பு வாய்ந்த சுயாட்சி அரசாங்கத்திற்கு எதிராகவும் நான் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படலாம். இன்று ஆங்கில அதிகாரிகள் தங்கள் தவறுக்கு, ஜனங்கள் விஷயத்தில் தங்களுக்குள்ள அறியாமையைக் காரணமாகக் கூறுகிறார்கள். நம்முடைய மந்திரிகள் ஒரு காலத்திலும் அவ்விதம் கூற முடியாது.

கே: சுயாட்சி உரிமைகள் நமக்குக் கிடைக்கும்போது, நாம் மந்திரிகளைப் பதவிகளிலிருந்து விலக்குவது சாத்தியமாக இருக்கும்.

ப: அவ்விஷயத்தில் நான் அவ்வளவு நிச்சயமாக இருக்க முடியாது. இங்கிலாந்தில் மந்திரிகள் பொது மக்களின் நம்பிக்கையை அடியோடு இழந்த பிறகும்கூட, தொடர்ந்து பதவிகளில் இருப்பது அடிக்கடி நிகழும் சம்பவமாகும். இங்கேயும் அதே மாதிரி நேரலாம். எனவே, சுயாட்சியின் கீழும் சத்தியாக்கிரகத்தைக் கைக்கொள்ளும்படியான அவசியம் ஏற்படலாம். அத்தகைய நிலைமை இத்தேசத்தில் உண்டாவதை நான் கற்பனை செய்துகொள்ள முடியும்.

கே: சத்தியாக்கிரக இயக்கத்திற்குப் பிறகு, அமைதியற்ற நிலை உண்டாகாது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

ப: நான் அவ்விதம் நினைக்கவில்லை என்பது மாத்திரமல்ல. உதாரணமாக நானும் அனுசூயா பென்னும் கைதியாகி, அதன் விளைவாக அமைதியற்ற நிலை ஏற்படாவிடில், நான் ஏமாற்றமே அடைவேன். ஆனால், அந்த அமைதியற்ற நிலை, பலாத்காரத்தின் உருவாக இராது. ஏனெனில், மற்றவர்கள் கஷ்டப்படுவதைப் பார்ப்பது ஒரு சத்தியாக்கிரகிக்கு வேதனையைக் கொடுக்கும் விஷயமாகும். அப்போது சத்தியாக்கிரகிகள் ஒருவர் பின் ஒருவராகச் சிறைக்குச் செல்லுவார்கள். அத்தகைய அமைதியற்ற நிலை ஏற்பட வேண்டும் என்பதே எனது விருப்பமாகும்.

கே: நீங்கள், ஏப்ரல் 11-ஆம் தேதி பம்பாய்க்குத் திரும்பியதும், ஏன் பைதோனிக்குச் சென்றீர்கள்?

ப: அங்கே பலாத்காரம் பீறிட்டுக்கொள்ளலாம் என்ற அபாய நிலை இருந்ததாலேயே, அங்கே சென்றேன்.

கே: அங்கே உங்களுடைய புத்திமதியைக் கேட்க ஜனங்கள் மறுத்துவிட்டார்கள் என்று கூறப்படுகிறதே.

ப: என்னுடைய புத்திமதியைக் கேட்க, கூட்டத்தினர் மறுத்து விட்டனர் என்று கூறுவது சிறிதும் சரியல்ல. நான் பேசியதைக் கேட்டவர்கள், மறு பேச்சில்லாமல் என் யோசனையைப் பின்பற்றினார்கள்.

கே: நீங்கள் தடுமாற்றமின்றி வேகமாக நடந்து சென்றீர்களெனினும், நோயுற்றவர் போல் பாசாங்கு செய்தீர்கள் என்று என் முன் உள்ள அறிக்கை கூறுகிறது.

ப: நான் சொல்லக்கூடியதெல்லாம், அது சிறிதும் உண்மையல்ல என்பதே.

கே: நீங்கள் நடுநடுங்கிப் போய் ஓடி ஒரு வீட்டில் ஒளிந்து கொண்டதாயும் அந்த அறிக்கை கூறுகிறது.

ப: அதுவும் பொய்யாகும். இறுதி வரையில் நான் கூட்டத்திலேயே இருந்தேன். கூட்டத்தில் இருந்தவர்களைப் போலீஸ் குதிரைப் படையினர் தாக்கியதையும் நான் நேரில் பார்த்தேன். இவ்விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்காகவே நான் ஸ்ரீ கிரிபித்ஸிடம் சென்றேன்.

## ஸ்ரீ கெம்ப் விசாரணை

**ஸ்ரீ கெம்ப்:** *அகமதாபாத்தில் ராணுவச் சட்டம் விதிக்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லையென்று நீங்கள் கூறுகிறீர்கள் அல்லவா?*

**பதில்:** ஆம், அதுதான் என் அபிப்பிராயம்.

**கேள்வி:** *ஆனால், ஸ்ரீ காந்தி, ராணுவ அதிகாரிகள் அது அவசியம் என்று கூறினால், அதற்குத் தாங்கள் என்ன சொல்லுவீர்கள்?*

**ப:** என் வசம் உள்ள உண்மைத் தகவல்களுக்கு இணங்க, அத்தகைய உத்தரவுக்கு அவசியம் இல்லையென்று நான் முடிவு செய்தேன்.

**கே:** *சில நிரபராதிகள் கொல்லப்பட்டார்கள் என்று நீங்கள் கூறுகிறீர்கள்?*

**ப:** அதுதான் எனது திட்டவட்டமான அபிப்பிராயமாகும்.

**கே:** *அதற்கு உங்களிடம் உறுதியான ஆதாரம் ஏதாவது இருக்கிறதென நீங்கள் கூற முடியுமா?*

**ப:** என் மனத்திற்குத் திருப்தியளிக்கப் போதுமான ஆதாரம் என்னிடம் இருக்கிறது.

**கே:** *இவ்விஷயமாக நீங்கள் ஸ்ரீ சாட்பீல்டுக்கு எழுதினீர்களா?*

**ப:** ஆம், எழுதினேன்.

**கே:** *வாதிகளை அவரிடம் அனுப்பும்படி அவர் உங்களைக் கேட்டாரா?*

**ப:** ஆம்.

**கே;** *அவ்விஷயமாக நீங்கள் ஏதாவது நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டீர்களா?*

**ப:** நான் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஏனெனில், ஸ்ரீ சாட்பீல்டுக்கு எழுதிய அதே தினத்தில் ராணுவச் சட்டம் வாபசாகிவிட்டது. ஸ்ரீ சாட்பீல்டை கண்ணியம் வாய்ந்த ஓர் அதிகாரியாக நான் கருதுகிறேன். அவரது யோக்கியப் பொறுப்பும் நேர்மையும் வெகு சில அதிகாரிகளுக்கே இருப்பதை நான் பார்த்திருக்கிறேன்.

எனவே, அவரது நடத்தையைக் கண்டிப்பது போல் தோன்றும் எதையும் கூறுவது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கும். அவர் செய்யும் தவறுகளில்கூட அவரது கண்ணியத்தை நான் காண்கிறேன். ஆனல், இவ்விஷயமாக மேற்கொண்டு நீங்கள் வற்புறுத்தாமல் இருப்பதையே நான் விரும்புவேன். ஏப்ரல் மாதத்தில் பம்பாய் அரசாங்கம் நிதானத்தை இழந்துவிடாமல் நடந்து கொண்டதால், எவ்விதப் புகாருக்கும் இடம் ஏற்படவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்.

ஆனல், மொத்தத்தில் நிலைமையை நான் பரிசீலனை செய்யும்போது, தவறுகளையும் முற்றிலும் பணிவுடன் சுட்டிக் காட்ட வேண்டியது எனது கடமையாகும். நான் அவ்விதமே சுட்டிக்காட்டியிருக்கிறேன். நிரபராதிகளான சிலர் கொல்லப்பட்டார்கள் என்ற உண்மையை வற்புறுத்தி, அதை ஒரு பிரமாதமான முறையீடாகச் செய்துகொள்ள நான் விரும்பவில்லை.

ஸ்ரீ கெம்ப் : ஸ்ரீ காந்தி, உங்களுடைய சாட்சியம் நேர்மையாகவும் கபடமற்றும் இருந்ததென்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். மேற்கொண்டு உங்களை எந்தக் கேள்வியும் கேட்க நான் விரும்பவில்லை.

[அதன்பின் காந்திஜியை, ஸ்ரீ ஜீவன்லால் தேசாயும், ஸாஹெப்ஸாதா சுல்தான் அகமதுகானும் விசாரித்தார்கள். ஆனல், சத்தியாக்கிரகம் சம்பந்தப்பட்டவரையில் மேலே குறிப்பிட்டுள்ள கேள்விகளும் பதில்களும் போதுமானவை.]

பகுதி நான்கு

# சத்தியாக்கிரகத்திற்குக் கட்டு திட்டங்கள்

## 1

## மரண பயம் போக வேண்டும்

[மனிதனுக்கு முதலில் மரணத்தைப் பற்றிய பயம் போக வேண்டும் என்பது மகாத்மாவின் திடமான கருத்து. அதுவும் சத்தியாக்கிரகிக்கு மரணத்தைக் குறித்த பயமே இருக்கக்கூடாது என்று அவர் வற்புறுத்தி வந்தார். ஆரம்ப காலம் முதற்கொண்டே இந்த அபிப் பிராயம் அவருக்குப் பலமாக இருந்து வந்திருக்கிறது என்பது, 1914-ஆம் ஆண்டு அவர் எழுதியிருக்கும் கடிதங் களிலிருந்தும் தெரிகிறது.

1914–இல் காந்திஜி தென்னப்பிரிக்காவில் இருந்த சமயத்தில் போனிக்ஸ் குடியேற்றத்தில் ஒரு நாள் இரவு எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது தூரத்தில் ஒரு குடிசை தீப்பற்றி எரிந்துகொண்டிருந்தது. அதன் பக்கத்தில் ஒரு பெண் நின்றுகொண்டு கத்திக்கொண் டிருந்தாள். சிலர் அங்கே ஓடிப்போய் பார்த்தபோது, நேபால் என்ற ஒருவரின் மனைவிதான் கூக்குரல் போட்டுக் கொண்டிருக்கிறாள் என்பதைக் கண்டனர். நேபால் என் பவர் நீண்ட காலமாகவே நோயுற்றிருந்தார். அவர் மனைவி தினமும் அவருடன் சண்டை போட்டுக்கொண்டு அவரைத் திட்டிக் கொண்டிருப்பது வழக்கமாம். அன்று போய்ப் பார்த்தபோது, அரை மைல் தூரத்திற்கு அப் பால் இருந்த குடிசை அதற்குள் எரிந்து சாம்பலாகிவிட்ட தைக் கண்டனர். உள்ளே யிருந்து பிணத்தை வெளியில் எடுப்பதும் கஷ்டம் என்று அறிந்தனர். அப் பெண்ணைக் கேட்டதில், தன் கணவனே குடிசைக்குத் தீ வைத் துக் கொண்டுவிட்டார் என்றாள். ஆனால், மற்றவர்களோ, அவளே தீ வைத்திருப்பாள் என்று கருதினர். இப் பெண், மாண்டுபோன நேபாலின் வைப்பாட்டியே யன்றி, சட்டப்படி மணந்த மனைவி அல்ல என்பதும் தெரிந் தது.

அச்சமயம் காந்திஜி கேப்டவுனில் இருந்தார். இச் சம்பவம் முழுதும் அவருக்கு அறிவிக்கப்பட்டபோது காந்திஜி 1914 பிப்ரவரி 28-ஆம் தேதி எழுதிய கடிதம், மரணத்தைப்பற்றி அப்பொழுதே அவருக்கு இருந்த கருத்தைக் தெளிவாகக் காட்டுகிறது. ஆகவே, அக்கடிதத்தைக் கீழே கொடுக்கிறோம். ]

காந்திஜி எழுதிய கடிதமாவது :

"அன்புள்ள ஸ்ரீ............

"உங்கள் கடிதம் கிடைத்தது. இப்பொழுது நேபால் சுயேச்சை அடைந்துவிட்டார். அவர் மனைவி கடுஞ் சித்தமுள்ளவள் என்பது தெரிந்துவிட்டது. நமது கடமை என்ன என்பதையும், உடல் சம்பந்தமாகப் பற்றற்று இருக்க வேண்டும் என்பதையும் சாவு நமக்குப் போதிக்க வேண்டும். என்றாலும், மரணத்தைப்பற்றிய பயம் இருக்க வேண்டிய அவசியமே இல்லை. ஒருவன் உயிரோடு கொளுத்திக் கொல்லப்பட்டாலும், அதனால் அவன் அதிகத் துன்பத்தை அடைந்துவிடுவதில்லை என்று தோன்றுகிறது. அதிகத் துன்பத்தை அனுபவிக்க ஆரம்பிக்கும்போது, அவன் பிரக்ஞையற்றவனாகி விடுகிறான். உடலின் மீது அதிகப் பற்றுக் கொண்டிருப்பவர்களே அதிகத் துன்பத்தை அனுபவிக்கிறார்கள். ஆனால், ஆன்மாவின் உண்மையான நிலையை அறிபவர்கள், மரணத்தைக் குறித்துக் கலக்கமடைவதில்லை. சுட்டுப் பொசுங்குவதனாலோ, மற்றக் காரணங்களினாலோ, நிமிஷந்தோறும் ஆயிரக்கணக்கான உயிர்கள் போய்க்கொண்டிருக்கின்றன. பிரபஞ்சம் முழுவதையும் பார்க்கும்போது நேபால் ஒரு தூசுக்குச் சமம். நாம் ஒவ்வொருவரும், தீயை மூட்டும்போதும், ஒரு விளக்கை ஏற்றி வைக்கும்போதும், அறிந்தும் அறியாமலும், அநேக ஜீவன்களைச் சுட்டுப் பொசுக்கிக் கொண்டுதான் இருக்கிறோம்.

"படைத்த பிரமனைப் போன்ற ஒருவரின் மகிமையை எண்ணிப் பாருங்கள். அவருடைய கண்களுக்கு நாமெல்லாம் எறும்புகளைப் போன்றவர்களே. படைத்தவன் நேபாலை உயிருடன் கொளுத்திக் கொன்றுவிட்டால், அப்படிச் செய்வது அவசியம் என்று அவருக்குத் தோன்றியிருக்கும். நமக்கு என்ன நேருமோ என்பதைக் குறித்து நாம் ஆச்சரியப்படுவதால், பிறர் சாவதைக் குறித்து நாம் துக்கப்படுகிறோம்; அனுதாபம் கொள்ளுகிறோம். ஆனால், கண்ணுக்குத் தெரியாதனவாக உள்ள எறும்புகள், மூட்டைப்பூச்சிகள் போன்ற ஜீவராசிகள் நம்மால் அழிக்கப்பட்டு வருகின்றன. நம்முடைய புத்திசாலித்தனத்தினால், அவைகளை அழிப்பது நியாயம்தான் என்றும் சொல்லிக் கொள்ளுகிறோம். படைத்த பிரமனே, இதே போலத் தமக்குள்ள அதிக புத்தி

சாலித்தனத்தினால், நம்மைப் போன்றவர்களை அழிப்பது நியாயமானதே என்று ஒருவேளை சொல்லக்கூடும். இதை நாம் தெரிந்துகொண்டு விடுவோமானால், கீழ்க்கண்ட படிப்பினையை நாம் அறிந்துகொள்ள முடியும்:

"1. நம்மைப்போன்றே எல்லா ஜீவராசிகளையும் நாம் கருத வேண்டும். நம்மிடம் என்ன உணர்ச்சியுடன் நடந்துகொள்ளுகிறோமோ, அதே உணர்ச்சியுடனேயே எல்லா ஜீவராசிகளிடத்திலும் நடந்துகொள்ள வேண்டும்.

"2. உடலிடம் வைத்திருக்கும் பற்றையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, மரணத்தைக் குறித்து கொண்டிருக்கும் பயத்தையும் விட்டொழித்துவிட வேண்டும்.

"3. உடல் வெறும் மாயை என்பதைத் தெரிந்துகொண்டு, ஆன்ம விடுதலைக்கு நம்மை நாமே தயாரித்துக்கொள்ள வேண்டும்.

"இந்த மூன்று தத்துவங்களைக் குறித்தும் பேசுவது எளிது. ஆனால், அவற்றைக் குறித்துச் சிந்தித்துப் பார்ப்பது அதைவிட இன்னும் அதிகக் கஷ்டமானது. எனினும், அவற்றை அனுசரித்து நடப்பது என்பது வாளின் முனைமீது நடப்பதைப் போன்றதாகும்.

"இதை நான் எழுதும்போது விடியற்காலை. என் மனம் இத்திசையில் ஓடிக்கொண்டிருக்கிறது. ஏனெனில், பா (கஸ்தூரி பா) திரும்பவும் நோயால் வருந்திக் கொண்டிருக்கிறாள். மரண பயத்திலிருந்து அவளை விடுவிப்பதற்காக நான் முனைந்து கொண்டிருக்கிறேன்" *

—"பாபுவின் வாழ்த்துக்கள்"

['காந்தியுடன் என் குழந்தைப் பருவம்' என்று பிரபுதாஸ் காந்தி எழுதியுள்ள நூலிலிருந்து.]

---

* இதே சமயத்தில், மேற்கண்ட கடிதத்தை எழுதி 16 நாட்களான பிறகு காந்திஜி, ஸ்ரீ காலென்பாக்கிற்கு 1914 மார்ச்சு, 16-ஆம் தேதி எழுதிய மற்றோர் கடிதமும் கவனிக்கவேண்டியதாகும். தமது மூத்த சகோதரர் ஸ்ரீ லட்சுமிதாஸ் இறந்துவிட்டார் என்பதை அறிந்ததும், தமக்கு ஏற்பட்ட துக்கத்தைக் குறித்து ஸ்ரீ காலென்பாக்குக்கு எழுதிய காந்திஜி, அக்கடிதத்தின் பிற்பகுதியில் மரண பயத்தின் தீமையைக் குறித்துக் கீழ்வருமாறு எழுதியிருக்கிறார்:

"இந்த அதிர்ச்சிகள், மரணத்தைப்பற்றிய தீவிரமான பயமின்மையை இன்னும் அதிகமாக என்னுள் உண்டாக்குகின்றன. இந்தச் சம்பவம் எனக்கு ஏன் பரபரப்பை உண்டாக்க வேண்டும்? இந்தத் துக்கத்திலேயே தன்னலத்தின் சாயலும் சேர்ந்திருக்கிறது. சாவைச் சந்திப்பதற்கு நானும் தயாராக இருந்தால், வாழ்வில் அதுதான் மிக உயர்வான, வரவேற்கத்தக்க நெருக்கடி என்று நான் கருதினால், என் சகோதரர்

# 2

# மரண பயமின்மையே சுயராஜ்யம்

சுயராஜ்யத்திற்குக் கூறப்படும் விளக்கங்களையெல்லாம் நான் சேகரித்துக் கொண்டு வந்தேன். மரண பயத்தை விட்டொழித்து விடுவதுதான் சுயராஜ்யம் என்பதும் அந்த விளக்கங்களில் ஒன்ருக இருக்கும். மரண பயம் தம்மை ஆட்கொண்டு விட அனுமதிக்கும் ஒரு நாட்டின் மக்கள், சுயராஜ்யத்தை அடைந்து விடவே முடியாது. அப்படியே அடைந்து விட்டாலும், அந்தச் சுயராஜ்யத்தை அவர்களால் காப்பாற்றவே முடியாது.

ஆங்கில மக்கள் தங்கள் உயிரை விட எப்போதும் தயாராக இருக்கிருர்கள். சாதாரண நோய்க்கு அதிகமானது அல்ல சாவு என்றுதான் அரபுகளும் பட்டாணியரும் கருதுகிருர்கள். உறவினர் ஒருவர் இறந்து விட்டால் அவர்கள் அழுவதே இல்லை. மரண பயம் என்பது போயர் பெண்களுக்குக் கொஞ்சமும் தெரியவே தெரியாது. போயர் யுத்தத்தில் ஆயிரக்கணக்கான இளம் போயர் பெண்கள் விதவைகளாயினர். இதற்காக அவர்கள் கவலைப்படவே இல்லை. கணவனே, மகனே இறந்து போனன் என்பது அவர்களுக்குப் பெரிய விஷயமே அல்ல. தேசத்தின் மானம் காக்கப்பட்டால், அதுவே அவர்களுக்குப் போதுமானது. நாடு அடிமைப்பட்டால், கணவன் இருக்கிருன் என்பதனல் மாத்திரம் என்ன பயன்? ஒரு மகனை அடிமையாக வளர்ப்பதை விட, அவனுடைய பூத உடலைப் புதைத்து அழிவற்றதான அவன் நினைவைப் போற்றுவது எவ்வளவோ மேலானது. இவ்வாறு போயர் பெண்கள் தங்கள் உள்ளங்களை உறுதிப்படுத்திக்

---

இறந்துவிட்டார் என்பது துக்க சம்பவமே அல்ல. நமக்குச் சாவு வந்துவிடுமோ என்று நாமே அதிகமாக அஞ்சுவதனல்தான் மற்றவர்கள் இறந்துவிட்டால் கண்ணீர் வடிக்கிருேம். அழியக்கூடியது உடல், அழிவில்லாதது ஆன்மா என்பதை அறிந்த நான், உடலிலிருந்து ஆன்மா பிரிந்துவிடுவதைக் கண்டு எப்படி அழ முடியும்? ஆனல், இந்த அழகான, ஆறுதலளிக்கும் தத்துவத்தில் உண்மையான நம்பிக்கை கொள்ளுவதற்கு ஒரு நிபந்தனையும் இருக்கிறது. இதில் நம்பிக்கை இருக்கிறவர், உடலின் சுகானுபவங்களுக்கு இடங் கொடுத்துவிடக்கூடாது; அதை அடக்கி ஆள்பவராக இருக்க வேண்டும். அவர் தன்னுள் குடிகொண்டிருப்பவருக்குப் பணி புரியக் கூடிய வகையில் தன்னுடைய தேவைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டுமே ஒழிய, சரீரம் தன்னை அடக்கி ஆளுவதற்கு விட்டுவிடக்கூடாது. பிறருடைய மரணத்திற்காகத் துக்கப்படாமலிருப்பது, அநேகமாக நிரந்தரமான துக்கம் நிலவும் ஒரு நிலையை ஏற்றுக்கொள்ளுவதாக ஆகும். சரீரத்திற்கும் ஆன்மாவுக்குமிடையே உள்ள இந்தத் தொடர்பே துக்ககரமானதுதான்.

"இவையே என்னை இப்பொழுது ஆட்கொண்டுள்ள எண்ணங்களாகும். இப்போதைக்கு என்னல் மற்றெரு கடிதம் எழுத முடியாது. என் உணர்வு இல்லாமலே இதை நான் எழுதியுள்ளேன்."

கொண்டார்கள். தங்கள் அருமைக் கணவர்களேயும் மகன்களேயும் மரணத்தினிடம் ஆனந்தத்தோடு ஒப்படைத்தார்கள்.

நான் கூறும் அம்மக்கள், கொல்லுகிறார்கள்; கொல்லப்படுகிறார்கள். ஆனால், கொல்லாத, எனினும் தாங்களே சாகத் தயாராயிருக்கும் மக்களின் நிலே என்ன? அத்தகைய மக்களைக் குறித்து உலகம் பெருமைப்பட வேண்டும். இப்பூமியின் உப்பே அவர்கள் தான்.

ஆங்கிலேயரும் ஜெர்மானியரும் ஒருவருக்கொருவர் போரிட்டுக்கொண்டார்கள். அவர்கள் கொன்றார்கள்; கொல்லப்பட்டார்கள். இதன் பலனைகப் பகைமை அதிகமாயிற்று. அமைதியின்மைக்கு முடிவே இல்லை; ஐரோப்பாவின் இன்றைய நிலைமை பரிதாபப்பட வேண்டியதாக இருக்கிறது. சூதும் வாதும் அதிகமாக இருக்கின்றன. மற்றவர்களைத் தந்திரமாக ஏமாற்றிவிட வேண்டுமென்று ஒவ்வொருவரும் முயற்சி செய்கிறார்கள். ஆனால், நாம் வளர்த்துக் கொண்டு வரும் அஞ்சாமை, அதிக உயர்வானதும் பரிசுத்தமானதுமாகும். ஆகையால், வெகு சீக்கிரத்திலேயே முக்கியமான வெற்றியை நாம் அடைந்து விட முடியும் என்று நம்புகிறோம்.

நாம் சுயராஜ்யத்தை அடைந்து விடும்போது, நம்மில் அநேகர் மரண பயத்தை விட்டொழித்திருப்பார்கள். அப்படி விட்டொழித்து விடவில்லையானால், நாம் சுயராஜ்யத்தை அடைந்திருக்கவே மாட்டோம். இப்பொழுதே அநேக இளைஞர்கள் லட்சியத்தை அடைவதற்காக உயிர் விட்டிருக்கிறார்கள். அலிகாரில் மாண்டவர்களெல்லோரும் இருபத்தோரு வயதுக்குட்பட்டவர்கள். அவர்கள் யார் என்பது ஒருவருக்கும் தெரியாது. அரசாங்கம் இப்பொழுது துப்பாக்கியால் சுட முற்படுமானால், முன்னணியில் இருப்பவர்கள் சிலருக்கு உயிரைத் தியாகம் செய்யும் வாய்ப்பு இருக்கும் என்று நான் நம்பிக் கொண்டிருக்கிறேன்.

குழந்தைகளோ, இளைஞர்களோ அல்லது கிழவர்களோ இறந்துவிடுவதைக் குறித்து நாம் ஏன் கலக்கமடைய வேண்டும்? இந்த உலகில் யாரும் பிறக்காத, யாரும் சாகாத நேரம் ஒரு கணமேனும் இல்லை. ஒரு குழந்தை பிறந்ததும் குதூகலப்படுவதும், ஒருவர் இறந்ததும் துக்கப்படுவதுமான முட்டாள்தனத்தை நாம் உணரவேண்டும். ஆன்மா உண்டு என்பதை நம்புகிறவர்கள், ஆன்மா சாவதில்லை என்பதையும் அறிய வேண்டும். இதை அறியாத ஹிந்துவோ, முஸ்லிமோ, பார்ஸியோ யார்? உயிரோடிருப்பவர்களின் ஆன்மாக்களும், இறந்தவர்களின் ஆன்மாக்களும் ஒன்றே. படைப்பும் அழிப்பும் என்றென்றும் இடைவிடாது நடந்து கொண்டுதான் வருகின்றன. ஆனந்தப்

படுவதற்கோ, அல்லது துக்கப்படுவதற்கோ இதில் எதுவுமே இல்லை. உறவு என்ற கருத்தை நமது நாட்டு மக்களைப் பொறுத்த வரைக்குமே நாம் விஸ்தரித்துக் கொண்டு, நம் நாட்டில் ஏற்படும் ஜனனங்களெல்லாம் நம் சொந்தக்குடும்பத்தில் ஏற்படும் ஜனனங்களாகவே வைத்துக் கொண்டு பார்த்தாலும், எத்தனைப் பிறப்புகளுக்காக நாம் கொண்டாட முடியும்? நம் நாட்டில் ஏற்படும் சாவுகளுக்கெல்லாம் நாம் அழுவதென்றால், நம் கண்களில் நீர் என்றும் வற்றாமல் அழுதுகொண்டே இருக்க வேண்டியதுதான். இந்த வகையில் எண்ணிப் பார்த்தால், மரண பயத்திலிருந்து விடுபடுவதற்கு இது உதவியாக இருக்கும்.

வேதாந்திகளைக் கொண்ட நாடு இந்தியா என்று சொல்லப் படுகிறது. இந்தப் பெருமை நமக்கு உண்டு என்று கூறிக் கொள்ள நாம் விரும்பாமலும் இருந்ததில்லை. என்றாலும், சாவு என்னும்போது, வேறு எந்த நாட்டினரும் நம்மைப் போல அவ்வளவு பயப்படுவதில்லை. மேலும், இங்கே இந்தத் திக்கற்ற நிலையை, ஹிந்துக்களைப் போல வேறு எந்தச் சமூகத்தினரும் அவ்வளவு மோசமாகக் காட்டிக் கொண்டு வரவுமில்லை. ஒரு குழந்தை பிறந்து விட்டால் போதும்; நம்மை அறியாமலேயே நாம் குதூகலமடைந்து விடுகிறோம். ஒருவர் செத்துவிட்டாலோ, அன்று இரவு முழுவதும் அக்கம் பக்கத்திலிருப்பவர்கள் தூங்க முடியாதபடி உரத்த குரலில் ஒப்பாரி வைத்துப் புலம்புகிறோம். சுயராஜ்யத்தை அடைய நாம் விரும்புவோமானால், சுயராஜ்யத்தை அடைந்த பிறகு நாம் பெருமைப்படுவதற்கு ஏற்றதாக அதைச் செய்ய நாம் விரும்பினால், இந்த ஆபாசமான காட்சியை நாம் முற்றிலும் விட்டொழிக்க வேண்டும்.

சாவுக்கே அஞ்சாத ஒருவரைச் சிறை வாசம் என்ன செய்து விட முடியும்? இதைக் குறித்து வாசகர் சிறிது சிந்தித்துப் பார்த்தால், அவருக்கு ஓர் உண்மை புலனாகும். சுயராஜ்யம் கிடைப்பது தாமதமாகிறது என்றால், சாவையும், அதற்குக் குறைவானதாகவுள்ள மற்ற அசௌகரியங்களையும் அனுபவிக்க அமைதியான வகையில் நாம் தயாராக இல்லாததுதான் அதற்குக் காரணம் என்பதை அவர் அறிவார்.

ஒரு பாவமுமறியாத மக்கள், சாவை வரவேற்க மேலும் மேலும் அதிகமாக முன் வர வர, அவர்களுடைய தியாகங்கள், எல்லோருக்குமே விமோசனத்தை அளித்து விடும் அபார சக்தியைக் கொண்டவைகளாகிவிடும்; குறைந்தபட்சம் துன்பத்தையே அவர்கள் அனுபவிக்கவும் நேரும். துன்பங்களை ஆனந்தமாக அனுபவிக்க ஆரம்பித்து விட்டால், பிறகு துன்பங்கள் துன்பங்களாகமாட்டா; அவை மங்காத இன்பங்களாகிவிடும். துன்பங்களை அனுபவிக்க வேண்டி வருமே என்று அஞ்சி ஓடுகிறவன், அத்துன்பங்கள் உண்மையில் அவனை அணுகுவதற்கு முன்பே

எல்லேயில்லாத துன்பங்களை அனுபவித்துவிடுகிருன். அத் துன்பங்கள் வரும் போது அவன் பாதி செத்து விட்டவனுகவே ஆகிவிடுகிருன். ஆனல், எது வந்தாலும் சரி என்று எதையும் சந்தோஷமாக அனுபவிக்கத் தயாராக இருப்பவன், துன்பத்தையே அனுவிப்பதில்லே. அவன் சந்தோஷமாக இருப்பதே துன்பங்களுக்கு மாற்ருகிவிடுகிறது.

இந்த ஆண்டிலேயே சுயராஜ்யத்தை அடைந்துவிடுவதென்ருல், நமக்கு சாவும் நேரலாம் என்று நாம் எதிர்பார்த்துத்தான் ஆகவேண்டும். இதனலேயே இந்த விஷயத்தைக் குறித்து நான் எழுத வேண்டியதாயிற்று. முன்கூட்டியே விபத்திற்குத் தயாராக இருப்பவன், எப்பொழுதும் விபத்திலிருந்து தப்பித்துக்கொண்டு விடுவது உண்டு. நம் விஷயத்திலும் அப்படியே நடந்து விடவும் கூடும். இவ்விதம் தயாராக இருப்பது என்பதும், சுயராஜ்யத்தில் அடங்கியிருக்கிறது என்பது என் திடமான கருத்து. சுதேசி வெற்றிகரமானதாகிவிட்டதும், நம்மை மேற்கொண்டும் பரிசோதிக்க வேண்டியது அவசியம் என்று இந்த அரசாங்கமோ, வேறு யாருமோ கருதவே மாட்டார்கள்.

என்ருலும், எதற்கும் தயாராக இருக்க வேண்டிய அவசியத்தை அலட்சியம் செய்துவிடாமலிருப்பது நல்லது. அதிகாரத்தைப் படைத்திருப்பது, மனிதரைக் குருடர்களாகவும் செவிடர்களாகவும் செய்துவிடுகிறது. கண் முன்னலேயே நடப்பவைகளை அவர்களால் காண முடிவதில்லே. காதுக்கு எட்டுகிறவைகளைக் கேட்டுக் கொள்ளுவதும் அவர்களால் ஆவதில்லே. ஆகையால், அதிகார போதையில் இருக்கும் இந்த அரசாங்கம், எதைத்தான் செய்யாது என்று யாரும் அறிய முடியாது. எனவே தேசாபிமானமுள்ளவர்கள், சாவுக்கும், சிறைப்படுவதற்கும், மற்றக் கஷ்டங்களுக்கும் தயாராக இருக்க வேண்டும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

வீரர்கள், சிரித்த முகத்தோடு சாவை ஏற்பார்கள். எனினும், அவர்கள் எச்சரிக்கையுடன் இருப்பார்கள். முட்டாள்தனமான துணிச்சல் என்பதற்கே அகிம்சைப் போரில் இடமில்லே. ஒழுக்கக் கேடான ஒரு செய்கையின் மூலம் சிறைப்படவோ, அன்றிச் சாகவோ நாம் விரும்பவில்லே. இந்த அரசாங்கத்தின் அடக்குமுறைச் சட்டங்களை எதிர்ப்பதன் மூலம் நாம் தூக்குமேடைகளில் ஏற வேண்டும்.

[1921 அக்டோபர் மாதத்திய குஜராத்தி 'நவஜீவனி'லிருந்து மொழி பெயர்த்தது]

# 3

# சத்தியாக்கிரகத்திற்கு வேண்டிய ஒழுக்கம்

**வாசகர்:** *நீங்கள் கூறுவதிலிருந்து, பலவீனர்களாக உள்ளவர்களுக்குச் சாத்விக எதிர்ப்பு அற்புதமான ஆயுதம்; ஆனால், அவர்கள் பலத்துடன் இருக்கையில் ஆயுதத்தை உபயோகிக்கலாம் என்ற முடிவுக்கு நான் வருகிறேன்.*

**ஆசிரியர்:** *இது முற்றிலும் அறியாமையாகும். சாத்விக எதிர்ப்பு, அதாவது ஆன்ம பலம் இணையில்லாதது; ஆயுத பலத்தைவிட அது உயர்ந்தது. அப்படியிருக்க, அதைப் பலவீனர்களின் ஆயுதம் என்று எப்படிக் கருத முடியும்? சாத்விக எதிர்ப்பாளருக்கு உள்ள தீரத்தைச் சரீர பலத்தை நம்புகிறவர்கள் அறியார். தான் விரும்பாத ஒரு சட்டத்தை, ஒரு கோழை எப்பொழுதாவது மீறிவிட முடியும் என்று நம்புகிறீர்களா? தீவிரவாதிகள், மிருக பலத்தையே ஆதரிப்பவர்களெனக் கருதப்படுகிறது. அப்படியானால், சட்டங்களுக்குப் பணிவதைப் பற்றி அவர்கள் ஏன் பேசுகிறார்கள்? அவர்கள் மீது நான் குறை கூறவில்லை. அதைத் தவிர அவர்கள் வேறு எதுவும் சொல்ல முடியாது. ஆங்கிலேயர்களை விரட்டிவிடுவதில் வெற்றி பெற்று அவர்களே கவர்னர்களாகிவிடும்போது, நீங்களும் நானும் அவர்களுடைய சட்டங்களுக்கு உடன்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். அவர்களுடைய அரசியலுக்கு அதுவே பொருத்தமானது. ஆனால், ஒரு சாத்விக எதிர்ப்பாளரோ, தம்மைப் பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுச் சுக்குச் சுக்காக்கிச் சிதற அடித்தாலும், தம் மனச்சாட்சிக்கு எதிரான சட்டத்தை எதிர்த்தே தீருவேன் என்பார்.*

*பீரங்கிக்குப் பின்னால் இருந்துகொண்டு சுட்டு, மற்றவர்களைச் சிதற அடிப்பது வீரமா அல்லது புன்முறுவல் பூத்த முகத்துடன் பீரங்கியை அணுகி சுக்கலாகிச் சிதறுண்டு போவது வீரமா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? உண்மையான போர் வீரன் யார் - சாவை எப்பொழுதும் தனது ஆப்த நண்பனாக வைத்துக்கொண்டிருப்பவனா அல்லது மற்றவர்களின் மரணத்திற்கு வழி செய்கிறவனா? வீரமோ அல்லது மனிதத் தன்மையோ இல்லாதவன், என்றுமே சாத்விக எதிர்ப்பாளனாக இருக்க முடியாது. இதை நம்புங்கள்.*

என்றாலும், ஒன்றை நான் ஒப்புக்கொள்ளுவேன். உடலில் ஒருவர் பலவீனமாயிருந்தாலும், இந்த எதிர்ப்பை அளிக்க அவரால் முடியும். லட்சக்கணக்கானவர்களைப் போலவே தனிப்பட்ட ஒருவராலும் இந்த எதிர்ப்பைக் கையாள முடியும். ஆண்களும் பெண்களும் இதில் ஈடுபடலாம். ராணுவத்திற்கு வேண்டியதைப் போன்ற பயிற்சி இதற்குத் தேவையில்லை. ஜப்பானிய மல் யுத்தத்தைப் போன்றது எதுவும் இதற்கு வேண்டியதில்லை. மனத்தைக் கட்டுப்படுத்துவது ஒன்றே இதற்கு வேண்டும். இதை அடைந்துவிட்டால், காட்டு ராஜன் (சிங்கம்) போல் மனிதன் சுயேச்சையாளனாகிவிடுவான்; அவனுடைய பார்வை பட்ட மாத்திரத்திலேயே எதிரி குலைந்து போவான்.

சாத்விக எதிர்ப்பு எல்லாப் பக்கங்களிலும் கூர்மை உடையதோர் வாள்; எப்படி வேண்டுமானாலும் அதை உபயோகப்படுத்தலாம். உபயோகித்தவரை அது வாழ்த்துகிறது; யார்மீது அது பிரயோகிக்கப்படுகிறதோ, அவரையும் அது வாழ்த்தும். ஒரு சொட்டு ரத்தத்தையும் சிந்தாமல் எவ்வளவோ பெரிய பலன்களை உண்டாக்கும். அது துருப்பிடித்து விடுவதே இல்லை; அதைத் திருடிவிடவும் முடியாது. சாத்விக எதிர்ப்பாளர்களிடையே போட்டி, களைப்பை அது உண்டாக்குவதில்லை. சாத்விக எதிர்ப்பான வாளுக்கு உறை தேவையில்லை. இத்தகையதோர் ஆயுதத்தைப் பலவீனர்களின் ஆயுதம் என்று நீங்கள் எண்ணியது விசித்திரமேயாகும்.

**வாசகர்:** சாத்விக எதிர்ப்பு இந்தியாவுக்கு விசேடமானதொன்று என்று நீங்கள் கூறினீர்கள். பீரங்கிகள் இந்தியாவில் என்றும் உபயோகத்தில் இருந்ததில்லையா?

**ஆசிரியர்:** இந்தியா என்றால் சில ராஜாக்கள் என்பதே உங்கள் அபிப்பிராயம்போல் இருக்கிறது. ஆனால், இந்த ராஜாக்களும் நாமுங்கூட இருந்து வருவதற்குப் பொறுப்பானவர்களான கோடானுகோடி மக்களே இந்தியா என்பது என் அபிப்பிராயம்.

மன்னர்கள், எப்பொழுதும் அவர்களுக்கு ஏற்ற ஆயுதங்களையே உபயோகிப்பார்கள். பலாத்காரத்தை உபயோகிப்பதிலேயே அவர்கள் வளர்ந்திருக்கிறார்கள். அவர்கள் அதிகாரம் செலுத்த விரும்புகிறார்கள். அதிகாரத்திற்குப் பணிய வேண்டியவர்களுக்குத் துப்பாக்கி தேவையில்லை. உலகம் முழுவதுமே இப்படிப்பட்டவர்களே பெரும்பான்மையினராக இருக்கின்றனர். உடல் வலிமையையோ அல்லது ஆன்ம பலத்தையோ இவர்கள் கற்றுக்

கொள்ள வேண்டியிருக்கிறது. உடல் பலப் பிரயோகத்தைக் கற்றுக்கொள்ளும்போது, ஆள்வோரும் ஆளப்படுவோரும் பைத்தியக்காரர்களைப் போன்றே ஆகிவிடுகின்றனர். ஆனால், ஆன்ம பலத்தை உபயோகிக்கக் கற்றுக் கொள்ளும்போது ஆட்சியாளரின் ஆக்ஞைகள், வாள் முனைக்கு அப்பால் போய்விடுவதில்லை. ஏனெனில், உண்மையான மனிதர்கள், அக்கிரமமான ஆக்ஞைகளை அலட்சியம் செய்து விடுகின்றனர். விவசாயிகள், வாளினால் ஒடுக்கப்பட்டுவிட்டதே இல்லை; என்றும் அது முடியவே முடியாது. வாளை உபயோகிக்க அவர்களுக்குத் தெரியாது; மற்றவர்கள் அதை உபயோகிக்கும்போதும் அவர்கள் மிரண்டுவிடுவதில்லை. மரணத்தையே தம் மெல்லணையாக நினைத்துத் துயில் கொள்ளும் மக்களைக் கொண்ட நாடே சிறந்த நாடாகும். சாவுக்கு அஞ்சாதவனை எந்தப் பயமும் எதுவும் செய்ய முடியாது. மிருக பலத்தின் பிரமையில் மயங்கிக் கிடப்பவர்களுக்கு அந்தச் சித்திரம் மிகைபட்டதன்று. உண்மை என்னவென்றால், இந்தியாவில் மக்கள் எல்லோருமே தங்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும், பொதுவாகச் சாத்விக எதிர்ப்பையே அனுசரித்து வருகின்றனர். நமக்கு அதிருப்தியை உண்டாக்கிவிடும் ஆட்சியாளருடன் நாம் ஒத்துழைக்க மறுத்துவிடுகிறோம். இதுதான் சாத்விக எதிர்ப்பு.

ஒரு சம்பவம் எனக்கு நினைவிருக்கிறது. ஒரு சிறு சமஸ்தானத்தில், கிராமவாசிகளுக்கு மன்னரின் ஆக்ஞை ஒன்று அறிவிக்கப்பட்டது. கிராமவாசிகள் உடனே கிராமத்திலிருந்து வெளியேற ஆரம்பித்தனர். மன்னர் பயந்துவிட்டார். தமது குடிகளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தமது ஆக்ஞையையும் ரத்து செய்தார். இந்தியாவில் இத்தகைய சம்பவங்கள் பல நடந்திருப்பதைக் காணலாம். சாத்விக எதிர்ப்பு எங்கே மக்களுக்கு வழி காட்டும் சக்தியாக இருக்கிறதோ, அங்கேதான் உண்மையான ஆட்சி கைகூடும். மற்ற ஆட்சி எதுவும் அந்நிய ஆட்சியே.

**வாசகர்:** அப்படியானால், உடம்புக்குப் பயிற்சி அளிக்க வேண்டிய அவசியமே இல்லை என்கிறீர்களா?

**ஆசிரியர்:** நிச்சயமாக நான் அப்படி எதையும் சொல்லவேயில்லை. உடற்பயிற்சி பெற்றிருந்தாலன்றிச் சாத்விக எதிர்ப்பாளராவது கஷ்டம். பொதுவாக, பருத்துவிட்டதனால் பலவீனமாகிவிட்ட உடலில் இருக்கும் மனமும் பலவீனமானதாகவே இருக்கும். மன வலிமை இல்லாதபோது ஆன்ம பலமும் இருக்க முடியாது. குழந்தைக் கல்யாணம்,

ஆடம்பர வாழ்க்கை ஆகியவைகளை ஒழித்து நாம் நமது உடல் பலத்தை விருத்தி செய்துகொள்ள வேண்டும். சிதைந்த உடலோடு கூடியவனைப் பீரங்கி வாயில் நிற்கும்படி நான் கூறுவேனாயின், என்னை உலகம் எள்ளி நகைக்கும்.

**வாசகர்:** அப்படியானால், சாத்விக எதிர்ப்பாளராக ஆவது சின்ன விஷயமே அல்ல என்றே நீங்கள் கூறுவதிலிருந்து தெரிகிறது. அப்படித்தான் என்றால், ஒருவர் சாத்விக எதிர்ப்பாளராக எப்படி ஆகலாம் என்பதை நீங்கள் விளக்க வேண்டும்.

**ஆசிரியர்:** சாத்விக எதிர்ப்பாளராவது எளிதானதே. ஆனால், இது கஷ்டமானதுங்கூட. பதினான்கு வயதுடைய ஓர் இளைஞன் சாத்விக எதிர்ப்பாளனானதை அறிவேன். உடலில் வலிவிருந்து, மற்ற வகையிலும் இன்பம் அனுபவிப்பவர், சாத்விக எதிர்ப்பைக் கையாள முடியாததையும் அறிவேன். நாட்டின் சேவைக்காகச் சாத்விக எதிர்ப்பாளராக விரும்புவோர் சரியான கற்பை அனுசரிக்க வேண்டும், எளிமையை மேற்கொள்ள வேண்டும், சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும், அஞ்சாமையை வளர்க்க வேண்டும் என்று எவ்வளவோ அனுபவத்திற்குப் பிறகு எனக்குத் தோன்றுகிறது.

கற்பு, கட்டுப்பாடுகளில் மிகப் பெரியது. அது இல்லாது போனால், வேண்டிய உறுதியை மனம் அடையாது. கற்பில்லாதவன், தாக்குப் பிடிக்கும் சக்தியை இழந்து விடுகிறான்; ஆண்மையை இழந்து கோழையும் ஆகிவிடுகிறான். மிருக உணர்ச்சிகளில் ஈடுபட மனத்தைச் சிதறவிடுவதனால் பெரிய காரியங்களைச் செய்யவே இயலாது. எத்தனையோ சம்பவங்களைக் கொண்டு இதை நிரூபிக்க முடியும். அப்படியாயின், விவாகமான ஒருவர் என்ன செய்வது என்ற கேள்வி இயற்கையாகவே எழுகிறது. என்றாலும், இக்கேள்வி எழ வேண்டியதே இல்லை. கணவனும் மனைவியும் தங்களுடைய இச்சைகளைத் தீர்த்துக் கொள்ளுவார்களானால், அந்த அளவில் அதுவும் மிருக உணர்ச்சியில் ஈடுபடுவதேயாகும். இன விருத்திக்காக அல்லாமல், மற்றதற்காக இத்தகைய நுகர்ச்சிகளில் ஈடுபடுவது கண்டிப்பாகத் தடுக்கப்படுகிறது. ஆனால், ஒரு சாத்விக எதிர்ப்பாளர் குறைந்த அளவிலும் இத்தகைய நுகர்ச்சிக்கு இடம் தரவே கூடாது. ஆகையால், கல்யாணமான ஒருவர் பிரமச்சரியத்தை முற்றிலும் அனுசரிக்கலாம். இந்த விஷயமே விவரமான ஆராய்ச்சிக்கு உட்பட்டதென்று பல கேள்விகள் எழுகின்றன. ஒருவர் தன்னுடைய மனைவியுடன் எப்படி நடந்துகொள்ளுவது, அவளுடைய உரிமைகள் யாவை என்பனவெல்லாம் எழுகின்றன.

என்றாலும், ஒரு பெரிய வேலையில் ஈடுபட விரும்புகிறவர்கள் இந்தப் புதிர்களைத் தீர்த்துக்கொண்டே ஆக வேண்டும்.

பிரம்மச்சரியம் எப்படி அவசியமோ, அதே போல வறுமையும் அவசியம். பண ஆசையும், சாத்விக எதிர்ப்பும் சேர்ந்திருக்க முடியாது. பணம் படைத்தவர்கள், அதை வீசி எறிந்து விடுவார்கள் என எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனால், பண சம்பந்த மாக அவர்கள் சிரத்தை எடுத்துக்கொள்ளக்கூடாதென எதிர் பார்க்கப்படுகிறது. சாத்விக எதிர்ப்பைக் கைவிடுவதைவிட, கடைசி காசு வரை இழந்துவிடத் தயாராக இருக்க வேண்டும்.

நமது விவாதத்தின்போது சாத்விக எதிர்ப்பு, சத்தியத்தின் பலம் என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், சத்தியத்தை எப்படியும் கடைப்பிடித்தாக வேண்டும். ஓர் உயிரைக் காப்பாற் றுவதற்காகப் பொய் சொல்லலாமா என்பதைப் போன்ற சாதா ரணமான கேள்விகளெல்லாம் எழுகின்றன. ஆனால், இக்கேள்வி களெல்லாம், பொய் சொல்லுவது நியாயம் என்று விவாதிக்க விரும்புகிறவர்களுக்கே எழும். ஒவ்வொரு சமயத்திலும் சத்தி யத்தையே பின்பற்ற விரும்புகிறவர்களுக்கு இத்தகைய குழப்ப மில்லை. அப்படி அவர்கள் இருந்தாலும், தவறான நிலைமையி லிருந்து அப்பொழுதும் அவர்கள் காப்பாற்றப்படுகிறார்கள்.

அஞ்சாமையில்லாமல் சாத்விக எதிர்ப்பு ஒரு படிகூட முன்னால் போக முடியாது. தங்களுடைய சொத்துக்கள், போலி கௌரவம், தங்கள் உறவினர், அரசாங்கம், உடலுக்கு ஏற்படக்கூடிய காயம் அல்லது சாவு இவற்றில் பற்றைத் துறந்தவர் மட்டுமே, சாத்விக எதிர்ப்பைப் பின்பற்ற முடியும்.

இவைகளையெல்லாம் அனுசரிப்பது சிரமம் என்ற எண்ணத்தில் இவைகளை அனுசரிப்பதை விட்டுவிடக்கூடாது. தம் செய்கையாலன்றித் தானே வரும் எந்தச் சிரமங்களையும் துன்பங்களையும் சமாளித்துக் கொள்ளுவதற்கான ஆற்றலை மனித உள்ளத்திற்கு இயற்கை அளிக்கிறது. நாட்டிற்காகச் சேவை செய்ய விரும்பாதவர்களுக்கும் இக்குணங்கள் இருக்க வேண்டியவையே. ஆயுதங்களை உபயோகிப்பதில் பழகிக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கும் ஏறக்குறைய இக்குணங்கள் இருந்தாக வேண்டும் என்பதில் சந்தேகமே இல்லை. போர்வீரனாக இருக்கப் போகிறவன், பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதோடு, வறுமையே தனது கதி என்பதிலும் திருப்தி அடைய வேண்டும். அச்சம் கொண்டவனைப் போர் வீரனாகவே கருத முடியாது. உண்மையில், அவன் சத்தியத்தைக் கடைப் பிடிப்பவனாக இருக்க வேண்டும் என்பதில்லை எனக் கருதப்பட லாம். ஆனால், அந்தத் தன்மை, உண்மையான அஞ்சாமையைத் தொடர்ந்து ஏற்படுகிறது. ஒருவன் சத்தியத்தைக் கைவிடு

கிறுன் என்றுல், ஏதோ ஒருவகையில் அல்லது உருவத்தில் பயத்தினுலேயே அப்படிச் செய்கிறுன். அப்படியானுல் மேற்கண்ட நான்கு குணங்களும் யாரையும் பயமுறுத்திவிட வேண்டியதில்லை. உடல் பலத்திலேயே நம்பிக்கை வைத்திருப்பவனுக்கும் சாத்விக வீரனுக்கும் தேவைப்படாத பயனற்ற சில குணங்களும் வேண்டியிருக்கும் என்பதையும் இங்கே குறிப்பிட வேண்டும். வாள் ஏந்துபவனுக்கு வேண்டியிருக்கும் அதிகப்படியான முயற்சிகளெல்லாம், அச்சத்தினுலேயே ஏற்படுகின்றன என்பதை நீங்கள் காணலாம். அவன், அஞ்சாமையே உருவாக இருப்பானுயின், அவன் கையிலிருந்து வாள் அத்தருணத்திலேயே விழுந்துவிடும். அதன் உதவி அவனுக்குத் தேவையில்லை. துவேஷமில்லாதவனுக்கு வாள் வேண்டியதே இல்லை. கையில் ஒரு கோலுடன் இருந்தவனுக்கு எதிரே திடீரென ஒரு சிங்கம் வந்துவிடுகிறது. அவன் தற்காப்புக்காக இயல்பாகவே கோலை ஓங்குகிறுன். அஞ்சாமை என்பது தன்னிடத்தில் கொஞ்சமும் இல்லாதிருந்தும், தான் அதைப் பற்றிப் பிதற்றிக்கொண்டு இருப்பதை அவன் காண்கிறுன். அப்பொழுதே கோலைப் போட்டுவிட்டு அச்சம் ஒழிந்தவனுகத் தன்னை உணர்கிறுன்.

—'இந்திய சுயராஜ்யம்' —[மகாத்மா காந்தி நூல்கள்'—முதல் தொகுப்பு பக்கங்கள் - 693 - 698.]

பகுதி ஐந்து

# சத்தியாக்கிரகத்தின் முக்கிய விதிகள்

## 1

## சத்தியாக்கிரக ஆசிரமம்

[சத்தியாக்கிரகிக்கு ஒழுக்கத்திலும் மற்றவைகளிலும் கண்டிப்பான பயிற்சி அவசியம் என்பது மகாத்மா வின் திடமான அபிப்பிராயம். தென்னுப்பிரிக்காவில் சத்தியாக்கிரக காலத்தில் போனிக்ஸ் குடியேற் றத்தை நடத்திய காந்திஜி, இந்தியாவுக்குத் திரும்பி யதும் அகமதாபாத்தில் சத்தியாக்கிரக ஆசிரமத்தை அமைத்தார். இந்த ஆசிரமத்தைக் குறித்து மகாத்மா, 1916 பிப்ரவரி 16-ஆம் தேதி சென்னை கிறிஸ்தவ வாலிபர் சங்க மண்டபத்தில் பேசினர். அக்கூட்டத்திற்குச் சென்னை கிறிஸ்தவக் கல்லூரியைச் சேர்ந்த பூஜ்ய ஜி. பிட்டன்டிரிக் தலைமை வகித்தார். சத்தியாக்கிரகிக்கு எத்தகைய பயிற்சிகள் வேண்டும் என்பதை இப்பிரசங்கம் தெளிவாகக் காட்டுவதால், இது முக்கியமானதாகும்.]

இந்தியாவில், ஏதாவது ஓர் இடத்தில் ஓர் ஆசிரமத்தை ஆரம்பிக்கப் போகிறேன் என்று சென்ற ஆண்டில் இதே இடத் தில் என்னுடன் பேச வந்த மாணவர்கள் பலரிடம் சொன்னேன். அதே இடத்தைப் பற்றியே இன்று காலை உங்களுக்குச் சொல்லப் போகிறேன். என்னுடைய பொது வாழ்க்கை முழுவ திலும் ஒரு விஷயத்தை உணர்ந்திருக்கிறேன்; உணர்ந்தும் வருகிறேன். நமக்கு முக்கியமாக இப்பொழுது வேண்டிய தெல்லாம், ஒழுக்கத்தை வளர்த்துக்கொள்ளுவதேயன்றி வேறு எதுவும் அல்ல. ஒரு நாட்டிற்கு, அநேகமாக உலகத்தின் எல்லா நாடுகளுக்கும் இப்பொழுது வேண்டியதாக இருப்பது இதுவே தான். பெரும் தேசபக்தராகிய ஸ்ரீ கோகலே, இதே கருத்தையே எடுத்துக் கூறி வந்தார். (கரகோஷம்) நாம் எதை அடைய விரும்புகிறோமோ அதைப் பெறுவதற்கான ஒழுக்க பலம் நமக்கு இருந்தாலன்றி நாம் அதை அடையமாட்டோம்; எதையும் அடையும் தகுதியும் நமக்கு இல்லை என்று அவர் அநேக பிரசங்

கங்களில் கூறி வந்திருக்கிறார் என்பதை நீங்கள் அறிவீர்கள். அதனாலேயே அந்த மகத்தான ஸ்தாபனமாகிய 'இந்திய ஊழியர் சங்க'த்தை அவர் ஆரம்பித்தார். அந்தச் சங்கத்தின் விதிகளைக் குறித்து அவர் வெளியிட்ட அறிக்கையில், இந்நாட்டின் ராஜீய வாழ்க்கையை ஆன்மிகமானதாகச் செய்ய வேண்டியது அவசியம் என்று அவர் கூறினார் என்பதும் உங்களுக்குத் தெரியும். இதில் நம்முடைய சராசரித் தரம், அநேக ஐரோப்பிய நாடுகளில் இருந்து வரும் சராசரித் தரத்தைவிடக் குறைவானதாக இருந்து வருகிறது என்று அவர் அடிக்கடி கூறி வந்திருப்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஸ்ரீ கோகலேயை என்னுடைய ராஜீயக் குருவாகக்கொள்ளுவதில் நான் பெருமையடைகிறேன். என்றாலும் அவர் கூறியிருப்பதற்கு உண்மையான ஆதாரம் இருக்கிறதா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், படித்த இந்தியரைப் பொறுத்தவரையில், அவ்விதம் அவர் கூறியதற்கு அதிக நியாயங்கள் உண்டு என்றுதான் நான் நம்புகிறேன். சமூகத்தில் படித்த பகுதியினராக இருக்கும் நாம், தவறு செய்துவிட்டோம் என்பதனால் அல்ல இது; சந்தர்ப்பவாதிகளாகி விட்டோம் என்பதனால்தான். அது எப்படியானாலும் சரி, நான் ஏற்றுக் கொண்டிருக்கும் வாழ்க்கைக் கோட்பாடு இதுதான்: எவர் ஒருவர் செய்யும் காரியமும், அவர் எவ்வளவுதான் பெரியவராக இருந்தாலும், அவருக்குச் சமய நெறியின் ஆதரவு இருந்தாலன்றி, அந்தக் காரியம் உண்மையில் உருப்படாது. ஆனால், சமயம் என்பது என்ன? உடனே இக்கேள்வி கேட்கப்படலாம். என்னைப் பொறுத்தவரையில் இதற்கு நான் வருமாறுதான் பதில் கூறுவேன்: உலகத்தின் வேத நூல்களையெல்லாம் படிப்பதனால் நீங்கள் அடையும் சமயம் அன்று அது. உள்ளம் கிரகித்துக் கொள்ளுவது அதுவேயன்றி மூளை கிரகித்துக்கொள்ளுவது அல்ல. மேலும் அது நமக்குப் புதிதானதும் அன்று. ஆனால், நம்மிடையே விருத்தி செய்தாக வேண்டிய ஒன்றேயாகும் அது. அது எப்பொழுதும் நம்முள் இருந்து வருகிறது. சிலர் அதை அறிந்துமிருக்கின்றனர்; மற்றவர்களோ அறியாமலிருக்கிறார்கள். ஆனால், அது இருந்துகொண்டுதான் இருக்கிறது. ஒழுங்கான முறையில் நாம் ஏதாவது செய்ய வேண்டுமானால், நீடித்து இருப்பதான காரியத்தை நாம் செய்வதானால், நம்முள் இருக்கும் இந்தச் சமய நெறி உணர்ச்சியை நாம் எழுப்பியே ஆக வேண்டும். இது, வெளி உதவிகொண்டு எழுப்பப்படுகிறதா, அல்லது உள் வளர்ச்சியின் மூலமே எழுப்பப்படுகிறதா, எந்த வகையில் எழுப்பப்படும் என்பது முக்கியமல்ல.

வாழ்க்கையின் கோட்பாடுகளாக சில விதிகளை நமது வேத நூல்கள் விதித்திருக்கின்றன. அவைகளை, சுயமாகவே புலனாகும் உண்மைகளாகவே நாம் கொள்ளவேண்டும். இந்தக் கோட்பாடுகளை அனுசரித்து வாழாவிட்டால், நியாயமான ஓர் அளவுக்குக் கூட சமயத்தைப் பற்றி அறிந்துகொள்ள முடியாதவர்களாக நாம்

ஆகிவிடுவோம் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. அநேக ஆண்டுகளாக இவற்றையெல்லாம் பணிவுடன் நான் நம்பி வந்திருப்பதாலும், சாத்திரங்கள் கூறும் விதிகளை நடைமுறையில் அனுசரிக்கவும் நான் முயன்று வந்திருப்பதனாலும், என்னைப் போன்றே எண்ணுகிறவர்களின் ஒத்துழைப்பை, இந்த ஆசிரமத்தை அமைப்பதற்குப் பெறுவது அவசியம் என்று கருதினேன். இந்த ஆசிரமத்திற்கென்று தயாரிக்கப்பட்டிருக்கும் விதிகளையும், அதில் சேருகிறவர்கள் என்னென்ன விதிகளை அனுசரித்து நடந்தாகவேண்டும் என்பதையும் இன்று உங்கள் முன்பு எடுத்துக்காட்ட முற்படுகிறேன்.

## சத்திய விரதம்

ஆசிரமத்தின் முக்கியமான விதிகள் ஐந்து. அவற்றில் முதலாவதும், மிக முக்கியமானதும் சத்திய விரதம். சாதாரணமாகக் கருதப்படும் சத்தியம் அன்று இது. சாத்தியமான வரையில் நாம் பொய் சொல்லக்கூடாது என்பது அல்ல இது. 'யோக்கியமாக நடப்பதே சிறந்த கொள்கை' என்பதற்கு ஏற்றதாக இருப்பதே இந்தச் சத்தியம் என்றும் சொல்ல முடியாது. ஏனெனில், சிறந்த கொள்கையாக இல்லையென்றால் அதிலிருந்து நாம் மாறிவிடலாம் என்று ஏற்படும். ஆனால், இங்கே நான் கருதும் சத்தியமோ, எது வந்தாலும் வரட்டும் என்று இந்தச் சத்திய விதியைக்கொண்டே நம் வாழ்க்கையைநடத்தவேண்டும் என்பதாகும். இந்த விளக்கத்திற்குப் பொருத்தமானதாக இருப்பதற்காக, பிரகலாதனின் ஒப்பற்ற வாழ்க்கையை உதாரணமாக நான் எடுத்துக்கொண்டிருக்கிறேன். சத்தியத்திற்காகத் தனது தந்தையையே எதிர்க்கும் துணிவை பிரகலாதன் கொண்டான். தன்னைத் தானே அவன் காத்துக்கொண்டான். பதிலுக்குப் பதில் தான் செய்வதனாலோ, தன் தந்தை செய்ததையே தானும் திருப்பிச் செய்ததனாலோ பிரகலாதன் தன்னைக் காத்துக் கொள்ளவில்லை. தான் அறிந்த சத்தியத்தைப் பாதுகாப்பதற்காக, அவன் சாகவும் தயாராயிருந்தான். அவன் தந்தையும், அவரால் ஏவப்பட்டவர்களும் அடித்ததற்குப் பதிலுக்கு அவன் அடிக்கவில்லை. அது மாத்திரமல்ல. தன் மேல் விழுந்த அடிகளைத் தடுத்துக்கொள்ளவும் அவன் முயற்சி செய்யவில்லை. தனக்கு இழைக்கப்பட்ட எண்ணற்ற சித்திரவதைகளையெல்லாம் புன்முறுவல் பூத்த முகத்தோடு ஏற்றுக்கொண்டான். முடிவில் சத்தியமே வென்றது. பிரகலாதன், சித்திரவதைகளையெல்லாம் அனுபவித்தான் என்றால், தோல்வி என்பதையே காணாதது சத்தியத்தின் நியதி என்பதைத் தனது வாழ்நாளில் என்றாவது ஒரு நாள் காட்ட முடியும் என்ற நம்பிக்கையினால் அல்ல. ஆனால், சித்திரவதைகளின் நடுவே அவன் செத்திருந்தாலும், அப்பொழுதும் அவன் சத்தியத்திலிருந்து பிறழாமலேயே இருந்திருப்பான் என்பதுதான் உண்மை. இந்தச் சத்தியத்தைப் பின்பற்றவே

நான் விரும்புகிறேன். நேற்று ஒரு சம்பவத்தை நான் கவனித்தேன். அது மிகச் சின்ன சம்பவம். என்றாலும், காற்று எந்தப் பக்கம் வீசுகிறது என்பதைக் காட்டும் துரும்பு என்றே இச்சிறு சம்பவத்தை நான் கருதுகிறேன். அச்சம்பவம் இதுதான்: என்னுடன் தனித்துப் பேச விரும்பிய ஒரு நண்பரும் நானும் பேசிக்கொண்டிருந்தோம். அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தோம். மூன்றாம் நண்பரொருவர் அப்பொழுது உள்ளே வந்தார். தாம் அனாவசியமாகத் தலையிடுவதாகுமோ என்று மரியாதையோடு அவர் கேட்டார். உடனே நான் பேசிக்கொண்டிருந்த நண்பர், "அப்படி ஒன்றும் இல்லை. ரகசியமாகப் பேசுவதற்கு இங்கே எதுவுமே இல்லை" என்றார். நான் கொஞ்சம் திகைத்தே போனேன். ஏனெனில், என்னைத் தனியாக அழைத்துப் பேசியதிலிருந்து, இந்த நண்பரைப் பொறுத்தவரையிலாவது, பேசிய விஷயம் அந்தரங்கமானது என்பதை அறிவேன். ஆனால், இவரோ உடனே மரியாதைக்காக, அந்தரங்கம் எதுவும் இல்லை என்றும், அந்த நண்பரும் கலந்து கொள்ளலாம் என்றும் சொல்லிவிட்டார். இது அளவுக்கு மிஞ்சிய மரியாதை என்றே கூறுவேன். சத்தியத்தைப் பற்றிய விளக்கத்திலிருந்து இது மாறுபட்டதாகும் என்பதை உங்களுக்குச் சொல்லிக்கொள்ளுகிறேன். இதற்கு மாறாக இந்த நண்பர், சாத்தியமான அளவு கண்ணியமாகவே, மனம் விட்டும் பகிரங்கமாகவும், "ஆம், நீங்கள் இப்பொழுது சொன்னது போல எங்கள் பேச்சில் தலையிடுவதாகவே ஆகும்" என்று சொல்லியிருக்கலாம். அவர் கண்ணியமானவராக இருந்தால், இதற்காக அவர் வருத்தப் படவும் மாட்டார். வேறுவிதமானவர் என்று நிரூபிக்கப்பட்டாலன்றி, ஒவ்வொருவரையும் கண்ணியமானவராகவே நாம் கொள்ள வேண்டும். ஆனால், நம் நாட்டு மக்களின் கண்ணியமான போக்கையே இச்சம்பவம் காட்டுகிறது என்றும் சொல்லப்படலாம். எனினும், இது விஷயத்தை மிகைப் படுத்தி நிரூபிப்பதாகும் என்று நான் நினைக்கிறேன். மரியாதைக்காக என்று இக்காரியங்களைத் தொடர்ந்து நாம் செய்து கொண்டே இருப்பதேயானால், உண்மையில் நாம் கபடம் நிறைந்த நாட்டு மக்கள் என்றே ஆவோம். ஓர் ஆங்கில நண்பருடன் நான் பேசிக்கொண்டிருந்ததை இங்கே உங்களுக்கு நினைவூட்டுகிறேன். அவரோ, எனக்குப் புதியவர். அவர் ஒரு கல்லூரித் தலைமைப் பேராசிரியர். பல ஆண்டுகள் இந்தியாவில் இருந்திருக்கிறார். பல விஷயங்களைக் குறித்துத் தம் அபிப்பிராயத்தைக் கூறி என் அபிப்பிராயத்தையும் கேட்டார். 'இல்லை' என்பது நம் மனதிற்குத் தெரிந்து அதைச் சொல்லவே நாம் விரும்பினாலும், ஆங்கிலேயரைப் போல 'இல்லை' என்று சொல்லி விடும் துணிச்சல் நமக்கு இருப்பதில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேனா என்று அந்த ஆங்கிலேயர் என்னைக் கேட்டார். இதற்கு 'ஆம்' என்று நான் பதில் சொன்னேன் என்பதை நான் ஒப்புக் கொள்ளவே வேண்டும். அவர் சொன்ன கருத்து சரியானது என்று ஒப்புக்கொண்டேன். நாம் யாருடன்

பேசிக் கொண்டிருக்கிறோமோ அவருடைய உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்பதற்காக, மனம் விட்டு தைரியமாக 'இல்லை' என்று சொல்லிவிட நாம் தயங்குகிறோம். எங்கள் ஆசிரமத்திலோ, 'இல்லை' என்று நாம் சொல்ல எண்ணுவதை, அப்படிச் சொல்லுவதால் என்ன நேருவதாயிருந்தாலும் பொருட்படுத்தாமல், 'இல்லை' என்று சொல்லி விட வேண்டும் என்பதை ஒரு விதியாக வைத்திருக்கிறோம். ஆகவே, இது எங்கள் முதல் விதி.

## அகிம்சா தருமம்

இனி அகிம்சா தருமத்திற்கு வருவோம். சாதாரணமாகப் பார்த்தால், கொல்லாமையே அகிம்சையின் பொருள். ஆனால் எனக்கு, கொல்லாமையே அகிம்சை என்று மாத்திரமே நான் எண்ணுவதானால், நான் போகக் கூடிய எல்லையையும் கடந்து அது, உயர்வான, நிச்சயமாக மிக உயர்ந்த அநேக பொருள்களை எனக்கு அளிக்கிறது. யாருக்கும் தீங்கு செய்யக் கூடாது, தம்மை உங்கள் எதிரியாக எண்ணிக் கொள்ளுபவரைக் குறித்தும் ஒரு கெட்ட எண்ணத்தை நீங்கள் கொள்ளக்கூடாது என்பதே அகிம்சை என்பதன் பொருள். இந்த எண்ணத்திலிருக்கும் பத்திரமான தன்மையை நீங்கள் கவனிக்க வேண்டும். 'உங்களுக்கு எதிரி என்று நீங்கள் யாரை நினைக்கிறீர்களோ அவர்கள் மீது' என்று நான் சொல்லவில்லை, ஆனால், 'தம்மை உங்கள் விரோதியாக எண்ணிக் கொள்ளுபவர் மீது' என்று கூறினேன். அகிம்சா தருமத்தைப் பின்பற்றி நடப்பவருக்கு, எதிரி என்று யாருமே இருப்பதற்கு இடமில்லை. எதிரி என்று இருப்பதையே அவர் மறுக்கிறார். ஆனால், அவருக்குத் தாம் எதிரிகள் என்று எண்ணிக் கொள்ளுகிறவர்கள் இருக்கலாம். அதை அகிம்சைவாதி தவிர்த்துக்கொண்டுவிட முடியாது. இதனாலேயே இப்படிப்பட்டவர்கள் விஷயத்திலும் அகிம்சையைப் பின்பற்றுகிறவர் எந்த வகையான கெட்ட எண்ணமும் கொள்ளக்கூடாது என்று விதிக்கப்படுகிறது. அடிப்பவரை நாம் திருப்பி அடிப்பதானால், அகிம்சா தருமத்திலிருந்து நாம் தவறிவிடுகிறோம், ஆனால், நான் இன்னும் கொஞ்சம் மேலே போய்ப் பார்க்கிறேன். ஒரு நண்பரின் செய்கையையோ, அல்லது எதிரி எனப்படுபவரின் செய்கையையோ நாம் வெறுத்தாலும், அப்பொழுதும் அகிம்சா தருமத்தை அனுசரிக்கத் தவறிவிட்டவர்களே ஆவோம். ஆனால், வெறுக்கக் கூடாது என்று நான் சொல்லுவது, அவர்கள் செய்வதை நாம் அங்கீகரித்து விட வேண்டும் என்று சொல்லுவதாக ஆகாது. நாம் வெறுப்பது என்றால், எதிரிக்கு ஏதாவது தீங்கு ஏற்பட வேண்டும் என்று நாம் விரும்புவதாகும். நாம் செய்யும் காரியங்களினால் அவருக்குத் தீங்கு ஏற்படா விட்டாலும், இன்னுமொருவர் செய்யும் காரியங்களினாலோ அல்லது கடவுளாகச் செய்வதனாலோ அவருக்குத் தீங்கு ஏற்பட வேண்டும்

என்று எண்ணுவதே அவரை வெறுப்பதாகும். இத்தகைய் எண்ணம் நம் உள்ளத்திலிருந்தாலும், நாம் அகிம்சா தருமத்தி லிருந்து தவறிவிட்டவர்களே ஆவோம். ஆசிரமத்தில் சேருகிறவர் கள், இந்தப் பொருளை அப்படியே ஏற்றுக்கொண்டாக வேண் டும். இந்தத் தருமத்தை நாம் அப்படியே தவருமல் முழுதும் அனுசரித்து விடுகிருேம் என்பதல்ல இதன் பொருள். நாம் அடைந்தாக வேண்டிய லட்சியம் இது. நம்மால் முடிந்தால் இந்த லட்சியத்தை இப்பொழுதே அடைந்துவிட வேண்டும். பீஜ கணிதத்தைப் போன்று மனப்பாடம் செய்து விடக் கூடிய ஒரு முறை அன்று இது. உயர் கணிதத்திலிருக்கும் பெரிய கணக் குகளைப் போட்டுவிடுவதை விட அதிகக் கஷ்டமானது இது. அக்கணக்குகளைப் போட்டுவிடுவதைவிட நிச்சயமாக அதிகக் கடினமானதே இது. இக்கணக்குகளைப் போடுவதற்காக உங்களில் பலர் இரவெல்லாம் கண் விழித்துக் கஷ்டப்பட்டிருப் பீர்கள். இந்த அகிம்சா தருமத்தை நீங்கள் பின்பற்றுவதாயிருந் தால், இரவெல்லாம் கண் விழித்துக் கஷ்டப்பட்டதைவிட இன் னும் அதிகமாகச் சிரமப்பட வேண்டும். இந்த லட்சியத்தை அடைவதற்கு முன்னுல், இந்த லட்சியத்திற்குக் கிட்டத்தில் நெருங்குவதற்கு முன்னுல்கூட, நீங்கள் எத்தனையோ இரவுகள் தூங்காமலிருந்து, மனத்தில் எத்தனையோ சித்திரவதைகளையும் துன்பங்களையும் அனுபவிக்க வேண்டி வரும். சமய நெறியோடு கூடிய வாழ்க்கை இன்னது என்பதை நாம் புரிந்துகொள்ள விரும்புவோமாயின், இந்த லட்சியத்தை - இதற்குக் குறைவான எதையும் அல்ல-நீங்களும் நானும் அடைந்துதான் ஆகவேண்டும். இந்தத் தருமத்தின் முக்கியத்தைக் குறித்து இதைவிட அதிக மாக நான் எதுவும் சொல்லப் போவதில்லை. இந்தத் தருமத்தின் மேன்மையை நம்பும் ஒருவர், முடிவான கட்டத்தில், அவர் லட் சியத்தை அடையும் தறுவாயிலிருக்கும் போது, உலகம் முழுவ துமே தம் காலடியில் கிடப்பதைக் காண்பார். இது, உலகம் முழுதும் தம் காலடியில் கிடக்க வேண்டும் என்று அவர் விரும்பு வதனுல் அல்ல. ஆனுல், அப்படித்தான் ஆகும். உங்கள் எதிரி என்று சொல்லப்படுகிறவரிடம், உங்கள் அன்பை, அகிம்சையை சந்தேகத்திற்கு இடமின்றி மனத்தில் படும் வகையில் நீங்கள் காட்டுவீர்களானுல், எதிரியும் அந்த அன்பையே உங்களிடம் காட்டுவார். இதிலிருந்து இன்னெரு எண்ணமும் எழுகிறது. இந்த விதியின்படி, முன்னேற்பாட்டுடன் செய்யும் படுகொலைக ளுக்கு இடமில்லை. நாட்டின் நன்மைக்காக என்று பலாத்காரச் செயல்களில் ஈடுபடுவதற்கும் இதில் இடமில்லை. உங்கள் பாது காப்பில் இருப்போரின் புனிதமான மானத்தைக் காப்பதற்காக என்று கூட பலாத்காரத்தில் இறங்குவதற்கும் இதில் இடமில்லை. மேலும், மானத்தைக் காத்துக் கொள்ளுவது என்பதற்கு இது சரியான பாதுகாப்பும் அல்ல. தீய காரியத்தைச் செய்ய முற் படுகிறவன் கையில் நம்மையே ஒப்படைத்து விடுவதன் மூலமே, நம் பாதுகாப்பில் இருப்பவரின் மானத்தை நாம் காக்க முடியும்

என்று இந்த அகிம்சா தருமம் நமக்குக் கூறுகிறது. அடி கொடுப்பதற்கு வேண்டியதைவிட அதிக உடல் வலிவும் மனத்தில் தீரமும் இதற்கு வேண்டும். உங்களிடம் ஓரளவு உடல் வலிவு இருக்கலாம். தீரத்தைப் பற்றி நான் சொல்லவில்லை. அந்த உடல் வலிவை நீங்கள் உபயோகிக்கலாம். அந்த வலிவைச் செலவு செய்துவிட்ட பிறகு என்ன ஏற்படுகிறது? மாற்றானுக்குக் கோபமும் ஆத்திரமும் அதிகமாகி விடுகின்றன. அவனுடைய பலாத்காரத்திற்கு எதிராக உங்கள் பலாத்காரத்தை உபயோகிக்க, அவன் அதிகக் கோபமடைந்து விடும்படி நீங்களே செய்து விட்டீர்கள். உங்களை அவன் கொன்றுவிட்டபிறகு, தன்னிடம் மிஞ்சியிருக்கும் பலாத்காரத்தையெல்லாம் உங்கள் பாதுகாப்பில் இருந்தவர் மீது காட்டுகிறான். ஆனால், நீங்கள் அவன் பலாத்காரத்திற்குப் பதிலாக நீங்கள் உங்கள் பலாத்காரத்தைக் காட்டாமல், எதிரிக்கும் உங்கள் பாதுகாப்பிலிருப்பவருக்குமிடையே நீங்கள் உறுதியுடன் நின்று வந்தால், திருப்பி அடிக்காமல் அவன் அடிப்பதையெல்லாம் நீங்கள் ஏற்றுக் கொண்டு நின்றால், அப்பொழுது என்ன ஆகும்? அவனுடைய பலாத்காரமெல்லாம் உங்களிடமே செலவழிந்து விடும், உங்கள் பாதுகாப்பிலிருப்பவருக்கு எந்தத் தீங்கும் நேராது என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். வாழ்வின் இந்தத் திட்டத்தின்படி, இன்று நீங்கள் ஐரோப்பாவில் கண்டு வருவதைப் போன்ற யுத்தத்தை நியாயமாக்கும் தேசாபிமானத்திற்கே இடமில்லை.

## பிரம்மச்சரிய விரதம்

பிறகு, பிரம்மச்சரிய விரதமும் அவசியமானதாகிறது. தேசீய சேவை செய்ய விரும்புகிறவர்களோ, உண்மையான சமய நெறி வாழ்வின் ஒளியைக் காண விரும்புகிறவர்களோ, அவர்கள் மணமானவர்களாக இருந்தாலும், மணமாகாதிருந்தாலும், பிரம்மச்சரிய வாழ்வை நடத்தியாக வேண்டும். ஒரு பெண்ணுக்கு ஓர் ஆணை அதிக நெருக்கத்திற்குக் கொண்டுவருவதுதான் விவாகம். ஒரு விசேஷமான பொருளில் அவர்கள் நண்பர்களாகிறார்கள். இந்தப் பிறப்பிலும், இனி வரும் பிறப்புகளிலும் இவர்கள் பிரியாதவர்கள். ஆனால், விவாகத்தைப் பற்றிய நம் எண்ணத்தில் நமது காம உணர்ச்சிகள் அவசியமாகப் புகுந்துதான் ஆக வேண்டியிருக்கிறது என்று நான் எண்ணவில்லை. அது எப்படியானாலும் சரி. ஆசிரமத்தில் சேருகிறவர்கள் பிரம்மச்சரியத்தை அனுசரித்தே ஆக வேண்டும் என்று விதிக்கப்படுகிறது. இதைக் குறித்து நான் விவரமாக ஆராய்ந்துகொண்டிருக்கப் போவதில்லை.

## நாவின் ருசியை அடக்குதல்

இனி, நாவின் ருசியை அடக்க வேண்டியதன் அவசியத்திற்கு வருவோம். ஒருவர், நாவின் ருசியை வென்றால்தான்

மிருக உணர்ச்சிகளை எளிதில் அடக்கியாள முடியும். பின்பற்றுவதற்கு அதிகக் கஷ்டமான விரதம் இது என்றே அஞ்சுகிறேன். விக்டோரியா மாணவர் விடுதியைப் பார்த்துவிட்டுத்தான் இங்கே வந்தேன். நான் திகிலடையக்கூடியவைகளையே அங்கே நான் கண்ட போதிலும் நான் திகிலடையவில்லை. இப்பொழுதெல்லாம் நான் இதில் பழகிப் போய்விட்டேன். அந்த விடுதியில் சமையல்கள் பல நடக்கின்றன. சாதிக் கட்டுப்பாடுகளை அனுசரித்து நடக்கும் சமையல்கள் அல்ல அவை. மாணவர்கள் எந்தப் பகுதியிலிருந்து வருகிறார்களோ, அந்த இடத்தில் உபயோகிக்கப்படும் மசாலைகளுக்கு ஏற்ற வகையில் அவர்களுக்குச் சமைப்பதற்கு என்றே இத்தனை வகையான சமையல்கள் அங்கே நடக்கின்றன. ஆகையால், பிராம்மணர்களிலும் கூட, அவர்களுக்குள் இருக்கும் பலவகையான கோஷ்டிகளின் ருசிகளுக்கு ஏற்ற முறையில் சமைத்துப் போடுவதற்காகப் பல திறப்பட்ட சமையல்கள் நடக்கின்றன. நாவின் ருசியை அடக்கியாள்வது என்பதற்குப் பதிலாக, அந்த ருசிக்கு அடிமையாகிவிடுவது என்பதுதான் இது எனக் கூறுவேன். இன்னும் ஒன்றும் சொல்லுவேன்: இத்தகைய பழக்கத்திலிருந்து நம் புத்தியை அப்புறப்படுத்தினாலொழிய, டீ கடைகளையும், காப்பிக் கடைகளையும், இத்தகைய சமையல்களையும் நாம் கண்ணெடுத்துப் பார்க்காமலிருந்தாலன்றி, நம் உடல் நலத்தைப் பாதுகாப்பதற்கு வேண்டியதற்கு அவசியமான சாப்பாட்டைக்கொண்டு நாம் திருப்தியடையாது போனால், உணவில் நாம் சேர்க்கும் புலன் உணர்ச்சிகளைக் கிளறிவிடும் மசாலைச் சாமான்களை விட்டொழித்துவிட நாம் தயாராக இருந்தாலன்றி, நமக்கு ஏற்படும் அளவுக்கு மிஞ்சிய, அனாவசியமான, புலன் நுகர்ச்சி இச்சையை நிச்சயமாக நம்மால் அடக்கவே முடியாது போகும். அவ்விதம் நாம் அடக்காது போவோமானால், இதன் இயற்கையான பலன், நம்மை நாமே தவறான வழியில் கொண்டு போய் விட்டவர்களாவோம். நமக்கு அளிக்கப்பட்டுள்ள தெய்விகக் கடமையிலும் தவறியவர்களாவோம். மிருகங்களைப் போன்றே நாமும், உண்பதிலும், குடிப்பதிலும், புலன் நுகர்ச்சியில் திளைப்பதிலும் ஈடுபட்டு மிருகங்களிலும் கேவலமானவர்களாவோம். ஆனால், ஒரு குதிரையோ, பசுவோ, நாம் செய்வதைப் போல ருசிக்காகத் தவறு செய்வதை நாம் என்றாவது பார்த்தது உண்டா? நாம் எங்கிருக்கிறோம் என்பதைக்கூட நாம் அறியாத நிலையில், நமது தின்பண்டங்களின் வகைகளைப் பெருக்கிக்கொண்டே போகிறோம். முடிவில் முற்றிலும் பைத்தியம் பிடித்தவர்களாகி, இந்தப் பலகாரங்களைப் பற்றிய விளம்பரங்களை அளிக்கும் பத்திரிகைகளின் பக்கங்களைத் தேடி அலையும் நிலைக்கு நாம் பலகார வகைகளை நாடுகிறோம். இது நாகரிகத்தின் அறிகுறியாகும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா?

## திருடாமை விரதம்

இனி, திருடாமை விரதத்திற்கு வருவோம். எனது உடனடியான உபயோகத்திற்கு அவசியமில்லாத ஒன்றை நான் எடுத்துக்கொண்டு, அதை வைத்துக்கொண்டுவிடுவேனாயின், நான் அதை இன்னொருவரிடமிருந்து திருடிவிட்டவனாகிறேன். நமது அன்றாடத் தேவைக்குப் போதுமானதை இயற்கை அளிக்கிறது. ஒவ்வொருவரும் தனக்குத் தேவையானதை மாத்திரமே எடுத்துக்கொள்ளுவது, அதிகமான எதையும் எடுத்துக் கொள்ளுவதில்லை என்றிருந்தால், இந்த உலகத்தில் எவருமே பட்டினி கிடந்து சாக வேண்டியிராது. இதுவே இயற்கையின் அடிப்படையான விதி என்று துணிந்து கூறுவேன். ஆனால், வாழ்வில் சமத்துவமின்மை நம்மிடம் இருந்துகொண்டிருக்கும் வரையில், நாம் திருடிக்கொண்டும் இருக்கிறோம். நான் சோஷியலிஸ்டு அல்ல. சொத்து வைத்திருப்பவர்களிடமிருந்து அச்சொத்துக்களைப் பறித்துவிட வேண்டும் என்று நான் விரும்பவுமில்லை. ஆனால், இந்த இருளிலிருந்து ஒளியைக் காண விரும்புகிறவர்கள், இந்த விதியை அனுசரித்துத்தான் ஆக வேண்டும் என்று கூறுவேன். எவருடைய சொத்தையும் பறித்துவிட நான் விரும்பவில்லை. அப்படி நான் பறித்துவிட விரும்புவேனாயின், நான் அகிம்சை விதிகளிலிருந்து மாறிவிட்டவனாவேன். நான் வைத்திருப்பதைவிட வேறு யாராவது அதிகமாக வைத்துக்கொண்டிருந்தால், வைத்திருக்கட்டும். ஆனால், என்னுடைய வாழ்க்கையைக் கட்டுதிட்டங்களுக்கு உட்படுத்தியாக வேண்டும் என்பதைப் பொறுத்தவரையில், எனக்குத் தேவை இல்லாத எதையும் வைத்துக்கொள்ள நான் துணியமாட்டேன் என்றே கூறுவேன். தினம் ஒரே வேளைச் சாப்பாட்டோடு இருந்தாக வேண்டியிருக்கும் மக்கள் இந்தியாவில் முப்பது லட்சம் பேர் இருக்கிறார்கள். அந்தச் சாப்பாடும், வெறும் சோற்றையும் உப்பையும் கொண்டதே. இந்த முப்பது லட்சம் மக்கள் நன்றாக உண்டு உடுத்த முடியும் வரையில், உண்மையில் நம்மிடமிருக்கும் எதையும் நீங்களும் நானும் வைத்துக்கொண்டிருக்க நமக்கு உரிமை இல்லை. விஷயத்தை நன்கு அறிந்திருக்க வேண்டியவர்களான நீங்களும் நானும், அம்மக்களுக்குச் சத்துள்ள உணவு கிடைத்து, அவர்கள் நன்றாக உடுத்த முடியும்படிச் செய்வதற்காக நம்முடைய தேவைகளைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும்; நாமே விரும்பி பட்டினியும் இருக்க வேண்டும். இதிலிருந்து உடைமையில்லாதிருப்பதென்று கொள்ளும் விரதமும் தொடர்ந்து வருகிறது.

## சுதேசி விரதம்

சுதேசி விரதம், அவசியமானதோர் விரதமாகும். ஆனால், சுதேசி வாழ்வும், சுதேசி உணர்ச்சியும் யாவை என்பது

உங்களுக்கு நன்ருகத் தெரியும். நம் தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்கு நமக்கு அக்கம்பக்கத்தில் இருப்பவரை விட்டுவிட்டு எங்கோ வெளியே போய்விடுவதில், நாம் நமது வாழ்வின் முக்கியமான விதி ஒன்றை மீறியே நடந்துவிடுகிறோம். பம்பாயிலிருந்து ஒரு வர்த்தகர் இங்கே வந்து, உங்களுக்குத் தேவையான சாமான்களை உங்களிடம் விற்க விரும்புவாராளுல், சென்னையிலேயே பிறந்து வளர்ந்த ஒரு வர்த்தகர் உங்கள் பக்கத்திலேயே இருக்கும்போது, நீங்கள் பம்பாய் வர்த்தகருக்குச் சலுகை காட்டுவது நியாயமாகாது. சுதேசியைப் பற்றிய என் கருத்து இதுதான். சென்னையிலிருந்து வரும் திறமை வாய்ந்த நாவிதரைக் கைவிட்டு, உங்கள் கிராமத்து நாவிதரை நீங்கள் ஆதரிக்க வேண்டியது உங்கள் கடமை. சென்னையிலிருந்து வரும் நாவிதருக்கு இருக்கும் திறமை உங்கள் கிராமத்து நாவிதருக்கும் இருக்கவேண்டும் என்று நீங்கள் விரும்பிஞல், அதில் அவருக்கு நீங்கள் பயிற்சி அளிக்கலாம். அவர் தொழிலை அவர் நன்ருகக் கற்றுக்கொண்டு வரட்டும் என்பதற்காக, வேண்டுமாளுல், அவரைச் சென்னைக்கே அனுப்புங்கள். இதை நீங்கள் செய்தாலன்றி, இன்னுமொரு நாவிதரை நாடிச் செல்வது நியாயமாகாது. இதுதான் சுதேசி. ஆகவே, இந்தியாவில் கிடைக்காத சாமான்கள் அநேகம் இருக்கின்றன என்று நீங்கள் கண்டால், அவை இல்லாமலேயே சமாளித்துக்கொள்ள நாம் முயற்சி செய்ய வேண்டும். அவசியமானவை என்று நமக்குத் தோன்றும் அநேக சாமான்கள் இல்லாமலேயே நாம் இருக்க வேண்டியிருக்கும். இந்தவிதமான மனநிலை உங்களுக்கு உண்டாகிவிடுமாளுல், உங்கள் தோள்களிலிருந்து பெரும் சுமைகள் இறக்கப்பட்டுவிட்டதாகவே நீங்கள் உணருவீர்கள் என்று நான் கூறுவதை நம்புங்கள். சுதேசி வாழ்க்கையை அனுசரிக்க முற்பட்டதுமே, இன்று இருப்பதைவிட அதிகச் சுதந்திரமானவர்களாக நீங்களே உணருவீர்கள்.

## அஞ்சாமை விரதம்

அஞ்சாமை விரதத்தையும் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தியா முழுமையும் சுற்றிப் பார்த்ததில், இந்தியாவை, படித்த இந்தியரை, முடமாக்கும் பயம் ஆட்கொண்டிருப்பதைக் கண்டேன். பகிரங்கமாக வாய் திறந்து எதுவும் நாம் பேசமாட்டோம்; நமது திடமான அபிப்பிராயத்தையும் பகிரங்கமாகச் சொல்ல மாட்டோம். ஆளுல், அவற்றைப் பற்றியெல்லாம் ரகசியமாகப் பேசுவோம்; நம் வீட்டிற்குள்ளே இருந்துகொண்டு நாம் விரும்புவதையெல்லாம் செய்வோம். ஆளுல், அவையெல்லாம் பொதுஜனங்களுக்குப் பயன்படுவதற்காக அல்ல. நாம் மௌன விரதம் கொண்டிருப்போமாளுல், அப்பொழுது நான் ஒன்றும் சொல்லப்போவதில்லை. பொதுஜனங்களிடையே வாய் திறந்து நாம் பேசும்போது, உண்மையில் நாம் நம்பாதவைகளை நாம்

கூறுகிறோம். இந்தியாவில் பேசும் பொதுஜனத் தலைவர்கள் எல்லோருடைய அனுபவமும் இதுவேயல்லவா என்பது எனக்குத் தெரியாது. நாம் பயப்பட வேண்டியவர் ஒருவர் உண்டு என்றால், அவரை ஒருவர் என்று சொல்லுவது சரிதான் என்றால், அந்த ஒருவர் கடவுள்தான். நாம் கடவுளுக்குப் பயப்படும்போது, ஒரு மனிதன் எவ்வளவுதான் உயர்ந்த நிலையில் இருந்தாலும், மனிதனுக்குப் பயப்பட வேண்டியதில்லை. சத்திய விரதத்தை, எந்த உருவத்திலும் முறையிலும் நீங்கள் அனுசரிக்க விரும்பினாலும், அதற்கு அவசியமாக வேண்டியது அஞ்சாமையாகும். இதனாலேயே பகவத்கீதையில், ஒரு பிராம்மணனுக்கு முதலில் அத்தியாவசியமாக வேண்டிய குணம் அஞ்சாமை என்று கூறப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம். விளைவைக் குறித்து அஞ்சுகிறோம்; அதனால் உண்மையைச் சொல்ல அஞ்சுகிறோம். கடவுளுக்கு அஞ்சுகிற மனிதன், உலகத்தின் விளைவுகளைக் குறித்து நிச்சயமாக அஞ்சவே மாட்டான். சமயம் என்பது என்ன என்பதைப் புரிந்துகொள்ள ஆசைப்படுவதற்கு முன்னால், இந்தியாவின் விதியை நிர்ணயிக்கும் ஒரு ஸ்தானத்தை அடைவதற்கு நாம் விரும்புவதற்கு முன்னால், அஞ்சாமை என்ற பழக்கத்தை நாம் மேற்கொள்ள வேண்டியது அவசியம் என்று நீங்கள் காணவில்லையா? அல்லது நாம் பயமுறுத்தித் தடுக்கப்பட்டிருப்பதைப் போன்று, நம் தேச மக்களை நாம் பயமுறுத்தித் தடுக்க வேண்டுமா? இவ்விதம் அஞ்சாமை எவ்வளவு முக்கியமானது என்பதை இப்பொழுது காண்கிறோம்.

## தீண்டாதாரைப் பற்றிய விரதம்

தீண்டாதார் சம்பந்தமாக நாம் கொள்ள வேண்டிய விரதமும் இருக்கிறது. ஹிந்து சமயத்தில் இன்று அழித்துவிட முடியாத கறை ஒன்று இருந்து வருகிறது. தீண்டாமை என்பது அநாதி காலம் தொட்டு பாரம்பரியமாக நமக்கு வந்துகொண்டிருக்கும் ஒன்று என்பதை நம்ப நான் மறுக்கிறேன். 'தீண்டாமை' என்ற துக்ககரமான, படுமோசமான, உணர்ச்சியை அடிமைப்படுத்தும் தீமை, நமது வாழ்க்கைச் சுழலில் நாம் மிக மிகத் தாழ்ந்து இருந்த சமயத்தில் நம்மிடையே வந்திருக்க வேண்டும் என்றே நினைக்கிறேன். அந்தத் தீமை இன்னும் விடாமல் நம்மை ஒட்டிக்கொண்டிருப்பதோடு, நிரந்தரமாக இருந்துகொண்டும் வருகிறது. நமக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு சாபக்கேடு அது என்றே நான் கருதுகிறேன். அந்தச் சாபக்கேடு நம்மிடம் இருந்துகொண்டிருக்கும் வரையில், நாம் அனுபவித்து வரும் ஒவ்வொரு கஷ்டத்தையும், நாம் செய்து வரும் இந்த அக்கிரமமான குற்றத்திற்கு ஏற்ற தெய்விகமான தண்டனையாக அனுபவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் என்றும் எண்ணுகிறேன். ஒருவர் செய்யும் தொழிலுக்காக ஒருவரைத் தீண்டாதாராகக் கருதுவது என்பது, யாரும் புரிந்துகொள்ள முடியாததாகும். இக்காலக் கல்வியை

யெல்லாம் பெற்று வரும் மாணவர்கள், இக்குற்றத்திற்கு உடந்தையானவர்களாகவே ஆகிவிடுவார்களானால், எந்தக் கல்வியையும் நீங்கள் பெருமலிருப்பதே மேல்.

எத்தனேயோ சங்கடங்களுக்குள் நாம் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது என்பது உண்மை. தீண்டாதார் என்று கருதப்படக் கூடியவர் இந்த உலகத்தில் எவருமே இல்லை என்று நீங்கள் கருதியபோதிலும், அக்கருத்தின்படி உங்கள் குடும்பங்களில் நீங்கள் நடந்து கொள்ள முடியாது; உங்கள் சூழ்நிலையில் அதன் படி நடக்க இயலாது. ஏனெனில், உங்களுடைய எல்லா எண்ணங்களும் ஓர் அந்நிய மொழியின் மூலம் உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது; உங்களுடைய சக்தியெல்லாம் அதிலேயே ஈடுபட்டுக் கிடக்கிறது. ஆகையால், தாய் மொழியின் மூலமே நாம் கல்வியைப் பெறவேண்டும் என்று ஆசிரமத்தில் ஒரு விதியைக் கொண்டு வந்திருக்கிறோம்.

## தாய்மொழி மூலம் கல்வி

ஐரோப்பாவில் பண்பாடுள்ள ஒவ்வொருவரும், தம் தாய் மொழியையேயன்றி மற்ற மொழிகளேயும் கற்கிறார்கள். மூன்று, நான்கு மொழிகளே நிச்சயமாகப் படித்திருக்கிறார்கள். ஐரோப்பாவில் அவர்கள் செய்வதைப் போலவே, இந்தியாவின் மொழிப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக, ஆசிரமத்திலுள்ள நாங்கள், எத்தனே இந்திய மொழிகளேக் கற்க முடியுமோ அத்தனே மொழிகளேயும் கற்பது என்றிருக்கிறோம். ஆங்கிலத்தில் ஆற்றல் பெறுவதற்காக எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கும் சிரமத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இந்த மொழிகளேக் கற்பதில் இருக்கும் சிரமம் அவ்வளவு அதிகமல்ல என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். ஆங்கில மொழியில் நாம் திறமை மிக்கவர்கள் ஆவதேயில்லை. எங்கோ ஒரு சிலரைத் தவிர, இதில் நாம் வல்லவர்களானதுமில்லை. நம் கருத்தைத் தாய் மொழியில் தெளிவாக எடுத்துக் கூறுவதைப் போன்று ஆங்கிலத்தில் கூறிவிடவும் முடியாது. தமது குழந்தைப் பருவத்தின் நினைவுகளேயெல்லாம் அழித்துக் கொண்டுவிட நாம் எவ்வளவு துணிவு கொள்ளுகிறோம்? ஆனல், நாம் கூறிக்கொள்ளும் மேலான வாழ்க்கையை நாம் ஆரம்பிக்கும்போது, அந்நிய மொழியின் மூலம் படிப்பதைக் கொண்டு அதையேதான் நாம் செய்துகொண்டு வருகிறோம். இது நம் வாழ்க்கையில் ஒரு பிளவை உண்டாக்குகிறது. இதை உண்டாக்கியதற்காக நாம் அதிகக் கஷ்டங்களே அனுபவிக்க வேண்டியிருக்கும். கல்வி, தீண்டாமை ஆகிய இரண்டிற்குமிடையே இருக்கும் தொடர்பை இப்பொழுது நீங்கள் காணலாம். அறிவும் கல்வியும் பரவியிருந்துங்கூட, இந்த நாளிலும், தீண்டாமை உணர்ச்சி விடாமல் இருந்துகொண்டு வருவதை நீங்கள் காணலாம். படிப்பு, இப்பயங்கரமான குற்றத்தைக்

காணும்படி நம்மைச் செய்திருக்கிறது. ஆனால், பயமும் நமக்கு ஏற்பட்டிருப்பதால், இத்தத்துவத்தை நம் வீடுகளுக்குக் கொண்டுபோக நம்மால் முடியவில்லை. குடும்பப் பழக்க வழக்கத்திலும், குடும்பத்திலிருப்பவர்களிடத்திலும் மூடநம்பிக்கையான ஒரு மதிப்பு நமக்கு இருந்து வருகிறது. "இக்குற்றத்தில் இனியும் நான் ஈடுபட முடியாது என்று சொன்னால், என் பெற்றோர்கள் உயிரையே விட்டுவிடுவார்கள்" என்று சொல்லுவீர்கள். விஷ்ணுவின் தெய்விகமான திருநாமத்தை உச்சரித்தால், தன் தந்தை இறந்துவிடுவார் என்பதைக் குறித்து பிரகலாதன் எண்ணவே இல்லை என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆனால், இதற்கு மாறாக அவன், தனது தந்தையின் முன்னிலையிலேயே அந்த மந்திரத்தை உரக்க உச்சரித்து, அந்த அரண்மனையின் ஒவ்வோர் மூலை முடுக்கிலும் அது எதிரொலிக்கும்படி செய்தான். ஆகையால், இதே காரியத்தை, நீங்களும் நானும், நமது பெற்றோர்களின் முன்னிலையிலும் செய்யலாம். இதனால் அதிர்ச்சியுற்று, அப்பெற்றோர்களில் சிலர் செத்துவிட்டாலும் அதனால் பெரிய அபாயம் எதுவும் ஏற்பட்டுவிடாது. இதைப் போன்ற அதிர்ச்சி தரும் சில விஷயங்களைச் சொல்லியாக வேண்டியே இருக்கும். அநேக தலைமுறைகளாக வந்துகொண்டிருக்கும் இக்காரியங்களை விடாமலிருக்கும் வரையில், இத்தகைய சம்பவங்கள் நிகழக்கூடும். ஆனால், இயற்கையின் உயர்வான நியதியும் இருக்கிறது. அந்த உயரிய நியதிக்குப் பணிந்து நானும் என்னுடைய பெற்றோர்களும், அத் தியாகத்தைச் செய்யவே வேண்டும்.

அதன் பிறகு, கையினால் நெய்வதற்கு வருவோம். "நம் கைகளை நாம் ஏன் உபயோகிக்கவேண்டும்?" என்று நீங்கள் கேட்கலாம். "படிப்பில்லாதவனே உடலை உழைத்து வேலை செய்ய வேண்டும். இலக்கியத்தையும், ராஜீயக் கட்டுரைகளையும் படிப்பதில்தான் நான் ஈடுபட்டிருக்க முடியும்" என்றும் நீங்கள் சொல்லலாம். உடலுழைப்பின் கௌரவத்தை நாம் உணர வேண்டும் என்று எண்ணுகிறேன். ஒரு நாவிதரோ, செருப்புத் தைப்பவரோ கல்லூரிக்குப் போய்ப் படித்தால், நாவித, செருப்புத் தைக்கும் வேலையை அவர்கள் கைவிட்டுவிட வேண்டியதில்லை. வைத்தியத் தொழில் எவ்வளவு சிறந்ததோ, அவ்வளவு சிறந்தது நாவிதத் தொழிலும் என்று கருதுகிறேன்.

## ராஜீயம்

இந்த விதிகளையெல்லாம் அனுசரித்து நீங்கள் நடந்த பிறகே, நீங்கள் ராஜீய விவகாரங்களில் ஈடுபட்டு உங்கள் மனம் திருப்தியடையும் வரையில் அவற்றில் திளைக்கலாமேயன்றி அதற்கு முன்னால் அல்ல. அப்பொழுதுதான் நிச்சயமாக நீங்கள் தவறே செய்யமாட்டீர்கள். சமய நெறியிலிருந்து விலக்கப்பட்டு

விட்ட ராஜீயத்திற்கு எந்தவிதமான பொருளுமே கொஞ்சமும் இல்லை. இந்த நாட்டின் ராஜீய மேடைகளைச் சுற்றி மாணவர் கூட்டம் கூடுகிறார்கள் என்றால், தேசீய வளர்ச்சிக்கு இது நல்ல அறிகுறியாகத்தான் இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை என்பதே என் கருத்து. ஆனால், மாணவர் வாழ்க்கையிலிருக்கும் நீங்கள், ராஜீய விஷயங்களை ஆராயக்கூடாது என்பது அதன் அர்த்தமன்று. ராஜீயம், நம் வாழ்வின் ஒரு பகுதி. நமது தேசீய வளர்ச்சி முதலிய மற்ற விஷயங்களையெல்லாம் நாம் புரிந்து கொள்ளவே வேண்டும். நம் குழந்தைப் பருவத்திலிருந்தே நாம் இதைச் செய்யலாம். ஆகையால், நம் நாட்டின் ஒவ்வொரு ராஜீய ஸ்தாபனத்தைக் குறித்தும், புதிய உணர்ச்சிகளாலும், அபிலாஷைகளினாலும், புதிய வாழ்வினாலும் நாடு எவ்வித உத்வேகத்தை அடைந்து வருகிறது என்பதையும் புரிந்துகொள்ள ஆசிரமத்திலுள்ள ஒவ்வொரு குழந்தையும் போதிக்கப்பட்டு வருகிறது. ஆனால், தெய்வ நம்பிக்கையாகிய நிதானமான ஒளியை, அணையாத ஒளியையும் நாங்கள் விரும்புகிறோம். அந்த நம்பிக்கை அறிவு ஏற்பதாக இருப்பது மாத்திரமல்ல; ஆனால், உள்ளத்தில் நிரந்தரமாகப் பதியவைக்க வேண்டிய நம்பிக்கை அது. முதலில் கடவுளை அறியும் அந்தத் தன்மையை அடைய நாங்கள் விரும்புகிறோம். இதை நாம் செய்துவிட்ட உடனேயே, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஈடுபட நம்மால் முடிவதாகிறது என்று நான் எண்ணுகிறேன். அப்பொழுது முழு வாழ்க்கையிலும் பங்குகொள்ளுவது மாணவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெய்விகமான பாக்கியமாகும். அவர்கள் தக்க வயதை அடையும்போது, கல்லூரிகளைவிட்டு அவர்கள் வெளிவரும்போது, வாழ்க்கையின் போராட்டத்திற்கு வேண்டிய சாதனங்களையெல்லாம் அடைந்திருப்பவர்களாக அவர்கள் வெளிவர முடியும். இன்று நடப்பதெல்லாம் இதுதான்: ராஜீய வாழ்வின் பெரும் பகுதியும் மாணவர் வாழ்க்கையில்தான் இருந்துவருகிறது. மாணவர்கள் கல்லூரிகளை விட்டு வெளியே வந்து, இனியும் மாணவர்களல்ல என்ற நிலைமை வந்ததும், அவர்கள் யாருக்கும் தெரியாமல் மறைந்துவிடுகிறார்கள். அவர்கள் மோசமான உத்தியோகங்களுக்குப் போய், மோசமான ஊதியங்களைப் பெறுகின்றனர். அவர்களுடைய அபிலாஷைகளில் அவர்கள் உயர்வதில்லை; தூய காற்றோ, பிரகாசமான ஒளியோ அவர்களுக்குத் தெரிவதில்லை. கடவுளைக் குறித்து அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது. நான் உங்கள் முன்பு எடுத்துக்காட்டிய விதிகளுக்குப் பணிந்து நடப்பதால் ஏற்படும் உண்மையான, தீவிரமான சுயேச்சையைப் போன்றது எதுவும் அவர்களுக்கு இருப்பதும் கிடையாது.

[ஸ்ரீ. ஜி. ஏ. நடேசன் வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' என்ற நூலிலிருந்து எடுத்தது]

**[ஒவ்வொரு சத்தியாக்கிரகியும் தமது அன்றாட வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டிய விதிகளைக் குறித்து**

மகாத்மா, 1930-இல் எராவ்டா சிறையிலிருந்தபோது வாரந்தோறும் சபர்மதி ஆசிரமத்திலிருந்தவர்களுக்கு எழுதி வந்தார். அவை பின்னால் 'எராவ்டா மந்திர்' என்ற பெயரில் ஒரு சிறு நூலாக வெளி வந்தது. அதில் கூறப் பட்ட விரதங்கள், மேலே சத்தியாக்கிரக ஆசிரமத்தைக் குறித்துச் சென்னையில் 1916-இல் மகாத்மா செய்த பிரசங் கத்தை ஒட்டியதாகவே இருப்பதால் அவை இங்கே கொடுக்கப்படவில்லை. ஆனால், அகிம்சை விரதத்தைக் குறித்து 'எராவ்டா மந்திரி'ல் கூறப்பட்டிருப்பது, 'மகாத்மா காந்தி நூல்கள்' இரண்டாம் தொகுப்பில் 16-20-ஆம் பக்கங்களில் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

# 2

# யார் சத்தியாக்கிரகியாக முடியும்?

யார் சத்தியாக்கிரகியாக இருக்க முடியும் என்பதைக் குறித்து 1914-ஆம் ஆண்டில் காந்திஜி தென்னாப்பிரிக்காவி லிருந்தபோது "இந்தியன் ஒப்பீனியன்" விசேஷ மலருக்கு குஜ ராத்தியில் எழுதிய ஒரு கட்டுரை முக்கியமானதாகும். ஒரு சத்தியாக்கிரகிக்குக் கடவுள் நம்பிக்கை இருக்க வேண்டியது மிக அவசியம் என்று அக்கட்டுரையில் காந்திஜி அப்பொழுதே வற்புறுத்தியிருக்கிறார். அதில் காந்திஜி கூறுவதாவது :—

"சமய நெறியில் உண்மையான நம்பிக்கை இருப்பவர்கள் மாத்திரமே சத்தியாக்கிரகிகளாக இருக்க முடியும். சமயத்தின் பெயரால் ஏதாவது செய்யப்பட்டு, ஆனால் அப்படிச் செய்யும் காரியம் சமயத்திற்கே விரோதமானதாக இருக்குமானால், அது சமயமாகாது. பூரணமான நம்பிக்கையுடன் எல்லாவற்றையும் கடவுளிடமே ஒப்படைத்துவிடுகிறவருக்குத் தோல்வி என்பதே இருக்கமுடியாது. மற்றவர்கள் என்ன சொன்னாலும், அவருக்கு வெற்றியும் தோல்வியும் ஒன்றே. இந்த ரகசியத்தை நன்றாக உணர்ந்துகொண்டுவிட்டவர்கள் மாத்திரமே அதை அறிந்தவர் களாக முடியும்.

"சத்தியாக்கிரகம் என்ற சொல்லுக்கே சத்தியத்தின் பலம் என்பதுதான் பொருள். உடலில் பலமில்லாதவர்களோ, உடல் பலத்தை உபயோகிக்க முடியாதவர்களோதான் சத்தியாக்கிரக ஆயுதத்தை நாடுகிறார்கள் என்று சொல்லுவது அர்த்தமற்ற தாகும். ஒரு சத்தியாக்கிரகி, மரண பயமும் இல்லாமல் போராட்டத்தில் இறங்க வேண்டியிருக்கிறது. உடல் வலிவைவிட

அவருக்கு அதிக மனோதிடம் வேண்டியிருக்கிறது. சுருங்கச் சொன்னால் ஒரு சத்தியாக்கிரகி, முதலாவதாகவும் முக்கியமாக வும் சத்தியத்திற்காகப் பாடுபட்டு அதில் முழு நம்பிக்கையும் கொண்டிருக்க வேண்டும்."

# 3

# கடவுள் நம்பிக்கையின் முக்கியம்

பிருந்தாவனத்தில் (பீகாரில்) நடந்த காந்தி சேவா சங்கத் தின் வருடாந்தர மகாநாட்டை ஆரம்பித்து வைத்து காந்திஜி பேசுகையில், ஒரு சத்தியாக்கிரகிக்கு இருக்க வேண்டிய இன்றி யமையாத தகுதி, கடவுள் நம்பிக்கையாகும் என்றார். கடவுள் நம்பிக்கையில்லாத சோஷியலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும் சத் தியாக்கிரகிகளாக் இருக்க முடியாதா என்று ஒருவர் கேட்ட தற்கே காந்திஜி அவ்வாறு கூறினார். அவர் மேலும் கூறிய தாவது :

"அவர்கள் சத்தியாக்கிரகிகளாக இருக்க முடியாது என்றே அஞ்சுகிறேன். ஏனெனில், ஒரு சத்தியாக்கிரகிக்கு கடவுளைத் தவிர வேறு புகல் இல்லை. வேறு ஏதாவது புகலிருப்பவர்கள், வேறு ஏதாவது ஓர் உதவியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர் கள், சத்தியாக்கிரகம் செய்ய முடியாது. அவர் சாத்வீக எதிர்ப் பாளராக இருக்கலாம்; ஒத்துழையாதார் போன்றும் இருக்கலாம். ஆனால், அவர் உண்மையான சத்தியாக்கிரகியாக மாத்திரம் இருக்க முடியாது. இதனால் வீரத்தோழர்களை ஒதுக்கிவிடுவ தாகும்; கடவுள் நம்பிக்கை இருப்பதாகச் சொல்லிக்கொள்ளு பவர்களைச் சத்தியாக்கிரகிகளாகச் சேர்த்துக் கொள்ளுவ தாகலாம்; ஆனால், அவர்கள் தங்களுடைய அன்றாட வாழ்க் கையில் தாங்கள் கூறிக் கொள்ளுகிறபடி நடக்காதவர்களாக இருக்கலாம் என்றெல்லாம் நீங்கள் வாதிக்கக் கூடும். சொல்லு கிறபடி நடந்து கொள்ளாதவர்களைக் குறித்து நான் சொல்ல வில்லை. ஆனால், தங்களுடைய கொள்கைக்காகக் கடவுளின் பெயரால் சகலத்தையும் தத்தஞ் செய்துவிடத் தயாராக இருப் பவர்களைக் குறித்தே கூறுகிறேன். இந்தக் கொள்கையை இன்று ஏன் நான் கொண்டு வருகிறேன்; இருபது ஆண்டுகளுக்கு முன்னால் இதை ஏன் நான் கொண்டு வரவில்லை என்று திரும்ப வும் என்னைக் கேட்காதீர்கள். நான் தீர்க்கதரிசியல்ல. தவறு களின் மூலம் சத்தியத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக் கும் தவறு செய்யும் இயல்புடைய சாதாரண மனிதனே நான் என்றுதான் நான் சொல்ல முடியும். 'அப்படியானால் புத்தர் களின், ஜெயினர்களின் விஷயம் என்ன?' என்று யாரோ ஒரு

வர் கேட்டார். சரி, புத்தர்களும் ஜெயினர்களும், தாங்களே இந்த ஆட்சேபணையைக் கிளப்புவார்களானல், இத்தகைய கண்டிப்பான விதி அனுசரிக்கப்படுமாயின் தாங்களும் தகுதியில்லாதவர்களாகி விடுவோம் என்று சொல்லுவார்களானல், அவர்கள் கூறுவதை நானும் ஒப்புக்கொள்ளுகிறேன் என்றே அவர்களிடம் கூறுவேன்.

"எனக்கு எந்தக் கடவுளிடம் நம்பிக்கை இருக்கிறதோ, அந்தக் கடவுளிடம் தான் உங்களுக்கும் நம்பிக்கை இருக்க வேண்டும் என்று நான் சொல்லமாட்டேன். கடவுளைக் குறித்து நீங்கள் கொள்ளும் வியாக்கியானம் என்னுடைய கருத்துக்கு மாறுபட்டதாக இருக்கலாம். ஆனல், அந்தக் கடவுளிடம் உங்களுக்கு இருக்கும் நம்பிக்கை முடிவான ஸ்திரமுடையதாக இருக்க வேண்டும். அது ஏதோ மிக உயர்ந்த ஒரு சக்தியாக இருக்கலாம், அல்லது விவரித்துச் சொல்லவே முடியாத ஒன்ருகவும் இருக்கலாம். ஆனல், அதில் நம்பிக்கை இருந்தாக வேண்டியது இன்றியமையாததாகும். வெறுப்பு, முணுமுணுப்பு ஒன்றுமே இல்லாமல் எல்லா வகையான சித்திரவதைகளையும் சகித்துக் கொள்ளுவது என்பது, கடவுளிடமிருந்து வரும் பலத்திலைன்றி மனிதனுல் முடியாததாகும். அவன் பலத்தினுல் மாத்திரமே நாமெல்லோரும் பலத்துடன் இருக்கிருேம். தங்களுடைய கவலைகளையும் பயங்களையும், அளவிடற்கரியதான அம்மாபெரும் சக்தி மீது போட்டு விட்டுவிடுகிறவர்களுக்கே கடவுள் நம்பிக்கை இருக்க முடியும்."

ஆனல், ஒருவர் கதர் அணியாதவராக இருக்கலாம்; என்ருலும், அவர் உள்ளத்தில் அதிக தேசாபிமானம் இருக்கக் கூடும்; அவர் தமது வக்கீல் தொழிலை விட்டிருந்தாலும் கதர் கட்டாமல் இருக்கலாம். அவர் விஷயம் என்ன? இக்கேள்விக்குப் பதிலாக காந்திஜி கூறியதாவது:

"அப்படிப்பட்டவர் மதிப்பிற்குரியவராக இருக்கலாம். ஆனல், அவர் ஏன் சட்ட மறுப்புச் செய்ய வேண்டும்? அவர் சேவை செய்வதற்கு இன்னும் எத்தனையோ வழிகள் இருக்கின்றன. கோடிக்கணக்கானவர்கள் சட்ட மறுப்புச் செய்பவர்களாக இருக்க வேண்டும் என்பதில்லை. நிர்மாண வேலைத் துறைகள் அவர்களுக்கு இருக்கின்றன. சட்ட மறுப்பாளருக்குச் சில விசேஷ, கண்டிப்பான கட்டுதிட்டங்கள் அவசியம். தனக்கென்று விதிக்கப்பட்டிருக்கும் விதிகளைத் தங்குதடையின்றி விரும்பிப் பணிகிறவருக்கு மாத்திரமே, ஒரு குறிப்பிட்ட சட்டத்தையோ, உத்தரவையோ எதிர்ப்பதற்கோ, மீறுவதற்கோ உரிமை ஏற்பட முடியும். சத்தியாக்கிரக விதிகளை அனுசரித்து நடக்கும் சாதாரணமானவரை விட மற்றவைகளிலெல்லாம் சிறந்தவராக இருப்பவர்களை இது விலக்கிவிடக் கூடும். அந்த மற்றவர்கள்,

இன்னும் சிறந்ததான காரியங்களைச் செய்யலாம். ஆனால், சட்ட மறுப்பைச் செய்ய முடியாது."

மற்றொரு சந்தர்ப்பத்தில் இதே விஷயத்தைக் குறித்து இதே கருத்தோடு பேசிய காந்திஜி கூறியதாவது: "ஆங்கில அகராதிக்கு வந்து விட்ட 'ஹிமாலயத் தவறு' என்ற சொல், எல்லாச் சமயங்களிலும் என் மீதே வீசப்படுகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். ஒரு குஜராத்திச் சொல்லை மொழி பெயர்ப்பதற்காக இச்சொல்லை உண்டாக்கினேன். 1919-இல் கேடாவிலும் அகமதாபாத்திலும் மக்கள் முன்பு சட்டமறுப்பைக் கொண்டு வந்த என் தவறை நான் கண்டித்துக் கொள்ள வேண்டி வந்தது. மற்ற எல்லா ஜில்லாவையும் விட கேடாவில் குற்றத்தின் அளவு அதிகம். இந்த மக்கள், 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று கோஷித்துக் கொண்டே தண்டவாளங்களைப் பெயர்த்தார்கள்; ரெயில்களைக் கவிழ்த்தார்கள். அதிருஷ்டவசமான சம்பவமில்லாதிருந்தால், நூற்றுக்கணக்கான சிப்பாய்களைக் கொன்றிருப்பார்கள். அகமதாபாத் மில் தொழிலாளர்களும் அதே போன்றே நடந்து கொண்டார்கள். அனுசூயாபென் கைது செய்யப்பட்டார், அடிக்கப்பட்டார் என்று பொய்யான வதந்தி பரவிவிட்டது. மக்கள் போலீஸ் ஸ்டேஷனைத் தாக்கினார்கள். ஓர் ஆங்கிலேய சார்ஜண்டைப் பிடித்துக் கொன்று, அவரைத் தெருக்களில் கொளுத்திவிட்டனர். அவர்கள் தந்திக் காரியாலயங்களைக் கொளுத்திவிட்டனர்; இன்னும் ஏராளமான நாசங்களைச் செய்தார்கள். சட்ட மறுப்பின் கலையைக் கொஞ்சமும் அறியாதவர்களிடம் சட்ட மறுப்பைக் கொண்டு வந்ததில் நான் ஹிமாலயத் தவறையே செய்து விட்டேன் என்பதை உணர்ந்துகொண்டேன். இயல்பாகவே சட்டத்திற்கு உட்பட்டு நடப்பவர்களாக இருப்பவர்களுக்கே இக்கலை தானே வரும். தென்னாப்பிரிக்காவில் என் குழந்தைகளின் ஜனனங்களைப் பதிவு செய்து கொள்ளவோ, அவர்களுக்கு அம்மை குத்தவோ எனக்கு விருப்பமில்லை. என்றாலும், சட்டத்திற்கு உடன்பட்டு நான் நடந்தேன். பிறகு நான் அம்மை குத்துவதற்கு உறுதியான எதிர்ப்பாளனாகிவிட்டேன். அம்மை குத்திக் கொள்ளுவது சம்பந்தமான விதியைச் சிறையில் மீறுவது என்பது எளிதான காரியமே அல்ல. ஆனால், மனச்சாட்சி பூர்வமாக எனக்கு இருந்த ஆட்சேபணையை அவர்கள் மதித்தார்கள். ஏனெனில், அரசாங்கத்தின் ஸிவில், ஒழுக்க சம்பந்தமான சட்டங்களுக்கெல்லாம் உடன்பட்டு நடந்து வந்திருக்கிறேன் என்பதை அவர்கள் அறிவார்கள். பணிந்து நடக்கும் இதிலிருந்துதான் சட்ட மறுப்புச் செய்வதற்கான சக்தி எழுகிறது. எனவே, என் சட்ட மறுப்பு எனக்கு ஏற்றதாக இருக்கிறது"

மேற்கொண்டும் சில கேள்விகள் கேட்கப்பட்டன. "ஒருவர் அகிம்சையிலும் சத்தியத்திலும் நம்பிக்கை கொண்டிருக்கிறார்.

மற்ற நிபந்தனைகளையும் பூர்த்தி செய்பவராக இருக்கிறார். ஆனால், சந்தர்ப்பத்தின் காரணமாக அவர் அந்நியத் துணியை விற்க வேண்டியவராக இருக்கிறார்; அவரும் இத்தடையின் கீழ் வருவாரா?"

"நிச்சயமாக வருவார். இவ்விஷயத்தில் நாம் அதிகக் கண்டிப்பாக இராமல் இருக்க முடியாது" என்றார், காந்திஜி.

"கெட்ட பழக்கங்களிலிருந்து விடுதலை என்பது என்ன? சுருட்டுப் புகைப்பது கெட்ட பழக்கமா? வெற்றிலைப் பாக்கு போடுவது கெட்ட பழக்கமா?"

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஒரு எல்லையை நான் நிர்ணயித்துவிட முடியாது. எல்லா போதை வஸ்துக்களும் மனிதனின் அறிவைக் கெடுத்தோ, குழப்பியோ விடுகின்றன. தன் அறிவு கெட்டுவிட, குழம்பிவிட அனுமதித்துக்கொள்ளுபவர் சத்தியாக்கிரகம் செய்ய முடியாது. ஆனால், இவ்விஷயத்தில் நான் முடிவு கூறிவிட இயலாது. கஞ்சா, பங்க், அபினி முதலியன போதை தருபவை என்று ஒப்புக்கொள்ளப்பட்டு மது விலக்கின் கீழ் வருகின்றன. புகை பிடிப்பதனாலும் புகையிலை போட்டுக் கொள்ளுவதனாலும் தங்கள் வாயை ஆபாசப்படுத்திக்கொள்ளு வதை மனிதர் எப்படி சகிக்கிறார்கள் என்பது எனக்கு விளங்க வில்லை. என்றாலும் புகையிலை, போதை வஸ்துக்களில் சேர்ந்தது அல்ல."

"அக்கிரமமாக நடத்தப்படுவதை ஆட்சேபித்துச் சிறைக் குள் சத்தியாக்கிரகம் செய்வது அனுமதிக்கக்கூடியதா?"

**காந்திஜி:** "அனுமதிக்கக்கூடியதே. ஆனால், அக்கிரமமாக நடத்தப்படுவது என்பது இன்னதுதான் என்பதைத் திட்ட மாகச் சொல்லிவிட முடியாது. எல்லாமே இதன் கீழ் வந்துவிடாமலிருக்கலாம். சித்திரவதைகள், மிருகத்தன மாக நடத்தப்படுவது, அவமதிப்புகள் ஆகியவைகளை யெல்லாம் சகித்துக்கொள்ளுவதற்குத் தயாராகவே சத்தி யாக்கிரகி போகிறான். ஆனால், தன்னுடைய சுயமதிப்பு, கௌரவ உணர்ச்சிக்குப் பங்கம் ஏற்படும் காரியம் எதையும் அவன் செய்யக்கூடாது. என்றாலும், சத்தியாக்கிரகம் என்பது, அலட்சியமாகவோ அல்லது எளிதாகவோ கொஞ்சம் ஆத்திரம் மூட்டப்பட்ட உடனேயோ உபயோ கித்துவிடக்கூடிய ஆயுதம் அன்று. எளிதில் கோபமடைந்து விடக்கூடியவர்கள் சிறைக்குப் போகாமலிருப்பதே நல்லது."

—'ஹரிஜன்' - 3—6—1939

# 4

# யக்ஞம் அல்லது தியாகம்

மற்றவர்களின் நலனை முன்னிட்டு, அதிலிருந்து எந்தப் பிரதி பலனையும் எதிர்பாராமல், லோகாயத அல்லது ஆன்மிகத் தன்மை வாய்ந்த செயலே யக்ஞம் எனப்படும். 'செயல்' என்பதை அதன் விரிவான பொருளில் இங்கே கொள்ளுதல் வேண்டும். எண்ணம், சொல், செய்வது ஆகியவைகளும் இதில் சேர்ந்தவை. 'மற்றவர்களுக்காக' என்பது, மனித வர்க்கம் மாத்திரமேயன்றி எல்லா உயிர்களுமாகும். ஆகையால், அகிம்சை நோக்கோடும் கவனித்தால், மனித வர்க்கத்தின் சேவையைக் கருதிக்கூட தாழ்ந்த மிருகங்களைப் பலியிடுவது யக்ஞம் அல்ல. வேதங்களில் மிருக பலியைப் பற்றிக் கூறப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுவதைக் குறித்துக் கவலை இல்லை. சத்தியத்தின், அகிம்சையின் அடிப்படையான பரீட்சையில் அத்தகைய பலி நிற்க முடியாது என்ற ஒன்றே நமக்குப் போதுமானது. வேத நூல்களைப் படித்த புலமை எனக்கு இல்லை என்பதை நான் தயக்கமின்றி ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில், அந்த என் புலமையின்மையைக் குறித்து நான் கவலைப்படவில்லை. ஏனெனில், வேத கால சமூகத்தில் மிருக பலி வழக்கம் முக்கியமாக இருந்திருக்கிறது என்று நிரூபிக்கப்பட்டாலும், அகிம்சையை அனுசரித்து நடப்பவருக்கு அது ஒரு முன் உதாரணமாக ஆக முடியாது.

மேலும், ஒரு தியாகம் என்பது விசாலமான பிரதேசத்திலும், பெரும்பாலானவர்களின் மிகுந்த நன்மைக்கு உகந்ததாகவும் இருக்க வேண்டும். அதை, ஏராளமான ஆண்களும் பெண்களும் எந்தக் கஷ்டமுமின்றிச் செய்யக்கூடியதாகவும் இருக்க வேண்டும். ஆகையால், உயர்ந்த நன்மை என்று சொல்லப்படுவதற்காக என்றே அது செய்யப்படினும், இன்னொருவருக்குத் தீமையை விரும்பவோ, உண்டாக்கவோ செய்யப்படுவது மகாயக்ஞம் ஆகாது என்பது மாத்திரமல்ல, அது ஒரு யக்ஞமும் ஆகாது. யக்ஞ ரகத்தின் கீழ் வராத எல்லாச் செயல்களும் பந்தத்தைத்தான் உண்டாக்குகின்றன என்று கீதை உபதேசிக்கிறது; அனுபவமும் அதே சான்றையே பகர்கிறது.

இப்பொருள்களைக் கொண்டே, யக்ஞம் இல்லாமல் உலகம் ஒரு கணமேனும் நிலையாது. ஆகையால் கீதை, மெய் ஞானத்தைக் குறித்து இரண்டாவது அத்தியாயத்தில் விளக்கிவிட்டு, அதை அடைவதற்கான உபாயங்களை மூன்றாவது அத்தியாயத்தில் கூறுகிறது. சிருஷ்டித்தவுடனேயே யக்ஞமும் வந்துவிட்

டது என்று கீதை விரிவாக எடுத்துக் கூறுகிறது. எனவே, சிருஷ்டிக்கப்பட்ட எல்லாவற்றிற்கும் உடலைக் கொண்டு சேவை செய்வதற்காக மாத்திரமே இவ்வுடல் நமக்கு அளிக்கப்பட்டிருக் கிறது. ஆகையால், யக்ஞம் செய்யாமல் சாப்பிடுகிறவன், திருட்டு உணவைச் சாப்பிடுகிறான் என்று கீதை கூறுகிறது. தூய வாழ்வை நடத்துகிறவரின் ஒவ்வொரு செயலும் யக்ஞத் தின் இயல்பிலேயே இருக்க வேண்டும். நம் பிறப்புடனேயே யக்ஞமும் நம்முடன் வந்துவிடுவதால், நம் வாழ்நாளெல்லாம் கடன்பட்டவர்களாக இருக்கிறோம். இதனால் என்றும் பிரபஞ் சத்திற்குச் சேவை செய்து வரக் கடமைப்பட்டிருக்கிறோம். ஓர் அடிமை, தான் சேவை செய்யும் எஜமானனிடமிருந்து உணவையும் துணியையும் பிறவற்றையும் பெறுவதைப்போன்றே, பிரபஞ்சத்தின் எஜமானரான கடவுள் நமக்கென்று அளிக்கும் சன்மானங்களை நன்றியுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். நாம் அடைகிறவைகளைச் சன்மானங்கள் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில், கடன்பட்டிருப்பவர்கள் என்ற வகையில் நாம் கடனை நிறைவேற்றியதற்கு எந்தச் சலுகைக்கும் உரியவர்கள் அல்ல. ஆகையால், அது கிடைக்காததற்காகக் கடவுளை நாம் குறை சொல்லக்கூடாது. நமது உடல் கடவுளுடையது; அவன் இஷ்டப்படி வைத்திருக்கவோ, விட்டெறிந்துவிடவோ வேண் டியது அது. குறை கூறுவதற்கும், அனுதாபப்படுவதற்குமான ஒரு விஷயமே அல்ல இது. இதற்கு மாறாக, ஆண்டவன் அமைப்பில் நமக்குள்ள சரியான இடத்தை நாம் உணருவதாக இருந்தால், அது இயற்கையான, இன்பமானதும் விரும்பத் தக்கதுமான ஒரு நிலையே ஆகும். இப்பேரின்பத்தை நாம் அனுபவிப்பதாயிருந்தால், உறுதியான நம்பிக்கை நமக்கு இருக்க வேண்டும். "உங்களைப் பற்றி நீங்கள் கொஞ்சமேனும் கவலைப் படாதீர்கள். எல்லாக் கவலையையும் கடவுளிடமே விட்டு விடுங்கள்" என்பதே எல்லாச் சமயங்களின் ஆக்ஞையாகத் தோன்றுகிறது.

இதைக் குறித்து யாரும் பயந்துவிட வேண்டியதில்லை. தெளிவான மனச்சாட்சியுடன் சேவைக்கே தம்மை அர்ப்பணித் துக்கொண்டுவிட்டவருக்கு, நாளுக்கு நாள் அதன் அவசியம் அதிகமாகத் தோன்றும். தொடர்ந்து அவருக்கு நம்பிக்கையும் அதிகமாகப் பலப்படும். தன்னலத்தைத் துறக்கத் தயாராக இல்லாதவரால், தம் பிறப்பின் நிபந்தனைகளை உணர்ந்துகொள்ளா தவரால், சேவை மார்க்கத்தில் சென்றுவிட முடியாது. அறிந்தோ, அறியாமலோ நாம் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு சேவையைச் செய்துகொண்டுதான் வருகிறோம். இந்தச் சேவையை வேண்டு மென்று விரும்பிச் செய்யும் பழக்கத்தை நாம் வளர்த்துக் கொண்டு விடுவோமாயின், சேவை செய்வதில் நமக்கு ஆசை நாளாவட்டத்தில் அதிக பலம் பெற்று வளரும். நமக்கு

மாத்திரமேயன்றி, உலகம் முழுவதற்குமே அதனால் இன்பமுண்டாகும்.

அதோடு, நல்லவர்கள் மாத்திரமேயன்றி நாம் எல்லோருமே, நமக்குள்ள வசதிகளையெல்லாம் மனித வர்க்கத்திற்கு அளித்து விடக் கடமைப்பட்டிருக்கிறோம். நிதர்சனமானதாக இருப்பதைப் போன்று அதுவேதான் நியதி என்றால், சுகானுபவத்தில் திளைப்பதற்கு வாழ்க்கையில் இடமில்லாது போவதோடு, அங்கே துறவு ஏற்படுகிறது. துறவுக் கடமையே மிருகத்திலிருந்து மனிதனை வேறுபடுத்துகிறது.

வாழ்க்கை இப்படித்தான் இருக்க வேண்டும் என்றால் அது ருசியற்றதாகிவிடும், களையே இல்லாததாகிவிடும், இல்லறத்தில் இருப்பதற்கே இடமில்லாது போய்விடும் என்று சிலர் ஆட்சேபிக்கிறார்கள். ஆனால், துறவு என்பது உலகத்தையே துறந்துவிட்டு காட்டுக்குப் போய்விட வேண்டும் என்பதல்ல. வாழ்வின் எல்லாச் செயல்களிலும் துறவு உணர்ச்சி ஆட்கொண்டிருக்க வேண்டும். வாழ்வு என்பது ஒரு கடமையேயன்றி, சுகானுபவங்களில் திளைத்துக்கொண்டிருப்பதல்ல என்று இல்லறத்திலிருக்கும் ஒருவர் கருதுவதால் அவர் இல்லறத்தில் இல்லாதவராகிவிடமாட்டார். ஆன்மிக உணர்ச்சியுடன் தொழிலை நடத்திக்கொண்டு வரும் ஒருவரின் கையில் கோடானுகோடி புரண்டாலும், அந்நியதியைப் பின்பற்றி அவர் நடந்தால், அவர் தம் ஆற்றல்களைச் சேவைக்கே பயன்படுத்துகிறார். ஆகையால், அவர் ஏமாற்றவோ, லாப மடிக்க முயற்சிக்கவோ மாட்டார். எளிய வாழ்க்கையையே அவர் நடத்துவார். வாழும் உயிர் எதற்கும் துன்பம் விளைவிக்க மாட்டார். கோடிக்கணக்கில் இழந்தாலும் இழப்பாரேயன்றி, இன்னொருவருக்குத் தீமை செய்யமாட்டார். இத்தகைய வர்த்தகர் ஒருவர் என்னுடைய கற்பனையில் மாத்திரமே இருக்க முடியும் என்று யாரும் எண்ணிவிட வேண்டாம். அத்தகையவர்கள் மேற்கு நாடுகளிலும் கிழக்கிலும் இருந்து வருவது உலகத்தின் அதிருஷ்டம். அத்தகைய வர்த்தகர்களை விரலை விட்டு எண்ணிவிடலாம் என்பது உண்மை. ஆனால், அப்படிப்பட்டவர் ஒருவர் உயிருடன் உதாரணமாக இருக்கிறார் என்பது தெரிந்தாலே, இது வெறும் கற்பனை அல்ல என்றாகிவிடுகிறது. இத்தகைய தியாகிகள் தாங்கள் செய்யும் வேலையைக்கொண்டே வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், வாழ்க்கையை நமக்கு நடத்த சம்பாதிப்பது என்பது அவர்கள் செய்யும் தொழிலின் ஓர் உபப் பொருளேயன்றி, அதுவே அவர்களின் வாழ்க்கை லட்சியம் அன்று. தியாக வாழ்வே கலையின் சிகரம்; உண்மையான இன்பத்தின் முழுமையும் அதுதான். சுமையாக இருக்கிறது, சங்கடமானதாக இருக்கிறது என்ற உணர்ச்சியுடன் செய்யும் யக்ஞம், யக்ஞமே அல்ல.

புலன் நுகர்ச்சி, அழிவுக்குக் கொண்டு போகிறது; துறவு அழியாமையை அளிக்கிறது. தனித்து இயங்கக் கூடியது அன்று ஆனந்தம். வாழ்க்கையைப் பற்றிய நம் போக்கைப் பொறுத்திருக்கிறது அது. ஒருவன், நாடகக் காட்சிகளைப் பார்த்து ஆனந்தப்படுவான். இன்னொருவனோ, ஆகாயத்தில் எப்பொழுதும் புதிது புதிதாகத் தோன்றும் காட்சிகளைக் கண்டு இன்புறுவான். ஆகையால், இன்பம் என்பது, தனிப்பட்டவரின், தேசத்தினரின் கல்வியைப் பொறுத்த விஷயம். நாம் குழந்தைகளாக இருக்கும் போது இன்பமடைவதற்காகச் சொல்லிக் கொடுக்கப்பட்டவைகளில் நாம் இன்பம் காண்போம். வெவ்வேறு தேசத்தினருக்கு வெவ்வேறு விதமான ருசிகள் இருந்து வருகின்றன என்பதற்கு எத்தனையோ உதாரணங்களை எளிதில் கூற முடியும்.

மேலும், தியாகம் செய்கிறவர்களில் அநேகர், தாங்கள் தன்னலமற்ற சேவையைச் செய்து வருவதால், தங்களுக்குத் தேவைப்படும் பலவற்றையும், தேவைப்படாதவை அநேகத்தையும் மக்களிடமிருந்து பெறுவதற்குத் தங்களுக்கு உரிமை இருக்கிறது என்று எண்ணுகிறார்கள். இந்த எண்ணம் ஒருவரை நேரடியாக ஆட்கொண்டு விட்டதுமே அவர், மக்களின் ஊழியராகாது போவதோடு, மக்கள் மீது கொடுமையைச் செய்பவராகி விடுகிறார்.

சேவை செய்கிறவர், தன்னுடைய சொந்த வசதிகளைக் குறித்துக் கொஞ்சமேனும் சிந்திக்கலாகாது. அந்த வசதிகளைக் கவனிப்பதையோ, அல்லது கவனிக்காமலிருந்து விடுவதையோ, மேலேயிருக்கும் எஜமானரான கடவுளிடமே அவர் விட்டுவிட வேண்டும். ஆகையால், அப்படிப்பட்டவர் தனக்கு எதிர்ப்படுகிறவைகளிலெல்லாம் தன்னைப் பந்தப்படுத்திக் கொள்ளமாட்டார். கண்டிப்பாகத் தனக்குத் தேவையாக இருப்பவைகளை மாத்திரம் எடுத்துக்கொண்டு, மற்றவைகளையெல்லாம் விட்டுவிடுவார். அவர் அமைதியாகவும், கோபம் என்பதே இல்லாமலும் இருப்பார். தனக்கு அசௌகரியங்கள் உண்டாகின்றன என்பதைக் காணும்போதும் மனத்தில் சஞ்சலமடைந்து விடாமலும் அவர் இருப்பார். நற்குணத்தைப் போன்றே இவருடைய சேவையே அதற்கான சன்மானம். அதைக் கொண்டே அவர் திருப்தியும் அடைவார்.

மேலும் சேவை செய்வதில் அலட்சியமாக இருக்கவோ, காலங் கடந்து செய்பவராக இருக்கவோ யாரும் துணிய முடியாது. தனது சொந்த காரியத்தில்தான் பாடுபட்டு உழைக்க வேண்டும், ஊதியமில்லாத பொது வேலைகளை எப்பொழுது வேண்டுமானாலும், எப்படியும் செய்யலாம் என்று எண்ணுகிறவர், தியாகம் என்ற சாத்திரத்தின் ஆரம்பப் பாடத்தைக்கூட

இன்னும் தெரிந்து கொள்ளாதவரே ஆவார். மற்றவர்களுக்காக விரும்பிச் சேவை செய்கிறவர், தம்மால் முடிந்ததில் சிறந்ததைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்; தனக்காக உழைத்துக் கொள்ள வேண்டியதை அதற்குப் பிறகுதான் அவர் கவனிக்க வேண்டும். உண்மையில் தூய்மையான பக்தன், தனக்கு என்று எதுவும் ஒதுக்கி வைத்துக் கொள்ளாமல் மனித வர்க்கத்தின் சேவைக்கு என்றே தன்னை முழுவதும் அர்ப்பணித்துக் கொள்ளுகிறான்.

('எராவ்டா மந்திரி' விருந்து எடுத்தது)

# 5

# சுயத் தூய்மையே பாதுகாப்பு

தற்பாதுகாப்புக்கு, ஆன்மிகக் கலையையே நான் மேற்கொள்ளுவேன். சுயத் தூய்மை ஒன்றே, சிறந்ததும், நீடித்து இருக்கக்கூடியதுமான தற்பாதுகாப்பு. இன்று அடிக்கடி நம்மை மிரட்டி வருபவைகளைக் கண்டு நான் நிலை தவறிவிடமாட்டேன். ஹிந்துக்களுக்குத் தங்களிடமே நம்பிக்கை இருக்குமானால், அவர்கள் தங்களுடைய பாரம்பரியத்தை அனுசரித்து வேலையும் செய்து வருவார்களானால், பிறருடைய மிரட்டல்களைக் கண்டு அவர்கள் பயப்படுவதற்குக் காரணமே இல்லை. உண்மையான ஆன்மிகப் பயிற்சியைப் பெற அவர்கள் திரும்பவும் ஆரம்பித்துவிடுவார்களானால், முஸ்லிம்களும் அவ்விதமே செய்வார்கள். அப்படி முஸ்லிம்கள் செய்யாமலிருக்க முடியாது. தங்களிடத்திலும், அதனாலேயே முஸ்லிம்களிடத்திலும் நம்பிக்கையுள்ள இளம் ஹிந்துக்களின் கோஷ்டி ஒன்றை என்னால் திரட்ட முடியுமானால், அந்தக் கோஷ்டியே பலவீனமானவர்களைப் பாதுகாக்கும் கேடயமாகிவிடும். அவர்கள் (அந்த வாலிப ஹிந்துக்கள்), பிறரைக் கொல்லாமல் தாம் சாவது எப்படி என்பதைப் போதிப்பார்கள். இதைத் தவிர வேறு வழி எனக்குத் தெரியாது. நமது மூதாதையர், துன்பங்களே தங்களைச் சுற்றிலும் கவிழ்ந்து கொண்டிருக்கின்றன என்பதைக் கண்டதும், தவம் செய்ய, தூய்மையை அடையச் சென்றார்கள். ஊனின் கதியற்ற நிலையை அவர்கள் உணர்ந்தார்கள். அந்தக் கதியற்ற நிலையில், தங்களுடைய கோரிக்கைக்கு இணங்கி வரும்படி கடவுளைக் கட்டாயப்படுத்தும் அளவுக்குப் பிரார்த்தித்தார்கள். "அப்படியானால் சரி, ஆயுதத்தை உபயோகித்துக் காக்க கடவுள் இன்னொருவரை அனுப்பினார்" என்று என் ஹிந்து நண்பர் கூறினார். இந்தப் பதிலில் இருக்கும் உண்மையை மறுத்துக்கொண்டிருப்பதில் எனக்குச் சிரத்தை இல்லை. ஹிந்து என்ற வகையில், அவர் காரணத்தை அலட்சியம்

செய்துவிட்டுப் பலனை அடைந்துவிட முடியாது என்றுதான் அந்த நண்பருக்குச் சொல்லுவேன். நாம் போதுமான தவத்தைச் செய்துவிட்ட பிறகே, போராடுவதற்கான சமயமாகும். போதிய அளவுக்கு நாம் தூய்மையை அடைந்திருக்கிறோமா என்று கேட்கிறேன். தனிப்பட்டவரின் தூய்மையைப் பற்றிய விஷயம் ஒரு புறமிருக்க, தீண்டாமை சம்பந்தமாக நாம் செய்திருக்கும் பாபத்திற்காவது விரும்பி நாம் பிராயச்சித்தம் செய்திருக்கிறோமா? நமது மத போதகர்கள், அவர்கள் எப்படி இருக்க வேண்டுமோ அப்படியே இருந்து வருகிறார்களா? முஸ்லிம்களின் நடத்தையில் குற்றங் கண்டு பிடித்துக்கொண்டிருப்பதிலேயே நம்கவனத்தையெல்லாம் கழித்துக் கொண்டு, நாம் வீணை முயற்சியிலேயே ஈடுபட்டு வருகிறோம்.

'எங் இந்தியா' 19—6—1924

# 6

# சத்தியாக்கிரக வெற்றிக்கு வழிகள்

அநியாயமானதோர் லட்சியத்திற்காகச் சத்தியாக்கிரகமே இருக்க முடியாது. லட்சியத்திற்காகப் பாடுபட்டு வருகிறவர்கள் அதில் உறுதியுடனில்லாது போனால், கடைசி வரையில் போராடவும் கஷ்டப்படவும் தகுதியுள்ளவர்களாக இல்லாது போனால், நியாயமான லட்சியத்திற்காகச் செய்யும் சத்தியாக்கிரகமும் வீணாகிவிடும். அதோடு பலாத்காரத்தைக் கொஞ்சம் உபயோகித்து விட்டாலும், நியாயமான லட்சியம் கெட்டுப் போய்விடும். பலாத்காரத்தை எந்த முறையிலும் ரூபத்திலும் மனம், வாக்கு, செயலில் உபயோகிப்பதைச் சத்தியாக்கிரகம் தவிர்க்கிறது. லட்சியம் நியாயமானதாக இருந்து, முடிவில்லாத துன்பங்களை அனுபவிக்கும் சக்தியும் இருந்து, பலாத்காரமும் தவிர்க்கப்படுமானால், வெற்றி நிச்சயம்.

'எங் இந்தியா' 27—4—1921

  

ஆத்திரத்தை மூட்டும் காரியம் என்ன நடந்தாலும் நமது நிதானத்தை இழந்து விடாமலிருப்பதற்கு வேண்டிய தகுதி நமக்கு இருந்தாலன்றி வெற்றி அசாத்தியம். துப்பாக்கி வேட்டுகளுக்கு நடுவிலும் அமைதியாக இருக்க வேண்டியது ஒரு சிப்பாயின் இன்றியமையாத குணம். ஆத்திரமூட்டும் கடுமையான தீ போன்ற செய்கைகளுக்கு நடுவிலும் ஒருவரால் அமைதியோடும் கலங்காமலும் இருக்க முடியாது போனால், அவர் சிறந்த ஒத்துழையாமைக்காரரே அல்ல.

ஒரு விஷயத்தை யாரும் தவருக எண்ணிக்கொண்டுவிட வேண்டாம். கட்டுதிட்டங்களுக்கு அடங்கி நடக்கும் சிப்பாய் களைப் போலப் பொதுஜனக் கூட்டத்தினர் நடந்து கொண்டா லன்றி, சாத்விக சட்ட மறுப்பு என்பது சாத்தியமே அல்ல. ஒவ்வோர் ஆங்கிலேயரும் தமது சொந்த ஊரில் எவ்வளவு பத் திரமாக இருப்பார்களோ, அவ்வளவு பத்திரமாகவே இங்குமிருப் பார்கள் என்று அவர்களுக்கு உறுதி கூற நம்மால் முடிந்தாலன்றி, நாம் சட்ட மறுப்புச் செய்ய இயலாது. அவர்களுக்கு நாம் வாக் குறுதி கொடுப்பது மாத்திரம் போதாது. ஒவ்வொரு ஆங்கிலே யரும், ஆங்கிலேயப் பெண்ணும், அவர்களுக்கு இருக்கும் துப் பாக்கி முனைப் பாதுகாப்பின் காரணமாக அல்ல, நம்முடைய ஜீவனுள்ள அகிம்சைக் கொள்கையின் காரணமாகப் பத்திரமாக இருப்பதாக உணர வேண்டும். வெற்றிக்கு மாத்திரமல்ல, இப் பொழுதுள்ள முறையில் இயக்கத்தை நடத்திக் கொண்டு போவதற்கு நமக்குள்ள ஆற்றலுக்கும் இது நிபந்தனையாகும். ஒத் துழையாமை இயக்கத்தை நடத்துவதற்கு வேறு மார்க்கம் எதுவும் இல்லை.

'எங் இந்தியா' - 25—8—1921

# 7

# தீரமும் கட்டுதிட்டமும் அவசியம்

அகிம்சை விரதம் பூண்டிருக்கும் நாம், நம் மானத்தை இழந்து ஒத்துழைக்கவேண்டும் என்ற அவசியமே இல்லை. ஆகையால், நாம் வயிற்றினல் ஊர்ந்து செல்லவோ, நம் மூக்கினல் தரையில் கோடு கிழிக்கவோ, பிரிட்டிஷ் கொடிக்கு வணங்க ஊர்ந்துகொண்டு போகவோ, அதிகாரிகள் ஆக்ஞைக்கு உட்பட்டு மானக்கேடான வேறு எந்தக் காரியத்தையோ செய்ய வேண்டிய அவசியம் இல்லை. ஆனல், இதற்கு மாருக, நாம் சுட்டுத் தள்ளப்பட்டாலும் இத்தகைய காரியங்களைச் செய்ய மறுத்துவிட வேண்டியது நமது கொள்கையின்படி அவசிய மாகிறது. எனவே, உதாரணமாக, ஜாலியன்வாலா பாக்கி லிருந்த மக்கள் மீது சுட்டபோது, அவர்கள் அங்கிருந்து ஓடிவிட வேண்டியதோ, அல்லது புறங்காட்டிவிட வேண்டியதோ அம்மக் களின் கடமையாகாது. அகிம்சை உபதேசம் அவர்களை அடைந் திருக்குமானல், அவர்கள் மீது பீரங்கிப் பிரயோகம் நடந்த போது அம்மக்கள் தங்கள் மார்புகளைத் திறந்துகொண்டு பீரங்கி களை நோக்கிப் போயிருக்கவேண்டும்; தமது நாட்டிற்குச் சுதந் திரம் என்பதுதான் அதன் பொருள் என்ற நம்பிக்கையில் சாவதில் அவர்கள் இன்பம் கண்டிருக்கவேண்டும் என்றே எதிர்

பார்க்கப்படுவார்கள். கொடியனின் பலத்தைக் கண்டு அகிம்சை நகைக்கிறது; திருப்பித் தாக்காமலிருப்பது, பயந்தோடாம லிருப்பது ஆகியவைகளினுல் அவன் வெட்கிச் செயலற்றுவிடும் படி செய்கிறது. ஜெனரல் டயர் எதிர்பார்த்தபடி நாம் நடந்து கொண்டுவிட்டதால், அவன் இஷ்டம் நிறைவேறும்படி செய்துவிட்டோம். தான் சுடுவதால் நாம் ஓட வேண்டும் என்று விரும்பினுன்; நம் வயிற்றினுல் நாம் ஊர்ந்து செல்ல வேண்டும் என்று விரும்பினுன்; நம் மூக்குகளினுல் தரை யில் கோடு கிழிக்க வேண்டும் என்றும் விரும்பினுன். 'பயங்கர மான' வேலையின் ஒரு பகுதியே அது. கண் கொட்டாமல் அதன் முன்பு நாம் நிற்போமாஞல், ஒரு பேயே போன்று அது மறைந்து போய்விடும். அத்தகைய தீரத்தை நாம் எல்லோருமே பெற்று விடுவது என்பது முடியாமலிருக்கலாம். ஆனுல், ஒன்று மாத் திரம் நான் நிச்சயமாகக் கூறுவேன்: திருப்பித் தாக்குவது என்பது இல்லாமல் பாறை போன்று நாம் நிற்கும்படிச் செய்ய வல்ல தீரம் நம்மில் சிலருக்காவது இருந்தாலன்றி, இந்த ஆண்டில் சுயராஜ்யத்தை நாம் அடைந்துவிட முடியாது. வெறும் வெளியில் ஓங்கிச் சுழற்றும் கை சுளுக்கிக்கொண்டு விடும். அதே போல கொடியனின் பலத்திற்கு உடன்பட எதுவும் இல்லாதபோது, அப்பலம் அக்கொடியன் மீதே சுற்றிக்கொண்டு விடும்.

மேலே விவரித்துள்ளபடி, அமைதியான தீரம் நமக்குத் தேவையாவதைப் போன்று, சாத்விகச் சட்ட மறுப்பை நாம் செய்ய முடிவதற்குச் சரியான கட்டுதிட்டமும், வலியப் பணிந்து போவதில் பயிற்சியும் நமக்கு வேண்டும். தீவிரமான வகையில் அகிம்சை வெளிப்படுவதே சாத்விக சட்ட மறுப்பு. பலமுள்ளவர்களின் அகிம்சையை, சாத்விக அதாவது பலவீனர் களின் எதிர்மறையான அகிம்சையிலிருந்து சாத்விகச் சட்ட மறுப்பு வேறுபடுத்திக் காட்டுகிறது. பலவீனம் எவ்விதம் நம்மைச் சுயராஜ்யத்திற்குக் கொண்டு போகாதோ அதே போல எதிர்மறையான அகிம்சையும் நம் காரியம் சித்தியாகும்படி செய்வதில் தவறிவிடும்.

அப்படியாஞல் இதற்கு வேண்டிய கட்டுதிட்டம் நம்மிடம் இருக்கிறதா? நமது சொந்த விதிகளுக்கும் தீர்மானங்களுக்கும் உடன்பட்டு நடக்கும் உணர்ச்சியையாவது நாம் அடைந்திருக் கிறோமா என்று ஒரு நண்பர் என்னைக் கேட்டார். சென்ற பன் னிரண்டு மாதங்களில் மகத்தான முன்னேற்றத்தை நாம் அடைந் திருந்தபோதிலும், எளிதான நம்பிக்கையுடன் சட்ட மறுப்புப் போராட்டத்தில் இறங்குவதற்கு வேண்டிய கட்டுதிட்ட உணர்ச்சியை நாம் பெற்றுவிடவில்லை என்பது நிச்சயம். சில விதிகள், மேலிருந்து நம் மீது திணிக்கப்படுகின்றன. அந்த விதிகளை மீறுவதிலுள்ள தவறை, அதற்குரிய தண்டனையை அடைவதன் மூலம் போக்கிக்கொண்டுவிடலாம். ஆனுல், நாமே

விரும்பி நிறைவேற்றிக்கொண்டிருக்கும் விதிகளுக்கு, நமது சொந்த மனச்சாட்சி அங்கீகரிக்காது என்பதைத் தவிர வேறு அதிகாரம் எதுவுமில்லை. எனினும் மேலிருந்து நம் மீது திணிக்கப் படும் விதிகளைவிட இவ்விதிகளை நிறைவேற்ற நாம் அதிகக் கடமைப்பட்டிருப்பதோடு, நம்மை இவை அதிகமாகவும் கட்டுப் படுத்துகின்றன. ஆகையால், நாமே செய்துகொள்ளும் விதி களுக்குப் பணியும் கட்டுதிட்டத்தை நாம் கற்றுக்கொள்ளவில்லை யென்றால், அதாவது நாம் அளித்த வாக்குறுதியை நாம் நிறை வேற்றவில்லை யெனின், சாத்விகமானது என்று சொல்லக் கூடியதான சட்ட மறுப்பை மேற்கொள்ளுவதற்கு நாம் தகுதியுள்ளவர்களாக மாட்டோம். எனவே, ஒவ்வொரு காங்கிரஸ்காரருக்கும், ஒத்துழையாதார் ஒவ்வொருவருக்கும் முக்கியமாக அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் நான் ஒன்று கூறுகிறேன்: அவர் கள் ஒவ்வொருவரும் தங்களைக் காங்கிரஸுடன் ஒழுங்கு செய்து கொள்ளட்டும். கண்டிப்பான வகையில் தங்களைத் தாங்களே பரிசோதித்துக்கொண்டு தங்கள் கொள்கையை அனுசரித்து நடக்கட்டும். அவர்கள் எங்காவது தவறியிருந்தால் தங்களை ஒழுங்குபடுத்திக்கொள்ளட்டும்.

— 'யங் இந்தியா' - 20—10—1921

# 8

# பணிவின் அவசியம்

அகிம்சை உணர்ச்சி நிச்சயமாகவே அடக்கத்தில் கொண்டு போய்விடுகிறது. யுகாந்திரங்களின் பாறை போன்ற தான கடவுளை நம்பி இருப்பது என்பதே அகிம்சையின் பொருள். அவன் உதவியை நாம் நாடுவதாயின், பணிவோடு கூடிய, செய்த தவறுக்கு வருந்தும் உள்ளத்துடன் கடவுளை நாட வேண்டும். காங்கிரஸில் தாங்கள் பெற்ற அற்புதமான வெற்றி யைக்கொண்டு ஒத்துழையாதார் பெருமையடித்துக்கொண்டிருக் கக்கூடாது. மாமரம், தனது பழங்கள் பழுத்ததும் எவ்விதம் அவற்றைக் கீழே போட்டுவிடுகிறதோ, அதே போல நாம் நடந்து கொள்ளவேண்டும். பெருமையெல்லாம் கம்பீரமான அடக்கத்தில் தான் இருக்கிறது. ஆனால், ஒத்துழையாமைக்காரர்களோ, தங் களுக்கு மாறுபட்ட கருத்துக்கொண்டிருப்பவர்களிடம் அவர்களை அவமதிக்கும் முறையில் நடந்துகொள்ளுவதோடு, கொஞ்சமும் சகிப்புத் தன்மையில்லாமலும் நடந்து வருகிறார்கள் என்று தெரி கிறது. இவ்விதம் அவர்கள் அகந்தையைக் காட்டிக்கொள்ளுவார் களானால், தங்களுடைய பெருமையையும் கீர்த்தியையும் அவர்கள்

அடியோடு இழந்துவிடுவார்கள் என்பதை அறிவேன். இதுவரையில் அடைந்திருக்கும் அபிவிருத்தியைக் குறித்து நாம் அதிருப்தியடையாமலிருக்கலாம். என்றாலும், நாம் பெருமைப்பட்டுக்கொள்ளுவதற்கு நம்மிடம் எதுவும் இல்லை. பெருமை கொள்ளுவதற்கோ, குதூகலப்பட்டுவிடுவதற்கோ, நாம் இதுவரை செய்திருப்பதைவிட இன்னும் அதிகத் தியாகத்தைச் செய்ய வேண்டியிருக்கிறது. காங்கிரஸ் பந்தலில் கூடியிருந்த ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் அறிவின் சம்மதத்தை அத்தத்துவத்திற்கு அளித்திருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நடைமுறையில் அதைப் பின்பற்றியவர்கள் ஒரு சிலரே. வக்கீல்களின் விஷயம் ஒருபுறமிருக்கட்டும். எத்தனை பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப மறுத்திருக்கிறார்கள்? ஒத்துழையாமையை ஆதரித்து வாக்களித்தவர்களில் எத்தனை பேர் கையினால் நூற்க ஆரம்பித்திருக்கிறார்கள்? எத்தனை பேர் அந்நியத் துணிகளை உபயோகிப்பதையெல்லாம் விட்டிருக்கிறார்கள்?

பெருமையடித்துக்கொள்ளும், கூச்சல் போடும், டாம்பீகம் பேசும் இயக்கம் அல்ல ஒத்துழையாமை. நாம் உண்மையோடு நடந்துகொள்ளுகிறோமா என்பதற்குப் பரீட்சையே அது. திட்டமான, மௌனமான தியாகம் அதற்கு வேண்டும். நமது யோக்கியப் பொறுப்புக்கும் தேசீய வேலைக்குள்ள நம் தகுதிக்கும் அது சவால் விடுகிறது. கருத்துக்களைக் காரியமாக மாற்றுவதையே நோக்கமாகக்கொண்ட இயக்கம் அது. நாம் அதிகமாகச் செய்யச் செய்ய, நாம் எதிர்பார்த்ததைவிட செய்ய வேண்டியது இன்னும் அதிகமாக இருக்கிறது என்பதைக் காண்கிறோம். நம் குறைபாடுகளைப் பற்றிய இந்த எண்ணம் நம்மை அடக்கமுள்ளவர்களாக்க வேண்டும்.

தன்னுடைய பலாத்காரத்திலன்றி, தன்னுடைய தடையில்லாத அடக்கத்தினால் ஓர் உதாரணமாக இருக்கவும், பிறர் கவனத்தை ஈர்க்கவும் ஓர் ஒத்துழையாதார் பாடுபடுகிறார். தான் செய்யும் திட்டமான காரியமே தனது கொள்கையை எடுத்துக் காட்டும்படி விட்டுவிடுகிறார். தன் நிலை சரியானது என்பதில் அவர் கொள்ளும் நம்பிக்கையில்தான் அவருடைய பலம் இருக்கிறது. தனது செயலுக்கும் எதிராளிக்குமிடையே தன் பேச்சு கொஞ்சமும் குறுக்கிடாதபடி அவர் செய்யும்போது, அக்கொள்கையின் உறுதி எதிராளியிடம் அதிகமாக வளருகிறது. பேச்சு, முக்கியமாக அகம்பாவத்தோடு கூடியதாக இருக்கும்போது, கொள்கையில் நம்பிக்கையில்லாததே வெளிப்படுகிறது. அதோடு அவர் செய்யும் காரியத்தில் எதிராளியும் வெறுப்புக்கொள்ளும்படி செய்துவிடுகிறது. ஆகையால், அடக்கமே துரிதமான வெற்றிக்குத் திறவுகோல். அடக்கத்தோடும் புலனடக்கத்துடனும் இருக்கவேண்டியதன் அவசி

யத்தை ஒவ்வொரு ஒத்துழையாதாரும் உணர்வார்கள் என்று நம்புகிறேன். உண்மையில் செய்ய வேண்டியிருப்பது மிகக் கொஞ்சமாக இருப்பதனாலும், அந்தக் கொஞ்சமும் நம்மைப் பொறுத்ததாகவே இருப்பதனாலுமே, சுயராஜ்யத்தை ஓர் ஆண்டிற்குள்ளேயே அடைந்துவிட முடியும் என்று நம்பத் துணிந்தேன்.

—'எங் இந்தியா'-21—6—1921

# 9

# சிறைகளில் வேலை

நூற்றுக்கணக்கானவர்கள் சிறைப்படுவதற்கு வேண்டிய வாய்ப்பை அரசாங்கம் இப்பொழுது அளித்திருப்பதனாலும், ஆயிரக்கணக்கானவர்கள் சிறை சென்று வருவதாலும், சிறைகளில் கைதிகள் எந்த வேலையையும் செய்வதில்லை என்று மறுத்துவிடுவது கைதிகளுக்கு நல்லதல்லவா என்று ஒரு முக்கியமான நண்பர் என்னைக் கேட்டார். ஒழுக்க நிலையைக் குறித்துத் தவறான கருத்துக்கொண்டிருப்பதனாலேயே இந்த யோசனை வந்திருக்கிறது என்று அஞ்சுகிறேன். சிறைகளை, ஒரு ஸ்தாபனம் என்ற வகையில் ஒழித்துவிடுவதற்கென்று நாம் முற்பட்டிருக்கவில்லை. சுயராஜ்யத்தின் கீழும் நமக்குச் சிறைகள் இருக்கும். ஆகையால், நமது சட்ட மறுப்பை, நாட்டின் ஒழுக்கக்கேடான சட்டங்களை மீறி நடக்கும் அளவுக்கு அதிகமாக நாம் கொண்டு போய்விடக்கூடாது. சட்டங்களைச் சாத்விக முறையில் மீறுவது என்றால், சிறைச்சாலைக் கட்டுதிட்டங்களுக்குக் கண்டிப்பாக விரும்பிப் பணிந்து நடக்க வேண்டியதாகிறது. ஏனெனில், ஒரு குறிப்பிட்ட விதியை மீறுவது என்றால், அப்படி மீறி நடப்பதற்கு ஏற்படும் தண்டனைக்கும் விரும்பிப் பணிய வேண்டியதாகிறது. ஒரு விதி, அதை மீறுவதால் ஏற்படும் தண்டனை ஆகிய இரண்டுடனும் ஒருவர் தகராறு செய்துகொள்ளுவது என்றவுடனேயே, அவர் குழப்பத்தையும் அராஜகத்தையும் உண்டாக்குவதற்குத் தன்னை உடன்படுத்திக்கொண்டு விட்டவராவார். ஒரு சாத்விக எதிர்ப்பாளர், அப்படி எதிர்ப்பாளர் என்று தம்மைச் சொல்லிக் கொள்ள அனுமதிக்கலாம் என்றால், அவர் ஜனோபகாரியும் அரசாங்கத்தின் நண்பருமாவார். அராஜகவாதி, அரசாங்கத்தின் விரோதி. ஆகையால், அவர் ஜனத்துவேஷி. யுத்த பாஷையை உபயோகிக்க என்னை நானே அனுமதித்துக்கொண்டிருக்கிறேன். ஏனெனில், சட்ட ரீதியான முறைகள் எனப்படுபவையெல்லாம் முற்றிலும் பயனற்றவையாகிவிட்டன. என்றாலும், சட்டரீதியான கிளர்ச்சியின் தூய்மையான ரகத்தைச் சேர்ந்ததே சாத்விக சட்ட மறுப்பு என்பது எனது திடமான அபிப்

பிராயம். ஆனால், அதன் சாத்விக அதாவது அகிம்சைத் தன்மை வெறும் ஏமாற்றும் தந்திரமாக இருக்குமானால், உண்மையில் அது கேவலமானதாகவும் வெறுக்கத்தக்கதாகவும் ஆகிறது. அகிம்சையின் யோக்கியப் பொறுப்பை ஒப்புக் கொள்ளுவதாயிருந்தால், பலாத்காரத்தில் கொண்டு போய் விட்டுவிடுமோ என்பதற்காகக் கடுமையான சட்ட மறுப்பையும் கண்டிக்க வேண்டிய அவசியம் இல்லை. ஏற்படக்கூடிய பல ஆபத்துக்களுக்கும் துணியாமல் பெரிய, துரிதமான இயக்கங்களை நடத்தவே முடியாது, பெரிய ஆபத்துக்களும் இருப்பதாக இருந்தாலன்றி, வாழ்க்கையும் நல்ல வாழ்க்கை ஆகாது. ஆபத்துக்களே இல்லை என்றால், வாழ்க்கையில் புதுமையான அற்புதங்களே இருந்திருக்க முடியாது என்பதை உலகத்தின் சரித்திரம் காட்டவில்லையா? ஆபத்து கொஞ்சம் வந்தவுடனேயோ, பலாத்காரமான குழப்பம் ஏற்பட்டவுடனேயோ, மதிப்பிற்குரியவர்கள், சமூகத்தின் தலைவர்கள், பயத்தினாலோ, கோபங்கொண்டோ பணிந்து ஒடுங்கிவிடுவது, மோசமாகிவிட்ட சூழ்நிலைக்குத் தெளிவானதோர் அத்தாட்சியேயாகும். மனிதனிடமிருக்கும் மிருக உணர்ச்சியை விரட்டிவிடவே நாம் விரும்புகிறோம். எனினும், அதனால் அவன் ஆண்மையை இழந்துவிடும்படிச் செய்ய நாம் விரும்பவில்லை. மனிதன் தன்னுடைய நிலையைக் காணச் செய்யும் காரியத்தில், அவனுள்ளிருக்கும் மிருகம் அப்போதைக்கப்போது தனது கோர சொரூபத்தை வெளியில் காட்டிக்கொண்டுதான் இருக்கும். அடிக்கடி நான் இப்பத்திரிகையில் கூறி வந்திருப்பதைப் போன்று, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ரத்தம் சிந்தப்படுவதைக் காண நேருவது என்னைச் சோர்ந்து விடும்படி செய்துவிடுவதில்லை. ஆனால், ஓர் ஒத்துழையாமைக்காரரோ அல்லது அவரை ஆதரிப்பவர்களோ, தங்களுடைய கொள்கைகளை மீறி ரத்தஞ் சிந்திவிடுவதுதான் நாம் செயலற்றுப் போகும்படி செய்து விடுகிறது. யோக்கியமான ஒத்துழையாதார் ஒவ்வொருவரையும் அது திக்குமுக்காடவே செய்யும் என்பதை அறிவேன்.

ஆகையால், ஆரம்ப வாதத்திற்கே திரும்பினால், சாத்விக எதிர்ப்பாளர்கள் என்ற வகையில், எங்கும் பரவியிருக்கும் கட்டு திட்டமின்மையிலிருந்து நம்மைப் பாதுகாத்துக்கொள்ள நாம் கடமைப்பட்டிருக்கிறோம். சிறை நிர்வாகமே ஊழல் நிறைந்ததாகிவிட்டது, ஒழுக்கக் கேடானதாகிவிட்டது என்று இருந்தாலோ, அப்படி இருப்பதாக நாம் உணர்ந்தாலோ அன்றி சிறைச்சாலைக் கட்டுதிட்டங்களுக்குப் பணிந்தே ஆக வேண்டும். ஆனால், வசதிகளை அளிக்காமலிருப்பது, கட்டுதிட்டங்களை விதிப்பது போன்ற அசௌகரியங்களினால் சிறை நிர்வாகம் ஊழலானதாகி விட்டதாக ஆகாது. கைதிகள் அவமதிப்பாக நடத்தப்பட்டாலோ, ஆபாசமான குகைகளில் அவர்களை அடைத்துவைத்து மனிதன் சாப்பிடுவதற்கு உகந்ததாக இல்லாத உணவைக்

கொடுத்து அக்கிரமமாக நடத்தினுலோதான் சிறை நிர்வாகம் ஊழல் நிறைந்ததாகும். ஒத்துழையாமைக்காரர்கள் சிறையில் நடந்துகொள்ளுவது கண்டிப்பான வகையில் சரியாக இருப்ப தோடு கௌரவமானதாகவும், என்ருலும் அடங்கி நடப்பதாகவும் இருக்கும் என்றே நம்புகிறேன். சிறை அதிகாரிகளேயும் வார்டர்களேயும் நம் எதிரிகளாகக் கருதக்கூடாது. ஆனுல், மனித உணர்ச்சியே அற்றுப் போய்விடாத, நம்மைப் போன்ற மனிதர்களாகவே அவர்களேக் கருத வேண்டும். நமது கௌரவமான நடத்தை, எல்லா சந்தேகங்களேயும் வெறுப்புக்களேயும் போக்கியே தீரும். ஒரு பக்கம் கட்டுதிட்டத்தோடுகூடிய வழியும், மற்ருேர் பக்கத்தில் கடுமையான வகையில் மீறி நடப்பதும் அனுசரிப்பதற்கு அதிகக் கஷ்டமான பாதை என்பதை அறிவேன். ஆனுல், இதைத் தவிர சுயராஜ்யத்திற்கு வேறு ராஜபாட்டை எதுவும் இல்லே. இந்தக் குறுகலான, நேரான பாதையை வேண்டுமென்றுதான் நாடு தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறது. நேர் கோட்டைப் போன்று இதுவே குறைந்த தூரமுள்ளது. ஆனுல், ஒரு நேரான கோட்டை இழுப்பதற்கு நிதானமான, அனுபவமுள்ள ஒரு கை எப்படி தேவையாகிறதோ அதே போல, நாம் தேர்ந்தெடுத்துக்கொண்டிருக்கும் பாதை நெறி தவறிவிடாமல் நாம் நடந்தாக வேண்டுமானுல், கட்டுதிட்டத்தில் நிதானமும் காரியத்தில் உறுதியும் முற்றிலும் அவசியமானவையாகும்.

—'எங் இந்தியா' - 15—12—1921

# 10

# சரியான கைதி

"சாதாரண கைதிகளேயே ஆத்திரமடையும்படிச் செய்யக் கூடிய சிறைக் கட்டு திட்டங்களே எதிர்த்த ஒத்துழையாமைக் காரர்கள் சிறைக்குள் 'வந்தே மாதர' கோஷங்களே எழுப்பலாமா? உணவிலும் மற்ற சௌகரியங்களிலும் அபிவிருத்தி ஏற்படும்படி செய்வதற்காக ஒத்துழையாதார் உண்ணுவிரதம் இருக்கலாமா? ஹர்த்தால் தினங்களிலும் மற்ற நாட்களிலும் சிறைக்குள் வேலே நிறுத்தம் செய்யலாமா? சிறை விதிகள் மனச்சாட்சியைப் பாதிப்பவையாக இருந்தாலன்றி, சிறைக் கட்டு திட்ட விதிகளே மீற ஒத்துழையாதாருக்கு உரிமை உண்டா?" கல்கத்தாவிலிருக்கும் ஒத்துழையாதாரான ஒரு நண்பரிடமிருந்து வந்திருக்கும் தந்தியில் காண்பவை இவை. இந்தியாவில் மற்றொரு பகுதியிலிருக்கும் மற்ருேர் நண்பர்-அவரும் ஒத்துழையாமைக்காரரே-ஒத்துழையாமைக் கைதிகள் கட்டுதிட்டங்களே மீறி நடந்தார்கள் என்பதை அறிந்ததும், சிறைக் கட்டு

திட்டங்களை அனுசரித்து நடக்க வேண்டிய தன் அவசியத்தைக் குறித்து எழுதுமாறு என்னைக் கேட்டுக்கொண்டிருக்கிறார். இதற்கு மாறாக, தங்கள் மீது விதிக்கப்பட்டிருக்கும் கட்டு திட்டங்களையெல்லாம் கொஞ்சமும் தவறாமல் கண்ணியமான உணர்ச்சியுடன் அனுசரித்து நடந்து வரும் கைதிகளையும் நான் அறிவேன்.

தாங்கள் மேற்கொண்டிருக்கும் அகிம்சைக் கொள்கைக்குப் பொருந்தும் வகையில் ஒத்துழையாமைக் கைதிகள் அனுசரிக்க வேண்டிய சரியான நிலைமைதான் என்ன என்பதை, ஆயிரக் கணக்கானவர்கள் சிறைக்குச் சென்றுகொண்டிருக்கும் இப்பொழுது புரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். ஒத்துழையாமை, அதற்குள்ள எல்லையை அறியாதபோது, கடமையாவதற்குப் பதிலாக இஷ்டப்படி நடப்பதற்கு அனுமதி என்றாகி விடுகிறது. ஆகையால், அது குற்றமாகிறது. சரியானது எது, தவறானது எது என்பதற்கிடையே பிரிக்கும் கோடு, அடையாளம் கண்டுபிடித்துவிட முடியாத அளவுக்கு எப்பொழுதும் மெல்லியதாகவே இருக்கிறது. ஆனால், பிளந்துவிடக்கூடியதும், தவறான கருத்துக்கு இடங் கொடுத்துவிடாததுமே அக்கோடு.

அப்படியானால், நல்ல காரியத்தைச் செய்து சிறை சென்றிருக்கிறவர்களுக்கும், தவறான காரியங்களைச் செய்ததற்காகச் சிறையிலிருப்பவர்களுக்கும் இருக்கும் வித்தியாசம் என்ன? அநேகமாக இரு தரத்தினரும் ஒரே மாதிரியான ஆடைகளைத் தான் உடுத்துகிறார்கள் ; ஒரே மாதிரியான உணவையே சாப்பிடுகின்றனர். வெளிப்படையில் பார்த்தால் இரு தரப்பாரும் ஒரே வகையான கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டே இருந்து வருகிறார்கள். ஆனால், தவறான காரியங்களைச் செய்ததற்காகச் சிறையிலிருப்பவர்கள், கொஞ்சம்கூட விரும்பாமலேயே கட்டு திட்டங்களுக்கு உட்பட்டிருக்கின்றனர்; ரகசியமாக அவற்றை மீறியும் நடந்து கொள்ளுவார்கள்; அவர்களால் முடிந்தால் பகிரங்கமாகவும் கட்டுதிட்டங்களை மீறிவிடுவார்கள். நல்ல காரியத்திற்காகச் சிறை சென்றிருப்பவர்களோ, தங்களால் முடிந்தவரையில் சிறை விதிகளை விரும்பி அனுசரித்து நடந்து வருவார்கள். இதன் மூலம் தாங்கள் வெளியிலிருந்ததை விட லட்சியத்திற்கு அதிகத் தகுதி வாய்ந்தவர்களாகியிருப்பதோடு, அதிகச் சேவை செய்பவர்களாகவும் இருக்கிறார்கள் என்பதையும் அவர்கள் நிரூபிப்பார்கள். கைதிகளில் அதிக முக்கியமானவர்களாக இருந்தவர்கள், வெளியில் செய்ததைவிட சிறைக்குள்ளேயே அதிக சேவையைச் செய்திருக்கிறார்கள் என்பதையும் பார்த்திருக்கிறோம். சிறைக் கட்டுதிட்டங்களைக் கண்டிப்பாக அனுசரிக்கும் அளவுக்கு சேவையின் ஆற்றல் உயர்கிறது.

சிறைகளை நாசப்படுத்தி விடவேண்டும் என்பது நமது நோக்கமல்ல என்பது நினைவில் இருக்கட்டும். சுயராஜ்யத்தில்

கூட நாம் சிறைகளை வைத்திருக்க வேண்டியிருக்கும் என்றே அஞ்சுகிறேன். சுயராஜ்யம் வந்த பிறகு அவர்கள் விடுதலை செய்யப்பட்டு விடுவார்கள் என்றோ, நன்றாக நடத்தப்படுவார்கள் என்றோ உண்மையான குற்றவாளிகள் எண்ணும்படி நாம் செய்து விட்டால், இது நமக்கே கஷ்டமாகி விடும். சுயராஜ்யத்தின் கீழ் ஒவ்வொரு சிறைச்சாலைக்கும் பதிலாகச் சீர்திருத்தும் சாலைகள் ஏற்பட வேண்டும் என்றே விரும்புகிறேன். ஆனால், அவற்றிலும் கட்டுதிட்டங்கள் கண்டிப்பாக அனுசரிக்கப்படும். ஆகையால், கட்டுதிட்டமின்மையை நாம் ஊக்குவிப்பதாயிருந்தால், சுயராஜ்யம் ஏற்படுவதை நாம் உண்மையில் தாமதப்படுத்தி விட்டவர்களே ஆவோம். நாம் பண்புள்ள மக்களாக இருப்பதால், கொஞ்ச காலத்திற்குள்ளேயே உயர்ந்த கட்டுதிட்டமுள்ளவர்களாக நாம் ஆகிவிட முடியும் என்ற எண்ணத்திலேயே சுயராஜ்யத்திற்குத் துரிதமான வேலைத் திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. தாம் போக்கிவிட முற்படும் ஓர் அரசாங்கத்தின் அநியமான அல்லது ஒழுக்கக் கேடான சட்டங்களை ஒருவர் மீறுவதற்கு, சட்ட மறுப்பு ஒரு பக்கத்தில் அதிகாரமளிக்கிறது. மற்றொரு பக்கத்தில், சட்டத்தை மீறுவதனால் ஏற்படும் தண்டனைக்கு அவர் விரும்பிப் பணிவதையும் அவசியமாக்குகிறது. ஆகையால், சிறைச்சாலைக் கட்டு திட்டங்களையும் அதனால் ஏற்படும் கஷ்டங்களையும் அவர் ஆனந்தமாக ஏற்றுக் கொள்ளவும் வேண்டும்.

எனவே, சாத்விக எதிர்ப்பாளர் சிறைப்பட்டு விட்டதுமே அவருடைய எதிர்ப்பு போய்விடுவதோடு, பணிவு ஆரம்பமாகி விடுகிறது என்பது இப்பொழுது தெளிவாகிறது. அவருடைய சட்ட மறுப்பு சாத்விகமானதால், சிறையிலிருக்கும் போது எந்தச் சலுகைகளையும் அவர் கேட்பதில்லை. சிறைக்குள் சிறந்த முறையில் தாம் நடந்துகொள்ளுவதன் மூலம் தம்மைச் சுற்றிலுமிருக்கும் கைதிகளையும் அவர் சீர்திருத்தி விடுகிறார். அதோடு ஜெயிலர்கள், மற்ற சிறை அதிகாரிகளின் மனமும் இளகிவிடும்படிச் செய்து விடுகிறார். பலத்திலிருந்தும் அறிவிலிருந்தும் எழும் இத்தகைய பணிவான நடத்தை, கொடியனின் கொடுமையையும் போக்கிவிடுகிறது. இக்காரணத்தினாலேயே, அவமதிப்புகளையும் அநீதிகளையும் போக்குவதற்கு எளிதான, துரிதமான பரிகாரம் தாமாகவே கஷ்டங்களை ஏற்றுக் கொள்ளுவதுதான் என்று கூறி வருகிறேன்.

ஆகவே, 'வந்தே மாதர' கோஷம் போடுவது அல்லது சிறைக் கட்டுதிட்டங்களை மீறி வேறு ஏதாவது செய்வது, ஒத்துழையாமைக்காரரைப் பொறுத்த வரையில் சட்ட விரோதமாகிறது என்று இப்பொழுது ஏற்படுகிறது. சிறை விதிகளைத் திருட்டுத்தனமாக மீறி நடப்பதும், இதே போல அவருக்குச் சட்ட விரோதமானதே. உடனிருக்கும் கைதிகளைக் கெடுத்துவிடக் கூடிய காரியம் எதையும் ஒத்துழையாதார் செய்யக்கூடாது.

அவர் பகிரங்கமாகச் சிறை விதிகளை மீறவோ, உண்ணுவிரதம் இருக்கவோ ஒரே ஒரு சந்தர்ப்பம்தான் உண்டு. அவரை அவமானப்படுத்த முயற்சித்தாலோ, அல்லது வார்டர்கள் வழக்கமாகச் செய்து வருவதைப் போல, கைதிகளின் சௌகரியத்திற்காக இருக்கும் விதிகளை வார்டர்கள் மீறி நடந்தாலோ, அடிக்கடி நடப்பது போன்று மனிதன் தின்பதற்கு லாயக்கில்லாத உணவு கொடுக்கப்பட்டாலோ தான் அவர் பகிரங்கமாகச் சிறை விதிகளை மீறலாம், அல்லது உண்ணுவிரதமிருக்கலாம். கடமையாகவுள்ள மத சம்பந்தமான பழக்கங்களில் குறுக்கீடு ஏற்படும் போதும், சாத்விக சட்ட மறுப்புச் செய்வது நியாயமாகும்.

'எங் இந்தியா' 29—12—1921

## 11

# சத்தியாக்கிரகக் கைதியின் நடத்தை

நாமெல்லோரும் உணர்ந்தாலும், உணராது போனுலும், உள்ளத்தைத் தொட்டுப் பகுத்தறிவில் படும்படிச் செய்யும் காரியமே ஒத்துழையாமையாகும். அது காலித்தனத்தினுல் மிரட்டும் ஒரு முறை அல்ல. பலாத்காரமற்ற இயக்கத்தில் காலித்தனத்திற்கு இடமே இல்லை.

யுத்தக் கைதிகளைப் போன்றவர்களே சத்தியாக்கிரகக் கைதிகளும் என்று நான் அடிக்கடி கூறி வருகிறேன். எதிரியிடம் பிடிபட்டு விட்டதும் யுத்தக் கைதிகள், பகைவர்களிடம் நண்பர்களாக நடந்து கொள்ளுகிருர்கள். ஒரு யுத்தக் கைதி, எதிரியை ஏமாற்றுவது, சிப்பாய்க்குக் கௌரவக் குறைவான செய்கை என்று கருதப்படும். சத்தியாக்கிரகக் கைதிகளை யுத்தக் கைதிகளாகப் பாவித்து அரசாங்கம் நடத்தவில்லை என்பதனுல், என் வாதம் தவறுனதாகி விடாது. யுத்தக் கைதிகளைப் போன்றே நாம் நடந்து கொண்டால், சீக்கிரத்தில் நமக்கு மரியாதை ஏற்படும். ஒரு அளவுக்கு நாம் ஒத்துழைக்கக்கூடிய, ஒத்துழைத்தாக வேண்டிய ஒரு நடுநிலைமை ஸ்தாபனமாகச் சிறைச்சாலையை நாம் செய்து கொள்ள வேண்டும்.

ஒரு பக்கத்தில் வேண்டுமென்றே சிறை விதிகளை மீறி நடந்து கொண்டு, தண்டனையையும் கண்டிப்பையும் பற்றி அதே மூச்சில் நாம் புகாரும் சொல்லிக் கொண்டிருப்போமானுல், மோசமான வகையில் முன்னுக்குப் பின் முரணுக நடந்தவர்களாவோம். நம் சுய மரியாதைக்கும் அது ஏற்றதல்ல. உதாரணமாக, சோதனை போடப்படுவதை நாம் எதிர்க்கவோ, குறை கூறவோ கூடாது.

அதே சமயத்தில், தடுக்கப்பட்டிருக்கும் பொருள்களை நம் படுக்கையிலோ, துணிகளிலோ ஒளித்து வைத்திருக்கவும் கூடாது. சில சந்தர்ப்பங்களில் பொய் சொல்லலாம் அல்லது மற்ற ஏமாற்றும் வேலைகளைச் செய்யலாம் என்பதற்கு, நான் அறிந்திருக்கும் சத்தியாக்கிரகத்தில் இடமே இல்லை.

சிறை அதிகாரிகளுக்குத் தொல்லைகள் கொடுத்துச் சங்கடப்படுத்தினல் அரசாங்கம் சமாதானத்திற்கு வர வேண்டியதாகி விடும் என்று நாம் சொன்னல், அவர்களை மறைமுகமாக நாம் பாராட்டுகிறோம், அல்லது அவர்களை அப்பாவிகள் என்று கருதுகிறோம் என்றுதான் ஆகும். சிறை அதிகாரிகளின் வாழ்க்கையைச் சங்கடமானதாக நாம் செய்து விட்ட போதிலும், அதை அரசாங்கம் மௌனமாகப் பார்த்துக் கொண்டு தான் இருக்கும், நமது உணர்ச்சியையெல்லாம் அடியோடு முறித்துவிடக் கூடிய வகையில் நமக்குத் தண்டனை கொடுக்க அது தயங்கும் என்று நாம் கருதும் போது, நாம் மறைமுகமாக அந்த அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம். அதாவது, நமக்குக் கடுமையான தண்டனை கொடுப்பதற்கு வேண்டியவைகளை நாம் செய்த போதிலும், அப்படிக் கடுமையாகத் தண்டித்துவிடாத அளவுக்கு நிர்வாகிகள் அன்புடனும் கருணையுடனும் நடந்து கொள்ளுவார்கள் எனக் கருதுபவர்களாவோம். ஆனல், உண்மையில் அவர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. நேர்மையைப் பற்றிய எண்ணத்தையெல்லாம் தூக்கி எறிந்து விட்டு, குறிப்பிட்ட சம்பவத்திற்குக் கொடுக்கக்கூடிய தண்டனையை மாத்திரமேயன்றி, அதற்கு மிஞ்சிய தண்டனையையும் கொடுக்க அவர்கள் தயங்கமாட்டார்கள்.

ஆனல், சத்தியாக்கிரகிகளுக்கு உகந்ததான, ஒரே மாதிரியான யோக்கியத் தன்மையுடனும் கௌரவத்துடனும் நாம் நடந்து கொள்ளுவோமாயின், அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் அதன் எதிர்ப்புக்களையெல்லாம் பயனற்றவைகளாக்கி விட்டவர்களாவோம். அத்தகைய கண்டிப்பான, கௌரவமான நடத்தை, கௌரவமான, நிரபராதிகளான இத்தனை பேரைச் சிறையிலடைத்த தவறை ஒப்புக் கொண்டு அரசாங்கம் வெட்கப்படும்படியாவது செய்யும். இதுவே என் திடமான கருத்து. ஏனெனில், நம்முடைய பலாத்காரமின்மை, நம் பலாத்காரத்திற்கு ஒரு திரை என்பதே அவர்கள் கூற்று அல்லவா? ஆகையால், நாம் காலித்தனத்தில் இறங்கிவிடும்போதெல்லாம் அவர்கள் கூற்று சரியானது என்று செய்துவிடுகிறோமல்லவா?

ஆகையால், சத்தியாக்கிரகிகள் என்ற வகையில் நாம் கைதிகளாகி விடும்போது, கீழ்க்கண்டவைகளின்படி நடக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பது என் அபிப்பிராயம்:

1. அப்பழுக்கற்ற வகையில் மிகுந்த யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்ள வேண்டும்.

2. சிறை அதிகாரிகளுடன் அவர்களுடைய நிர்வாகத்தில் ஒத்துழைக்க வேண்டும்.

3. நாம் பணிந்து நடப்பதன் மூலம், நியாயமான எல்லாக் கட்டுதிட்டங்களிலும் மற்றக் கைதிகளுக்கு நாம் உதாரணமாக இருக்கவேண்டும்.

4. கைதிகளில் மிகத் தாழ்ந்த நிலையிலிருப்பவர்களுக்குக் கிடைக்காதவைகளை, தேக நிலையின் கண்டிப்பான காரணங்களினாலன்றி, நமக்குத் தேவைப்படாதவைகளைப் பெற நாம் அதிகாரிகளின் தயவை நாடக்கூடாது; அவற்றை அடைய உரிமை கொண்டாடக்கூடாது.

5. அப்படி நமக்கு ஏதாவது கட்டாயமாக வேண்டியிருந்தால், அதைக் கேட்கத் தவறக்கூடாது; கேட்டும் கிடைக்கவில்லையானால் ஆத்திரமடையக்கூடாது.

6. நமக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் எல்லா வேலைகளையும் நம் சக்திக்கு முடிந்தவரையில் செய்து வரவேண்டும்.

இப்படி நாம் நடந்துகொள்ளுவதுதான் அரசாங்கத்தின் நிலைமையைச் சங்கடமானதாக்கி, அது இருக்கத் தகுதியற்றது என்றும் செய்யும். யோக்கியப் பொறுப்பை, யோக்கியப் பொறுப்பினால் சமாளிப்பது என்பது அரசாங்கத்திற்குக் கஷ்டமானது. ஏனெனில், அரசாங்கத்திற்கு யோக்கியமாக நடப்பதில் நம்பிக்கை இல்லை. அபூர்வமான இந்த நிலைமைக்கு அது தயாராகவும் இல்லை. காலித்தனத்தையே அரசாங்கம் எதிர்பார்க்கிறது. இரட்டிப்பு மடங்கு காலித்தனத்தினால் அதைச் சமாளிக்கவும் எண்ணுகிறது. அராஜகக் குற்றங்களைச் சமாளித்துக் கொண்டுவிட அதனால் முடிந்தது. பலாத்காரமின்மைக்குப் பணிந்து போய்விடுவதைத் தவிர, அதைச் சமாளிப்பதற்கு வேறு வழி எதையும் கண்டுபிடித்துக்கொண்டுவிட அரசாங்கத்தினால் இன்னும் முடியவில்லை.

கஷ்டங்களை அனுபவிப்பதற்குப் பணிவுடன் உடன்படுவதன் மூலம் கஷ்டங்களுக்குப் பரிகாரத்தை அடைய சத்தியாக்கிரகி எதிர்பார்க்கிறார் என்பதுதான், சத்தியாக்கிரகி சிறை செல்லுவதில் அடங்கியுள்ள கருத்தாகும். நியாயமானதோர் லட்சியத்திற்காகத் துன்பங்களைப் பணிவுடன் அனுபவிப்பதில், அதற்கே உரியதான மகத்துவம் இருக்கிறது. வாளின் மகத்துவத்தைவிட அது நிச்சயமாக உயர்வானது என்று

சத்தியாக்கிரகி நம்புகிறன். ஆனல், நாம் நடத்தப்படும் விதம் நம் சுயமதிப்பைப் பாதிப்பதானலும் எதிர்க்கக்கூடாது என்பது தன்று அதன் பொருள். எனவே, உதாரணமாக, அதிகாரிகள் வசை மொழிகளை உபயோகித்தாலோ, அல்லது அடிக்கடி அவர்கள் செய்து வருவதைப் போன்று உணவை நமக்கு வீசி எறிந்தாலோ, சாகும் நிலை வரையில்கூட அவற்றை நாம் எதிர்த்தே ஆகவேண்டும். அவமதிப்பதும், திட்டுவதும் ஓர் அதிகாரியின் கடமைகளில் சேர்ந்தவை அன்று. ஆகையால், அவற்றை நாம் எதிர்த்தே ஆகவேண்டும். ஆனல், சோதனை போடுவது சிறை விதிகளிலடங்கியதாகையால், அதை நாம் எதிர்க்கக்கூடாது.

கஷ்டங்களைப் பேசாமல் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நான் கூறுவதால், சத்தியாக்கிரகிகளைப் போன்ற ஒரு குற்றமும் செய்யாத கைதிகளை, குற்றவாளிகளான கைதிகளின் வகுப் பிலேயே வைப்பதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யக்கூடாது என்று நான் சொல்லுவதாக எண்ணிவிடக்கூடாது. கைதிகள் என்ற முறையில் மாத்திரம் நாம் எந்தத் தயவையும் கோரமாட் டோம். குற்றவாளிகளான கைதிகளுடன் இருந்து வருவதோடும் நாம் திருப்தியடைய வேண்டும். அவர்களுடைய ஒழுக்கத்தில் சீர்திருத்தம் செய்யக் கிடைத்திருக்கும் வாய்ப்பையும் நாம் வரவேற்கவேண்டும். என்றாலும், நாகரிக சர்க்கார் என்று தன்னைச் சொல்லிக்கொள்ளும் அரசாங்கம், இவ்விரு வகைக் கைதிகளுக்குமிடையே உள்ள இயல்பான வித்தியாசத்தை உணரும் என்றே எதிர்பார்க்கப்படுகிறது.

'எங் இந்தியா' —5 - 6 - 1924

# 12

# சத்தியாக்கிரகத்திற்கு முன்னல் இருக்க வேண்டியவை

பொதுஜன எதிர்ப்பிற்குப் பின்னல் பலமிருந்தால்தான், அதனல் பலனிருக்கும். தந்தை செய்யும் சில காரியங்களை ஆட்சே பிக்கும் மகன் என்ன செய்கிறன்? ஆட்சேபகரமான காரியத் தைச் செய்ய வேண்டாம் என்று தந்தையை வேண்டுகிறன். அதாவது, மரியாதையாக மனுச் செய்துகொள்ளுகிறன். எவ் வளவுதான் வேண்டிக் கொண்டாலும் தந்தை சம்மதிக்கவில்லை யானல், பெற்றோரின் வீட்டிலிருந்து வெளியேறிவிட வேண்டிய நிலைக்கு வந்துவிடும் அளவுக்கு மகன் தந்தையுடன் ஒத்துழைக்க மறுக்கிறன். இதுதான் சரியான நீதி. தந்தையும் மகனும்

நாகரிகமில்லாதவர்களாக இருக்கும்போது, இருவரும் சச்சர விட்டுக் கொள்ளுகின்றனர்; ஒருவரையொருவர் திட்டிக்கொள்ளு கிருர்கள். அடிதடியும்கூட நடந்துவிடுகிறது. பணிவுள்ள மகன், எப்பொழுதும் அடக்கத்தோடும், அமைதியாகவும், அன்போடும் இருப்பான். அவனுடைய அன்பே, அவசியம் ஏற்படும்போது, தந்தையுடன் ஒத்துழைக்க மறுக்கும்படி அவனைக் கட்டாயப் படுத்துகிறது. அன்போடு கூடிய இந்த ஒத்துழையாமையைத் தந்தையும் புரிந்துகொள்ளுகிருர். மகன் தன்னை விட்டுப் போய் விட்டதையோ, அவனிடமிருந்து தாம் பிரிந்து விட்டதையோ தந்தை பொறுப்பதில்லை. மனத்தில் வேதனையடைந்து தன் தவறுக்காக வருந்துகிருர். எப்பொழுதுமே இப்படித்தான் நடக்கிறது என்பதல்ல. ஆனுல், மகனின் ஒத்துழையாமை என் னும் கடமை தெளிவானதாகிறது.

இத்தகைய ஒத்துழையாமை, ஒரு மன்னனுக்கும் அவனு டைய குடிகளுக்குமிடையே சாத்தியமே. குறிப்பிட்ட சந்தர்ப்பங் களில் அவ்விதம் ஒத்துழையாமை செய்வது மக்களின் கடமையு மாகும். மக்கள், இயல்பாகவே அச்சமில்லாதவர்களாகவும், சுதந் திர ஆர்வமுள்ளவர்களாகவும் இருக்கும்போதுதான் அத்தகைய நிலைமை ஏற்பட முடியும். அவர்கள் பொதுவாக அரசாங்கத்தின் சட்டங்களை ஏற்றுக்கொள்ளுகிருர்கள்; தண்டனை பயம் எதுவு மின்றித் தாங்களாகவே அச்சட்டங்களுக்கு உடன்படுகிருர்கள். காரண காரியம் அறிந்து, அரசாங்கத்தின் சட்டங்களுக்கு விரும் பிப் பணிவதே ஒத்துழையாமையின் முதல் பாடம்.

சகிப்புத் தன்மை, இரண்டாவது பாடம். அரசாங்கத்தின் சட்டதிட்டங்கள் பல அசௌகரியமானவையாக இருந்தாலும், அவைகளை நாம் சகித்துக்கொள்ள வேண்டும். தந்தையின் உத்தரவுகளில் சில மகனுக்குப் பிடிக்காமலிருக்கலாம்; என்ரு லும் அவன் அவற்றிற்குக் கீழ்ப்படிகிருன். அவை சகிக்கக் கூடாதவைகளாவதோடு ஒழுக்கக் கேடானவைகளாகவும் இருக் கும்போதுதான், தந்தையின் உத்தரவுகளை மகன் மீறிவிடுகிருன். மரியாதையோடுகூடிய அத்தகைய மீறலை தந்தை உடனே புரிந்துகொள்ளுகிருன். அது போலவே, அரசாங்கத்தின் பல சட்டங்களுக்குப் பணிந்து நடந்து தங்கள் தீவிரமான விசுவா சத்தை நிரூபித்துக்கொண்டிருக்கும் ஒரு நாட்டு மக்களுக்கே, சட்ட மறுப்புச் செய்யும் உரிமை ஏற்படுகிறது.

மூன்ருவது பாடம், கஷ்டங்களை அனுபவிப்பதைப் பற்றியது. கஷ்டங்களை அனுபவிக்கச் சக்தியில்லாதவர் ஒத்துழையாமை செய்ய முடியாது. தன்னுடைய சொத்தையும், அவசியமாகும் போது தன் குடும்பத்தையும்கூட தியாகஞ் செய்துவிடக் கற்றுக் கொள்ளாதவர்கள், என்றும் ஒத்துழையாமை செய்யவே முடி யாது. மக்களின் ஒத்துழையாமையைக் கண்டு கோபமடையும்

மன்னன், எல்லா வகையான தண்டனைகளையும் விதிக்கக்கூடும். அன்பு, பொறுமை, பலம் ஆகியவைகளுக்குச் சோதனை அப்பொழுதுதான் இருக்கிறது. கொடூரமான கஷ்டங்களை யெல்லாம் அனுபவிக்கத் தயாராக இல்லாதவர் ஒத்துழையாமை செய்ய முடியாது. இந்த மூன்று பாடங்களையும் நன்ருக அறிந்தவர் ஒரு தனிப்பட்டவரோ, அல்லது இருவரோதான் என் றிருக்கும்போது, ஒரு நாட்டின் மக்கள் எல்லோருமே ஒத்துழை யாமை செய்யத் தகுதி வாய்ந்தவர்களாகவோ, தயாராகவோ இருக்கிருர்கள் என்று கருத முடியாது. எனவே, அவர்கள் ஒத்துழையாமை செய்வதற்கு முன்னல், ஏராளமானவர்கள் அதற்குத் தயாராக வேண்டும். அவசரப்பட்டு ஒத்துழையாமை செய்துவிடுவது, தீமையில்தான் முடியும். நான் குறிப்பிட்டிருக்கும் எல்லையைப் புரிந்துகொள்ளாத தேசாபிமானமுள்ள இளைஞர்கள் சிலர், அவசரப்படுகிருர்கள். எல்லா முக்கியமான காரியங்களுக் கும் அவசியமாவதைப் போன்று, ஒத்துழையாமைக்கும் முன் கூட்டியே தயாராக வேண்டியது அவசியம். ஒத்துழையாதாராகி விட வேண்டும் என்று ஒருவர் விரும்புவதனுல் மாத்திரம் அவர் ஒத்துழையாதாராக ஆகிவிட முடியாது. கட்டுதிட்டங்களுக்கு உட்பட வேண்டியது அத்தியாவசியம். கத்தியவாரின் எந்தப் பகுதியிலும் அவசியமான கட்டுதிட்டங்களுக்கு உடன்பட்டு அநேகர் நடந்து வந்திருக்கிருர்களா என்பது எனக்குத் தெரியாது. அவசியமான கட்டுதிட்டங்கள் அனுசரிக்கப்பட் டிருந்தால், அநேகமாக ஒத்துழையாமை அவசியமில்லாததாக ஆகக்கூடும்.

இப்பொழுதுள்ள நிலையில், கத்தியவாரிலேயேயன்றி இந்தி யாவின் மற்றப் பகுதிகளிலும், தனிப்பட்டவர்கள் தங்களைத் தயாராக்கிக்கொள்ள வேண்டியது அவசியம் என்று கூறுகிறேன். சேவா உணர்ச்சி, துறவு, சத்தியம், அகிம்சை, புலனடக்கம், பொறுமை முதலியவைகளைத் தனிப்பட்டவர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். இக்குணங்களை விருத்தி செய்துகொள்ளு வதற்காக நிர்மாண வேலைகளில் அவர்கள் ஈடுபட வேண்டும். மக்களிடையே மௌனமாக ஏராளமான வேலைகளைச் செய்து வருவோமாயின், அநேக சீர்திருத்தங்கள் தானே ஏற்பட்டுவிடும்.

[பவநகரில் நடந்த கத்தியவார் மூன்ருவது ராஜீய மகாநாட்டில் காந்திஜி செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்தது.]

— 'எங் இந்தியா' - 8—1—1925.

# 13

# எனது ராஜீய வேலைத் திட்டம்

*[சில அமெரிக்க நண்பர்கள், 145 டாலர் தொகையை நன்கொடையாகக் காந்திஜிக்கு அனுப்பினார்கள். அவர் செய்து வரும் வேலைகளில் முக்கியமானவை என்று தாங்கள் கருதுபவையான தீண்டாமை ஒழிப்பு, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஆகிய வேலைகளுக்கு அத்தொகையைப் பயன்படுத்திக்கொள்ளும்படியும் கூறியிருந்தார்கள். காந்திஜியின் ராஜீய வேலைத் திட்டத்தைப் பற்றித் தங்களுக்கு எதுவுமே தெரியாதாகையால், அவருடைய அந்த வேலைக்குப் பயன்படுத்திக்கொள்ளும்படி தாங்கள் விரும்புவதற்கில்லை என்றும் அமெரிக்க நண்பர்கள் எழுதினார்கள். அவர்களுக்குக் காந்திஜி எழுதிய பதிலிலேயே பின்வருமாறு கூறியிருந்தார்:]*

என்னுடைய ராஜீய வேலைத் திட்டம் மிக மிக எளிமையானது. பணம் அனுப்பியவர்கள், தீண்டாமையுடனும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையுடனும் ராட்டையையும் சேர்த்துக்கொண்டிருப்பார்களாயின், அவர்கள் அநேகமாக என் ராஜீய வேலைத் திட்டத்தைப் பூர்த்தி செய்திருப்பார்கள். உள்ளுக்குள்ளிருந்து வரும் முயற்சியினால், அதாவது சுயத்தூய்மையினால், சுய உதவியினால், ஆகவே சத்தியத்தையும் அகிம்சையையும் கண்டிப்பாக அனுசரிப்பதனாலேயே நாம் உண்மையான சுதந்திரத்தை அடைய முடியும் என்ற என் கருத்து நாளுக்கு நாள் உறுதிப்பட்டு வருகிறது. பின்னணியில் சட்ட மறுப்பும் இருந்து வருகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், சட்ட மறுப்புக்கு ஒரு தம்பிடி உதவியும் தேவையில்லை; அதை அது நாடவும் இல்லை. எந்த ஆபத்துக்கும் பின் வாங்கிவிடாத, மிகக் கடுமையான சோதனை வரும் சமயத்தில் மிகப் பிரகாசமாக முகத்தில் ஜொலிக்கும் நம்பிக்கையுள்ள திடவுள்ளங்களே சத்தியாக்கிரகத்திற்குத் தேவை; அது கேட்பதும் அவற்றையே. துன்பத்தை அனுபவிப்பது என்பதைப் போன்ற பயங்கரமான பொருளைக் கொண்ட சொல்லே சட்ட மறுப்பு. ஆனால், அன்போடு கூடிய இதே போன்ற ஒன்றின் மதிப்பை, உண்மையாகவே மக்கள் அறிவதானால், அக்காரியத்தின் பயங்கரத் தன்மையையும் புரிந்து கொள்ளுவது எப்பொழுதுமே நல்லது. உடன்பட மறுப்பது என்பது, மனிதனைப் பிறந்த ஒவ்வொருவருக்குமுள்ள உரிமை. சாத்விகத்திலிருந்தோ அல்லது அதே பொருள் கொண்ட அன்பிலிருந்தோ எழும்போது, அது ஒரு தெய்விகக் கடமையாகிறது. தீண்டாமை ஒழிப்புச் சீர்திருத்தவாதிகள், வேரூன்றிப்போன

வைதிகத்தை எதிர்த்து சாத்விகச் சட்ட மறுப்பு செய்து வருகிறார்கள். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டு வருகிறவர்கள், வகுப்புக்களையும் சாதிகளையும் பிரிப்பவர்களைத் தங்கள் ஆன்ம பூர்வமாக எதிர்த்து வருகின்றனர். தீண்டாமை ஒழிவதற்கு இடையூறு செய்கிறவர்கள், ஒற்றுமை ஏற்படுவதற்கு இடையூறு செய்கிறவர்களுக்கு எதிராக இந்த எதிர்ப்பு இருப்பதைப் போன்றே, இந்தியாவின் ஆண்மை குன்றும்படி செய்து வரும் ஓர் ஆட்சிக்கும் எதிர்ப்பு இருந்தாக வேண்டும். இந்த விசாலமான நாட்டில் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களை இவ்வாட்சி தினமும் நசுக்கிப் பிழிந்துகொண்டு வருகிறது. வருங்காலத்தின் விளைவுகளைக் குறித்து ஆளுவோர் பொருட்படுத்தாமல் விபரீதமான போக்கை அனுசரித்து வருகிறார்கள். மதுபானம், லாகிரி வஸ்துக்கள் சம்பந்தமாக ஆளுவோரின் போக்கைத் தடுக்காது போனால், நாட்டின் பாட்டாளிகள் சீரழிந்து போய்விடுவார்கள். ஒழுக்கக் கேடான இக்காரியத்தின் மூலம் வரும் வருவாயை நம் குழந்தைகளின் படிப்புக்காக உபயோகித்து வருவதைப் பற்றி வருங்காலம் நம்மைக் குறித்து வெட்கப்படவும் நேரும். ஆனால், வைதிகத்திற்கு விரோதமான எதிர்ப்பு, ஒற்றுமையின் விரோதிகளுக்கு எதிர்ப்பு, அரசாங்கத்திற்கு எதிர்ப்பு ஆகிய இந்தப் பயங்கரமான எதிர்ப்பு நிலைமை, பலமான, அவசியமானால் நீண்ட காலச் சுயத்தூய்மை, துன்பங்களை அனுபவிப்பது ஆகிய முறைகளினாலேயே நிறைவேறுவது சாத்தியமாகும்.

— 'எங் இந்தியா' 1—4—1926.

# 14

# சத்தியாக்கிரகத்திற்குள்ள எல்லைகள்

எல்லாச் சட்ட மறுப்பும் சத்தியாக்கிரகத்தின் ஒரு பகுதி அல்லது கிளையே. ஆனால், எல்லா சத்தியாக்கிரகமும் சட்ட மறுப்பு அல்ல. சத்தியாக்கிரகம் அல்லது சட்ட மறுப்பு என்று நாகபுரி நண்பர்கள் சொல்லிக்கொண்டதை நிறுத்தி விட்டார்கள். இதை அறிந்த நான், பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கும் வங்கக் கைதிகளுக்காக நியாயமான வகையில் எப்படி சத்தியாக்கிரகம் செய்யலாம் என்பதைப் பற்றிய யோசனையை அவர்கள் அறிவதற்காகவும், மற்றவர்கள் தெரிந்துகொள்ளுவதற்காகவும் கூறுகிறேன். அவர்கள் என் மீது கோபப்படாமலிருந்தால், என்னை எள்ளி நகைக்காமலிருந்தால், கதரின் மூலம் மக்களின் சக்தியை வளர்த்து, அந்நியத் துணி பகிஷ்காரத்தைக் கதரின் மூலம் அடைய அவர்கள் சத்தியாக்கிரகம் செய்யலாம் என்று கூறி,

நான் மேலே சொல்ல ஆரம்பிக்கிறேன். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு அடிகோலும் தூதர்களாகி அவர்கள் சத்தியாக்கிரகம் செய்யலாம். இந்த இரு மதத்தினருக்குமிடையே சச்சரவு இருக்கும்போதெல்லாம் தங்கள் தலைகள் உடைவதையும் லட்சியம் செய்யாமல் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடலாம். தங்கள் பகுதிகளில் பலத்த சச்சரவுகள் இல்லாதபோது, தமது சமயத்திற்கு எதிரான சமயத்தைச் சேர்ந்தவர்களுக்கு மௌனமாகச் சேவை செய்துவரலாம். இத்தகைய நிர்மாண வேலை முறைகள் அவர்களுக்கு சாரமற்றதாகத் தோன்றினால், எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் பலாத்காரம் நம்மைச் சுற்றிலும் ஆவேசத்துடன் இருந்துவந்தபோதிலும் சட்ட மறுப்பைத் தவிர வேறு எதிலும் அவர்கள் திருப்தியடையமாட்டார்களெனின், தனிப்பட்டவர்கள் சட்ட மறுப்புச் செய்வதற்கான முறையைப் பற்றி நான் யோசனை கூறுகிறேன். இந்தச் சட்ட மறுப்பைத் தனிப்பட்டவர் ஒருவர்கூடச் செய்யலாம். பாதுகாப்புக் கைதிகளாக வைக்கப்பட்டிருப்பவர்கள் உடனே விடுதலை செய்யப்பட்டுவிடுவார்கள் என்ற நம்பிக்கையில் செய்யாவிட்டாலும், தனிப்பட்டவரின் தியாகம் முடிவில் அக்கைதிகளின் விடுதலையில் கொண்டு போய் விடும் என்ற நம்பிக்கையில் இச்சத்தியாக்கிரகத்தைச் செய்யலாம். ஒரு சிறு கோஷ்டியினரோ அல்லது தனிப்பட்ட ஒருவரோ, நாகபுரியிலிருந்து கல்கத்தாவிலுள்ள கவர்னரின் மாளிகைக்குக் கால்நடையாகவே செல்லட்டும். நடந்தேபோவது என்பது கஷ்டமானதாகவோ, முடியாததாகவோ இருந்தால், புறப்படும் ஆணோ, பெண்ணோ, கோஷ்டியினரோ, ரெயில் செலவுக்கு வேண்டிய தொகையை நண்பர்களிடம் யாசகம் செய்து சேர்த்துக்கொள்ளட்டும். கல்கத்தா போய்ச் சேர்ந்ததும், ஒரு சத்தியாக்கிரகி, கவர்னரின் மாளிகைக்கு நடந்து போய், தான் நிறுத்தப்படும் கட்டம் வரும் வரையில் போய்க்கொண்டே இருக்கட்டும். அந்த இடத்தில் நின்றுகொண்டு, பாதுகாவலில் வைத்திருப்போரை விடுதலை செய்ய வேண்டும், இல்லாவிடில் தன்னைக் கைது செய்ய வேண்டும் என்று கேட்கட்டும். இந்தச் சட்ட மறுப்பின் சாத்விகத் தன்மை கெடாமலிருப்பதை முன்னிட்டுச் சத்தியாக்கிரகி, முற்றிலும் நிராயுதபாணியாக இருக்க வேண்டும். என்னதான் அவமதிப்புகள் வந்தாலும், அடி, உதைகளும், அதற்கும் மோசமானவைகளும் நேர்ந்தாலும், பணிவுடன் உறுதி கலையாமல் இருந்து வர வேண்டும். எவ்விதமான எதிர்ப்பும் இல்லாமல் தன்னைக் கைது செய்யவும் அனுமதித்துவிட வேண்டும். தனக்கு வேண்டிய உணவையும், ஒரு புட்டியில் குடிக்க நீரையும் அவர் பையில் வைத்துக்கொள்ளலாம். அவரவர்களுக்கு உகந்ததான கீதை, குரான், பைபிள், ஜெந்த் அவெஸ்தா அல்லது கிரந்த சாஹிப்பையும் தக்ளியையும் வைத்திருக்க வேண்டும். அத்தகைய உண்மையான சத்தியாக்கிரகிகள் பலர் இருப்பார்களானால், ஓர் அமைதியான மழை இந்தியாவின் சமவெளிப் பிரதேசத்தை ஒரே நாளில் எவ்விதம் பசுமையான கம்

பளம் விரித்தது போன்று செய்துவிடுகிறதோ அதேபோல, வெகு சீக்கிரத்திலேயே சூழ்நிலையை நிச்சயமாக மாற்றிவிடும்.

“நீங்கள் சொல்லுவது நடக்க வேண்டும் என்று நீங்கள் உண்மையிலேயே விரும்புவதாக இருந்தால், உங்களை யாராவது பின்பற்றி நடக்கிறார்களா, இல்லையா என்பதைப் பொருட்படுத்தாமல் நீங்கள் இதை ஏன் செய்து காட்டக் கூடாது?” என்று உடனே என்னைக் கேட்கக் கூடும். இதற்கு என் பதில் இது தான்: அத்தகைய தீரமான காரியத்தை மேற்கொள்ளுவதற்கான தூய்மை எனக்கு இருப்பதாக நான் கருதவில்லை. எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் இதற்கு வேண்டியதான தூய்மையை அடைய வேண்டும் என்பதற்காக என் வாழ்க்கையில் ஒவ்வோர் கணமும் பாடுபட்டு வருகிறேன். இன்றுள்ளபடி நான் எத்தனையோ உணர்ச்சி வேகங்களுக்கு ஆட்பட்டுவிடுகிறேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். தீய செயல்கள் என்று நான் கருதுபவை நடப்பதை நான் காணும்போதோ. கேட்கும்போதோ, என் உள்ளத்தில் கோபாவேசம் மூண்டுவிடுகிறது. என்னைப் பொறுத்த வரையில் பணிவுடன் நான் சொல்லிக் கொள்ளக் கூடியதெல்லாம், இந்த உணர்ச்சி வேகங்களையெல்லாம் ஓரளவுக்கு நான் அடக்கி வருவதோடு அவை என்னை ஆட்கொண்டு விடாதபடி தடுத்துக் கொண்டும் வருகிறேன் என்பதுதான். ஆனால், அத்தகைய தீரமான காரியத்திற்கு நான் விரும்பும் தூய்மையின் தரத்திற்கு, தவறை வெறுக்க வேண்டுமென்றாலும் அத்தகைய உணர்ச்சி வேகங்கள் கொஞ்சமும் கூடாது. தீமையை எண்ணவும் முடியாதவனாக ஆகிவிட்டேன் என்பதை நான் உணரும் போது, யாருடைய ஆலோசனைக்காகவும் நான் காத்துக் கொண்டிருக்க மாட்டேன். கடவுளுக்கு அஞ்சும் ஒவ்வொருவரும் அத்தகைய நிலையை அடைவது சாத்தியம் என்றும் கருதுகிறேன். அத்தகைய நிலைமை எனக்கு ஏற்பட்டு விடும் போது, பைத்தியக்காரர்களிலெல்லாம் பெரிய பைத்தியக்காரன் என்று சொல்லப்படும் ஆபத்து வந்தாலும் பொருட்படுத்தாமல், வைஸ்ராயின் வீட்டு வாசலுக்கோ அல்லது கடவுள் என்னை எங்கு இட்டுச் செல்லுகிறாரோ அங்கே போய், இன்று தூசாக நசுக்கப்பட்டுக் கிடக்கும் உரிமையைக் கொடுத்தாக வேண்டும் என்று கேட்க நான் தயங்க மாட்டேன்.

இதற்கிடையில் சத்தியாக்கிரகத்தை யாரும் ஏளனம் செய்துவிட வேண்டாம். அதைப் போல பாவனை செய்து நடந்து அதை யாரும் கேவலப்படுத்தி விடவும் வேண்டாம். சாத்தியமாகவே இருக்குமானால், அது அப்படியே இருந்து வர விட்டு விடுங்கள். தங்குதடையற்ற நடவடிக்கைக்கு முழுத் துறையும் எப்பொழுதும் இருந்து வருகிறது. கடலின் கரையையோ, கீழிருக்கும் பாறைகள், மலைகள் முதலியவற்றையோ அறியாத ஒரு கப்பலோட்டி, கலங்கரைவிளக்கமும் இல்லாதிருக்கும்

போது, தனக்கு இஷ்டமானபடியெல்லாம் கப்பலை ஓட்டுகிறான். ஆனால், கலங்கரை விளக்கம் இருக்கிறது என்பதையும், அது இருக்கும் இடத்தையும் அறிந்த ஒரு மாலுமி, கண்டபடியெல்லாம் கப்பலை ஓட்டிச் சென்றால், நட்சத்திரங்களைக் கண்டு ஏமாந்து விடாமல் கலங்கரை விளக்கத்தை அறிவதற்கான முன்னெச்சரிக்கையுடன் இருக்கவில்லையெனின், அவன் மாலுமியாக இருப்பதற்குத் தகுதியற்றவனாகவே கருதப்படுவான். நான் கூறுவதை வாசகர் பொறுமையுடன் கேட்பாரானால், ஒரு விஷயத்தை அவர் புரிந்து கொள்ளட்டும். இந்திய ராஜீய விஷயமாகிய விவரம் தெரியாத கடலில், சத்தியாக்கிரகம் எனப்படும் கலங்கரை விளக்கத்தைப் பராமரித்து வருபவன் நானே என்று கூறிக் கொள்ளுகிறேன். ஆகையால், சத்தியாக்கிரகத்தை அடைய விரும்புகிறவர்கள் அதைப் பராமரித்து வருபவரிடம் போவது நல்லது என்று நான் யோசனை கூறுகிறேன். ஆனால், அதைக் கண்டுபிடித்தவன் நானே என்ற உரிமை எதுவும் இதில் எனக்கு இல்லை என்பதையும் அறிவேன். எனவே, சக ஊழியர்கள் இதில் எனக்குள்ள ஸ்தானத்தை அங்கீகரிப்பார்கள் என்ற நம்பிக்கையில் மாத்திரமே நான் இருக்க முடியும்.

'எங் இந்தியா' - 14—7—1927

# 15

# நந்தனூர் மகத்தான சத்தியாக்கிரகி

[*1927 செப்டம்பர் 9–ஆம் தேதி காந்திஜி தமிழ் நாட்டில் யாத்திரை செய்வதற்காகச் சென்னையிலிருந்து புறப்பட்டார். கடலூருக்குச் சென்று விட்டு, சிதம்பரத்தில் பேசிய போது நந்தனாரின் பெருமையைக் குறித்துச் சொன்னார். அப்பிரசங்கத்தின் ஒரு பகுதியே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.*]

சிதம்பரம் எனக்கு புனித யாத்திரை ஸ்தலமாகவே இருக்க வேண்டும் என்பதை அறிவேன். முதன் முதலில் தோன்றிய சத்தியாக்கிரகி நான் தான் என்று நான் ஒருபோதும் சொல்லிக் கொண்டதே இல்லை. ஆனால், நான் சொல்லிக் கொள்ளுவதெல்லாம், அந்தத் தத்துவத்தை எல்லோரும் அனுசரிக்கக்கூடியதாகச் செய்திருக்கிறேன் என்பதே. என்றாலும், எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும் பல்லாயிரக் கணக்கான மக்களால் அனுசரிக்க முடிந்தது அத்தத்துவம் என்பது, இனித்தான் காணவேண்டியதாகவும், செய்து காட்ட வேண்டியதாகவும் இருந்து வருகிறது. ஆகையால், நான்

செய்து வருவது இன்னும் சோதனைக் கட்டத்தில்தான் இருந்து வருகிறது. இதை நான் அறிவேனாகையால், இது நான் அடக்கத் துடனும் ஊன்றி நிற்கும்படியும் செய்கிறது. அடக்கத்தோடு கூடிய அந்த நிலையில், உண்மையான சத்தியாக்கிரகத்தின் உதாரணத்தை நான் காண நேரும்போதெல்லாம், தாயின் மார்பைப் பற்றிக் கொள்ளும் ஒரு குழந்தையைப் போன்று நான் அதைப் பற்றிக் கொள்ளுகிறேன். எனவே, நந்தனாரின் சரித்திரத்தையும், அவருடைய மகத்தான சத்தியாக்கிரகத்தை யும், அதில் அவர் அடைந்த பெரும் வெற்றியையும் நான் படித்த போது, கேள்விப்பட்டபோது, அவருடைய ஆன்மாவிற்குத் தலை வணங்கினேன். நந்தனாரின் புனிதமான பாதங்கள் பட்ட புண்ணிய ஸ்தலத்தில் நான் இருக்க முடிந்ததை எண்ணி இன் றெல்லாம் பூரித்துப் போனேன். இன்னும் சில நிமிடங்களில் இந்த இடத்திலிருந்து புறப்பட்டு விடப் போகிறேன். ஆனால், அதிக மனக்கஷ்டத்துடனேயே இங்கிருந்து செல்லுவேன்.

நந்தனார், தமக்குக் குறுக்கிட்ட தடைகளையெல்லாம் தகர்த் தெறிந்துவிட்டு, விடுதலை பெறுவதில் வெற்றி பெற்றார். அப்படி அவர் அடைந்த வெற்றி, கஷ்டங்களையெல்லாம் எவ்விதக் களங்கமுமின்றித் தாமே அனுபவித்துக் கொண்டதனாலேயே அன்றித் தற்பெருமை பேசிக் கொண்டதனாலோ, ஆத்திரப் பட்டுக் கூக்குரலிட்டதனாலோ அன்று. தம்மைத் துன்பப் படுத்தியவர்களை அவர் வெறுத்துச் சபிக்கவில்லை. தம்மைக் கஷ்டப்படுத்தியவர்களிடம் தமக்கு உரியதைக் கொடுத்து விடும்படி கேட்கும் அளவுக்குக்கூட அவர் தம்மைத் தாழ்த்திக் கொண்டு விடவுமில்லை. ஆனால், அவர் தம்முடைய உயர் வான பிரார்த்தனையினாலும் ஒழுக்கத்தின் தூய்மையினாலும் அவர்கள் வெட்கித் தமக்கு நியாயம் வழங்கித் தீரும்படி செய்து விட்டார். இதை மனிதருக்குப் புரியும் பாஷையில் சொல்லுவ தானால், கடவுளே வந்து, தம்மைத் துன்பப்படுத்தியவர்களின் கண்களைத் திறக்கும்படி நந்தனார் கட்டாயப்படுத்தி விட்டார் என்றே சொல்ல வேண்டும். நந்தனார் அவர் காலத்தில், அவரைப் பொறுத்த வரையில் என்ன செய்தாரோ அதையே, நாம் ஒவ் வொருவரும், நம்மளவில் இன்று செய்ய முடியும்.

'எங் இந்தியா' -22—9—1927

# 16

# நீல் சிலை சத்தியாக்கிரகம்*

நீல் சிலை சத்தியாக்கிரக இயக்கத்தில் சம்பந்தப்பட்ட தொண்டர்கள் என்னிடம் அளித்த வாக்குறுதியை அனுசரித்து, நான் கேட்ட தகவல்கள் அடங்கிய விவரங்களை எனக்கு அனுப்பி யிருக்கிறார்கள். இவை எனக்கு அனுப்பப்பட்டிருக்கும் சமயம், அந்த இயக்கம் ஆறு வாரங்கள் நடந்திருக்கிறது. அப்பொழுது முப்பது தொண்டர்கள் சிறைத் தண்டனை அடைந்திருக்கிறார் கள். இவர்களில் 29-பேர் ஹிந்துக்கள், ஒருவர் முஸ்லிம். 35 வயதுள்ள ஒரு பெண், தன் 9 வயது மகளுடன் சிறைப்பட்டிருக் கிறார். இந்த முப்பது பேரில் இருவர் மன்னிப்புக் கேட்டுச் சிறை யிலிருந்து விடுதலையடைந்து விட்டனர். மன்னிப்புக் கேட்பது தொத்துநோய் போல் மற்றவர்களையும் பற்றிக்கொள்ளாதிருக்கு மானால், சிலர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வருவதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. எந்தப் போராட்டத்திலும் 'கருங்காலி'கள் இருந்தே வருவார்கள். சிறை சென்றிருப்பவர் கள் பிரபலமானவர்கள் அல்ல. இது ஒரு லாபமே அல்லாமல் நஷ்டமே அன்று. ஏனெனில், ஒரு சத்தியாக்கிரகப் போராட் டத்திற்குத் தேவையானதெல்லாம் சத்தியத்தின் கௌரவத் தைத் தவிர வேறு எந்தக் கௌரவமும் அல்ல. ஒருவருடைய லட்சியத்தில் கொள்ளும் அசைக்க முடியாத நம்பிக்கையினால் துன்பங்களைத் தானே அனுபவிப்பதனாலும், பூரண அகிம்சை உணர்ச்சியினாலும் வரும் பலத்தைத் தவிர வேறு பலம் அதற்குத் தேவையில்லை.

---

* 1927 செப்டம்பர் 3-ஆம் தேதி காந்திஜி சென்னை நகர் வந்து சேர்ந்தார். பெங்களூரிலிருந்து புறப்பட்டு வடஆற்காடு ஜில்லாவில் பல ஊர்களுக்குப் போய்விட்டே சென்னை வந்தார். சென்னையில் நான்கு நாட்கள் தங்கி பதினேழு பொதுக்கூட்டங் களில் பேசினார். அப்பொழுது இளைஞர்கள் பலர், கொடுங்கோன்மைக்கும் பொய்மைக் கும் சின்னமாக இருந்த நீலின் சிலையை அப்புறப்படுத்தும்படிச் செய்யும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். இந்திய மக்களின் முதல் சுதந்திரப்போரான 1857-ஆம் வருடப் புரட் சியில் எண்ணற்ற அட்டூழியங்களைச் செய்தவனே ஜெனரல் நீல் என்பான். சென்னை, மவுண்ட் ரோடில் வைக்கப்பட்டிருந்த அக்கொடியனின் சிலையை அப்புறப்படுத்தி விடும்படிச் செய்யவே தேச பக்தி மிகுந்த இளைஞர்கள் துடித்தனர். காந்திஜியும் இவர் களும் இரண்டு மணி நேரம் மனம் விட்டுப் பேசிக்கொண்டிருந்தனர். காந்திஜி இவர் களை உற்சாகப்படுத்தினார்; எச்சரிக்கையும் செய்தார். சத்தியாக்கிரகத்தின் பொருளை யும் அதிலடங்கியிருப்பவைகளையும் புரிந்துகொள்ளும்படியும் அவர்களைக் கேட்டுக் கொண்டார். ஜம்பப் பேச்சுக்கள், மிரட்டல்கள், ஏமாற்றும் தந்திரங்கள் ஆகியவைகளை யெல்லாம் கைவிட்டு சத்தியத்தையும், கௌரவத்தையும், மதிப்பையும் ஒட்டி நடந்து கொள்ளுமாறும் காந்திஜி கேட்டுக்கொண்டார். சிலையை வீழ்த்துவதோ, அதைப் பின் னப்படுத்துவதோ அகிம்சைக் கொள்கையைப் பாதிக்கவில்லையா என்று சத்தியாக்கிரகி கள் காந்திஜியைக் கேட்டனர். தமது நிபந்தனைகள் நிறைவேற்றப்படுமானால், அகிம் சைக்கு விரோதமானது என்று அதைத் தாம் கருதவில்லை என்றார் காந்திஜி.

தொண்டர்கள் பொறுமையை இழந்துவிடக் கூடாது. வெற்றியில் சத்தியாக்கிரகிக்குச் சம்பந்தமே இல்லை. வெற்றியில் சத்தியாக்கிரகிக்கு நிச்சயமான நம்பிக்கை உண்டு. ஆனால், வெற்றி கடவுளிடமிருந்தே வருகிறது என்பதையும் அவர் அறிய வேண்டும். துன்பத்தை அனுபவிப்பதுதான் சத்தியாக்கிரகியின் வேலை.

---

"இவற்றைப் போன்ற சிலைகள் முக்கியமான சின்னங்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவாகக் கொடுங்கோன்மைக்கும் பொய்மைக்குமே இருந்து வருகிறது என்பதைத் தெளிவாகக் காட்டுவதற்கான அத்தாட்சிகளே இவை. எனவே, இந்தக் கொடுங்கோன்மையையும் பொய்மையையும் தனது முழுச் சக்தியையும் கொண்டு எதிர்த்தாக வேண்டியது ஒவ்வொரு இந்தியனின், ஒவ்வொரு உண்மையான ஆங்கிலேயனின் கடமையாகும்'' என்றார்.

நீல் சிலைக்கு முன் சில தொண்டர்கள் சத்தியாக்கிரகம் செய்து சிறைப்பட்டனர். 30 பேர் சிறைத் தண்டனை அடைந்தார்கள். சத்தியாக்கிரகம் நீண்ட காலம் நீடிக்கவில்லை. நீல் சிலையை உடனே அப்புறப்படுத்தும்படிச் செய்வதிலும் அப்போதைக்கு அது தோல்வியடைந்தது. ஆனால், 1937-இல் காங்கிரஸ் மந்திரி சபை சென்னையில் ஆட்சிக்கு வந்ததும், அச்சிலையை அப்புறப்படுத்திப் பொருட்காட்சிச் சாலையில் வைக்க உத்தரவிட்டனர்.

நீல் சிலைச் சத்தியாக்கிரகம், காந்திஜியின் சீடர்கள் சிலருக்குத் திகைப்பை உண்டாக்கிவிட்டது. ''லாரன்ஸ் சிலையை அப்புறப்படுத்தும் கிளர்ச்சிக்கு ஊக்கமளித்ததைப் போன்றே, நீல் சிலையை அப்புறப்படுத்த வேண்டும் என்ற கிளர்ச்சிக்கும் காந்திஜி ஆதரவளித்து வருகிறார். அது பலாத்காரத்தைப் போன்றதென்று எங்களுக்குத் தோன்றுகிறது. ஆயுதச் சட்டத்தை ஒழிப்பதற்கு ஆயுதங்களை ஏந்திச் செல்லுவதைப் போன்று, நாங்கள் எதில் பலாத்காரத்தைக் காணவில்லையோ அதில் அவர் பலாத்காரத்தைக் காண்கிறார்" என்று அவர்கள் கூறினர். காந்திஜி அப்பொழுது தமது கருத்தை விளக்கிக் கூறியதாவது.

''அதிக உறுதியானதால் உருவானது அகிம்சை. நீல் சிலையை அப்புறப்படுத்த வேண்டும் என்பது போன்ற கிளர்ச்சிகள், ஆங்கிலேயர் மீது துவேஷ உணர்ச்சியை அதிகரித்துவிடக்கூடும் என்பதில் சந்தேகமில்லை. துவேஷத்திற்கான காரணங்களை உண்மையான அகிம்சை அலட்சியம் செய்துவிடுவதில்லை, பார்க்காமல் இருந்துவிடுவதுமில்லை. ஆனால், துவேஷத்திற்குக் காரணங்கள் இருப்பதை அறிந்தும், அந்தக் காரணங்கள் இருக்கும்படிச் செய்பவர் மீது அகிம்சை வியாபிக்கிறது. அது அவ்வாறு இல்லாதிருக்குமாயின், அகிம்சை முறையைக் கொண்டு சுயராஜ்யத்திற்குப் பாடுபடுவது என்பதே சாத்தியமில்லாததாகியிருக்கும். ஏனெனில், அந்நிய ஆட்சியின், அந்நிய ஆட்சியாளரின் அக்கிரமங்களை ஒவ்வோர் கட்டத்திலும் பகிரங்கமாக எடுத்துக்காட்டியாக வேண்டியது சுயராஜ்யவாதியின் கடமையாகும். நீல் சிலையையும், அது போன்றவைகளையும் அப்புறப்படுத்துவதற்கு நடக்கும் பலாத்காரமற்ற கிளர்ச்சியை, அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒருவர் அங்கீகரிக்க வேண்டியிருப்பது ஏன் என்பது இப்பொழுது ஒரு வேளை தெளிவாகக்கூடும். ஆனால், அகிம்சையை அனுசரிக்கிறவர் ஆயுதங்களை உபயோகிக்கலாம் என்று எதிர்பார்க்கப்படாததால், அவர் ஆயுதங்களை எடுத்துச் செல்லுவது அனுமதிக்கக்கூடியதன்று. ஆயுதச் சட்டத்தை அடியோடு நீக்கிவிடுவது என்பது நியாயமான லட்சியம் என்று என்றும் கொள்ளப்படமாட்டாது. எனவே, ஆயுதச் சட்டத்தை ஒழிப்பதற்காக ஆயுதங்களை ஏந்திச் செல்லுவது என்பது அகிம்சைத் திட்டத்தில் அடங்கியதாக என்றுமே ஆகாது.''

மேலே கண்ட காந்திஜியின் கட்டுரை, நீல் சிலை சத்தியாக்கிரகத்தைப் பற்றி அவர் எழுதியதாகும்.

எனக்குக் கிடைத்திருக்கும் விவரங்களில் வரவு செலவுக் கணக்கும் இருக்கிறது. ஒரு லோபி, தான் திரட்டி வைத்திருக்கும் செல்வத்தை எப்படிச் செலவு செய்வானே, அதே போன்றே ஒவ்வொரு தம்படியையும் சத்தியாக்கிரகி உபயோகிக்க வேண்டும் என்பதைச் சத்தியாக்கிரகிகள் அறியட்டும். அவர்களிடமிருக்கும் பணத்தை உள்ளூரிலிருக்கும் முக்கியஸ்தர் ஒருவர் வைத்திருக்கும்படிச் செய்து, தரும சிந்தனையுள்ள ஒரு கணக்குப் பரிசோதகர் கணக்குகளை இலவசமாகப் பரிசோதிக்கும்படியும் செய்ய வேண்டும் என்று யோசனை கூறுகிறேன். பொதுப் பணத்தை நிர்வகிப்பதில் கண்டிப்பான யோக்கியப் பொறுப்பும், உஷாரும் வேண்டும். பொதுஜன சேவை வாழ்க்கை நல்ல முறையில் வளர்வதற்கு, இது அத்தியாவசியமான ஒரு நிபந்தனையாகும்.

என் முன்னுலிருக்கும் அவர்களுடைய மூன்ருவது காகிதம், பொதுமக்களுக்கு அவர்கள் விடுத்திருக்கும் வேண்டுகோள். ஒரு சத்தியாக்கிரகியின் வேண்டுகோள் அடக்கமான பாஷையில் இருக்கவேண்டும். என் முன்னுலிருக்கும் இந்த வேண்டுகோள் குற்றங்கூற முடியாததாயினும், சில நல்ல திருத்தங்களைச் செய்ய வேண்டியதாகவே இருக்கிறது. 'நீல் மாத்திரமல்ல, அவனுடைய கொடிய இனம் முழுவதுமே ஒழிந்தாக வேண்டும்' என்ற வாக்கியம், அந்த வேண்டுகோளைக் கெடுத்து விடுவதாகிறது. ஜெனரல் நீல் இப்பொழுது இல்லை. நாம் இப்பொழுது கவனிக்க வேண்டியிருப்பது அந்தச் சிலையைக்கூட அல்ல, அதை என்ன செய்யவேண்டும் என்பதைக் குறித்தே. அச்சிலை எந்தக் கொள்கைக்காக நிற்கிறதோ, அக்கொள்கையை அழிக்கவே நாம் முற்பட்டிருக்கிருேம். யாருக்கும் துன்பம் விளைவிக்க நாம் விரும்பவில்லை. துன்பத்தை நாமே அனுபவித்துக்கொள்ளுவதன் மூலம், ஆங்கிலேயரின் அபிப்பிராயமுள்படப் பொதுஜன அபிப்பிராயத்தை நமக்குச் சாதகமாக்கிக் கொள்ளவே விரும்புகிருேம். கோபமும் துவேஷமும் கொண்ட பாஷைக்கு இங்கே இடமே இல்லை.

தொண்டர்களைப் பொறுத்த வரையில் இவ்வளவுதான். பொதுமக்கள் செய்யவேண்டிய கடமையும் ஒன்றிருக்கிறது. அவர்கள் சிறைக்குச் செல்ல வேண்டியதில்லை. ஆனல், இயக்கத்தை மேற்பார்வை பார்த்து, நிர்வகித்து, நல்ல முறையில் நடத்திப் பல வழிகளில் உதவி செய்யலாம். இச்சிலையை நீக்குவதற்காக நடத்தப்படும் கிளர்ச்சி, மோசமான ஒரு நோய் போன்ற ஒரு முறையை நீக்குவதற்காக நடக்கும் கிளர்ச்சியே ஆகும். இச்சிலையை அப்புறப்படுத்திவிடுவது நோயைக் குணப்படுத்திவிடாவிட்டாலும், அது துன்பத்தைப் போக்கி நோயை அணுகுவதற்கான வழியையும் காட்டிவிடும். ஆழ்ந்து இருந்து வரும் நோயை, அதனல் வெளியில் தென்படும் அறிகுறிகளைச் சமாளிப்பதன் மூலம் தீர்க்கும் வழியை அடைந்துவிடுவதும் பெரும்பாலும் சாத்தியமாவது உண்டு. ஆகையால், சத்தியாக்

கிரகத் தொண்டர்கள் நேர்மையான முறையில் போராடிக்கொண்டிருக்கும் வரையில், சத்தியாக்கிரகத்திற்கான நிபந்தனைகளுடன் கண்டிப்பாக நடந்துகொண்டிருக்கும் வரையில், அவர்கள் பொது ஜன ஆதரவுக்கும் அனுதாபத்திற்கும் உரியவர்களாவர்.

—'எங் இந்தியா' - 13—10—1927

# 17

# சத்தியாக்கிரகத்திற்குத் தகுதிகள்

சத்தியாக்கிரகத்திற்கு சுயக் கட்டுதிட்டம், தன்னடக்கம், சுயத்தூய்மை ஆகியவை முதலில் வேண்டும். சத்தியாக்கிரகம் செய்பவருக்கு, அங்கீகாரம் பெற்ற சமூக அந்தஸ்தும் இருக்க வேண்டும். தீமைக்கும், தீமையைச் செய்கிறவருக்குமுள்ள பேதத்தைச் சத்தியாக்கிரகி எப்பொழுதும் மறந்துவிடவே கூடாது. தீமையைச் செய்கிறவர் பேரில் சத்தியாக்கிரகிக்குக் கெட்ட எண்ணமோ, துவேஷமோ இருக்கவே கூடாது. அவர் செய்யும் கெடுதல் என்னதான் பரிகாரமே இல்லாததாக இருந்த போதிலும், கெடுதல் செய்கிறவருக்கு எதிராக அவசியமில்லாமல் நிந்தனையான பாஷையை உபயோகிக்கவே கூடாது. ஏனெனில், இந்த உலகத்தில் படுமோசமாகி விட்டவர்கள் எவருமே இல்லை, அன்பினால் அவரையும் மாற்றிவிட முடியும் என்ற திடமான நம்பிக்கை ஒவ்வொரு சத்தியாக்கிரகிக்கும் இருக்கவேண்டும். தீமையை நல்லதைக் கொண்டும், கோபத்தை அன்பைக் கொண்டும், பொய்மையை மெய்யைக் கொண்டும், இம்சையை அகிம்சையைக் கொண்டும் வெல்ல சத்தியாக்கிரகி எப்பொழுதும் முயன்று வரவேண்டும். தீயவைகளை உலகத்தினின்று போக்குவதற்கு, இதைத் தவிர வேறு வழியே கிடையாது. ஆகையால், சத்தியாக்கிரகியாக இருப்பதாகக் கூறிக்கொள்ளும் ஒருவர், கோபம், கெட்ட எண்ணம் ஆகிய மனிதக் குறைபாடுகள் எவையும் தன்னிடம் கொஞ்சமும் இல்லாமலிருக்கின்றனவா, எந்தத் தீமைகளை எதிர்த்துப் போராட முற்பட்டிருக்கிறாரோ அதே தீமைகளைத் தான் செய்யாமலிருப்பாரா என்பதைக் குறித்து தன் எண்ணங்களைத் தானே தெய்வ பக்தியுடன் பரிசோதித்துக் கொள்ளுவதுடன், தன்னையே நுட்பமாக ஆராய்ந்துகொள்ளவும் எப்பொழுதும் முயற்சி செய்கிறார். ஒரு சத்தியாக்கிரகியின் வெற்றியில் பாதி, தன்னைத் தானே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதிலும், பிராயச்சித்தத் தவத்திலுமே அடங்கியிருக்கிறது. பிரசங்கங்களையும், அது போன்ற ஆடம்பரமான செயல்களையும்விட, சத்தியத்தோடும் அன்போடும் கூடிய மௌனமான, ஆடம்பரமில்லாத செயலினால் அதிக நிரந்

தரமான நல்ல பலன்கள் ஏற்படுகின்றன என்பதில் ஒரு சத்தியாக்கிரகிக்கு நம்பிக்கை இருக்கிறது.

ஆனால், ஒரு சத்தியாக்கிரகி மௌனமாகவே செய்யலாமென்றாலும், அவரைப் பொறுத்த வரையில் சில காரியங்களும் அவசியமாகின்றன. உதாரணமாக, ஒரு சத்தியாக்கிரகி, எந்தத் தீமையைப் போக்குவது என்று முற்பட்டிருக்கிறாரோ, அத்தீமைக்கு எதிராக முதலில் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டியாக வேண்டும். எங்கும் தீவிரமாகக் கிளர்ச்சி செய்வதன் மூலம் இதைச் செய்யவேண்டும். சமூகத்திற்கு இழைக்கப்படும் ஒரு தீமைக்கு எதிராகப் போதுமான அளவுக்குப் பொதுஜன அபிப்பிராயம் எழுந்துவிட்ட பிறகு, எவ்வளவுதான் பெரியவராயிருந்தாலும் அக்காரியத்தைச் செய்யவோ, அதற்குப் பகிரங்கமாக ஆதரவு அளிக்கவோ துணியமாட்டார்கள். விழிப்படைந்துவிட்ட, புத்திசாலித்தனமான பொதுஜன அபிப்பிராயமே ஒரு சத்தியாக்கிரகிக்கு அதிகச் சக்தி வாய்ந்த ஆயுதம். பொதுமக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்தைப் பொருட்படுத்தாமல் ஒருவர், ஒரு சமூகத் தீமையை ஆதரிக்கிறார் என்றால், சமூகத்திற்கு ஆபத்தானவர் என்று அவரை அடியோடு புறக்கணித்து வைத்துவிடுவது நியாயம் என்பதையே இது தெளிவாகக் காட்டுகிறது. ஆனால், அப்படி சமூகத்தில் அவரைப் புறக்கணித்து வைத்துவிடுவது, எவர் அவ்விதம் செய்யப்படுகிறாரோ அவருக்குத் துன்பத்தை உண்டாக்குவதற்கென்று இருக்கவே கூடாது. சமூகத்தில் புறக்கணித்து ஒதுக்கி வைத்துவிடுவது என்பது, தவறு செய்பவரிடம் சமூகத்தைப் பொறுத்த வரையில் பூரணமான ஒத்துழையாமையை அனுசரிப்பதே. இதற்கு அதிகமாகவோ, குறைவாகவோ வேறு எதுவும் இல்லை. சமூகத்தின் அபிப்பிராயத்தை மீறி வேண்டுமென்றே நடந்து கொள்ளும் ஒருவருக்கு, சமூகத்தினிடமிருந்து எந்தச் சேவையையும் பெற உரிமை இல்லை என்பதுதான் இதிலடங்கிய கருத்து. எல்லா நடைமுறைக் காரியங்களுக்கும் இதுவே போதுமானதாக இருக்கவேண்டும். என்றாலும், விசேஷமான விஷயங்களில் விசேஷமான நடவடிக்கை அவசியமாகலாம். தனிப்பட்ட ஒவ்வொரு விஷயத்தின் தன்மையையும் அனுசரித்து அதற்கு ஏற்றாற்போல நடவடிக்கையை மாற்ற வேண்டியும் இருக்கலாம்.

—'எங் இந்தியா' - 8—8—1929

# 18

# சத்தியாக்கிரகத்தின் சில விதிகள்

சத்தியத்தை வற்புறுத்துவது என்பதே சத்தியாக்கிரகம் என்பதற்குச் சரியான பொருளாகும். இப்படி வற்புறுத்துவதே சத்தியாக்கிரகிக்கு இணையற்ற சக்தியை அளிக்கிறது. சத்தியாக் கிரகம் என்ற சொல், இந்தச் சக்தி அல்லது பலத்தையும் குறிக் கிறது. சத்தியாக்கிரகம் கலப்பற்றதாக இருந்தால், அதை ஒருவரின் மனைவி, குழந்தைகள் விஷயத்திலும், அரசர்களை எதிர்த் தும், உடனுள்ள மக்களை எதிர்த்தும், உலகம் முழுவதையும் எதிர்த்தும்கூட உபயோகிக்கலாம்.

எல்லாவற்றிற்குமே உபயோகிக்கக் கூடியதான அத்தகைய சக்திக்கு, உற்றார் உறவினர், வெளியார் என்றும், இளைஞர்கள் வயோதிகர் என்றும், ஆண் என்றும் பெண் என்றும், நண்பன் என்றும் விரோதி என்றும் எந்தப் பாகுபாடுமே இல்லை. அவ்விதம் உபயோகிக்கும் சக்தி, உடல் பலமாக என்றும் இருக் கவே முடியாது. அதில் பலாத்காரத்திற்கு இடமே இல்லை. ஆகையால், எல்லாவற்றிற்கும் உபயோகிக்கக் கூடியதான ஒரே சக்தி, அகிம்சை அல்லது அன்பின் சக்தியாகவே இருக்கமுடியும், வேறுவிதமாகச் சொன்னால், அதுதான் ஆன்ம சக்தி.

அன்பு, தன்னைத் தானே எரித்துக் கொள்ளுமேயன்றி மற்ற வர்களை எரிக்காது. ஆகையால், ஒரு சத்தியாக்கிரகி, அதாவது சாத்விக எதிர்ப்பாளர், சாகும் வரைக்கும்கூட மகிழ்ச்சியுடன் துன்பங்களை அனுபவித்துக்கொள்ளுவார்.

ஆகவே, ஒரு சாத்விக எதிர்ப்பாளர், நடைபெற்று வரும் ஆட்சியை ஒழிப்பதற்கு முழு முயற்சியையும் செய்து வந்த போதிலும், எந்த ஒரு தனிப்பட்ட ஆங்கிலேயருக்கும், எண்ணத் தினாலும், செயலினாலும், சொல்லினாலும் விரும்பி எந்தத் தீங்கை யும் செய்யமாட்டார் என்றாகிறது. சத்தியாக்கிரகத்தைப் பற்றி மிகவும் அவசியமான இச்சுருக்கமான விளக்கம், கீழ்க்கண்ட விதிகளைப் புரிந்துகொண்டு ஆதரிப்பதற்கு உதவியாக இருக்கக் கூடும்.

### தனிப்பட்டவர் என்ற முறையில்

1. ஒரு சத்தியாக்கிரகி, அதாவது சாத்விக எதிர்ப்பாளர் தனக்குக் கோபம் வருவதற்கு இடங்கொடுக்கவே மாட்டார்.



*1918-இல் கேடா சத்தியாக்கிரகத்தின்போது காந்திஜி.*

THE GAZETTE OF INDIA, EXTRAORDINARY, JUNE 8, 1915. 7

Khan Bahadur MUHAMMAD ABDUL KARIM KHAN, Provincial Service, Extra Assistant Commissioner, District Judge, Hazara, North-West Frontier Province.

Rai Sahib LALA DHAN MALL, Personal Indian Assistant to the Agent to the Governor-General and Chief Commissioner in Baluchistan.

J. B. WOOD,
*Political Secretary to the Government of India.*

## FOREIGN AND POLITICAL DEPARTMENT.

### KAISAR-I-HIND MEDAL.

### NOTIFICATION.

*Simla, the 3rd June, 1915.*

His Excellency the Viceroy and Governor-General is pleased to announce that His Imperial Majesty the KING, EMPEROR OF INDIA, has been graciously pleased to award the Kaisar-i-Hind Medal of the First Class for Public Service in India to—

The LADY WILLINGDON.

LADY CARLYLE, wife of the Honourable Sir Robert Carlyle, K.C.S.I., C.I.E.

LADY LUKIS, wife of the Honourable Surgeon-General Sir Pardey Lukis, K.C.S.I., K.H.S.

Reverend Mother ST. LUCIE, Provincial of the Congregation of Jesus and Mary, The Convent, Agra, United Provinces.

EDWARD BELCHAM FRANCIS, Esquire, Indian Civil Service (retired).

Rai Bahadur GOPAL DAS, Bhandari, Pleader and Municipal Commissioner, Amritsar, Punjab.

Dr. THOMAS FRANKLIN PEDLEY, M.D., V.D., Medical Practitioner, Rangoon, Burma, and Surgeon Lieutenant-Colonel in the Rangoon Port Defence Volunteers.

Lieutenant-Colonel CHARLES THORNHILL BELL, Royal Artillery, Superintendent, Gun Carriage Factory, Jubbulpore.

Khan Bahadur Nawab AKBAR MUHAMMAD HUSSAIN KHAN of Landai Yarghaje, Honorary Magistrate, North-West Frontier Province.

EDWARD CLARK CARTER, Esquire, General Secretary, Young Men's Christian Association, National Council, India and Ceylon.

Sardar PARASHRAM KRISHNARAO BIWALKAR, of Alibag, Kolaba District, Bombay.

MOHANDAS KARAMCHAND GANDHI, Esquire, Barrister-at-Law.

---

His Excellency the Viceroy and Governor-General is pleased to award the Kaisar-i-Hind Medal of the Second Class for Public Service in India to—

BAI GALALBAI, widow of Seth Khadbilal Sobhagchand of Radhanpur, Bombay.

தென்னாப்பிரிக்காவில் காந்திஜி செய்த ஜீவகாருண்ய சேவையைப் பாராட்டி
வைஸ்ராய் அளித்திருந்த கேஸரி-ஹிந்த் பதக்கமும் மத்தியில் அதை அறிவிக்கும்
கெஜட் பிரசுரமும். ஒத்துழையாமை இயக்க ஆரம்பத்தில் இப்பதக்கத்தை காந்திஜி
வைஸ்ராய்க்குத் திருப்பி அனுப்பிவிட்டார்.

2. எதிராளியின் கோபத்தினுல் ஏற்படும் துன்பங்களை ஏற்றுக்கொண்டு அனுபவிப்பார்.

3. அவ்விதம் செய்யும்போது எதிராளி அடிப்பதை ஏற்றுக் கொள்ளுவாரேயன்றி, திருப்பி அடிக்க மாட்டார். ஆனல், தண்டனை போன்றவை கிடைத்துவிடுமோ என்று பயந்து கொண்டு, எதிராளி கோபத்தில் இடும் உத்தரவுக்கு அவர் பணிந்துவிடமாட்டார்.

4. அதிகாரத்திலிருக்கும் யாராவது ஒருவர், சாத்விக எதிர்ப்பாளரைக் கைது செய்ய முற்படும்போது, அவ்விதம் கைதி யாவதற்கு அவர் உடன்படுவார். அவருக்கு ஏதாவது சொத்து இருந்து அதைப் பறிமுதல் செய்துகொண்டுவிட அதிகாரிகள் முற்பட்டால், அச்சொந்த சொத்தை ஜப்தி செய்வதையோ, எடுத்துப் போய்விடுவதையோ அவர் எதிர்க்க மாட்டார்.

5. ஒரு சொத்துக்குத் தாம் தருமகர்த்தா என்ற வகையில் சாத்விக எதிர்ப்பாளரிடம் ஏதாவது சொத்து இருக்குமானல், அதைப் பாதுகாப்பதற்காக அவர் தம் உயிரை இழக்க நேர்ந் தாலும் அதற்கும் தயாராக இருக்க வேண்டுமேயன்றி, அதை விட்டுக் கொடுத்துவிட மறுத்துவிட வேண்டும். என்ருலும், அவர் பதிலுக்குப் பதில் செய்ய மாத்திரம் முற்படக்கூடாது.

6. பதிலுக்குப் பதில் செய்யக்கூடாது என்பது, சபிப்பதை யும் திட்டுவதையும் கூடத் தவிர்க்கிறது.

7. ஆகையால், சாத்விக எதிர்ப்பாளர், தனது எதிராளியை அவமதிப்பாகப் பேசவே மாட்டார். அதனுல், அகிம்சை உணர்ச் சிக்கு மாறுபட்ட வகையில் புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் பல கோஷங்களிலும் பங்கெடுத்துக்கொள்ளவும் மாட்டார்.

8. சாத்விக எதிர்ப்பாளர், பிரிட்டிஷ் கொடிக்கு வணங்க மாட்டார். அதையோ, ஆங்கில, இந்திய அதிகாரிகளையோ அவ மதிக்கவும் மாட்டார்.

9. போராட்டத்தின்போது ஓர் அதிகாரியை யாராவது அவமானப்படுத்தினுலோ, அல்லது தாக்கினுலோ, ஒரு சாத்விக எதிர்ப்பாளர் தம் உயிருக்கு நேரும் ஆபத்தையும் பொருட்படுத் தாமல் அத்தகைய அதிகாரியையோ, அதிகாரிகளையோ அவ மதிப்பிலிருந்தும், தாக்குதலிலிருந்தும் பாதுகாப்பார்.

## கைதி என்ற முறையில்

10. கைதி என்ற முறையில் ஒரு சாத்விக எதிர்ப்பாளர், சிறை அதிகாரிகளிடம் மரியாதையாக நடந்துகொள்ளுவார்.

சுயமரியாதைக்கு மாறுபட்டதாக இல்லாதிருக்கும் எல்லா சிறைச்சாலைக் கட்டுதிட்டங்களையும் அனுசரித்து நடந்துகொள்ளு வார். உதாரணமாக, சாதாரண முறையில் சிறை அதிகாரிகளுக்கு அவர் சலாம் செய்தாலும், மானக்கேடான முறையில் குனிவது, 'சர்க்காருக்கு வெற்றி' என்று கோஷிப்பது போன்றவைகளைச் செய்ய மறுத்து விடுவார். தம் மதத்திற்கு விரோதமானதாக இல்லாத, சுத்தமாகச் சமைத்துச் சுத்தமாகப் போடப்படும் உணவை அவர் சாப்பிடுவார். அவமதிக்கும் முறையில் போடப் படும், அசுத்தமான பாத்திரங்களில் கொடுக்கப்படும் உணவைச் சாப்பிட அவர் மறுத்துவிடுவார்.

*11.* சாத்விக எதிர்ப்பாளர், சாதாரணக் கைதிக்கும் தனக்கும் எந்தவிதமான வித்தியாசத்தையும் கற்பித்துக் கொள்ளமாட்டார். மற்றவர்களைவிடத் தான் எந்தவிதத்திலும் உயர்வானவன் என்றும் எண்ணிக்கொள்ளமாட்டார். தன்னு டைய உடலை நல்ல நிலையிலும் ஆரோக்கியத்திலும் வைத்துக் கொள்ளுவதற்கு அவசியமல்லாததான எந்தச் சௌகரியங்களும் தனக்கு வேண்டும் என்றும் அவர் கேட்கவும் மாட்டார். அவருடைய உடல் அல்லது ஆன்மா ஒழுங்காக இருப்பதற்குத் தேவையான வசதிகள் வேண்டும் என்று கேட்க அவருக்கு உரிமை உண்டு.

*12.* ஒரு சாத்விக எதிர்ப்பாளருக்கு மறுக்கப்படும் வசதி களினால் அவருடைய சுயமரியாதை பாதிக்கப்பட்டுவிடாமலிருக்கு மானல், அத்தகைய வசதிகள் வேண்டும் என்பதற்காக அவர் உண்ணுவிரதம் இருக்கமாட்டார்.

## ஒரு படை என்ற முறையில்

*13.* ஒரு சத்தியாக்கிரகப் படையின் தலைவர் இடும் உத்தரவு தனக்குப் பிடித்திருந்தாலும், பிடிக்காமலிருந்தாலும், சாத்விக எதிர்ப்பாளர் அந்த உத்தரவுகளுக்கு ஆனந்தமாகக் கீழ்ப்படிந்து நடப்பார்.

*14.* பிறப்பிக்கப்படும் கட்டளைகள் அவமதிப்பானவை என்றோ, தீமையானவை என்றோ அல்லது முட்டாள்தனமானவை என்றோ தனக்குத் தோன்றினாலும், சாத்விக எதிர்ப்பாளர் முத வில் அவற்றிற்குக் கீழ்ப்படிந்து நடந்துவிட்டுப் பிறகு மேலதிகாரி களிடம் முறையிட்டுக்கொள்ளுவார். ஒரு படையில் சேரும் முன்பு அப்படை தனக்குத் திருப்தியளிப்பதாக இருக்குமா என்பதை யோசித்து முடிவு செய்யும் உரிமை சாத்விக எதிர்ப்பாளருக்கு உண்டு. ஆனல், அதில் சேர்ந்துவிட்ட பிறகு, அதன் கட்டுதிட் டங்கள் தனக்கு எரிச்சலுண்டாக்குவதாக இருந்தாலும், வேறு விதமாக இருந்தாலும் அவற்றிற்குப் பணிந்து நடக்கவேண்டியது

அவருடைய கடமை. ஒரு படையின் மொத்த நடவடிக்கை சரியானதாக இல்லை என்றோ, ஒழுக்கக் கேடானதாக இருக்கிறது என்றோ அதைச் சேர்ந்த ஒருவருக்குத் தோன்றுமானால், அதிலிருந்து விலகிக் கொண்டு விடுவதற்கு அவருக்கு உரிமை உண்டு. ஆனால், அதற்குள்ளே அவர் இருந்து வரும்போது அதன் கட்டுதிட்டங்களை மீறி நடப்பதற்கு அவருக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை.

*15.* தம்மை நம்பி வாழ்ந்துகொண்டிருப்பவர்களின் ஜீவனத்திற்கு எந்தவிதமான படியும் கொடுக்கப்படும் என்று சாத்விக எதிர்ப்பாளர் யாரும் எதிர்பார்க்கக்கூடாது. அத்தகைய ஏற்பாடு ஏதாவது செய்யப்படுமாயின், அது தற்செயலானதாகவே இருக்கவேண்டும். தம்மை நம்பி வாழ்கிறவர்களை ஒரு சாத்விக எதிர்ப்பாளர், கடவுளின் பொறுப்புக்குத்தான் விட்டுவிடுகிறார். லட்சக்கணக்கானவர்கள் ஈடுபடும் சாதாரண போர்களில்கூட, அவர்கள் முன்கூட்டியே எந்த ஏற்பாட்டையும் செய்துகொள்ள முடிவதில்லை. அப்படி இருக்கும்போது, சத்யாக்கிரகி விஷயத்தில் மாத்திரம் அதிகமாக என்ன செய்துவிட முடியும்? இத்தகைய சமயங்களில் யாருமே பட்டினி கிடந்துவிட விட்டு விடுவதில்லை என்பதுதான் எங்குமே பொதுவான அனுபவம்.

## வகுப்புச் சண்டைகளில்

*16.* சாத்விக எதிர்ப்பாளர் யாரும் வகுப்புச் சச்சரவுக்குத் தாமறிந்து காரணஸ்தராகிவிடமாட்டார்.

*17.* அப்படி வகுப்புச் சச்சரவுகள் ஏற்பட்டுவிடுமானால், அவர் எந்தப் பக்கத்திலும் சேர்ந்துகொள்ளமாட்டார். ஆனால், எந்தக் கட்சி நன்றாகத் தெரியும் வகையில் நியாயமானதாக இருக்கிறதோ அதற்கு அவர் உதவி செய்வார்; ஹிந்து என்ற முறையில் அவர், முஸ்லிம்களிடமும் மற்றவர்களிடமும் தாராளமாக நடந்துகொள்ளுவார். ஹிந்துக்களின் தாக்குதலிலிருந்து ஹிந்துக்களல்லாதவர்களைக் காப்பாற்றும் முயற்சியில் அவர் தமது உயிரையும் தியாகம் செய்வார். ஹிந்துக்களல்லாதவர்கள் தாக்குவதாக இருந்தால், பதிலுக்குத் தாக்குவது எதிலும் அவர் பங்கெடுத்துக் கொள்ளாததோடு, ஹிந்துக்களைக் காப்பாற்றுவதற்குத் தமது உயிரையும் கொடுப்பார்.

*18.* வகுப்புச் சச்சரவு ஏற்படுவதற்கிருக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் தம்மால் முடிந்த வரையில் அவர் தவிர்ப்பார்.

*19.* சத்தியாக்கிரகிகளின் ஊர்வலம் நடந்தால், எந்தச் சமூகத்தின் மத உணர்ச்சியையும் பாதித்து விடும் காரியம் எதையும் அவர்கள் செய்யக் கூடாது. அத்தகைய மத உணர்ச்சி

களைப் பாதித்து விடுபவைகளாக இருக்கும் வேறு எந்த ஊர் வலத்திலும் அவர்கள் கலந்து கொள்ளக்கூடாது.

'எங் இந்தியா' -27—2—1930

# 19

# முற்றிலும் விட்டுக் கொடுத்தல்

முற்றிலும் விட்டுக் கொடுத்து விடுவது என்பது, கோரிய பலனைப் பூரணமாக அளிக்கவல்லது என்பதைச் சத்தியாக்கிரகி என்ற முறையில் நான் நம்புகிறேன். எண்ணிக்கையில் ஹிந்துக்கள் பெரும்பான்மை சமூகத்தினராக இருக்கிறார்கள். ஆகையால் சிறுபான்மையோர் விரும்புவதை அவர்கள் கொடுத்து விடலாம். ஆனால், ஹிந்துக்கள் சிறுபான்மையோராக இருந்த போதிலும், முற்றிலும் விட்டுக் கொடுத்துவிடுவதால் நாளாவட்டத்தில் அவர்களுக்கு நஷ்டம் எதுவும் இராது என்றே ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையிலும் ஹிந்து என்ற முறையிலும் நான் கூறுவேன்.

இந்த வாதத்திற்குக் கொஞ்சமும் யோசனையில்லாமல் ஒரு பதில் கூறப்படுகிறது. 'அப்படியானால் ஆங்கிலேயருக்கு விட்டுக் கொடுத்து விடும்படி நீங்கள் ஏன் இந்தியாவுக்கு யோசனை கூறவில்லை? இந்தியா மீது அவர்கள் விரும்பும் ஆதிக்கத்தை அவர்களுக்குக் கொடுத்து விட்டுச் சந்தோஷமாக இருந்து விடுங்கள்' என்கிறார்கள். அவசரப்பட்டு இவ்விதம் கூறுகிறவர்கள், ஓர் உண்மையை மறந்து விடுகிறார்கள். துப்பாக்கி முனைக்குப் பயந்து கொண்டு விட்டுக் கொடுத்து விடுமாறு நான் யோசனை கூறவில்லை. மிருக பலத்திற்கு விட்டுக் கொடுத்துவிடுவது என்பதே சத்தியாக்கிரகியின் தருமத்தில் கிடையாது. ஆகவே, விட்டுக்கொடுத்து விடுவது என்பது, துன்பத்தை அனுபவித்துக் கொண்டு விட்டுக் கொடுப்பதேயன்றித் துப்பாக்கிமுனைகொண்டு மிரட்டுகிறவருக்கு விட்டுக் கொடுத்து விடுவது என்பது அல்ல. சத்தியாக்கிரகி விட்டுக் கொடுப்பது என்றால், அது அவரது பலத்திலிருந்து வர வேண்டுமேயன்றி அவரது பலவீனத்தினால் ஏற்படக்கூடாது. விட்டுக் கொடுத்து விட வேண்டும் என்று நான் யோசனை கூறியது பொருள்களையே யன்றி, மானத்தை அல்ல. சட்டசபை ஸ்தானங்களையோ, வருவாயுள்ள உத்தியோகங்களையோ விட்டுக் கொடுத்து விடுவதில் மானக்கேடு எதுவும் இல்லை. அவற்றிற்காகச் சண்டை போட்டுக் கொண்டிருப்பது தான் மானக்கேடானது. ஆங்கிலேயர் தங்கள் துப்பாக்கிகளைத் துறந்துவிட்டுச் சாதாரண நண்பர்களாக நம்மிடையே வசிக்கட்டும்; அப்பொழுது அவர்களுக்காக நான் வாதாடுவேன். விட்டுக்

கொடுப்பதும், துன்பங்களை அனுவிப்பதும் எல்லோருக்குமான தருமம். இதில் யாரும் விலக்கானவர்கள் அல்ல.

'எங் இந்தியா' 30—4—1931

# 20

# வகுப்பு வாதத்தைப் பலவீனப்படுத்த

சிறுபான்மையோர், உண்மையாகவே பலவீனமாக இருக்கும் போது அவர்களுக்கு விட்டுக் கொடுத்து விடுவதையே அகிம்சையில் எனக்குள்ள திடமான நம்பிக்கை எனக்கு அறிவுறுத்துகிறது. வகுப்புவாதிகளைப் பலவீனப்படுத்திவிடுவதற்குச் சரியான வழி, அவர்களுக்கு விட்டுக் கொடுப்பதுதான். அவர்கள் விரும்புவதை எதிர்ப்பது, அவர்களுடைய சந்தேகத்தை அதிகரித்து அவர்களுடைய எதிர்ப்பையும் பலப்படுத்தியே தீரும். தடைக்குப் பின்னல் பலாத்காரத்தின் மிரட்டலும் இருக்கும் போது, ஒரு சத்தியாக்கிரகி எதிர்க்கிருன். புத்திசாலித்தனமானது, அனுபவசாத்தியமானது என்று எனக்குத் தோன்றும் இக்கருத்தைப் பொதுவாகக் காங்கிரஸ்காரர்கள் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்ய என்னல் இயலவில்லை என்பதை அறிவேன். ஆனல், அகிம்சை முறையின் மூலமே நாம் சுயராஜ்யத்திற்கு வருவதாக இருந்தால், இக்கருத்து ஒப்புக்கொள்ளப்படும் என்பதை அறிவேன்.

'எங் இந்தியா' 2—7—1931

# 21

# அரசியல் அதிகாரம் – சத்தியாக்கிரகம்

அரசியல் அதிகாரம் வேண்டும் என்று நான் விரும்புகிறேன் என்ருல், காங்கிரஸ் எந்தச் சீர்திருத்தங்களுக்காக இருக்கிறதோ அவற்றை அடைவதற்காகத்தான். இந்தச் சீர்திருத்தங்களுக்கு எவ்வளவு சக்தி வேண்டுமோ அந்தச் சக்தியெல்லாம் முஸ்லிம்களுடனே, சீக்கியருடனே சண்டை போட்டுக்கொண்டிருப்பதில் போய்விடும் என்ற ஆபத்து இருந்து வருகிறது. ஆகையால், அந்தச் சக்தி வீணுகிவிடாமலிருப்பதை முன்னிட்டு நாட்டிற்கு நான் ஓர் ஆலோசனை கூறுவேன். முஸ்லிம்களும் சீக்கியர்களும் எல்லா அதிகாரங்களையும் எடுத்துக்கொள்ளட்

டும், சீர்திருத்தங்களை விருத்தி செய்து கொண்டே நான் போகிறேன் என்பதுதான் அந்த ஆலோசனை.

சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாகக் காங்கிரஸ் செய்து வந்திருக்கும் வேலைகளைப் பரிசீலனை செய்து பார்த்தால், ஒரு விஷயத்தை அறியலாம். நிர்மாண வேலை முயற்சிகளில் எந்த அளவுக்கு வெற்றி பெற முடிந்திருக்கிறதோ, அதே அளவுக்குத் தான் ராஜீய அதிகாரத்தை வகிப்பதற்கான காங்கிரஸின் திறனும் அதிகரித்திருக்கிறது என்பதைக் காணலாம். எனக்கு இதுதான் ராஜீய அதிகாரத்தின் சாரம். உண்மையில் சர்க்கார் யந்திரத்தை நிர்வகிக்க எடுத்துக்கொள்ளுவது என்பது வெறும் நிழல், அடையாளமே ஆகும். அந்த அதிகாரத்தைப் பெறுவதற்கு வேண்டிய தகுதியை அடைவதற்கான முயற்சி எதுவும் மக்களிடம் இல்லாமல், வெளியாரிடமிருந்து ஒரு சன்மானமாக அது கிடைத்து விடுமானால், அது எளிதில் ஒரு சுமையாகவும் ஆகிவிடும்.

தேவையானதை, 'ராஜீய அதிகாரத்தைக் கொண்டு அடைவதைவிட சத்தியாக்கிரகத்தைக் கொண்டு அதிக சீக்கிரத்திலும் மிகவும் நிச்சயமாகவும் நாம் அடைந்துவிடலாம்' என்று நான் சொன்னதிலுள்ள உண்மையை, இப்பொழுது அறிவது எளிதாக இருக்கும். பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதற்கு முன்னால் சட்டம் செய்து விடுவதால் பயனில்லை என்பது நன்றாகத் தெரிந்திருக்கிறது. மக்களில் பெரும்பாலானவர்கள் திருடர்களாக இருக்கும் ஒரு நாட்டில், திருட்டை ஒழிக்கச் சட்டஞ் செய்வது என்பது வீணான வேலை. மறியலும், மற்ற பொதுஜன நடவடிக்கைகளுமே உண்மையில் செய்ய வேண்டிய காரியங்கள். ராஜீய அதிகாரம் இந்தச் சீர்திருத்தங்களுக்குப் புறம்பானதாக இருக்குமாயின், சீர்திருத்தங்களை நிறுத்தி வைத்துவிட்டு ராஜீய அதிகாரத்திலேயே நாம் கவனத்தையெல்லாம் செலுத்த வேண்டியிருக்கும். ஆனால், இதற்கு மாறான ஒரு முறையை நாம் அனுசரித்துக் கொண்டு வந்திருக்கிறோம். சுயராஜ்யத்தை அடைவதற்கு நிர்மாண வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதுதான் முக்கியம் என்று எல்லா இடங்களிலும் வற்புறுத்தி வந்திருக்கிறோம். மது பானம், போதை வஸ்துக்களை உபயோகிப்பது, அந்நியத் துணி ஆகியவைகளைச் சட்டத்தின் மூலம் ஒழிப்பது என்று வரும் போதெல்லாம், பொதுஜன அபிப்பிராயம் அவற்றை விரும்புவதனாலேதான் வரும் என்பதை நான் நிச்சயமாக அறிவேன். இவற்றை ஒழிக்க வேண்டும் என்று இன்று பொதுஜன அபிப்பிராயம் கேட்கிறது. ஆனால், அந்நிய அரசாங்கமோ அப்படிச் செய்ய மறுக்கிறது என்று சொல்லப்படலாம். இதில் ஓரளவுக்குத்தான் உண்மை உண்டு. இந்நாட்டில் பொதுஜன அபிப்பிராயம் இப்பொழுதுதான் பலமுள்ள ஒரு சக்தியாக ஆகிக் கொண்டிருக்கிறது; சத்தியாக்கிரக

மாகிய அதன் உண்மையான நடவடிக்கை இப்பொழுதுதான் அபிவிருத்தி அடைந்து கொண்டும் இருக்கிறது.

'எங் இந்தியா' -2—7—1931

# 22

# 'பின்பற்றுவோரு'க்கு

ஒரு நண்பர் எனக்குக் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"ராஜீய சம்பந்தமான விவகாரங்களில் ஈடுபட்டிருக்கும் போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைக் குறித்து, உங்களைப் பின்பற்றுவோருக்கு நீங்கள் தயவு செய்து வழிகாட்டுவீர்களானால், அதிக உதவியாக இருக்கும். முக்கியமாகக் கீழ்க்கண்ட விஷயங்களில் உங்கள் புத்திமதி தேவைப்படுகிறது:

(அ) பொதுஜனங்கள் வைத்திருக்கும் மதிப்பைக் குறைப்பதற்காக அவதூறானவைகளைக் கூறுவது.

(ஆ) எதிராளியைப் பற்றிக் குறை கூறுவதில் எத்தகையது அனுமதிக்கக் கூடியது?

(இ) விரோதத்தை எந்த அளவுக்குக் கொண்டுபோகலாம் என்பதற்கான எல்லை.

(ஈ) உத்தியோகங்களையும் அதிகாரத்தையும் பெற முயற்சி செய்யலாமா?"

என்னைப் பின்பற்றுகிறவர்கள் இருப்பதாக நான் சொல்லிக் கொள்ளுவதில்லை என்பதை, இப்பத்திரிகையில் முன்பே கூறியிருக்கிறேன். என்னை நானே பின்பற்றுகிறவனாக இருந்தாலே எனக்குப் போதும். இதுவே ஒரு கஷ்டமான வேலை. ஆனால், என்னைப் பின்பற்றுகிறவர்கள் என்று அநேகர் சொல்லிக் கொள்ளுகிறார்கள் என்பதை அறிவேன். ஆகையால், அவர்களை முன்னிட்டு இக்கேள்விகளுக்கு நான் பதில் சொல்லியாக வேண்டும். அவர்கள், என்னைப் பின்பற்றுவதற்குப் பதிலாக, நான் எதற்காகப் பாடுபட்டு வருகிறேனே அதைப் பின்பற்றுவார்களானால், கீழ்க்கண்ட பதில்கள் சத்தியத்திலிருந்தும் அகிம்சையிலிருந்தும் பெறப்படுகின்றன என்பதைக் காண்பார்கள்:

(அ) எதிராளியை அவமதிப்பாகப் பேசுவது என்பது இருக்கவே கூடாது. ஆனல், அவருடைய செயல்களை உண்மையாகவே எடுத்துக் கூறுவதை இது விலக்கவில்லை. எதிராளி ஒருவர்

எதிர்க்கிறார் என்பதனால் அவர் எப்பொழுதும் கெட்டவர் அல்ல. நாம் எவ்வளவு யோக்கியமானவர்கள் என்று கூறிக் கொள்ளுகிறோமோ, அவ்வளவு அவரும் யோக்கியமானவராக இருக்கலாம். என்றாலும், முக்கியமான விஷயங்களில் அவருக்கும் நமக்கும் மாறுபாடு இருக்கலாம்.

(ஆ) ஆகையால், நாம் கண்டிப்பது கீழ்க்கண்ட வகைகளில் தான் இருக்க வேண்டும்: பொய் சொல்லும் குற்றத்தை அவர் செய்கிறார் என்று நாம் நம்பினால், பொய்யை மெய்யைக்கொண்டு மறுக்க வேண்டும். அவமதிப்பை, மதிப்புத் தருவதன் மூலம் சமாளிக்க வேண்டும். துன்புறுத்துவதை, அமைதியோடுகூடிய தீரத்தினாலும், பலாத்காரத்தை துன்பத்தை அனுபவிப்பதனாலும், அகம்பாவத்தை அடக்கத்தினாலும், தீமையை நல்லதைக் கொண்டும் சமாளிக்க வேண்டும். 'என்னைப் பின்பற்றுகிறவர்கள்', எதிராளி மனமாற்றமடையும்படிச் செய்யப் பார்ப்பார்களே யன்றி, கண்டிக்க முற்படமாட்டார்கள்.

(இ) விரோதத்தை எந்த எல்லை வரையில் கொண்டு போகலாம் என்பதே இல்லை. ஏனெனில் ஆட்களைப் பொறுத்த வரையில், யாரிடத்திலும் விரோதமே இருக்கக்கூடாது. செய்யப்படும் காரியங்கள் ஒழுக்கத்தைக் கெடுக்கக்கூடியனவாகவோ, சமூகத்தின் நன்மைக்கு விரோதமானவையாகவோ இருந்தால், அச் செயல்களுக்கு மாத்திரமே விரோதம் இருக்கலாம்.

(ஈ) உத்தியோகத்தையும் அதிகாரத்தையும் பெறுவதைத் தவிர்க்க வேண்டும். மேற்கொண்டும் அதிகப்படியான சேவைக்கு உதவும் என்று தெளிவாக இருந்தால் மாத்திரம் அவற்றில் எதையும் ஏற்றுக்கொள்ளலாம்.

'எங் இந்தியா' -7—5—1931

# 23

# ஜீவனத்திற்குப் படி

[சிந்து தேச சேவா மண்டலத்தின் இரண்டாவது வருட விழாவில் காந்திஜி பேசியதிலிருந்து ஒரு பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

இத்தகைய ஸ்தாபனங்களில் சேரும் ஊழியர்களின் வாழ்க்கைக்காக ஏதாவது படி கொடுக்க வேண்டுமா, வேண்டாமா என்று என்னைக் கேட்கிறார்கள். எந்தவிதமான படியையும் வாங்கிக் கொள்ளுவது மானக்கேடானது, ஆகையால், எதுவும்

வாங்கிக் கொள்ளாமல் வேலை செய்வதே நல்லது என்று எண்ணு கிறவர்கள் சிலர் இருக்கிறார்கள். இந்தக் கொள்கைப்படியே நாம் நடப்பதாக இருந்தால், லட்சாதிபதிகளாக இருக்கும் ஊழி யர்களைக் கண்டுபிடிக்கவே நாம் முயற்சி செய்ய வேண்டும் என் பதை இவர்கள் உணருவதாகத் தெரியவில்லை. லட்சாதிபதி களாக இருப்பவர்கள் மிகச் சிலரே. அதுவும் அவர்கள் எங்கோ இருக்கிறார்கள். அந்த வகுப்பிலிருந்து தொண்டர்களாக வேலை செய்ய வருகிறவர்கள் நமக்குக் கிடைப்பதும் இல்லை. எந்தவித மான படியும் வாங்கிக் கொள்ளாமல் நாம் வேலை செய்ய வேண்டும் என்று கூறுவதில், கொஞ்சம் அகந்தையும் இருக்கிறது என்றே நான் கூறவேண்டும். ஒருவர் தனது வாழ்க்கையை நடத்துவதற்காகப் படி வாங்கிக் கொள்ளுவதில் அவமானம் எதுவும் இல்லை என்பது மாத்திரமல்ல, அது தெளிவான கட மையுமாகும். கோகலே மாதம் ரூ. 40 படி வாங்கிக் கொண்டு தமது சேவை வாழ்க்கையை ஆரம்பித்தார். அவருடைய வாழ் நாளில் மாதம் ரூ. 75-க்கு மேல் அவர் வாங்கிக் கொண்டதே இல்லை. வாழ்நாளெல்லாம் அதைக்கொண்டே அவர் திருப்தி யோடு இருந்து வந்தார். வாழ்க்கைச் செலவுக்காகச் சாதாரண சிறு தொகையை வாங்கிக்கொள்ளுவது, தமது கௌரவத்திற்குக் குறைவானது என்று அவர் எண்ணவே இல்லை. ஆனால், அப்படி வாங்கிக் கொள்ளுவதைக் கௌரவமாகவும் கடமையாகவும் அவர் கருதினார். அப்படியிருக்கும் போது, அவரைவிட நமக்குச் சுய மதிப்பு உணர்ச்சி அதிகமாக இருப்பதாக நாம் ஏன் பாசாங்கு செய்ய வேண்டும்? ஒரு லட்சாதிபதியின் மகன் ஒரு ஸ்தாபனத் தில் உறுப்பினராகச் சேர்ந்து விட்டால், தமது வாழ்க்கைச் செல வுக்குத் தமது லட்சங்களை எதிர்பார்த்துக் கொண்டிராமல், அத்தகைய ஸ்தாபனத்திற்குத் தனது லட்சங்களைத் தருமமாகக் கொடுத்து விட்டு, மற்ற உறுப்பினர்கள் செய்வதைப் போன்றே அவரும் மாதப் படியை வாங்கிக் கொள்ள வேண்டும்.

உங்களுக்கு நான் எடுத்துக் கூற வேண்டிய இன்னுமொரு விஷயமும் இருக்கிறது. இது போன்ற ஸ்தாபனங்கள், கண்டிப் பான விதிகளாலும் கட்டுதிட்டங்களாலும் நிர்வகிக்கப்பட வேண்டும். ஒரு பிரதிக்ஞையோ, ஒழுக்கக் கோட்பாடோ இல்லாத மனிதன், சுக்கான் இல்லாத கப்பலைப் போன்றே ஆவான்.

சிந்துவிலிருக்கும் ஓர் ஊழியருக்கு, மாதம் ரூ. 150-க்குக் குறைவான தொகையைக் கொண்டு வாழ்க்கையை நடத்த முடியவில்லை என்று சொல்லுகிறார்கள். இதை நான் ஒப்புக் கொண்டுவிட முடியவில்லை. நாம் நமது தேவைகளை இயற்கை யல்லாத வகையில் பெருக்கிக் கொண்டிருப்பதால், சிந்துவில் நிலைமை அவ்வாறு இருக்கலாம். ஆனால், இன்னும் அதிகக் குறைவான தொகையைக்கொண்டு வாழ்க்கையை நடத்த

முடியும் என்பதுதான் என் அனுபவம். லாலாஜியின் மக்கள் ஊழியர் சங்கம், கோகலேயின் இந்திய ஊழியர் சங்கம் ஆகியவைகளை, அவற்றை ஆரம்பித்தவர்களின் மகத்தான பெயர்களினுலேயே நாம் அறிகிறோம். ஆனால், வலிய வந்து வேலை செய்யும் ஊழியர்களின் சங்கங்களும் பல இருக்கின்றன. அவற்றில் தனிப்பட்டவர்களுக்குக் கொடுக்கப்படும் படி ரூ. 25-லிருந்து ரூ. 30-க்கு மேல் இல்லை. உத்தகலில் பொதுவாக ரூ. 15 தான் கொடுக்கப்பட்டாலும், சிலருக்கு ரூ. 25 முதல் ரூ. 30 வரை கொடுக்கப்படுகிறது. ஆகையால் இருக்கும் நிலைமையை அனுசரித்து நாம் சமாளித்துக்கொண்டு போக வேண்டும். நம் மக்களின் நிலைமைக்கு ஏற்ற வகையில் நமது தேவைகளையும் நாம் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும்.

—'எங் இந்தியா' - 30—4—1931

## 24

# அகிம்சை ராணுவம்

தொண்டர்களைக்கொண்டே அகிம்சை ராணுவத்தை அமைப்பது காங்கிரஸுக்குச் சாத்தியமாக வேண்டும். அதில் சில ஆயிரக்கணக்கானவர்கள் அல்ல, லட்சக்கணக்கானவர்கள் இருக்க வேண்டும். போலீஸும் ராணுவமும் தேவைப்படும் இடங்களிலெல்லாம், இந்த அகிம்சை ராணுவம் நிலைமையைச் சமாளித்துவிடக்கூடியதாகவும் இருக்க வேண்டும். இவ்விதம் செய்தால், சமாதானத்தை நிலைநாட்டுவதற்காக உயிர் விட்ட ஒரு வீர பசுபதிநாத குப்தாவிற்குப் பதிலாக நூற்றுக்கணக்கானவர்களை உற்பத்தி செய்துவிட நம்மால் முடியும். ஆயுதம் தாங்கிய படையினரைப் போன்றல்லாமல் அகிம்சைப் படையினர், கலக சமயங்களிலேயேயன்றி அமைதி நிலவும் சமயத்திலும் வேலை செய்கின்றனர். கலவரங்களை அசாத்தியமாக்கிவிடும் வகையில் அவர்கள் எப்பொழுதும் ஆக்க வேலைகளில் ஈடுபட்டிருப்பார்கள். சச்சரவிட்டுக்கொண்டு வரும் சமூகத்தினரை ஒன்றுபடுத்துவதற்கான வாய்ப்பை நாடுவதே அவர்களுடைய கடமையாக இருக்கும். சமாதானப் பிரசாரத்தைச் செய்துகொண்டே இருப்பார்கள். தங்கள் பகுதியிலோ, டிவிஷனிலோ ஆண்கள், பெண்கள் முதியவர்கள், குழந்தைகள் ஆகிய தனிப்பட்ட ஒவ்வொருவருடனும் தங்களுக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருக்கும்படிச் செய்வதற்கான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பார்கள். அத்தகைய ராணுவம், எந்த அவசர நிலையையும் சமாளிப்பதற்குக் தயாராக இருக்கும். ஜனக்கூட்டத்தின் ஆவேசம் குறைந்துவிடும்படிச் செய்வதற்கு, அக்காரியத்திற்குப் போதுமான தொகையினர் உயிருக்கும் துணிந்து வேலை செய்ய

வேண்டும். ஒரு சில நூற்றுக்கணக்கானவர்கள், ஆயிரக்கணக்கானவர்களானாலும், அவ்விதம் கலக்கமின்றி உயிர் கொடுத்து விடுவார்களானால், கலவரங்கள் என்பதே பிறகு இல்லாது போய் விடும். சில நூறு ஆண்களும் பெண்களும், வேண்டுமென்று விரும்பி ஜனக்கூட்டத்தின் ஆவேசத்திற்குப் பலியாவது, போலீஸ், ராணுவப் படையை உபயோகத்தையும் விட நிச்சயமாக மலிவானதும் வீரமுள்ளதுமாகும்.

— 'ஹரிஜன்' - 26—3—1938

## 25

# தொண்டர்களுக்கு

கலவரங்கள் போன்றவை நடக்கும்போது தங்களையே தியாகஞ் செய்துகொள்ளுவதற்குத் தயாராக இருப்பதாகவும், தொண்டர்களாகச் சேர விரும்புவதாகவும் அநேகர் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். அப்படி எழுதியிருப்போருக்கு ஒரு யோசனை கூறுகிறேன்: அவர்கள் சக ஊழியர்களாகப் பதிவு செய்துகொண்டு நான் சொல்லிய யோசனைகளை அனுசரித்துப் பயிற்சியை ஆரம்பிக்கட்டும். அவசர நிலைமைக்குத் தங்களைத் தயாராக்கிக்கொள்ளுவது என்பதோடு மாத்திரம் இருந்துவிடாமல், அன்றாட வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் சொந்த, குடும்ப, சமூக, பொருளாதார, ராஜீய, சமய காரியங்களிலும் அவர்கள் தங்களைத் தயாராக்கிக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் தங்கள் சொந்தப் பகுதிகளில் ஏற்படும் அவசர நிலைமையைச் சமாளிக்கத் தயாராக இருப்பவர்களாவர். அவர்கள் வேலை செய்து வரும் இடத்திற்கு நூற்றுக் கணக்கான மைல்களுக்கு அப்பால் நடக்கும் சம்பவங்களில், மறைமுகமாக அல்லாமல், அவர்கள் முயற்சி எடுக்க வேண்டியதில்லை. எடுத்த எடுப்பிலேயே சரியானபடி வேலை செய்யத் தொடங்கிவிட்டால், அந்த ஆற்றல் ஏற்பட்டுவிடும்.

— 'ஹரிஜன்' - 23—4—1938

## 26

# வேண்டிய தகுதிகள்

சத்தியாக்கிரகிகளுக்கு வேண்டிய தகுதிகள் யாவை என்பதைக் குறித்துச் சிந்திக்கும்படி, நான்கு நாள் உண்ணா

விரதம்* என்னைச் செய்திருக்கிறது. இவைகளைக் குறித்து 1921-இல் கவனமாகச் சிந்தித்து நான் எழுதியிருந்த போதிலும், அவை மறக்கப்பட்டுவிட்டன என்றே தோன்றுகிறது.

சத்தியாக்கிரகத்தில் எப்பொழுதுமே எண்ணிக்கை முக்கியம் அல்ல. ஆனால், தரம்தான் முக்கியம். அதுவும், பலாத்காரச் சக்திகள் மேலோங்கியிருக்கையில் இது இன்னும் அதிக முக்கியமானதாகிறது.

மேலும், தீமையைச் செய்கிறவரை சங்கடத்திற்குள்ளாக்க வேண்டும் என்ற நோக்கம் சத்தியாக்கிரகிக்கு எப்பொழுதுமே கிடையாது என்பதையும் மறந்துவிடுகிறார்கள். கோரிக்கை விடுவது, எதிராளி பயப்படும்படிச் செய்ய வேண்டும் என்பதற்காக அன்று. அவரின் மனத்தை மாற்றுவதற்காகவே கோரிக்கை; அது அதற்காகவே இருக்கவும் வேண்டும். தீமை செய்கிறவர் மனமாற்றம் அடையச் செய்ய வேண்டும் என்பதுதான் சத்தியாக்கிரகியின் நோக்கமேயன்றி, அவரைச் சங்கடப்படுத்த வேண்டும் என்பது அல்ல. நாம் செய்யும் காரியங்களில் போலித்தன்மை எதுவுமே இல்லாதபடி சத்தியாக்கிரகி தவிர்ப்பார். அவர் இயற்கையோடும், மனத்தில் கொண்டுள்ள உறுதியான நம்பிக்கையோடும் காரியங்களைச் செய்வார்.

இந்தியாவில் ஒவ்வொரு சத்தியாக்கிரகிக்கும் கீழே கண்ட தகுதிகள் அவசியமானவை என்று கருதுகிறேன். மேலே சொன்னதை வாசகர் மனத்தில் வைத்துக்கொண்டு கவனித்தால் இத்தகுதிகளின் முக்கியத்தை அறியக்கூடும் :

1. சத்தியாக்கிரகிக்குக் கடவுளிடம் ஜீவநம்பிக்கை இருக்க வேண்டும். ஏனெனில், கடவுளைத் தவிர அவருக்கு வேறு கதி இல்லை.

2. சத்தியமும் அகிம்சையுமே தமது தருமம் என்று அவர் நம்ப வேண்டும். ஆகையால், துன்பங்களைத் தாம் அனுபவிப்பதன் மூலம் சத்தியத்தையும் அன்பையும் உண்டாக்க அவர் எதிர்பார்ப்பதால், மனித இயல்பில் நல்லதே உண்டு என்பதிலும் அவருக்கு நம்பிக்கை இருக்க வேண்டும்.

3. தூய வாழ்க்கையை அவர் நடத்தி வர வேண்டும். தமது லட்சியத்திற்காக உயிரையும் தமது உடைமைகளையும்

* ராஜ்கோட் சமஸ்தானத்தில் மக்கள் அடக்கு முறை அட்டூழியங்களுக்கு ஆளாகி அவதிப்பட்டபோது, சிறையில் கைதிகள் கொடுமைப்படுத்தப்பட்டு வந்த போது, காந்திஜி ராஜ்கோட் மன்னருக்கு எழுதினர். அட்டூழியங்களை நிறுத்துமாறு கேட்டுக் கொண்டார். பலனில்லாது போகவே, காந்திஜி 1939 மார்ச்சு 3 ஆம் தேதி அங்கே உண்ணாவிரதமிருந்தார். 7-ஆம் தேதி உண்ணாவிரதத்தை நிறுத்திவிட்டார். இந்த உண்ணாவிரதத்தையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார்.

விடவும் அவர் விரும்புவதோடு, இதற்குத் தயாராகவும் இருக்க வேண்டும்.

4. அவர் வழக்கமாகவே கதர் உடுத்துபவராகவும் நூற்பவராகவும் இருக்க வேண்டும். இந்தியாவுக்கு இது அத்தியாவசியமானதாகும்.

5. அவருடைய புத்தி குழப்பமில்லாதிருப்பதை முன்னிட்டும், புத்தி திடமானதாக இருப்பதற்காகவும் அவர் மதுபானம் செய்யாதவராக இருப்பதோடு, போதை வஸ்துக்களில் எதையும் உபயோகிக்காதவராகவும் இருக்க வேண்டும்.

6. அப்போதைக்கப்போது விதிக்கப்படும் கட்டுதிட்ட முறைகளையெல்லாம் மனப்பூர்வமாக அவர் நிறைவேற்றி வர வேண்டும்.

7. அவருடைய சுயமரியாதையைப் பாதிப்பதற்கென்றே தனியாகச் ஏற்படுத்தப்பட்டதாக இருந்தாலன்றி, எல்லாச் சிறை விதிகளுக்கும் அவர் உடன்பட்டு நடக்க வேண்டும்.

இருக்க வேண்டிய தகுதிகள் இதோடு முடிந்துவிட்டன என்று கருதக்கூடாது. உதாரணத்திற்காகவே இவை கூறப்பட்டிருக்கின்றன.

—'ஹரிஜன்' — 25—3—1939

# 27

# சமாதானப் படைக்கு வேண்டிய தகுதிகள்

சமாதானப் படை ஒன்றை அமைக்கலாம் என்று கொஞ்ச காலத்திற்கு முன்பு யோசனை கூறினேன்; கலவரங்களை, முக்கியமாக வகுப்புக் கலவரங்களைச் சமாளிப்பதில் அப்படையைச் சேர்ந்தவர்கள் உயிரையும் கொடுக்க முன் வரலாம் என்றும் சொன்னேன். போலீஸுக்கும், ராணுவத்திற்கும்கூட பதிலானதாக இப்படை இருக்க வேண்டும் என்பதே நோக்கம். இது மிகைபட்ட ஆசையாகவே தோன்றும். அடையக்கூடிய பலனும் அசாத்தியமானதாக ஆகலாம். என்றாலும் காங்கிரஸ் தனது அகிம்சைப் போராட்டத்தில் வெற்றியடைவதாக இருந்தால், அத்தகைய சந்தர்ப்பங்களில் அமைதியான முறையிலேயே

சமாளிப்பதற்கு வேண்டிய சக்தியையும் அது விருத்தி செய்து கொள்ள வேண்டும்.

எனவே, யோசிக்கப்படும் சமாதானப் படையைச் சேர்ந்த ஒருவருக்கு இருக்கவேண்டிய தகுதிகள் யாவை என்பதைப் பார்ப்போம் :

1. அதில் சேரும் ஆணுக்கோ, பெண்ணுக்கோ அகிம்சையில் உறுதியான நம்பிக்கை இருக்க வேண்டும். கடவுளிடம் உறுதியான நம்பிக்கை இருந்தாலன்றி இது சாத்தியமில்லை. கடவுளின் சக்தியிலும் அவர் கிருபையிலுமின்றி, அகிம்சையோடிருப்பவர் எதையும் செய்துவிட முடியாது. அது இல்லையென்றால், கோபமின்றி, பயமின்றி, திருப்பித் தாக்குவது என்பது இல்லாமல் சாவதற்கு வேண்டிய தீரம் அவருக்கு இருக்காது. எல்லோருடைய உள்ளங்களிலும் கடவுள் வீற்றிருக்கிறார், அவர் இருக்கும்போது பயத்திற்கே இடமில்லை என்ற நம்பிக்கையிலிருந்துதான் அத்தகைய தீரம் உண்டாகிறது. கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பதை அறிந்திருப்பது, எதிராளிகள் என்றோ, குண்டர்கள் என்றோ சொல்லப்படுகிறவர்களின் உயிர்களிடத்திலும் மதிப்பை வைப்பதாகும். மனிதனுள் இருக்கும் மிருகத்தனம் அவனை ஆட்கொண்டு விடும்போது, அவன் சாந்தமடையச் செய்வதற்கான ஒரு ஏற்பாடே யோசிக்கப்படும் இச்சமாதான முறை.

2. இந்தச் சமாதான தூதுவருக்கு, உலகிலுள்ள எல்லா முக்கியமான சமயங்களிடத்திலும் சமமான மதிப்பு வைக்கும் தன்மை இருக்க வேண்டும். இவ்விதம் அவர் ஹிந்துவாக இருந்தால், இந்தியாவில் இருந்து வரும் மற்ற மதங்களையும் மதித்து நடப்பார். எனவே, நாட்டில் அனுசரிக்கப்பட்டு வரும் மற்ற சமயங்களின் பொதுவான கொள்கைகளைப் பற்றிய ஞானமும் அவருக்கு இருக்க வேண்டும்.

3. பொதுவாகப் பார்த்தால், இந்தச் சமாதான வேலையை உள்ளூரிலிருப்பவர்களே அவரவர்கள் ஊர்களில் செய்ய முடியும்.

4. இந்த வேலையைத் தனிப்பட்டும், கோஷ்டியாகச் சேர்ந்தும் செய்யலாம். ஆகையால், துணைக்கு ஆள் வரட்டும் என்பதற்காக யாரும் காத்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. என்றாலும், ஒருவர் அவர் ஊரிலேயே இயல்பாகவே சகாக்களை நாடுவதோடு, உள்ளூர்ப் படை ஒன்றையும் அமைத்துக் கொள்ளலாம்.

5. இந்தச் சமாதான தூதுவர், தமது சொந்த சேவையின் மூலம் பகுதியிலோ, வட்டாரத்திலோ, மக்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளுவார். இதனால் அவர், மோசமான

நிலைமையைச் சமாளிக்க அம்மக்களிடையே தோன்றும்போது, கலவரக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கு முற்றிலும் புதிதான வராகத் தென்படமாட்டார். சந்தேகிக்க வேண்டியவராகவும், விரும்பத்தகாதவர் என்றும் அவர்கள் இவரை நினைப்பதற்கும் இடமிராது.

6. சமாதானத்தைக்கொண்டு வரும் ஒருவர், யாரும் குறை கூறமுடியாத ஒழுக்கமுடையவராக இருப்பதோடு, கண்டிப் பாகப் பாரபட்சமின்றி நடப்பவர் என்று பெயர் பெற்றவராகவும் இருக்கவேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

7. பொதுவாக, வரப்போகும் புயலைப் பற்றிய முன்னெச் சரிக்கைகள் இருக்கின்றன. இவை தெரிந்திருந்தால், கலவரம் ஆரம்பமாகிவிடும் வரையில் சமாதானப் படை காத்திருக்கவேண் டியதில்லை. வரப்போகும் நிலைமையை எதிர்பார்த்தே அதைச் சமாளிக்க அப்படை முயற்சி செய்யும்.

8. இயக்கம் எங்கும் பரவினால், அப்பொழுது முழு நேர ஊழியர்கள் சிலர் இருப்பது நல்லதாகலாம். ஆனால், அப்படி இருக்க வேண்டும் என்பது முற்றிலும் அவசியமானது அல்ல. முடிந்த வரையில் நல்ல, உண்மையான ஆண்களையும் பெண்களை யும் அதிகமாக அதில் சேர்க்க வேண்டுமென்பதுதான் நோக்கம். வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் ஈடுபட்டிருப்பவர்களில், தங்கள் வட்டாரங்களில் இருக்கும் மக்களுடன் தொடர்பு கொள்ளுவதற்கு வேண்டிய ஓய்வும் இருப்பவர்களில், சமாதானப் படையின் உறுப்பினராவதற்குத் தகுதியும் பெற்றிருப்பவர்களைத் தொண்டர்களாகச் சேர்த்தாலே இவை சாத்தியமாகும்.

9. சமாதானப் படையைச் சேர்ந்தவர்கள் என்பதைக் கொஞ்சங்கூடக் கஷ்டமின்றி நாளாவட்டத்தில் எல்லோரும் தெரிந்துகொண்டு விடுவதை முன்னிட்டு, ஆரம்பிக்க உத்தேசிக் கப்படும் படையின் உறுப்பினர்கள் ஒரு குறிப்பிட்ட ஆடையை அணிய வேண்டும்.

இவையெல்லாம் பொதுவான யோசனைகளே. இங்கே கூறப்பட்டிருக்கும் யோசனைகளை அடிப்படையாகக் கொண்டு, ஒவ்வொரு பகுதியும் அதற்கு வேண்டிய அமைப்பு விதிகளைத் தயாரித்துக்கொள்ளலாம்.

வீண் நம்பிக்கை ஏற்பட்டுவிட வேண்டாம் என்பதை முன்னிட்டு ஊழியர்களை நான் எச்சரிக்கை செய்யவே வேண்டும். சமாதானப் படையை அமைப்பதில் நான் எந்தத் தீவிரமான பங்கும் கொள்ளுவேன் என்று நம்பிவிட வேண்டாம். அதற்கு வேண்டிய உடல் நலமோ, சக்தியோ, நேரமோ எனக்கு இல்லை.

தட்டிக் கழித்துவிட நான் துணிய முடியாத வேலைகளைச் சமாளிப்பதே எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. கடிதப் போக்குவரத்தின் மூலமோ, இப்பத்திரிகையின் வாயிலாகவோ வழி காட்டவும், யோசனைகள் கூறவுமே என்னால் முடியும். ஆகையால், இக் கருத்து சரியானது என்று எண்ணுகிறவர்களும், அதற்கு வேண்டிய ஆற்றல் தங்களுக்கு இருக்கிறது என உணருகிறவர்களும், அவர்களே முன்வந்து காரியத்தில் இறங்கட்டும். யோசிக்கப்படும் படைக்கு மகத்தான வாய்ப்புகள் இருக்கின்றன. இதிலடங்கிய கருத்து நடைமுறையில் செய்துவிடக்கூடியவை என்பதை நான் அறிவேன்.

— 'ஹரிஜன்' - 18—6—1938

# 28

# பயிற்சியின் அவசியம்

பொதுஜன சத்தியாக்கிரகத்தை எந்த இடத்திலும், திடீரென்று ஆரம்பிக்கும்படி சமீபத்தில் நான் யோசனை கூறப்போவதில்லை. மக்களிடையே போதுமான பயிற்சியோ, கட்டுதிட்டமோ இல்லை. மக்கள், பொதுவாக ஒன்றிரண்டு சரியான சோதனைகளில் தேறியாக வேண்டும் என்பதிலும் எனக்குக் கொஞ்சமேனும் சந்தேகம் கிடையாது. உடல் பலாத்காரத்தை உபயோகிப்பதில்லை என்பது மாத்திரம் நம் காரியத்திற்குப் போதாது. சரியான சோதனைகள் என்ற இந்த வேலைத் திட்டத்தின் கேந்திரத்தில், நூற்கும் ராட்டையையும் அதன் முழுப் பொருளையும் கொஞ்சமும் தயக்கமின்றி வைக்கிறேன். இதைத் துரிதமாக அனுசரித்து நடப்பார்களானால், இது குறுகிய காலப் பயிற்சியாக இருக்கும். ஆனால், மக்கள் உற்சாகமாக அனுசரித்து நடக்க முன்வராது போவார்களானால், இது நீண்ட காலப் பயிற்சியாகவும் ஆகலாம். நான்கு நிர்மாணத் திட்டங்களைக் கொண்ட *1920*-ஆம் வருட வேலைத் திட்டத்தைத் தவிர, வேறு எந்த வேலைத் திட்டத்தையும் அறியேன். முழு மனத்தோடு மக்கள் இதை மேற்கொள்ளாது போவார்களாயின், அவர்களிடம் அகிம்சை என்பது இல்லை, நான் எண்ணுகிற வகையில் அந்த அகிம்சை இல்லை, இப்பொழுதுள்ள தலைமையில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்பதற்கு இது ஒன்றே எனக்குப் போதுமான சாட்சியமாகும். *1920*-லிருந்து மக்கள் முன்பு நான் வைத்திருக்கும் இதைவிட, நான் பார்க்கக்கூடிய சோதனை வேறு எதுவும் இல்லை. நான் குறிப்பிட்டிருக்கும் கட்டுதிட்டத்தை அனுசரித்து நடக்கும்படிச் செய்வதில், முன்னால் செய்ததைப் போல் கண்டிப்பைத் தளர்த்

தக் கூடாது என்று நான் புதிதாகக் கண்டுகொண்டுள்ள ஒளி எனக்கு அறிவிக்கிறது. சொல்லப்பட்டிருக்கும் நிபந்தனைகள் போதுமான அளவுக்கு நிறைவேற்றப்படும் இடங்களில் சட்ட மறுப்பை ஆரம்பிக்க நான் தெளிவாக ஆலோசனை கூறமுடியும். அந்தச் சட்ட மறுப்பு தனிப்பட்டவர் செய்வதாக இருக்கும். ஆனால், அகிம்சையைப் பொறுத்த வரையில், இதற்கு முன்னால் செய்த பொதுஜன சட்ட மறுப்பைவிட அதிகப் பலனளிப்பதாக இருக்கும். முந்திய இயக்கங்கள், ஓரளவுக்குக் குற்றங் குறைகள் உள்ளவையாகவே இருந்திருக்கின்றன என் பதை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். அதற்காக நான் வருத் தப்படவில்லை. ஏனெனில், அதைவிடச் சிறந்ததும் அப்பொழுது எனக்குத் தெரியாது. தவறுகளை நான் கண்டுகொண்டதும் பின்வாங்கிக் கொண்டுவிடும் புத்திசாலித்தனமும் அடக்கமும் எனக்கு இருந்தது. எனவே, நாட்டு மக்கள் படிப்படியாக முன்னேறியிருக்கிறார்கள். ஆனால், குறிப்பிடப்பட்டிருக்கும் வழி யில் தீவிரமான மாறுதலைச் செய்யவேண்டிய சமயம் வந்து விட்டது.

—'ஹரிஜன்' - 10—6—1939

# 29

# சத்தியாக்கிரகிக்கு உடற்பயிற்சி

அகிம்சைக்குச் சில கடமைகள் அவசியமாகின்றன. பயிற்சி பெற்ற உடலைக்கொண்டு மாத்திரமே அவற்றைச் செய்ய முடியும். ஆகையால், அகிம்சையோடு கூடிய ஒருவருக்கு எந்த விதமான தேகப் ப்யிற்சி இருக்க வேண்டும் என்பதைக் கவனிக்க வேண்டியது மிகவும் அவசியமானதாகிறது.

பலாத்காரத்தைக்கொண்ட ராணுவத்திற்குரிய விதிகளில் மிகச் சில மாத்திரம் அகிம்சைப் படைக்குப் பொருந்தும். பலாத் கார ராணுவம் தன்னிடமிருக்கும் ஆயுதங்களைக் காட்சிக்காக வைத்திருக்காது; ஆனால் நிச்சயமாக அழிக்கும் காரியங்களுக் காகவே அவற்றை வைத்திருக்கும். அகிம்சைப் படைக்கு அத்த கைய ஆயுதங்களால் பயனில்லை. ஆகையால், அதன் வாள்களைக் கலப்பைகளின் கொழுக்களாகவும், ஈட்டிகளைச் செடிகளைக் கத்த ரித்துவிடும் கத்தரிகளாகவும் செய்துகொண்டுவிடும். கொல்லும் ஆயுதங்களாக அவற்றை உபயோகிக்கும் எண்ணமே அதனிடம் இராது. பலாத்காரத்தோடு கூடிய சிப்பாய்க்குச் சுடச் சொல்லிக் கொடுப்பதன் மூலம் பலாத்காரத்தை உபயோகிப்பதில் அவன் பயிற்சியளிக்கப்படுவான். அகிம்சைச் சிப்பாய்க்கோ, இந்தப் பொழுது போக்குக்கு வேண்டிய அவகாசமே இருக்காது.

நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வது, தன் உயிருக்கு ஏற்படக் கூடிய ஆபத்திற்கும் அஞ்சாமல் ஆபத்திலிருப்போரைக் காப்பது, திருடர், கொள்ளைக்காரர் பயமிருக்கும் இடங்களில் காவல் காப்பது, திருடர், கொள்ளைக்காரர்கள் தங்கள் வேலைகளைச் செய்து வருவதை விடும்படித் தூண்டுவதில், அவசியமானல் தன் உயிரையும் விடுவது ஆகியவைகளின் மூலமே அவர் பெறும் பயிற்சியெல்லாம் இருக்கும். அவ்விரு தரத்தினரின் உடையும் வித்தியாசப்படும். பலாத்கார மனிதன், தனது பாதுகாப்புக்காக இரும்புக் கவசத்தை அணிந்திருப்பான். அவனுடைய ஆடை, மக்களை மயக்கும் பகட்டுள்ளதாக இருக்கும். அகிம்சைவாதியின் உடையோ, ஏழைகளின் ஆடைக்கு ஒத்ததாகவும், அடக்கத்தை எடுத்துக்காட்டுவதாகவும், எளிமையானதாகவும் இருக்கும். அவருக்கு வெய்யிலையும் குளிரையும் மழையையும் தாங்குவ தற்குப் போதுமானதாக மாத்திரம் அந்த ஆடை இருக்கும். ஒரு பலாத்கார சிப்பாய், எவ்வளவுதான் கடவுளின் நாமத்தை உச்சரித்து வந்தாலும், அவனுடைய ஆயுதங்களே அவனுக்குப் பாதுகாப்பு. யுத்த தளவாடங்களில் கோடிக்கணக்கில் பணத் தைச் செலவிட அவன் கூசவேமாட்டான். அகிம்சையோடு இருப்பவருக்கு, அவர் கடவுளிடம் வைக்கும் அசைக்க முடியாத பக்தியே ஆரம்பம் முதல் கடைசி வரையில் அவருக்குக் கேடயம். இந்த இருவருடைய மனத்திற்கும், மலைக்கும் மடுவுக்கும் இருப்ப தைப் போன்ற மாறுபாடு உண்டு. பலாத்கார மனிதன், தனது எதிரியை நாசப்படுத்துவதற்கான திட்டங்களைக் குறித்தே சதா சிந்தித்துக்கொண்டிருப்பான். தனது இந்தக் காரியத்தை நிறைவேற்றி வைக்கும்படியும் கடவுளைப் பிரார்த்திப்பான். பிரிட்டிஷ் மக்களின் தேசீய கீதம் இச்சந்தர்ப்பத்தில் கவனிக் கத்தக்கதாகும். மன்னனைக் காக்க வேண்டும், எதிரியின் அயோக்கியத்தனமான தந்திரங்கள் நிறைவேற முடியாத படிச் செய்து எதிரியையும் அழிக்க வேண்டும் என்று அக்கீதம் கடவுளைப் பிரார்த்திக்கிறது. லட்சக்கணக்கான ஆங்கிலேயர்கள், மரியாதையோடு எழுந்து நின்றுகொண்டு உரக்க ஒரே குரலில் இந்தக் கீதத்தைப் பாடுகிறார்கள். கருணையின் சொரூபியே கடவுள் என்றால், அத்தகைய பிரார்த் தனையை அவர் கேட்டுக்கொள்ளவே மாட்டார். ஆனால், அதைப் பாடுவோரின் மனத்தை அது பாதித்துவிடுகிறது. யுத்த காலங்களில் இது அவர்களின் துவேஷத்தையும் கோபத்தையும் உச்ச கட்டத்திற்குக் கிளப்பி விட்டுவிடுகிறது. பலாத்கார யுத்தத்தில் வெற்றி பெறுவதற்கான ஒரு வழி, மக்கள் உள்ளங் களில் எதிரியின்மீது வெறுப்பு கொடூரமாக எரிந்துகொண் டிருக்கச் செய்வதுதான்.

அகிம்சை அகராதியில் வெளி எதிரி என்ற ஒரு சொல்லே இல்லை. ஆனால், எதிரி என்று சொல்லப்படுகிறவனிடம்கூட அகிம்சைவாதியின் உள்ளத்தில் கருணையைத் தவிர வேறு

எதுவுமே இராது. மனதறிந்து கெட்டவனாக இருப்பவன் யாருமே இல்லை என்றும், நல்லது இன்னது கெட்டது இன்னது என்பதைப் பகுத்தறியும் ஆற்றல் இல்லாதவன் எவனும் இல்லை என்றும், அந்த ஆற்றல் முற்றிலும் விருத்தி செய்யப்படுமானால் அது அகிம்சையாக வளர்ந்துவிடும் என்றும் அகிம்சைவாதி நம்புவான். ஆகையால், எதிரி என்று சொல்லப்படுபவனுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து அவனை ஆசீர்வதிக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திப்பான். தன் உள்ளத்திலிருக்கும் காருண்ய ஊற்று என்றும் வற்றாமலிருக்க அருள வேண்டும், சாவை அஞ்சாமல் எதிர் நோக்கும் வகையில் தனது ஒழுக்க பலம் என்றும் வளர்ந்து வர அருள வேண்டும் என்பதே அவன் தனக்காகச் செய்துகொள்ளும் பிரார்த்தனையாக இருக்கும்.

இவ்விதம் இவ்விரு தரத்தினரின் மனங்களுக்குமிடையே மலைக்கும் மடுவுக்கும் உள்ள பேதமிருப்பதைப் போன்றே, அவர்கள் பெறும் உடற் பயிற்சியும் அதே அளவில் வித்தியாசப் படும்.

ராணுவப் பயிற்சி எப்படிப்பட்டது என்பது நமக்கெல்லாம் ஓரளவுக்குத் தெரியும். ஆனால், அகிம்சைப் பயிற்சி இதற்கு வேறான விதத்தில்தான் இருக்க வேண்டும் என்பதைக் குறித்து நாம் எண்ணிப் பார்க்கவே இல்லை. அதோடு இத்தகைய பயிற்சி உலகத்தில் எங்காவது கொடுக்கப்பட்டு வந்திருக்கிறதா என்பதைக் கண்டுபிடிக்கும் சிரத்தையைக்கூட நாம் எடுத்துக்கொள்ளவில்லை. அது முன்னால் கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது, இப்போதும்கூட அரைகுறையான வழியில் கொடுக்கப்பட்டு வருகிறது என்பதே என் அபிப்பிராயம். ஹடயோக சம்பந்தமான பல பயிற்சிகளும் இந்த வகையைச் சேர்ந்தவைகளே. இம்முறையைக்கொண்டு அளிக்கப்படும் உடற் பயிற்சி, உடல் நலனையும், பலத்தையும், சுறுசுறுப்பையும் அளிப்பதோடு வெய்யிலையும் குளிரையும் தாங்கும் சக்தியையும் அளிக்கிறது. இப்பயிற்சிகளின் நுட்பங்களைக் குறித்தும் நன்மைகளைக் குறித்தும் ஸ்ரீ குவலயானந்தஜி விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சி செய்து வருகிறார். இதில் எவ்வளவு தூரம் அவர் முன்னேறியிருக்கிறார் என்பதைக் குறித்தோ, அகிம்சையை லட்சியமாகக் கொண்டே இந்தச் சோதனைகளை அவர் செய்து வருகிறாரா என்பதைப் பற்றியோ எனக்கு எதுவும் தெரியாது. ஹடயோகத்தைப் பற்றி நான் இங்கே குறிப்பிடுவது, இதில் அபிவிருத்திகளை செய்வதற்கு இன்னும் இடமிருக்கிறது என்பதை நான் அறிந்த போதிலும், புராதனமான இந்த அகிம்சைப் பயிற்சி இன்னும் இருந்து வருகிறது என்பதைக் காட்டும் கருத்துடனேயே. இந்தச் சாஸ்திரத்தின் கர்த்தாவுக்கு, ஜனக் கூட்டத்தின் அகிம்சையைப் பற்றிய எண்ணம் இருந்திருக்கிறதா என்பதும் எனக்குத் தெரியாது. தனிப்பட்டவரின் விமோசன

ஆர்வத்தை அடிப்படையாகக்கொண்டவை இப்பயிற்சிகள். மனத்தை அடக்கியாளும் திறனைப் பெறுவதற்காக, உடலைப் பலப்படுத்தி தூய்மையாக்குவதே பல வகையான பயிற்சிகளின் நோக்கம். நாம் இப்பொழுது எண்ணும் பொதுஜன அகிம்சை, எல்லா சமயங்களையும் சேர்ந்த மக்களுக்கும் உரியது. ஆகையால் தயாரிக்கப்படும் விதிகள், அகிம்சையில் நம்பிக்கையுள்ளவர்கள் எல்லோருமே ஏற்றுக்கொள்ளக்கூடியவைகளாக இருக்க வேண்டும். அதோடு அகிம்சை ராணுவத்தைக் குறித்து, அதாவது சத்தியாக்கிரக சங்கத்தை அமைப்பதைப் பற்றி நாம் எண்ணிக் கொண்டிருப்பதால், பழமையை நமது அஸ்திவாரமாகக்கொண்டு புதிதாக நாம் கட்டியே ஆக வேண்டும். அப்படியானால் சத்தியாக்கிரகிக்கு வேண்டிய உடற்பயிற்சியைக் குறித்து யோசிப்போம். சத்தியாக்கிரகிக்கு மன, உடல் ஆரோக்கியம் இல்லையென்றால், பூரணமான பயமின்மையை அடைவதற்கு அவர் தவறிவிடக்கூடும். ஒரே இடத்தில் இரவு பகல் நின்று காவல் புரியக்கூடிய சக்தி அவருக்கு இருக்க வேண்டும். குளிரையோ, வெய்யிலையோ, மழையையோ தாங்க நேர்ந்தாலும், அவர் அதனால் நோயுற்றுவிடக்கூடாது. ஆபத்து மிகுந்த இடங்களுக்குப் போகவும், தீப்பிடித்துக்கொண்ட இடங்களுக்குப் பரிந்தோடவும் அவருக்கு பலம் இருக்க வேண்டும். ஜன நடமாட்டமே இல்லாத காடுகளிலும், மரண பயம் மிகுந்த இடங்களிலும் சுற்றித் திரியும் தைரியம் அவருக்கு வேண்டும். பலமாக அடியுண்டாலும், பட்டினி கிடக்க நேர்ந்தாலும், அவற்றையும்விட மோசமான கஷ்டங்கள் வந்தாலும் முணுமுணுக்காமல் அவர் சகித்துக் கொள்ளுவார். தம் கடமையைச் செய்தாக வேண்டிய இடத்திலிருந்து நகராமல் உறுதியுடன் இருந்து வருவார். உள்ளே யாரும் புக முடியாததாகத் தோன்றும் கலவரங்களுக்கிடையேயும் புகுந்துவிடும் ஆற்றலும் சக்தியும் அவருக்கு இருக்கும். நாற்புறமும் தீயால் சூழப்பட்டுவிட்ட கட்டடத்தின் மேல் மாடியிலிருப்போரைப் பாதுகாக்கக் கடவுளின் நாமாவை உச்சரித்துக்கொண்டே விரைந்தோடுவதற்கு வேண்டிய ஆர்வமும் திறமையும் அவருக்கு இருக்க வேண்டும். பிரவாகத்தில் சிக்கித் தத்தளிப்பவர்களைக் காக்க அதில் குதிப்பதற்கோ, கிணற்றில் விழுந்து முழுகிக்கொண்டிருப்பவரைக் காக்கக் கிணற்றில் குதிப்பதற்கோ வேண்டிய அஞ்சாமை அவருக்கு இருக்க வேண்டும்.

இந்தப் பட்டியலை முடிவின்றிச் சொல்லிக்கொண்டே போகலாம். இவற்றின் சாராம்சமெல்லாம் இதுதான்: ஆபத்திலும் கஷ்டத்திலும் இருக்கும் மக்களைக் காப்பாற்ற விரைந்தோடவும், நமக்கு எவ்வளவுதான் கஷ்டங்கள் ஏற்பட்டபோதிலும் அவற்றை மகிழ்ச்சியுடன் அனுபவிப்பதற்கும் வேண்டிய ஆற்றலை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த அடிப்படையான கொள்கையை ஏற்றுக்கொள்ளுகிறவருக்கு; சத்தியாக்கிர

கிக்கு வேண்டிய உடற் பயிற்சி விதிகளை எளிதாக அமைத்துக் கொள்ள முடியும். கடவுளிடம் நம்பிக்கை வைப்பதே இப் பயிற்சியின் முக்கியமான அஸ்திவாரம் என்பது என் உறுதியான நம்பிக்கை. இது இல்லாது போகுமானால், ஒருவர் பெறும் பயிற்சியெல்லாம் நெருக்கடியான சமயத்தில் ஒன்றுக்கும் உதவாததாகப் போய்விடக்கூடும்.

கடவுளின் பெயரைச் சொல்லக்கூட வெட்கப்படுகிறவர்கள் பலர் காங்கிரஸில் இருக்கிறார்களே என்று கூறி, நான் மேலே கூறியவைகளை யாரும் ஏளனம் செய்துவிட வேண்டாம். சத்தியாக்கிரக சாஸ்திரத்தை நான் அறிந்த வரையிலும், அபிவிருத்தி செய்திருக்கும் வகையிலும், என் கருத்தைக் கூற மாத்திரமே நான் முயற்சி செய்திருக்கிறேன். கடவுளை ஒருவர் என்ன பெயர் கொண்டு அறிவதானாலும் சரி, சத்தியாக்கிரகத்தின் ஒரே ஆயுதம் கடவுள்தான். கடவுள் இல்லை என்றால், பேய்த்தனமான ஆயுதங்களோடுகூடிய எதிராளியின் முன்பு சத்தியாக்கிரகி பலமே இல்லாதவனாவான். உடல் வலிமையின் முன்பு அநேகர் அடி பணிந்துவிடுகிறார்கள். ஆனால், கடவுள் ஒருவரையே தனது பாதுகாவலராக ஏற்றுக்கொண்டிருப்பவர், உலகத்தின் எந்த மகத்தான சக்தியின் முன்பும் தலை வணங்கிவிடாமல் இருந்து வருவார்.

ஒரு சத்தியாக்கிரகிக்குக் கடவுள் நம்பிக்கை இருக்க வேண்டியது எவ்விதம் அத்தியாவசியமோ, அதே போலவே பிரம்மச்சரியத்தில் நம்பிக்கை இருப்பதும் அத்தியாவசியம். பிரம்மச்சரியம் இல்லாவிட்டால், நிராயுதபாணியாக உலகம் முழுவதையும் எதிர்த்து நிற்பதற்கு வேண்டிய பிரகாசமோ, உள் பலமோ அவருக்கு இருக்காது. இங்கே 'பிரம்மச்சரியம்' என்று கூறப்படுவது, ஆண் - பெண் சம்பந்தமாகப் புலனை அடக்கி ஜீவசக்தியைக் கட்டுப்படுத்துவது என்ற ஓர் எல்லைக் குட்பட்டதான பொருளையே. பிரம்மச்சரியத்தைக் குறித்து நான் கூறி வரும் விரிவான விளக்கமாக இது இல்லாதிருக்கலாம். குறைவான ஆகாரத்தை உண்டு, வெளி மருந்துகளை உட்கொள்ளாமல் வாழ விரும்புகிறவர், தனக்கு உடல் வலிமையும் இருக்க வேண்டும் என்று விரும்புவாராயின், அவர் தனது ஜீவசக்தியைக் கட்டுப்படுத்திப் பாதுகாத்துத்தான் ஆக வேண்டும். மனிதன் பெறக்கூடிய மிகப் பெரிய மூலதனம் இதுவே. இதைக் கட்டுப்படுத்திப் பாதுகாக்க முடிந்தவர், அதிலிருந்து எப்பொழுதும் புதிதாக பலத்தைப் பெற்றே வருவார். அறிந்தோ, அறியாமலோ அந்தச் சக்தியை உபயோகித்துவிட்டவர் முடிவில் ஆண்மையற்றவராகிவிடுவார். பலம் வேண்டிய சமயத்தில் அவருக்குப் பலமில்லாது போகும். இந்தச் சக்தியைக் கட்டுப்படுத்திப் பாதுகாப்பது எப்படி என்பதைக் குறித்து நான் அடிக்கடி எழுதி வந்திருக்கிறேன். நான் எழுதி

யிருப்பவைகளை வாசகர் படித்து, நான் கூறியிருக்கும் யோசனை களை அனுசரிக்கட்டும். பார்ப்பதனாலும், தொடுவதனாலும் காம இச்சையை அனுபவிப்பவர், தனது ஜீவ சக்தியைக் கட்டிப் பாதுகாக்க முடியாது. மாமிசப் பாண்டத்தின் மீது காம இச்சை கொண்டு அலைபவனும் அந்தச் சக்தியைக் கட்டுப்படுத்தி வைக்க இயலாது. விதிகளைக் கண்டிப்பாக அனுசரிக்காமல் ஜீவசக்தியைக் கட்டிக் காத்துவிட முடியும் என்று நம்புகிறவர்கள், பிரவாகத்தின் வேகத்தை எதிர்த்துக் களைத்துப் போகாமல் நீந்திவிட முடியும் என்று நம்புகிற வர்களைப் போலவேவெற்றியடைய முடியாது. பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதாகச் சொல்லிக்கொள்ளாமல் கட்டுதிட்டத்தோடு கூடிய இல்வாழ்க்கையை நடத்துகிறவரை விட, உடலை மாத்திரம் கட்டுப்படுத்திக்கொண்டு எண்ணத்தினால் பாவங்களைச் செய் கிறவர் மோசமான நிலையையே அடைவார். ஏனெனில், எண்ணத்தினால் காம இச்சை கொள்ளுபவன் என்றுமே கதி மோட்சமின்றி இருப்பான். அவன் வாழ்க்கை ஒழுக்கக் கேடான தாகவும் பூமிக்குப் பாரமாகவுமே முடியும். அத்தகைய ஒருவன் என்றும் பூரணமான சத்தியாக்கிரகியாக முடியாது. செல்வத்தை யும் புகழையும் நாடி அலைபவரும் அப்படியே சத்தியாக்கிரகி யாகமுடியாது.

ஒரு சத்தியாக்கிரகியின் உடற் பயிற்சிக்கு அஸ்திவாரமே இதுதான். இந்த அடிப்படைக்கு ஏற்ற வகையில் விவரமான பயிற்சி முறையை எளிதில் அமைத்துக் கொள்ளலாம்.

ஒரு சத்தியாக்கிரகியின் உடற் பயிற்சியில் வாள் அல்லது ஈட்டி போன்ற உயிரைக் கொல்லும் ஆயுதங்களுக்கு இடமே இல்லை என்பது, இப்பொழுதாவது தெளிவாகியிருக்க வேண்டும். ஏனெனில், நாம் பார்த்திருப்பவைகளைவிட பயங்கரமான ஆயுதங்கள் இப்பொழுது இருந்து வருகின்றன. தினந்தோறும் புதிது புதிதாகவும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. உண்மை யான அல்லது கற்பனையினாலான பயம் எல்லாவற்றையுமே சமாளித்துவிடுவதற்கான தகுதியை வளர்த்துக்கொள்ள வேண்டிய ஒருவருக்கு, வாள் என்ன பயத்தைப் போக்கிவிட முடியும்? கத்தி விளையாட்டைக் கற்றுக்கொண்டுவிட்டதனால் ஒருவன், எல்லா பயத்தையுமே போக்கிக்கொண்டு விட்டதாக நான் இதுவரை கேள்விப்பட்டதில்லை. மகாவீரரும் மற்றவர் களும் அகிம்சையை மெற்கொண்டார்களென்றால், ஆயுதங்களை உபயோகிப்பதை அறிந்திருந்ததனால் அப்படிச் செய்யவில்லை. ஆனால், ஆயுதங்களை உபயோகிக்கும் ஆற்றல் அவர்களுக்கு இருந்தும், எல்லா பயத்தையும் அடியோடு விட்டொழித்ததனா லேயே அவ்விதம் செய்தார்கள்.

எப்பொழுதும் வாளையே நம்பி வாழ்ந்திருப்பவனுக்கு, அதைத் தூர எறிந்து விடுவது என்பது கஷ்டமானது. கொஞ்சம்

ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தாலே இது விளங்கும். வாளை உபயோகிக்கத் தெரியாதவன், வாளுக்கு அஞ்சமாட்டேன் என்று சொல்லிக்கொள்ளலாம். ஆனல் இப்படிப்பட்டவனுக்கு இருக்கும் அகிம்சையைவிட, வாளின் உபயோகத்தை அறிந்து அதை வேண்டுமென்றே வெறுத்து எறிந்துவிட்டவன், தன் அகிம்சை நீடித்ததாக இருப்பதைக் காணக்கூடும். எனினும், ஒருவர் உண்மையிலேயே அகிம்சையோடு இருப்பதற்கு அவர் முன்னடியே ஆயுதங்களை வைத்திருந்து உபயோகிக்கத் தெரிந்திருக்க வேண்டும் என்று அர்த்தமல்ல. அந்த நியாயத்தைக் கொண்டு சொல்லுவதானல், திருடனே யோக்கியமாக இருக்க முடியும், நோயாளி மாத்திரமே ஆரோக்கியமுள்ளவனுக இருக்க முடியும், காமாந்தகாரனுக இருப்பவனே பிரம்மச்சாரியாக இருக்க முடியும் என்று ஒருவர் சொல்லலாம். உண்மை என்னவென்ருல், பாரம்பரியத்தையொட்டி எண்ணும் பழக்கம் நமக்கு ஏற்பட்டு விட்டதால், அதிலிருந்து வெளிவந்துவிட நம்மால் முடிவதில்லை. பாரபட்சமற்ற வகையில் எண்ணிப் பார்க்க நம்மால் முடியாததால், சரியான முடிவுக்கு வர நம்மால் முடியாமல், மாயவலையில் சிக்கிக்கொண்டு விடுகிருேம்.

எனக்கு அவகாசம் இருக்குமானல், பயிற்சிக்கு ஏற்றதான ஒரு முறையை வாசகருக்கு அளிக்கலாம் என்று நம்பியிருக்கிறேன்.

— 'ஹரிஜன்' - 13—10—1940

# 30

# சத்தியாக்கிரகத்திற்குப் பிரம்மச்சரியம்

சத்தியாக்கிரக தளபதியின் சொல்லுக்குச் சக்தி இருக்க வேண்டும். எல்லையில்லாத ஆயுதங்களைக்கொண்டிருப்பதால் வரும் சக்தி அல்ல அது. ஆனல், தூய வாழ்க்கை, கண்டிப்பான உஷார், இடைவிடாது அனுசரிப்பது ஆகியவைகளினல் ஏற்படும் சக்தியே அது. பிரம்மச்சரியத்தை அனுசரிக்காமல் இதை அடையவே முடியாது. மனிதனல் சாத்தியமான வரையில் இது பூரணமானதாக இருக்க வேண்டும். இங்கே பிரம்மச்சரியம் என்பது, உடலைக் கட்டுப்படுத்திக்கொள்ளுவது என்பது மாத்திரம் அல்ல. இன்னும் அதிக விரிவான பொருளைக் கொண்டது இது. எல்லா உணர்ச்சிகளையும் அடக்குவது என்பதே அதன் பொருள். இதன்படி, ஓர் ஆபாச எண்ணம் வந்தாலும் பிரம்மச்சரியம் கெட்டுவிட்டதாகிவிடும். கோபம் கொண்டு விட்டாலும் பிரம்மச்சரியம் கெட்டு விட்டது என்ருகும்.

உயிரைச் சிருஷ்டிப்பதற்குக் காரணமாயிருக்கும் இந்திரியத்தைக் காத்து அடக்கி, அதை உயரிய காரியத்திற்கு மாற்றுவதனுலேயே எல்லா சக்திகளும் வருகின்றன. இந்திரியத்தை விரயமாக்கிவிடுவதற்குப் பதிலாக அதைக் கட்டுப்படுத்தியும் ஒழுங்குபடுத்தியும் இருந்தால், அது மிக உயர்வானதைச் சிருஷ்டிக்கும் சக்தியாக மாறிவிடுகிறது. இந்த இந்திரியம், தீய எண்ணங்களினுலும், சிதறும் ஒழுங்கற்ற விரும்பத்தகாத எண்ணங்களினுலுங் கூட, நாம் அறிந்தும் அறியாமலேயும், தொடர்ந்து விரயமாகிக் கொண்டிருக்கிறது. எல்லாப் பேச்சுக்கும் செயல்களுக்கும் எண்ணமே வேராக இருப்பதால், எண்ணத்தை ஒத்த தரமுடையதாகவே பேச்சும் செயல்களும் இருக்கும். எனவே, சரியானபடி கட்டுதிட்டங்களுக்கு உட்படுத்தப்பட்ட எண்ணமே உயர்ந்த சக்தி வாய்ந்ததாக ஆவதோடு, அதுவே தானே செயல்படுவதாகவும் ஆகும். உள்ளத்தின் மௌனமான பிரார்த்தனைக்கு அதுதான் பொருள் என்று எனக்குத் தோன்றுகிறது. கடவுளின் பிம்பமாகவே மனிதன் இருக்கிருன் என்ருல், அவன் தனக்கு அளிக்கப்பட்டிருக்கும் ஓர் எல்லைக்கு உட்பட்ட துறையில் ஒரு காரியத்தில் உறுதி கொண்டுதான் ஆக வேண்டும்; அது நிறைவேறியும் விடும். அத்தகைய சக்தி, ஓட்டையிருக்கும் குழாய்க்குள்ளிருக்கும் நீராவிக்கு எப்படி சக்தி இருக்காதோ, அதே போல தனது இந்திரியத்தை விரயப்படுத்திவிடுகிறவனுக்கும் இருக்க முடியாது. சந்ததி விருத்திக்கு என்று அல்லாமல் ஆண்—பெண் சேர்க்கையில் ஈடுபடுவது, இந்திரியத்தை விரயமாக்குவதற்குச் சரியான, மோசமான உதாரணம். இதனுலேயே இது விசேஷமாகவும் நியாயமாகவும் கண்டனத்திற்குள்ளாகிறது. ஆனுல், அகிம்சை நடவடிக்கைக்காக மனித வர்க்கத்தில் ஏராளமானவர்களைத் திரட்டி ஒழுங்குபடுத்த வேண்டியிருக்கும் ஒருவர், நான் விவரித்திருக்கும் பூரணமான கட்டுதிட்டத்திற்காக முயற்சி செய்ய வேண்டியிருப்பதோடு, உண்மையில் அதை அவர் அடைந்தே ஆக வேண்டும்.

கடவுளின் அருள் இருந்தாலன்றி இக்கட்டுதிட்டத்தை அடைந்து விடவே முடியாது. கீதையின் இரண்டாவது அத்தியாயத்திலிருக்கும் ஒரு சுலோகம் வருமாறு கூறுகிறது:

"ஒருவன் பட்டினி விரதமிருக்கும்போதோ, அல்லது குறிப்பிட்ட ஒரு புலன் பட்டினியாகிவிடும்போதோ புலனுணர்ச்சிகள் அப்போதைக்குச் செயலில்லாது இருக்கின்றன. ஆனுல், கடவுளை நேருக்குநேராக ஒருவன் கண்டாலன்றி, புலன் நுகர்ச்சி ஆர்வம் மாத்திரம் போவதில்லை."* அடக்கும் இக்காரியம்

---

*விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின :
ரஸவர்ஜம் ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே
— கீதை, அத்தியாயம் 2 — சுலோகம் 59

யந்திரம் போன்றதோ, தாற்காலிகமானதோ அன்று. ஒரு முறை அடைந்துவிட்டால் பிறகு இது போய்விடுவதே இல்லை.

- 'ஹரிஜன்' -23—7—1938

# 31

# கட்டுதிட்டம் - சத்தியாக்கிரகமும் ராணுவமும்

அப்போதைக்கப்போது தனது போர்த் திட்டங்களை மாற்ருத, தனது உத்தரவுகளில் கடைசி நேரத்தில் மாறுதல்களைச் செய்யாத ஒரு தளபதியை நான் கண்டதே இல்லை. போரில் ஈடுபட்டிருக்கும் சாதாரண சிப்பாய்க்கு, இந்தத் திட்டங்களைப்பற்றி எதுவுமே தெரியாது. உண்மையில், தளபதியைத் தவிர வேறு யாருக்கும் தெரியாத வகையில் திட்டங்கள் அவ்வளவு ரகசியமாக வைக்கப்படுகின்றன. இதனுல்தான் டென்னிஸன், "ஏன் என்று காரணத்தைக் கேட்பது அவர்கள் வேலை அல்ல, பதில் சொல்ல வேண்டியதும் அவர்கள் வேலை அல்ல; செய்வதும் சாவதுமே அவர்கள் வேலை" என்ற சிரஞ்சீவியான வாக்கியங்களை எழுதினர். ஆனல், இந்தச் சொற்கள், நீங்கள் ஏற்றுக் கொள்ளுவதானல், சாதாரண ராணுவத்தை விட ஒரு சத்தியாக்கிரகப் படைக்குத்தான் அதிகப் பொருத்தமானவை. ஏனெனில், ஒரு ராணுவத்தின் தளபதி, ஒவ்வொரு நாளும் மாறுபடும் நிலைமைக்கு ஏற்ருற் போல தனது திட்டங்களையும் மாற்றிக் கொள்ளுவார். அனுசரிக்கும் போர்த் தந்திரம், எதிரியின் தந்திரத்தில் ஏற்படும் மாறுதல்களைப் பொறுத்திருக்கிறது. சத்தியாக்கிரகத் தளபதியோ, தனது அந்தராத்மாவின் குரலுக்குப் பணிந்து நடக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில், வெளியிலிருக்கும் நிலைமை எதுவாஞலும், அதற்கும் மேலாக அவர் தன்னைத் தானே விடாமல் சோதித்துக் கொள்ள வேண்டியிருப்பதோடு, தன் உள்ளுக்குள்ளிருந்து வரும் ஆக்ஞைகளையும் கேட்டுக் கொள்ளுகிருர். ஆனல், சத்தியாக்கிரகம், ராணுவப் போர் ஆகிய இரண்டிலுமே சிப்பாயின் நிலைமை அநேகமாக ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. அவனுக்கு ஓய்வு என்பதே இல்லை. தான் எங்கே போக வேண்டியிருக்கும் என்பதைப் பற்றிய நிச்சயமும் அவனுக்கு இல்லை. அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்ததெல்லாம், அதிகக் கஷ்டங்களுக்கும் சாவுக்கும் தயாராக இருக்க வேண்டும் என்பதே. கட்டுதிட்டத்திற்கு உட்பட்டு நடப்பதாகவும், தளபதியின் ஆக்ஞைக்குப் பணிந்து நடப்பதாகவும் சிப்பாய் அளித்த வாக்குறுதி, போர் நிறுத்தப்பட்டிருக்கும்

சமயத்திலும் அமலில் இருந்து வரும். ஆனால், இத்தகைய கட்டு திட்டம் இருக்க வேண்டும் என்று நான் கேட்கவில்லை. என்னுடைய சக ஊழியர்கள் தங்களுடைய ஹிருதய பூர்வமாகவும், பகுத்தறிவுக்கு இணங்கவும் என்னை ஆதரிக்க வேண்டியதன் அவசியத்தை உணரும்படிச் செய்ய நான் எப்பொழுதும் முயன்று வந்திருக்கிறேன். எப்பொழுதும் அவ்வாறே செய்தும் வருவேன். ஆனால், எங்கே உங்களால் பின்பற்ற முடியவில்லையோ, அங்கே உங்களுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். சாதாரண யுத்தத்தில் ஒரு சிப்பாய், ஒரு காரியம் ஏன் என்று ஆராய்ந்து கொண்டிருக்க முடியாது. நம் போராட்டத்திலோ, ஒரு காரியம் சரியா, தப்பா என்று ஆய்ந்தறியப் போதுமான வாய்ப்புகள் இருக்கின்றன. ஆனால், இதற்கு ஓர் எல்லை இருக்க வேண்டும். உங்களுக்குத் திருப்தி ஏற்படும் வரையில் நீங்கள் விவாதித்துக் கொண்டே இருப்பீர்களானால், உங்களுக்குத் திருப்தி ஏற்படவில்லையென்றால், உங்களுக்குள்ள நம்பிக்கைக்கே நீங்கள் திரும்பிவிட வேண்டும்.

'ஹரிஜன்' -10—6—1939

# 32

# ஆரம்பத்தில் கண்டறிந்த உண்மைகள்

[தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம், மகாத்மா நடத்திய முதல் போராட்டம். அப்போரார்ட்ட வரலாற்றைக் காந்திஜி பின்னால் 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற தனி நூலாக எழுதினார். சத்தியாக்கிரகத்தின் தத்துவம், அதில் அடைந்த அனுபவம், கட்டுதிட்டம், உறுதி ஆகியவற்றின் அவசியம் ஆகிய அநேக விஷயங்களைக்குறித்து அப்போராட்ட காலத்தில் தாம் கண்டறிந்த உண்மைகளை அச்சத்தியாக்கிரக வரலாற்று நூலில் ஆங்காங்கு குறிப்பிட்டிருக்கிறார். அவையெல்லாம், சேகரித்துத் தொகுத்துக் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

''ஒரு சத்தியாக்கிரகப் போராட்டம் வெளி உதவியை வெகுவாக நம்பியிருப்பதன்று. உள் பரிகாரங்களே அதிகப் பயனைத் தரும்."



"பரிசுத்தமான இயக்கங்களின் தலைவர்கள், யோக்கியமாகப் போராடக் கூடியவர்களே அதில் சேரும்படி பார்த்துக்

கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் எவ்வளவு ஜாக்கிரதையுடன் இருந்தபோதிலும், விரும்பத் தகாதவர்கள் அதில் சேராமல் இருக்க எப்படித் தடுத்துவிட முடியும்? எனினும், தலைவர்கள் பயமற்றவர்களாயும் உண்மையானவர்களாயும் இருப்பின், அவர்களையும் அறியாமல் விரும்பத்தகாதவர்கள் இயக்கத்தில் வந்து கலந்த போதிலும், இயக்கத்துக்கு அது முடிவில் கெடுதி விளைவித்துவிடாது."



"சாதாரணமாகத் தண்டனையைப் பற்றிய பயமே, மக்களைக் கட்டுதிட்டங்களுக்குப் பணியும்படி செய்கிறது. இதில் சத்தியாக்கிரகிக்கும் மற்றவர்களுக்கும் வித்தியாசம் இருக்கிறது. சத்தியாக்கிரகி, ஒரு கட்டுப்பாட்டிற்குத் தானாகவே உட்படுகிறானேயன்றி, தண்டனை பயத்தால் அன்று. சமூகத்திற்கு அது நல்லது என்ற உணர்ச்சியால்தான் உட்படுகிறான்."



"மரணம், அனைவருக்கும் ஆண்டவன் விதித்துள்ள முடிவாகும். நோயால் அல்லது மற்ற காரணங்களால் இறப்பதை விட, ஒரு சகோதரனுடைய கையால் மாள்வது எனக்கு வருத்தம் தராது. இந்நிலையில் என்னைக் கொன்றவன் பேரில் எனக்கு வெறுப்பும், கோபமும் தோன்றாமலிருந்தால், அது எனக்கு நிரந்தர நன்மையை உண்டாக்கும். என்னைக் கொன்றவனும் பின்னால், முற்றிலும் களங்கமே இராத என் மனத்தை உணருவான்."



"போராட்டம் நடந்து கொண்டிருந்த நாட்களில் உண்டான கஷ்டங்கள், நமக்கும் நம்முடைய பகைவனுக்கும் உள்ள தொடர்பைப் பற்றியவை. அவற்றைச் சுலபமாக வென்றுவிடலாம். ஏனென்றால், எல்லோருக்கும் பொதுவான ஆபத்தைச் சமாளிப்பது எப்படி என்பதே முக்கியமாகி விடுவதால், நமக்குள்ளே இருக்கும் வேற்றுமைகள், பயங்கரமான பூசல்கள் யாவும் ஒதுக்கி வைக்கப்படுகின்றன அல்லது அவற்றிற்கு முக்கியத்துவம் இல்லாமற் போய் விடுகிறது. ஆனால், போராட்டம் முடிவடைந்ததும் உள்ளே புகைந்து கொண்டிருக்கும் பொறாமைகள் மறுபடியும் வெளிப்பட்டுவிடுகின்றன, எதிரிக்கும் நமக்குமுள்ள வேறுபாடுகளில் நல்லபடியான முடிவுக்கு வந்துவிட்டாலும், பலர் ஒப்பந்தத்தில் சுலபமாகக் குற்றங் குறைகளைக் காணும் வேலையில் இறங்குகிறார்கள். ஒரு ஜனநாயக அமைப்பில் எல்லோருடைய கேள்விகளுக்கும், அவர்கள் பெரியோராயினும்

சிறியோராயினும், பதில் தருவதுதான் முறை. நண்பர்களிடையே உண்டாகும் போராட்டங்களையும், தவருன கருத்துக்களையும் தீர்க்க முயலும்போது ஒருவருக்குக் கிடைக்கும் படிப்பினை, ஓர் எதிரியுடன் போராட நேரும் போதுகூடக் கிடைப்பதில்லை. எதிரியுடன் போராடும் போது ஒருவிதமான போதையும், உற்சாகமும் உண்டாகின்றன. ஆனால், நண்பர்களுக்கிடையே வித்தியாசங்களும் தவருன கருத்துக்களும் உண்டாவது அபூர்வமாக எப்பொழுதோ ஏற்படுகிற விஷயமாகையால், அவை மிகவும் துன்பம் தருவனவாக இருக்கின்றன. ஆயினும், அந்த மாதிரி சந்தர்ப்பங்களில்தான் ஒருவருடைய உறுதி உண்மையான சோதனைக்கு உள்ளாகிறது. என்னுடைய அனுபவம், எவ்வித விதி விலக்குமின்றி அப்படித்தான் இருந்திருக்கிறது. அத்தகைய கடுஞ் சோதனைகளைக் கடந்து வந்தபோதுதான், ஆன்மிக விஷயங்களில் பெரிய பலன்களை அடைந்திருக்கிறேன் என்று நம்புகிறேன். போராட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தபோது அதன் உண்மையான தன்மையை உணராத பலர், ஒப்பந்தம் ஏற்பட்ட காலத்திலும் அதற்குப் பிறகும் அதை முற்றிலும் புரிந்துகொண்டனர்."



"இயக்கத்தின் பலன் இயக்கத்திலேயே அடங்கியிருப்பது என்பதே சத்தியாக்கிரகத்தின் தன்மையாகும். தன்னுதவி, தியாகம், கடவுளிடம் பக்தி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது சத்தியாக்கிரகம். சுத்தமான மனத்துடன் செய்யப்படும் எல்லா வேலைகளும், பயனை அளித்தே தீரும். அவற்றின் பலன் நம் கண்களுக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாது போனாலும் சரி, இந்த நம்பிக்கை சத்தியாக்கிரகி என்ற வகையில் எனக்கு உண்டு. கடைசியாகவும் முக்கியமாகவும், சத்தியத்தோடு கூடிய எல்லா இயக்கங்களும், தாமாகவே எல்லா வகையிலும் களங்கமற்றதும் தன்னலமற்றதுமான உதவியைத் தம்முள் ஐக்கியமாக்கிக்கொள்ளுகின்றன. இது தெளிவாகவில்லை என்ருல், மீண்டும் இதை நான் தெளிவாக்க விரும்புகிறேன். போராட்டத்தின்போது, ஐரோப்பிய ஆதரவைச் சம்பாதிப்பதற்காக எடுத்த முயற்சி, அதை முயற்சி என்று கொள்ளும் பட்சத்தில், சத்தியத்தை விட்டுப் பிறழாமல் சத்தியத்தையே கடைப்பிடிக்கும் முயற்சியே என்று சொல்ல வேண்டும். வேறு விதமான முயற்சி எதுவும் எடுக்கப்படவில்லை. இயக்கம் ஐரோப்பிய நண்பர்களைக் கவர்ந்ததென்ருல், அதன் இயல்பான சக்தியே அதற்குக் காரணமாகும்."



"மரணம் என்பது வாழ்க்கையில் ஒரு பெரிய மாறுதலே தவிர வேறெதுவும் இல்லையென்றும், அது எப்பொழுது நேரினும்

வரவேற்க வேண்டுமென்ற கருத்தையும் என் அறிவுக்கு எட்டிய வாறு ஒப்புக்கொண்டு வந்திருக்கிறேன். மரண பயம் உட்பட எல்லா பயங்களேயுமே என் மனத்திலிருந்து அடியோடு ஒழித்து விடுவதற்காகப் பெருமுயற்சியை யோசித்தே செய்திருக்கிறேன். ஆயினும், பல நாட்களாகக் காணமலிருந்த ஒரு நண்பனைச் சந்திக்கப் போகிருேம் என்ற நினைப்பு ஒருவருக்கு எந்தவித ஆனந்தத்தை அளிக்குமோ அதே போன்ற மகிழ்ச்சி, வரப்போகும் மரணத்தைப் பற்றி நினைக்கும்போது, பல சந்தர்ப்பங்களில் என் வாழ்க்கையில் ஏற்படவில்லை என்பது என் நினைவுக்கு வருகிறது. பலத்துடன் இருக்க வேண்டும் என்று எண்ணும் மனிதன், என்னதான் முயற்சிகளைச் செய்தாலும் பல சமயங்களிலும் பல வீனமாகவே இருக்கிருன். புத்தியளவில் நின்று உள்ளத்தின் ஆழத்தில் ஊடுருவாத அறிவு, வாழ்க்கை அனுபவங்களின் நெருக்கடியான சமயங்களுக்குப் பயனற்றுப் போகிறது. மேலும், ஒருவர் வெளியிலிருந்து உதவியைப் பெற்று அதை ஏற்றுக் கொண்டு விடும்போது, உள்ளுக்குள்ளிருந்த ஆன்ம பலம் ஆவியாகப் பறந்துவிடுகிறது. ஆகையால், அத்தகைய மயக்குகளுக்கு உள்ளாகாமல் சத்தியாக்கிரகி எப்பொழுதும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.''



"பலாத்காரமான குழப்பங்களைப் பாகுபடுத்திப் பார்க்கும் பொழுது பல சமயங்களில், அவை அடிப்படையில் ஆதாரம் இல்லாதவைகளாகவே ஆகிவிடுகின்றன. அதுபோல், அவை அநேகமாகத் தாற்காலிகமானவையாகவும் இருக்கின்றன. ஆயினும், பலாத்காரத்தைக் கண்டதும் நாம் தைரியத்தை இழந்து விடுவதால், இன்று உலகில் அது ஒரு சக்தியாக இருக்கிறது. ஆனல், இதைப் பற்றி நாம் அமைதியாக ஆலோசித்தோமானல், அப்படி பயப்படுவதற்கு எந்தவிதக் காரணமும் இல்லை என்பது புலனகும்."



"என்னைப் பொறுத்தவரையில், சத்தியாக்கிரக மார்க்கத்தில் சென்று கொண்டிருக்கும்போதே, அதாவது சத்தியத்தைப் பின்பற்றும்போதே, தான் தேடாமலே மரணத்தை அடைவதை விடச் சிறந்தது வேறு எதுவும் ஒரு சத்தியாக்கிரகிக்கு இருக்க முடியாது. பகைமைக்கே இடம் அளிக்காததும், தன்னிடத்தில் உறுதியைக் கைவிடாததும், மற்றவர் உதவியை எதிர்பார்த்து ஒருவர் நிற்க வேண்டிய அவசியம் இராததும், ஒரு வீரன் இறந்துபடினும் அவனுடைய மரணம் சோர்வை உண்டாக்குவதற்குப் பதிலாகப் போராட்டத்தை இன்னும் வலுவாக்கும் வகையில் எல்லோருமே தலைவர்களாகவும், எல்லோருமே தொண்டர்களாகவும் காரியங்களை நடத்துவதுமான சத்தியாக்

கிரக இயக்கம் போன்ற ஒரு போராட்டத்தில்தான் உண்மை இருக்க முடியும்."



"சத்தியாக்கிரகத்தின் தூயதும், அடிப்படையானதுமான தன்மை இத்தகையது: அதன் உண்மையை நாம் நடைமுறையில் உணர்வதில்லை. ஏனெனில், நம்மில் எவரும் துவேஷத்தை விட்டொழிக்கவில்லை. நடைமுறையில் அனுசரிப்பதில் சத்தியாக்கிரக ரகசியத்தை எல்லோரும் புரிந்துகொள்ளவில்லை. பலர் சுயபுத்தியின்றி ஒரு சிலரைப் பின்பற்றிவிடுகின்றனர். மேலும் டால்ஸ்டாய் கூறியபடி, சத்தியாக்கிரகக் கொள்கையைப் பொதுஜன அல்லது ஒரு கூட்டத்தினர் இயக்கமாக அனுசரிக்கப்பட்ட முதல் முயற்சியே டிரான்ஸ்வால் போராட்டம். முற்றிலும் பொது மக்களைக்கொண்ட சத்தியாக்கிரக இயக்கம், முன்னால் நடந்திருப்பதற்குச் சரித்திரச் சான்று இருப்பதாக எனக்குத் தெரியாது. இதில் சரித்திரம் பற்றிய அறிவு எனக்குக் குறைவாகையால், இவ்விஷயமாக எவ்விதத் திட்டமான முடிவுக்கும் நான் வருவதற்கில்லை. ஆனால், சரித்திர மேற்கோள்களைக் கொண்டு நாம் செய்ய வேண்டியது எதுவுமில்லை. சத்தியாக்கிரகத்தின் அடிப்படைக் கொள்கைகளை நாம் ஒப்புக்கொள்ளும்போது, அதன் விளைவுகள் என்று நான் விவரித்துள்ளவை, பகலை இரவு தொடர்வதைப் போல் கண்டிப்பாகத் தொடர்வதைக் காணலாம். இதைப் பின்பற்றுவது கடினம் அல்லது முடியாத காரியம் என்று கூறி, மதிக்கவொண்ணாத இந்தச் சக்தியை நிராகரித்துவிடுவது சரியாகாது. உலகில் பல்லாயிரக்கணக்கான வருடங்களாக மிருக பலமே ஆட்சி செய்து வந்திருக்கிறது. அதன் விளைவுகளை மனித சமுதாயம் அனுபவித்து வந்திருப்பது எவருக்கும் தெளிவாகிய விஷயம். எதிர்காலத்தில் அதனால் எந்த நன்மையும் வரக்கூடுமென்பதற்கான நம்பிக்கையும் இல்லை. இருளிலிருந்து ஒளி பிறக்குமேயானால், பகைமையிலிருந்து அன்பும் வெளிப்பட முடியும்."



"நினைத்தபொழுதெல்லாம், கண்ட சந்தர்ப்பங்களிலெல்லாம் சத்தியாக்கிரகம் செய்வது துராக்கிரகமாகிவிடும். தனக்குள்ள சக்தியைத் தெரிந்துகொள்ளாமல் எவரர்வது சத்தியாக்கிரகத்தை மேற்கொண்டு பிறகு தோல்வியுற்றால், அவர் தம்மை இழிவாக்கிக் கொள்வதுடன், நிகரற்ற ஆயுதமாகிய சத்தியாக்கிரகத்தைத் தம் மடமையால் இகழ்ச்சிக்குக் கொண்டு வந்துவிட்டவருமாவார்."



"இருபது அடி உயரத்தில் கட்டிய கயிற்றின் மேல் நடப்பவன், கவனத்தை எல்லாம் கயிற்றின் மீதே செலுத்த வேண்டும். அப்படிச் செய்யும்போது அவன் சற்றுப் பிசகிப் போனாலும், அவன் விழுவது எந்தப் பக்கமாயிருந்தாலும், அவனுக்குக் கிட்டுவது மரணந்தானே! தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகத்தைப் பற்றி எனக்கு ஏற்பட்ட இந்த எட்டு வருட அனுபவம், கயிற்றின்மீது நடப்பவனைவிட, முடியுமானால் அதிகமாகவும், ஒரு சத்தியாக்கிரகி தன் நினைவை ஒரே குறியில் நிறுத்த வேண்டுமென்பதை உணர்த்தியிருக்கிறது."



"பெருக்கல் விதி எல்லா நேர்மையான போராட்டத்திற்கும் பொருத்தமாகும் என்பதை என்னுடைய அனுபவம் கற்பித்திருக்கிறது. ஆனால், சத்தியாக்கிரகத்திலோ அது ஒரு மாறாத அடிப்படை உண்மையாகிவிடுகிறது. கங்கை ஆறு போகப் போக, பல கிளை நதிகள் அதனுள் பாய்கின்றன. ஆகவே, நதி முகத்துவாரத்தில் மிகவும் அகலமாகி, இரு கரையும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. நதியில் படகில் செல்லும் ஒருவருக்கு அது எங்கே முடிகிறது, கடல் எங்கே துவங்குகிறது என்று தெரிந்து கொள்ளவும் முடிவதில்லை. அதேபோல, சத்தியாக்கிரகப்போராட்டம் முன்னேறும்பொழுது, மற்ற பல சக்திகள் அதன் பெருக்கை அதிகரித்துவைப்பதால் அது நோக்கிச் செல்லும் பலன்களிலும் தொடர்ந்த வளர்ச்சியே உண்டாகின்றது. இது உண்மையாகவே தவிர்ப்பதற்கரியது. சத்தியாக்கிரகத்தின் முதல் கொள்கைகளுடன் இது இணைக்கப்பட்டதாகும். ஏனெனில், சத்தியாக்கிரகத்தில் குறைந்த அளவே அதிக அளவுமாகும். அதுவே மேற்கொண்டும் குறைக்க முடியாத அளவாக இருப்பதால், பின்வாங்குவது என்பதே அதில் இல்லை. முன்னேறுவது ஒன்றே அதற்குரிய சலனமாகும். மற்றப் போராட்டங்களில் நேர்மையாக இருக்கும்பொழுதுகூட, வேண்டப்படும் உரிமைகள், பின்னால் குறைத்துக்கொள்ளக்கூடியவாறு சற்று அதிகமாகவே வைக்கப்படுகின்றன. ஆகவே, பெருக்கல் விதி அவற்றுக்கெல்லாம் அடியோடு பொருத்தமாவதில்லை. ஆனால், சத்தியாக்கிரகத்தைப் போல் மிகக் குறைந்த அளவே மிக உயர்ந்த அளவாகவும் இருக்கும் போராட்டத்தில், பெருக்கல் விதி எங்ஙனம் வேலை செய்கிறது என்பதை நான் விளக்க வேண்டும். கங்கை நதி, அதில் சேரும் கிளை ஆறுகளைத் தேடிக்கொள்ளுவதற்காகத் தன் வழியை விட்டு விலகுவதில்லை. அதைப் போலவே சத்தியாக்கிரகியும் கத்தி முனை போன்று கூர்மையான தன் பாதையைவிட்டு விலகுவதில்லை. ஆனால், கங்கை நதி முன்னேறிச் செல்லச் செல்லக் கிளை ஆறுகள் தாமாகவே கங்கையை அடைவது போல், சத்தியாக்கிரக நதியிலும் நடக்கின்றது."



"ஒரு சத்தியாக்கிரகி, தன்னுடைய கொள்கைக்குத் துரோகம் செய்யாமல் இருந்துகொண்டு தன் வழியில் போய்க் கொண்டிருக்கையில், இடைஞ்சல் குறுக்கிட்டால் அவற்றைப் புறக்கணிக்க முடியாது. எதிராளி, ஒரு சத்தியாக்கிரகி அல்ல. சத்தியாக்கிரகத்தைச் சத்தியாக்கிரகம் எதிர்ப்பது முடியாத காரியம். ஆகவே, குறைந்த அளவு, உயர்ந்த அளவு என்ற எல்லேக்கு எதிராளி கட்டுப்பட்டவனல்ல. எனவே, அவன் விரும்பினுல், புதுப் பிரச்னைகளே எழுப்பிச் சத்தியாக்கிரகியைப் பயமுறுத்த முயற்சிக்கலாம். ஆனுல், சத்தியாக்கிரகி அச்ச மென்பதையே துறந்தவன். சத்தியாக்கிரகத்தின் மூலமே, பின்னுல் நேரிடப் போவதும், முன்னுல் இருந்தவையுமான துன் பங்களே எதிர்த்துப் போராடி, எல்லாக் கஷ்ட நஷ்டங்களிலும் தனது பிடியை விடாமல் இருக்க அது உதவி செய்யுமென்று நம்புகிருன். ஆகவே, சத்தியாக்கிரகப் போராட்டம் எதிராளி யால் நீடிக்கப்படும் பொழுது, எதிராளிதான் நஷ்டம் அடை கிருன். சத்தியாக்கிரகிக்கு லாபம்தான் உண்டாகும்."



"முற்றிலும் மனத் தூய்மையையும் தன்னம்பிக்கையையும் ஆதாரமாகக்கொண்டு சத்தியத்தின் சார்பில் போராடுவதான சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்த, இந்த அல்லது இதைவிடப் பெருவாரியான நன்கொடை மட்டும் போதாது. ஒழுக்கம் என்ற முதல் இல்லாவிட்டால், சத்தியாக்கிரகப் போராட்டம் சாத்திய மில்லாது போகும். மனிதர் வாழாத ஒரு மாளிகை பாழடைந்து காணப்படுவது போல், எவ்வளவு பொருள் படைத்தவனுக இருந்தும் ஒழுக்கமற்றவன் பாழாகிவிடுகிருன்."



"சத்தியாக்கிரகி, தன் தினசரி உணவுக்காகக் கவலேப்பட நேர்ந்தால் அவனே மன்னிக்க வேண்டியதும் அவசியம்தான். தானும் பட்டினியிருந்து, தனது அருமையான மனேவி மக்களேயும் அதே துன்பத்திற்கு உள்ளாக்கிவிட்டு ஓர் போராட்டத்தில் மன மார ஈடுபடுபவர்கள் உலகத்தில் அதிகம் பேர் இருக்க முடியாது."



"ஒரு தூய்மையான போராட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், ஆரம்பத்தில் ஏற்படுத்தியிருந்த குறிக்கோளிலிருந்து, போராட் டத்தின்போது தங்களுக்குப் பலம் அதிகரித்திருந்தாலும் மீறிப் போகக்கூடாது. அதே போல், தங்கள் சக்தி குன்றிப் போவதாக இருந்தாலும், மேற்கொண்ட குறிக்கோளேக் கைவிடவுங்கூடாது."



“ஒரு சத்தியாக்கிரகிக்கு ஒரே ஒரு நோக்கந்தான் உண்டு. அவன் அதிலிருந்து பின்வாங்கவோ, முன்செல்லவோ அல்லது அதைப் பெருக்கவோ, குறைக்கவோ முடியாது.”



“சத்தியாக்கிரகிகள் நிச்சயமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றுண்டு. அவர்களில் ஒருவராகிலும் பளிங்கு போல் தூய்மையுள்ளவராக இருப்பின், அது ஒன்றே அவர்கள் உள்ளத்திலிருக்கும் லட்சியத்திற்கு வெற்றியளிக்கவல்லது. சத்தியம் என்னும் வலிவான அஸ்திவாரத்தின் மேல்தான் உலகம் நிற்கிறது. அசத்தியம் என்பது ‘இல்லாதது’, பொய்மை என்றும், சத்தியம் என்பது ‘இருப்பது’, வாய்மை என்றும் பொருள்படும். ‘அசத்தியம்’ என்பது ‘இல்லாதது’; ஆகையால், அதன் வெற்றிக்கு இடமேயில்லை. சத்தியம் ‘இருப்பது’, ஆகையால் அதை அழிக்கவே முடியாது. இதுதான் சத்தியாக்கிரகக் கொள்கையின் ரத்தினச் சுருக்கம்.”



“எங்களுடைய சமாதான முறைகளைக்கொண்டு தோன்றிய மன உறுதிதான் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு அதிக வேதனையைத் தந்தது. அவர் அப்படிச் சொல்லியும் இருந்தார். சமாதானமாகச் செல்லும் ஒரு மனிதனை எத்தனை நாட்களுக்குத்தான் வதைக்க முடியும்? தாமாகவே இறப்பதற்கு முன்வந்தவர்களை, எப்படிக் கொல்ல முடியும்? மரணத்தை வரவேற்பவரைக் கொல்வதில் உற்சாகம் தோன்றாது. ஆகையால்தான் போர் வீரர்கள் விரோதியை உயிருடன் பிடிப்பதில் மிகுந்த முயற்சி எடுக்கின்றனர். சுண்டெலி பூனையைக் கண்டதும் ஓடவில்லையானால், பூனை வேறு இறைச்சியைத்தான் தேட வேண்டியதாகக் கொள்ள வேண்டும். ஆடுகளனைத்தும் தாமாகவே சிங்கத்தின் எதிரே படுத்துக்கொண்டால், சிங்கம் அவற்றைச் சாப்பிடுவதை நிறுத்த வேண்டிய அவசியம்தான் எழும். சிங்கங்கள் சாத்விக எதிர்ப்பை மேற்கொண்டால், பெரிய வேட்டைக்காரர்கள் சிங்க வேட்டையைக் கைவிட வேண்டியதுதான். அகிம்சை, மனத் திட்பம் ஆகிய இரண்டு பண்புகளையும் ஒருங்கே கொண்டுள்ள போராட்டத்தில் எங்களுக்கு வெற்றி கிடைப்பது திண்ணம்.”



“பொற்கொல்லர் பொன்னை உரைகல்லில் தேய்த்து மாற்றுப் பார்க்கிறார். அதன் சுத்தத்தைப் பற்றித் திருப்தியில்லையெனில், அதை நெருப்பிலிட்டுச் சுத்தியால் அடித்துக் கலப்பு உலோகத்தை அகற்றிவிடுகிறார். அப்புறம் பசும்பொன் மாத்திரம் நிற்கிறது. தென்னாப்பிரிக்காவிலிருந்த இந்தியர்களும் இத்

தகைய சோதனைகளுக்கு ஆளாக வேண்டியிருந்தது. அவர்கள் அடியுண்டார்கள்; துன்பப்பட்டார்கள். சோதனையில் எல்லா நிலைகளையும் கடந்த பின்னரே, அவர்கள் வெற்றியின் சின்னத்தைப் பெற்றனர்.''



''ஒரு யந்திரத்தில், ஒவ்வொரு பகுதிக்கும் அதற்கென்று ஒரு தனி இடம் இருப்பது போல், மனிதரால் ஆன இயக்கத்திலும் ஒவ்வோர் அம்சத்திற்கும் தனித்தனியான இடமுண்டு. எப்படி ஒரு யந்திரம் துரு, தூசி முதலியவற்றால் சிக்கல்படும் போது இயங்குவது கடினமாகுமோ அப்படியே, ஒரு மனித இயக்கத்தையும் தடுக்கக்கூடிய விஷயங்கள் பல உள. நாம் எல்லோரும் இறைவன் திருவுள்ளத்தின் கருவிகளாக மாத்திரம் இருக்கிறோம். ஆதலால், நாம் முன்செல்வதற்கு எது உதவுகிறது, எது நமக்குத் தடையாக நிற்கிறது என்பதைப் பற்றி அடிக்கடி உணர முடிவதில்லை. ஆகவே நாம் கையாளும் முறைகளைப் பற்றிய அறிவோடு திருப்தி அடைய வேண்டியதே. முறைகள் தூய்மையானவையாக அமைந்தால், நாம் அச்சமின்றி முடிவை அதன் போக்கிற்கே விட்டுவிடலாம்.''



"சத்தியாக்கிரகி, தான் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியிலும் தன் எதிராளியின் நிலையை யோசித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறான். இந்த மாதிரியான சுத்த வீரமே சிறந்து நின்ற கணக்கற்ற சந்தர்ப்பங்கள் இருந்தன. கண்ணுக்குப் புலனாகாது போனாலும், அதன் சக்தி மிகுந்த அடையாளம் எங்கும் இருந்தது. அதனால் இந்தியர்க்குரிய மதிப்பும் உயர்ந்து; முடிவில் உடன்படிக்கை ஏற்படுவதற்கான சூழ்நிலையையும் உண்டாக்கியதை நான் பார்க்க முடிந்தது."



''வஞ்சம் தீர்த்துக் கொள்ளுவது என்ற போக்கு சத்தியாக்கிரகத்திற்கு மாறானது. துன்பத்தைத் தரும் பெரிய சங்கடங்கள் ஏற்படும் போது, அமைதியாக இருப்பதுதான் ஒரு சத்தியாக்கிரகிக்கு உகந்தது. அடிப்படைக் கொள்கைகளுக்காக மாத்திரமே சத்தியாக்கிரகி போராடுகிறான்."



''எத்தனை முறை சத்தியாக்கிரகி மோசம் பண்ணப்பட்டாலும், அவநம்பிக்கைக்குரிய சரியான காரணம் இராதவரையில், அவன் தன் எதிராளியை நம்பத்தான் செய்வான். ஒரு சத்தியாக்கிரகிக்கு இன்பத்தைப் போன்றதே துன்பமும். ஆதலால், ஆதாரமற்ற அவநம்பிக்கையினால் துன்பத்தை எண்ணி அவன்

வழி தவறமாட்டான். அதற்கு மாருக, எப்போதும் போல் தன் சுய பலத்திலேயே நம்பிக்கையுடையவனுக இருப்பதால் தன் எதிராளியே துரோகம் பண்ணினுலும் பொருட்படுத்தாமல், பல தடவை மோசடி செய்யப்பட்டிருந்ததையும் எண்ணிப் பாராமல், தொடர்ந்து அவனை நம்பி, அதன் மூலமாகச் சத்தியத்தின் சக்திகளை வலுப்படுத்தி வெற்றியை விரைவில் கொண்டு வருபவனுகவே இருப்பான்.''



'' 'மன்னித்து விடுவது ஒரு வீரனுக்கு அலங்காரம்' என்ற வட மொழி வாக்கியத்தின் ஆசிரியர், சத்தியாக்கிரகிகள் ஒரு போதும், ஒருவருக்கும் தங்களிடம் குற்றம் கண்டு பிடிக்க வாய்ப்புத் தரமாட்டார்கள் என்று அனுபவ வாயிலாக நன்கு உணர்ந்து தான் கூறியிருக்கிருர். அவநம்பிக்கை, பலவீனத்தின் சின்னம். சத்தியாக்கிரகத்தின் பொருள், எதிரியை அழிக்காமல் நம் பக்கம் திருப்புவதாகும். இதற்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாததான எல்லாப் பலவீனத்தையும் அகற்றுவதும், அவநம்பிக்கையை விரட்டுவதும் அவசியமாகிறது."



''ஒரு பொருளைச் சம்பாதித்த முறையைக் கொண்டே, அதை நிலைத்து வைத்துக் கொள்ளவும் முடியுமென்பது இயற்கையின் விதிகளில் ஒன்று. பலாத்கார வழியில் பெற்ற பொருளை, அதே வழியில்தான் காத்துக்கொள்ள முடியும். சத்தியத்தின் மூலம் பெற்றதைச் சத்தியத்தைக் கொண்டே காக்க முடியும். சத்தியத்திஞல் அடைந்ததைச் சத்தியத்தைக் கைவிட்ட பின்பும் வைத்துக்கொள்ள முடியுமென்பதற்கு, சத்தியாக்கிரகத்தில் மாயா சக்தி எதுவும் இல்லை. அது சாத்தியமானதாக இருந்தாலும், சிறிதும் விரும்பத்தக்கதல்ல.''

பகுதி ஆறு

# சம்பாரண், கேடா போராட்டங்கள்

[ஒப்பந்த முறைப்படி இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்கு இந்தியரைக் கூலிகளாக அனுப்பும் முறையைக் காந்திஜி இந்தியாவுக்குத் திரும்பி வந்ததும் எதிர்த்தார். இம்முறையை எதிர்த்து அவர், தென்னாப்பிரிக்காவில் இருந்தபோது 1894-இல் முதன் முதலில் மனுவைத் தயாரித்தார். அம்முறை எப்படி இந்தியத் தொழிலாளரை அரை அடிமைகளான அக்கிரம நிலையில் வைத்திருக்கிறது என்பதைத் தென்னாப்பிரிக்காவில் நேர் அனுபவத்தில் கண்டிருந்ததால், இந்தியாவுக்குத் திரும்பியதும் இம்முறையை ஒழித்தாக வேண்டும் என்பதில் முனைந்தார். ஆனால், அதற்காகச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க வேண்டிய அவசியம் எதுவும் இல்லாமலேயே, ஒரு மசோதாவை நிறைவேற்றியதன் மூலம் அம்முறையை ஒழித்துவிட அரசாங்கம் சம்மதித்தது. இதைக் குறித்து காந்திஜியே கூறியிருக்கும் விவரத்தை, அவருடைய 'சுயசரிதை'யில் 'ஒப்பந்தத் தொழிலாளி முறை ஒழிப்பு' என்ற தலைப்பின் கீழுள்ள அத்தியாயத்தில் காணலாம். ('மகாத்மா காந்தி நூல்கள்' – மூன்றும் தொகுப்பு – 514-19-ஆம் பக்கங்களில் காண்க).

இந்தியாவையே விடுதலை செய்துவிடும் ஆற்றல் வாய்ந்த சத்தியாக்கிரகத்தை, காந்திஜி இந்தியாவில் முதன் முதல் உபயோகித்து வெற்றி கண்டது சம்பாரணிலேயே. பீஹாரிலுள்ள சம்பாரணில் அவுரி சாகுபடி செய்யும் ஏழை விவசாயிகள் தாங்கமுடியாத கஷ்டங்களை அனுபவித்து வருகிறார்கள் என்பதைக் காந்திஜி முதன் முதலில் அறிந்தது 1916-இல் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில் தான். பீகார் விவசாயியான ராஜகுமார் சுக்லா என்பவர் லட்சுமணபுரியில் காந்திஜியைப் பிடித்துக்கொண்டார். தென்னாப்பிரிக்காவில் தொழிலாளரின் நண்பராக இருந்த காந்திஜி, சம்பாரண் விவசாயிகளின் துயரைப் பற்றிய

தீர்மானத்தைக் காங்கிரஸ் மகாநாட்டில் பிரேரிக்க வேண்டும் என்று சுக்லா வற்புறுத்தினர். ஆனல் காந்திஜியோ, அந்த விவசாயிகளின் நிலைமையைப் பற்றிய உண்மை தமக்குத் தெரியாது என்று கூறி மறுத்துவிட்டார். "நிலைமையைப் பார்க்காமல் எந்த அபிப்பிராயமும் நான் கூற முடியாது" என்ருர். தமது சுற்றுப்பிரயாணத்தில் இரண்டொரு நாட்கள் சம்பாரணுக்கும் வருவதாக அப்பொழுது வாக்களித்தார். சுக்லா, காந்திஜியை விடாமல் கூடவே போய் முடிவில் அவர் சம்பாரணுக்கு வருவதற்கு நாளையும் நிச்சயித்து அவரை உடனிருந்து அழைத்துச் சென்ருர்.

சம்பாரணில் என்ன நடந்தது, அங்கே நடத்திய போராட்டம் எவ்விதம் வெற்றிகரமாக முடிந்தது ஆகிய வைகளைக் குறித்து மகாத்மா காந்தி தமது 'சுய சரிதை'யில், 'அவுரிச் சாகுபடி அநீதி', 'சாதுவான பீகாரி', 'அகிம்சையுடன் நேருக்கு நேர்', 'வழக்கு வாபசாயிற்று', 'வேலை முறைகள்', 'என் சகாக்கள்', 'கிராமங்களில் பிரவேசம்', 'கவர்னர் நல்லவராக இருக்கும்போது' ஆகிய எட்டு அத்தியாயங்களில் விவரித்திருக்கிருர். ('மகாத்மா காந்தி நூல்கள்' - 3-ஆம் தொகுப்பு பக்கங்கள் 519-46-இல் இவ் விவரங்களைக் காண்க.) சம்பாரண் போராட்ட சம்பந்தமாகக் காந்திஜியின் 'சுய சரிதை'யில் காணப்படாத அறிக்கை, கடிதங்கள் ஆகியவை மாத்திரம் இங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

## 1

# விவசாயிகள் நிலைமை குறித்துக் காந்திஜி அறிக்கை

[1917 மே 10–ஆம் தேதி காந்திஜி, பீகார் அரசாங்க பிரதம காரியதரிசி ஸ்ரீ மாடைச் சந்தித்து இரண்டு மணி நேரம் பேசிக்கொண்டிருந்தார். இதற்கு முன்பே ஸ்ரீ மாட், சம்பாரண் அதிகாரிகளையும் அவுரித் தோட்ட முதலாளிகள் சிலரையும் பார்த்துப் பேசியிருந்தார். காந்திஜி இதுவரையில் நடத்தியிருந்த விசாரணையைக் கொண்டு வந்திருக்கும் முடிவைத் தெரிவிக்கும் அறிக்கையைத் தமக்கு அனுப்பும்

*படி அரசாங்கப் பிரதம காரியதரிசி கேட்டுக்கொண்டார். அதோடு தமது வக்கீல் நண்பர்கள் தம்முடன் விசாரணையில் கலந்துகொள்ளுவதை நிறுத்திவிடுமாறும் காந்திஜியிடம் கூறினர். மகாத்மாவுடனிருந்து வேலை செய்து வரும் வக்கீல்கள் அதிக விஷமங்களைச் செய்து வருகிறார்கள் என்று அவுரித் தோட்ட முதலாளிகளும் அதிகாரிகளும் அரசாங்கத்திற்கு அறிவித்திருந்தனர். அதன் பேரில் 1917 மே 13-ஆம் தேதி அரசாங்கத்தின் பிரதம காரியதரிசிக்குக் காந்திஜி எழுதிய கடிதமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]*

"ஸ்ரீ மாட் கூறிய யோசனையின் பேரில், சம்பாரண் விவசாயிகளின் நிலைமையைக் குறித்து இதுவரை நடத்தியிருக்கும் விசாரணையைக் கொண்டு நான் வந்திருக்கும் ஆரம்ப முடிவுகளைக் கீழே கொடுக்கிறேன். முதலில் ஒரு விஷயத்தைத் தெரிவித்துக் கொண்டுவிட விரும்புகிறேன். வக்கீல்களை, விசாரணையில் கலந்து கொள்ளாமல் அனுப்பிவிடுவதாக நான் வாக்குறுதி அளிக்க வேண்டும் என ஸ்ரீ மாட் விரும்பியதற்கு நான் உடன்படுவதற்கில்லை. நான் இங்கே வந்ததிலிருந்து, வக்கீல்களைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளப்பட்டு வருகிறேன். இந்தக் கோரிக்கை என் மனத்தை அதிகமாகப் புண்படுத்துகிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்த ஜில்லாவிலிருந்து என்னை வெளியேற்றிவிட வேண்டும் என்ற உத்தரவை வாபஸ் வாங்கிய பிறகு நான் இங்கே இருப்பதால் எந்தத் தீமையும் ஏற்படவில்லை என்றும், என் யோக்கியப் பொறுப்பை ஆட்சேபிக்கவில்லை என்றும், ஆனால் வக்கீல் நண்பர்கள் இருப்பது, 'ஆபத்தான நிலைமை'யை உண்டாக்கி வருகிறது என்றும் என்னிடம் கூறப்படுகிறது. என்னைப் போன்ற ரகத்தினரான உதவியாளர்களை நான் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவதில் என்னை நம்பலாம் என்றால், என் முன்னாலிருக்கும் இக்கஷ்டமான வேலையில் இந்தத் திறமை வாய்ந்த, உண்மையுள்ள, கௌரவமானவர்களுடன் தோழமை கொண்டிருப்பதை ஒரு பாக்கியமாக நான் கருதுகிறேன் என்பதைத் துணிந்து தெரிவித்துக் கொள்ளுகிறேன். இவர்களைக் கைவிட்டுவிடுவது என்பது, என் வேலையைக் கைவிட்டு விடுவது என்பதேயாகும் என்றே எனக்குத் தோன்றுகிறது. இவர்கள் மீது, எனக்குத் திருப்தி ஏற்படும் வகையில் ஏதாவது குற்றம் நிரூபிக்கப்படும் வரையில், அவர்களைக் கைவிடாமலிருப்பதே எனக்குக் கௌரவமாகும். நான் இங்கே இருப்பதோ, என் நண்பர்கள் இங்கே இருப்பதோ 'ஆபத்தான நிலைமை'யை உண்டாக்கும் என்று கூறப்படுவதை ஒப்புக்கொள்ள நான் தயாராயில்லை. ஆபத்து ஏதாவது உண்டு என்றால், தோட்ட முதலாளிகளுக்கும் விவசாயிகளுக்குமிடையே வெறுப்பு அதிகமாக ஏற்படுவதற்குக் காரணமாயிருப்பவைகளி

னாலேயே அந்த ஆபத்து ஏற்பட வேண்டும். இந்தக் காரணங்களை நீக்கிவிட்டால், விவசாயிகளைப் பொறுத்தவரையில் சம்பாரணில் எந்தவிதமான ஆபத்தும் ஏற்படும் என்பதற்கான பயம் எதுவுமே இராது.

"இந்த அறிக்கையின் உடனடியான காரியத்திற்கு இனி வருகிறேன். இதுவரை சுமார் 4,000 விவசாயிகளை விசாரித்து, நன்ருகக் குறுக்கு விசாரணையும் செய்து அவர்களுடைய வாக்கு மூலங்களைப் பதிவு செய்திருக்கிறோம். கிராமங்கள் பலவற்றிற்குப் போய்ப் பார்த்தோம். கோர்ட்டுகள் அளித்திருந்த பல தீர்ப்புகளையும் ஆராய்ந்தோம். இந்த விசாரணையிலிருந்து கீழ்க்கண்ட முடிவுகளுக்கு வரமுடியும் என்பதே என் அபிப்பிராயம்:

"சம்பாரணிலிருக்கும் தொழிற்சாலைகளையும் ஸ்தாபனங்களையும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்; (1) எப்பொழுதுமே அவுரி சாகுபடி செய்யாதவை (2) அவுரி சாகுபடி செய்பவை. அவைகளில்,

"(1) எப்பொழுதுமே அவுரியைச்சாகுபடி செய்யாதவர்களிடமிருந்து 'அப்வாப்' தொகையை நிர்ப்பந்தமாக வசூலித்து வந்திருக்கின்றனர். இம்முறைக்கு இங்கே பல பெயர்கள் இருக்கின்றன.விவசாயிகள் செலுத்தி வந்த பகுதிப் பணத்திற்குச் சமமான தொகை நிர்ப்பந்தமாக வசூலிக்கப்பட்டு வந்தது. இந்த வகையில் பணம் வசூலிப்பது சட்ட விரோதமானது என்று கூறப்பட்டும், அது அடியோடு நிறுத்தப்படவில்லை.

"(2) அவுரியைச் சாகுபடி செய்து வந்த தொழிற்சாலைகள், 'தீன் காத்தியா' முறைப்படியோ, 'குஷ்கி' முறைப்படியோ சாகுபடி செய்து வந்தனர். 'தீன் காத்தியா' முறைதான் எங்கும் அனுசரிக்கப்பட்டு வந்தது. இம்முறையே விவசாயிகளுக்கு அதிகத் துன்பத்தை விளைவித்தது. நாளாகவாக இம்முறையில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. அவுரிச் சாகுபடிக்கு என்று ஆரம்பமான இம்முறை, மற்றும் பல சாகுபடிகளுக்கும் பரவிவிட்டது. ஒரு குறிப்பிட்ட தொகை கொடுக்கப்படுவதை முன்னிட்டு ஒரு விவசாயி, தாம் வைத்திருக்கும் நிலத்தில் இருபதில் மூன்று பகுதியில் கம்பெனி குறிப்பிடும் பயிரைத்தான் சாகுபடி செய்ய வேண்டும் என்பதே 'தீன் காத்தியா' முறை எனக் கூறலாம். இவ்விதம்தான் விவசாயி செய்யவேண்டும் என்பதற்குச் சட்ட ரீதியான அவசியம் எதுவும் இல்லை. விவசாயிகள் இம்முறையை எப்பொழுதும் எதிர்த்துப் போராடி வந்திருக்கிருர்கள். ஆனல், பலவந்தத்திற்குப் பணிந்துவிட்டனர். அவர்கள் அளிக்கும் சேவைக்கு ஏற்ற ஊதியம் கிடைப்பதில்லை. எனினும், செயற்கைச் சாயம் வந்துவிட்ட பிறகு உள்ளூரில் தயாரான சாயத்தின் விலை அதிகமாகக் குறைந்துவிட்டபோது, இவ்வளவு நிலத்தில் அவுரி

சாகுபடி செய்தாக வேண்டும் என்ற முறையை ரத்து செய்துவிடத் தோட்ட முதலாளிகள் விரும்பினார்கள். எனவே, இதனால் தங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை விவசாயிகள் தலையில் சுமத்தப் புது முறையைக் கண்டுபிடித்தார்கள். குத்தகைக்கு வைத்திருக்கும் நிலத்தில் அவுரி சாகுபடி செய்தாக வேண்டும் என்ற நிர்ப்பந்தத்தை நீக்கிவிடுவதற்காக ஒரு 'பிகா'வுக்கு ரூ. 100 வீதம் தங்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கவேண்டும் என்று செய்தனர். இதை நிர்ப்பந்தப்படுத்தி வசூலித்தார்கள் என்று விவசாயிகள் கூறுகிறார்கள். இந்த ஈட்டுத் தொகையைக் கொடுக்க விவசாயிகளிடம் ரொக்கப் பணம் இல்லையென்றால், தவணையில் கொடுப்பதாகவும், வருடத்திற்கு 12 சதவிகிதம் வட்டியும் தருவதாகவும் புரோ நோட்டுக்களோ, பந்தகப் பத்திரங்களோ எழுதிக் கொடுக்க வேண்டும். இவ்விதமாகக் கொடுக்க வேண்டியிருக்கும் பாக்கியை, நஷ்ட ஈட்டுத் தொகை என்று சொல்லுவதில்லை. விவசாயி தன் சொந்தக் காரியத்திற்காக வாங்கிக்கொண்ட முன் பணம் என்றே தோட்ட முதலாளிகள் அக்கிரமமாகக் கூறி வருகிறார்கள்.

" 'முக்காரோரி' நிலங்கள் விஷயத்தில் நஷ்ட ஈடு, 'பஷாரா பேஷி சட்டா' என்ற ரூபத்தை அடைந்தது. அவுரிச் சாகுபடிக்குப் பதிலாகப் பகுதித் தொகை அதிகரிப்பு என்பது அதன் பொருள். இந்த அதிகரிப்பு 5,955 விவசாயிகள் விஷயத்தில் ரூ. 31,865 என்று பரிசீலனை அறிக்கை கூறுகிறது. இன்னும் அதிகத் தொகையினரான விவசாயிகள் இம்முறையினால் பாதிக்கப்பட்டுள்ளனர். இந்தத் தீர்வை உயர்வை நிர்ப்பந்தப்படுத்தித் தங்களிடம் வசூலிக்கிறார்கள் என்று விவசாயிகள் கூறுகிறார்கள். அவுரி சாகுபடி செய்யும்படி கட்டாயப்படுத்துவதிலிருந்து விடுதலை பெறுவதற்காக விவசாயிகள் இடைவிடாது போராடிக் கொண்டு வருகிறார்கள். இவ்விடுதலைக்காக அவர்கள் ஒவ்வொரு நிமிடமும் எதிர்பார்த்துக்கொண்டும் இருக்கின்றனர். அப்படியிருக்கும்போது இந்த விடுதலைக்காக, விவசாயிகள் நிரந்தரமாக ஏராளமான அதிகத் தீர்வை உயர்வைச் செலுத்துவார்கள் என்பது எண்ணவும் முடியாதது.

"இவ்வித நஷ்ட ஈட்டுத் தொகை வசூலிக்கப்படாத இடங்களில் தொழிற்சாலைகள், விவசாயிகள் 'தீன் காத்தியா' முறைப்படி ஓட்ஸ், கரும்பு போன்றவைகளைச் சாகுபடி செய்யவேண்டும் என்று கட்டாயப்படுத்தின. இம்முறையின்படி விவசாயி, தன்னிடமிருக்கும் நிலத்தில் சிறந்த பகுதியை நிலச்சுவான் இஷ்டப்படுவதைச் சாகுபடி செய்வதற்கு ஒதுக்கிவிட வேண்டும். சில இடங்களில் அவர் வீட்டிற்கு முன்னாலிருக்கும் நிலம் அதற்காக உபயோகிக்கப்படுகிறது. விவசாயி தனது நேரத்தையும் உழைப்பையும் இதிலேயே ஈடுபடுத்த வேண்டும். இதனால் தனது ஜீவனத்திற்கு வேண்டிய தானியங்களைச்

சாகுபடி செய்து கொள்ளுவதற்கு விவசாயியால் முடியாது போகிறது.

"வண்டி வாடகைத் தீர்வையும் விவசாயியிடமிருந்து நிர்ப்பந்தமாக வசூலிக்கப்படுகிறது. தொழிற்சாலைகளுக்கு வண்டிகளை அனுப்புவதற்குச் செலவாகும் தொகைக்குக் குறைவான வாடகையே கொடுக்கப்படுகிறது. விவசாயிகளைத் தொழிலாளிகளாக வேலை வாங்கும்போது, அதிகக் குறைவான கூலியே கொடுக்கிறார்கள். சிறு பையன்களையும் அவர்கள் விருப்பத்திற்கு விரோதமாக வேலை வாங்குகிறார்கள்.

"தொழிற்சாலைகளின் நிலங்களை உழுவதற்காக விவசாயிகளின் ஏர்களைக் கொண்டு போய் பல நாட்கள் அங்கேயே வைத்துக்கொண்டு விடுகின்றனர். தங்கள் சொந்த நிலங்களை விவசாயிகள் சாகுபடி செய்யவேண்டியிருக்கும் சமயத்தில் இவ்விதம் செய்யப்பட்டு விடுவதோடு, இதற்காக மிகச் சொற்பமான கூலியே கொடுக்கிறார்கள்

"தொழிற்சாலைகளின் சிப்பந்திகள் மிகக் குறைவான ஊதியத்தையே பெற்று வருகின்றனர். இவர்கள், தொழிலாளர் பெறும் குறைந்த கூலியிலும், ஏருக்குக் கொடுக்கப்படும் பணத்திலும் ஐந்தில் ஒரு பகுதியை 'மாமூல்' என்ற வகையில் வாங்கிக்கொண்டு விடுகின்றனர். சில கிராமங்களில், செத்துப் போகும் கால்நடைகளின் தோல்களைத் தொழிற்சாலைகளுக்குக் கொடுத்து விடும்படி சக்கிலியர்களைக் கட்டாயப் படுத்துகின்றனர். விவசாயிகளிடமிருந்து சக்கிலியர்கள் செத்துப் போன கால்நடைகளைப் பெறுவதற்குப் பதிலாக, அவர்கள் செருப்புகளையும், ஏருக்கு வேண்டிய வடக்கயிற்றையும் விவசாயிகளுக்குக் கொடுத்து வந்தனர். விவசாயிகளுடைய பெண்களின் பிரசவ காலங்களில் சக்கிலியர்களின் பெண்கள் சேவை செய்தும் வந்தனர். ஆனால், இச்சிறந்த சேவைகளைச் செய்வதையெல்லாம் இப்பொழுது விட்டுவிட்டனர். இவ்விதம் தோலை வசூலிப்பதற்காகச் சில தொழிற்சாலைகள் தோல் கிடங்குகளையும் வைத்திருக்கின்றன.

" தங்கள் இஷ்டத்திற்குப் பணியாத விவசாயிகளுக்கு அக்கிரமமான அபராதங்களையும் தொழிற்சாலையினர் விதித்து வசூலித்து வருகிறார்கள். விவசாயிகளைப் பணிய வைப்பதற்காக, தோட்ட முதலாளிகள் மற்றும் பல முறைகளையும் அனுசரித்து வருகின்றனர் என்று என் முன்னிலிருக்கும் சாட்சியங்களிலிருந்து தெரிகிறது. விவசாயிகளின் கால்நடைகளை 'பவுண்டி'ல் அடைத்துவிடுகிறார்கள். அவர்கள் வீட்டின் முன்னால் தங்கள் வேலையாட்களை நிறுத்தி விடுகின்றனர்; நாவிதர், சலவைத் தொழிலாளர், தச்சர், கொல்லர் ஆகியோர் விவசாயிகளுக்கு

எந்தச் சேவையும் செய்யாதபடி தடுத்துவிடுகின்றனர். கிணறுகளுக்கும் மேய்ச்சல் இடத்திற்கும் போகும் பாதைகளை உழுதுவிட்டு அங்கே விவசாயிகள் போக முடியாதபடி தடுத்து விடுகிறார்கள். இதே போல விவசாயிகள் குடியிருக்கும் வீடுகளுக்கு முன்னாலும் பின்னாலுமுள்ள இடங்களையும் உழுதுவிட்டு அவர்கள் வெளியில் வர முடியாதபடி தடுக்கிறார்கள். இவையெல்லாம் போதாதென்று, விவசாயிகள் மீது கிரிமினல், சிவில் வழக்குகளைத் தொடுக்கின்றனர். பலாத்காரத்தை உபயோகித்து அடித்தும் விடுவதோடு, சட்ட விரோதமாக அடைத்தும் வைக்கிறார்கள். விவசாயிகள், தங்கள் இஷ்டத்திற்கு உட்பட்டு நடக்கும்படிச் செய்வதற்கு நாட்டின் ஸ்தாபனங்களையெல்லாம் தோட்ட முதலாளிகள் வெற்றிகரமாக உபயோகித்துக்கொண்டு வருகிறார்கள். விவசாயிகள் மீது தங்கள் இஷ்டம் போல் நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டுவிடவும் தயங்குவதில்லை. இதன் பலனாக இந்த விவசாயிகள் முற்றிலும் கதியற்ற ஒரு நிலைக்கு வந்துவிட்டார்கள். இதைப் போன்றதோர் நிலைமையை, இந்தியாவில் நான் சுற்றிப் பார்த்திருக்கும் எந்த இடத்திலும் கண்டதே இல்லை.

"தோட்ட முதலாளிகளே, ஜில்லா போர்டு உறுப்பினர்களாகவும் சௌக்கிதாரிச் சட்டத்தின்படி அசெஸர்களாகவும் இருக்கின்றனர். கால்நடைகளை அடைத்துவிடும் பட்டிகளை நிர்வகிப்பவர்களும் அவர்களே. இந்த நிலைமையினால் விவசாயிகள் அவர்களுக்குப் பயப்பட வேண்டியிருக்கிறது. ரஸ்தாக்களை உபயோகிப்பதற்கு, ரூபாய்க்கு அரை அணா வீதம் விவசாயிகள் வாடகை செலுத்தி வருகிறார்கள். ஆனால், அந்த ரஸ்தாக்களை விவசாயிகள் உபயோகிக்க முடிவதில்லை. இவர்களுடைய வண்டிகளும் மாடுகளுமே இந்த ரஸ்தாக்களை உபயோகிக்க வேண்டியிருந்தும், இவை அனுமதிக்கப்படுவதும் இல்லை. இது சம்பாரணில் மாத்திரம் நடப்பதல்ல என்பதனால், இந்த அநியாயம் எந்த விதத்திலும் குறைவானதாகிவிடாது. இதில் விதி விலக்காக இருக்கும் ஸ்தாபனங்களும் உண்டு என்பதை அறிவேன். என்றாலும், மேலே கூறியிருக்கும் குற்றச்சாட்டைப் பொதுவாக நிரூபிப்பதற்குப் போதுமான ஆதாரங்கள் இருக்கின்றன.

"மேலே கூறப்பட்டிருக்கும் குற்றச்சாட்டுகளையே சாட்டப்பட வேண்டிய இந்திய ஜமீன்தார்கள் சிலர் இருக்கிறார்கள் என்பதையும் அறிவேன். தோட்ட முதலாளிகளிடமிருந்து நிவாரணம் தேட முயற்சி செய்யப்பட்டு வருவதைப் போன்றே, அவர்களிடமிருந்தும் நிவாரணம் தேட முயற்சிகள் நடந்து வருகின்றன. தோட்ட முதலாளிகள், படுமோசமான முறையைப் பழக்கத்தில் கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. பயிற்சி பெற்றிருக்கும் புத்தியும், அவர்கள் இருந்துவரும் உயர்ந்த நிலையும், இதை அவர்களுக்குச் சரியான கலையாகவே ஆக்கி

விட்டன. எனவே, விவசாயிகளுக்கு அரசாங்கம் ஏதாவது பாது காப்பு அளித்தாலன்றி, அவர்கள் இன்னும் ஆழத்தில் மூழ்கி அழிந்து போய்விடுவதைத் தவிர தப்பிப் பிழைப்பதற்கு வேறு வழியே இல்லை. ஆனால், அரசாங்கம் அளித்திருக்கும் பாது காப்பு அற்பமானதாகவே இருந்திருக்கிறது. அதுவும் காலங் கடந்து மெதுவாகச் செய்யப்பட்டிருப்பதால், அதன் பலனை விவசாயிகள் அறிய முடியாமலே போயிருக்கிறது.

"இந்தக் கோரிக்கையில் கண்ட சில விஷயங்களில், செட் டில்மெண்டு அதிகாரியின் அறிக்கைக்காக அரசாங்கம் எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறது என்பது உண்மை. நான் மேலே கூறி வந்திருக்கும் கஷ்டங்களின் சுமைகளைத் தாங்க முடியாமல் விவசாயிகள் நசுங்கி அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் இச்சமயத் தில், செட்டில்மெண்டு அதிகாரியைக் கொண்டு விசாரணையை நடத்துவதாகச் சொல்லுவது தெளிவில்லாததோர் முறையாகும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நான் கூறியிருக்கும் குறைகள், செட்டில்மெண்டு அதிகாரியைப் பொறுத்தவரையில், விரிவான செட்டில்மெண்டு நடவடிக்கையில் ஒரு பகுதியேயாகும். மேலும், மேலே சொன்ன எல்லாக் குறைகளைக் குறித்தும் விசாரணை நடத்தப்படவுமில்லை. அதோடு ஆட்சேபிக்க முடியாத தான குறைகளும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இக் குறைகள் அதிக மோசமானவைகளாக இருப்பதால், உடனடி யான நிவாரணம் இவைகளுக்கு அவசியமாகின்றன.

"விவசாயிகளைக் கட்டாயப்படுத்தி 'தவான்' 'சராபேஷி சட்டா', 'அப்வாப்' ஆகியவை வசூலிக்கப்படுகின்றன என்பதை யும் ஆட்சேபிக்க முடியாது.* சட்டப்படி நடவடிக்கை எடுத்துக்

---

* காந்திஜி அனுப்பிய அறிக்கைக்குப் பிறகு அரசாங்கம் நியமித்த விசாரணைக் கமிட்டி முன்பு சாட்சியம் கூறிய ராஜகுமார் சுக்லா என்ற விவசாயி, நிர்ப்பந்தப்படுத்தி வசூலிக்கப்பட்ட இந்த மாமூல் முறைகளை வருமாறு விவரித்துக் கூறினார் :

"இத்தகைய நிர்ப்பந்த வசூல் முறைகளில் 'பாபாகிபுட்டாகி' என்பது ஒன்று. ஒருவரின் தந்தையோ, உறவினரோ இறந்து, இறந்தவரின் நிலம் வாரிசாக இவருக்கு வரும்போது, தொழிற்சாலைக்கு அவர் தமது வாரிசு பாத்தியதையில் வரும் நிலத்திற்கு 'பிகா'வுக்கு ரூ. 5 வீதம் செலுத்தினால்தான் அந்த நிலத்தை அடைய முடியும் என்று செய்வது இம்முறை.

"கோராகி பெய்னுஷி' என்ற மற்றொரு முறையும் இருந்து வருகிறது. தொழிற் சாலையின் எருமையோ, குதிரையோ கிழமாகிவிட்டால் மானேஜர் அதை லாட்டரி மூலம் விற்றுவிடுகிறார். இதனால் தம்மிடமுள்ள சாகுபடியாளர்களிடம் ஆளுக்கு ஒரு ரூபாய் வசூலித்து விடுகிறார். 'பங்களாகி' என்ற மற்றொரு வசூல் முறையும் இருக் கிறது. அவுரி சாகுபடி செய்யும் ஒரு கம்பெனியின் பங்களா பழுதாகிவிட்டால், அதைச் சீர்படுத்தும் செலவுக்காக ஒவ்வொரு சாகுபடியாளரிடமிருந்தும் ஆளுக்கு ஒரு

கொள்ளுவதன் மூலம் இந்த அக்கிரமங்களிலிருந்து விவசாயிகள் தங்களை முழுதும் பாதுகாத்துக்கொண்டுவிட முடியும் என்று விவாதிக்கப்படாது என்றே நம்புகிறேன். விவசாயிகளிடமிருந்து எங்கும் பணம் பறிக்கப்பட்டு வரும்போது, கோர்ட்டுகள் அவர்களுக்குப் போதுமான பாதுகாப்பாகிவிடமாட்டா. தலையாய நிலச்சுவான்தார் என்ற வகையில் அரசாங்கம் நிர்வாகத்தின் மூலம் விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது அவசியம் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

"இழைக்கப்பட்டு வரும் தவறுகள் இரு வகையானவை. மறுக்க முடியாத உண்மைகளாக இருந்து வரும் தவறுகள் ஒரு வகை. அவற்றைத் தொடர்ந்து இழைக்கப்பட்டு வரும் தவறுகள் மற்றோர் வகை. தொடர்ந்து வரும் தவறுகளை உடனே நிறுத்தியாக வேண்டும். இத்தகைய மாமூல்களையும் நஷ்ட ஈடுகளையும் விவசாயிகள் செலுத்த வேண்டியதில்லை என்றும், இவைகளைச் செலுத்தியாக வேண்டும் என்று விவசாயிகள் கட்டாயப்படுத்தப்பட்டால் அரசாங்கம் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் என்றும் விவசாயிகளுக்கு அறிவிக்கும் பிரசுரங்களை வெளியிட்டு அவர்கள் அறியும்படி செய்ய வேண்டும். நிலச்சுவான்தார்களுக்கு விவசாயிகள் உழைத்துச் சேவை செய்துதான் ஆக வேண்டும் என்ற அவசியம் இல்லை என்றும், யாருக்கு வேலை செய்யத் தங்களுக்கு இஷ்டமோ அவர்களுக்கு விவசாயிகள்

---

ரூபாய் வீதம் வசூலிக்கிறார்கள். தங்கள் நிலச்சுவான்தாரின் குடியிருப்பு வசதிக்காக விவசாயிகள் பணம் கொடுத்தாக வேண்டும்.

"'ஹக் டல்பானு' என்ற மற்றோர் வழக்கமும் உண்டு. ஏதாவது ஒரு காரியத்திற்காக தோட்ட முதலாளியின் வேலையாள் ஒருவன் ஒரு குடியானவனிடம் வீட்டின் முன்பு வைக்கப்பட்டு விடுவான். அப்பொழுது குடியானவனிடமிருந்து இதற்காக ரூபாய் ஒன்று வசூலிக்கப்படும். இதன் நோக்கம், அந்த வேலையாள் அங்கே ஏதாவது அக்கிரமம் செய்து வருவதோடு, அப்படிச் செய்து வருபவனுக்குக் குடியானவர் பணமும் கொடுத்து வரும்படிச் செய்வதே யாகும். காமன் பண்டிகை பீகாரில் குதூகலமாகக் கொண்டாடப்படுகிறது. தொழிற்சாலை மானேஜர் இப் பண்டிகையைக் கொண்டாடாவிட்டாலும், இப்பண்டிகையைத் தாங்கள் கொண்டாடுவதற்கென்று ஒவ்வொரு விவசாயியும் ஆளுக்கு ஒரு ரூபாய் வீதம் கொடுக்க வேண்டும். குத்தகைப் பணத்தைக் கொடுத்து ரசீதைப் பெறுவதற்கும் தனியாக வேறு பணம் வசூலிக்கப்படுகிறது. செலுத்தும் குத்தகைத் தொகைக்கு ரூபாய்க்கு ஓர் அணா வீதம் இப்பணத்தையும் செலுத்தினால்தான் ரசீது கிடைக்கும். தொழிற்சாலை சொந்தக்காரர் ஒரு மோட்டார் வாங்கினால், சாகுபடியாளர்கள், மோட்டார் வைத்திருப்பவர் ஒருவர் தங்களுக்கு எஜமானராயிருக்கும் கௌரவத்தை அடைவதற்காக ஆளுக்கு ஒரு ரூபாய் வீதம் கொடுக்க வேண்டும். இவையெல்லாம் போதாதென்று விவசாயிகள் நிர்ப்பந்தமாகத் தொழிற்சாலைகளுக்கு வேலை செய்யும்படியும் செய்கிறார்கள். ஒரு விவசாயிக்கும் மற்றோர் விவசாயிக்கும் ஏதாவது தகராறு ஏற்பட்டால் தொழிற்சாலை மானேஜர் விசாரித்து ரூ. 5 முதல் 500 வரையில் அபராதம் விதித்து அப்பணத்தை எடுத்துக் கொண்டு விடுவார். விவசாயிகள் தகராறுகளைத் தங்களுக்குள்ளேயோ, தனிப்பட்ட மத்தியஸ்தர்கள் மூலமாகவோ தீர்த்துக்கொண்டுவிட மானேஜர் அனுமதிப்பதில்லை."

வேலை செய்யலாம் என்றும், தங்களுக்கு லாபகரமானதாக இருந்தாலன்றி விவசாயிகள் அவுரியையோ, கரும்பையோ சாகுபடி செய்துதான் ஆக வேண்டும் என்ற கடமை எதுவும் இல்லை என்றும் அரசாங்கம் அவர்களுக்கு அறிவிக்க வேண்டும். செய்யப்பட்டு வரும் அக்கிரமங்களெல்லாம் நிறுத்தப்பட்டாலன்றி, பெட்டியா ராஜ்யம் தொழிற்சாலைகளுக்குக் கொடுத்திருக்கும் குத்தகைகளைப் புதுப்பிக்கக்கூடாது. அப்படிப் புதுப்பிக்கும் போது, தக்க வகையில் விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும்.

"தொழிற்சாலை சிப்பந்திகள் மாமூல் வசூலித்து வரும் வழக்கம் சம்பந்தமாகவும் உடனே மாறுதல் ஏற்பட வேண்டும். இப்பொழுதுள்ள சிப்பந்திகளுக்குப் பதிலாக, நல்ல சம்பளத்தில் படித்தவர்களை அமர்த்த வேண்டும். விவசாயிகள் பெறும் கூலி, மாமூல் கொடுப்பதனால் அநியாயமாகக் குறைந்து போவதற்கு இடம் கொடுக்கக்கூடாது. இப்பழக்கம், தோட்ட முதலாளிகள் சொல்லுவது போல இமயமலையைப் போன்று பழமையானதாக இருந்தாலும், இத்தீமையைப் போக்கி விடுவது அவர்களால் முடியக்கூடிய காரியமே என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன்.

"விவசாயிகள் சுதந்திரத்தை அடைந்துவிடுவார்களாயின், அவுரி சட்டா, வண்டிச் சத்த சட்டா ஆகியவை போதுமானவையா, இல்லையா என்பதைப் பற்றி விசாரித்தாக வேண்டிய அவசியம் பிறகு இல்லாது போகிறது. இரு தரப்பாரும் செய்து கொள்ளும் ஓர் ஏற்பாட்டின்படி, இவ்வருட அவுரி சாகுபடியையோ, மற்றச் சாகுபடியையோ முடித்துவிடும்படி விவசாயிகளுக்குக் கூற வேண்டும். ஆனால், இனி அவர்கள் சாகுபடி செய்வது அவுரியாக இருந்தாலும், வேறு எதுவாக இருந்தாலும், அவர்களுடைய சொந்த விருப்பத்திற்குச் செய்வதாக இருக்க வேண்டும்.

"இந்த அறிக்கையில் வாதத்தை மிகக் குறைவாகவே கூறியிருக்கிறேன் என்பதைக் கவனிக்க வேண்டும். ஆனால், நான் வந்திருக்கும் முடிவுகளில் எதையாவது நான் நிரூபிக்க வேண்டும் என்று அரசாங்கம் விரும்புமானால், எந்த ஆதாரங்களைக்கொண்டு நான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேனோ அவற்றை அரசாங்கத்திடம் ஒப்படைக்கத் தயாராக இருக்கிறேன். தோட்ட முதலாளிகளின் உணர்ச்சியைப் புண்படுத்த நான் விரும்பவில்லை என்பதையும் முடிவாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். விவசாயிகள் அக்கிரமமான தவறுகளுக்கு ஆளாகிக் கஷ்டப்படுகிறார்கள். அவற்றிலிருந்து அவர்களை உடனே விடுவித்தாக வேண்டும் என்று கருதுகிறேன். எனவே, தோட்ட முதலாளிகள் எந்த முறையைக் கொண்டு வேலை செய்து வருகிறார்களோ, அந்த முறையைக் குறித்து என்னால் முடிந்த வரையில் சாந்தத்துடனேயே எடுத்துக் கூறியிருக்கிறேன்., ஆங்கிலேயர்கள், சொந்த சுயேச்சையையும்

சுதந்திரத்தையும் முழு அளவும் அனுபவிக்கப் பிறந்தவர்கள். ஆகவே, அந்த வகையில் அந்த ஸ்தானத்தை அடைய அவர்கள் தவறிவிடமாட்டார்கள். அதே சுயேச்சையையும் சுதந்திரத்தையும் விவசாயிகள் அடைவதையும் அவர்கள் விரும்பாமலிருக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கையிலேயே, நான் இந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறேன்.

"இந்த அறிக்கையின் நகல்களை டிர்ஹூத் டிவிஷன் கமிஷனருக்கும், சம்பாரண் கலெக்டருக்கும், பெட்டியா சப்-டிவிஷனல் ஆபீஸருக்கும், பெட்டியா ராஜ் மானேஜருக்கும், பீகார் தோட்ட முதலாளிகள், ஜில்லா தோட்ட முதலாளிகள் சங்கக் காரியதரிசிகளுக்கும் அனுப்பியிருக்கிறேன். என் சகாக்களும் நானும் இங்கே செய்து வரும் வேலையைக் கவனித்து வரும் இந்நாட்டுத் தலைவர்களுக்கும் நகல்களை அனுப்பியிருக்கிறேன். முற்றிலும் அவசியம் நேர்ந்தாலொழிய இந்த விஷயத்தைக் குறித்துப் பொது விவாதம் எதுவும் ஏற்பட வேண்டாம் என்பதற்காக அந்த நகல்களில் 'பிரசுரத்திற்கு அல்ல' என்று குறிப்பிட்டும் அனுப்பியிருக்கிறேன். நான் நேரில் வரவேண்டியது அவசியமானல், அதற்கு எப்பொழுதும் நான் தயாராகவே இருக்கிறேன் என்று உறுதியளிக்கிறேன்.

பெட்டியா, தங்கள்
*13 மே, 1917.* **மோ. க. காந்தி"**

[காந்திஜி அச்சமயம் அதிகாரிகளுடன் நடத்திய மற்றக் கடிதப் போக்குவரத்துகளின் விவரத்தை, இதே தொகுப்பின் பின் சேர்க்கைப் பகுதியில் காண்க.]

[மகாத்மா காந்தி அனுப்பிய மேலே கண்ட அறிக்கையை அரசாங்கம் அப்பொழுது அன்போடு ஏற்றுக்கொண்டுவிடவில்லை. என்றாலும், பீகார் - ஒரிஸ்ஸா அரசாங்கத்தின் பிரதம காரியதரிசி ஸ்ரீ மெக்பர்ஸன் 19-5-1917-இல் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில், "நீங்கள் சிபாரிசு செய்திருக்கும் சில முறைகளை அனுசரிப்பதென்று அரசாங்கம் முன்னடியே முடிவுக்கு வந்திருக்கிறது என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். உதாரணமாக, பெட்டியா குத்தகைகள் புதுப்பிக்கப்பட்டு, மாமூல்கள் வசூலிக்கப்படும்போது, அவ்விதம் வசூல் செய்வதைக் கண்டிப்பாகத் தடுப்பதோடு அவை வசூலிக்கப்பட்டால் குத்தகை ரத்துச் செய்யப்படும் என்ற விதியையும் அவற்றில் சேர்ப்பது என்றும் உத்தரவிடுவது என்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது" என்று குறிப்பிட்டார். ஆயினும், அதிக காலத்திற்குத் தட்டிக் கழித்துக் கொண்டிருக்க அரசாங்கத்தினல் முடியவில்லை; 1917 ஜூன் 10-ஆம் தேதி வெளியிட்ட உத்தரவின்படி சம்பாரண் நிலைமையைக் குறித்து விசாரிக்க ஸ்ரீ எப். ஜி. ஸ்லை என்பவரின் தலைமையில் ஒரு கமிட்டியை நியமித்தது. அதில்

காந்திஜியும் ஓர் உறுப்பினர். கமிட்டியின் ஏகோபித்த அறிக்கை 1917 அக்டோபர் 3-ஆம் தேதி கையெழுத்தாயிற்று. அதில் கடைசியில் காந்திஜியும் கையெழுத்திட்டிருந்தார். அரசாங்கம் காலதாமதம் எதுவும் செய்யவில்லை. அந்த அறிக்கையின் மீது 18-ஆம் தேதி தனது தீர்மானத்தை வெளியிட்டது. அவுரி சாகுபடியிலோ அல்லது வேறு எந்த சாகுபடியிலோ 'தீன் காதியா' முறையை அனுசரிப்பதை அடியோடு ரத்துச் செய்துவிட வேண்டும் என்று கமிட்டி செய்திருந்த சிபாரிசை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. மாமூல்கள் வாங்கும் முறையும் போக வேண்டும் என்பதையும் ஒப்புக்கொண்டது. இதன் மீது அரசாங்கம் சட்டசபையில் கொண்டு வந்த மசோதா சட்டமாக நிறைவேறுவது அவ்வளவு எளிதாக இல்லை. முடிவாக அம்மசோதாவும் நிறைவேறி, சம்பாரண் விவசாயச் சட்டம் அமலுக்கு வந்தது. இவ்விதம் மகாத்மா சம்பாரணில் ஆரம்பித்த போராட்டம் வெற்றியில் முடிந்தது.

# 2

# கேடா சத்தியாக்கிரகம்

[சம்பாரணில் அரசாங்கம் நியமித்த கமிட்டியில் காந்திஜியின் வேலை முடிவதற்கு முன்னாலேயே, கேடா ஜில்லா விவசாயிகளின் துயர நிலையைக் கவனிக்க வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டது. அதே சமயத்தில் அகமதாபாத் தொழிலாளர் நிலையைக் குறித்தும் ஸ்ரீமதி அனுசூயா பென் காந்திஜிக்குக் கடிதம் எழுதியிருந்தார். தொழிலாளர் மிகக் குறைந்த கூலி வாங்கி அவதிப்பட்டு வந்தார்கள். இவர்களுக்காகவும் காந்திஜி போராடினார். இதன் விவரத்தை மகாத்மாவின் 'சுய சரிதை'யில் 'தொழிலாளருடன் தொடர்பு', 'உண்ணாவிரதம்' ஆகிய அத்தியாயங்களில் காண்க. பின்னர் காந்திஜி நடத்திய கேடா சத்தியாக்கிரகத்தின் வரலாற்றையும் வெற்றிகரமான முடிவையும் குறித்து மகாத்மா தமது 'சுய சரிதை'யில் விவரிக்கிறார். 'கேடா சத்தியாக்கிரகம்', 'வெங்காயத் திருடர்', 'கேடா சத்தியாக்கிரக முடிவு' என்ற அத்தியாயங்களில் இதை விவரமாகக் கூறியிருக்கிறார். ('மகாத்மா காந்தி நூல்கள்' - 3-ஆம் தொகுப்பு – 558–65-ஆம் பக்கங்கள்). இந்த இரு போராட்டங்களிலும் மகாத்மா கண்ட வெற்றி சத்தியாக்கிரகப் போரின் வெற்றியாகும்.]

# 3

# இரு போராட்டப் பலன்கள்

சம்பாரண், கேடா போராட்டப் பலன்களைக் குறித்துக் காந்திஜி, டில்லியில் நடந்த யுத்த மகாநாட்டிற்குப் பிறகு வைஸ்ராய் லார்டு செம்ஸ்போர்டுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். 1918 ஏப்ரல் 27-ஆம் தேதி டில்லியில் நடந்த அம்மகாநாட்டிற்குக் காந்திஜியையும் வைஸ்ராய் அழைத்திருந்தார். அம் மகாநாட்டிற்குப் பிறகு வைஸ்ராய்க்குக் காந்திஜி எழுதிய கடிதத்தில் சம்பாரண், கேடா போராட்டங்களைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டார்:

"சம்பாரணில் வெகு நீண்ட காலமாக இருந்து வந்த கொடுமையை எதிர்ப்பதன் மூலம், பிரிட்டிஷ் நீதியின் முடிவான ஆதிபத்தியத்தை நான் காட்டியிருக்கிறேன். கேடாவில் அரசாங்கத்தைச் சபித்துக் கொண்டிருந்த மக்கள், தாங்கள் எடுத்துக் காட்டும் உண்மைக்காகத் துன்பங்களை அனுபவிக்கத் தயாராயிருக்கும் போது, சக்தியோடிருப்பது தாங்களேயன்றி அரசாங்கம் அல்ல என்பதை இப்பொழுது உணருகிறார்கள். ஆகவே, அம்மக்கள் துவேஷத்தை விட்டு வருகிறார்கள். அக்கிரமத்தை அறியும் போது ஒழுங்காகவும் மரியாதையோடும் மறுப்புச் செய்வதை மக்கள் அரசாங்கம் சகிப்பதால், அரசாங்கம் மக்கள் அரசாங்கமாகவே இருக்க வேண்டும் என்று அவர்கள் தங்களுக்குள் கூறிக் கொள்ளுகின்றனர். எனவே சம்பாரண், கேடா காரியங்கள், யுத்தத்திற்கு என்னுடைய நேரிடையான, நிச்சயமான, விசேஷ உதவிகளாகும். இத்துறையில் என் வேலையை நிறுத்தி வைக்கும்படி நீங்கள் கேட்பதாயிருந்தால், என் உயிரையே நிறுத்தி வைத்து விடுமாறு நீங்கள் கேட்பதாகும். மிருக பலத்திற்குப் பதிலாக ஆன்ம சக்தியை, அதாவது அன்பின் சக்தியை எல்லோரும் உபயோகிக்கும்படி செய்வது என்னால் முடியுமானல், உலகம் முழுவதுமே எவ்வளவு மோசமாக நடந்து கொண்டாலும் அதை எதிர்த்து நிற்கவல்ல இந்தியாவை உங்களுக்கு நான் அளிக்க முடியும் என்பதை அறிவேன். ஆகையால், என் வாழ்க்கையில் எல்லாச் சமய சந்தர்ப்பங்களிலும் துன்பத்தை அனுபவிப்பதற்குத் தயாராயிருப்பதான இந்த நிரந்தரமான நியதிக்கு என்னையே நான் ஒழுங்குபடுத்திக் கொள்ளுவதோடு, இதை ஏற்றுக் கொள்ளத் தயாராயிருப்போருக்கும் எடுத்துக் கூறியும் வருவேன். நான் ஏதாவது ஒரு நடவடிக்கையில் ஈடுபடுவேனாயின் அதன் நோக்கம், இந்த நியதியின் இணையற்ற உயர்வை எடுத்துக்காட்டுவதே ஆகும்."

பகுதி ஏழு

# சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை

## 1

## சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை

1918-ஆம் வருடம் முதலாவது உலக மகா யுத்தம் முடிந்ததும், இந்தியாவுக்குச் சுயநிர்ணய உரிமை அளிப்பதாகக் கொடுத்திருந்த வாக்குறுதியைப் பிரிட்டிஷார் நிறைவேற்றாததுடன், இந்தியாவில் சுதந்திரப் புரட்சி ஏற்படாமல் தடுப்பதற்காகக் கொடிய சட்டங்களையும் அமலுக்குக் கொண்டு வரலாயினர். அதன்படி *1919* பிப்ரவரி மாதம் இந்தியாவில் ரௌலட் மசோதாக்கள் தோன்றின. ரௌலட் கமிட்டியின் சிபாரிசுகளின் படி இந்திய அரசாங்கம் அந்த மசோதாக்களைக்கொண்டு வந்தது. அம்மசோதாக்கள் காந்திஜியைத் திடுக்கிட வைத்தன.

"இப்போது நாம் என்ன செய்வோம்?" என்று வல்லபாய் பட்டேல் கலங்கினார்.

அதற்குக் காந்திஜி, "அந்த மசோதாக்கள் சட்டமாகிவிட்டால், அதை எதிர்க்க நாம் உடனே சத்தியாக்கிரகம் செய்ய வேண்டும். சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் ஒரு சிலர் கையெழுத்திட்டால் கூடப் போதும்" என்று பதில் கூறினார்.

பிறகு காந்திஜி தயாரித்த கீழ்க்கண்ட சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில், *1919* பிப்ரவரி *24*-ஆம் தேதி காந்திஜி, வல்லபாய் பட்டேல், ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, பி. ஜி. ஹார்னிமன், ஹமார் ஸோபானி, சங்கர்லால் பாங்கர், அனுசூயா பென் முதலியோர் கையெழுத்திட்டனர்:

"1919-ம் வருடத்திய இந்தியன் கிரிமினல் சட்டத் திருத்த மசோதா நெ. 1, கிரிமினல் அவசரச் சட்ட மசோதா நெ. 2, இவ்விரு மசோதாக்களும் அநீதியானவை; சுதந்திரக் கொள்கைக்கும் நீதிக்கும் முரணானவை; சமூகத்தின் பாதுகாப்பிற்கும் தேசத்தின் பாதுகாப்பிற்கும் இன்றியமையாத மக்களின் மூலாதார உரிமைகளை நாசம் செய்யக் கூடியவை என்பது எங்கள் இருதய பூர்வமான அபிப்பிராயமாகும். எனவே, இந்தச் சட்டங்கள் அமலுக்கு வந்தால், அவை மீண்டும் ரத்து செய்யப்படும் வரையில் இந்தச் சட்டங்களையும், இனி நியமிக்கப்படவிருக்கும் கமிட்டி கருதும் மற்றச் சட்டங்களையும் நாங்கள்

சாத்விகமாக எதிர்க்க உறுதி கொண்டுள்ளோம் என்று பிரதிக்ஞை செய்கிறோம். மேலும், இந்தப் போராட்டத்தில் நாங்கள் மனப்பூர்வமாகச் சத்தியத்தைப் பின்பற்றுவோம்; உயிருக்கோ, நபருக்கோ அல்லது சொத்துக்கோ எவ்விதத் தீங்கும் இழைக்க மாட்டோம் என்றும் உறுதி கூறுகிறோம்.''

மேலே குறிப்பிட்ட சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையை விளக்கிக் காந்திஜி எழுதியதாவது:

''இந்த நடவடிக்கை இந்திய சரித்திரத்திலேயே மிக மிக முக்கியமானது. இது அவசரப்பட்டு எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கை அல்லவென்று நான் உறுதி கூறுகிறேன். என் சம்பந்தப்பட்ட வரையில், நான் பல நாட்கள் தூக்கமின்றி அதைப் பற்றிச் சிந்தித்திருக்கிறேன். அரசாங்கத்தின் நிலையையும் நன்கு அறிந்து நடக்க முயற்சித்துள்ளேன். ஆனால், அரசாங்கம் இந்த அசாதாரணமான மசோதாக்களைக் கொண்டு வருவதற்குச் சிறிதும் நியாயம் இருப்பதாகத் தெரியவில்லை. ரௌலட் கமிட்டியின் அறிக்கையை நான் ஆச்சரியத்துடன் வாசித்தேன். அதை வாசித்ததின் பலனாக, அக்கமிட்டியின் முடிவுகளுக்கு நேர்மாறாகவே நான் முடிவு செய்யும்படி நேர்ந்திருக்கிறது. இந்தியாவில் எங்கேயோ வெகு சிறிய பகுதிகளில் மாத்திரமே ரகசியமாகப் பலாத்கார முறைகள் கைக்கொள்ளப் படுகின்றன என்றும், மிகச் சிறிய குழுவினரே அம்முறைகளைக் கையாள முற்படுகிறார்கள் என்றும் அறிக்கையிலிருந்து நான் முடிவு செய்துள்ளேன். ஆனால், ரௌலட் மசோதாக்களோ, இந்தியா முழுவதையும் இந்திய மக்களையும் பாதிப்பதாக இருக்கின்றன; சமாளிக்க வேண்டிய நிலைமைகளுக்குத் தேவையானதைவிட மிகவும் அதிக அதிகாரங்களை அரசாங்கத்துக்கு அளிப்பதாக இருக்கின்றன. அவ்விதம் அளிப்பதுதான் அதிக ஆபத்தாகும். கோடிக்கணக்கான இந்தியர்கள், உலகத்தில் உள்ள மற்ற எல்லோரையும் காட்டிலும் இயற்கையில் அதிக சாந்தமானவர்கள் என்ற சரித்திர உண்மையைக் கவனிக்க கமிட்டி முற்றிலும் தவறிவிட்டது.

''இப்போது அந்த மசோதாக்களின் அமைப்பையும் நோக்கத்தையும் பாருங்கள். சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்களுக்கும் பிரிட்டிஷ் வியாபாரிகளுக்கும் வைஸ்ராய் அளித்துள்ள உறுதிமொழிகளுடன் அம்மசோதாக்கள் கொண்டுவரப்பட்டுள்ளன. வைஸ்ராயின் கூற்று நம்மில் பலருக்கும் மிகுந்த அவநம்பிக்கையை உண்டாக்கியிருக்கிறது. அது எவ்வளவு தூரத்துக்குப் போகும், அதன் நோக்கம் என்ன என்பதையெல்லாம் என்னால் அறிந்து கொள்ளவே முடியவில்லை என்பதை நான் பட்டவர்த்தனமாக ஒப்புக்கொள்ளுகிறேன். இந்தியாவைக் காட்டிலும், இந்தியாவின் ராஜீய, வர்த்தகத் தேவைகளைக் காட்டிலும், சிவில் சர்விஸின் நலன்களும் பிரிட்டிஷ் வியாபாரி

களின் நலன்களும் உயர்ந்தவை என்பது வைஸ்ராயினுடைய கூற்றின் பொருள் எனில், அந்தச் சித்தாந்தத்தை எந்த இந்தியரும் அங்கீகரிக்க முடியாது. அது சாம்ராஜ்யத்திற்குள் சகோதரர்களைக் கொலை செய்யும் போராட்டத்தில் வந்து முடியும்.

"சீர்திருத்தம் வரலாம் அல்லது வராமலிருக்கலாம். தற்போதைக்குத் தேவையானது என்னவெனில், இந்த மூலாதாரமான விஷயத்தை ஒழுங்காகவும் நியாயமாகவும் அறிந்துகொள்ளுவது தான். அரைகுறையான ஒட்டு வேலை உண்மையான திருப்தியை அளிக்காது. மாபெரும் சிவில் சர்விஸ் குழுவினர் ஒருவிஷயத்தை உணர்ந்துகொள்ளட்டும். அதாவது, அவர்கள் பெயரளவில் மாத்திரமல்ல, உண்மையிலேயே இந்தியாவின் தருமகர்த்தாக்கள், ஊழியர்கள் என்ற முறையில்தான் இந்தியாவில் தங்கியிருக்க முடியும். அதுபோலவே பிரிட்டிஷ் வர்த்தக ஸ்தாபனங்களும் ஒரு விஷயத்தை அறிந்துகொள்ளட்டும். அதாவது, அவை இந்தியாவின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக மாத்திரமே இந்தியாவில் இருக்க முடியும். உள்நாட்டுக் கலை, வர்த்தகம், பண்ட உற்பத்தி இவைகளை அழிக்கும் நோக்கத்துடன் அவை இந்த நாட்டில் இருக்க முடியாது.

"ரௌலட் மசோதாக்களுக்குப் பதிலாக, அவற்றின் ஸ்தானத்தில் இருக்கக்கூடிய இரண்டு சட்டங்கள் இருக்கின்றன. அவற்றைக்கொண்டே, அரசாங்கத்துக்கு விரோதமான எத்தகைய சதியையும் முற்றிலும் வெற்றிகரமாகச் சமாளிக்க முடியுமென்று உறுதி கூறுகிறேன். சர் ஜார்ஜ் லௌண்டெல் பொது ஜன அபிப்பிராயத்தை நிராகரித்தது, எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றியதாகும். அவர் இந்திய சரித்திரத்தையே மறந்துவிட்டார். இல்லாவிடில் அவர் பிரதிநிதித்துவம் வகிக்கும் அரசாங்கம், இதற்குமுன் பொதுஜன அபிப்பிராயத்தின் சக்திக்குப் பணிந்து கொடுத்து, தனது உறுதியான தீர்மானத்தை மாற்றிக்கொண்டதை அறிந்திருப்பார்.

"இந்த மசோதாக்களை, அரசாங்க நிர்வாக ஸ்தாபனத்தில் புரையோடிவிட்ட நோயின் நிச்சயமான சின்னமென்று நான் ஏன் கருதுகிறேன் என்பதை இப்போது சுலபமாக அறிந்து கொள்ளலாம். எனவே, அந்தக் கடுமையான நோய்க்கு, தீவிரமான சிகிச்சை தேவையாக இருக்கிறது. ரௌலட் மசோதாக்களின் அந்தரங்க நோக்கத்தையும், அவற்றைக்கொண்டு வருவதற்கான காரணங்களையும் கண்டு பொறுமையிழந்த இளைஞர்கள், அவசரப்பட்டும், அசட்டுத் துணிச்சலுடனும், ரகசியமான பலாத்கார நடவடிக்கைகள்தான் அவற்றிற்குப் பரிகாரமென நினைக்கலாம். அந்த மசோதாக்கள், அரசாங்கத்திற்கு எதிராகத் துவேஷத்தையும் வெறுப்பையும் அதிகமாக்கியே தீரும். அவ்

விதம் அதிகமாகி வருகிறது என்பதற்கு, சிறிதும் சந்தேக மின்றிப் பலாத்கார நடவடிக்கைகளே அறிகுறியாகும்.

"சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டிருப்ப வர்கள், எவ்விதக் கஷ்டத்தையும் அனுபவிக்க உறுதிகொண் டிருப்பதன் மூலம், தங்களுடைய கோரிக்கையை அரசாங்கம் எதிர்க்க முடியாதவாறு செய்திருக்கிறார்கள். அரசாங்கத்தின் மீது அவர்களுக்கு எவ்விதத் துவேஷமும் இல்லை. பலாத்காரத் தின் சக்தியில் நம்பிக்கையுடையவர்களுக்கும், தங்கள் குறை களுக்குத் தவறாமல் நிச்சயமான பரிகாரமளிக்கும் ஒரு முறையைக் காட்டியிருக்கிறார்கள். அம்முறையை யார் உபயோகிக்கிறார் களோ அவர்களுக்கும், யாருக்கு எதிராக அது உபயோகிக்கப் படுகிறதோ அவர்களுக்கும் அது நல்வாழ்வு அளிக்கிறது.

"சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை செய்துகொண்டிருப்பவர்கள் இந்தப் பரிகார முறையின் உபயோகத்தை அறிந்து நடந்து கொள்ளுவார்களாயின், அதனால் எவ்விதத் தீங்கும் நேருமென நான் அஞ்சவில்லை. அவர்களுடைய திறமையைச் சந்தேகிக்க எனக்கு உரிமை இல்லை. கடுமையான பரிகார முறையைக் கைக்கொள்ளவேண்டிய அளவுக்கு நோய் அவ்வளவு மோச மாகிவிட்டதா என்பதையும், சாந்தமான முறைகளையெல்லாம் கைக்கொண்டு பார்த்தாகிவிட்டதா என்பதையும் அவர்கள் நிர்ணயம் செய்துகொள்ளவேண்டும். நோய் கடுமையாகிவிட்டது என்பதிலும், சாந்தமான முறைகள் முற்றிலும் தோல்வியடைந்து விட்டன என்பதிலும் அவர்களுக்குச் சந்தேகமில்லை. மற்றவை கடவுள் சித்தப்படி நடைபெறும்."

புதிய இயக்கத்தைத் தொடங்குவதற்காகக் காந்திஜி பம்பா யில் சத்தியாக்கிரகச் சபையை ஆரம்பித்தார். இந்தியா முழு வதும் மக்கள் உற்சாகத்துடன் கூட்டங்கூடி, சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திடத் தொடங்கினார்கள்.

இதன் மத்தியில் ரௌலட் மசோதாக்கள், மத்திய அரசாங்க சட்டசபையில் நிறைவேறின. தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தி னர்கள் யாவரும் ஏகோபித்து அம்மசோதாக்களை எதிர்த்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அப்போது காந்திஜியின் உடல் நிலை திருப்திகரமாக இல்லை. அப்படியிருந்தும், சென்னையிலிருந்து வந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு, காந்திஜி சென்னைக்கு வந்தார். சென்னையில் ஸ்ரீ கஸ்தூரி ரங்க ஐயங்கார், ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் முதலிய தலைவர்கள் காந்திஜியுடன் கலந்து பேசினர். மார்ச் மாதம் 18-ஆம் தேதி ரௌலட் மசோதாக்கள் சட்டமாயின.

அன்றிரவு அதைப் பற்றியே சிந்தித்தவண்ணம் காந்திஜி தூங்கச் சென்றார். மறுநாள் விடியற்காலம் அவர் வழக்கத்தைக் காட்டிலும் சீக்கிரமாக எழுந்திருந்தார். அவர் அரைத் துக்கத்திலிருந்தபோது, அவர் மனத்தில் திடீரென்று ஓர் எண்ணம் உதயமாயிற்று. விடியற்காலம் அவர் ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரியாரை அழைத்து, தமது திட்டத்தை அறிவித்தார்:

"பொது ஹர்த்தால் அனுஷ்டிக்கும்படி நாம் தேச மக்களைக் கேட்கவேண்டுமென்று நேற்றிரவு கனவில் எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. தன்னைத்தானே பரிசுத்தம் செய்துகொள்ளும் ஒரு முறையே சத்தியாக்கிரகமாகும். நமது போராட்டம் தெய்விகமானது. எனவே, அது ஆன்ம பரிசுத்த நடவடிக்கையுடன் ஆரம்பமாவது முற்றிலும் பொருத்தமென்றே எனக்குத் தோன்றுகிறது. ஆகையால், இந்தியாவிலுள்ள சகல ஜனங்களும் அன்று தங்களுடைய அலுவல்களை நிறுத்திவைத்து, அத்தினத்தை உபவாச தினமாகவும், பிரார்த்தனை தினமாகவும் அனுஷ்டிக்கவேண்டும். முஸ்லிம்கள் ஒரு நாளைக்கு மேல் உபவாசம் இருக்கவேண்டியதில்லை. உபவாசத்தின் கால அளவு இருபத்து நான்கு மணி நேரமாக இருக்கவேண்டும். நமது வேண்டுகோளுக்கு எல்லா மாகாணங்களும் இணங்குமா அல்லது இணங்காதா என்பதைக் கூறுவது மிகக் கஷ்டமான காரியம். எனினும் பம்பாய், சென்னை, பீகார், சிந்து இம்மாகாணங்கள் இணங்கும் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். இந்த மாகாணங்கள் எல்லாம் தகுதியான முறையில் ஹர்த்தாலை அனுஷ்டித்தால்கூடப் போதுமென்று நாம் திருப்தியடைய வேண்டும்."

அதற்கு முதல் நாள் சென்னைக் கடற்கரையில் நடந்த மாபெரும் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது :

"சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திடுவதற்கு முன் தீர்க்காலோசனை செய்யுங்கள். கையெழுத்திட்டுவிட்டால், பிறகு நீங்கள் அந்தப் பிரதிக்ஞையை ஒருபோதும் மீறி நடக்கக்கூடாது. அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதில் உங்களுக்கும் எனக்கும் கடவுள் உதவி புரிவாராக."

## 2

# சத்தியாக்கிரகிகள் வழக்காடலாமா ?

நான் சந்திப்பதற்கு வாய்ப்புக் கிடைத்த சிறந்த தொண்டர்களில் துர்க்காதாஸ் அத்வானி ஒருவர். 1915-இல் நான்

இந்தியாவுக்கு வந்த உடனேயே, கடிதப் போக்குவரத்தின் மூலம் அவரை அறிந்துகொண்டேன். கடிதப் போக்கு வரத்திற்குக் காரணமாக இருந்த சம்பவம், துர்க்காதாஸின் உண்மையான மனிதத் தன்மையைக் காட்டியது. அவர் சிந்துவில் பல ஆண்டுகளாக ஒரே உறுதியுடனும், மனச்சாட்சிக்கு முரணின்றி நேர்மையுடனும், பக்திச் சிரத்தையுடனும் தொண்டு புரிந்து வருகிறார். அவர் இப்போது ஒரு வருடம் கடுங்காவல் தண்டனை* அடைந்து சிறைக்குச் சென்றுள்ளார்.

அப்பீல் கோர்ட்டின் தீர்ப்பு பற்றி என் அபிப்பிராயத்தைக் கூறும்படி கேட்டிருக்கிறார்கள். என்னுடைய பணிவான அபிப் பிராயத்தில், அத்தீர்ப்பு சரியல்ல. 'நியூ கால்' (புதிய அழைப்பு), அரசாங்கத் துரோகமான ஒரு துண்டுப் பிரசுரம் என்று கோர்ட் டார் கூறியிருப்பது தவறாகும். துர்க்காதாஸுக்கு விரோதமாகக் குற்றம் கண்டுபிடிக்க வேண்டும் என்பதற்காக, சாட்சியத்தைச் சுற்றி வளைத்திருக்கிறார்கள்.

எனினும், நான் இவ்வித அபிப்பிராயம் கூறியிருப்பதற்கு, துர்க்காதாஸ் மீது எனக்குள்ள அன்பு காரணமாக இருக்கலாம் என்பதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். சிறைத் தண்டனையைத் தவிர்ப்பதற்காக, துர்க்காதாஸ் பொய் சொல்லக்கூடியவர் என்று நான் நம்பவில்லை. சாட்சியத்தை அப்பீல் கோர்ட்டார் வியாக்கியானம் செய்திருப்பது சரியாக இருக்கலாம்.

ஆனால், துர்க்காதாஸ் சிறைப்பட்டிருப்பதைக் குறித்து அவரையோ அல்லது அவரது குடும்பத்தையோ துக்கப் பிரச்னம் செய்ய ஒரு நண்பன் என்ற முறையிலும், ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையிலும் நான் மறுக்க வேண்டும். துர்க்காதாஸ், மிகவும் தீர்க்காலோசனை செய்த பின்பே, சத்தியாக்கிரகப் பிர திக்ஞை எடுத்துக் கொண்டுள்ளார். அத்தகைய வழக்குகளைப் பற்றி என் கருத்துக்களை வாசகர்களுக்குக் கூற, இந்த வழக் கில் கிடைத்துள்ள சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறேன். வியாஜ்யங்களிலும் அப்பீல்களிலும் நாம் ஏராளமான தொகை செலவு செய்கிறோம். சிறைகளைக் கண்டால் மிதமிஞ்சி பீதியடைகிறோம். கோர்ட்டுகளில் இப்போ திருப்பதைக் காட்டிலும் வழக்குகள் குறையுமாயின், சமூகம் அதிக பரிசுத்தமாகவும் அதிக ஆரோக்கியமாகவும் இருக்கும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. வழக்குத் தொடருவதற்காக, போட்டி போட்டுக்கொண்டு சிறந்த வக்கீல் களை நாடிச் செல்லுவது கண்ணியமற்றதாகும். அத்தகைய

---

* துர்க்காதாஸ் அத்வானி ஓர் அச்சுக்கூடத்தின் சொந்தக்காரர். சாத்விக எதிர்ப்பு பற்றி ஒரு துண்டுப் பிரசுரம் அச்சிட்டதையொட்டி நடந்த வழக்கில், அவர் ஒரு வருடம் கடுங்காவல் தண்டனை அடைந்தார்.

வழக்கை, பொதுஜன நிதியிலிருந்து செலவழித்து நடத்துவது மன்னிக்க முடியாதது. ஒரு சத்தியாக்கிரகி, சிறந்த வக்கீல்களுக்காகவோ அல்லது அப்பீல்களுக்காகவோ பணம் செலவு செய்வது பாவமாகும். எனவே, 'நியூ கால்' சம்பந்தமான சிறைத் தண்டனைகளை எதிர்த்து அப்பீல்கள் செய்யப் போவதாக நான் கேள்விப்பட்டபோது, மிகவும் வேதனையடைந்தேன். ஒருவர் குற்றம் செய்தால், குற்றத்தை ஒத்துக்கொண்டு சிறைத் தண்டனையை அனுபவிக்க வேண்டும். அவர் குற்றம் செய்யாமலிருந்தும், குற்றவாளியென்று தீர்ப்பு அளிக்கப்பட்டால், அவருக்குச் சிறைத் தண்டனை ஓர் அவமானமல்ல. அவர் ஒரு சத்தியாக்கிரகியாக இருந்தால், சிறை வாழ்க்கையின் கஷ்டங்களைக் கண்டு அஞ்ச அவருக்கு உரிமையில்லை.

இந்தியாவில் உள்ள நாம், சந்தேகமும் அவநம்பிக்கையும் குடிகொண்ட ஒரு சூழ்நிலையில் வாழ்ந்து வருகிறோம். வஞ்சகத்திலும் இரக்கமற்ற தன்மையிலும் உலகிலேயே யாரும் போட்டி போட முடியாத ஒரு ரகசிய போலீஸ் இலாகாவின் மத்தியிலே நாம் வசித்து வருகிறோம். அத்தகைய சந்தேகத்தையும் அவநம்பிக்கையையும் அகற்றி, போலீஸ் இலாகாவைச் சீர்திருத்த நாம் விரும்பினால், சிறை வாழ்க்கையை நாம் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அவநம்பிக்கையிலிருந்தும், போலீஸ் இலாகாவிலிருந்தும் விடுதலை பெறுவதற்குற்ற சிறந்த, துரிதமான வழி, நாட்டிலிருந்து தவறான பயத்தையும், எவ்வித பலாத்காரத்தையும் தவிர்ப்பது தான். ஆனால், தொலைவில் உள்ள அந்த நாள் வரும் வரையில், வெகு சிலரான சத்தியாக்கிரகிகள் சிறையைத் தங்களுடைய மற்றொரு வீடாகக் கருதத் தயாராக இருக்க வேண்டும்.

எனவே, துர்க்காதாஸின் நண்பர்கள், இரக்கம் காட்டுமாறு விண்ணப்பம் செய்து கொள்ளும்படி அவருக்கோ அல்லது அவரது மனைவிக்கோ ஆலோசனை கூறமாட்டார்கள் என்றும், அவரது மனைவியிடம் அனுதாப வார்த்தைகள் கூறி அவரது மன வேதனையை அதிகமாக்கிவிடமாட்டார்கள் என்றும் நம்புகிறேன். அதற்கு மாறாக, அவரது மனைவியை, தமது இருதயத்தை இரும்பாக்கிக்கொள்ளும்படியும், அவரது கணவர் குற்றம் செய்யாமல் சிறையில் இருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடையும்படியும் நாம் அவரைக் கேட்டுக்கொள்ள வேண்டியது கடமையாகும். ஸ்ரீமதி துர்க்காதாசுக்குத் தேவையான பண உதவியோ அல்லது வேறு உதவியோ புரிவதுதான், துர்க்காதாசுக்கு நாம் செய்யும் முற்றிலும் உண்மையான தொண்டாகும். 'நியூ கால்' துண்டுப் பிரசுர வழக்குகளுக்காக, ஏறக்குறைய ரூ. 15,000 செலவாகியிருக்கிறதென்று அறிகிறேன். அந்தத் தொகையை, நிச்சயமாக வேறு சிறந்த காரியத்திற்கு உபயோகப்படுத்திக்

கொண்டிருக்க முடியும். நம்மைவிடப் பெரிய சக்தியை எதிர்த்துப் பண விரயம் செய்து நம்மை ஆண்டியாக்கிக்கொள்ளுவது சரியல்ல. அவமானத்திற்கு இடமில்லாத ராஜீய வழக்குகளின் முடிவைக் குறித்து, அதிகப்படியாகக் கவலைப்படுவது ஆண்மைத் தனம் அல்ல.

இங்கே, பாஞ்சாலத்தில்*, தாய்மார்கள் இருதயத்தைப் பிளக்கும் வேதனையுடன் வந்து, நிரபராதிகள் என்று அவர்கள் கருதும் அவர்களது குமாரர்கள் சிறைத் தண்டனை அடைந்ததைக் குறித்துக் கண்ணீர் விடுகிறார்கள். நான் எதுவும் செய்ய இயலாதவனாக இருக்கிறேன் என்பதை அறிவேன். அவர்களுக்கு ஆறுதல் கூறுவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அவர்களுடைய மனத்தில் போலி நம்பிக்கையை உண்டாக்குவது பாவமாகும். எதற்குப் பரிகாரம் காண முடியாதோ அதைப் பொறுமையுடன் அனுபவிக்கும்படி அவர்களிடம் கூறுவதால், அவர்களுக்கு ஆறுதல் ஏற்பட்டுவிடாது. எனவே, குன்றின் மீது ஏறுவது போன்ற ஒரு கஷ்டமான காரியத்தைச் செய்ய நான் முயற்சித்து வருகிறேன். அதாவது, அவர்களையும் சத்தியாக்கிரகிகள் ஆகும்படி கேட்டு வருகிறேன். நமது பேரன்புக்குப் பாத்திரமான நெருங்கிய உறவினர்கள் சிறைத் தண்டனை அடைவதைக் குறித்து நாம் சஞ்சலப்பட்டும், ஆத்திரமடைந்தும் வேதனைக்கு உள்ளாகி வரும் வரையில், ராஜீய தண்டனைகளை நிரந்தரமாக்கவே நாம் துணை புரிந்தவர்களாவோம். இந்த உண்மையை உணர்ந்துகொள்ளுவதற்காகவாவது, அந்தத் தாய்மார்கள் சத்தியாக்கிரகிகளாக வேண்டும். இங்கே நான் சிறைத் தண்டனைகள் என்று குறிப்பிட்டிருப்பது, தீ வைத்தல், கொலை முதலிய குற்றங்களுக்காக விதிக்கப்படும் தண்டனைகளைப் பற்றியதல்ல என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

— 'எங் இந்தியா' — 3—12—1919

# 3

# அரசாங்கத்திற்கும் சத்தியாக்கிரக உரிமை உண்டு!

சர்வ தேச விவகாரங்களில் அன்பு நியதி ஒப்புக்கொள்ளப் படுவதற்கு இன்னும் நீண்ட காலம் ஆகலாம். ஒரு நாட்டு

---

*மகாத்மா காந்தி பிரயாணம் செய்து கொண்டிருந்தபோதுகூட இடைவிடாமல் எழுதிக்கொண்டிருந்தார். இந்தக் கட்டுரை அவர் பாஞ்சாலத்திற்குச் சென்றுகொண்டிருந்தபோது வழியில் எழுதப்பட்டதாகும்.

மக்களுக்கும் மற்றொரு நாட்டு மக்களுக்கும் இடையே அரசாங்க நிர்வாக யந்திரங்கள் சுவர் போல் நின்றுகொண்டு, மக்களின் உள்ளத்தை மறைக்கின்றன. ஐரோப்பாவிலும் கிழக்காசியாவிலும் கடைசியாக நிகழ்ந்துள்ள சம்பவங்களை, முக்கிய அம்சங்களை மாத்திரம் மனத்திற் கொண்டு பரிசீலனை செய்வோமாயின், நாம் ஒரு விஷயத்தைக் காணமுடியும். அதாவது, ஒரு தேசத்துக்கும் மற்றொரு தேசத்துக்கும் இடையே, ஒரு மனிதனுக்கும் மற்றொரு மனிதனுக்கும் இடையே, பலாத்காரத்தினால் பிரச்னைகளைத் தீர்க்க முடிவதில்லை; ஆனால், ஒத்துழையாமை என்ற பொருளாதாரத் தடை, தரைப்படைகளையும் கடற்படைகளையும்விட மிகவும் அதிக வலிமை பொருந்தியது, முடிவான பலனைக் கொடுக்கக்கூடியது;—இதை உணரும் வகையில் உலகம் தீவிரமாக எவ்வாறு முன்னேக்கிச் சென்று வருகிறது என்பதை நாம் காண முடிகிறது.

போரிலிருந்து வெற்றியுடன் வெளி வந்தவை போல் தோன்றும் நாடுகளின் மீது, அவ்வெற்றிகள் புதிய கடமைகளையும் கஷ்டங்களையுமே சுமத்தியிருக்கின்றன. தோல்வியுற்ற நாடுகளின் உணவு, கைத்தொழில் பிரச்னைகள், அந்த நாடுகளைப் போல் வெற்றி பெற்ற நாடுகளுக்கும் பெரும் கவலைக்கு இடமாக இருந்து வருகின்றன. நேச தேச அரசாங்கங்களின் சாமர்த்தியமெல்லாம், வெற்றி பெற்ற தங்களுடைய மகத்துவத்திற்குக் குந்தகமின்றி, தோல்வியுற்ற ஜனங்களின் பொருளாதார நிலையைச் சீர்திருத்தவும், அவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்கும்படி செய்யவும், உலகம் நடைபெற அவர்களுக்கு வேலை செய்வதில் விருப்பம் உண்டாகும்படி செய்யவும் தங்களால் முடியும் என்பதைக் காட்டவே பிரயோகிக்கப்பட்டு வருகிறது.

அமெரிக்கக் குடியரசுக் கட்சியின்* சர்வ தேசத் திட்டத்தைப் பற்றி வந்துள்ள சுருக்கமான தந்தியின் கருத்தைக் கவனிக்கும்போது, அமெரிக்கா முதலிய தூர மேற்கு நாடுகள் ஓர் உண்மையை உணரத் தொடங்கியிருக்கின்றன என்று தெரிகிறது. அதாவது, சர்வ தேச சங்கத்தின் இறுதி ஆதரவு, மீண்டும் தீங்கை விளைவிக்கும் சங்கிலித் தொடர் போன்ற ஆயுத வலிமையை அனுமதிப்பதாக இருக்கக்கூடாது; யுத்தத்தைத் தவிர்க்கும் சர்வ தேச சக்தியை, அதாவது தேசங்களின் ஒத்துழையாமையை ஆதரிப்பதாக இருக்க வேண்டும் என்பதே. இதிலிருந்து, அடுத்த படியான அன்பு நியதியை முற்றிலும் ஒப்புக்கொள்ளுவது வெகு எளிதாகும்.

---

*அப்போது அமெரிக்காவில் பொதுத் தேர்தல் நடந்துகொண்டிருந்தது. தேர்தலில் கலந்துகொண்ட பெரிய கட்சிகள் தேர்தல் இயக்கத்திலும், அறிக்கைகள் வெளியிடுவதிலும், எதிர்காலத் திட்டங்கள் வகுப்பதிலும் தீவிரமாக ஈடுபட்டிருந்தன.

ஒரு புதிய சக்தி உருவாகி உபயோகத்திற்கு வரும் வரையில், பழைய சக்திகளின் தலைவர்கள் அந்தப் புதுமையை, பேச்சளவில் மாத்திரமே இருக்கக்கூடிய விஷயமென்றும், அனுஷ்டான சாத்தியமற்றதென்றும், அடைய முடியாத உன்னத லட்சியமென்றும் பலவாறாகக் கூறுவார்கள். நீராவி ரெயில் வண்டியில் குதிரைகளையும் வேறிடங்களுக்கு ஏற்றிச் செல்ல முடியும் என்பதைக் குதிரை வியாபாரி நேரில் பார்க்கும் வரையில், அவர் ரெயில் வண்டி இஞ்ஜினீயரை ஏளனம் செய்து வந்தார் என்பதை நாம் நிச்சயமாக நம்பலாம். அது போலவே, மின்சார இஞ்ஜினீயரை வீண் பிரமை பிடித்தவர் என்றும், பைத்தியக்காரர் என்றும் நீராவி ரெயில் வண்டி இஞ்ஜினீயர்கள் கூறி வந்தார்கள். மின்சாரக் கம்பிகளின் மூலம் வேலை நடைபெறுவதை நேரில் பார்த்தபோதுதான், அவர்களுக்கு உண்மை தெரிந்திருக்கும்.

சர்வ தேச மக்களை அன்புக் கம்பிகளால் இணைப்பதற்கு நீண்ட காலம் ஆகலாம். எனினும் தொடர்ந்து பலாத்கார முறையால், அதாவது யுத்தத்தினால் நிர்ப்பந்தப்படுத்துவதைக் காட்டிலும் சர்வ தேச ஒத்துழையாமைக்கு ஆதரவளிப்பது, இறுதியான, உண்மையான பிரச்னையை நோக்கித் திட்டவட்டமான ஒரு முன்னேற்றமாகும். அத்தகைய முன்னேற்றகரமான ஒரு முறையைத்தான் அமெரிக்கக் குடியரசுக் கட்சியினர் வகுத்துள்ளனர் என்று தோன்றுகிறது.

இவ்விஷயமாக மனத்தை மிகவும் கவரும் செய்தி என்னவெனில், ஐரிஷ் நிலைமை சம்பந்தமாகக் கைக்கொள்ள உத்தேசித்திருக்கும் நடவடிக்கை பற்றிய வதந்தியே. பிரிட்டிஷ் மந்திரி சபை, அயர்லாந்தில் ராணுவச் சட்டத்திற்குப் பதிலாக ஒத்துழையாமைக் கொள்கையை அனுஷ்டிக்க உத்தேசித்திருக்கிறதென்று 'அப்ஸர்வர்' பத்திரிகை கூறுகிறது.

அதிருப்தி ஏற்பட்டுள்ள அயர்லாந்தின் உள்நாட்டுப் பிரதேசங்களில் உள்ள மக்களுக்குப் புத்தி வரும் வரையில், அப்பிரதேசங்களை முற்றிலும் அசட்டை செய்துவிடுவதே பிரிட்டிஷ் மந்திரி சபையின் திட்டமாகும். அவ்விடங்களில் படைகள், வியாபாரம், கல்வி, வருமானத்தைப் பகிர்ந்தளித்தல், ரெயில்வேக்கள் எவையும் இரா. அவ்விடங்களை அரசாங்கம் முற்றிலும் பகிஷ்காரம் செய்துவிடும்!

ஒத்துழையாமை, சத்தியாக்கிரகத்தின் ஓர் அத்தியாயமே. சத்தியாக்கிரகத்தின் சிறப்பு இதுதான்: ஒரு போராட்டத்தின் இரு கட்சியினரும் அதை உபயோகிக்கலாம். அதை அனுஷ்டிப்போர் எல்லை மீறி விடாமல் இருப்பதற்குற்ற எச்சரிக்கை அம்சங்கள் அதில் இருக்கின்றன. எந்தப் பக்கத்தில் அதிக அளவு சத்தியமும் நீதியும் இருக்கிறதோ, அந்தப் பக்கத்திற்குத்

தானுக சத்தியமும் நீதியும் கிடைக்க அந்த அம்சங்கள் உதவியாக இருக்கின்றன. அது தொழிலாளர்களுக்கு எவ்வளவு சக்தியும் நம்பிக்கையும் வாய்ந்த ஆயுதமாக இருக்கிறதோ, அதுபோல் முதலாளிகளுக்கும் அது சக்தியும் நம்பிக்கையும் வாய்ந்த ஆயுதமாக இருக்கிறது. ஜனங்களைப் போல் அரசாங்கத்திற்கும் சத்தியாக்கிரகம் சக்தி பொருந்திய ஆயுதமாகும். அரசாங்கம் தவருக நடந்தால். மக்கள் நடத்தும் போராட்டத்தில் அது மக்களுக்கே வெற்றியைக் கொடுக்கும். அது போலவே, மக்கள் தவருகவோ அல்லது நியாயமற்ருே நடந்தால், அந்த ஆயுதம் அரசாங்கத்துக்கு வெற்றியைக் கொடுக்கும்.

சத்தியாக்கிரக ஆயுதங்களைக் கொண்டு போராட்டம் நடைபெறுமாயின், ஜோடிக்கப்பட்ட வழக்குகளும் செயற்கைக் கிளர்ச்சிகளும் வெகு விரைவில் சீர்குலைந்து தோல்வியடையும். மக்கள் தங்களைத் தாங்களே ஆட்சி புரியத் தகுதியற்றவர்கள் என்ருே, அல்லது ஒரு லட்சியத்திற்காகத் தியாகம் செய்ய அவர்கள் விரும்பவில்லை என்ருே வைத்துக்கொள்ளுங்கள். அவ்விதமாயின், அவர்கள் எவ்வளவு கூச்சலிட்டுச் சந்தடி செய்தாலும், ஒத்துழையாமையில் அவர்களுக்கு வெற்றி கிடைக்காது. அரசாங்கம் மொத்தத்தில் நல்லதாகவும், நியாயமானதாகவும், மக்களுக்கு அவசியமானதாகவும் இருந்து, ஜனங்களின் புகார் போலியாகவும், உண்மையற்றதாகவும், தப்பெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டதாகவும், அல்லது மற்ற மூலாதாரமான அம்சங்களில் சர்க்காரின் அருமை பெருமைகளுடன் ஒப்பிடும் போது அற்பமானதாகவும் இருக்குமாயின், அந்நிலையில் மாத்திரமே ஏதாவதொரு கட்சியினர் துவேஷமோ, இரத்தக் களரியோ இல்லாமல் ஒத்துழையாமையை அனுஷ்டிக்க வேண்டும். அவ்விதமாயின், இறுதியில் அப்பிரச்னை தானுக எள்ளளவும் தவறின்றி நீதியாகத் தீர்க்கப்பட்டுவிடும்.

சத்தியாக்கிரக ஒத்துழையாமை ஆயுதத்தை அரசாங்கத்துக்கு விரோதமாக ஜனங்கள் உபயோகிப்பது போல், ஜனங்களுக்கு விரோதமாக அரசாங்கமும் உபயோகிக்கலாம் என்பது நீண்ட காலமாக எனது உறுதியான அபிப்பிராயமாகும். இது பொதுவாகப் பலருக்கும் தெரியாதிருக்கலாம். எனவே, ஐரிஷ் குழப்பங்களையொட்டி இந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ள உத்தேசிக்கப்பட்டிருப்பது உண்மையாயின், அது சத்தியாக்கிரகக் கொள்கைகளை எவரும் எச்சமயத்திலும் எந்த நாட்டிலும் அனுஷ்டிக்க முடியும் என்பதற்கு ஒரு சிறந்த உதாரணமாகத் திகழும்.

—'எங் இந்தியா' - 23—6—1919

# 4

# ஏப்ரல் ஆறும் பதின்மூன்றும்

இந்தியா முழுவதும் கொதித்து எழும்படி செய்த ஏப்ரல் 6-ஆம்* தேதியை நாம் மறப்பது அசாத்தியமான காரியம். ஏப்ரல் 13-ஆம் தேதியன்று பாஞ்சாலத்தில் நிரபராதிகள் உதிரம் சிந்தியதன் மூலம், அப்பிரதேசம் இந்தியா முழுவதற்கும் ஒரு யாத்திரை ஸ்தலமாகியிருக்கிறது. ஏப்ரல் 6-ஆம் தேதிதான் சத்தியாக்கிரகம் உதயமாயிற்று. சத்தியாக்கிரகத்தின் சட்ட மறுப்பு அம்சத்தை ஒருவர் ஆட்சேபிக்கலாம். ஆனால், சத்தியாக்கிரகத்தில் அடங்கியுள்ள உண்மை, அன்பு, அகிம்சை முதலிய மூலாதாரமான தத்துவங்களை யாரும் ஆட்சேபிக்க முடியாது. அகிம்சையுடன் சத்தியமும் சேர்ந்துவிடுமாயின், நீங்கள் உலகத்தையே உங்கள் பாதத்தில் விழும்படி செய்ய முடியும். சத்தியாக்கிரகத்தின் சாரம், ராஜீய அதாவது தேசீய வாழ்க்கையில் சத்தியத்தையும் சாந்தத்தையும் அனுஷ்டிப்பதே; வேறு எதுவுமில்லை. ஒருவர் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டாலும், எடுத்துக்கொள்ளாவிட்டாலும், சத்தியாக்கிரகத் தத்துவம் பாமர ஜனங்களிடையே ஊடுருவியுள்ளது என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. பாஞ்சாலத்தில் எனது சுற்றுப்பிரயாணத்தின்போது நான் ஆயிரக்கணக்கான பஞ்சாபியர்களைச் சந்தித்தேன். அப்போது நான் பெற்ற அனுபவம் அதுதான்.

மற்றும், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கும் சுதேசிக்குமான உறுதியான திட்டம் ஆரம்பிக்கப்பட்டதும் ஏப்ரல் மாதம் 6-ஆம் தேதிதான்.

ரௌலட் சட்டத்தின் நோக்கத்தைத் தகர்த்து, அதைச் செத்துப்போன ஒரு சட்டமாகச் செய்தது ஏப்ரல் 6-ஆம் தேதியே. ஏப்ரல் 13-ஆம் தேதி பயங்கரமான உயிர்ப் பலி நாடகம் மாத்திரம் நடைபெறவில்லை; அந்தக் கோர நாடகத்தில் ஹிந்து-முஸ்லிம் உதிர வெள்ளமும் தங்கு தடையின்றி கலந்து ஓடியது. அதுவே ஹிந்து-முஸ்லிம் ஒப்பந்தத்திற்கு முத்திரை வைத்தது.

இந்த இரண்டு மாபெரும் தேசீய சம்பவங்களை, எந்த விதத்தில் நினைவு கூர்வது, அல்லது கொண்டாடுவது?

---

*வருடந்தோறும் ஏப்ரல் 6-ஆம் தேதி இந்தியாவெங்கும் சத்தியாக்கிரக தினமாக அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. அது ஒரு பிரார்த்தனை தினமாகக் கருதப்படுகிறது. அந்த நாளை, எல்லோரும் தன்னைத் தானே பரிசுத்தம் செய்துகொள்ள அர்ப்பணம் செய்ய வேண்டுமென்பது காந்திஜியின் கட்டளையாகும்.

யார் விரும்புகிறார்களோ அவர்கள் ஏப்ரல் மாதம் 6-ஆம் தேதி உண்ணாவிரதம் இருந்து, (24 மணி நேரம் எவ்வித உணவும் உட்கொள்ளக்கூடாது) பிரார்த்தனை செய்ய வேண்டும். மாலை 7 மணிக்கு இந்தியா முழுவதும் பொதுக்கூட்டங்கள் கூட்டி, ரௌலட் சட்டத்தை ரத்து செய்யும்படி அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள வேண்டும்; அந்தச் சட்டம் ரத்தாகும் வரையில் தேசத்தில் அமைதி இராது என்ற தேச மக்களின் நம்பிக்கையையும் தெரிவிக்க வேண்டும். ரௌலட் சட்டம் உபயோகத்தில் இராமல் செத்துவிட்டது என்பது மாத்திரம் போதாது. அது நாட்டிற்கு வெட்கக்கேடா, அல்லவா என்பதே கேள்வியாகும். அது நாட்டிற்கு வெட்கக்கேடாயின், அது ரத்து செய்யப்பட வேண்டும். அரசியல் சீர்திருத்தங்களுக்கு முன் அதை ரத்து செய்வது, அரசாங்கத்தின் நல்லெண்ணத்திற்கு அறிகுறியாக இருக்கும்.

6-ஆம் தேதியிலிருந்து அந்த வாரம் முழுவதும், 13-ஆம் தேதி நடந்த கோர சம்பவத்தையொட்டிய ஏதாவது வேலையில் ஈடுபட வேண்டும். எனவே, ஜாலியன்வாலா பாக் சின்னத்திற்காக நிதி வசூல் செய்வதில் அவ்வாரம் முழுவதும் ஈடுபட வேண்டுமென நான் யோசனை கூறத் துணிகிறேன். மொத்தம் பத்து லட்சம் ரூபாய் வசூல் செய்ய வேண்டுமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நிதி வசூல் செய்யும் விஷயமாக ஒவ்வொரு கிராமமும், நகரமும் சொந்தமாகத் தன் தன் திட்டத்தை வகுத்துக்கொள்ளலாம். ஆனால், பணம் கையாடுதல், மோசடி எதுவும் நேராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். ஏப்ரல் 12-ஆம் தேதி மாலை நிதி வசூல் முடிந்துவிட வேண்டும்.

பின்னர் 13-ஆம் தேதி வருகிறது. நாட்களுக்கெல்லாம் நாளான அந்தப் பதின்மூன்றாம் தேதியன்று உண்ணாவிரதமிருந்து பிரார்த்தனை நடத்த வேண்டும். அன்று மனத்தில் பகையோ, அல்லது கோபமோ இருக்கக்கூடாது. அன்று மாண்ட நிரபராதிகளை நாம் ஞாபகத்தில் இறுத்திக்கொள்ள விரும்புகிறோம். படுகொலையின் கொடுமையை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள விரும்பவில்லை. வஞ்சம் தீர்த்துக்கொள்ளத் தயாராக இருப்பதன் மூலம் அல்ல, தியாகம் செய்யத் தயாராக இருப்பதன் மூலம்தான் நாடு உயரும். அன்று மக்கள் புரிந்த அத்து மீறிய நடவடிக்கைகளையும் நம் நாடு ஞாபகப்படுத்திக் கொண்டு, அவற்றிற்காக வருந்த வேண்டும் என்றும் நான் கூறுவேன்.

இறுதி தினத்தன்று இந்தியா முழுவதும் நாம் கூட்டங்கள் கூடுவதுடன் அந்த வாரம் முடிவுறும். அத்தகைய கோரமான படுகொலைகள் மீண்டும் நடைபெறுவது அசாத்தியமாக இருப்ப

தற்குற்ற தகுந்த முறைகளைக் கைக்கொள்ளும்படி இந்திய அரசாங்கத்தையும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய அரசாங்கத்தையும் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டு, அந்தக் கூட்டங்களில் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டும்.

அந்த வாரத்தில் ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும், சத்தியாக்கிரகக் கொள்கைகளின் தத்துவத்தை முன்னரைக் காட்டிலும் இன்னும் அதிகமாக, தனக்குத் தானே உணர்ந்து கொள்ள வேண்டும்; ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, சுதேசி இவற்றின் முக்கியத்தையும் உணரவேண்டும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை வற்புறுத்துவதற்காக, ஏப்ரல் 12-ஆம் தேதி வெள்ளிக்கிழமை ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அடங்கிய கூட்டங்களை நடத்த வேண்டுமென்றும் நான் யோசனை கூறுவேன்.

அவ்விதமாக இந்தத் தேசீய வாரம், பரிசுத்தம், ஆன்ம பரிசோதனை, தியாகம், இம்மியளவும் தவறாத ஒழுங்கு, ஆழ்ந்த தேசீய அபிலாஷைகளை வற்புறுத்துதல் இவற்றிற்கான வாரமாக இருக்க வேண்டும். துவேஷத்தின் அறிகுறியோ, பேச்சில் பலாத்காரமோ எதுவும் இருக்கக்கூடாது. அதே சமயம் முற்றிலும் உறுதியும், பயமின்மையும் இருக்க வேண்டும்.

6-ஆம் தேதியும் 13-ஆம் தேதியும் தேசத்தில் ஹர்த்தாலும் அனுஷ்டிக்கப்பட வேண்டாமா? இந்தக் கேள்விக்கு என் பதில் என்னவெனில், வேண்டவே வேண்டாம் என்பதுதான். இந்த வாரம், சத்தியத்திலும் அகிம்சையிலும் நம்பிக்கை உடையவர்களுக்குச் சத்தியாக்கிரக வாரமாகும். சென்ற ஏப்ரல் 6-ஆம் தேதி நடந்த சத்தியாக்கிரக ஹர்த்தால், சத்தியாக்கிரகத்திற்குப் பூர்வாங்கமானது. சென்ற ஏப்ரல் 13-ஆம் தேதி நடந்த ஹர்த்தாலில், யாதொரு வற்புறுத்தலுமின்றி மக்கள் தாங்களாக விருப்பத்துடன் கலந்துகொண்டார்கள். எனினும், அன்று நேரம் செல்லச் செல்ல மக்கள் வற்புறுத்தலில் முற்றிலும் ஈடுபடவில்லையென்று கூற முடியாது. வண்டிகள் முதலியவற்றை உபயோகிக்கக் கூடாதென்று அன்று அவர்கள் வற்புறுத்தத் தொடங்கினர்கள். எனவே, ஒழுங்கையும் தவத்தையும் அனுஷ்டிக்க வேண்டிய இந்த வாரத்தில், ஹர்த்தால் அனுஷ்டிக்க வேண்டுமென நான் யோசனை கூறவேமாட்டேன். தவிர, ஹர்த்தாலை ஏதோ கிள்ளுக்கீரை போன்ற சாதாரண விஷயமாக்கி விடக்கூடாது. மிகவும் அபூர்வமான சந்தர்ப்பங்களில்தான் அதைக் கையாள வேண்டும்.

தேசீய வாரத்தில் அனுஷ்டிக்க வேண்டிய நடவடிக்கைகளில், எல்லாக் கட்சிகளும், எல்லா வகுப்புகளும் பூர்ண பங்கு எடுத்துக்கொள்ள வழி தேடுவார்களென்றும், தேசீய விழிப்பும்,

உண்மையான, திட்டமான முன்னேற்றமும் ஏற்படுவதற்கான ஒரு வாரமாக அதைச் செய்வார்கள் என்றும் நான் பணிவுடன் நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 10—3—1920

# 5

# கோர்ட்டில் மன்னிப்புக் கேட்காததேன்?

சத்தியாக்கிரகிகளான வக்கீல்களுக்கு அகமதாபாத் ஜில்லா நீதிபதி அனுப்பியிருந்த கடிதம்* 'எங் இந்தியா'வில் பிரசுரிக்கப்பட்டிருந்தது பற்றியும், அவ்விஷயமாக என் வியாக்கியானங்கள் பற்றியும் தொடரப்பட்ட வழக்கு விசாரணையை நீண்ட காலமாக எல்லாரும் எதிர்பார்த்து வந்தார்கள். 'எங் இந்தியா' ஆசிரியர் மீதும் பிரசுரகர்த்தா மீதும் அவ்வழக்கு தொடரப்பட்டிருந்தது. இப்போது வழக்கு விசாரணை நடந்து, தீர்ப்பும் கூறியாகிவிட்டது. ஆசிரியர், பிரசுரகர் இருவரையும் கோர்ட்டார் கடுமையாகவும் பகிரங்கமாகவும் கண்டித்துவிட்டு, விடுதலை செய்துள்ளனர். எங்கள் இருவரில் ஒருவருக்கும் கோர்ட்டார் தண்டனை விதிக்கவில்லை. அந்தத் தீர்ப்பைப் பற்றி இப்போது நான் குறிப்பிடுவதற்கு ஒரே ஒரு காரணம்தான் உண்டு. அதாவது அந்தத் தீர்ப்பிலிருந்து, நான் ஒரு சத்தியாக்கிரகி என்ற முறையில் ஒரு படிப்பினையைத் தெரிந்துகொள்ள ஆர்வம் உடையவனாக இருக்கிறேன். கோர்ட்டாரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி பல நண்பர்கள், பரிசுத்தமான நட்புக் காரணமாக எங்களுக்கு யோசனை கூறினார்கள். ஆனால், அவர்களுடைய யோசனையை அங்கீகரிக்க நான் மறுத்துவிட்டேன். அவர்கள் கூறிய புத்திமதியை ஏற்க மறுத்ததற்குப் பிடிவாதம் காரணம் அல்ல என்று அந்த நண்பர்களுக்கு உறுதி கூறுகிறேன். ஏனெனில், அது ஒரு மகத்தான கொள்கையைப் பொறுத்த விஷயமாகும். மன்னிப்புக் கேட்பது, அந்தக் கொள்கைக்குக் குந்தகம் விளைவிப்பதாக முடியும்.

பத்திரிகை எழுத்தாளன் என்ற முறையில் நான் எனது சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும், அதே சமயம்

* சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டிருந்த வக்கீல்களுக்கு, அகமதாபாத் ஜில்லா நீதிபதி கடிதங்கள் அனுப்பியிருந்தார். சட்டத்தை மீறிப் பிரதிக்ஞைகள் எடுத்துக்கொண்டதற்காக, வக்கீல் தொழில் சட்டப்படி அவர்களை ஏன் வக்கீல் தொழிலிலிருந்து விலக்கிவிடக்கூடாது என்பதற்குக் காரணம் கூறவேண்டும் என்பதே அந்தக் கடிதத்தில் கண்டிருந்த விஷயமாகும்.

சட்டத்திற்கு மரியாதை செலுத்தவும் வேண்டியிருந்தது. சட்டத்தை நான் அறிந்தவரையில், கோர்ட்டை அவமதித்த குற்றம் எதுவும் நான் செய்யவில்லை. இது போன்ற மற்றொரு சமயத்தில் நான் அதே குற்றத்தைச் செய்யத் தயாராக இல்லாவிடில், நான் மன்னிப்புக் கேட்க முடியாது என்ற உண்மையையே எனது வாதம் அடிப்படையாகக்கொண்டிருந்தது. கோர்ட்டில் கேட்கும் மன்னிப்பு உண்மையாக இருக்க வேண்டுமாயின், தனி நபரிடம் கேட்கும் மன்னிப்பைப் போல் அந்தரங்க சுத்தியுடன் இருக்க வேண்டும். அதே சமயத்தில், கோர்ட்டாருக்கு நான் ஒரு கடமையைச் செய்ய வேண்டியவனாகவும் இருந்தேன். பிரதம நீதிபதியின் புத்திமதியை அங்கீகரிக்க நான் மறுப்பதென்பது, அற்ப விஷயம் அல்ல. அதிலும் குறிப்பாக, என்னுடன் நடத்திய கடிதப் போக்குவரத்தில் அன்பும் ஆதரவும் காட்டிய பிரதம நீதிபதியின் புத்திமதியை நான் ஒப்புக்கொள்ள மறுப்பது சாதாரண விஷயமல்ல.

எனவே, நான் இருதலைக் கொள்ளி எறும்பு போல் ஆனேன். அந்நிலையில் நான் எவ்வித எதிர் வழக்கும் ஆடுவதில்லையென்றும், ஆனால் எனது நிலைமையை விளக்கிப் பட்டவர்த்தனமாகவும் பூரணமாகவும் ஒரு வாக்குமூலம் கொடுப்பதென்றும் தீர்மானித்தேன். தீர்ப்பு எனக்கு விரோதமாக இருக்குமாயின், கோர்ட்டார் தகுதியென எண்ணும் தண்டனையை விதிக்கட்டும் என்றிருந்தேன். கோர்ட்டாரை அவமதிக்கும் உத்தேசம் எனக்கு இல்லை என்பதையும், இந்த வழக்கை விளம்பரப்படுத்த நான் விரும்பவில்லை என்பதையும் காட்டுவதற்காக, விளம்பரத்தைத் தடுக்க நான் விசேஷ முன் ஜாக்கிரதையான முறைகளைக் கைக்கொண்டேன். எனது நடவடிக்கையை, கோர்ட்டிற்குக் கீழ்ப்படியாமை என்று கூறுவதாயின், அது அறைகூவல் அல்ல, எது வந்தாலும் அனுபவிப்போம் என்ற மனோபாவத்தையே காட்டுகிறதென்றும், அது கோபமோ, துவேஷமோ அல்ல, முற்றிலும் தன்னடக்கத்தையும் மரியாதையையுமே காட்டுகிறதென்றும் கோர்ட்டாருக்குத் திருப்தி ஏற்படும்படி செய்வதில் நான் வெற்றி பெற்றேன் என்று எண்ணத் துணிகிறேன்.

நான் மன்னிப்புக் கேட்கவில்லை என்பதற்குக் காரணம் என்னவெனில், மன்னிப்புக் கோருவது மனப்பூர்வமானதாக இருக்க வேண்டும்; அவ்விதம் இராவிடில், அது மனச்சாட்சிக்கு விரோதமாகும் என்பதே. இதற்கு முன் நான் செய்த சட்ட மறுப்புகளைக் காட்டிலும் இந்தச் சட்ட மறுப்புதான் கூடியவரையில் அப்பழுக்கற்றது என்பது எனது உறுதியான அபிப்பிராயம். கோர்ட்டாரும் பரஸ்பரம் பெரிதும் வினயத்துடனும் மரியாதையுடனும் நடந்துகொண்டார்கள் என்பதையும், எனது சட்ட மறுப்பின் மரியாதையான நோக்கத்தை அவர்கள் அறிந்துகொண்டார்கள் என்பதையும் நான் உணருகிறேன். நீதிபதி

மார்ட்டெனின் தெளிவான தீர்ப்பு, சட்டத்தை விளக்கி, எனக்கு விரோதமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், எனது நடவடிக்கையின் நேர்மையை அது ஆட்சேபிக்காததற்காக நன்றி செலுத்துகிறேன். நீதிபதி ஹேவார்டின் தீர்ப்பு, எனது நடவடிக்கை சாத்விக எதிர்ப்பு என்பதை ஒப்புக்கொண்டிருப்பதுடன், தண்டனை விதிக்காததற்கு அதுதான் காரணமென்றும் திட்டமாகக் குறிப்பிட்டிருக்கிறது. இங்கேதான், சாத்விக சட்ட மறுப்பு முற்றிலும் நியாயமானது என்பதை நாம் தெரிந்து கொள்ளுகிறோம். சட்ட மறுப்பு சாத்விகமானதாக இருக்க வேண்டுமாயின், அது மனப்பூர்வமாகவும், மரியாதைக்குக் குந்தகமின்றியும், அடக்கத்துடனும் இருக்க வேண்டும்; வீம்பு செய்வதாக இருக்கக்கூடாது. மற்றும் அது நன்கு அறிந்து கொள்ளப்பட்ட ஏதாவது கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்; மனம் போன போக்கில் இருக்கக் கூடாது. எல்லாவற்றையும்விட மேலாக, அதன் பின் விரோதத்திற்கோ அல்லது துவேஷத்திற்கோ இடம் இருக்கக்கூடாது. ஸ்ரீ தேசாயும் நானும் செய்த சட்ட மறுப்பில், இந்த அம்சங்கள் யாவும் இருந்தன என்பதை நான் பணிவுடன் குறிப்பிடுகிறேன்.

— 'எங் இந்தியா' — 24—3—1920

## 6

# பிரார்த்தனையின் சக்தி

புனிதமான தேசீய வாரத்தின் நடவடிக்கைத் திட்டத்தில், உண்ணுவிரதத்தையும் பிரார்த்தனையையுமே நான் முதன்மையாகவும் சிரேஷ்டமாகவும் வைத்துள்ளேன். நமது தேசீய வாழ்க்கையின் மலர்ச்சிக்கு அவ்விரண்டின் அவசியத்தையும் வற்புறுத்தி நான் போதிய அளவு கூறி வந்துள்ளேன். இவ்விரண்டையும் பற்றி என் சொந்த அனுபவத்திலிருந்தே நான் பேசுகிறேன். இதே பிரார்த்தனை விஷயத்தைப் பற்றி நான் ஒரு நண்பருக்கு எழுதிக் கொண்டிருந்தபோது, டென்னிஸன்* எழுதியுள்ள அற்புதமான ஒரு விஷயத்தைக் கவனிக்க நேர்ந்தது. அந்தக் கவிதையை 'எங் இந்தியா' வாசகர்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்.

---

* உலகப் புகழ் பெற்ற பிரிட்டிஷ் கவிகளில் ஆல்பிரட் லார்டு டென்னிஸனும் ஒருவர். பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் இவரது கவிதைகள் இந்தியா முழுவதும் உயர்தரக் கல்விச் சாலைகளிலும் கலாசாலைகளிலும் பாட புத்தகங்களில் இடம் பெற்று வந்தன. இவர் 1850-ஆம் ஆண்டிலிருந்து 1892-இல் அவர் காலமாகும் வரையில் பிரிட்டிஷ் அரசாங்கக் கவியாக இருக்கும் கௌரவத்தைப் பெற்றார். இவரது சிருஷ்டியான பல அற்புதக் கவிதைகள், ஆங்கில இலக்கியத்தின் அமர காவியங்களாகத் திகழ்கின்றன.

அதன் மூலம் ஒரு வேளை அவர்களை, பிரார்த்தனையின் சக்தியில் உறுதியான நம்பிக்கையுடையவர்களாக மாற்றலாம் அல்லவா? ரத்னம் போன்ற அந்தக் கவிதை இதுதான் :

" இவ்வுலகின் கனவிற்கே எட்டாத அளவினிலே
எவ்வளவோ விஷயங்கள் இறைவணக்கத்தால் முடியும் !
எவ்விதத்தே ஊற்றின்நீர் பீறிட்டே ஏறுகிறதோ
இரவுபகலாய் உன்குரலும் எனக்காக உயரட்டும்!

அடுத்துள்ள நண்பர்க்கும் அவருக்கும் சேர்த்தொன்ருய்
கடவுள்தனை அறிந்திருந்தும் அவன்அருளால் கருணைபெற
எடுத்துக் கை வணங்காமல் எவரொருவர் இருந்தாலும்
கண்மூடி விவேகமிலா ஆடொத்த மனிதர்களே

பொன்னைப்போல் ஒளிருகின்ற பூவுலகம் முழுவதுமே
அன்பாலே நினைந்தார்தம் அகத்திடத்தே சேருகின்ற
இன்பமிகு இறையவனின் இணையடிகள் தன்னேடு
பொன்னெத்த சங்கிலியால் பிணைக்கப்பட் டுள்ளதுகாண்!"

இந்தியாவில் நான் செய்த யாத்திரையின் போதெல்லாம், பல்வேறு நம்பிக்கையுடைய ஆடவர்களுடனும், பதினயிரக் கணக்கான பெண்களுடனும், ஆயிரக்கணக்கான மாணவர் களுடனும் பழகும் வாய்ப்பு கிடைத்தது. நான் அவர்களுடன் தேசீயப் பிரச்னைகள் பற்றி விவாதித்துள்ளேன். நான் எவ்வளவு உணர்ச்சிப் பெருக்குடன் அவர்களுடன் விவாதித்தேன் என் பதை வர்ணிக்க இயலாதவனுக இருக்கிறேன். நமது தேசிய நிலையை இருதய பூர்வமாக அறிந்துகொள்ளும் ஒரு கட்டத்தை நாம் இன்னும் அடையவில்லை என்பதைக் கண்டுபிடித்துள்ளேன். அந்த நிலையை அறிந்துகொள்ளுவதற்கு அவசியமான ஒழுங்கு நம்மிடம் இல்லை. நம்மிடையே தேவையான ஒழுங்கும் தன்னலத் தியாக உணர்ச்சியும், பணிவும், மன உறுதியும் ஏற்பட வேண்டும். இவையின்றி உண்மையான முன்னேற்றம் ஏற்படு வது முடியாத காரியம். அவ்விதக் குணங்கள் உண்டாவதற்கு, உண்ணுவிரதத்தையும் பிரார்த்தனையையும் போன்ற சக்தி பொருந்திய சாதனங்கள் வேறு எவையும் இல்லை என்று நான் கூறத் துணிகிறேன். எனவே, இந்தியா முழுவதும் உள்ள கோடிக்கணக்கான ஜனங்களும் மனப்பூர்வமான உண்ணுவிரதத் துடனும் பிரார்த்தனையுடனும் சத்தியாக்கிரக வாரத்தை ஆரம் பிப்பார்கள் என்று நம்புகிறேன்.

இந்த வாரத்தில், சத்தியாக்கிரகத்தில் அடங்கியுள்ள சாத்விக எதிர்ப்பு அம்சத்தை வற்புறுத்த நான் விரும்பவில்லை. அன்று எல்லோரும் சத்தியத்தையும் அகிம்சையையும் பற்றிச்

சிந்தித்து, யாராலும் வெல்ல முடியாத அவற்றின் இணையற்ற சக்தியை உணர வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். சத்தியம், அகிம்சை என்ற நிரந்தரமான, அழிவற்ற இந்த விதியினால் நாம் எல்லோரும் நமது வாழ்க்கையை ஒழுங்கு படுத்திக்கொள்ளுவோமாயின், சாத்விக எதிர்ப்பிற்கோ அல்லது மற்ற எதிர்ப்பிற்கோ இடமே ஏற்படாது.

எதிர்ப்பைச் சமாளிப்பதற்காக ஒரு சிறு குழுவினர் சத்தியத்தைப் பின்பற்ற முயற்சிக்கும்போது மாத்திரமே, சாத்விக எதிர்ப்பிற்கு இடம் ஏற்படுகிறது. சத்தியம் என்றால் என்ன? சாத்விக எதிர்ப்பைக் கைக்கொண்டாவது அதை எப்போது பாதுகாக்க வேண்டும்? சத்தியத்தைப் பின்பற்று கையில், பலாத்கார உருவத்தில் தவறு ஏற்படாமல் எப்படித் தவிர்ப்பது? இதையெல்லாம் அறிந்துகொள்ளுவது கஷ்ட மாகும். தேச முன்னேற்றத்திற்காக அர்ப்பணம் செய்யப் பட்டுள்ள ஒரு வாரத்தில், கட்சி, வகுப்பு, கொள்கை வேற்றுமை யின்றி எல்லோருடைய ஒத்துழைப்பையும் நாட வேண்டும். எனவே, சாத்விக எதிர்ப்பை ஒரு நம்பிக்கையாகக் கொள்ளுவது உசிதமா என்பதில் கருத்து வேற்றுமை இருக்கலாம்.

6-ஆம் தேதியும் 13-ஆம் தேதியும் உண்ணாவிரதத்தையும் பிரார்த்தனையையும் தவிர, ஜாலியன்வாலா பாக் ஞாபகச் சின்னத்திற்காக நிதி வசூல் செய்யவும் வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு மாகாணத்திலும், ஒவ்வொரு ஜில்லாவிலும், ஒவ்வொரு நகரிலும் அல்லது கிராமத்திலும் அதற்காகப் பூரண அம்சங்க ளுடன் கூடிய ஸ்தாபனம் அமைக்கப்படுமென நம்புகிறேன்.

அந்த வாரத்தின் மூன்றாவது அம்சமான நடவடிக்கை என்னவெனில், அந்த வாரத்திலே குறிப்பிட்ட நேரத்தில் கூட்டங்கள் கூடிச் சில தீர்மானங்கள் நிறைவேற்ற வேண்டுமென நான் யோசனை கூறியிருக்கிறேன். சத்தியாக்கிரக இயக்கத் திற்குக் காரணமான ரௌலட் சட்டத்தைப் பற்றியும், ஹிந்துக்கள் கலந்துகொள்ளுவதால் ஹிந்து-முஸ்லிம் ஒற்று மையை உண்டாக்கக்கூடிய கிலாபத் பிரச்னை பற்றியும் தீர்மா னங்கள் நிறைவேற்ற வேண்டும். ஏப்ரல் 13-ஆம் தேதி நடை பெறும் கூட்டங்களில் ஜாலியன்வாலா பாக் சம்பந்தமான தீர்மா னம் நிறைவேற்றப்பட வேண்டும். ராணுவச் சட்ட ஆட்சியின் போது நிகழ்ந்த கோரச் சம்பவங்கள் இனி நடைபெறாமல் தடுப்ப தற்குற்ற அவசியமான முறைகளைக் கைக்கொள்ளும்படியும், ராணுவச் சட்டம் அமலுக்கு வருமுன்பே 13-ஆம் தேதி நடந்த சட்ட விரோதமான படுகொலைகளைப் போன்ற சம்பவங்களுக்கு இடமேற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும் அரசாங் கத்தைக் கேட்டுக்கொள்ள வேண்டும். கீழ்க்கண்ட தீர்மானங் களை அங்கீகரிக்கலாமென நான் யோசனை கூறுகிறேன்:

**ஏப்ரல் 6-ஆம் தேதி:** "………பிரஜைகள் அடங்கிய இந்தக் கூட்டம், ரௌலட் சட்டம் ரத்து செய்யப்படும் வரையில் நாட்டில் அமைதி இராதென்ற உறுதியான அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதுடன், அதை ரத்து செய்து ஒரு மசோதாவை அதிசீக்கிரத்தில் கொண்டு வர வேண்டுமென்றும் இந்திய அரசாங்கத்தை வேண்டிக்கொள்ளுகிறது."

**ஏப்ரல் 9-ஆம் தேதி:** "……வாசிகளான ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மற்றவர்களும் அடங்கிய இந்தக் கூட்டம், இந்திய முஸ்லிம்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு முரணின்றியும், பிரிட்டிஷ் மந்திரிகளின் உறுதி மொழிகளுக்கு இணங்கவும் கிலாபத் பிரச்னை தீர்க்கப்படுமென நம்புகிறது; இவ்விஷயமாக அரசாங்கத்தின் தீர்மானம் விரோதமாக இருக்குமாயின், அந்த உறுதி மொழிகள் நிறைவேற்றப்பட்டு முஸ்லிம்களுக்கு மனச்சமாதானம் ஏற்படும் வரையில், அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுப்பது இந்தியர்களுடைய கடமையாகும் என்று கருதுகிறது."

**ஏப்ரல் 13-ஆம் தேதி:** "…வாசிகள் அடங்கிய இந்தக் கூட்டம், அமிருதசரஸில் ஜனங்கள் மிகவும் கோபமூட்டப்பட்டதால் அத்து மீறிய நடவடிக்கைகளில் ஈடுபட்டார்களெனினும், அவை கண்டிப்பதற்குரியனவாகும் என்று கருதுகிறது. ஜாலியன்வாலா பாகில் நிரபராதிகளும் நிராயுதபாணிகளும், வேறு எவ்விதத் தற்காப்பும் இல்லாதவர்களுமான ஆடவர்களை, ஜெனரல் டயர் எச்சரிக்கையின்றி நிதானமாகவும், வேண்டுமென்றும் செய்த காட்டுமிராண்டித்தனமான படுகொலைகளுக்கு உவமையே இல்லை. அத்தகைய மிருகத்தனமான காரியங்களும், பாஞ்சாலத்தில் ராணுவச் சட்டம் அமலில் இருந்தபோது பொறுப்புள்ள அதிகாரிகள் புரிந்த காட்டுமிராண்டித்தனமான அட்டூழியங்களும் இனி நடைபெறுவது அசாத்தியமாக இருப்பதற்குற்ற முறைகளை இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசாங்கமும் கைக்கொள்ளுமென்று நம்புகிறது. இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் பாஞ்சால உப கமிட்டியின் சிபாரிசுகள் முற்றிலும் நிறைவேற்றப்படுமென்றும் நம்புகிறது."

'எங் இந்தியா' -31—3—1920

# 7

# ஒளியும் இருளும் தோன்றிய இரண்டு நாட்கள்

நம்மிடையே ஏப்ரல் 6-ஆம் தேதியும் 13-ஆம் தேதியும் சீக்கிரம் வந்து விடும். 6-ஆம் தேதிதான் இந்தியா ஒன்று பட்டு விழித்தெழுந்தது. 13-ஆம் தேதி இருள் சூழ்ந்த ஞாயிற்றுக்கிழமையாகும். அப்போதுதான் விழித்தெழுந்த ஒரு தேசத்தின் மன உறுதியை நசுக்க, அன்று அரக்கத்தனமான ஒரு முயற்சி செய்யப்பட்டது. சென்ற வருடம் அந்த இரண்டு நாட்களின் ஆண்டு விழாவை இந்தியா தகுதியான முறையில் அனுஷ்டித்தது. 6-ஆம் தேதியிலிருந்து அந்த வாரம் முழுவதையும் மக்கள் தேசியப் பணியில் தங்களை அர்ப்பணம் செய்துகொள்ளும் புனித வாரமாகக் கருதினார்கள். வரப் போகும் ஏப்ரலில் மக்கள் தேசியப் பணியில் தங்களை அர்ப்பணம் செய்ய இன்னும் அதிக ஆயத்தமாக இருப்பார்களா?

அவ்வாறு இருப்பதற்கு எவ்விதமான காரணமும் எவ்விதமான சந்தர்ப்பமும் உண்டு. நிரபராதிகளின் உதிரத்தால் புனிதமாக்கப்பட்ட நிலத்தை விலைக்கு வாங்குவதற்காக நிதி வசூல் செய்வதில் மாத்திரம் சென்ற வருடம் கவனம் செலுத்தினோம். அது அவசியமான, பக்திபூர்வமான ஒரு காரியமாகும். எனினும் அதன் பின் பெரிய காரியங்கள் நிகழ்ந்து விட்டன. கிலாபத், பாஞ்சாலத் தவறுகளுக்குப் பரிகாரம் தேடுவதிலும் சுயராஜ்யத்தை ஸ்தாபிப்பதிலும் தேசம் தனக்குள்ள தீர்மானத்தை மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறது. டிசம்பர் மாதம் நடந்த காங்கிரஸ்* இன்னும் மேலே சென்று, ஒரு வருடத்திற்குள் சுயராஜ்யம் பெற வேண்டும் என்ற தன் உத்தேசத்தைப் பிரகடனப்படுத்தியது.

எனவே, இவ்விஷயமாக நாம் நமது தேசிய முயற்சிகளை அதிகப்படுத்திக் கொள்ளுவதைக் காட்டிலும் வேறு சிறந்த தொண்டு இருக்க முடியாது. கல்விச்சாலைகள், கோர்ட்டுகள் பகிஷ்கார இயக்கம் இனியும் தொடர்ந்து வரும். கல்விச்சாலைகளையும் கலாசாலைகளையும் மாணவர்களும், கோர்ட்டுகளை வக்கீல்களும் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்று நாகபுரி காங்கிரஸ் தீர்மானம் வற்புறுத்தியது. அவ்விஷயங்களையொட்டி இப்போது

---

*1920 டிசம்பர் மாதம் நாகபுரியில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் அதிலிருந்து ஒரு வருடத்திற்குள் இந்தியா சுயராஜ்யம் பெறுவதற்கான முறைகளைக் கைக்கொள்ளுவதென்ற தீர்மானம் நிறைவேறியது.

விசேஷ முயற்சி எதுவும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லையெனினும், கல்விச்சாலைகளையோ அல்லது கோர்ட்டு களையோ விட்டு விட்டு வெளியே வந்தவர்கள் தங்கள் இருதயத் தைப் பரிசீலனை செய்து கொள்ள வேண்டும்; தங்கள் நேரத்தை எப்படி உபயோகித்து வருகிறோம் என்பதில் கவனம் செலுத்த வேண்டும். எனினும், ஆறு விஷயங்களையொட்டி நாம் மிகவும் விசேஷ முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசிய மாகும். அவையாவன :

1. நமது மனத்தை நாம் அதிகமாகக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும். முற்றிலும் சாந்தமான, அமைதியான, நல்ல எண்ணத்துடன் கூடிய சூழ்நிலையை உண்டாக்கிக் கொள்ள வேண்டும். யாரிடத்திலாவது யோசனையின்றி உபயோகித்த அன்பற்ற ஒவ்வொரு வார்த்தைக்கும், அல்லது யாருக்காவது செய்த அன்பற்ற ஒவ்வொரு காரியத்திற்கும் நாம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

2. நாம் மேற்கொண்டு நமது இருதயங்களைப் பரிசுத்தம் செய்து கொள்ள வேண்டும். ஹிந்துக்களும் முஸ்லிம்களுமான நாம், பரஸ்பரம் ஒருவர் நோக்கத்தை ஒருவர் சந்தேகிப்பதை விட்டுவிட வேண்டும். ஒருவருக் கொருவர் தீங்கு செய்ய நம்மால் ஒருபோதும் இயலாது என்ற நம்பிக்கை நமக்கு இருக்க வேண்டும்.

3. ஹிந்துக்களான நாம், எவரையும் நம்மைவிட அசுத்தமானவர் என்றோ, இழிவானவர் என்றோ அல்லது தாழ்மையானவர் என்றோ கூறக் கூடாது. பறையர்களைத் தீண்டாதார் என்று எண்ணுவதை நாம் விட்டுவிட வேண்டும். சக மனிதர் ஒருவரைத் தீண்டாதார் என்று கருதுவதை நாம் பாவமாக நினைக்க வேண்டும்.

இந்த மூன்று விஷயங்களும் இருதய மாற்றத்தைப் பொறுத்தவை. அதன் பலனை நாம் நமது தினசரி நடவடிக்கைகளில் கண்கூடாகப் பார்க்க லாம்.

4. குடி சாபக்கேடு நான்காவதாகும். இந்தியா, வற்புறுத்தலின்றித் தானாகவே இந்தச் சாபக்கேட்டை ஒழிக்கத் தீர்மானித்திருப்பது மகிழ்ச்சிக் குரியது. விற்பனை லைசென்ஸ்களை விட்டுவிடும்படி கள்ளுக்கடைக்காரர் களையும், குடி வழக்கத்தை விட்டுவிடும்படி அந்தக் கடைகளுக்குச் செல்லு வோரையும் மரியாதையுடன் வேண்டிக்கொண்டு, அவர்களது மனத்தை மாற்ற இந்த வாரத்தில் மகத்தான முயற்சி செய்ய வேண்டும். ஒவ்வொரு சாதி யினரும் தங்களிடையே யார் குற்றவாளிகள் என்பதையும், மிகவும் பலன் தரத்தக்க விதத்தில் அவர்களை எப்படிச் சமாளிப்பது என்பதையும் நன்கு அறிவர். ஆனால், நான் அகமதாபாத் பெண்களுக்கு ஒரு யோசனை கூறினேன். மது விலக்குப் பிரசாரகர் படைகளைத் தயாரித்து, கள்ளுக்கடைக்காரர்களையும் குடிப்பவர்களையும் அணுக வேண்டும் என்பதே அந்த யோசனையாகும். எப்படி யிருந்தாலும் கோரிய பலனை அடைவதற்காகப் பலாத்காரத்தை உபயோகிக் கக்கூடாது. நல்வார்த்தைகள் கூறும், உறுதியுடன் கூடிய அமைதியான ஓர் இயக்கமே வெற்றிபெறும்.

5. ஒவ்வொரு வீட்டிலும் ராட்டினத்தை உபயோகிக்கும்படி செய்ய வேண்டும். அதிகமாகக் கதர் உற்பத்தி செய்து அதிகமாக உபயோகிக்கவும் வேண்டும்; அந்நியத் துணியின் உபயோகத்தை அறவே விட்டுவிட வேண்டும்.

6. திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒழுங்கான முறையில் இடைவிடாது தொகை வசூல் செய்ய வேண்டும். இவ்விஷயமாக உருவான முயற்சி செய்யப்படுமாயின், சத்தியாக்கிரக வாரத்தின்போதே நாம் ஒரு கோடி ரூபாய் வசூலையும் பூர்த்தி செய்துவிட முடியும். இந்தியா, ஒரு கோடி ரூபாயைவிட இன்னும் மிகவும் அதிகமாகக் கொடுக்கத் தயாராக இருக்கிறது என்பதை எனது இடைவிடாத யாத்திரையின்போது நிச்சயமாகத் தெரிந்துகொண்டேன். ஆனால், யோக்கியப் பொறுப்புடன் வசூல் செய்வோர்தான் போதிய அளவு இல்லை. சத்தியாக்கிரக வாரத்தின்போது இந்த வேலைகள்* நடைபெறுவதற்கு இந்தியாவில் உள்ள ஒவ்வொரு ஜில்லாவும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஹர்த்தால்கள் மிகவும் சாதாரணமாகிவிட்டன. அவை நடைபெறுவதற்குற்ற ஏற்பாடுகளைச் சுலபமாகச் செய்ய முடிவதால், முதலில் அவற்றிற்கு இருந்த மதிப்பு இப்போது மிகவும் குறைந்துவிட்டது. எனினும், இரண்டு நாட்கள் ஹர்த்தால் செய்வதில் விசேஷ முக்கியத்துவம் இருக்கிறது. எனவே 6-ஆம் தேதியும் 13-ஆம் தேதியும் உண்ணாவிரதத்துடன் நிச்சயமாக ஹர்த்தால்கள் அனுஷ்டிக்க வேண்டுமென்றே நான் யோசனை கூறுவேன். ஆனால், ஹர்த்தால் அனுஷ்டிக்கும்படி கட்டாயப் படுத்தக் கூடாதென்பதைச் சொல்லத் தேவையில்லை. மில்களிலோ, வேறிடங்களிலோ உள்ள தொழிலாளர்களுக்கு ரஜா கிடைக்காவிட்டால், அவர்கள் வேலை நிறுத்தம் செய்யக்கூடாது. டிராம் வண்டி நிர்வாகிகளையும் தகாத முறையில் நிர்ப்பந்தப் படுத்தக்கூடாது. நியாயமான, அவசரமான காரணமின்றி மக்கள் பொது வாகனங்களை உபயோகிக்கமாட்டார்கள் என்பதில் நமக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். உண்ணாவிரதம் அனுஷ்டிக்கும் அந்த இரண்டு நாட்களையும், விசேஷப் பிரார்த்தனைகளிலும் பூஜைகளிலும் செலவிட வேண்டும்.

நமது கோரிக்கைகள் பற்றி அப்போது எவ்விதத் தீர்மானங்களும் நிறைவேற்ற வேண்டாமென்று நான் பொது மக்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தேசப் பணிக்காக அர்ப்பணம் செய்யப்படும் வாரம், நமது ஆன்ம பரிசோதனைக்கான, நம்மைப் பரிசுத்தம் செய்துகொள்ளுவதற்கான ஒரு வாரமாக இருக்க வேண்டும். நமது தொண்டு கோரிய பலனைக் கொடுக்க வல்லது என்ற நம்பிக்கை நமக்கு இருக்கவேண்டும். நம்மை நாம் தகுதி வாய்ந்தவர்களாகச் செய்து கொண்டு விட்டால், நாம் சுயராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொள்ளுவதையோ, இரண்டு பெரிய தவறுகளுக்குப் பரிகாரம் பெறுவதையோ இவ்வுலகில் யாரும் தடுக்க முடியாது.

'எங் இந்தியா' — 23—3—1921

* மேலே குறிப்பிட்டுள்ள ஆறு அம்சங்களையும் நாகபுரி காங்கிரஸ் அங்கீகரித்தது.

# 8

# அதிர்ச்சியைக் கொடுத்த கொடிய தண்டனைகள்

பிகாரி லால் ஸச்தேவா, இருபத்து நான்கு வயதான ஓர் இளைஞர். அவர் தமது இளம் மனைவியுடனும், எழுபத்திரண்டு வயதான வயோதிகத் தந்தையுடனும் இருந்து வருகிறார். அவர் குஜரன்வாலா கோஷ்டியைச் சேர்ந்தவர். எனவே, அவரது சொத்தைப் பறிமுதல் செய்வதுடன், அவருக்குத் தீவாந்திர சிட்சையும் விதித்திருந்தார்கள். அவர், "மன்னருக்கு விரோத மாகப் போர் தொடுத்தாராம்.'' அவ்விதம் பிராஸிகியூஷன் தரப் பார் வழக்குத் தொடர்ந்தனர். அதற்குக் கோர்ட்டாரும் 'ததாஸ்து' கூறி, அவருக்குத் தண்டனை விதித்துவிட்டார்கள். கனம் பொருந்திய லெப்டினன்ட் கவர்னர் அந்தத் தண்டனையை நான்கு வருடங்கள் சிறைத் தண்டனையாகக் குறைத்துள்ளார். நிரபராதியான அவருக்கோ அல்லது மரணத் தறுவாயில் இருக் கும் அவரது தந்தைக்கோ, இந்தத் தண்டனைக் குறைப்பு அற்ப ஆறுதலையே அளிக்கும்.

எனவே, ஏழை பிகாரி லால் ஸச்தேவா மற்றொரு விண்ணப் பம் அனுப்பியிருக்கிறார். ஏதோ மோசமான தவறு காரணமாகத் தமது வழக்கு கவனமாக விசாரிக்கப்படவில்லை யென்று தாம் நம்புவதாக அவர் விண்ணப்பத்தில் குறிப்பிட்டுள்ளார். விண் ணப்பம் தகுந்த காரணங்களுடன் திருப்தி அளிக்கக்கூடியதாக இருக்கிறது.

பிரிட்டிஷ் நீதியைப் புகழ்வதில் சென்ற நாற்பது ஆண்டுக ளாகத் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்த ஒரு நண்பர், அன்றொரு நாள் என்னிடம் கூறியதாவது: "பாஞ்சாலத்தில் நிகழ்ந்த சம்பவங்கள், என் மயக்கம் தெளியும்படி செய்து விட்டன. பிரிட்டிஷ் நீதியில் எனக்கு இருந்த நம்பிக்கை போய் விட்டது. உங்களுடைய அரசியல் சீர்திருத்தங்களில் நான் சிறிதும் அக்கறை கொள்ளவில்லை. எங்களுடைய உயிருக்கும் மானத்திற்கும் பாதுகாப்பில்லை. அரசாங்கத்தின் தவறு காரண மாக நாங்கள் எந்தச் சமயத்திலும் சிறைப்படும்படி நேரலாம். இந்த லட்சணத்தில், அரசாங்கம் எங்களுக்காக என்ன நன்மை செய்துவிட முடியும்?''

அத்தகைய தவறான வழக்குகளில், பிகாரி லால் ஸச்தேவா வின் வழக்கும் ஒன்று என்று தோன்றுகிறது. தவறான அடை யாளம் காரணமாக அவ்வழக்கு தொடரப்பட்டிருக்க வேண்டும்.

அந்த இளைஞர் முற்றிலும் நிரபராதி என்றே தெரிகிறது. ஏப்ரல் 4, 5–ஆம் தேதிகளிலோ, அல்லது 12, 13-ஆம் தேதிகளிலோ நடந்த கூட்டங்களில் அவருக்கு எவ்வித சம்பந்தமும் இல்லை என்றும், அக்கூட்டங்களுக்கு அவர் வரவில்லை என்றும் கூறப்படுகிறது. அவ்வழக்கில் முக்கிய சாட்சி கூறிய சாட்சியம், வெறும் வதந்தியே; மற்ற சாட்சியங்கள் பொய்க் கலப்புள்ளவையென்று கூறப்படுகிறது. அது உண்மையாகவே இருந்தாலும்கூட, அச் சாட்சியம் எதிரி மீது எவ்விதக் குற்றமும் இருப்பதாகக் காட்டவில்லை. கைதியின் சார்பில் மரியாதையான, பாரபட்சமற்ற கனவான்கள் கொடுத்த சாட்சியத்தைக் கோர்ட்டார் நிராகரித்து விட்டனர். பஞ்சாப் கோர்ட் தீர்ப்புகளைப்* பற்றி இதற்குள் வாசகர்கள் போதிய அளவு தெரிந்து கொண்டிருக்கலாம். எனவே, விசேஷ கோர்ட்டுகளின் இத்தகைய நிலையைக் கண்டு அவர்கள் ஆச்சரியப்படமாட்டார்கள். ஆனால், ஆச்சரியத்தை உண்டாக்கும் விஷயம் என்னவெனில், பாஞ்சாலத்தில் முற்றிலும் அமைதி நிலவும் இச்சமயத்தில்கூட, லெப்டினன்ட் கவர்னரின் கவனத்தை இழுக்க வேண்டிய அநீதியான இவ்வழக்குகள் அவரது கவனத்தைக் கவரவில்லையே என்பதுதான். பாஞ்சால அரசாங்கம் பிரஜைகளின் சுதந்திரத்தை வெகு அற்பமாகக் கருதி வருகிறது. அத்தகைய அரசாங்கம் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரியதன்று.

—' எங் இந்தியா ' - 15—10—1919

# 9

# மற்றொரு அக்கிரமமான வழக்கு

வாஸிராபாத்தைச் சேர்ந்த புருஷோத்தம சிங், தமது தந்தையான ஸ்ரீ ஜமியத் சிங் பக்கா மீது நடந்த வழக்கின் விவரங்களும் தீர்ப்பும் அடங்கிய ஓர் அறிக்கையை எனக்கு அனுப்பியுள்ளார். ஸ்ரீ ஜமியத் சிங் பக்கா வாஸிராபாத்தைச் சேர்ந்த பாங்கரும் வியாபாரியுமாவார். அவருக்கு 62 வயதாகிறது. அவர் மோசமான கண் படல நோயால் அவஸ்தைப்பட்டு வருகிறார். அவருக்குக் கோர்ட்டார் 18 மாத கடுங்காவல் தண்டனையும் ரூ. 1,000 அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் மேற்கொண்டு 6 மாதம் கடுங்காவல் தண்டனையும் விதித்தனர். அந்த வழக்கில் தீர்ப்பு, தம்மை ஒரு நீதிபதி என்று சொல்லிக்கொள்ளும் ஒருவருக்கு முற்றிலும் தகுதியற்ற விதத்தில்

* அப்போது பாஞ்சாலத்தில் விசேஷ கோர்ட்டுகளில் விதிக்கப்பட்ட தூக்குத் தண்டனைகளும் அரக்கத்தனமான சிறைத் தண்டனைகளும், இந்தியப் பொது மக்களுக்குப் பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தன.

இருக்கிறது என்று கூற நான் சிறிதும் தயங்கவில்லை. அதில் நியாயம் இருப்பதாகத் தெரியவில்லை; அதில் நிறைய வீண் குற்றச் சாட்டுகளும் குதர்க்க வாதமும் அடங்கியிருக்கின்றன. தந்தை மீது நடந்த வழக்கைப் பற்றி மகன் கொடுத்துள்ள விவரங்கள் உண்மையாயின், தண்டனை கொடுத்துள்ள மாஜிஸ்திரேட் நீதி பதி ஆசனத்தில் உட்காரச் சிறிதும் தகுதியற்றவர். ஸ்ரீ ஜமியத் சிங், மருதிக் கூட்டத்திற்கு வந்து ஹர்த்தால் செய்ய வேண்டும் என்று கூறினர் என்பதும், அவர் பணக்காரர் என்பதுமே அவரது குற்றமென்று தோன்றுகிறது. பாரபட்சமற்ற சாட்சிகள் கூறுவதை மாஜிஸ்திரேட் நம்பவில்லை. ஏனெனில், ஜமியத் சிங் ஒரு பணக்காரராம். சிப்பாய்கள் மீது கற்களை விட்டெறிந்த கூட்டத்தில் அவர் இருந்தார் என்பதே மாஜிஸ்திரேட்டிற்குப் போதுமானதாம். "வேலிகளைத் தகர்த்த சிறுவர்களை ஸ்ரீ ஜமியத் சிங் தடுத்ததற்கு வேறு ஏதாவது காரணம் இருக்கலாம். அது எப்படியாயினும், அவர் கூட்டத்தில் இருந்தார் என்பது நிச்சயம்" என்று மாஜிஸ்திரேட் கூறியுள்ளார். இவ்வாறாக, எதிரிக்குச் சாதகமாக உள்ள சாட்சியங்களை மாஜிஸ்திரேட் வேண்டுமென்றே நிராகரித்துள்ளார்.

தீர்ப்பின் முரண்பாட்டைப் பற்றி எனது கண்டனத்தின் வேகத்தை அறிந்துகொள்ள விரும்பும் வாசகர், தீர்ப்பை முழுதும் வாசிக்க வேண்டும். ஏற்கனவே அநீதியான ஒரு விஷயத்தை, மகனின் அறிக்கை மேலும் படுமோசமானதாகத் தோன்றும்படி செய்திருக்கிறது. ஒரு விநாடிகூட அவகாசம் கொடுக்காமல் எதிரியின் சொத்தை மாஜிஸ்திரேட் பறிமுதல் செய்தது உண்மையா? மகன் கூறியுள்ளபடி, வீட்டில் உள்ளவர்கள் கொடுமையாக நடத்தப்பட்டது உண்மையா? அது உண்மையாயின், அது முற்றிலும் சட்ட விரோதமான ஒரு நடவடிக்கை அல்லவா? மற்றும் எதிரியின் சார்பில் வந்த சாட்சியங்களை மாஜிஸ்திரேட் விசாரிக்கவில்லை என்பதும், எதிரிக்கு விரோதமாகக் குற்றப் பத்திரிகை தயாரித்தபோது எதிரி வக்கீல் ஆஜராக அனுமதிக்கப்படவில்லை என்பதும் உண்மையா? இந்த அற்புதமான தீர்ப்பைப் பற்றி இவ்வளவு கூறியது போதும்.

தீர்ப்புக்கு முன்னரும் பின்னரும் எதிரி நடத்தப்பட்ட விதம், கோர்ட்டு நடவடிக்கைகளின் லட்சணத்துக்கு உகந்ததாகவே இருந்ததென்று தோன்றுகிறது. எதிரியை, படுக்கையைத் தூக்கிக்கொண்டும், கை விலங்குகளுடனும் நடக்கும்படி செய்தது மனிதத் தன்மையற்ற காரியம். இது, ஜெனரல் ஹட்ஸன், மக்களை ஊர்ந்து செல்லும்படி கட்டளையிட்டதையே ஞாபகப் படுத்துகிறது. ஊர்ந்து செல்லும்படி கட்டளையிட்டதைப் போலவே, இந்த வழக்கு நடவடிக்கைகளும் ஜனங்களின் மனத்தில் பீதியை உண்டாக்குவதற்காக அதிகாரிகள் கைக்கொண்ட நடவடிக்கைகள் என்பது தெளிவாகத் தெரிகிறது. எதிரியை

இழிவாகவும் கொடுமையாகவும் நடத்தியதற்கு வேறு என்ன காரணம் இருக்க முடியும்? யுத்த காலத்தில் யுத்தக் கடனுக்கு வார்ஸிராபாத்தில் மிகவும் அதிகத் தொகை கொடுத்தும், ஆட்கள் சேகரித்தும் அரசாங்கத்துக்கு எதிரி செய்த உதவிகளெல்லாம் வீணாகிவிட்டன. அவரைக் கூண்டில் ஏற்றி, ஒரு சாதாரணக் குற்றவாளியைப் போல் அவரை அதிகாரிகள் நடத்தியபோது, அவர் ஏற்கனவே அரசாங்கத்திற்கு விசுவாசத்துடன் புரிந்த தொண்டுகளுக்காக அவருக்கு அளிக்கப்பட்டிருந்த சன்னது யாதொரு பலனையும் அளிக்கவில்லை.

எதிரி பூரண விடுதலை பெறுவதற்கு உரியவர் என்பது தெளிவாகத் தெரிகிறது. அப்படியிருக்க, அவரது சிறைத் தண்டனையை ஆறு மாதங்களாகக் குறைத்ததைக் குறித்து நான் பாஞ்சால அரசாங்கத்தை வாழ்த்துவதற்கில்லை. மகன் கூறியுள்ள விவரங்களிலிருந்து, அந்த வழக்கு ரெவிஷன் நீதிபதிகளால் விசாரிக்கப்படப் போவதாகத் தெரிகிறது. இந்த ரெவிஷன் நீதிச் சபையைப் பற்றி எனது அவநம்பிக்கையை ஏற்கனவேயே நான் வெளியிட்டிருக்கிறேன். அந்த நீதிச் சபையின் அமைப்பு, விசுவாசத்தையோ அல்லது நம்பிக்கையையோ உண்டுபண்ணுவதாக இல்லை.

சீர்திருத்த முடியாத தவறுகளைச் சீர்திருத்த அரசாங்கம் தவறி, தங்களுடைய விபரீதப் போக்கை மூடி மறைப்பதற்காக மாத்திரமே நீதிச் சபைகளைச் சிருஷ்டிக்குமாயின், அது மக்களின் மரியாதைக்கோ, புத்திசாலித்தனமான ஒத்துழைப்பிற்கோ உரியதாகாது. மாண்டவர்கள் மாண்டு மண்ணோடு மண்ணாகி விட்டனர். உயிருடன் இருப்பவர்கள் சிறிதும் நியாயமின்றித் துன்பப்பட்டு வருகிறார்கள். அவர்களுடைய நம்பிக்கைக்கும் பொது மக்களின் நம்பிக்கைக்கும் பாத்திரமான ஒரு நீதிச் சபையின் முன்னிலையில், தாங்கள் நிரபராதிகள் என்பதை ருசுப்பிக்க அவர்களுக்கு அரசாங்கம் சந்தர்ப்பம் அளிக்காதது சகிக்க முடியாத ஒரு விஷயமாகும்.

— 'எங் இந்தியா' — 29—10—1919

## 10

## பாய் பரமானந்தர்

பாய் பரமானந்தர் * வழக்கைப் பற்றி, "டிரிப்யூன்" பத்திரிகையில் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் மனத்தைத உருக்கும் விதத்தில் குறிப்

* 1915 ஆம் ஆண்டிலே பிரபலமாக நடந்த லாகூர் சதி வழக்கில், மன்னருக்கு எதிராக யுத்தம் தொடர உடந்தையாய் இருந்ததாக, இந்தியன் பீனல் கோட் 121,

பிட்டுள்ளார். மூன்று கமிஷனர்களில் ஒருவருடைய சிபாரிசு காரணமாக, மரண தண்டனை ஆயுள்வரை தீவாந்திர சிட்சை யாகக் குறைக்கப்பட்டதுடன், அவரது சொத்துக்களும் பறி முதல் செய்யப்பட்டன. நம்ப முடியாத அம்மூவர்களின் கதை யையும், அற்ப ஆதாரத்தையும் கொண்டு பாய் பரமானந்தர் தண்டனை விதிக்கப்பட்டார். வழக்கின் ஆரம்பத்தில் அரசாங்க வக்கீல்கூட, பாய் பரமானந்தர் மீதுள்ள வழக்கை வாபஸ் செய்துவிட வேண்டுமென்று சிபாரிசு செய்தார். பின்னர் ஹைகோர்ட் நீதிபதியாக உயர்த்தப்பட்ட அரசாங்க வக்கீல் ஸ்ரீ பிவான் பெட்மன் கூறியதாவது: "பாய் பர மானந்தரை நாம் எப்போதும் சந்தேகித்து வந்துள் ளோம். அவரைச் சிறைக்குள் தள்ள நாம் ஆர்வமுடையவர்களா கவும் இருந்து வந்திருக்கிறோம். எனவே, நாம் விரும்பினால் அவருக்கு விரோதமாக எத்தகைய சாட்சியங்களையும் ஜோடித் திருக்க முடியும். ஆனால், சதியைப் பற்றி அவருக்கு எதுவுமே தெரியாதென்றே முக்கிய அப்ரூவர்கள் கூறியுள்ளனர்." பாய் பரமானந்தர் நிரபராதியென்று அரசாங்க வக்கீல் கூறியும்கூட, பாய் பரமானந்தருக்குத் தண்டனை விதிக்கத்தான் வேண்டு மென்று சர். எம். ஓட்வியர் வற்புறுத்தி, அவர் தண்டனை பெறும் படி செய்துவிட்டார்!

இந்தியாவிற்குத் தொண்டு செய்ய தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்து, வறுமையைத் தங்கள் விதியாக வலிய ஏற்றுக்கொண்டுள்ள தேச பக்தர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. பாய் பரமானந்தர் அந்தக் குழுவைச் சேர்ந்தவரே. அத்தகைய உணர்ச்சியுள்ள பாய் பரமானந்தர், லாலா ஹம்ஸராஜின் செல்வாக்கினால் உந்தப்பட்டு, லாகூர் டி. ஏ. வி. கல்லூரியில் ஒரு பேராசிரியராகச் சேர்ந்தார். அடக்க மான தன்மை, உழைப்பு, அப்பழுக்கற்ற ஒழுக்கம் இந்தக் குண திசயங்கள் காரணமாக அவர் மாணவர்களிடையும் ஆசிரியர் களிடையும் மிகுந்த செல்வாக்கு பெற்றார்.

பிறகு அவர் தென்னாப்பிரிக்காவுக்கு விஜயம் செய்து, வாழ்க்கையை நிர்மாணித்துக் கொள்ள மதம் ஓர் அவசியமான சாதனமென்று உபதேசம் செய்தார். அவர் சத்திய நெறி தவறாத, கண்ணியம் வாய்ந்த ஒரு மனிதர் என்ற எண்ணம் என் மனத்தில் ஆழ்ந்து பதியும்படி செய்தார். தென்னாப்பிரிக்காவுக்கு விஜயம் செய்தபோது, அவர் என்னுடன் நெருங்கிப் பழகினார். அவர் சற்றேறக் குறைய ஒரு மாதம் வரையில் என்னுடைய கௌரவ விருந்தாளியாகவும் இருந்தார். அவருடன் நான் பல விஷயங்களைப் பற்றியும் பல தடவைகளில் பேசியது உண்டு.

---

121ஏ, 124ஏ, பிரிவுகளின் கீழ் பாய் பரமானந்தர் குற்றவாளியென்று கூறி, மூன்று கமிஷனர்கள் அடங்கிய ஒரு விசேஷ கோர்ட்டார் அவருக்கு மரண தண்டனை விதித் தார்கள். அது பிறகு தீவாந்திர சிட்சையாகக் குறைக்கப்பட்டது.

அவரது தேசபக்தி உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. அவர், தேசிய நோக்கங்களுக்காகப் பலாத்காரத்தை வெறுக்கும் தேச பக்தர். தென்னப்பிரிக்காவிலிருந்து அவர் இங்கிலாந்திற்குச் சென்றூர். அங்கே பண்டித சியாம்ஜி கிருஷ்ண வர்மாவைத் தலைவராகக் கொண்ட பலாத்கார கோஷ்டியுடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. மனத்தைக் கவரும் ஆசாபாசத்திற் கிடையேயும், அவரது சத்திய நெறி எப்போதும்போல் மிகப் பிரகாசமாகச் சுடர்விட்டுக்கொண்டிருந்தது.

கோர்ட்டில் அவர் பட்டவர்த்தனமாகவும், அஞ்சாநெஞ்சத் துடனும் விடுத்த அறிக்கை, அவர் எதையும் மறைக்கவில்லை என் பதைக் காட்டுகிறது. அவர் ஒப்புக்கொண்டுள்ள விஷயங்கள் அவருக்கே தீங்கு விளைவிப்பதாக இருக்கின்றன. அவர் எவ்வித அறிக்கையும் விடுக்கக் கடமைப்பட்டிருக்கவில்லை. அப்படியிருந் தும் அவர் அறிக்கை வெளியிடப் பின் தங்கவில்லை. அவரது அறிக்கையின் விளைவாகத் தண்டனை கிடைக்கும் என்று தெரிந் தும் கூட, அவர் எதையும் மறைக்க வேண்டுமென்று எண்ண வில்லை. அவரது அறிக்கையில் அவரைத் தண்டிப்பதற்கான ஆதா ரம் எதுவுமில்லை. எனினும், விசேஷ கோர்ட்டார் அத்துடன் வேறு சாட்சியங்களையும் இணைத்து, அவரைக் குற்றவாளியாக்கி விட்டார்கள்.

கௌரவமான ஒரு மனிதரை, குற்றம் புரிந்த சாதாரண ஒரு கைதியைப்போல் அரசாங்கம் நடத்தியது மிகவும் வருந்தத்தக்க ஒரு தவறாகும். அவர் குற்றவாளி என்றே வைத்துக்கொண்டா லும், அவரை அந்தமானுக்கு அனுப்பியது தவறாகும். அவர் விரோதியாக இருந்தால், அவரிடம் ஜீவகாருண்யத்துடன் நடந்துகொள்ளுவதன் மூலம் அவரை நண்பராக மாற்றியிருக்க லாம். அவர் உண்மையிலேயே ஆபத்தானவராக இருந்தால், அவரது சுதந்திரத்தை அபகரிப்பது நியாயமே. ஆனால், அவரைச் சாதாரணக் கைதிகளின் கூட்டத்தில் சேர்த்து வைப் பதோ, அல்லது அவரை அந்தமானுக்கு அனுப்புவதோ கொடுமையாகும்.

லாகூரிலும் மற்றவிடங்களிலும் உள்ள பலரிடமும், நான் பாய் பரமானந்தரைப் பற்றி விசாரித்தேன். அவர் குற்றவாளி என்பதை ஒருவர்கூட நம்பவில்லை. அவர்மீது சுமத்தப்பட்ட குற்றம் ஆதாரமற்றது என்றும், அவர் நிரபராதி என்றுமே ஒவ் வொருவரும் கருதுகின்றனர்.

பயங்கர ஆட்சிமூலம் வாழும் அரசாங்கம் வாழ்வதற்கே முற் றிலும் தகுதியற்றது. அத்தகைய ஓர் அரசாங்கத்திற்காக, பாய் பரமானந்தர் நீண்ட காலம் சிறையில் இருக்க நேர்ந்துளது. அவரது மனைவியும் குழந்தைகளும் சொத்துக்களை இழக்க

நேர்ந்தது. அவர்களுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப் பட்டது சட்ட விரோதமாகும்.

பாய் பரமானந்தர் எழுதியுள்ள கடிதங்கள், அவர் மனத்தில் துவேஷம் இல்லை என்பதையும், அவர் அந்தமானில் மத சம்பந்த மான ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார் என்பதையும் காட்டுகின் றன. அத்தகைய ஒரு மனிதரை அரசாங்கம் சிறையில் வைத் திருப்பது சரியல்ல. எனவே, கனம் பொருந்திய பஞ்சாப் லெப்டினன்ட் கவர்னர் இவ்வழக்கை நன்கு பரிசீலனை செய்வ துடன், அந்தமானில் பாய் பரமானந்தரின் நடத்தையை விசா ரித்து, தாமதமின்றி அவரை விடுதலை செய்வாரென நம்புகிறேன். பொது மக்களும் பத்திரிகைகளும்கூட இவ்வழக்கைப் பரி சீலனை செய்து, பாய் பரமானந்தரை விடுதலை செய்யும்படி அர சாங்கத்தை வற்புறுத்துவார்களென நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 19—11—1919

# 11

# சக்கரவர்த்தியின் பிரகடனம்

சென்ற 24-ஆம் தேதி வெளியாகியுள்ள சக்கரவர்த்தியின் பிரகடனத்தைக்* குறித்துப் பிரிட்டிஷ் மக்கள் பெருமையடை வதற்கு எல்லாவிதமான காரணமும் இருக்கிறது. அதைக் குறித்து ஒவ்வோர் இந்தியரும் திருப்தியடையக் கடமைப்பட் டிருக்கிறார்கள்.

லார்டு ஹண்டர் கமிட்டியின் முன்னிலையில் வெளியான ரகசியங்களுக்குப் பிறகு விடுக்கப்பட்ட பிரகடனம், பிரிட்டி ஷாரின் உண்மையான இயல்பை ஊடுருவிக் காட்டுவதாக இருக் கிறது. பிரகடனம் பிரிட்டிஷாரின் உயர்ந்த குணத்தைக் காட்டு வதுபோல், ஜெனரல் டயரின் ஈவிரக்கமற்ற கொடுமை பிரிட்டி ஷாரின் மிகவும் மட்டமான குணத்தைக் காட்டுகிறது. பீதியும் படபடப்பும் காரணமாக மனிதன் பிசாசாக மாறிவிடுகிறான் என்பதற்கு ஜெனரல் டயரின் நடவடிக்கை ருசுவாக இருப்பது போல், நீதி வழங்கவேண்டும் என்ற நோக்கத்திற்குச் சக்கரவர்த் தியின் பிரகடனம் அத்தாட்சியாக இருக்கிறது.

* 1919-ஆம் வருடத்திய இந்திய அரசியல் சட்டத்திற்குச் சக்கரவர்த்தி சம்மதம் அளித்து விடுத்த பிரகடனத்தில், அரசியல் சீர்திருத்த இயக்கத்தின் முன்னேற்றத்தைக் குறித்துப் பரிசீலனை செய்திருந்தார்; சுதந்திர ஸ்தாபனங்களை நோக்கி விரைவில் முன்னேறுவதற்கு மக்களும் அதிகாரிகளும் பரஸ்பரம் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருந்தார்; பொதுப் பாதுகாப்பிற்குக் குந்தகமின்றி ராஜீயக் கைதி களையெல்லாம் விடுதலை செய்யும்படியும் வைஸ்ராய்க்கு உத்தரவிட்டிருந்தார்.

இந்த இரு சம்பவங்களும் அடுத்தடுத்து நிகழ்ந்தது முற்றிலும் அகஸ்மாத்தாகும். பிரகடனம், சக்கரவர்த்தியின் சம்மதத்தைப் பெற்ற மகத்தான சட்டத்தின் தவிர்க்க முடியாத விளைவேயாகும். அது இறுதியாகக் கொடுக்கப்படும் மெருகு போன்றது. அரசியல் சட்டமும் அதை அடுத்து வெளியான பிரகடனமும், இந்தியாவிற்கு நீதி வழங்க வேண்டும் என்ற பிரிட்டிஷ் மக்களின் உத்தேசத்திற்கு ஒரு முக்கியமான அறிகுறியே. எனவே அது, அவ்விஷயம் சம்பந்தப்பட்ட வரையில் நமது சந்தேகத்தை அகற்றுவதாக இருக்கிறது. எனினும், அதற்காக நாம் கையைக் கட்டிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருக்கலாம் என்பதும், அப்படி உட்கார்ந்திருந்தால் நாம் விரும்புவதைப் பெற்றுவிடலாம் என்பதும் அதன் அர்த்தமல்ல.

பிரிட்டிஷ் அரசியலின் கீழ், கடுமையான போராட்டமின்றி யாரும் எதையும் பெற முடியாது. இந்திய மக்களின் கிளர்ச்சி காரணமாக அரசியல் சீர்திருத்தங்கள் வழங்கப்படவில்லை என்று பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பலரும் கூறியதை யாரும் நம்பவில்லை. கிளர்ச்சியின்றி நாம் எதுவும் பெற முடியாதென்று காங்கிரஸ் அக்கிராசனர் கூறிய புத்திமதியை நாம் உறுதியாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மக்களின் உரிமைகளுக்காகக் கிளர்ச்சி செய்ய காங்கிரஸ் இராவிடில், இன்று நாம் இருக்குமிடமே தெரிந்திராது.

கிளர்ச்சி என்றால் ஏதாவதொன்றை நாடிச் செல்லுவது என்பதைத் தவிர வேறொன்றும் அல்ல. அவ்விதம் நாடிச் செல்லுவதெல்லாம் முன்னேற்றமாகிவிடாது. அதுபோலவே, கிளர்ச்சிகள் எல்லாம் வெற்றியடைந்து விடுவதில்லை. ஒழுங்கில்லாத கிளர்ச்சி என்பது பேச்சிலோ அல்லது செயலிலோ பலாத்காரமேயாகும். அத்தகைய கிளர்ச்சி தேசிய வளர்ச்சியைத் தடுத்து, ஜாலியன்வாலா பாக் படுகொலை போன்ற தகாத தண்டனையைக்கூட அனுபவிக்கும்படி செய்துவிடும். தேசிய வளர்ச்சிக்கு ஒழுங்கான கிளர்ச்சி இன்றியமையாத நிபந்தனையாகும். எனவே, அப்பழுக்கற்ற கிளர்ச்சி என்பது அப்பழுக்கற்ற நடவடிக்கையே. பிரகடனம், அரசியல் சீர்திருத்தங்கள் என்பதற்கு இனிமேல் குறைந்த கிளர்ச்சி, குறைந்த வேலை என்று அர்த்தமில்லை; ஆனால், அதிகக் கிளர்ச்சி, அதிக வேலை என்பதே அர்த்தமாகும்.

சீர்திருத்தங்கள் அரைகுறையாகவே இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. அவை போதிய அளவு நமது கோரிக்கைகளை நிறைவேற்றவில்லை. நாம் இன்னும் அதிகச் சீர்திருத்தங்களுக்கு உரியவர்கள். இன்னும் அதிகச் சீர்திருத்தங்களை நாம் பெற்றிருக்க முடியும். ஆனால், வழங்கப்பட்டுள்ள சீர்திருத்தங்கள்

நாம் நிராகரித்து* விடும்படியாக இல்லை. அதற்கு மாறாக அவை நாம் மேலும் முன்னேற்றம் அடைவதற்கு இடம் அளிப்பதாக இருக்கின்றன. ஆகையால், இப்போது நமது கடமை என்ன வெனில், வழங்கப்பட்டுள்ள சீர்திருத்தங்களைக் கடுமையாகக் கண்டிப்பதல்ல; பூரண வெற்றி கிடைக்கும் வகையில் அது செயல்படும்படி செய்ய அமைதியாக முயற்சி செய்வதேயாகும். அப்படியானால்தான், பூரண பொறுப்பாட்சி கிடைக்கும் காலத்தை நாம் எதிர்பார்க்க முடியும். எனவே இப்போது நாம் செய்யவேண்டிய வேலை என்னவெனில், நமக்குள்ளேயே கிளர்ச்சி செய்வதுதான். அதாவது, சமூக ஊழல்களைக் களை வதிலும், பலம் பொருந்திய வாக்காளர் தொகுதியை உற்பத்தி செய்வதிலும், சுயவிளம்பரத்திற்காகவன்றி தேசத் தொண்டிற் காகத் தேர்தலை நாடுவோரைத் தேர்ந்தெடுத்துச் சட்டசபைக்கு அனுப்புவதிலும் நாம் நமது முழு கவனத்தையும் செலுத்துவோ மாக.

நமக்குள், அதாவது ஆங்கிலேயருக்கும் நமக்கும் இடையே பரஸ்பரம் மிகுந்த அவநம்பிக்கை இருந்து வருகிறது. ஜெனரல் டயர் மனிதனின் சிறப்பை மறந்து, மனிதத் தன்மையற்றவரான தற்குக் காரணம், அவரைப் பற்றிக்கொண்ட அவநம்பிக்கையும் பீதியுமேயாகும். மக்கள் தம்மைத் தாக்கலாமென அவர் பீதி யடைந்தார்.

அரசியல் சீர்திருத்தங்களைக் காட்டிலும் அதிகமாகப் பிர கடனம்தான் அவநமபிக்கையைப் போக்கி, நம்பிக்கையை உண்டு பண்ணுவதாக இருக்கிறது. அந்த நம்பிக்கை சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்களின் மனத்தில் ஏற்படுமா என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும். ஆனால், அத்தகைய நம் பிக்கை ஏற்படுமென்றே வைத்துக் கொண்டு, நாம் முற்றிலும் ஒத்துழைக்க முற்படுவோம். நாம் அவ்விதம் செய்வதில் தவறு இருக்க முடியாது. ஏனெனில், நம்புவது ஒரு தருமமாகும். பல வீனத்தினாலேயே அவநம்பிக்கை ஏற்படுகிறது; சீர்திருத்தங் களைப் பெருந்தன்மையுடனும் அதிருப்தியில்லாமலும் ஏற்றுக் கொண்டு அமல் நடத்துவதே, சந்தேகமின்றிச் சிறந்த முறையில் நமது மகிழ்ச்சியைக் காட்டுவதாகும். லட்சியத்தை நோக்கித் துரிதமான முன்னேற்றத்திற்கு, நமது நேர்மையான ஊழியமே சிறந்த உத்தரவாதமாகும்.

ஒரு வினாடிகூடப் பின்வாங்காமல் இத்தனை ஆண்டுகளாக இந்தியாவுக்காக உழைத்து வரும் ஒரே ஒரு மனிதர் ஸ்ரீ மாண் டேகு தான். இந்தியா மந்திரி பதவியை அலங்கரித்த பல பிரிட்

---

* ஆனால், 1919-இல் வழங்கப்பட்ட அரசியல் சீர்திருத்தங்கள் சம்பந்தமாகப் பின்னர் காந்திஜி தமது கருத்தை மாற்றிக் கொள்ளும்படி நேர்ந்தது.

டிஷ் பிரமுகர்கள் இருந்திருக்கிறார்கள். ஆனால், ஸ்ரீ மாண்டேகு* வைப் போல் அப்பதவியை அலங்கரித்தவர் வேறு யாருமில்லை. அவர்தான் இந்தியாவின் உண்மையான நண்பராக இருந்திருக்கிறார். அவர் நமது நன்றிக்குப் பாத்திரராகியிருக்கிறார். லார்டு ஸின்ஹாவோவெனில்† தமது நாடு மேலும் ஒளி வீசித் திகழும்படி செய்திருக்கிறார். அவரைக் குறித்து இந்தியர்கள் பெருமையடைய எல்லாவிதக் காரணமும் உண்டு.

'எங் இந்தியா' -31—12—1919

# 12

# அந்தமானுக்கு அனுப்பும் அநீதி

ஸ்ரீ பக்கா, ஸ்ரீ ரதன் சந்த் இவர்களுடைய குடும்பத்தினரிடமிருந்து எனக்குக் கீழ்க்கண்ட தந்தி கிடைத்திருக்கிறது:

"பக்காவையும் ரதனையும் அந்தமான் சிறைக்கு மாற்ற உத்தரவிட்டிருக்கிறார்கள். பக்கா சென்ற பத்து ஆண்டுகளாகக் குடல், மூலநோயால் கஷ்டப்பட்டு வருகிறார். அவருக்கு ரண சிகிச்சையும் செய்யப்பட்டது. ரதனுக்கு நாற்பது வயதுக்கு மேல் ஆகிறது. எனவே, சிறை மான்யுவல் 721-ஆம் விதியின்படி அவரை அந்தமானுக்கு அனுப்பக்கூடாது."

மற்றவர்களைப் போல் இந்த எதிரிகளின் சார்பிலும் பிரிவீ கவுன்சிலுக்கு அப்பீல்கள் கொடுக்கப்பட்டிருந்தது, வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கும். சில சம்பிரதாய காரணங்களைக் கொண்டு அந்த அப்பீல்கள் நிராகரிக்கப்பட்டு விட்டன. பண்டித மோதிலால் நேரு வழக்குகளை அலசி ஆராய்ந்து, அந்த எதிரிகள் ஏற்கனவே விடுதலை செய்யப்பட்டுள்ளவர்களைக் காட்டிலும் அதிகக் குற்றம் எதுவும் செய்து விடவில்லை என்பதைக் காட்டி

* ஸ்ரீ மாண்டேகு, 1917-ஆம் ஆண்டிலிருந்து இந்தியா மந்திரியாக இருந்து இந்தியாவுக்குப் படிப்படியாக பொறுப்பாட்சி அளிப்பதே பிரிட்டனின் கொள்கை என்று பார்லிமெண்டில் அறிவித்தார். பிறகு அவர் இந்தியாவுக்கு விஜயம் செய்து, அப்போது இந்தியா வைஸ்ராயாக இருந்த லார்டு செம்ஸ்போர்டுடன் இந்தியத் தலைவர்களைச் சந்தித்துப் பேசி இந்தியாவின் நன்மதிப்பைப் பெற்றார். பிறகுதான் இந்திய அரசியல் சீர்திருத்தங்கள் அடங்கிய மாண்டேகு—செம்ஸ்போர்டு அறிக்கை வெளியாயிற்று. அது, பம்பாயில் நடந்த காங்கிரஸ் மகாசபையின் விசேஷக் கூட்டத்தில் அங்கீகரிக்கப்பட்டு, இந்திய அரசியல் சரித்திரத்தில் முக்கிய இடம் பெற்றது.

†வைஸ்ராய் நிர்வாகசபை அங்கத்தினர் பதவியையும் காங்கிரஸ் அக்ராசனர் பதவியையும் திறம்பட வகித்த லார்டு ஸின்ஹா, 1922-ஆம் ஆண்டிலே இந்தியத்தலைவர்கள் கைது செய்யப்பட்டதைக் கண்டித்துப் பீகார் கவர்னர் பதவியை ராஜிநாமா செய்தார்.

யுள்ளார். முதலில் பலருக்கு மரண தண்டனை விதித்திருந்தனர். பிறகு அத்தண்டனை சிறைத் தண்டனையாகக் குறைக்கப்பட்டது. பின்னர் அவர்களை அதிகாரிகள் விடுதலையும் செய்து விட்டனர். இவ்விருவரும், அவர்கள் செய்யாத என்ன குற்றத்தைச் செய்து விட்டார்கள்? ஒரு வேளை அப்பீல் செய்து கொண்டது குற்றமா? இவர்கள் அப்பீல் செய்திராவிடில், தயாள குணம் வாய்ந்த ஒரு வக்கீல் இரக்கம் கொண்டு இவர்களின் வழக்கை எடுத்துக் கொண்டு கடுமையான இடையூறுகளை எதிர்த்துப் போராடியிரா விடில், இவ்விருவரும் தூக்கு மேடையிலிருந்து தப்பியிருக்கமாட் டார்கள். பஞ்சாப் கவர்னர், சென்ற வருடம் ஏப்ரலிலிருந்து ஜூன் மாதம் வரையில் துன்பத்திற்கு உள்ளான பலரையும் விடு தலை செய்ததன் மூலம் தமது பெருந்தன்மையையும் விவேகத்தை யும் காட்டியுள்ளார். அப்பீல் நிராகரிக்கப்பட்டபிறகு, ஸ்ரீ பக்கா வையும் ஸ்ரீ ரதன்சந்தையும் தூக்கிலிட வைஸ்ராய்க்குச் சந்தர்ப் பம் கிடைத்தும்கூட, அவர் மரண தண்டனையைத் தீவாந்திர சிட் சையாகக் குறைத்துள்ளார் என்பது உண்மையே.

சக்கரவர்த்தியின் பிரகடனத்தைப் பூரணமாக அமலுக்குக் கொண்டு வருவதாயின், ஸ்ரீ பக்கா, ஸ்ரீ ரதன்சந் இருவரும் விடுதலை பெறுவதற்கு உரியவர்களாவர். லாலா ஹரிகிருஷ்ண லால், பண்டித ராம்பூஜ், தத், சௌத்ரி முதலிய பிரமுகர்களைக் காட்டிலும் அவ்விருவரும் அரசாங்கத்திற்கு அதிக ஆபத்தானவர் கள் அல்ல.

அவர்களை விடுதலை செய்ய வேண்டும் என்பதற்குப் பலமான ஆதாரங்கள் இருந்தும், நான் தாற்காலிகமாக வேண்டிக்கொள் ளுவது என்னவெனில், அவர்களை அடியோடு விடுதலை செய்ய வேண்டும் என்பதல்ல; அவர்களைப் பஞ்சாபிலேயே வைத்திருக்க வேண்டும் என்பதுதான். அவர்களை ஏற்கனவே அந்தமானுக்கு அனுப்பியிருந்தால், வேறு எந்தக் காரணத்திற்காக இராவிட்டா லும் அந்த அப்பாவிகளுடைய மனைவிமார் மீது இரக்கம் கொண் டாவது, அவர்களைத் திரும்பவும் இந்தியாவுக்குக் கொண்டு வர வேண்டும் என்பதுதான். இன்றைய அரசாங்கத்தின் நடவடிக் கைகள் நியாய வாதத்தையும் உயர்ந்த நீதி நெறியையும் அடிப் படையாகக் கொண்டில்லை; சந்தர்ப்பவாதத்தையும் பீதியை யுமே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்று பொது மக் கள் எண்ணும்படியாக விடக்கூடாது.

'எங் இந்தியா' 26—5—1920

# 13

# அமிருதசரஸ் அப்பீல்கள் நிராகரிக்கப் பட்ட அநியாயம்

இந்த அப்பீல்கள்* சிறந்த வக்கீல்கள் ஆஜராகி வழக்காடியும்கூட, நிராகரிக்கப்பட்டு விட்டன. சட்ட விரோதமான அந்த நடவடிக்கையைப் பிரிவீ கவுன்சில் உறுதி செய்து விட்டது. அப்பீல்தார்களின் சார்பில் சர் ஜான் சைமன் மேன் மேலும் வாதித்துக் கொண்டிருந்த போது நீதிபதிகள் கூறிய கருத்துக்கள், சாதகமான தீர்ப்பு கிடைக்குமென எதிர்பார்க்கும்படி செய்தன. அப்படியிருந்தும், தீர்ப்பு எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனது இந்தக் கருத்து, அரசியல் வழக்குகளைப் பற்றிய ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. அதாவது, மிக உயர்ந்த நீதிச் சபைகளின் தீர்ப்புகள்கூட, கபடமான அரசியல் நோக்கங்களால் பாதிக்கப்படாமல் இருப்பதில்லை. சிறிதும் பாரபட்சமில்லாத தீர்ப்பு கிடைப்பதற்காகச் செய்யும் மகத்தான முன் ஜாக்கிரதை ஏற்பாடுகள் கூட, நெருக்கடியான சமயங்களில் சீர்குலைந்து விடுகின்றன. மானிடர் அடங்கிய எல்லா ஸ்தாபனங்களிலும் குறைபாடுகள் இருக்கத்தான் செய்யும். எனவே, பிரிவீ கவுன்சிலிலும் குறைபாடுகள் இராமலிருக்கமுடியாது. மானிடர் அடங்கிய ஸ்தாபனங்கள் சாதாரண காலங்களில் மாத்திரமே சரிவர செயல்பட்டு வர முடியும். ஜனங்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு அளிக்கப்படுமாயின், அதன் விளைவாக இந்திய அரசாங்கத்திற்கு விவரிக்க முடியாத அவமானம் ஏற்படும். ஒரு தலைமுறைக்கு இந்திய அரசாங்கம் அந்த அவமானத்திலிருந்து விடுதலை பெறுவது கஷ்டமான காரியம்.

அமிருதசரஸ் அப்பீல்கள் நிராகரிக்கப்பட்ட செய்தி லாகூருக்குக் கிடைத்ததும், லாலா லஜபதி ராய்க்குத் தகுந்த முறையில் வரவேற்பு அளிப்பதாகச் செய்திருந்த பிரமாத ஏற்பாடுகளையெல்லாம் உடனே ரத்து செய்து விட்டார்கள்; பாஞ்சாலத்தின் தலைநகர் துக்கத்தில் ஆழ்ந்துவிட்டதாகவும் கூறப்பட்டது. இதிலிருந்து அந்தத் தீர்ப்பின் முக்கியத்துவத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம். எனவே, அத்தீர்ப்பின் காரணமாக அரசாங்கத்திற்கு மிகுந்த அவமானம் ஏற்பட்டிருக்கிறது. ஏனெனில்,

---

* பஞ்சாபில் ராணுவச் சட்டத்தினால் துன்பத்திற்கு உள்ளான சுமார் இருபது பேர்கள், ராணுவ அவசரச் சட்டங்கள் கொண்டு வர வைஸ்ராய்க்கு அதிகாரம் இல்லையென்றும், தாற்காலிக கோர்ட்டுகளின் நடவடிக்கைகள் ஒழுங்கற்றவை என்றும் காரணங்கள் கூறி பிரிவீ கவுன்சிலுக்கு அப்பீல் செய்திருந்தார்கள். அந்த அப்பீல்கள் நிராகரிக்கப்பட்டன.

பெரிய அரசியல் அல்லது நிறப் பிரச்னைகள் சம்பந்தப்பட்ட வரையில், பிரிட்டிஷ் அரசியலின் கீழ் இனி நீதி கிடைக்காது என்ற அபிப்பிராயம் பொது மக்களிடையே சரியாகவோ, தவறாகவோ ஏற்பட்டு விடும்.

அத்தகைய அபாயத்தைத் தவிர்க்க ஒரே ஒரு வழிதான் உண்டு. மனிதரின் மனத்தை, குறிப்பாக இந்தியரின் மனத்தைக் கவரும் சக்தி பெருந்தன்மைக்கு உண்டு. கிளர்ச்சி செய்ய வேண்டிய அவசியமோ, அல்லது விண்ணப்பங்கள் செய்து கொள்ள வேண்டிய அவசியமோ இல்லாமல், பஞ்சாப் அரசாங்கமோ அல்லது இந்திய அரசாங்கமோ மரண தண்டனைகளை உடனே ரத்து செய்ய வேண்டும். சாத்தியமாயின், அதே சமயத்தில் அப்பீல்தார்களை விடுதலை செய்து விடவும் வேண்டும்.

இரண்டு காரணங்களைக்கொண்டு இவ்விதம் செய்ய வேண்டியது அவசியம். இரண்டும் முக்கியமான காரணங்களே. முதல் காரணம், பொது மக்களின் மனத்தில் மீண்டும் நம்பிக்கை ஏற்படும்படி செய்ய வேண்டும். அவர்கள் மனத்தில் அவநம்பிக்கை ஏற்பட்டிருப்பது பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன். இரண்டாவது காரணம், சக்கரவர்த்தியின் பிரகடனத்தை அரை குறையின்றி முற்றிலும் நிறைவேற்ற வேண்டும். யாரை விடுதலை செய்தால் சமூகத்திற்கு ஆபத்து நேராதோ, அத்தகைய ராஜீயக் கைதிகள் சகலரையும் விடுதலை செய்யும்படி அந்த மகத்தான ராஜீய தஸ்தாவேஜு கட்டளையிடுகிறது. இந்த 21 அப்பீல் தார்களையும் விடுதலை செய்தால், அவர்களால் எந்த விதத்திலாவது சமூகத்திற்கு ஆபத்து ஏற்பட்டுவிடுமென யாரும் கூற முடியாது.

அவர்கள் இதற்கு முன், எக்காலத்திலும் எவ்விதக் குற்றமும் செய்ததில்லை. அவர்களில் பெரும்பாலோரும் ஒழுங்கானவர்களென்றும் மரியாதையுள்ளவர்களென்றும் கருதப்பட்டு வந்திருக்கிறார்கள். அவர்கள் எந்தப் புரட்சிக் கட்சியிலும் சேர்ந்திருந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் ஏதாவது குற்றம் செய்திருந்தால் அது திடீரென்று ஏற்பட்ட உணர்ச்சிப் பெருக்காலும், ஆத்திரம் மூட்டப்பட்டதாலும் செய்ததாகும். தவிர, ராணுவச் சட்ட நீதிச் சபைகள் விதித்த பெரும்பாலான தண்டனைகளுக்கும் ஆதாரமாகத் தகுந்த சாட்சியம் எதுவும் இல்லை என்பது பொது மக்களின் நம்பிக்கை. கையும் மெய்யுமாகப் பிடிபட்ட அரசியல் கைதிகளைக்கூட அரசாங்கம் விடுதலை செய்திருக்கிறது. எனவே, இந்த அப்பீல்தார்களையும் விடுதலை செய்ய அரசாங்கம் தயங்காதென்றும், அவ்விதம் விடுதலை செய்து இந்தியாவெங்கும் உள்ள மக்களின் நல்லெண்ணத்தைப் பெறும் என்றும் நம்புகிறேன். வெற்றி பெற்றுள்ள நேரத்தில் பெருந்தன்மையான நடவடிக்கையில் ஈடுபடுவதுதான் மிகுந்த பலனை அளிக்கவல்லது. அப்பீல்கள்

நிராகரிக்கப்பட்டது அரசாங்கத்துக்கு ஒரு வெற்றி என்பதே பொது மக்களின் அபிப்பிராயம்.

மனச்சோர்வு அடைந்துவிட வேண்டாமென நான் பஞ்சாப் நண்பர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். படுமோசமான நிலைமைக்கும் நம்மை நாம் சாந்தமாகத் தயார் செய்துகொள்ள வேண்டும். தண்டனைகள் நியாயமானவையாக இருந்தால், தண்டிக்கப்பட்டவர்கள் கொலை அல்லது கொலை செய்யும்படி தூண்டுதல் முதலிய குற்றங்களைச் செய்திருப்பார்களாயின், அவர்கள் ஏன் தண்டனையிலிருந்து தப்ப வேண்டும்? அவர்களில் பெரும்பாலோர் அத்தகைய குற்றங்கள் புரியவில்லை என்பதே நமது நம்பிக்கை. இந்தக் குற்றங்களை அவர்கள் செய்திராவிடில், மேலும் உயர்ந்த நிலையை அடைய முயற்சிப்போர் சகலரும் சாதாரணமாக உள்ளாகும் விதியிலிருந்து நாம் ஏன் தப்ப வேண்டும்? நாம் உயர்வை அடைவதற்காகத் தியாகம் செய்ய ஏன் அஞ்ச வேண்டும்? தியாகமின்றி எந்த நாடும் உன்னத நிலையை அடைந்ததில்லை. நிரபராதிகள் விஷயத்தில்தான் தியாகம் என்பது பற்றிப் பேச முடியுமேயன்றி, குற்றவாளிகள் விஷயத்தில் அந்தச் சொல் பொருந்தாது.

—'எங் இந்தியா' - 3—3—1920

# 14

# சாவர்க்கர் சகோதரர்கள்

"எனது பிரஜைகளுக்கும் எனது அரசாங்க நிர்வாகத்திற்குப் பொறுப்பாளிகளான அதிகாரிகளுக்குமிடையே உள்ள மனக்கசப்பும் வெறுப்பும் ஒழிக்கப்பட வேண்டும் என்பதே எனது மனப்பூர்வமான விருப்பமாகும். அரசியல் முன்னேற்றம் ஏற்பட வேண்டும் என்ற ஆர்வத்தினால் ஏற்கனவே சட்டத்தை மீறியவர்கள், எதிர்காலத்தில் சட்டத்திற்கு மதிப்புக் கொடுத்து நடந்து கொள்ளுவார்களாக. அமைதியான, ஒழுங்கான அரசாங்கத்தை நிலைநிறுத்தும் பொறுப்புள்ளவர்கள், தாங்கள் சமாளிக்கும்படி நேர்ந்த அத்து மீறிய காரியங்களை மறப்பது சாத்தியமாகும்படி செய்வார்களாக. ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாகிக் கொண்டிருக்கிறது. எனது மக்களும் அதிகாரிகளும் ஒரு பொதுவான லட்சியத்திற்காக ஊழியம் செய்யப் பொதுவாக உறுதி செய்து கொள்ளுவதுடன் இந்தப் புதிய சகாப்தம் ஆரம்பமாகட்டும்.

"எனவே, என் பெயரிலும் என் சார்பிலும் பொதுப் பாதுகாப்பிற்கு முரணின்றி யாரை விடுதலை செய்யலாமென்று வைஸ்ராய் எண்ணுகிறாரோ, அத்தகைய ராஜீயக் குற்றவாளிகளையெல்லாம் இரக்கம் காட்டி பூரணமாக விடுதலை செய்யும்படி நான் எனது வைஸ்ராய்க்குக் கட்டளையிடுகிறேன். அர

சாங்கத்துக்கு விரோதமாகவோ அல்லது அவசரச் சட்டத்தின் கீழோ குற்றம் செய்து சிறையிலிருப்பவர்களுக்கும், சுதந்திரம் கட்டுப்படுத்தப்பட்டிருப்பவர்களுக்கும் இரக்கம் காட்டி விடுதலையளிக்க நான் விரும்புகிறேன். இதனால் பலனடைவோர் தங்களுடைய எதிர்கால நடவடிக்கையால், இவ்விதம் கருணை காட்டியதற்குத் தாங்கள் தகுதி வாய்ந்தவர்கள் என்பதைக் காட்டுவார்கள் என்றும், அத்தகைய குற்றங்களுக்கான சட்டங்களை இனி உபயோகிப்பது அவசியமாக இராதபடி அவர்கள் நடந்துகொள்ளுவார்கள் என்றும் நம்புகிறேன்.''

—சக்கரவர்த்தியின் பிரகடனம், 24-12-1919

மேற்கண்ட சுருக்கமான விவரம் சென்ற டிசம்பர் மாதம் வெளியான பிரகடனத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும். இந்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்கள் இவற்றின் நடவடிக்கையால், சிறைத்தண்டனை அனுபவித்து வரும் பலர் மன்னர் காட்டிய கருணை காரணமாக விடுதலை பெற்றுள்ளனர். ஆனால், அதன்படி சில பிரபல "அரசியல் குற்றவாளிகள்" இன்னும் விடுதலை செய்யப்படவில்லை. விடுதலை பெறாதவர்களின் கூட்டத்தில் சாவர்க்கர் சகோதரர்களும் இருக்கிறார்கள். பஞ்சாபில் விடுதலை செய்யப்பட்டிருப்பவர்களைப் போலவே அந்தச் சகோதரர்களும் ராஜீயக் குற்றவாளிகள் ஆவர். அப்படியிருந்தும், சக்கரவர்த்தியின் பிரகடனம் வெளியாகி ஐந்து மாதங்களாகியும்கூட, அந்த இரண்டு சகோதரர்களுக்கும் இன்னும் விடுதலை கிடைக்கவில்லை.

அவ்விருவரில் மூத்தவரான ஸ்ரீ கணேச தாமோதர சாவர்க்கர் 1879-இல் பிறந்தார். அவர் சாதாரண கல்வியே கற்றார். 1908-இல் நாசிக்கில் நடந்த சுதேசி இயக்கத்தில் அவர் பிரபல பங்கு எடுத்துக்கொண்டார். 1909 ஜூன் மாதம் 9-ஆம் தேதி அவருக்கு 121, 121 ஏ, 124 ஏ, 153 ஏ பிரிவுகளின் கீழ் ஆயுள் பரியந்தம் தீவாந்திர சிட்சை விதித்தனர்; அவரது சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன. அவர் அந்தமானில் தண்டனையை அனுபவித்து வருகிறார். எனவே, அவர் சென்ற 11 வருடங்களாகச் சிறைத் தண்டனையை அனுபவித்தாகிவிட்டது.

பிரபல பிரிவான 121-வது பிரிவு, பஞ்சாப் வழக்குகளின் போது தாராளமாக உபயோகித்துக்கொள்ளப்பட்டது. "மன்னருக்கு விரோதமாக யுத்தம் தொடுப்பது" என்பதே அந்தப் பிரிவாகும். அந்தப் பிரிவின்படி குறைந்த பட்ச தண்டனை, ஆயுள் வரையில் தீவாந்திர சிட்சையும் சொத்தைப் பறிமுதல் செய்வதுமாகும். 121-ஏயும் அது போன்ற பிரிவே. 124-ஏ; ராஜத் துரோகக் குற்றத்தைக் குறிக்கிறது. 153-ஏ, வகுப்புக்களுக்கிடையே பகைமை வளர்ப்பதைக் குறிக்கிறது. எனவே, மூத்த சாவர்க்கருக்கு எதிராகச் சாட்டப்பட்டுள்ள குற்றங்கள் யாவும்

பொதுக் குற்றங்களே. அவர் பலாத்காரமான நடவடிக்கை எதிலும் ஈடுபடவில்லை.

அவருக்கு இரண்டு புதல்விகள் இருந்தனர். அவ்விருவரும் ஆலமாகிவிட்டார்கள். அவரது மனைவியும் பதினெட்டு மாதங்களுக்கு முன் இறைவனடி சேர்ந்தார்.

மற்றொரு சகோதரரான ஸ்ரீ விநாயக தாமோதர சாவர்க்கர் 1884-ஆம் ஆண்டு பிறந்தார். அவர் லண்டனில் கல்வி கற்றது பிரசித்தமானது. போலீஸ் பாதுகாப்பிலிருந்து பரபரப்பை உண்டாக்கும் விதத்தில் அவர் தப்ப முயற்சித்ததும், கப்பல் துவாரத்திலிருந்து பிரஞ்சு எல்லையில் தண்ணீரில் குதித்ததும், பொது மக்களின் மனத்தில் இன்னும் பசுமையாக இருக்கின்றன. அவர் பூனா பர்குஸன் கல்லூரியில் வாசித்து, லண்டனுக்குச் சென்று தமது படிப்பை முடித்து பாரிஸ்டரானார். அவர், அரசாங்கத்தினால் பறிமுதல் செய்யப்பட்ட '1857-ஆம் வருடத்திய சிப்பாய் புரட்சி' என்ற நூலின் ஆசிரியர். அவரும் அவரது சகோதரரைப் போலவே, 1910 டிசம்பர் 24-ஆம் தேதி அதே தண்டனை விதிக்கப்பட்டார். 1911-இல் கொலைக்கு உடந்தையாக இருந்ததாகவும் அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. ஆனால், பலாத்கார நடவடிக்கை எதுவும் அவருக்கு விரோதமாக ருசுவாகவில்லை. அவருக்கு 1909-இல் ஒரு மகன் பிறந்தான். அவரது மனைவி இன்னும் ஜீவதசையுடன் இருக்கிறார்.

இவ்விரு சகோதரர்களும் தங்களுடைய ராஜீயக் கருத்துக்களைப் பகிரங்கமாகக் கூறியிருக்கிறார்கள். தங்களுக்குப் புரட்சி எண்ணங்கள் எதுவுமில்லை என்றும், தாங்கள் விடுதலை அடைந்தால் அரசியல் சீர்திருத்த சட்டத்தின்கீழ் ஊழியம் செய்ய விரும்புவதாகவும் கூறியிருக்கிறார்கள். இந்தியாவில் அரசியல் பொறுப்பாட்சிக்குச் சீர்திருத்த சட்டம் வழி செய்வதாக இருக்கிறதென்று அவர்கள் கருதுகிறார்கள். பிரிட்டிஷ் தொடர்பை அறவே கத்தரித்துக்கொண்டு இந்தியா சுதந்திரம் பெறுவதைத் தாங்கள் விரும்பவில்லை என்றும் அவ்விருவரும் சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறுகிறார்கள். அவர்களுடைய கௌரவத்தையோ, யோக்கியப் பொறுப்பையோ யாரும் சந்தேகிக்கவில்லை. அவர்கள் வெளியிட்டுள்ள அபிப்பிராயத்தை அப்படியே எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதே என் அபிப்பிராயமாகும். மேலும், தற்போது இந்தியாவில் பலாத்காரக் கொள்கைக்கு ஆதரவு இல்லையென்று நினைக்கிறேன்.

அவ்விரு சகோதரர்களுக்கும் விடுதலையளிக்க இன்னும் மறுத்து வருவதற்கு ஒரே ஒரு காரணம்தான் இருக்க முடியும். அதாவது 'பொதுப் பாதுகாப்பிற்கு ஆபத்து' என்ற காரணம் தான். பொதுப் பாதுகாப்பிற்கு முரணின்றி எல்லாக் கைதி

களையும் பூரணமாக விடுதலை செய்ய வேண்டுமென்று சக்கரவர்த்தி வைஸ்ராய்க்குக் கட்டளையிட்டிருக்கிறார் அல்லவா ?

அவ்விரு சகோதரர்களும் ஏற்கனவேயே நீண்ட கால சிறைத் தண்டனையை அனுபவித்துவிட்டார்கள். அவர்களுடைய உடல் நிறை மிகவும் குறைந்துவிட்டது. அவர்கள் தங்களுடைய ராஜீயக் கருத்துக்களையும் பகிரங்கமாகப் பிரகடனம் செய்திருக்கிறார்கள். எனவே, அவர்களை விடுதலை செய்வது ராஜ்யத்திற்கு ஆபத்தாகும் என்பது நிச்சயமாக நிரூபிக்கப்பட்டாலன்றி, வைஸ்ராய் அவர்களை விடுதலைசெய்யக் கடமைப்பட்டுள்ளார். மேற்கொண்டு அவர்களைச் சிறையில் வைத்திருப்பதாயின், அதற்கு நியாயமான காரணம்கூறி பொது மக்களுக்கு முழு விவரங்களுடனும் ஓர் அறிக்கை வெளியிட வேண்டியது அவசியமாகும்.

இவ்வழக்கும், பாய் பரமானந்தர் மீதுள்ள வழக்கு போன்றதே. பாய் பரமானந்தர் நீண்ட கால சிறைவாசத்திற்குப் பிறகு பஞ்சாப் அரசாங்கத்தின் தயவால் விடுதலையடைந்தார். பாய் பரமானந்தர், வழக்கு விசாரணையின்போது தாம் முற்றிலும் நிரபராதி என்று கூறினர் என்பது உண்மையே. எனினும், சாவர்க்கர் சகோதரர்கள் வழக்கிற்கும் பாய் பரமானந்தர் வழக்கிற்கும் வேற்றுமை எதுவும் கற்பிக்க வேண்டிய அவசியமில்லை. ஏனெனில், அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரையில், தண்டனை அடைந்த யாவரும் குற்றவாளிகள் தாம். சக்கரவர்த்தி இரக்கம் காட்டி பிரகடனம் விடுத்திருப்பது, சந்தேகாஸ்பதமான வழக்குகளுக்கு மாத்திரமல்ல, முற்றிலும் ருசுவான குற்றங்கள் சம்பந்தமான வழக்குகளுக்கும் பொருந்தும். கைதிகள் விடுதலை சம்பந்தமாகப் பிரகடனத்தில் உள்ள நிபந்தனை என்னவெனில், அவர்கள் அரசியல் கைதிகளாக இருக்க வேண்டும்; வைஸ்ராயின் அபிப்பிராயத்தில் அவர்களுடைய விடுதலை, பொதுஜனப் பாதுகாப்பிற்கு அபாயம் ஏற்படாத வகையில் இருக்க வேண்டும் என்பது தான். சாவர்க்கர் சகோதரர்கள் அரசியல் கைதிகள் என்பது பற்றி எவ்வித ஆட்சேபணைக்கும் இடமில்லை. பொது மக்கள் அறிந்த வரையில், அவர்களை விடுதலை செய்வதால் பொதுஜனப் பாதுகாப்பிற்கு எவ்வித அபாயமும் ஏற்படாது.

அத்தகைய வழக்குகள் சம்பந்தமாக வைஸ்ராய் சபையில் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு, அவை ஆலோசனையில் இருந்து வருகின்றனவென்று பதில் அளிக்கப்பட்டது. ஆனால், அவர்களுடைய சகோதரருக்குப் பம்பாய் அரசாங்கம் அனுப்பியுள்ள பதில் ஒன்றில், சாவர்க்கர் சகோதரர்கள் சார்பில் எத்தகைய விண்ணப்பமும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாதென்று கூறப்பட்டிருக்கிறது. இந்திய அரசாங்கத்தின் அபிப்பிராயத்தில் அவர்களை விடுதலை செய்வது முடியாத காரியமென்று, இந்தியா மந்திரி மாண்டேகு பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கூறிவிட்டார்.

இவ்விஷயத்தை அவ்வளவு சுலபமாக ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. சட்டத்தைப் போல் நிச்சயமாக அமலுக்குக் கொண்டு வந்து தீர வேண்டிய சக்கரவர்த்தியின் பிரகடனம், சாவர்க்கர் சகோதரர்கள் விஷயத்திலும் பொருந்தும். அப்படியிருந்தும் அவர்கள் சிறையில் வைக்கப்பட்டிருப்பதற்குத் திட்டவட்டமான காரணங்கள் யாவை என்பதை அறிந்துகொள்ளப் பொது மக்களுக்கு உரிமை உண்டு.

— 'யங் இந்தியா' — 26—5—1920

# 15

# ஜாலியன்வாலா பாக்

ஜாலியன்வாலா பாக்கை * தேசத்தின் சொத்தாக விலைக்கு வாங்கும் விஷயமாய், துரதிருஷ்டகரமான ஒரு சிக்கல் ஏற்பட்டிருந்தது. ஆனால் நல்ல வேளையாக, பண்டித மதன் மோகன் மாளவியா, சந்நியாசி சுவாமி சிரத்தானந்தர், ஸ்தல

* காந்திஜி 'நவஜீவனி'ல் எழுதியுள்ள ஒரு கடிதத்தில் ஜாலியன்வாலா பாக்கைப் பற்றி இவ்விதம் குறிப்பிட்டிருக்கிறார்: "ஜாலியன்வாலா பாக் என்பது, அந்த இடத்திற்குச் சிறிதும் பொருந்தாத ஒரு பெயராகும். ஜாலியன் என்பது ஒரு குடும்பப் பெயர். அந்த இடத்தின் ஆதி சொந்தக்காரர் ஒரு 'ஜாலியன்' (மந்திரவாதி). அந்த 'பாக்' இன்று நாற்பது பேர்களின் கூட்டுச் சொத்தாக இருக்கிறது. அது 'பாக்'குமல்ல, நந்தவனமுமல்ல; அது ஒரு குப்பை மேடு. அந்த பாக்கின் நாலா புறங்களிலும் வீடுகளின் கொல்லைப்புறச் சுவர்கள், மதில் போல் அடைப்பாக இருக்கின்றன.

"ஜனங்கள் அதை பின்புற ஜன்னல்களிலிருந்து குப்பைகளை எறிவதற்கு வசதியான இடமாகச் செய்துகொண்டிருக்கிறார்கள். அது ஒரு திறந்த இடமாகும். அதில் மூன்று மரங்களும் ஒரு சமாதியும் இருக்கின்றன. ஒரு குறுகிய சந்து வழியாகத்தான் அந்த பாக்கிற்குள் செல்ல முடியும். இந்தச் சந்தின் வழியாகத்தான் ஜெனரல் டயர் பாக்கிற்கு அருகில் சென்றார்.

"எனவே, ஏப்ரல் 13-ஆம் தேதி அங்கே நடந்த கூட்டத்திற்கு வந்த ஜனங்கள் பட்டியில் அடைபட்டது போலாகிவிட்டார்கள். மூன்று அல்லது நான்கு இடங்களில் சுவர்கள் மீதேறித் தாண்டிச் செல்லுவதைத் தவிர, தப்புவதற்கு வேறு வழி எதுவுமில்லை. துர்ப்பாக்கியமான அத்தினத்தில், ஆயிரக்கணக்கானவர்கள் அந்தச் சுவர்களைத் தாண்டி உயிர் தப்பினர்.

"நிரபராதிகளின் இரத்த வெள்ளம் அந்தப் பூமியைப் புனிதமாக்கியிருக்கிறது. பொதுக் காரியங்களுக்காக அந்த இடத்தை விலைக்கு வாங்க முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. அதில் நாம் வெற்றி பெறாவிடில், அது நமக்கு வெட்கக்கேடாகும்."

அந்த இடத்தைப் பற்றி "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை கீழ்க்கண்டவாறு வருணித்திருக்கிறது:

"ஜாலியன்வாலா பாக்கிற்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் விஜயம் செய்து வருகிறார்கள். அந்த இடம் பெரிய திறந்தவெளியாகும். அது, நாலா புறங்களிலும்

தலைவர்கள் இவர்களுடைய முயற்சியால், அது இப்போது தேசத்தின் சொத்தாகியிருக்கிறது. 6-ஆம் தேதியிலிருந்து மூன்று மாதத்திற்குள் அதன் முழு விலையையும் கொடுத்துவிட்டால், அது தேசத்தின் சொத்தாகிவிடும். அந்த இடத்தின் விலை ரூ. 5,36,000 ஆகும். குறிப்பிட்ட கெடுவிற்குள் அந்தத் தொகையை வசூல் செய்து கொடுத்துவிட வேண்டும்.

எனவே, தேசத்தின் சார்பில் இதை விலைக்கு வாங்குவதன் நியாயாநியாயத்தைப் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமாகும். விஷயம் அறிந்தவர்கள்கூட, இதை விலைக்கு வாங்கியதை ஆட்சேபித்திருக்கிறார்கள். ஆட்சேபவாதிகள் மரியாதைக்கு உரியவர்களே. எனினும், அந்த 'பாக்'கை நாம் விலைக்கு வாங்காவிடில், அது நாட்டிற்கே அவமானம் என்பதை நான் சொல்லாமலிருக்க முடியவில்லை.

ஒழுக்கத்திற்கு விரோதமாகவோ அல்லது சட்டத்திற்கு விரோதமாகவோ யாதொன்றும் செய்யாதிருந்தும்கூட, அங்கே ஐந்நூறு பேர்களுக்கு மேல் கொல்லப்பட்டனர் என்பதை நாம் மறக்க முடியுமா? அறிந்திருந்தும் விருப்பத்துடனும் அவர்கள் இறந்திருந்தால், தாங்கள் நிரபராதிகள் என்பதை உணர்ந்து, அவர்கள் உயிரைத் துச்சமாக மதித்து உறுதியுடன் நின்று, ஐம்பது துப்பாக்கிகளிலிருந்து வந்த தோட்டாக்களை எதிர்த்து நின்றிருந்தால், அவர்கள் மகான்கள் என்றும், வீரர்கள் என்றும், தேச பக்தர்கள் என்றும் சரித்திரத்தில் இடம் பெற்றிருப்பார்கள். அப்படி இல்லாமலிருந்தும்கூட, அந்தத் துக்ககரமான சம்பவம் முதல் தரமான தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததாகிவிட்டது. வேதனையிலிருந்தும் துன்பத்திலிருந்தும்தான் தேசங்கள் ஜனிக்கின்றன.

நம்முடைய சுதந்திரப் போராட்டத்தில், நிரபராதிகளாகவோ அல்லது பிறர் செய்த குற்றங்களுக்காகவோ உயிர் இழந்தவர்களின் அல்லது வேறுவிதத்தில் துன்பத்திற்கு உள்ளானவர்களின் ஞாபகத்தைப் போற்றிப் பாதுகாக்க நாம் தவறிவிட்டால், நாம் ஒரு தேச இனத்தினர் என்று கருதப்படும் உரிமையையே அடியோடு இழந்தவர்களாவோம்.

நமது நாட்டு மக்கள் இரக்கமின்றிக் கொடுமையாகப் படுகொலை செய்யப்பட்டபோது, அனாதையான அவர்களைக் காப்பாற்ற நாம் சக்தியற்றவர்களாக இருந்தோம். நாம் விரும்பினால்,

---

ஜனங்கள் குடியிருக்கும் வீடுகளால் சூழப்பட்டிருக்கிறது. அதற்கு இரண்டு அல்லது மூன்று சிறிய வாயில்கள் மாத்திரமே இருக்கின்றன. ஜெனரல் டயரும் அவரது ஆட்களும் யந்திரத் துப்பாக்கிகளால் ஜனங்கள் மீது சுட்டதில், வீடுகளைச் சுற்றியுள்ள சில சுவர்களில் தோட்டாக்கள் பாய்ந்த அடையாளங்கள் இருக்கின்றன. அவை, அந்த இடத்திற்கு விஜயம் செய்வோரின் கவனத்தைக் கவருகின்றன."

தவறுக்குப் பழி வாங்க நாம் மறுத்துவிடலாம். அவ்விதம் மறுத்தால், தேசத்திற்கு நஷ்டம் எதுவும் ஏற்பட்டுவிடாது. ஆனால், அவ்விதம் உயிர்த் தியாகம் செய்தவர்களின் ஞாபகம் நிரந்தரமாக இருக்கும்படி செய்ய நாம் மறுக்கலாமா? நாம் மறுக்க முடியுமா? அவர்களுக்காகத் தேசிய சமாதி ஒன்றை எழுப்பி, மாண்டவர்களின் குடும்பத்தினருக்கு அவர்களுடைய மனவேதனையில், துக்கத்தில் நாமும் பங்கு எடுத்துக்கொள்ளுகிறோம் என்பதைக் காட்ட வேண்டாமா? அதன் மூலம், அவர்களுடைய மரணத்தினால் இந்தியாவில் உள்ள ஒவ்வொருவரும் நெருங்கிய உறவினர்களை இழந்துவிட்டோம் என்பதை உலகத்திற்குக் கூற வேண்டாமா? உயிர்த் தியாகம் செய்தவர்கள் விஷயத்தில் நமக்கு இந்த உறவுகூட இராவிடில், பின்னர் தேசிய உணர்ச்சி என்பது பொருளற்றதாகிவிடும்.

உண்மையான சுதந்திரத்தை நோக்கி நாம் செல்லும்போது, ஜாலியன்வாலா பாக் படுகொலைகளைப் போன்ற அட்டூழியங்கள் அடிக்கடி நிகழும். அவற்றிற்கெல்லாம் நாம் தயாராக இருக்க வேண்டுமென்று இப்போதுள்ள தலைமுறையினருக்கும், வரப்போகும் தலைமுறையினருக்கும் நாம் கூற வேண்டியது நமது கடமையாகும். அத்தகைய அட்டூழியங்கள் நடைபெறாமல் நாம் பார்த்துக்கொள்ள வேண்டும். அவற்றை நாம் நாட வேண்டாம். எனினும், அவை மீண்டும் நடைபெறுமாயின், அவற்றை எதிர்த்து நின்று சமாளிக்க நாம் தயாராக இருக்க வேண்டும். தேசியப் போராட்டத்திலிருந்து நாம் பின்வாங்குவதை நான் ஒருபோதும் விரும்பமாட்டேன்.

அமிருதசரஸ் காங்கிரசின்* மகத்தான படிப்பினை என்னவெனில், பஞ்சாப் பட்ட கஷ்ட நஷ்டங்களும் துன்பங்களும் தேச மக்களைச் சோர்வு அடையும்படி செய்துவிடவில்லை என்பதே. அதற்கு மாறாக, சுதந்திரப் போராட்டத்தில் அவை போன்ற கஷ்டங்கள் சகஜமென்று மக்கள் கருதினர். நம்மில் சிலர் மடத்தனமான தவறுகளைச் செய்ததற்காக, நிரபராதிகள் கஷ்டப்பட நேர்ந்தது. எதிர்காலத்தில் நாம் தவறுகளைத் தவிர்க்க

---

*ஜாலியன்வாலா பாக் படுகொலைக்குப் பிறகு அமிருதசரஸில் காங்கிரஸ் மகா சபைக் கூட்டம் நடந்தபோது, அதையொட்டிய விசாரணை முடியவில்லை. எனவே, அப்படுகொலை சம்பந்தமாக திட்டமான தீர்மானம் எதுவும் நிறைவேறவில்லையெனினும், அத்தகைய கொடுமைகளைக் கண்டு மக்கள் அஞ்சமாட்டார்கள் என்பது அமிருதசரஸ் காங்கிரசில் வெளியாயிற்று. 1920 டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் அமிருதசரஸ் காங்கிரஸ் நடந்தபோது, படுகொலை நடந்த ஜாலியன்வாலா பாக் ஒரு புனித ஸ்தலமாக விளங்கியது. ஆயிரக்கணக்கான காங்கிரஸ் பிரதிநிதிகளும் பதினாயிரக்கணக்கான மக்களும் அந்த இடத்திற்கு விஜயம் செய்தனர். நிரபராதிகளின் இரத்தக்கறை படிந்த மணலில் நெற்றி படும்படி சிலர் வணங்கினர். மற்றும் சிலர் புனிதமான ஒரு பொக்கிஷம்போல் பாதுகாப்பதற்காக அந்த மணலில் சிறிதளவு பயபக்தியுடன் எடுத்துச் சென்றனர். சிலர் அந்த மணலை எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டனர்.

முயற்சிக்க வேண்டும். எனினும், நாம் எவ்வளவு சிறந்த முயற்சி செய்தாலும், ஒவ்வொருவரையும் சித்தசுவாதீனமுள்ளவர்களாக மாற்ற நாம் தவறிவிடலாம். எனவே, நிரபராதிகள் அடிக்கடி துன்பத்திற்குள்ளாகும்படி நேருவதற்கு நாம் தயாராக இருக்க வேண்டும். அத்தகையோரையும் அவர்களுடைய தியாகங்களை யும் நாம் மறக்கமாட்டோம் என்றும், மாண்ட நிரபராதிகளின் ஞாபகத்தை ஒரு புனித பொக்கிஷமாக நாம் கருதிவருவோம் என் றும், தேவைப்பட்டால் அவர்களுடைய உறவினர்களுக்குத் தங் களுடைய ஜீவனத்திற்காக, தேசத்தின் உதவியை எதிர்பார்க்க உரிமை உண்டு என்றும் நாம் தேச மக்களிடம் சொல்லவேண்டும். ஞாபகச் சின்னத்தின் முக்கியமான அர்த்தம் இதுதான். அங்கே ஹிந்துக்களுடைய இரத்தத்துடன் முஸ்லிம்களின் இரத்தமும் கலந்து ஓடியதல்லவா? சனதனிகள், சமாஜத்தினர் இவர்க ளுடைய உதிரத்துடன் சீக்கியர்களின் உதிரமும் கலந்து ஓட வில்லையா? எனவே, ஞாபகச் சின்னம், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கான, உருவான, நேர்மையான முயற்சியின் ஒரு தேசிய சின்னமாக இருக்கவேண்டும்.

ஆனால், ஆட்சேபவாதிகளின் ஆட்சேபணைக்கு இன்னும் பதில் அளிக்கப்படவில்லை. அந்த ஞாபகச் சின்னம், துவேஷத் தையும் வெறுப்பையும் நிரந்தரமாக்குவதாகாதா என்று அவர்கள் கேட்கின்றனர். அது ஞாபகச் சின்ன தருமகர்த்தாக் களைப் பொறுத்ததாகும். அவர்களுக்கு அந்த உத்தேசம் இல்லவே இல்லை என்பது எனக்குத் தெரியும். ஞாபகச் சின்னம் ஏற்படுத்தவேண்டும் என்ற எண்ணத்தில் துவேஷத் திற்குச் சிறிதும் இடமில்லை.

படுகொலைகள் செய்தவரையும் அவரது வெறியையும் மறந்துவிட மக்கள் விரும்புகின்றனர்; அதை மறந்து விடும்படி அவர்களைத் தூண்டவும் வேண்டும். அவரது பொறுப்பற்ற தன்மையும் சந்தர்ப்பமும் நமக்கு வாய்த்தால், ஜெனரல் டயரைப் போலவே நாம் எல்லோரும் செய்வோம். தவறு செய்வது மனித இயல்பு. நாம் தவறு செய்யும் இயல்புடையவர்களாயினும், நாம் மன்னிக்கப்படுவதையே விரும்புவோம்; தமது குற்றங்களை ஞாபகப்படுத்தும் விதத்தில் தண்டிக்கப்படுவதை விரும்ப மாட்டோம். தவறு செய்வது மனித இயல்பாக இருப்பது போல், மன்னிப்பதும் மனித இயல்பாகும்.

எனினும், ஜெனரல் டயரைப் பதவியிலிருந்து விலக்கிவிட வேண்டுமென நாம் கேட்காமல் இருந்துவிடலாம் என்பது இதன் அர்த்தமல்ல. பிறருக்குத் தீங்கு செய்யக்கூடிய ஒரு பதவியில் வெறி பிடித்த ஒரு பைத்தியக்காரரை வைத்திருக்கக்கூடாது. எனினும், ஒரு பைத்தியக்காரரிடம் நமக்கு எவ்வாறு துவேஷம் இராதோ, அதுபோலவே ஜெனரல் டயரிடத்தில்கூட நமக்குத்

துவேஷம் இருக்கக்கூடாது. எனவே, ஞாபகச் சின்னத்திலிருந்து துவேஷத்தையும் பகையையும் தவிர்க்கவேண்டும் என்றும், அதை ஒரு புனித ஞாபகார்த்தமாகவே கருதவேண்டும் என்றும் நான் விரும்புகிறேன். அந்த 'பாக்'கை புனித யாத்திரை ஸ்தலமாக மதிக்க வேண்டும். ஜாதி, மத, நிற வேற்றுமையின்றி எல்லோரும் அந்த இடத்திற்கு விஜயம் செய்ய வேண்டும். அவ் விஷயத்தில் நமக்குள்ள உணர்ச்சியை அறிந்துகொள்ளும்படி நான் ஆங்கிலேயர்களைக் கேட்டுக்கொள்ளுவேன். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையின்றேல், இந்தியா உண்மையான முன்னேற்றம் அடைய முடியாது. எனவே, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஏற்படும்படி செய்வதற்கும், ஒரே அரசியலின் கீழ் அவர்களுக்கு எவ்வளவு சுதந்திரம் இருக்கிறதோ, அவ்வளவு சுதந்திரம் நமக்கும் கிடைக்கும்படி செய்வதற்கு அவர்கள் உதவி புரிவதுடன், சக்கரவர்த்தி பிரகடனத்தின் நோக்கத்திற்கிணங்க ஞாபகச் சின்ன நிதிக்குத் தொகை கொடுக்கும்படியும் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுவேன்.

—'எங் இந்தியா' — 18—11—1920

# 16

# வைஸ்ராய் திரும்பிப் போகவேண்டும்

எல்லோரும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த அறிக்கை வெளியாகியிருக்கிறது. அறிக்கையைத் தயாரித்த கமிஷனர்கள் தங்கள் அலுவல்களை ஒழுங்கான முறையில் அணுகியிருக்கிறார்கள்; மிகவும் கஷ்டமான தங்களுடைய கடமையை அவர்கள் அடக்கத்துடன் கையாண்டிருக்கிறார்கள். இதைக் குறித்துக் கமிஷனர்கள் மகிழ்ச்சி அடையலாம். ஏற்கனவே சிறந்த அம்சங்களுடன் விளங்கும் அந்த அறிக்கைக்கு, கமிஷனர்களின் அந்தஸ்து இன்னும் அதிக மதிப்பைக் கொடுத்திருக்கிறது.

கமிஷனர்கள், தங்களிடமுள்ள சாட்சியத்திற்குப் புறம்பாக எதுவும் கூறவில்லை. எனவே, வாசகர்கள் இஷ்டப்பட்டால், தங்களுக்குத் தாங்களே அம்முடிவுகளைப் பரிசோதனை செய்து கொள்ளலாம். கமிஷனர்களின் சிபாரிசுகள் மனம் போன போக்கிலோ அல்லது பலவீனமாகவோ இல்லை. வைஸ்ராயைத் திருப்பி அழைத்துக்கொள்ள வேண்டும் என்றும், சர் மைக்கேல் ஓட்வியரையும், ஜெனரல் டயரையும், மற்ற அதிகாரிகளையும் பதவியிலிருந்து விலக்கிவிட வேண்டும் என்றும் தைரியமாகக் கேட்டிருக்கிறார்கள்.

அதில் உள்ள இரண்டு சிபாரிசுகளைக் குறித்துச் சிறிது எதிர்ப்பு ஏற்படலாம். ஆனால், கமிஷனர்கள் ஒவ்வொரு சிபாரிசுக்கும் தெளிவான, குற்றம் கண்டுபிடிக்க முடியாத காரணங்கள் கொடுத்துள்ளனர். அவர்கள் குறிப்பிட்டுள்ள உண்மைகள் ஆட்சேபிக்கப்படாவிடில், அவர்களின் சிபாரிசுகளும் ஆட்சேபிக்க முடியாதவை.

வைஸ்ராயைத் திருப்பி அழைத்துக்கொள்ள வேண்டும் என்ற சிபாரிசை நாம் அங்கீகரிக்கவேண்டியிருப்பதைக் குறித்து மிகவும் வருந்துகிறோம். வைஸ்ராய் பண்பாடுள்ள ஓர் ஆங்கில கனவான் என்றே நம்புகிறோம். இந்தியாவுக்கு நன்மை செய்யவும், நேர்மையான காரியத்தைச் செய்யவுமே அவர் ஆர்வம் கொண்டிருக்கிறார். ஆனால், உயர்ந்த வைஸ்ராய் பதவிக்கு இந்த யோக்கியதாம்சங்கள் மாத்திரம் போதா. வைஸ்ராய் லார்டு செம்ஸ்போர்டு, தமக்குச் சிந்தனை சக்தி குறைவு என்பதைச் சந்தேகத்திற்கு இடமின்றிக் காட்டிக்கொண்டுள்ளார்.

ஒரு காலனி கவர்னர் பின்பற்றும் சம்பிரதாய முறைகளை அவர் அனுஷ்டித்துள்ளார். காலனி கவர்னர், காலனியின் நிர்வாகக் கொள்கைகளைப் பாதிக்கும் வண்ணம் எத்தகைய முறைகளையும் கைக்கொள்ளக்கூடாது என்ற தடை உண்டு. அவர் எப்போதும் அவரது மந்திரிகளின் ஆலோசனைப்படியே நடந்து கொள்ளவேண்டும். அப்படி அவர் ஏதாவது முறைகளைக் கைக்கொள்ள விரும்பினாலும், தம்முடைய செல்வாக்கையும் பழக்கத்தினால் ஏற்பட்ட தொடர்பையும் தந்திரமாக உபயோகித்துச் செய்ய வேண்டுமேயன்றி, அதிகாரபூர்வமாக எதுவும் செய்ய முடியாது. சுயாட்சி பெற்றுள்ள காலனிகளில் கவர்னர் தமது யோசனைகளை இங்கிதமாகக் கூறுவாரேயன்றி, மந்திரிகளை ஒரு போதும் வற்புறுத்தமாட்டார்; தம்முடைய அதிகாரத்தைக் கொண்டல்ல, அரசியல் சம்பந்தமற்ற சமூக வைபவங்களில் கலந்துகொண்டு, நண்பர்களின் மூலம் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க முயற்சிப்பார்.

எனவே, காலனி கவர்னர் வெற்றிகரமாக நிர்வாகத்தை நடத்த என்ன யோக்கியதாம்சங்கள் தேவையோ, அதே யோக்கியதாம்சங்கள், லார்டு செம்ஸ்போர்டை வைஸ்ராய் பதவிக்குத் தகுதியற்றவராகச் செய்துள்ளன. இந்தியாவில் வைஸ்ராய்க்கு அபரிமிதமான அதிகாரங்கள் உண்டு. அவர் தன் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்யலாம். நிர்வாக மந்திரிகள் சபை அவருடைய ஆதிக்கத்திலேயே இருக்கிறது. அவர் கூறும் வெறும் யோசனைகூட ஒரு சட்டம் போன்றது. அவரே கொள்கைகளை வகுத்து அமலுக்குக் கொண்டுவரலாம்.

மாகாணங்களின் நிர்வாகத்தை அவரே மேற்பார்வையிடுகிறார். மாகாண நிர்வாகத்தில் தலையிடவும் அவருக்கு முழு உரிமை

உண்டு. எனவே, அவர் மிகுந்த சிந்தனையுடன் கூடிய பலம் வாய்ந்த ஓர் ஆட்சியாளராக இருக்கவேண்டும்; பொது மக்களிடம் அனுதாபம் உள்ளவராகவும் இருக்கவேண்டும். அந்த அனுதாபத்தை வெளியே காட்டிக்கொள்ள அவர் ஒருபோதும் அஞ்சவேண்டியதில்லை. ஆனால், லார்டு செம்ஸ்போர்டின் நல்ல உள்ளத்தைக் காட்டும் பல யோக்கியதாம்சங்கள் அவருக்கு இருந்தும்கூட, நெருக்கடியான சமயங்களில் அவர் கோழையாக நடந்துகொண்டுள்ளார். அவரது சகாக்களை அவர் நடத்திச் செல்லுவதற்குப் பதிலாக, அவர்கள் தம்மீது ஆதிக்கம் செலுத்த அவர் அனுமதித்துள்ளார். மாகாண நிர்வாகிகளும் தங்கள் இஷ்டப்படி நடந்துகொள்ள அவர் அனுமதித்துள்ளார். அதன் பலனாக ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொருவிதமான கொள்கை அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஆத்திரமூட்டத்தக்க சம்பவங்கள் நிகழ்ந்தும்கூட, பம்பாய் அதிகாரிகள் நிதான புத்தியை இழக்காமலும், சமாதான நோக்கத்துடனும் இருந்து வருகிறார்கள். பஞ்சாபிலோ, ஆத்திரமூட்டும் சம்பவங்கள் எதுவும் நிகழாமலேயே அதிகாரிகள் அடக்குமுறையையும், கொடுமைகள் இழைப்பதையும், சகியாமையையும் கைக்கொண்டிருக்கிறார்கள். மத்திய அரசாங்கத்தின் தலைவரான வைஸ்ராய் திடமனத்துடன் தமது விருப்பத்தை தமக்குக்கீழ் உள்ளவர்கள் நிறைவேற்றும்படி எப்படிச் செய்வது என்பதை அறிந்திருந்தால், ஒரு மாகாணத்திற்கும் மற்றொரு மாகாணத்திற்கும் அத்தகைய முரண்பாடு இருப்பது முடியாத காரியமாகிவிடும். ஆனால், லார்டு செம்ஸ்போர்டு தமது அதிகாரத்தை உபயோகிக்க பெரிதும் தவறிவிட்டார். எனவே, தங்கள் முன்னுள்ள உண்மைகளைக்கொண்டு கமிஷனர்கள் வைஸ்ராயைத் திருப்பி அழைத்துக் கொள்ளும்படி யோசனை கூறத் தயங்கியிருப்பார்களாயின், அவர்கள் தங்கள் கடமையைச் செய்யத் தவறியவர்களாகி இருப்பார்கள்.

கமிஷனர்களின் சிபாரிசுகள் சம்பந்தப்பட்ட வரையில்கூட, அவர்கள் ஏதாவது தவறு செய்துள்ளனர் எனில், அது தங்கள் அறிக்கையைத் தயாரிப்பதில் காட்டியுள்ள அடக்கமும் நிதானமும்தான். ஒருவேளை உத்தியோகப் பற்றுள்ள கமிட்டியின் அறிக்கை வெளியான பிறகு, மேற்கண்ட தீர்ப்புகளைப் பற்றிப் பொதுமக்கள் விவாதிப்பது அதிக நன்மையாக இருக்கலாம்.

உத்தியோகப் பற்றற்ற கமிஷனர்கள் சேகரித்துள்ள சாட்சியத்தைக்கொண்டு பார்க்கும்போது, அவர்களுடைய தீர்ப்புகள் வேறு எவ்விதமாகவும் இருப்பது முடியாத காரியம். அந்த அறிக்கையில் உள்ள சாட்சியங்களை வாசிக்கும்போது நமக்கு ஒரு விஷயம் தெரிகிறது. அதாவது சாட்சியங்கள் முற்றிலும் ஏராளமான உண்மைகளை ஆதாரமாகக் கொண்டிருந்தாலன்றி,

தங்களுடைய முடிவான தீர்ப்பைக் கூறுதிருக்கக் கமிஷனர்கள் மிகுந்த அக்கறையுடன் முயற்சித்திருக்கிறார்கள் என்பதுதான்.

'எங் இந்தியா' — 31—3—1920

# 17

# அநீதியான மரண தண்டனைகள்

காங்கிரசின் பஞ்சாப் உபகமிட்டி நியமித்த கமிஷனர்கள் தங்களுடைய அறிக்கையில், வைஸ்ராய் எதிர்கால விளைவுகளைப் பற்றிச் சிந்திக்கும் சக்தியற்றவர் என்று குற்றம் சாட்டியிருக்கிறார்கள். ஐந்து பேருக்கு விதித்த மரண தண்டனைகளில், இருவருடைய தண்டனைகளை மாத்திரம் குறைக்க வைஸ்ராய் மறுத்திருப்பதே, அந்தக் குற்றச்சாட்டிற்குச் சிறந்த உதாரணமாகும்.

அவர்களுடைய அப்பீல்களைப் பிரிவீ கவுன்சில் நிராகரித்து விட்டது. ராணுவச் சட்ட நீதிச் சபையின் முன்னுள்ள நடவடிக்கைகளை ரத்துச் செய்வதால் அவர்கள் நிரபராதிகள் என்பது எவ்விதம் ருசுவாக முடியாதோ, அது போலவே பிரிவீ கவுன்சில் அப்பீல்களை நிராகரித்து விட்டது என்பதற்காக அவர்கள் குற்றவாளிகள் என்று ருசுவாகிவிடாது. பஞ்சாப் அரசாங்கம் கொடுத்துள்ள விளக்கத்தின்படி, இந்த வழக்குகள் சந்தேகத்துக்கு இடமின்றி சக்கரவர்த்தி பிரகடனத்திற்கு உட்பட்டவையே. அமிருதசரஸ் கொலைகளுக்கு, கொலை செய்தவர்களுக்கும் கொலையுண்டவர்களுக்கும் ஏற்பட்ட சொந்தச் சண்டை எதுவும் காரணம் அல்ல.

அது கடுமையான குற்றமே. எனினும், அது ராஜீய காரணத்துக்காகவும் ஆத்திரத்திலும் செய்யப்பட்டது. கொலைகளுக்கும் தீ வைத்தலுக்கும் முழுப் பங்கிற்கு மேல்கூட ஈடு செய்தாகி விட்டது. இந்த நிலைமையில், பகுத்தறிவு காட்டும் வழி, மரண தண்டனையைக் குறைக்க வேண்டும் என்பதேயாகும்.

மரண தண்டனை அடைந்தவர்கள் நிரபராதிகள் என்றும் அவர்களுடைய வழக்கு விசாரணை நேர்மையாக நடைபெறவில்லையென்றும் நிலவும் கருத்தைப் பொதுஜனங்கள் நம்புகிறார்கள். தூக்குத் தண்டனையை நிறைவேற்றுவது, நீண்ட காலம் தாமதப்பட்டிருக்கிறது. எனவே, இந்தக் கட்டத்தில் தூக்கிலிடுவது இந்திய சமூகத்திற்குத் திடுக்கிடும்படியான அதிர்ச்சியைக் கொடுக்கும். சிந்திக்கும் ஆற்றல் வாய்ந்த எந்த வைஸ்ராயும் மரண தண்டனையை உடனடியாகக் குறைத்திருப்பார். ஆனால், அப்படிப்பட்ட நல்ல காரியத்தைச் செய்பவர் லார்டு செம்ஸ்

போர்டு அல்ல. மரண தண்டனை அடைந்தவர்களில் சிலரையாவது தூக்கிலிட்டுப் பலி கொடுக்காவிட்டால், நீதி தேவதைக்குத் திருப்தி ஏற்படாது என்பது அவரது அபிப்பிராயம்! பொது மக்களின் உணர்ச்சி அவருக்குத் துச்சமாகும். வைஸ்ராயோ அல்லது ஸ்ரீ மாண்டேகுவோ மரண தண்டனையைக் குறைத்து விடுவார் என்று இன்னும் நம்பி வருவோமாக.

ஆனால், தண்டனைகளை நிறைவேற்றுவதன் மூலம் அரசாங்கம் துக்ககரமான தவறு செய்துவிட்டால், துரதிருஷ்டவசமாகத் தூக்கிலிட்டதைக் குறித்துக் கோபத்திற்கோ அல்லது துக்கத்திற்கோ இடம் கொடுப்பதன் மூலம் மக்களும் அவ்விதமே தவறு செய்தவர்களாவர். உலக நாடுகளின் சபையில் நமது குரலுக்கு மதிப்பு இருக்கும்படியான தேசமாக நாம் வரவேண்டுமாயின், நிரபராதிகளான ஆயிரக்கணக்கான ஆடவர்கள், பெண்களின் கொலைகள் அல்ல, பதினாயிரக்கணக்கானவர்களின் கொலைகளை நாம் சாந்தமாகப் பார்த்துக்கொண்டிருக்கத் தயாராக இருக்க வேண்டும். அப்போதுதான் நாம், உலகத்தில் எந்த நாடும் மிஞ்ச முடியாத ஓர் அந்தஸ்தை அடைவோம். எனவே, சம்பந்தப்பட்ட யாவரும் மனம் சோர்வடைவதற்குப் பதிலாக அதை உறுதியாக்கிக் கொள்ளுவார்கள் என்று நம்புகிறோம்.*

[மேற்கண்ட விஷயம் அச்சாகும்போது, மரண தண்டனைகள் நிறைவேற்றப்பட்ட கொடிய செய்தி நமக்குக் கிடைத்துளது. கடைசியாக வைஸ்ராய், சிறிதும் இரக்கமின்றி இந்திய சமூகம் திடுக்கிட்டு அதிர்ச்சியடையும்படி செய்துள்ளார். குரூரமான இந்த அடியினால் இந்திய சமூகம் சோர்வு அடைந்துவிடாமல், மனத்தை உறுதியாக்கிக்கொள்ள வேண்டியது இப்போது கடமையாகியிருக்கிறது. ஆசிரியர்—'எங் இந்தியா'.]

—'எங் இந்தியா' - 7—4—1920

## 18

# பலாத்காரத்திற்குப் பணியக்கூடாது

பிரிட்டனில் ரகசிய சகோதரத்துவ சங்கம் என்று ஒரு ஸ்தாபனம் இருக்கிறது. 'அது மனித வர்க்கத்துக்குச் செய்யும் தொண்டைக்காட்டிலும், அதன் ரகசியமான இரும்பு போன்ற கண்டிப்பான விதிகளே சிறந்த மனம் படைத்தவர்களைக்கூட

* இவ்விஷயமாக பம்பாயில் நடந்த கூட்டமும், அக்கூட்டத்திற்குக் கவியரசர் ரவீந்திரநாத டாகுர் அனுப்பியிருந்த செய்தியும், அக்கூட்டத்தில் காந்திஜி கொண்டு வந்த தீர்மானமும் பின்சேர்க்கைப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆட்டிவைக்கின்றன. அதுபோலவே, இந்தியாவில் உள்ள அதிகார வர்க்கம் ஏதோ ரகசிய நடவடிக்கை முறைக்கு உட்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. மகத்தான பிரிட்டனில் உள்ள சிறந்த பிரமுகர்கள்கூட அதற்கு அடி பணிந்துவிடுகிறார்கள்; தனி நபர்கள் என்ற முறையில் தாங்கள் எந்த அநீதி இழைக்க வெட்கப்படுவார்களோ, அந்த அநீதிக்கு அவர்கள் அதிகாரிகள் என்ற முறையில் தாங்கள் அறியாமலேயே கருவிகளாகி விடுகிறார்கள். ஹண்டர் கமிட்டியில் உள்ள பெரும்பாலோரின் அறிக்கை, அதையொட்டி இந்திய அரசாங்கத்தின் அபிப்பிராயம், அதற்கு இந்தியா மந்திரி அளித்துள்ள பதில் இவையெல்லாம் மேலே குறிப்பிட்டுள்ள நிலையையே வெளிப்படுத்துகின்றன.

கமிட்டி அங்கத்தினர்களின் அமைப்பைச் சில பத்திரிகைகள் வன்மையாகக் கண்டித்தும்கூட, மொத்தத்தில் பொது மக்கள் அக்கமிட்டியிடம் நம்பிக்கை வைக்கத் தயாராக இருந்தார்கள். சுதந்திரர்கள் என்று கூறக்கூடிய மூன்று இந்தியர்கள் அக் கமிட்டியில் அங்கம் வகித்ததே பொது மக்களின் நம்பிக்கைக்குக் காரணம்.

சிறைப்பட்டுள்ள பஞ்சாப் தலைவர்கள், தங்களுடைய வக்கீல்களுக்கு யோசனை கூறுவதற்காகக் கமிட்டி முன்னிலையில் ஆஜராக அனுமதிக்கப்படலாம் என்ற காங்கிரஸ் கமிட்டியின் மிகவும் மிதமான, நியாயமான கோரிக்கையைக் கூட லார்ட் ஹண்டர் கமிட்டி ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டது. அந்த மறுப்பே, பொதுமக்கள் கமிட்டியிடம் கொண்டிருந்த நம்பிக்கைக்குக் கடுமையான அதிர்ச்சியாக அமைந்தது. கமிட்டியின் நேர்மையில் கொஞ்சநஞ்சம் இருக்கக்கூடிய நம்பிக்கையையும், கமிட்டியில் உள்ள பெரும்பாலோரின் அறிக்கை சின்னாபின்னமாக்கிவிட்டது. அந்த அறிக்கை, காங்கிரஸ் கமிட்டியின் நிலை நியாயமானது என்பதை நிரூபித்துளது. கமிட்டி சேகரித்துள்ள சாட்சியங்கள், தகுந்த ஆதாரங்களை ஹண்டர் கமிட்டி வேண்டுமென்றே நிராகரித்திருக்கிறது என்பதைக் காட்டுகின்றன.

சிறுபான்மையோரின் அறிக்கை வரண்ட பாலைவனத்தின் நடுவே உள்ள நீர்ச்சோலை போல் காட்சியளிக்கின்றது. இந்திய அங்கத்தினர்கள் எத்தனையோ கஷ்டங்களுக்கிடையே தைரியமாகத் தங்கள் கடமையைச் செய்ததற்காக, அவர்களுடைய தேச மக்களின் வாழ்த்துக்களுக்கு உரியவர்களாகியிருக்கிறார்கள்.

சத்தியாக்கிரகத்தின் அம்சமான சட்ட மறுப்பை ஓரளவு கூடக் கண்டிப்பதில் சம்பந்தப்பட அவர்கள் மறுத்திருக்க வேண்டும் என்பதே எனது விருப்பம். சத்தியாக்கிரகம் ஒரு மகத்தான ஆன்மிக இயக்கம். பாமர மக்களின் பலாத்காரப்

போக்கைக் கட்டுப்படுத்தி, மரியாதைக்கு உள்ள எல்லா உரிமையையும் இழந்துவிட்ட அதிகார வர்க்கத்தினிடம் பலாத் காரமாகச் சட்டத்தை மீறும் நடவடிக்கைக்குப் பதிலாக, சாத்விக சட்ட மறுப்பைக் கைக்கொள்ள வேண்டும் என்பதே சத்தியாக்கிரக இயக்கமாகும். எனவே, டில்லியில் மக்கள் அதிகாரிகளைத் துச்சமாக மதித்துத் துணிச்சலான நடவடிக்கை களில் ஈடுபட்டார்கள் என்பதற்காக, மகத்தான அந்த ஆன்மிக இயக்கத்தைக் கண்டிப்பது சரியல்ல.

மார்ச் 30-ஆம் தேதி சட்ட மறுப்பை ஆரம்பிக்கக்கூட இல்லை. உலகம் முழுவதும் செல்வாக்குள்ள எந்தப் பெரிய ஆர்ப் பாட்டமும் ஓரளவாவது சட்டத்தை மீருமல் நடந்ததில்லை. சத்தி யாக்கிரக இயக்கத்தின் ஆதரவில் நடந்தது போல், மார்ச் 30-ஆம் தேதியும் ஏப்ரல் 6-ஆம் தேதியும் நிகழ்ந்த ஆர்ப்பாட்டங்கள் வேறு எந்த இயக்கத்தின் ஆதரவில் நடந்திருக்க முடியும்? சத்தியாக்கிரக அம்சங்களான மரியாதையும் ஒழுங்கும் இராவிடில், சட்ட மறுப்பு இயக்கம் டில்லியில் நடந்ததைக் காட்டிலும் மிகவும் அதிக பலாத்காரத்தில் முடிந்திருக்கும்.

ஜனங்கள் சத்தியாக்கிரகக் கொள்கையை ஆச்சரியகர மாகவும் விரைவிலும் ஒப்புக்கொண்டதுதான், இந்தியா முழு வதும் பலாத்காரம் பரவவிடாமல் வெற்றிகரமாகத் தடுத்தது, மக்களிடையே அமைதியின்மை நிலவி வருகிறது என்பதில் சந்தேகமில்லை. இன்றுகூட அந்த அமைதியின்மை பலாத்கார மாக வெடிக்காததற்கு, ஜெனரல் டயரின் பயங்கரமான காட்டு மிராண்டித்தனத்தைப் பற்றிய ஞாபகம் காரணம் அல்ல; சத்தியாக்கிரகம் ஜனங்களின் மனத்தை ஆட்கொண்டிருப்பதே காரணமாகும். அது அவர்களின் விருப்பத்திற்கு விரோத மாகவும் இருக்கலாம். ஆனல், சத்தியாக்கிரகம்தான் ஒழுங் கின்மை, பலாத்காரம் போன்ற சக்திகளைத் தடுத்து வருகிறது.

எனினும், அநீதியான தாக்குதல்களை எதிர்த்துச் சத்தியாக் கிரகத்திற்காகப் பரிந்து பேசி நான் வாசகர்களின் நேரத்தை வீணாக்கக்கூடாது. ஹண்டர் கமிட்டியில் உள்ள பெரும்பான்மை யோர் சத்தியாக்கிரகத்தைத் தாக்கியிருக்கிருர்கள். கமிட்டியில் உள்ள சிறுபான்மையோர், அந்தத் தாக்குதல்களுக்கு ஓரளவு ஆதரவு அளித்திருக்கிருர்கள். ஆனல், சத்தியாக்கிரகம் இந்தி யாவில் சிறிதாவது வேரூன்றத் தொடங்கியிருக்குமாயின், அவற்றைக் காட்டிலும் அதிக பயங்கரமான தாக்குதல்களையும் அது சமாளித்து நிற்கும். பெரும்பான்மையோரின் அறிக்கை இந்த ஒரு விஷயத்தில் குறைபாடு உள்ளதாக இருந்து, மற்ற எல்லா விஷயங்களிலும் சரியாக இருக்குமாயின், அதை முற்றிலும் புகழத்தான் வேண்டியிருக்கும். சத்தியாக்கிரகம், ராஜீயத் துறையில் ஒரு புதிய பரிசோதனைதானே. எனவே,

பொதுஜனக் குழப்பத்திற்குச் சத்தியாக்கிரகம்தான் காரண மென்று அவசரப்பட்டுக் கூறுவது மன்னிக்கத்தக்கதாக இருக்கும்.

கமிட்டியின் முடிவுகளையும் அவற்றைப் பற்றிய அரசாங்கத் தின் அறிக்கைகளையும் எல்லோருமே கண்டித்திருக்கிறார்கள். அந்தக் கண்டனம், வெளியாகியுள்ள மிகவும் வருந்தத்தக்க உண்மைகளை ஆதாரமாகக்கொண்டதாகும். படுகொலை நாடகத் தில் ஈடுபட்ட பாத்திரங்களே வெட்கமின்றி ஒப்புக்கொண்டுள்ள நடவடிக்கைகளைக் கண்டிப்பதைத் தவிர கமிட்டிக்கு வேறு வழி யிராமற் போய்விட்டது. அவ்விதம் அவர்கள் ஒப்புக்கொண்டுள்ள வற்றைத் தவிர, மற்றப்படி அதிகாரிகளின் ஜீவகாருண்யமற்ற ஒவ்வொரு நடவடிக்கைக்காகவும் பரிந்து பேச கமிட்டி பெரு முயற்சி செய்திருப்பதைப் பாருங்கள்; ஜெனரல் டயர் தமக்குத் தாமே விரோதமாகப் பல விஷயங்களை ஒப்புக்கொண்டுள்ளார். அப்படியிருந்துங்கூட கமிட்டி அவருக்காகப் பரிந்து பேசி, அவர் சார்பில் விசேஷ வாதங்களில் ஈடுபட்டிருப்பதைப் பாருங்கள்; கீழேயுள்ள உத்தியோகஸ்தர்கள் செய்த குற்றங்களுக்கெல்லாம் சர் மைக்கேல் ஓட்வியர் அளித்த உற்சாகமே காரணம். அப்படி யிருக்க கமிட்டி, மைக்கேல் ஓட்வியருக்கு கவைக்குதவாத துதி பாடியிருப்பதைப் பாருங்கள்: ஏப்ரல் மாதம் நிகழ்ந்த சம்பவங் களுக்கு முன் சர் மைக்கேல் ஓட்வியரின் தான்தோன்றித்தன மான போக்கைப் பரிசீலனை செய்ய கமிட்டி வேண்டுமென்றே மறுத்திருக்கும் விபரீதத்தைப் பாருங்கள்.

அவரது நடவடிக்கைகள் சந்தேகத்துக்கு இடமின்றிப் பகிரங்கமாகியுள்ளன. அந்த நடவடிக்கைகளைக் கமிட்டி நீதிக்கு உரிய முறையில் கவனித்திருக்க வேண்டியது கடமையாகும். அதிகாரிகள் கூறியவற்றையெல்லாம் கமிட்டி அப்படியே ஒப்புக் கொண்டுளது. ஆனல், கமிட்டியின் தெளிவான கடமை என்ன வெனில், குழப்பங்களுக்கு உண்மையான காரணத்தைக் கண்டு பிடிக்கப் பெருமுயற்சி செய்திருக்க வேண்டும். சம்பவங்களின் உட்கருத்தைக் கண்டுபிடிக்க அது தன் அதிகாரத்தை மீறிச் சென்றிருக்க வேண்டியதும் கடமையாகும்.

அதிகாரிகளுடைய தஸ்தாவேஜுகளின் கடினமான மேற் புறத்தைக் கமிட்டி பொறுமையுடன் ஊடுருவிச் சென்று உண்மையைக் கண்டுபிடிக்க முயற்சித்திருக்க வேண்டும். அவ் விதம் செய்யாமல் அதிகாரிகளின் சாட்சியங்களே தனக்கு வழி காட்டியாக இருக்கக் கமிட்டி அனுமதித்தது, சோம்பேறித் தனமும் குற்றமுமாகும். கமிட்டியின் அறிக்கையும், அதையொட்டி அரசாங்கத்தின் குறிப்புகளும் சட்டத்தை மீறிய அதிகாரிகளின் நடவடிக்கைகளை மழுப்பும் ஒரு முயற்சியாகவே இருக்கின்றன என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். ஜெனரல் டயரின்

படுகொலைகளையும், நாடெங்கும் அபகீர்த்தி பெற்ற பூமியில் ஊர்ந்து செல்லும் கட்டளைகளையும் நிதானமாகவும் அரை மனத்துடனும் கண்டித்திருக்கும் அறிக்கைகள், வாசகர்களின் ஏமாற்றத்தை அதிகப்படுத்துவதாக இருக்கின்றன. அவற்றின் ஒவ்வொரு பக்கத்திலும் அதிகாரிகளின் நுண்ணிய மேல் பூச்சு வேலை வெளியாகிறது.

கமிட்டியின் அறிக்கையையோ, அரசாங்கத்தின் குறிப்புகளையோ, மிதவாதப் பத்திரிகைகள், தீவிரவாதப் பத்திரிகைகள் முதலிய தேசியப் பத்திரிகைகள் யாவும் நியாயமாகக் கண்டித்திருக்கின்றன. எனவே, அவற்றை நான் விவரமாகப் பரிசீலனை செய்ய முயற்சிக்க வேண்டிய அவசியம் இல்லை. அதிகார வர்க்கத்தின் அநீதியை ஆதரிக்கும் இந்த ரகசிய சதியாலோசனையை எப்படித் தகர்ப்பது என்பதே இப்போது யோசிக்க வேண்டிய விஷயமாகும். தேசம் தனது சுயமதிப்பைப் பாதுகாத்துக் கொண்டு சாம்ராஜ்யத்தின் சுயேச்சையான ஒரு பங்காளியாக வர வேண்டுமாயின், இத்தகைய பாதகத்தைச் சகித்துக்கொண்டிருப்பது முடியாத காரியம்.

மற்ற விஷயங்களுடன் கமிட்டியின் அறிக்கையிலிருந்து எழுந்துள்ள நிலைமையையும் ஆலோசிப்பதற்காக, காங்கிரசின் ஒரு விசேஷக் கூட்டத்தைக் * கூட்ட அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. பலன் தரத்தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதற்காக, பார்லிமெண்டுக்கு வெறும் விண்ணப்பங்கள் செய்துகொள்ளுவதை நாம் நிறுத்திக்கொள்ள வேண்டிய தருணம் வந்திருக்கிறது என்பது என் அபிப்பிராயம். தேசத்திற்குத் தன் விருப்பத்தை வற்புறுத்தும் சக்தி இருந்தால் தான், விண்ணப்பங்களால் பலன் ஏற்படும்.

பின்னர் நமக்கு என்னதான் அதிகாரம் இருக்கிறது? நமக்கு கொடிய தவறு இழைக்கப்பட்டுளது என்பது நமது உறுதியான அபிப்பிராயமாகும். மகோன்னத அதிகார சபைக்கு நாம் அப்பீல் செய்துகொண்டும்கூட நமக்குப் பரிகாரம் கிடைக்கவில்லை. எனவே, இந்நிலையில் தவறுக்குப் பரிகாரம் கிடைக்கும்படி செய்வதற்கு நம்மிடம் ஏதாவது அதிகாரம் இருந்து தீர வேண்டும். மிகப் பெரும்பாலான வழக்குகளிலும் சம்பிரதாயமான நடவடிக்கைகள் தோல்வியடைந்துவிட்டால், மூலாதாரமான உரிமையைப்பாதிக்காத வரையில் தவறுகளுக்குப் பணிந்து விடுவதே ஒரு பிரஜையின் கடமையாகும். ஆனால், ஒவ்வொரு தேசத்திற்கும், ஒவ்வொரு தனி நபருக்கும் சகிக்க முடியாத

* 1920-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ஆம் தேதியிலிருந்து 9-ஆம் தேதி வரையில் கல்கத்தாவிலே நடந்த இந்த விசேஷக் கூட்டத்தின் நடவடிக்கைகளை இந்தத் தொகுப்பின் பின்சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

தவறை எதிர்த்து எழுவதற்கு உரிமை உண்டு; அது அவர்களுடைய கடமையும் ஆகும்.

ஆயுதப் புரட்சிகளில் எனக்கு நம்பிக்கையில்லை. ஆயுதப் புரட்சிகள், நாம் தீர்க்க விரும்பும் நோயைக் காட்டிலும் மோசமான ஒரு பரிகாரமாகும். அவை, வஞ்ச உணர்ச்சி, பொறுமையின்மை, கோபம் இவற்றின் அடையாளமே. நீண்ட கால நோக்குடன் கவனிக்கும்போது, பலாத்கார முறையினால் எவ்வித நன்மையும் ஏற்பட முடியாது. இதற்கு உதாரணமாக, ஜெர்மனிக்கு விரோதமாக நேச தேசங்களின் ஆயுத எழுச்சியின் பலனைப் பாருங்கள். ஜெர்மானியர்களை நேச தேசத்தினர் எவ்வளவு கேவலமாக வருணித்து நம்மிடம் கூறினார்களோ, நேச தேசத்தினரும் இப்போது அவ்வளவு கேவலமாக ஆகிவிட்டார்கள்.

எனவே, ஆயுதப் புரட்சியைவிட ஒரு சிறந்த முறை நம்மிடம் இருக்கிறது. அந்த முறை பலாத்காரத்தைப் போன்றதன்று. ஆனால், அந்த முறையைக் கையாள நிச்சயமாக அடக்கமும் பொறுமையும் வேண்டும்; தீரமும் மன உறுதியும்கூட வேண்டும். தவறுக்கு உடந்தையாக இருக்க மறுப்பதே இந்த முறையாகும். எந்தக் கொடுங்கோலரும், தம்மிடம் துன்பப்படுவோரைப் பெரிதும் பலாத்காரத்தினால் அடிபணியும்படி செய்யாமல் வெற்றி பெற்றதில்லை. கொடுங்கோலரை எதிர்ப்பதால் விளையும் கஷ்டங்களை அனுபவிப்பதைவிட, அவர் இஷ்டத்திற்குப் பணிந்துவிடுவதையே பெரும்பாலான மக்களும் விரும்புகின்றனர். அதனால்தான் பயங்கர ஆட்சி கொடுங்கோலரின் முக்கிய அம்சமாகியிருக்கிறது. பயங்கர ஆட்சியாளர், தம்மிடம் துன்பப்படுவோரை தம் இஷ்டப்படி ஆட்டிவைப்பதில் தோல்வியடைந்ததற்குச் சரித்திரத்தில் பல உதாரணங்கள் இருக்கின்றன.

இந்தியா இப்போது அந்த முறைகளில் ஒன்றைக் கைக்கொள்ள வேண்டியிருக்கிறது. எனவே, பஞ்சாப் அரசாங்க நடவடிக்கைகள் சகிக்க முடியாத தவறாக இருக்குமாயின். லார்டு ஹண்டர் கமிட்டியின் அறிக்கையும், அரசாங்கத்தின் இரண்டு குறிப்புகளும், அந்த நடவடிக்கைகளைக் கண்டிக்காமல் மழுப்பியிருப்பதன் காரணமாக இன்னும் பெரும் தவறாக இருக்குமாயின், அதிகாரிகளின் இந்தப் பலாத்காரத்துக்குப் பணிய நாம் மறுத்துவிட வேண்டும் என்பது தெளிவானது. அவசியமாயின் இஷ்டம் போல் பார்லிமெண்டுக்கு வேண்டுகோளை அனுப்பிவையுங்கள். ஆனால், நமக்கு நீதி வழங்கப் பார்லிமெண்டு தவறிவிடுமாயின், நாம் நம்மை ஒரு தேசீயஇனம் என்று கூறிக்கொள்ளத் தகுதி பெற்றிருக்க வேண்டுமாயின், நாம் இந்த அரசாங்கத்துடன் ஒத்துழைக்கவும், இந்த அரசாங்கத்தை ஆதரிக்கவும் மறுத்துவிட வேண்டும்.

—'எங் இந்தியா' - 9—6—1920

# 19

# மக்களின் உரிமைப் போர்

ஹண்டர் கமிட்டியின் அறிக்கையை ஒட்டி இந்தியா மந்திரி தயாரித்துள்ள குறிப்பில், அரசாங்க அதிகாரிகள் செய்துள்ள குற்றங்களை மழுப்புவதற்குப் பல்வேறு முயற்சிகள் செய்யப்பட்டிருப்பதைக் கண்டுபிடிப்பது கஷ்டமான காரியம் அல்ல. சுலபமாகக் கண்டுகொள்ளக்கூடிய அந்த முயற்சிகளில் ஒன்று இது தான். ராணுவச் சட்டம் அமலில் இருந்த காலத்தில் நடந்த தவறுகள் சிலவற்றை, இந்தியா மந்திரி வேண்டாவெறுப்பாகவும் வருத்தத்துடனும் தயக்கத்துடனும் கண்டித்திருப்பதுடன், திடுதிப்பென்று எதிர்காலத்தில் செய்ய உத்தேசித்திருக்கும் சில ஏற்பாடுகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தற்போது இந்திய அரசாங்கத்தின் யோசனையில் இருந்து வரும் ராணுவச் சட்டப் புத்தகத்தில் அந்த ஏற்பாடுகளைச் சேர்க்கப் போகிறார்களாம்.

இந்த ராணுவச் சட்டப் புத்தகம், எதிர்காலத்தில் மக்களுக்குப் பாதுகாப்பு வேண்டும் என்ற கோரிக்கைக்கு இணங்க ஒரு முயற்சியாக இருக்கலாம். எனினும், காங்கிரஸ் உப கமிட்டியின் அறிக்கையில் குறிப்பிடப்பட்ட கோரிக்கைகளை அங்கீகரிக்காத எந்தச் சட்டப் புத்தகத்தையும் நாம் ஒப்புக்கொள்ள முடியாது. சட்டப்புத்தகத்திலிருந்து ரௌலட் சட்டத்தை அகற்றாமல், அப்புத்தகத்தில் புதிய ஷரத்துகளைச் சேர்த்து அதைப் பெரிதாக்கிக்கொண்டு செல்லுவது, ஒரு மனிதனின் உடலில் உள்ள விஷத்தை அகற்றாமல் அவனைப் போஷித்து வளர்க்க முயற்சி செய்வதற்கு ஒப்பாகும்.

ரௌலட் சட்டத்தை ரத்துச் செய்யாவிடில், சக்கரவர்த்தியின் இந்தியப் பிரஜைகளுடைய 'சிவில்' உரிமைகளைப் பாதுகாக்க பார்லிமெண்டில் சட்டம் நிறைவேற வேண்டும் என்று வற்புறுத்துவோர் சிறிதும் திருப்தி அடையமாட்டார்கள். ஏனெனில், 'சிவில்' உரிமைகளும் ரௌலட் சட்டமும் ஒரே சமயத்திலே சட்டப் புத்தகத்தில் இடம் பெற்றிருக்க முடியாது. ரௌலட் சட்டம் நமது உரிமைகளைப் பறிப்பதாக இருக்கிறது. ஆனால், உரிமைகள் அடங்கிய பிரகடனமோ, சட்டபூர்வமாக உரிமைகளை அங்கீகரிக்கின்றன.

நமது சுதந்திர உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்க பிரகடனம் போதுமா? உரிமைப் பிரகடனத்தின் முக்கியத்துவத்தை நாம் உணருகிறோம். எனினும், அதைக் கண்டு நாம் பரவசம் அடைந்துவிடவில்லை. ஏனெனில், அதன் நிர்வாகம் நன்கு நடைபெறும்படி செய்யும் சக்தி நமக்கு இருந்தாலன்றி, அந்தப் பிரகட

னத்தினல் பலன் எதுவும் ஏற்பட்டுவிட முடியாது. நாம் ஆண்மையும் அஞ்சாநெஞ்சமும் பெற்று விளங்கினலன்றி, நம்மீது எத்தனை உரிமைகளைப் பொழிந்தாலும், நாம் சுதந்திரம் பெற்றவர்களாகிவிட முடியாது. சட்டத்தின் முன்னேற்றம், நிர்வாக ஒழுங்கை மீறிச் செல்லுமென்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆங்கிலேயர்களின் சட்டத்திற்கும் நிர்வாகத்திற்கும் அந்நியோந்நிய பாவம் ஏற்படப் பல தலைமுறைகள் ஆயின.

1215-ஆம் ஆண்டில் ஏற்பட்ட மூலாதார சுதந்திர உரிமைச் சட்டம் (Magna Carta) *, 1628-இல் நிறைவேறிய உரிமைப் பிரகடனம் (Petition of Right) †, பிரபல கண்டன அறிக்கை (Grand Remonstrance) ‡, உரிமைகள் மசோதா (Bill of Rights)§ இவையெல்லாம் ஆங்கிலேயர்கள் ஐந்து நூற்றூண்டுகளுக்கு மேல் தொடர்ந்து போராடி அடைந்த முன்னேற்றத்தைக் குறிப்பிடுகின்றன. தொடர்ச்சியான இந்தச் சட்டங்களின் முக்கியத்துவம், ஒன்றன்பின் ஒன்ருக உரிமைச் சட்டங்களின் தொகை அதிகமானதில் இல்லை. ஆனல், அந்த ஒவ்வொரு சட்டமும் அதற்கு முந்திய சட்டத்தை உறுதிப்படுத்தியதே முக்கியமாகும். ஏனெனில், இங்கிலாந்து மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராகச் சட்டங்களை மீறி, எதேச்சாதிகாரமாக நடந்துகொள்ளலாயினர். ஒருவர் பின் ஒருவராக தங்கள் பிரஜைகளின் சுதந்திர உரிமைகளைப் பறிமுதல் செய்தனர். எனினும், மன்னர்களைக்

---

* Magna Carta என்ற பிரபல உரிமைச் சட்டம் 1215–ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15-ஆம் தேதி பிரிட்டிஷ் மக்கள் ஜான் மன்னரிடமிருந்து அவரது முத்திரையுடன் மிகவும் கஷ்டப்பட்டு பெற்ற மகத்தான ஒரு சாஸனமாகும். அந்த சாஸனமே பிரிட்டிஷ் மக்களின் ராஜீய, தனி நபர் சுதந்திரத்திற்கு அஸ்திவாரமாக அமைந்தது. பின்னர் பிரிட்டனில் ஆட்சி புரிந்த பல மன்னர்களும் அந்தச் சாஸனத்தை உறுதி செய்தனர். அதில், அரசாங்கம் அனுசரிக்க வேண்டிய முக்கிய கொள்கைகள் குறிப்பிடப்பட்டிருந்தன. அக்கொள்கைகளுக்கு மன்னரும் மற்ற யாவரும் கட்டுப்பட வேண்டும். நியாயமான விசாரணையின்றி யாருக்கும் தண்டனை விதிக்கக்கூடாது ; மக்களின் புராதனமான சுதந்திர உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும். இவை போன்ற முக்கிய ஷரத்துக்கள் அதில் அடங்கியிருந்தன.

† பிரிட்டிஷ் மக்களின் உரிமைகள் அடங்கிய பிரகடனம் ஒன்று 1628-ஆம் ஆண்டிலே பார்லிமெண்டில் நிறைவேறியது. அதற்கு, அப்போது இங்கிலாந்தை ஆட்சி புரிந்த முதலாவது சார்லஸ் மன்னரின் சம்மதமும் கிடைத்தது. மன்னர் இஷ்டப்படி விதிக்கும் தான்தோன்றித்தனமான வரி, நியாயமற்ற தண்டனை, சாதாரண மக்கள் மீது ராணுவ சட்டப் பிரயோகம் இவையெல்லாம் சட்ட விரோதமானவை என்பதே அந்தப் பிரகடனத்தின் சாரமாகும்.

‡ 1641-இல் முதலாவது சார்லஸ் மன்னருக்கு, அவரை வன்மையாகக் கண்டித்து பிரிட்டிஷ் பார்லிமெண்டு விடுத்த கண்டன அறிக்கை.

§ 1689-ஆம் ஆண்டு வில்லியம், மேரி இவர்களுக்குச் சிம்மாசனத்தை அளிக்க பிரிட்டிஷ் மக்களின் பிரதிநிதிகள் விதித்த நிபந்தனைகள் அடங்கிய தஸ்தாவேஜே உரிமைகள் மசோதா அல்லது உரிமைகள் பிரகடனம் (Bill of Rights) ஆகும். அதுவே பின்னர் பார்லிமெண்டில் சட்டமாக நிறைவேறியது.

காட்டிலும் அதிக உறுதியுடன், மக்களிடையே இருந்து வீரர்கள் முன்வரலாயினர். அவர்கள் மன்னர்களின் எதேச்சாதிகாரத்தை எதிர்த்துப் போராடியதுடன், 'ஹேபியஸ் கார்ப்பஸ்'† என்ற கட்டளைப் பத்திரத்தை வெற்றிகரமாக அமலுக்குக் கொண்டு வந்தார்கள். அத்தகைய தனி நபர் உரிமைகள் பெற நமக்கு, அவ்வளவு நீண்ட காலம் தேவையில்லை. ஆனால், சுதந்திரத்தின் மூலாதாரமான கொள்கைகள் நமது இருதயத்தில் நிரந்தரமாக இடம் பெற்றிருக்குமாயின், நாமும் அவை போன்ற போராட்டங்களிலிருந்தும் தியாகங்களிலிருந்தும் தப்ப முடியாது. உரிமைகள் அடங்கிய பிரகடனத்தைக் காட்டிலும், அதைப் பெறுவதற்கான ஏற்பாடுகளே அதிக முக்கியமானவை என்பதை வற்புறுத்துகிறோம்.

—'எங் இந்தியா' - 30—6—1920

# 20

# அட்டூழியம் புரிந்த அதிகாரிக்குப் பரிசு!

ராணுவச் சட்ட அதிகாரிகளில் ஒருவரான ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித்தைப் பற்றிய கடிதப் போக்குவரத்தைப் பிரசுரித்ததற்காக, அலகாபாத் "லீடர்" பத்திரிகை வாழ்த்துக்கு உரியதாகியிருக்கிறது. அவர் பிடிவாதத்துடனும் தொடர்ந்தும் மக்களைக் கொடுமையாக நடத்தி வந்திருப்பதாக மிகவும் கடுமையான புகார்கள் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித்தை வேலையிலிருந்து விலக்குவதற்குப் பதிலாக, அவர் மேல் பதவிக்கு உயர்த்தப்பட்டுள்ளார் என்பது கடிதப் போக்குவரத்திலிருந்து தெரிகிறது.

ராணுவச் சட்டம் அமலுக்கு வருவதற்குச் சிறிது காலத்திற்கு முன், அவர் கீழ்ப் பதவிக்குத் தாழ்த்தப்பட்டதாகத் தெரிகிறது. இவ்விஷயமாக "லீடர்" பத்திரிகை நிருபர் கூறுவதாவது :

† ஒருவர் கைது செய்யப்பட்டது அல்லது விசாரணையின்றி சிறையில் வைக்கப்பட்டது சட்ட பூர்வமானதா என்பதைப் பூரணமாக விசாரிப்பதற்காக அவரைக் கோர்ட்டில் ஆஜர் செய்து தீர வேண்டும் என்ற கட்டளையே 'ஹேபியஸ் கார்ப்பஸ்' (Habeas Corpus) சட்டமாகும். 1215-ஆம் ஆண்டில் மாக்னா கார்ட்டா (Magna Carta) சட்டம் நிறைவேறிய காலத்திலிருந்தே பிரிட்டிஷ் மக்களுக்கு அந்த உரிமை இருந்தது. எனினும், சில கொடுங்கோல் மன்னர்கள் அந்தச் சட்டத்தை லட்சியம் செய்யாமல் தங்கள் இஷ்டப்படி மக்களின் உரிமைகளில் தலையிட்டதால், 1679-இல் முதலாவது 'ஹேபியஸ் கார்ப்பஸ்' சட்டம் நிறைவேறியது. பொதுவான நெருக்கடி ஏற்படும்போது 'ஹேபியஸ் கார்பபஸ்' சட்டத்தை நிறுத்தி வைப்பது உண்டு. உதாரணமாக அயர்லாந்திலும், முதலாவது, இரண்டாவது உலக மகாயுத்த காலத்திலும், மற்றும் சில நெருக்கடியான சமயங்களிலும் அந்தச் சட்டம் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது உண்டு.

"அவர் ஏற்கனவே இரண்டாவது வரிசை டிப்டி கமிஷனர் பதவியிலிருந்து கீழ்ப் பதவிக்குத் தாழ்த்தப்பட்டிருந்தார். இப்போது அவர் மீண்டும் அப்பதவிக்கு உயர்த்தப்பட்டதுடன், கி. பு. கோ. 30-ஆவது பிரிவின்படி அதிகாரங்களும் அளிக்கப்பட்டுள்ளார். அவர் வந்ததிலிருந்து அம்பாலா கண்டோன்மெண்டில் உள்ள ஏழை இந்திய மக்கள் பயங்கரமான கொடுங்கோல் ஆட்சிக்கு உட்பட்டு வருகிறார்கள். உண்மையில் அங்கே நடைபெற்று வருவது பயங்கரமான கொடுங்கோல் ஆட்சிதான். எனவே, இந்தச் சொற்களைத் தீர்க்காலோசனையின் மீதே நான் உபயோகித்துள்ளேன்."

பயங்கரம், கொடுங்கோல் என்ற சொற்களின் பொருளை விளக்குவதற்காக நான், தெளிவான அந்தக் கடிதத்திலிருந்து கீழ் வரும் சில பகுதிகளைத் திரட்டிக் கொடுத்துள்ளேன்:

"தனி நபர்கள் பிராதுகள் கொடுத்தால், அவர்களிடமிருந்து ஸ்ரீ ஸ்மித் ஒருபோதும் வாக்குமூலம் எடுத்துக்கொள்ளுவதில்லை. கோர்ட்டு கலையும்போது அவர்களிடமிருந்து கோர்ட்டு குமாஸ்தா வாக்குமூலம் எடுத்துக்கொண்டு, மறுநாள் அதில் மாஜிஸ்திரேட்டிடமிருந்து கையெழுத்து வாங்குகிறார். அத்தகைய பிராதுகளின் மீது தயாரிக்கப்படும் குறிப்பு, பிராது கொடுத்தவருக்குச் சாதகமாக இருந்தாலும் சரி, பாதகமாக இருந்தாலும் சரி, அதை மாஜிஸ்திரேட் ஒருபோதும் வாசிப்பதில்லை; ஒழுங்கான விசாரணையின்றியே பிராதுகள் நிராகரிக்கப்பட்டுவிடுகின்றன. தனி நபர்களுடைய பிராதுகளின் விதிக்கு ஏற்படும் கதி இது தான்.

"இப்போது போலீசார் கொடுக்கும் வழக்குகளைப் பற்றிப் பார்ப்போம். எதிரிகளின் வக்கீல்கள், போலீஸ் காவலில் உள்ள விசாரணைக் கைதிகளைக் கண்டு பேச அனுமதிக்கப்படுவதில்லை. பிராஸிகூஷன் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்யவும் எதிரி வக்கீல்களைக் கோர்ட்டார் அனுமதிப்பதில்லை. குறிப்பிட்ட விடையளிப்பதற்குத் தூண்டும் வகையில் பிராஸிகூஷன் சாட்சிகளைக் கேள்விகள் கேட்கிறார்கள். இவ்வாறாக, போலீஸ் சாட்சிகளே, பிராஸிகூஷன் தரப்புக் கதையைக் கூறும்படி செய்கிறார்கள். எதிரித் தரப்புச் சாட்சிகளைக் கூப்பிடுகிறார்கள். ஆனால், அவர்களைக் கேள்விகள் கேட்க எதிரி வக்கீல்களை அனுமதிப்பதில்லை. எதிரி தன் சார்பில் துணிந்து ஏதாவது சொல்ல முற்பட்டால் ஏதாவது கூறி அவரை வாயடைக்கச் செய்துவிடுகிறார்கள்.

"கண்டோன்மெண்டில் உள்ள அரசாங்க ஊழியர் எவர் வேண்டுமாயினும் கண்டோன்மெண்டில் உள்ள மக்களில் எவர் பெயரையாவது ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி, மறுநாளே கோர்ட்டில் ஆஜராகும்படி உத்தரவிடலாம். அந்தக் காகிதத்தை

கோர்ட்டார் அனுப்பும் 'சம்மன'கவே கருத வேண்டும். அவ்வாறு உத்தரவிடப்பட்ட எவராவது கோர்ட்டில் ஆஜராகாவிடில், அவரைக் கைது செய்ய உடனே 'கிரிமினல் வாரண்ட்' பிறப்பிக் கப்பட்டு விடுகிறது!"

இந்தக் கடிதத்தில், இவை போன்ற மற்றும் பல விவரங்கள் அடங்கியிருக்கின்றன. அவையெல்லாம் குறிப்பிடுவதற்கு உரியவை. எனினும், நிருபரின் கருத்தை விளக்குவதற்குப் போதிய பகுதிகளைக் கொடுத்திருக்கிறேன்.

ராணுவச் சட்ட ஆட்சிக் காலத்தில், ஸ்ரீ பாஸ்வர்த் ஸ்மித் தின் சாதனைகளைக் குறித்து மீண்டும் என் கவனத்தைச் செலுத்து கிறேன். கோஷ்டி கோஷ்டியாக மக்கள் மீது வழக்குத் தொடர்ந்து போலி விசாரணைக்குப் பிறகு அவர்களுக்குத் தண்டனை விதித்த அதிகாரி அவர்தான். அவர் ஜனங்களைக் கூட்டம் கூட்டிப் பொய்ச் சாட்சியம் சொல்லும்படி கூறியதாகவும், பெண்களை முகமூடிகளை அகற்றி, அவர்களை நாய்களென்றும், கழுதைகளென்றும் தூஷித்த தாகவும், அவர்கள் மீது காறி உமிழ்ந்ததாகவும் சாட்சிகள் கூறி யுள்ளனர். ஷெகுபுராவில் உள்ள நிரபராதிகளான வக்கீல்களை வருணிக்க முடியாத கொடுமைகளுக்கு உட்படுத்தியவரும் அவர் தான். இந்த அதிகாரிக்கு எதிரான புகார்களை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் நேரில் விசாரித்து, ஸ்ரீ ஸ்மித்தைவிட வேறு எந்த அதிகாரியும் அவ்வளவு மோசமாக நடந்துகொள்ளவில்லை என்ற முடிவிற்கு வந்துள்ளார். ஷெகுபுராவில் உள்ள மக்களை அவர் ஒன்று கூட்டி அவர்களைப் பலவிதங்களிலும் அவமதித்தார்; 'மிருகங்கள்' என்றும் 'காந்தி கொசுக்கள்' என்றும் அவர்களைத் தூஷித்தார்.

ஹண்டர் கமிஷன் முன்னிலையில் ஸ்ரீ ஸ்மித் கொடுத்த சாட்சி யம், உண்மைக்கும் அவருக்கும் வெகு தூரம் என்பதை அம்பலப் படுத்தி யிருக்கிறது. எனவே, பிரஸ்தாப நிருபர் கூறியுள்ள விவரங்கள் உண்மையாக இருக்குமாயின், அத்தகைய ஓர் அதி காரியையே மேல் பதவிக்கு உயர்த்தி யிருக்கிறார்கள். அத்தகைய ஓர் அதிகாரி இன்னும் ஏன் அரசாங்க உத்தியோகத்தில் இருக் கிறார்? நிரபராதிகளான ஆடவர்களையும் பெண்களையும் தூஷித் துத் தாக்கியதற்கு, அவர் மீது ஏன் வழக்குத் தொடரவில்லை? இதுதான் இப்போது கேள்வியாகும்.

ஜெனரல் டயர் மீதும் சர் மைக்கேல் ஓட்வியர் மீதும் குற்றம் சாட்டி விசாரிக்க வேண்டும் என்ற ஆர்வம் இருந்து வருவதை நான் கவனித்துள்ளேன். அம்முறை சாத்தியமானதா என்று நான் பரிசீலனை செய்ய முற்படமாட்டேன். ஜெனரல் டயர் மீது வழக்குத் தொடர வேண்டும் என்ற இந்தக் கூக்குரலில் ஸ்ரீ சாஸ் திரியும் சேர்ந்துகொண்டிருப்பதைக் காண நான் வருந்துகிறேன். ஆங்கிலேயர்கள் தாங்களாக விருப்பத்துடன் அவ்விதம் செய்

வார்களாயின், ஜாலியன்வாலா பாக் அட்டூழியங்களை அவர்கள் பலமாகக் கண்டிக்கிறார்கள் என்பதற்கு அறிகுறியாக அவ்வழக்குகளை நான் வரவேற்பேன். ஆனால், இவர்கள் தண்டனை அடைய வேண்டுமென்ற வீண் முயற்சியில் நான் நிச்சயமாக ஒரு பைசா கூடச் செலவு செய்யமாட்டேன்.

எனினும், ஆங்கிலேயர்களின் மனப்போக்கு எவ்விதம் இருந்து வருகிறது என்பது பற்றி மக்கள் போதிய அனுபவம் பெற்றிருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. மானிட வர்க்கத்திற்கு விரோதிகளான இந்தக் குற்றவாளிகளைக் காட்டிக் கொடுக்காமலிருக்கும் சதியில் ஆங்கிலப் பத்திரிகைகள் யாவும் சேர்ந்து கொண்டிருக்கின்றன. எனவே, அந்தரங்கமாகவோ அல்லது பகிரங்கமாகவோ அவர்கள் மீது வழக்குத் தொடர வேண்டும் என்ற கூக்குரலில் கலந்துகொண்டு, அவர்களை வீரர்களாக்குவதில் நான் பங்கு கொள்ளமாட்டேன். அவர்களைப் பதவிகளிலிருந்து அறவே விலக்கிவிடும்படி வற்புறுத்த இந்தியாவை நான் இணங்கும்படி செய்ய முடியுமாயின், நான் திருப்தியடைவேன்.

ஆனால், ஜெனரல் டயரையும் சர் மைக்கேல் ஓட்வியரையும் பதவிகளிலிருந்து விலக்குவது மாத்திரம் போதாது; காங்கிரஸ் உப கமிட்டியின் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளபடி கர்னல் ஓப்ரியன், ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித், ராய் ஸ்ரீராம் முதலிய மற்றவர்களையும், அவர்கள் மீது வழக்குத் தொடராவிடினும், உடனே கண்டிப்பாக வேலையிலிருந்து விலக்கிவிட வேண்டியதும் அவசியமாகும். ஜெனரல் டயர் மோசமானவர் என்றாலும், ஸ்ரீ ஸ்மித் அவரைக் காட்டிலும் பன்மடங்கு படுமோசமானவர் என்றே நான் கருதுகிறேன். ஸ்மித் செய்துள்ள குற்றங்கள் ஜாலியன்வாலா பாக் படுகொலைகளைக் காட்டிலும் மிக மிகக் கடுமையானவை. மக்கள் மீது சுட்டு அவர்களை பயமுறுத்துவது ஒரு சிப்பாய்க்கு உரிய கடமை என்று ஜெனரல் டயர் உண்மையாகவே நம்பினார். ஆனால், ஸ்ரீ ஸ்மித் வேண்டுமென்றே கொடுமையாகவும் ஆபாசமாகவும் இழிவாகவும் நடந்துகொண்டார். அவருக்கு எதிராகக் கூறப்பட்டுள்ள புகார்கள் உண்மையானவையாக இருக்குமாயின், அவருக்குத் துளி ஜீவகாருண்யம்கூடக் கிடையாது என்று கூற வேண்டும். ஜெனரல் டயர் தாம் செய்த அட்டூழியங்களைத் தைரியத்துடன் ஒப்புக்கொள்ளுகிறார். ஆனால் ஸ்மித்தோவெனில், தாம் செய்த தவறுகளை மழுப்பி மறைக்க சூழ்ச்சி செய்கிறார். அவருக்கு யாதொரு தவறும் செய்யாத மக்களிடம் அவர் இனி இஷ்டப்படி தான்தோன்றித்தனமாக நடந்துகொள்ளலாம். எந்த ஆட்சியின் பிரதிநிதியாக அவர் இருக்கிறாரோ, அந்த ஆட்சியை அவர் தாற்காலிகமாக இழிவுபடுத்த அனுமதிக்கப்பட்டிருக்கிறார்.

பஞ்சாப் என்ன செய்துகொண்டிருக்கிறது? ஸ்ரீ ஸ்மித்தையும், அவர் போன்றவர்களையும் வேலையிலிருந்து விலக்கும்படி

செய்யும் வரையில், ஓய்வு எடுத்துக்கொள்ளாமல் இருக்க வேண்டியது பஞ்சாபியர்களின் தெளிவான கடமையாகும். பாஸ்ஒர்த் ஸ்மித் போன்றவர்கள் அடங்கிய கூட்டத்தை ஒழித்து அரசாங்க நிர்வாகத்தைச் சுத்தம் செய்வதற்காகப் பஞ்சாப் தலைவர்கள் தங்கள் சுதந்திரத்தை உபயோகிக்காவிடில், கோர்ட்டாரிடமிருந்து அவர்கள் பெற்ற விடுதலை வீணாகிவிட்டதாகும். அவர்கள் உறுதியுடன் கிளர்ச்சியை ஆரம்பித்தால், இந்தியா முழுவதும் அவர்களுக்குப் பக்கபலமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அதிகாரிகளுக்கு எதிராகப் பஞ்சாப் தலைவர்கள் அபரிமிதமான சாட்சியம் சேகரித்துள்ளனர். ஜெனரல் டயரைத் தூக்கு மேடைக்கு அனுப்புவதைக் காட்டிலும் அதற்கு அடுத்தபடியாக, அந்த அதிகாரிகள் மேலும் தொடர்ந்து அட்டூழியங்களைச் செய்துகொண்டு போகாமல் தடுப்பதே பஞ்சாப் தலைவர்களுடைய மிகவும் எளிதான, அதிக அவசரமான கடமையாகும் என்று யோசனை கூறத் துணிகிறேன்.

—'எங் இந்தியா' - 29—6—1920.

# 21

# டயரைக் காட்டிலும் கொடியவர்கள்

ஜெனரல் டயர் தவறான முடிவு செய்ததாக, ராணுவச் சபை அவர் மீது குற்றம் சாட்டி அவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் எந்த உத்தியோகமும் ஏற்கக்கூடாதென்று ஆலோசனை கூறியிருக்கிறது. ஜெனரல் டயரின் நடத்தையை ஸ்ரீ மாண்டேகு சிறிதும் ஈவிரக்கமின்றிக் கண்டித்து வந்திருக்கிறார். ஆனால், ஜெனரல் டயர் படுமோசமான குற்றவாளி அல்ல என்று எக்காரணம் கொண்டோ என்னால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. அவரது மிருகத்தனம் சந்தேகத்துக்கு இடமின்றி வெளியாகியிருக்கிறது. வெறுக்கத்தக்க, வீர சிப்பாய்க்குத் தகுதியற்ற அவரது கோழைத்தனம், ராணுவச் சபையில் அவர் கூறிய திகைப்பையூட்டும் சாட்சியத்தின் ஒவ்வொரு வரியிலும் வெளியாயிற்று.

பெரும்பாலும் ஓய்வு நாளைக் கழிப்பதற்காகக் கூடிய, நிராயுதபாணிகளான ஆடவர்களும், குழந்தைகளும் அடங்கிய கூட்டத்தை அவர் 'ஒரு கலகப் படை' என்று குறிப்பிட்டிருக்கிறார். நாற்புறமும் அடைக்கப்பட்ட ஓரிடத்தில் அகப்பட்டுக்கொண்டவர்களை, முயல்களைப் போல் அவரால் சுட்டுத் தள்ளமுடிந்தது.

எனவே, அவர் தம்மை பஞ்சாபின் ரட்சகர் என நம்புகிருர். அத்தகைய ஒரு மனிதர், வீர சிப்பாய் என்று கருதப்படுவதற்குத் தகுதியற்றவர். அவரது நடத்தையில் வீரத்தனம் எதுவுமில்லை. அவர் எத்தகைய அபாயத்திற்கும் உள்ளாகவில்லை. அவர் யாதொரு எதிர்ப்புமின்றி, எவ்வித எச்சரிகையுமின்றி மக்களைச் சுட்டுத் தள்ளினர். எனவே, அது தவருன முடிவு அல்ல; ஏதோ அபாயம் ஏற்பட்டிருப்பதாகக் கற்பனை செய்துகொண்டு புரிந்த அட்டூழியமே. அது அவரது அபாயகரமான திறமையின்மைக்கும், இருதயமற்ற தன்மைக்கும் ருசுவாகும்.

எனினும், ஜெனரல் டயர் மீது காண்பிக்கப்பட்ட ஆத்திரமெல்லாம் பெரிதும் தவருன வழியில் செலுத்தப்பட்டது என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். அவர் மக்கள் மீது சுட்டது பயங்கரமானது என்பதிலும், நிரபராதிகளான மக்களுக்கு ஏற்பட்ட உயிர்ச் சேதம் மிகவும் வருந்தத்தக்கது என்பதிலும் ஐயமில்லை. ஆனல், அதன் பிறகு நிகழ்ந்த மெதுவான சித்திரவதை, அவமானம், ஆண்மையழித்தல் முதலியன உயிர்ச் சேதத்தைக் காட்டிலும் படுமோசமானவை, நிதானமாக யோசித்துச் செய்யப்பட்டவை, துவேஷத்தை அடிப்படையாகக் கொண்டவை, ஆன்மாவை அழிக்கக்கூடியவை. அக்கிரமமான இந்தக் காரியங்களைச் செய்தவர்கள்தான், ஜாலியன்வாலா பாக்கில் படுகொலை செய்த ஜெனரல் டயரைக் காட்டிலும் அதிகக் கண்டனத்திற்கு உரியவர்களாவர். ஜெனரல் டயர் மக்களில் சிலரின் உடல்களையே அழித்தார். ஆனல், மற்றவர்களோ, ஒரு நாட்டின் ஆன்மாவையே கொன்றுவிட முயற்சி செய்தார்கள்.

கர்னல் பிராங்க் ஜான்சனைப் பற்றி யாராவது பேசுகிருர்களா? மற்ற எல்லா அதிகாரிகளையும் காட்டிலும் அவர்தான் கொடிய குற்றவாளி. குற்றமற்ற லாகூரையே அவர் பீதியில் ஆழ்ந்து தவிக்கும்படி செய்துவிட்டார். அவரது இரக்கமற்ற கட்டளைகள், ராணுவ அதிகாரிகள் யாவருக்கும் ஒரு வழிகாட்டியாக அமைந்து, அவர்களைத் தூண்டிவிட்டன. கர்னல் ஜான்சன் நடத்தையைக்கூட நான் பொருட்படுத்தவில்லை. பஞ்சாப் மக்களின், இந்திய மக்களின் முதல் வேலை என்னவெனில், கர்னல் ஓப்ரியன், ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித், ராய் ஸ்ரீ ராம், ஸ்ரீ மாலிக் கான் இவர்களை உத்தியோகத்திலிருந்து அப்புறப்படுத்துவதேயாகும். அவர்கள் இன்னும் உத்தியோகத்தில் இருந்து வருகிருர்கள். ஜெனரல் டயரைப் போல் அவர்களுடைய குற்றமும் ருசுவாகி யிருக்கிறது. ஜெனரல் டயர் கண்டனத்திற்கு உள்ளானதுடன் நம்மிடையே திருப்தி உணர்ச்சி ஏற்பட்டுவிட்டால், பஞ்சாப் அரசாங்க நிர்வாகத்தைப் பரிசுத்தம் செய்யும் தெளிவான கடமையை நாம் அலட்சியம் செய்துவிட்டால், நாம் நமது கடமையில் தவறியவர்கள் ஆவோம். அந்தக் கடமையை,

நாவன்மையுடன் மேடை மீது பேசுவதாலோ அல்லது வெறும் தீர்மானங்களாலோ நிறைவேற்றிவிட முடியாது.

அதிகாரிகள், தங்களை மக்களின் எஜமானர்கள் என்று நினைக்காமல், அவர்களுடைய தருமகர்த்தாக்கள் என்றும், ஊழியர்கள் என்றும் நினைக்க வேண்டும். அதிகாரிகள் சரிவர நடந்து கொள்ளாவிட்டாலும், அவர்களிடம் வைக்கப்பட்டுள்ள நம்பிக்கைக்கு அவர்கள் தகுதியற்றவர்கள் என்பது ருசுவானாலும் அவர்கள் உத்தியோகத்தில் இருக்க முடியாது. இதையெல்லாம் அதிகாரிகளின் மனத்தில் பதியும்படி செய்து, நாமும் ஏதாவது முன்னேற்றம் அடைய வேண்டுமாயின், நாம் கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியம்.

—'எங் இந்தியா' 14—7—1920

## 22

# டயரைக் கண்டித்ததற்கு ஆட்சேபணை!

ஸ்ரீ பென்னிங்டன் எழுதிய கடிதத்தை* நான் மகிழ்ச்சியுடன் பிரசுரித்துள்ளேன். அவர் 'எங் இந்தியா'வை விடாமல் ஒழுங்காக வாசிப்பவர் அல்ல என்று தெரிகிறது. வாசித்து வந்திருந்தால், ஜனக்கூட்டத்தினர் செய்த அக்கிரமங்களை என்னைக் காட்டிலும் வேறு எவரும் அதிகமாகக் கண்டித்ததில்லை என்பதைக் கவனித்திருப்பார். ஸ்ரீ பென்னிங்டன் ஆட்சேபித்துள்ள கட்டுரை ஒன்றுதான், நான் ஜெனரல் டயரைப் பற்றி எழுதியதென்று அவர் நினைப்பது போல் தோன்றுகிறது. ஜாலியன்வாலா படுகொலையை எள்ளளவும் பாரபட்சமின்றிப் பரிசீலனை செய்யு

*ஸ்ரீ ஜே. பி. பென்னிங்டன் ஐ.சி.எஸ்., இந்தியாவில் உயர்ந்த உத்தியோகத்திலிருந்து விலகி ஓய்வு பெற்றவர். அவர் விக்டோரியா ரோட், ஒர்த்திங், ஸஸ்ஸெக்ஸ், இங்கிலாந்து என்ற விலாசத்திலிருந்து 25—8—1920 தேதியிட்டு எழுதிய கடிதத்தையே காந்திஜி குறிப்பிட்டுள்ளார். அக்கடிதத்தில் ஸ்ரீ பென்னிங்டன், ஜெனரல் டயரின் நடத்தையைப் பற்றிக் காந்திஜி எழுதிய கண்டனக் கட்டுரையை ஆட்சேபித்திருந்தார். ஜெனரல் டயர் அரசாங்கத்தின் பொறுப்பு வாய்ந்த ஒரு நல்ல ஊழியர் என்ற முறையில் நூற்றுக்கணக்கான மக்களைச் சுட்டு, அபாயகரமான ஜனக்கூட்டத்தின் கையில் நகரம் சிக்கிவிடாமல் காப்பாற்றினார் என்றும், அவர் நல்ல எண்ணத்துடன் தமது கடமையைச் செய்தபோது, சட்டவிரோதமான அக்கூட்டத்தில், ஒரு வேளை நிரபராதிகளான சிலரும் கலந்துகொண்டிருக்கலாமென்றும் ஸ்ரீ பென்னிங்டன் குறிப்பிட்டுள்ளார். அவர் தமது கடிதத்தில் மேலும் கூறுவதாவது: "உண்மையை நாடுகிறவன் என்ற முறையில், ஏப்ரல் 10-ஆம் தேதியன்றும், அதற்குப் பிந்திய நாட்களிலும் அமிருதசரஸில் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றி அறிய விரும்புகிறேன். பொதுவாக நியாயமான போக்குள்ள உங்கள் பத்திரிகையில் நீங்கள் அடிக்கடி குறிப்பிட்டிருப்பது போல், வெறும் தூஷணை திருப்தி அளித்துவிடாது."

நான் முயற்சித்துள்ளேன் என்பதை அவர் அறியவில்லை என்றும் தோன்றுகிறது.

படுகொலைகள் பற்றி நாங்கள் கூறியுள்ள முடிவுகளுக்கு ஆதாரமாக நானும் மற்றக் கமிஷனர்களும் கொடுத்துள்ள ருசுக்களையெல்லாம் அவர் என்று வேண்டுமாயினும் பார்க்கலாம். 'எங் இந்தியா'வின் வாசகர்கள் எல்லா உண்மைகளையும் அறிவார்கள். எனவே, நான் கூறியிருப்பதற்கு வேறு ஆதாரங்கள் காட்ட வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை.

ஆனால், துரதிருஷ்டவசமாக, ஸ்ரீ பென்னிங்டன் ஆங்கிலேயரின் சரியான பிரதிநிதியாக விளங்குகிறார். நியாயமற்ற முறையில் நடந்துகொள்ள அவர் விரும்பவில்லை. எனினும், உலக சம்பவங்களைப் பற்றிய அவரது கருத்துக்கள் பெரும்பாலும் நேர்மையானவையாக இல்லை. ஏனெனில், அச்சம்பவங்களை மேலெழுந்தவாரியாகவும் கட்சியின் கருத்துக்களை மாத்திரம் வெளியிடும் பத்திரிகைகளின் மூலமும் பார்ப்பதைத் தவிர, அவற்றை ஆழ்ந்து பரிசீலனை செய்ய அவருக்கு நேரமில்லை. ஆகையால், சராசரி ஆங்கிலேயர் தமது எல்லைக்கு உட்பட்ட விஷயங்களைத் தவிர, மற்ற விஷயங்களைப் பற்றி அறிந்து கொள்ளுவதே இல்லை. எனினும், எல்லா விஷயங்களைப் பற்றியும் தாம் நன்கு தெரிந்து கொண்டிருப்பதாகவே அவர்கள் பெருமையடித்துக்கொள்ளுவார்கள்.

எனவே, ஸ்ரீ பென்னிங்டனின் அறியாமை, மற்ற ஆங்கிலேயர்களின் அறியாமைக்கு ஒரு சிறந்த உதாரணமாகும். இதுதான், நமது சொந்த நாட்டின் நிர்வாக அதிகாரம் நம் கையிலேயே இருக்க வேண்டும் என்பதற்குச் சிறந்த காரணமாக இருக்கிறது. அனுபவத்தின்மீதுதான் திறமை ஏற்படுமேயன்றி, தங்களுடைய ஆதிக்கத்தின் கால கெடுவை எவ்வளவு தூரம் நீடிக்க முடியுமோ அவ்வளவு தூரம் நீடிப்பதையே தங்களுடைய இயற்கை நலனைக் கொண்டவர்கள், நமக்குப் பயிற்சி அளிக்கும் வரையில் காத்திருப்பதால் திறமை ஏற்பட்டுவிடாது.

இப்போது ஸ்ரீ பென்னிங்டனின் கடிதத்தைக் கவனிப்போம். எந்த அதிகாரி மீதுள்ள வழக்கிலும் ஒழுங்காக விசாரணை நடைபெறவில்லை என்று அவர் புகார் கூறுகிறார். அந்தத் தவறு நம்முடையதல்ல. பஞ்சாபிற்கு எதிராக இழைக்கப்பட்ட குற்றங்களில் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் யாவரையும் விசாரணை செய்ய வேண்டும் என்று. இந்தியா முரண்பாடான அபிப்பிராயமின்றி அடிக்கடி வற்புறுத்தியும் வந்திருக்கிறது.

அவர் அடுத்தபடியாக, நான் எழுதியுள்ள பாஷையின் 'பலாத்காரத்தை' ஆட்சேபித்துள்ளார். உண்மை, பலாத்காரமாக இருக்குமாயின், பலாத்கார பாஷையை உபயோகித்திருப்பதாக அவர் சாட்டும் குற்றத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

ஜெனரல் டயரின் நடவடிக்கையைப் பற்றி நான் உபயோகித்துள்ள பாஷையை, உண்மைக்கு முரணின்றி, நான் கட்டுப்படுத்தியிருக்க முடியாது. அவரது வாயிலிருந்தோ அல்லது அவருக்கு எதிராகச் சாட்சி கூறியவர்களிடமிருந்தோ, கீழ்க்கண்ட விவரங்கள் வெளியாகின்றன :

1. கூட்டத்திலிருந்த ஜனங்கள் நிராயுதபாணிகளாக இருந்தார்கள்.

2. அக்கூட்டத்தில் குழந்தைகளும் இருந்தனர்.

3. 13-ஆம் தேதி வைசாகத் திருவிழா தினமாகும்.

4. ஆயிரக்கணக்கானவர்கள் அந்த விழாவிற்கு வந்திருந்தனர்.

5. அங்கே கலகம் எதுவும் ஏற்படவில்லை.

6. படுகொலை நடப்பதற்கு முந்திய இரண்டு நாட்களிலும் அமிருதசரஸ் அமைதியாகவே இருந்தது

7. ஜெனரல் டயரின் பிரகடனம் வெளியான அதே தினத்தில்தான் கூட்டத்தைப் பற்றிய பிரகடனமும் வெளியாயிற்று.

8. ஜெனரல் டயரின் பிரகடனம் கூட்டங்களைத் தடுக்கவில்லை; ஊர்வலங்களையோ அல்லது தெருக்களில் நான்கு பேருக்கு மேல் கூட்டங்கள் கூடுவதையோதான் தடுத்தது; தனிப்பட்ட விதத்திலோ, பொது இடங்களிலோ கூட்டங்கள் கூடுவதைத் தடுக்கவில்லை.

9. நகருக்கு உள்ளேயோ, அல்லது வெளியிலோ ஜெனரல் டயருக்கு அபாயம் எதுவும் ஏற்பட்டிருக்கவில்லை.

10. கூட்டத்திலிருந்த பெரும்பாலோருக்கு, தாம் விடுத்த பிரகடனத்தைப்பற்றி எதுவுமே தெரியாது என்று ஜெனரல் டயரே ஒப்புக்கொண்டார்.

11. ஜெனரல் டயர் எச்சரிக்கையின்றி, கூட்ட ஜனங்களை நோக்கிச் சுட்டார். கூட்டம் கலையத் தொடங்கிய பிறகும் சுட்டார். பயந்து ஓடிய ஜனங்களின் முதுகுப்புறத்தை நோக்கியும் சுட்டார்.

12. கூட்டத்திலிருந்த ஆடவர்கள் நாற்புறமும் அடைப்பான ஓரிடத்தில் அகப்பட்டுக்கொண்டனர்.

இந்த உண்மைகள் ஒப்புக் கொள்ளப்பட்டிருப்பதாலேயே, ஜெனரல் டயரின் செயலை ஒரு 'படுகொலை' என்று நான் கூறுகிறேன்.

ஸ்ரீ பென்னிங்டனின் கடிதத்தைப் போல் அவர் அனுப்பியுள்ள குறிப்பு* ஒன்றும் அவரது அறியாமையை அம்பலப்படுத்து

* "இந்தியாவை வைத்துக்கொள்ளுவதால் பலன் உண்டா?" என்ற தலைப்பின் கீழ் ஸ்ரீ பென்னிங்டன் காந்திஜிக்கு அனுப்பிய குறிப்பு ஒன்றில் கூறுவதாவது : "மேலே கண்ட கேள்விக்குப் பதில், இந்தியாவை இங்கிலாந்து எவ்விதம் ஆட்சிபுரிகிறது என்பதையே பொறுத்ததாகும். ராணுவ தர்பாரின் கீழ் ஆட்சி புரிவது முடியாத காரியம். லார்டு கானிங் இந்தியா வைஸ்ராயாக இருந்த காலத்திலிருந்து இந்திய

கிறது. கானிங் காலத்தில் ஏட்டளவில் ஒப்புக் கொள்ளப்பட்ட கொள்கை பூரணமாக அமலுக்கு வரவில்லை. "செவிகளுக்கு அளிக்கப்பட்ட உறுதி மொழிகள் செயலில் நிறைவேற்றப்படாமலேயே இந்தியர்களின் நம்பிக்கை பாழாகும்படி செய்தன" என்று ஒரு பிற்போக்கான வைஸ்ராயே கூறியுள்ளார். கானிங் காலத்திற்குப் பின் ராணுவச் செலவு அளவு கடந்து அதிகமாகி விட்டது. ஜெனரல் டயருக்கு ஆதரவாகச் சீக்கியர்கள் ஆர்ப்பாட்டம் செய்ததாக ஸ்ரீ பென்னிங்டன் குறிப்பிட்டிருப்பது வெறும் கட்டுக்கதையாகும்.

அமிருதசரஸில் கலகக்காரர் படை எதுவுமில்லை. பயங்கரமான கொலைகள், தீ வைத்தல் முதலிய நடவடிக்கைகளில் ஈடுபட்ட கூட்டத்தினர், முற்றிலும் ஒரு சமூகத்தை மாத்திரம் சேர்ந்தவர்கள் அல்ல. 13-ஆம் தேதி கூடிய கூட்டம் மற்ற விஷயங்களுடன், ஜனங்களின் அத்து மீறிய செய்கைகளையும் கண்டிப்பதற்காகவே கூட்டப்பட்டது என்பதை ஸ்ரீ பென்னிங்டன் இதற்குள் அறிந்துகொண்டிருக்க வேண்டும். இந்த உண்மை அமிருதசரஸ் விசாரணையின் போது வெளியாயிற்று.

ஜெனரல் டயரைச் சூழ்ந்திருந்த அதிகாரிகளும், அவரைத் தடுக்க முடியவில்லை. ஒரே விநாடியில் ஜனக் கூட்டத்தைச் சுட்டுத்தள்ள தாம் உறுதி கொண்டதாக அவர் கூறியுள்ளார். அவர் யாரையும் கலந்து ஆலோசிக்கவுமில்லை. அவ்விதம் சுட்டுத்தள்ள இந்தியத் துருப்புகள் ஆட்சேபித்திருந்தால், 'படுகொலை' என்று தவருகக் கூறப்படும் அச்சம்பவம் நிகழ்ந்திராமல் இருக்கலாம் என்று ஸ்ரீ பென்னிங்டன் கூறுகிருர். அவர் இந்தியாவில் ஒரு போதும் வசித்திராதவர் போல் எழுதுகிருர். பயந்து ஓடும் நிரபராதிகளான, நிராயுதபாணிகளான ஜனங்களைத் தாங்கள் சுட முடியாது என்று கூறும் நேர்மையும் தைரியமும் இந்தியத் துருப்புகளுக்கு இருந்திருக்க வேண்டும் என்பதே என் விருப்பமாகும், ஆனல், அடிமை உணர்ச்சி நிறைந்த சூழ்நிலையில் பயிற்சி பெற்

---

அரசாங்கம் ராணுவ ஆட்சி முறைக்கு இடம் கொடுக்கவில்லை. கானிங் வைஸ்ராயாக இருந்தபோதுதான், 'எல்லோருக்கும் சமமான நீதி' என்ற கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதாவது ஐரோப்பியர்கள், இந்தியர்கள் எல்லோருக்கும் நீதி கிடைக்க வேண்டும் என்பதே. ஆனல், ஜெனரல் டயருக்கு நீதி கிடைக்கவில்லை. அமிருதசரஸில் கலகக்காரர்கள் அடங்கிய கூட்டம் ஐரோப்பியருக்கு விரோதமான காரியங்களில் ஈடுபட்டிருந்தது. ஆனல், டயர் அவரது நடவடிக்கையால் நிலைமை அத்துமீறிப் போய்விடாமல் காப்பாற்றினர் என்பதை விசுவாசமுள்ள சீக்கியர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர். அப்போது சீக்கியர்கள் ஆர்ப்பாட்டம் செய்து டயருக்குத் தங்கள் ஆதரவையும் தெரிவித்தனர். ஆனல், ஜனங்களோ, குற்றம் புரிந்தவர்கள் விஷயத்தில் கையாள வேண்டிய அவசியமான தண்டனை முறைகளைப் 'படுகொலை' என்று தவருகக்கொண்டு விட்டார்கள்; ஜெனரல் டயரை விசாரிக்காமலும், முன்பின் யோசியாமல் அவர் கொடுத்த வாக்குமூலங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டும் அவரைக் கண்டிக்க முற்பட்டுவிட்டார்கள்."

றுள்ள இந்தியத் துருப்புகள் அவ்விதம் நியாயமாக நடந்து கொள்ளத் துணியமாட்டா.

எனவே, நான் அறிக்கைப் புத்தகங்களிலிருந்து மேற்கோள்கள் காட்டவில்லையென்பதற்காக, நிரூபிக்கப்படாத விஷயங்களை நான் கூறியிருப்பதாய் ஸ்ரீ பென்னிங்டன் மீண்டும் என்மீது குற்றம் சாட்டமாட்டார் என்று நம்புகிறேன். சாட்சியங்களை அவரே நேரில் பார்த்துக் கொள்ளலாம். பெரிதும் அதிகாரிகள் வட்டாரங்களிலிருந்து பெற்ற நிச்சயமான ருசுக்களை ஆதாரமாகக் கொண்டே, நான் ஜெனரல் டயரைக் கண்டித்துள்ளேன் என்று ஸ்ரீ பென்னிங்டனுக்கு உறுதி கூறுகிறேன்.

ஏப்ரல் 10-ஆம் தேதி நிகழ்ந்த உண்மையான சம்பவங்களை நான் பிரசுரிக்க வேண்டுமென ஸ்ரீ பென்னிங்டன் விரும்புகிறார். அவற்றை அவர் அறிக்கைகளில் காணலாம். அவர் பொறுமையுடன் அறிக்கைகளை வாசித்தால், சர் மைக்கேல் ஓட்வியரும் அவரது அதிகாரிகளும் மக்களை எவ்விதம் கோபாவேசம் கொள்ளும்படி தூண்டினார்கள் என்பதை அறிந்து கொள்ளுவார். நான் ஏற்கனவே கூறியிருப்பது போல் மக்களின் கோபாவேசத்தை, என்னைக் காட்டிலும் அதிகமாக எவரும் கண்டித்ததில்லை. அதற்குப் பிந்திய தினங்களில் நிகழ்ந்த விவரங்களை ஒரே வார்த்தையில் கூறிவிடலாம், அதாவது 'அமைதி' என்பதுதான் அவ்வார்த்தையாகும். ஜனங்கள் அமைதியாக இருந்தனர். ஆனால், அதிகாரிகளோ கண்மூடித்தனமாக மக்களைக் கைது செய்தனர்; படுகொலைகள் புரிந்தனர்; இன்னும் தொடர்ந்து பல குற்றங்களை இழைத்தனர்.

உண்மையை நாடுவதாக ஸ்ரீ பென்னிங்டன் கூறுவதை நான் நம்பத் தயாராக இருக்கிறேன். ஆனால், அவர் உண்மையைக் காண தவறான முறையில் சென்றுள்ளார். ஹண்டர் கமிட்டி முன்னிலையிலும், காங்கிரஸ் கமிட்டி முன்னிலையிலும் கொடுக்கப்பட்டுள்ள சாட்சியங்களை வாசிக்கும்படி அவருக்கு யோசனை கூறுகிறேன். அவர் அறிக்கைகளை வாசிக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் சாட்சியங்கள், ஜெனரல் டயருக்கு எதிரான வழக்கை நான் மிகைப்படுத்திக் கூறவில்லை என்பதையும், குறைத்தே சொல்லியிருக்கிறேன் என்பதையும் அவருக்கு எடுத்துக் காட்டித் திருப்தி ஏற்படும்படி செய்யும்.

"அரசியல் சீர்திருத்தத்திற்காக மக்கள் கொலை முதலிய நடவடிக்கைகளில் ஈடுபடுவது நாகரிகம் என்று கருதப்படுவதற்கு முன், தென்னிந்தியாவைச் சேர்ந்த ஜில்லாக்களில் நான் 12 வருடங்கள் பிரதம மாஜிஸ்திரேட்டாக இருந்தேன்" என்று ஸ்ரீ பென்னிங்டன் தம்மைத் தாமே வருணித்துக்கொண்டிருக்கிறார். அதை நான் வாசிக்கும் போது, அவரால் உண்மையைக் கண்டு

கொள்ள முடியும் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படவில்லை. கோபமோ அல்லது பாரபட்சமோ உள்ள ஒருவர், உண்மையைக் கண்டு பிடிக்கும் சக்தியை இழந்து விடுகிருர். ஸ்ரீ பென்னிங் டனேயோ கோபம், பாரபட்சம் இரண்டும் ஆட்கொண்டிருக் கின்றன. "அரசியல் சீர்திருத்தத்திற்காக கொலை முதலிய நட வடிக்கைகளில் மக்கள் ஈடுபடுவது நாகரிகம் என்று கருதப்படு வதற்கு முன்" என அவர் கூறியிருப்பதன் அர்த்தம் என்ன? பாக்கியவசமாக அரசியல் கொலைக் கொள்கை ஒழிந்துவிட்ட தென்று தோன்றும் இச்சமயத்தில், ஸ்ரீ பென்னிங்டன் அவ்விதம் கூறியிருப்பது நேர்மையல்ல. தாங்கள் உயர்ந்தவர்கள் என்ற மமதையினுலோ அல்லது தாங்கள் தவறே செய்யாதவர்கள் என்ற அறியாமையினுலோ, தங்கள் பார்வை மறைக்கப்படுவதற்கு ஆங் கிலேயர்கள் இடம் கொடுத்து வரும் வரையில், அவர்கள் ஒரு காலத்திலும் உண்மையைக் காண முடியாது.

'எங் இந்தியா' - 29—9—1921

# 23

# ஸ்ரீமதி சரோஜினி – மாண்டேகு கடிதப் போக்குவரத்து

*ஸ்ரீமதி சரோஜினி தேவி, 1920 ஜுலை 15-ஆம் தேதி காந்திஜிக்கு எழுதியுள்ள கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருப்ப தாவது:*

*"எனது உடல் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. ஆனல், பஞ்சாப், கிலாபத் இந்த இரட்டைப் பிரச்னைகள் என் உணர்ச்சி களையும், என் சக்தி முழுவதையும் ஆட்கொண்டிருக்கின்றன. எனினும், அதிகார மமதை தலைக்கேறியும், கண்மூடித்தனமாக வும், சமூக, சமய, நிறத் துவேஷத்துடனும் இருந்து வரும் ஒரு சமூகத்தினரிடமிருந்து நீதியை எதிர்பார்ப்பது வீணுகும். இந்தி யரின் நிலைமைகள், கருத்துக்கள், உணர்ச்சிகள், அபிலாஷைகள் இவற்றையொட்டி ஆங்கிலேயர்களின் அறியாமை ஆழம் கண்டு பிடிக்க முடியாததாக இருக்கிறது. பஞ்சாப் சம்பந்தமாகச் சென்ற வாரம் பார்லிமெண்டில் நடந்த விவாதம், பிரிட்டிஷ் நீதியிலும், இந்தியாவின் புதிய கனவைப் பற்றிய பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்திலும் எனக்கிருந்த கொஞ்சநஞ்ச இறுதி நம்பிக் கையையும் தகர்த்து விட்டது. பார்லிமெண்டில் நடந்த விவாதம் வருந்தத்தக்கது, துக்ககரமானது. நமது நண்பர்கள் அவர்களு டைய அறியாமையையும், நமது விரோதிகள் அவர்களுடைய*

துடுக்குத்தனத்தையும் வெளிப்படுத்தினர்கள். அவ்விரண்டின் சேர்க்கையும் திடுக்கிட வைப்பதாகவும், இருதயத்தைப் பிளப்பதாகவும் இருந்தது.

"ஸ்ரீ மாண்டேகு (இந்தியா மந்திரி) தாம் ஒடிந்த ஒரு நாணல் குச்சி என்பதை ருசுப்பித்து விட்டார். காங்கிரஸ் உபகமிட்டி அறிக்கையிலும் சாட்சியத்திலும் கண்டுள்ளபடி, ராணுவச் சட்ட ஆட்சியின் போது பெண்களிடம் அதிகாரிகள் புரிந்த அட்டூழியங்கள்பற்றி எனக்கும் அவருக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தை* இத்துடன் இணைத்துள்ளேன். சாட்சியத்தில் கூறப்பட்ட ஒரு வாக்குமூலத்தைக்கூட மிகத் தீவிரமாகவும், கண்டிப்பாகவும் பரிசீலனை செய்யாமல் ஒப்புக்கொள்ளவில்லை என நான் எண்ணுகிறேன். அப்படியிருந்தும் காங்கிரஸ் கமிட்டியின் முடிவுகளை இழிவுபடுத்திக் கூறவும், மறுக்க முடியாத அக்கிரமங்களை இந்திய போலீஸ் அதிகாரிகள் போன்ற இந்தியர்களின் தலையில் சுமத்தவும் பொதுவாக முயற்சி நடை பெற்று வருகிறதென்று தோன்றுகிறது. குற்றத்தை அவ்விதம் இந்தியர்களின் தலையில் சுமத்த முயற்சிப்பது, கலப்பற்ற நிறவெறி நாடகமாகும்.

---

* 1919 ஜூன் மாதம் 3-ஆம் தேதி லண்டன் கிங்ஸ்வே மண்டபத்தில் நிகழ்ந்த பொதுக்கூட்டம் ஒன்றில், பஞ்சாப், கிலாபத் தவறுகளைப் பற்றி ஸ்ரீமதி சரோஜினி பேசுகையில் குறிப்பிட்டதாவது: "பஞ்சாபில் ராணுவ ஆட்சியின்போது என் சகோதரிகள் நிர்வாணமாக்கப்பட்டனர்; அவர்களுக்குக் கசையடி கொடுத்தார்கள்; அவர்களை மானபங்கம் செய்தார்கள்."

ஜூலை 9-ஆம் தேதி இந்தியா மந்திரி காரியாலயத்தினர் ஸ்ரீமதி சரோஜினிக்கு எழுதிய கடிதத்தில், அவர் கூறிய விவரங்களுக்கு ஆதாரங்கள் காட்டும்படியும், அவ்விவரங்கள் முற்றிலும் பொய் என்றும் சாதித்திருந்தார்கள். ஆனால், அவ்விவரங்களுக்குக் காங்கிரஸ் கமிட்டி அறிக்கையில் சாட்சியங்கள் இருக்கின்றன என்பதை உணர்ந்த ஸ்ரீ மாண்டேகு, ஜூலை 10-ஆம் தேதி மீண்டும் அவருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். காங்கிரஸ் அறிக்கையில் உள்ள குற்றச்சாட்டு இந்திய போலீசுக்கு எதிரானதேயன்றி ராணுவச் சட்ட அதிகாரிகளுக்கு எதிரானதல்லவென்றும், எனவே தாம் இந்திய போலீசைப் பற்றிப் பேசியதாகவும், ராணுவச் சட்ட அதிகாரிகளைப் பற்றிப் பேசவில்லையென்றும் பகிரங்கமாக ஒப்புக்கொள்ளும்படியும் அக்கடிதத்தில் கேட்டுக்கொண்டிருந்தார். ஸ்ரீ மாண்டேகு எழுதிய அந்த இரண்டாவது கடிதத்தின் இறுதியில், அவர் தமது கண்டிப்பான தோரணையை விட்டுவிட்டு, அவ்விஷயத்தை விசாரிக்கும்படி இந்திய அரசாங்கத்திற்குக் கட்டளையிட்டிருப்பதாகச் சமாதானமாய்க் குறிப்பிட்டிருந்தார். ஜூலை மாதம் 12-ஆம் தேதி ஸ்ரீமதி சரோஜினி, ஸ்ரீ மாண்டேகிற்கு எழுதிய கடிதத்தில், போலீசாருக்கும் ராணுவச்சட்ட அதிகாரிகளுக்கும் வேற்றுமை கற்பிக்க ஸ்ரீ மாண்டேகு செய்துள்ள முயற்சிகளைக் குறித்து தமது ஆச்சரியத்தைத் தெரிவித்தார். போலீசார், ராணுவச் சட்ட அதிகாரிகளின் கீழ் வேலை செய்ததாயும், ராணுவச் சட்ட நீதிச் சபைகளுக்குச் சாட்சியம் சேகரிப்பதற்காகவே அவர்கள் அக்கிரமங்கள் செய்ததாயும் ஸ்ரீமதி சரோஜினி தமது கடிதத்தில் குறிப்பிட்டார். அதிகாரிகள் பெண்களைத் துன்புறுத்திய பல சம்பவங்கள் காங்கிரஸ் விசாரணைக் கமிட்டியின் முன்னிலையில் கூறப்பட்டிருப்பதையும் கவனிக்கும்படி அவர் ஸ்ரீ மாண்டேகுவைக் கேட்டுக்கொண்டார்.

"அன்றொரு நாள் இங்கே நடந்த பொதுக்கூட்டமொன்றில் நான் பேசியபோது, இந்தியர்கள் கோருவது, பட்ட கஷ்டங்களுக்கு ஈடேயன்றி, வஞ்சம் தீர்க்க வேண்டும் என்பதல்ல என்று குறிப்பிட்டேன். துவேஷத்தையும் வெறுப்பையும் கடந்து இருவருக்கும், அதாவது நமக்கும் பிரிட்டிஷாருக்கும் விமோசனம் ஏற்பட வேண்டும் என்று கோரும் ஆன்மிக சக்தியும் ஒளியும் நமக்கு உண்டு என்றும் கூறினேன். பஞ்சாப் அடைந்த வேதனைக்கும் வெட்கக் கேடான நிலைக்கும் உண்மையான ஈடு, இந்தியாவின் விடுதலைதான். எனது இருதய நோய் முற்றி, அபாயமான கட்டத்தை அடைந்திருப்பதாக வைத்திய நிபுணர்கள் கூறுகின்றனர். ஆனால், உயிர்த் தியாகம் செய்துள்ள இந்தியாவின் துக்ககரமான நிலையைக் குறித்துப் பச்சாதாபப்படும்படி உலகத்தின் இருதயத்தைக் கிளறும் வரையில், நான் ஓய்வு எடுத்துக் கொள்ள முடியாது."

மேற்கண்ட கடிதத்தைக் குறித்து, "பெண்களிடம் அக்கிரமங்கள்" என்ற தலைப்பின் கீழ் காந்திஜி எழுதுவதாவது :

ஸ்ரீ மாண்டேகுவிற்கும் ஸ்ரீமதி சரோஜினிக்கும் நடந்துள்ள கடிதப் போக்குவரத்து, ஸ்ரீ மாண்டேகுவின் மனப்போக்கிற்கு ஒரு சிறு உதாரணமாகும். ராணுவச் சட்ட அதிகாரிகள் பெண்களிடம் அக்கிரமமாக நடந்துகொண்டார்கள் என்று ஸ்ரீமதி சரோஜினி குற்றஞ்சாட்டியதைக் குறித்து அவரை ஒரு பார்லிமெண்டு அங்கத்தினர் அவமதிப்பாகப் பேசினர். ஸ்ரீ மாண்டேகு அவசரப்பட்டு அவருக்கு (ஸ்ரீமதி சரோஜினிக்கு) எழுதிய கடிதத்தில், அவர் உண்மையில்லாத விவரங்களைக் கூறியதாகக் குற்றஞ்சாட்டியதுடன், அந்தக் கூற்றுகளுக்கு ஆதாரங்கள் காட்டும்படியோ அல்லது அவர் கூறிய விவரங்களை வாபஸ் பெறும்படியோ சவால் விடுத்தார். ஆனால், அதற்கு மறுநாளே ஸ்ரீமாண்டேகு தமது கடுமையான தொனியைக் குறைத்துக்கொண்டு, ஸ்ரீமதி சரோஜினியின் குற்றச்சாட்டுகளுக்குக் காங்கிரஸ் கமிட்டியின் அறிக்கையில் ஓரளவு ஆதாரம் இருப்பதாயும், எனினும் அது போலீசார் செய்த சித்திரவதையைக் குறிப்பிடுகிறதென்றும் ஒரு கடிதம் எழுதியிருந்தார். ஸ்ரீமதி சரோஜினியின் கடமை மிகவும் எளிதாகிவிட்டது. அவர், ஸ்ரீ மாண்டேகு திக்குமுக்காடும்படி பதில் அளித்துவிட்டார். எனவே, காங்கிரஸ் கமிட்டியின் அறிக்கையில் வெளியான விஷயங்களையொட்டி விசாரிக்கும்படி ஸ்ரீ மாண்டேகு இப்போது ஏற்பாடு செய்திருப்பதாகக் கேள்விப்படுகிறோம்.

பெண்களிடம் அக்கிரமமாக நடந்துகொண்ட குற்றத்தை மாத்திரம் இந்தியப் போலீசாரின் தலையில் சுமத்தும் ஸ்ரீ மாண்டேகுவின் முயற்சியும் தோல்வியடைந்துள்ளது என்ற உண்மையை வாசகர்கள் கவனிக்க வேண்டுமென்று கோருகிறேன்.

ஸ்ரீமதி சரோஜினி குறிப்பிட்டுள்ள மனியன்வாலா சம்பவங்களுக்கு ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித் பொறுப்பாளியாவார். அந்தக் குற்றச்சாட்டை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் நேரில் விசாரித்தார்; பிறகு பாரிஸ்டர் ஸ்ரீ லாப் சிங்கும் விசாரித்தார். எனவே, அந்தக் கடிதப் போக்குவரத்திலிருந்து ஸ்ரீ மாண்டேகுவின் நிலைமை வெட்கக்கேடாகி யிருக்கிறது.

இப்போது ஸ்ரீமதி சரோஜினி காங்கிரஸ் அறிக்கையில் கண்டுள்ள விஷயங்களைப் பற்றிக் கவலைகொள்ளுவது இயற்கையே. காங்கிரஸ் கமிஷனர்களே, தாங்கள் சாட்சியங்களை விசாரித்த முறையைப் பற்றி விவரித்திருக்கிறார்கள். அது எப்படியாயினும், ஸ்ரீமதி சரோஜினி தம்மீது சிறிதும் குற்றமில்லை என்பதை நிரூபித்துள்ளார். காங்கிரஸ் கமிஷனர்களின் அறிக்கையைப் பற்றிப் பிறர் கவலைப்பட வேண்டியதில்லை. தங்கள் அறிக்கைக்கு இழுக்கு ஏற்படாமல் அவர்கள் பார்த்துக்கொள்ளுவார்கள்.

—'எங் இந்தியா' - 11—8—1920

# 24

# வைஸ்ராயின் பிரகடனம்

வைஸ்ராயின் நேர்மையிலும், வைஸ்ராய் பதவி போன்ற உயர்ந்த பதவியை வகிப்பதில் அவருக்குள்ள திறமையிலும் நான் நம்பிக்கை இழந்துவிட்டதால், இப்போதெல்லாம் அவரது பிரசங்கங்களை நான் பாரபட்சமுள்ள மனத்துடனேயே வாசிப்பதாக இருக்கலாம். எனினும், இந்தியா சட்டசபையை ஆரம்பித்து வைத்து வைஸ்ராய் செய்துள்ள பிரசங்கம், அவரது விபரீதமான மனப்போக்கைக் காட்டுகிறது. எனவே, அத்தகைய மனப்போக்குள்ள அவருடனோ அல்லது அவரது அரசாங்கத்துடனோ, சுயமரியாதையுள்ளவர்கள் தொடர்பு வைத்துக் கொள்ளுவதென்பது முடியாத காரியமாகும்.

பஞ்சாப் சம்பந்தமாக அவர் கூறியுள்ளவற்றின் பொருள் என்னவெனில், துன்பத்திற்கு உள்ளான மக்களுக்குப் பரிகாரமளிக்க அவர் கண்டிப்பாக மறுத்துவிட்டார் என்பதே. அடுத்து வரும் எதிர்காலப் பிரச்னைகள் விஷயத்தில் நாம் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும் என்று அவர் கூறுகிறார். அடுத்துள்ள எதிர்காலப் பிரச்னை என்னவெனில், பஞ்சாப் விஷயமாக அரசாங்கம் பச்சாத்தாபப்படும்படி கட்டாயப்படுத்துவதேயாகும். ஆனால், அரசாங்கத்திற்குப் பச்சாத்தாபம் ஏற்படும் என்பதற்கான அறிகுறி எதுவுமே இல்லை. அதற்கு மாறாக, தம்மைக்

கண்டிப்பவர்களுக்குப் பதில் கூற தமக்குள்ள ஆர்வத்திற்குத் தாம் இடம் கொடுக்கவில்லை என்றும் அவர் கூறியிருக்கிறார். அதன் அர்த்தம் என்னவெனில், இந்தியாவின் கௌரவத்தைப் பாதிக்கும் பல மூலாதாரமான விஷயங்களையொட்டி, அவர் தம்முடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவில்லை என்பதே. அவர் பல பிரச்னைகளையும் சரித்திரத்தின் தீர்ப்புக்கு விடுவதுடன் திருப்தியடைந்துள்ளார்.

இத்தகைய பிரசங்கம், இந்தியர்களின் மனம் மேலும் கொதிப்படையும்படி செய்யவல்லது என்பதே என் அபிப்பிராயம். மக்களுக்கு அதிகாரிகள் பல கொடுமைகளை இழைத்திருக்கிறார்கள். இன்னும்கூட மக்கள், அதிகாரிகளின் காலடியில் அவஸ்தைப்பட்டு வருகின்றனர். நம்பிக்கையும் பொறுப்பும் வாய்ந்த பதவிகளை வகிக்கத் தாங்கள் சிறிதும் தகுதியற்றவர்கள் என்பதையும் அதிகாரிகள் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். இவ்விதம் அதிகாரிகளிடம் சொல்லொணாத் துன்பத்திற்கு உள்ளான மக்களுக்கு, எதிர்கால சரித்திரத்தின் சாதகமான தீர்ப்பால் என்ன பலன் ஏற்பட முடியும்? எனவே, பஞ்சாபிற்கு நீதி வழங்க மறுப்பதில் கண்டிப்பாக இருப்போர், மக்களின் ஒத்துழைப்பை நாடுவதாகக் கூறுவது வெறும் வேஷமும் வஞ்சகமுமாகும். சகிக்க முடியாத வேதனையால் துன்பப்படும் ஒரு நோயாளியின் எதிரில் ஆசையைத் தூண்டும் மிகுந்த சுவையுள்ள பலகாரங்களைக்கொண்டு வந்து வைத்தால், அவரது உடல் வேதனை நீங்கிவிடுமா? அவரது வேதனைக்குப் பரிகாரம் ஏற்படும்படி செய்யாமல், அவரது ஆசையைத் தூண்ட முற்படும் வைத்தியர், தம்மை ஏளனம் செய்வதாக அவர் நினைக்கமாட்டாரா?

பஞ்சாபைப் பற்றி வைஸ்ராய் தாம் விடுத்துள்ள பிரகடனத்தின் மூலம், இந்தியா ராஜீய சீர்திருத்தங்களை ஏறெடுத்துப் பார்க்குமுன் பஞ்சாப், கிலாபத் தவறுகளுக்குப் பரிகாரம் கிடைக்க வேண்டுமென வற்புறுத்தும் முயற்சியைப் பலப்படுத்தியுள்ளார் என்றே நினைக்கிறேன்.

—'எங் இந்தியா' - 1—9—1920

# 25

# தகுதியற்ற வைஸ்ராய்

ராணுவச் சட்டம் அமலில் இருந்த காலத்திலே, பஞ்சாபில் அதிகாரிகள் பெண்களிடம் அக்கிரமமாக நடந்துகொண்டதன் சம்பந்தமாக, ஸ்ரீமதி சரோஜினியின் குற்றச்சாட்டுகள் வெளி

யாகியிருந்தன அல்லவா? அவற்றையும், ஸ்ரீ மாண்டேகுவிற்கு அவர் அனுப்பிய ஆணித்தரமான பதிலையும் ஆட்சேபித்து வைஸ்ராய் ஸ்ரீ மாண்டேகுவிற்கு ஒரு தந்தி* கொடுத்துள்ளார். வைஸ்ராய் விடுக்கும் பொறுப்பு வாய்ந்த ஒவ்வோர் அறிக்கையும், அவர்பால் ஒப்புவிக்கப்பட்டுள்ள மகத்தான பொறுப்பை வகிப்பதற்கு அவர் முற்றிலும் தகுதியற்றவர் என்ற பொது மக்களின் அபிப்பிராயத்தைப் பலப்படுத்துவதாக இருக்கிறது. வைஸ்ராயின் போக்கைக் குறித்து ஸ்ரீமதி சரோஜினி கண்டித்திருப்பதைக் காட்டிலும், நான் ஒரு வார்த்தைகூட அதிகம் கூற விரும்பவில்லை.

ஆனால், ஸ்ரீமதி கூறியுள்ள மிகவும் முக்கியமான சாட்சியங்கள் சிலவற்றை அசட்டை செய்திருப்பது பற்றி நான் வாசகர்களின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். விபசாரிகள் துரதிருஷ்டகரமான தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதற்காக, அவர்களது சாட்சியங்களை நிராகரிப்பது நியாயம் என்றே வைத்துக்கொண்டாலும், மனியன்வாலாவைச் சேர்ந்த மதிப்பு வாய்ந்த பல பெண்கள் கூறியுள்ள சாட்சியம் சம்பந்தமாக வைஸ்ராய் என்ன சொல்லுகிறார்? எனக்குத் தெரிந்தவரையில் அந்தப் பெண்களுக்கு விரோதமாக ஒரு வார்த்தைகூட அப்பழுக்குச் சொல்ல முடியாது. காலஞ் சென்ற மங்கள ஜாத்தின் மனைவி கௌரிதேவியின் வாக்குமூலத்தைக் கீழே பூரணமாகக் கொடுத்துள்ளேன். அந்த வாக்குமூலம் மற்றும் பல பெண்களால் உறுதி செய்யப்பட்டிருக்கிறது. அந்த வாக்குமூலம் இதுதான் :

‘‘ராணுவச் சட்டம் அமலில் இருந்தபோது ஒரு நாள் ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித், எங்கள் கிராமத்தில் உள்ள 7 வயதிற்கு மேற்பட்ட எல்லா ஆடவர்களையும் டாக்கா டல்லா பங்களாவில் ஒன்று கூட்டினார். அந்தப் பங்களா எங்கள் கிராமத்திலிருந்து சில மைல்கள் தூரத்தில் இருக்கிறது. அப்போது நடந்துகொண்டிருந்த விசாரணை சம்பந்தமாகவே அவர்களை அங்கே ஒன்று கூட்டினார். ஆடவர்கள் அந்தப் பங்களாவில் இருந்தபோது, ஸ்ரீ பாஸ்வொர்த் ஸ்மித் எங்கள் கிராமத்திற்கு வந்தார். பங்களாவில் இருந்த தங்கள் கணவன்மாருக்குச் சாப்பாடு எடுத்துக் கொண்டு சென்ற பெண்களை அவர் வழியில் சந்தித்து, அவர்கள் யாவரையும் திரும்பிச் செல்லும்படி கூறி கிராமத்திற்குத் தம்முடன் அழைத்து வந்தார். கிராமத்திற்கு வந்ததும் அவர் சந்துகளுக்குள் சென்று, பெண்கள் எல்லோரையும் அவரவர் வீடுக

*ஸ்ரீமதி சரோஜினியின் குற்றச்சாட்டுகள் சம்பந்தமாக இந்தியா மந்திரிக்கு வைஸ்ராய் 1919 ஆகஸ்டு 12-ஆம் தேதி அனுப்பிய பதிலில் குறிப்பிட்டிருந்ததாவது : “அதிகாரிகளுக்கு எதிராகச் சாட்சியம் கூறியவர்கள் குற்ற பரம்பரைகளைச் சேர்ந்த- தாழ்ந்த சாதி விபசாரிகள் ஆவர். அவர்கள் பொய் கூறுவதில் பெயர் போனவர்கள். எனவே, அவர்களுடைய சாட்சியம் கவனிப்பதற்கு உரியதன்று.”

ளுக்கு வெளியே வரும்படி கட்டளையிட்டார். பல பெண்களை அவரே தடிக் கம்புகளுடன் சென்று பயமுறுத்தி வெளியே வருமாறு வற்புறுத்தினர். அவர், கிராம முகாமுக்கு அருகில் எங்கள் எல்லோரையும் நிற்கும்படி செய்தார். அவர் முன்னிலையில் பெண்கள் கைகளைக் கட்டிக்கொண்டு நின்றூர்கள். அவர் சிலரைக் கம்பால் அடித்து, அவர்கள்மீது காறி உமிழ்ந்தார். ஆபாசமான, சொல்லத்தகாத வார்த்தைகளால் தூஷித்தார். அவர் என்னை இரண்டு தடவை அடித்து, என் முகத்தில் உமிழ்ந்தார். பெண்களின் முகமூடிகளை அவர் வைத்திருந்த தடியால் அகற்றி, எவரும் முகத்தை மூடிக் கொள்ளக்கூடாதென்று வற்புறுத்தினர்.

''மற்றும் அவர் எங்களைக் கழுதைகளென்றும், நாய்களென்றும், பன்றிகளென்றும் கண்டபடி வைதார். 'நீங்கள் உங்கள் கணவன்மாருடன் ஒரே படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தீர்களே. வெளியே போய் விஷமம் செய்யாமல் இருக்கும்படி நீங்கள் ஏன் அவர்களைத் தடுக்கவில்லை? இப்போது உங்கள் உடைகளைப் போலீஸ் கான்ஸ்டேபிள்கள் பரிசோதனை செய்யப் போகிறூர்கள்' என்று கூறினர். அவர் என்னைக் காலால் ஓர் உதை உதைத்ததுடன், நாங்கள் தலைகுப்புறக் குனிந்துகொண்டு எங்கள் கைகளால் கால்களைச் சுற்றிக் காதுகளைப் பிடித்துக்கொள்ளும் சித்திரவதைக்கு உட்படுத்தப்பட்டோம். ஆடவர்கள் வெளியே சென்றிருக்கும் சமயத்தில் பெண்கள் யாவரும் இப்படியெல்லாம் துன்புறுத்தப்பட்டார்கள்.''

மேலே கண்ட விவரங்கள் உண்மையாக இருக்குமாயின், இவற்றைக் காட்டிலும் மிருகத்தனமான, வெறுக்கத்தக்க விஷயம் வேறு என்ன இருக்க முடியும்? அப்படியிருந்தும், அக்கொடிய குற்றங்களைச் செய்தவருக்கு ஒருவேளை அரசாங்கப் பொக்கிஷத்திலிருந்து 'பென்ஷன்' கொடுப்பார்கள். சம்பந்தப்பட்ட அந்த அதிகாரியின் இழிகுணத்தை நிரூபிக்க சாட்சியங்களில் வேண்டிய ஆதாரங்கள் இருக்கின்றன என்பதை ஆர்வமுள்ள வாசகர்கள் அறிந்துகொள்ளுவர்.

அவ்விஷயமாக முதலில் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் சாட்சியம் சேகரித்தார். சம்பந்தப்பட்ட பெண்களைப் பார்த்து விசாரிப்பதற்காக பாரிஸ்டர் ஸ்ரீ லாப்சிங், எம்.ஏ., மனியன்வாலாவுக்குப் பிரத்தியேகமாக அனுப்பப்பட்டார். அவர் பகிரங்கமாக விசாரணை நடத்தினர். விசாரணை நடந்த இடத்தில் ஆஜராகச் சகலருக்கும் உரிமை அளிக்கப்பட்டது.

ஸ்ரீமதி சரோஜினி முன்பின் யோசியாமல் பேசிவிட்டதாக ஸ்ரீ மாண்டேகு அவசரப்பட்டு அவரைக் கடிந்துகொண்டபோது, மேலே குறிப்பிட்ட வாக்குமூலங்கள் ஸ்ரீ மாண்டேகுவின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டன. அதனால்தான், அவ்விவரங்களைப் பற்றி விசாரிக்கும்படி ஸ்ரீ மாண்டேகு தடபுடலாகக் கட்

டளையிட்டார். ஆனால், அந்தக் கட்டளையை வைஸ்ராய் பொருட் படுத்தியதாகத் தெரியவில்லை. ஏனெனில், வைஸ்ராய் யாதொரு விசாரணையும் நடத்தவில்லை. தவிர, அவர் சாட்சியம் சம்பந்தமாக இதுவரையில் எவரும் அறிந்திராத ஒரு புதிய விதி யையும் சட்டத்தையும் ஏற்படுத்தியுள்ளார். விபசாரிகளின் சாட் சியத்தை நம்பக்கூடாது என்பதே அவரது புதிய சட்டமாகும். அதாவது விபசாரிகள், தங்களுடைய மனுக்களுக்கு ஆதாரமாக வேறு சாட்சியம் கொண்டு வந்தாலன்றி, அவர்களுக்கு நீதி வழங் கப்படாமற் போகலாம் என்றே வைஸ்ராய் அறிக்கையிலிருந்து ஊகிக்க வேண்டியிருக்கிறது. அது எப்படியாயினும், ஸ்ரீ மாண் டேகு, வைஸ்ராயின் விளக்கத்தை அங்கீகரித்துள்ளார் என்றே தோன்றுகிறது. அதன் பலனாக ஒத்துழையாமை இயக்கத் திற்கே பலம் ஏற்பட்டிருக்கிறது.

இந்தியா, தன் சொந்த மக்கள் விஷயத்தில் அதிகாரிகள் செய்த காட்டுமிராண்டித்தனமான கொடிய குற்றங்களைக் கவனி யாதது போல் இருந்துவிடும் ஓர் அரசாங்கத்துடன், ஒரு விநாடி யாவது தொடர்பு வைத்துக்கொண்டிருக்க முடியுமா?

—'எங் இந்தியா' - 6—10—1920

## 26

# என் மீது குற்றச்சாட்டுகள்

**ஹோம்** ரூல் சங்கங்களினாலும் பம்பாய் தேசீய சங்கத்தி னாலும் ஏற்பாடு செய்யப்பட்ட பஞ்சாப் கூட்டத்தில் நான் ஜாலி யன்வாலா பாக் படுகொலைகள் பற்றிப் பேசினேன். ஜெனரல் டயர் மீது வழக்குத் தொடர வேண்டுமென்றும், சர் மைக்கேல் ஓட்வியரைப் பார்லிமெண்டு விசாரிக்க வேண்டுமென்றும் நான் அக்கூட்டத்தில் ஒரு தீர்மானமும் கொண்டு வந்தேன். எனது பிரசங்கத்தையும் தீர்மானத்தையும் பார்த்த ஸ்ரீமதி பெஸண்ட், தீர்மானத்தில் கண்டுள்ள விஷயங்களை ஆதரிக்காத நான், எப்ப டித் தீர்மானத்தைப் பிரேரேபிக்க முடியும் என்று என்னைக் கேட் டுள்ளார். ஸ்ரீ சாஸ்திரியாரும் அதைக் குறித்து மனச்சஞ்சலம் அடைந்துள்ளார். எனது பிரசங்க விவரத்தை நான் பார்க்க வில்லை. எனவே, என் பிரசங்கத்தைச் சரிவரப் பிரசுரித்திருக் கிறார்களா என்பது பற்றி என்னால் சொல்ல முடியாது. நான் குஜராத்தியில் பேசினேன். எனவே, அதை மொழிபெயர்த்த பத்திரிகை நிருபர் தவறு செய்திருக்கலாம். நிருபரால் கொடுக் கப்பட்டுள்ள எனது பிரசங்க விவரம் எப்படியிருப்பினும், என் சொந்த நிலையை நான் மகிழ்ச்சியுடன் விளக்க முயற்சிக்கிறேன்.

ஏனெனில், அந்த இரு மாபெரும் தலைவர்களும் எழுப்பியுள்ள கொள்கை மிகவும் முக்கியமானது என்பதை நான் உணருகிறேன்.

நான் விட்டுக் கொடுக்காத சுபாவம் உடையவன் என்று அடிக்கடி என் மீது குற்றம் சாட்டப்பட்டு வருகிறது. பெரும்பான்மையோர் தீர்மானத்திற்கு நான் தலை வணங்காதவன் என்றும் கூறுவார்கள். நான் எதேச்சாதிகாரம் செலுத்துவதாகவும் என் மீது குற்றம் சாட்டுகிறார்கள். இப்போது பஞ்சாப் கூட்டம் நடந்த சமயத்தில் எனக்குச் சம்மதம் இல்லாத ஒரு தீர்மானத்தைப் பிரேரேபிக்கும்படி நான் வற்புறுத்தப்பட்டேன். நான் தீர்மானத்தைப் பிரேரேபிக்க ஒப்புக்கொண்டாலும், அதற்கு மாறாக என் அபிப்பிராயத்தை வன்மையாகக் கூறும் உரிமையை நான் வைத்துக்கொண்டேன். நான் அவ்விதமே என் அபிப்பிராயத்தையும் கூறினேன். பிடிவாதம், எதேச்சாதிகாரம் இவ்விரண்டு குற்றச்சாட்டுகளையும் நான் ஒரு போதும் ஒப்புக்கொள்ள முடிந்ததில்லை. அதற்கு மாறாக, மிகவும் முக்கியமல்லாத விஷயங்களில் விட்டுக் கொடுக்கும் எனது சுபாவத்தைக் குறித்து நான் எனக்குள் பெருமை அடைகிறேன். எதேச்சாதிகாரத்தை நான் வெறுக்கிறேன். எனது சுதந்திரத்தை நான் பெரிதாகக் கருதுவது போல், பிறரது சுதந்திரத்திற்கும் மதிப்புக் கொடுக்கிறேன். ஓர் ஆடவர் அல்லது பெண்ணின் பகுத்தறிவிற்கு நியாயம் என்று தோன்றும்படி நான் செய்ய முடியாவிடில், அத்தகைய ஒருவரைக்கூட என் அபிப்பிராயத்திற்கு இணங்க வேண்டுமென்று கூற நான் விரும்பவில்லை. நான் பண்டைய பழக்கவழக்கங்களை அப்படியே ஒப்புக்கொள்ளுபவனும் அல்ல. பண்டைய சாஸ்திரங்கள், என் பகுத்தறிவுக்கு உகந்ததாக இராவிடில், அவற்றின் தெய்விகத் தன்மையைக்கூட நிராகரிக்க நான் தயங்கமாட்டேன்.

ஆனால், அனுபவத்தின் மூலம் நான் ஒரு விஷயத்தை அறிந்து கொண்டிருக்கிறேன். அதாவது, நான் சமூகத்தில் வாழ விரும்பினால், அதே சமயம் என் சுதந்திரத்தையும் பாதுகாத்துக் கொள்ள விரும்பினால், முதல்தர முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களையொட்டி மாத்திரம் எனது பூரண சுதந்திரத்தை வரையறுத்துக்கொள்ள வேண்டும். சொந்த மதம் அல்லது ஒழுக்கத்திலிருந்து அப்பாற்படாத சகல விஷயங்களிலும் ஒருவர் பெரும்பான்மையோரின் தீர்மானத்திற்கு விட்டுக் கொடுக்க வேண்டும். பிரஸ்தாப விஷயத்தில், எனது நிலைமையை விளக்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. 'விட்டுக் கொடுக்காத' என் சுபாவத்தை எத்தனையோ தடவைகளில் தேசம் அறிந்துகொண்டது உண்டு. நான் விட்டுக் கொடுக்க முடிந்த ஒரு மகத்தான சந்தர்ப்பத்தில் நாடு மகிழ்ச்சியடைந்ததும் உண்டு.

ஜெனரல் டயர் மீது வழக்குத் தொடர வேண்டும் என்றும், சர் மைக்கேல் ஓட்வியரைப் பார்லிமெண்டின் விசாரணைக்கு உட்படுத்த வேண்டும் என்றும் நம் நாடு கோருவது தவறு என்பதே இன்னும் என் நம்பிக்கையாகும். அது முற்றிலும் பிரிட்டிஷாரைச் சார்ந்த பொறுப்பு. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் எந்த உத்தியோகத்தில் இருப்பினும், தவறு செய்தவர்களை அப்பதவியிலிருந்து அகற்றிவிடும்படி செய்ய வேண்டும் என்பதே எனது நோக்கமாகும். பின்னர் நிகழ்ந்த எச்சம்பவமும் எனது அபிப்பிராயத்தை மாற்றவில்லை. பிரஸ்தாப தீர்மானத்தைப் பிரேரேபித்த அந்தக் கூட்டத்திலேயே நான் எனது அபிப்பிராயத்தை வற்புறுத்தினேன். எனினும், நான் தீர்மானத்தைப் பிரேரேபிக்கத் தயங்கவில்லை. ஏனெனில், ஜெனரல் டயர் மீது வழக்குத் தொடர வேண்டும் என்று கோருவதில் ஒழுக்கத்திற்கு முரணானது எதுவும் இல்லை. அவ்விதம் கோர, நாட்டிற்கு உரிமை உண்டு. அந்த உரிமையை விட்டுவிடுவதால் நாட்டுக்கு நன்மையே உண்டாகும் என்று காங்கிரஸ் உப கமிட்டி யோசனை கூறியது. எனவே, எனது நிலைமையை மிகத் தெளிவாக விளக்கி விட்டதாகவே நான் நினைத்தேன். அதாவது, வழக்குத் தொடர வேண்டும் என்ற அபிப்பிராயத்தை நான் எதிர்த்தேன். இருந்தாலும், வழக்குத் தொடர வேண்டும் என்ற தீர்மானத்தைப் பிரேரேபிப்பதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஏனெனில், வழக்குத் தொடருவதில் தீமையோ, அபாயமோ இல்லை அல்லவா?

எனினும், நாம் நெருக்கடியான கட்டத்தில் இருந்து வரும் இச்சமயத்தில், நான் தீர்மானத்தைப் பிரேரேபித்தது ஓர் ஆபத்தான பரிசோதனை என்பதை ஒத்துக்கொள்ளுகிறேன். ஏனெனில், நாம் பொது மக்களின் ஒழுக்க சம்பந்தமான புதிய விதிகளை உருவாக்கி, அவர்களுக்குப் போதிக்கவும், அவர்களை இயக்கவும், அவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கவும் முயற்சித்து வருகையில், பாமர மக்களின் மனத்தைக் குழப்பும் விதத்திலோ, அவர்களுக்கு நல்ல பிள்ளையாக நடந்துகொள்ளுவதாகத் தோன்றும் விதத்திலோ எதுவும் செய்வது பத்திரமானதல்ல. தற்போதுள்ள நிலையில், மக்களின் ஆதரவைப் பெற வேண்டும் என்பதற்காக அவர்கள் விருப்பத்திற்கு இணங்க ஆடுவது போல் தோன்றுமாறு நடந்துகொள்ளுவதைக் காட்டிலும், பிடிவாதமுள்ளவன் என்றும் எதேச்சாதிகாரம் செலுத்துபவன் என்றும் 'பட்டங்களை'ப் பெறுவது நல்லது என்றே நான் நினைக்கிறேன். ஜனக் கும்பலின் சட்டத்தைத் தவிர்த்து, தேசத்தில் ஒழுங்கான முன்னேற்றம் ஏற்பட வேண்டுமென நாம் விரும்பினால், மக்களுக்கு வழிகாட்டி அவர்களை நடத்திச் செல்லுவதாகக் கூறுவோர், மக்களின் இஷ்டப்படி தாங்கள் நடப்பதற்கு அறவே மறுத்துவிட வேண்டும். ஒருவர் தமது சொந்த அபிப்பிராயத்தை வற்புறுத்திக் கூறிவிட்டு, பிறகு பொது மக்களின் அபிப்பிராயத்திற்குப் பணிந்து விடுவது போதாது என்பது மாத்திரமல்ல; மூலாதார

மான விஷயங்களில் தலைவர்கள், மக்களின் அபிப்பிராயம் தங்கள் பகுத்தறிவுக்கு முரணாக இருக்குமாயின், அவர்களுடைய அபிப்பிராயத்திற்கு மாறாக நடந்துகொள்ளவும் வேண்டும்.

—'எங் இந்தியா' - 14—7—1920

# 27

# முனிவரும் அல்ல, ராஜீயவாதியும் அல்ல

அன்புள்ள ஒரு நண்பர், 'ஈஸ்ட் அண்ட் வெஸ்ட்' என்ற பத்திரிகையின் ஏப்ரல் மாத இதழிலிருந்து கீழ்க்கண்ட விஷயத்தைக் கத்தரித்து எனக்கு அனுப்பியுள்ளார்:

''ஸ்ரீ காந்தி ஒரு முனிவர் என்ற கீர்த்தி பெற்றவர். ஆனால், அவரது தீர்மானங்கள், அவர் பெரிதும் ராஜீயவாதி என்பதையே காட்டுகின்றன என்று தோன்றுகிறது. அவர் ஹர்த்தால்களைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டு வருகிறார். அவரது மேற்பார்வையில் ஹர்த்தால், இன்றுள்ள ஒரே பிரச்னையையொட்டி படித்தவர்களையும் படிக்காதவர்களையும் ஐக்கியப்படுத்தும் சக்தி பொருந்திய ஒரு ராஜீய ஆயுதமாகி வருகிறது. ஹர்த்தாலில் அனுகூலங்கள் இருப்பது போல், பிரதிகூலங்களும் இருக்கின்றன. அது நேரடி நடவடிக்கையைப் போதிக்கிறது. நேரடி நடவடிக்கை, எவ்வளவு சக்தி பொருந்தியதாக இருப்பினும், ஒற்றுமையை உருவாக்குவதில்லை.''

''ஹர்த்தால் மூலம் தாம் அகிம்சையின் (தீங்கு செய்யாமை) மகோன்னதமான விதிகளைக் கடைப்பிடிக்கிறோம் என்பது ஸ்ரீ காந்தியின் நிச்சயமான அபிப்பிராயமா? ஜாலியன்வாலா பாக்கில் சுட்டதன் ஞாபகார்த்த தினத்தைக் கொண்டாட வேண்டும் என்ற அவரது யோசனை, ஒற்றுமையும் அமைதியும் வளருவதற்கு இடம் அளிக்காது. அது நமது அரசாங்கம் தவறான வழியில் அகப்பட்டுக்கொண்ட ஒரு கோரமான துக்க சம்பவமாகும். ஆனால், அந்த மனக் கசப்பை ஞாபகத்தில் இறுத்திக்கொள்ள வேண்டியது அவசியமா? விதவைகளுக்கும் அனாதைக் குழந்தைகளுக்கும் உதவியளிக்கவும், ஏன் என்று தெரியாமலேயே ஜாலியன்வாலா பாக்கில் பலியான ஆன்மாக்கள் சாந்தியடையவும் நாம் ஓர் அமைதி ஆலயத்தை எழுப்பி அந்தச் சம்பவத்தைக் கொண்டாட முடியாதா? இந்த உலகம் ராஜீயவாதிகளாலும், பித்தலாட்டக்காரர்களாலும் நிறைந்து கிடக்கிறது. அவர்கள், தேச பக்தியின் பெயரால் மனிதனின் இருதயத்தில் உள்ள இனிமையை விஷமாக்கிவிடுகிறார்கள். அதன் பலனாக யுத்தங்களும், தீராப் பகைகளும், ஜாலியன்வாலா பாக்கைக் கொலைக்களமாக்கியது போன்ற வெட்கக்கேடான படுகொலைகளும் ஏற்படுகின்றன. புத்தரும் ஏசுநாதரும் உபதேசித்தது போல, சர்வஜன அந்நியோந்நிய பாவமும் பரஸ்பரம் நல்லெண்ணமும் ஏற்படவும், உலகம் ஒன்றுபட்டு வளம்பெற்று

வாழவும் நாம் இப்போது முயற்சிக்க வேண்டாமா? ஸ்ரீ காந்தி, அத்தகைய ஓர் இயக்கத்தின் தூதராக இருக்கவேண்டும் என்பதே விதியின் கட்டளை என்று தோன்றியது. ஆனல், சந்தர்ப்பங்கள் அவரை, எதிர்ப்பு இயக்கங்களை ஆரம்பிப்பது, கோஷ்டி ஒற்றுமைக்குப் பாடுபடுவது போன்ற வழியை நாடும் படி வற்புறுத்தி வருகின்றன. இனியும்கூட அவர் உலகத்தையே ஐக்கியப் படுத்தும் மாபெரும் தொண்டைக் கைக்கொள்ளலாம்.''

என்னைப் பற்றிக் கூறப்பட்டுள்ள முழு விவரங்களையும் நான் அப்படியே கொடுத்திருக்கிறேன். சாதாரணமாக நான், என்னைப் பற்றியோ அல்லது எனது முறைகளைப் பற்றியோ எழும் கண்டனத்தைக் கவனிப்பதில்லை. ஆனல், நான் செய்த தவறை ஒப்புக் கொள்ளுவதாக இருந்தாலோ, அல்லது கண்டனத்திற்கு உள்ளான கொள்கைகளை மேலும் வற்புறுத்துவதாக இருந்தாலோ மாத்திரமே நான் அத்தகைய கண்டனத்தைக் கவனிப்பது வழக்கம். மேலே கண்ட குறிப்பை நான் கவனிப்பதற்கு இரட்டிப்புக் காரணம் இருக்கிறது. அதாவது, நான் அருமையாகக் கருதும் கொள்கைகளை மேற்கொண்டு தெளிவாக விளக்கலாம் என்று நான் நம்புவது மாத்திரமல்ல, அக்கண்டனத்தை எழுதிய ஆசிரியரிடம் எனக்குள்ள மதிப்பையும் நான் காட்ட விரும்புகிறேன். அந்த ஆசிரியரை நான் அறிவேன். அபூர்வமான அவரது ஒழுக்கத்தின் செம்மையை நான் பல ஆண்டுகளாக வியந்து வந்திருக்கிறேன்.

நான் ஒரு முனிவராக இருப்பேன் என்று அவர் எதிர்பார்த்தார்; ஆனல், என்னுள் ஒரு ராஜீயவாதியைப் பார்க்க அவர் வருந்துகிறார். எனது இந்த ஜன்மத்திற்கும் முனிவர்* என்ற

*'எங் இந்தியா'விலிருந்து கொடுக்கப்பட்டுள்ள கீழ்க்கண்ட வெவ்வேறு குறிப்புகள் காந்திஜியின் நிலைமையை மேலும் தெளிவுபடுத்துவதாக இருக்கின்றன:

''கடவுளின் தூதர்'—ஒரு பத்திரிகையிலிருந்து கத்தரிக்கப்பட்ட குறிப்பு ஒன்று எனக்குக் கிடைத்திருக்கிறது. நான் கடவுளின் ஒரு தூதர் என்று நம்பப்படுவதாக அதில் குறிப்பிட்டிருக்கிறது. கடவுளிடமிருந்து ஏதாவது விசேஷச் செய்தி எனக்குக் கிடைத்திருப்பதாக நான் உரிமை கொண்டாடுகிறேனு என்றும் அக்குறிப்பை எழுதியவர் கேட்டிருக்கிறார். நான் அமானுஷ்யமான அற்புதங்களைச் செய்வதாகக் கூறப்படுவதைப் பற்றி, ஏற்கனவே நான் பதில் கூறியிருக்கிறேன். நான் கடவுளின் தூதன் அல்ல என்பதுதான் கடைசியாக என்மீது சுமத்தப்பட்டுள்ள இந்தக் குற்றச் சாட்டுக்குப் பதிலாகும். நான், ஒவ்வொரு நல்ல ஹிந்துவையும் போல் இறைவனைப் பிரார்த்திக்கிறேன். நாம் மனிதனிடம் அஞ்சுவதைவிட்டு. கலப்பற்ற சத்தியத்தை மாத்திரமே நாடுவோமாயின், நாம் எல்லோரும் கடவுளின் தூதர்களாக முடியும் என்பதே எனது நம்பிக்கை. நான் கலப்பற்ற சத்தியத்தையே நாடுகிறேன் என்றும், மனிதனிடம் உள்ள பயம் எனக்கு அறவே ஒழிந்துவிட்டது என்றும் நம்புகிறேன். எனவே, ஒத்துழையாமை இயக்கத்திற்குக் கடவுளின் ஆதரவு இருக்கிறது என்று நான் உணருகிறேன். கடவுளின் சித்தம் எப்படி என்பது பற்றி எனக்கு விசேஷச் செய்தி எதுவும் கிடைத்ததில்லை. கடவுள் தினந்தோறும் ஒவ்வொரு மானிடருக்கும் தரிசனம் கொடுக்கிறார் என்பதே எனது உறுதியான நம்பிக்கை. ஆனல், சலனமற்ற அவரது நுண்ணிய குரலுக்கு நாம் செவி கொடுக்காமல் காதுகளை மூடிக்கொண்டு விடு

வார்த்தைக்கும் சம்பந்தம் இருக்கப் போவதில்லையென்றே நான் நினைக்கிறேன். 'முனிவர்' என்பது முற்றிலும் தெய்விகமான ஒரு வார்த்தையாகும். எனவே, கண்டவர் விஷயத்திலும் அதை அலட்சியமாக உபயோகப்படுத்திவிடக் கூடாது. அதிலும் பணிவுடன் சத்தியத்தை நாடிச் செல்லுபவன் என்று கூறிக்கொள்ளும் என் போன்ற ஒருவர் விஷயத்தில் அந்தச் சொல்லை உபயோகிக்கவே கூடாது. என் குறைகளை நான் அறிகிறேன். நான் தவறுகளும் செய்கிறேன். செய்த தவறுகளை ஒத்துக் கொள்ள

கிறோம். நம் முன்னுள்ள ஜோதி ஸ்தம்பத்தைப் பாராமல் நம் கண்களை மூடிக்கொண்டு விடுகிறோம். அவர் எப்போதும் எங்கும் வியாபித்திருப்பதை நான் உணருகிறேன். பத்திரிகையில் குறிப்பு எழுதியிருப்பவரும் அதை உணர்ந்துகொள்ள எவ்விதத் தடையுமில்லை. 'எங் இந்தியா' - 25—5—1921.

தெய்வ நிந்தை—ஓர் அன்பர் கீழ் வருமாறு எழுதுகிறார்:- "உங்களை ஸ்ரீ கிருஷ்ணனாகவும் மற்றத் தலைவர்களைப் பாண்டவர்களாகவும் சித்திரிக்கும் படங்கள் அடிக்கடி தென்படுகின்றன என்பதை உங்களுக்குக் கூற நான் மிகவும் வருந்துகிறேன். என்னைப் போன்ற பலரும் ஸ்ரீ கிருஷ்ணனை ஒரு மகாபுருஷராக மாத்திரமல்ல, கடவுளின் அவதாரமாகவே கருதுகிறோம். எனவே, அந்தப் படங்கள் எங்களுடைய மத உணர்ச்சிகளைப் புண்படுத்துவதாக இருக்கின்றன. ஆகையால், நீங்கள் உங்கள் செல்வாக்கை உபயோகித்து, அத்தகைய படங்கள் வெளியாவதைத் தடுக்கமாட்டீர்களா ?"

இந்தக் கடிதம் எழுதியிருப்பவருக்கு எனது பூரண அனுதாபம். நான் அந்தப் படங்களைப் பார்க்கவில்லை. ஆனால், என்னை ஸ்ரீ கிருஷ்ணனாகச் சித்திரிப்பது ஓர் அபசாரம், தெய்வ நிந்தை என்றே நான் கருதுகிறேன். ஒரு பெரிய இயக்கத்தில் உள்ள மற்றவர்களைப்போல் என்னையும் ஒரு தாழ்மையான தொண்டன் என்றே கூறிக்கொள்ளுகிறேன். இயக்கத்தின் தலைவர்களைக் கடவுளாக்குவதால், இயக்கம் பாதிக்கப்படுமேயன்றி முன்னேற்றம் அடைய முடியாது. ஓர் இயக்கம் மக்களால் நன்கு பரிசீலனை செய்யப்பட்டு, அதன் யோக்யதாம்சங்கள் காரணமாக அவர்கள் அதைப் பின்பற்றினால்தான், அது சிறந்த விதத்தில் வெற்றி பெற முடியும். முன்னேற்றம் அடைந்து வரும் சமுதாயத்தில், மனிதர்களை விட முறைகள்தான் உயர்ந்தவை. மனிதர்கள் முறைகளை நிறைவேற்ற வேலை செய்யும் குறைபாடுகள் உள்ள கருவிகளே யாவர். எனவே, அளவுக்கு மீறிப் போகாமல் நிதானமாக இருக்கும்படியும், அத்தகைய படங்களையெல்லாம் வாபஸ் செய்துகொள்ளும்படியும் பெருமுயற்சியுள்ள வர்த்தகர்களையும் உற்சாகவாதிகளையும் என் சக்திக்கு இயன்றவரையில் நான் வற்புறுத்துகிறேன். மேலே குறிப்பிட்டவை போன்ற படங்கள் எல்லாம் ஆழ்ந்த மத உணர்ச்சிகளைப் புண்படுத்துவனவாக இருக்கின்றன என்பதில் ஐயமில்லை.— 'எங் இந்தியா'— 13—7—1921.

எனது ஆசை—விடாக்கண்டராக இருக்கும் ஒருவர் சிம்லாவிலிருந்து எனக்குக் கடிதம் எழுதியுள்ளார். மதத்தின் ஓர் உட்பிரிவை ஸ்தாபிக்கவோ அல்லது தெய்வத் தன்மையுள்ளவன் என்று உரிமை கொண்டாடவோ நான் உத்தேசித்திருக்கிறேனா என்று அவர் என்னைக் கேட்டுள்ளார். அவருக்குத் தனியாகக் கடிதம் எழுதி அந்தக் கேள்விக்குப் பதில் அளித்திருந்தேன். ஆனால், வருங்கால சந்ததிகளுக்காக என் பதிலைப் பகிரங்கமாகப் பிரகடனப்படுத்த வேண்டும் என்று அவர் மீண்டும் எழுதியுள்ளார். தெய்வத் தன்மையில் எனக்கு எள்ளளவு உரிமையும் இல்லையென்று மிகக் கண்டிப்பான முறையில் மறுத்திருக்கிறேன். நான் இந்தியாவின், மானிட வர்க்கத்தின் ஒரு தாழ்மையான ஊழியன் என்றே சொல்லிக்கொள்ளுகிறேன். அத்தகைய ஊழியத்தைச் செய்த வண்ணம் நான் இறக்க வேண்டும் என்பதே என் விருப்ப

நான் ஒரு போதும் தயங்குவதில்லை. ஒரு விஞ்ஞானியைப் போல் நானும் வாழ்க்கையின் நிரந்தரமான சில உண்மைகளைப் பற்றிப் பரிசோதனைகள் செய்து கொண்டிருக்கிறேன் என்பதைப் பட்ட வர்த்தனமாக ஒப்புக்கொள்ளுகிறேன்.

ஆனால், என்னை நான் விஞ்ஞானி என்று கூறிக்கொள்ளவும் முடியாது. ஏனெனில், ஒரு விஞ்ஞானி அணுவளவும் பிழையின்றி உருவான ருசுவையோ, அல்லது தமது சோதனைகளின் திட்ட வட்டமான பலன்களையோ காட்ட முடியும். முனிவர் தன்மை எனக்கு இல்லை என்று கூறுவதன் மூலம், கண்டனவாதிகளுக்கு நான் ஏமாற்றம் ஏற்படும்படி செய்கிறேன். என்றாலும், எனது தீர்மானங்கள் ஒன்றின் விஷயத்தில் கூட என்னுள் இருக்கும் ராஜீயவாதி, ஆதிக்கம் செலுத்தியதில்லை. நான் அளிக்கும் இந்தப் பதில், அவரது வருத்தத்தை அகற்றிவிடும். நான் ராஜீய விஷயங்களில் பங்கு எடுத்துக் கொள்ளுவதாகத் தோன்றுகிற தெனில், அதற்கு ஒரே காரணம் ராஜீய விவகாரங்கள் பாம்பு போல் இன்று நம்மை வளைத்துச் சுற்றிக் கொண்டிருப்பதுதான். ஒருவர் எவ்வளவு முயற்சி செய்தாலும் அதிலிருந்து விடுதலை பெற முடியாது. எனவே, பாம்புடன் மற்போர் செய்ய நான் விரும்புகிறேன்.

1894-ஆம் ஆண்டிலிருந்து சற்றேக்குறைய வெற்றியுட னேயே அந்தப் போரை மனமறிந்து நடத்தி வருகிறேன். எனக்கு விவரம் தெரிந்ததிலிருந்து என்னை அறியாமலேயே அந்தப் போரை ஓரளவு வெற்றியுடன் நடத்தி வருகிறேன் என்பதை இப் போதுதான் நான் கண்டு பிடித்துள்ளேன்; என்னைச் சுற்றி உறுமிக் கொண்டும் சீறிக் கொண்டுமிருக்கும் ஒரு சூறாவளிக் கிடையே, முற்றிலும் சுயநல நோக்கத்துடன், நான் அமைதியாக வாழ விரும்புவதால், ராஜீய விஷயங்களில் மதத்தைப் புகுத்தி என்னுடனும் எனது நண்பர்களுடனும் பரிசோதனை செய்து வருகிறேன்.

மதம் என்று நான் கூறுவதன் பொருள் என்ன என்பதை விளக்குகிறேன். அது, எல்லா மதங்களையும் காட்டிலும் மிக உயர் வானதென்று நான் நிச்சயமாக மதிக்கும் ஹிந்து மதம் அல்ல.

மாகும். மதத்தில் ஓர் உட்பிரிவை ஸ்தாபிக்க வேண்டும் என்பது என் விருப்பமல்ல. என்னைச் சிலர் பின்பற்ற வேண்டும் என்பதற்காக ஓர் உட்பிரிவை ஸ்தாபிப்பது எனக்குத் திருப்தியைக் கொடுத்துவிடாது. ஏனெனில், நான் புதிய உண்மைகள் எதற்கும் பிரதிநிதியாக இல்லை. நான் அறிந்த சத்தியத்தின் பிரதிநிதியாக இருந்து, அதைப் பின்பற்றவே நான் முயற்சிக்கிறேன். பல பழைய உண்மைகளைப் புதிய ஒளி யில் காட்ட வேண்டும் என்பதே எனது ஆசை. என்னைக் கேள்வி கேட்டிருப்பவருக் கும், அவரைப் போன்ற மற்றவர்களுக்கும் இந்தப் பிரகடனம் திருப்தி அளிக்குமென்று நம்புகிறேன்.

— 'எங் இந்தியா' - 25—8—1921

அந்த மதம் ஹிந்து மதத்தைக் கடந்ததாகவும், ஒருவருடைய இயற்கை சுபாவத்தையே மாற்றுவதாகவும், ஒருவரை உள்ளே யிருக்கும் சத்தியத்துடன் இறுகக் கட்டுண்டு இருக்கும்படி செய் வதாகவும், எப்போதும் பரிசுத்தமாக்குவதாகவும் இருக்கிறது. அது தான் மனித இயற்கையின் நிரந்தரமான தத்துவமாகும். அது பூரண மலர்ச்சி பெற எத்தகைய மாபெரும் கஷ்ட நஷ்டங் களையும் பொருட்படுத்துவதில்லை. ஆன்மா தன்னைத்தானே அறிந்து கொள்ளும் வரையில், சிருஷ்டிகர்த்தாவை அறியும் வரையில், சிருஷ்டிகர்த்தாவுக்கும் தனக்கும் உள்ள உண்மை யான தொடர்பை நன்கு உணரும் வரையில், அந்தத் தத்துவம் ஆன்மாவை முற்றிலும் அமைதியிழந்து தவிக்கும்படி செய்து விடுகிறது.

அத்தகைய மத உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே நான் ஹர்த்தாலைக் கண்டு பிடித்தேன். இந்தியா தன்னைத்தானே அறிந்து கொள்வது கல்வியினால் அல்ல என்பதையும், கல்வியறிவு படித்தவர்களை ஒன்று சேர்த்துவிடுவதில்லை என்பதையும் காட்ட நான் விரும்பினேன். 1919 ஏப்ரல் 6-ஆம் தேதி ஏதோ மந்திர சக்தியினால் ஏற்பட்டது போல ஹர்த்தால் இந்தியா முழுவதும் ஒளி வீசியது. ஏப்ரல் 10-ஆம் தேதி நிகழ்ந்த முட்டுக்கட்டை ஏற்பட்டிராவிடில், இந்தியா கற்பனைக்கும் எட்டாத மகோன்னத நிலையை எட்டியிருக்கும். ஆனால், அதற்குள், தான் செய்த தவ றால் உறுத்தப்பட்ட மனச்சாட்சியை உடைய அரசாங்கத்தின் காதுகளில் சைத்தான் ஏதோ முணுமுணுத்துப் பீதியை உண்டு பண்ணிவிட்டது. அரசாங்கத்தினிடம் முற்றிலும் அவநம்பிக்கை கொண்ட மக்களின் கோபத்தையும் அது தூண்டிவிட்டது. ஏராளமான மக்கள் உண்மையான மத உணர்ச்சியுடன் ஹர்த் தாலைக் கைக்கொண்டனர். அது மாத்திரமல்ல. அந்த ஹர்த் தால் மேற்கொண்டு தொடர்ச்சியான நேர் நடவடிக்கைகளுக்கு ஒரு முதற்படியாக உத்தேசிக்கப்பட்டிருந்தது.

ஆனால், என்னுடைய முறைகளைக் கண்டிக்கும் மேலே குறிப் பிட்ட ஆட்சேபவாதி, நேர் நடவடிக்கையைக் குறித்து வருந்து கிறார். நேர் நடவடிக்கை ஒற்றுமைக்கு வழி செய்யாது என்று அவர் கூறுகிறார். ஆனால், என் கருத்து அவர் கூறுவதற்கு நேர் மாறாகும். இந்தப் பூமியில், நேர் நடவடிக்கையின்றி எதுவும் எக் காலத்திலும் செய்யப்பட்டதில்லை. ‘சாத்விக எதிர்ப்பு’ என்ற சொல்லை நான் நிராகரித்ததற்குக் காரணம் அது போதிய சக்தி வாய்ந்ததல்ல என்பதும், அதற்குப் பலவீனர்களின் ஆயுதம் என்று பொருள் கூறப்படுவதுமேயாகும்.

தென்னாப்பிரிக்காவில் நேரடி நடவடிக்கைதான் பலனைக் கொடுத்தது; உறுதியான பலனைக் கொடுத்தது. அது ஜெனரல் ஸ்மட்ஸைக் கூட மாற்றி, சித்த சுவாதீனத்தை அடையும்படி

செய்தது. 1906-இல் அவர் இந்தியர்களின் அபிலாஷைகளை ஈவிரக்கமின்றி எதிர்ப்பவராக இருந்தார். இந்தியர்களைப் பாதித்த சட்டத்தைச் சட்ட புத்தகத்திலிருந்து எக்காலத்திலும் அகற்ற முடியாது என்றும், டிரான்ஸ்வால் சட்டசபையில் இரண்டு தடவை நிறைவேறிய ஒரு சட்டம், ரத்து செய்யப்படுவதை தென்னுப்பிரிக்கா ஒரு போதும் சகித்துக்கொண்டிராது என்றும் 1909-இல் ஜெனரல் ஸ்மட்ஸ், லார்டு மார்லியிடம் கூறினுர். ஆனால், பின்னர் அந்த மானக்கேடான ஒரு சட்டத்தை 1914-இல் தென்னுப்பிரிக்க யூனியன் சட்ட புத்தகத்திலிருந்து ரத்து செய்ததன் மூலம் காலம் கடந்தாவது இந்தியர்களுக்கு நீதி வழங்குவதில் அவரே பெருமை கொண்டார். இன்னும் என்னவெனில், எட்டு வருட காலம் வரையில் நேரடிநடவடிக்கை நீடித்து வந்தும்கூட அதன் காரணமாக துவேஷமோ, மனக் கசப்போ ஏற்படவில்லை. அது மாத்திரமல்ல. ஜெனரல் ஸ்மட்ஸை* எதிர்த்து விடாப்பிடியாகப் போராடிய அதே இந்தியர்கள், 1915-இல் அவரது கொடியின் கீழ் அணி வகுத்து நின்று கிழக்கு ஆப்பிரிக்காவில் போராடினுர்கள். சம்பாரணிலும் நேரடி நடவடிக்கைதான் மக்களின் வெகு காலத்திய கஷ்டங்களைப் போக்கவல்லதாக இருந்தது.

ஒருவர் ஒரு கஷ்டத்தையோ அல்லது அசௌகரியத்தையோ தவிர்க்க முடியாமல் உள்ளூறக் குமுறிக்கொண்டிருப்பதாகவும், அந்தக் கஷ்டமோ அல்லது அசௌகரியமோ ஒழிவதே அவருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்குமென்றும் வைத்துக் கொள்ளுவோம். அந்நிலையில் அவர் பலவீனத்தினுல் சாதுவாகப் பணிந்திருப்பது, ஒற்றுமைக்கு வழி செய்வதாகாது. அந்தப் பலவீனத்தால் கசப்புடனும் கோபத்துடனும் இருந்து வருவார். அவரது கோபம் எல்லை கடந்து பீறிட்டெழும் சந்தர்ப்பமும் ஏற்படும். அத்தகைய

---

*ஜெனரல் ஸ்மட்ஸ் (1870—1950) தென்னுப்பிரிக்காவில் ராணுவ வீரராகவும் ராஜதந்திரியாகவும் திகழ்ந்தார். தென்னுப்பிரிக்காவிலே போயர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் 1899-ஆம் ஆண்டில் ஆரம்பமான யுத்தம் 1902 வரையில் நடந்தது. அந்தப் போரில் போயர்களின் தளபதியாக இருந்து பிரிட்டிஷாரை எதிர்த்த ஜெனரல் ஸ்மட்ஸ், பின்னர் பிரிட்டிஷாரின் நண்பரானுர். 1910-இல் தென்னுப்பிரிக்கா யூனியன் அரசாங்கம் ஏற்பட்ட போது, அதில் மந்திரி பதவி வகித்தார். முதலாவது மகாயுத்தத்தின் போது பிரிட்டிஷ் சாம்ராஜ்ய யுத்த மந்திரி சபையிலும் ஜெனரல் ஸ்மட்ஸ் பதவி வகித்தார். 1912-லிருந்து 1924 வரையில் அவர் தென்னுப்பிரிக்க பிரதம மந்திரியாக இருந்தார். 1939-லிருந்து 1948 வரையில் அவர் பிரதம மந்திரியாகவும், வெளிநாட்டு மந்திரியாகவும், யுத்த மந்திரியாகவும் இருந்தார். 1948-இல் ஜெனரல் ஸ்மட்ஸ் பொதுத் தேர்தலில் டாக்டர் மலானுக்குப் போட்டியாக நின்று தோல்வியுற்ருர். தென்னுப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளை எதிர்த்து காந்திஜி சத்தியாக்கிரகப் போராட்டத்தை ஆரம்பித்ததும், முதலில் காந்திஜியின் கோரிக்கைக்கு இணங்க முடியாதென்று பிடிவாதமாக மறுத்த ஜெனரல் ஸ்மட்ஸ், 1918 இல் பணிந்து இந்தியர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றியதும், காந்தி - ஸ்மட்ஸ் ஒப்பந்தமும் உலகப் புகழ் பெற்ற சம்பவங்களாகும்.

பலவீனமானவருடன் நான் உறவு வைத்துக் கொண்டு, நேரடியான, உறுதியான, ஆனால் அபாயமல்லாத நடவடிக்கை முறையை அவருக்கும் கற்பிப்பதன் மூலம், அவர் தம்மைப் பலசாலியென்றும், உடல் பலத்தை எதிர்த்து நிற்கும் சக்தி தமக்கு உண்டு என்றும் அவர் எண்ணும்படி செய்வேன். அவர் போராட்டத்திற்குத் தம்மை ஆயத்தப்படுத்திக் கொள்ளுவார். அவருக்குத் தம்மீது மீண்டும் நம்பிக்கை ஏற்பட்டு, தமது கஷ்டத்திற்குப் பரிகாரம் தம்மிடத்திலேயே இருக்கிறது என்பதை அவர் அறிந்துகொள்ளுவார். மனத்தில் வஞ்ச உணர்ச்சி கொள்ளுவதை விட்டுவிட்டு, தம்முடைய கஷ்டத்திற்குத் தாம் நாடும் பரிகாரத்தைப் பெறுவதுடன் திருப்தி அடைய அவர் கற்றுக் கொள்ளுவார்.

இவை போன்ற சிந்தனைகளை மனதிற் கொண்டே நான் ஜாலியன்வாலா பாக் சம்பந்தமான ஒரு ஞாபகச் சின்னம் பற்றி யோசனை கூறத் துணிந்துள்ளேன். ஆனால், 'ஈஸ்ட் அண்ட் வெஸ்ட்' பத்திரிகையில் குறிப்பிட்டுள்ள எழுத்தாளர், என் மனத்தில் ஒரு பொழுதும், ஒரு தடவை கூட எழாத ஒரு யோசனையை நான் கூறுவதாக என் மீது பழி சுமத்தியுள்ளார்; ஜாலியன்வாலா பாக்கில் சுட்ட சம்பவத்தின் ஞாபகார்த்தமாகக் கொண்டாட வேண்டுமென்று நான் விரும்புவதாக அவர் எண்ணுகிறார். துக்ககரமான அக்கொடிய செய்கையின் ஞாபகத்தை நீடிக்க வேண்டுமென்ற எண்ணம் என் மனத்தில் எள்ளளவும் இல்லை. நமக்கு நாமே எஜமானர்களாக வருமுன், அது போன்ற சோககரமான சம்பவம் அடிக்கடி நடைபெறுமென்று நான் கூறவும் துணிகிறேன். ஜாலியன்வாலா பாக்கில் மாண்ட நிரபராதிகளின் ஞாபகத்தைப் பொக்கிஷம் போல் போற்றுவதன் மூலம், அது போன்ற கொடுமையைத் தாங்க தேசத்தைத் தயார் செய்வேன்.

அங்கு மாண்டவர்களின் விதவைகளுக்கும், அனாதைக் குழந்தைகளுக்கும் உதவி அளித்துள்ளோம்; இன்னும் உதவி அளித்து வருகிறோம். நிரபராதிகள் சிந்திய உதிரத்தால் புனிதமாக்கப்பட்டுள்ள ஜாலியன்வாலா பாக் பூமியை நாம் வாங்கி, அவர்களுக்காக அங்கு தகுதியான ஒரு ஞாபகச் சின்னத்தை நிர்மாணிக்காவிடில், காரணம் என்ன என்பதை அறியாமலேயே மாண்ட ஆன்மாக்கள் சாந்தி அடையும்படி நாம் செய்ய முடியாது. அந்த ஞாபகச் சின்னம் வெறுக்கத்தக்க ஒரு செய்கையை ஞாபகப்படுத்துவதாக இருக்கக்கூடாது. அனாதைகளாகவும், நிராயுதபாணிகளாகவும் இருப்பதே சிறந்தது; கொடியவர்களாக இறப்பதைக் காட்டிலும் அந்தக் கொடியவர்களுக்குப் பலியாகி இறப்பதே சிறந்தது என்று தேசத்திற்கு உற்சாகமும் உத்வேகமும் அளிப்பதாக இருக்க வேண்டும். நிரபராதிகள் மாண்ட கோலத்தைக் கண்ட நாம், அவர்களுடைய ஞாபகம் நிரந்தரமாக இருக்கும்படி செய்ய நன்றி கெட்ட தனமாக மறுத்து விடவில்லை என்று எதிர்

கால சந்ததிகள் நினைக்க வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். ஸ்ரீமதி ஜின்னு, தம்மால் இயன்றதை ஞாபகச் சின்ன நிதிக்குக் கொடுத்து உதவிய போது, அவர் கூறியது முற்றிலும் உண்மை யாகும். அதாவது நாம், வாழ்வதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டாமா? அந்தக் காரணத்திற்கு ஞாபகச் சின்னம் வழி செய்யவல்லது என்றூர் ஸ்ரீமதி ஜின்னு. எந்த உணர்ச்சியுடன் ஞாபகச் சின்னம் நிர்மாணிக்கப்படுகிறதோ, அதுதான் அந்தச் சின்னத்தின் விசேஷத் தன்மையை நிர்ணயிப்பதாக இருக்கும்.

புத்தரும், ஏசுநாதரும் உபதேசித்த சர்வஜன அந்நியோந் நிய பாவம் என்பது என்ன? புத்தர், அஞ்சா நெஞ்சத்துடன் செயலில் இறங்கி, மமதை கொண்டிருந்த புரோகிதர்களை மண்டி யிட்டுப் பணியும்படி செய்தார். ஏசுநாதரோவெனில், எருசலேம் கோவிலில் இருந்த பணப்புரட்டர்களையெல்லாம் விரட்டிவிட்டு, வேஷதாரிகளும் மூடபக்தர்களும் ஆண்டவனின் சாபங்களுக்கு இலக்காகும்படி செய்தார். அவ்விருவரும் தீவிர நேரடி நடவடிக் கைகளையே கைக்கொண்டனர். புத்தரும் ஏசுநாதரும் குற்றம் புரிந்தவர்களைத் தண்டித்தார்கள் என்றூலும், அவர்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையும் தப்பெண்ணத்திற்கு இடமிராத பொறுமையையும் அன்பையுமே அடிப்படையாகக் கொண்டி ருந்ததென்பதையே காட்டியது.

அவர்கள் தங்களுடைய விரோதிக்கு எதிராக ஒரு விரலைக் கூடத் தூக்கமாட்டார்கள். அவர்கள் சத்தியத்திற்காகவே வாழ்ந்தார்கள். எனவே, அவர்கள் சத்தியத்தை விட்டுக்கொடுப் பதைக் காட்டிலும், தங்களையே மகிழ்ச்சியுடன் அர்ப்பணம் செய்து விடுவார்கள். புத்தருடைய அன்பின் மகத்துவத்தினுல் புரோகிதர்களைத் தம் வசப்படுத்த அவருக்கு முடிந்திராவிடில், அவர் அவர்களை எதிர்த்த வண்ணம் இறந்திருப்பார். ஏசுநாதர், வலிமை பொருந்திய ஒரு பெரும் சாம்ராஜ்யத்தையே எதிர்த்த வண்ணம் சிலுவையில் மங்காப் புகழுடன் மாண்டார். எனவே, இப்போது நான் சாத்விக எதிர்ப்பு முறைகளைக் கைக்கொள்ளு வேனுயின், என் முறைகளை ஆட்சேபித்துள்ளவர் குறிப்பிட்டுள்ள மாபெரும் போதகர்களின் அடிச்சுவடுகளையே நான் சாதாரணமா கவும் பணிவுடனும் பின்பற்றி வருகிறேன்.

அந்தக் குறிப்பை எழுதியவர் இறுதியில், நான் கோஷ்டி ஒற்றுமையை நாடுவதற்காக என்னைக் கோபித்துக் கொள்ளுவ துடன், உலக ஐக்கியத்தை ஏற்படுத்தும் பெரிய காரியத்தை நான் கைக்கொள்ள வேண்டுமென விரும்புகிறூர். அவரைக் காட் டிலும் நான் அதிக சர்வ தேசாபிமானி என்று ஒரு தடவை அவ ரிடம் நான் சொன்னேன். இன்றும் எனது உறுதியான நிலை அதுதான். கோஷ்டிகளிடையே ஒற்றுமை ஏற்படும்படி செய்தா லொழிய, நான் ஒரு காலத்திலும் உலகம் முழுவதையும் ஐக்கி

யப்படுத்த முடியாது. நமது அண்டை வீட்டுக்காரர்களின் முதுகின் மீது சவாரி செய்வதை விட்டுவிட்டு நாம் கீழே இறங்கி விட்டால், அதுவே நாம் உலகத்திற்குச் செய்யும் உதவியாகும் என்றும், நம்மிடமிருந்து மேற்கொண்டு எவ்வித உதவியுமின்றி உலகம் சிறப்புடன் இருக்கும் என்றும் டால்ஸ்டாய் ஒரு சமயம் கூறினர். நமது அண்டை வீட்டுக்காரர்களை வாட்டி வதைப்பதை விட்டுவிட்டு, அவர்களுக்கு உதவியும் தொண்டும் செய்வதை மாத்திரம் நாம் கைக்கொள்ளுவோமாயின், கோஷ்டி ஒற்றுமை வட்டத்தின் சுற்றளவு சரியான முறையில் வளர்ந்து கொண்டே சென்று உலகம் முழுவதையும் அந்த எல்லைக்குள் கொண்டு வந்துவிடும். ' கோஷ்டி ஒற்றுமையைக் காட்டிலும் அதிகமாக முயற்சிக்கவோ, அல்லது அம்முயற்சியில் வெற்றி பெறவோ எந்த மனிதருக்கும் உரிமையில்லை. 'யதா பிண்டே ததா பிரம்மாண்டே'* என்பது, பல யுகங்களுக்கு முன் பெயர் தெரியாத ஒரு ரிஷி கூறியபோது எவ்விதம் உண்மையோ அது போல் இன்றும் உண்மையாகும்.

'எங் இந்தியா' - 12—5—1920

# 28

# துன்பம் இன்றேல் விடுதலை இல்லை

துன்பத் தீயில் பரிசுத்தமாக்கப்படாமல் எந்த நாடும் உயர்ந்த நிலையை அடைந்ததில்லை. தன் குழந்தை உயிர் வாழ வேண்டும் என்பதற்காகத் தாய் துன்பத்திற்கு உள்ளாகிருள். கோதுமை வளருவதற்கு விதைத்த தானியம் அழிந்தே தீர வேண்டும். மரணத்திலிருந்து தான் ஜீவன் வருகிறது. எனவே துன்பத்திற்கு உள்ளாவதன் மூலம் பரிசுத்தமாக வேண்டும் என்ற இந்தச் சாசுவதமான சட்டத்தை நிறைவேற்ருமல், அடிமைத்தனத்திலிருந்து இந்தியா எழ முடியுமா ?

எனது ஆலோசகர்கள் கூறுவது சரியாயின், இந்தியா வேதனையின்றியே அதன் விதியை சாதித்துக் கொள்ள முடியும். அந்த ஆலோசனையாளர்களின் முக்கியமான கவலை என்னவெனில், 1919 ஏப்ரல் மாதம் நிகழ்ந்த சம்பவங்கள் மீண்டும் நடைபெறக் கூடாது என்பதுதான். அவர்கள் ஒத்துழையாமையைக் கண்டு அஞ்சுகின்றனர். ஏனெனில், அதனுல் பலர் கஷ்டநஷ்டங்களுக்கு உள்ளாக நேரும் அல்லவா?

---

* 'யதா பிண்டே ததா பிரம்மாண்டே ' என்ற சம்ஸ்கிருத வாக்கியத்திற்கு, ' அணு எப்படியோ, அப்படியே உலகமும் ' என்பது பொருள்.

ஹாம்ப்டன் அவ்விதம் வாதிக்க முற்பட்டிருந்தால், கப்பல் கட்டணம் செலுத்த அவர் மறுத்திருக்கமாட்டார்; வாட் டெய்லரும் புரட்சியில் ஈடுபட்டு மக்களுக்குத் தொண்டு புரிந்திருக்க முடியாது. எவ்வளவு கஷ்டநஷ்டங்களையும் துன்பத்தையும் அனுபவிக்க வேண்டியிருப்பினும், உரிமைக்காகத் தொடர்ந்து போராடிய மனிதர்களின் உதாரணங்கள் ஆங்கில, பிரஞ்சு சரித்திரங்களில் மலிந்து கிடக்கின்றன. பாமர மக்கள் தாங்கள் அறியாமலேயே துன்பத்திற்கு உள்ளாக வேண்டியிருக்குமே என்பதைக் குறித்து உரிமைக்காகப் போராடியவர்கள் தயங்கி நின்றுவிடவில்லை. எனவே, நம்முடைய சரித்திரத்தை மாத்திரம் வேறு விதமாக எழுத நாம் ஏன் எதிர்பார்க்க வேண்டும்? நான் விரும்பினால், நமக்கு முன் இருந்தவர்கள் செய்த தவறுகளிலிருந்து நாம் பாடம் கற்றுக் கொண்டு, தவறுகளைத் தவிர்ப்பதும், சிறந்த முறையில் அலுவல்களைச் செய்வதும் நமக்குச் சாத்தியமாகும். ஆனால், துன்பத்திற்கு உள்ளாகித் தீர வேண்டும் என்ற நியதியைப் புறக்கணிப்பது முடியாத காரியம். ஏனெனில், அது நாம் வாழ்வதற்கே இன்றியமையாத ஒரு நிபந்தனையாகும்.

நமது அலுவல்களைச் சிறந்த முறையில் செய்ய வேண்டுமானால், நம்மிடமிருந்து நம்மால் சாத்தியமாயின் பலாத்காரத்தைத் தவிர்க்க வேண்டும். அவ்விதம் தவிர்த்தால் தான் நாம் நமது முன்னேற்றத்தைத் துரிதப்படுத்துவதுடன், நாம் அனுபவிக்கும் துன்ப முறைகளில் அதிகப் பரிசுத்தத் தன்மையையும் புகுத்த முடியும். ஸின் பீன் கட்சியினர் (Sinn Feiners)* இன்று பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். அதுபோல் நாமும், தவறு செய்வோரை நம் விருப்பத்திற்கு இணங்கும்படி செய்வதற்காகப் பலாத்கார நடவடிக்கைகளைக் கைக்கொள்ளக் கூடாது. நாம் விரும்பினால் அவ்விதம் கைக்கொள்ளாமல் இருக்க முடியும். சென்ற வருடம் ஹர்த்தால் அனுஷ்டிக்கும்படி செய்வதற்காக, நம்மில் சிலர் நமது முறைகளைப் பின்பற்றும்படி பிறரை வற்புறுத்தினார்கள் அல்லவா? நாம் விரும்பினால், அவ்விதம் நாம் வற்புறுத்தாமலும் இருக்க முடியும் துன்பத்தை அனுபவிப்போர் தாங்கள் அனுபவிக்கும் துன்பத்தின் அளவைக் கொண்டே முன்னேற்றத்தை நிர்ணயிக்க வேண்டும். எவ்வளவு அதிகமான பரிசுத்த மனத்துடன் துன்பத்தை அனுபவிக்கிறார்களோ, அவ்வளவுக்கு முன்னேற்றமும் அதிகமாக

---

* ஸீன் பீன் (Sinn Fein) என்ற ஐரிஷ் சொல்லுக்கு 'நாங்களே' என்பது பொருள். அதாவது அயர்லாந்தை 'நாமே ஆட்சி புரிய வேண்டும்' என்பதே அதன் கருத்தாகும் ஸின் பீன் கட்சியினர் அயர்லாந்தில் அந்நிய ஆட்சியான பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்தும், குடியரசு ஆட்சி ஏற்பட வேண்டுமென்றும் பலாத்கார முறைகளைக் கைக்கொண்டு வந்தார்கள். அயர்லாந்து பிரிவினையையும் எதிர்த்து வந்தார்கள். 1937-இல் அயர்லாந்து குடியரசு பெறும் வரையில் ஸின் பீன் கட்சியும் இருந்து வந்தது.

இருக்கும். அதனால்தான் ஏசுநாதரின் தியாகம், துக்கத்தில் ஆழ்ந்துள்ள உலகத்துக்கு விடுதலை அளிக்கப் போதுமானதாக இருந்தது. முன்னேற்றப் பாதையில் சென்ற அவர், தம்மைச் சுற்றியுள்ளவர் எவ்வளவு துன்பம் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்பது பற்றிக் கவலைப்படவில்லை; அவர்கள் துன்பத்தை மனப் பூர்வமாக அனுபவித்தாலும் சரி, அல்லது வேண்டா வெறுப்பாக அனுபவித்தாலும் சரி, அதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. அது போலவே, ஹரிச்சந்திரன் பட்ட துன்பங்கள் சத்தியத்தின் ஆட்சியை மீண்டும் நிலைநிறுத்துவதற்குப் போதுமானவையாக இருந்தன. தாம் ராஜ்யத்தைத் துறப்பதால் தமது பிரஜைகள் தங்கள் விருப்பமின்றியே துன்பத்திற்கு உள்ளாக வேண்டியிருக்கும் என்பதை அவர் அறிந்துதான் இருக்க வேண்டும். எனினும், அதை அவர் பொருட்படுத்தவில்லை. ஏனெனில், அவர் சத்தியத்தைப் பின்பற்றுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியவில்லை.

•

நம்மால் ஆங்கிலேயர்கள் கொலையுண்டதையும், சொத்துக்கள் நாசமாக்கப்பட்டதையும் குறித்து நான் வருந்துவது போல், ஜாலியன்வாலா பாக் படுகொலை குறித்து நான் அவ்வளவு அதிகமாக வருந்தவில்லை என்று ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன். அமிருதசரஸில் நிகழ்ந்த பயங்கர சம்பவங்கள் பொது மக்களின் கவனத்தை ஆட்கொண்டுவிட்டதால், லாகூரில் நிகழ்ந்த மெதுவான, ஆனால் அதிக பயங்கரமான சம்பவங்கள் அவர்களுடைய கவனத்தைக் கவரவில்லை. லாகூரில் மெதுவான முறைகளின் மூலம் மக்களை ஆண்மையற்றவர்களாகச் செய்ய முயற்சி நடந்தது.

நாம் உன்னத நிலையை அடைவதற்கு முன், இன்னும் பலப் பல தடவை அத்தகைய கொடுமைகளுக்கு உட்பட்டுத் தீரவேண்டியிருக்கும். இறுதியில் அந்த முறைகள்தான், வலுவில் துன்பத்தை ஏற்றுக்கொள்ளவும், அதில் ஆனந்தத்தைக் காணவும் நமக்குக் கற்பிக்கும்.

லாகூர் மக்கள் கொடுமையான அவமதிப்புகளுக்கு உட்படுத்தப்பட்டார்கள். அத்தகைய அவமதிப்புகளுக்கு ஆளாகும்படி அவர்கள் யாதொரு தவறும் செய்யவே இல்லை என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். அவர்கள் ஒருபொழுதும் ஓர் ஆங்கிலேயருக்குக்கூடத் துன்பம் விளைவிக்கவில்லை. அவர்கள் யாதொரு சொத்துக்கும் நாசம் விளைவிக்கவில்லை. ஆனால், முரட்டுக் குணம் வாய்ந்த ஓர் ஆட்சியாளர், தாங்கள் தவித்துக்கொண்டிருக்கும் நுகத்தடியைத் தூக்கி எறிய முயற்சி செய்யும் மக்களின் மன உறுதியை நசுக்கிவிடத் தீர்மானித்தனர்.

இந்தக் கொடுமைகளுக்கெல்லாம் காரணம் எனது சத்தி யாக்கிரக போதனைதான் என்று என்னிடம் கூறுவார்களாயின், அதற்கு நான் அளிக்கும் பதில் இதுதான்: என் உடலில் மூச்சு உள்ள வரையில் நான் சத்தியாக்கிரகத்தை இன்னும் அதிக உத் வேகத்துடன் போதிப்பேன்; ஓட்வியரின் துடுக்குத்தனத்திற்கு அடுத்த தடவை சரியான பதில் அளிக்கும்படி நான் மக்களிடம் கூறுவேன். அதாவது, பலாத்காரமாக சாமான்கள் விற்கப்படும் என்ற மிரட்டல்களுக்குப் பயந்து கடைகளைத் திறக்கக்கூடாது; அந்தக் கொடுங்கோலன் என்ன கொடுமை வேண்டுமாயினும் செய்து கொள்ளட்டும் என விட்டுவிட வேண்டும்; அவன் தங்க ளுடைய பண்டங்கள் எல்லாவற்றையும் விற்றுக்கொள்ளட்டும்; ஆனால், வெல்ல முடியாத தங்களுடைய ஆன்மாவை மாத்திரம் அவன் விற்க அனுமதிக்கக்கூடாது என்றெல்லாம் மக்களிடம் கூறுவேன்.

பண்டைக் காலத்து ரிஷிகள், உள்ளே இருக்கும் ஆன்மா விடுதலை பெறவும், பயிற்சி பெற்றுள்ள தங்களுடைய உடல்களில், கொடுங்கோலர்கள் அவர்களுடைய கட்டளைகளுக்கு இணங்கும் படி செய்வதற்காக விளைவிக்கும் காயங்களைப் பொருட்படுத் தாமல் இருக்கவும், தங்களுடைய உடல்களை வருத்தி உணர்ச்சி யற்றுப் போகும்படி செய்தார்கள்.

இந்தியா புராதனமான தனது ஞானத்தை மீண்டும் உயிர்ப்பிக்க விரும்பினால், ஐரோப்பா செய்த தவறுகளைத் தவிர்க்க விரும்பினால், ஐரோப்பாவைக் கவர்ந்து கொண்ட சைத் தானின் ஸ்தானத்தில் கடவுளின் சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க விரும்பினால், இந்தியத் தாயின் புதல்வர்களையும் புதல்விகளை யும் நான் இவ்விதம் வற்புறுத்துவேன்: அழகான அடைமொழி களைக் கண்டும், நம்மைச் சூழ்ந்துள்ள மாயா ஜாலங்களைக் கண் டும், இந்தியா உள்ளாக நேரும் பயங்கரமான துன்பங்களைக் கண்டும் ஏமாந்துவிட வேண்டாம்; ஆனால், இன்று ஐரோப்பாவில் என்ன நிகழ்ந்து வருகிறது என்பதைப் பாருங்கள். அதிலிருந்து ஐரோப்பா துன்பங்களுக்கு உட்பட நேர்ந்தது போலவே, நாமும் துன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்; ஆனால், மற்றவர்களைத் துன்பத்திற்கு உள்ளாகும் படி செய்வதை அறிந்துகொள்ள வேண்டாம்.

ஜெர்மனி, ஐரோப்பா முழுவதும் ஆதிக்கம் செலுத்த விரும் பியது. நேச தேசங்களும் ஜெர்மனியை நசுக்கிவிட்டுத் தாங்கள் ஐரோப்பாவில் ஆதிக்கம் செலுத்த விரும்பின. ஜெர்மனி வீழ்ச்சியடைந்ததனால், ஐரோப்பாவின் நிலை சீர்பட்டுவிட வில்லை. ஜெர்மனி எவ்விதம் இருந்ததோ, அது வெற்றி பெற்றிருந் தால் எவ்விதம் இருக்குமோ, அது போலவே நேசதேசங்களும் மோசடி, கொடுமை, பேராசை, சுயநலம் முதலிய விபரீத

குணங்களுடன் திகழ்ந்து வருகின்றன. நேச தேசங்களின் மோசமான நடவடிக்கைகள் எல்லாம் கபட வேஷத்தினுல் மறைக்கப்பட்டிருக்கின்றன. ஜெர்மனி வெற்றிபெற்ருல், போலி வேஷம் எதுவுமின்றி வெளிப்படையாகவே மேற்கண்ட 'குணதிசயங்களை'க் காட்டியிருக்கும்!

சென்ற வருடம் போட்ட தவருன கணக்கைக் குறித்து நான் வருந்தினேன். அந்தக் கணக்கு, மக்கள் மீது சுமத்தப்பட்ட துன்பங்களைப் பற்றியதல்ல; ஆனல், சத்தியாக்கிரகப் பிரகடனத்தைப் போதிய அளவு அறிந்துகொள்ளாததால் மக்கள் செய்த தவறுகளையும், அவர்கள் ஈடுபட்ட பலாத்காரத்தையும் பற்றியதாகும்.

துன்பத்தை அனுபவிக்க வேண்டுமென்ற நியதி சம்பந்தப்பட்ட வரையில், ஒத்துழையாமையின் அர்த்தம் என்ன? நமது விருப்பத்துக்கு விரோதமாக நம்மை ஆட்சி புரியும் அரசாங்கத்திற்கு நாம் அளிக்கும் ஆதரவை வாபஸ் செய்துகொள்ளுவதால் ஏற்படும் நஷ்டங்களையும், அசௌகரியங்களையும் நாம் மனமுவந்து சகித்துக் கொள்ளவேண்டும். 'அநீதியான ஓர் அரசாங்கத்தின் கீழ் அதிகாரமும் செல்வமும் உடைமைகளாக இருப்பது குற்றம்; அத்தகைய அரசாங்கத்தின் கீழ் வறுமைதான் தருமமாகும்' என்று தோரோ என்ற அமெரிக்க ஞானி கூறியுள்ளார். ஓர் அரசாங்கம் மறைந்து, மற்ருேர் அரசாங்கம் ஏற்படும் இடைக் காலத்தில் நாம் தவறுகள் செய்யலாம். தவிர்த்திருக்கக்கூடிய துன்பங்களை மக்கள் அனுபவிக்கும்படி நேர்ந்திருக்கலாம். எனினும், இவையெல்லாம் தேசத்தின் அடிமைத்தனத்தைக் காட்டிலும் மேலானவை அல்லவா?

தவறு செய்வோர் தமது அக்கிரமத்தைத் தாம் உணர்ந்து தவறைத் திருத்திக்கொள்ளும் வரையில் நாம் காத்துக்கொண்டிருக்க மறுத்துவிட வேண்டும். நாமோ அல்லது பிறரோ துன்பப்பட நேரும் என்பதற்காக, அந்தத் தவறில் பங்கு எடுத்துக் கொள்ளுபவர்களாக இருக்கக்கூடாது. ஆனல், தவறு செய்வோருக்கு நாம் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ உதவியளிப்பதை நிறுத்திவிடுவதன் மூலம், நாம் தவறை எதிர்த்து நிற்க வேண்டும்.

ஒரு தந்தை அநீதி இழைத்தால், அந்த வீட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டியது அவரது குழந்தைகளின் கடமையாகும். ஒரு பள்ளிக்கூடத்தின் தலைமை உபாத்தியாயர் ஒழுங்கீனமான அடிப்படையில் பள்ளிக்கூடத்தை நடத்துவாராயின், மாணவர்கள் பள்ளிக்கூடத்தை விட்டுவிட வேண்டும். ஒரு நகர சபையின் தலைவர் லஞ்ச ஊழலைக் கைக்கொள்ளுவாராயின், அதன் அங்கத்தினர்கள் அச்சபையிலிருந்து விலகுவதன் மூலம்

தங்களுக்கும் லஞ்ச ஊழலுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையெனக் கைகழுவிவிட வேண்டும். அது போலவே, ஓர் அரசாங்கம் மகத்தான அநீதி இழைக்குமாயின், ஆட்சியாளரை அவரது கொடிய நடவடிக்கைகளிலிருந்து தடுப்பதற்குப் போதிய அளவில் பிரஜைகள் முற்றிலுமோ அல்லது ஓரளவோ அதனுடன் ஒத்துழைப்பை நிறுத்திவிட வேண்டும். இவ்விதம் நான் கற்பனை செய்துள்ள ஒவ்வோர் உதாரணத்திலும், மனம் அல்லது உடல் பற்றிய துன்ப அம்சம் இருக்கிறது. அத்தகைய துன்பமின்றி விடுதலை பெறுவது முடியாத காரியமாகும்.

—'எங் இந்தியா' - 16—6—1920

# 29

# ஒத்துழையாமையின் சக்தி

ஒத்துழையாமை* சம்பந்தமான பீதிக்கோ அல்லது ஆட்சேபணைக்கோ பதில் அளிப்பதற்குற்ற சிறந்த வழி என்னவெனில், ஒத்துழையாமைத் திட்டத்தை இன்னும் அதிக விவரமாக விளக்குவதுதான். ஒத்துழையாமைத் திட்டத்தை உருவாக்கியவர்கள் அதை உடனடியாக அமலுக்குக் கொண்டுவர உத்தேசிக்கிறார்கள் என்று ஆட்சேபவாதிகள் கற்பனை செய்துகொண்டுள்ளனர் என்று தோன்றுகிறது. உண்மை என்னவெனில், அத்திட்டத்தை உருவாக்கியவர்கள் திட்டவட்டமான, உறுதியான, முன்னேற்றகரமான நான்கு கட்டங்களை வகுத்துள்ளனர்.

பட்டங்களைத் துறப்பதும், கௌரவ உத்தியோகங்களை ராஜிநாமா செய்வதும்தான் முதலாவது கட்டமாகும். அம்முறைக்கு ஆதரவு கிடைக்காவிடில், அல்லது கிடைத்த ஆதரவு பலனளிக்கத்தக்க விதத்தில் இராவிடில், இரண்டாவது கட்டத்தைக் கைக்கொள்ள வேண்டும். அதிகமான முன்னேற்பாடுகள் செய்வதே

---

காந்திஜி, 1919-ஆம் ஆண்டு நவம்பர் 24-ஆம் தேதி டில்லியில் நடந்த அகில இந்திய கிலாபத் மகாநாட்டிற்குத் தலைமை வகித்துப் பேசியபோதுதான், தமது கொள்கையை விளக்க முதன்முதலாக ஒத்துழையாமை என்ற சொல்லை உபயோகித்தார். அதைக் குறித்து காந்திஜி கூறியதாவது : ''மௌலானா ஹஸரத் மோஹனி அவரது பிரசங்கத்தை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது, பலன் தரத்தக்க முறையில் அரசாங்கத்தை எதிர்ப்பது பற்றி அவர் குறிப்பிட்டார். பலவிதத்திலும் அரசாங்கத்துடன் ஒத்துழைத்து வரும் அவர் அவ்வாறு பேசுவது அர்த்தமற்றதாக எனக்குத் தோன்றியது. அரசாங்கத்தை எதிர்த்து ஆயுதம் எடுப்பது அசாத்தியமாயின் அல்லது விரும்பத் தக்கதல்லவாயின், அரசாங்கத்தை எதிர்ப்பதற்குற்ற உண்மையான ஒரே முறை அதனுடன் ஒத்துழைக்க மறுப்பதே என்று எனக்குத் தோன்றியது. அப்போதுதான் ஒத்துழையாமை என்ற வார்த்தை என் மனத்தில் உதயமாயிற்று. அதில் அடங்கி உள்ள பலவிதமான கருத்துக்களையும் அவ்வமயம் நான் தெளிவாக உணரவில்லை. எனவே. அம்மகாநாட்டில் அதைப் பற்றி விவரமாக விளக்க நான் முற்படவில்லை.''

இரண்டாவது கட்டமாகும். தம்மையும் தம்மை அண்டியிருப் போரையும் ஆதரிக்கும் சக்தி பெற்றிருந்தாலன்றி, அல்லது அந்தப் பளுவைக் கிலாபத் கமிட்டி ஏற்க முன்வந்தாலன்றி, ஒருவரைக்கூட பதவியை ராஜிநாமா செய்யும்படி கேட்க மாட் டார்கள். எல்லாப் பிரிவுகளையும் சேர்ந்த அரசாங்க ஊழியர்களும் உடனடியாக உத்தியோகங்களைத் துறந்துவிடவேண்டும் என்ப தில்லை. அரசாங்க உத்தியோகத்திலிருந்து விலகிக்கொள்ள வேண்டுமென ஓர் ஊழியர்கூட ஒருபோதும் வற்புறுத்தப்படமாட் டார். தனி நபர் ஸ்தாபனங்களைச் சேர்ந்த ஓர் ஊழியரைக்கூட அத்திட்டம் பாதிக்காது. ஏனெனில், இந்த இயக்கம் பிரிட்டிஷ் எதிர்ப்பு இயக்கம் அல்ல; அரசாங்க எதிர்ப்பு இயக்கம்கூட அல்ல. அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை வாபஸ் செய்து கொள்ள வேண்டும் என்பதே இயக்கத்தின் கருத்தாகும். ஏனெனில், மக்கள் ஒரு தவறுக்கு, வாக்குறுதி மீறப்படுவதற்கு, ஆழ்ந்த மத உணர்ச்சி புண்படுத்தப்படுவதற்கு உடந்தையாக இருக்கக்கூடாது. ஓர் அரசாங்க ஊழியர் விஷயத்தில் மித மிஞ்சிய செல்வாக்கை உபயோகித்தாலோ, அல்லது கிலாபத் கமிட்டி அங்கத்தினர்களில் எவராவது பலாத்காரத்தைக் கைக் கொண்டாலோ அல்லது பலாத்காரத்திற்கு இடம் கொடுத் தாலோ, இயக்கத்திற்கு முட்டுக்கட்டை ஏற்படுவது இயல்பே யாகும். போதிய அளவு ஆதரவு இருக்குமாயின், இரண்டாவது கட்டம் முற்றிலும் வெற்றியைக் கொடுக்கும். மக்கள் ஊழியம் செய்வதை நிறுத்திவிட்டால், எந்த அரசாங்கமும் உயிர் வாழ முடியாது; அதிலும் இந்திய அரசாங்கம் உயிர் வாழ முடியவே முடியாது. எனவே, போலீசும் ராணுவமும் ஒத்துழைப்பை வாபஸ் செய்துகொள்ளுவது, மூன்றாவது கட்டம்; அதாவது தூரத்தில் உள்ள ஒரு லட்சியமாகும்.

எனினும், ஒத்துழையாமைத் திட்டத்தை உருவாக்கியவர்கள் நேர்மையாகவும், கபடமின்றி வெளிப்படையாகவும், சந்தேகத் திற்கு இடம் கொடுக்காமலும் இருக்க விரும்பினார்கள். தாங்கள் உடனடியாகவோ அல்லது கண்ணுக்கு எட்டாத எதிர்காலத் திலோ கைக்கொள்ள உத்தேசிக்கும் ஒரு நடவடிக்கையைக்கூட, அரசாங்கத்திற்கோ அல்லது பொது மக்களுக்கோ தெரியாமல் ரகசியமாக வைத்துக்கொள்ள விரும்பவில்லை.

நான்காவது கட்டமான வரி கொடாமை, இன்னும் அதிக தூரத்தில் இருக்கிறது. பொதுவாக வரி செலுத்துவதை நிறுத்தி வைப்பது, மாபெரும் ஆபத்தான நடவடிக்கை என்பதை ஒத் துழையாமைத் திட்டத்தின் கர்த்தாக்கள் உணருகிறார்கள். அது ரோஷமுள்ள மக்களைப் போலீசாருடன் மோதிக்கொள்ளும்படி செய்யக்கூடும். எனவே, மக்கள் பலாத்காரத்தில் இறங்க மாட் டார்கள் என்ற உறுதி அவர்களுக்கு ஏற்பட்டாலன்றி, அவர்கள் அதைக் கைக்கொள்ள இடமில்லை.

ஒத்துழையாமையில் ஆபத்து இல்லாமலில்லை என்பதை நான் ஏற்கனவே ஒத்துக்கொண்டுள்ளேன்; இப்போதும் ஒத்துக்கொள்ளுகிறேன். ஆனல், முக்கியமான பிரச்னே எழுந்துள்ள சமயத்தில், ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவதால் ஏற்படக்கூடிய பலாத்காரமாகிற ஆபத்தைக் காட்டிலும், மந்த புத்தியும் சோம்பேறித்தனமும் அதிக ஆபத்தாகும். ஒன்றும் செய்யாமல் வாளாவிருப்பது, பலாத்காரத்தை நிச்சயமாக வரவேற்பதாகும்.

கிலாபத் இயக்கத்தில் நான் கலந்துகொள்ளுவதை எதிர்த்து நண்பர்கள் கூறும் ஒரு வாதம், பதில் சொல்லமுடியாமல் என்னைத் திணறும்படி செய்கிறது. ஆங்கிலேயர்களின் நண்பனும், பிரிட்டிஷ் அரசியலைப் புகழ்பவனுமான நான், இன்று ஆங்கிலேயர்களை அறவே வெறுப்பவர்களோடு நட்புக்கொள்ளுவது எனக்கு உகந்த செய்கை அல்ல என்று அவர்கள் கூறுகிருர்கள். இன்று சாதாரணமாக எந்த முஸ்லிமும் ஆங்கிலேயர்களிடம் அன்பு கொண்டிருக்கவில்லை. இந்த உண்மையை ஒத்துக்கொள்ள வேண்டியிருப்பது பற்றி நான் வருந்துகிறேன். அவர்கள் நேர்மையாக நடந்துகொள்ளவில்லை என்று முஸ்லிம்கள் கருதுகின்றனர். அதற்கு ஓரளவு காரணமும் இருக்கிறது. நான் ஆங்கிலேயர்களிடம் நட்புக்கொண்டிருக்கிறேன் எனில், என் தேச மக்களான முஸ்லிம்களிடம் எனக்கு உள்ள நட்பு அதைக் காட்டிலும் குறைவானதல்ல. எனவே, ஆங்கிலேயர்களைக் காட்டிலும் முஸ்லிம்களே, எனது கவனத்துக்கு அதிகமான உரிமை உள்ளவர்களாக இருக்கிருர்கள். எனினும், என்னுடைய சொந்த மதமானது, ஆங்கிலேயர்களுக்கோ அல்லது மற்றெவருக்கோ தீங்கு செய்யாமல் என் தேச மக்களுக்குத் தொண்டு புரியும் ஆற்றலை எனக்கு அளிக்கிறது. என்னுடன் பிறந்த ரத்த சகோதரர் விஷயத்தில் நான் செய்யத் தயாராக இராத ஒரு காரியத்தை, ஓர் ஆங்கிலேயருக்கு நான் செய்யமாட்டேன். அவசியமாகிவிட்டபோது என் சொந்த சகோதரருடன் (அவர் இப்போது காலமாகிவிட்டார்) நான் ஒத்துழைக்க மறுத்துவிட்டேன். அதுபோலவே, அவசியம் நேர்ந்தால் ஓர் ஆங்கிலேயருடன் ஒத்துழைக்கவும் நான் மறுத்துவிடுவேன்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் செய்யும் தவறில் நான் பங்கு எடுத்துக்கொள்ள மறுப்பதன் மூலம், அதற்குத் தொண்டு செய்பவன் ஆகிறேன். போயர் யுத்தத்தின் போது பிரிட்டிஷார் அடைந்த தோல்விகளுக்காக வில்லியம் ஸ்டெட்* பகிரங்கமாகப் பிரார்த்த

* வில்லியம் தாமஸ் ஸ்டெட் (1849-1912) புகழ் பெற்ற பிரிட்டிஷ் பத்திரிகாசிரியர். அவர் 1890 - இல் 'ரெவ்யூ ஆப் ரெவ்யூஸ்' (Review of Reviews) என்ற பிரபல பத்திரிகையை ஸ்தாபித்தார். துன்மார்க்க நடவடிக்கைகளைக் கண்டித்து எழுதியதற்காக, அவர் பிரிட்டிஷ் அரசாங்கத்திஞல் சிறைப்படவும் நேர்ந்தது. அவர் தமது ஆயுட்

னைகள் நடத்தினர். நேர்மையற்ற, அநீதியான போரில் தமது நாடு ஈடுபட்டிருக்கிறது என்று அவர் கருதியதே அதற்குக் காரணம். அந்த யுத்தத்தை எதிர்ப்பதில் தமது உயிருக்கு அபாயம் ஏற்படுவதைக்கூட தற்போதைய பிரிட்டிஷ் பிரதம மந்திரி லட்சியம் செய்யவில்லை. அந்தப் போரை நடத்திய தம்முடைய சொந்த அரசாங்கத்தையே தடுத்து நிறுத்தத் தம்மால் என்ன செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்தார்.

பெரும்பாலான முஸ்லிம்களும் பிரிட்டிஷாருடன் நட்பு உணர்ச்சி கொள்ளாதிருக்கும்போது, நான் முஸ்லிம்களின் கஷ்ட நஷ்டங்களில் பங்கு எடுத்துக்கொள்ளுகிறேன் எனில், அதற்குப் பட்டவர்த்தனமான காரணம், நான் பிரிட்டிஷாரின் ஒரு நண்பன் என்பதே. பிரிட்டிஷாரிடமிருந்து நீதி பெறவேண்டும் என்பதும், யோக்கியப் பொறுப்பான உறுதியும் துன்பமும் சேர்ந்தால், அதை உணர்ந்து ஆவன செய்யும் ஆற்றல் பிரிட்டிஷ் அரசியலுக்கு உண்டு என்பதைக் காட்ட வேண்டும் என்பதுமே என் நோக்கமாகும். முஸ்லிம்களுடன் நான் வைத்துக்கொண்டுள்ள உறவின் மூலம் மூன்று விதமான பலனை அடைய முடியுமென நம்புகிறேன்: 1. கஷ்டமான நிலைமையை எதிர்த்து நின்று சத்தியாக்கிரக முறையின் மூலம் நீதி பெறுவது; 2. மற்ற எல்லா முறைகளையும் காட்டிலும் அதுதான் அதிக சக்தி வாய்ந்தது என்பதைக் காட்டுவது; 3. ஹிந்துக்களுக்கு முஸ்லிம்களின் நட்பும், அதன் மூலம் உள்நாட்டு அமைதியும் ஏற்படும்படி செய்வது; 4. பிரிட்டிஷாரிடமும் அவர்களுடைய தேசத்தினிடமும் உள்ள வெறுப்பை அன்பாக மாற்றுவது.

ஒத்துழையாமையைக் கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றுவதோ அல்லது கட்டுரைகள் எழுதுவதோ எளிதாகும். ஆனால், தவறிழைக்கப்பட்டதால் மிகவும் ஆத்திரமடைந்த ஜனங்களின் கோபாவேசத்தை அடக்குவது எளிதான காரியமல்ல. ஒத்துழையாமையை எதிர்த்துப் பேசுவோரையோ அல்லது வேலை செய்வோரையோ, தங்களுடைய ஆசனங்களிலிருந்து கீழே இறங்கி மக்களிடம் போய், அவர்களுடைய உணர்ச்சிகளை அறிந்துகொள்ளும்படியும், பின்னர் அத்தகைய எதிர்ப்பாளர்களுடைய உள்ளம் இடம் கொடுக்குமாயின், ஒத்துழையாமையை எதிர்த்து எழுதும்படியும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பலாத்காரத்தைத் தவிர்ப்பதற்கான ஒரே வழி, குறைகளுக்குப் பரிகாரம் கிடைக்கும்படி வற்புறுத்தும் அளவுக்குத் தங்கள்

---

காலத்தில் பல்வேறு பிரச்னைகளையும் அலசி ஆராய்ந்து உலகப் புகழ்பெற்றார். 1922-இல் கானடாவிற்குத் தெற்கே அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் ‘டிடானிக்’ கப்பல் மூழ்கிய செய்தி உலகம் முழுவதையும் அதிர்ச்சியடையச் செய்தது. அப்போது கடலில் மூழ்கிய 1517 பேர்களில் வில்லியம் தாமஸ் ஸ்டெட்டும் ஒருவர்.

உணர்ச்சிகளை மக்கள் வெளியிடுவதற்கு வாய்ப்பு அளிப்பது தான் என்பதை நான் கண்டதுபோல் அவர்களும் காண்பார் கள். ஒத்துழையாமையைத் தவிர வேறு எதுவும் அவ்வித வாய்ப்பு அளிக்காது என்பதை நான் கண்டுள்ளேன். அது பகுத் தறிவிற்கு உடன்பாடானது, அபாயமற்றது. தமக்குச் செவி சாய்க்காத ஓர் அரசாங்கத்துக்கு உதவி புரிய மறுத்துவிட ஒரு பிரஜைக்கு இயற்கையான உரிமை உண்டு.

மக்களின் உணர்ச்சி உண்மையாகவும், எவ்வளவு அதிக பட்சமான கஷ்டத்தையும் மக்கள் அனுபவிக்கும்படி செய்யும் அளவுக்குப் பலமாகவும் இருந்தால்தான், ஒத்துழையாமை நிர்ப்பந்தமல்லாத, மனமுவந்த ஓர் இயக்கம் என்ற முறையில் வெற்றி பெற முடியும். முஸ்லிம்களின் மத உணர்ச்சி மிகவும் அதிகமாகப் புண்படுத்தப்படுமாயின், ஹிந்துக்கள், முஸ்லிம் சகோதரர்களிடம் நட்பும் அன்பும் கொண்டிருப்பார்களாயின், அவ்விரு சாராரும் தங்களுடைய லட்சியத்தை அடைய எவ் வளவு பெரிய தியாகத்தையும் பொருட்படுத்த மாட்டார்கள். எனவே, ஒத்துழையாமை சிறந்த ஒரு பரிகார முறையாக மாத் திரம் இராது; முஸ்லிம், ஹிந்துக்களின் அந்தரங்க சுத்தியைச் சோதிப்பதற்குற்ற ஒரு சிறந்த வழியாகவும் இருக்கும்.

—'எங் இந்தியா' 5—5—1920

# 30

# ஒத்துழையாமைக் கமிட்டி அறிக்கை

பொது மக்களின் தகவலுக்காகவும், அவர்களுக்கு வழி காட்டுவதற்காகவும் ஒத்துழையாமைக் கமிட்டி கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறது:

ஒத்துழையாமைக் கமிட்டி எதிர்பார்ப்பது என்ன? ஒத் துழையாமையை ஆரம்பிக்க அது கைக்கொள்ளும் முறைகள் யாவை? இவ்விஷயங்களையொட்டி கமிட்டியிடம் பல கேள்வி கள் கேட்கப்படுகின்றன.

தங்கள் சிபாரிசுகளுக்கு ஒவ்வொருவரும் செவி சாய்க்க வேண்டுமென்று கமிட்டி எதிர்பார்க்கிறது. மிகவும் பலவீன மானவர்களையும் தங்களைப் பின்பற்றும்படி செய்ய வேண்டும் என்பதே கமிட்டியின் விருப்பம். ஒத்துழையாமை முறை சம்பந்த மாக, தேசம் முழுவதும் உள்ளவர்களின் தீவிர ஒத்துழைப்பைப் பெறுவிடினும், செயலற்ற அனுதாபத்தையாவது பெறவே கமிட்டி விரும்புகிறது.

எனவே, உடல் சம்பந்தமான தியாகத்தைச் செய்ய முடியாதவர்கள், நிதிக்குத் தொகை கொடுத்தோ அல்லது இயக்கத்திற்கு ஊழியம் செய்தோ உதவி புரியலாம்.

ஒத்துழையாமை அவசியமாகிவிடுமாயின், கமிட்டி முதல் கட்டமாக கீழ்க்கண்ட முறைகளைக் தீர்மானித்திருக்கிறது:

1. கௌரவப் பட்டங்கள், கௌரவப் பதவிகள் யாவற்றையும் துறந்துவிட வேண்டும்.

2. அரசாங்கம் வசூலிக்கும் கடன்களில் பங்கு எடுத்துக்கொள்ளக் கூடாது.

3. வக்கீல்கள் தங்கள் தொழில்களை நிறுத்திவைப்பதுடன், எல்லா சிவில் தகராறுகளையும் தனி நபர் மத்தியஸ்தத்தின் மூலம் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

4. பெற்றோர்கள், அரசாங்கப் பள்ளிக்கூடங்களைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும்.

5. சீர்திருத்தப்பட்ட சட்டசபைகளைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும்.

6. அரசாங்க விருந்துகள் முதலிய மற்ற வைபவங்களில் கலந்து கொள்ளக்கூடாது.

7. மெஸொபொடேமியாவில் சிவில் அல்லது ராணுவப் பதவி எதையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட வேண்டும். ராணுவப் பிரிவுகளில் சேர, முக்கியமாக பிரிட்டன் அளித்த வாக்குறுதியை மீறி நிர்வாகம் நடந்து வரும் துருக்கிப் பிரதேசங்களில் ராணுவத்தில் ஊழியம் செய்ய மறுத்துவிட வேண்டும்.

8. சுதேசிக் கொள்கையைத் தீவிரமாக நிறைவேற்ற வேண்டும். தேச சம்பந்தமாகவும், மத சம்பந்தமாகவும் விழிப்பு ஏற்பட்டுள்ள இச்சமயத்தில், தங்கள் சொந்த தேசத்தில் உற்பத்தியாகும் சாதனங்களைக்கொண்டு திருப்தியடைவதன் மூலம், நாட்டிற்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமையை நன்கு உணரும்படி மக்களைத் தூண்டவேண்டும்.

ஆகஸ்டு மாதம் 1-ஆம் தேதி வரையில் காத்திராமல், சுதேசி இயக்கம் தீவிரமாக முன்னேற்றம் அடையும்படி செய்ய வேண்டும். அது நிரந்தரமான ஓர் ஒழுக்க விதியாகும். ஒப்பந்தம் ஏற்படும்போதுகூட, அந்த விதிக்குத் தடை உண்டாக்கக் கூடாது.

அரசாங்கத்திற்குப் பிடிகொடாமல் இருப்பதற்காக, மக்கள் சிவில் அல்லது ராணுவ உத்தியோகம் எதையும் இப்போதே ஏற்றுக்கொள்ளாமல் இருந்துவிட வேண்டும். அவர்கள் அரசாங்கத்தின் புதிய அல்லது பழைய கடன் பத்திரங்கள் வாங்குவதையும் நிறுத்திவிட வேண்டும்.

மற்றப்படி, அடுத்த ஆகஸ்டு மாதம் 1-ஆம் தேதிக்கு முன் ஒத்துழையாமை ஆரம்பமாகாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

எல்லோராலும் கண்டிக்கப்பட்டுள்ள ஓர் உடன்படிக்கையை மாற்றுவதற்காக, பிரிட்டிஷ் மந்திரிகளை வற்புறுத்துவதன் மூலம் அரசாங்கத்துடன் கடுமையான தகராறு ஏற்படுவதைத் தவிர்க்க சகல முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன; இன்னும் எடுத்துக்கொள்ளப்படும்.

தங்களுடைய பொறுப்பையும் லட்சியத்தின் முக்கியத்தையும் உணருவோர், தனித்த முறையில் நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ள மாட்டார்கள்; கமிட்டியுடன் கலந்தாலோசித்தே எதுவும் செய்வார்கள். வெற்றி, முற்றிலும் ஒழுங்கான, கட்டுக்கோப்பான ஒத்துழையாமையையே பொறுத்திருக்கிறது. ஒத்துழையாமையோ, கட்டளைகளுக்குக் கண்டிப்பாகக் கீழ்ப்படிதல், சாந்தம், பலாத்காரத்தை முற்றிலும் தவிர்த்தல் முதலியவற்றையே பொறுத்திருக்கிறது.

—'எங் இந்தியா' 7—7—1920

# 31

# அவல வாழ்விற்காக ஆன்மாவை விற்பதா ?

அலகாபாத்தில் நடந்த கிலாபத் மகாநாட்டில் டாக்டர் சாப்ரூ ஆவேசத்துடன் மனத்தை உருக்கும் வண்ணம் பேசினார். முஸ்லிம்களுக்கு ஏற்பட்டுள்ள கஷ்டத்தைக் குறித்து அவர் தமது அனுதாபத்தைத் தெரிவித்தார். எனினும், அவர்கள் ஒத்துழையாமையைக் கைக்கொள்ளக்கூடாதென்று ஆலோசனை கூறினார். அதற்குப் பிரதியாக என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவது என்பது பற்றித் தம்மால் எவ்வித யோசனையும் கூறமுடியவில்லை என்பதைப் பட்டவர்த்தனமாகக் குறிப்பிட்டார். எனினும், அதற்குப் பிரதியாக வேறு முறை இருந்தாலும் சரி, இராவிட்டாலும் சரி, ஒத்துழையாமை, எந்த நோய்க்குப் பரிகாரமாகக் கைக்கொள்ளுகிறோமோ அந்த நோயைக் காட்டிலும் மோசமானது என்பதே தமது ஆணித்தரமான அபிப்பிராயம் என்றார். டாக்டர் சாப்ரூ மேலும் பேசுகையில், தங்களுடன் சேர்ந்துகொள்ளும்படி முஸ்லிம்கள் அறியாமையில் ஆழ்ந்துள்ள மக்களைக் கேட்டுக் கொள்ளலாமெனினும், தங்கள் பதவிகளை ராஜினாமா செய்து விடும்படி அவர்கள் இந்திய நீதிபதிகளைக் கேட்டுக் கொள்ள முடியாதென்றும், அப்படியே கேட்டுக்

கொண்டாலும் அதில் அவர்கள் வெற்றி பெற முடியாதென்றும், முஸ்லிம்கள் அவ்வாறு கேட்டுக் கொள்ளுவார்களாயின், அவர்கள் தங்கள் மீது பெரும் பொறுப்பைச் சுமத்திக் கொண்டவர்களாவர் என்றும் குறிப்பிட்டார்.

டாக்டர் சாப்ருவின் இறுதியான வாதத்தில் உள்ள பலத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அறியாமையில் ஆழ்ந்துள்ள மக்கள் ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவதால் துன்பமும் குழப்பமும் நேருமேயன்றி, யாதொரு நன்மையும் ஏற்படாது என்ற பயம் டாக்டர் சாப்ருவின் மனத்திற்குள் இருந்து வருகிறது. ஒத்துழையாமை எத்தகையதாயிருப்பினும், அதனால் சிறிது நன்மையாவது ஏற்பட்டே தீரும் என்பது எனது அபிப்பிராயமாகும்.

வைஸ்ராய் மாளிகையில் உள்ள வாயில் காவலர்கூட, 'ஐயா, இனிமேல் இந்த அரசாங்கத்திற்கு என்னால் ஊழியம் செய்ய முடியாது. ஏனெனில், அது எனது தேசீய கௌரவத்திற்குக் குந்தகம் விளைவித்திருக்கிறது' என்று கூறி விட்டு, தமது வேலையை ராஜிநாமா செய்வது, அரசாங்கத்தின் அநீதியைக் கண்டித்துச் செய்யப்படும் மகத்தான பிரசங்கத்தைக் காட்டிலும் அதிக பலன் தரத்தக்க, அதிக சக்தி வாய்ந்த ஒரு முறையாகும்.

எனினும், நாட்டில் எல்லோரையும் காட்டிலும் உச்ச ஸ்தானத்தில் இருப்பவரை வேண்டிக்கொள்ளுவதற்கு முன், வாயிற் காவலரைக் கேட்டுக் கொள்ளுவது தவறாகும். அவசியம் ஏற்படுமாயின், ஓர் அநீதியான அரசாங்கத்துடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாமென அரசாங்கத்தின் வாயிற் காப்போரைக் கேட்டுக் கொள்ள உத்தேசித்திருக்கிறேன். இந்தியாவிற்கு இழைக்கப்பட்ட இரண்டு குற்றங்களான கிலாபத், பஞ்சாப் பிரச்னைகளையொட்டி இந்தியா முழுவதும் கண்டனம் எழுந்து வருகிறது. அந்தக் கண்டனத்தில் கலந்துகொள்ளும்படி நீதிபதிகளுக்கும் நிர்வாக மந்திரி சபையினருக்கும் இப்போது நான் ஒரு வேண்டுகோள் விடுக்க உத்தேசித்துள்ளேன். அந்த இரண்டு பிரச்னைகளாலும் நமது தேசீய கௌரவம் பாதிக்கப்பட்டிருக்கிறது.

இந்தக் கனவான்கள், ஊதியத்திற்காக அந்த உயர் பதவிகளை ஏற்றுக் கொள்ளவில்லை என்றே எண்ணுகிறேன்; புகழுக்காகவும் அப்பதவிகளை ஏற்றுக் கொள்ள வில்லை என்று நம்புகிறேன். ஆனால், நாட்டுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்பதற்காகவே அப்பதவிகளில் ஈடுபட்டார்கள். அவர்கள் பணத்திற்காக அப்பதவிகளை ஏற்றுக்கொள்ளவில்லை. ஏனெனில், அவர்கள் இப்போதைக் காட்டிலும் அதிகமாகவே சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். புகழுக்காகவும் அவர்கள் பதவிகளை ஏற்

றுக் கொண்டிருக்க முடியாது. ஏனெனில், தேசீய கௌரவத்தை விலையாகக் கொடுத்து புகழை வாங்க முடியாது. எனவே, அவர்கள் தற்போது பதவிகளில் இருக்கும்படி செய்வது, தேசத்திற்குத் தொண்டு செய்யும் எண்ணமாக மாத்திரமே இருக்க வேண்டும்.

அரசாங்கத்தினிடம் மக்களுக்கு நம்பிக்கை இருக்கும் பொழுது, அரசாங்கம் மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிக்கும் போது, நீதிபதிகளும் நிர்வாக அதிகாரிகளும் ஒருவேளை தேசத்திற்குத் தொண்டு புரியலாம். ஆனால், அரசாங்கம் மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிக்காவிடில், அது அயோக்கியத்தனத்தையும் பயங்கர ஆட்சியையும் ஆதரிக்கும்போது, நீதிபதிகளும் நிர்வாக அதிகாரிகளும் பதவிகளை வைத்துக் கொண்டிருப்பதன் மூலம், அந்த அயோக்கியத்தனத்திற்கும் பயங்கர ஆட்சிமுறைக்கும் கருவிகளாகிவிடுகிறார்கள். எனவே, அந்நிலையில் உயர் பதவிகளில் இருப்பவர்களான அவர்கள், குறைந்த பட்சம் செய்யக்கூடியது என்னவெனில், அயோக்கியத்தனமான, பயங்கர ஆட்சி புரியும் அரசாங்கத்தின் கருவிகளாகிவிடாமல் இருப்பதேயாகும்.

நீதிபதிகள் விஷயத்தில், அவர்கள் ராஜீய விஷயங்களுக்கு அப்பாற்பட்டவர்கள் என்ற ஆட்சேபணை எழுப்பப்படலாம். அவர்கள் ராஜீய விஷயங்களுக்கு அப்பாற்பட்டவர்கள் தான்; அவர்கள் அப்படித்தான் இருக்கவும் வேண்டும். ஆனால், மொத்தத்தில் மக்களின்நலனுக்காக இருக்கும், குறைந்த பட்சம் பெரும்பாலானவர்களின் விருப்பத்தைப் பிரதிபலிக்கும் அரசாங்கத்தின் விஷயத்தில் மாத்திரம்தான் அந்தச் சித்தாந்தம் உண்மையாகும். ராஜீய விஷயங்களில் பங்கெடுத்துக் கொள்ளுவதில்லை என்றால், எந்தக் கட்சியிலும் சேருவதில்லை என்றே பொருளாகும். ஆனால், நாடு முழுவதும் ஒரே மனத்துடனும், ஒரே விருப்பத்துடனும் இருக்கும் போது, நாடு முழுவதற்கும் நீதி மறுக்கப்படும் போது, அது கட்சி அரசியல் சம்பந்தமான பிரச்னையல்ல; அது வாழ்வதா, வீழ்வதா என்ற பிரச்னையாகி விடுகிறது. அப்போது ஒழுங்கீனமாக நடந்து கொள்ளும், தேச மக்களின் அபிலாஷையைத் துச்சமாக மதிக்கும் ஓர் அரசாங்கத்திற்குத் தொண்டு புரிய மறுப்பது ஒவ்வொரு பிரஜையின் கடமையாகி விடுகிறது. நீதிபதிகள், இறுதியாக நாட்டில் ஊழியர்களாக இருப்பதாயின், அவர்கள் தற்போது தேசத்தைப் பின்பற்றக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இப்போது பரிசீலனை செய்ய வேண்டிய மற்றொரு வாதமும் பாக்கியிருக்கிறது. அது, நீதிபதிகள், நிர்வாக சபை அங்கத்தினர்களான மந்திரிகள் ஆகிய இரு சாராருக்கும் பொருந்தும். எனது வேண்டுகோள், இந்திய நீதிபதிகளுக்கும் இந்திய மந்திரி

களுக்கும் மாத்திரமே விடுக்கப்பட்டதாக இருக்க முடியும் என்று கூறலாம். தேசத்திற்காக மிகவும் கஷ்டப்பட்டு பெற்றுள்ள பதவி களைத் துறப்பதால், இந்தியர்களுக்கு என்ன நன்மை ஏற்படக் கூடும் என்றும் கேட்கப்படலாம். இந்தியர்களைப் போல், ஆங்கி லேயர்களையும், பலன் கிடைக்கத்தக்க முறையில் நான் வேண் டிக் கொள்ளுவது சாத்தியமாக இருக்க வேண்டும் என்பதே என் விருப்பமாகும். ஆனால், எனது வேண்டுகோள் இந்தியர் களுக்கு மாத்திரமே விடுக்கப்பட்டுளது என்ற அந்தரங்க எண் ணத்துடனேயே நான் எழுதியிருக்கிறேன் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்.

எனவே, இப்போது கூறப்பட்டுள்ள வாதத்தை நான் பரி சீலனை செய்தாக வேண்டும். நீண்டகாலப் போராட்டத்திற்குப் பிறகே இந்தியர்கள் இந்தப் பதவிகளைப் பெற முடிந்தது என்பது உண்மையே. போராட்டம் செய்து பெற்றோம் என்பதற்காக அவை உபயோகிக்கப்படவில்லை; ஆனால், அப்பதவிகளின் மூலம் தேசத்திற்குத் தொண்டு புரிய வேண்டும் என்றே அவை உபயோ கிக்கப்படுகின்றன. தொண்டு புரியும் அம்சத்தை அப்பதவிகள் இழந்து விடுமாயின், பின்னர் அவை பயனற்றதாகி விடுகின்றன. அவை எவ்வளவு கஷ்டப்பட்டு அடைந்தவையாக இருப்பினும், ஆரம்பத்தில் மிகவும் மதிப்பு வாய்ந்தவையாக இருப்பினும், தற்போதுள்ள நிலையில் அவை அபாயகரமாகியும் விடுகின்றன.

உயர் பதவிகளை வகிக்கும் நம் நாட்டுப் பிரமுகர்களுக்கு நான் பணிவுடன் மற்றொன்றும் கூறுகிறேன். அதாவது, அவர்கள் பதவிகளைத் துறப்பதால், போராட்டம் துரிதமாக முடிந்துவிடும். தங்கள் கண்டனத்தைத் தெரிவிப்பதற்காக, அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை நிறுத்திக் கொள்ள வேண்டுமென்று பாமர மக்களைக் கேட்டுக் கொள்ளுவதன் விளைவாக ஏற்படக்கூடிய அபாயத்தையும், உயர் பதவிகளைத் துறப்பதன் மூலம் ஒரு வேளை தவிர்க்கலாம். பட்டதாரிகள் தங்கள் பட்டங்களைத் துறந் தால், கௌரவப் பதவிகளில் இருப்போர் அப்பதவிகளைக் கை விட்டால், உயர்தர அதிகாரிகள் தங்கள் பதவிகளிலிருந்து வில கிக் கொண்டால், சட்டசபை அங்கத்தினர்களாகத் தேர்ந் தெடுக்கப்படுவோர் சட்டசபைகளைப் பகிஷ்காரம் செய்தால், அரசாங்கத்திற்கு விரைவில் புத்தி வந்து, அது மக்களின் அபி லாஷைகளை நிறைவேற்றி வைக்கும். அவ்விதமின்றேல், கலப் பற்ற கொடுங்கோல் ஆட்சியைத் தவிர அரசாங்கத்திற்கு வேறு ஒரு வழியும் இல்லை. அதாவது, ராணுவ சர்வாதிகாரம் என் பதே இதன் பொருளாகும்.

இப்போது உலக அபிப்பிராயம் மிகவும் முன்னேற்றம் அடைந்திருப்பதால், பிரிட்டன் மன நிம்மதியுடன் அத்தகைய சர்வாதிகார ஆட்சியைக் கைக்கொள்ளத் துணியாது. எனவே,

நான் கூறியுள்ள முறைகளைக் கைக்கொள்ளுவது, உலகமே கண்டிராத, அமைதிக்கு அணுவளவும் குந்தகமற்ற புரட்சியாக அமையும். ஒத்துழையாமை தவறவே தவறாது என்பதை ஒரு தடவை உணர்ந்துகொண்டுவிட்டால், பின்னர் எவ்விதத்திலும், எந்த உருவத்திலும் ரத்தக்களரி ஏற்படாதவாறு முற்றுப் புள்ளி வைத்ததாகிவிடும்.

தேசீய ஒத்துழையாமை, சக்தி வாய்ந்த கடுமையான முறையாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவே, அதைக் கைக்கொள்ளுவதற்கேற்றவாறு லட்சியம் மிகவும் முக்கியமானதாக இருக்க வேண்டும். இப்போது இஸ்லாமிற்கு இழைக்கப்பட்டுள்ள அவமதிப்பைப் போல் இன்னும் நூறு ஆண்டுகளுக்கு இழைப்பது முடியாத காரியம். இஸ்லாம் இப்போது தலைதூக்க வேண்டும்; அல்லது, என்றென்றும் வீழ்ச்சியடையா விட்டாலும் நிச்சயமாக இன்னும் நூறு வருடங்களுக்கு வீழ்ச்சியடைந்தே தீரும். ஜாலியன்வாலா பாக் படுகொலை, அதைப் பின் தொடர்ந்து நடந்த காட்டுமிராண்டித்தனம், ஹண்டர் கமிட்டியின் மழுப்பல் வேலை, அதையொட்டி இந்திய அரசாங்கம் அனுப்பிய அறிக்கை, அப்போது பதவியில் இருந்த லெப்டினன்ட் கவர்னர், வைஸ்ராய் இவர்களின் கூற்றை ஆதரித்து ஸ்ரீ மாண்டேகு எழுதிய கடிதம், ராணுவச் சட்டம் அமலில் இருந்த காலத்தில் பஞ்சாபியர்களின் வாழ்க்கையை ஒரு நரகமாகச் செய்த அதிகாரிகளைப் பதவிகளிலிருந்து விலக்க மறுத்தல் ஆகியவற்றைக் காட்டிலும் கடுமையான குற்றத்தை நான் கற்பனை செய்துகொள்ளவும் முடியாது. இந்த நடவடிக்கைகள் யாவும், இந்தியாவுக்கு விரோதமாக மேன்மேலும் இழைக்கப்பட்ட குற்றங்களின் முழுத் தொடர்ச்சியாகும். இந்தியாவுக்கு ஏதாவது கௌரவ உணர்ச்சி இருக்குமாயின், இந்தியா தன்னிடமுள்ள சகல லௌகிக உடைமைகளையும் தியாகம் செய்தாவது அக்குற்றங்களுக்குப் பரிகாரம் தேட வேண்டும். இந்தியா அவ்வாறு செய்யாவிடில், அது அவல வாழ்விற்காகத் தன் ஆன்மாவையே விற்றதாக முடியும்.

—'எங் இந்தியா' - 21—7—1920

# 32

# ஒத்துழையாமை வெற்றி பெற முதல் நிபந்தனை

ஆகஸ்டு மாதம் முதல் தேதிக்கு முன், பிரிட்டிஷ் சர்க்கார் மந்திரிகள் யுத்த சமாதான ஷரத்துக்களை மாற்றியமைப்பதாக உறுதி கூறப் போவதில்லை; அதைத் தொடர்ந்து ஒத்துழையாமை ஆரம்பமாவதையும் நாம் நிறுத்தி வைக்கப் போவதில்லை.

இந்தியாவின் சரித்திரத்தில் ஏப்ரல் மாதம் 6-ஆம் தேதியைப் போலவே, அடுத்த ஆகஸ்டு மாதம் 1-ஆம் தேதியும்* முக்கிய மானது. ஏப்ரல் 6-ஆம் தேதி, ரௌலட் சட்டத்தின் முடிவிற்கு ஆரம்பமாக இருந்தது. ரௌலட் சட்டம் அடியோடு கைவிடப் பட்டுவிடவில்லை; தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக் கிறது. எனினும், மக்களின் கிளர்ச்சிக்கு எதிரே ரௌலட் சட் டம் உயிர்வாழ முடியும் என்று எவரும் நினைப்பதற்கில்லை. பஞ் சாப், கிலாபத் விஷயங்கள் சம்பந்தமாக, இஷ்டப்படாத அர சாங்கத்தினிடமிருந்து நீதியை வற்புறுத்திப் பெறும் சக்திக்கு, ரௌலட் சட்டம் ரத்தாகும்படி செய்யவும் முடியும் என்பதை எவரும் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். சாத்விக சட்ட மறுப்பு அல்லது ஒத்துழையாமை, எந்தப் பெயர் பிரசித்த மாக இருந்தாலும் சரி, அந்தச் சக்திதான் சத்தியாக்கிரகத் தின் சக்தியாகும்.

சென்ற ஆண்டில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் காரணமாக, பலரும் மீண்டும் ஒத்துழையாமை வந்துவிடுமோ என்று நடுங்குகிறார்கள். பாமர மக்களின் ஆவேச வெறியும், அதைத் தொடர்ந்து நவீன கால சரித்திரத்திலேயே கண்டிராத அதிகாரிகளின் கொடிய வஞ்ச நடவடிக்கைகளும் மறுபடியும் நேருமோ என்று அவர்கள் பீதி அடைகின்றனர். என் சம்பந்தப்பட்ட வரையில், ஆவேசம் கொண்ட மக்களின் கோபத்தைக் குறித்து நான் கலக்கம் அடை வது போல், அரசாங்கத்தின் ஆவேசத்தைக் குறித்தும் கலங்கு வதில்லை. அரசாங்கத்தின் வெறி, அதிகாரிகள் அடங்கிய ஒரு சிறு ஸ்தாபனத்தின் எல்லைக்கு உட்பட்டிருக்கிறது. ஆனால், மக்களின் வெறியோ, தேசத்தை ஆட்கொண்டுள்ள நோய்க்கு ஓர் அடையாளமாகும். ஒரு கலகக் கூட்டத்தில் இருக்கும் இனம் தெரியாத மக்களைச் சமாளிப்பதைக் காட்டிலும், ஆட்சி புரியத் தகுதியற்ற முறையில் நடந்துகொள்ளும் அரசாங்கத்தை அகற்று வது எளிதாகும்.

எனினும், ஓர் அரசாங்கமோ, மக்களோ அல்லது இரு சாரா ருமோ தவறு செய்கிறார்கள் என்பதற்காக, பெரும் இயக்கங் களை முற்றிலும் நிறுத்திவிடுவது முடியாத காரியமாகும். நம்மு டைய தவறுகளின் மூலமும் தோல்விகளின் மூலமும் நாம் கற்றுக் கொண்டு பலனடைகிறோம். தளபதி என்று பெயர் படைத்த

* 1920 ஆகஸ்டு மாதம் 1-ஆம் தேதி ஆரம்பமாகப் போகும் ஒத்துழையாமை விஷயத்தில் லோகமான்ய பால கங்காதர திலகரின் நிலை என்ன என்ற கேள்வி நாடெங்கும் எழுந்தது. திலகர் அதற்குத் தம்முடைய பூரண ஆதரவைத் தெரிவித்த போது, நாடெங்கும், ஹிந்துக்களும் முஸ்லிம்களும், ஒருங்கே மகிழ்ச்சி அடைந்தனர். ஆனால், சில நாட்களாக நோய் வாய்ப்பட்டிருந்த திலகர், ஆகஸ்டு 1-ஆம் தேதி இரவு 12-40 மணிக்குப் பம்பாயில் பூத உடலைத் துறந்து அமர நிலை அடைந்தார். "எனக்குப் பாதுகாப்பாக இருந்த மிகுந்த பலம் பொருந்திய கோட்டை தகர்ந்துவிட்டது" என்று காந்திஜி கூறி, திலகரின் மறைவைக் குறித்துத் தமது துக்கத்தைத் தெரிவித்தார்.

எவரும், தமக்குத் தோல்விகள் ஏற்பட்டதற்காகவோ அல்லது தாம் தவறுகள் செய்ததற்காகவோ—அதுவும் தோல்விகள் தானே – போரைக் கைவிட்டு விடுவதில்லை.

அது போலவே நாம், ஒத்துழையாமையை உறுதியுடனும் நம்பிக்கையுடனும் அணுக வேண்டும். சென்ற தடவையைப் போலவே, உபவாசத்தையும் பிரார்த்தனையையும் அடையாள மாகக்கொண்டு ஒத்துழையாமை ஆரம்பமாக வேண்டும். நமது நடவடிக்கையின் மத சம்பந்தமான தன்மைக்கு உபவாசமும் பிரார்த்தனையும் ஓர் அடையாளமாகும். அன்று வேலைகள் நிறுத் தப்பட வேண்டும். யுத்த சமாதான ஷரத்துகளை மாற்றும்படி யும், பஞ்சாபிற்கு நீதி வழங்கும்படியும் பிரார்த்தித்தும், நீதி கிடைக்கும் வரையில் ஒத்துழையாமையை அனுஷ்டிக்கும்படி உபதேசித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றுவதற்காகக் கூட்டங் கள் கூட்ட வேண்டும்.

பட்டங்களையும் கௌரவப் பதவிகளையும் துறப்பது, ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து ஆரம்பமாக வேண்டும். பட்டங்களையும் கௌரவ உத்தியோகங்களையும் துறப்பதன் சம்பந்தமாக முன் னறிவிப்பு போதுமா என்பதில் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது. பட்டங்களைத் துறப்பது, ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து ஆரம்ப மாக வேண்டும் என்பதை மனத்தில் வைத்துக்கொண்டால் அந் தச் சந்தேகம் உடனே தீர்ந்துவிடும். பட்டம், பதவிகளை அன்றே துறந்துவிட வேண்டும் என்பதில்லை. முதல் நாளே ஏராளமான வர்கள் அக்கோரிக்கையின்படி நடப்பார்கள் என்று நான் எதிர் பார்க்கவில்லை. அவ்விஷயமாக மும்முரமான பிரசாரம் நடை பெற வேண்டும். பட்டமும் பதவியும் பெற்றுள்ள ஒவ்வொரு வருக்கும் அச்செய்தியை அறிவிக்க வேண்டும்; ஒவ்வொருவருட னும் வாதித்து பட்டம், பதவிகளைத் துறக்க வேண்டிய கட மையை நிரூபிக்க வேண்டும்.

இந்த ஒத்துழையாமை இயக்கத்தில், மக்களிடையே ஒழுங்கு, பயிற்சி, ஒத்துழைப்பு முதலியன ஏற்படும்படி செய்வ தும், ஊழியர்களிடையே அந்நியோந்நியம் நிலவும்படி செய்வதுமே மகத்தான காரியமாகும். பலன் தரத்தக்க ஒத்துழையாமை, குறையற்ற, கட்டுக்கோப்பான அமைப்பையே பொறுத்திருக் கிறது. அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை நிறுத்திவிட மக்கள் விரும்புகின்றனர். ஆனல், எப்படி நிறுத்துவதென்பதை அவர் கள் அறியும்படி செய்ய வேண்டும். இவ்விஷயத்தை, பஞ்சாப் முழுவதும் நடந்த கூட்டங்களுக்கு வந்த ஆயிரக்கணக்கான ஆடவர்களிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன். சிக்கலான அரசாங்க யந்திரத்தைப் பற்றி பெரும்பாலான மக்களும் அறிந்து கொள்ளவில்லை. தாம் அறியாமலேயே ஒவ்வொருவரும் பல வழிகளிலும் அரசாங்கத்தை மௌனமாகவும், எனினும் நிச்சய

மாகவும் தாங்கி நிற்கிறார்கள் என்பதை அவர்கள் உணருவதில்லை. எனவே, ஒவ்வொரு பிரஜையும், அவரது அரசாங்கத்தின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் தம்மைப் பொறுப்பாளியாகச் செய்துகொள்ளுகிறார். அரசாங்கத்தின் நடவடிக்கைகள் சகிக்கக் கூடியவையாக இருக்கும் வரையில், அதை அவர் ஆதரிப்பது முற்றிலும் ஒழுங்கேயாகும். ஆனால், அரசாங்கம் அவருக்கோ அல்லது அவரது நாட்டிற்கோ துன்பம் விளைவிக்கும் பொழுது, அவர் அரசாங்கத்திற்கு அளித்து வரும் ஆதரவை வாபஸ் செய்து கொண்டுவிட வேண்டியது அவரது கடமையாகிவிடுகிறது.

ஆனால், நான் கூறியதுபோல், அதை ஒழுங்கான முறையில் எப்படிச் செய்வதென்பதை எல்லோரும் அறிவதில்லை. கோபத்திலிருந்துதான் குழப்பம் ஏற்படுகிறது. புத்திசாலித்தனமான எதிர்ப்பிலிருந்து ஒழுங்கும் அமைதியும் ஏற்படுகின்றன. எனவே, உண்மையான வெற்றி கிடைப்பதற்கு அவசியமான முதல் நிபந்தனை, அணுவளவும் பலாத்காரம் ஏற்படாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுவதே.

அரசாங்கத்தின் பிரதிநிதிகளாக இருப்பவர்கள் விஷயத்திலோ அல்லது நமது பக்கத்தில் சேராதவர்கள் விஷயத்திலோ, அதாவது அரசாங்கத்தின் ஆதரவாளர்கள் விஷயத்திலோ நாம் பலாத்காரத்தை உபயோகித்தால், அவ்வாறு உபயோகிக்கும் ஒவ்வொரு தடவையும் நமது இயக்கம் பின்னடையும்; ஒத்துழையாமை தடைப்படும்; யாதொரு பலனுமின்றி நிரபராதிகள் உயிர் இழக்க நேரும். எனவே, வெகு சீக்கிரத்தில் ஒத்துழையாமை வெற்றி பெறுமாறு செய்ய விரும்புவோர், தங்களுடைய அக்கம் பக்கப் பிரதேசங்களில் பூரண ஒழுங்கு நிலவும்படி பார்த்துக் கொள்ள வேண்டியது தங்களது முழு முதற் கடமை என்று கருத வேண்டும்.

'எங் இந்தியா' -28—7—1920

# 33

# ராஜவிசுவாசமற்றவர்கள் யார்?

ஸ்ரீ மாண்டேகு, ராஜவிசுவாசமின்மை என்பதற்கு ஒரு புதிய வியாக்கியானத்தைக் கண்டுபிடித்திருக்கிறார்.* வேல்ஸ் இளவரசரின் விஜயத்தைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்ற எனது யோசனை, ராஜவிசுவாசமற்ற ஒரு காரியம் என்று அவர் கருதுகிறார். சில பத்திரிகைகளும் அவரது சமிக்ஞையை எடுத்துக்

* இந்தியா மந்திரியான ஸ்ரீ மாண்டேகு பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பேசியபோது, வேல்ஸ் இளவரசரின் இந்தியா விஜயத்தைப் பகிஷ்கரித்து இந்தியாவில் நடை-

கொண்டு, பகிஷ்கார யோசனை கூறியவர்களை 'மரியாதையற்றவர்கள்' என்று குறிப்பிட்டிருக்கின்றன. இளவரசரைப் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்ற யோசனையைக் கூறியவர்கள், இந்த 'மரியாதையற்ற' நபர்கள்தான் என்றும் அவை கூறியுள்ளன.

இளவரசரைப் பகிஷ்கரிப்பதற்கும், இளவரசருக்காக ஏற்பாடு செய்யப்பட்ட எத்தகைய வரவேற்பையும் பகிஷ்காரம் செய்வதற்கும் திட்டவட்டமான, மூலாதாரமான வேற்றுமை உண்டென்று நான் கூறுகிறேன். அதிகாரவர்க்கத்தின் ஆதரவும், இன்றைய அரசாங்கத்தின் பாதுகாப்புமின்றி இளவரசர் இந்தியாவிற்கு வருவாராயின், வரக்கூடுமாயின், அவரை நான் என் சொந்த முறையில் உள்ளம் கனிந்து வரவேற்பேன். அவர், அரசியல் சட்டத்திற்கு உட்பட்ட மன்னரின் வாரிசாக இருக்கிறார். அவரது நடமாட்டங்கள் மந்திரிகளின் கட்டளைகளுக்கு இணங்க ஒழுங்கு செய்யப்படுகின்றன. ஆனால், மந்திரிகளின் கட்டளைகள், மரியாதையான ராஜதந்திர பாஷையில் மறைக்கப்பட்டிருந்தாலும், அவை உண்மையில் கட்டளைகளே. எனவே, பகிஷ்கார ஏற்பாடுகளைச் செய்தவர்கள், இறுமாப்புள்ள அதிகார வர்க்கத்தையும், யோக்கியப் பொறுப்பற்ற பிரிட்டிஷ் மந்திரிகளையுமே பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று யோசனை கூறியுள்ளனர்.

கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்பது கூடாதல்லவா? அரசியல் சட்டத்திற்கு உட்பட்ட முடியரசின் கீழ், மன்னர் அரசியலுக்கு அப்பாற்பட்டவர் என்பது உண்மையே. எனினும், பிரமாதமான அரசியல் விளம்பர நோக்கத்துடன் இளவரசரை ராஜீய காரியங்களுக்காக அனுப்பிவிட்டு, அதற்குத் தகுந்தவாறு தாளம் போடாமலும், அந்த நோக்கத்திற்கு முட்டுக்கட்டை போடவும் இளவரசரின் விஜயத்தைப் பகிஷ்காரம் செய்வதாகப் பிரகடனம் செய்வோர், அரசியல் சம்பிரதாயத்தை அறியாதவர்கள் என்று புகார் கூறுவது நியாயமல்ல.

இந்தியாவிற்கு இளவரசரின் யாத்திரை உல்லாச யாத்திரை அல்ல. பிரிட்டனின் தூதராகவே, மற்றொரு விதமாகக் கூறுவதாயின், தமது சொந்தத் தூதராகவே இளவரசர் வருவதாக ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் குறிப்பிட்டுள்ளார். ஸ்ரீ லாயிட் ஜார்ஜுக்கு நற்சாட்சிப் பத்திரம் கொடுக்கவும், ஒருவேளை பிரிட்டிஷ் மந்திரிகளின் பதவி காலத்துக்கு மற்றொரு தவணை கொடுக்கவுமே இள

---

பெற்ற இயக்கத்தைக் கண்டித்தும் அவ்விதம் பகிஷ்காரம் செய்வது ராஜ விசுவாசமற்ற காரியமென்றும் குறிப்பிட்டார். அவரது அந்தக் கூற்றுக்குப் பதிலாக, காந்திஜி 'எங் இந்தியா'வில் எழுதிய தலையங்கமே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

வரசர் வரப் போகிறார். அதாவது, இந்தியாவிற்கு அபாயகர மான ஒரு சக்தியை, இளவரசருடைய விஜயத்தின் மூலம் உறுதிப் படுத்தவும் பலப்படுத்தவும் வேண்டும் என்பதே அவர்களின் ஆர்வமாகும்.

பிரிட்டிஷ் மன்னருக்கு, இதற்கு முன் அளிக்கப்பட்ட வர வேற்பைக் காட்டிலும் வேல்ஸ் இளவரசருக்கு அளிக்கப்படும் வரவேற்பு அதிக பிரமாதமாக இருக்குமென்று ஸ்ரீ மாண்டேகு இப்போதே ஜோசியம் கூறியுள்ளார். அதன் அர்த்தம் என்ன ? பஞ்சாபில் அதிகாரவர்க்கம் புரிந்த அட்டூழியங்களும், கிலாபத் சம்பந்தமாக அதிகாரவர்க்கம் தான் கொடுத்த வாக்குறுதியைப் பகிரங்கமாய் அயோக்கியத்தனமாக மீறியதும், உண்மையில் மக்களின் மனத்தைக் கலக்கி அவர்களிடையே மிகுந்த கொந்தளிப்பை உண்டுபண்ணவில்லை என்பதுதான்.

அப்பிரச்னைகளையொட்டி இந்தியாவின் இருதயத்திலிருந்து உதிரம் கொட்டி வருகிறது. இதை அறிந்துள்ள இந்திய அரசாங்கம், இளவரசரை இந்தியாவிற்கு அனுப்ப இது உற்ற சமயம் அல்ல என்பதைப் பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு அறிவித்திருக்க வேண்டும். அதற்கு மாறாக, இளவரசரை இங்கே கொண்டு வந்து அவரது விஜயத்தின் மூலம், அவமதிப்புடன் கலைக்கப்படுவதற்குரிய ஓர் அரசாங்கம் மேற்கொண்டு கௌரவத்தையும் செல்வாக்கையும் திருடப் பார்ப்பது, குதிரை கீழே தள்ளியதுமின்றி குழியும் பறித்ததற்கு ஒப்பாக இருக்கிறது.

இந்தியா பெரும் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறது. எனவே, இளவரசருக்கு எத்தகைய வரவேற்பும் அளிக்கக் கூடிய மன நிலையில் இந்தியா இல்லை. இவ்வாறு கூறுவதன் மூலம், நான் எனது ராஜவிசுவாசத்தையே நிரூபிக்கிறேன். ஆனால், இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் மந்திரிகளும், இளவரசரைத் தங்களுடைய ஆழ்ந்த அரசியல் சூதாட்டத்தின் ஒரு கருவியாகச் செய்திருப்பதன் மூலம், தங்களுடைய ராஜவிசுவாச சூன்யத்தையே வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் அவ்விஷயத்தில் பிடிவாதமாக இருந்தால், இளவரசரின் விஜயத்தை ஏறெடுத்தும் பார்க்காமல் இருந்துவிட வேண்டியது இந்தியாவின் தெளிவான கடமையாகும்.

'எங் இந்தியா' – 4—8—1920

# 34

# அகிம்சையும் சுதேசியும்

[1920 ஜூலை 29-ஆம் தேதி பம்பாயில் உள்ள முஸாபராபாத்தில் முஸ்லிம்கள் அடங்கிய பிரம்மாண்டமான கூட்டம் ஒன்று நடந்தது. ஆகஸ்டு 1-ஆம் தேதி ஆரம்பிக்கவிருந்த ஒத்துழையாமை பற்றிக் காந்திஜி அப்போது பேசினார். அப்பிரசங்கத்தின் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

"ஒத்துழையாமையைப் பற்றிய பிரசங்கங்கள் செய்யும் காலம் கடந்து விட்டது. அதைச் செயலில் காட்டும் நேரம் இப்போது வந்துளது. எனினும், அதில் பூரண வெற்றி பெற இரண்டு விஷயங்கள் தேவையாக இருக்கின்றன. ஒன்று, மக்கள் எவ்வித பலாத்காரத்திலும் ஈடுபடாத ஒரு சூழ்நிலை; மற்றொன்று, தன்னைத் தியாகம் செய்து கொள்ளும் உணர்ச்சியாகும். பலாத்கார உணர்ச்சி மேலோங்கி நிற்கும் ஒரு சூழ்நிலையில், நான் கண்டுள்ள ஒத்துழையாமை இயங்குவது முடியாத காரியம்.

"கோபத்தை விளம்பரப்படுத்துவதே இம்சையாகும். அவ்விதம் விளம்பரப்படுத்துவதால் உயர்ந்த சக்தி சிதறுண்டுபோய் விடுகிறது. ஒருவர் தமது கோபத்தை அடக்குவது, தேசீய சக்தியைச் சேமித்து வைப்பதாகும். சேமித்து வைக்கப்பட்ட அந்தச் சக்தியை ஒழுங்கான முறையில் வெளிப்படுத்தினால், பிரமிக்கத்தக்க பலன்கள் ஏற்படும்.

"எனது ஒத்துழையாமைத் தத்துவத்தில், கொள்ளை, வழிப்பறி, தீ வைத்தல் போன்ற வெறி பிடித்த பாமர மக்கள் செய்யும் விபரீதங்களுக்கு இடமில்லை. எனது ஒத்துழையாமைத் திட்டத்தின்படி, அத்தீய சக்திகளை அடக்க நம்மிடம் திறமை இருக்க வேண்டும். எனவே, மக்களிடையே அவர்கள் அடக்க முடியாத ஒழுங்கீனம் தென்படுமாயின், அதை அடக்கும் விஷயமாக நானே அரசாங்கத்திற்கு நிச்சயமாக உதவி செய்வேன். தற்போதைய அரசாங்கத்தை ஒரு தீமையாகவே நான் கருதுகிறேன். என்றாலும், குழப்பமும் ஒழுங்கின்மையும் ஏற்படும்போது, என்னைப் பொறுத்தவரையில், எந்தத் தீமையைச் சகிப்பது என்பதே கேள்வியாகும். எனவே, அந்நிலையில், ஒழுங்கீனத்தை அடக்கும் விஷயமாக அரசாங்கத்திற்கு நான் தாற்காலிகமாக உதவி புரியத் தயங்கமாட்டேன். எனினும், மக்களிடம் எனக்கு நம்பிக்கை உண்டு. பலாத்காரமற்ற முறைகளின் மூலம்தான் நாம் வெற்றி பெற முடியும் என்பதை மக்கள் அறிவர் என்றே

நம்புகிறேன். ஐரோப்பாவில் உள்ள அநீதியான அரசாங்கங்கள், தங்களுடைய வெற்றிப் போதையில் நீதியின் விதிகளை அடியோடு புறக்கணித்துவிட்டு, ஐரோப்பாவில் உள்ள ஒரே இஸ்லாமிய அரசான துருக்கி விஷயத்தில் இரக்கமின்றி கொடுமையாக நடந்து கொண்டுள்ளன. எனவே, அந்த அரசாங்கங்களை மக்கள் மிருக பலத்தைக்கொண்டு எதிர்க்க விரும்பினாலும், அவ்விதம் எதிர்ப்பதற்கேற்ற சக்தி அவர்களுக்கு இல்லை.

## இணையற்ற ஆயுதம்

“ஒத்துழையாமை இணையற்ற சக்தி பொருந்திய ஓர் ஆயுதமாகும். பொய், பித்தலாட்டம், பகட்டு இவற்றைக் கையாண்டு ஓர் அநீதியை நிலைநிறுத்த முற்படும் ஒரு நேர்மையற்ற அரசாங்கத்தை ஆதரிப்பது, மன வளர்ச்சிக்கே கேடு விளைவிப்பதாகும். எனவே, பொய்யும் அநீதியுமாகிற பிளவை நோயை அரசாங்கம் தன்னிடமிருந்து அறவே அகற்றினாலன்றி, சமுதாய அமைப்பில் ஒழுங்கைப் பாதுகாப்பதற்குக் குந்தகமில்லாமல் அரசாங்கத்திற்கு எவ்வித உதவியும் அளிக்க மறுப்பது நமது கடமையாகும். ஒத்துழையாமையின் முதல் கட்டம், அவ்வியக்கத்தில் கலந்து கொள்ளுவோர் மிகக் குறைந்த அளவே தியாகம் செய்யவும், பொதுஜன அமைதிக்கு மிகக் குறைந்த அளவே அபாயம் ஏற்படவும் இருப்பதற்கேற்றவாறு தயாரிக்கப்பட்டிருக்கிறது.

“ஒரு தீய அரசாங்கத்திற்கு நாம் உதவி அளிக்கக்கூடாதெனில், அதனிடமிருந்து எத்தகைய சலுகைகளும் பெறக்கூடாதெனில், அதைத் தொடர்ந்து அரசாங்கத்தினிடமிருந்து பெற்ற கௌரவப் பட்டங்களைத் துறந்துவிட வேண்டியது அவசியமாகிறது. ஒரு தீய அரசாங்கம் அளித்த பட்டங்களை வைத்துக்கொண்டிருப்பது, பெருமையடையக்கூடிய விஷயமல்ல. வக்கீல்கள், உண்மையில் கோர்ட்டின் கௌரவ அதிகாரிகளே. எனவே, அவர்கள் அநீதியான ஓர் அரசாங்கத்தின் கௌரவத்தைப் பாதுகாக்கும் கோர்ட்டுகளுக்கு ஆதரவு அளிப்பதை நிறுத்திவிட வேண்டும். மக்கள், தங்களுடைய தகராறுகளையும் சச்சரவுகளையும் தனிப்பட்டவர் மத்தியஸ்தத்தின் மூலம் தீர்த்துக்கொள்ள வேண்டும். அது போலவே, பெற்றோர்களும் தங்களுடைய குழந்தைகளைப் பொதுக் கல்விச்சாலைகளிலிருந்து திருப்பி அழைத்துக் கொண்டுவிட வேண்டும். சிறிதும் அரசாங்கத்தின் சம்பந்தமின்றி அவர்கள் தனிப்பட்ட அல்லது தேசீய அடிப்படையில் ஒரு கல்வி முறையை உருவாக்க வேண்டும். குறிப்பாக, கோர்ட்டுகளும் கல்விச்சாலைகளும் மக்களுக்கு உதவி செய்வதாகக் கருதப்படுகின்றன அல்லவா? எனவே, அவ்விதம் மக்கள் வாபஸ் செய்து கொள்ளுவதைக் குறித்து, தனது மிருக பலத்தை உணர்ந்து இறுமாப்புடனிருக்கும் ஓர் அரசாங்கம் எள்ளி நகையாடலாம். எனினும், அதிகார போதையில் இறு

மாந்து கிடக்கும் ஓர் அரசாங்கத்தின் மனச்சாட்சிகூட, அத்தகைய முறையின் தார்மிக சக்தியை அசட்டை செய்ய முடியாது என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

## சுதேசி

"சுதேசியை, ஒத்துழையாமையின் ஓர் அம்சமாக ஒத்துக் கொள்ள நான் தயங்குகிறேன். எனக்குச் சுதேசி உயிரையே போன்று அவ்வளவு அருமையானதாகும். கிலாபத் இயக்கதிற்கு சுதேசியால் நியாயமான உதவி எதுவும் ஏற்பட முடியாதெனில், அதைக் கிலாபத் இயக்கத்தின் மூலம் ரகசியமாகக் கொண்டு வந்துவிட நான் விரும்பவில்லை. ஆனால், தன்னலத் தியாக உணர்ச்சியை அடிப்படையாகக்கொண்டு ஒத்துழையாமை உருவாக்கப்பட்டிருப்பதால், அந்த இயக்கத்தில் சுதேசிக்கு நியாயமான ஓர் இடம் உண்டு. கலப்பற்ற சுதேசி என்பதற்கு, நேர்த்தியான ஆடை முதலிய பண்டங்களில் உள்ள ஆசையை மக்கள் தியாகம் செய்ய வேண்டும் என்பதே பொருளாகும். எனவே, ஐரோப்பாவிலிருந்தும் ஜப்பானிலிருந்தும் வரும் நேர்த்தியான ஆடைகளில் உள்ள ஆசையை விட்டுவிட்டு, தங்களுடைய கோடிக்கணக்கான சகோதரிகள் நூற்ற நூலிலிருந்து கைத்தறிகளில் நெய்யப்பட்ட முரடான, ஆனால் அழகான ஆடைகளைக்கொண்டு திருப்தியடையும்படி தேச மக்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தங்கள் மதங்களுக்கும் சுயமரியாதைக்கும் நேர்ந்துள்ள அபாயத்தைத் தேச மக்கள் உண்மையிலேயே உணர்ந்து விழிப்படைவார்களாயின், சுதேசியை வெகு தீவிரமான முறையில் கைக்கொள்ளவேண்டிய முற்றிலும் உடனடியான அவசரத்தை அவர்கள் அறிந்துகொள்ளாமல் இருக்க முடியாது. இந்திய மக்கள் சுதேசியை மத சம்பந்தமான பக்திச் சிரத்தையுடன் கைக்கொள்ளுவார்களாயின், அது அவர்களுக்கு ஒரு புதிய சக்தியைக் கொடுப்பதுடன், உலகம் முழுவதும் ஒரு மகத்தான உணர்ச்சியை உண்டுபண்ணுமென்றும் நான் அவர்களுக்கு உறுதி கூறுகிறேன்.

"முஸ்லிம்கள் நேர்த்தியான ஆடைகளில் மிகுந்த பிரேமை உடையவர்கள். எனவே, அவர்கள் அத்தகைய ஆடைகளைக் கைவிட்டு, அவர்களுடைய சகோதரர்களும் சகோதரிகளும் தங்கள் சொந்தக் குடிசைகளில் உடலால் உழைத்து உற்பத்தி செய்யும் எளிய ஆடைகளைக் கைக்கொண்டு அவ்விஷயத்தில் வழி காட்டுவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். அந்த வழியை ஹிந்துக்களும் பின்பற்றுவார்களென்று நம்புகிறேன். அது, தேசம் முழுவதும் உள்ள ஒவ்வோர் ஆடவரும், ஒவ்வொரு பெண்ணும், ஒவ்வொரு குழந்தையும் பங்கு எடுத்துக் கொள்ளக் கூடிய ஒரு தியாகமாகும்."

—'எங் இந்தியா' - 4—8—1920

# 35

# காந்திஜி சமர்ப்பித்த சத்தியாக்கிரகத் திட்டம்

*[காந்திஜி சாபர்மதி சிறையிலிருந்து 12-3-1922-இல் ஹக்கீம் அஜ்மல் கானுக்கு* எழுதிய கடிதத்தில், தேசீயப் போராட்டத்தில் அகிம்சையும் கதரும் மிக முக்கியமான அம்சங்களென்று குறிப்பிட்டிருந்தார். அந்த முக்கியமான கடிதம் கீழே தரப்பட்டிருக்கிறது:]*

**சாபர்மதி சிறை, 12—3—1922**

எனது அன்பார்ந்த ஹக்கிம்ஜி,

விசாரணையிலிருக்கும் கைதி என்ற முறையில், நான் எத்தனை கடிதங்கள் வேண்டுமாயினும் எழுதலாம் என்று சிறை விதிகள் அனுமதிக்கின்றன. இந்த அனுமதியைத் தெரிந்துகொண்ட பின் நான் எழுத ஆரம்பித்துள்ள முதல் கடிதம் இதுதான். ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் என்னுடன் சிறையில் இருக்கிறார் என்பது உங்களுக்குத் தெரியும். அவர் என்னுடன் இருப்பதைக் குறித்து நான் மகிழச்சியடைகிறேன். அவர் எனக்கு எவ்வளவு அருகில் வந்து விட்டார் என்பதை எல்லோரும் அறிவர். எனவே, நாங்கள் சேர்ந்தாற்போல் கைது செய்யப்பட்டதைக் குறித்து இருவரும் மகிழ்ச்சி அடைந்திருப்பது இயல்பேயாகும்.†

---

* 1921-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கடைசி வாரத்தில் அகமதாபாத்திலே காங்கிரஸ் மகா சபை கூடியது. அதற்கு இரண்டு லட்சம் பேர் விஜயம் செய்தனர். அப்போது இந்தியாவில் ராஜீய நிலைமை மிகவும் கொந்தளிப்பாக இருந்தது. காங்கிரஸ் அக்கிராசனரான தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் சிறை வைக்கப்பட்டிருந்தார். காந்திஜியையும் அதிகாரிகள் எந்த விநாடியிலும் கைது செய்யலாம் என்ற நிலை ஏற்பட்டிருந்தது. சித்தரஞ்சன் தாஸின் ஸ்தானத்தில் ஹக்கிம் அஜ்மல் கான் காங்கிரஸ் மகாசபையின் தாற்காலிக அக்கிராசனராக நியமிக்கப்பட்டார். காங்கிரஸ் அக்கிராசனர் என்ற முறையிலேயே அஜ்மல் கானுக்குக் காந்திஜி மேலே கண்ட கடிதத்தை எழுதினர். அதற்கு ஹக்கிம் அஜ்மல் கான் எழுதிய பதிலில், இந்தியா சுயராஜ்யம் பெறுவதற்கு, ஹிந்து, முஸ்லிம் ஒற்றுமை, அகிம்சை, கதர் அபிவிருத்தி, தீண்டாமை ஒழிப்பு முதலிய நான்கும் இன்றியமையாதவை என்று குறிப்பிட்டிருந்தார்.

† அரசாங்கத்தின் மீது அதிருப்தி ஏற்படும்படியான கட்டுரைகளை 'எங் இந்தியா'வில் எழுதியதாக காந்திஜி மீதும், அவற்றைப் பிரசுரித்ததாக ஸ்ரீ சங்கர்லால் பாங்கர் மீதும் தொடரப்பட்ட வழக்கில் 1921 மார்ச் 18-ஆம் தேதி விசாரணை ஆரம்பமாயிற்று. அவ்வழக்கை விசாரித்த அகமதாபாத் ஜில்லா செஷன்ஸ் நீதிபதி ஸ்ரீ சி. என். புரும்பீல்டு, ஐ. ஸி. எஸ். காந்திஜிக்கு ஆறு வருடம் வெறும் காவல் தண்டனையும், ஸ்ரீ சங்கர்லால் பாங்கருக்கு ஒரு வருடம் வெறும் காவல் தண்டனையும் ஆயிரம் ரூபாய் அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினல் மேற்கொண்டு ஆறு மாதம் வெறும் காவல் தண்டனையும் விதித்தார். அத்தீர்ப்பைக் கேட்டதும் கோர்ட்டில் குழுமியிருந்த ஏராளமான

நீங்கள் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அக்கிராசனர் என்ற முறையில் நான் இதை உங்களுக்கு எழுதுகிறேன். எனவே, நீங்கள் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் மாத்திரமல்ல, இந்தியாவுக்கே தலைவராவீர்கள். முஸ்லிம் தலைவர்களுள் முன்னணியில் இருக்கும் ஒருவர் என்ற முறையிலும், எல்லாவற்றிற்கும் மேலாக நீங்கள் மதிப்பிற்குரிய ஒரு நண்பர் என்ற முறையிலும் இதை நான் உங்களுக்கு எழுதுகிறேன்.

உறுதியுள்ள ஒரு முஸ்லிம் என்ற வகையில், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை என்ருல் என்ன என்பதை உங்கள் சொந்த வாழ்க்கையில் நீங்கள் காட்டியிருக்கிறீர்கள். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையின்றி நாம் விடுதலை பெற முடியாதென்பதை, முன்பு எக்காலத்திலும் இராதவாறு இப்போது நன்கு உணர்ந்து கொண்டுள்ளோம். அந்த ஒற்றுமை இன்றேல், இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் கிலாபத் இயக்கத்திற்குத் தாங்கள் விரும்பும் எல்லா உதவியும் அளிக்க முடியாதென்று நான் துணிந்து கூறுகிறேன். நாம் பிரிந்து நின்ருல், நாம் என்றென்றும் அடிமைகளாக இருக்க வேண்டியதுதான். எனவே, இந்த ஒற்றுமை நமக்கு வேண்டாத போது நாம் கைவிட்டுவிடக் கூடிய ஒரு வெறும் கொள்கையல்ல. சுயராஜ்யத்தில் நமக்குச் சலிப்பு ஏற்பட்டால் மாத்திரமே நாம் அதைக் கைவிட முடியும். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை எக்காலத்திலும், எச்சந்தர்ப்பத்திலும் நாம் கைவிட முடியாத சித்தாந்தமாக இருக்க வேண்டும்.

மற்றும் அந்த ஒற்றுமை, பார்சிகள், யூதர்கள் அல்லது சக்தி பொருந்திய சீக்கியர்கள் முதலிய சிறுபான்மையோருக்கு அபாயத்தை உண்டு பண்ணுவதாக இருக்கக்கூடாது. அப்பிரிவினரில் நாம் யாரை நசுக்க முற்பட்டாலும், எப்போதாவது நமக்குள் பரஸ்பரம் சண்டை ஏற்பட்டே தீரும்.

பூரண ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையில் உங்களுக்கு நம்பிக்கையிருப்பதை நான் அறிவேன். முக்கியமாக, அதனுலேயே உங்களுடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுள்ளது.

அகிம்சையை நாம் உறுதியான கொள்கையாகக் கைக்கொண்டாலன்றி, இந்த ஒற்றுமை ஏற்படுவது முடியாத காரியம் என்பது என்னுடைய அபிப்பிராயம். அதை நான் ஒரு கொள்கை என்று ஏன் குறிப்பிடுகிறேன் எனில், அந்த ஒற்றுமையைப் பாதுகாப்பதே அக்கொள்கையின் எல்லையாகும். ஆனுல், அதைத் தொடர்ந்து, சிறிது காலத்திற்கு மாத்திரமல்ல, எக்காலத்தும் ஒற்றுமைப்பட்டுள்ள முப்பது கோடி ஹிந்துக்களும் முஸ்லிம்களும், ஆங்கில நிர்வாகிகளைச் சமாளிக்க பலாத்காரத்தைக் கைக்கொள்ளுவது கோழைத்தனம் என்று கருத வேண்டும் என

ஆடவர்களும் பெண்மணிகளும் தேம்பி அழுதனர். ஆனுல், காந்திஜியும் ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் புன்முறுவலுடன் சிறைக்குச் சென்ருர்கள்.

ஏற்படுகிறது; கள்ளம் கபடமற்ற நாம், இது வரையில் அவர்களை யும் அவர்களுடைய துப்பாக்கிகளையும் கண்டு அஞ்சி வந்தோம். நமது ஒருமித்த பலத்தை நாம் உணர்ந்த அந்த விநாடியிலேயே, அவர்களைக் கண்டு அஞ்சுவதும், அதன் காரணமாக அவர்களைத் தாக்க நினைப்பதும் ஆண்மையற்ற காரியம் என்று நாம் கருத வேண்டும். அதனாலேயே, நம்முடைய பலவீனத்தினால் அல்ல, பலம் காரணமாகவே நமது நாட்டு மக்கள் தங்களை அகிம்சை வாதிகளாகக் கருதும் படி செய்ய நான் ஆர்வமும் அவசரமும் கொண்டுள்ளேன். ஆனால், பலசாலிகளின் அகிம்சையை நாம் இன்னும் உருவாக்க வில்லை என்பதை நீங்களும் நானும் அறி வோம். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை வெறும் கொள்கை என்ற கட்டத்திற்கு அப்பால் அதிக தூரம் செல்லாததாலேயே, நாம் பலசாலிகளின் அகிம்சையை உருவாக்க முடியவில்லை. இன்னும் பரஸ்பரம் மிகுந்த அவநம்பிக்கையும், அதைத் தொடர்ந்து பீதி யும் இருந்து வருகின்றன.

எனினும், நான் ஏமாற்றம் அடையவில்லை. அந்தத் திசையில் நாம் அடைந்துள்ள முன்னேற்றம் உண்மையில் அற்புதமானது. ஒரு தலைமுறையின் வேலையை நாம் பதினெட்டு மாத காலத்தில் செய்து முடித்துள்ளோம். எனினும், இன்னும் அவசியமாகச் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. நமது மூச்சுக் காற்றைப் போல் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை அத்தியாவசிய மானது என்பதை, படித்தவர்களோ அல்லது பாமரர்களோ இயல்பாக உணரவில்லை.

அந்த அவசியத்தை எல்லோரும் அறிந்து கொள்ளும்படி செய்வதற்கு, நாம் அளவைக் காட்டிலும் தரத்திலேயே அதிகக் கவனம் செலுத்த வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. இந்தியாவில் உள்ள ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே நிரந்தரமான நட்பு இருக்க வேண்டும் என்பதில் வெறி பிடித்தது போன்ற நம்பிக்கையுள்ள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அடங் கிய போதிய தொகையினர் கிடைப்பார்களாயின், அந்த ஒற் றுமை பாமரர்களிடையும் ஊடுருவ அதிக காலம் ஆகாது. ஆனால், நமது ராஜீய அபிலாஷை பூரணமாக நிறைவேறுவதற்கு எண் ணத்திலும், பேச்சிலும், செயலிலும் அகிம்சையைக் கைக்கொண் டாலன்றி, நாம் யாதொரு முன்னேற்றமும் அடைய முடியாது என்பதை முதன் முதலாக நம்மில் சிலர் உணர்ந்து கொள்ள வேண்டும். எனவே, நான் உங்கள் முன் சமர்ப்பிக்க முற்பட் டுள்ள உண்மையின் அவசியத்தைப் பூரணமாக உணராத தொண்டர்கள் நம்மிடையே இராமல் பார்த்துக் கொள்ளும்படி நான் உங்களையும், காரியக் கமிட்டி, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களையும் வேண்டிக் கொள்ளுகிறேன். பெரும் பான்மையோர் என்ற விதியின் மூலம் ஒரு ஜீவநம்பிக்கையை நாம் உற்பத்தி செய்துவிட முடியாது.

நமது ராஜீய அபிலாஷை நிறைவேறுவதற்கேற்ற இன்றியமையாத சாதனம், அகிம்சையை ஒப்புக் கொள்ளுவதாகும். இதற்கும் அகில இந்திய ஒற்றுமைக்கும் பிரத்தியட்சமான சின்னமாக விளங்குவது ராட்டினம், அதாவது கதர் என்பது சந்தேகமின்றி எனது அபிப்பிராயமாகும். ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே சிரஞ்சீவியான நட்பையும், அகிம்சை உணர்ச்சியையும் உழைத்து உருவாக்குவதில் நம்பிக்கை உடையவர்கள் மாத்திரமே தினந்தோறும் பக்தி சிரத்தையுடன் மனப்பூர்வமாக நூற்பார்கள். சர்வஜனங்களும் கையால் நூற்பதும், கையால் நூற்று கையால் நெசவு செய்த கதரை உற்பத்தி செய்து உபயோகிப்பதும், பரிபூரணமாக இராவிடினும், பெரிதும் உண்மையான ஒற்றுமை, அகிம்சை இவற்றிற்கு அத்தாட்சியாக இருக்கும். அது, வாயில்லாத பாமர மக்களுடன் கொண்டுள்ள ஜீவ உறவை வெளிப்படுத்துவதாக இருக்கும். ராட்டினத்தில் நூற்பதை தினசரி செய்ய வேண்டிய ஒரு மதச் சடங்காகவும், கதர் உடுப்பதை ஒரு பாக்கியமாகவும் கடமையாகவும் இந்தியா முழுவதும் அங்கீகரிப்பதைப் போல், வேறு எதுவும் இந்தியாவை ஐக்கியப் படுத்தவும், இந்தியா புத்துயிர் பெறும்படி செய்யவும் முடியாது.

எனவே, இன்னும் அதிக பட்டதாரிகள் பட்டங்களையும், வக்கீல்கள் கோர்ட்டுகளையும், கல்வி நிபுணர்கள் அரசாங்கக் கல்விச் சாலைகளையும் கல்லூரிகளையும், அங்கத்தினர்கள் சட்டசபைகளையும், சிப்பாய்கள், சிவில் உத்தியோகஸ்தர்கள் முதலியோர் தங்களுடைய பதவிகளையும் துறந்து விட வேண்டும் என்பதில் நான் ஆர்வமுடையவனாக இருக்கிறேன். அதே சமயம், ஏற்கனவே பெற்றுள்ள பலன்களை உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டும். நாம் திருத்தவோ அல்லது அறவே ஒழிக்கவோ முற்பட்டுள்ள ஓர் அரசாங்க முறையுடன் உள்ள தொடர்புகளை, மேற்கொண்டு துறக்க தேசத்திற்குள்ள பலத்தில் நம்பிக்கையிருக்க வேண்டும்; எனவே, இத்திசையில் தனது அலுவல்களை வரையறுத்துக் கொள்ளும்படி நான் தேச மக்களை வற்புறுத்துவேன். மேலும், நம்மிடையே தொண்டர்கள் சிலரே இருக்கிறார்கள். ஆகையால், நாம் செய்ய வேண்டிய ஆக்க வேலைக்ள் ஏராளமாக இருக்கும் இன்றைய நிலையில், நான் ஒரே ஒரு தொண்டரைக்கூட நாச வேலையில் ஈடுபடுத்தி வீண் செய்யமாட்டேன்.

சகிப்புத் தன்மையற்ற உணர்ச்சி ஒருவித இம்சையேயாகும். அத்தகைய இம்சை இப்போதிருப்பது போல் இவ்வளவு மோசமாக ஒருபோதும் இருந்ததில்லை. ஒத்துழைப்பாளர்கள் நம்மிடமிருந்து பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் நம்மைக் கண்டு பயப்படுகிறார்கள். அவர்கள், தற்போது இருப்பதைக் காட்டிலும் மோசமான ஓர் அரசாங்கத்தை நாம் ஸ்தாபித்து வருவதாகக் கூறுகிறார்கள். அத்தகைய கவலைக்கு இடம் கொடுக்

கும் ஒவ்வொரு காரணத்தையும் நாம் அகற்ற வேண்டும். நாம் நமது பாதையை விட்டு அப்பால் சென்றாவது, அவர்களை நம் பக்கத்திற்கே கொண்டுவர வேண்டும். நம் பக்கத்திலிருந்து எவ் வித அபாயமும் ஏற்படாதவாறு ஆங்கிலேயர்களுக்கு நாம் பாது காப்பு அளிக்க வேண்டும். நம்முடைய அகிம்சைப் பிரதிக்ஞையில் பூரணமான பணிவும், நமது பரம விரோதியிடத்திலும்கூட நல் லெண்ணமும் அடங்கியிருக்கின்றன. இந்த உண்மை உங்களுக் கும் எனக்கும் தெரிந்திருப்பது போல் மற்ற ஒவ்வொருவருக்கும் தெரிந்திருக்குமாயின், நான் இவ்விஷயத்தை விவரித்துக் கூறும் படி நேர்ந்திராது. என்றால் கூறப்பட்ட யோசனையின்படி இந் தியா ஆக்க வேலையில் தனது முழு கவனத்தையும் செலுத்துமா யின், அந்த அவசியமான உணர்ச்சி தானாகவே ஏற்பட்டுவிடும்.

எனக்கு அளிக்கப்பட்டுள்ள சிறைத் தண்டனை நீண்ட காலத்திற்கு முற்றிலும் போதுமானது. எவருக்கும் விரோதமாக என் மனத்தில் கெட்ட எண்ணம் இல்லை என்பதைப் பணிவுடன் கூறிக்கொள்ளுகிறேன். என் நண்பர்களில் சிலர் என்னைப்போல் அவ்வளவு சாத்விகர்களாக இருக்க வேண்டும் என்பதில்லை. முற்றிலும் நிரபராதிகளே சிறைத் தண்டனைக்கு உள்ளாக வேண்டுமென நாம் உத்தேசித்தோம். முற்றிலும் நிரபராதி யென்று கூறிக்கொள்ள நான் அனுமதிக்கப்படுவேனாயின் என் னைத் தொடர்ந்து வேறெவரும் சிறைக்கு வரவே கூடாது என்பது தெளிவாகிறது. அரசாங்கத்தின் ஆட்சி முறையை ஸ்தம்பிக்கச் செய்ய வேண்டும் என்பதே நமது விருப்பமாகும். எனினும் மிரட்டலால் அல்ல, நம்முடைய மாசற்ற தன்மையின் எதிர்க்க முடியாத சக்தியினாலேயே அரசாங்க முறையை ஸ்தம்பிக்கச் செய்ய விரும்புகிறோம். என் அபிப்பிராயத்தில், எப்படியாவது சிறைகளை நிரப்ப வேண்டும் என்பது மிரட்டலே ஆகும். முற்றி லும் நிரபராதி என்று கருதப்படும் ஒருவர் அக்காரியத்திற்குப் போதவில்லை என்பது தெரியும் வரையில், மேற்கொண்டு நிரபரா திகள் ஏன் சிறைத் தண்டனையை நாட வேண்டும்?

மேற்கொண்டு சிறைத் தண்டனையை நாடக்கூடாதென்று நான் எச்சரிப்பதற்கு, நாம் இப்போது அதிலிருந்து நழுவிவிட வேண்டும் என்பது அர்த்தமில்லை. அரசாங்கம் ஒவ்வொரு சாத் விக ஒத்துழையாமைக்காரரையும் சிறைப்படுத்தினால்கூட, நான் அதை வரவேற்பேன். ஆனால், அவ்விதம் சிறைப்படுவது, தற் காப்பிற்காகவோ அல்லது அரசாங்கத்தை எதிர்த்துப் போராடு வதற்காகவோ நாமாகக் கைக்கொள்ளும் சாத்விகச் சட்ட மறுப்பின் காரணமாக மாத்திரம் இருக்கக்கூடாது. சிறையில் இருப்பவர்களைப் பற்றி தேசம் அலட்டிக்கொள்ளாதென்றும் நான் நம்புகிறேன். தங்களுக்கு விதிக்கப்பட்ட சிறைத் தண்ட னையின் காலத்தைப் பூரணமாக அனுபவிப்பதால் அவர்களுக்கும் நன்மை, நாட்டுக்கும் நன்மையாகும். சுயராஜ்ய இந்தியாவின்

பார்லிமெண்டில் நிறைவேறும் ஒரு சட்டத்தினால் மாத்திரமே, அவர்கள் தங்கள் தண்டனைக் காலம் முடிவதற்கு முன் விடுதலை பெறுவது தகுதியாக இருக்கும். எல்லோரும் கதரைக் கைக் கொள்ளுவதே சுயராஜ்யம் என்பது எனது உறுதியான கொள் கையாகும்.

இக்கடிதத்தில் நான் தீண்டாமையைப் பற்றிக் குறிப்பிடா மல் விட்டிருக்கிறேன். தீண்டாமை ஒழிந்து தீர வேண்டுமென ஒவ்வொரு நல்ல ஹிந்துவும் கருதுகிறார் என்பது எனது நிச்சய மான அபிப்பிராயமாகும். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையைப் போல், தீண்டாமையை ஒழிக்க வேண்டியதும் அவசியமாகும்.

நான் உங்களிடம் ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்துள் ளேன். இந்தத் திட்டம்தான் மிகச் சிறந்தது, மிகவும் விரைவில் பலனளிக்கக்கூடியது என்பது என் அபிப்பிராயம். பொறுமை யிழந்து அவசரப்படும் எந்தக் கிலாபத்காரரும் இதைக் காட்டி லும் சிறந்த திட்டத்தைத் தயாரிக்க முடியாது. நமது தேசத்தை அது அடைய வேண்டிய லட்சியத்திற்கு நடத்திச் செல்ல வேண் டிய ஆரோக்கியத்தையும் விவேகத்தையும் உங்களுக்கு இறை வன் அருள் புரிவாராக.

—'எங் இந்தியா' - 16—3—1920

# 36

# பதக்கங்களைத் துறந்தார்

*[1920 ஆகஸ்டு 1-ஆம் தேதி காந்திஜி தமது விருதுக ளையும் பதக்கங்களையும் துறந்து, வைஸ்ராய் லார்டு செம்ஸ் போர்டுக்கு ஒரு கடிதம் எழுதியதன் மூலம் ஒத்துழை யாமை இயக்கத்தை ஆரம்பித்து வைத்தார். அந்த இயக் கம் ஆரம்பிக்கப்படுவதை மாளவியாஜி போன்ற பெரிய காங்கிரஸ் தலைவர்கள் ஆதரிக்கவில்லை. "மாளவியாஜி யைத் திருப்தி செய்வதற்காக நான் எவ்வளவோ செய் வேன், எவ்வளவோ விட்டுக்கொடுப்பேன். இருந்தாலும், ஒத்துழையாமைக் கமிட்டி வகுத்துள்ள பாதையிலிருந்து நான் அப்பால் போகக்கூடாது. இந்த உயர்ந்த கடமையி லிருந்து நான் யாருக்காகவும் வழுவிவிட முடியாது" என்று காந்திஜி கூறிவிட்டார். வைஸ்ராய்க்குக் காந்திஜி எழுதிய சரித்திரப் புகழ் பெற்ற அந்தக் கடிதம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]*

தென்னுப்பிரிக்காவில் நான் புரிந்த ஜீவகாருண்யத் தொண்டிற்காக எனக்கு, உங்களுக்கு முன் பதவியில்* இருந்தவரால் கெய்சர்-இ-ஹிந்த் தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது. 1906-இல் இந்தியத் தொண்டர் வைத்தியப் படையை மேற்பார்வையிட்ட அதிகாரி என்ற முறையில் நான் செய்த தொண்டுகளுக்காகத் தென்னுப்பிரிக்காவில் எனக்கு ஜுலு† யுத்தப் பதக்கம் அளிக்கப்பட்டது. 1899-1900-ஆம் வருடத்திய போயர் யுத்தத்தின்போது, காயமடைந்தவர்களைப் படுக்கையில் தூக்கிச் செல்லும் இந்தியத் தொண்டர் படையின் உதவி சூபரிண்டெண்ட் என்ற முறையில் நான் செய்த ஊழியத்திற்காக எனக்குப் போயர் யுத்தப் பதக்கம் வழங்கப்பட்டது. இந்தப் பதக்கங்களையெல்லாம் நான் தங்களுக்குத் திருப்பி அனுப்பியுள்ளேன். அவ்விதம் திருப்பி அனுப்புவதில், எனக்கு வேதனை இல்லாமலில்லை. கிலாபத் இயக்க சம்பந்தமாக இன்று ஆரம்பிக்கப்பட்டுள்ள ஒத்துழையாமைத் திட்டத்தை அனுசரித்தே, இந்தப் பதக்கங்களை நான் திருப்பி அனுப்பத் துணிகிறேன். இந்தக் கௌரவங்களையெல்லாம் மதிப்பிற்கு உரியவையாகவே கருதுகிறேன். எனினும், என் நாட்டு மக்களாகிய முஸ்லிம்களின் மத உணர்ச்சியைப் புண்படுத்தும் வகையில் இழைக்கப்பட்டுள்ள தவறால் அவர்கள் வேதனை அடைந்து வருகையில், அப்பதக்கங்களை அணிந்துகொள்ள என் மனச்சாட்சி இடம் கொடுப்பது முடியாத காரியம்.

கிலாபத் விஷயத்தில் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய சர்க்கார் மனச்சாட்சிக்கு விரோதமாகவும், ஒழுக்கக் கேடாகவும், அநீதியாகவும் நடந்து கொண்டிருக்கிறார்கள்; தங்களுடைய ஒழுக்

* 1910-ஆம் ஆண்டிலிருந்து 1916 வரையில் இந்தியாவில் வைஸ்ராயாக இருந்த லார்டு ஹார்டிஞ்சையே காந்திஜி குறிப்பிட்டுள்ளார். லார்டு ஹார்டிஞ்ச் காந்திஜிக்கு, அவர் தென்னுப்பிரிக்காவில் நடந்த போயர் யுததத்தின்போது புரிந்த ஜீவகாருண்யத் தொண்டிற்காக கெய்சர்-இ-ஹிந்த் தங்கப் பதக்கத்தை வழங்கினர். வைஸ்ராய் பதவியைத் தவிர லார்டு ஹார்டிஞ்ச் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் வெளிநாட்டு உதவி மந்திரி, பாரிசில் பிரிட்டிஷ் ஸ்தானீகர் முதலிய மற்றும் பல பொறுப்பு வாய்ந்த உயர் பதவிகளை வகித்தார்.

† ஜுலுக்கள் தென்னுப்பிரிக்காவில் உள்ள ஒரு ஜாதியினர். அவர்கள் சிறந்த போர் வீரர்களாவர். 1879-ஆம் ஆண்டில் அவர்களுக்கும் நாடு பிடிக்கும் ஆசைகொண்ட பிரிட்டிஷாருக்கும் நடந்த யுத்தத்தில் பிரிட்டிஷ் துருப்புகள் பன்முறையும் தோல்வியடைந்தன. எனினும், இறுதியில் ஜுலுக்களின் மன்னரான ஸெடிவாயோ தோல்வியுற்று, பிரிட்டிஷாரால் கைது செய்யப்பட்டார். அவரது நாடான ஜுலுலாந்தை, அதாவது நேட்டாலின் ஒரு பகுதியை பிரிட்டிஷார் ஆக்கிரமித்துக்கொண்டனர். பின்னர் 1906-இல் ஜுலுக்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் ஏற்பட்ட போரில் காந்தியின் தலைமையிலிருந்த வைத்திய உதவிப் படை காயம்பட்டோருக்குச் சேவை செய்து வந்தது. காயமடைந்த ஜுலுக்களைப் பிரிட்டிஷார் கவனிக்காமல் விட்டுவிட்டனர். குற்றுயிராகக் கிடந்த ஜுலுக்களுக்குக் காந்திஜியும் அவரது குழுவினரும் உதவி புரிந்து அவர்களைக் காப்பாற்றினர். இந்த ஜீவகாருண்யத் தொண்டிற்காகவே காந்திஜிக்கு ஜுலு யுத்தப் பதக்கம் வழங்கப்பட்டது.

கக் கேடான காரியம் நியாயமென்பதற்காக, தவறுக்கு மேல் தவறு இழைத்து வருகிறார்கள். என்னுடைய இந்த அபிப்பிராயத்தைச் சென்ற ஒரு மாதமாக நிகழ்ந்துள்ள சம்பவங்கள் உறுதிப்படுத்தியுள்ளன. அத்தகைய ஓர் அரசாங்கத்தின் விஷயத்தில் மரியாதையோ, அன்போ வைத்துக் கொண்டிருப்பது முடியாத காரியம்.

பஞ்சாப் பிரச்னை விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கமும் உங்கள் அரசாங்கமும் கொண்டுள்ள நிலை, எனக்கு மேற்கொண்டு மிகுந்த அதிருப்தியளிப்பதற்குக் காரணமாகியிருக்கிறது. 1919 ஏப்ரல் மாதம் பஞ்சாபில் நிகழ்ந்த குழப்பங்களுக்குக் காரணங்களை விசாரித்த காங்கிரஸ் கமிஷனர்களில் ஒருவராக இருக்கும் கௌரவம் எனக்குக் கிடைத்ததை நீங்கள் அறிவீர்கள். பஞ்சாபில் லெப்டினன்ட் கவர்னர் பதவியை வகிக்க சர் மைக்கேல் ஓட்வியர் முற்றிலும் தகுதியற்றவர் என்பதும், அமிருதசரஸில் ஜனங்கள் ஆத்திரம் அடையும்படி செய்ததற்கு அவரது கொள்கையே முக்கியமான காரணம் என்பதும் தீர்க்காலோசனையுடன் கூடிய எனது உறுதியான அபிப்பிராயமாகும்.

ஆத்திரமடைந்த மக்களின் அத்து மீறிய நடவடிக்கைகள் மன்னிக்க முடியாதவை என்பதில் சந்தேகமில்லை. தீ வைத்தல், நிரபராதிகளான ஐந்து ஆங்கிலேயர்களின் கொலை, கன்னி ஷெர்வுட்டைக் கோழைத்தனமாகத் தாக்கியது முதலியன மிகவும் வருந்தத்தக்கவை; எவ்விதக் காரணமும் இல்லாதவை. ஆனால், ஜெனரல் டயர், கர்னல் பிராங்க் ஜான்சன், கர்னல் ஓப்ரயன், பாஸ்வொர்த் ஸ்மித், ராய் ஸ்ரீ ராம், மாலிக் கான் முதலிய மற்ற அதிகாரிகள் எடுத்துக் கொண்ட தண்டனை முறைகள், ஜனங்கள் செய்த குற்றத்திற்குச் சிறிதும் பொருத்தமில்லாத அளவுக்கு மிகவும் அதிகமானவையே. அவர்கள் வேண்டுமென்றே செய்த கொடுமைகளுக்கும், அட்டூழியங்களுக்கும், ஜீவகாருண்ய மற்ற செய்கைகளுக்கும் இக்காலத்தில் உவமையே காண்பதரிது. அதிகாரிகளின் குற்றங்களை நீங்கள் பொருட்படுத்தாமல் விட்டது, சர் மைக்கேல் ஓட்வியர் குற்றமற்றவர் என்று நீங்கள் பிரகடனம் செய்தது, ஸ்ரீ மாண்டேகுவின் அறிக்கை, எல்லாவற்றையும்விட மேலாக பஞ்சாப் நிகழ்ச்சிகளைப் பற்றிய வெட்கக்கேடான அறியாமை, இந்தியர்களின் உணர்ச்சியைச் சிறிதும் பொருட்படுத்தாத லார்டு சபையினரின் கல் நெஞ்சம் முதலியவை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் எதிர்காலத்தைப் பற்றி என் மனத்தில் படுமோசமான அவநம்பிக்கையை உண்டாக்கியிருக்கின்றன; என்னைத் தற்போதுள்ள அரசாங்கத்துடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளாமல் பிரித்து விடும்படி செய்திருக்கின்றன; இதுவரை அரசாங்கத்துடன் இருதயபூர்வமாகவும், விசுவாசத்துடனும் ஒத்துழைத்து வந்த என்னை, இனி அவ்விதம் ஒத்துழைக்க முடியாதவாறு செய்திருக்கின்றன.

இந்திய அரசாங்கத்திற்கு, மக்களின் நலனில் எள்ளளவும் அக்கறை இல்லையென்பது இப்போது ருசுவாகியிருக்கிறது. அப்படிப்பட்ட ஓர் அரசாங்கம் தன் தவறை உணர்ந்து வருந்தும்படி செய்ய, விண்ணப்பங்கள், தூது கோஷ்டிகள் அனுப்புவது போன்ற சாதாரண முறைகளின் மூலம் கிளர்ச்சி செய்வதால் யாதொரு பரிகாரமும் ஏற்படாது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயமாகும். ஐரோப்பிய நாடுகளில் கிலாபத், பஞ்சாப் சம்பவங்களைப் போன்ற அதிகாரிகளின் துக்ககரமான அநியாயங்களை மன்னிப்பது, மக்களின் புரட்சியிலும் ரத்தக் களரியிலும் வந்து முடிந்திருக்கும். அத்தகைய தவறுகள் தேச மக்களை ஆண்மையற்றவர்களாகச் செய்கின்றன. எனவே, தேச மக்கள் ஆண்மையற்றுப் போகும்படி செய்வதை, ஐரோப்பிய நாடுகளில் என்ன நேர்ந்தாலும் எதிர்த்திருப்பார்கள்.

ஆனால், இந்தியாவில் உள்ள பாதி மக்கள் பலாத்கார எதிர்ப்பைக் கைக்கொள்ள முடியாதவாறு மிகவும் பலவீனமாக இருக்கிறார்கள்; மற்றொரு பாதியினர் அவ்விதம் செய்ய விருப்பமற்றவர்களாக இருக்கிறார்கள். அதனாலேயே, நான் ஒத்துழையாமையைப் பரிகார முறையாக யோசனை கூறத் துணிந்திருக்கிறேன். அரசாங்கத்துடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளாமலிருக்க விரும்புவோருக்கு ஒத்துழையாமை வழி காட்டுகிறது. அது பலாத்காரமின்றியும் ஒழுங்கான முறையிலும் கைக்கொள்ளப்படுமாயின், அரசாங்கத்தை அதன் மோசமான வழியிலிருந்து திரும்பும்படியும், செய்துவிட்ட அக்கிரமங்களைச் சீர்திருத்திக் கொள்ளும்படியும் அது கட்டாயப்படுத்தியே தீரும். எனக்கு மக்களின் ஆதரவு எவ்வளவு தூரம் கிடைக்கிறதோ அவ்வளவுக்கு நான் ஒத்துழையாமைக் கொள்கையைப் பின்பற்றி வருவேன். என்றாலும், நீதி வழங்குவதற்குற்ற வழியை நீங்கள் இனியாவது காண்பீர்கள் என்பதில் நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. எனவே, ஜனங்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட தலைவர்கள் அடங்கிய மகாநாடு ஒன்றைக் கூட்டும் படியும், அவர்களுடன் கலந்தாலோசித்து, முஸ்லிம்களைச் சமாதானம் செய்யக் கூடியதும், துரதிருஷ்ட பஞ்சாபிற்குப் பரிகாரம் அளிக்கக்கூடியதுமான ஒரு வழியைக் கண்டு பிடிக்கும்படியும் உங்களைப் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

'யங் இந்தியா' 4—8—1920

## 37

# அபராதம் செலுத்த மறுத்தல்

சென்ற வருடம் ஏப்ரல் மாதம் நிகழ்ந்த தவறுகளுக்காக, அகமதாபாத் கடுமையான அபராதத்திற்கு உள்ளாகியது என்பது 'எங் இந்தியா' வாசகர்கள் எல்லோருக்கும் தெரிந்திராது. அகமதாபாத் வாழ் மக்களிடமிருந்து அபராதம் வசூலிக்கப் பட்டது. ஆனால், கலெக்டரின் விருப்பத்தை அனுசரித்து சிலருக்கு அபராதத்திலிருந்து விலக்களித்தனர். அபராதம் விதிக்கப் பட்டவர்களில், வருமான வரி செலுத்துவோரும் சிலர் இருந்தனர். அவர்கள், தாங்கள் செலுத்தும் வருமான வரியில் மூன்றில் ஒரு பங்கு அபராதம் செலுத்தும்படி கட்டளையிடப்பட்டனர். தங்களுக்கு விதிக்கப்பட்ட அபராதத் தொகைகளைச் செலுத்த முடியாதவர்களும் இருந்தார்கள். பிரபல பாரிஸ்டர் ஸ்ரீ வி. ஜே. பட்டேல், பிரபல டாக்டர் கனுகா இவ்விருவரும் வரி கொடுக்க முடியாதவர்களின் கோஷ்டியில் இருந்தார்கள். கலகத்தை அடக்க அவர்கள் அதிகாரிகளுக்கு உதவியாக இருந்தார்கள் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். அவர்கள் சத்தியாக்கிரகிகள் என்பதில் சந்தேகமில்லை. எனினும், அவர்கள், தங்களுக்கு அபாயம் நேரும் போல் இருந்தும்கூட, மக்களின் ஆவேசத்தைத் தணிக்க முயற்சித்தார்கள். அப்படியிருந்தும் அதிகாரிகள் அவர்களுக்கு அபராதத்திலிருந்து விலக்கு அளிக்க மறுத்துவிட்டனர். தனி நபர்கள் விஷயத்தில் தங்களுடைய அதிகாரத்தை உபயோகித்து விலக்களிக்க அதிகாரிகளுக்குக் கஷ்டமாக இருந்தது. அது போலவே, தங்கள் மீது சிறிதும் குற்றம் இராததால் அபராதம் செலுத்துவதும் அவ்விருவருக்கும் கஷ்டமாக இருந்தது. அவர்கள் அதிகாரிகளுக்குத் தரும சங்கடமான நிலைமையை உண்டுபண்ண விரும்பவில்லை. அதே சமயம் அவர்கள் தங்களுடைய சுயமரியாதையையும் பாதுகாப்பதில் ஆர்வம் கொண்டிருந்தனர். அதற்காக அவர்கள் யாதொரு கிளர்ச்சியும் செய்யவில்லை. மேலே கண்ட காரணங்களையொட்டி அவர்கள் அபராதத் தொகைகளைச் செலுத்த தங்களுக்குள்ள இயலாமையை அதிகாரிகளுக்குத் தெரிவித்துக் கொண்டார்கள். எனவே, அவர்களுக்கு எதிராக ஜப்தி உத்தரவு பிறப்பிக்கப் பட்டது.

டாக்டர் கனுகா மிகவும் மும்முரமாகத் தொழில் நடத்தி வரும் டாக்டராகையால், அவரது பணப்பெட்டி எப்போதும் நிறைந்திருக்கும். விழிப்புடன் இருந்த ஜப்தி அதிகாரி அவரது பணப் பெட்டியை ஜப்தி செய்து, நிறைவேற்று மனுவில் கண்டிருந்த தொகையைக் கறந்து கொண்டு விட்டார். இந்தத் தோரணையில் வக்கீல் தொழில் நடப்பது முடியாத காரியம்

அல்லவா! எனவே, ஸ்ரீ பட்டேல் பகிரங்கமாகப் பணப் பெட்டி எதுவும் வைத்துக் கொள்ளவில்லை. எனவே அவர் உட்காரும் அறையிலிருந்து ஒரு சோபாவை அதிகாரிகள் ஜப்தி செய்து விற்பனைக்காக விளம்பரப்படுத்தி, விற்றும்விட்டார்கள். இரு சத்தியாக்கிரகிகளும் அவ்விதமாகத் தங்களுடைய மனச்சாட்சியைக் காப்பாற்றிக்கொண்டார்கள்.

தங்களை அதிபுத்திசாலி என்று எண்ணிக்கொண்டிருப்போர், ஜப்தி மனுக்களை அனுமதித்து, அபராதத் தொகைகளைச் செலுத்துவது மடத்தனமென்று நகைக்கலாம். அத்தகைய சம்பவங்களைப் பெருக்கிப் பாருங்கள். அதிகாரிகள் அவ்விதம் ஆயிரக்கணக்கான 'ரிட்' மனுக்களை நிறைவேற்றும்படி நேருவதால் ஏற்படக்கூடிய விளைவைக் கற்பனை செய்து பாருங்கள். ஒரு சில பிடிவாதக்காரர்கள் விஷயத்தில் 'ரிட்' மனுக்கள் சாத்தியமாகும். யாதொரு தவறும் செய்யாத, ஒரு நியாயமான கொள்கையை ஸ்தாபிப்பதற்காக வரி செலுத்த மறுக்கும் உயர்ந்த சிந்தனையுள்ள பலருக்கு விரோதமாக அந்த மனுக்களை நிறைவேற்றுவது மிகவும் சங்கடமான காரியமாகும். அங்கே ஒருவரும், இங்கே ஒருவருமாகத் தனி நபர்கள் இந்தக் கண்டன முறையைக் கைக்கொள்ளுவது அதிக கவனத்தை இழுக்காமலிருக்கும். ஆனால், களங்கமற்ற உதாரணங்களுக்கு, தானகவே பெருகிப் பரவும் விசித்திர சக்தி இருக்கிறது. அவை விளம்பரத்திற்குத் தகுதி வாய்ந்தவையாக இருப்பதுடன், துன்பத்திற்கு உள்ளாவோர் வெறுப்பிற்கும் கண்டனத்திற்கும் பதிலாகப் பாராட்டுதலுக்கு உரியவர்களாகும்படியும் செய்கின்றன.

தோரோவைப் போன்ற அறிஞர்கள் தங்களுடைய சொந்த உதாரணங்களின் மூலம் அடிமைத்தனத்தையே ஒழித்தனர். தோரோ கூறுவதாவது :

"நான் இதை நன்ருக அறிவேன். அதாவது இந்த மாஸசூஸெட்ஸ் மாகாணத்தில்* உள்ள ஆயிரம் பேர், அல்லது நூறு பேர், அல்லது நான் குறிப்பிடும் பத்து பேர், யோக்கியப் பொறுப்புள்ள பத்து பேர் மாத்திரம், ஏன் நேர்மையுள்ள ஒரே ஒருவர் அடிமைகளை வைத்துக்கொள்ள மறுத்து, அதன் சம்பந்தமான கூட்டுப் பங்காளிப் பொறுப்பிலிருந்து விலகிக்கொண்டதற்காகச் சிறையில் அடைக்கப்படுவாராயின், அதுதான் அமெரிக்காவில் அடிமைத்தனமே ஒழிவதற்குக் காரணமாக இருக்கும். ஆரம்பம் அற்பமாக இருப்பது போல் தோன்றுவதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. ஒரு தடவை செய்வதைச் செவ்வனே செய்துவிட்டால், அது நிச்சயமாக நிரந்தரமான பலனைக் கொடுத்துவிடும்."

---

* மாஸசூஸெட்ஸ், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள மாகாணங்களில் ஒன்று. மற்ற அமெரிக்க மாகாணங்களைப் போல் அங்கும் நீக்ரோக்களை அடிமைகளாக நடத்தும் கொடுமை இருந்து வந்தது. அறிஞர் தோரோ அந்த விபரீதத்தையே குறிப்பிட்டிருக்கிருர்.

தோரோ மேலும் கூறுவதாவது :

"குற்றவாளியின் சொத்துக்களைக் கைப்பற்றுவதைக் காட்டிலும், குற்றவாளியைச் சிறையில் வைக்கவேண்டும் என்பதே எனது கருத்தாகும். அந்த இரு முறைகளின் நோக்கமும் ஒன்றே. ஆயினும், களங்கமற்ற உரிமையை ஸ்தாபிக்க முற்படுவோர், ஊழல் நிறைந்த அரசாங்கத்திற்கு மிகவும் அபாயத்தை உண்டாக்கக்கூடியவர்களாவர். பொதுவாக அத்தகையோர் சொத்துக்களைச் சேமித்து வைக்கத் தங்கள் காலத்தை அதிகமாகச் செலவழிப்பதில்லை."

எனவே ஒரு சிறந்த லட்சியத்திற்காக, சிறந்த உணர்ச்சியுடன் அவர்கள் காட்டிய சிறந்த உதாரணத்திற்காக, ஸ்ரீ பட்டேலையும் டாக்டர் கனுகாவையும் நாம் பாராட்டுகிறோம்.

—'யங் இந்தியா' - 7—7—1920

# 38

# சுயராஜ்யமும் சூன்ய ராஜ்யமும்

வரிகள் செலுத்துவதை நிறுத்துவதன் மூலம், மக்களின் சாத்விக சட்ட மறுப்பை அவசரமாக அமலுக்குக் கொண்டுவர வேண்டுமென்ற ஆர்வம் சில இடங்களில் இருந்து வருவதை நான் கவனித்து வருகிறேன். அபாயகரமான அந்தச் சாகசத்தில் ஈடுபடுமுன், மிகுந்த எச்சரிக்கையுடனிருக்க வேண்டுமென்றே நான் வற்புறுத்துவேன். பலாத்காரத்தைக் குறித்து நாம் அசட்டையாக இருந்துவிடக்கூடாது. தங்களுடைய பயிர்கள், கால்நடைகள் அல்லது உடைமைகள் முதலியவை பறிமுதல் செய்யப்படுவதை நேரில் காணும்போது, பாமர மக்கள் தன்னடக்கத்தைக் காட்டுவார்களா என்பதை நாம் நிச்சயம் செய்து கொள்ள வேண்டும். வரி கொடாமைதான், ஓர் அரசாங்கத்தை அதிசீக்கிரத்தில் கவிழ்ப்பதற்குற்ற முறைகளில் ஒன்று என்பதை நான் அறிவேன். வரி கொடாமை இயக்கத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கு அவசியமான அளவு பலத்தையும் ஒழுங்கையும் நாம் இன்னும் உருவாக்கவில்லை என்பதையும் நான் நிச்சயமாக அறிவேன். ஒருவேளை பர்டோலியையும், அதற்கும் குறைந்த அளவு ஆனந்தையும் தவிர, இந்தியாவில் உள்ள ஒரு ஜில்லாகூட இன்னும் அதற்குத் தயாராக இல்லை.

அத்தகைய ஜில்லாக்களிலுள்ள ஐம்பது சத விகிதத்திற்கு மேற்பட்ட மக்கள் இன்னும் தீண்டாமைச் சாபக்கேட்டை ஒழிக்க வேண்டும்; தங்கள் தங்கள் ஜில்லாவில் உற்பத்தியான கதரையே உடுத்த வேண்டும்; எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் சாத்விகர்களாக இருக்கவேண்டும்; ஒத்துழைப்

பாளராக இருந்தாலும் சரி, ஒத்துழையாதாராக இருந்தாலும் சரி, எல்லோருடனும் பரிபூரணமான நட்புடன் வாழ்ந்துவர வேண்டும். அவசியமான கட்டுதிட்டமின்றி வரி கொடாமையை ஆரம்பிப்பது, மன்னிக்க முடியாத பைத்தியக்காரத்தனமான ஒரு செயலாகும். அது, சுயராஜ்யத்திற்குப் பதிலாக சூன்ய ராஜ்யத்திற்குக் கொண்டு போய்விடக்கூடும்.

எனவே, என்னுடைய மேற்பார்வையில் இல்லாமலும், டில்லியில் வகுக்கப்பட்ட நிபந்தனைகளை நிறைவேற்றாமலும், சாத்விக சட்ட மறுப்பைக் கைக்கொள்ள முயற்சிக்கக்கூடாது என்று நான் பல தடவை விடுத்துள்ள எச்சரிக்கையை மீண்டும் வற்புறுத்துகிறேன்.

—'எங் இந்தியா' - 19—1—1922

# 39

# வரிகொடாமை இயக்கத்தில் உள்ள அபாயம்

வரி கொடாமை பற்றிய எண்ணமே எங்கும் பரவி நிற்கிறது. இந்தியாவின் மற்றெந்த பாகத்தையும் காட்டிலும் ஆந்திரர்கள் தான் அவ்விஷயமாக அதிகக் கூக்குரலிட்டு வருகிறார்கள். காங்கிரஸ் ஒவ்வொரு மாகாணத்திற்கும் மாகாண சுயாட்சி அளித்திருக்கிறதெனினும், எனது மேற்பார்வையிலே சில பிரதேசங்களில் அந்தப் பரிசோதனையை நானே முயற்சித்துப் பார்க்கும் வரையில், வரிகொடாமை இயக்கத்தில் ஈடுபட வேண்டாமென்று மாகாணங்களை எச்சரிக்கத் துணிந்துள்ளேன்.

தேசீய இயக்கத்தில் ஆழ்ந்த அனுதாபமுள்ள ஒரு நண்பர் இவ்விஷயமாகத் தமக்குள்ள பீதியை வெளிப்படுத்தியுள்ளார். அவர் கூறுவதாவது :

"சாத்விக ஒத்துழையாமை இயக்கமானது, வரி கொடாமை உருவத்தில் சாத்விகச் சட்ட மறுப்பில் ஈடுபடும்போது எவ்வளவு தூரம் அது கண்டிப்பான எல்லையை மீறிச் செல்லுகிறதென்பதை நான் பன்முறையும் சிந்தித்திருக்கிறேன். சாத்விக ஒத்துழையாமையை, நான் முக்கியமாக ஓர் ஆன்மிக இயக்கமாகவே கருதுகிறேன். இவ்விஷயத்தில் காந்திஜி வேறுவிதமாக நினைக்கவில்லை என்பதையும் நான் அறிவேன். வரி கொடாமைத் திட்டமானது கண்டிப்பான எல்லையைத் தாண்டி பலாத்காரத்தில் கொண்டுபோய்விடாதா? அது, அகிம்சைக் கொள்கையில் இன்னும் ஊறித் திளைக்காத மக்களை இயக்

கத்தில் கொண்டுவந்து சேர்த்துவிடாதா? அரசாங்கத்தை வெற்றி கொள்ளலா மென்று காந்திஜி நினைக்கும் ஓர் ஆன்மிக இயக்கத்திற்கு அது, அவர் தம்மை யறியாமலேயே லோகாயதமான ஒரு கவர்ச்சியைக் காட்டுவதாகாதா? பலாத் கார சுபாவமும், பலாத்காரத்தில் நம்பிக்கையும் பாமர மக்களிடமிருந்து அகற்றப் படவில்லை என்பதைச் சமீப கால நிகழ்ச்சிகள் காட்டியுள்ளன. எனவே, வரி கொடாமை உருவத்தில் சாத்விகச் சட்ட மறுப்புத் திட்டத்தை நிறைவேற்ற முற்படுவது, கண்மூடித் தனமாக இருளில் பாய்வது போல் பேராபத்தான விளைவுகளை உண்டாக்கும். ஆகையால், அதற்குள் அந்த உருவத்தில் சாத்விகச் சட்ட மறுப்பைக் காந்திஜி ஆரம்பித்துவிடக்கூடாதென்பதே எனது மட்ட மற்ற ஆர்வமாகும்.''

சாத்விகக் கொள்கையில் இன்னும் ஊறித் திளைக்காத வர்கள் வரிகொடாமை இயக்கத்தில் சேர்ந்துவிடுவார்கள் என்ற ஆட்சேபணைக்கு ஆதாரம் இருக்கிறது. அவ்விதம் சேர்ந்துவிடுவார்கள் என்பது முற்றிலும் உண்மையே. அது உண்மை என்பதனால்தான், நண்பர் கூறியிருப்பது போல் அதில் லோகாயதமான கவர்ச்சிக்கு இடமிருக்கிறது. எனவே, வரி கொடாமைக்கு உடனடியான ஆதரவு இருக்கிறது என்பதற்காக அதை நாம் ஆரம்பித்துவிடக் கூடாதென்று ஏற்படுகிறது. உடனடியான ஆதரவு நாசகரமான ஆசையையே காட்டுகிறது. அத்தகைய வரி கொடாமை சாத்விகமாகவோ அல்லது பலாத் காரமற்றதாகவோ இராது; கடும் தண்டனைக்குரிய குற்ற மாகவோ அல்லது பலாத்காரத்திற்கு மிகவும் வாய்ப்பு அளிப்ப தாகவோதான் இருக்கும்.

இச்சந்தர்ப்பத்தில் நாம் பண்டித ஜவாஹர்லால் நேருவின் அனுபவத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். விவசாயிகள், அகிம்சைப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்ட பின், பலாத்காரத்தில் ஈடுபடும்படி நேருஜி ஆலோசனை கூறினால் தாங்கள் அவ்விதமே செய்யத் தயாராக இருப்பதாக அவரிடம் கூறினார்கள். எனவே, சாத்விக வரி கொடாமையின் காரணத் தையும் உயர்வையும் நன்கு அறிந்துகொள்ளும்படி விவசாயிகள் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். தங்களுடைய உடைமைகள் பறிமுதலாவதையும், தங்கள் கால்நடைகளும் மற்ற சாதனங் களும் நிர்ப்பந்தமாக விற்கப்படுவதையும் அவர்கள் அமைதியா கச் சகித்துக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். அத்தகைய பறிமுதல்கள் தாற்காலிகமானவையாகத்தான் இருக்க முடியும். அத்தகைய உறுதி அவர்களுக்கு ஏற்படும் வரையில், வரி கொடுப் பதை நிறுத்தி வைக்கும்படி அவர்களுக்கு ஆலோசனை கூறக் கூடாது.

புனிதமான பாலஸ்தீனத்தில் என்ன நிகழ்ந்தது என்பதை விவசாயிகளுக்கு எடுத்துக் கூற வேண்டும். அபராதம் விதிக்கப் பட்ட அராபியர்களைச் சிப்பாய்கள் சூழ்ந்துகொண்டனர். ஆகா

யத்தில் விமானங்கள் வட்டமிட்டுக்கொண்டிருந்தன. உடல் வலி வும் திடகாத்திரமும் உள்ள அவர்களின் கால்நடைகள் பறிமுதல் செய்யப்பட்டன. அவை பட்டியில் அடைக்கப்பட்டதுடன், அவற்றிற்குத் தீனியோ, தண்ணீரோகூடக் கொடுக்கவில்லை. இதைக் கண்ட அராபியர்கள் உணர்ச்சியிழந்து, நிராதரவாக நின்றனர். கடைசியில் அவர்கள், தங்களுக்கு விதிக்கப்பட்ட அப ராதத் தொகையைக்கொண்டு வந்தனர். அவர்கள் மேற்கொண் டும் தண்டம் கொடுக்க வேண்டியிருந்தது. அவர்களை ஏளனம் செய்வது போல், செத்தும் சாகவும் இருந்த அவர்களுடைய கால்நடைகள் அவர்களிடமே திருப்பிக் கொடுக்கப்பட்டன. அவற்றைக் காட்டிலும் மோசமான சம்பவங்கள் இந்தியாவில் நிகழக்கூடும்; நிச்சயமாக நிகழ்ந்தே தீரும். இந்திய விவசாயிகள் முற்றிலும் சாத்விகமாக நடந்துகொள்ளத் தயாராக இருக்கிறார் களா? தங்களுடைய கால்நடைகள் பறிமுதல் செய்யப்பட்டு, அவை பசியினாலும் தாகத்தினாலும் சாவதைப் பார்த்துக் கொண்டிருக்கத் தயாராக இருக்கிறார்களா? ஏற்கனவேயே அத்தகைய சம்பவங்கள் ஆந்திர தேசத்தில் நிகழ்ந்துள்ளன என்பதை நான் அறிவேன். பொறுமையைச் சோதிக்கும் அத் தகைய சந்தர்ப்பங்களில்கூட, பொதுவாக இந்திய விவசாயிகள் மனமறிந்தும், தீர்க்காலோசனையுடனும் அமைதியாக இருப்பார் களாயின், அவர்கள் வரி கொடாமைக்குக் கிட்டத்தட்டத் தயா ராகிவிட்டார்கள் எனலாம்.

நான் ஏன் 'கிட்டத்தட்ட' என்று கூறியிருக்கிறேன் என்றால், அரசாங்கத்தினிடமிருந்து நம் கைக்கு அதிகாரத்தை மாற்றுவதே வரி கொடாமையின் உத்தேசமாகும். எனவே, விவசாயிகள் பலாத்காரமின்றி சாத்விகமாக இருப்பது மாத்திரம் போதாது. நமது போராட்டத்தின் பத்தில் ஒன்பது பாகம் நிச்சயமாக அகிம்சையே. எனினும், எல்லாமே அதுதான் என்று சொல்லு வதற்கில்லை. விவசாயிகள் சாத்விகர்களாக இருக்கலாம்; ஆனால், அவர்கள் தீண்டாதாரைத் தங்களுடைய சகோதரர்களாக நடத்தாமலிருக்கலாம்; ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர் கள், யூதர்கள், பார்சிகள் முதலியோரைத் தங்களுடைய சகோ தரர்களாகக் கருதாமலிருக்கலாம்; மற்றும் ராட்டினம், கதர் முத லியவற்றின் பொருளாதார, ஆன்மிக மதிப்பைத் தெரிந்துகொள் ளாதவர்களாக இருக்கலாம். அவ்விதமாயின், அவர்கள் சுயராஜ் யம் பெற முடியாது. அவ்விதமெல்லாம் இப்போது அவர்கள் செய்யாவிடில், சுயராஜ்யம் பெற்ற பிறகு அவர்கள் செய்யமாட் டார்கள். மேலே குறிப்பிட்ட தேசீய தருமங்களை அனுஷ்டிப்பது தான் சுயராஜ்யம் என்பதன் பொருளாகும் என்பதை அறிந்து கொள்ளும்படி அவர்கள் கற்பிக்கப்பட வேண்டும்.

இவ்வாறாக, சாத்விக வரி கொடாமை என்பது கடுமையான பயிற்சிக்குப் பிறகே அனுஷ்டிக்க சாத்தியமாகும் ஒரு விசேஷ

உரிமையாக இருக்கிறது. அரசாங்கச் சட்டங்களுக்கு விரோத மாக நடந்துகொள்ளுவதையே தமது வழக்கமாகக்கொண்ட ஒருவர் சாத்விகச் சட்ட மறுப்பை அனுஷ்டிப்பது எவ்விதம் கஷ்டமான காரியமோ, அது போலவே, மிக மிக அற்பமான காரணத்திற்காக வரி கொடுப்பதை நிறுத்தும் பழக்கம் உள்ள வர்களும் சாத்விக வரி கொடாமையை அனுஷ்டிப்பது கஷ்ட மான காரியமாகும். சாத்விக வரி கொடாமை, உண்மையில் ஒத்துழையாமையின் இறுதிக் கட்டமாகும். மற்ற சாத்விக் சட்ட மறுப்பு முறைகளையெல்லாம் முயற்சி செய்து முடியும் வரையில், நாம் வரி கொடாமையில் ஈடுபடக்கூடாது. ஆரம்பக் கட்டங்களில் பெரிய அல்லது பல பிரதேசங்களில் வரி கொடா மையைப் பரிசோதனை செய்து பார்ப்பது மகத்தான விவேக மின்மையாகும்.

ஜமீன்தார்களுக்குக் குத்தகைப் பணம் கொடுக்க மறுத்து விட வேண்டும் என்ற பேச்சும் என் காதில் விழுகிறது. நாம் ஜமீன்தார்களுக்கு, அவர்கள் இந்தியர்களாக இருந்தாலும் சரி, அந்நியர்களாக இருந்தாலும் சரி, எதிராக ஒத்துழையாமையைக் கைக்கொள்ளவில்லை என்பதை மறந்துவிடக்கூடாது. பெரிய ஜமீன்தாரான அரசாங்கத்தை எதிர்த்தே நாம் போராடி வருகி றோம். அரசாங்கமே நம்மையும், ஜமீன்தார்களையும்கூட அடி மைகளாகச் செய்திருக்கிறது. எனவே, ஜமீன்தார்களையும் நாம் நமது பக்கத்தில் சேர்த்துக்கொள்ள முயற்சிப்பதுடன், பெரிய ஜமீன்தாரை அதாவது அரசாங்கத்தைத் தனித்து நிற்கும்படி செய்துவிடவேண்டும். ஜமீன்தார்கள் நம் பக்கம் சேரா விடில், நாம் அவர்களிடம் பொறுமையாக நடந்துகொள்ள வேண்டும். அவர்களுக்கு எதிராக நாம் சமூக பகிஷ்காரப் பிரகடனம்கூட செய்யக்கூடாது. அதாவது, ஜமீன்தார்களுக்கு சலவைத் தொழிலாளர், நாவிதர்கள் முதலியோர் வேலை செய்ய மறுத்துவிடக்கூடாது. அரசாங்கத்திற்கு நேரடியாக வரி செலுத்த வேண்டிய இடங்களில் மாத்திரமே வரி கொடாமை யைக் கைக்கொள்ள வேண்டும். எனவே, காங்கிரசின் நோக்கங் களுக்காக வரி கொடாமை இயக்கம் ஆரம்பிக்கும் பிரச்னையை என்னிடம் விட்டுவிட வேண்டும் என்பதே எனது திட்டவட்ட மான அபிப்பிராயம். இதன் மத்தியில் தொண்டர்கள் தங்கள் தங்கள் ஜில்லாக்கள் அபிவிருத்தியடைவதற்கு ஆக்க வேலை களைக் கைக்கொள்ள முடியும். அதன் பின், மக்கள் தூய்மையும் மனத்தெளிவும் பெற்ற பிறகு அவர்களை வரி கொடாமையை அனுஷ்டிக்கும்படி செய்யலாம்.

—'எங் இந்தியா' - 26—1—1922

# 40

# கோர்ட்டுகள், கல்விச்சாலைகள் பகிஷ்காரம்

ஒத்துழையாமைக் கமிட்டி, முதலாவது கட்டத்தில் வக்கீல்கள் கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்வதையும், அரசாங்கக் கல்விச்சாலைகளையும் கல்லூரிகளையும் பெற்றோர்களோ அல்லது மாணவர்களோ பகிஷ்காரம் செய்வதையும் சேர்த்துக் கொண்டிருக்கிறது.* கோர்ட்டுகளையும் கல்விச்சாலைகளையும் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று நான் யோசனை கூறியதற்காக, என்னை ஒரு பைத்தியக்காரன் என்றே பகிரங்கமாகக் குற்றம் சாட்டியிருப்பார்கள். நான் ஒரு தொண்டன் என்றும், போராட்டவாதி என்றும் எனக்குள்ள புகழ், அத்தகைய குற்றச்சாட்டிலிருந்து என்னைக் காப்பாற்றியிருக்கிறது.

எனது பித்துக்கொள்ளித்தனத்திலும் ஏதோ ஒருவித ஒழுங்கு முறை உண்டென்று கூறத் துணிகிறேன். ஓர் அரசாங்கம், கோர்ட்டுகளின் மூலம்தான் தனது அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொள்ளுகிறது; கல்விச்சாலைகளின் மூலம்தான் அது குமாஸ்தாக்களையும் மற்றச் சிப்பந்திகளையும் உற்பத்தி செய்கிறது. மொத்தத்தில் நீதி வழுவாத அரசாங்கத்தின் கீழ் இருக்கும் பட்சத்தில், அவை மக்களுக்கு நன்மை பயக்கும் ஸ்தாபனங்கள்தான். அநீதியான அரசாங்கம் இருக்குமிடங்களில், அவை மக்களைக் கொல்லும் பொறிகளாகும்.

எனவே, வக்கீல்கள் தங்கள் தொழில்களை நிறுத்தி வைக்க வேண்டும் என்பதே தேசீய ஒத்துழையாமை என்று பணிவுடன் கூறுகிறேன். கோர்ட்டுகளின் மூலம் வக்கீல்களைக் காட்டிலும் அரசாங்கத்துடன் ஒத்துழைப்போர் வேறு ஒருவருமில்லை எனலாம். வக்கீல்கள் சட்டங்களை மக்களுக்கு வியாக்கியானம் செய்வதன் மூலம், அரசாங்கத்திற்கு ஆதரவளிக்கிறார்கள். அதன்

---

* 1920 டிசம்பர் 26-ஆம் தேதி நாகபுரியிலே ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் தலைமையில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானத்திற்கிணங்க, நாடெங்கும் நூற்றுக்கணக்கான வக்கீல்கள் கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்து, தேசத் தொண்டில் ஈடுபட்டார்கள். எங்கும் பஞ்சாயத்துகள் நிறுவப்பட்டன. பொது மக்கள் கோர்ட்டுகளில் வழக்குத் தொடருவதை நிறுத்தலாயினர். அதனால் கோர்ட்டு 'ஸ்டாம்பு'களின் மூலம் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருமானம் குறைந்தது. கல்விச்சாலைகள், கலாசாலைகளிலிருந்தும் ஆயிரக்கணக்கான மாணவர்கள் வெளியேறினர். நாடெங்கும் அரசாங்க சம்பந்தமற்ற தேசீய கலாசாலைகளும் கல்விச்சாலைகளும் ஏற்படலாயின. அவற்றில் ஆயிரக்கணக்கான மாணவர்கள் சேர்ந்து, தங்களுடைய தேசபக்தியைக் காட்டினர்.

காரணமாகவே, அவர்கள் 'கோர்ட்டின் அதிகாரிகள்' என்று வருணிக்கப்படுகிறார்கள். அவர்களை, கௌரவ உத்தியோகஸ்தர்கள் என்று அழைக்கலாம். அரசாங்கத்துக்கு விரோதமாக மிகக் கடுமையாகவும் பிடிவாதத்துடனும் போராடுவோர் வக்கீல்கள் தான் என்று கூறப்படுகிறது. இது ஓரளவு உண்மையே என்பதில் ஐயமில்லை. எனினும், அதன் காரணமாக அத்தொழிலில் இயல்பாக உள்ள தீங்கு போய்விடாது. எனவே நாடு, அரசாங்கத்தை ஸ்தம்பிக்கவைக்க விரும்பும் போது, வக்கீல்கள் நாட்டின் இஷ்டத்திற்கு அரசாங்கம் வளைந்து கொடுக்கும்படி செய்ய விரும்புவார்களாயின், அவர்கள் தங்கள் தொழில்களை நிறுத்தி விட வேண்டும். நான் விரித்துள்ள வலையில் வக்கீல்களும் பாரிஸ்டர்களும் அகப்பட்டுக் கொள்ளுவார்களாயின், அரசாங்கம் மட்டற்ற மகிழ்ச்சி அடையும் என்று கண்டன வாதிகள் கூறுகின்றனர். நான் அதை நம்பவில்லை. அசாதாரண காலத்தில் எது உண்மையோ அது, சாதாரண காலத்தில் உண்மையாக இருக்க முடியாது. சாதாரண காலங்களில் அரசாங்கம் தன் வழிகளையும் முறைகளையும் வக்கீல்கள் கடுமையாகக் கண்டித்தால் ஆத்திரமடையும். ஆனால், கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்போது, கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்வதன் மூலம் ஒரே ஒரு வக்கீலின் ஆதரவைக் கூட இழக்க அரசாங்கம் விரும்பாது.

தவிர எனது திட்டத்தில், தொழிலை நிறுத்துவது என்பதற்குத் தேக்க நிலை என்று பொருள் அல்ல. வக்கீல்கள் தொழில்களை நிறுத்தி விட்டு, உல்லாசமாக ஓய்வு எடுத்துக்கொள்ளக் கூடாது. கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்யும்படி, அவர்கள் தங்கள் கட்சிக்காரர்களையும் தூண்டவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்காக அவர்கள் மத்தியஸ்த சபைகளை ஏற்படுத்தவேண்டும். விருப்பமில்லாத அரசாங்கத்தை வற்புறுத்தி நீதி பெற முனைந்துள்ள ஒரு தேச மக்களுக்கு, பரஸ்பரம் சச்சரவிட்டுக் கொள்ள நேரமில்லை. இந்த உண்மையை வக்கீல்கள் தங்களுடைய கட்சிக்காரர்களின் மனத்தில் பதிய வைக்க வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறார்கள்.

சென்ற மகாயுத்தத்தின் போது இங்கிலாந்திலுள்ள மிகவும் புகழ் பெற்ற வக்கீல்களில் பலர், தங்கள் தொழிலை நிறுத்தி வைத்திருந்தார்கள் என்பதை வாசகர்கள் அறியாமலிருக்கலாம். தாற்காலிகமாகத் தங்களுடைய தொழிலை விட்ட அவர்கள், பிறகு பொழுது போக்கு நேரங்களில் மாத்திரமே தொண்டு செய்வதற்குப்பதிலாக முழு நேரமும் தொண்டு செய்யலாயினர். உண்மையான அரசியல் என்பது ஒரு விளையாட்டு அல்ல. நாம் அரசியலை ஒரு பொழுது போக்காகக்கருதுவதற்கு அப்பால் செல்லுவதில்லை என்று காலஞ் சென்ற ஸ்ரீ கோகலே மிகவும் வருந்துவது வழக்

கம். பயிற்சி பெற்று முழு மனத்துடனும் நாள் முழுதும் வேலை செய்யும் அரசாங்கத்துடன் பொழுது போக்கு ராஜீயவாதிகள் நிர்வகித்து நடத்திய தேசீயப் போராட்டங்களால், நம் நாடு எவ்வளவு தூரம் நஷ்டம் அடைந்திருக்கிறதென்பது பற்றி நாம் சரியாக அறிந்து கொள்ளவில்லை.

## படிப்பை நிறுத்தாவிட்டால்...

நமது குழந்தைகளின் படிப்பை நிறுத்தி விடும் தைரியம் நமக்கு இராவிடில், போராட்டத்தில் வெற்றி பெற நமக்கு உரிமையில்லை என்றே கருதுகிறேன்.

கல்விச்சாலைகளைக் காலி செய்வதில் எவ்விதத் தியாகமும் இல்லை என்றே நான் வற்புறுத்திக் கூறுகிறேன். அரசாங்கத்தின் தொடர்பே இல்லாமல் நாம் முற்றிலும் சுதந்திரமாக நமது சொந்தக் கல்வியை நிர்வகிக்க முடியாதவாறு நாம் அவ்வளவு நிர்க்கதியான நிலையில் இருப்போமாயின், ஒத்துழையாமைக்கு நாம் சிறிதும் தகுதியற்றவர்களாக இருக்க வேண்டும். ஒவ்வொரு கிராமமும் அதன் சொந்தக் குழந்தைகளுக்குக் கல்வியளிக்கும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். குழந்தைகளின் கல்விக்காக நான் அரசாங்கத்தின் உதவியை நாட மாட்டேன். மக்களிடையே உண்மையான விழிப்பு ஏற்படுமாயின், குழந்தைகளின் கல்வி ஒரு நாள் கூடத் தடைப்பட வேண்டிய அவசியமில்லை. இப்போது அரசாங்கக் கல்விச்சாலைகளை நடத்தி வரும் அதே ஆசிரியர்களே, அவர்களுக்குத் தங்களுடைய பதவிகளை ராஜிநாமா செய்யும் உயர்ந்த குணம் இருக்குமாயின், தேசீயக்கல்விச் சாலைகளின் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டு நடத்தலாம்; குழந்தைகளுக்குத் தேவையான விஷயங்களைப் போதிக்கலாம்; அவர்களில் பெரும்பாலோர் அரைகுறையான குமாஸ்தாக்களாகிவிடாமல் பார்த்துக் கொள்ளலாம். இவ்விஷயத்தில் வழிகாட்டும்படி நான் அலிகார் கல்லூரியை எதிர்பார்க்கிறேன். நமது உருதுக் கல்விச்சாலைகளைக் காலி செய்வதால் ஏற்படக்கூடிய தார்மிக பலன் மகத்தானதாக இருக்கும். ஹிந்து பெற்றோர்களும் மாணவர்களும் தங்களுடைய முஸ்லிம் சகோதரர்களைப் பின்பற்றி நடக்கத் தவற மாட்டார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை.

எழுதப் படிக்கத் தெரியுமுன் மத உணர்ச்சி புகட்டப்படுவதை பெற்றோர்களும் மாணவர்களும் முக்கியமாகக் கருதுவதைக் காட்டிலும் உயர்ந்த கல்வி வேறு என்ன இருக்க முடியும்? கல்விச்சாலைகளிலிருந்து வெளியேறும் இளைஞர்களின் இலக்கியக் கல்விக்கு உடனடியாக எவ்வித ஏற்பாடும் செய்ய முடியாவிடில், அவர்கள் வெளியேறுவது அவசியமாகும்படி செய்யும் லட்சியத்திற்குத் தொண்டர்களாக வேலை செய்ய அதுவே பயன்

தரத்தக்க பயிற்சியாக இருக்கும். தொழிலைத் துறந்த வக்கீல்களைப் போல் சிறுவர்களும் கல்விச்சாலைகளிலிருந்து வெளியேறிய பின் சோம்பேறி வாழ்க்கை நடத்தக்கூடாது என்பதே எனது கருத்தாகும். கல்விச்சாலைகளிலிருந்து வெளியேறும் சிறுவர்கள், அவரவர் யோக்கியதைக்குத் தகுந்தவாறு தேசீயக் கிளர்ச்சியில் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள்.

—'எங் இந்தியா' - 11—8—1920

# 41

# பகிஷ்காரத்தில் வேற்றுமை ஏன்?

சாம்ராஜ்ய சாமான்கள் பகிஷ்காரப் பிரச்னை, அடிக்கடி பொதுமக்களின் கவனத்திற்குச் சவால் விடுத்து வருவது விசித்திரமாகும். சாத்விக ஒத்துழையாமை நோக்கத்திலிருந்து பார்க்குமிடத்து, அதற்கு எவ்விதச் சமாதானமும் கூற முடியாதென்று எனக்குத் தோன்றுகிறது. அது முற்றிலும் அடிக்கு அடி கொடுப்பதேயாகும். எனவே, அது தண்டனைக்கு உரியது. காங்கிரஸ், சாத்விக ஒத்துழையாமைக் கொள்கையை அனுஷ்டித்து வரும் வரையில் பிரிட்டிஷ் சாமான்களின் பகிஷ்காரம், - மற்ற அந்நிய சாமான்களின் பகிஷ்காரம் அல்ல - தவிர்க்கப்பட வேண்டியதாகும். அந்தக் கருத்துள்ள காங்கிரஸ்வாதி நான் ஒருவனாகவே இருந்தால்கூட, சென்ற காங்கிரஸ் விசேஷக் கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானத்தை ரத்து செய்யும்படி, அடுத்த காங்கிரஸ் கூட்டத்தில் நான் ஒரு தீர்மானம் கொண்டு வந்துதான் தீர வேண்டும்.

ஆனால், இப்போதைக்கு, பதிலுக்குப் பதில் செய்யும் பகிஷ்காரத்தின் நியாயத்தையோ, ஒழுங்கையோ அல்ல, அதன் பலனைப் பற்றியே நான் விவாதிக்க உத்தேசித்துள்ளேன். பகிஷ்கார இயக்கத்தில் மிதவாதிகள்கூடக் கலந்து கொண்டுள்ளனர் என்ற விஷயம், அப்பிரச்னையை ஒருவர் பரிசோதனை செய்வதிலிருந்து பின்வாங்கி விடும்படி செய்ய முடியாது. அதற்கு மாறாக, காங்கிரசும் அவர்களும் கைக்கொண்டுள்ள பதிலுக்குப் பதில் பகிஷ்காரம் உபயோகமற்றது என்பதுடன், நமது ஆண்மையற்ற கோபத்திற்கும், அருமையான நமது சக்தியின் விரயத்திற்கும் அது மற்றொரு உதாரணமாகிறது. எனவே, எல்லா அந்நியத் துணிகளையும் பகிஷ்காரம் செய்வதை உற்சாகத்துடனும் உறுதியுடனும் கைக்கொள்ளும்படியும், அவற்றின் ஸ்தானத்தில் இந்திய மில் துணிகளையல்ல, கையால் நூற்கப்பட்ட கதரை

ஸ்தாபிக்கும்படியும் அவர்களை நான் வேண்டிக் கொள்ளுகி றேன்.

பகிஷ்காரக் கமிட்டியின் அறிக்கையை நான் மகிழ்ச்சியுடன் வாசித்தேன். பிரிட்டிஷ் அல்லது சாம்ராஜ்ய சாமான்கள் பகிஷ் கார சம்பந்தமாக, அதைக் காட்டிலும் அதிகமாக யாராலும் எதுவும் சொல்ல முடியாது. அத்தகைய பகிஷ்காரத்தை ஆதரித்து அல்ல, அதற்கு விரோதமாகவே யாரும் எதிர்க்க முடியாத விதத்தில் கமிட்டி தன் கட்சியை எடுத்துக் கூறியிருக் கிறது என்பதே என் அபிப்பிராயம். ரெயில்வே சாதனங்கள் போன்ற சாம்ராஜ்ய சாமான்களின் பெரும் பகுதி அரசாங்கத்தி ளுல் அல்லது ஆங்கிலக் கம்பெனிகளால் இறக்குமதி செய்யப்படு கின்றன என்றும், வாசனைத் தைலங்கள், சோப்புகள், 'பூட்ஸ்' போன்ற சில்லறைச் சாமான்கள் ஒருகாலத்திலும் பகிஷ்காரத்தில் ஈடுபட விரும்பாத, உடல் வணங்கி உழைக்காமல் சொகுசாக போக வாழ்க்கை நடத்தும் இந்தியர்களால் பெரிதும் உபயோ கிக்கப்படுகின்றன என்றும் கமிட்டி பட்டவர்த்தனமாகக் கூறி யிருக்கிறது. ஒவ்வொரு காங்கிரஸ்வாதியும் ஒவ்வொரு மிதவாதி யும் மேலே குறிப்பிட்ட சில்லறைச் சாமான்களின் பகிஷ்காரத் தைக் குறையின்றி நிறைவேற்றினுல்கூட, அவற்றின் தொகை அதிகமாகப் போனுலும் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் இராது.

நமக்கு ஏற்பட்டுள்ள ஆத்திரம் நம் கண்களை மறைக்கா விடில், நம்முடைய தேசீயத் தேவைகள் சிலவற்றிற்கு நாம் பிரிட்டிஷ் சாமான்களையே நம்ப வேண்டியிருக்கிறது என்பதை நாம் அறியும்போது, பகிஷ்காரத் தீர்மானத்தைக் குறித்து நாம் வெட்கமடைய வேண்டும். ஆங்கிலப் புத்தகங்களின்றியும் ஆங்கில மருந்துகளின்றியும் நாம் காலம் தள்ள முடியாது. அப்படியிருக்க, ஜினிவா கெடியாரங்கள் நமக்குக் கிடைக்கின்றன என்பதற்காக, நாம் இங்கிலாந்திலிருந்து இறக்குமதியாகும் கெடியாரங்களைப் பகிஷ்காரம் செய்யவேண்டுமா? ஆங்கிலப் புத் தகங்கள் நமக்குத் தேவையாக இருக்கின்றன, அதனுல் அவற்றை நாம் விடமுடியவில்லையென்ருல், பிரிட்டிஷ் கெடியாரங்களையோ, அல்லது வாசனை சாமான்களையோ இறக்குமதி செய்யும் வர்த்த கர் அவரது வியாபாரத்தைத் தியாகம் செய்யவேண்டுமென நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்?

நான் ஆஸ்பத்திரியிலிருந்தபோது, நான் அதிகமாக உணவு உட்கொள்ள வேண்டுமென்றும் அதிகமாகத் தூங்கவேண்டு மென்றும் முற்றிலும் அன்புடன் வற்புறுத்திய மிகவும் திறமை சாலியான ஆங்கில நர்ஸை, நான் 'கொடியவள்' என்று அன்புடன் விளையாட்டாக அழைப்பது வழக்கம். டாக்டரும் அந்த நர்ஸும் என்னைப் பத்திரமாகத் தனி வார்டுக்குக் கொண்டு சென்ற பின், அவள் என்னிடம் சாந்தமாக இவ்விதம் கூறினுள்: "உங்கள்மீது

வெய்யில் படாமல் இருப்பதற்காக நான் குடைபிடித்துக்கொண்டு வந்தபோது, ஒரு விஷயத்தைக்குறித்து நான் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. நீங்களோ பிரிட்டிஷ் சாமான் எதையும் வெகு உக்கிரமாகப் பகிஷ்காரம் செய்பவர். ஆனால், இப்போது ஒரு பிரிட்டிஷ் சர்ஜனின் திறமையினாலேயே உங்கள் உயிர் காப்பாற்றப்பட்டது; அந்த சர்ஜன் பிரிட்டனில் உற்பத்தியான ரண சிகிச்சைக் கருவிகளையே கையாண்டார்; பிரிட்டிஷ் மருந்துகளையே கொடுத்தார்; ஒரு பிரிட்டிஷ் நர்ஸே உங்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டியிருந்தது; உங்களை இந்த வார்டிற்குக் கொண்டு வந்தபோது நிழலுக்காக உங்களுக்குப் பிடிக்கப்பட்ட குடைகூட பிரிட்டனில் செய்யப்பட்டதுதான் என்பதை நீங்கள் அறிவீர்களா?'' இவ்வாறாக அந்த நர்ஸ் விஷமத்தனமாகக் கண்களைச் சிமிட்டிக்கொண்டே உதடுகளில் புன்னகை தவழ என்னிடம் கூறினாள்.

சாந்த சுபாவமுள்ள அந்த நர்ஸ் ஏதோ வெற்றிபெற்றுவிட்டது போல் தனது கடைசி வாக்கியத்தை முடித்தபோது, அவளது அன்பார்ந்த உபதேச மொழிகளைக் கேட்டு நான் மேலே பதில் எதுவும் கூற முடியாமல் திக்குமுக்காடி விடுவேன் என்று எதிர்பார்த்தாள். ஆனால், அவளது சுய உறுதியைக் குலைக்கும் வகையில் பதில் கூற எனக்கு ஆற்றல் இருந்தது. ''நீங்களெல்லாம் எப்போதுதான் விஷயங்களை உள்ளது உள்ளபடி அறிந்துகொள்ளப் போகிறீர்களோ? பிரிட்டிஷ் சாமான்கள் என்பதற்காக மாத்திரம் நான் எதையும் பகிஷ்காரம் செய்யவில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? எல்லா அந்நியத் துணிகளையுமே நான் பகிஷ்காரம் செய்கிறேன். ஏனென்றால், இந்தியாவில் அந்நியத் துணிகளைக்கொண்டு வந்து குவிப்பதால், கோடிக்கணக்கான என் தேச மக்கள் பரம ஏழைகளாகிவிட்டார்கள்". இவ்விதம் எனது நிலைமையை அவளிடம் விளக்கிக் கூறினேன். பிறகு கதர் இயக்கத்தில்கூட அவளுக்கு அக்கறை ஏற்படும்படியும் செய்தேன். அவள் கதர் இயக்கத்தை ஆதரிப்பவளாகிவிட்டாள் என்றே எண்ணுகிறேன். அது எப்படியாயினும், கதரின் நியாயத்தையும், அவசியத்தையும், உபயோகத்தையும் அவள் அறிந்துகொண்டாள். ஆனால், சிறிதும் பலனற்ற, அர்த்தமற்ற பிரிட்டிஷ் சாமான்கள் பகிஷ்காரத்தைப் பார்த்து அவள் சிரிக்கலானாள். அது நியாயம்தானே.

எனவே, பழிக்குப்பழி என்ற முறையை அடிப்படையாகக் கொண்ட பகிஷ்கார வீரர்கள் தங்களுடைய வீடுகளையும் தங்கள் சொந்த சாமான்களையும் உற்றுக் கவனிப்பார்களாயின், நான் அத்தகைய பகிஷ்கார கோஷ்டியைச் சேர்ந்தவன் என்று எண்ணிக்கொண்டு எனது நர்ஸ் செய்ததுபோல், அவர்களும் சிரிக்கத்தக்க தங்களது நிலையை அறிந்துகொள்ளுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

— 'எங் இந்தியா' - 15–5—1924

# 42

# பகிஷ்காரத்தில் இம்சையும் அகிம்சையும்

அபிப்பிராய வேற்றுமைகளுக்காக நாம் சமூக பகிஷ்காரப் பிரகடனம் செய்வது ஆபத்தான காரியமாகும். தண்ணீரும் உணவும் கொடுப்பதை நிறுத்துவது, அகிம்சைக் கொள்கைக்கு முற்றிலும் விரோதமானது. இந்த ஒத்துழையாமைப் போராட்டம், நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ பலாத்காரத்தினல் மற்றவர்களைப் பணியும்படி வற்புறுத்துவதல்ல, வாய்ப்பேச்சை செயலில் கொண்டுவருவதன் மூலம் செய்யும் பிரசாரத் திட்டமேயாகும். நமது விரோதிகளை நம் அபிப்பிராயத்திற்கு மாற்ற நாம் பொறுமையுடன் முயற்சிக்கவேண்டும். அடிமைத்தனத்திலிருந்து ஜனநாயக உணர்ச்சியை உருவாக்க நாம் விரும்பினல், நமது எதிரிகளிடம் நாம் நடந்துகொள்ளும் முறைகள் சந்தேகத்திற்கு இடமின்றி முற்றிலும் ஒழுங்காகவும் அப்பழுக்கின்றியும் இருக்கவேண்டும். அரசாங்கம் அனுஷ்டித்து வரும் அடிமைத்தனத்தின் ஸ்தானத்தில், ஒத்துழையாதார் அடிமைத்தனத்தைக் கையாளும்படி நாம் விட்டுவிடக்கூடாது. இப்போது நம்முடைய சுதந்திரத்திற்காகவே நாம் போராடி வருகிறோம். எனவே, நாம் கோரும் சுதந்திரம் நம்முடைய எதிரிகளுக்கும் உண்டென்று நாம் கருதவேண்டும். மக்களிடமிருந்து உண்மையான ஆதரவு கிடைக்குமாயின், மிகப் பிடிவாதமுள்ள ஒத்துழைப்பாளர்கூட காரியத்தில் கண்டிப்பான உண்மை நிலைக்குப் பணிந்து வளைந்து கொடுப்பார்கள்.

நாம் மக்களிடையே ஏதாவது நம்பிக்கை உண்டாகும்படி செய்யவேண்டுமாயின், சாத்விக பகிஷ்காரத்தை நாம் அனுஷ்டானத்தில் கொண்டுவந்து தீரவேண்டும். வெள்ளையரிடமோ, கருப்பரிடமோ அசத்தியம் என்று நாம் நம்பும் எதற்கும் நாம் இடம் கொடுத்துவிடக்கூடாது. அத்தகைய பகிஷ்காரம் ராஜீய பகிஷ்காரமேயாகும். புதிய சட்டசபை அங்கத்தினர்களிடமிருந்து நாம் சலுகைகள் எதுவும் பெறக்கூடாது. வாக்காளர்கள், தங்களுடைய பிரதிக்ஞைக்கு இணங்க உண்மையாக நடந்துகொள்ளுவதாயின், தங்கள் பிரதிநிதிகள் என்று கருத தாங்கள் மறுத்தவர்களின் ஊழியத்தை உபயோகப்படுத்திக்கொள்ளாமலிருக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள், அத்தகைய "பிரதிநிதிகளு"க்கு எவ்வித ஆதரவும் அளிப்பதை அறவே தவிர்த்து, தங்களுடைய தீர்ப்பை உறுதி செய்யவேண்டும்.

பொது மக்களும், அவர்கள் ஒத்துழையாதாராக இருக்கும் பட்சத்தில், அந்தப் பிரதிநிதிகளின் ராஜீய வைபவங்களிலோ, விருந்து முதலியவற்றிலோ கலந்துகொண்டு அவர்களை கௌரவிப்பதைத் தவிர்க்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

சிற்சில மோசமான சந்தர்ப்பங்களில், அதாவது மமதையினால் ஒரு சிறுபான்மையோர், பெரும்பான்மையோரின் விருப்பத்திற்கு, கொள்கை காரணமாக அல்ல, வெறும் மமதையும் இன்னும் அதிக மோசமான மனப்பான்மையும் காரணமாக, இணங்க மறுக்கும்போது, சாத்விக சமூக பகிஷ்காரத்தைக் கைக்கொள்ளலாம். ஆனால், அந்தக் காலம் இன்னும் நிச்சயமாக வரவில்லை. பொதுக் கிணறுகளை உபயோகிக்க முடியாமல் செய்வது போன்ற இம்சைத் தன்மை பொருந்திய பகிஷ்காரம் காட்டுமிராண்டித்தனத்தில் ஒரு விதமாகும். தேசீய சுயமரியாதையிலும் தேசீய முன்னேற்றத்திலும் ஏதாவது விருப்பமுள்ள எவரும் அத்தகைய காட்டுமிராண்டித்தனத்தில் ஒருபோதும் ஈடுபடமாட்டார்களென்று நம்புகிறேன். நமக்குள்ளேயோ அல்லது ஆங்கிலேயர்களுக்கு விரோதமாகவோ கைக்கொள்ளும் பலாத்கார முறைகளால், இஸ்லாமையோ அல்லது இந்தியாவையோ நாம் விடுதலை செய்துவிட முடியாது.

—'எங் இந்தியா' - 8—12—1920

# 43

# பகிஷ்காரத்தில் கொடுமை கூடாது

ஒத்துழையாமை ஒரு பரிசுத்த இயக்கமாகும். எனவே, அது நமது குறைதிசயங்களை மிகைப்படுத்திக் காட்டுவது போல், நமது குறைகளையும் மேற்பரப்பிற்குக் கொண்டு வந்துவிடுகின்றது. சமூக பகிஷ்காரம் வெகு காலமாக இருந்து வரும் ஒரு முறையாகும். அது சாதி முறையைப் போல் நீண்ட காலமாக இருந்து வருகிறது. மிகவும் பலன்தரத்தக்க விதத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வரும் பயங்கரமான சிட்சை அது ஒன்றுதான். சாதிப் பிரஷ்டம் செய்யப்பட்ட ஒருவருக்கு ஒரு சமூகம் எவ்வித உபசாரங்களும் தொண்டுகளும் செய்யக்கூடாது என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டதே அந்தத் தண்டனை முறையாகும். ஒவ்வொரு கிராமமும் சுயதேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டும், அத்தகைய முரண்டுத்தனம் அபூர்வமாகவும் இருந்தபோது அந்த முறை கோரிய பலனைக் கொடுத்து வந்தது. ஆனால், இன்றிருப்பது போல் ஒத்துழையாமையின் தகுதிகள் பற்றி கருத்து வேற்றுமை இருக்கும் போது, அதன் புதிய உபயோகமானது சோதனையில் இருந்து வரும்போது, பெரும்பான்மையோரின் இஷ்டத்திற்கு சிறுபான்மையோர்

பணியும்படி செய்வதற்காக முன்பின் யோசிக்காமல் சமூக பகிஷ்காரத்தை உபயோகிப்பது மன்னிக்க முடியாத இம்சை முறையாகும். அத்தகைய பகிஷ்காரத்தைப் பிடிவாதத்துடன் அனுஷ்டித்தால், அது இயக்கத்தையே நாசம் செய்துவிடும் என்பது நிச்சயம்.

சமூக பகிஷ்காரத்தை எதிராளி ஒரு தண்டனை முறையாகக் கருதாமல், தம் மீது பிரயோகிக்கப்படும் ஓர் ஒழுங்கு முறையாக அதை அங்கீகரிப்பாராயின், அது பொருத்தமாகவும் பலன் தரத் தக்க விதத்திலும் இருக்கும். தவிர, ஓர் அகிம்சை இயக்கத்தில் சமூக பகிஷ்காரம் ஏற்கத்தக்கதாக இருக்க வேண்டுமாயின், அது ஜீவகாருண்ய வாடையற்றதாக இருக்கக்கூடாது. அது நாகரிகமுள்ளதாக இருக்க வேண்டும். அது எதிராளிக்கு அசௌகரியத்தை உண்டாக்குமாயின், அதை 'உபயோகிப் போருக்கு அது மனவேதனையைக் கொடுக்க வேண்டும். ஜான்ஸி யில் நடந்திருப்பதாகக் கூறப்படுவது போல், ஒரு மனிதருக்கு டாக்டரின் உதவி கிடைக்காமல் இருக்கும்படி செய்வது ஜீவ காருண்யமற்ற ஒரு நடவடிக்கையாகும். அது, தார்மிக சட்டத் தின்படி ஒரு கொலை முயற்சிக்குச் சமமாகும். ஒரு மனிதனைக் கொலை செய்வதற்கும், மரணத் தறுவாயில் இருக்கும் ஒரு மனி தனுக்கு வைத்திய உதவி மறுப்பதற்கும் யாதொரு வேற்றுமை யும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. வைத்திய உதவி தேவைப்படும் பகைவருக்குக்கூட வைத்திய உதவி அளிக்க வேண்டும் என யுத்த விதிகள் கூறுகின்றன என்பதை நான் அறிவேன். கிராமத்தில் உள்ள ஒரே கிணற்றை உபயோகிக்க முடியாமல் ஒரு மனிதரைத் தடுப்பது, அந்தக் கிராமத்திலிருந்து வெளியேறும்படி அவருக்கு எச்சரிக்கை விடுப்பதேயாகும்.

தங்களுடைய கருத்துக்கு உடன்படாதவர்களுக்கு எதிராக, அத்தகைய கடுமையான வற்புறுத்தும் முறையைக் கைக்கொள்ள ஒத்துழையாதாருக்கு நிச்சயமாக எவ்வித உரிமையும் இல்லை. பொறுமையின்மையும் சகியாமையும், இந்த மகத்தான புனித இயக்கத்தை நிச்சயமாகக் கொன்றுவிடும். நாம் நிர்ப்பந்தப் படுத்துவதன் மூலம், மக்களைத் தூய்மையானவர்களாகச் செய்து விட முடியாது. அது போலவே, நமது அபிப்பிராயத்திற்கு மதிப்புக் கொடுக்கும்படி இம்சையினால் அவர்களைக் கட்டாயப் படுத்த முடியவே முடியாது. அவ்விதம் கட்டாயப்படுத்துவது, நாம் பயிலுவிக்க விரும்பும் ஜனநாயகத் தத்துவத்திற்கு முற்றி லும் விரோதமாகும்.

கோர்ட்டுகளை வக்கீல்கள் தாங்களாக வலுவில் பகிஷ்காரம் செய்யும்படி செய்வதே மிகவும் விரும்பத்தக்கது. அந்த ஒரு சம்பவமே நமக்கு சுயராஜ்யத்தைக் கொண்டு வந்துவிடும். எனினும், ஒத்துழையாமையின் ஓர் அம்சத்திலாவது நாம்

குறையற்ற பூரண நிலையை அடைவோம் என்று ஒரு போதும் எதிர்பார்ப்பதற்கில்லை. கோர்ட்டுகள் நம்முடைய சுதந்திரத்தின் அறிகுறிகளல்ல, அடிமைத்தனத்தின் அறிகுறிகளே என்பதை மக்கள் உணரும் வகையில், அவர்களுடைய அறிவு வளர்ச்சியடைந்திருக்கிறது. வக்கீல்கள் தங்களுடைய தொழில்களை நடத்திக்கொண்டே பொதுமக்களின் தலைவர்களாகவும் இருப்பதை, பொதுஜன அபிப்பிராயம் முற்றிலும் அசாத்தியமாகும்படி செய்திருக்கிறது.

ஒத்துழையாமை, கோர்ட்டுகளின் கௌரவத்தைப் பெரிதும் தகர்த்துள்ளது. அவ்வளவிற்கு அரசாங்கத்தின் கௌரவத்தையும் சீர்குலைத்திருக்கிறது. அவைகளின் கௌரவம் கலகலத்துப் போகும்படி செய்யும் நடவடிக்கை நிதானமாகவும், ஆனால் நிச்சயமாகவும் முன்னேறி வருகிறது. அதைத் துரிதப்படுத்துவதற்காக பலாத்கார முறைகள் கைக்கொள்ளப்படுமாயின், அதன் வேகம்தான் குறையும். பலாத்கார சக்திகளைச் சமாளிப்பதற்காக, இந்த அரசாங்கம் அபரிமிதமான ஆயுத வகைகளை வைத்துக்கொண்டிருக்கிறது. ஆனால், சுயநலன்களைத் தியாகம் செய்யும் ஆற்றல் பெற்ற முப்பது கோடி மக்கள் தங்கள் கருத்தை வெளியிடுவதை, ஒரு சில ஆங்கிலேயர்கள் எவ்வாறு தடுக்க முடியும்?

எனவே, ஒத்துழையாமைத் தொண்டர்கள், சமூக பகிஷ்கார வலைகளில் அகப்பட்டுக்கொண்டுவிடாமல் ஜாக்கிரதையாக இருப்பார்கள் என்று நம்புகிறேன். எனினும், சமூக பகிஷ்காரத்திற்குப் பிரதி சமூக உறவு அல்ல என்பதும் நிச்சயம். மூலாதாரமான விஷயங்களையொட்டி பலமான, தெளிவான பொதுஜன அபிப்பிராயத்தை அலட்சியம் செய்யும் ஒரு மனிதர், சமூக வசதிகளுக்கும் உரிமைகளுக்கும் உரியவர் அல்ல. அவர் ஏற்பாடு செய்யும் கல்யாண விருந்துகள் போன்ற சமூக வைபவங்களில் நாம் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடாது. அவரிடமிருந்து பரிசுகள், கொடைகள் எதுவும் வாங்கக்கூடாது. எனினும், அவருக்குச் செய்யப்படும் சமூகத் தொண்டுகளை நாம் மறுக்கக் கூடாது. அவ்விதம் மறுக்காமலிருப்பது நமது கடமையாகும். விருந்து வைபவங்கள் போன்றவைகளில் கலந்துகொள்ளுவது ஓர் உரிமையாகும். அதில் கலந்துகொள்ளுவதோ அல்லது கலந்துகொள்ளாமல் இருப்பதோ நம்முடைய இஷ்டத்தைப் பொறுத்தது. எனினும், மிதமிஞ்சி நன்மை செய்வதும், அபூர்வமாக, திட்டவட்டமாகக் குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் என்னால் விவரிக்கப்பட்டதற்கிணங்க ஓர் எல்லைக்கு உட்பட்டு பகிஷ்கார ஆயுதத்தை உபயோகிப்பதும்தான் விவேகமாகும். ஒவ்வோரிடத்திலும், அந்த ஆயுதத்தை உபயோகிப்போர் தமது சொந்தப் பொறுப்பில்தான் உபயோகிக்க வேண்டும். அதை உபயோகிப்பதை இன்னும் எவ்விதத்திலும் ஒரு கடமையாகச்

செய்யவில்லை. இயக்கத்திற்குக் குந்தகம் விளையக்கூடிய அபாயம் ஏதாவது இருக்குமாயின், அதை உபயோகிக்க யாருக்கும் உரிமையில்லை.

—'எங் இந்தியா' - 16—2—1921

# 44

# அனுதாப வேலை நிறுத்தத்தின் பெருமை

அஸ்ஸாம், வங்காள ரெயில்வே, கப்பல் வேலை நிறுத்தங்கள் அசாதாரணமானவை. தொழிலாளர் சங்கங்களுக்கு வெளியேயுள்ளவர்களுக்காக அனுதாபம் காட்டும் வகையில் வேலை நிறுத்தங்களில் ஈடுபடுவது இதுதான் முதல் முயற்சியாகும். எனவே, அவை அனுதாப, ஜீவகாருண்ய அல்லது ராஜீய வேலை நிறுத்தங்களாகும். ரெயில் பாதையில் உள்ள, முக்கியமாக கௌஹாதி, சிட்டகாங், பாரிசால் முதலிய இடங்களில் உள்ள வேலை நிறுத்தத் தொழிலாளர்களைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர்களுடன் மனம் விட்டுப் பேசியதன் பலனாக, அவர்களுடைய மகத்தான பொறுப்பின் மதிப்பை மக்கள் பூரணமாக உணர்ந்துகொள்ளவில்லை என்ற முடிவிற்கு வந்துள்ளேன்.

வேலை நிறுத்தத்தில் இறங்கிவிட்டதால், அதன் விளைவுகளை ஏற்றுக்கொள்ள அவர்கள் முயற்சித்து வருகிறார்கள். தாம் அந்த நிலைமையைச் சமாளிக்க நேர்ந்தால் எப்படிச் செய்திருப்பார் என்பது பற்றி வெளியார் ஒருவர் கூறுவது, எப்போதும் அபாயமான, தயவு தாட்சண்யமற்ற ஒரு காரியமாகும். பிறருக்கு உதவியாக இத்தகைய வேலை நிறுத்தம் செய்ய வேண்டியிருக்குமென அவர்கள் எதிர்பார்க்கவில்லை என்று நான் நினைக்கிறேன். இந்தியாவிலுள்ள தொழிலாளர்களும் கைத்தொழில் நிபுணர்களும் அந்த அளவுக்குத் தேசீய உணர்ச்சி பெற்றிருக்கவில்லை என்பதே என் அபிப்பிராயமாகும். அனுதாப வேலை நிறுத்தங்கள் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு, அத்தகைய தேசீய உணர்ச்சி அவசியம்.

எனினும் தவறு நம்முடையதுதான். தேசத் தொண்டில் அக்கறை கொண்டுள்ள நாம் சமீப காலம் வரையில் அவ்வகுப்பினரின் தேவைகளையோ, அபிலாஷைகளையோ ஆராய்ச்சி செய்யவில்லை; அரசியல் நிலைமை பற்றி அவர்களுக்கு அறிவிக்கும் சிரமத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை. உயர்நிலைப் பள்ளியிலும்

கலாசாலைகளிலும் படித்துத் தேர்ச்சி பெற்றவர்கள் மாத்திரமே தேசீய அலுவல்களில் பங்கு எடுத்துக்கொள்ளத் தகுதி வாய்ந்தவர்கள் என்று நாம் இதுவரை நம்பி வந்துள்ளோம். எனவே, தொழிலாளர்களும் கைத்தொழில் நிபுணர்களும் திடீரென்று தங்கள் கோஷ்டிக்கு வெளியில் உள்ளவர்களின் நலன்களை அறிந்துகொண்டு, அவற்றிற்காகத் தியாகம் செய்வார்கள் என எதிர்பார்ப்பது நியாயமல்ல. ராஜீய அல்லது மற்ற நோக்கங்களுக்காக நாம் அவர்களை உபயோகப்படுத்திக்கொள்ளக் கூடாது. தற்போதுள்ள நிலையில் நாம் அவர்களுக்குச் செய்யக் கூடிய சிறந்த தொண்டு என்னவெனில், சுய உதவியை அவர்களுக்குக் கற்பிப்பதும், தங்களுடைய கடமைகளையும் உரிமைகளையும் அவர்கள் அறிந்துகொள்ளும்படி செய்வதும், அவர்களுடைய நியாயமான குறைகளுக்குப் பரிகாரம் தேடும் நிலையில் அவர்களை வைப்பதும்தான். அப்போதுதான், - அதுவரையில் அல்ல-அவர்கள் ராஜீய, தேசீய, ஜீவகாருண்யத் தொண்டிற்குத் தயாராக இருப்பார்கள்.

எனவே, அவசரப்பட்டு அனுதாப வேலைநிறுத்தங்களில் ஈடுபடுவது நம்முடைய லட்சியத்திற்கே மிகுந்த பாதகத்தை விளைவிக்கக்கூடியது. அகிம்சைத் திட்டத்தில், அரசாங்கத்தை தரும சங்கடத்திற்கு உள்ளாக்குவதன் மூலம் எத்தகைய லாபத்தையும் பெறும் எண்ணத்தை நாம் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும். நமது நடவடிக்கை தூய்மையாகவும், அரசாங்கத்தின் நடவடிக்கை தூய்மையற்றதாகவும் இருக்குமாயின், அரசாங்கம் தூய்மை பெற்றாலன்றி, நமது தூய்மையால் அது தரும சங்கடமான நிலைக்கு உள்ளாகிவிடும். அவ்விதமாக, ஒரு தூய்மை இயக்கமானது இரு சாராருக்கும் நன்மையை அளிக்கிறது. ஆனால், வெறும் அழிவு இயக்கமானது, அழிப்போரைத் தூய்மையற்றவராகவே இருந்து வரும்படி செய்வதுடன், அவர் யாரை அழிக்க முற்படுகிறாரோ அந்தக் கீழான நிலைக்கு அவரையும் (அழிப்போரையும்) கொண்டு வந்துவிடுகிறது.

எனவே, நமது அனுதாப வேலைநிறுத்தங்கள்கூட சுயத்தூய்மையை உண்டாக்கும் வேலை நிறுத்தங்களாக, அதாவது, ஒத்துழையாமையாக இருக்கவேண்டும். ஒரு தவறுக்குப் பரிகாரமாக நாம் ஒரு வேலைநிறுத்தத்தைப் பிரகடனம்செய்யும் போது, நாம் உண்மையிலே தவறில் பங்கு எடுத்துக்கொள்ளுவதிலிருந்து விலகி விடுகிறோம்; தவறு செய்வோரை அவரது சொந்த புத்தி யுக்திகளின்படி நடந்து கொள்ளட்டும் என்று விட்டுவிடுகிறோம். அதாவது, தவறைத் தொடர்ந்து செய்வதில் உள்ள மடத்தனத்தை உணர்ந்துகொள்ளும்படி செய்கிறோம். அத்தகைய வேலை நிறுத்தம் வெற்றி அடைவதைத் தவிர வேறு வழியில்லை. ஏனெனில், அந்த வேலை நிறுத்தத்திற்குப் பின்னால், மீண்டும் வேலைக்குத் திரும்பிச் செல்லுவதில்லை என்ற உறுதியான தீர்மானம் இருக்கிறதல்லவா?

எனவே, பெரிய வேலை நிறுத்தங்களை வெற்றிகரமாக நடத்தியவன் என்ற முறையில், வேலை நிறுத்தத் தலைவர்களுக்கு வழிகாட்டியாக இருப்பதற்காக, இந்தப் பத்திரிகையில் ஏற்கனவேயே நான் குறிப்பிட்டுள்ள கொள்கைகளை மீண்டும் திருப்பிக் கூறுகிறேன்:

*1.* ஓர் உண்மையான குற்றம் குறை இருந்தாலன்றி, வேலை நிறுத்தம் செய்யவே கூடாது.

*2.* சம்பந்தப்பட்ட நபர்கள் தாங்கள் சேமித்து வைத்துள்ள தொகையிலிருந்தோ, அல்லது பஞ்சடிப்பது, நூற்பது, நெய்வது போன்ற தொழில்களில் தாற்காலிகமாக ஈடுபட்டோ தங்களைப் பாதுகாத்துக்கொள்ள முடியாவிட்டால், வேலை நிறுத்தத்தில் ஈடுபடக்கூடாது. பொது மக்களிடமிருந்து நிதி வசூல் செய்வதையோ அல்லது வேறுவிதமான தரும உதவியையோ வேலை நிறுத்தம் செய்வோர் நம்பிக்கொண்டிருக்கக் கூடாது.

*3.* வேலை நிறுத்தம் செய்வோர் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுமுன், மாற்ற முடியாத தங்களுடைய குறைந்தபட்சக் கோரிக்கைகளை நிர்ணயித்து, அவற்றைப் பிரகடனம் செய்ய வேண்டும்.

நியாயமான குறையிருந்தும், வேலை நிறுத்தம் செய்வோரின் ஸ்தானத்தில் வேலை செய்ய வேறு தொழிலாளர்கள் இருந்தால், வேலை நிறுத்தம் செய்வோருக்குக் கால வரையறையின்றித் தாக்குப் பிடிக்க சக்தியிருந்தும்கூட, ஒரு வேலை நிறுத்தம் தோல்வியடையலாம். எனவே ஒரு புத்திசாலி, தனக்குப் பதிலாக எளிதில் வேறு ஒருவர் நியமிக்கப்படலாமென்று கருதினால், சம்பள உயர்விற்காகவோ அல்லது வேறு வசதிகளுக்காகவோ வேலை நிறுத்தம் செய்யமாட்டார். ஆனால், பரோபகார சிந்தனையுள்ள அல்லது தேச பக்தியுள்ள ஒருவர், தேவையைக் காட்டிலும் அதிகத் தொழிலாளர்கள் வேலைக்கு வரும் நிலைமை இருந்தால்கூட, தமது அண்டை வீட்டுக்காரனின் கஷ்டநஷ்டங்களுக்காக அனுதாபப்பட்டு, அவற்றில் பங்கு எடுத்துக்கொள்ள விரும்பி வேலை நிறுத்தம் செய்வார். எனினும், என்னால் வருணிக்கப்பட்ட விதமான சாத்விக வேலை நிறுத்தத்தில் மிரட்டல், தீ வைத்தல் போன்ற மற்ற நடவடிக்கைகளின் உருவத்தில் பலாத்காரத்திற்கு இடமேயில்லை. எனவே, சமீபத்தில் சிட்டகாங்கிற்கு அருகில் ரெயில் வண்டி தடம்புரண்டதற்கு வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்களில் எவரோ செய்துள்ள விஷமம்தான் காரணம் என்பதைக் காண, நான் மிகவும் அதிகமாக வருந்த வேண்டியவனாக இருக்கிறேன் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

நான் கூறிய சோதனைகளின்படி தீர்மானிப்பதாயின், வேலை நிறுத்தம் செய்தோருக்கு ஆதரவாகக் காங்கிரஸ் அல்லது வேறு

பொது நிதிகளுக்கு விண்ணப்பம் செய்துகொள்ளும்படியோ, அல்லது அந்த நிதிகளிலிருந்து தொகை பெறவோ வேலை நிறுத்தம் செய்தோரின் நண்பர்கள் ஒரு போதும் ஆலோசனை கூறியிருக்கக் கூடாது என்பது தெளிவாகிறது. வேலை நிறுத்தம் செய்தோர் பண உதவி பெற்றால், அவ்வளவிற்கு அவர்கள் மீது அனுதாப வேலை நிறுத்தம் செய்தோர் காட்டும் அனுதாபத்தின் மதிப்பு குறைந்துவிடுகிறது. அனுதாப வேலை நிறுத்தத்தின் பெருமை, அனுதாபவாதிகள் அடையும் அசௌகரியத்தையும் நஷ்டத்தையுமே பொறுத்திருக்கிறது.

—'எங் இந்தியா' - 22—9—1921

# 45

# ஒத்துழையாமையின் இறுதிக் கட்டங்கள்

ஒத்துழையாமையின் கடைசி இரண்டு கட்டங்களை நான் விட்டுவிட்டதாக எங்கிருந்து தகவல் கிடைத்ததோ, எனக்குத் தெரியவில்லை. நான் கூறியது என்னவெனில், அவை சமீப கால லட்சியம் அல்ல என்பதேயாகும். இப்போதும் எனது உறுதியான அபிப்பிராயம் அதுதான். ஒத்துழையாமையின் எல்லாக் கட்டங்களிலும் ஆபத்து இருக்கிறது என்பதை நான் ஒத்துக் கொள்ளுகிறேன். அதிலும் கடைசி இரண்டு கட்டங்களிலும் அதிக ஆபத்து இருக்கிறது; கடைசி கட்டத்தில்தான் எல்லாவற்றையும்விட மிகவும் அதிக ஆபத்து இருக்கிறது. அந்தக் கட்டங்கள் குறைந்தபட்ச அபாயம் இருப்பதற்கு ஏற்றவாறே நிர்ணயிக்கப்படுகின்றன. ஆயுதங்களைத் துறப்பதும், வரி கொடாமையும் மக்கள் பலாத்காரத்தில் இறங்காமல் நடைபெறும் என்ற நம்பிக்கை ஏற்படும்படியாகக் கமிட்டிக்கு மக்கள் மீது போதிய ஆதிக்கம் ஏற்பட்டாலொழிய, கடைசி இரண்டு கட்டங்கள் கைக்கொள்ளப்படமாட்டா. அந்த இரண்டு முறைகளையும் கைக்கொள்ளுவதற்கு உரிய அவசியமான ஒழுங்கையும் பயிற்சியையும் பெறுவது சாத்தியம் என்பதே எனது நம்பிக்கையாகும்.

விருப்பமில்லாத ஓர் அரசாங்கத்தைத் தங்கள் இஷ்டத்திற்கு வளைந்து கொடுக்கும்படி செய்ய பலாத்காரம் முற்றிலும் அனாவசியமானது என்பதையும், கண்ணியமான ஒத்துழையாமையினால் பலனை நிச்சயமாக அடைய முடியும் என்பதையும் அவர்கள் உணர்ந்துகொண்டுவிட்டால், அடிக்குப் பதில் அடி கொடுப்பதற்காகக்கூட அவர்கள் பலாத்காரத்தைப் பற்றிச் சிந்திக்கமாட்டார்கள். உண்மை என்னவெனில், மக்கள் கட்டுக்

கோப்பான, ஒழுங்கான நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படி செய்வதற்காக நாம் இதுவரை முயற்சி செய்யவில்லை. என்றைக் காவது நாம் உண்மையான சுயாட்சி பெற்ற ஒரு நாடாக வர வேண்டுமாயின், அத்தகைய முயற்சி எடுத்துக்கொண்டுதான் தீர வேண்டும். அதற்கு இதுதான் சுப வேளை என்பது என் அபிப்பிராயம். பஞ்சாபிற்கு இழைக்கப்பட்ட அவமதிப்பைத் தனக்கே இழைக்கப்பட்ட தவருக ஒவ்வொரு இந்தியரும் கருது கிருர். கிலாபத்திற்கு இழைக்கப்பட்ட தவறைக் குறித்து ஒவ்வொரு முஸ்லிமும் ஆத்திரம் கொண்டிருக்கிருர். எனவே, மக்கள் அடக்கத்துடனும், ஒருமித்தும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்கள் என்று எதிர்பார்ப்பதற்குரிய சாதகமான சூழ் நிலை இப்போது இருந்து வருகிறது.

வரி கொடுப்பதை நிறுத்தி வைக்கும் விஷயமாக துரிதமான, மகத்தான ஆதரவு கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும் நான் கூறியது போல, தங்களுடைய உடைமைகள் விற்கப்படும்போதுகூட சாத்விகத்தின் உயர்வை அறிந்துகொண்டு நடக்க ஜனங்கள் எவ்வளவு காலம் வரையில் பயிற்சியளிக்கப்படவில்லையோ, அவ்வளவு காலம் வரையில் கடைசி கட்டத்தைக் கணிசமான அளவுக்குக் கைக்கொள்ளுவது கஷ்டமாகும்.

திருடர்களிடமிருந்தும் கொள்ளைக்காரர்களிடமிருந்தும் நம்மை நாமே பாதுகாத்துக்கொள்ளும் ஆற்றலை நாம் பெருத வரையில், திடீரென்று ராணுவத்தையும் போலீசையும் வாபஸ் செய்து கொள்ளுவது ஆபத்தாகும் என்பதையும் நான் ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனல், பரந்த அளவுக்கு ராணுவத்திற்கும் போலீசுக் கும் அழைப்பு விடுக்க நாம் தயாராக இருக்கும்போது, நம்மை நாமே பாதுகாத்துக் கொள்ளக்கூடிய நிலையில் நாம் இருப் பதைக் காண்போம். தேச பக்தி நோக்கம் காரணமாக ராணுவ மும் போலீசும் ராஜிநாமா செய்தால், அவர்கள் அதே கடமை யைத் தேசீயத் தொண்டர்கள் என்ற முறையில் செய்ய வேண்டு மென நான் நிச்சயமாக எதிர்பார்ப்பேன். கூலிக்காரர்களாக அல்ல, தங்கள் தேச மக்களின் உயிரையும் உடைமைகளையும் விரும்பிப் பாதுகாப்பவர்களாக அவர்கள் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். ஒத்துழையாமை இயக்கம், அதன் விளைவாக எழும் பிரச்னைகளைத் தானகவே சீர்திருத்திக்கொள்ளும் ஓர் இயக்கமாகும். அரசாங்கப் பள்ளிக்கூடங்கள் காலியாகிவிட் டால், அவற்றின் ஸ்தானத்தில் தேசீயக் கல்விச்சாலைகள் ஏற் படுவதை நான் நிச்சயமாக எதிர்பார்ப்பேன். வக்கீல்கள் ஒருமித் துத் தங்கள் தொழிலை நிறுத்திவிட்டால், அவர்கள் மத்தியஸ்த கோர்ட்டுகளை நிறுவுவார்கள். அவற்றின் பலனக தேசத்தில், தனி நபர்களின் சச்சரவுகளையும் தகராறுகளையும் தீர்த்துக் கொள்ளவும், தவறு செய்வோருக்குத் தண்டனை விதிக்கவும்

துரிதமான, மலிவான ஒரு முறை ஏற்படும். அந்தக் கடமையில் உள்ள கஷ்டத்தை கில்பாத் கமிட்டி பூரணமாக உணர்ந்து, அப்போதைக்கப்போது எழும் சந்தர்ப்பங்களைச் சமாளிப்பதற்கு எல்லா அவசியமான முறைகளையும் கைக்கொண்டு வருகிறது.

ராணுவ சம்பந்தமல்லாத உத்தியோகங்களை விட்டுவிடும் விஷயமாக, எவ்வித அபாயமும் நேருமென அஞ்சுவதற்கில்லை. ஏனெனில், தமக்கும் தம் குடும்பத்திற்கும் நண்பர்களின் மூலமோ அல்லது வேறுவிதமாகவோ ஆதரவு பெறும் நிலையில் ஒருவர் இருந்தாலொழிய, எவரும் தமது வேலையை விட்டுவிடமாட்டார்.

மாணவர்களைக் கல்விச் சாலையிலிருந்து வாபஸ் செய்து கொள்ளுவதை அங்கீகரிக்க மறுப்பது, ஒத்துழையாமையின் உண்மையான தன்மையை அறிந்துகொள்ளத் தவறுவதே யாகும். நமது குழந்தைகள் வாசிப்பதற்கு நாம் பணம் செலவு செய்கிறோம் என்பது உண்மையே. எனினும், கல்வி அளிக்கும் ஸ்தாபனம் ஊழலாகி விடும்போது, அந்தக் கல்விக்காகப் பணம் செலவு செய்வது அங்குள்ள ஊழலில் பங்கெடுத்துக்கொள்ளுவதேயாகும். மாணவர்கள் கல்விச்சாலைகளையோ அல்லது கலாசாலைகளையோ விட்டு வெளியேறும்போது, ஆசிரியர்கள், தாங்கள் ராஜினாமா செய்வதே விவேகமாகும் என்பதை அறிந்துகொள்ளத் தவறுவார்களென்று நான் நினைக்கவில்லை. அப்படியே அவர்கள் ராஜினாமா செய்யாவிட்டாலும், கௌரவத்துக்கும் மதத்திற்கும் இழிவு ஏற்படும்போது பணத்தைப் பெரிதாகக் கருதுவது கூடாது.

சட்டசபைகள் பகிஷ்காரம் சம்பந்தப்பட்ட வரையில், மிதவாதிகளோ அல்லது வேறு எவரோ சட்டசபைகளில் பிரவேசிப்பது பெரிய விஷயமல்ல; ஒத்துழையாமையில் நம்பிக்கையுடையவர்கள் பிரவேசிப்பதுதான் பெரிய விஷயமாகும். நீங்கள் மேல் பதவிகளில் ஒத்துழைப்பது, கீழ்ப் பதவிகளில் இருப்போர் ஒத்துழையாமையை அனுஷ்டிப்பது என்பது கூடாது. ஒரு சட்டசபை அங்கத்தினர் சட்டசபையில் இருந்துகொண்டு, சட்டசபை மேஜையைச் சுத்தம் செய்யும் குமாஸ்தாவை ராஜினாமா செய்யும்படி கூற முடியாதல்லவா?

—'எங் இந்தியா' – 18—8—1920

# 46

# தூய்மை ஆயுதத்தினால் தீங்கு நேராது

இந்தியாவில் உள்ள சில பாகங்களில் தாறுமாறான சம்பவங்கள் நிகழ்ந்ததெனினும், தேசம் முற்றிலும் கட்டுப்பாட்டிற்குள் அடங்கியிருக்கிறது; சத்தியாக்கிரகத்தின் செல்வாக்கு முற்றிலும் தேசத்தின் நன்மைக்காகவே இருக்கிறது; பலாத்கார நடவடிக்கைகள் மூண்ட இடங்களில் ஆங்காங்குள்ள சில நிகழ்ச்சிகளே அவற்றிற்குக் காரணங்களாகும்; - சென்ற வருடம் எனக்கு ஏற்பட்ட அனுபவத்திலிருந்து நான் தெரிந்துகொண்டது இவை தான். அதே சமயத்தில், மக்கள் ஈடுபட்ட பலாத்கார நடவடிக்கைகளும், சில பாகங்களில் சந்தேகத்துக்கு இடமின்றி தாண்டவமாடிய சட்ட விரோதமான உணர்ச்சியும் கட்டுப்பாட்டில் இருந்திருக்க வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நான் அப்போது போட்ட தவறான கணக்கையும் பூரணமாக ஒப்புக்கொண்டுள்ளேன். எனினும், அப்போது நான் பெற்ற துக்ககரமான அனுபவத்தினாலெல்லாம் சத்தியாக்கிரகத்திலோ அல்லது அந்த இணையற்ற சக்தியை இந்தியாவில் உபயோகிப்பது சாத்தியம் என்பதிலோ எனக்குள்ள நம்பிக்கையை அசைக்க முடியவில்லை. ஏற்கனவே நிகழ்ந்த தவறுகளைத் தவிர்ப்பதற்காக, இம்முறை தகுந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பலாத்காரத்தைத் தடுக்க விசேஷ முயற்சிகள் செய்தும் கூட, சிறிதும் எதிர்பாராத வகையில் பலாத்காரம் நேரலாம் என்பதற்காக, தெளிவான பாதையிலிருந்து என்னை எவரும் தடுக்க நான் இடம் கொடுக்கமாட்டேன். அதே சமயத்தில், எனது நிலைமையை நான் தெளிவாக்க வேண்டும். அதிகாரிகள் கோபமடைந்து முகத்தைச் சுளித்துக்கொள்ளுகிறார்கள் என்பதற்காக ஒரு சத்தியாக்கிரகியை, அவரது கடமையைச் செய்வதிலிருந்து எதுவும் தடுக்க முடியாது எனலாம். அவசியமாயின், ஒரு பத்து லட்சம் மக்களின் உயிர்களைக்கூட அபாயத்திற்குள்ளாக்க நான் தயங்கமாட்டேன். ஆனால், அத்தகையோர் துன்பத்தை வலுவில் முன்வந்து ஏற்பவர்களாகவும், நிரபராதிகளாகவும், அப்பழுக்கற்ற அப்பாவிகளாகவும் இருக்க வேண்டும். ஒரு சத்தியாக்கிரக இயக்கத்தில் மக்கள் செய்யும் தவறுகள்தான் கவலையைக் கொடுக்கக்கூடிய விஷயமாகும்.

பலமும் சக்தியும் வாய்ந்தவர்கள், தவறுகளையும் வெறிபிடித்த காரியங்களையும் செய்யத்தான் செய்வார்கள். சக்தி பொருந்தியவர்களைப்போல் கோப வெறியைக் காட்டும்போது அல்ல; தானாக மனமுவந்து கண்ணியமாகவும் முற்றிலும் பணிவாகவும் நடந்து கொள்ளும்போதுதான் வெற்றி கிடைக்கும் நேரம் வருகிறது. எனினும், தன்னைத் தவறான நிலையில் வைத்துக்கொள்ளும்

அரசாங்கத்தினிடம் பணிந்து போவதால் வெற்றி கிடைக்காது. எனவே, நமது அன்பிற்குப் பாத்திரர்களான உற்ருர் உறவினரின் உயிரை எவ்வளவு புனிதமாகக் கருதுகிறேமோ, அவ்வளவு புனிதமாக ஒவ்வோர் ஆங்கிலேயரின் உயிரையும், அரசாங்கத்தில் ஊழியம் செய்யும் ஒவ்வோர் அதிகாரியின் உயிரையும் கருதுவதில்தான் வெற்றியின் ரகசியம் அடங்கியிருக்கிறது. விவரம் தெரிந்த பின், சற்றேறக்குறைய என்னுடைய நாற்பது வருட வாழ்க்கையில், நான் பெற்ற ஆச்சரியகரமான அனுபவமெல்லாம், உயிரைப் போன்ற அரும்பெரும் பரிசு வேறு எதுவும் இல்லை என்பதை எனக்குச் சந்தேகத்திற்கு இடமின்றி அறிவுறுத்தியிருக்கிறது. தாங்கள் இந்தியாவிலே மோசமான முறையில் சிறுபான்மையோராக இருந்தும், எவ்வித அபாயமும் ஏற்படாமல் தங்களுடைய உயிர்கள் பாதுகாக்கப்படுகின்றன என்று ஆங்கிலேயர்கள் கருத வேண்டும். தங்களிடமுள்ள இணையற்ற நாசகரமான ஆயுதங்கள் காரணமாக அல்ல, ஆனல், முற்றிலும் தவறு செய்தவர்கள் என்று இந்தியர்கள் கருதும் நபர்களின் உயிர்களுக்குக்கூட அவர்கள் ஆபத்து விளைவிக்க மாட்டார்கள் என்று ஆங்கிலேயர்கள் எந்த விநாடி கருதுகிருர்களோ அதே விநாடியில், இந்தியா சம்பந்தப்பட்டவரையில் ஆங்கிலேயர்களின் சுபாவம் அடியோடு மாறிவிடும் என்று கூற நான் துணிகிறேன். அதே விநாடியில், இந்தியாவில் உள்ள நாசகரமான வெட்டும் ஆயுதங்கள் எல்லாம் துருப்பிடிக்க ஆரம்பித்துவிடும். இது வெகு தொலைவில் உள்ள ஒரு தோற்றம் என்பதை நான் அறிவேன். ஆனல், அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஒளியைக் காண்பதும், அதன்படி நடப்பதுமே எனக்குப் போதுமானது. முன்னேறிச் செல்லும்போது எனக்குச் சகாக்கள் கிடைத்தால், அதுவே போதுமென்று நான் திருப்தியடைவேன்.

•

நான் இடைவிடாது அகிம்சைத் தத்துவத்தை உபதேசித்து வந்ததாலும், நடைமுறையில் அதன் உபயோகத்தை நான் வெற்றிகரமாக நிரூபித்ததாலுமே, கிலாபத் இயக்க சம்பந்தமாக சந்தேகத்துக்கு இடமின்றி இருந்து வரும் பலாத்கார சக்திகள் முற்றிலும் கட்டுப்பாட்டிற்குள் அடங்கியிருக்கின்றன என்று நான் ஆங்கில நண்பர்களுடன் பேசும்போதெல்லாம் கூறி வருகிறேன்.

ஒத்துழையாமையை, நான் அவ்வளவு சக்தி பொருந்திய தூய்மையான ஒரு கருவியாக எண்ணுகிறேன். மனப்பூர்வமாகவும் சிரத்தையுடனும் அதை அமலுக்குக் கொண்டு வந்தால், அது முதலில் கடவுளின் சாம்ராஜ்யத்தை அடைய முற்படுவது போலாகும்; பிறகு அதைத் தொடர்ந்து எல்லா நன்மைகளும் ஏற்படும். அப்போது மக்கள் தங்களுடைய உண்மையான சக்தியை உணர்ந்திருப்பார்கள். அப்போது அவர்கள், ஒழுங்கு,

தன்னடக்கம், கூட்டு நடவடிக்கை, அகிம்சை, ஸ்தாபன முறை முதலிய, ஒரு தேசத்தை மகத்தானதாக மாத்திரமல்ல, மகத்தானதாகவும் சிறந்ததாகவும் செய்வதற்குள்ள எல்லாவற்றின் மதிப்பையும் அவர்கள் கற்றுக்கொண்டிருப்பார்கள்.

நம்முடைய முஸ்லிம் சகோதரர்களைக் காட்டிலும் நான் அதிகத் தூய்மையுள்ளவன் என்று பெருமையடித்துக்கொள்ள எனக்கு உரிமை உண்டா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், என்னுடைய ஒத்துழையாமைச் சித்தாந்தத்தில் அவர்களுக்கு முழு அளவு நம்பிக்கை இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அது பலவீனர்களின் ஓர் ஆயுதம், ஒரு யுக்தி என்றே அவர்கள் கருதுகின்றனர். தற்போதுள்ள நிலையில், நேரடி நடவடிக்கையாக பலாத்காரமற்ற ஒத்துழையாமையைத் தவிர வேறு வழி எதுவுமில்லை என்று அவர்கள் கருதுகின்றனர். வெற்றிகரமாக பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட முடியுமாயின், அவர்களில் சிலர் இன்று அப்படியே ஈடுபடுவார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், மனித யத்தனத்தில் அது அசாத்தியமான காரியம் என்பதை அவர்கள் நன்கு தெரிந்துகொண்டிருக்கிறார்கள். எனவே, அவர்கள் சம்பந்தப்பட்ட வரையில், ஒத்துழையாமை கடமையாக மாத்திரமில்லை, வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவதாகவும் இருக்கிறது.

ஆனால், நானோ, என் சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு எதிராக ஒத்துழையாமையை நடைமுறையில் கைக்கொண்டிருப்பதைப் போலவே, அரசாங்கத்திற்கு எதிராகவும் கைக்கொள்ளுகிறேன். பிரிட்டிஷ் அரசியலில் எனக்கு மிகவும் மதிப்பு உண்டு. ஆங்கிலேயர்களிடம் எனக்குப் பகைமை கிடையாது என்பது மாத்திரமல்ல, அவர்களுடைய குணாதிசயங்களில் பல நான் பின்பற்றுவதற்கு உரியவை என்பதும் எனது அபிப்பிராயமாகும். ஆங்கிலேயர்களிடையே எனக்குப் பல நண்பர்கள் உண்டு. எவரையும் பகைவராகக் கருதுவது எனது மதத்திற்கே விரோதமாகும். முஸ்லிம்கள் விஷயத்திலும் எனது சித்தாந்தம் அதுதான். அவர்களுடைய கோரிக்கை நியாயமானது, தூய்மையானது. எனவே, எனக்கும் அவர்களுக்கும் கருத்து வேற்றுமை இருப்பினும், அவர்களுடன் தொடர்பு கொள்ளவும், எனது முறையைப் பரிசோதனை செய்து பார்க்கும்படி அவர்களை அழைக்கவும் நான் தயங்கவில்லை. ஏனெனில், உண்மையைக் கூறினால், அது எவ்விதம் மிகுந்த நன்மையைக் கொடுக்கிறதோ அது போலவே, தூய்மையான ஓர் ஆயுதத்தைத் தவறான நோக்கத்துடன் உபயோகித்தால்கூட, அது சிறிதளவாவது நன்மையை அளிக்கத் தவறுவதில்லை.

— 'யங் இந்தியா' - 2- 6—1920

47

# ஒத்துழையாமை விளக்கம்

[தென்னிந்தியாவில் உள்ள சில முக்கியமான முஸ்லிம் பகுதிகளுக்கு விஜயம் செய்வதற்காக மகாத்மா காந்தி, 1920-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சென்னைக்கு விஜயம் செய்தபோது, புரசைவாக்கம் ஹைரோடில் இருந்த அவரது தாற்காலிகமான ஜாகையில் தங்கியிருந்தார். அப்போது ஒத்துழையாமை சம்பந்தமாக 'மதராஸ் மெயில்' பத்திரிகையின் பிரதிநிதி அவரைப் பேட்டி கண்டு பேச விரும்பினர். அவ்வமயம் காந்திஜி தமது திட்டம் பற்றிப் பல தொண்டர்களுடன் விவாதித்துக்கொண்டிருந்தார். அப்படியிருந்தும் அவர், ஹிந்துக்கள், முஸ்லிம்களின் மனத்தைக் கிளறிக்கொண்டிருந்த அவ்விஷயமாக அப்பத்திரிகைப் பிரதிநிதியின் கேள்விகளுக்குப் பதில் அளிக்க இசைந்தார். அவர்களிடையே நடந்த சம்பாஷணை இங்கே விவரமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

**நிருபர்:** சென்ற வருடம் நிகழ்ந்த சத்தியாக்கிரகக் கிளர்ச்சியில் நீங்கள் பெற்ற அனுபவத்திற்குப் பிறகும், ஒத்துழையாமையை அனுஷ்டிக்கும்படி ஆலோசனை கூறுவதில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா? அவ்விதம் யோசனை கூறுவது விவேகமான காரியமென்று நீங்கள் கருதுகிறீர்களா?

**காந்திஜி:** நிச்சயமாக.

**கேள்வி:** சென்ற வருடம் நிகழ்ந்த சத்தியாக்கிரக இயக்கத்திற்குப் பிறகு, நிலைமையில் மாறுதல் ஏற்பட்டிருக்கிறதென்று நீங்கள் எப்படிக் கருதுகிறீர்கள்?

**பதில்:** முன்பு இருந்ததைவிட இப்போது மக்கள் அதிக ஒழுங்குடனும் கட்டுப்பாடுடனும் இருக்கிறார்களென நான் எண்ணுகிறேன். இதில் பாமர மக்களையும் சேர்த்தே பேசுகிறேன். தேசத்தின் பல்வேறு பாகங்களுக்கும் சென்று, ஏராளமான மக்களைக் காணச் சந்தர்ப்பங்கள் கிடைத்ததிலிருந்தே நான் இவ்விதம் கூறுகிறேன்.

**கே:** சத்தியாக்கிரக தத்துவத்தைப் பாமர மக்கள் புரிந்துகொண்டுள்ளனர் என்பதில் உங்களுக்குத் திருப்தி ஏற்பட்டிருக்கிறதா?

ப: ஆமாம்.

கே: அதனால்தான் நீங்கள் ஒத்துழையாமை இயக்கத்தை மேற்கொண்டு வற்புறுத்தி வருகிறீர்கள் அல்லவா?

ப: ஆமாம். தவிர, சத்தியாக்கிரகத்தின் சாத்விக சட்ட மறுப்பு அம்சத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட அபாயம், ஒத்துழையாமையில் ஏற்படுவதற்கில்லை. ஏனெனில், ஒத்துழையாமை இயக்கத்திலே நாங்கள் சாத்விக சட்ட மறுப்பை மக்கள் இயக்கமாகக் கைக்கொள்ளப் போவதில்லை. அவ்விஷயமாக, இதுவரையில் ஏற்பட்டுள்ள பலன் மிகவும் உற்சாகமளிப்பதாக இருக்கிறது. உதாரணமாக, சிந்துவிலும் டில்லியிலும் உள்ள மக்கள், அவர்களுடைய சுதந்திரத்திற்கு எதிராக ஆத்திரமூட்டத்தக்க கட்டுப்பாடுகளை அதிகாரிகள் விதித்தும்கூட, அரசாங்க விரோதமான கூட்டப் பிரகடனங்கள் செய்தல், அவர்களின் விளம்பர அறிக்கைகள் ஒட்டுவதைத் தடுத்தல் இவை சம்பந்தமாக கமிட்டி விடுத்த கட்டளைகளை நிறைவேற்றியுள்ளனர். அவை குற்றமற்றவை என நாங்கள் கருதுகிறோம். ஆனால் அதிகாரிகளோ, அவற்றைக் குற்றங்களென்று கருதுகிறார்கள்.

கே: அரசாங்கத்துடன் ஒத்துழைப்பது வாபஸானதும், அதிகாரிகளை வற்புறுத்த நீங்கள் என்ன செய்யலாமென்று எதிர்பார்க்கிறீர்கள்?

ப: தாங்களாக விரும்பியோ அல்லது வற்புறுத்தப்பட்டோ மக்கள் அளிக்கும் ஒத்துழைப்பின்றி எந்த அரசாங்கமும் ஒரு விநாடிகூட உயிர் வாழ முடியாது என்பதை எவரும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஒவ்வொரு சிறு விஷயத்திலும் மக்கள் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை திடீரென்று நிறுத்திவிட்டால், அரசாங்கம் ஸ்தம்பித்துவிடும்.

கே: எனினும், 'நிறுத்திவிட்டால்' என்பது பெரிய சந்தேகத்திற்கு இடமான விஷயம் அல்லவா?

ப: நிச்சயமாக அப்படித்தான்.

கே: அந்தப் பெரிய சந்தேகத்தை எதிர்த்து நீங்கள் எப்படி வெற்றி பெற உத்தேசித்திருக்கிறீர்கள்?

ப: எனது இயக்கத் திட்டத்தில் சமயோசிதமான யுக்திக்கு இடமில்லை. கிலாபத் இயக்கம் உண்மையிலேயே பாமரர்களையும் படித்தவர்களையும் ஊடுருவியிருக்குமாயின், ஜனங்களிடமிருந்து போதிய ஆதரவு கிடைத்துத்தான் தீரும்.

க: தங்கள் பதில், கேள்வியை மழுப்புவதாகாதா?

ப: ஆகாது. ஏனெனில், கிலாபத் தவறு முஸ்லிம்களுக்கு மிகுந்த வேதனையைக் கொடுத்துளதென்று நம்புவதற்கு என்னிடம் ஆதாரங்கள் இருக்கின்றன. எனினும், வெற்றி

கரமான ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவதற்குப் போதுமான தியாகம் செய்யும் அளவுக்கு அவர்களிடையே உணர்ச்சிப் பெருக்கு ஏற்பட்டுளதா என்பது இனிமேல் தான் தெரியவேண்டும்.

கே: அதாவது, தேச நிலைமை பற்றி நீங்கள் செய்துள்ள ஆராய்ச்சி, முஸ்லிம் மக்களில் பெரும்பாலோர் உங்களை ஆதரிக்கிறார்கள் என்ற பூரணமான நம்பிக்கையைக் கொடுத்திருக்கிறது. அதனால், ஒத்துழையாமையை மேற்கொள்ளும் படி ஆலோசனை கூறுவது நியாயமானது என்று நீங்கள் நினைக்கிறீர்கள் அல்லவா?

ப: ஆமாம்.

கே: இந்த ஒத்துழையாமை, அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை அடியோடு கத்தரித்துவிடும் என்ற உறுதி உங்களுக்கு ஏற்பட்டுளதா?

ப: இல்லை. அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை அடியோடு கத்தரித்துவிட வேண்டும் என்பதும் தற்போது எனது விருப்பம் அல்ல. கிலாபத் பிரச்னை அல்லது பஞ்சாப் பிரச்னை சம்பந்தமாக இந்திய அரசாங்கமோ அல்லது பிரிட்டிஷ் அரசாங்கமோ என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்யவில்லை என்ற அதிருப்தியையும், மக்கள் உணர்ச்சியின் ஆழத்தையும் அரசாங்கம் உணரும்படி செய்வதற்கு அவசியமான அளவுக்கு மாத்திரமே நான் ஒத்துழையாமையை அனுஷ்டித்து வருகிறேன்.

கே: முஸ்லிம்கள், தங்கள் சமூகத்திற்கு இழைக்கப்பட்டுள்ள தீங்கைக் குறித்து எவ்வளவு மனக்கொதிப்பு அடைந்திருந்தாலும், அவர்களிடையேகூட சில பிரிவினர் ஒத்துழையாமை விஷயத்தில் உற்சாகம் கொள்ளவில்லை என்பதை நீங்கள் உணருகிறீர்களா?

ப: ஆமாம். ஆனால் அவர்களின் தொகை, ஒத்துழையாமையை மேற்கொள்ளத் தயாராக இருப்பவர்களின் தொகையைக் காட்டிலும் சிறியது.

கே: பட்டம் பதவிகளைத் துறந்துவிட வேண்டுமென்றும், சட்டசபைத் தேர்தல்களைப் பகிஷ்காரம் செய்யவேண்டும் என்றும் நீங்கள் விடுத்த வேண்டுகோளுக்குப் போதிய ஆதரவு கிடைக்கவில்லை. எனவே இந்த உண்மை, நீங்கள் அவர்களுடைய கொள்கை உறுதியில் எல்லை மீறி நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள் என்பதைச் சுட்டிக்காட்டவில்லையா?

ப : நான் அவ்விதம் நினைக்கவில்லை. அதற்குக் காரணம் என்ன வெனில், அந்தக் கட்டம் இப்போதுதான் அமலுக்கு வந்திருக்கிறது. நமது ஜனங்கள் எப்போதும் மிகவும் ஜாக்கிரதையாகவும், நகர்ந்து கொடுப்பதில் மெதுவாகவுமே இருப்பார்கள். தவிர, முதல் கட்டமானது பெரிதும் சமூகத்தில் உச்ச ஸ்தானத்தில் இருப்பவர்களையே பாதிக்கிறது. அவர்கள் சிறிதும் சந்தேகமின்றி செல்வாக்குள்ளவர்களே என்றாலும், அவர்கள் மிகக் குறைந்த சிறுபான்மையோரே ஆவர்.

கே : இந்த உயர்ந்த வகுப்பினர் உங்களுடைய வேண்டுகோளுக்குப் போதிய அளவு இசைந்திருக்கிறார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

ப : இசைந்திருக்கிறார்கள் என்றோ அல்லது இசையவில்லை என்றோ தற்போது நான் எதுவும் கூற இயலாதவனாக இருக்கிறேன். இந்த மாதக் கடைசியில்தான் நான் அக்கேள்விக்குத் திட்டமான பதில் கூறமுடியும்.

கே : மன்னரிடமும், மன்னர் குடும்பத்தினரிடமும் உள்ள விசுவாசத்திற்குக் குந்தகமின்றி, பிரிட்டிஷ் இளவரசரின் விஜயத்தில் ஒத்துழையாமையைக் கைக்கொள்ள வேண்டுமென்று ஒருவர் கேட்டுக்கொள்ள முடியுமென நீங்கள் நினைக்கிறீர்களா?

ப : அவ்விதம், சிறிதும் சந்தேகமின்றி நிச்சயமாக நினைக்கிறேன். அவ்வாறு நினைப்பதற்குக் காரணம் சாதாரணமானது. இளவரசரின் விஜயத்தைப் பகிஷ்காரம் செய்வதன் சம்பந்தமாக ஏதாவது விசுவாசமின்மை இருக்கிறதெனில், அந்த விசுவாசமின்மை இன்றைய அரசாங்கத்தினிடமேயன்றி இளவரசரிடமல்ல.

கே : இளவரசர் விஜயத்தையொட்டி இந்தப் பகிஷ்காரத்தை வளர்ப்பதால் என்ன லாபம் அடையப் போகிறீர்கள்?

ப : இன்றைய அரசாங்கத்தினிடம் இந்திய மக்களுக்கு அனுதாபம் இல்லை. பஞ்சாப், கிலாபத் சம்பந்தமாகவும், மற்றும் முக்கியமான நிர்வாக முறைகளை யொட்டியும்கூட அரசாங்கத்தின் கொள்கையை மக்கள் பலமாகக் கண்டிக்கிறார்கள் என்பதைக் காட்ட நான் விரும்புகிறேன். மக்களுக்குத் தற்போதைய அரசாங்கத்தின் மீது தங்களுக்குள்ள அதிருப்தியைக் காட்ட, இளவரசரின் விஜயம் அபூர்வமான ஒரு நல்ல சந்தர்ப்பமென நான் கருதுகிறேன். மகத்தான ராஜீய பலன்களுக்காகவே, இளவரசரின் விஜயம் ஏற்பாடு

செய்யப்பட்டிருக்கிறது. அது ராஜீய சம்பந்தமல்லாத ஒரு நிகழ்ச்சியாக இருக்கப்போவதில்லை. அந்த விஜயத்தை, இந்தியாவின் மீது தங்களுக்குள்ள பிடிப்பைப் பலப்படுத்துவதற்கான முதல்தர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகச் செய்ய இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசாங்கமும் விரும்புகின்றன. அந்த இரு அரசாங்கங்களும் தற்போது மக்களுக்கு முற்றிலும் விரோதமாக இருக்கின்றன. எனவே, அத்தகைய இரண்டு அரசாங்கங்களால் தங்கள் சொந்த நலன்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டு வரும் விஜயத்தைப் பகிஷ்காரம் செய்யவேண்டியது, மக்களின் முழு முதற் கடமையென்று நான் நினைக்கிறேன்.

கே: இந்தியாவின்மீது அரசாங்கத்திற்குள்ள பிடியைப் பலப்படுத்துவது நாட்டின் சிறந்த நலன்களுக்கு ஏற்றதல்ல என்று தாங்கள் கருதுகிறீர்களா? அதனால்தான் நீங்கள் இந்த பகிஷ்காரத்தைக் கொண்டு வர விரும்புகிறீர்களா?

ப: ஆம். தற்போதுள்ளது போன்ற ஒரு கொடிய அரசாங்கத்தின் பிடியைப் பலப்படுத்துவது தேசத்தின் சிறந்த நலன்களுக்கு ஏற்றதல்ல. இங்கிலாந்துக்கும் இந்தியாவிற்கும் உள்ள பந்தத்தை எப்படியாவது தளர்த்திச் சீர் குலைத்துவிட வேண்டுமென்று நான் விரும்பவில்லை. இந்தியா சுபிட்சம் அடைவதற்கான வகையில் மாத்திரமே அந்த பந்தம் பலமடைய வேண்டும் என்பது எனது விருப்பமாகும்.

கே: ஒத்துழையாமையும், சட்டசபைகளைப் பகிஷ்காரம் செய்யாமலிருப்பதும், ஒன்றுக்கொன்று முரணானதல்ல என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

ப: இல்லை. ஒத்துழையாமைத் திட்டத்தை மேற்கொள்ளும் ஒருவர், சட்டசபைகளுக்கு நிற்பது பொருத்தமற்ற காரியமேயாகும்.

கே: உங்கள் அபிப்பிராயத்தில் ஒத்துழையாமை ஒரு லட்சியமா அல்லது லட்சியத்தை அடைவதற்கான வழியா? லட்சியத்தை அடைவதற்கான வழியாயின், உங்களுடைய லட்சியம் என்ன?

ப: அது லட்சியத்தை அடைவதற்கான ஒரு வழியே. முற்றிலும் அநீதியான தற்போதைய அரசாங்கத்தை நீதி நெறியுள்ள அரசாங்கமாகச் செய்வதே லட்சியமாகும். நேர்மையான ஓர் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பது கடமையாகும்; அநீதியான அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுப்பதும் ஒரு கடமையாகும்.

கே : சட்டசபைகளுக்குச் சென்று ஒன்று முட்டுக்கட்டை தந்திர முறைகளைக் கைக்கொள்ளுவது, அல்லது உங்களுடைய ஒத்துழையாமைக்கு இணங்க விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ள மறுப்பது என்ற யோசனையை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

ப : இல்லை. ஒத்துழையாமையில் குற்றம் குறையற்ற நிபுணன் என்ற முறையில் நான், அவ்வித யோசனை ஒத்துழையாமையின் உண்மையான தத்துவத்திற்கு முரணானதென்றே கருதுகிறேன். முட்டுக்கட்டை போடப் போட ஓர் அரசாங்கம் உண்மையில் தழைத்தோங்குகிறது என்று நான் அடிக்கடி கூறியுள்ளேன். விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ளுவதில்லை என்றயோசனை சம்பந்தப்பட்ட வரையில், அதில் எவ்விதப் பொருளையும் நான் காண முடியவில்லை. அவ்விதம் செய்வது, பொன்னான நேரத்தையும் பணத்தையும் யாதொரு பலனுமின்றி வீணாக்குவதாகும்.

கே : வேறு விதமாகக் கூறினால், முட்டுக்கட்டை போடுவது ஒத்துழையாமையில் ஒரு கட்டமல்ல என்பதுதானே?

ப: ஆமாம்.

கே : சட்ட வரம்பிற்கு உட்பட்ட கிளர்ச்சி சம்பந்தமான எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்தாகிவிட்டதென்பதில் உங்களுக்குத் திருப்தி ஏற்பட்டுளதா? ஒத்துழையாமை முறை ஒன்றுதான் பாக்கியா?

ப : ஒத்துழையாமையைச் சட்ட வரம்பிற்கு உட்படாததாக நான் கருதவில்லை. சட்ட வரம்பிற்கு உட்பட்ட பரிகார முறைகளிலெல்லாம் நமக்கு பாக்கியிருப்பது ஒத்துழையாமை ஒன்றுதான்.

கே : அரசாங்கத்தைச் செயலற்றுப் போகும்படி செய்வதற்காகவே அதைக் கைக்கொள்ளுவது, சட்ட வரம்பிற்கு உட்பட்டதென்று நீங்கள் கருதுகிறீர்களா?

ப : நிச்சயமாக அது சட்ட வரம்பிற்கு உட்படாத விஷயமல்ல. விவேகமுள்ள மனிதன், சட்ட வரம்பிற்கு உட்பட்ட எல்லா முறைகளையும், அவை விரும்பத்தக்கதாக இராவிடில், எடுத்துக்கொள்ள மாட்டான். அவ்விதம் எடுத்துக் கொள்ளும்படி நானும் ஆலோசனை கூறமாட்டேன். ஒத்துழையாமையின் கட்டங்களை நான் படிப்படியாகவே கைக்கொண்டு வருகிறேன். ஏனெனில், உண்மையற்ற ஒழுங்கிலிருந்து உண்மையான ஒழுங்கை உருவாக்க நான் விரும்புகிறேன். ஒத்துழையாமையைத் தொடர்ந்து அராஜகமோ அல்லது

குழப்பமோ ஏற்படாது என்றும், அவ்விதம் ஏற்படாத நிலைக்கு நாடு தயாராக இருக்கிறதென்றும் எனக்குத் திருப்தி ஏற்பட்டாலொழிய, நான் ஒத்துழையாமையில் ஓர் அடிகூட எடுத்து வைக்கப் போவதில்லை.

**கே :** அதைத் தொடர்ந்து அராஜகம் ஏற்படாது என்று உங்களை நீங்களே எப்படித் திருப்திப்படுத்திக் கொள்ளுவீர்கள்?

**ப :** உதாரணமாக, ஆயுதங்களைக் கீழே வைத்துவிடும்படி நான் போலீசாருக்கு ஆலோசனை கூறினல், திருடர்களிடமிருந்தும் கொள்ளைக்காரர்களிடமிருந்தும் நம்மைப் பாதுகாத்துக் கொள்ள நாம் தொண்டர்களின் உதவியைப் பெற முடியும் என்பதில் எனக்குத் திருப்தி ஏற்பட்டிருக்க வேண்டும். சென்ற வருடம் லாகூரிலும் அமிருதசரஸிலும் நடந்தது அதேதான். அதாவது, ராணுவமும் போலீசாரும் வாபஸாகி விட்ட போது, அந்நகரங்களின் பிரஜைகள் தொண்டர்களின் பாதுகாப்பையே நாடினர். போதிய படைகளின்றி அரசாங்கம் அத்தகைய பாதுகாப்பு முறைகளை எடுத்துக் கொள்ளாத ஓரிடத்தில் கூட, மக்கள் வெற்றிகரமாகத் தங்களைப் பாதுகாத்துக் கொண்டதை நான் அறிவேன்.

**கே :** தங்கள் தொழில்களை நிறுத்துவதன் மூலம் ஒத்துழையாமையை அனுஷ்டிக்கும்படி நீங்கள் வக்கீல்களுக்கு யோசனை கூறியிருக்கிறீர்கள். அவ்விஷயமாக உங்களுடைய அனுபவம் என்ன? உங்கள் வேண்டுகோளுக்கு வக்கீல்கள் அளித்துள்ள ஆதரவு, அத்தகையோருடைய உதவியைக் கொண்டு ஒத்துழையாமையின் எல்லாக் கட்டங்களையும் நீங்கள் கடந்து செல்ல முடியும் என்று நம்பும்படி உங்களுக்கு உற்சாகம் அளித்திருக்கிறதா?

**ப :** எனது வேண்டுகோளுக்கு ஏராளமானவர்கள் ஆதரவு அளித்திருக்கிறார்கள் என்று நான் கூற முடியாது. எவ்வளவு பேர்கள் ஆதரவு அளிப்பார்கள் என்று இதற்குள் எதுவும் சொல்லுவதற்கில்லை. ஆனல், ஒத்துழையாமையின் எல்லாக் கட்டங்களையும் கமிட்டி நிறைவேற்றுவதற்கு, நான் வக்கீல்களையோ அல்லது உயர்ந்த படிப்பு படித்தவர்களையோ நம்பிக்கொண்டிருக்கவில்லை என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஒத்துழையாமையின் பிந்திய கட்டங்கள் சம்பந்தப்பட்ட வரையில், நான் பாமர மக்களிடமே அதிக நம்பிக்கை வைத்திருக்கிறேன்.

—'எங் இந்தியா' - 18—8—1920

# அகிம்சையின் விளக்கம்

அகிம்சை, தீங்கின்மையின் வெறும் எதிர்மறையான நிலை மாத்திரமல்ல, அது தீங்கு செய்தவருக்குக்கூட நன்மை செய்யும் அன்பின் நிச்சயமான ஒரு நிலையாகும். அகிம்சை பற்றிய இந்த விளக்கத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். எனினும், தீங்கு செய்தவர் தவறைத் தொடர்ந்து செல்லுவதற்கு உதவியளிக்க வேண்டும் என்பதோ, அல்லது அதை சாத்விகமாக ஒப்புக்கொண்டு சகித்து வரவேண்டும் என்பதோ அந்த விளக்கத்தின் பொருள் அல்ல. அதற்கு மாறாக, அன்பானது அகிம்சையின் தீவிர நிலையாகும். தீங்கு செய்வோருடன் உங்களுக்குள்ள தொடர்பைக் கைவிட்டு அவரை எதிர்ப்பதே அந்த அன்பு நிலை. அதனால் அவரது மனம் புண்பட்டாலும், அவரது உடலுக்குத் தீங்கு நேர்ந்தாலும்கூட, அவரை எதிர்க்கத்தான் வேண்டும்.

உதாரணமாக, என் மகன் வெட்கக்கேடான வாழ்க்கை நடத்தி வந்தால், அவனைத் தொடர்ந்து ஆதரிப்பதன் மூலம் அவன் அவ்விதம் செய்து வர நான் உதவியளிக்கலாம். ஆனால், அதற்கு மாறாக எனக்கு அவன் மீது அன்பு இருக்குமாயின், அவனுக்கு மரணம் ஏற்படுவதாக இருந்தால்கூட, அவனுக்கு அளிக்கும் எல்லா ஆதரவையும் நான் நிறுத்திவிட வேண்டும். அவன் தன் தவறை உணர்ந்து சீர்திருந்தும் போது, அவனை நான் வரவேற்று அணைத்துக்கொள்ள வேண்டியது என் அன்பின் கடமையாகிறது. ஆனால், சரீர பலாத்காரத்தினால் என் மகனை நல்லவனாகும்படி நான் நிர்ப்பந்தப்படுத்தாமலிருக்கலாம். ஊதாரிப் பிள்ளையின்* கதையிலிருந்து அறிந்துகொள்ளும் நீதி அதுதான் என்பதே எனது அபிப்பிராயம்.

---

* ஊதாரிப் பிள்ளை என்பது பைபிள் நூலில் உள்ள ஒரு கதை. அதன் விவரம் வருமாறு: ஒருவருக்கு இரண்டு குமாரர்கள் இருந்தனர். அவர்களில் இளையவன், சொத்தைப் பிரித்துத் தன் பாகத்தைத் தனக்குக் கொடுத்துவிடும்படி தந்தையைக் கேட்டுக்கொண்டான். தந்தையும் அவன் பாகத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டார். அவன் தனக்குக் கிடைத்த சொத்துக்களை எடுத்துக்கொண்டு தொலைவில் உள்ள பிரதேசத்திற்குச் சென்று, போக வாழ்க்கையில் ஈடுபட்டு தன் சொத்துக்களை ஊதாரித்தனமாகச் செலவு செய்து பிச்சைக்காரனாகிவிட்டான். அவன் சாப்பிட உணவின்றிக் கஷ்டப்பட்ட பின், திரும்பி தந்தையிடம் வந்து, தான் பாவம் செய்துவிட்டதாகவும், தன்னை மன்னித்து தந்தையின் வேலைக்காரர்களில் ஒருவனாக ஏற்றுச் சம்பளம் கொடுக்கும்படியும் கேட்டுக்கொண்டான். தந்தை, அவன் செய்த தவறைப் பொருட்படுத்தாமல் அவனை மன்னித்து, அவனுக்குச் சிறந்த உடைகள் அணிவித்து, சிறந்த விருந்தும் அளிக்க ஏற்பாடு செய்தார். விருந்து நடந்துகொண்டிருக்கையில், வயல்களுக்குச் சென்றிருந்த மூத்த மகன் திரும்பி வந்தான். எல்லா விஷயங்களையும் அறிந்த பின், "இத்தனை ஆண்டுகளாக உங்களுக்கு நான் தொண்டு செய்து வருகிறேன். உங்கள் கட்டளைகளை நான் மீறியதே இல்லை. அப்படியிருக்க, தாங்கள் எனக்கு இவ்விதம் ஒரு விருந்துகூட அளித்ததில்லை. துன்மார்க்க வழிகளில் சொத்துக்களையெல்லாம் வீண் செலவு செய்துவிட்டு, வெறும் கையுடன் திரும்பி வந்துள்ள மகனுக்கு

ஒத்துழையாமை அமைதியான ஒரு சாத்விக நிலை அல்ல; அது அதிதீவிரமான ஒரு நிலையாகும். அது சரீர எதிர்ப்பு அல்லது பலாத்காரத்தைக் காட்டிலும் அதிக தீவிரமானது. சாத்விக எதிர்ப்புக்கு அந்தப் பெயர் பொருந்தாதுதான். நான் உபயோகிக்கும் அர்த்தத்தில் உள்ள ஒத்துழையாமை, பலாத்காரமற்றதாக இருக்கவேண்டும். எனவே, அது பிறரைத் தண்டிப்பதாகவோ, வஞ்சம் தீர்ப்பதாகவோ இருக்கக்கூடாது. துவேஷத்தையோ, பகையையோ அல்லது தப்பெண்ணத்தையோ அடிப்படையாகக்கொண்டிருக்கக் கூடாது. எனவே, அதைத் தொடர்ந்து, ஜெனரல் டயருக்கு நான் தொண்டு செய்வதும், நிரபராதிகளைச் சுட்டுத் தள்ள அவருடன் ஒத்துழைப்பதும் பாவம் என்று ஏற்படுகிறது. எனினும், அவர் உடல் நோயால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தால், அவருக்குப் பணிவிடை செய்து அவரை மீண்டும் உயிர்ப்பிப்பது மன்னிக்கும் அல்லது அன்பு காட்டும் குணமாகும். தொடர்ந்து குற்றம் செய்வதிலிருந்து இந்த அரசாங்கத்தைத் தடுப்பதற்காக நான் ஆயிரம் தடவை வேண்டுமாயினும் இதனுடன் ஒத்துழைப்பேன்; ஆனால், குற்றத்தைத் தொடர்ந்து செய்து வரும் விஷயமாக இந்த அரசாங்கத்துடன் நான் ஒரு விநாடிகூட ஒத்துழைக்கமாட்டேன். இந்த அரசாங்கத்தினிடமிருந்து கிடைத்த பட்டத்தை வைத்துக்கொண்டாலோ, அதன் கீழ் ஊழியம் செய்தாலோ அல்லது அதன் நீதி மன்றங்களையோ, பள்ளிக்கூடங்களையோ ஆதரித்தாலோ, நான் பெரும் தவறு செய்த குற்றத்துக்கு ஆளாவேன். ஜாலியன்வாலா பாகில் மாண்ட நிரபராதிகளின் ரத்தக் கறை படிந்த கைகளிலிருந்து பெறும் செல்வம் கொழிக்கும் பொக்கிஷங்களைக் காட்டிலும், பிச்சைக்காரன் கப்பரையே எனக்குச் சிறந்ததாகும். எனது ஏழு கோடி சகோதரர்களின் மத உணர்ச்சியை வேண்டுமென்றே மமதையுடன் புண்படுத்தியவர்களின் தேனொழுகும் வார்த்தைகளைக் காட்டிலும், என்னைச் சிறைக்கு அனுப்பும் உத்தரவே சிறந்தது.

—'எங் இந்தியா'—25—8—1920

---

விருந்தளித்துக் கொண்டாடுகிறீர்கள்" என்று கோபித்துக்கொண்டான். அதற்குத் தந்தை, "நீ எப்போதும் என்னுடனேயே இருக்கிறாய். என்னிடம் உள்ள சொத்துக்களெல்லாம் உன்னையே சேரும். உன்னுடைய தம்பி செத்துப் போய் திரும்பி வந்துள்ளான். அவனை நாம் உபசரித்து மகிழ்வதுதான் நியாயமாகும்" என்று கூறிச் சமாதானப்படுத்தினார். பாவம் செய்தவன், தான் செய்த பாவத்திற்காக வருந்தி பச்சாத்தாபப்படும் இடத்தில் கடவுள் பிரசன்னமாகிறார் என்று பைபிள் கூறுகிறது. இந்த ஊதாரிப் பிள்ளையின் கதையையே காந்திஜி சுட்டிக்காட்டியுள்ளார்.

# 49

# கவி டாகுரின் கவலை

கவி ரவீந்திரநாத் டாகுரை, லார்டு ஹார்டிஞ்ஜ் 'ஆசியர்வின் கவி' என்று குறிப்பிட்டுள்ளார். அவர் இப்போது துரிதமாக உலக கவியாகியும் வருகிறார். வளர்ச்சி பெற்று வரும் அவரது புகழ், அவரது பொறுப்பையும் அதிகமாக்கி வருகிறது. உலகத்திற்கு இந்தியாவின் செய்தியை அவர் தமது கவிதைகளின் மூலம் விளக்கியிருப்பது, இந்தியாவுக்கு அவர் செய்துள்ள மாபெரும் தொண்டாகும். எனவே, இந்தியா தன் பெயரால் உலகத்திற்குப் போலியான அல்லது உறுதியற்ற செய்தி எதுவும் விடுக்கக்கூடாது என்பதில் அவர் மனப்பூர்வமாகக் கவலை கொண்டுள்ளார். தமது தேசத்தின் புகழ் விஷயத்தில், அவர் மிகுந்த அக்கறை கொண்டிருப்பதும் இயல்பேயாகும்.

தற்போதைய இயக்கத்துடன் உடன்பாடு கொள்ள தாம் எவ்வளவோ முயன்றும் பலனில்லையென்று அவர் கூறுகிறார். அதையொட்டித் தமக்குக் குழப்பமே ஏற்பட்டிருப்பதாக அவர் ஒத்துக்கொள்ளுகிறார். ஒத்துழையாமை ஆரவாரத்திலும் சந்தடியிலும், அவரது இசைக் கருவிக்கு ஏற்ற நாதத்தை அவரால் காண முடியவில்லை. விறுவிறுப்பான மூன்று கடிதங்களில் அவர் தமது சந்தேகங்களை எடுத்துக் கூற முயன்றிருக்கிறார். அவர் காணும் இந்தியாவுக்கு ஒத்துழையாமை கண்ணியமானதல்ல, அது எதிர்மறையான, நம்பிக்கையைப் பாழாக்கும் ஒரு சித்தாந்தம் என்ற முடிவிற்கு அவர் வந்திருக்கிறார். அது, பிரிவினை, தனிமை, குறுகிய மனப்பான்மை, எதிர்மறை நிலை இவற்றை அடிப்படையாகக்கொண்ட ஒரு கொள்கை என்று அவர் அஞ்சுகிறார்.

இந்தியாவின் கௌரவத்தில் கவிக்கு உள்ள அப்பழுக்கற்ற அக்கறையைக் குறித்து, எந்த இந்தியருக்கும் பெருமையைத் தவிர வேறு எவ்வித உணர்ச்சியும் ஏற்படுவதற்கில்லை. அவர் தமது சந்தேகங்களை அழகான, தெளிவான பாஷையில் கூறியிருப்பது நன்மையேயாகும்.

நான், கவியின் சந்தேகங்களுக்கு மிகப் பணிவுடன் விடையளிக்க முயற்சிக்கிறேன். அவரையோ, அவரது நாவன்மையால் மனம் நெகிழ்ந்துள்ள வாசகர்களையோ திருப்திப்படுத்துவதில் நான் தோல்வியடையலாம். அவருக்கும் இந்தியாவுக்கும் நான் ஒன்று மட்டும் உறுதி கூற விரும்புகிறேன். அதாவது, ஒத்துழையாமையில் அவர் அஞ்சும் அம்சம் எதுவும் இல்லை என்பதும், ஒத்

துழையாமையை தேசம் மேற்கொண்டிருப்பது பற்றி அவர் வெட்கப் படவேண்டிய அவசியமே இல்லை என்பதும்தான். உண்மையைக் கடைப்பிடிப்பதாகக் கூறுவோர் வெற்றி பெருததுபோல் தோன்றினல், அதற்காக உண்மையைக் குறை கூறலாமா? அது போலவே, நடை முறையில் ஒத்துழையாமை தோல்வி யடைந்ததுபோல் தோன்றினல், அது ஒத்துழையாமைச் சித்தாந்தத்தின் குற்றமல்ல. ஒத்துழையாமை இயக்கம், அது வர வேண்டிய காலத்துக்கு முன்பே வந்துவிட்டதாக இருக்கலாம். அப்படியாயின், அந்தக் காலம் வரும் வரையில் இந்தியாவும் உலகமும் காத்திருக்கவேண்டும். அது எப்படியாயினும், பலாத்காரத்திற்கும் ஒத்துழையாமைக்கும் இடையே இந்தியாவுக்கு வேறு வழி எதுவுமில்லை.

இந்தியாவுக்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் இடையே ஒரு பிரம்மாண்டமான சுவரை எழுப்ப வேண்டுமென்பதே ஒத்துழையாமையின் நோக்கம் என்று கவி அஞ்சத் தேவையில்லை. அதற்கு மாருக, பரஸ்பரம் நம்பிக்கையையும் மரியாதையையும் அடிப்படையாகக்கொண்டு, உண்மையான, கௌரவமான, தன்னிச்சையான ஒத்துழைப்பிற்கு வழி செய்யவே ஒத்துழையாமை உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. கட்டாய ஒத்துழைப்பு, ஒருதலைப்பட்சமானவர்களின் சேர்க்கை, நாகரிகத்தின் பெயரால் மக்களைச் சுரண்டும் நவீன முறைகளை ஆயுத பலத்தைக் கொண்டு அமலுக்குக் கொண்டு வருவது முதலியவற்றை எதிர்த்தே தற்போதைய போராட்டம் நடத்தப்பட்டு வருகிறது.

உத்தேசமின்றியும் விருப்பமின்றியும் தீமையில் பங்கு எடுத்துக்கொள்ளுவதை எதிர்க்கும் கண்டன முறையே ஒத்துழையாமையாகும்.

கவியரசரின் கவலை பெரிதும் மாணவர்களைப் பற்றியதாகவே இருக்கிறது. மாணவர்களுக்குக் கல்விச்சாலைகளை ஏற்படுத்து முன், அரசாங்கக் கல்விச்சாலைகளை விட்டுவிடும்படி, மாணவர்களைக் கேட்டிருக்கக் கூடாது என்று அவர் அபிப்பிராயப்படுகிருர். இவ்விஷயமாக எனது அபிப்பிராயம் அதற்கு மாறுனது. இலக்கியப் பயிற்சியைக் குறித்துப் பிரமாதப்படுத்த என்னல் ஒருபோதும் முடிந்ததில்லை. இலக்கியப் பயிற்சி மாத்திரம், ஒருவருடைய ஒழுக்க உயர்வை ஓர் அங்குலம்கூட அதிகப்படுத்தியதில்லை என்பதும், ஒழுக்கத்தை உருவாக்குவதற்கும் இலக்கியப் பயிற்சிக்கும் சம்பந்தமே இல்லை என்பதும் எனது திட்டவட்டமான அனுபவமாகும். அரசாங்கக் கல்விச்சாலைகள், நம்மை ஆண்மையற்றவர்களாகவும், அனதைகளாகவும், நாஸ்திகர்களாகவும் செய்திருக்கின்றன என்பது எனது உறுதியான அபிப்பிராயம். அவை நம்மை மனத்திருப்தியற்றவர்களாகச் செய்துள்ளன. நமது அதிருப்திக்கு அவை பரிகாரம் எதுவும் அளிக்காததால், நாம்

மனச்சோர்வுற்று நம்பிக்கை இழந்துள்ளோம். அந்தக் கல்விச் சாலைகள், அவை ஏற்பட்ட தன் நோக்கத்திற்கிணங்க நம்மை குமாஸ்தாக்களாகவும் மொழிபெயர்ப்பாளராகவும் செய்திருக் கின்றன.

ஆளப்படுவோரின் தன்னிச்சையான ஒத்துழைப்பின் மீதே ஓர் அரசாங்கம் தன் கௌரவத்தை உருவாக்கிக்கொள்ளுகிறது. நம்மை அடிமைகளாக வைத்துக் கொண்டிருக்கும் அரசாங்கத் துடன் ஒத்துழைப்பது தவறாயின், எந்த ஸ்தாபனங்களுடன் நம்முடைய தொடர்பு யாதொரு நிர்ப்பந்தமுமின்றி தன்னிச்சை யாக இருக்கிறதோ, அங்கிருந்தே நாம் ஒத்துழையாமையை ஆரம்பிக்க வேண்டும். ஒரு தேசத்தின் யுவர்கள்தான் தங்கள் நாட்டிற்கு நம்பிக்கை அளிப்பவர்களாக இருக்கிறார்கள். அரசாங்க முறை முற்றிலுமோ அல்லது பெரிதளவோ தீமை யாக இருப்பதை நாம் கண்டுபிடித்த உடனேயே, அதனுடன் நமது குழந்தைகளைத் தொடர்பு கொள்ளும்படி செய்வது நமக்குப் பாவமாகிவிடுகிறது என்பதே எனது உறுதியான அபிப்பிராயம்.

திடீர் உற்சாகத்தில் கல்விச்சாலைகளை விட்டு வந்த மாண வர்களில் மிகப் பெரும்பாலோர் மீண்டும் திரும்பிக் கல்விச்சாலை களுக்குச் சென்றுவிட்டார்கள் என்பது, என்னால் கூறப்பட் டுள்ள சித்தாந்தத்தின் சிறப்புக்கு எதிரான வாதமல்ல. அவர் கள் பின்வாங்கியது, நமது தாழ்ந்த நிலையின் அளவுக்கு எடுத்துக் காட்டாக ஆகுமேயன்றி, நான் மேற்கொண்ட முறை தவறு என் பதற்கு எடுத்துக்காட்டாக ஆகாது. புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட தேசீயக் கல்விச்சாலைகள் அதிக மாணவர்களைக் கவர்ந்து விட வில்லை என்பது அனுபவத்திலிருந்து தெரிகிறது. தேசீயக் கல் விச்சாலைகள் எவையும் இராதபோது வெளியே வந்த மாணவர் களே, மிகுந்த மனத்திண்மையும் உண்மையான தேசப் பற்றும் உள்ளவர்கள் ஆவர். அவ்விதம் முதன் முதலாக வெளி வந்தவர் களே, இப்போது மகோன்னதமான தொண்டு புரிந்து வருகிறார் கள்.

மாணவர்கள் கல்விச்சாலைகளைவிட்டுவிட வேண்டுமென்ற கொள்கை பற்றிய கவியரசரின் கண்டனம், ஒத்துழையாமைச் சித்தாந்தத்தையொட்டி அவரது ஆட்சேபணையின் ஓர் அம்சமே யாகும். எதிர்மறையான எவ்விஷயமும் அவருக்கு நடுக்கத்தை உண்டுபண்ணி விடுகிறது. மதத்தின் எதிர்மறையான கட்டளை களை அவரது ஆன்மா அடியோடு வெறுப்பது போல் தோன்று கிறது. அவரது ஆட்சேபணையை இணையற்ற அவரது சொந்த பாஷையிலேயே குறிப்பிட வேண்டியது அவசியமாகும்:

"தற்போதைய இயக்கத்தை ஆதரிக்கும் ஆர்.........ஒரு சித்தாந் தத்தை அங்கீகரிப்பதைக் காட்டிலும் நிராகரிக்கும் மன எழுச்சியே அதிக

சக்தி வாய்ந்தது என்று கூறுகிறார். அந்த நிலை உண்மை என்பதை நான் அறிவேனாயினும், அதை நான் நிரந்தரமான ஒரு சத்தியமாகக் கொள்ள முடியாது. இந்தியாவில் பிரம்ம வித்தையின் லட்சியம் முக்தி (விடுதலை) தான். புத்த மதத்தின் லட்சியமோவெனில் நிர்வாணம் (அழிவு) ஆகும். முக்தி நிரந்தரமான சத்திய நிலைக்கு நமது கவனத்தை இழுத்துச் செல்லுகிறது; நிர்வாணம் நம்மை சத்தியத்தின் எதிர்மறையான நிலைக்குக் கொண்டு செல்லுகிறது. எனவே, தவிர்க்கவேண்டிய துக்க நிலையை புத்தர் வற்புறுத்தினார். அடைந்து தீரவேண்டிய ஆனந்த நிலையை பிரம்ம வித்தை வற்புறுத்தியது.''

இதிலிருந்தும், இது போன்ற மற்றப் பகுதிகளிலிருந்தும் கவியரசரின் மனப்பான்மையை வாசகர்கள் தெரிந்துகொள்ளுவார்கள். எனது பணிவான அபிப்பிராயத்தில், ஒரு விஷயத்தை அங்கீகாரம் செய்வதைப்போல் அதை நிராகரிப்பதும் ஒரு கொள்கையே. உண்மையை அங்கீகாரம் செய்வதைப்போல், பொய்யை நிராகரிக்க வேண்டியதும் அவ்வளவு அவசியமாகும். நம்மீது இரண்டு நேர் மாறான சக்திகள் ஆதிக்கம் செலுத்துகின்றன என்றும், நிரந்தரமாக நிராகரிப்பதிலும் அங்கீகரிப்பதிலுமே மனிதரின் முயற்சி அடங்கியிருக்கிறது என்றும் எல்லா மதங்களும் கற்பிக்கின்றன. நன்மையுடன் ஒத்துழைப்பது போல், தீமையுடன் ஒத்துழைக்க மறுப்பதும் ஒரு கடமையாகும். நிர்வாண நிலை வெறும் எதிர்மறையானது என்று கவி வருணித்ததன் மூலம், அவர் தாம் அறியாமலேயே புத்தமதத்துக்கு அநீதி செய்துள்ளார் என்று நான் கூறத் துணிகிறேன். நிர்வாண நிலையைப் போல் முக்தியும் (விடுதலை)ஓர் எதிர்மறையான நிலையே என்று கூறவும் நான் துணிகிறேன். புலன்களுக்கு அடிமையாக இருப்பதிலிருந்து விடுதலை பெறுவதோ, அல்லது அந்த அடிமைத்தனத்தை அழிப்பதோ நிரந்தரமான ஆனந்த நிலைக்குக் கொண்டு செல்லுகிறது. உபநிஷத்துக்களின் (பிரம்ம வித்தை) இறுதியான வார்த்தை 'இல்லை' என்பதே. இந்த வார்த்தையையொட்டி கவனத்தை இழுப்பதுடன், எனது வாதத்தின் இந்தப் பகுதியை முடித்துக் கொள்ளுகிறேன். பிரம்மத்தைப் பற்றி உபநிஷத்துக்களின் ஆசிரியர்கள் கண்டுபிடிக்க முடிந்த 'நேதி' (இல்லை) என்ற வார்த்தை, பிரம்மத்தைப் பற்றிய சிறந்த விளக்கமாகும்.

எனவே, ஒத்துழையாமையின் எதிர்மறையான அம்சத்தைப் பற்றி கவி அனாவசியமாகத் திகில் கொண்டுள்ளார் என்றே நான் நினைக்கிறேன். 'இல்லை' என்று சொல்லும் சக்தியை நாம் இழந்துவிட்டோம். அரசாங்கத்திற்கு 'இல்லை' என்று பதில் கூறுவது ராஜ விசுவாசமற்றதாக, அபசாரமாகக்கூடக் கருதப்படுகிறது. விதை விதைக்கு முன் ஒரு விவசாயி களை பிடுங்கவேண்டியது எவ்வளவு அவசியமோ, அது போலவே இவ்விதம் தீர்க்காலோசனையின் மீது ஒத்துழைக்க மறுப்பதும் அவசியமாகும்.

வேளாண்மைக்கு விதை விதைப்பது எவ்வளவு அவசியமோ அதுபோல் களையெடுப்பதும் அவசியமாகும். பயிர்கள் வளர்ந்து

கொண்டிருக்கும்போதுகூட களை வெட்டிக்குத் தினந்தோறும் வேலையிருக்கிறது என்பதை ஒவ்வொரு உழவரும் அறிவார்.

அரசாங்கத்தின் ஒத்துழைப்பபை எதிர்பார்ப்பது ஒவ்வொரு தேசத்தின் உரிமையாகும். அது போலவே தேசத்தின் நிபந்தனைகளுக்கு இணங்க அதனுடன் ஒத்துழைக்க வேண்டியது ஒவ்வோர் அரசாங்கத்தின் கடமை. எனவே, தேசத்தின் ஒத்துழையாமை என்பது, தனது கோரிக்கைகளுக்கு இணங்கி ஒத்துழைக்கும்படி அரசாங்கத்திற்கு விடுக்கும் ஓர் அழைப்பேயாகும். ஒத்துழையாமை, அரசாங்கம் தனக்குச் சட்டாம்பிள்ளையாக இருப்பதைத் தான் விரும்பவில்லை என்று தேசம் விடுக்கும் எச்சரிக்கையே. நாடு, இயற்கையல்லாத, மத விரோதமான ஹிம்சைத் தத்துவத்திற்குப் பதிலாக, அபாயமில்லாத, இயற்கையான, மத தருமத்திற்கு இசைந்த ஒத்துழையாமையை மேற்கொண்டிருக்கிறது. கவியரசரின் கனவிற்கிணங்க இந்தியா எப்போதாவது சுயராஜ்யம் பெற வேண்டுமாயின், சாத்விக ஒத்துழையாமையின் மூலமாக மாத்திரமே அதைப் பெற முடியும்.

எனவே, கவியரசர் தமது சமாதானச் செய்தியை உலகத்திற்கு விடுக்கட்டும். இந்தியா, தான் எடுத்துக்கொண்டுள்ள பிரதிக்ஞையில் உறுதியுடன் இருக்குமாயின், ஒத்துழையாமை மூலம் கவியின் செய்திக்கு எடுத்துக்காட்டாகத் திகழுமென அவர் நம்பிக்கை கொள்ளலாம். கவி ஏங்கி நிற்கும் தேச பக்திக்கு விளக்கம் கொடுப்பதே ஒத்துழையாமையின் நோக்கமாகும். ஐரோப்பாவின் காலடியில் வீழ்ந்து கிடக்கும் ஓர் இந்தியாவினுல், மானிட வர்க்கத்திற்கு எவ்வித நம்பிக்கையையும் அளிக்க முடியாது. விழிப்பும் விடுதலையும் பெற்ற இந்தியா, வேதனையால் புலம்பிக்கொண்டிருக்கும் உலகத்திற்கு நல்லெண்ணத்துடன்கூடிய சமாதானச் செய்தியை பிரகடனம் செய்ய முடியும். உலகிற்கு அவ்விதச் செய்தியை விடுப்பதற்குத் தகுதியான ஒரு திட்டமாகத் திகழவே, ஒத்துழையாமை உருவாக்கப்பட்டிருக்கிறது.

—'எங் இந்தியா' - 1—6—1921

# 50

# ஒத்துழையாமை பலாத்காரம் ஆகுமா?

"இந்தியாவில் உள்ள நிலைமை, நம்மிடையே நிலவும் வேற்றுமையின் மற்றொரு விசித்திரமான அடிப்படைக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது. நான் 'எதிர்க்காமை'க் கொள்கையுடையவனக இருக்கிறேன். காந்திஜி, நான் அவரைப் புரிந்துகொண்டவரையில், அன்பு வழியைப் பிரகடனம் செய்கிறுர்.

அப்படியிருந்தும் அவர், ஒத்துழையாமை பலாத்காரத்தின் ஒரு வழி என்பதை அறியவில்லை. நியூயார்க்கில் பால் புட்டிகள் ஏற்றிச் செல்லும் டிரைவர்களுக்கு உண்மையான, நியாயமான கஷ்டமும் குறைபாடும் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அக்குறைபாடு மிகவும் மோசமானதென்றுகூட வைத்துக் கொள்ளுவோம். எனவே, அவர்கள் வேலை நிறுத்தம் செய்து, நியூயார்க்கிலுள்ள குழந்தைகளுக்குப் பால் கிடைக்காமல் செய்துவிடுவதாக வைத்துக் கொள்ளுவோம். அவர்கள், எவரையும் பலாத்காரமாகத் தாக்க ஒருபோதும் கையைத் தூக்காதவர்களாக இருக்கலாம். எனினும், அவர்களுடைய வழி பலாத்கார வழியேயாகும். இறந்த குழந்தைகளின் சவங்களுக்கு மேலே, அவர்கள் ஒத்துழையாமையின் மூலம் வெற்றி பெறுவார்கள். போல்ஷிவிகியைப்பற்றி பர்ட்ராண்ட் ரஸ்ஸெல் * கூறியதுபோல், 'நாம் விரும்பும் ஒரு பலனை அடைவதற்காக, பிறருக்குத் துன்பத்தைக் கொடுக்கும் ஒரு முறையைக் கையாளுவது ஆட்சேபிக்கத்தக்கது.' ஒத்துழையாமை என்றால், லங்காஷயரில் உள்ளவர்களுக்குத் துன்பம் என்றே பொருளாகும். அது இறுதியில், பகுத்தறிவையல்ல, பலாத்காரத்தையே தூண்டும் ஒரு வேண்டுகோளாகும்.

"நான் கூறும் விஷயத்துக்கு இது முற்றிலும் பொருத்தமானது என்று சொல்ல முடியாது. இருந்தாலும், என் மனத்தில் உள்ளதை அது ஓரளவு சித்திரிக்கிறது. இந்தியாவில் இப்போது 'ஹோம் ரூல்' வாதிகள் சட்டசபைகளில் இருக்கிறார்கள். அவர்கள் அங்கே ஒத்துழையாமை முறைகளால் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போட உத்தேசித்திருக்கிறார்கள். ஜான் பிஸ்க் குறிப்பிட்டிருப்பது போல், இங்கிலாந்தில் யுத்தம் இராததாலேயே சிவில் ஸ்தாபனங்கள் வளர்ச்சி பெற்றிருக்கின்றன. அந்த வளர்ச்சிக்குக் காரணம் ஒத்துழைப்பு முறையேயாகும்."

மேலே கண்ட கட்டுரை 1924 பிப்ரவரி 14–ஆம் தேதி 'யூனிடி' என்ற பத்திரிகையில் பிரசுரமானதன் சாரமாகும். இதை, பெயர் தெரியாத ஓர் அமெரிக்க நண்பர் அனுப்பியிருக்கிறார். ஸ்ரீ ஆர்தர் வெதர்லி, ஸ்ரீ ஹோம்ஸுக்கு எழுதிய ஒரு கடிதமே அக்கட்டுரையாகும். நடைமுறையில் சாத்தியமல்லாத அப்பழுக்கற்ற கொள்கையுடையவர், தமது கொள்கையைச் செயலில் காட்ட வேண்டுமாயின், சந்தர்ப்பத்திற்கு உகந்தவாறு அதைத் தளர்த்திக்கொள்ள வேண்டும் என்பதைக் காட்டுவதே கடிதத்தின் நோக்கமாகும். அதை எழுதியவர், தமது கடிதத்தில் தம்முடைய வாதத்திற்கு ஆதரவாக உதாரணங்களை நிரப்பியிருக்கிறார். இப்போது நான் அவரது முக்கிய வாதத்தைப் பற்றி அக்கறை கொள்ளவில்லை. அவரது கடிதத்தின் சாரத்தை மாத்திரம் கொடுத்திருப்பதன் மூலம், அவரது முக்கிய கருத்தை நான் சிதைத்துவிடவில்லை என்றே நம்புகிறேன்.

---

* ஆர்தர் வில்லியம் பர்ட்ராண்ட் ரஸ்ஸெல் 1872-ஆம் ஆண்டு இங்கிலாந்தில் பிறந்தார். அவர் உலகப் புகழ் பெற்ற தத்துவ ஞானியும், கணித மேதையும் ஆவார். அவ்விரண்டு துறைகளிலும் ஏராளமான நூல்கள் எழுதி, உலகப் பேராசிரியராகத் திகழ்கிறார். ரஸ்ஸெல் 1950 இல் இலக்கிய நோபல் பரிசு பெற்றவர்.

இந்தியாவின் ஒத்துழையாமை பற்றி ஸ்ரீ வெதர்லி கூறியுள்ள கருத்து, வாசகர்கள் பொதுவாக அக்கறை கொள்ளும்படி செய்யத் தவறுது என்பதைக் காட்டுவதே எனது நோக்கமாகும்.

ஸ்ரீ வெதர்லி, 'ஒத்துழையாமை பலாத்கார வழியாகும்' என்ற ஒரு பொதுவான கருத்தைக் குறிப்பிட்டிருக்கிருர். அந்தக் கருத்து தவறுனது என்பதைக் காட்ட ஒரே விநாடி சிந்தனையே போதுமானது. ஒரு கள்ளுக்கடையில் கள்ளை விற்கவோ அல்லது ஒரு கொலைகாரனுக்கு அவனது திட்டங்கள் சம்பந்தமாக உதவி புரியவோ நான் மறுக்கும்போது, நான் ஒத்துழையாமையை மேற்கொள்ளுகிறேன். எனது ஒத்துழையாமை, ஒரு பலாத்கார வழி அல்ல என்பது மாத்திரமல்ல, எனது மறுப்புக்கு அன்பு தூண்டுகோலாக இருக்குமாயின், அது ஓர் அன்பு நடவடிக்கையே என்பது என் உறுதியான அபிப்பிராயம். உண்மை என்னவெனில், எல்லா ஒத்துழையாமையும் பலாத்காரமானதல்ல; அதிலும் சாத்விக ஒத்துழையாமை ஒரு காலத்திலும் பலாத்கார நடவடிக்கையாக இருக்க முடியாது. அன்பு தீவிரமான ஒரு குணமாகும். எனினும், நடவடிக்கையிலிருந்து அதை எப்போதும் ஊகித்துக்கொண்டுவிட முடியாது. ஒரு சர்ஜன் ஒரு ரண சிகிச்சையை மிகவும் வெற்றிகரமாகச் செய்யலாம்; அப்படியிருந்தும் அவருக்கு அந்த நோயாளி மீது அன்பு இல்லாமலிருக்கலாம்.

ஸ்ரீ வெதர்லியின் உதாரணம் மிகவும் அதிருப்திகரமாகவும், பரிசீலனை செய்ய முடியாதவாறு அரைகுறையானதாகவும் இருக்கிறது. நியூயார்க் முனிசிபாலிடியின் படுமோசமான நிர்வாகத்தை எதிர்த்தும், தங்கள் குறையைத் தீர்ப்பதற்காக அதைப் பணியும்படி செய்யவும் பால் வண்டி டிரைவர்கள் நியூயார்க் குழந்தைகளுக்குப் பால் விநியோகம் செய்வதை நிறுத்திவிடத் தீர்மானிப்பார்களாயின், அவர்கள் மானிட வர்க்கத்திற்கே விரோதமான குற்றம் செய்தவர்களாவர். ஆனுல், பால் வண்டி டிரைவர்கள் தங்கள் மேல் அதிகாரிகளால் குறைந்த சம்பளம் கொடுக்கப்பட்டு வருவதாகவும், அதன் விளைவாகப் பட்டினி கிடப்பதாகவும் வைத்துக்கொள்ளுங்கள். அவர்கள் உயர்ந்த சம்பளம் பெறுவதற்காக மற்ற எல்லா ஒழுங்கான முறைகளையும் முயற்சித்துப் பார்த்த பின், பால் வண்டிகளை ஓட்டிச் செல்ல அவர்கள் மறுப்பது நியாயமாகவே இருக்கும். அவர்களுடைய நடவடிக்கையின் விளைவாக நியூயார்க் குழந்தைகள் இறந்தால்கூட, அந்த நடவடிக்கை நியாயமற்றதென்று கூற முடியாது, அது அன்பு நடவடிக்கையாக இருக்கமாட்டாதெனினும், டிரைவர்களின் மறுப்பு நிச்சயமாக பலாத்கார நடவடிக்கையாகாது.

அவர்கள் தருமவான்கள் அல்ல. அவர்கள் தங்களுடைய ஜீவனத்திற்காகவே பால் வண்டிகளை ஓட்டி வருகிருர்கள்.

தொழிலாளர் என்ற முறையில், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் குழந்தைகளுக்குப் பால் விநியோகம் செய்வது அவர்களுடைய கடமையல்ல. கடமையை மீறுவது இல்லையெனில், பலாத்கார மும் இல்லை. பிரஸ்தாப பால் வண்டி டிரைவர்கள், தங்கள் மேலதிகாரிகள் மலிவான, ஆனால் கலப்படமான பாலை வினி யோகம் செய்வதையும், மற்றொரு பால் பண்ணைக் கம்பெனி சிறந்த, ஆனால் அதிக விலையுள்ள பாலை வினியோகம் செய்வதையும் அறிந்துள்ளனர் என்று வைத்துக்கொள்ளு வோம். நியூயார்க் குழந்தைகளின் நலனில் அவர்கள் அக்கறை கொண்டு பால் வண்டிகளை ஓட்ட மறுப்பார்களாயின், அப்போது அவர்களுடைய நடவடிக்கை அன்பு நடவடிக்கையாக இருக்கும். நியூயார்க்கைச் சேர்ந்த குறுகிய மனோபாவமுள்ள சில தாய்மார் கள், தங்கள் குழந்தைகளுக்குக் கலப்படமான பாலை வாங்க முடியாமற் போகலாம்; வாதத்திற்காக நாம் கற்பனை செய்து கொண்டுள்ள அதிக யோக்கியமான பால் பண்ணைக் கம்பெனி யிடமிருந்து சிறந்த, ஆனால் அதிக விலையுள்ள பாலையும் அவர்கள் வாங்காமல் இருக்கலாம். அவ்விதமிருப்பினும், அச்சந்தர்ப்பத் தில் பால் வண்டி டிரைவர்களின் மறுப்பு அன்பு நடவடிக்கையே யாகும்.

'யூனிடி'யில் எழுதியுள்ள கட்டுரையாளர், இருதயமற்ற பால் டிரைவர்கள், நியூயார்க் குழந்தைகளின் சவக் குவியல்கள் போன்ற கற்பனைச் சித்திரத்திலிருந்து நம்மை பிறகு லங்காஷய ருக்கு அழைத்துச் செல்லுகிறார். இந்திய ஒத்துழையாமை வெற்றி யடையும்போது லங்காஷயர் அழிவதையும் அவர் கற்பனையில் சித்திரிக்கிறார். தம்முடைய முக்கியமான வாதத்தை ருசுப்பிக்க வேண்டுமென்ற அவசரத்தில், அவர் சாதாரண உண்மைகளைக் கூட பரிசீலனை செய்யும் சிரமத்தை எடுத்துக்கொள்ளவில்லை. இந்திய ஒத்துழையாமை, லங்காஷயருக்கோ அல்லது பிரிட்டிஷ் தீவுகளின் வேறெந்தப் பாகத்திற்கோ தீங்கு செய்ய வேண்டும் என்பதற்காக உருவாக்கப்படவில்லை. தன் சொந்த விஷயங் களைத் தானே நிர்வாகம் செய்துகொள்ள இந்தியாவுக்கு உள்ள உரிமையை உறுதிப்படுத்தவே ஒத்துழையாமை கைக்கொள்ளப் பட்டிருக்கிறது. இந்தியாவுடன் லங்காஷயரின் வர்த்தகம் துப் பாக்கி முனையில் ஸ்தாபிக்கப்பட்டது; துப்பாக்கி முனையிலேயே அது பாதுகாக்கப்பட்டும் வருகிறது.

இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான விவசாயிகளின் உபரி வருமானத்துக்குக் காரணமாக இருந்து, அவர்களிடம் பட்டினி அணுகாமல் பாதுகாத்து வந்த ஒரே மூலாதாரமான குடிசைத் தொழிலை, லங்காஷயர் வர்த்தகம் அழித்துவிட்டது. இந்தியா இப்போது தனது குடிசைத் தொழிலையும் கையால் நூற்பதையும் உயிர்ப்பிக்க முயற்சித்து, எந்த அந்நியத் துணியையோ அல்லது இந்திய மில்களில் உற்பத்தியான துணிகளையோகூட வாங்க

மறுத்து, அதன் காரணமாக லங்காஷயர் அல்லது இந்திய மில்கள் கஷ்டத்திற்கு உள்ளாகுமாயின், அதற்காக எந்த ஒழுக்க விதிகளின்படியும் ஒத்துழையாமையை பலாத்கார நடவடிக்கை என்று கூறிவிட முடியாது. லங்காஷயரைப் பராமரித்து வர இந்தியா கடமைப்பட்டிருக்கவில்லை.

மதுபான ஹோட்டல்களுக்கும் விபசார விடுதிகளுக்கும் போகிறவர்கள், யாதொரு முன்னெச்சரிக்கையுமின்றி அவ்விடங்களுக்கு செல்லுவதை நிறுத்திவிடுவர்களாயின், அவர்கள் அவ்விடங்களுக்குச் செல்லாததால் மதுபானச் சாவடிகளிலும் விபசார விடுதிகளிலும் உள்ளவர்கள் பட்டினி கிடக்கும்படி நேர்ந்தாலும் கூட, அவ்விடங்களுக்குச் செல்லுவோரின் தன்னடக்கத்திற்காக அவர்கள் பாராட்டுதலுக்கே உரியவர்களாவார்கள்; அவர்கள் அத்தகைய விடுதிகளை வைத்திருப்போருக்கு உதவி புரிந்தவர்களும் ஆவார்கள். லேவாதேவிக்காரர்களிடம் வட்டிக்குப் பணம் வாங்குவோர், கடன் வாங்குவதை நிறுத்தி, அதன் விளைவாக லேவாதேவிக்காரர்கள் பட்டினி கிடந்தால், அதற்காக கடன்வாங்க மறுத்துவிட்டவர்களைப் பலாத்கார வாதிகள் என்று கூறிவிட முடியாது. ஆனால், நியாயமான காரணமின்றியும், துவேஷம் அல்லது பகை காரணமாகவும் அவர்கள் ஒரு லேவாதேவிக்காரரை விட்டுவிட்டு, மற்றொருவரிடமிருந்து கடன் வாங்க முற்பட்டால் அது பலாத்காரமாகவே கருதப்படலாம்.

இவ்விதமாக, மறுப்பு ஓர் உரிமையாகவும் கடமையாகவும் இருக்கும்போது, அவ்விதம் மறுப்பதால் சிலர் கஷ்டத்திற்கு உள்ளாகும்படி நேர்ந்தால்கூட, அத்தகைய சந்தர்ப்பங்களில் ஒத்துழையாமை பலாத்காரம் அல்ல என்பது தெளிவாகிறது. தவறு செய்தவரின் நன்மைக்காக மாத்திரமே ஒத்துழையாமையை மேற்கொள்ளும்போது, அது ஓர் அன்பு நடவடிக்கையாகிவிடும். எனவே, இந்தியர்கள் அனுஷ்டிக்கும் ஒத்துழையாமை ஓர் உரிமையும் கடமையுமாகும். ஆனால், அதை ஓர் அன்பு நடவடிக்கையென்று கருத முடியாது. ஏனெனில், அது பலவீனமான மக்களால் தற்காப்பிற்காக மேற்கொள்ளப்படுகிறது.

—'எங் இந்தியா' - 10—4—1924

# 51

# சத்தியாக்கிரகியின் ஒத்துழையாமை

**கேள்வி:** பம்பாயில், நீங்கள் அழைக்கப்படாமலேயே கவர்னரைக் காணச் சென்றதாகக் கூறப்படுகிறது. உண்மையில், நீங்கள் வற்புறுத்தி அவரைப் பார்க்கச் சென்றீர்களாம்.

அப்படியாயின், அது ஒருதலைப்பட்சமான ஒத்துழைப்பு ஆகாதா? கவர்னரிடம் உங்களுக்கு என்ன வேலை இருந்திருக்க முடியும்? இது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

**பதில்:** எனக்குப் பலம் இருக்கும்போது, நான் எனது பகைவரையும் வற்புறுத்திக் காண்பதற்காகச் செல்லும் ஆற்றல் எனக்கு உண்டு என்பதே எனது பதிலாகும். தென்னுப்பிரிக்காவில் நான் அப்படியே செய்தேன். நான் போராட்டத்திற்குத் தயார் என்பதை உணர்ந்திருந்தபோதுகூட, நான் ஜெனரல் ஸ்மட்ஸை பேட்டி மேல் பேட்டி காண முற்பட்டேன். சரித்திரப் புகழ் பெற்ற மகத்தான அணிவகுப்பு ஊர்வலத்தை மேற்கொண்டால், குடியேற்ற இந்தியர்கள் சொல்லொணுத் துன்பத்திற்கு ஆளாக வேண்டியிருக்குமென்றும், எனவே அதைத் தவிர்க்கும்படியும் நான் அவருடன் வாதாடினேன். ஆனுல், அவர் மமதை காரணமாக, நான் கூறியதற்குச் செவி சாய்க்கவில்லை என்பது உண்மையே. எனினும், அதனுல் எனக்கு எவ்வித நஷ்டமும் இல்லை. என்னுடைய பணிவினுல் எனது பலம் அதிகமாயிற்று. விடுதலைக்காக ஓர் உண்மையான போராட்டத்தை நடத்துவதற்குப் போதிய பலம் நமக்கு இருக்கும்போது, இந்தியாவிலும் நான் அப்படியே செய்வேன். நம்முடைய போராட்டம் ஒரு சாத்விகமான போராட்டம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். அதற்கு முன்கூட்டியே அடக்கம் இருந்தாக வேண்டும். அது சத்தியமான ஒரு போராட்டமாகும். அது சத்தியமானதென்ற உணர்ச்சி நமக்கு உறுதியைக் கொடுக்க வேண்டும். நாம் மனிதர்களை அழித்துவிடுவதற்காகக் கிளம்பவில்லை. நமக்குப் பகைவர்கள் இல்லை. இப்புவியில் ஒரே ஒரு ஆன்மா மீதுகூட நமக்குத் துவேஷமில்லை. நாம் துன்பத்திற்கு உள்ளாவதன் மூலம், பிறர் மனத்தை மாற்றவே முற்படுகிருேம். பாறை போன்ற உள்ளம் படைத்த அல்லது மிகவும் சுயநலமுள்ள ஆங்கிலேயரின் மனத்தைக்கூட மாற்றுவதில் நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. ஆகையால், அவரைச் சந்திப்பதற்காக எனக்குக் கிடைக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் நான் வரவேற்கிறேன்.

இதன் சம்பந்தமான வேற்றுமையை விளக்கிக் கூறட்டுமா? சாத்விக ஒத்துழையாமை என்ருல், நாம் ஒத்துழைக்க மறுக்கும் ஒரு முறையினுல் கிடைக்கும் நன்மைகளையும், லாபங்களையும் துறந்துவிடுவதுதான். எனவே, அம்முறையின் கீழ் ஏற்பட்டுள்ள கல்விச்சாலைகள், கோர்ட்டுகள், பட்டங்கள், பதவிகள், சட்டசபைகள், உத்தியோகங்கள் எல்லாவற்றையும் நாம் துறக்கிருேம். நமது ஒத்

துழையாமையின் மிகப் பரவலான, நிரந்தரமான அம்சம், அந்நிய ஜவுளிகளைத் துறப்பதேயாகும். நம்மை மண்ணோடு மண்ணாக நசுக்கும் கொடிய முறைக்கு அஸ்திவாரம் அந்நிய ஜவுளியேதான். ஒத்துழையாமையின் மற்ற அம்சங்களைப் பற்றியும் சிந்திப்பது சாத்தியமே. இருந்தாலும், நமது பல வீனம் அல்லது திறமையின்மை காரணமாக, நாம் இந்த அம்சங்களையொட்டி மாத்திரம் நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொண்டுள்ளோம்.

அப்பொழுது, மேலே குறிப்பிட்ட நன்மைகளை நாடும் நோக்கத்துடன் நான் எந்த அதிகாரியிடமாவது சென்றால், நான் ஒத்துழைப்பவனாக ஆகிறேன். உதாரணமாக, நான் கதரை யொட்டி அவரது மனத்தை மாற்றுவதற்காகவோ, உத்தியோகத்திற்குச் செல்லாமல் இருக்கும்படி தடுப்பதற்காகவோ, அல்லது அரசாங்கக் கல்விச் சாலைகளிலிருந்து அவருடைய குழந்தைகளை வாபஸ் பெறும்படி செய்வதற்காகவோ, மிகத் தாழ்ந்த ஒரு சிப்பந்தியிடம் நான் சென்றாலும், ஒத்துழையாதவன் என்ற முறையில் எனது கடமையை நான் நிறைவேற்றியவனாகிறேன்.

'எங் இந்தியா' - 27—5—1926

# 52

## சாத்விகச் சட்ட மறுப்பு

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் சாத்விகச் சட்ட மறுப்பு பற்றியே பேசி வந்தார்கள். அதை உண்மையில் ஒரு தடவைகூட முயற்சி செய்து பார்க்காததால், ஒவ்வொருவரும் அதைக் கண்டு பரவசமடைந்திருப்பது போல் தோன்றியது. நமது தற்போதைய இன்னல்களுக்கெல்லாம் அதுதான் தலைசிறந்த ஓர் ஔஷதம் என அவர்கள் தவறாக நினைத்ததே அவர்களது பரவசத்திற்குக் காரணம். நாம் அதற்கு அவசியமான சூழ்நிலையை உற்பத்தி செய்து கொண்டால், அதை ஒரு சர்வ ரோக நிவாரணியாகச் செய்ய முடியும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். தனி நபர்களுக்கு அவர்களுடைய சாத்விகச் சட்ட மறுப்பு நிச்சயமாக ரத்தக்களரியில் கொண்டு போய் விடும் என்றிருந்தாலொழிய, மேலே குறிப்பிட்ட சூழ்நிலை எப்போதுமே இருந்து வருகிறது. இதை நான் சத்தியாக்கிரக நாட்களின் போது கண்டு பிடித்தேன்.

ஒருவர், என்ன நேருவதாக இருந்தாலும் அலட்சியம் செய்யத் துணியாத ஓர் அழைப்பு வரலாம். அத்தகைய நேரம் வரு

வதை நான் தெளிவாகக் காணக்கூடும். அப்போது, நிச்சயமாக ரத்தக்களரி ஏற்படும் என்ற நிலைமை இருந்தாலும்கூட, அரசாங் கத்தின் ஒவ்வொரு சட்டத்திற்கும் கீழ்ப்படிய நான் மறுத்துத் தீர வேண்டும். வரும் அழைப்பை அலட்சியம் செய்வது, கட வுளேயே மறுப்பதாகும். எனவே, சாத்விகச் சட்ட மறுப்பு செய்து தீரவேண்டியது ஒரு கடமையாகிறது.

மக்கள் சாத்விகச் சட்ட மறுப்பின் அடிப்படையே வேறுகும். அதை அமைதியான சூழ்நிலையில் மாத்திரமே முயற்சி செய்து பார்க்க முடியும். அது பலவீன நிலையின் அமைதியாக இருக்கக் கூடாது; பலத்தின் அமைதியாக இருக்க வேண்டும். அறியாமை யின் அமைதியாக இல்லாமல் அறிவின் அமைதியாக இருக்க வேண்டும். தனி நபரின் சாத்விகச் சட்ட மறுப்பு பிறருக்காக அனுஷ்டிக்கப்படலாம்; பெரிதும் பிறருக்காகத்தான் அனுஷ்டிக் கப்படுகிறது. மக்கள் மேற்கொள்ளும் சாத்விகச் சட்டமறுப்போ சுயநலமானதாக இருக்கலாம்; பெரிதும் அப்படித்தான் இருக் கிறது. ஏனெனில், அவர்கள் தாங்கள் அனுஷ்டிக்கும் சட்ட மறுப்பிலிருந்து சொந்த லாபத்தையே எதிர்பார்க்கிருர்கள்.

உதாரணமாக. தென்னுப்பிரிக்காவிலே, காலன்பாக்கும் போலக்கும் பிறர் நலனுக்காகவே சாத்விகச் சட்ட மறுப்புச் செய் தார்கள். அதனுல் அவர்களுக்குச் சொந்த லாபம் எதுவும் இல்லை. அங்கே ஆயிரக்கணக்கானவர்கள் சட்ட மறுப்பில் ஈடுபட்டனர். ஏனெனில், அவர்கள் சொந்த லாபத்துக்காகவே, அதாவது ஒப் பந்தம் செய்து கொள்ளாத ஆடவர்கள், பெண்கள், அவர்களு டைய வயது வந்த குழந்தைகள் முதலியோருக்கு விதிக்கப்பட்ட ஆள் வரியை அகற்றவே சட்ட மறுப்புச் செய்தார்கள். மக்களின் சாத்விகச் சட்ட மறுப்பில், அந்தச் சித்தாந்தம் செயல்படு வதை சட்டத்தை மறுப்போர் அறிந்து கொண்டால் அதுவே போதுமானது.

தென்னுப்பிரிக்காவிலே தடுக்கப்பட்ட பிரதேசத்தில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட ஆடவர்களுடனும் சில பெண்க ளுடனும் நான் ஊர்வலம் சென்ற போது, முற்றிலும் மனித சஞ் சாரமே இல்லாத ஓரிடத்தில் கைது செய்யப்பட்டேன். அந்தக் கோஷ்டியில் திடகாத்திரர்களான பல பட்டாணியர்களும் மற்ற வர்களும் இருந்தனர். அவ்விதம் கைது செய்தது, எங்கள் இயக் கத்தின் உயர்விற்குத் தென்னுப்பிரிக்க அரசாங்கம் அளித்த மகத்தான நற்சாட்சிப் பத்திரமாகும். நாங்கள் மிக்க உறுதியுட னிருந்ததுபோல், நாங்கள் அபாயமற்றவர்கள் என்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்கள். என்னைக் கைது செய்தவர்களை, எங்கள் கோஷ்டியில் இருந்தவர்களால் எளிதில் துண்டு துண் டாக வெட்டி வீழ்த்தியிருக்க முடியும். அவ்விதம் செய்திருந்தால், அது மிகுந்த கோழைத்தனமான ஒரு காரியமாக இருந்திருக்கும்;

தாங்கள் *செய்து கொண்ட பிரதிக்ஞையை மீறி நம்பிக்கைத் துரோகம் செய்ததாகியிருக்கும்; விடுதலைப் போராட்டத்திற்கே அது அழிவைத் தேடிக் கொண்டதாக முடிந்திருக்கும். அதன் விளைவாகத் தென்னுப்பிரிக்காவிலிருந்து ஒவ்வோர் இந்தியரும் பலாத்காரமாக நாடு கடத்தப்பட்டிருப்பார். எங்கள் கோஷ்டி யைச் சேர்ந்தவர்கள் கலகக் கூட்டத்தைச் சேர்ந்த கீழ் மக்கள் அல்ல; அவர்கள் கட்டுதிட்டத்திற்கு உட்பட்ட சிப்பாய்கள். அவர்கள் நிராயுத பாணிகளாக இருந்ததால், அவர்களின் சிறப்பு மேலும் அதிகமாகியது. நான் அவர்களிடமிருந்து பிரிக்கப்பட் டேன் என்ருலும், அவர்கள் கலைந்துவிடவோ அல்லது திரும்பிச் சென்று விடவோ இல்லை. அவர்கள், தங்களில் ஒவ்வொருவரும் கைதியாகி, சிறைப்படும் வரையில், தாங்கள் உத்தேசித்த இடத்திற்குச் சென்று கொண்டே இருந்தார்கள். நான் அறிந்த வரையில், கட்டு திட்டத்திற்கும் அகிம்சைக்கும் இது ஓர் உதாரணமாகும். இதற்கு, சரித்திரத்தில் உவமையே இல்லை. அத்தகைய கட்டுப்பாடின்றேல், இங்கே வெற்றிகரமாக மக் களின் சாத்விகச் சட்ட மறுப்பை நடத்திச் செல்ல முடியுமென நான் நம்பவில்லை.

யாராவது கைது செய்யப்பட்ட போதெல்லாம் பெரும் ஆர்ப்பாட்டங்கள் நடத்தி அரசாங்கத்தைப் பயமுறுத்தும் எண்ணத்தை நாம் உதறித் தள்ளிவிட வேண்டும். அதற்கு மாருக, கைதியாவதை ஒத்துழையாதாருடைய வாழ்க்கையின் சாதாரண நிலையாகக் கருத வேண்டும். போர் முனைக்குச் செல்லும் சிப்பாய் மரணத்தை நாடுவது போல், நாம் கைதியாவதையும், சிறைத் தண்டனையையும் நாட வேண்டும். சிறைத் தண்டனையைத் தவிர்ப்பதன் மூலம் அல்ல, அதை விரும்பி வரவேற்பதன் மூலமே நாம் அரசாங்கத்தின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டுமென நாம் எதிர்பார்க்கிறோம். எல்லோரும் கூண்டோடு கைதியாகி, சிறைப்படுவதற்கு நாம் தயாராக இருப்பதை அது காட்டுவதாக இருப்பினும், அதைப் பொருட் படுத்தக்கூடாது. எனவே, நிராயுதபாணியான ஒரே ஒரு போலீஸ்காரரிடம் சரண் அடைய நமக்குள்ள விருப்பத்தைக் காட்டுவதே சாத்விகச் சட்ட மறுப்பாகும். கசாப்புக் கடைக்கு ஆடுகளைக்கொண்டு போவது போல், நம்மை ஆயிரக்கணக்கில் சிறைக்குக்கொண்டு செல்லுவதிலேயே நமது வெற்றி அடங்கி யிருக்கிறது. உலகத்தில் உள்ள ஆடுகள் எல்லாம் தாங்களாக விரும்பி கசாப்புக் கடைக்குத் தாங்களே போய்விடுவதாக இருந் தால், அவை வெகு காலத்திற்கு முன்பே கசாப்புக்கத்தியிலிருந்து தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொண்டிருக்கலாம்! யாதொரு தவறும் செய்யாமல் நாம் சிறைப்படுவதிலேயே நமது வெற்றி இருக்கிறது. நமது களங்கமற்ற தன்மை எவ்வளவுக்கு அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கு நமது பலம் அதிகமாகும்; அதற்குத் தகுந்தாற் போல் நம்முடைய வெற்றியும் அதிக துரிதமாகிவிடும்.

இன்றைய நிலை இதுதான்: அரசாங்கம் கோழையாக இருக்கிறது. நாம் சிறைத் தண்டனையைக் கண்டு பயப்படுகிறோம். சிறைகள் விஷயமாக நமக்குள்ள பீதியை, அரசாங்கம் தனக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக்கொள்ளுகிறது. நம் ஆடவர்களும் பெண்களும் சிறைகளை ஆரோக்கிய ஸ்தலங்கள் என வரவேற்பார்களாயின், சிறைகளில் வைக்கப்படும் நமது அன்புக்குப் பாத்திரமானவர்களைக் குறித்து நாம் கவலைப்படுவதை விட்டு விடுவோம். தென்னாப்பிரிக்காவில் நமது தேச மக்கள் சிறைகளை, சக்கரவர்த்தியின் ஹோட்டல்கள் என்றே வேடிக்கையாகக் குறிப்பிடுவது வழக்கமாக இருந்தது.

அரசாங்கச் சட்டங்களுக்குக் கீழ்ப்படியாமை, வெகு காலமாகவே நமது மனத்தில் ஏற்பட்டுவிட்டது. திடீரென்று சாத்விகச் சட்ட மறுப்பு செய்வதற்குத் தகுதியாக இருப்பதற்காக, நாம் அவற்றை அடிக்கடி கள்ளத்தனமாக மீறியும் வந்துள்ளோம். சட்ட மறுப்பு சாத்விகமாக இருக்கவேண்டுமாயின், அது பகிரங்கமாகவும் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டும் இருக்க வேண்டும்.

பூரணமான சாத்விகச் சட்ட மறுப்பு, அமைதியான ஒரு புரட்சி நிலையேயாகும். அதாவது, அரசாங்கத்தினால் செய்யப்பட்ட ஒவ்வொரு சட்டத்திற்கும் கீழ்ப்படிய மறுத்துவிடுவதே. ஆயுதப் புரட்சியைக் காட்டிலும் அது நிச்சயமாக அதிக அபாயகரமானது. சாத்விகச் சட்ட மறுப்பாளர்கள் எத்தகைய கடுமையான கஷ்ட நஷ்டங்களையும் எதிர்த்து நிற்கத் தயாராக இருப்பார்களாயின், சாத்விகப் புரட்சியை ஒரு காலத்திலும் அடக்கிவிட முடியாது. அது, களங்கமற்ற நிரபராதிகள் துன்பத்திற்குள்ளாகும் கலப்பற்ற திறமையில் உள்ள பரிபூரண நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. ஒரு சாத்விக எதிர்ப்பாளர் சந்தடியின்றி சிறைக்குச் செல்லுவதன் மூலம் ஓர் அமைதியான சூழ்நிலை ஏற்படும்படி செய்கிறார். தவறு செய்வோர், தங்களுக்கு எதிர்ப்பு இல்லையாயின், களைத்துப்போய் சோர்வடைந்துவிடுகிறார்கள். துன்பத்திற்கு உள்ளாவோர் எதிர்க்கவில்லையாயின், துன்பம் இழைப்போருக்கு ஆனந்தமே இல்லாமல் போய்விடுகிறது. எனவே, அத்தகைய மகத்தான சாகசத்தைக் கையாள முற்படுவதற்கு முன், குறைந்தபட்சம் ஜனப்பிரதிநிதிகளாவது வெற்றிகரமான சாத்விகச் சட்ட மறுப்பிற்கான வழிவகைகளை முற்றிலும் புரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். அதிக துரிதமான பரிகாரங்கள் எப்போதுமே மிகவும் அபாயகரமானவை. அவற்றைக் கையாளுவதில் மிகுந்த திறமை வேண்டும். நாம் அந்நிய ஜவுளி பகிஷ்காரத்தை வெற்றிகரமாக அமலுக்குக் கொண்டு வந்துவிடுவோமாயின், எந்த அரசாங்கமும் எதிர்க்கமுடியாத அளவுக்கு நாம் சாத்விகச் சட்ட மறுப்பைத் தொடங்குவதற்கான சூழ்நிலையை உண்டு பண்ணியவர்களா

வோம் என்பது எனது உறுதியான கருத்தாகும். ஆகையால், பரந்த முறையில் மக்கள் சாத்விகச் சட்ட மறுப்பை ஆரம்பிக்க வேண்டுமென்று அவசரப்படுவோரை, பொறுமையைக் கடைப் பிடிக்கும்படியும், சுதேசியில் உறுதியுடன் முழு கவனத்தையும் செலுத்த வேண்டுமென்றும் வற்புறுத்துகிறேன்.

—'எங் இந்தியா'—4-8-1921

# 53

# சாரத்தை அடைய சட்ட மறுப்பு

முற்றிலும் சாத்விகச் சட்ட மறுப்பில் மாத்திரமே நாம் துணிந்து நம்பிக்கை வைக்கக்கூடாது. அது, ஒரு கத்தியை உபயோகிப்பது போன்றதே. அதை உபயோகிப்பதாயின், ஜாக்கிரதையாக எப்போதாவதுதான் உபயோகிக்க வேண்டும். ஒரு மனிதன் நிறுத்தாமல் கத்தியால் வெட்டிக்கொண்டே சென்ருல், வேரையே வெட்டிவிடுகிருன். அதன் விளைவாக, கடினமான மேல் பட்டையை வெட்டிவிட்டு தான் அடைய விரும்பிய உள்ளே யுள்ள சாரத்தை அவன் அடைய முடியாமற் போய்விடும். எல்லா வளர்ச்சிக்கும் அவசியமான சட்டங்களுக்கிணங்க நடந்துகொண் டால்தான், சாத்விகச் சட்ட மறுப்பின் உபயோகம் ஆரோக்கிய மானதாகவும், அவசியமானதாகவும், பலன் தரத்தக்கதாகவும் இருக்கும். எனவே, நாம் 'சட்ட மறுப்பு' என்பதைக் காட்டிலும் 'சாத்விக' என்ற அடைமொழிக்கே பூரணமான மதிப்புக் கொடுக்க வேண்டும். மரியாதையும், ஒழுங்கும், பாகுபாடு செய் யும் பகுத்தறிவும், அகிம்சையும் இல்லாத சட்ட மறுப்பு, நிச்சய மான அழிவிற்கே காரணமாகிவிடும். அன்புடன் கூடிய சட்ட மறுப்பு, வாழ்க்கையின் ஜீவ நீர் ஆகும். சாத்விகச் சட்ட மறுப்பு, வளர்ச்சியைக் குறிக்கும் அழகானதொரு மாற்று வார்த்தை யாகும். அது மரணத்தைக் குறிக்கும் பகைமை அல்ல.

—'எங் இந்தியா'—5—1—1922

# 54

# பிரஜைகளின் பிறப்புரிமை

சாத்விகச் சட்ட மறுப்பு ஒரு பிரஜையின் இயற்கையான உரிமை என்பதை ஒவ்வொருவரும் அறிந்துகொள்ளும்படி செய்ய வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். அவர் ஒரு மனித

ராக இருக்க வேண்டுமாயின், அதைக் கைவிடத் துணியமாட்டார். சாத்விக சட்ட மறுப்பைத் தொடர்ந்து ஒரு காலத்திலும் அராஜகம் ஏற்படுவதற்கில்லை. சாத்விகமல்லாத ('கிரிமினல்') சட்ட மறுப்புதான் அராஜகத்தில் கொண்டு போய்விடக்கூடும். 'கிரிமினல்' சட்ட மறுப்பை ஒவ்வொரு அரசாங்கமும் பலாத்காரத்தினல் அடக்கிவிடும். அவ்விதம் அடக்காவிடில், அரசாங்கம் அழிந்துவிடும். ஆனல், சாத்விக சட்ட மறுப்பை அடக்குவது, மனச்சாட்சியைச் சிறைப்படுத்த முயற்சிப்பதாகும். சாத்விக சட்ட மறுப்பினல், சக்தியும் தூய்மையும் மாத்திரமே ஏற்பட முடியும். ஒரு சாத்விக சட்ட மறுப்பாளர், எக்காலத்திலும் ஆயுதங்களை உபயோகிப்பதில்லை. எனவே, பொதுஜனங்களின் குரலுக்குச் செவிசாய்க்க விரும்பும் அரசாங்கத்திற்கு அவரால் எவ்வித அபாயமும் ஏற்படாது. தான்தோன்றித் தனமாக நடந்துகொள்ளும் ஓர் அரசாங்கத்திற்குத்தான் அவர் அபாயகரமானவராக இருப்பார். ஏனெனில், அவர் எவ்விஷயமாக அரசாங்கத்தை எதிர்க்கிருரோ, அவ்விஷயமாகப் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டி அந்த அரசாங்கம் வீழ்ச்சியுறும்படி அவர் செய்துவிடுகிருர். அரசாங்கம் அநீதியாகிவிடுவதும், ஊழலாகி விடுவதும் ஒன்றுதான். எனவே, அத்தகைய அரசாங்கத்தை எதிர்த்து சாத்விக சட்ட மறுப்புச் செய்வது தெய்விகமான ஒரு கடமையாகிவிடுகிறது. அவ்வித அரசாங்கத்துடன் பேரம் செய்யும் ஒரு பிரஜை, அதன் ஊழலில் அல்லது அநீதியில் பங்கு எடுத்துக்கொண்டவராகிருர்.

எனவே, குறிப்பிட்ட ஒரு நடவடிக்கை அல்லது சட்டம் சம்பந்தமாக சாத்விக சட்ட மறுப்பைக் கைக்கொள்ளுவது விவேகமாகுமா என்று ஆட்சேபிக்கலாம். அவ்விஷயமாக நிதானித்து ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டுமென்றும் ஆலோசனை கூறலாம். எனினும், சாத்விக சட்ட மறுப்புச் செய்யும் உரிமையை மாத்திரம் எவரும் ஆட்சேபிக்க அனுமதிக்க முடியாது. அது ஒரு பிறப்புரிமையாகும். அதை விட்டுக் கொடுப்பது முடியாத காரியம். அதை விட்டுக் கொடுப்பது சுயமரியாதையையே விட்டுக் கொடுப்பதாகும்.

சாத்விக சட்ட மறுப்பை வற்புத்தும் அதே சமயத்தில் அதன் உபயோகமானது, யுக்திக்கு உகந்த எல்லாக் கட்டுப்பாடுகளாலும் பாதுகாக்கப்பட்டிருக்க வேண்டும். பலாத்காரமோ அல்லது பொதுவாகச் சட்டங்களை மீறும் விபரீதமோ பீறிட்டெழாத விதத்தில், சாத்தியமான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்க வேண்டும். மற்றும், அந்தந்தச் சந்தர்ப்பத்திற்கு முற்றிலும் அவசியமான அளவிற்கு, அதை அனுஷ்டிக்க வேண்டிய இடமும் அளவும் வரையறுக்கப்பட்டிருக்க வேண்டும்.

—'எங் இந்தியா' 5—1—1922

# 55

# எதிர்ப்பும் தற்காப்பும்

எதிர்க்கும் சாத்விக சட்ட மறுப்பிற்கும், தற்காப்பிற்கான சாத்விக சட்ட மறுப்பிற்கும் உள்ள திட்டவட்டமான வேற்றுமையை, இப்போது அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். எதிர்க்கும், உரிமையை வற்புறுத்தும் அல்லது அதிருப்தியைக் கொடுக்கும் சாத்விக சட்ட மறுப்பு என்பது, இம்சையின்றியும் பிடிவாதத்துடனும் அரசாங்கத்தின் சட்டங்களை மீறி நடப்பதேயாகும். ஆனால், அவ்விதம் மீறுவது ஒழுக்கக்கேடான வகையில் இருக்கக்கூடாது. அரசாங்கத்திற்கு எதிராகப் புரட்சி செய்வதற்கு அறிகுறியாகவே, அது அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

உதாரணமாக, நிலவரி சம்பந்தமான சட்டங்களையோ அல்லது அரசாங்கத்தின் சௌகரியத்திற்காக மக்களின் சொந்த நடத்தையைக் கட்டுப்படுத்தும் சட்டங்களையோ மீறுவது, அவை இன்னல்கள் விளைவிப்பதாக இராவிடினும், எதிர்க்கும் உரிமையை வற்புறுத்தும் அல்லது அரசாங்கத்தின்மீது அதிருப்தியை உண்டாக்கும் சாத்விக சட்ட மறுப்பாகும்.

தற்காப்பு சட்ட மறுப்பு என்பது, தீமையான சட்டங்களை எதிர்த்து, விருப்பமின்றி நிர்ப்பந்தமாகக் கைக்கொள்ளும் சாத்விக சட்ட மறுப்பாகும். ஏனெனில், அத்தகைய சட்டங்களுக்குக் கீழ்ப்படிவது சுயமரியாதைக்கோ அல்லது மானிடரின் கண்ணியத்திற்கோ முரணாகும். உதாரணமாக, சமாதான நோக்கங்களுக்காக தொண்டர் படை அமைத்தல், அதே நோக்கங்களுக்காகப் பொதுக்கூட்டங்கள் கூட்டுவது, தடையுத்தரவையும் எதிர்த்து பலாத்கார நோக்கம் அல்லாத அல்லது பலாத்காரத்தைத் தூண்டாத வகையில் கட்டுரைகளைப் பிரசுரித்தல் முதலியவை தற்காப்பான சாத்விக சட்ட மறுப்பாகும். மற்றும் தடையுத்தரவுகளை மீறி, குறிப்பிட்ட காரியங்களிலும் ஸ்தாபனங்களிலும் ஈடுபடாமல் மக்களைத் தடுப்பதற்காக அமைதியான முறையில் மறியல் செய்வதும் தற்காப்பான சாத்விக சட்ட மறுப்பு ஆகும். எதிர்க்கும் சாத்விக சட்ட மறுப்பைப் போல், தற்காப்பான சாத்விக சட்ட மறுப்பிற்கும் மேலே குறிப்பிட்ட நிப்பந்தனைகள் நிறைவேற வேண்டியது அவசியமாகும்.

— 'எங் இந்தியா' · 9—2—1922

# 56

# சத்தியாக்கிரகம் எனது கற்பக விருட்சம்

[இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் 39-வது வருடாந்திரக் கூட்டம் 1924 டிசம்பர் 26-ஆம் தேதி பொல்காமில் மகாத்மா காந்தியின் தலைமையில் நடந்தது. அப்போது ஒத்துழையாமையைப் பற்றி காந்திஜி நிகழ்த்திய தலைமை உரையின் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

ஒத்துழையாமையும் சாத்விக சட்ட மறுப்பும் சத்தியாக்கிரகம் என்ற ஒரே மரத்தின் வெவ்வேறு கிளைகளே. அது தான் என்னுடைய கற்பக விருட்சம்; கோரியவற்றையெல்லாம் கொடுக்கக்கூடியது. சத்தியாக்கிரகம், சத்தியத்தை நாடிச் செல்லுவதே. கடவுளே சத்தியம். அந்த உண்மையை எனக்குச் சுட்டிக்காட்டும் தீபம் அகிம்சை அல்லது பலாத்காரமின்மை. என் சம்பந்தப்பட்ட வரையில் அந்த உண்மையின் ஓர் அம்சமே சுயராஜ்யமாகும். இந்தச் சத்தியாக்கிரகமானது தென்னப்பிரிக்கா, கேடா அல்லது சம்பாரண் முதலிய மற்றும் பலவிடங்களிலும் என்னைக் கைவிட்டுவிடவில்லை.

சத்தியாக்கிரகம் எல்லாவித இம்சையையும் துவேஷத்தையும் தவிர்க்கிறது. ஆகையால், நான் ஆங்கிலேயர்களைத் துவேஷிக்க முடியாது; துவேஷிக்கவும் மாட்டேன். அதே சமயத்தில் அவர்களுடைய நுகத்தடியையும் நான் சகித்துக்கொண்டிருக்க மாட்டேன். இந்தியாவில் பிரிட்டிஷாரின் முறைகளையும் பிரிட்டிஷ் ஸ்தாபனங்களையும் திணிக்கும் புனிதமற்ற முயற்சியை எதிர்த்து நான் உயிரைக் கொடுத்தாவது போராடித் தீரவேண்டும். ஆனல், அந்த முயற்சியை நான் சாத்விகமாக எதிர்க்கிறேன்.

ஆங்கில ஆட்சியாளரை எதிர்த்து சாத்விகப் போராட்டத்தை நடத்த இந்தியாவிற்குள்ள சக்தியில் எனக்கு நம்பிக்கை உண்டு. அம்முயற்சி தோல்வியடைந்ததில்லை. அது வெற்றியே அடைந்திருக்கிறது; எனினும் நாம் நம்பிய அளவிற்கும், விரும்பிய அளவிற்கும் அது வெற்றி பெறவில்லை. எனினும், நான் அதற்காக நம்பிக்கையை இழந்துவிடவில்லை. அதற்கு மாறாக, வெகு சீக்கிரத்தில் இந்தியா தனக்கு உரிய ஸ்தானத்தை, அதிலும் சத்தியாக்கிரகத்தினல் மாத்திரமே அடையும் என்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. தற்போது சத்தியாக்கிரகத்தை நிறுத்திவைக்க உத்தேசித்திருப்பது, பரிசோதனையின் ஓர் அம்சமே. என்னல்

விவரிக்கப்பட்டுள்ள திட்டமானது நிறைவேற்றப்படுமாயின், ஒத்துழையாமையை மீண்டும் ஆரம்பிக்கவேண்டிய அவசியம் ஒரு போதும் இராது. அத்திட்டம் தோல்வியடையுமாயின், ஏதாவது ஓர் உருவத்தில் காங்கிரசின் மூலமோ அல்லது அல்லாமலோ சாத்விக ஒத்துழையாமை ஆரம்பிக்கப்படும். சத்தியாக்கிரகம் ஒரு காலத்திலும் தோல்வியடையாதென்றும், சத்தியத்தை நிலை நிறுத்த அப்பழுக்கற்ற ஒரே ஒரு சத்தியாக்கிரகி போதுமென்றும் நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். நாம் எல்லோரும் குற்றம் குறையற்ற சத்தியாக்கிரகிகளாக இருக்க முயற்சிப்போமாக. நம்மிடையே மிக மிகத் தாழ்ந்தவரால் அடைய முடியாத எத்தகைய யோக்கியதையும் அந்த முயற்சிக்குத் தேவையில்லை. சத்தியாக்கிரகம், உள்ளேயுள்ள ஆன்மாவின் இயல்பேயாகும். அது நம்மில் ஒவ்வொருவரிடத்திலும் மறைந்து கிடக்கிறது. சுயராஜ்யத்தைப்போல் அதுவும் நமது பிறப்புரிமையாகும். நாம் அதை அறிந்துகொள்ளுவோமாக.

—'எங் இந்தியா' — 26-12-1924

# 57

# பர்டோலி செய்துள்ள முடிவு

பர்டோலி முக்கியமான தீர்மானத்திற்கு வந்திருக்கிறது. முடிவான, அசைக்க முடியாத முடிவை அது செய்துகொண்டிருக்கிறது. சபாநாயகர் வித்தல்பாய் பட்டேல், அத்தாலுக்காவின் பிரதிநிதிகளடங்கிய கூட்டத்தில் பேசுகையில், செய்ய வேண்டிய எச்சரிக்கைகளையும் தெளிவாக எடுத்துக் கூறினர். நிச்சயமாக அவர் விஷயத்தை அடக்கத்துடனேயே எடுத்துரைத்தார். கதர் அணிந்த பிரதிநிதிகள் 4,000 பேர் அக்கூட்டத்தில் இருந்தார்கள். ஐந்நூறு பெண்களும் அங்கே இருந்தார்கள். அவர்களில் பெரும்பாலோரும் கதர் அணிந்திருந்தார்கள். அவர்கள் சிரத்தையுடன் இருந்தார்கள்; சிரத்தையுடன் கேட்டார்கள். அந்தஸ்துள்ள, நிதானமுள்ள, பொறுப்பு வாய்ந்தவர்களே அங்கே கூடியிருந்தார்கள்.

வித்தல்பாய்க்குப் பிறகு நான் பேசினேன். பொதுஜன சாத்விக சட்ட மறுப்புச் செய்வதற்குக் காங்கிரஸ் விதித்திருக்கும் நிபந்தனைகள் ஒவ்வொன்றையும் அவர்களுக்கு எடுத்துச் சொன்னேன். ஒவ்வொரு நிபந்தனையின் சம்பந்தமாகவும் தனியாகக் கூட்டத்தின் கருத்தையும் கேட்டுக்கொண்டேன். ஹிந்து – முஸ்லிம் – பார்ஸி – கிறிஸ்தவர் ஒற்றுமையின் முக்கியத்தை அவர்கள் அறிந்திருந்தார்கள். அகிம்சையின் உண்மையும் முக்கிய

மும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. தீண்டாமை ஒழிய வேண்டும் என்பதன் பொருளையும் அவர்கள் உணர்ந்தார்கள். தேசீய பள்ளிக்கூடங்களிலேயே குழந்தைகளைப் படிக்கும்படிச் செய்வதோடு, 'தீண்டாதார்' குழந்தைகளும் கலந்துகொள்ளும்படிச் செய்யவும் அவர்கள் தயாராயிருந்தார்கள். கிராமக் கிணறுகளிலிருந்து 'தீண்டாதார்' தண்ணீர் எடுத்துக்கொள்ளுவதில் அவர்களுக்கு ஆட்சேபணையில்லை. நோயுற்றிருக்கும் தங்கள் அக்கம் பக்கத்தாருக்கு எப்படி பணிவிடை செய்வார்களோ அதே போலவே நோயுற்ற 'தீண்டாதா'ருக்கும் தாங்கள் பணிவிடை செய்தாக வேண்டும் என்பதையும் அவர்கள் அறிவார்கள்.

நான் அவர்களுக்கு விவரித்துச் சொன்ன வகையில், தங்களைத் தாமே தூய்மையாக்கிக்கொண்டாலன்றி வரி கொடாமையையும் அது போன்ற மற்ற சட்டமறுப்புக்களையும் செய்யும் வாய்ப்பை அவர்கள் அனுசரிக்க முடியாது என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். பாடுபட்டு உழைப்பதுடன் தங்களுக்கு வேண்டிய நூலைத் தாங்களே நூற்றுக்கொள்ளுவதோடு, தங்களுக்குத் தேவையான கதரைத் தாங்களே நெய்துகொள்ளவும் வேண்டும் என்பதையும் அவர்கள் அறிவார்கள். கடைசியாக தங்கள் ஜங்கம சொத்துக்கள், கால்நடைகள், நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டுவிடுவதைச் சமாளித்துக்கொள்ளவும் அவர்கள் தயாராயிருந்தார்கள். சிறைப்படுவதற்கும், அவசியமானல் சாவதற்கும் அவர்கள் தயாராயிருந்தார்கள். இவைகளையெல்லாம் எந்தவிதமான வெறுப்புமின்றிச் செய்வார்கள்.

தீண்டாமையைக் குறித்துத்தான் ஒரு கிழவர் ஆட்சேபித்துச் சொன்னர். நான் சொன்னது கொள்கையளவில் சரி என்று அவர் ஒப்புக்கொண்டார். ஆனல், பழக்கமாக இருப்பதைத் திடீரென்று மாற்றிக்கொண்டுவிடுவது என்பது அனுபவத்தில் கஷ்டமானது என்ருர். இவ்விஷயத்தை விளக்கி, இதன் முக்கியத்தை வற்புறுத்திச் சொன்னேன். கூடியிருந்தவர்கள் உறுதியான முடிவுக்கு வந்துவிட்டார்கள்.

பெரிய கூட்டத்திற்குப் போவதற்கு முன்னல் உண்மையான ஊழியர்களைச் சந்தித்துப் பேசினேன். அவர்கள் ஐம்பது பேர். அந்தக் கூட்டத்திற்கு முன்னல், வித்தல்பாய் பட்டேலும் சில ஊழியர்களும் நானும் கலந்து ஆலோசித்தோம். சுதேசி ஏற்பாடுகளைப் பூரணமாகச் செய்துகொள்ளுவதை முன்னிட்டும், அறுபது தேசீய பள்ளிக்கூடங்களிலும் 'தீண்டாதார்' குழந்தைகளைச் சேர்த்துக்கொண்டு தீண்டாமை ஒழிப்பை நிச்சயமானதாக்கிக்கொள்ளுவதற்காகவும் சத்தியாக்கிரக முடிவை இரு வாரங்களுக்கு ஒத்திவைப்பதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றலாம் என்று எண்ணினேம். வீரமும் உற்சாகமும் உள்ள பர்டோலி ஊழியர்கள், சத்தியாக்கிரகத்தை ஒத்திவைப்பதற்குச்

சம்மதிக்கவில்லை. தீண்டாமை ஒழிப்பு சம்பந்தமாக ஹிந்துக்களில் பாதிப் பேருக்கு மேல் தயாராக இருக்கிறார்கள் என்பதிலும், வருங்காலத் தேவைக்குப் போதுமான கதரை மக்கள் தயாரித்துக்கொண்டு விடுவார்கள் என்பதிலும் அவர்கள் நிச்சயமாக இருந்தனர். அரசாங்கத்துடன் போராடி முடிவுக்கு வந்தே தீருவது என்பதிலும் உறுதியுடன் இருந்தார்கள். வித்தல்பாய் பட்டேல் கிளப்பிய ஒவ்வொரு ஆட்சேபணைக்கும் அவர்கள் தக்க சமாதானம் கூறினார்கள். வெளுத்த தாடியுடனும், எப்பொழுதும் புன்முறுவல் தவழ்ந்த முகத்துடனுமிருந்த அப்பாஸ் தயாப்ஜியும் எச்சரிக்கை செய்வதற்கு அங்கே இருந்தார். என்றாலும் ஊழியர்கள் கொஞ்சமும் பின்வாங்குவதாக இல்லை. எனவே, நான் கீழே கொடுத்திருக்கும் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது:

"பொதுஜன சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு இருக்க வேண்டிய நிபந்தனைகளையெல்லாம் நன்றாக அறிந்து ஆலோசித்த பிறகு, பர்டோலி தாலுக்கா மக்களைக் கொண்ட இந்த மகாநாடு, பொதுஜன சட்ட மறுப்புக்கு இந்தத் தாலுக்கா தகுதியானது என்று தீர்மானிக்கிறது.

"இந்த மகாநாடு கீழே வருமாறு அபிப்பிராயப்படுகிறது :

(அ) இந்தியாவின் குறைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்கு, இந்தியாவிலிருக்கும் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகியவர்களிடையேயும் மற்ற சமூகத்தினரிடையேயும் ஒற்றுமை ஏற்பட வேண்டியது முற்றிலும் அவசியமானது.

(ஆ) அந்தக் குறைகளைப்போக்கிக்கொள்ளுவதற்குள்ள ஒரே பரிகாரம், அகிம்சையும், பொறுமையும், சகிப்புத்தன்மையுமாகும்.

(இ) ஒவ்வொரு வீட்டிலும் நூற்கும் ராட்டையை உபயோகிப்பதும், ஒவ்வொருவரும் மற்றெல்லாத் துணிகளையும் உடுத்துவதை விட்டுவிட்டு கையினாலேயே நூற்றுக் கையினாலேயே நெய்த துணிகளையே உடுத்த வேண்டியதும் இந்தியாவின் சுதந்திரத்திற்கு இன்றியமையாததாகும்.

(ஈ) ஹிந்துக்களிடமிருக்கும் தீண்டாமையை அடியோடு ஒழித்தாலன்றி, சுயராஜ்யத்தை அடைவது சாத்தியமே இல்லை.

(உ) மக்களுடைய முன்னேற்றத்திற்காகவும், சுதந்திரத்தை அடைவதற்காகவும் ஸ்தாவர, ஜங்கம சொத்துக்களைத் தியாகஞ் செய்துவிடத் தயாராக இருப்பதும், சிறைத் தண்டனையை அடைவதும், அவசியமானால் உயிரையும் கொடுக்கத் தயாராயிருப்பதும் அத்தியாவசியமாகும்.

" மேலே சொன்ன தியாகங்களை முதலில் செய்யும் பாக்கியம் பர்டோலி தாலுக்காவுக்கே இருக்கும் என்று இம்மகாநாடு நம்புகிறது. காரியக் கமிட்டி வேறுவிதமாக முடிவு செய்தாலோ அல்லது வட்டமேஜை மகாநாடு நடத்தப்படுவதாக இருந்தாலோ அன்றி, ஸ்ரீ காந்தியின், இம்மகாநாட்டுத் தலைவருடைய ஆலோசனையின், தலைமையின்கீழ் இந்தத் தாலுக்கா உடனே பொதுஜன சட்ட

மறுப்பை ஆரம்பிக்கும் என்பதைக் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு இம்மகாநாடு பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறது.

"பொதுஜன சட்ட மறுப்புக்குக் காங்கிரஸ் விதிக்கும் நிபந்தனைகளுக்கு உடன்படச் சம்மதிக்கும் இத்தாலுக்காவிலுள்ள வரி செலுத்துவோர்கள், மேற்கொண்டு அறிவிக்கப்படும் வரையில், அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய நிலவரியையும் மற்ற வரிகளையும் செலுத்தாமலிருக்குமாறு இம்மகாநாடு அவர்களுக்குச் சிபாரிசு செய்கிறது."

இதிலுள்ள பிரச்னையை யார் அறிவார்கள்? அரசாங்கம் மேற்கொள்ளக்கூடிய அடக்குமுறையைச் சமாளிக்க பர்டோலி ஆண்களுக்கும் பெண்களுக்கும் முடியுமா என்பதை யாரே அறிவார்கள்? இது கடவுளுக்குத்தான் தெரியும். அவர் பெயரால் இப்போராட்டம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதை அவர்தான் முடிக்க வேண்டும்.

அரசாங்கம் இதுவரையில் மிகவும் பாராட்டத்தக்க முறையில் நடந்து கொண்டிருக்கிறது. மகாநாட்டை அவர்கள் தடுத்திருக்கலாம். அப்படி தடுக்கவில்லை. ஊழியர்கள் யார் என்பது அரசாங்கத்திற்குத் தெரியும். இவர்களை முன்னடியே அரசாங்கம் அப்புறப்படுத்தியிருக்கலாம். ஆனால், அப்படிச் செய்யவுமில்லை. மக்களின் நடவடிக்கைகள் எதிலும் அரசாங்கம் குறுக்கிடவில்லை. அவர்கள் எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டுவிட அரசாங்கம் அனுமதித்திருக்கிறது. அரசாங்கம் இவ்விதம் நடந்துகொள்ளுவதை ஆச்சரியத்தோடும் பாராட்டுதலுடனும் நான் கவனித்து வருகிறேன். இரு தரப்பினரும், இதை நான் எழுதும் சமயம் வரையில், பழங்காலத்துப் போர்வீரர்களுக்குரிய அரிய குணத்தை அனுசரித்துப் பாராட்டத்தக்க வகையிலேயே நடந்து வந்திருக்கிறார்கள். இந்தச் சமாதானப் போராட்டத்தில் இது வேறுவிதமாக இருப்பதற்கில்லை. இப்போராட்டம் இதே விதமாகத் தொடர்ந்து நடந்து வருமானால், ஒரே ஒரு வழியில்தான் அது முடியும். பர்டோலியின் 85,000 ஆண்கள், பெண்கள் கூறுவதைக் கேட்கும் காது யாருக்கு இருக்கிறதோ, அவர்களே இதில் வெற்றி பெறுவார்கள்.

பர்டோலி செய்திருக்கும் முடிவின் பேரில் காரியக் கமிட்டி ஆலோசித்துத் தனது தீர்ப்பைக் கூற வேண்டும். இதில் நியாயத்தைச் செய்ய வைஸ்ராய்க்கு இன்னும் சந்தர்ப்பமிருக்கிறது. மேலும் இன்னுமொரு சந்தர்ப்பமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. பர்டோலி மக்களைப் பொறுத்தவரையில், அவர்கள் அவசரப்பட்டு விட்டார்கள் என்றோ, ஆயத்தமில்லாமலோ, சிந்திக்காமலோ செய்துவிட்டனர் என்றோ, மரியாதைக் குறைவாக நடந்துவிட்டனர் என்றோ அவர்கள் மீது எந்தக் குற்றமுமே கூற முடியாது.

ஆகையால்,

' அருள் ஒளியே வழிகாட்டிடு, சூழ்ந்து வரும் இருளிடையே
எனக்கு வழிகாட்டி அழைத்துச் செல்.
இரவு இருள் சூழ்ந்துளது, வீட்டுக்கு இன்னும் வெகு தூரம் உளது,
எனக்கு நீ வழிகாட்டி அருள்."

— ' யங் இந்தியா ' — 2—2—1922.

# 58

# சௌரி சௌரா

[இந்திய தேசீய காங்கிரஸ் காரியக் கமிட்டி 1922 ஜனவரி 21–ஆம் தேதி சூரத்தில் கூடி, சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிக்குமாறு பர்டோலி தாலுக்கா மக்களுக்கு அனுமதியளித்தது. ஆனால், இந்தியாவின் மற்ற பாகங்களில், மக்கள் சட்ட மறுப்போ அல்லது தனி நபர் சட்ட மறுப்போ ஆரம்பிக்காமல் இருப்பதன் மூலம் பர்டோலி சத்தியாக்கிரக சம்பந்தமாக ஒத்துழைக்க வேண்டுமென்றும், மற்றவிடங்களில் சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிப்பதாயின், முதலில் காந்திஜியின் சம்மதம் பெற வேண்டும் என்றும் காரியக் கமிட்டி ஆலோசனை கூறியது. மேற்கண்ட தீர்மானத்தை ஜனுப் ஜின்னு, பண்டித மாளவியா முதலியோர் கடுமையாக எதிர்த்தார்கள். எனினும், "பர்டோலி தீர்மானம் முடிவானது, மாற்ற முடியாதது" என்று காந்திஜி கூறிவிட்டார். அவ்விதமே குறிப்பிட்டு மகாத்மா காந்தி பிப்ரவரி 1–ஆம் தேதி வைஸ்ராய் லார்டு ரீடிங்கிற்கு இறுதி எச்சரிக்கையும் அனுப்பிவிட்டார்.

பர்டோலி தாலுக்கா, பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த சூரத் ஜில்லாவில் இருக்கிறது. அந்தத் தாலுக்காவின் ஜனத்தொகை மொத்தம் 87,000 ஆகும்.

பிப்ரவரி மாதம் 6–ஆம் தேதி காந்திஜியின் கோரிக்கைகளை யெல்லாம் நிராகரித்து அரசாங்கம் ஓர் அறிக்கை வெளியிட்டது. அப்போது, அரசாங்கம் கைக்கொண்ட கொடிய அடக்குமுறைகள் நியாயமானவை என்று வைஸ்ராய் பகிரங்கமாகக் கூறிவிட்டார். பிப்ரவரி 7–ஆம் தேதி காந்திஜி, அரசாங்கத்தின் சகிக்க முடியாத அடக்குமுறை

களை ஆதாரங்களுடன் விவரித்து, அரசாங்கத்திற்குப் பதில் எழுதியிருந்தார்.

இயக்கத்தை தாமே நேரில் நடத்துவதற்காக பர்டோலிக்குச் சென்றிருந்த காந்திஜி, அங்கேயிருந்தே மேலே கூறியவிதம் வைஸ்ராய்க்கு முன்னெச்சரிக்கையும், அரசாங்கத்திற்குப் பதிலும் அனுப்பினர்.

பிப்ரவரி 8-ஆம் தேதி காலைப் பத்திரிகைகளில், 5-ஆம் தேதி சௌரி சௌராவில் நடந்த கலகம் பற்றிய செய்திகள் வெளியாகியிருந்தன. சௌரி சௌரா என்பது, ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த கோரக்பூர் ஜில்லாவில் உள்ள ஒரு கிராமமாகும். அந்தக் கிராமத்தில் ஒரு தேசீய ஊர்வலம் நடந்தபோது, ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்களில் சிலரை போலீஸ் கான்ஸ்டேபிள்கள் தூஷித்து அவமதித்தனர். அச்சம்பவம் முற்றியதால், அங்கே ஜனங்கள் கூடிவிட்டார்கள். ஜனங்களை நோக்கிப் போலீசார் சுட்டதால் நிலைமை மேலும் மோசமாகியது. சுட்டதால் துப்பாக்கி மருந்துகள் தீர்ந்துவிடவே, கான்ஸ்டேபிள்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு உள்ளே ஓடிவிட்டார்கள். ஆவேசம் கொண்ட ஜனங்கள் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தீ வைத்துவிட்டார்கள். அதன் விளைவாக இருபத்திரண்டு கான்ஸ்டேபிள்கள் தீக்கிரையாகி மாண்டனர். இச்செய்தி காந்திஜியைத் திடுக்கிட வைத்தது.

அதே விநாடியில் காந்திஜி, மக்கள் சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்திவிடத் தீர்மானித்தார். அப்போது சிக்கலான நிலைமை ஏற்பட்டிருந்தது. பர்டோலி தீர்மானம் இறுதியானதென்றும், அதை மாற்றமுடியாதென்றும் வைஸ்ராய்க்குக் காந்திஜி கடிதம் எழுதி ஒரு வாரம்கூட ஆகவில்லை. அப்படியிருக்க, இறுதியான, மாற்றமுடியாத திட்டத்தை ரத்து செய்வது நகைக்கத்தக்கதாக இருக்கும் அல்லவா? ஆனல், அகிம்சையும் சத்தியமுமே உருவான காந்திஜி, அதையெல்லாம் பற்றிக் கவலைப்படவில்லை. "பர்டோலி இயக்கத்தை ரத்து செய்யக்கூடாதென்று சைத்தான் கூறியது. ஆனல், சைத்தானின் குரல் என் மனத்தில் உள்ள இறுமாப்பின் குரல் என்பதை நான் உணர்ந்தேன்" என்று காந்திஜி கூறி, பர்டோலி சட்ட மறுப்பு இயக்கத்தை வாபஸ் செய்துகொள்ளத் தீர்மானித்தார்.

*பிப்ரவரி மாதம் 11–ஆம் தேதி காந்திஜி, தமது நம்பிக்கையின்மையையும் மனவேதனையையும் காரியக் கமிட்டி அங்கத்தினர்களிடம் எடுத்துக் கூறியபோது அவர்கள், பர்டோலி சட்ட மறுப்பு இயக்கத்தை வாபஸ் செய்து கொள்ள முதலில் இசையவில்லை. எனினும், இறுதியில் அவரது வேண்டுகோளுக்கிணங்க மக்கள் சட்ட மறுப்பு இயக்கத்தை ரத்து செய்ய காரியக் கமிட்டியினர் இசைந்தனர். அதன் ஸ்தானத்தில், நூற்றல், மது விலக்கு, கல்விச் சீர்திருத்தம் முதலிய ஆக்கவேலைத் திட்டத்தைக் கைக்கொள்ளுவதென்றும் தீர்மானித்தனர்.*

*பிப்ரவரி மாதம் 12–ஆம் தேதி காந்திஜி ஐந்து நாள் உண்ணுவிரதத்தை மேற்கொண்டார். தமது உதாரணத்தை தம் சகாக்கள் பின்பற்றுவதை, அதாவது தமது சகாக்கள் உண்ணுவிரதம் இருப்பதை அவர் விரும்பவில்லை. தம்மை மாத்திரம் போதிய அளவு கண்டித்துக்கொள்ளவே அவர் விரும்பினர்.*

*பிப்ரவரி 16–ஆம் தேதி, சௌரி சௌராவைப் பற்றி காந்திஜி 'எங் இந்தியா'வில் எழுதிய சரித்திரப் புகழ் பெற்ற கட்டுரை, ஒத்துழையாமைச் சரித்திரத்தின் தலைசிறந்த ஒரு சாஸனமாகும். எனவே, அதன் முழு விவரங்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன:]*

கடவுள் என்மீது மிகுந்த கருணை காட்டியுள்ளார். இந்தியாவில் இன்னும் சாத்தியமான, அகிம்சைச் சூழ்நிலை ஏற்படவில்லை; அந்தச் சூழ்நிலை இருந்தால் மாத்திரமே மக்கள் சட்ட மறுப்பு நியாயமாக இருக்கும்; அதைத்தான் சாத்விக சட்ட மறுப்பு என்று வருணிக்க முடியும்; 'சாத்விக' சட்ட மறுப்பு என்பதற்கு, சாந்தமான, சத்தியமான, அடக்கமான, மக்கள் நன்கு அறிந்துகொண்டுள்ள, பிடிவாதமான, ஆனால் அன்புடன் கூடிய சட்ட மறுப்பு என்பதே பொருளாகும்; அது குற்றம் உள்ளதாகவோ, துவேஷத்துடன் கூடியதாகவோ இருக்க முடியாது என்றெல்லாம் கடவுள் மூன்றாவது தடவையாக எனக்கு எச்சரிக்கை செய்துள்ளார்.

*1919*-இல் ரௌலட் சட்டக் கிளர்ச்சி ஆரம்பமானபோது கடவுள் என்னை எச்சரித்தார். *அகமதாபாத், விராம்காம், கேடா முதலியவை தவறு செய்தன; அமிர்தசரஸும் காரும் தவறு

* அகமதாபாத், விராம்காம் முதலிய இடங்களில் தொழிலாளர்கள் பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டதன் சம்பந்தமாக காந்திஜி ஹண்டர் கமிட்டியின் முன்னிலையில் சாட்சியம் கூறியபோது குறிப்பிட்டுள்ளார். அவ்விவரங்களை இந்தத் தொகுதி 62-ஆம் பக்கத்தில் 'ஹண்டர் கமிட்டியில் சாட்சியம்' என்ற தலைப்பில் ஆரம்பமாகியுள்ள அத்தியாயத்திலிருந்தும், அடுத்துள்ள 'சத்தியாக்கிரகம் ஆபத்தானதா?' என்ற அத்தியாயத்திலிருந்தும் தெரிந்துகொள்ளலாம்.

செய்தன. நான் பின்வாங்கி, என் தவறை இமாலயத் தவறு என்று கூறிக்கொண்டேன். அது எவ்வளவு மாபெரும் தப்புக் கணக்காக முடிந்தது! அதன் பலனாக நான் கடவுள் முன்னிலையிலும் மனிதன் முன்னிலையிலும் தலை வணங்கி, மக்கள் சட்ட மறுப்பை மாத்திரம் நிறுத்தவில்லை; அடக்கம், அகிம்சை இவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டுமென உத்தேசிக்கப்பட்ட என் சொந்த சட்ட மறுப்பையும்கூட நிறுத்திக் கொண்டேன்.

அடுத்த தடவையாக, பம்பாயில் நிகழ்ந்த சம்பவங்களின் மூலம் கடவுள் எனக்குப் பயங்கரமான எச்சரிக்கை செய்தார். நவம்பர் 17-ஆம் தேதி பம்பாயில்* ஆவேசம் கொண்ட ஜனங்களின் நடவடிக்கைகளை நான் நேரில் காணும்படி செய்தார். ஒத்துழையாமை இயக்கத்தின் நலனுக்காகவே மக்கள் அவ்விதம் செய்தனர். பர்டோலியில் உடனே மக்கள் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிப்பதாக இருந்தோம். ஆனால், மக்கள் சட்ட மறுப்பை நிறுத்திவிட நான் உத்தேசித்திருப்பதாகப் பிரகடனம் செய்தேன். அந்த மானக்கேடு 1919-இல் ஏற்பட்டதைக் காட்டிலும் பெரிதாகும். இருந்தாலும், அது எனக்கு நன்மையே செய்தது. அவ்விதம் நிறுத்தியதால், நாடும் லாபமடைந்தது என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயமாகும். அவ்வாறு நிறுத்திவைத்ததன் மூலம், இந்தியா சத்தியத்திற்காகவும் அகிம்சைக்காகவும் உறுதியுடன் நின்றது.

---

*காந்திஜி குறிப்பிட்டிருக்கும் பம்பாய் சம்பவத்தின் விவரம் பின்வருமாறு:

1921 நவம்பர் 17--ஆம் தேதி பிரிட்டிஷ் இளவரசர் பம்பாயில் வந்து இறங்கினர் அதையொட்டி அன்று இந்தியா முழுவதும் வெற்றிகரமாக நடந்த ஹர்த்தால் மக்களின் அதிருப்தியைச் சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டியது. பம்பாயிலும் இளவரசர் விஜயத்தை மக்கள் அடியோடு பகிஷ்காரம் செய்தனர். அந்தப் பகிஷ்காரத்தில் ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள், பார்ஸிகள் முதலியோர் மாத்திரம் கலந்து கொள்ளவில்லை. அன்று பம்பாயில் நடந்த மாபெரும் கூட்டத்தில் காந்திஜி பேசினர். அக்கூட்டத்தில் அந்நிய ஜவுளிகளையும் தகனம் செய்தனர். பர்டோலியில் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கப் போவதாகக் கூட்டத்தில் காந்திஜி அறிவித்தார். ஆனல், அன்று அத்துமீறி உற்சாகம் கொண்ட மக்கள் பம்பாய் நகரின் பலவிடங்களிலும் பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டனர் இளவரசரை வரவேற்ற வைபவத்தில் கலந்துகொண்ட பார்ஸிகள் தாக்கப்பட்டனர். சாராயக் கடைகள் நாசமாக்கப்பட்டன. டிராம் வண்டிகள் எரிக்கப்பட்டன. ஒரு போலீஸ் ஸ்டேஷன் தீக்கிரையாயிற்று. நான்கு போலீஸ்காரர் அடித்துக் கொல்லப்பட்டனர். இந்தப் பயங்கரமான காட்சிகளையெல்லாம் நேரில் கண்ட காந்திஜி, பர்டோலியில் ஆரம்பிக்கப்பட்டிருந்த சட்ட மறுப்பு இயக்கத்தை அன்றிரவே ரத்து செய்துவிட்டார். பார்ஸிகள் முதலியோர் மறுநாள் மக்கள் மீது வஞ்சம் தீர்க்க முற்பட்டார்கள். பம்பாயில் நெருக்கடி தீர்ந்து அமைதியான நிலைமை ஏற்படுவதற்காக நவம்பர் 18-ஆம் தேதி காந்திஜி உண்ணாவிரதம் ஆரம்பித்தார். காந்திஜியின் உண்ணாவிரதத்தால் பம்பாயில் அமைதி ஏற்படவே, 22-ஆம் தேதி அவரது உண்ணாவிரதம் முடிவடைந்தது.

எனினும், படுமோசமான மானக்கேடு வரப் போவதை அறியவில்லை. சென்னையும்* எச்சரிக்கை விடுத்தது. ஆனால், அந்த எச்சரிக்கையை நான் பொருட்படுத்தத் தவறிவிட்டேன். எனினும், சௌரி சௌராவின் மூலம் கடவுள் தெளிவாகப் பேசியுள்ளார். சௌரி சௌராவில் காட்டுமிராண்டித்தனமாகவும், சின்னபின்னமாகவும் வெட்டுண்டு மாண்ட கான்ஸ்டேபிள்கள், மக்களுக்கு மிகுந்த ஆத்திரமூட்டி விட்டார்கள் என்று நான் அறிகிறேன். போலீசாரால் மக்கள் தொந்தரவுக்கு உள்ளாகமாட்டார்கள் என்று இன்ஸ்பெக்டர் கூறினர். ஆனால், அந்த உறுதி மொழியைப் போலீசார் காப்பாற்றவில்லை. ஊர்வலம் கடந்து சென்றபின் அங்கே நடமாடிக்கொண்டிருந்தவர்களை கான்ஸ்டேபிள்கள் தூஷித்தார்கள். உடனே அவர்கள் உதவிக்கு வரும்படி பொதுமக்களை அழைத்தனர். கோபம் கொண்ட ஜனக்கூட்டம் வரவே, போலீசார் துப்பாக்கிகளால் சுட்டனர். அவர்களிடமிருந்த சிறிதளவு துப்பாக்கி மருந்து தீர்ந்துவிடவே, அவர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகப் போலீஸ் ஸ்டேஷனுக்கு உள்ளே ஓடிவிட்டார்கள். உடனே ஜனக் கூட்டத்தினர் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தீ வைத்ததாக என்னிடம் வந்து தகவல் அறிவித்தவர் கூறுகிறார். உள்ளே தங்களைத் தாங்களே சிறைப்படுத்திக்கொண்டிருந்த கான்ஸ்டேபிள்கள், தீயிலிருந்து தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்காக வெளியே வந்து தீர வேண்டியதாயிற்று. அவர்கள் வெளியே வந்ததும் ஜனக்கூட்டத்தினர் அவர்களைக் கண்டதுண்டங்களாக வெட்டி, அவற்றை சீறிக்கொண்டிருந்த ஜ்வாலைகளில் எறிந்து விட்டார்கள்.

அந்தக் காட்டுமிராண்டித்தனத்தில் ஒத்துழையாமைத் தொண்டர் எவரும் பங்கெடுத்துக்கொள்ளவில்லை என்றும், ஜனக்கூட்டத்தினர் ஆத்திரமூட்டப்பட்டது மாத்திரமல்ல, அந்த ஜில்லாவில் போலீசார் செய்துவந்த எதேச்சாதிகாரக் கொடுமைகளை ஜனங்கள் பொதுவாக அறிந்திருந்தனர் என்றும் கூறப்படுகிறது. எவ்வளவு ஆத்திரமூட்டப்பட்டிருந்தாலும், தற்காப்பற்ற, ஜனக்கூட்டத்தினரிடம் சரண் அடைவது போல் வெளியே வந்த கான்ஸ்டேபிள்களைக் கொலை செய்தது நியாயமாகாது. இந்தியா, அகிம்சைக் கொள்கையைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொள்ளுகிறது. சாத்விக முறைகளினாலேயே சுதந்திர சிம்மாசனத்தில் ஏறலாமென நம்புகிறது. இந்நிலையில், மோசமான முறையில் ஆத்திரமூட்டப்பட்டிருந்தால்கூட, அதற்குப் பதிலாக மக்கள் பலாத்காரத்தில் ஈடுபடுவது ஒரு கெட்ட சகுனமேயாகும்.

---

* இங்கே காந்திஜி குறிப்பிட்டுள்ள சம்பவம் 1922 பிப்ரவரி 14-ஆம் தேதி சென்னை கோகலே மண்டபத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் நிகழ்ந்தது. இது பற்றிய முழு விவரங்கள் 'மகாத்மா காந்தி நூல்கள்'-2-ஆம் தொகுப்பு, 900, 901, 902 பக்கங்களில் வெளியாகியுள்ளன.

பர்டோலியில் சாத்விக சட்ட மறுப்பு கடவுள் கிருபையால் வெற்றி பெறுவதாக வைத்துக்கொள்ளுவோம். பர்டோலியில் வெற்றிபெற்றவர்களிடம் அரசாங்கம் நிர்வாக அதிகாரத்தை ஒப்படைத்துவிடுவதாகவும் வைத்துக்கொள்ளுவோம். அந்த நிலையில் ஆத்திரமூட்டப்பட்ட முரடர்கள், ஜீவகாருண்யமற்ற கொடுமைகளை இழைப்பது எதிர்பார்க்கப்பட வேண்டிய விஷயமாகும். அப்போது அந்த முரடர்களை யார் அடக்குவது? சாத்விக சுயாட்சி பெறுவதாயின், முதலில் நாட்டில் உள்ள பலாத்கார கோஷ்டிகளை சாத்விகமாக அடக்கியாளத் தெரிந்திருக்க வேண்டும். சாத்விக ஒத்துழையாதார்கள், இந்தியாவில் உள்ள போக்கிரிகளை அடக்குவதில் வெற்றி பெற்றால்தான் தங்கள் லட்சியத்தை அடைவதில் வெற்றி பெறுவார்கள். அதாவது, வேறுவிதமாகச் சொல்லுவதாயின், ஒத்துழையாமை இயக்கம் நடந்து கொண்டிருக்கையில், போக்கிரிகள் தேச பக்தி அல்லது மதப் பற்று காரணமாக பலாத்கார நடவடிக்கைகளைத் தவிர்க்கக் கற்றுக்கொண்டால்தான் சாத்விக ஒத்துழையாதார்கள் வெற்றிபெற முடியும். எனவே, சௌரி சௌராவில் நிகழ்ந்த கோர சம்பவங்கள் என்னை விழித்தெழும்படி செய்திருக்கின்றன.

'ஆனால், வைஸ்ராய்க்கு நீங்கள் அனுப்பிய எச்சரிக்கை பற்றியும், அவரது பதிலுக்கு நீங்கள் அளித்த மறுமொழி பற்றியும் என்ன சொல்லுகிறீர்கள்?' என்றது சைத்தானின் குரல். இதைக் காட்டிலும் பெரிய மானக்கேடு வேறு என்ன இருக்கமுடியும்? 'அரசாங்கத்தைத் தடபுடலாக மிரட்டிய மறுநாளே, பர்டோலி மக்களுக்கு உறுதிமொழி கூறிய மறுநாளே நீங்கள் வாபஸ் செய்துகொள்ளுவது கோழைத்தனமாகும்' என்றது, சைத்தானின் குரல். இவ்விதமாக, சத்தியத்தையும், அதாவது மதத்தையும், ஏன் கடவுளையே மறுத்துவிடும்படி சைத்தான் கூவி அழைத்தது. எனவே, என் அருகில் இருந்த காரியக் கமிட்டியினரிடமும் மற்ற சகாக்களிடமும் எனது சந்தேகங்களையும் சங்கடங்களையும் எடுத்துக் கூறினேன். அவர்கள் முதலில் நான் கூறியதை அங்கீகரிக்கவில்லை. அவர்களில் சிலர் இப்போது கூட எனது அபிப்பிராயத்தை அங்கீகரிக்கவில்லை. எனினும், அன்பும் ஆதரவும் மன்னிக்கும் குணமும் உள்ள சகாக்களையும் நண்பர்களையும் அடையும் பாக்கியம் என்னைப் போல வேறு யாருக்கும் இல்லை. அவர்கள் எனது கஷ்டத்தை உணர்ந்து, எனது வாதத்தைப் பொறுமையுடன் கேட்டார்கள். அதன் பலன்தான் காரியக்கமிட்டியின் தீர்மானங்களாகும்.* அத்தீர்

* காந்திஜி குறிப்பிட்டுள்ள காரியக் கமிட்டியின் தீர்மானங்கள் 1922 மார்ச் 2-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் பிரசுரமாயின. அவையாவன :

"சௌரி சௌராவில் கான்ஸ்டேபிள்களைக் காட்டுமிராண்டித்தனமாகக் கொலை செய்த, போலீஸ் ஸ்டேஷனுக்குத் தீ வைத்த ஆவேச வெறிகொண்ட ஜனக்கூட்டத்

மானங்கள் இப்போது பொதுமக்களின் முன்னிலையில் இருக்கின்றன. சட்ட மறுப்புத் திட்டத்தைத் திடீரென்று அடியோடு மாற்றியது, ராஜீய ரீதியில் சரியில்லாததாகவும் விவேகமற்றதாகவும் இருக்கலாம். ஆனால், தார்மிக ரீதியில் அது முற்றிலும் நியாயமானதே என்பதில் ஐயமில்லை. எனக்கு நேர்ந்த அவமானத்திலும், நான் தவறை ஒத்துக்கொண்டதாலும் தேசம் லாபமே அடைந்திருக்கிறதென்று, நான் சந்தேகவாதிகளுக்கு உறுதி கூறத் துணிகிறேன்.

சத்தியம், சாத்விகம் இவை மாத்திரமே என்னிடம் உள்ள பெருமையென்று நான் கூறிக்கொள்ள விரும்பவில்லை. அத்தகைய சக்தி எதையும் நான் விரும்பவுமில்லை. அமானுஷ்ய சக்திகள் எனக்கு இருப்பதாக நான் கூறிக்கொள்ளவும் இல்லை. நம்மிடையே உள்ள மிகவும் பலவீனமானவர்களிடம் எத்தனை குற்றங் குறைகள் உள்ளனவோ, அவற்றிற்கு நானும் இலக்கானவன்தான். எனவே, அவர்களில் எவரையும்போல் நானும் தவறு செய்துவிடலாம். நான் செய்யும் தொண்டுகளில் பல குறைகள் உண்டு. குறைகள் இருப்பினும், அவை இதுவரையில் கடவுளின் கருணைக்குப் பாத்திரமாகி யிருக்கின்றன. தவறை ஒப்புக்கொள்ளுவது, ஒரு துடைப்பம் போன்றது. துடைப்பம் அழுக்குகளை அகற்றி மேல் தளத்தை முன்னரைக் காட்டிலும் அதிக சுத்தமாகச் செய்கிறதல்லவா? நான் என் தவறை ஒப்புக்கொண்டதால், எனக்கு அதிக பலம் ஏற்பட்டிருப்பது போல் தோன்றுகிறது. பின் வாங்கியதால் லட்சியம் வளர்ச்சி பெற்றே தீரவேண்டும். நேர் ப்பாதையிலிருந்து தவறியவன், பிடிவாதத்தினால் ஒருபோதும் லட்சியத்தை அடைந்ததில்லை.

---

தின் ஜீவகாருண்யமற்ற நடத்தையைக் குறித்து காரியக் கமிட்டி வருந்துவதுடன், கொலையுண்டவர்களின் குடும்பங்களுக்கு துக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறது. பொதுஜன சாத்விக சட்ட மறுப்பை ஆரம்பிக்கும் ஒவ்வொரு சமயத்திலும், எங்கேயாவது மக்கள் பலாத்கார நடவடிக்கையில் ஈடுபடுவது வழக்கமாகிவிட்டது. இது, இயற்கை அடிக்கடி விடுக்கும் எச்சரிக்கைகளேயாகும். மக்கள் சட்ட மறுப்பிற்கான சாத்விக சூழ்நிலை நாட்டில் ஏற்படவில்லை என்பதையே அச் சம்பவங்கள் காட்டுகின்றன. கடைசியாக கோரக்பூருக்கு அருகில் உள்ள சௌரி சௌராவில் நிகழ்ந்துள்ள பயங்கரமான சம்பவங்களை முன்னிட்டு, காரியக்கமிட்டி பர்டோலியிலும் மற்ற இடங்களிலும் உத்தேசிக்கப்பட்டுள்ள மக்கள் சட்ட மறுப்பை நிறுத்தி வைக்கத் தீர்மானிக்கிறது. எனவே, அரசாங்கத்துக்குக் கொடுக்கவேண்டிய நிலத் தீர்வை முதலிய எல்லா வரிகளையும் கொடுத்துவிடும்படி விவசாயிகளுக்கு உடனே யோசனை கூறும்படியும், சட்ட மறுப்பு சம்பந்தமான எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்திவிடும்படியும் இக்கமிட்டி ஸ்தல காங்கிரஸ் கமிட்டிகளையெல்லாம் கேட்டுக்கொள்ளுகிறது. பொதுமக்கள் அத்தகைய பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபடாமல் இருப்பதற்கான சூழ்நிலை ஏற்படும் வரையில், மக்கள் சாத்விக சட்ட மறுப்பு நிறுத்தப்பட்டிருக்கும். அமைதியான சூழ்நிலை ஏற்படும் வரையில் யாரும் கைதியாகி சிறைப்படும்படியான எத்தகைய நடவடிக்கைகளிலும் ஈடுபடாமல் இருக்கப் பார்த்துக்கொள்ள வேண்டுமென இக் கமிட்டி எல்லா காங்கிரஸ் ஸ்தாபனங்களையும் கேட்டுக்கொள்ளுகிறது."

சௌரி சௌரா, பர்டோலியைப் பாதிக்காது என்று வற்புறுத்திக் கூறப்படுகிறது. சௌரி சௌரா நிகழ்ச்சிகளால் தூண்டப்பட்டு, பலாத்காரத்தில் இறங்கிவிடும் அளவுக்கு பர்டோலி பலவீனமாக இருந்தால் மாத்திரமே ஆபத்து ஏற்படும் என்றும் வாதிக்கப்படுகிறது. அவ்விஷயத்தில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. இந்தியாவிலேயே பர்டோலி மக்கள்தான் மிகவும் அமைதியானவர்கள் என்பது எனது அபிப்பிராயம். ஆனால்,பர்டோலி இந்தியாவின் படத்தில் ஓர் அணுப் போன்றதே. மற்றப் பாகங்களிலிருந்து பரிபூரண ஒத்துழைப்பு இருந்தாலன்றி, பர்டோலியின் முயற்சி வெற்றிபெற முடியாது. இந்தியாவின் மற்றப் பாகங்கள் சாத்விகமாக இருந்தால் மாத்திரமே, பர்டோலியின் சட்ட மறுப்பு சாத்விகமானதாக இருக்கமுடியும். ஒரு குடம் பாலில் கடுகளவு விஷம் கலந்துவிட்டாலும், பால் முழுவதும் சாப்பிடுவதற்குத் தகுதியற்றதாகிவிடுகிறது. அது போலவே, சௌரி சௌராவிலிருந்து வந்துள்ள கொடிய விஷத்தின் சேர்க்கையால், பர்டோலியின் சாத்விகம் ஒப்புக் கொள்ள முடியாமற் போகலாம். சௌரி சௌரா, பர்டோலியைப் போல் இந்தியாவையும் பிரதிபலிக்கிறது.

பார்க்கப் போனால், சௌரி சௌரா மோசமாகியுள்ள ஓர் அடையாளமே. அடக்குமுறை கையாளப்பட்டு வரும் இடங்களில் எல்லாம் மானசிகமான அல்லது உடல் சம்பந்தமான பலாத்காரமே இல்லை என்று நான் ஒரு போதும் கற்பனை செய்து கொண்டதில்லை. மக்களின் அற்பமான பலாத்காரத்திற்குப் பொருத்தமில்லாத வகையில், அடக்கு முறைகள் மிக மிகக் கடுமையாக இருந்து வருகின்றன என்றே நான் நம்பி வந்துள்ளேன்; இன்னும் நம்புகிறேன். 'எங் இந்தியா'வில் வெளியாகி வரும் விவரங்களும் அதையே நிரூபிக்கின்றன. தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்ட இடங்களில் உறுதியுடன் கூட்டங்கள் கூடுவதை நான் பலாத்காரமென்று கூறமாட்டேன். சிற்சில இடங்களில் நடந்துவிடும் கற்களை எறிதல், மிரட்டுதல், வற்புறுத்துதல் போன்ற பலாத்கார நடவடிக்கைகளையே நான் குறிப்பிடுகிறேன். உண்மையில், சாத்விக சட்ட மறுப்பிலே பரபரப்பு ஏற்படக் கூடாது. மௌனமாகத் துன்பத்தை அனுபவிப்பதற்குத் தகுதியாக்கிக் கொள்ளுவதே சாத்விக சட்ட மறுப்பாகும். அதன் பலன், கண்ணுக்குத் தெரியாவிடினும், அமைதியாக இருப்பினும், அற்புதமானது. அவ்விஷயத்தில் ஓரளவு பரபரப்பு தவிர்க்க முடியாதது; புத்திபூர்வமல்லாத ஓரளவு பலாத்காரம் மன்னிப்பதற்கு உரியது. அதாவது, ஓரளவு குறைகள் உள்ள நிலையில் சாத்விக சட்ட மறுப்பு அசாத்தியமானதென்று நான் நினைக்கவில்லை. குற்றம் குறைகளற்ற நிலையில் சட்ட மறுப்பு சாத்விகமாக இருக்குமாயின், சட்ட மறுப்பு நடக்கிறதென்றே தெரியாது. ஆனால், பெரிதும் பிரதிகூலமான நிலையில் தற்போதைய இயக்க

மானது ஓர் அபாயகரமான பரிசோதனை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

உண்மையில் சௌரி சௌரா பயங்கரம், வரப்போகும் சம்பவங்களைச் சுட்டிக்காட்டும் ஆள்காட்டி விரலேயாகும். கடுமையான முன்னெச்சரிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டாலன்றி, இந்தியா எளிதில் போய்விடக் கூடிய பாதையையே அது காட்டுகிறது. நாம் அகிம்சையிலிருந்து இம்சையை உருவாக்காமல் இருக்க வேண்டுமாயின், நாம் அவசரமாகப் பின்வாங்கி, மீண்டும் சமாதான சூழ்நிலையை ஸ்தாபிக்க வேண்டும். நமது திட்டத்தை புதிய முறையில் வகுக்க வேண்டும்; மக்கள் சட்ட மறுப்பு ஆரம்பமானாலும், அரசாங்கம் ஆத்திரமூட்டும் காரியங்களைச் செய்தாலும் அமைதிக்குப் பங்கம் உண்டாகாதென்ற நிச்சயம் நமக்கு ஏற்படும் வரையில், மக்கள் சட்ட மறுப்பை ஆரம்பிக்க வேண்டுமென நாம் நினைப்பதற்கில்லை. அதிகாரம் அளிக்கப்படாத பகுதிகள் மக்கள் சட்ட மறுப்பை ஆரம்பித்துவிடா என்பதையும் நாம் நிச்சயம் செய்துகொள்ள வேண்டும்.

தற்போதுள்ள நிலையில், காங்கிரஸ் ஸ்தாபனம் இன்னும் குறைகள் உள்ளதாகவே இருந்து வருகிறது. அதன் கட்டளைகள் இன்னும் வேண்டா வெறுப்புடனேயே நிறைவேற்றப்பட்டு வருகின்றன. கிராமங்கள் ஒவ்வொன்றிலும் நாம் இன்னும் காங்கிரஸ் கமிட்டிகளை ஸ்தாபிக்கவில்லை. காங்கிரஸ் கமிட்டிகள் இருக்கும் இடங்களிலும், அவை நமது கட்டளைகளை முற்றிலும் பொறுப்புடன் நிறைவேற்றுவதில்லை. காங்கிரஸ் அங்கத்தினர் ஜாபிதாவிலும் ஒரு கோடி பேருக்கு மேல் இல்லை.

இப்போது பிப்ரவரி 15-ஆம் தேதிக்கு மேல் ஆகிறது. இன்னும் பலர் இவ்வருடத்திய சந்தாவான நான்கு அணாவைச் செலுத்தவில்லை. தொண்டர்களும் அக்கறையின்றி சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். அவர்கள் தாங்கள் எடுத்துக்கொண்டுள்ள பிரதிக்ஞையின் விதிகளையெல்லாம் அனுசரிப்பதில்லை. கையால் நூற்று, கையால் நெசவு செய்த கதரைக்கூட அவர்கள் உடுத்துவதில்லை.

ஹிந்து தொண்டர்கள் யாவரும் இன்னும் தங்களிடமுள்ள தீண்டாமைப் பாவத்தைப் போக்கிக்கொள்ளவில்லை. எல்லோரும் பலாத்காரக் களங்கத்திலிருந்து விடுதலை பெற்றுள்ளனர் என்று சொல்லுவதற்கில்லை. அவர்கள் சிறைப்படுவதால் நாம் சுயராஜ்யம் பெற்றுவிடப் போவதில்லை. நம்மில் சிலர், அறியாமலேயே தவறு செய்கிறோம். நம்மில் மற்றும் சிலர் வேண்டுமென்றே பாவம் செய்கிறார்கள். தாங்கள் சாத்விகமானவர்கள் அல்ல, எதிர்காலத்தில் சாத்விகமாக இருக்க வேண்டுமென்ற உத்தேசமும் தங்களுக்கு இல்லை என்பதை நன்கு அறிந்தே

அவர்கள் தொண்டர் படையில் சேருகிருர்கள். எனவே, அரசாங்கத்தை அசத்தியமானதாக நாம் நினைப்பது போல், நாமும் அசத்தியமானவர்களாக இருக்கிறேம். சத்தியம் என்றும், அகிம்சை என்றும் வாயளவில் ஜபம் செய்வதால், சுதந்திர சாம்ராஜ்யத்திற்குள் பிரவேசிக்க நாம் துணிய முடியாது.

மேற்கொண்டு முன்னேற்றம் அடைவதற்கும், மேற்கொண்டு பிற்போக்கான நிலை ஏற்படுவதைத் தடுப்பதற்கும் மக்கள், அதாவது பொதுஜன சாத்விக சட்ட மறுப்பை நிறுத்த வேண்டியதும், பரபரப்பைத் தணித்துக்கொள்ள வேண்டியதும் அத்தியாவசியமாகும். எனவே, சட்ட மறுப்பு நிறுத்தப்பட்டிருப்பதைக் குறித்து காங்கிரசில் உள்ள ஒவ்வோர் ஆடவரும் பெண்டிரும் ஏமாற்றம் அடையமாட்டார்கள். அது மாத்திரமல்ல, அவர்கள், தாங்கள் உண்மையற்ற, போலியான ஒரு நிலையிலிருந்தும், தேச சம்பந்தமான பாவத்திலிருந்தும் விடுதலை பெற்றதாகவே எண்ணுவார்கள்.

நமக்கு ஏற்பட்டுள்ள அவமானத்தையோ அல்லது 'தோல்வி'யையோ கண்டு எதிராளிகள் கும்மாளம் அடிக்கட்டும். நமது பிரதிக்ஞையை மீறும் குற்றத்தையும், கடவுளுக்கு எதிராகப் பாவம் செய்யும் குற்றத்தையும்விட, நாம் கோழைகள் என்றும் பலவீனர்கள் என்றும் குற்றம் சாட்டப்படுவது மேலாகும். உண்மையாகவே நாம் பொய்யர்களாவதைக் காட்டிலும், உலகத்தின் முன்னிலையில் நாம் பொய்யர்களாகத் தோன்றுவது கோடி மடங்கு சிறந்ததாகும்.

சௌரி சௌராவில் மக்கள் காட்டுமிராண்டித்தனமான பலாத்காரத்தில் இறங்கியதற்கு, என்னையறியாமலேயே நான் ஒரு கருவியாக இருந்திக்கிறேன். எனவே, என் சம்பந்தப்பட்ட வரையில், மக்களின் சாத்விக சட்ட மறுப்பையும், பரபரப்பு தணியாமல் இருப்பதற்கான மற்ற சில்லறை நடவடிக்கைகளையும் நிறுத்தியது போதுமான ஒரு தவம் அல்ல.

எனவே, நான் சொந்த முறையில் என்னைப் பரிசுத்தம் செய்துகொள்ள வேண்டும். என்னைச் சுற்றியுள்ள தார்மிக சூழ்நிலையில் அணுவளவு மாறுபாட்டையும் பதிவு செய்யக்கூடிய அதிக தகுதியுள்ள கருவியாக நான் ஆகவேண்டும். எனது பிரார்த்தனைகளில் இப்போது இருப்பதைக் காட்டிலும் அதிக ஆழ்ந்த சத்தியமும் பணிவும் இருக்க வேண்டும். ஓர் உண்ணாவிரதத்தைப் போல் எனக்கு உதவியளிக்கக் கூடியதும், என்னைப் பரிசுத்தம் செய்யக்கூடியதும் வேறு எதுவுமே இல்லை. உண்ணாவிரதத்துடன், அவசியமான மன ஒத்துழைப்பும் இருக்க வேண்டும்.

எவ்விஷயமும் மன நிலையையே பொறுத்தது என்பதை நான் அறிவேன். ஒரு பிரார்த்தனை, ஒரு கிளிப்பிள்ளையைப் போலவும் யந்திரத்தைப் போலவும் திரும்பத் திரும்பப் பாடும் வெறும் பல்லவியாக இருக்கலாம். அது போலவே, ஓர் உண்ணு விரதம் யாதொரு உணர்ச்சியுமின்றி வெறும் உடலைச் சித்திர வதைக்கு உள்ளாக்குவதாக இருக்கலாம். அத்தகைய யந்திரம் போன்ற உபாயங்கள், நாம் உத்தேசிக்கும் நோக்கத்திற்குச் சிறிதும் பயனற்றது. மேலும், யந்திரம் போல் பாடுவதால் குரல் சீர்படுவதைப் போல், யந்திரம் போல் உண்ணுவிரதம் இருப்பதால் உடல் பரிசுத்தமாகலாம். ஆனால், அவ்விரு நடவடிக்கைகளும் உள்ளேயுள்ள ஆன்மாவைத் தொடா.

ஆனால், உள்ளக் கிடக்கையைப் பூரணமாக வெளியிடவும், உடலின் மீது ஆன்மாவின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தவும் உண்ணுவிரதத்தைப் போன்ற சக்தி பொருந்திய அம்சம் வேறு எதுவுமே இல்லை. எனவே, ஆழ்ந்த ஆலோசனைக்குப் பிறகு நானே என் மீது ஐந்து நாள் இடைவிடாத உண்ணுவிரதத்தைச் சுமத்திக்கொள்ளுகிறேன். உண்ணுவிரத காலத்தில் தண்ணீர் மாத்திரமே அருந்துவேன். உண்ணுவிரதம் வரும் ஞாயிற்றுக்கிழமை மாலை ஆரம்பமாகி, வெள்ளிக்கிழமை மாலை முடிவடைகிறது. குறைந்த பட்சம் நான் செய்ய வேண்டியது இதுதான்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் கூடப் போவதை நான் சிந்தியாமல் இல்லை. எனது ஐந்து நாள் உண்ணுவிரதம்கூட, பல நண்பர்களுக்கும் எவ்வளவு கவலையையும் வேதனையையும் உண்டுபண்ணும் என்பதையும் நான் சிந்தித்துள்ளேன். எனினும், நான் இந்தத் தவத்தை ஒத்தி வைக்க முடியாது, குறைக்கவும் முடியாது.

என் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டாமென்று நான் சக ஊழியர்களை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்னைப் போன்ற நோக்கம் அவர்களுக்கு இருக்கமுடியாது. அவர்கள் சட்ட மறுப்பின் கர்த்தாக்கள் அல்ல. முற்றிலும் அபாயகரமான ஒரு ரணத்தைச் சமாளிக்கும் திறமையற்ற ஒரு சர்ஜனைப் போன்ற துரதிருஷ்டமான நிலையில் நான் இருக்கிறேன். நான், ஒன்று பதவியை விட்டுவிட வேண்டும்; இல்லாவிடில் அதிக திறமையைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டும். நான் மேற்கொண்டுள்ள தவம் எனக்கு அவசியமானது மாத்திரமல்ல, கடமையுமாகும். காரியக் கமிட்டி விதித்துள்ள போற்றத்தக்க தன்னடக்க முறைகள், நிச்சயமாக மற்ற ஒவ்வொருவருக்கும் போதிய தவமாகும். அது ஒரு சிறிய தவமல்ல. மனப்பூர்வமாக அதை நிறைவேற்றுவோமாயின், அது எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் சாத்விகப் பிரதிக்ஞையை நிறைவேற்றுவதைக் காட்டிலும் பன்முறை அதிக பலனைத் தரத்தக்கது.

இந்த வாரத்தில் எல்லா சக ஊழியர்களும் மௌனமாகவும், சோம்பேறித்தனமான விவாதமின்றியும் காரியக் கமிட்டியின் ஆக்கத் திட்டத்தை நிறைவேற்றுவதில் ஈடுபட வேண்டும். சுயராஜ்யத்தை அடைவதற்காக காங்கிரஸின் சத்திய,சாத்விகக் கொள்கையை அறிந்து கொண்டார்களா என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்ட பின், அத்தகையோரைக் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேர்க்க வேண்டும்; தினந்தோறும் குறிப்பிட்ட நேரம் பக்தியுடனும் சிரத்தையுடனும் நூல் நூற்க வேண்டும்; ஒவ்வொரு வீட்டிலும் சுபிட்சத்திற்கும் விடுதலைக்கும் அறிகுறியான ராட்டினத்தை உபயோகத்திற்குக் கொண்டுவர வேண்டும். தீண்டாதாரின் வீடுகளுக்குச் சென்று அவர்களுடைய தேவைகளை அறிந்து கொள்ள வேண்டும்; தீண்டாதார் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ளும்படி தேசீயக் கல்விச்சாலைகளைத் தூண்ட வேண்டும்; வெவ்வேறு இயல்புள்ள ஒவ்வோர் ஆடவருக்கும் பெண்ணுக்கும் தகுதியாக இருக்கக் கூடிய சமூகத் தொண்டுகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்; குடி சாபத்தினல் பாழாகி வரும் குடும்பங்கள் இருக்குமிடம் சென்று மது விலக்குப் பிரசாரம் செய்ய வேண்டும்; உண்மையான பஞ்சாயத்துக்களை ஸ்தாபிக்க வேண்டும்; ஒழுங்கான அடிப்படையில் தேசீயக் கல்விச்சாலைகளை அமைக்க வேண்டும். மேலே கூறப்பட்ட ஆக்க வேலைகளை எல்லோரும் கைக்கொண்டால், அதுதான் எனக்கு உணவைக் காட்டிலும் மேலானதாக இருக்கும். உண்ணாவிரதத்தைவிட, இந்த ஆக்க வேலைகளில் ஈடுபடுவதுதான் தொண்டர்களுக்குச் சிறந்தது. ஆகையால், போலி அனுதாபம் காரணமாகவோ அல்லது உண்ணாவிரதத்தின் தார்மிகப் பெருமையை அறிந்து கொள்ளாததன் காரணமாகவோ, என்னுடன் ஒருவரும் உண்ணாவிரதம் இருக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

எல்லா உண்ணாவிரதமும், எல்லாத் தவமும் சாத்தியமான வரையில் ரகசியமாகவே இருக்க வேண்டும். ஆனல், எனது உண்ணாவிரதம் ஒரு தவம், ஒரு தண்டனை ஆகிய இரண்டுமாகும். தண்டனை பகிரங்கமானதாகவே இருக்க வேண்டும். எனக்கு அது ஒரு தவமாகும். நான் யாருக்காகத் தொண்டு செய்ய முயற்சிக்கிறேனே, யாருக்காக நான் உயிர் விடவும் விரும்புவேனே, அவர்களுக்கு எனது உண்ணாவிரதம் ஒரு தண்டனையாகும். காங்கிரஸ் விதிகளுக்கு விரோதமாக அவர்கள் தாங்கள் அறியாமலேயே பாவம் செய்திருக்கிறார்கள். அவர்கள் நேரடியாக அதில் சம்பந்தப்படாவிடினும், பாவ நடவடிக்கைகளுக்கு அவர்கள் அனுதாபம் காட்டினர்கள். அவர்கள், அதாவது அவர்களுடைய தேச மக்களும் சக மனிதர்களும் என் பெயரைக் கூறிக் கொண்டு கான்ஸ்டேபிள்களை வெட்டித் துண்டாக்கினர்கள். துன்பத்திற்கு உள்ளாவதன் மூலம் தண்டிப்பதே அன்பின் வழியாகும். அவர்கள் கைது செய்யப்பட வேண்டுமென்றுகூட

நான் விரும்ப முடியாது. ஆனால், அவர்கள் காங்கிரஸ் கொள் கையை மீறியதற்காக நான் துன்பப்படுவதை அவர்கள் அறியும்படி செய்வேன். தாங்கள் குற்றவாளிகள் என்பதை உணர்ந்து யார் வருந்தி பச்சாத்தாபப்படுகிறார்களோ அவர்கள், தண்டனை பெறுவதற்காகத் தங்களைத் தாங்களே அரசாங்கத்தி னிடம் ஒப்புவித்து, எல்லாவற்றையும் ஒளிவு மறைவின்றி ஒப்புக் கொள்ள வேண்டுமென யோசனை கூறுகிறேன். கோரக்பூரில் உள்ள தொண்டர்கள், கொடுமை செய்தவர்களைக் கண்டுபிடிக்க எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ளத் தவறமாட்டார்கள் என்றும், அத்தகையோர் தாங்களாகப் போலீசாரிடம் செல்லும் படி வற்புறுத்துவார்கள் என்றும் நம்புகிறேன். கொலை செய்த வர்கள் எனது யோசனையை ஒப்புக் கொண்டாலும், ஒப்புக் கொள்ளா விட்டாலும், சுயராஜ்ய நடவடிக்கைகளுக்குத் தாங்கள் மோசமான விதத்தில் முட்டுக்கட்டை போட்டிருப்பதை அவர் கள் அறிய வேண்டுமென விரும்புகிறேன். பர்டோலியில் சட்ட மறுப்பு இயக்கத்தை ஒத்திப்போடும்படி நேர்ந்ததற்கு, அவர் கள் தான் காரணம். அதன் விளைவாக, அவர்கள் தாங்கள் எந்த லட்சியத்துக்கு உதவி புரிய வேண்டுமென்று உத்தேசித் தார்களோ, அந்த லட்சியத்துக்கு அவர்களே பாதகம் விளைவித் திருக்கிறார்கள்.

இந்த இயக்கம், பலாத்காரத்தை மறைக்கும் போர்வையோ அல்லது பலாத்காரத்திற்குப் பூர்வாங்க ஏற்பாடோ அல்ல என் பதையும் அவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன். அது எப்படியாயினும், இந்த இயக்கம் பலாத் காரமாகி விடாமலோ அல்லது பலாத்காரத்திற்கு முன்னோடி யாகி விடாமலோ தடுக்க, நான் எவ்வித அவமானத்தையும், எவ்விதச் சித்திரவதையையும், முற்றிலும் பகிஷ்கரிக்கப்படுவ தையும், மரணத்தையும்கூட அனுபவிக்கத் தயாராக இருக் கிறேன். எனது தவத்தை நான் பகிரங்கப்படுத்தியிருப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. கைதிகளுடைய கஷ்ட நஷ்டங் களில் பங்கு எடுத்துக்கொள்ளும் சந்தர்ப்பத்தை எனக்கு நானே மறுத்துக்கொண்டுள்ளேன் அல்லவா?

உடனடியான பிரச்னை இப்போது மாறி விட்டது. அறிக்கை களை வாபஸ் செய்துகொள்ளும்படியோ அல்லது கைதிகளை விடுதலை செய்யும்படியோ இப்போது நாம் அரசாங்கத்தை வற்புறுத்த முடியாது. சௌரி சௌரா குற்றத்திற்காக அவர் களும் நாமும் கஷ்டப்பட்டுத் தீர வேண்டும். நாம் விரும்பினாலும் விரும்பாவிடினும், அச்சம்பவம் வாழ்க்கையின் ஒன்றிப்பை நிரூ பிக்கிறது. நிர்வாக அதிகாரிகள் உள்படச் சகலரும் கஷ்டத் திற்கு உள்ளாகித் தீர வேண்டும். சௌரிசௌராவின் விளைவாக அரசாங்கம் விறைத்துக் கொள்ளும்; போலீசாரிடையே மேற் கொண்டு ஊழல் அதிகமாகும். அதைத் தொடர்ந்து அரசாங்கத்

தின் வஞ்ச நடவடிக்கைகள் ஜனங்களின் ஒழுக்கத்தை சீர் குலைத்து விடும்.

சட்ட மறுப்பு நிறுத்தமும் தவமும், சௌரி சௌரா கோரத்திற்கு முன் நாம் இருந்த நிலைக்கு நம்மைக் கொண்டு போய் விடும். கண்டிப்பான ஒழுங்கு, தூய்மை இவற்றின் மூலம்தான் அறிக்கைகளை வாபஸ் செய்துகொள்ளும்படியும், கைதிகளை விடுதலை செய்யும்படியும் அரசாங்கத்தை வற்புறுத்துவதற்குத் தேவையான தார்மிக நம்பிக்கையை நாம் மீண்டும் பெற முடியும்.

சௌரி சௌரா பயங்கரத்தின் முழுப் படிப்பினையையும் நாம் அறிந்து கொள்ளுவோமாயின், அந்தச் சாபக் கேட்டை நாம் கடவுளின் அருளாக மாற்றிக் கொள்ள முடியும். உள்ளத்திலும் செயலிலும் உண்மையையும் அகிம்சையையும் கடைப்பிடிப்பதன் மூலம், சுதேசியை அதாவது கதர் திட்டத்தைப் பூரணமாக நிறைவேற்றுவதன் மூலம், ஒரே ஒரு நபர்கூடச் சட்ட மறுப்பு செய்யாமலேயே, நாம் பூரண சுயராஜ்யத்தை ஸ்தாபிக்க முடியும்; கிலாபத், பஞ்சாப் தவறுகளுக்கும் பரிகாரம் பெற முடியும்.

'எங் இந்தியா' - 16—2—1922

# 59

# நேருஜிக்கு மகாத்மா கடிதம்

*[1922-ஆம் ஆண்டில் பர்டோலி சட்ட மறுப்பு இயக்கத்தை மகாத்மா காந்தி திடீரென்று நிறுத்தியதால், இந்திய மக்கள் மாத்திரமல்ல, தலைவர்களும் அதிர்ச்சியடைந்தனர். அப்போது பெரும்பாலான காங்கிரஸ் தலைவர்களும் சிறைகளில் இருந்தார்கள். காந்திஜியின் தீர்மானத்தைக் கேட்டதும் அவர்களுக்குக் கோபம் பொங்கியது. எல்லாத் தலைவர்களும் காந்திஜியைத் தாக்கலாயினர். அவரது தீர்மானத்தைக் கண்டித்து, பண்டித மோதிலால் நேரு, லாலா லஜபதிராய் முதலியோர் சிறைகளிலிருந்து காந்திஜிக்குக் கடிதங்கள் எழுதினர். "கன்னியாகுமரியைச் சேர்ந்த ஒரு சிறு கிராமம் அகிம்சையை அனுஷ்டிக்கவில்லை என்பதற்காக, இமய மலையின் அடிவாரத்தில் உள்ள ஒரு நகரம் எதற்காகத் தண்டனைக்கு உள்ளாக வேண்டும்? கோரக்பூரையும் சௌரி சௌராவையும் சட்ட*

மறுப்பு இயக்க ஜாப்தாவிலிருந்து அகற்றிவிடுங்கள். மற்ற விடங்களில் தனி நபர் சட்ட மறுப்பையும் மக்கள் சட்ட மறுப்பையும் நடத்துங்களேன்" என்று பண்டித மோதிலால் நேரு காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அப்போது காந்திஜி தமது நிலைமையை விளக்கி, பிப்ரவரி மாதம் 19-ஆம் தேதி ஜவாஹர்லால் நேருவிற்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்கடிதத்தின் முழு விவரமும் இந்த அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது:]

"காரியக் கமிட்டியின் தீர்மானங்களைக் குறித்து, நீங்கள் எல்லோரும் திடுக்கிட்டு மனம் உடைந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிகிறேன். நான் உங்களுக்காக அனுதாபப் படுகிறேன். உங்களுடைய தந்தைக்காக என் இருதயம் உருகுகிறது. அவர் எவ்வளவு மனவேதனையை அனுபவித்திருக்க வேண்டும் என்பதை நான் சித்திரித்துக் கொள்ள முடியும். இந்தக் கடிதம் அவசியமானதென்றே கருதுகிறேன். ஏனெனில், முதலில் ஏற்பட்ட அதிர்ச்சியைப் பின் தொடர்ந்து நீங்கள் எல்லோரும் உண்மை நிலையை அறிந்து கொண்டிருக்க வேண்டும் என்பதை நான் அறிவேன். இளைஞனை தேவதாஸின் மதியீனமான காரியங்களைக் குறித்து நாம் மனத்தை அலட்டிக்கொள்ளக் கூடாது. பாவம், திடீரென்று நிகழ்ந்த சம்பவங்கள் அவனை நிலை குலையும்படி செய்திருக்கின்றன. எனினும், ஒத்துழையாமை இயக்கத்தில் அனுதாபம் கொண்ட ஜனங்கள் கோபாவேசம் கொண்டு, கான்ஸ்டேபிள்களைக் காட்டுமிராண்டித்தனமாகக் கொலை செய்துவிட்டார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. அந்த ஜனக்கூட்டம் ராஜீய நோக்கம் உள்ள கூட்டம் என்பதையும் யாரும் மறுக்க முடியாது. எனவே, அத்தகைய தெளிவான எச்சரிக்கையைப் பொருட்படுத்தாமல் விட்டுவிட்டால், அது கடுமையான குற்றமாகும்.

"பல சம்பவங்களையும் கஷ்டப்பட்டுச் சகித்து வந்த எனக்கு, இனி சகிக்க முடியாது என்ற நிலையை ஏற்படுத்தியது சௌரி சௌரா நிகழ்ச்சிதான் என்பதை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டும். நான் வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதிய போதே என் மனத்தில் அவநம்பிக்கை இருக்கத்தான் செய்தது என்பதை, அக்கடிதத்தைப் படித்தவர்கள் தெளிவாக அறிந்து கொண்டிருக்க வேண்டும். சென்னை நிகழ்ச்சிகள் எனக்கு மிகவும் கலக்கத்தைக் கொடுத்தன. ஆனால், அந்த எச்சரிக்கைக் குரலை நான் அமுக்கிவிட்டேன். கோரக்பூர் சம்பவத்திற்கு முந்தியே, கல்கத்தா, அலகாபாத், பஞ்சாப் முதலியவிடங்களைச் சேர்ந்த ஹிந்துக்களிடமிருந்தும் முஸ்லிம்களிடமிருந்தும் எனக்குக் கடிதங்கள் வந்தன. தவறு முற்றிலும் அரசாங்கத்தினுடையது அல்லவென்றும், நமது மக்கள் இறுமாப்புடன் எதிர்க்கவும் மிரட்டவும் தொடங்கியிருக்கிறார்கள் என்றும், அவர்களைச் சமாளிப்பது

கஷ்டமாக இருக்கிறது என்றும், அவர்களுடைய நடத்தையும் சாத்விகமாக இல்லை என்றும் எனக்கு வந்த கடிதங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. பிரோஸ்பூர் ஜிர்க்கா சம்பவம் அரசாங்கத்தின் கௌரவத்திற்கு உகந்தது அல்லவென்றாலும், நாம் முற்றிலும் குற்றமற்றவர்கள் என்று கூறிவிட முடியாது. பாரில்லியைக் குறித்து ஹக்கிம்ஜி புகார் கூறியுள்ளார். ஜஜ்ஜாரைப் பற்றியும் மோசமான புகார்கள் கிடைத்துள்ளன. ஷாஜஹான்பூரிலும் நகர மண்டபத்தை ஆக்கிரமித்துக்கொள்ள பலாத்கார முயற்சி நடந்திருக்கிறது. தொண்டர் படைச் சிறுவர்கள் அடங்காப் பிடாரிகளாக இருக்கிறார்களென்றும், அவர்கள் ஓர் உயர்தரக் கல்விச்சாலையில் மறியல் செய்துகொண்டு, இளைஞர்கள் கல்விச் சாலைக்குச் செல்லுவதைத் தடுக்கிறார்கள் என்றும் கனூஜில் உள்ள காங்கிரஸ் காரியதரிசியே தந்தி கொடுத்துள்ளார்.

"கோரக்பூரில் சுமார் 36,000 தொண்டர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அவர்களில் நூறு பேர்கூட காங்கிரஸ் பிரதிக்ஞை விதிகளுக்குக் கட்டுப்படவில்லை. கல்கத்தாவில் முற்றிலும் சீர்குலைவு ஏற்பட்டிருக்கிறதென்றும், தொண்டர்கள் அகிம்சைப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளாததுடன், அந்நியத் துணிகூட உடுத்திக்கொண்டு வருகிறார்கள் என்றும் ஜம்னுலால்ஜி கூறியுள்ளார். என் வசமுள்ள இந்தச் செய்திகளைத் தவிர, தென்னிந்தியாவிலிருந்து இன்னும் அதிகச் செய்திகள் வந்தன. கடைசியில் சௌரி சௌரா செய்தி, துப்பாக்கி வெடி மருந்துக்குத் தீ வைக்கும் ஒரு சக்தி பொருந்திய தீக்குச்சியாக அமைந்தது. அவ்வளவுதான், ஜ்வாலையும் மூண்டது.

"எனவே, இந்த இயக்கம் நிறுத்தப்படாவிடில், நாம் அகிம்சைப் போராட்டத்தை நடத்துபவர்களாகமாட்டோம்; ஒரு பலாத்காரப் போராட்டத்தையே நடத்துபவர்கள் ஆவோம். நாடெங்கும் அகிம்சை, ரோஜா அத்தரின் நறுமணத்தைப்போல் வியாபித்து வருகிறதென்பது உண்மையே. எனினும், அகிம்சையின் துர்நாற்றமும் இன்னும் சக்தி வாய்ந்ததாகவே இருக்கிறது. அதை அலட்சியம் செய்வதோ அல்லது குறைவாக மதிப்பதோ புத்திசாலித்தனமாகாது. இவ்விதம் பின்வாங்கியதால், நமது லட்சியம் வளர்ச்சியே அடையும். நமது இயக்கம் நம்மையறியாமலேயே நேர்பாதையிலிருந்து விலகியிருக்கிறது. இப்போது நாம் திரும்பவும் சரியான நிலைக்கு வந்துள்ளோம். இனி நாம் நேராக மேற்கொண்டு செல்லக்கூடும். சம்பவங்களின் போக்கை, அவற்றின் அளவுக்குத் தகுந்தவாறு தீர்மானிக்கும் அனுகூலமான நிலையில் நான் இருக்கிறேன். ஆனால், நீங்கள் அத்தகைய நிலையில் இல்லை.

"தென்னாப்பிரிக்காவில் நான் பெற்ற சொந்த அனுபவத்தை உங்களுக்குக் கூறட்டுமா? தென்னாப்பிரிக்கா சிறைகளில்

நாங்கள் இருந்தபோது, எங்களுக்குப் பல்வேறு செய்திகளும் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தோம். அதுதான் சிறையில் எனது முதல் அனுபவமாகும். எனவே, இரண்டு அல்லது மூன்று நாட்கள் வரையில் 'துக்கடா' செய்திகளைக் கேட்க நான் மகிழ்ச்சியடைந்தேன். ஆனால், அவ்விதம் சட்ட விரோதமாகப் பெறும் திருப்தியில் அக்கறை கொள்ளுவது முற்றிலும் உருப்படாத காரியம் என்பதை நான் உடனே உணர்ந்துகொண்டு விட்டேன். உள்ளேயிருந்துகொண்டு நான் எதுவும் செய்யமுடியவில்லை. பலன் தரத்தக்க விதத்தில் நான் வெளியே செய்தியும் அனுப்ப முடியவில்லை. வீணாக நான் என் ஆன்மாவை அலட்டிக் கொண்டேன். சிறையில் இருந்துகொண்டு இயக்கத்தை நான் நடத்துவது அசாத்தியம் என்பதை உணர்ந்தேன். வெளியில் உள்ளவர்களைச் சந்தித்து அவர்களுடன் மனம்விட்டுப் பேசுவது சாத்தியமாகும் வரையில் நான் காத்திருந்தேன். நான் பேச்சளவில்தான் இயக்கத்தில் அக்கறை எடுத்துக்கொண்டேன். ஏனெனில், சிறையில் இருந்து கொண்டு எதையும் தீர்மானிக்க எனக்கு அதிகாரமோ, உரிமையோ இல்லையென்று தோன்றியது. இவ்விதம் எண்ணியது முற்றிலும் சரி என்பதை நான் பின்னர் தெரிந்துகொண்டேன். ஒவ்வொரு தடவையும் நான் சிறையிலிருந்து விடுதலை பெறும் வரையில் கொண்டிருந்த எண்ணங்களை, சிறையிலிருந்து வெளியே வந்த உடனேயும், நேரடியாகத் தகவல்களைத் தெரிந்து கொண்ட உடனேயும் மாற்றிக்கொள்ளும்படி நேர்ந்தது இன்னும் எனக்கு ஞாபகத்தில் இருக்கிறது. எப்படியோ சிறையில் உள்ள சூழ்நிலை, முற்றிலும் தெளிவான மனத்துடன் எதையும் தீர்மானிக்க உங்களுக்கு இடம் கொடுப்பதில்லை. எனவே, வெளியுலகத்தை நீங்கள் முற்றிலும் மறந்துவிட வேண்டுமென்றே நான் விரும்புவேன். இது கடினமான காரியம் என்பதை நான் அறிவேன். எனினும், நீங்கள் ஏதாவது ஆழ்ந்த படிப்பில் ஈடுபட்டாலும், ஏதாவது தீவிரமான உடலுழைப்பு சம்பந்தமான அலுவல்களில் ஈடுபட்டாலும், நீங்கள் வெளியுலகை மறந்துவிட முடியும். நீங்கள் என்ன செய்தாலும், ராட்டினத்தில் மாத்திரம் வெறுப்புக்கொண்டு விடாதீர்கள். நானும் நீங்களும் பல காரியங்களைச் செய்திருக்கிறோம், பல விஷயங்களை நம்பியிருக்கிறோம். அவற்றிற்காக நம்மை நாமே வெறுத்துக்கொள்ளக் காரணம் இருக்கலாம். ஆனால், நாம் ராட்டினத்தில் உறுதியான நம்பிக்கை வைத்ததற்காகவோ, அல்லது தாய்நாட்டின் பெயரில் ஒவ்வொரு நாளும் நல்ல நூல் நூற்றதற்காகவோ, ஒருகாலத்திலும் நாம் சிறிதும் வருந்துவதற்குக் காரணம் ஏற்படாது. எட்வின் ஆர்னல்ட் எழுதியுள்ள "சொர்க்க கீதம்" உங்களிடம் இருக்கிறது. அதன் கருத்து இதுதான்: 'இதில் சக்தியை வீணாக்குவது என்பதில்லை. இதில் அழிவுமில்லை. இந்தத் தருமத்தின் கடுகளவும், பல படுகுழிகளிலிருந்தும் ஒருவரைக் காப்பாற்றுகிறது.' இந்தத் தருமம் என்பது கர்ம யோகத்தையே குறிப்பிடு

கிறது. நமது யுகத்தில் ராட்டினம்தான் கர்ம யோகமாகும். நீங்கள் பியாரிலால் மூலம் அனுப்பிய கடிதம் என்னை உணர்ச்சி யற்றுப் போகும்படி செய்திருக்கிறது. உங்களிடமிருந்து மகிழ்ச்சியளிக்கும் ஒரு கடிதத்தை விரும்புகிறேன்.''

[காந்திஜியின் வாழ்க்கை பற்றி ஸ்ரீ டி. ஜி. டெண்டுல்கார் எழுதியுள்ள 'மகாத்மா' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

# 60

# பிடரியைக் குலுக்குதல்

[பர்டோலி சட்ட மறுப்பு இயக்கத்தை காந்திஜி நிறுத்தியது, அரசாங்கத்திற்குத் துணிச்சலையும் மமதையையும் உண்டுபண்ணியது. "எங்கள் சாம்ராஜ்யத்திற்குச் சவால் விடுத்தால், இந்தியா விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குள்ள பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கு இடையூறு விளைவித்தால், இந்தியாவிலிருந்து நாங்கள் பின்வாங்குவோம் என்ற தவறான நம்பிக்கை கொண்டு எங்களுக்கு நிபந்தனைகள் விதித்தால், உலகிலேயே மிகவும் உறுதி வாய்ந்த ஜனங்களான பிரிட்டிஷாரை எதிர்த்து இந்தியா வெற்றிபெற முடியாது. அந்தச் சவாலுக்குப் பிரிட்டிஷார் தங்கள் முழு சக்தியையும் உறுதியையும் உபயோகித்து மீண்டும் தகுந்த பதில் அளிப்பார்கள்" என்று இந்தியா மந்திரி ஸ்ரீ மாண்டேகு மிரட்டினார். ''பிரிட்டனின் இரும்பு நரம்பு சிறிதும் தளர்ச்சி அடைந்துவிடவில்லை" என்று பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சியின் பிரதிநிதியான லார்டு பர்க்கென்ஹெட் இந்தியாவைக் கடுமையாக எச்சரித்தார்.

இவர்களுடைய எச்சரிக்கைக்குப் பதிலாக காந்திஜி, 'எங் இந்தியா'வில் 'பிடரியைக் குலுக்குதல்' என்ற மகுடத்தின்கீழ் எழுதிய தலையங்கத்தின் விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

பிரிட்டிஷ் சிங்கமானது, ரத்தக்கறை படிந்த அதன் நகங்களை நமது முகத்துக்கு எதிரே காட்டி மிரட்டி வருகையில், பிரிட்டனுடன் எவ்விதம் சமரசம் ஏற்பட முடியும்? பிரிட்டன் தனக்குள்ள இரும்பு நரம்பை இழந்துவிடவில்லை என்று லார்டு பர்க்கென்ஹெட் நமக்கு நினைவூட்டுகிறார்! பிரிட்டிஷார் உலகத்திலேயே மிகவும் உறுதி வாய்ந்த மக்கள் என்றும், அவர்களுடைய நோக்கத்தில் பிறர் தலையிடுவதை அவர்கள் சகிக்கமாட்டார்கள் என்றும் ஸ்ரீ மாண்டேகு ஒளிவு மறைவின்றி பட்டவர்த்தனமாக நமக்கு அறிவித்துள்ளார்.

கடல் கடந்து வந்து அவர்கள் காட்டும் இரும்பு நரம்பின் சக்தியை எதிர்த்து நிற்க இந்தியா தயாராக இருக்கிறது என்பதை லார்டு பர்க்கென்ஹெட்டும் ஸ்ரீ மாண்டேகுவும் அறியவில்லை. கிலாபத், பஞ்சாப் தவறுகளுக்கு இந்தியா பூரண பரிகாரத்தை நாடுகிறது என்றும், சுயராஜ்யத்திற்குக் குறைந்த எதுவும் இந்தியாவிற்குத் திருப்தி அளிக்காது என்றும் 1920 செப்டம்பரில் இந்தியா சவால் விடுத்தது. சாம்ராஜ்யம் இருக்க வேண்டும் என்பதே இதன் கருத்தாகும். அதன்படி பிரிட்டன், சுதந்திர நாடுகள் அடங்கிய உண்மையான காமன்வெல்த் நாடாக அமைதியுடன் மாறும். அப்போது காமன்வெல்திற்கு உட்பட்ட எல்லா நாடுகளுக்கும் சமமான உரிமைகள் உண்டு. கௌரவமான, சிநேகபாவமான கூட்டுறவிலிருந்து விரும்பினால் விலகிக்கொள்ள ஒவ்வொரு நாட்டிற்கும் அதிகாரம் இருக்கும். ஆனால், இத்தகைய உறவைக்கொண்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தற்போதைய மேற்பார்வையாளர்கள் திருப்தி அடையவில்லையாயின், 'உலகிலேயே மிகவும் உறுதி வாய்ந்த மக்களின் சக்தியும் உறுதியும்', 'இரும்பு நரம்பும்' இந்தியாவில் யாதொரு பலனுமின்றி வீணாகிவிடும். அவர்களால் இந்திய மக்களின் மன உறுதியை நசுக்க முடியாது; இந்தியர்களின் மன உறுதி வளைந்தும் கொடுக்காது; முறிந்தும் போகாது. அரிசி உணவு சாப்பிடும் பலவீனர்களான கோடிக்கணக்கான இந்தியர்கள் மேற்கொண்டு யாருடைய ஆதிக்கமுமின்றி, எவ்வித ஆயுதமுமின்றி தங்கள் சொந்த விதியை நிர்ணயிக்க உறுதிகொண்டிருக்கிறார்கள் என்றே தோன்றுகிறது. லோகமான்ய திலகர் கூறியதுபோல், அது அவர்களுடைய பிறப்புரிமை. பிரிட்டிஷ் மக்களின் உறுதியும் சக்தியும் இரும்பு நரம்பும், அந்த உரிமையை இந்தியர்கள் பெறுவதைத் தடுக்க முடியாது. ஸ்ரீ மாண்டேகு, லார்டு பர்க்கென்ஹெட் இவர்களின் இறுமாப்புக்கு, இந்தியா இறுமாப்புடன் பதில் அளிக்க முடியாது. பதில் அளிக்கவும் விரும்பாது. ஆனால், இந்தியா தன் பிரதிக்ஞையில் உண்மையாக நடந்து கொள்ளுமாயின், அந்நிய ஆட்சியாகிற பீடையிலிருந்து விடுதலையளிக்கும்படி அவர்கள் கடவுளிடம் செய்யும் பிரார்த்தனை நிச்சயமாக வீண் போகாது.

அதிகார போதை தலைக்கேறிய, பலவீனமான ஜனங்களைக் கொள்ளையிட்ட எந்த சாம்ராஜ்யமும் இந்த உலகில் அதிக காலம் வாழ்ந்ததில்லை. உலகத்தை ஆட்சி புரியும் உண்மையான கடவுள் ஒருவர் இருப்பாராயின், ஸ்தூல விஷயங்களில் பலவீனர்களான மக்களைக் கட்டுக்கோப்பான முறையில் சுரண்டுவதையும், மிருக பலத்தை இடைவிடாது விளம்பரப்படுத்துவதையுமே அடிப்படையாகக்கொண்ட பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் வாழ முடியாது. பிரிட்டிஷார் தங்கள் 'இரும்பு நரம்பை'க் காட்டுவதற்காக, ஏற்கனவேயே இந்தியா தன்னிடமுள்ள சிறந்தவர்களைப் பலி கொடுத்திருக்கிறது. தேச மக்களின் தியாகத்திற்குத்

தடையாக சௌரி சௌரா சம்பவம் குறுக்கிடாவிட்டால், பிரிட்டிஷ் சிங்கத்தின் முன்னிலையில் இன்னும் அதிக ஆனந்தத்தைக் கொடுக்கும் பலிகள் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும். ஆனால், இறைவனின் சித்தம் வேறுவிதமாக இருந்தது. *டவுனிங் தெருவிலும், ஒயிட் ஹாலிலும் உள்ள எல்லாப் பிரதிநிதிகளும் தங்கள் மனம் போனபடி எவ்வளவு மோசமாக நடந்துகொண்டாலும், அதைத் தடுப்பதற்கு யாருமில்லை. அவர்களிடமிருந்து வந்துள்ள இறுமாப்புடன் கூடிய மிரட்டலைப் பற்றி நான் கடுமையாகவே எழுதியிருக்கிறேன் என்பதை உணருகிறேன். ஆனால், 1920-இல் ஆரம்பமான போராட்டம் இறுதிப் போராட்டம் என்பதைப் பிரிட்டிஷ் மக்கள் அறியும்படி செய்ய வேண்டிய நேரம் முன்பே வந்துவிட்டது. இந்தப் போராட்டம் ஒரு மாதமோ, ஒருவருடமோ, பல மாதங்களோ அல்லது பல வருடங்களோ நடந்தாலும், பிரிட்டிஷ் பிரதிநிதிகள் 'சிப்பாய்க் கலக' நாட்களில் நடத்திய ரத்த வெறியாட்ட நாடகங்களைப் பன்மடங்கு அதிக கோரத்துடன் நடத்தினாலும் நடத்தாவிடினும், இது இறுதிப் போராட்டமேயாகும். இந்தியா இறுதி வரையில் சாத்விகமாக இருப்பதற்கு வேண்டிய அடக்கத்தையும் போதிய பலத்தையும் கடவுள் அருள்வாரென்று மாத்திரம் நான் நம்புகிறேன்; அருள வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். அந்தந்த சந்தர்ப்பங்களில் பிரிட்டிஷார் இறுமாப்புடன் விடுக்கும் சவால்களுக்கு இனி பணிவதென்பது முற்றிலும் முடியாத காரியமாகியிருக்கிறது.

—'எங் இந்தியா' · 23—2—1922

[ஒத்துழையாமை இயக்க வரலாற்றைக் குறித்து ஸ்ரீ ராஜேந்திரப் பிரசாத் எழுதிய விவரம் இத்தொகுப்பில் பின் சேர்க்கைப் பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

*பிரிட்டிஷ் மந்திரிகளின் காரியாலயங்கள்.

பகுதி எட்டு

# வைக்கத்தில் சத்தியாக்கிரகப் போர்

*[இந்தியாவின் தென் கோடியில் யாருக்கும் தெரியாத ஒரு சிற்றூர், அங்கே நடந்த சத்தியாக்கிரகப் போர் காரணமாக இந்தியாவில் மாத்திரம் அல்ல, உலகத்தில் உள்ள மக்களின் கவனத்தையே கவர்ந்ததென்று கூறுவது மிகையாகாது. 1925-ஆம் வருடம் காந்திஜி வட இந்தியாவில் தமது சுற்றுப்பிரயாணத்தை முடித்துக் கொண்டு, தென்னிந்தியாவில் யாத்திரை செய்ய முற்பட்டார். அவ்வருடம் மார்ச் மாதம் 7-ஆம் தேதி அவர் சென்னைக்கு விஜயம் செய்தார். முக்கியமாக, காந்திஜி அப்போது தீண்டாமைப் பிரச்னை சம்பந்தமாகவே தென்னிந்தியாவிற்கு வந்தார். மார்ச் 9-ஆம் தேதி வைக்கத்தில் உள்ள மக்கள் தங்கள் ஊருக்கு விஜயம் செய்த காந்திஜியை வரவேற்கும் பாக்கியம் பெற்றனர். அங்கே ஒரு வருட காலமாகச் சத்தியாக்கிரகம் நடந்துகொண்டிருந்தது. சத்தியாக்கிரகிகளும் சீர்திருத்தவாதிகளும் பல தடவை அன்புடன் அழைத்ததற்கிணங்கவே, காந்திஜி வைக்கத்திற்குச் சென்றார்.*

*வைக்கம் சத்தியாக்கிரகத்திலிருந்துதான், தீண்டாமைத் தீமையின் கொடுமையை முதன் முதலாக எல்லோரும் அறிந்துகொண்டனர். தீண்டாதார் எனப்படுவோர் கோவில்களுக்குச் செல்லும் ரஸ்தாக்களிலோ, கோவில்களைச் சுற்றியுள்ள ரஸ்தாக்களிலோ சென்றால் கோவில்கள் தீட்டாகிவிடும் என்றனர், சாதி ஹிந்துக்கள். பிறகு தீண்டாதாரின் நிழல் பட்டால் கோவில்களுக்குச் செல்லும் பக்தர்கள் தீட்டாகி விடுவார்கள் என்றனர். மலையாளத்தில் தீண்டாதார்களிடையே ஈழவர் பிரிவைச் சேர்ந்த சுமார் பத்து லட்சம் பேர் இருந்தனர். கல்வியிலோ, பண்பாட்டிலோ, நாகரிகத்திலோ அல்லது செல்வத்திலோ அவர்கள் வேறு எந்த சமூகத்தினருக்கும் குறைந்தவர்கள் அல்ல. விவசாயத் தொழிலாளரான மூன்று லட்சம் புலையர்களும் தீண்டாதவர்களாகவே கருதப்பட்டனர். அவர்களுடைய ஊழியம் இன்றேல், அங்கே சாதி ஹிந்துக்கள் ஒரு*

நாள்கூட வாழ முடியாது. இவர்களைத் தவிர, அந்தப் பிராந்தியத்தில் இருந்த மூன்று லட்சம் பறையர்களையும் தீண்டாதாராகவே கருதினர். எல்லாச் சமூகத்தினருக்கும் இன்றியமையாத வெல்லம் உற்பத்தி செய்யும் சாணுர் களையும் சமூகம் தீண்டாதாராகவே கருதியது.

எனினும், வைக்கம் சத்தியாக்கிரகத்தின் உடனடியான நோக்கம், கோவில்களைச் சுற்றியுள்ள சாலைகளில் செல்ல, சாதி ஹிந்துக்களைப் போல் தீண்டாதாருக்கும் உரிமை அளிக்க வேண்டும் என்பதே. அந்தச் சாலைகளில் செல்ல ஹிந்துக்கள் அல்லாதாருக்கும் உரிமை இருந்தது. அப்படியிருக்க, ஹிந்து சமுதாயத்தையே சேர்ந்த ஒரு பிரிவினருக்கு, அதாவது தீண்டாதாருக்கு ஏன் உரிமை மறுக்கப்பட வேண்டும் என்பதே சத்தியாக் கிரகிகளின் கேள்வியாகும்.

திருவாங்கூர் சம்பந்தப்பட்ட வரையில், மலையாளம் சம்பந்தப்பட்ட வரையில், வைக்கத்திலே நடந்த சத்தியாக் கிரகம் ஒரு பரிசோதனையே. சாலைகளில் செல்லுவதற்கு, திருவாங்கூரில் உள்ள ஆறில் ஒரு பகுதியினரான 'தீண்டாதா'ருக்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது.' அந்தத் தடையை எதிர்த்து, சாலைகளில் செல்ல 'தீண்டாதா'ருக்கு உரிமை அளிக்கவேண்டுமென்ற ஒரே நோக்கத்துடனேயே வைக்கம் சத்தியாக்கிரகம் நடந்தது. அதை ஆதரித்து காந்திஜி 'எங் இந்தியா'வில் ஏராளமான கட்டுரைகள் எழுதி வந்தார். அதனால், இந்தியா முழுவதும் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டது. பின்னர், காந்திஜி நேரிலும் திருவாங்கூருக்கு வந்து வைதிகர்களான நம்பூத்ரிகளையும் மகாராணியையும் கண்டு பேசினர். அங்கே பல மாதங்கள் வரையில் சத்தியாக்கிரகம் நடந்த பிறகு, அதிகாரிகள் பிடிவாதத்தைக் கைவிட்டு சாலைகளைத் தீண்டாதாருக்கும் திறந்துவிட்டனர். இவ்வாருக, வைக்கம் சத்தியாக்கிரகிகளின் தியாகமும், காந்திஜியின் ஆதரவும், சீர்திருத்த வாதிகளின் பெருமுயற்சியும் இறுதியில் வெற்றி பெற்றன. 1936-ஆம் ஆண்டில், திருவாங்கூர் சமஸ்தானத்தில் உள்ள தீண்டாதார் உள்பட எல்லா ஹிந்துக்களுக்கும் ஆலயப் பிரவேச உரிமையளித்து மகாராஜா பிரகடனம் வெளியிட்டதற்கு, வைக்கம் சத்தியாக்கிரகமே அஸ்திவாரமாக அமைந்தது. வைக்கம் சத்தியாக்கிரகத்தைப் பற்றி காந்திஜி 'எங் இந்தியா', 'ஹரிஜன்' பத்திரிகைகளில் எழுதிய கட்டுரைகள், அதிக விரிவாக, மகாத்மா

*காந்தி நூல்கள் 7–ஆம் தொகுப்பில், 234—272 பக்கங்களில் 16 அத்தியாயங்களாக வெளியாகியிருக்கின்றன. வைக்கம் சத்தியாக்கிரகம் சம்பந்தமாக அத்தொகுப்பில் வெளி வராத கட்டுரைகள் மாத்திரமே கீழே கொடுக்கப்பட்டிருக் கின்றன:]*

# 1

# சுவையான ஒரு கட்டம்

**வைக்கத்தில்** நடைபெற்று வரும் தீண்டாமை எதிர்ப்பு இயக்கம், சத்தியாக்கிரகத்தில் ஒரு சுவையான ஆராய்ச்சிக் கட்டமாக அமைந்திருக்கிறது. அது அமைதியான உற்சாகத் துடன் நடத்தப்பட்டு வருவதால், அதே ரீதியில் நடக்க முற்படும் எதிர்காலத் தொண்டர்களுக்கு அது மிகவும் உபயோகமானதாக இருந்துதான் தீரும். திருவாங்கூர் அதிகாரிகள் தடையுத்தரவு சம்பந்தமாக இன்னும் வளைந்து கொடுக்கவில்லையெனினும், அவர்கள் தங்கள் நோக்கத்தை மரியாதையுடன் நிறைவேற்றி வருகிறார்கள். சத்தியாக்கிரகிகளுக்கு எதிரான பலாத்காரத் தைத் தடுக்க அதிகாரிகள் எவ்வளவு அவசரமாக முயற்சித்தனர் என்பதைப் பொதுமக்கள் ஏற்கனவே அறிவர். சிறைகளில் சத்தியாக்கிரகிகளை அதிகாரிகள் நடத்துவதும், வெளியில் அவர்கள் எல்லோருமறிய நடந்துகொள்ளுவதற்கு உற்ற வகையி லேயே இருக்கிறது.

## விண்ணப்பம் ஏன் ?

ஒருபுறம் சத்தியாக்கிரகம் நடந்து வருகையில், மற்றொருபுறம் சத்தியாக்கிரகச் செயலாளர்கள். அதிகாரிகளின் ஆதரவைப் பெறவும், தங்களுக்குச் சாதகமாகப் பொதுஜனங்களின் அபிப் பிராயத்தை உருவாக்கவும் விண்ணப்பங்கள், பொதுக்கூட்டங் கள், தூதுகோஷ்டிகள் முதலிய முறைகளின் மூலம் சகல முயற்சி களும் செய்யவேண்டும். திருவாங்கூர் அரசாங்க அதிகாரிகள் இந்தியர் ஆட்சியின் பிரதிநிதிகளாக இருப்பதால், நான் அவர்கள் விஷயத்தில் ஒரு தலைப்பட்சமாக இருக்கிறேன் என்றும், பிரிட்டிஷ் அதிகாரிகள் அந்நிய ஆட்சியின் பிரதிநிதிக ளாதலால் அவர்களிடம் விரோத பாவத்துடன் இருக்கிறேன் என்றும் ஆட்சேபவாதிகள் கூறுகின்றனர். என் அபிப்பிராயத் தில், பொது ஜனங்களின் அபிலாஷையைத் துச்சமாக மதிக்கும் எந்த ஆட்சியாளரும் அந்நியர்தான்.

தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகம் நடந்துகொண் டிருந்தபோதுகூட, இந்தியர்கள் கடைசி விநாடி வரையில்

அதிகாரிகளுடன் சமரசப் பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்து வந்தார்கள். பிரிட்டிஷ் இந்தியாவில் நாம் ஒத்துழையாமையை அனுஷ்டித்து வருகிறோம். நாம் அவ்விதம் ஏன் செய்து வருகிறோமெனில், இங்கே அரசாங்கத்தின் ஆட்சி முறையைச் சீர் திருத்தவோ அல்லது ஒழித்துவிடவோ நாம் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறோம். எனவே, விண்ணப்பம் செய்துகொள்ளும் முறை வீணான ஒரு முயற்சியாகும்.

திருவாங்கூரில் சத்தியாக்கிரகிகள் ஓர் அரசாங்க முறையை அடியோடு தாக்கவில்லை. அந்த முறையில் எந்த ஓர் அம்சத்தையும்கூட அவர்கள் தாக்கவில்லை. அவர்கள், வைதிகர்களின் பிற்போக்கை எதிர்த்தே போராடி வருகிறார்கள். திருவாங்கூர் அரசாங்கம் கொல்லைப்புற வழியாகவே இப்பிரச்னையில் சம்பந்தப்பட்டிருக்கிறது. எனவே, தூது கோஷ்டிகள், கூட்டங்கள், விண்ணப்பங்கள் முதலியவற்றின் மூலம் அவர்கள் அதிகாரிகளுடன் தொடர்பு கொள்ளவும், பொது மக்களின் ஆதரவை உருவாக்கவும் முயற்சி செய்யவில்லையாயின், சத்தியாக்கிரகிகள் தங்கள் பாதையிலிருந்து தவறியவர்களாவர். நேர் நடவடிக்கை என்பது, எப்போதும் முரண்பாடில்லாத மற்ற முறைகளைத் தவிர்ப்பதில்லை. விண்ணப்பம் செய்து கொள்ளுவது போன்ற முறைகள் எல்லா சந்தர்ப்பங்களிலும் சத்தியாக்கிரகிகளின் பலவீனத்தைக் குறிப்பதில்லை. உண்மையில், பணிவில்லாதவர் அல்ல சத்தியாக்கிரகி.

'எங் இந்தியா' - 24—4—1924

## 2

# குருவின் பலாத்கார உபதேசம்!

தீயா வகுப்பினரின் மத குருவான ஸ்ரீ நாராயண குரு, தற்போதைய வைக்கம் சத்தியாக்கிரக முறைகளை ஆதரிக்கவில்லை என்று கூறப்படுகிறது. அடைப்பு வேலி போடப்பட்டுள்ள ரஸ்தாக்களின் வழியாகத் தொண்டர்கள் சென்று, வேலிகளைத் தாண்டிவிடவேண்டும் என்றும், பின்னர் அவர்கள் கோவில்களுக்குள் பிரவேசித்து மற்றவர்களுடன் சாப்பிட உட்கார வேண்டுமென்றும் அவர் யோசனை கூறியுள்ளார். அவர் அளித்த பேட்டி விவரங்களை நான் சுருக்கிக் கூறியிருக்கிறேன் என்றாலும், பெரிதும் அந்தக் குரு கூறிய அதே வார்த்தைகளையே குறிப்பிட்டுள்ளேன்.

அவரால் உத்தேசிக்கப்பட்டுள்ள நடவடிக்கை சத்தியாக்கிரகமாகாது. அடைப்பு வேலிகளைத் தாண்டிச் செல்லுவது

பகிரங்கமான பலாத்காரமாகும். நீங்கள் அடைப்பு வேலிகளைத் தாண்டலாம் என்றால், கோவில் கதவுகளையும் உடைத்துக் கொண்டு ஏன் உள்ளே பிரவேசிக்கக்கூடாது? கோவில் சுவர்களைத் துளைத்துக்கொண்டுகூட ஏன் உள்ளே செல்லக்கூடாது? சரீர பலாத்காரத்தை உபயோகிக்காமல், போலீஸ்காரர்களின் வரிசையைப் பிளந்துகொண்டு தொண்டர்கள் எப்படிச் செல்ல முடியும்? தீயாக்கள் பலம் வாய்ந்தவர்களாகவும், போதிய தொகையினர் இறப்பதற்கு விருப்பமுடையவர்களாகவும் இருந்தால், மேலே உத்தேசிக்கப்பட்ட முறைகளால் அவர்கள் தங்கள் கோரிக்கையைப் பெற முடியாது என்று நான் கூறவில்லை. நான் பணிவுடன் கூறுவதெல்லாம் என்னவெனில், தொண்டர்கள் அவ்வாறு செய்தால், அவர்கள் சத்தியாக்கிரகத்துக்கு நேர் மாறுபாடான முறைகளால் தங்கள் கோரிக்கையில் வெற்றி பெற்றவர்களாவர். அப்போதுகூட அவர்கள், வைதிகர்களைத் தங்களுடைய அபிப்பிராயத்திற்கு மாற்றியவர்களாக மாட்டார்கள்; தங்கள் கருத்தைப் பலாத்காரமாக அவர்கள்பால் திணித்தவர்கள் ஆவர்.

ஸ்ரீ நாராயண குரு அளித்த பேட்டியின் விவரங்கள் அடங்கிய பத்திரிகையின் பகுதியை எனக்கு அனுப்பியுள்ள ஒரு நண்பர், குருவின் பலாத்கார யோசனை காரணமாக, சத்தியாக்கிரகத்தை ரத்து செய்துவிடும்படி நான் ஸ்தல காங்கிரஸ் கமிட்டியைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று யோசனை கூறியுள்ளார். அவ்விதம் ரத்து செய்வது, ஒருவரது முறைகளில் உள்ள நம்பிக்கைக் குறைவைக் காட்டுவதுடன், பலாத்காரத்திற்கு விட்டுக்கொடுப்பதுமாகும் என்று நான் கருதுகிறேன். சத்தியாக்கிரகச் செயலாளர்கள், தங்களுக்குத் தாங்களே வகுத்துக் கொண்டுள்ள எல்லைகளுக்கு உட்பட்டுக் கண்டிப்பாக நடந்து கொள்ளும் வரையில், சத்தியாக்கிரகத்தை ரத்து செய்வதற்குக் காரணமே இல்லை. நண்பர், சௌரி சௌராவை உதாரணமாகக் காட்டியுள்ளார். அது, அவரது சிந்தனைக் குழப்பத்தையோ அல்லது உண்மைகளைப் பற்றிய அறியாமையையோ காட்டுகிறது. கிலாபத்வாதிகளும் காங்கிரஸ்வாதிகளும் சௌரி சௌரா பலாத்காரத்தில் சம்பந்தப்பட்டிருந்ததாலேயே, பர்டோலி சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டது. வைக்கம் இயக்கத்தில் சம்பந்தப்பட்டுள்ள காங்கிரஸ் வாதிகள், தீயா மத குருவின் யோசனைகளை ஏற்றுக்கொண்டால், பிராயச்சித்தத்திற்கும் சத்தியாக்கிரகத்தை நிறுத்துவதற்கும் காரணம் ஏற்படும்; இல்லாவிடில் ஏற்படாது. எனவே வைக்கம் சத்தியாக்கிரகத்தின் செயலாளர்கள் அதிக முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும், அதே சமயத்தில் இயக்கத்தில் கலந்துகொண்டுள்ளவர்களின் நடவடிக்கைகளை அதிக கண்டிப்பாகக் கண்காணித்து வர வேண்டுமென்றும் நான் வற்புறுத்துகிறேன். லட்சியத்தை அடைய அதிக காலமோ அல்லது குறைந்த காலமோ ஆயினும், தாமே துன்பத்தை அனு

பவித்துக் கொள்ளுதல், சுயத்தூய்மை இம்முறைகளால் வைதிகர்களின் மனத்தை மாற்றும் அமைதியான வழிதான் சிறந்த வழியாகும்.

—'எங் இந்தியா'-19—6—1924

# 3

# மத சம்பந்தமான சத்தியாக்கிரகத்தின் தனிச் சிறப்பு

எந்த வகையான சத்தியாக்கிரகமாயினும், ரகசிய நோக்கம் கற்பிப்பது அதை இழிவுபடுத்துவதாகும். அதிலும் மத சம்பந்தமான சத்தியாக்கிரகத்தில் ரகசிய நோக்கம் கற்பிப்பது தகாத காரியம். ஓர் ரகசிய அரசியல் அல்லது லௌகிக நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக மத சம்பந்தமான சத்தியாக்கிரகத்தை ஒரு போர்வையாக அல்லது உபாயமாக உபயோகிப்பதோ, அல்லது அனுமதிப்பதோ நாசகரமானது.

இந்த வகை சத்தியாக்கிரகத்தில், லட்சியத்தைப் போலவே லட்சியத்தை அடைவதற்கான முறைகளும் களங்கமற்றுப் பரிசுத்தமாக இருக்க வேண்டியது மிகவும் அத்தியாவசியமாகும். அத்தகைய இயக்கத்தின் தலைவர், ஆழ்ந்த ஆன்மிக வாழ்க்கையை நடத்துபவராக இருக்க வேண்டும். அவர் விவாகம் செய்துகொண்டவராயினும், அல்லவாயினும், பிரம்மச்சரிய வாழ்க்கையை நடத்துவது சிறந்தது. அந்த இயக்கத்தில் பங்கு எடுத்துக்கொள்ளும் எல்லாருமே உண்மையில் பிரம்மச்சாரிகளாக வாழ்க்கை நடத்த வேண்டும். எந்த மத அனுஷ்டானத்திற்காக இயக்கம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதோ, குறிப்பிட்ட அந்த மதத்தின் கோட்பாடுகளை அவர் தமது வாழ்க்கையில் அனுஷ்டிப்பவராக இருக்க வேண்டும். மற்றும் தலைவர், சத்தியாக்கிரக சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவராக இருக்கவேண்டும். அவரது பேச்சில் சத்தியமும் அகிம்சையும் ஒளி வீசித் திகழ வேண்டும். அவரது நடவடிக்கைகள் எல்லாம் களங்கமின்றி பளிங்கு போல் எல்லோரும் அறியும் விதத்தில் இருக்க வேண்டும். அவரது தற்காப்பு ஆயுதசாலையில், ராஜ தந்திரத்திற்கும் சூழ்ச்சிக்கும் இடமில்லை.

அத்தகைய சத்தியாக்கிரகத்தில், அகிம்சையிலும் கடவுளிடத்திலும் பரிபூரண நம்பிக்கை இன்றியமையாத ஒரு நிபந்தனையாகும்.

மத சம்பந்தமான சத்தியாக்கிரகத்தில் தாக்குதலுக்கோ, ஆர்ப்பாட்டத்திற்கோ, வெளி வேஷத்திற்கோ இடமில்லை. அந்தச் சத்தியாக்கிரகத்தில் பங்கு எடுத்துக்கொள்ளுவோர், வேறு சமய நம்பிக்கை கொண்டிருப்பவர்களின் மதக் கொள்கைகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் சமமான மரியாதையும் மதிப்பும் கொடுக்க வேண்டும். அவர்களுடைய உள்ளத்தில் ஏற்படும் அணுவளவு அற்பமான குறுகிய போக்குகூட, எதிராளியிடம் பன்மடங்காகப் பெருகி பிரதிபலிக்க இடம் உண்டு.

எல்லாவற்றையும் விட மேலாக, மத சம்பந்தமான சத்தியாக்கிரகம், ஒரு சுயத் தூய்மை நடவடிக்கையே. அது வெறும் தொகைகளையும், வெளி உதவிகளையும் வெறுக்கிறது. ஏனெனில், அவை சத்தியாக்கிரகியின் சுயத் தூய்மையை எவ்விதத்திலும் அதிகப்படுத்துவதில்லை. அதற்கு மாருக, மத சம்பந்தமான சத்தியாக்கிரகம், எல்லா சக்திக்கும் ஊற்ருன கடவுளையே முற்றிலும் நம்புகிறது. எனவே, கடவுளின் உண்மையான ஒரு மனிதரின் தலைமையில்தான் அந்தச் சத்தியாக்கிரகம் சிறந்த முறையில் வெற்றி பெறும். அவர்தான் தமது தூய்மையான வாழ்க்கையினுலும், அணுவளவும் சுயநலமற்ற தமது லட்சியத்தினுலும், பரந்த மனப்பான்மையினுலும் எதிராளிகள்கூட தம்மிடம் அன்புடனும் பயபக்தியுடனும் இருக்கும்படி செய்வார்.

—'ஹரிஜன்' - 27—5—1939

பகுதி பத்து

# பர்டோலி வரிகொடாப் போராட்டம்

*[1922-இல் காந்திஜி ஆறு வருட சிறைத் தண்டனை அடைந்தார். ஆனால், நோயுற்றதன் காரணமாக 1924-இல் விடுதலையானார். எனவே, தாம் விடுதலையானதைக் குறித்து மகிழ்ச்சியடையவில்லை என்று அப்பொழுது காந்திஜி கூறினார். அந்த ஆறு ஆண்டுகளில் மீதியிருந்த காலம் முடியும் வரையில் ராஜீய காரியங்களில் தாம் தீவிரமாக ஈடுபடாமலிருக்கப் போவதாகக் கூறியிருந்தார். அக் காலம் 1928 மார்ச் மாதத்துடன் முடிந்துவிட்டது. திரும்பவும் ராஜீயத்தில் தீவிரமாக இறங்க இருந்த சமயத்தில், ஒரு நாள் பர்டோலியிலிருந்து சிலர் காந்திஜியிடம் வந்தனர். அத்தாலுக்காவில் பல ஆண்டுகளாக வேலை செய்து வந்த சகோதரர்களான கல்யாண்ஜியும் கன்வர்ஜியும், ஸ்ரீ வல்லபபாய் பட்டேலின் வேண்டுகோளின் பேரில் சாபர்மதி ஆசிரமத்திற்கு வந்தார்கள். இவர்கள் காந்திஜியைச் சந்தித்து, குஜராத் வித்தியா பீடத்தில் வாராந்தர பிரசங்கம் செய்யச் சென்றஅவருடன் சென்றனர். அப்பொழுது கல்யாண்ஜி, அரசாங்கம் செய்திருக்கும் நிலத் தீர்வை உயர்வைக் கொடுக்க மறுத்துவிட இப்பொழுது பர்டோலி தயாராக இருக்கிறது என்றார். அச்சமயம் காந்திஜிக்கும் இவருக்கும் நடந்த பேச்சே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. பர்டோலியில் 1922-இல் காந்திஜியின் தலைமையில் நடக்கவிருந்த சத்தியாக்கிரகப் போராட்டம், சௌரி சௌரா சம்பவம் காரணமாக நிறுத்தப்பட்டு விட்ட விவரம் முந்திய ஒரு பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

## 1

## காந்திஜியின் ஆசி

**கல்யாண்ஜி :** *அரசாங்கம் இப்பொழுது நிலத் தீர்வையை உயர்த்தியிருக்கிறது. அவ்விதம் செய்யப்பட்டிருக்கும் நிலத் தீர்வை உயர்வைச் செலுத்த மறுத்துவிட பர்டோலி தயாராக இருக்கிறது.*

**காந்திஜி:** அதைச் சரியாக என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை.

**கல்யாண்ஜி:** நிலத்தீர்வையில் 22 சத விகிதம் உயர்த்தியிருக் கிறார்கள். பழைய தீர்வையைச் செலுத்தத் தயாராயிருக்கி றோம். ஆனால், உயர்த்தியிருக்கும் தீர்வையைச் செலுத்த மறுக்கிறோம் என்று மக்கள் கூறுகிறார்கள்.

**காந்திஜி:** இது அதிக ஆபத்தானது. உங்கள் பணத்தைக் கொண்டே அரசாங்கம் உங்களுடன் போராடி, உயர்த்திய தீர்வையையும் வசூலித்துவிடும். வரி உயர்வை ரத்துச் செய்தாலன்றி வரியையே கொடுக்கக்கூடாது. "உயர்த் திய வரியை ரத்துச் செய்து விட்டதாகப் பிரகடனம் செய்யுங்கள். அதன் பிறகு பழைய வரியை வாங்கிக்கொள் ளுங்கள். அதைக் கொடுக்கத் தயாராயிருக்கிறோம்'' என்று அரசாங்கத்திற்குச் சொல்லிவிட வேண்டும். இப்படிச் செய் வதற்கு மக்கள் தயாராக இருக்கிறார்களா?

**கல்யாண்ஜி:** பெரிய ஊர்களான பர்டோலி அல்லது வாலாடு விஷயத்தில் நான் நிச்சயமாகச் சொல்ல முடியாது. அங் குள்ள பனியாக்கள், அரசாங்கம் தங்களிடமிருக்கும் நிலங் களைப் பறித்து அந்நிலங்களின் முந்திய சொந்தக்காரர் களான ராணிபராஜ் ஜனங்களிடம் கொடுத்துவிட்டால் என்ன செய்வதென்று இயற்கையாகவே பயப்படக்கூடும். ஆனால், மற்ற கிராமங்களில் நல்ல ஒற்றுமையும் உறுதியும் இருந்து வருகிறது.

**காந்திஜி:** அது சரி. ஆனால், இவர்களுடைய கட்சி நியாய மானதா? இவர்களின் நியாயம் அசைக்க முடியாததா?

**கல்யாண்ஜி:** நிச்சயமாக நியாயமானதுதான். நரஹரிபாய் இதைத் தாம் எழுதிய கட்டுரைகளில் விளக்கிக் காட்டி யிருக்கிறார்.

**காந்திஜி:** அது எனக்குத் தெரியாது. அக்கட்டுரைகளை நான் கவனமாகப் படித்ததில்லை. ஆனால், நாடு முழுவதன் ஆதரவும் உங்களுக்கு இருந்துவரும்படி நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது உங்களுக்கு நினைவிருக் கட்டும். இதற்கு முதல் நிபந்தனை, உங்களுடைய கட்சி முற்றிலும் நியாயமாக இருக்க வேண்டும் என்பது. பிறகு இன்னுமொரு விஷயமும் இருக்கிறது. போராடுவதற்கு மக்கள் தயாராயிருக்கலாம். ஆனால், சத்தியாக்கிரகத்தின் உண்மையான தத்துவத்தை அவர்கள் அறிவார்களா? உங்கள் மத்தியிலிருந்து வல்லபபாயை அப்புறப்படுத்தி

விடுகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். மற்றவர்களெல்லாம் பிறகு ஒன்றுபட்டு நிற்பார்களா?

**கல்யாண்ஜி:** அதை நான் சொல்ல முடியாது.

**காந்திஜி:** சரி. அதை நீங்கள் நிச்சயமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால், வல்லபபாய் பட்டேல் என்ன சொல்லுகிறார்?

அப்பொழுதுதான் ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் அங்கே வந்தார். அவ்விஷயத்தைக் குறித்துத் தாம் பரிசீலனை செய்ததாகவும், அவர்கள் கட்சி நியாயமானதே என்றும் அவர் கூறினர் உடனே காந்திஜி, "சரி. அப்படியானால் இதில் யோசிப்பதற்கு எதுவும் இல்லை. குஜராத் வெற்றியை அடையட்டும்" என்றார்.

[இந்திய அரசாங்க மசோதாவைக் குறித்து ஆலோசிப்பதற்காக 1919-இல் நியமிக்கப்பட்ட பார்லிமெண்டரி கமிட்டி, நிலவரியை உயர்த்தக்கூடாது என்று ஆலோசனை கூறியிருந்தது. 1924-இல் பம்பாய் சட்டசபை, நிலவரியை உயர்த்தக்கூடாது என்று தீர்மானம் செய்திருந்தது. ஆனால், அவற்றிற்கெல்லாம் விரோதமாக பம்பாய் அரசாங்கம் 1927-இல் நிலத் தீர்வையில் 22 சதவிகிதம் பொதுவாக உயர்வு செய்தது. நடைமுறையில் இந்த வரி உயர்வு சில இடங்களில் அறுபது சத விகிதத்திற்கும் அதிகமாக இருந்தது. பர்டோலி விஷயத்தில் விவசாயிகள், எந்த ஆதாரத்தின் பேரில் நிலவரி உயர்த்தப்பட்டிருக்கிறதோ அது சரியானபடி விசாரிக்கப்படவில்லை என்றார்கள். வரி அதிகாரியின் அறிக்கை தவறானது என்றும், சரியானபடி கணக்கிடப்படவில்லை என்றும், வரி உயர்வுக்கு நியாயமில்லை என்றும், அது அக்கிரமம் என்றும் கூறினர்கள். இதைக் குறித்து பம்பாய் அரசாங்கத்திற்கும் ஸ்ரீ வல்லபபாய் பட்டேலுக்கும் முதலில் நீண்ட கடிதப் போக்குவரத்துக்கள் நடந்தன. அதனால் எவ்வித பயனும் ஏற்படாமல், வரி கொடா இயக்கம் ஆரம்பமாக வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.]

# 2

# போராட்டத்தின் காரணம்

பர்டோலி தாலுக்காவில் நிலவரி உயர்வு சம்பந்தமாக ஸ்ரீ வல்லபபாய் பட்டேலுக்கும் பம்பாய் அரசாங்கத்திற்கும் நடந்திருக்கும் கடிதப் போக்குவரத்து, உண்மை நிலைமையை வெட்ட வெளிச்சமாக்குவதாக இருக்கிறது. பொதுஜன ஊழியர் சிந்தித்துப் பார்ப்பதற்கும் இது உதவியாக இருக்கிறது. அதோடு நாம் எத்தகைய அரசாங்கத்தின் கீழ் வாழ்ந்து வருகிறோம் என்ற உண்மையையும் இது வெளிப்படுத்துகிறது. வல்லபபாயின் புகழ் யாருக்கும் தெரியாதது அல்ல. அரசாங்கத்திற்கும் அவர் தெரியாதவர் அன்று. அதிக ஆற்றலும், யோக்கியப் பொறுப்பும், உழைக்கும் திறனுமுள்ள பொதுநல ஊழியர் அவர் என்பதை அரசாங்கமே ஒப்புக்கொண்டிருக்கிறது. அகமதாபாத் முனிசிபாலிடியில் அவர் செய்த மகத்தான வேலையை அரசாங்கம் பாராட்டியிருக்கிறது. குஜராத்தில் ஏற்பட்ட வெள்ள நிவாரணத்திற்கு அவர் செய்த சிறந்த தரும சேவைகளைக் குறித்து அரசாங்கம் சில தினங்களுக்கு முன்புதான் புகழ்ந்திருந்தது.*

ஆனால், அதே வல்லபபாய் பட்டேல், தங்களுக்குச் சங்கடத்தை உண்டாக்குவதாக இருக்கும், தங்கள் கௌரவத்தைக் குறைத்துவிடுவதாக இருக்கும், தங்கள் கௌரவத்தைப் போலவே அவர்களுக்கு இருக்கும் வருமானத்தையும் குறைத்துவிடுவதாக இருக்கும் காரியத்தில் ஈடுபட்டிருக்கும் போது, அவருடைய வேலை ஒன்றுக்கும் உதவாதது என்று அரசாங்கத்திற்குத் தோன்றுகிறது. அவர்களுடைய வரு

---

* வெள்ளக் கஷ்ட நிவாரணம் சம்பந்தமாக ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் செய்த சிறந்த சேவையைப் பம்பாய் அரசாங்க நிதி மந்திரி புகழ்ந்து கூறியதையே காந்திஜி மேலே குறிப்பிடுகிறார். நிதி மந்திரி சொன்னதாவது: "சில ஆண்டுகளுக்கு முன்னால் வரையில் வியாபாரத்திலேயே மூழ்கிக் கிடந்துவந்திருக்கும் குஜராத், தன்னலத் தியாகஞ் செய்யும் பொதுஜன சேவையும் தன்னிடம் உண்டு என்று சொல்லிக்கொள்ள முடியாது. முக்கியமாக கிராமாந்தரங்களில் முன்னோடிகளாக வலிய சமூக சேவையில் ஈடுபடும் தன்னலமற்ற ஊழியர்கள் குழாமை அமைப்பதில் மகாத்மா காந்தி மேற்கொண்ட சிரமம் வெற்றி பெற்றிருப்பதைக் கண்டு அவர் மிகுந்த திருப்தி அடைய வேண்டும். அவருடைய நோக்கம் பெருமளவில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. வித்தியாபீடத்தையே பெரும்பாலும் சேர்ந்தவர்களான தொண்டர்கள், தங்கள் அருமைத் தலைவர் தங்களிடையே இல்லாத போதிலும், என்றுமே கண்டறியாத துயர நிலை ஏற்பட்டுவிட்ட சமயத்தில் மிகவும் பாராட்டத்தக்க வகையில் மக்களுக்குச் சேவை செய்திருக்கிறார்கள். ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் எவ்விதம் உடனே முன்வந்து தலைமை தாங்கினார், எவ்வாறு தமது வேலைத் திட்டத்தை அதிக ஆற்றலுடன் நிறைவேற்றி வைத்தார் என்பதெல்லாம் எல்லோருக்கும் நன்றாகத் தரிந்ததாகும்."

மானத்தை முன்னிட்டு அவர்களுக்குக் கௌரவம் அவசியமான தாகிறது. அவர்கள், வெறும் கௌரவத்தில் மாத்திரம் நம்பிக்கை வைப்பவர்கள் அல்ல.

எனவே, அரசாங்கம் தனது முதல் கடிதத்திலேயே ஸ்ரீ வல்லபபாய் பட்டேலை அவமதிப்பதைத் தனது கௌரவத்திற்கு உகந்ததாக எண்ணியிருக்கிறது. அவருடைய நல்லெண்ணத்தை ஆட்சேபித்திருக்கிறார்கள். பர்டோலிக்கு அவர் வெளியார் என்கிறார்கள். இவ்விதம் அவரை அவமதிப்பதற்குக் கவர்னரும் உடந்தையாக இருந்திருக்கிறார் என்பதை, கடைசிக் கடிதம் அவமதிப்பை வற்புறுத்துவதால் தெளிவாக்குகிறது. ஸ்ரீ வல்லபபாய், தமது கடிதத்தில் இதை மரியாதையாகவே எடுத்துக்காட்டியிருக்கிறார். அரசாங்கத்தின் கடிதங்களில் காணும் கொள்கையும் கவர்னரின் கொள்கையும் ஒன்றே. என்றாலும், அக்கொள்கை அறிவிக்கப்பட்டிருக்கும் விதமும் முக்கியமாகத் தங்களுடன் கடிதப் போக்குவரத்து நடத்தும் போது, ஜனங்கள் அக்கடிதங்களில் காட்டிவிடும் மிகக் குறைந்த எதிர்ப்பையோ, சுயேச்சையையோ கண்டதும் பொதுவாக ஸிவில் வர்க்கத்தைச் சேர்ந்த அரசாங்க காரியதரிசிகள் உபயோகிக்கும் அவமதிப்பான பாஷையும் கவர்னரின் பாஷையே என்று எண்ணிவிடவேண்டியதில்லை. ஆனால், தேவையில்லாத இந்த அவமதிப்புக்குக் கவர்னரும் உடந்தையாகவே இருந்திருக்கிறார். இப்பொழுது கவர்னராக இருப்பவரைப் போன்று ஒருவர் என்னதான் நல்லெண்ணமுள்ளவராக இருந்தாலும், பாரபட்சமில்லாதவர் என்று பெயரெடுத்திருந்தாலும், ‘அகந்தை போய்விட்டால் அழிவு; அகம்பாவம் போய்விட்டால் வீழ்ச்சியே’ என்ற அதிகார வர்க்கத்தின் வலையிலிருந்து அப்படிப்பட்டவரும் தப்பிவிட முடியாது என்றே இதிலிருந்து ஏற்படுகிறது.

அதிகார வர்க்கம் பத்திரமான இடத்தில் சௌகரியமாக இருந்துகொண்டிருக்கிறது. என்றாலும், இந்த வர்க்கம் தம்மீது எவ்வளவுதான் அவமதிக்கும் சொற்களைப் பொழிந்தாலும் அவற்றைத் தாங்கிக்கொள்ளுவதற்கான விசாலமான முதுகு வல்லபபாய்க்கு இருக்கிறது. இந்த அவமதிப்பைக் குறித்து நான் கூறிவருவதற்குக் காரணம், முன்னணியில் இருந்து வரும் ஒரு பொதுஜன ஊழியரைத் தூஷிக்கத் துணியும் அரசாங்கத்தின் பொறுப்பற்ற தன்மையை எடுத்துக்காட்டுவதேயாகும்.

ஆனால், அரசாங்கத்திற்கு ஆத்திரத்தை மூட்டிவிட்டிருப்பது என்ன என்பதை இப்பொழுது கவனிப்போம். நிலவரி அரசாங்கத்தின் சொந்த விஷயம். நீதிச் சபையின் முடிவுக்கு உட்பட்ட விஷயமல்ல அது. இந்த வரியை எப்படி விதிப்பது என்பது அரசாங்க நிர்வாகிகளை மாத்திரமே பொறுத்தது. பொதுஜன அல்லது கோர்ட்டின் அதிகாரத்திற்கு உட்பட்டதாக அதைச்

செய்யவேண்டும் என்று இதுவரையில் செய்த முயற்சிகளெல்லாம் வீணாகிவிட்டன. அரசாங்கத்தின் செலவு அதிகரித்துக் கொண்டே போகிறது. இச்செலவில் பெரும் பகுதி ராணுவத்திற்கு ஆகிறது. இதற்கு அரசாங்கம் எப்படியாவது பணம் தேடியாக வேண்டும். நிலவரி உயர்வு, மிகப் பெரிய வகுப்பினரைப் பாதிக்கிறது. இந்த வகுப்பினருக்கு எந்தச் செல்வாக்குமில்லை. கேட்பாரற்ற இந்த வகுப்பினரைப் பிழிந்துவிடலாம். இதனால் இஷ்டம் போலெல்லாம் நிலவரியை உயர்த்திக்கொண்டு போக முடிகிறது. தங்களுக்கு விதிக்கப்படும் வரி சம்பந்தமாகத் தங்களுடைய கருத்தைத் தெரிவிப்பதற்கு ஆளப்படுவோருக்கு உரிமை இருந்தால், அல்லது வரியை வெற்றிகரமாக அவர்களால் எதிர்க்க முடிந்தால், அப்பொழுது பொறுப்பற்ற அரசாங்கத்திற்கு முடிவு ஏற்பட்டுவிடும். நிலவரியில் செய்திருக்கும் அதிகரிப்பைப் பர்டோலி ஏற்றுக்கொள்ளவில்லை. அம்மக்கள் அரசாங்கத்திற்கு மனுச் செய்துகொண்டார்கள். சட்டரீதியான முறை என்று சொல்லப்படும் முறைகளிலெல்லாம் முயற்சி செய்தும் பார்த்துவிட்டனர். இதெல்லாம் பயன்படாது போகவே, தங்களுக்கு ஆலோசனை கூறுமாறு வல்லபபாயை அழைத்தார்கள். அவசியமானால் சத்தியாக்கிரகத்தின் மூலம் அரசாங்கத்தை எதிர்க்கவும் தங்களுக்குத் தலைமை வகிக்குமாறு அவரைக் கேட்டுக்கொண்டார்கள்.

அவர்கள் விஷயத்தை வல்லபபாய் பரிசீலனை செய்தார். அவர்கள் கூறுவது நியாயம் என்பதை அவர் கண்டபோதிலும், அரசாங்கத்திற்குச் சங்கடம் வேண்டாம் என்பதை முன்னிட்டும், நீண்ட காலத்திற்கு மக்களுக்குத் துன்பம் வேண்டாம் என்பதற்காகவும் கௌரவமான ஒரு யோசனையை அவர் கூறினார். மக்கள் கூறுவதில் நியாயம் இருக்கிறது என்பதை அரசாங்கம் ஒப்புக் கொள்ளவில்லையானால், இரு தரப்பு நியாயங்களைக் குறித்தும் விசாரிக்க பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையை அரசாங்கம் நியமிக்க வேண்டும் என்பதே அவர் கூறிய யோசனை. அந்த நீதிச் சபையின் முடிவுக்கு மக்கள் உடன்படுவார்கள் என்றும் அரசாங்கத்திற்கு அவர் வாக்குறுதியளித்தார். இந்த நியாயமான யோசனையை அரசாங்கம் அலட்சியம் செய்து நிராகரித்துவிட்டது.

ஆகையால், அரசாங்கம் கூறுவதற்கு மாறாக மக்கள் கூறுவதை இந்தியப் பொதுமக்கள் ஏற்றுக்கொண்டுவிட வேண்டும் என்று கேட்கவில்லை. பாரபட்சமற்ற நீதிச் சபையை நியமிக்க வேண்டும் என்ற கோரிக்கையை ஆதரிக்க வேண்டும் என்றே பொதுமக்கள் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர் அப்படி நீதிச் சபை நியமிக்கப்படாவிடில், இந்த வரி உயர்வை அமைதியான முறையில் எதிர்ப்பதோடு அவ்விதம் எதிர்ப்பதனால் நிலங்கள் பறிமுதல் செய்யப்படுவதுள்பட ஏற்படவிருக்கும் எல்லா

கஷ்டங்களையும் அனுபவிப்பது என்று தீரத்துடன் தாங்கள் செய்யும் முடிவை ஆதரிக்குமாறும் பொதுமக்களைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

இந்த சத்தியாக்கிரகத்திற்கும், சுயராஜ்யத்திற்காகச் செய்யும் சத்தியாக்கிரகத்திற்கும் மாறுபாடு உண்டு என்று ஸ்ரீ வல்லபபாய் சரியாகவே எடுத்துக் காட்டியிருக்கிறார். 1922-இல் பர்டோலி செய்திருக்க வேண்டிய சத்தியாக்கிரகத்தைப்போல இந்த வரி கொடாப் போராட்டம் சுயராஜ்யத்தை அடைவதற்கு என்று செய்யப்படும் போராட்டமாகாது. இந்தச் சத்தியாக்கிரகம் ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காகச் செய்யப் படுவது. அந்தப் பகுதி சம்பந்தமான ஒரு நோக்கத்திற்காக இது நடக்கிறது. இஷ்டம்போலெல்லாம் அக்கிரமமாக நிலத் தீர்வை உயர்த்தப்பட்டிருக்கிறது என்று பர்டோலி விவசாயிகள் கூறுகின்றனர். இத்தகைய வரியை எதிர்க்க வேண்டியது ஒவ்வொருவருக்கும் இருக்கும் உரிமை மாத்திரம் அல்ல, கடமையுமாகும். ஆனால், ஆரம்பிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் சத்தியாக்கிரகம் குறிப்பிட்ட நோக்கமுடையது, அந்த இடத்தில் மாத்திரம் நடக்கப்போவது என்றாலும், அது இந்தியா முழுமைக்கும் உரியதாகும். பர்டோலி விஷயத்தில் எது சரியோ, அது இந்தியா முழுமைக்கும் சரியானதே ஆகும். இப்போராட்டம் மறைமுகமாக சுயராஜ்யத்திற்கும் சம்பந்தமுடையது. தங்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் சம்பந்தமாக மக்கள் விழிப்படையும்படிச் செய்து, கட்டுப்பாட்டுடனும் அமைதியாகவும் எதிர்க்கும் பலத்தை அவர்களுக்கு அளித்து, துன்பங்களை அனுபவிக்கும் பழக்கத்தை அவர்களுக்குக் கொடுக்கும் எதுவும் நம்மைச் சுயராஜ்யத்திற்கு அருகிலேயே கொண்டுவரும்.

—'யங் இந்தியா' - 8—3—1928

★

[பாரபட்சமற்ற நீதிச் சபையை நியமித்து வரி உயர்வை விசாரணை செய்ய அரசாங்கம் மறுத்துவிடவே, ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் பர்டோலி தாலுக்கா முழுவதிலும் பதினாறு தொண்டர் முகாம்களை அமைத்தார். அவற்றில் 250 தொண்டர்களையும் வைத்தார். பர்டோலி விவசாயிகளின் பிரதிநிதிகளடங்கிய கூட்டம் 1928 பிப்ரவரி 12-ஆம் தேதி நடந்தது. முன்னிருந்த வரியைச் செலுத்தினாலே போதும் என்று அரசாங்கம் ஏற்றுக் கொள்ளும் வரையிலோ, நிலவரி உயர்வு சரியா என்பதைக் குறித்து விசாரிக்கப் பாரபட்சமற்ற ஒரு நீதிச் சபையை அரசாங்கம் நியமிக்கும் வரையிலோ, புதிதாக விதித்திருக்கும் வரியைக் கொடுக்க மறுத்துவிடும்படி அக்கூட்டம் நிலம் வைத்திருப்போரைக் கேட்டுக்கொண்டது. வரி கொடாமை சத்தியாக்கிரகமும் ஆரம்பமாயிற்று.

மக்களைப் பயமுறுத்திப் பணியும்படிச் செய்துவிட அரசாங்கம் தன்னால் முடிந்ததையெல்லாம் செய்து பார்த்து விட்டது. அதிகாரிகள், பட்டாணியரைக்கொண்டு வந்தார்கள். ஜங்கம சொத்துக்களையெல்லாம் ஜப்தி செய்து விற்றார்கள். எருமைகளையெல்லாம் ஓட்டிப் போய்விட்டனர். நிலங்களைப் பறிமுதல் செய்தார்கள். அந்த ஜில்லாவின் மொத்த நிலவரி வருமானத்தைவிட பன்மடங்கு மதிப்புள்ள நிலங்களைச் சொற்பத் தொகைக்கு ஏலத்தில் விற்றார்கள். "அவர்களால் முடிந்தால், உங்கள் நிலங்களை இங்கிலாந்துக்கு எடுத்துக்கொண்டு போகும்படி அரசாங்கத்தைச் சவாலுக்கு அழையுங்கள்" என்று கூறி ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் விவசாயிகளை உற்சாகப்படுத்தினர். எப்பொழுதும்போல் தங்கள் நிலத்திலேயே இருந்துகொண்டு சாகுபடி செய்து வரும்படியும் அவர்களுக்குக் கூறினர். பறிமுதலான நிலங்களிலிருந்து விவசாயிகளை வெளியேற்றிவிட யாரும் வரவில்லை. ஆனல், 87,000 மக்களிடையே வேலை செய்வதற்குத் திரட்டப்பட்டிருந்த 250 தொண்டர்களையும் கைது செய்து கடுமையான தண்டனைகளை விதித்தார்கள். பாட்டையில் உட்கார்ந்திருந்தது, கலெக்டரின் வீட்டைப் பார்த்துக்கொண்டிருந்தது என்பன போன்ற அற்ப குற்றச் சாட்டுகளையெல்லாம் காட்டி அவர்களைத் தண்டித்தார்கள்.

பர்டோலியில் நடந்த அடக்குமுறையைக் கண்டித்து பம்பாய் சட்டசபை உறுப்பினர்கள் ஏழு பேர் ராஜிநாமாச் செய்தனர். பர்டோலியைச் சேர்ந்த கிராமாதிகாரிகள் 63 பேர்களும் ராஜிநாமாச் செய்தார்கள். குஜராத்தின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரும் இந்திய மத்திய அசெம்பிளி சபாநாயகருமான ஸ்ரீ வித்தல்பாய் பட்டேல், இதில் குறுக்கிட்டு நியாயத்தைச் செய்யுமாறு வைஸ்ராயைக் கேட்டுக்கொண்டார். பர்டோலி போராட்டத்திற்கு மாதம் தோறும் ரூ. 1,000 கொடுத்துக்கொண்டு வந்தார்.

இனி கீழே கொடுக்கப்பட்டிருக்கும் காந்திஜியின் கட்டுரைகளும், பர்டோலிப் போராட்டத்தைக் குறித்து அப்பொழுது அவர் 'எங் இந்தியா'வில் எழுதியவைகளாகும்.]

# 3

# சோதனையில் பர்டோலி

பர்டோலியில் அரசாங்கம் சோதனையில் இருக்கிறது என்று ஒருவர் அவசரப்பட்டு எண்ணிவிடக்கூடும். ஆனால், அது தவறான அபிப்பிராயம். அரசாங்கம் எத்தனையோ தடவைகளில் சோதிக்கப்பட்டிருக்கிறது; அது சோதனையில் நிற்கமுடியவில்லை என்பதும் வெளியாகியிருக்கிறது. அதனுடைய முக்கிய அங்கங்கள் பாதிக்கப்பட்டு விடும்போது, 'பயப்படும்படிச் செய்வது'என்பதே அது அனுசரிக்கும் தருமம். அதனுடைய கௌரவத்திற்கோ, அதனுடைய வருமானத்திற்கோ ஆபத்து ஏற்பட்டுவிடும்போது, நியாயத்தைக்கொண்டோ, அநியாயத்தைக்கொண்டோ அதைக் காப்பாற்றிக்கொண்டுவிட அரசாங்கம் முற்பட்டு விடுகிறது. பயங்கர ஆட்சியை மேற்கொண்டு, யோக்கியமில்லாத பொய்களைக்கொண்டு அதற்கு நியாயம் கூற அரசாங்கம் தயங்குவதில்லை. பட்டாணியர்கள் கிராமங்களில் வைக்கப்பட்டிருக்கிறார்கள்; கிராமவாசிகளின் வீடுகளை இரவு பகல் சூழ்ந்து கொண்டிருக்கும்படி அப்பட்டாணியர் அறிவிக்கப்பட்டிருக்கின்றனர் என்று இப்பொழுது செய்தி கிடைத்திருக்கிறது. இதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கோ, கோபப்படுவதற்கோ எதுவும் இல்லை. பர்டோலியில் தண்டப் போலீஸை அவிழ்த்துவிட்டு, ராணுவ ஆட்சிப் பிரகடனமும் செய்யாமலிருப்பதுதான் ஆச்சரியப்பட வேண்டியதாகும். தண்டப் போலீஸ் என்றால் என்ன, ராணுவ ஆட்சி என்றால் என்ன என்பதை இதற்குள் நாம் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். இந்தத் துக்ககரமான நிலைமையில் கடைசியாக தாம் செய்யவேண்டிய காரியத்திற்கு ஏதாவது நியாயம் கிடைக்க வேண்டும் என்று பார்க்கிறார்கள். இப்பொழுது அது செய்யக் கிளம்பியிருக்கும் 'பயப்பிராந்தி'யின் மூலம், அற்பமேயானாலும் மக்கள் பலாத்காரத்தில் இறங்கி விடும்படித் தூண்டிவிடப் பார்க்கிறார்கள் என்பது தெளிவாகிறது. *

---

* பர்டோலியில் அரசாங்கம் அனுசரித்த அடக்குமுறையைக் குறித்துக் காந்திஜி 'எங் இந்தியா'வில் மற்றோர் சமயத்தில் வருமாறு எழுதினார்: ''ஹண்டர் கமிட்டி உறுப்பினர் ஒருவர் கேட்ட கேள்விக்குப் பதிலளித்த ஜெனரல் டயர், பயப் பிராந்தியை உண்டாக்குவதற்கே ஜாலியன்வாலா பாக்கில் அப்படித் திட்டமிட்டுச் செய்யப்பட்டது என்பதை ஒப்புக்கொண்டார். இதை டயர் ஒப்புக்கொண்டதன் மூலம் எந்தப் புதிய தத்துவத்தையும் அவர் வெளியிட்டுவிடவில்லை. 'பயப்பிராந்தி'யின் பெருமைக்கு 'உலகத்திலேயே மிகத் திறமை வாய்ந்ததான ஸிவில் அதிகார வர்க்கம்' அஸ்திவாரம் போட்டிருக்கிறது. எல்லோருக்கும் தெரிந்ததான இக்கொள்கையை அனுசரித்தே பர்டோலி விவசாயிகள் பணிந்துவிடும்படி கட்டாயப்படுத்துவதற்காக அவசர நடவடிக்கைகளை அரசாங்கம் விவசாயிகள்மீது எடுத்துக்கொண்டிருக்கிறது என்று பத்திரிகை அச்சுக்குப் போகும் நேரத்தில் கிடைத்த தகவல்களிலிருந்து தெளிவாகிறது, பர்டோலி

கடைசியாக இந்தச் சோதனையைப் பர்டோலி மக்கள் சமாளித்து நிற்பார்களா? இந்திய ஜன சமூகம் பிரமிக்கும்படி அவர்கள் இப்பொழுதே செய்திருக்கிறார்கள். ஆத்திரமூட்டும் பல காரியங்களுக்குமிடையே அவர்கள் வீரமான தங்கள் பொறுமையைக் காட்டியிருக்கிறார்கள். ஆத்திரமூட்டுவதற்குச் செய்யப்படும் மிகப் பெரிய செயல்களையும் அவர்கள் சமாளித்து நிற்பார்களா? அவர்கள் சமாளித்து நின்றுவிடுவதாயின், எல்லாவற்றிலும் அவர்கள் வெற்றி கொண்டவர்களாவார்கள். எல்லாவற்றையும்விட மானமே முக்கியம் என்று கருதுகிறவர்கள், சிறைப்படுவதையும், ஜப்திகளையும், நாடு கடத்தப்படுவதையும், சாவையும் சாதாரணமான விஷயங்களாகவே எடுத்துக்கொள்ள வேண்டும். பயங்கரம் தாங்க முடியாததாகிவிடும்போது மக்கள், இதுவரையில் தங்களுக்கே சொந்தம் என்று நம்பிக்கொண்டிருந்த நிலத்தைவிட்டு வெளியேறிவிடவேண்டும். பிளேக் நோய் பீடித்துவிட்ட வீடுகளையோ, இடங்களையோ காலி செய்துவிட்டு வெளியேறிவிடுவதுதான் புத்திசாலித்தனம். கொடுமையும் ஒரு வகையான பிளேக் நோயே. நாம் கோபமடையும்படியோ, பலவீனமாகிவிடும்படியோ அது செய்துவிடும்போலிருக்கும் போது, அப்படிச் செய்துவிடக்கூடிய இடத்திலிருந்து வெளியேறி விடுவதுதான் புத்திசாலித்தனம். அட்டூழியங்களுக்கு அடி பணிந்துவிடுவதைவிட வெளியேறிவிடுவதே மேலென்று கருதி வீரமுள்ள மக்கள் அவ்வாறே செய்திருக்கிறார்கள் என்பதற்குச் சரித்திரத்தில் எத்தனையோ சம்பவங்கள் உதாரணமாக இருக்கின்றன. *

---

சத்தியாக்கிரகிகள் சிலருக்கு ஜப்திக்கு ஆரம்ப நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவர்களெல்லாம் பிரபல வணிகர்கள். இதிலிருந்து இவர்கள் வேண்டுமென்றே நோட்டீஸ் கொடுக்கத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர் எனத் தெரிகிறது. வணிகர்கள் பலவீனமானவர்கள், பயந்தவர்கள். ஆகையால், ஜப்தி நோட்டீஸைக் கண்டதும் பணிந்துவிடுவார்கள் என்பதற்கே இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். வணிகர்கள் பலவீனமாகிவிட்டால் மற்றவர்களும் அப்படியே ஆகித் தீர வேண்டும் என்பதைத் தவிர இயற்கையானது வேறு என்ன என்றும் அதிகார வர்க்கம் விவாதிக்கக் கூடும். முதலில் காட்டப்படும் இப்பயப் பிராந்தியைக் குறித்து சத்தியாக்கிரகிகள் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஜப்தியையும், இன்னும் மோசமானதையும் அவர்கள் எதிர்பார்க்க வேண்டும் என்று அடிக்கடி கூறி வந்திருக்கிறோம். சத்தியாக்கிரகிகளிடம் பலம் இருந்தால், அதை அவர்கள் இப்பொழுது காட்டட்டும்.''

* பர்டோலியில் நடந்த பயமுறுத்தல் அக்கிரமத்தைத் குறித்துக் காந்திஜி அச்சமயம் 'நவஜீவனி'ல் எழுதியதாவது : "சேத் வீரசந்த் செலுத்த வேண்டியிருந்த வரி பாக்கி ரூ. 160. அத்தொகைக்கு அவர்மீது அரசாங்கம் ஒரு ஜப்தி வாரண்டைப் பிறப்பித்திருக்குமானால், அதைப் பொருட்படுத்தியிருக்க மாட்டோம். ஆனால், இந்த அற்பத் தொகைக்காக ஆயிரக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள நிலம் ஜப்தி செய்யப்பட்டிருப்பதாக அரசாங்கம் அவருக்கு நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது. இது டயரிஸமே தவிர வேறு எதுவுமல்ல. 'பல்லுக்குப் பல்' என்ற அநாகரிகச் சட்டத்தையும் மிஞ்சிவிடுகிறது, இக்கொள்கை. ஒரு ரூபாய்க் கடனுக்காக ஆயிர ரூபாயைப் பறிப்பவனைக் கொடியவன், ராவணன் என்றுதான் கூறவேண்டும். அரசாங்கமே செய்துகொண்

என்றாலும், அத்தகைய நடவடிக்கை அவசியமாகிவிடாது என்றே நம்புகிறேன். நல்லெண்ணமுள்ள நண்பர்கள் தலையிட்டுச் சமரசம் உண்டாக்க முயற்சித்து வருகிறார்கள் என்ற வதந்திகள் இருந்து வருகின்றன. தலையிடுவதற்கு அவர்களுக்கு உரிமை உண்டு; இது அவர்கள் கடமையாகவும் இருக்கக்கூடும். ஆனால், இந்த இயக்கத்தின் முக்கியத்தை இந்த நண்பர்கள் உணரட்டும். பலவீனமான ஒரு லட்சியத்திற்காகவோ, பலவீனமான மக்களுக்காகவோ அவர்கள் வாதாட வேண்டியதில்லை. பர்டோலி மக்கள், முற்றிலும் நியாயமேயான ஒரு லட்சியத்தில் உறுதியுடன் நிற்கிறார்கள். நியாயத்தைத்தான் அவர்கள் கேட்கிறார்களே யன்றி, யாருடைய தயவையும் அவர்கள் நாடவில்லை. சுயேச்சையான, பகிரங்கமான நீதிச்சபை விசாரணை வேண்டும் என்பது தான் அவர்கள் கட்சி. அத்தகைய நீதிச் சபை செய்யும் தீர்ப்புக்கு உடன்பட அவர்கள் தயாராயிருக்கிறார்கள். அத்தகைய நீதிச் சபையை நியமிக்க மறுப்பது, அரசாங்கம் இதுவரையில் செய்து வந்திருக்கும் நீதியையே மறுப்பதாகும். மக்கள் இதில் செய்யக்கூடியதெல்லாம், துன்பத்தை அனுபவிக்கத் தாங்களே தயாராக இருப்பதுதான். அப்படி இருக்கும் போது இத்தகைய லட்சியத்தில் குறைந்தபட்சம், அதிக பட்சம் என்பதற்கே இடமில்லை. தங்களுக்குள்ள ஒரு குறையை நிவர்த்தித்துக்கொள்ளுவதற்குத் துன்பங்களைத் தாங்களே அனுபவித்துக்கொள்ளுவது என்பதை நம்பியிருப்போர், அதற்கு உண்மையில் என்ன மதிப்பு உண்டோ அதைவிட அதிகமாக மதிப்பு போட்டுவிடுவதற்கில்லை. ஆகையால், எளிதாகக் கைவிட்டு விடவோ, சமரசம் செய்துகொண்டு விடவோ முடியாததான இந்தப் போராட்டத்தின் முக்கியத்தைத் தெரிந்துகொள்ளாதவர்கள் குறுக்கிடுவதால், மக்களுக்கும் அவர்களுடைய லட்சியத்திற்கும் அவர்கள் தீமை செய்தவர்களே ஆவார்கள்.

சத்தியாக்கிரகிகளுக்குப் பொது மக்கள் செய்தாகவேண்டிய கடமையும் ஒன்று உண்டு. நிதி உதவி செய்யுமாறு வல்லபபாய்

---

டிருக்கும் சட்டத்தின்படி பறிமுதல் செய்யவும் சிறையிலடைப்பதற்கும் அரசாங்கத்திற்கு எல்லா அதிகாரங்களும் இருக்கின்றன; அந்த அதிகாரங்களை உபயோகிக்க அரசாங்கம் தயங்கப் போவதே இல்லை என்பதை வல்லபபாய் பட்டேல் அநேக தடவைகளில் உங்களுக்கு ஞாபகப்படுத்தியிருக்கிறார். ஆகையால், இந்த ஜப்தி நோட்டீஸ்களைக் கண்டு நீங்கள் பயந்துவிட வேண்டாம். அரசாங்கமோ அல்லது இந்த நிலத்தை வாங்க முன்வரும் துரோகிகளோ, இந்நிலத்தை விழுங்கிவிட முடியாது என்பதை நீங்கள் நிச்சயமாக நம்புங்கள். அது விஷம் போன்றது; அவர்களையே அது வளைத்துக் கொண்டு விடும். தெய்விகமான பிரதிக்ஞைகளையும் சுயமதிப்பையும்விட பெரியதல்ல நிலம். நிலம் என்பதே இல்லாதவர்கள் இந்நாட்டில் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். அநேகருடைய நிலங்களைச் சென்ற வருட வெள்ளம் பாழாக்கிவிட்டது; மண் மேடாக்கி விட்டது. தெய்விக சக்தியால் ஏற்பட்ட அத்துயரத்தையே வீரத்துடன் தாங்கிக் கொள்ள குஜராத்தினால் முடிந்தது என்றால், மனிதரால் இழைக்கப்பட்டிருக்கும் இத் துன்பத்தை பர்டோலி தீரத்துடன் சமாளித்து நின்று, தனது பிரதிக்ஞையை நிறைவேற்றி வைக்கட்டும்."

விடுத்த கோரிக்கைக்கு இணங்க பலர் உதவி செய்திருக்கிறார்கள். நிதி உதவிக்குக் கோரிக்கை வெளியிடாதிருக்க எவ்வளவு காலம் முடியுமோ அவ்வளவு காலத்திற்கு அவர் கோரிக்கை வெளியிடாதிருந்திருக்கிறார் என்பது நினைவிருக்கட்டும். சிறைப் படுவோர் தொகை அதிகரித்தது, வேண்டுகோள் வெளியிடுவதை அத்தியாவசியமாக்கிவிட்டது. சீக்கிரமாகவும் தாராளமாகவும் பொது மக்கள் பண உதவி செய்வார்கள் என்றே நம்புகிறேன். இதேபோல, பொது மக்கள் விஷயமறிந்து தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டாக வேண்டியதும் முக்கியம். உண்மைகளைப் பொது மக்கள் கவனமாகப் பரிசீலனை செய்யட்டும். பிறகு நாடு முழுவதிலும் பொதுக்கூட்டங்களை நடத்தட்டும். ஜூன் 12-ஆம் தேதியையோ, சௌகரியமான வேறு ஒரு நாளையோ பர்டோலி தினமாகப் பிரகடனம் செய்து, எல்லாக் கட்சியினருமடங்கிய பொதுக்கூட்டங்களை நடத்தி, பர்டோலியில் கஷ்டப்படுவோரின் உதவிக்காக நிதி வசூலிக்கலாம் என்று ஸ்ரீ ஜெயராம்தாஸ் கூறும் யோசனை எனக்குப் பிடித்திருக்கிறது.

—'எங் இந்தியா' - 31—5—1928

## 4

# ஒத்துழையாமையா, சட்ட மறுப்பா?

பர்டோலியில் நடந்துவரும் இயக்கம் ஒத்துழையாமையே என்ற பயம் அரசாங்க வட்டாரங்களில் இருந்து வருகிறது. ஆகையால், ஒத்துழையாமைக்கும் சட்ட மறுப்புக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக்காட்ட வேண்டியது அவசியமாகிறது. விரிவான முறையில் பார்க்கும்போது இரண்டும் சத்தியாக்கிரகத்தைச் சேர்ந்தவையே. சத்தியத்தையும் அகிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட எல்லா முயற்சிகளும் சத்தியாக்கிரகத்தில் அடங்கியவையே. ஒத்துழையாமை என்பது, சுயராஜ்யத்தை அடைவதற்காக மற்றவைகளுடன் 1920-இல் கல்கத்தா காங்கிரஸில் நிறைவேறி அதே ஆண்டில் நாகபுரியிலும் ஊர்ஜிதம் செய்யப்பட்ட வேலைத் திட்டத்தில் கண்டவைகளையும் சேர்த்துக் கொள்ளுவதற்காகக் கொண்டு வரப்பட்டதாகும். அதன்படி, சுயராஜ்யத்தை அடையும் காரியத்திற்காக அல்லாமல், ஆட்சியிலிருக்கும் அரசாங்கத்துடன் சமரசம் பேசுவதோ, மனுச் செய்து கொள்ளுவதோ சாத்தியமில்லை. பர்டோலிப் போராட்டம் எதுவாக இருந்தாலும் சரி, அது சுயராஜ்யத்தை நேரடியாக அடைவதற்காக நடத்தும் ஒரு போராட்டம் அல்ல என்பது தெளிவானது. அத்தகைய ஒவ்வோர் விழிப்பும், பர்டோலியில் நடப்பதைப் போன்ற ஒவ்வோர் முயற்சியும், நேரடியான எந்த

முயற்சியையும்விட சுயராஜ்யத்தைக் கிட்டத்தில் கொண்டு வந்து விடும் என்பது சந்தேகத்திற்கு இடமில்லாத உண்மையாகும். ஆனால், பர்டோலியில் நடக்கும் போராட்டம், குறிப்பிட்ட குறைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்காக நடக்கும் போராட்டம். குறைகளுக்குப் பரிகாரம் கிடைத்தவுடனேயே அந்தப் போராட்டம் நின்றுவிடும். ஆரம்பத்தில் இதில் அனுசரிக்கப்பட்ட முறை, சம்பிரதாயமான கோரிக்கை, மனுச் செய்துகொள்ளுதல் மூலமே. சம்பிரதாயமான இம்முறைகளினால் ஒன்றும் முடியாது போய்விடவே, சட்ட மறுப்புக்குத் தங்களுக்குத் தலைமை வகிக்குமாறு ஸ்ரீ வல்லபபாய் பட்டேலை பர்டோலி மக்கள் அழைத்தார்கள். அங்கே சட்ட மறுப்பு என்பது, அதிகாரத்திலிருக்கும் அரசாங்கம் பிறப்பித்திருக்கும் சட்டங்களையும் விதிகளையும் எதிர்த்துச் சட்ட மறுப்புச் செய்வது என்பது அல்ல. தங்கள்மீது முறையில்லாமல், அநியாயமாகச் சுமத்தப்பட்டிருப்பது என்று விவசாயிகள் கூறும் வரியின் ஒரு பகுதியைச் செலுத்த மறுப்பதுதான் அங்கே நடக்கும் சட்ட மறுப்பு. கடன் பட்ட தனிப்பட்டவர் ஒருவர், கடன் கொடுத்தவர் ஒருவர் தனக்குச் சேர வேண்டும் என்று சொல்லும் தொகையில் ஒரு பகுதியை ஆட்சேபிப்பதைப் போன்றதுதான் அது. பட்ட கடனில் தான் ஒப்புக்கொள்ளாத ஒரு பகுதியைக் கொடுக்க மறுத்துவிட கடன்பட்டிருக்கும் தனிப்பட்டவர் ஒருவருக்கு உரிமை உண்டு என்றால், அநியாயமாக அதிக வரி விதிக்கப்பட்டிருக்கிறது என்று கருதும் விவசாயிக்கும் அந்த வரியைக் கொடுக்க மறுத்துவிட அதே போல உரிமை உண்டு. ஆனால், பர்டோலி மக்கள் எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கை நியாயமானது என்பதை நிரூபிப்பது அல்ல இங்கே என் நோக்கம். சுயராஜ்யத்தை நோக்கமாகக் கொண்ட ஒத்துழையாமைக்கும், குறிப்பிட்ட குறைகளை நிவர்த்தித்துக்கொள்ளுவதையே நோக்கமாகக் கொண்ட பர்டோலி சட்ட மறுப்புக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக்காட்டுவதே இங்கே எனது நோக்கம். இது இப்பொழுது சந்தேகத்திற்கு இடமில்லாமல் தெளிவாக்கப்பட்டிருக்கிறது என்று நம்புகிறேன். ஸ்ரீ வல்லபபாயும், அவர் தலைமையில் இருந்து வரும் ஊழியர்களில் பெரும்பாலோரும் உறுதியான ஒத்துழையாதார்கள் என்பது வேறு விஷயம். இவர்கள் இப்பொழுது யாருக்குப் பிரதிநிதிகளாக இருக்கிறார்களோ அவர்களில் பெரும்பான்மையினர் ஒத்துழையாதார்கள் அல்ல. தேசீய ஒத்துழையாமை நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. திக்கற்ற நிலையில் ஒத்துழைப்பவர்களாக இருப்போரின் கட்சியை எடுத்துக் கூறுமலிருக்கும்படி ஓர் ஒத்துழையாதாரை அவருடைய சொந்தக் கொள்கை தடுப்பதில்லை.

'எங் இந்தியா' 19—7—1928

# 5

# சத்தியாக்கிரகத்தின் எல்லைகள்

சர்தார் சார்தூல் சிங் கீர்த்தி வாய்ந்த ஓர் ஊழியர். பர்டோலியின் கோரிக்கைக்கு ஆதரவாக அனுதாபச் சட்ட மறுப்புச் செய்ய வேண்டும் என்று நான் கூற வேண்டும் என எனக்கு ஆலோசனை கூறி அவர் எழுதியிருக்கும் பகிரங்கக் கடிதத்திற்குப் பதில் கூற வேண்டியது அவசியமாகிறது. ஏனெனில், முக்கியமாக என் நிலைமையைத் தெளிவாக்க இது உதவுகிறது. அரசாங்கம் சொல்லி வருவதைப் போன்று பர்டோலிப் போராட்டம் சட்ட விரோதக் கலவரப் போராட்டமாகவே இருக்குமாயின், அனுதாபச் சத்தியாக்கிரகத்தைவிட, அதுவும் சர்தாரின் கடிதம் கூறுவதைப் போன்று எல்லை எதுவுமில்லாத சத்தியாக்கிரகத்தைவிட அதிக கவர்ச்சியானதும், அதிக இயற்கையானதும் வேறு எதுவும் இருப்பதற்கில்லை. ஆனல், சர்தார் சரியானபடியே வருமாறு கூறுகிருர்: 'பர்டோலி விவசாயிகளைத் தனியாகவே வைத்திருக்க வேண்டும் என்ற போக்கு பிரபலமான குஜராத் ஊழியர்களிடையே இருப்பதைக் காண்கிறேன். ஸ்ரீ வல்லபபாயின் பிரசங்கங்களிலிருந்தும், நீங்கள் எழுதியிருப்பவைகளிலிருந்தும் இந்த அபிப்பிராயம் என் மனத்தில் உண்டாகியிருக்கிறது. இந்த விஷயத்தில் யோக்கியப் பொறுப்பைக் குறித்து மேலும் எண்ணுவது, அனுபவ ராஜீயத்திற்கு அப்பாற்பட்டதாகும் என்று நண்பர்கள் எண்ணுகிருர்கள்.'

சர்தார் கொண்டிருக்கும் அபிப்பிராயம் சரியானதே. இப்போராட்டத்தின் வாய்ப்பை, அப்பகுதிக்கு மட்டுமே பொருளாதாரப் பிரச்னையாகவே கண்டிப்பாகக் கட்டுப்படுத்தி வைத்துவிட வேண்டும் என்பதற்காகவும், ராஜீய சம்பந்தமில்லாததாக அதைச் செய்ய வேண்டும் என்பதற்காகவும், ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரும் மற்றவர்களும் பர்டோலிக்குப் போவதை ஸ்ரீ வல்லபபாய் அனுமதிக்கவில்லை. ஆனல், அரசாங்கம் அதற்கு ராஜீயத் தன்மையை உண்டாக்கி, தங்களுடைய அடக்குமுறைகளினல் இதை அகில இந்தியப் பிரச்னையாக்கிவிட்ட பிறகே, அதன் கடிவாளம் தளர்த்தப்பட்டுவிட்டது. பொதுஜனத் தலைவர்கள் பர்டோலிக்குப் போவதை அதற்குமேல் தடுத்துவிட ஸ்ரீ வல்லபபாயால் முடியவில்லை. என்றாலும், வருவதற்கு அவருடைய ஆலோசனையையோ, அனுமதியையோ கேட்பவர்களுக்கு, 'இதற்குள் வர வேண்டாம்' என்றுதான் அவர் கூறி வருகிருர்.

சர்தார் சார்தூல் சிங்கின் யோசனைக்கு ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் என்ன பதில் சொல்லுவார் என்பது எனக்குத் தெரி

யாது. ஆனால், 'இதற்குள் வேண்டாம்' என்றுதான் நான் கூறு வேன். எல்லைக்கு உட்பட்ட அனுதாபச் சத்தியாக்கிரகத்தைச் செய்வதற்கான சமயமும் இன்னும் வந்துவிடவில்லை. தனக் குள்ள தீரத்தின் தகுதியைப் பர்டோலி இன்னும் நிரூபித்தாக வேண்டியிருக்கிறது. கடைசிச் சூட்டையும் தாங்கிக்கொண்டு நிற்க அதனால் முடியுமானால், அரசாங்கம் அந்த எல்லைக்கும் அப்பால் போய்விடுமாயின், அப்பொழுது சத்தியாக்கிரகம் பரவிவிடுவதைத் தடுப்பதற்கோ, யோக்கியமான புனர் விசா ரணைக்கும் அதன் இயல்பான முடிவுகளுக்கும் பிரச்னையைக் கட்டுப்படுத்தவோ நானோ, ஸ்ரீ வல்லபபாயோ எதுவுமே செய்ய முடியாமற் போய்விடும். அப்பொழுது தன்னலத் தியாகத்திற் கும், துன்பங்களைத் தாமே அனுபவித்துக்கொள்ளுவதற்கும் மொத்தத்தில் இந்தியா முழுவதற்குமுள்ள சக்தியை அனுசரித்து சத்தியாக்கிரகத்தின் எல்லை வகுக்கப்படும். அப்படிப்பட்ட வளர்ந்த ஒரு நிலை வருவதாயிருந்தால், அது இயற்கையான தாக இருப்பதோடு, எவ்வளவுதான் அதிக பலம் பொருந்திய தாயிருந்தாலும் அதனால்கூட நிறுத்திவிட முடியாததாகவும் அது இருக்கும். ஆனால், சத்தியாக்கிரக உணர்ச்சியையும் அது வேலை செய்யும் விதத்தையும் நான் அறிந்துகொண்டிருக்கும் வரையில், ஒன்று என் கடமையும் ஸ்ரீ வல்லபபாயின் கடமையு மாகிறது. ஆத்திரமூட்டும் காரியங்களை அரசாங்கம் செய்து வந்தபோதிலும், முதலில் வகுத்த எல்லையைத் தாண்டி விடுவதை யும் நியாயமாக்கும் அளவுக்கு அரசாங்கம் செய்யும் காரியங்கள் இருந்தபோதிலும், அந்த எல்லைக்கு அப்பாற் போகாமல் அந்த இயக்கத்தை தடுப்பதுதான் எங்கள் கடமை.

உண்மை என்னவென்றால், கடவுள் உடனிருக்கிறார், அவர் வழிகாட்டுகிறார் என்பதே சத்தியாக்கிரகத்தின் முதற்படி யாகும். தலைவர், கடவுள் அருளைத்தான் நம்பியிருக்கிறாரே யன்றித் தம் சொந்த பலத்தை நம்பியிருப்பதில்லை. தம் அந்தராத்மா சொல்வதற்கு ஏற்ப அவர் நடக்கிறார். ஆகையால், அவருடைய நடவடிக்கை பெரும்பாலும் அனுபவ சாத்தியமான ராஜீயமாயிருந்த போதிலும், அனுபவ சாத்தியமான ராஜீயம் எனப்படுவதெல்லாம் அவர் விஷயத்தில் போலிச் சரக்குகளா கவே இருக்கின்றன. இந்தியா இதுவரையில் சமாளிக்க வேண் டியிருந்த போராட்டங்களிலெல்லாம் இது அதிகக் கடுமையான தாக இருந்துவிடப் போகிறது என்றுள்ள இச்சமயத்தில், நான் கூறுவதெல்லாம் பைத்தியக்காரத்தனமானது, கற்பனையானது என்றே தோன்றக்கூடும். ஆனால், ஆழ்ந்த உண்மை என்று நான் உணருவதைச் சொல்லத் தவறிவிடுவேனாயின், நாட்டு மக்களுக் கும் எனக்கும் நான் உண்மையற்றவனே ஆவேன். பர்டோலி மக்களைக் குறித்து வல்லபபாய் என்ன நம்புகிறாரோ அப்படியே தான் அவர்கள் இருக்கிறார்கள் என்றால், அரசாங்கம் தன்னிட மிருக்கும் எல்லா ஆயுதங்களையும் உபயோகித்தாலும்கூட, எல்

லாம் நன்ருகவே முடியும். நாம் பொறுத்திருந்து பார்ப்போம். சமரசத்தில் அக்கறை கொள்ளும் சட்டசபை உறுப்பினர்களும் மற்றவர்களும், பர்டோலி மக்களைக் காப்பாற்றிவிடலாம் என்ற நம்பிக்கையில், பலவீனமான காரியம் எதையும் செய்துவிடா மலிருக்கட்டும்.* கடவுளின் திருக்கரங்களில் அம்மக்கள் பத்திர மாகவே இருக்கிருர்கள்.

— 'எங் இந்தியா' — 2—8—1928

## 6

# எல்லாம் நன்ருகவே முடிந்தது

பர்டோலி சத்தியாக்கிரக சம்பந்தமாக ஒரு சமரசமுடிவு† ஏற்பட்டிருப்பது உண்மையாகவே சந்தோஷப்பட வேண்டிய விஷயமாகும். எல்லாம் சரியாக இருப்பது நன்ருகவே முடியும். பம்பாய் அரசாங்கத்திற்கும், பர்டோலி, வாலாடு மக்களுக்கும், ஸ்ரீ வல்லபபாய்க்கும் என்னுடைய பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

---

* பம்பாய் சட்டசபை அங்கத்தினர்கள் சிலர் அரசாங்கத்துடன் பர்டோலி சம்பந்தமாக சமரசம் ஏற்பட்டுவிடும்படிச் செய்ய முயன்றதைக் குறித்தே இங்கே காந்திஜி குறிப்பிடுகிருர். கவர்னர், சத்தியாக்கிரக இயக்கத்தைச் சட்ட விரோதமான கலவர இயக்கம் என்று பேசியதைக் கூட்டு தேசியக் கட்சியைச் சேர்ந்த 50 சட்டசபை உறுப்பினர்கள் கண்டித்து அறிக்கை வெளியிட்டார்கள். ஆனுல், இதில் சமரசம் வேண்டுமானுல் அந்தப் போராட்டத்தின் கர்த்தாவுடன் நேரடியாக அரசாங்கம் பேச வேண்டும் என்று அவர்கள் சொல்லத் தவறிவிட்டார்கள். ஸ்ரீ ராமச்சந்திர பட்டா என்ற வர்த்தகர், பழைய வரிக்கும் புதிய வரிக்குமுள்ள வித்தியாசத் தொகை முழுவதையுமே தாம் கட்டிவிடத் தயார் என்று அரசாங்கத்திற்கு அறிவித்தார். அரசாங்கத்தின் தூண்டுதலின் பேரிலேயே இவர் இப்படிக் கூறுகிருர் என்பது பிறகு தெரிந்தது. ஆகவே, பர்டோலி மக்களைப் பலவீனப் படுத்திவிடும் காரியம் எதையும் செய்துவிட வேண்டாம் என்று காந்திஜி மேலே கண்ட கட்டுரையில் எச்சரிக்கை செய்தார்.

† அரசாங்கம் அதிக வீம்புடனேயே இருந்துவந்தது. புதிய வரியை உடனே செலுத்திவிட வேண்டும் என்றும், ஆட்சேபிக்கப்படும் விஷயங்களில் ரெவினியூ அதிகாரி பிறகு விசாரிப்பார் என்றும் ஓர் இறுதி எச்சரிக்கையையும் வெளியிட்டது. ஆனுல், ஸ்ரீ வல்லபபாய் பட்டேல், சத்தியாக்கிரகக் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும், விற்றுவிட்ட, பறிமுதல் செய்த நிலங்களைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும், ஜப்தி செய்த ஜங்கம சொத்துக்களின் இப்போதைய விலையைக் கொடுக்க வேண்டும், உத்தியோகத்திலிருந்து விலக்கியவர்களுக்குத் திரும்ப வேலை கொடுத்து தண்டித்திருப்பவர்களின் தண்டனையை ரத்துச் செய்ய வேண்டும் என்று கேட்டார். இவை ஏற்றுக்கொள்ளப்படுமானுல், ஜனங்கள் போய் சாட்சியம் கூறும் நீதி விசாரணையாக இருப்பின், அதிகாரிகள் விசாரணையாக இருந்தாலும் தாம் ஏற்றுக்கொள்ளுவதாகச் சொன்னுர். விசாரணை நடத்துவதாக அறிவித்தால் சத்தியாக்கிரகம் நிறுத்தப்படும்

ஸ்ரீ வல்லபபாயின் உறுதியும் கண்ணியமும் இல்லாதிருந்தால் சமரச முடிவே ஏற்பட்டிருக்காது. சத்தியாக்கிரகிகள் என்ன வேண்டும் என்று கேட்டார்களோ, அவற்றையெல்லாம் அவர்கள் அடைந்து விட்டனர் என்பதை வாசகர் கவனிக்க வேண்டும். விசாரணைக் கமிட்டியின் விசாரணைக்கு விடப்பட்டிருக்கும் விஷயங்களுக்கு அதிகமாக விரும்புவதற்குமில்லை. மக்கள் வரியைச் செலுத்திவிடும்படிச் செய்வதற்காக அரசாங்கம் அனுசரித்த நிர்ப்பந்த முறைகளைக் குறித்து விசாரணை இருக்கப் போவதில்லை என்பது உண்மையே. விற்பனையாகிவிட்ட நிலமுள்பட பறிமுதலான நிலமெல்லாம் திருப்பிக் கொடுக்கப்பட்டு விடுகிறது. உத்தியோகத்திலிருந்து நீக்கப்பட்டு விட்ட கிராமாதிகாரிகள் திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றனர். மற்றும் சில சில்லறை விஷயங்களும் கவனிக்கப் படுகின்றன. இவற்றையெல்லாம் பார்த்து சர்தார் பட்டேல் தாராளமாகவே அந்த நிபந்தனையை விட்டுக் கொடுத்திருக்கிறார். செய்யப்பட்டிருக்கும் பரிகாரங்களை விட வேறு நிவாரணம் அளிக்க முடியாத பழைய தவறுகளைக் கிளறிக் கொண்டிருக்காமலிருப்பதே நல்லது. நிர்ப்பந்த முறைகளைப் பற்றிய விசாரணை வேண்டும் என்ற ஷரத்தை விட்டுக் கொடுத்திருப்பதால் வரி விதிப்பைப் பற்றிய விசாரணை அமைதியான சூழ்நிலையில் நடத்தப் படும்.

சத்தியாக்கிரகிகள், தங்களுக்கு உரியதான சிறந்த வெற்றியையே அடைந்திருக்கிறார்கள். என்றாலும், அதனால் அவர்கள் அயர்ந்து சும்மா இருந்து விடக்கூடாது. வரிவிதிப்பு சம்பந்தமாகத் தாங்கள் கூறி வந்திருக்கும் குற்றச்சாட்டை நிரூபிப்ப

---

என்றும், பழைய வரியை மக்கள் கொடுத்துவிடுவார்கள் என்றும் ஸ்ரீ பட்டேலும் காந்திஜியும் உறுதி கூறினர்.

நிலைமையைக் கவனிப்பதற்காகக் காந்திஜி ஆகஸ்டு 2-ஆம் தேதி பர்டோலிக்குச் சென்றார். அரசாங்கம் வாக்குறுதி வேண்டும் என்று கேட்டு வந்ததால் சில சட்டசபை உறுப்பினர்கள் ஏதோ அர்த்தமில்லாத வாக்குறுதியை அளித்தனர். அரசாங்கம் அதை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு ஸ்ரீ வல்லபபாயின் இறுதி எச்சரிக்கையில் கண்டபடியே ஒரு விசாரணையை நடத்த உத்தரவிட்டுவிட்டனர். சில நாட்களுக்கெல்லாம் சத்தியாக்கிரகக் கைதிகள் விடுதலையாயினர்; ஜப்தி செய்திருந்த நிலங்களைத் திருப்பிக் கொடுத்து விட்டனர். உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்டிருந்த கிராமாதிகாரிகளுக்குத் திரும்பவும் வேலை கிடைத்தது. இவ்விதம் பர்டோலிப் போராட்டத்தில் திடீரென்று ஏற்பட்ட சமரச முடிவையே காந்திஜி மேலே கண்ட தமது கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

நிலத்தீர்வை உயர்வைக் குறித்து விசாரிக்க அரசாங்கம் நியமித்த புரும்பீல்டும், மாக்ஸ்வெல்லும், செய்யப்பட்டிருந்த நிலத்தீர்வை விதிப்பு வேலையையும் ரெவினியூ அதிகாரிகளையும் கண்டித்தனர். 'கிளர்ச்சிக்காரர்கள்' என்று கூறப்பட்டவர்களின் சிறந்த ஒத்துழைப்பைப் பாராட்டினார்கள். நிலத்தீர்வையில் முன்னால் செய்திருந்த 22 சத விகித உயர்வை 5·7 சத விகிதமாகக் குறைக்க வேண்டும் என்று சிபாரிசு செய்தனர். இது எல்லோருக்கும் திருப்தியளித்துவிடவில்லை யெனினும், சுயேச்சையான விசாரணை நடத்த வேண்டும் என்ற கொள்கைக்கு வெற்றி ஏற்பட்டது.

தற்கு வேண்டிய ஆதாரங்களையெல்லாம் சேகரித்து அவர்கள் ஒன்று திரட்டியாக வேண்டும்.

எல்லாவற்றையும்விட முக்கியமாக, சத்தியாக்கிரகிகள் தங்கள் நிலையைப் பலப்படுத்திக் கொள்ள வேண்டுமானால் நிர்மாண வேலைகளை இரட்டிப்பு மடங்கு உற்சாகத்துடன் தொடர்ந்து செய்து வர வேண்டும். இந்தக் கஷ்டமான, மெதுவான, ஆடம்பரமற்ற நிர்மாண வேலையைச் செய்வதிலுள்ள ஆற்றலையும் விருப்பத்தையும் பொறுத்துத்தான் அவர்கள் பலம் இருக்கிறது. தம்மிடமுள்ள சமூகத் தீமைகள் பலவற்றை அவர்கள் போக்கிக் கொண்டாக வேண்டும். ராட்டையில் கவனஞ் செலுத்துவதன் மூலம், அவர்கள் தங்கள் பொருளாதார நிலையைச் சீர்படுத்திக் கொள்ள வேண்டும். அவர்களிடையே விழிப்பு ஏற்படும்படிச் செய்திருப்பது ராட்டையே. தங்களிடையே இருந்து வரும் குடிப் பழக்க அவமானத்தையும் அவர்கள் போக்கிக் கொள்ள வேண்டும். கிராம சுகாதாரத்தில் கவனஞ் செலுத்துவதோடு நன்றாக நடத்தப் படும் பள்ளிக்கூடம் ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கும்படியும் செய்ய வேண்டும். உயர்ந்த சாதியார் என்று சொல்லப்படுவோர், தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட வகுப்பாருடன் நண்பர்களாக இருக்க வேண்டும். இத்தகைய காரியங்களில் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக கவனஞ் செலுத்துகிறார்களோ அவ்வளவுக்கு, இப்பொழுது ஏற்பட்டதைப் போன்ற நெருக்கடியைச் சமாளித்துக் கொள்ளுவதற்கு வேண்டிய சக்தி அவர்களுக்கு அதிகமாக இருக்கும்.

— 'எங் இந்தியா' - 9—8—1928

## 7

# காலத்தின் அறிகுறி

பர்டோலி, காலத்தின் அறிகுறி. அரசாங்கம், மக்கள் ஆகிய இருவருக்குமே அது ஒரு படிப்பினையாகவே இருக்கிறது. உண்மை, மக்களின் பக்கத்திலிருந்து, அதை வெளிப்படுத்துவதற்கு அகிம்சை முறையில் அவர்கள் ஒன்றுபட்டு விடும்போது மக்களுக்கு இருக்கும் சக்தியை அரசாங்கம் உணருவதாயிருந்தால் பர்டோலி அதற்கு ஒரு படிப்பினை. அப்படி உணர்ந்து கொள்ளுவதன் மூலம் புத்திசாலித்தனமுள்ள ஓர் அரசாங்கம் அதன் சக்தியை பலப்படுத்திக் கொள்ளுகிறது. அப்பொழுது அந்தச் சக்தி, மக்களின் நல்லெண்ணத்தினாலும் ஒத்துழைப்பினாலும் வளர்ந்ததாக ஆகிறது. அகிம்சை ஆற்றல் சரியானபடி சேகரித்து வைக்கப்படுமாயின், எதனாலும் எதிர்க்க முடியாததான ஒரு சக்தியை அது வெளியிடுகிறது.

இப்பொழுது பர்டோலி மக்கள் விஷயத்திற்கு வருவோம். அகிம்சையில் அவர்கள் ஒன்றுபட்டு இருந்துவரும் வரையில், அவர்கள் அஞ்சவேண்டியது எதுவும் இல்லை. உடன்பட மறுக்கும் அதிகாரிகளுக்கும் அஞ்ச வேண்டியதில்லை என்பதே பர்டோலி மக்கள் அறிந்துகொள்ள வேண்டிய படிப்பினை. ஆனால், அப் படிப் பினையை அவர்கள் அறிந்து கொண்டிருக்கிறார்களா? அகிம்சை யின், கண்ணுக்குப் புலனாகாத சக்தியை அவர்கள் உணர்ந்திருக் கிறார்களா? பலாத்காரச் செயல் ஒன்றைச் செய்திருந்தால் கூட, தங்கள் கட்சியே தோற்றுப் போயிருக்கும் என்பதை அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்களா? அவர்கள் அறிந்து கொண்டு விட்டனர் என்றால், தொடர்ந்து ஒன்றுபட்டுத் தூய்மையாக்கிக் கொள்ளுதல் என்று சொல்லக்கூடிய ஒரு முறையை அவர்கள் அனுசரித்தாலன்றி, அகிம்சை ஸ்தாபனமாக அவர்கள் ஆகமாட் டார்கள் என்பதை நாளுக்கு நாள் அவர்கள் தெரிந்து கொள்ளு வார்கள். ஒன்றுபட்ட முயற்சி அவசியமானதாக இருக்கும் நிர் மாண வேலைத் திட்டத்தை நன்றாகச் சிந்தித்து அமைத்துக் கொண்டு, அதை நிறைவேற்றிவருவதன் மூலமே இதை அவர்கள் செய்ய முடியும். அதாவது, அகிம்சை ஸ்தாபனமாக ஆகிவிட் டோம் என்று அவர்கள் சொல்லிக் கொள்ளுவதற்கு முன்னால், அகிம்சையில் அவர்கள் போதனையைப் பெற வேண்டும். பேச் சுக்களும் எழுத்துக்களும் அவசியமானதாகவே இருக்கலாம். என்றாலும், அவர்கள் பெற வேண்டிய போதனை பேச்சுக்களி னாலும் எழுத்துக்களினாலும் அல்ல. ஆனால், ஒவ்வொன்றும் அகிம்சை உணர்ச்சியை எழுப்புவதாயிருக்கும் ஒன்றுபட்ட செயல்களை இடைவிடாது செய்து வருவதால் அந்தப் போத னையை அவர்கள் அடைய வேண்டும். தாம் என்ன செய்ய விரும்புகிறார் என்பதை ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் அறிவார். ஆக்க வேலை முயற்சி அல்லது உள்ளூறச் சீர்திருத்தஞ் செய்துகொள்ளு வதான இந்த அதிகக் கஷ்டமான வேலையை அவர் தம்முடைய தாக்கிக் கொண்டிருக்கிறார். அரசாங்கத்திற்கு எதிராக நடத்திய போராட்டத்தில் அவருக்கு என்ன வெற்றி கிடைத்ததோ, அதே வெற்றியை அவருக்குக் கடவுள் இதிலும் அளிப் பாராக.

—'யங் இந்தியா' - 16—8—1928



சாபர்மதி ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் 78 பேர், தண்டி உப்புச் சத்தியாக்கிரக யாத்திரைக்குப் புறப்படத் தயாராக இருக்கின்றனர். —*12*, மார்ச், *1930*



தண்டிக்கு சத்தியாக்கிரகிகளும் காந்திஜியும் போய்க்கொண்டிருக்கின்றனர்.

பகுதி பதினொன்று

# உப்புச் சத்தியாக்கிரகம்

*[பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்த சில தீமைகளுக்குப் பரிகாரம் தேடுவதற்காகக் காந்திஜி 1930-இல் சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பித்தார். சட்டத்தை மீறுவதற்கு உப்பு வரிச் சட்டத்தை ஒரு குறியாக வைத்துக் கொண்டார். வயிற்றுக்கு வழியில்லாமல் இந்நாட்டில் திண்டாடும் ஏழை மக்கள், குடிக்கும் கஞ்சிக்குப் போடும் கொஞ்ச உப்புக்கும் வரி கொடுப்பது என்பது அக்கிரமம் என்பதைக் காட்டவே உப்புச் சட்டத்தை மீறும் போராட்டத்தை நடத்தினர். இந்தப் போராட்டம் ஆரம்பமாவதற்கு முன்னால் இருந்த நிலைமையை இங்கே நினைவூட்டுவது அவசியமாகும்.*

*பூரண சுயராஜ்யமே இந்தியாவின் அரசியல் லட்சியம் என்ற தீர்மானம் 1929-இல் லாகூர் காங்கிரஸில் நிறைவேறியது. சுதந்திரமளிக்காவிடில் சட்ட மறுப்பை ஆரம்பிப்பது என்றும் அத்தீர்மானம் கூறியது. இதைக் குறித்து அப்பொழுது இந்தியா உதவி மந்திரியாக இருந்த எர்ல் ரஸ்ஸல், பிரிட்டிஷ் தொழிற் கட்சிக் கூட்டத்தில் பேசுகையில், "பூரண சுதந்திரம் என்று பேசுவது எவ்வளவு பைத்தியக்காரத்தனம் என்பதை மற்றவர்களையெல்லாம்விட இந்தியரே நன்கு அறிவார்கள்" என்றார். டொமினியன் அந்தஸ்து என்பதுகூட இப்போதைக்குச் சாத்தியமில்லை, இன்னும் வெகு காலத்திற்கும் சாத்தியமில்லை என்றார்.*

*இந்திய மக்களின் நியாயமான கோரிக்கைக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் இணங்கிவிடப் போவதில்லை என்பது தெரிந்துவிட்டது. 1930 ஜனவரி 2-ஆம் தேதி நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டி, பூரண சுயராஜ்ய லட்சியத்தை ஆதரித்து ஜனவரி 22-ஆம் தேதி நாடெங்கும் பொதுக் கூட்டங்களை நடத்தக் கோரிக்கை வெளியிட்டது. ஸ்ரீ மோதிலால் நேரு, லாகூர் காங்கிரஸின் ஆக்ஞையை அனுசரித்து மத்திய சட்டசபை, மாகாணச் சட்டசபை உறுப்பினர்களையெல்லாம் ராஜினாமாச் செய்யுமாறு அறிவித்*

தார். இரு வாரங்களுக்கெல்லாம் டில்லியில் பண்டித மாளவியாவின் தலைமையில் நடந்த மத்திய சட்டசபை, ராஜாங்க சபை அங்கத்தினர்களின் கூட்டத்தில், மத்திய சட்டசபை, மாகாண சபை உறுப்பினர்கள் ராஜிநாமாச் செய்ய வேண்டாம் என்று கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றினர்கள். ஆனல், ஜனவரி 20-ஆம் தேதி மத்திய சட்டசபை கூடியபோது காங்கிரஸ் அங்கத்தினர்களில் பெரும்பான்மையினர், காங்கிரஸ் ஆக்ஞைப்படி ராஜிநாமாச் செய்துவிடவே தயாராக இருக்கிறார்கள் என்பது தெரிந்தது. பின்னர் பண்டித மாளவியாவும் ஸ்ரீ வித்தல்பாய் பட்டேலும்கூட ராஜிநாமாச் செய்துவிட்டனர்.

1930 ஜனவரி 9-ஆம் தேதி 'எங் இந்தியா' வில் காந்திஜி எழுதுகையில், "முற்றிலும் அகிம்சையோடுகூடிய சூழ்நிலை இருக்குமானல், நிர்மாண வேலைத் திட்டமும் நிறைவேற்றப்படுமாயின், பொதுஜன சட்ட மறுப்பு இயக்கத்திற்குத் தலைமை வகித்துச் சில மாதங்களுக்குள்ளேயே வெற்றிகரமான முடிவுக்கு நடத்திச் செல்லத் தயாராயிருக்கிறேன்" என்றார்.]

1

# தூய தியாகத்திற்குத் தயாராகுக

சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்படுவதாக இருந்த தருணத்தில், குஜராத் வித்தியா பீட மாணவர்களிடையே பேசிய காந்திஜி, நாட்டின் மானத்தைக் காப்பதற்காக உயிரைக் கொடுக்கவும் தயாராக இருங்கள் என்றார். அவர் கூறியதாவது:

"லாகூர் காங்கிரஸில் நிறைவேறிய பூரண சுயராஜ்யத் தீர்மானத்தைக் குறித்தும், முக்கியமாக அத்தீர்மானத்தில் கண்ட சட்ட மறுப்பைக் குறித்தும் நான் ஏதாவது கூறுவேன் என்றே எதிர்பார்ப்பீர்கள். அப்போராட்டத்தில் உங்கள் பங்கு எதுவாக இருக்கும் என்பதை அறியவும் நீங்கள் விரும்புவீர்கள். சரி, நான் அடிக்கடி சொல்லி வந்திருப்பதைப் போன்று, ஒழுக்கத்தின் பலத்தில்தான் அதிக நம்பிக்கை வைக்கிறேனேயன்றி ஆட்களின் எண்ணிக்கையில் அல்ல. சட்ட மறுப்புத் தீர்மானம் கொண்டு வரப்பட்டது என்றால், காங்கிரஸின் அழைப்பை ஏற்று முன்வரும் மக்களின் தொகையைவிட, தாங்

களே தியாகம் செய்துகொள்ளும் சிலரிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது என்பதனுலேயே.

"இந்தியாவுக்கு டொமினியன் அரசியல் அந்தஸ்து என்ருல், கானடா, நியூஜிலாந்து, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் அனுபவித்துவரும் டொமினியன் அந்தஸ்து என்றே நாம் நம்பி வந்திருக்கிருேம். ஆனல், இந்தியாவுக்குப் பிரிட்டன் கொடுக்க நினைக்கும் டொமினியன் அந்தஸ்து, நாம் நம்பிக்கொண்டிருந்த அந்தஸ்துக்கு முற்றிலும் மாறுபட்டது என்பதை எர்ல் ரஸ்ஸல் திட்டவட்டமாக நமக்குச் சொல்லிவிட்டார். கானடா போன்ற நாடுகள் உண்மையில் சுதந்திர நாடுகளே என்றும் எர்ல் ரஸ்ஸல் ஒப்புக்கொள்ளுகிருர். இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து அரசியல் வேண்டும் என்று நான் சொல்லி வந்தபோதும் அந்தச் சுதந்திரம்தான் என் மனத்தில் இருந்ததும். அநேக ஆண்டுகளாக இந்தியா இரும்புச் சங்கிலியால் கட்டுண்டு கிடந்ததற்குப் பதிலாக, வேண்டுமானல் தங்கச் சங்கிலியால் கட்டுண்டு கிடக்கட்டும் என்பதுதான் ரஸ்ஸல் கூறுவதற்குப் பொருளாகிறது. ஆனல், இந்த யோசனை நம்மில் சிலருக்குப் பிடித்திருப்பதாகத் தெரிகிறது. நாம் அதிக பயங்காளிகளாகி விட்டதால், பிரிட்டிஷ் தொடர்பு இல்லாது போவது என்ருல், பலாத்காரமும் குழப்பமும்தான் என்று அஞ்சுகிருேம். சரி. மீண்டும் ஒரு முறை என் நிலைமையைத் தெளிவாகச் சொல்லி விட விரும்புகிறேன். அகிம்சைக்காகப் பாடுபட்டு வருகிறவன், நான். என்ருலும், திக்கற்ற நிலையில் குழப்பத்தைப் பார்த்துக் கொண்டிருக்க விரும்புகிருயா, நிரந்தரமான அடிமை நிலையை விரும்புகிருயா என்று என்னைக் கேட்டால், இந்தியாவில் குழப்ப நிலை இருப்பதைப் பார்க்கத் தயாராயிருக்கிறேன் என்று கொஞ்சமும் தயக்கமின்றி நான் சொல்லுவேன். முலாம் பூசிய அடிமைத்தனத்தை தினமும் பார்த்துக் கொண்டிருப்பதைவிட ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரை ஒருவர் கொன்று கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கத் தயார் என்று கூறுவேன். இரும்பு விலங்கைவிட தங்க விலங்கு அதிக மோசமானது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில், இரும்பு விலங்கு உறுத்திக்கொண்டு கஷ்டம் கொடுத்து வருவதையாவது ஒருவர் உணர முடிகிறது. ஆனல், தங்க விலங்கு இருந்தால், அது இருக்கிறது என்பதையே மறந்து விடும்படிச் செய்து விடுகிறது. ஆகையால், இந்தியா விலங்கில் பூட்டுண்டுதான் இருக்க வேண்டும் என்ருல், அந்த விலங்கு தங்கத்திலோ, வேறு உயர்ந்த உலோகத்திலோ செய்ததாக இருப்பதைவிட இரும்பிலானதாகவே இருக்கட்டும், என்றுதான் நான் விரும்புகிறேன்.

"சுதந்திரம் என்று நாம் சொன்னதுமே சில வட்டாரத்தினர், ஆப்கன் படையெடுப்பு வந்துவிடும் என்று பூச்சாண்டி

காட்டுகிறீர்கள். பிரிட்டனுடன் நமக்கிருக்கும் அடிமைத்தனமான தொடர்பை அறுத்துக்கொண்டுவிட்ட பிறகு, அந்தப் படையெடுப்பு வருவதைக் குறித்துக்கூட நான் பொருட்படுத்தவில்லை. ஆனால், நான் என்றும் திருத்தப்படவே முடியாத நம்பிக்கைவாதி. ரத்தஞ் சிந்தாத புரட்சியின் மூலம் இந்தியா சுதந்திரத்தை அடைந்துவிடும் என்பதில் எனக்குள்ள நம்பிக்கை அசைக்கவே முடியாதது. உங்கள் வாக்குறுதி விஷயத்தில் நீங்கள் உண்மையோடு நடந்துகொள்ளுவீர்களாயின், அது முற்றிலும் சாத்தியமே என்று எண்ணுகிறேன். வித்தியா பீடத்தைச் சேர்ந்த மாணவர்கள், சுயராஜ்யத்திற்காக நடக்கும் எந்தப் போராட்டத்திலும் முன்னணியில் இருப்பதைக் காணவே விரும்புவேன். வரப் போவது என்ன என்பதை நீங்கள் எண்ணிப் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறேன். சிறை செல்லுவதைவிட இன்னும் அதிகமான கஷ்டம் உங்களுக்கு இருக்கிறது. திருடர்களும், கொள்ளைக்காரர்களும், கொலைகாரர்களும் சிறைக்குப் போகலாம். அவர்கள் தங்கள் சொந்த வீடு போல் சிறையில் இருக்கிறார்கள். ஆனால், சிறை செல்லுவதால் அவர்கள் நாட்டுக்குச் சேவை செய்யவில்லை. சாதாரணமாகச் சிறைக்குப் போய்விடுபவன் நாட்டுக்கு உதவி செய்துவிடவில்லை. உங்களிடமிருந்து நான் விரும்புவதெல்லாம், போராட்டத்தில் விரும்பித் தூய தியாகங்களைச் செய்வதற்கு நீங்கள் தயாராக இருக்க வேண்டும் என்பதே. எவ்வளவோ பலாத்கார உணர்ச்சிகள் ஆயத்தமாக இருந்து வருகின்றன. நான் கைதியாகி சிறையில் வைக்கப்படும்போது பலாத்காரக் கலவரங்கள் ஏற்படுமானால், அத்தீயில் உங்களையே உயிர்த் தியாகம் செய்து கொண்டுவிட நீங்கள் தயாராக இருக்க வேண்டும். நீங்கள் செய்துகொண்டிருக்கும் சத்தியம், அகிம்சைப் பிரதிக்ஞை விஷயத்தில் நீங்கள் உண்மையோடு நடந்துகொள்ளுவதானால், பலாத்காரமோ, தீயிடுதலோ நடந்துகொண்டிருக்கும்போது நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் ஒளிந்துகொண்டிருக்க முடியாது. அச்செயல்களில் தீவிரமாக ஈடுபடுகிறவர்களாகவும் நீங்கள் இருக்க முடியாது. ஆனால், அத்தீயை அணைக்கும் நோக்கத்துடன் நீங்கள் ஓடி அத்தீயினிடையே குதித்தாக வேண்டும். ஏனெனில், உங்களிடமிருந்து நிச்சயமாக இதுவே எதிர்பார்க்கப்படும். பலாத்காரவாதிகளுங்கூட உங்களிடமிருந்து இதையே எதிர்பார்ப்பார்களேயன்றி, வேறு எதையும் எதிர்பார்க்க மாட்டார்கள். தீமை, நன்மைக்கு மரியாதை செலுத்துகிறது. சில சமயங்களில் அது மேற்கொள்ளும் வழியும் நன்மையை எதிர்பார்க்கவே. சுற்றிலும் தீமை மிகுந்திருந்த போதிலும், நன்மை அதன் உயர்ந்த ஸ்தானத்திலிருந்து இறங்கிவிடக் கூடாது.

“உண்மையில் நீங்கள் எல்லோரும் சிறை செல்லுவதற்குத் தயாராக இருப்பீர்கள். ஆனால், சிறை செல்ல நீங்கள் அழைக்

கப்படுவீர்கள் என்று நான் நினைக்க வில்லை. நான் இப்பொழுது உங்களுக்கு எடுத்துக் காட்டிய உயர்வான, கடுமையான கஷ்டம், உங்களுக்குக் காத்துக் கொண்டிருக்கிறது; சட்ட மறுப்பு எந்த முறையில் இருக்கும் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், சரியான ஒரு முறையைக் காண்பதற்காக நான் பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன்.

"நம்மால் முடிந்தால், அகிம்சையின், சத்தியத்தின் மூலமே நமது லட்சியத்தை அடைந்துவிட நான் அவசரப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அகிம்சையின், சத்தியத்தின் உயர்வில் எனக்கு இருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கையிலிருந்தே இரண்டும் எழுகின்றன. இந்தப் பாதை நீளமானது என்று எவ்வளவு தான் தோன்றினாலும், என் கருத்தில் மிகக் குறைந்த தூரமுள்ளது இதுதான் என்பதையும் அறிவேன்."

  

குஜராத் வித்தியா பீடத்தில் அதே சமயத்தில் தேசீயக் கல்வி மகாநாட்டில் பேசியபோது காந்திஜி கூறியதாவது :

"தேசீயப் பள்ளிக்கூடங்களிலும், அவை சம்பந்தப்பட்டவைகளிலும் படித்து வருகிறவர்கள் எல்லோரும், நாடு செய்ய வேண்டியிருப்பவைகளையெல்லாம் இவர்களும் செய்தாக வேண்டும். சமயம் வரும்போது விரும்பித் தியாகங்களைச் செய்வதை முன்னிட்டு தயாராக இருப்பதற்காக, சுயராஜ்யத்தை அடைவதற்கு நாடு என்ன கட்டு திட்டங்களையெல்லாம் அனுசரித்தாக வேண்டுமோ அவைகளையெல்லாம் நீங்களும் அனுசரித்தாக வேண்டும்...இலக்கியப் பயிற்சி, அறிவு ஆராய்ச்சிகள் பல மொழிப் பயிற்சிகள், ஆங்கிலம், சமஸ்கிருதம், நுட்பக் கலை ஆகியவைகளைக் கற்பது ஆகியவைகளையெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். நமது தேசீயப் பள்ளிக்கூடங்களெல்லாம், நமது தேசீய தளவாடமாகிய நிர்மாண வேலையை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளாக மாற்றப்பட வேண்டும். தேசீயக் கல்வியையும், நான் கூறிய மற்ற பெரிய விஷயங்களையும் மாத்திரமல்ல, படிப்பு என்பதே கிடைக்காமலிருக்கும் குழந்தைகள் நம் நாட்டில் கோடிக் கணக்கில் இருக்கிறார்கள். அப்படி இருக்கும் போது, நமது சுதந்திரத்தை அடையும் வரையிலாவது அவையெல்லாம் இல்லாமல் நாம் ஏன் இருந்து விடக் கூடாது? மகா யுத்த காலத்தில் ஐரோப்பாவின் மாணவர்கள் என்ன செய்தார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். அவர்கள் செய்த தியாகத்தைச் செய்வதற்கு நாம் தயாராயிருக்கிறோமா? நம் சுதந்திரம் நமக்கு இல்லாதிருக்கும் வரையில் அமைதியாக மூச்சு விடக் கூட நம்மால் முடியாது என்ற உறுதியான எண்ணம் நம்முள் ஆழ்ந்து இருக்குமானால், நிர்மாண வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதிலேயே நாம் வாழ்வதோடு, அதிலேயே

ஈடுபட்டு அதற்காகவே இருப்பதாகவும் ஆவோம். பலாத்காரம் யாரால் செய்யப்பட்டதாக இருந்தாலும் சரி, அதை எதிர்ப்ப தில் இறந்தவர்கள் என்று தேசீயப் பள்ளிக்கூடங்களில் படிக் கும் பையன்கள், பெண்களின் பெயர்கள் சுதந்திர சரித்திரத்தில் எழுதப்பட வேண்டும் என்பதற்காகவே, மரண பயத்தை நீங்கள் விட்டொழித்து விட வேண்டும் என்று விரும்புகிறேன். தற்பாதுகாப்புக்கு, கொல்லுவதற்கு வேண்டிய பலம் அவசிய மில்லை. சாவதற்கு வேண்டிய பலமே ஒருவருக்கு வேண்டும். சாவதற்கு ஒருவர் முற்றிலும் தயாராயிருப்பாராயின், பலாத் காரத்தை உபயோகிக்கும் விருப்பங்கூட அவருக்கு இராது. வீரத்தோடும், உதடுகளில் காருண்யத்தோடும், இறந்தால், மிகக் கொடிய எதிரிகளின் உள்ளங்களையும் மாற்றியிருக்கிறார்கள் என்பதற்கு எத்தனையோ ஆதாரங்கள் சரித்திரத்தில் நிறைய இருக்கின்றன."

[ டெண்டுல்காரின் 'மகாத்மா' என்ற நூலிலிருந்து எடுத்தது. ]

## 2

# தோற்பது சட்டமறுப்பு அன்று

சட்ட மறுப்பு ஆரம்பமாகப் போகிறது என்றதும், மித வாதக் கட்சியைச் சேர்ந்தவர்கள் அதை கண்டிக்க ஆரம்பித் தார்கள். அவர்களுடைய கண்டனங்களுக்குப் பதிலளித்து காந்திஜி கூறியதாவது :

"பூரண சுயராஜ்யத் தீர்மானத்தை காங்கிரஸ் நிறைவேற்றி விட்ட பிறகு அது ஒன்றும் செய்யாமல் இருந்து விட முடியாது. அது வெறும் ஆடம்பரப் பேச்சு அல்ல; ஒன்றுமில்லாத வெறும் பகட்டும் அன்று. காங்கிரஸின் மனப்போக்கில் வேண்டுமென்றே நிச்சயமாக ஏற்பட்டிருக்கும் மாறுதலே இது. அப்படியிருக்கும் போது சுதந்திரத்தை அடைவதற்கான வழி முறைகளை வகுத் தாக வேண்டியது எப்படி என் கடமையாகிறதோ அதே போல, அது குறை சொல்லுகிறவர்களின் கடமையுமாகும்.

"நாட்டில் பலாத்கார நோக்கத்தைக் கொண்ட ஒரு கட்சி இருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை. நம்மில் சிறந்தவர்க ளுக்கு இருப்பதைப் போன்ற தேசபக்தி அக்கட்சியினருக்கும் இருக்கிறது. துணிச்சலில் அவர்களை நம்மில் யாரும் மிஞ்சிவிட முடியாது. அக்கட்சியினர்மீது கடுஞ் சொற்களை வீசிவிடுவது எளிதானதே. ஆனால், அதனாலெல்லாம் அவர்கள் மாறுதல் அடைந்துவிடப் போவதில்லை. நான் இங்கே சொல்லுவது,

தேச பக்தி என்ற பெயரால் செய்யப்படும் கோபத்தைக் கக்கும் பேச்சுக்களை அல்ல. எப்படியும் தங்கள் நாடு விடுதலை அடைந்தாக வேண்டும் என்று விரும்பி ரகசியமாக, சந்தடியின்றி விடா முயற்சி செய்துகொண்டுவரும் இளைஞர்களையும் வாலிபப் பெண்களையும் எண்ணியே நான் கூறுகிறேன். அவர்களுடைய தேசாபிமானத்தை நான் வியக்கிறேன், பாராட்டுகிறேன். என்றாலும், அவர்கள் அனுசரிக்கும் முறைகளில் எனக்கு நம்பிக்கை இல்லை. அவர்களுடைய முறைகளினால், அவர்கள் அறிந்ததையும், ஒப்புக்கொள்ள சம்மதிப்பதையும் விட அதிக நஷ்டம் நாட்டிற்கு ஏற்பட்டிருக்கிறது என்று நிச்சயமாக நம்புகிறேன். ஆனால், நியாயத்தை எவ்வளவுதான் எடுத்துச் சொன்னாலும், வாதத்திற்கு அவர்கள் செவிகொடுக்கமாட்டார்கள். அவர்களில் மிகப் பெரியவர்களாக இருப்பவர்கள் செய்யத் தயாராயிருக்கும் தியாகத்திற்குக் குறையாததாகவாவது இருக்கும் தியாகத்தைச் செய்ய வேண்டியிருக்கும் ஒரு வேலைத் திட்டம் நாட்டின் முன்பு இருக்கிறது என்பதை நிச்சயமாக அறிந்தால்தான் அவர்கள் நம்புவார்கள். நம்முடைய பேச்சுக்கள், தீர்மானங்கள், மகாநாடுகள் ஆகியவைகளையெல்லாம் கண்டு அவர்கள் மயங்கிவிட மாட்டார்கள். அவர்கள் ஏற்றுக்கொள்ளக்கூடியது செயல் ஒன்றையே. அப்படி அவர்களுக்குக் கவர்ச்சியளிக்கக் கூடியது, அகிம்சை பூர்வமான செயலே. சட்டமறுப்புத்தான் அச்செயல். அது ஒன்றுதான், அது ஒன்று மாத்திரமே, வரப்போகும் குழப்பங்களிலிருந்தும், ரகசியமான குற்றங்களிலிருந்தும் நாட்டைக் காப்பாற்ற முடியும் என்பது என் கருத்து. சட்டமறுப்பும்கூட தோற்று விடக்கூடும், குழப்பங்கள் சீக்கிரத்தில் ஏற்படவும் செய்து விடக்கூடும் என்ற சாத்தியங்களும் உண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆனால், சட்டமறுப்பு அது மேற்கொள்ளும் காரியத்தில் தோற்றுப்போய் விடுமானால், தோற்றுப்போனது சட்ட மறுப்பாக இருக்காது. அது தோற்றுப் போனால், சட்டமறுப்புச் செய்தவர்களுக்கு அதில் நம்பிக்கை இல்லாததனாலும், அதனால் அவர்களுக்கு ஏற்பட்ட சக்தியின்மையினாலுமே தோற்றுப்போனதாக ஆகும்.

"நாடு சுதந்திரத்தை அடைய வேண்டும் என்று நாம் விரும்பினால், பலாத்காரத்திற்கு நடுங்குவதை நாம் விட்டொழித்துவிட வேண்டும். பலாத்காரத்தின் சுழலில் நாம் பலமாக அமிழ்த்தப்பட்டிருக்கிறோம் என்பதை நாம் காணவில்லையா? நாம் புகழ்வதாகத் தோன்றும் அமைதி, வெறும் ஏமாற்று வித்தை. பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களின் ரத்தத்தைக் கொண்டு அந்த அமைதி இருக்கும்படி செய்யப்பட்டிருக்கிறது. நிர்ப்பந்தமான பட்டினியின் மூலம் அம்மக்கள் மெள்ள மெள்ள செத்துக்கொண்டிருக்கும்படி செய்யப்பட்டுவரும் சித்திரவதையை, என் மீது குறை கூறுகிறவர்கள் உணர்ந்து கொள்ளுவார்களானால், இந்தத் துயரத்தைப் போக்குவதற்கு அராஜகம் மாத்திரமல்ல,

அதையும்விட மோசமானதற்கும்கூட இவர்கள் துணிந்துவிடுவார்கள். இப்பொழுது இருந்துவரும் நாசப்படுத்தும் ஆட்சி ஒழிந்தாலன்றி, மக்களின் அத்துயரம் தீராது. இதை அறிந்திருந்தும், அராஜகமோ, அதையும்விட மோசமானதோ ஏற்பட்டுவிடும் என்று கற்பனை செய்துகொண்டு பயந்து சும்மா இருப்பது பாவம். அதோடு, அராஜகத்தைத் தடுக்கக்கூடிய நடவடிக்கையை, அது வெற்றி பெற்ருல், நல்ல கதியை அடைய வேண்டியவர்களான மக்களை இரக்கமின்றி நாசப்படுத்திவரும் ஆட்சிக்கு முடிவு காணக்கூடிய நடவடிக்கையை நிறுத்துவதும் பாவம்."

[டெண்டுல்காரின் 'மகாத்மா' என்ற நூலிலிருந்து எடுத்தது]

## 3

# ஆங்கிலேயர்களுக்கு

காந்திஜி, தாம் ஆரம்பிக்கப்போகும் போராட்டத்தின் தத்துவங்களை ஆங்கிலேயருக்கு விளக்கிக் கீழே வருமாறு எழுதினர்:

வாழ்வு அல்லது சாவு என்பதில் முடியக்கூடியதாக இருக்கும் ஒரு போராட்டம் ஆரம்பமாகவிருக்கும் இத்தருணத்தில், எனக்குத் தெரிந்தவர்களாக இருக்கும் அநேக ஆங்கில நண்பர்களுக்கும், இன்னும் தெரியாதவர்களாக இருக்கும் ஆங்கில நண்பர்களுக்கும் ஒரு வார்த்தை கூறக் கடமைப்பட்டிருக்கிறேன். எனக்கு நம்பிக்கை இல்லாவிட்டாலும், சுயமரியாதையுள்ள காங்கிரஸ்காரர்கள், கூட்டவிருக்கும் வட்ட மேஜை மாநாட்டிற்குப் போவது சாத்தியமாகலாம் என்று நம்ப நான் முயன்றேன். எனக்குச் சந்தேகங்கள் இருந்து வந்தன. ஏனெனில், நாட்டு மக்களின் அதிகப் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஸ்தாபனம் காங்கிரஸேயென்ருலும், அதன் நிலைமையை எடுத்துக் காட்டுவதற்குப் போதுமான பலம் அதற்கு இல்லை என்பதை நான் அறிவேன். ஆகையால், காங்கிரஸுக்கு ஒரு விஷயம் தெரிந்தால் மாத்திரமே அம்மகாநாட்டில் அது கலந்துகொள்ள முடியும். பிரிட்டிஷ் அரசாங்கமும் அதன் மக்களும், திடீரென ஏற்படும் தாராள உணர்ச்சியினலோ அல்லது உலக அபிப்பிராயத்தின் வற்புறுத்தலினலோ, இந்தியாவுக்கு உடனே டொமினியன் அந்தஸ்தை அளித்து விடுவது என்று முடிவு செய்துவிட்டது என்பதை, காங்கிரஸ் அறியவேண்டும். வட்டமேஜை மகாநாடு கூடுவது, டொமினியன் அந்தஸ்து அரசியலைப்பற்றி விவாதிக்கவேயன்றி ஒவ்வொரு கோஷ்டியினரும் சொல்லிக்கொண்டிருப்பதையெல்லாம் விவாதிப்பதற்காக அல்ல என்பதும் காங்கிரஸுக்குத் தெரியவேண்டும். ஆனல், அத்தகைய வாக்குறுதி எதையும் தாம் கொடுப்பதற்கில்லை என்று வைஸ்ராய், சந்தேகத்திற்கு

இடமின்றிக் கூறிவிட்டார். அப்படியிருக்கும்போது காங்கிரஸ், தான் முன்னால் பிரகடனஞ் செய்து வந்திருப்பவைகளுக்கும், எந்த தேசீய நலன்களுக்குத் தான் முக்கியமான தருமகர்த்தா என்றும் காங்கிரஸ் கூறிக்கொள்ளுகிறதோ அதற்கும் ஏற்ப, அம்மகாநாட்டில் கலந்துகொள்ள காங்கிரஸ் சம்மதிக்க முடியாது. அங்கிலேயில் காங்கிரஸ் தன் பிரதிநிதிகளே அனுப்பும் என்று எதிர் பார்க்கப்படுவதாக வைத்துக்கொண்டால், டொமினியன் அந்தஸ்து என்பதிலிருந்து பூரண சுயேச்சைக்குக் காங்கிரஸ் போய்விடுவதற்கு என்ன அவசியம் இருக்கிறது என்று கேட்கப் படலாம். இதற்கு பதில் தெளிவானதே.

மனிதர்களைப் போன்றே ஸ்தாபனங்களும், மரியாதை இருக்கும்படிச் செய்து வளர வேண்டுமாயின், அவைகளுக்கு யோக்கியப் பொறுப்பு இருப்பதோடு அளித்த வாக்குறுதிகளையும் அவை நிறைவேற்ற வேண்டும். 1929 டிசம்பர் 31-ஆம் தேதிக்குள் இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து கிடைக்கவில்லையானால் பூரண சுயராஜ்யமே லட்சியம் என மாற்றிக்கொள்ளுவது என்று கல்கத்தாவில் காங்கிரஸ் வாக்குறுதி அளித்திருந்தது. டொமினியன் அந்தஸ்து வரவில்லை. சீக்கிரத்தில் அது நிச்சய மாக வரும் என்பதற்கான அறிகுறியும் எதுவும் இல்லை. ஆகையால், காங்கிரஸ், 'தற்கொலை செய்து கொள்ளாதிருக்க வேண்டுமானால்,' டொமினியன் அந்தஸ்து என்பதற்குப் பதிலாக பூரண சுயராஜ்யமே தனது உடனடி லட்சியம் என்று மாற்றிக் கொண்டு விடுவதைத் தவிர அதற்கு வேறு வழியே இல்லை.

'ஆனால், சுதந்திரத்தை அடைவதற்கு உங்களுக்குத் தகுதி இல்லை' என்று சிலர் சொல்லுகிறார்கள். எங்களுக்குத் தகுதி உண்டா, இல்லையா என்பதை முடிவு செய்துகொள்ள வேண்டிய வர்கள் நிச்சயமாக நாங்களே. எங்களுக்குத் தகுதி இல்லை என்றே வைத்துக்கொண்டாலும், சுதந்திரத்தை அடைய விரும்பி, அதை அடையச் செய்யும் முயற்சியினால் நாளுக்கு நாள் நாங்களே தகுதியானவர்களாகிக் கொள்வதில் தவறோ, ஒழுக்கக் கேடானதோ எதுவுமே இல்லை. திக்கற்றவர்கள் என்று உணரச் சொல்லிக் கொடுக்கப்படுவதாலோ, நமக்குள்ளேயே சண்டை போட்டுக் கொள்ளாமலிருப்பதற்கோ, நம் பக்கத்து நாட்டினர் நம்மை விழுங்காமலிருப்பதற்கோ பிரிட்டிஷ் துப்பாக்கி முனை யையே நம்பிக்கொண்டிருப்பதாலோ நாம் என்றும் சுயராஜ்யத் திற்குத் தகுதி வாய்ந்தவர்களாகிவிட மாட்டோம். உள்நாட்டுச் சண்டை அல்லது வெளிநாட்டினரின் படையெடுப்புக் கஷ்டங் களை நாம் அனுபவித்துத்தான் ஆகவேண்டும் என்றால், சுதந் திரத்திற்காகப் போராடியிருக்கும் நாடுகளின் சரித்திரத்தில் இது புதியதே அல்ல. இந்த இரண்டு கஷ்டங்களையும் இங்கி லாந்து அனுபவித்திருக்கிறது. எப்படியும் சுதந்திரம் சிரமமின்றி வளர்ந்துவிடக்கூடிய ஒன்றல்ல.

இந்தியாவின் நலனைக் குறித்து உண்மையாகவே கவலைப் படும் ஆங்கில நண்பர்கள், இந்தியா நடத்தும் சுதந்திரப் போராட்டத்திற்கு, இந்தியா விரும்பும் முறையில் தங்கள் உதவியைச் செய்யலாம். இந்தியாவின் தேவை இன்னது என்பது இந்தியாவுக்குத்தான் நன்ருகத் தெரியும். பூரண சுதந்திரம் என்பது, யார் உறவும் வேண்டாம் என்று அகம்பாவ மாகத் தனித்து இருப்பதோ, எல்லா உதவியையும் அலட்சியம் செய்துவிடுவதோ ஆகாது. பிரிட்டிஷ் விலங்கு, அது சாதாரண மானதாகவே இருந்தாலும் அல்லது வெளிக்குத் தெரியாமல் மறைக்கப் பட்டிருப்பதாக இருந்தாலும், அதிலிருந்து பூரணமாக விடுவித்துக்கொண்டுவிடுவது என்பதுதான் பூரண சுயராஜ்யம் என்பதன் பொருள். ஒரு விஷயத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அடிமைப்பட்ட நாடாக இந்தியா இருப் பதற்கோ, திக்கற்ற நிலையில் சுரண்டல் முறைக்கு உடந்தையாக இருப்பதற்கோ, மிகப் பெரியதான தேசீயக் கட்சி இனிமேல் உடன்படவே முடியாது. இந்த இரண்டு சாபத்தீடுகளிலிருந்தும் விடுபடுவதற்கு எந்த ஆபத்தையும் ஏற்றுக்கொள்ள அது தயாராக இருக்கிறது. நாட்டு மக்கள், சுதந்திரத்தை அடை வதையும்விட தங்கள் சக்தியை உணருவதற்கே அதிகமாக விரும்புகிருர்கள். அத்தகைய சக்தியைக் கொண்டிருப்பதுதான் பூரண சுதந்திரம்.

சட்டமறுப்பு, அதனுள்ளேயே பலாத்காரக் கலவரமாக மாறிவிடக் கூடும் என்பது, நடந்துவிடக்கூடாத சம்பவமல்ல என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதற்காக வருந்து கிறேன். ஆனல், சட்ட மறுப்பு அதற்குக் காரணம் ஆகாது. இப்பொழுதே ராஜீயநிலை முழுவதிலும் பலாத்காரம் அரித்துக் கொண்டிருக்கிறது. அதைத் தூய்மைப்படுத்தும் ஒரு முறை யாகவே சட்டமறுப்பு இருக்கும். உள்ளுக்குள்ளே உடல் முழு வதிலும் புகுந்திருப்பதை வெளிக்குக் கொண்டுவந்துவிடுவதாக வும் அது இருக்கக்கூடும். நாட்டின் நிலைமையைக் குறித்து சாட்சியம் என்னிடமிருக்கிறது. சாத்விக எதிர்ப்பு முறையைக் குறித்து எனக்குத் தணித்துவிட முடியாத நம்பிக்கையும் இருந்து வருகிறது. எனவே, என் அந்தராத்மாவின் குரல் என்னை நடத்திச் செல்வதாகத் தோன்றும் வழியிலிருந்து நான் தவறிப் போய்விடக்கூடாது.

ஆனல், நான் செய்வது எதுவாக இருந்தாலும், எது நடந் தாலும், என் சொல்லை ஆங்கில நண்பர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். பிரிட்டிஷ் அடிமை விலங்கை உடைத்தெறிய நான் துடித்துக்கொண்டிருந்தாலும், பிரிட்டனுக்கு நான் விரோதி அல்ல.

—'யங் இந்தியா' - 21—3—1930

# 4

# பூரண சுதந்திர தினம்

சட்ட மறுப்புப் போராட்டத்திற்கு ஆரம்பமாக இருப்பதை முன்னிட்டும், நாட்டு மக்களின் உணர்ச்சியை அறிவதற்காகவும் ஜனவரி 26-ம் தேதியைப் பூரண சுதந்திர தினமாக நிர்ணயித்தார்கள். அன்று நாடெங்கும் மக்கள் பூரண சுதந்திரப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டும். அத்தினத்திற்கு முன்னால் காந்திஜி கீழே வருமாறு எழுதினர் :

"26-ம் தேதி சுதந்திரப் பிரகடனம் செய்யும் நாள் அல்ல, டொமினியன் அந்தஸ்து என்று சொல்லப்படுவதற்கு மாருக, பூரண சுதந்திரத்திற்குக் குறைந்த எதைக் கொண்டும் நாம் திருப்தியடைய மாட்டோம் என்பதைப் பிரகடனம் செய்யும் நாளே அது என்பது நினைவிருக்கட்டும். 26-ஆம் தேதி நாம் சட்ட மறுப்பை ஆரம்பிக்க வில்லை, பூரண சுயராஜ்யத்தை அடைந்தே தீருவது என்பதையும், இதற்காக அப்போதைக்கப்போது காங்கிரஸ் வெளியிடும் ஆக்ஞைகளை நிறைவேற்றுவது என்பதையும் உறுதியாகப் பிரகடனம் செய்யும் நாளே அது என்பதும் நினைவிருக்கட்டும். அகிம்சை, சத்திய முறைகளினலேயே நமது லட்சியத்தை அடைய நாம் விரும்புவதால், நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதனலே அவ்விதம் செய்ய முடியும் என்பதும் நினைவிருக்கட்டும். செய்வதற்கு நம்மால் முடிந்த நிர்மாண வேலைகளைச் செய்வதில் அந்நாளை நாம் செலவிட வேண்டும். பொதுக் கூட்டங்களில் பிரசங்கமே இருக்கக் கூடாது என்பதும் நினைவிருக்கட்டும். பிரகடனத்தைப் படிப்பதும், கைகளைத் தூக்குவதன் மூலம் அங்கீகரிக்கப்படுவதும் மாத்திரமே இருக்க வேண்டும். பிரகடனத்தைப் பிராந்திய மொழியில் படிக்க வேண்டும்."

### பிரகடன விவரம்

ஜனவரி 26-ம் தேதி பொதுக் கூட்டங்களில் செய்ய வேண்டிய பிரகடன விவரமாவது :

"வளர்ச்சியடைவதற்கு முழு வாய்ப்பும் இந்திய மக்களுக்கு இருப்பதை முன்னிட்டு சுதந்திரத்தை அடைவதும், தங்கள் உழைப்பின் பலனை அனுபவிப்பதும், வாழ்க்கை அவசியத்திற்கானவைகளைப் பெறுவதும் மற்ற எந்த மக்களுக்கும் இருப்பதைப்போன்றே இந்திய மக்களுக்கும் இருக்கும் அசைக்க முடியாத உரிமை என்று நாங்கள் நம்புகிறோம். எந்த அரசாங்கமாவது இந்த உரிமை மக்களுக்கு இல்லாதபடிச் செய்யுமானல்,

அம்மக்களை ஒடுக்கி வைக்குமாயின், அந்த அரசாங்கத்தை மாற்றவோ, நீக்கிவிடவோ மக்களுக்கு மேலும் அதிகாரம் இருக்கிறது என்றும் நாங்கள் நம்புகிறோம். இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம், இந்திய மக்களின் சுதந்திரத்தைப் பறித்திருப்பதல்லாமல், பொது மக்களைச் சுரண்டுவதையே தனது அடிப்படையாகக் கொண்டிருப்பதோடு, பொருளாதாரத்திலும், ராஜீயத்திலும், கலாசாரத்திலும், ஆன்மிகத்திலும் இந்தியாவை நாசமும் செய்திருக்கிறது என்றும் நாங்கள் நம்புகிறோம். ஆகவே இந்தியா, பிரிட்டிஷ் தொடர்புகளையெல்லாம் கத்தரித்துக் கொண்டு பூரண சுயராஜ்யத்தை அடைய வேண்டும் என்றும் நம்புகிறோம்.

"பொருளாதார விஷயத்தில் இந்தியா நாசப்படுத்தப்பட்டிருக்கிறது. மக்களிடம் வரியின் மூலம் வசூலிக்கப்படுவது நமது வருமானத்திற்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாததாக இருக்கிறது. நமது சராசரி வருமானம் தினத்திற்கு ஒன்றே முக்காலணா. நாம் செலுத்தி வரும் மிதமிஞ்சிய வரியில் 20 சதவிகிதம், விவசாயிகளிடமிருந்து நிலவரியாக வசூலிக்கப்படுகிறது. உப்புக்கு வரி போடுவதால் மொத்த வரியில் 3 சதவிகிதம் வசூலிக்கப்படுகிறது. இவ்வரி ஏழை மக்களின் தலையில் பெருஞ் சுமையாக இருக்கிறது.

"கையினால் நூற்பது போன்ற கிராமத் தொழில்கள் அழிக்கப்பட்டுவிட்டன. இதனால், விவசாயிகள் வருடத்தில் நான்கு மாதங்கள் ஒரு வேலையுமில்லாமல் இருக்கும்படி செய்யப்பட்டிருக்கின்றனர். கைத்தொழில்கள் இல்லாததால் அவர்கள் அறிவும் மங்கிப் போகும்படி செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதம் நாசமாக்கப்பட்டுவிட்ட தொழில்களுக்குப் பதிலாக மற்ற நாடுகளில் செய்திருப்பதைப் போன்று எதுவுமே செய்யப்படவில்லை.

"விவசாயிகள் மீது மேற்கொண்டும் சுமையை ஏற்றும் வகையில் சுங்க வரியும், நாணயச் செலாவணி முறையும் கையாளப்படுகிறது. நம் நாட்டில் இறக்குமதியாகும் சரக்குகளில் பெரும் பகுதி பிரிட்டனில் தயாரான சரக்குகள். பிரிட்டனில் தயாராகும் சரக்குகளுக்குச் சலுகை காட்டப்படுகிறது என்பதைச் சுங்க வரி வெளிப்படுத்துகிறது. இதன் மூலம் கிடைக்கும் வருமானம் மக்களின் வரிச் சுமையைக் குறைப்பதற்கு உபயோகிக்கப்படாமல், மிகவும் டாம்பீகமான நிர்வாகத்தை நடத்திக் கொண்டு போவதற்குச் செலவிடப்படுகிறது. அனுசரிக்கப்பட்டு வரும் ஒருதலைப் பட்சமான நாணய மாற்று முறையினால் இந்நாட்டிலிருந்து கோடிக்கணக்கான தொகை வெளியில் போய்விடும்படி செய்யப்பட்டிருக்கிறது.

"ராஜீய விஷயத்தில் இந்தியாவின் அந்தஸ்து, பிரிட்டிஷ் ஆட்சியில் இருப்பதைப் போல என்றும் இவ்வளவு தாழ்ந்திருந்ததே இல்லை. எந்தச் சீர்திருத்தமும் மக்களுக்கு உண்மையான ராஜீய அதிகாரத்தைக் கொடுக்கவில்லை. நம்மில் மிக உயர்ந்தவர்களாக இருப்போரும், பிரிட்டிஷ் அதிகாரத்திற்குப் பணிய வேண்டியிருக்கிறது. கருத்தைச் சுதந்திரமாக எடுத்துக் கூறும் உரிமையும், சுதந்திரமாகச் சங்கம் சேரும் உரிமையும் எங்களுக்கு மறுக்கப் படுகிறது. நம் நாட்டு மக்களில் அநேகர் நாடு கடந்து வெளிநாடுகளில் வாழ்ந்து வரும்படி நிர்ப்பந்திக்கப் பட்டிருக்கின்றனர். தங்கள் வீடுகளுக்கு அவர்கள் திரும்பி வர முடியவில்லை. நிர்வாகத் திறமையெல்லாம் கொல்லப்பட்டிருக்கிறது. சிறு கிராம உத்தியோகங்கள், குமாஸ்தா உத்தியோகங்களைக் கொண்டு பொது மக்கள் திருப்தியடைய வேண்டியிருக்கிறது.

"கலாசார விஷயத்தில், கல்வி முறை எங்களை எங்கள் பாரம்பரியத்திலிருந்து நீக்கிப் பாழாக்கி விட்டது. எங்களைக் கட்டியிருக்கும் சங்கிலியையே அன்போடு அணைத்துக்கொள்ளும்படி, எங்களுக்கு அளித்திருக்கும் பயிற்சி எங்களைச் செய்திருக்கிறது.

"ஆன்மிக விஷயத்தில், பலவந்தமாக நாங்கள் நிராயுதபாணிகளாக்கப்பட்டிருப்பது, எங்களை ஆண்மையற்றவர்களாக்கி விட்டது. எங்களிடமிருந்துவரும் எதிர்ப்பு உணர்ச்சியை நசுக்குவதற்காக அந்நிய ராணுவம் இங்கே இருந்து வருவது, எங்கள் காரியத்தை நாங்களே கவனித்துக் கொண்டுவிட முடியாது, வெளிநாட்டுப் படையெடுப்பை எங்களால் சமாளிக்க முடியாது, திருடர்கள், கொள்ளைக்காரர்கள், காலிகள் தாக்கினால் எங்கள் வீடுகளையும் குடும்பங்களையும்கூட நாங்கள் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்று நாங்கள் எண்ணும்படிச் செய்து விட்டது.

"நாட்டிற்கு இந்த நான்கு வகையான நாசத்தையும் விளைவித்திருக்கும் ஆட்சிக்கு மேற்கொண்டும் உடன்பட்டுக்கொண்டிருப்பது, மனிதனுக்கும் கடவுளுக்கும் விரோதமாக இழைக்கப்படும் குற்றம் என்று நாங்கள் கருதுகிறோம். என்றாலும், நமது சுதந்திரத்தை அடைவதற்குச் சரியான வழி பலாத்காரத்தைக் கொண்டு அல்ல என்பதை அறிகிறோம். எனவே, எங்களால் முடிந்த வரையில் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் விரும்பி வைத்துக் கொண்டிருக்கும் தொடர்பையெல்லாம் ரத்துச் செய்து கொண்டு நமக்கு நாமே தயாராவதோடு, வரி கொடாமையுள்பட சாத்விகச் சட்ட மறுப்புக்கும் தயாராவோம். விரும்பிச் செய்து வரும் உதவியைச் செய்யாதிருந்து விடுவோமாயின், ஆத்திரமூட்டப்பட்டாலும் பலாத்காரத்தில் இறங்காமல் வரி

களைச் செலுத்த மறுத்து விடுவோமானல், மனிதத் தன்மையில் லாத இந்த ஆட்சி முடிவது நிச்சயம் என்றும் நம்புகிறோம். ஆகையால் பூரண சுயராஜ்யத்தை அடைவதற்குக் காங்கிரஸ் அப்போதைக்கப்போது வெளியிடும் அறிவிப்பவைகளை நிறை வேற்றிவைப்பது என்று இதன் மூலம் பிரதிக்ஞை செய்து கொள்ளுகிறோம்.''

# 5

# கிட்டத்தில் பூரண சுயராஜ்யம்

என்னுடைய 'கோரிக்கை'களைக் குறித்து * இங்கிலாந்தில் ஆத்திரம் ஏற்பட்டிருப்பதும், நிலைமை எதுவாலுைம் கடனைக் கொடுக்க மறுத்துவிடுவது என்ற கருத்தின் மீது ஸர் மால்காம் ஹெய்லிக்கு ஆவேசம் உண்டாகியிருப்பதும் புரிந்து கொள்ளு

* பூரண சுயராஜ்யம், சட்டமறுப்பு சம்பந்தமாக காங்கிரஸ் தீர்மானத்தைக் குறித்து 1930 ஜனவரி 25-ஆம் தேதி மத்திய அசெம்பிளியில் பேசிய வைஸ்ராய், "இப்பொழுதுள்ள கஷ்டங்களில் ஒரு முடிவு காண்பதற்குப் பிரிட்டனும் இந்தியாவும் ஒன்ருக இருந்து ஆலோசித்துச் சமரசத்திற்கு வருவதற்குச் சாத்தியமானதை யெல் லாம் செய்வது என்பதே என் விருப்பமும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் விருப்பமுமாகும். ஆனால், இன்னுமொன்றைத் தெளிவாகக் கூறிவிட வேண்டியதும் என் கடமையாகிறது. சட்டத்தின் அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்கு எனக்கும், என் அரசாங்கத்திற்குமுள்ள முழுப் பொறுப்பையும் முற்றிலும் நிறைவேற்றியே வைப்பேன்'' என்ருர்.

இவ்வாறு வைஸ்ராய் லார்டு இர்வின் பேசியதற்கு மறுநாள்தான், ஜனவரி 26-ஆம் தேதி, சுதந்திர தினத்தை மக்கள் நாடு முழுதும் அமோகமாகக் கொண்டாடி ஞர்கள். "மக்களின் உள்ளங்களை ஆளும் ஒரு ஸ்தாபனமாகக் காங்கிரஸ் இன்னும் இருந்து வருகிறது என்பதற்கு இது ருசு'' என்ருர் காந்திஜி. வைஸ்ராயின் பிரசங்கத் தைக் குறித்து காந்திஜி கூறுகையில், சுயாட்சியின் வெளி உருவத்தையில்லாவிட்டா லும் அதன் சாரத்தைப் பிரிட்டன் அளிக்குமானல் சட்ட மறுப்பை ஒத்திவைத்துவிடத் தாம் தயார் என்ருர். பதினொரு காரியங்களை அது செய்தாக வேண்டும் என்ருர்: பூரண மது விலக்கு; ரூபாய்க்கு 1 ஷில்லிங் 4 பென்ஸ் என்றிருக்கும் நாணய மாற்று விகிதத்தைத் திரும்பக் கொண்டு வருவது; நிலவரியில் பாதியைக் குறைத்துவிடுவது; உப்பு வரியை ரத்துச் செய்வது; அந்நியத் துணிக்குப் பாதுகாப்புத் தீர்வை விதிப்பது: ஆரம்பமாகக் குறைந்தது பாதியாகவாவது ராணுவச் செலவைக் குறைப்பது; ஸிவில் உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தைப் பாதியாக்க் குறைப்பது; கடலோரக் கப்பல் வர்த்தகம் இந்தியக் கப்பல்களுக்கே என்று ஒதுக்கிவைத்துவிடச் சட்டம் செய்வது; கொலை, கொலை முயற்சிக் குற்றங்களுக்காக வன்றி மற்ற குற்றங்களுக்காகத் தண்டிக்கப் பட்டிருக்கும் ராஜியக் கைதிகளையெல்லாம் விடுதலை செய்வது; ரகசியப் போலீஸை ரத்துச் செய்துவிடுவது அல்லது கட்டுப்பட்டுத்துவது; பொதுஜன நிர்வாகத்திற்குட்பட்டு: தற்பாதுகாப்புக்காக துப்பாக்கிகளுக்கு லைசென்ஸ் கொடுப்பது. "மிகச் சாதாரணமான, ஆனால் இந்தியாவின் முக்கியமான இந்தத் தேவைகளை வைஸ்ராய் திருப்திகரமாக நிறைவேற்றட்டும். பிறகு சட்ட மறுப்பைப் பற்றிய பேச்சே அவர் காதில் விழாது'' என்றும் காந்திஜி கூறினர். மகாத்மாவின் இந்தக் 'கோரிக்கைகள்' மீதே இங்கிலாந் தில் ஆத்திரம் ஏற்பட்டது.

வதற்குக் கஷ்டமானவை அன்று. என்ருலும், மைனராக இருக்கும் ஒருவர் தக்க வயதுக்கு வந்ததும் அவருக்கு என்ன உரிமை உண்டோ அதே உரிமைதான் இதுவும். தன் சொத்தை டிரஸ்டியாக இருந்தவர் அபகரித்து தமக்கு மோசஞ் செய்திருக்கிருர் என்று மைனராக இருந்தவர் கண்டால், டிரஸ்டி செய்திருக்கும் மோசடிகளுக்கோ, மோசத்திற்கோ, நம்பிக்கைத் துரோகத்திற்கோ, அவருடைய சுயநலத்தை வேறு எந்தப் பெயரால் கூறப்பட்டாலும் அவைகளுக்காகவோ, பணத்தைச் செலுத்தியாக வேண்டும் என்றுதான் அவர் செய்வார். ஆங்கிலேயர்கள் அக்கிரமமாக அடைந்திருக்கும் லாபத்தில் கொஞ்சத்தைக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். அதோடு, ஏதாவது ஒரு சாக்குப் போக்கை வைத்துக்கொண்டு இந்தியாவிலிருந்து வடிகட்டி இங்கிலாந்துக்குப் போய்க்கொண்டிருக்கும் கோடிக்கணக்கான ரூபாய் இனி நின்று போகும் என்பதையும் எதிர்பார்க்கத்தான் வேண்டும். ஆங்கிலேயர்கள் இதை உணர்ந்தாலன்றி இந்தியாவிலோ, இங்கிலாந்திலோ இருக்கும் பொது மக்களின் கட்சியின் நியாயத்தைப் பட்சபாதமின்றிப் பரிசீலனை செய்வதற்கு வேண்டிய சூழ்நிலை ஏற்பட முடியாது.

நிலத்தில் உழுது பாடுபட்டு வாழ்ந்து வரும் மக்களிடமிருந்து பிரிட்டிஷாருக்குப் போயிருக்கும் பணம், அம்மக்கள் விரும்பிக் கொடுத்தது அல்ல; அம்மக்களின் நன்மைக்காகக் கட்டாயப்படுத்தி வாங்கப்பட்ட தொகையும் அன்று. இது தெளிவான விஷயம். அந்நியர் படையெடுப்பிலிருந்து காப்பாற்றப் பட்டிருக்கின்றனர் என்று சொல்லப்படுவதனுலும், கிராமங்கள் நன்மையடைந்துவிட்டன என்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில், தைமூர், நாதிர்ஷா படையெடுப்புகளினுலும் இக்கிராமங்கள் பாதிக்கப்படவில்லை. அராஜகமே ஏற்பட்டாலும், அதனுலும் கிராமங்கள் பாதிக்கப்பட்டுவிடா. ஆனல், ஏராளமானதான இப்பெருந் தொகையை எந்தவிதமான எதிர்ப்புமின்றி கிராம மக்களிடமிருந்து பறிப்பதற்காக, பிரிட்டிஷ் அரசாங்கம், இதற்கு முன்னல் கண்டறியாத வகையில், எளிதில் காணவோ உணரவோ முடியாத தந்திரமான வகையில் பலாத்காரத்தை ஏற்பாடு செய்திருக்கிறது. பலாத்காரத்தின் சரியான உருவாகவே பிரிட்டிஷ் அரசாங்கம் எனக்குத் தோற்றமளிக்கிறது. பார்த்த மாத்திரத்திலேயே, பார்த்துவிட்டவர்கள் செயலற்றுப் போய்விடும்படிச் செய்துவிடும் பாம்புகள் இருக்கின்றன. அப்பாம்புகள் தங்களுக்குள்ள சக்தியைக் காட்டிக்கொள்ள எதுவுமே செய்ய வேண்டியதில்லை. அதே போலவே, பிரிட்டிஷ் அதிகாரம் இந்தியாவிலுள்ள நம்மீது வேலை செய்து வந்திருக்கிறது என்பதைச் சொல்ல வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன்.

ஒழுங்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் இந்தப் பலாத்காரம் எப்படி வேலை செய்து வருகிறது ; இதனல் அங்கு மிங்

கும் திடீரென்று முன்யோசனையில்லாமல் கிளம்பிவிடும் பலாத்காரத்தைவிட இது எவ்விதம் அதிகத் தீமையானதாகிறது என்பதையும் பார்ப்போம். ஒழுங்காக ஏற்பாடு செய்யப்பட்டு விடும் பலாத்காரம், எப்பொழுதும் ஜாலத்திற்கும் நயவஞ்சகத்திற்கும் பின்னால் ஒளிந்துகொண்டு விடுகிறது. நல்லெண்ணம் இருப்பதாகக் கூறுவது, கமிஷன்கள், மகாநாடுகள் ஆகியவைகளின் மூலம் அவை வேலை செய்து வருவதைப் பார்த்து வருகிறோம். பொதுஜன நன்மைக்கு என்று கூறிச் செய்யப்படும் காரியங்கள், உண்மையில் தீமை செய்கிறவர்களுக்கு நன்மையாகவே முடிந்து விடுவதையும் பார்க்கிறோம். பேராசையும் மோசடியும் எப்பொழுதும் பலாத்காரத்தின் தந்தையாக இருப்பதைப் போன்றே அதிலிருந்து பிறப்பவைகளாகவும் இருக்கின்றன. அப்பட்டமான பலாத்காரம், சதையோ, ரத்தமோ, மிருதுவான தோலோ இல்லாத வெறும் எலும்புக் கூட்டைப் போன்று அருவருப்பானதாக இருக்கிறது. அது வெகு காலம் நீடித்து இருக்க முடியாது. ஆனால், அமைதி, அபிவிருத்தி என்று சொல்லப்படும் கவசத்தைப் பூண்டதாக அந்த எலும்புக்கூடு இருந்தால், அது நீண்ட காலம் நீடித்து இருந்துவிடும்.

எல்லோரையும் பயப்பட வைத்துவிடும் இத்தகைய பலாத்காரம், தங்க மூடிபோட்டு ஒளித்து வைக்கப்பட்டிருக்கும்போது, அதிலிருந்து பலவீனர்களின் பலாத்காரம் பிறக்கிறது. இது அதனளவில் ரகசியமாக வேலை செய்வதோடு சில சமயங்களில் பகிரங்கமாகவும் வேலை செய்கிறது. இந்த இரண்டு வகையான பலாத்காரங்களுக்குமிடையே அகிம்சை வேலை செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால், மனித வர்க்கத்தை ஆட்கொள்ளும் உயர்வான நியதியாக இது இருக்குமானால், எவ்வளவுதான் பெரிய கஷ்டங்கள் இருந்தாலும் அவைகளையும் சமாளித்து முன்னேறுவதாக இது இருக்க வேண்டும்.

அகிம்சை செல்லும் வழியில் மிகப் பெரிய முட்டுக்கட்டைகளாக இருப்பவை, பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து கிளம்பியிருக்கும் உள்நாட்டு நலவுரிமைகள் நம்மிடையே இருந்து வருவதுதான். பணம் படைத்தவர்கள், கொள்ளை லாபம் சம்பாதிப்பவர்கள், பாங்கி முதலாளிகள், நிலச்சுவான்தார்கள், தொழிற்சாலை அதிபர்கள் போன்றவர்களே அந்த நலவுரிமையாளர்கள். தாங்கள் யாவரும் பொது மக்களின் ரத்தத்தில் வாழ்ந்து வருகிறார்கள் என்பதை அவர்கள் உணருவதே இல்லை. அப்படி வாழ்ந்து வரும் தாங்கள், பிரிட்டிஷாருக்குக் கருவிகளாகவும் ஏஜண்டுகளாகவும் இருப்பதால் பிரிட்டிஷ் எஜமானரைப் போன்றே தாங்களும் படுமோசமானவர்களாகிறார்கள் என்பதையும் அவர்கள் உணருவதில்லை.

ஆனால், அகிம்சை, பிரிட்டிஷ் எஜமானர்கள் விஷயத்தில் இருப்பதைப் போன்றே இவர்கள் சம்பந்தமாகவும் பொறுமை யுடன் இருக்க வேண்டியதாகிறது. மனம் மாறும்படிச் செய்ய வேண்டும் என்பதே எப்பொழுதும் அகிம்சை ஊழியரின் நோக்கமாக இருக்க வேண்டும். என்றாலும், அவர் முடிவின்றிக் காத்துக்கொண்டே இருக்க வேண்டும் என்பதில்லை. ஆகையால் ஓர் எல்லையை அடைந்ததும் அவர் ஆபத்துக்கும் உட்படத் தயாராகி தீவிரமான சத்தியாக்கிரகத்திற்குத் திட்டமிடுகிறார். அது சட்ட மறுப்பாகவோ, அதைப் போன்றதாகவோ ஆகலாம்.

  

காந்திஜி, முன்னுக்குப் பின் முரணைக் கூறி வருகிறார் என்று இந்தியாவில் சிலர் புகார் கூறினார்கள். ஒரு பக்கத்தில் பூரண சுயராஜ்யம் வேண்டும் என்கிறார் என்றும், மற்றோர் பக்கத்தில் தமது குறைந்த பட்சக் கோரிக்கை டொமினியன் அந்தஸ்துகூட அல்ல, தாம் கூறும் பதினொரு நிபந்தனைகளே என்று சொல்லுகிறார் என்றும் குறை கூறினர். "முன்னுக்குப் பின் முரண்பட்டதாக இல்லாத ஒரு திட்டத்தை உருவாக்க உங்களால் முடியவில்லையென்றால், பொது மக்களையும், நாட்டையும் சுயராஜ்யத்திற்கு நடத்திச் செல்லுவது என்ற வேலையை இப்பொழுதே நீங்கள் விட்டுவிடுவதுதான் நல்லது" என்றும் கூறினர். இவர்களுக்குக் காந்திஜி வருமாறு பதில் கூறினார்:

"என்னுடைய முரண்பாடுகளை நான் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். ஆனால், நான் 'மகாத்மா' என்று அழைக்கப்படுவதால், "முட்டாள்தனமான முரண்பாடின்மை, சின்ன புத்திகளின் மோசமான ஏமாற்று" என்று எமர்ஸன் கூறியிருப்பதை நான் அங்கீகரிப்பதே சரியாகலாம். என்னுடைய முரண்பாட்டிலும் ஒரு முறை இருக்கிறது. இயற்கையில் காணும் மாறுபாடுகளிலும் ஒற்றுமை எவ்விதம் ஓடிக்கொண்டே இருக்கிறதோ அதே போல், முரண்பாடாகத் தோன்றும் என் முரண்பாட்டிலும் முரண்பாடின்மை ஓடிக்கொண்டே இருக்கிறது. சுயேச்சை என்பதற்கு, பாமர மக்களைப் பொறுத்தவரையில் ஏதாவது பொருள் இருக்க வேண்டுமானால், குறைந்த பட்சம் அந்தப் பதினொரு நிபந்தனைகளாவது அதன் பொருளாக இருக்க வேண்டும். ஆங்கிலேயரை வாபஸ் வாங்கிக் கொண்டு விடுவது மாத்திரம் அல்ல, சுயேச்சை. பதினொரு நிபந்தனைகளைக் கூறியிருப்பதன் மூலம், சுயேச்சை என்ற மாயமான சொல்லுக்கு ஓரளவுக்கு ஓர் உடலை நான் கொடுத்திருக்கிறேன்.

"என்னுடைய தலைமைப் பதவியைப் பொறுத்தவரையில், நான் கேட்டுக் கொண்டதால் வந்ததல்ல அது. பயனுள்ள

சேவையைச் செய்திருப்பதன் பலனே அது. ஒருவர் தன் தோலின் நிறத்தை எப்படி வெறுத்துத் தள்ளிக்கொண்டுவிட முடியாதோ, அதே போல அத்தகைய தலைமைப் பதவியை வேண்டாம் என்று தள்ளிவிட முடியாது. தேச மக்களின் உள் அங்கமாக நான் ஆகிவிட்டதால், என்னுடைய தவறுகளுடனும், குறைபாடுகளுடனும் என்னை அவர்கள் வைத்துக்கொண்டுதான் ஆக வேண்டும். ஆனால், ஒரு விஷயத்தை மாத்திரம் நான் நிச்சயமாச் சொல்லுவேன். என்னைக் குறை கூறுகிறவர்களுக்கும், என் மீது என்றுமே குறை கூறுகிறவர்களுக்கும், என் வேலைத் திட்டத்தைப் புரிந்துகொண்டுவிடும் பொறுமையும், அதைப் பின்பற்றி நடக்கும் உறுதியும் மாத்திரம் இருக்குமானால், பூரண சுயராஜ்யம் கிட்டத்திலேயே இருக்கிறது."

## 6

# என்றும் தோற்பதில்லை

அன்பின் முன்பு துவேஷம் பனி போல் மறைந்து விடுகிறது.

"பூரண சுயராஜ்யத்தை அடைவதற்கு அகிம்சை ஒன்றே வழி என்பதில் பூரணமான நம்பிக்கை உள்ளவர்களினாலேயே சட்ட மறுப்பு ஆரம்பிக்கப்பட வேண்டும், நடத்தப்பட வேண்டும் என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி கருதுகிறது. காங்கிரஸ் ஸ்தாபனத்தில் இப்படிப்பட்ட ஆண்களும் பெண்களும் மாத்திரம் இல்லை. நாட்டில் இப்பொழுது இருந்துவரும் நிலைமைக்கு அத்தியாவசியமான ஒரு கொள்கையாக மாத்திரம் அகிம்சையை ஒப்புக்கொள்ளுகிறவர்களும் இருக்கிறார்கள். ஆகவே, மகாத்மா காந்தியின் யோசனையைக் காரியக் கமிட்டி வரவேற்பதோடு, அவரையும், மேலே சொல்லப்பட்டிருக்கும் அளவுக்கு அகிம்சை ஒன்றே வழி என்பதில் பூரணமான நம்பிக்கை கொண்டு அவரோடு வேலை செய்கிறவர்களையும், அவர்கள் விரும்பும்போது, அவர்கள் முடிவு செய்யும் வகையிலும் அளவிலும் சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு இக் கமிட்டி அங்கீகாரம் அளிக்கிறது. போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போது, எல்லாக் காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும், சட்ட மறுப்பாளர்களுக்குச் சாத்தியமான எல்லா வழிகளிலும் முழு ஒத்துழைப்பையும் அளிப்பதோடு, ஆத்திர மூட்டக்கூடிய செயல்கள் என்னதான் நடந்தாலும் அவர்கள் பூரண அகிம்சையையே அனுசரித்து அது நிலவும்படிச் செய்வார்கள் என்றும் காரியக் கமிட்டி நம்புகிறது. பொது மக்களெல்லாம் ஈடுபடும் போராட்டம் நடக்கும்போது, வக்கீல்களைப் போன்று தாங்களாகவே அரசாங்கத்திற்கு ஒத்துழைப்பை அளித்து வருகிறவர்கள் எல்லோரும், மாணவர்களைப் போன்று நன்மைகள் என்று சொல்லப்படுகிறவைகளை அரசாங்கத்தினிடமிருந்து பெற்று வருகிறவர்களும், தங்கள் ஒத்துழைப்பை வாபஸ் வாங்கிக்கொண்டோ, அந்த நன்மைகள் வேண்டாம் என்று துறந்துவிட்டோ, சுதந்திரத்திற்காக நடக்கும் முடிவான

போராட்டத்தில் ஈடுபடுவார்கள் என்றும் காரியக் கமிட்டி மேலும் நம்புகிறது. தலைவர்கள் கைது செய்யப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டு விடுவார்களானால், கைது செய்யப்படாமல் தியாக, சேவை உணர்ச்சியுடன் வெளியில் இருப்பவர்கள், காங்கிரஸ் ஸ்தாபனத்தை நடத்திக்கொண்டு போவதோடு தங்கள் சக்திக்கு முடிந்தவரையில் போராட்டத்தையும் நடத்தி வருவார்கள் என்றும் காரியக் கமிட்டி நம்புகிறது.''

காரியக் கமிட்டியின் இத்தீர்மானம், என்னுடைய சுதந்திர சாசனத்தை எனக்கு அளிக்கிறது. அதே சமயத்தில் கெட்டியான சங்கிலிகளைக் கொண்டும் என்னைப் பிணைத்துக்கட்டுகிறது. இத்தனை மாதங்களாக நான் கஷ்டப்பட்டுத் தேடிக் கொண்டிருந்த முறைதான் இது. இத்தீர்மானம் எனக்கு, ராஜீய முக்கியத்துவத்தைவிட மத முக்கியத்துவத்தையே அதிகமாகக் கொண்டதாகும். எனக்குள்ள சிரமம் அடிப்படையைப் பற்றியது. பல தரப்பட்ட மனோபாவங்களைக் கொண்ட ஒரு ஸ்தாபனத்தின் மூலம் அகிம்சையை நான் செயலாற்ற முடியாது என்பதைக் கண்டேன். பெரும்பான்மையினர் செய்யும் முடிவுக்கு உட்பட்டதாக அது இருக்க முடியாது. அது தன்னளவில் பொருத்தமானதாக இருப்பதற்கு உலகம் முழுவதற்குமே முரண்பட்டதாகவும் இருக்க வேண்டியதாகலாம்.

தனக்கு 'இஷ்டமான ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்ற வாய்ப்பு ஒருவருக்கு இருக்கும் போது, எப்பொழுதுமே கவர்ச்சியானதில் அவர் மயங்கிவிடுகிறார். ஆகையால், அகிம்சை ஒரு கொள்கையாக மாத்திரம் இருப்பவர்களுக்கு, பலாத்காரத்தின் கவர்ச்சி ஏற்பட்டுவிடும்போது, அவர்களின் உணர்ச்சி அவர்களைத் தவறிப் போய்விடும்படிச் செய்துவிடக் கூடும். அகிம்சையைத் தவிர தங்களுக்கு வேறு பரிகாரமே இல்லை என்றிருப்பவர்களுக்கு, உண்மையிலேயே அவர்களிடம் அகிம்சை இருக்குமானால், அவர்கள் தவறிப் போகும்படியே நேராது. எனவே, காங்கிரஸின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற வேண்டியது அவசியமாயிற்று. என் நிலைமை முற்றிலும் சரியானது என்பதைக்கண்ட காரியக் கமிட்டி உறுப்பினர்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

நிலைமையை யாரும் தவறாக எண்ணிக் கொண்டுவிட மாட்டார்கள் என்றே நம்ப வேண்டும். இங்கே உயர்வானவர்கள் என்ற பிரச்னையே இதில் இல்லை. சுதந்திரத்தை அடைவதற்கு அகிம்சை ஒன்றே வழி என்பதில் நம்பிக்கையுள்ளவர்கள், அகிம்சையைக் கொள்கையாக மாத்திரம் கொண்டிருப்பவர்களைவிட எந்த வகையிலும் உயர்ந்தவர்கள் அல்ல. பழுப்பு நிற மனிதருக்கும் மஞ்சள் நிற மனிதருக்கும் உயர்வு தாழ்வு இல்லாததைப் போன்றதுதான் இதுவும். ஒவ்வொருவரும் அவரவர்கள் கொள்கைப்படி நடக்கிறார்கள்.

நான் என்றும் மேற்கொண்டதைவிட அதிகமான பொறுப்பு எனக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. இது தவிர்க்க முடியாததாக இருந்தது. ஆனாலும், எனக்கு வழி காட்டுவது அகிம்சையாகவே இருக்குமாயின், எல்லாம் சரியாகவே முடியும். ஏனெனில், உலகிற்குத் தாம் அளித்திருப்பது இன்னதென்பதை அறிந்த மகான், ''அகிம்சையின் முன்னால் துவேஷம் பனி போல் மறைந்து விடுகிறது'' என்றார். அன்பு அல்லது தயாளம் என்பது தான் அச்சொல்லுக்குச் சரியான பொருள்; பைபிளும் கீழே வருமாறு கூறுகிறது :

''அன்பு அயலானுக்குத் தீங்கு செய்யாது,
''எல்லாவற்றையுமே நம்பும்,
''எல்லாவற்றிலும் நம்பிக்கை வைக்கும்,
''என்றுமே தோல்வியை அடையாது.

சட்ட மறுப்பு என்பது, சில சமயங்களில் அன்பின் முடிவான ஆக்ஞையாகிறது. இது ஆபத்தானதுதான் என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், சூழ்ந்திருக்கும் பலாத்காரத்தைவிட இது அவ்வளவு ஆபத்தானது அல்ல. ஆன்மாவை நாசம் செய்யும் அதன் தீயிலிருந்து தப்புவதற்குள்ள ஒரே வழி, அகிம்சை பூர்வமான சட்ட மறுப்பே. சட்ட மறுப்பு நடக்கும் அதே சமயத்தில் பலாத்காரச் செயல்களும் மூண்டுவிடும் என்ற ஒன்றே ஒன்றில் தான் இந்த அபாயம் இருக்கிறது. அப்படி ஏற்படுமானால், இப்பொழுது எனக்கு வழி தெரியும். பர்டோலி சமயத்தில் செய்ததைப் போன்று பின்வாங்கி விடுவது அல்ல, அந்த வழி. சுதந்திரப் போராட்டத்தில், பலாத்காரத்தை எதிர்த்து நடக்கும் அகிம்சைப் போர், அந்தப் பலாத்காரம் எந்த இடத்திலிருந்து வருவதாக இருந்தாலும், ஒரு பிரதிநிதி உயிருடன் மிஞ்சும் வரையிலும் தொடர்ந்து நடந்துதான் ஆக வேண்டும். இதற்கு அதிகமாக யாரும் செய்ய முடியாது. இதற்குக் குறைவாகச் செய்வது, அகிம்சையில் நம்பிக்கையின்மையையே காட்டுவதாகும்.

'எங் இந்தியா' 20—2—1930

# 7

# என்னைக் கைது செய்யும்போது

சட்ட மறுப்பை ஆரம்பித்ததும் நான் கைது செய்யப்பட்டு விடுவது நிச்சயம் என்றே கொள்ள வேண்டும். ஆகையால், அப்படி நான் கைது செய்யப்படும் போது செய்ய வேண்டியது என்ன என்பதை யோசிக்க வேண்டியது அவசியமாகிறது.

1922-இல் நான் கைது செய்யப்படுவதற்கு முன்னால், மௌனத்தையும் பூரண அகிம்சையையும் தவிர வேறு எந்தவிதமான ஆர்ப்பாட்டமும் செய்யக் கூடாது என்று என் சக ஊழியர்களுக்கு எச்சரிக்கை செய்திருந்தேன். நிர்மாண வேலை ஒன்றே நாட்டை சட்ட மறுப்புக்குத் தயார் செய்யுமாகையால், அதை முழு உற்சாகத்துடன் நிறைவேற்ற வேண்டும் என்றும் வற்புறுத்தினேன். நான் கூறிய யோசனையின் முதல் பகுதி, கடவுளின் அருளால் அப்படியே முற்றிலும் நிறைவேற்றி வைக்கப் பட்டுவிட்டது. 'ஒரு நாய்கூடக் குரைக்கவில்லை' என்று ஓர் ஆங்கிலப் பிரபு வெறுப்புடன் கூறும் அளவுக்கு முற்றிலும் நிறைவேற்றப்பட்டது எனலாம். நாடு முற்றிலும் அகிம்சையோடு நடந்து கொண்டது என்பதைச் சிறையில் நான் அறிந்த போது, அகிம்சைப் பிரசாரத்தினால் பலன் ஏற்பட்டிருக்கிறது, பர்டோலித் தீர்மானம் செய்த புத்திசாலித்தனமான காரியம் என்பதை எடுத்துக் காட்டுவதாகவே எனக்கு இருந்தது. நான் கைதியானதும் 'நாய்கள்' குரைத்திருந்து, பலாத்காரமும் கட்டவிழ்த்து விடப்பட்டிருக்குமானால் என்ன நேர்ந்திருக்கும் என்பதை யூகித்துக் கொண்டிருப்பது பைத்தியக்காரத்தனம். ஆனால், ஒன்று மாத்திரம் நான் கூற முடியும். அப்படியெல்லாம் நடந்திருந்தால், லாகூரில் பூரண சுயேச்சைத் தீர்மானம் நிறைவேறியிருக்காது ; கற்பனை செய்யவும் முடியாததான அபாயத்திற்கும் தைரியமாக உடன்பட தமது அகிம்சையின் சக்தியில் நம்பிக்கையுடன்கூடிய காந்தியும் இருந்திருக்கமாட்டார்.

என்றாலும், உடனடியாக நடக்க வேண்டியதைக் குறித்துச் சிந்திப்போம். இத்தடவை என்னைக் கைது செய்ததும் மௌனமான, சாத்விக அகிம்சை இருக்க வேண்டியதில்லை. ஆனால், தீவிரமாகச் செயல்படும் ரகத்தைச் சேர்ந்த அகிம்சை இப்பொழுது அமலுக்கு வர வேண்டும். இந்தியாவின் லட்சியத்தை அடையும் காரியத்திற்கு அகிம்சை ஒன்றே வழி என்பதில் பூரணமாக நம்பிக்கை வைத்திருப்பவர்களில் ஒருவர்கூட, இம்முயற்சியின் முடிவில் சிறைப்படாமலிருக்கவோ, உயிரோடிருக்கவோ கூடாது. இப்பொழுது இருந்துவரும் அடிமைத்தனத்திற்கு மேலும் உடன்பட யாரும் வெளியில் இருக்கக் கூடாது. ஆகையால், எனக்குப் பின்னால் வருகிறவர் ஆலோசனை கூறும், நடத்தும் வகையிலோ அல்லது காங்கிரஸ் கூறும் வகையிலோ அத்தகைய சட்ட மறுப்பை, சாத்விக எதிர்ப்பை மேற்கொள்ள வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையாகும். அகில இந்தியாவுக்குமாக எனக்கு அடுத்தாற்போல் யார் என்பது இப்போதைக்கு என் கருத்தில் இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆனால், எனக்குப் பின்னால் வர வேண்டிய ஒருவரைச் சந்தர்ப்பம் கொடுத்து விடும். இதை அறியும் அளவுக்கு என் சக ஊழியர்களிடத்திலும், மேற்கொண்டிருக்கும் காரியத்திலும் போதுமான நம்பிக்கை எனக்கு இருக்கிறது. எனக்குப் பிறகு தலைமை

தாங்க வருபவருக்கு, செய்ய யோசித்திருக்கும் காரியம் அகிம்சையால்தான் முடியும் என்பதில் முழுக்க முழுக்க நம்பிக்கை இருக்க வேண்டும் என்பதுதான் மிக முக்கியமான நிபந்தனை என்பது எல்லோருக்கும் தெரிய வேண்டும். ஏனெனில், அதில் அவருக்கு அந்த ஜீவநம்பிக்கை இல்லாது போனல், நெருக்கடியான நேரத்தில் அகிம்சை முறையைக் கண்டுபிடிக்க அவரால் முடியாது.

இங்கே சொல்லப்படுவது எதுவும், தனக்கு உசிதமானதாகத் தோன்றுவதைக் காங்கிரஸ் செய்வதையோ, அதன் முழு அதிகாரத்தையோ கட்டுப்படுத்துவதாகாது என்பதையும் நன்ருகத் தெரிந்துகொள்ள வேண்டும். இங்கே சொல்லப்படுவதில் பொதுவாகக் காங்கிரஸ்காரர்கள் ஏற்றுக்கொள்ளுவதாக இருப்பவைகளை மாத்திரமே காங்கிரஸ் அங்கீகரிக்கும். இந்த யோசனைகளின் தன்மையைச் சரியானபடி தெரிந்துகொள்ள வேண்டுமானுல், காங்கிரஸ் கமிட்டி எனக்கு அளித்திருக்கும் பூரண உரிமைச் சாசனத்தில் உள்ள ஸ்தாபன மதிப்பையும் போதிய அளவு அறிந்துகொள்ள வேண்டும். அகிம்சை, தன் சுதந்திரத்திற்கு விதிக்கப்படும் எந்தத் தடைக்கும் உடன்படுவதில்லை. யாரையும், எந்த ஸ்தாபனத்தையும் அது தன் தடைக்கு உட்படுத்துவதும் இல்லை. தானே விதித்துக் கொள்ளுவதாக இருக்கும், தானே மேற்கொள்ளும் தடைக்கு மாத்திரமே அது உடன்படும். இப்பொழுது இருந்துவரும் சந்தர்ப்பத்தில், சாத்தியமான ஒரே கொள்கை அகிம்சைதான் என்று பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் தொடர்ந்து நம்பிவரும் வரையில், எனக்குப் பிறகு தலைமை வகிப்பவரின் யோக்கியப் பொறுப்பிலேயே அன்றி, அறிவிக்கப்பட்டிருக்கும் அளவுக்கு அகிம்சை ஒன்றே வழி என்பதில் பூரணமான நம்பிக்கை கொண்டிருப்பவர்களின் யோக்கியப் பொறுப்பிலும் நம்பிக்கை இருக்கும் வரையில்தான், காங்கிரஸ் அவருக்கும், அவர்களுக்கும் தனது ஆசியை அளிக்கும். எனக்குப் பிறகு வருபவருக்கு, இயக்கத்தைப் புத்திசாலித்தனமாக நடத்திப் போவதற்குள்ள திறமையில் காங்கிரஸுக்கு நம்பிக்கை இருந்தால்தான், இந்த அறிவிப்புகளையும் அவருடைய அறிவிப்புகளையும் நிறைவேற்றி வைக்கும்.

என்னைப் பொறுத்தவரையில், ஆசிரமத்தில் இருப்பவர்களைக்கொண்டும், ஆசிரமத்தின் கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டு அதன் முறைகளை நன்ருக அறிந்து கடைப்பிடித்திருப்பவர்களைக் கொண்டுமே இந்த இயக்கத்தை ஆரம்பிப்பது என்பதே என் உத்தேசம். ஆகையால், ஆரம்பத்தில் போரில் இறங்கப் போகிறவர்கள் புகழ் பெற்றவர்களாக இருக்க மாட்டார்கள். இதுவரையில் ஆசிரமம், வேண்டுமென்றே எதிலும் சேராமல் தனித்து ஒதுக்கிவைக்கப்பட்டு வந்திருக்கிறது. நீண்ட காலக் கட்டுதிட்டப் பயிற்சியின் மூலம் அது ஸ்திரத் தன்மையை அடை

யட்டும் என்பதற்காகவே அவ்விதம் செய்யப்பட்டது. சத்தியாக்கிரக ஆசிரமம், அதன் மீது வைக்கப்பட்ட மிகுந்த நம்பிக்கைக்கும், நண்பர்கள் அதன்மீது பொழிந்திருக்கும் அன்புக்கும் தகுதியுடையதாக இருக்க வேண்டுமாயின், 'சத்தியாக்கிரகம்' என்ற சொல்லில் அடங்கியுள்ள தன்மைகளை அது செயலில் காட்ட வேண்டிய சமயம் வந்துவிட்டது என்றே கருதுகிறேன். நமக்கு நாமே விதித்துக்கொண்ட கட்டுதிட்டங்கள், நுணுக்கமான சுகானுபவங்களாகிவிட்டன என்று எண்ணுகிறேன். நாம் அடைந்திருக்கும் மரியாதை, நமக்கு வசதிகளையும் சௌகரியங்களையும் அளித்திருக்கின்றன. இவற்றை அடைவதற்கு நாம் முற்றிலும் தகுதியற்றவர்களாகவும் இருக்கக்கூடும். என்றாலும், சத்தியாக்கிரகம் எந்த வகையில் நம்முடைய தகுதியை ஒரு நாளைக்கு நிரூபித்துக்காட்ட நம்மால் முடியும் என்ற நம்பிக்கையில்தான் அவையெல்லாம் நன்றியுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டு வந்திருக்கிறது. ஆசிரமம் சுமார் பதினைந்து ஆண்டு காலமாக இருந்துவருகிறது. இச்சமயத்தில் அதைச் செயலில் காட்ட ஆசிரமத்தினால் முடியவில்லையென்றால், அதுவும் நானும் மறைந்து விடவேண்டும். அப்படி மறைவது நாட்டுக்கும், ஆசிரமத்திற்கும், எனக்கும் நல்லது.

ஒழுங்காக ஆரம்பித்து உண்மையோடு செய்யும்போது நாடு முழுவதிலுமிருந்தும் ஆதரவை எதிர்பார்க்கிறேன். அப்பொழுது, இயக்கத்தை வெற்றிகரமானதாகச் செய்ய விரும்பும் ஒவ்வொருவரும், அதை அகிம்சையோடு கூடியதாகவும் கட்டுதிட்டங்களுக்கு உட்பட்டதாகவும் வைத்திருக்க வேண்டியது அவர்களுடைய கடமை. தனது தலைவரிடமிருந்து அழைப்பு வரும் வரையில் ஒவ்வொருவரும் தமது இடத்தில் தயாராக இருந்து வரவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகின்றனர். பொது மக்கள் தாமே போராட்டத்தில் இறங்கிவிடுவதும் இருக்கும் என்று நான் நம்புகிறேன். என் முந்திய அனுபவத்தைக்கொண்டு பார்க்கும்போது, அப்படிப் பொதுஜனப் போராட்டம் ஏற்படும்போது, அது பெரும்பாலும் தனக்குத்தானே ஒழுங்குபடுத்திக் கொண்டதாகவே இருக்கும். ஆனால், அகிம்சை ஒன்றே வழி என்பதில் பூரண நம்பிக்கையுடையவர்களாயினும், அகிம்சையைக் கொள்கையாகக் கொண்டவர்களாயினும், ஒவ்வொருவரும் பொதுஜன இயக்கத்திற்கு உதவி செய்வார்கள். பொதுஜன இயக்கங்கள், உலகம் முழுவதிலுமே, எதிர்பாராத தலைவர்களை அளித்திருக்கின்றன. அந்த விதியிலிருந்து இது மாத்திரம் விலக்கானதாக இருந்துவிடுவதற்கில்லை. ஆகையால், பலாத்காரச் சக்திகளைக் கட்டுப்படுத்த, யூகிக்க முடிந்த, சாத்தியமான எல்லா வழிகளிலும் முயற்சி செய்தாகவேண்டும். என்றாலும், இத்தடவை சட்ட மறுப்பு ஒரு முறை ஆரம்பிக்கப்பட்டுவிட்டால், ஒரு தனி சட்ட மறுப்பாளர் சிறைப்படாமலோ உயிரோடோ இருக்கும் வரையில், அதை நிறுத்தவே முடியாது; நிறுத்தவும் கூடாது. சட்ட

மறுப்பில் நம்பிக்கை கொண்டவர், கீழ்க்கண்ட நிலைகளில் ஏதாவது ஒன்றில்தான் இருந்துவர வேண்டும்:

1. சிறையில் அல்லது அது போன்ற ஒரு நிலையில் ; அல்லது
2. சட்ட மறுப்பில் ஈடுபட்டிருக்க வேண்டும்; அல்லது
3. உத்தரவின்படி நூற்றுக்கொண்டோ, அல்லது சுயராஜ்யம் பெறுவதற்கு உதவக்கூடியதான நிர்மாண வேலை எதையாவது செய்தோ வரவேண்டும்.

'எங் இந்தியா' - 27—2—1930

# 8

# வைஸ்ராய்க்குக் கடிதம்

[சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு முன்னால் 1930 மார்ச் 2-ஆம் தேதி மகாத்மா காந்தி, வைஸ்ராய் லார்டு இர்வினுக்கு ஒரு கடிதம் எழுதினார். அப்பொழுது சாபர்மதி ஆசிரமத்தில் இருந்த ஓர் ஆங்கிலேயரான ஸ்ரீ ரெஜினல்டு ரெய்னால்ட்ஸ் என்பவர் மூலமே அக்கடிதத்தை வைஸ்ராய்க்கு அனுப்பினார். எந்த ஓர் ஆங்கிலேயருக்கும் மன வருத்தத்தை விரும்பித் தாம் செய்துவிடாமலிருப்பதற்கு மேற்கொண்டும் ஒரு தடை இருக்க வேண்டும் என்று தாம் விரும்பியதாலேயே அக்கடிதத்தை ஓர் ஆங்கிலேயர் மூலமே வைஸ்ராய்க்கு அனுப்புவதாகவும் காந்திஜி அப்பொழுது கூறினார். அக்கடிதத்தின் முழு விவரமும் கீழே கொடுக்கப்படுகிறது:]

அன்புள்ள நண்பரவர்களே!

சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு முன்னால், எந்த அபாயத்தை மேற்கொள்ளுவதைக் குறித்து இத்தனை ஆண்டுகளாக நடுங்கிப் பயந்துகொண்டிருந்தேனோ அந்த அபாயத்தை இப்பொழுது மேற்கொள்ளுவதற்கு முன்னால், உங்களை அணுகி, இதிலிருந்து தப்புவதற்கு வழி காண்பதில் மகிழ்ச்சியடைவேன்.

என்னைப் பொறுத்தவரையில், என் நம்பிக்கை முற்றிலும் தெளிவானதாக இருக்கிறது. உயிருடனிருக்கும் எதையும் விரும்பி வருத்த என்னால் முடியாது. அப்படியிருக்கும்போது, எனக்கும், என்னுடையவைகளுக்கும் பெரும் தீமைகளை யார்

செய்தாலும், சகோதரர்களான மனிதர் யாரையும் வேண்டுமென்று வருத்த என்னால் முடியாது. ஆகையால், பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு சாபக்கேடு என்றே நான் அபிப்பிராயம் கொண்டிருந்த போதிலும், ஆங்கிலேயர் ஒருவருக்குக்கூட, இந்தியாவில் அவருக்கு இருக்கும் நியாயமான நலனுக்குக்கூட, எந்தத் தீங்கையும் நான் விரும்பவில்லை. நான் கூறுவதைத் தப்பாகப் பொருள்படுத்திக்கொண்டுவிடக் கூடாது. இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் ஆட்சி ஒரு சாபக்கேடு என்று நான் கருதியபோதிலும், அதனால் பொதுவாக ஆங்கிலேயர்கள், உலகத்திலிருக்கும் மற்ற மக்களைவிட மோசமானவர்கள் என்று நான் கருதிவிடவில்லை. அநேக ஆங்கிலேயர்களை, அன்பான நண்பர்கள் என்று சொல்லிக்கொள்ளும் பெருமை எனக்கு உண்டு. உண்மையில், பிரிட்டிஷ் ஆட்சியின் தீமைகளைப் பற்றி அதிகமாக நான் தெரிந்துகொண்டதெல்லாம், அந்த ஆட்சியைப் பற்றிய கசப்பான உண்மைகளையெல்லாம் எடுத்துக் கூறத் தயங்காத, கபடமற்ற, வீரமுள்ள ஆங்கிலேயர்கள் எழுதியிருப்பதைக் கொண்டுதான்.

பிரிட்டிஷ் ஆட்சி ஒரு சாபக்கேடு என்று ஏன் நான் கருதுகிறேன்? மேலும் மேலும் சுரண்டிக்கொண்டே போகும் ஒரு முறையைக்கொண்டும், இந்நாட்டினால் என்றுமே தாங்க முடியாததான நாசமாக்கும் செலவைக்கொண்ட ராணுவ, ஸிவில் நிர்வாகத்தைக் கொண்டும் ஒன்றுமறியாத கோடிக்கணக்கான மக்களை இந்த ஆட்சி ஏழ்மைப்படுத்தி விட்டது. ராஜீயத்தில் எங்களை அடிமை நிலைக்குக்கொண்டு வந்திருக்கிறது. எங்கள் கலாச்சாரத்தின் அடித்தளத்தையே அது பாழாக்கியிருக்கிறது. நிராயுதபாணிகளாக்கும் கொடிய முறையைக்கொண்டு ஆன்மிகத்துறையிலும் அது எங்களைக் கேவலமாக்கிவிட்டது. அநேகமாக எல்லோரையும் நிராயுதபாணிகளாக்கிவிட்டதனாலேயே உள்பலம் இல்லாது போய், கோழைத்தனமான, கதியற்ற ஒரு நிலைக்கும் அது எங்களைக் கொண்டுவந்துவிட்டது.

கூட்டவிருக்கும் வட்டமேஜை மகாநாடு, ஒரு பரிகாரத்தை அளிக்கக்கூடும் என்று என் நாட்டு மக்களில் அநேகர் நம்பியதைப் போன்றே நானும் நம்பிக்கை வைத்திருந்தேன். ஆனால், முழு டொமினியன் அந்தஸ்திற்கான ஒரு திட்டத்தை ஆதரிப்பதாக நீங்களோ, பிரிட்டிஷ் மந்திரி சபையோ பிரதிக்ஞை கொள்ளுவதாக வாக்குறுதி அளிக்க முடியாது என்று தெளிவாக நீங்கள் சொல்லிவிட்டீர்கள். அதனால், கேட்டுவரும் இந்தியர் அறிந்தும், வாயில்லாப்பூச்சிகளான இந்தியர் அறியாமலும் எந்தப் பரிகாரத்திற்காக அதிக ஆர்வத்துடன் இருந்து வருகிறார்களோ அந்தப் பரிகாரத்தை வட்டமேஜை மகாநாடு செய்யப் போவதில்லை. பார்லிமெண்டின் தீர்ப்பு எதிர்பார்க்கப்படுகிறது என்ற பிரச்னை எப்பொழுதுமே இல்லை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. பார்லிமெண்டின் முடிவை எதிர்பார்த்துப் பிரிட்டிஷ் மந்திரி சபை ஒரு குறிப்பிட்ட கொள்கை

யில் தானே பிரதிக்ஞை செய்துகொண்ட சம்பவங்கள் எத்தனையோ இருக்கின்றன.

டில்லி பேச்சு பயனில்லாது போய்விடவே, கல்கத்தாவில் 1928-இல் நடந்த மகாநாட்டில் முறைப்படி நிறைவேறிய தீர்மானத்தை, நிறைவேற்றிவைப்பதைத் தவிர எனக்கும் பண்டித மோதிலால் நேருவுக்கும் வேறு வழியில்லாது போய்விட்டது.* ஆனால், உங்கள் அறிவிப்பில் கூறப்பட்டிருக்கும் டொமினியன் அந்தஸ்து என்ற சொல், அதற்குரியதான கருத்திலேயே உப

* 1928-இல் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில் இந்தியா டொமினியன் அந்தஸ்தை அடைவதா, பூரண சுதந்திரத்தை அடைவதா என்னும் விஷயத்தில் காங்கிரஸ்காரர்களிடையே பலத்த பிளவு இருந்தது. சைமன் கமிஷன் நியமனத்தை எதிர்த்து அமைக்கப்பட்ட நேரு கமிட்டி, குடியேற்ற நாட்டு அரசியல் நகலையே தயாரித்தது. அந்த அறிக்கை கல்கத்தா காங்கிரஸின் அங்கீகாரத்திற்கு வந்த சமயத்திலேயே, காங்கிரஸ்காரர்களிடம் இவ்விதம் பலத்த பிளவு உண்டாகியிருந்தது. காங்கிரஸில் கொண்டுவரவிருந்த தீர்மானத்தில் சில திருத்தங்களைச் சமரசத்திற்காகக் காந்திஜி செய்தார். நேரு அறிக்கையில் கண்ட அரசியலை பார்லிமெண்டு அங்கீகரிப்பதற்கு இரண்டு வருட கெடுவு கொடுப்பது என்பது அசல் தீர்மானம். அந்தக் கெடுவுக் காலத்தைக் காந்திஜி ஒரு வருடம் என்று மாற்றினுர். இத் தீர்மானத்தின் நகலை நேரு அறிக்கையின் நகலுடன் வைஸ்ராய்க்கு அனுப்புவது என்று அசல் தீர்மானத்தில் இருந்தது. ஆனால், சமரசத்திற்காக இந்தப் பகுதி திருத்தத் தீர்மானத்தில் நீக்கப்பட்டுவிட்டது. பூரண சுதந்திரத்திற்காகப் பிரசாரம் செய்வதைப் பற்றி அசல் தீர்மானத்திலிருந்த பகுதியை, பூரண சுயேச்சை வேண்டும் என்பவர்கள் காங்கிரஸின் பெயராலேயே பிரசாரம் செய்யலாம் என்றும் காந்திஜி மாற்றினுர். நேரு அறிக்கையில் கண்ட அரசியல் நிராகரிக்கப்பட்டாலோ, 1929 டிசம்பர் 31-ஆம் தேதிக்குள் அது அங்கீகரிக்கப்படாவிட்டாலோ, அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமைக்குக் காங்கிரஸ் ஏற்பாடு செய்து, வரி மறுப்பது அல்லது முடிவு செய்யப்படும் வகையில் அதைக் காங்கிரஸ் நடத்துவது என்றும் அத்தீர்மானம் கூறியது. மகாத்மா காந்தி செய்த இந்தச் சமரசத் தீர்மானம் விஷயாலோசனைக் கமிட்டியில் சாதகமாக 118 வாக்குகளும் எதிராக 45 வாக்குகளும் பெற்று நிறைவேறியது.

ஆனால், மகாநாட்டில் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ், அந்தச் சமரசத் தீர்மானத்திற்கு ஒரு திருத்தம் கொண்டு வந்தார். ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அத்திருத்தத்தை ஆமோதித்தார். இவ்விருவரும் சமரசத் தீர்மானத்தை முன்னால் ஒப்புக்கொண்டவர்கள். இதைக் கண்டு மனவேதனை யடைந்த காந்திஜி, மகாநாட்டில் கூறியதாவது: "முஸ்லிம்கள் 'அல்லா' என்று ஜபம் செய்துகொண்டிருப்பதைப் போல, பக்தியுள்ள ஹிந்துக்கள் 'கிருஷ்ணு', 'ராமா' என்று உச்சரித்துக் கொண்டிருப்பதைப் போல, பூரண சுதந்திரம் என்ற பெயரை நீங்கள் உதட்டில் உச்சரித்துக் கொண்டிருக்கலாம். ஆனால், அதற்குப் பின்னுல் எந்த யோக்கியப் பொறுப்பும் இல்லாது போனுல் அந்த உச்சரிப்பெல்லாம் வெத்து முறையாகவே இருக்கும். கொடுத்த வாக்குப்படி நடக்க நீங்கள் தயாராக இல்லை என்ருல், பூரண சுதந்திரம் எங்கே இருக்கும்? உறுதியான சரக்கைக் கொண்டு ஆனது பூரண சுதந்திரம். சொற்களின் ஜால வித்தையைக் கொண்டு ஆனது அல்ல அது." சுபாஷ் பாபுவின் திருத்தத்தின் மீது வாக்கு எடுத்ததில் அதற்கு ஆதரவாக 973 வாக்குகளும். எதிராக 1, 350 வாக்குகளும் கிடைக்கவே திருத்தம் தோல்வியுற்றுக் காந்திஜியின் சமரசத் தீர்மானமே நிறைவேறியது. காங்கிரஸ் அப்பொழுது செய்ய நேர்ந்த இத் தீர்மானத்தையே வைஸ்ராய்க்குத் தாம் எழுதிய கடிதத்தில் காந்திஜி குறிப்பிடுகிருர்.

யோசிக்கப்பட்டிருக்குமாயின், பூரண சுதந்திரத்தைப் பற்றிய தீர்மானம் பீதியை உண்டாக்குவதற்கில்லை. ஏனெனில், டொமினியன் அந்தஸ்து என்பது உண்மையில் பூரண சுதந்திரம்தான் என்று பொறுப்பு வாய்ந்த பிரிட்டிஷ் ராஜதந்திரிகளே ஒப்புக்கொண்டிருக்கவில்லையா? என்றாலும், அப்படிப்பட்ட டொமினியன் அந்தஸ்தைச் சீக்கிரத்தில் கொடுக்கும் உத்தேசம் என்றுமே இருந்ததில்லை என்றே அஞ்சுகிறேன். ஆனால், இவையெல்லாம் பழைய சரித்திரம். உங்கள் அறிவிப்பு வெளிவந்த பிறகு, எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அவை யாவும் பிரிட்டிஷ் கொள்கையின் போக்கைச் சந்தேகத்திற்கு இடமில்லாமல் காட்டுகின்றன.

இந்தியாவுடன் பிரிட்டன் நடத்தி வரும் வர்த்தகத்திற்குப் பாதகத்தை உண்டாக்கிவிடும் வகையில், பிரிட்டிஷ் கொள்கையில் எந்த மாறுதலையும் செய்ய பொறுப்புள்ள பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் எண்ணவில்லை. பிரிட்டன் இந்தியாவுடன் செய்து வரும் கொடுக்கல் வாங்கலை பாரபட்சமற்ற வகையில் நன்ருகப் பரிசீலனை செய்வதையும் அவர்கள் விரும்பவில்லை. இது வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது. இந்தச் சுரண்டல் முறைக்கு முடிவு காண எதுவும் செய்யாது போனால், இன்னும் அதிக வேகத்தில் இந்தியா நாசமாக வேண்டியதுதான். ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் ஆறு பென்ஸ் என்ற நாணய மாற்று விகிதம் முடிவான சங்கதி என்று நிதி மந்திரி கருதுகிருர். இதில் பேனவின் ஓர் எழுத்தால் சில கோடி ரூபாய் இந்தியாவிலிருந்து போய்விடுகிறது. உண்மையான இக்காரியங்களெல்லாம் நடக்க முடியாதபடி, சாத்விகமான நேரடி நடவடிக்கையின் மூலம் செய்யத் தீவிர முயற்சி செய்யப்படுகிறது. இச்சமயத்தில் இம்முயற்சியை நசுக்குவதற்கு உதவி செய்யுமாறு, இந்தியாவை அணுக்களாகத் தூளாக்கிக்கொண்டிருக்கும் ஒரு முறையின் பெயரால், பணக்கார நிலச்சுவான்தார் வகுப்பினரை, மற்ற அநேகருடன் சேர்ந்து நீங்களும் கேட்டுக்கொள்ளாமல் இருக்க முடியாது.

சுதந்திரத்தில் கொண்டிருக்கும் இந்த ஆர்வத்தில் அடங்கியிருக்கும் நோக்கத்தை, நாட்டின் பெயரால் வேலை செய்கிறவர்கள் புரிந்துகொள்ள வேண்டும். சம்பந்தப்பட்டவர்கள் எல்லோர் முன்பும் அதை எடுத்துக்காட்டவும் வேண்டும். அப்படிச் செய்யாது போனால், உழைத்துப் பாடுபட்டு வரும் வாயில்லாப் பூச்சிகளான எந்தக் கோடிக்கணக்கான மக்களுக்காக இந்தச் சுதந்திரம் தேடப்படுகிறதோ, யார் இதை அடைய வேண்டுமோ, அந்த மக்களுக்கு ஒரு பயனுமில்லாத வகையில் அந்தச் சுதந்திரம் வந்துவிடக்கூடிய ஆபத்து இருக்கிறது. இந்தக் காரணத்தைக்கொண்டே, சுதந்திரத்தின் உண்மையான பொருள் என்ன என்பதைச் சமீப காலமாகப் பொது மக்களுக்குச் சொல்லி வருகிறேன். சில முக்கியமான விஷயங்களை உங்கள் முன்பு வைக்கிறேன்.

நிலவரி, மொத்த வரியில் பெரும்பாகமாக இருக்கிறது. அக்கிரமமான இந்த நிலவரிப் பளு, சுதந்திர இந்தியாவில் அதிக மாறுதலை அடைய வேண்டும். பிரமாதமாகக் கூறப்படும் சாசுவத நிலத்தீர்வையினுல் சில பணக்கார ஜமீன்தார்கள் நன்மையடைகிருர்களேயன்றி விவசாயிகள் நன்மையடையவில்லை. விவசாயிகள் எப்பொழுதும் போல் கதியற்றவர்களாகவே இருந்து வருகிருர்கள். ஜமீன்தாரின் இஷ்டமிருந்தால்தான் சாகுபடிக்கு நிலம் கிடைக்கும் என்ற நிலையில்தான் விவசாயி இருக்கிருன். இந்நிலைமையில் நிலவரியில் அதிகமாகக் குறைக்க வேண்டியதாவதோடு, விவசாயியின் நன்மையையே முக்கியமான நோக்கமாகக்கொண்டு வரி முறை முழுவதையுமே மாற்றியமைக்க வேண்டியிருக்கிறது. ஆனுல், பிரிட்டிஷ் முறை, விவசாயியின் உயிரையே பிழிந்து எடுத்துவிடும் வகையில் தயாரிக்கப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. உயிர் வாழ்வதற்காக அவன் உபயோகித்தாக வேண்டியிருக்கும் உப்புக்கும்கூட, பளுவெல்லாம் அதிகமாக அவன் தலையிலேயே விழும் வகையில், வரி விதிக்கப்பட்டிருக்கிறது. பணக்காரர்களைவிட ஏழைகளே, தனிப்பட்டும் மொத்தமாகவும், அதிகமாக உப்பைச் சாப்பிட வேண்டியிருக்கிறது. இதை நினைவில் வைத்துக்கொண்டு பார்த்தால், இந்த வரி ஏழைக்குத்தான் அதிகக் கஷ்டமானதாக இருந்து வருகிறது என்பது தெரிகிறது. மதுபானம், போதை வஸ்துக்களின் வரி வருமானமும் ஏழைகளிடமிருந்துதான் வசூலிக்கப்படுகிறது. இது அவர்களுடைய சுகாதார, ஒழுக்க அடிப்படையையே தகர்த்துவிடுகிறது. தனிப்பட்டவரின் சுதந்திரம் என்ற பொய்யான வாதத்தைக் கூறி, இந்த வரி வருமானம் நியாயம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல், உண்மையில் வருமானத்திற்கு என்றே அது வைக்கப்பட்டிருக்கிறது. 1919-ஆம் வருட அரசியலைத் தயாரித்தவர்கள் தந்திரமாக இந்த வரி வருமானத்தை, இரட்டையாட்சி முறையில் ஜனப்பிரதிநிதிகளுக்குப் பொறுப்பு வாய்ந்தது என்று சொல்லப்படும் பகுதிக்கு மாற்றிவிட்டார்கள். இதன் மூலம் மது விலக்குச் செய்யும் பாரத்தை அப்பகுதியின் மீது போட்டு, அதன் மூலம் ஆரம்பத்திலிருந்து அது நல்லது எதையும் செய்ய முடியாதபடிச் செய்துவிட்டார்கள். துர்ப்பாக்கியமான மந்திரி இந்த வரி வருமானத்தை ஒழித்து விடுவாராலுல், கல்விக்கு அவர் செலவு செய்ய முடியாது போகும். ஏனெனில், இப்பொழுது இருந்து வரும் நிலைமையில், அந்த வரிக்குப் பதிலாக வேறு வரி போடுவதற்குப் புதிய துறை அவருக்கு ஏதுவும் இல்லை. வரிச் சுமை ஏழைகளை மேலேயிருந்து நசுக்கிக்கொண்டிருக்கிறதென்ருல், கேந்திரமான உப கைத்தொழில், அதாவது கையினுல் நூற்கும் தொழில் நாசமாக்கப்பட்டுவிட்டதால், செல்வத்தை உற்பத்தி செய்வதற்கு அவர்களுக்கு இருந்த சக்தியைக் கெடுத்தும்விட்டது. இந்தியாவின் பெயரால் வாங்கப்பட்டிருக்கும் கடன்களைப் பற்றிச் சொல்லாமல், இந்தியா நாசமாக்கப்பட்டிருப்பதைப் பற்றிய கதை பூர்த்

தியாகாது. சமீப காலமாக இவைகளைப் பற்றிப் போதிய அளவு பத்திரிகைகளில் கூறப்பட்டிருக்கிறது. இந்தியாவின் பெயரால் வாங்கப்பட்டிருக்கும் கடன்களையெல்லாம் கண்டிப் பானவகையில் பரிசீலனை செய்து, பாரபட்சமற்ற ஒரு நீதிச்சபை, அக்கிரமமானது, சரியானது அல்ல என்று கூறும் கடன்களை யெல்லாம் கொடுக்க மறுத்துவிட வேண்டியது சுதந்திர இந்தி யாவின் கடமையாக இருக்க வேண்டும்.

உலகத்திலேயே அதிகச் செலவுள்ளது என்று நன்றாகத் தெரிந்ததான ஓர் அந்நிய நிர்வாகத்தை நடத்திக்கொண்டு போவதற்காகவே, உதாரணத்திற்காக நான் மேலே சொன்ன மோசமானவைகளெல்லாம் அனுசரிக்கப்படுகின்றன. உங்கள் சம்பளத்தையே எடுத்துக்கொள்ளுங்கள். அதுவே மாதத்திற்கு ரூ. 21,000-க்கு மேல் ஆகிறது. இதல்லாமல் மறைமுகமான பல உபரிகளும் இருக்கின்றன. பிரிட்டிஷ் பிரதம மந்திரி வரு டத்திற்கு 5,000 பவுன், அதாவது இப்பொழுதுள்ள நாணய மாற்று விகிதப்படி, மாதத்திற்கு ரூ. 5,400 சம்பளம் பெறுகிறார். நீங்கள் ஒரு நாளைக்கு ரூ. 700-க்கு மேல் பெறுகிறீர்கள். ஆனால், இந்தியரின் சராசரி வருமானம் தினத்திற்கு இரண்டு அணாவே. பிரிட்டிஷ் பிரதம மந்திரி தினத்திற்கு ரூ. 180 பெறுகிறார். ஆனால், பிரிட்டனில் சராசரி ஒருவரின் தின வருமானம் இரண்டு ரூபாய். இவ்விதம் இந்தியரின் சராசரி வருமானத்தைவிட ஐயாயிரம் மடங்குக்கு அதிகமாக நீங்கள் பெறுகிறீர்கள். இந்த அதிசயத்தைக் குறித்து ஆழ்ந்து சிந்திக்குமாறு முழந்தாளிட்டு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். வேதனை தருவதாயிருக் கும் ஓர் உண்மையை உணரும்படிச் செய்வதற்காகவே, உங்கள் சொந்த விஷயத்தைப் பற்றிய உதாரணத்தை எடுத்துக் கொண் டேன். உங்களிடம் எனக்கு மிகுந்த மதிப்பு இருப்பதால் உங்க ளுடைய உணர்ச்சியைப் புண்படுத்த நான் விரும்ப மாட்டேன். நீங்கள் பெறும் சம்பளம் உங்களுக்குத் தேவையில்லை என்பதை அறிவேன். ஆனால், இத்தகைய ஏற்பாட்டிற்கு இடம் தரும் ஒரு முறையை உடனே ஒழித்தாக வேண்டும். வைஸ்ராயின் சம்பளத் தைப் பற்றிய உண்மை எதுவோ, அதுதான் பொதுவாக முழு நிர்வாகத்தையும் பற்றிய உண்மையாகும்.

ஆகையால், வரி வருமானத்தில் தீவிரமாகக் குறைத்தாக வேண்டுமாயின், அதேபோல நிர்வாகச் செலவையும் தீவிரமாகக் குறைத்தாக வேண்டும் என்றாகிறது. இப்படி மாறுதல் ஏற்படு வது என்பது, சுதந்திரம் வந்தாலன்றி சாத்தியமில்லை. இதனா லேயே ஜனவரி 26-ஆம் தேதி நாடு முழுதும் தானே ஓர் எழுச்சி யைக் காட்டிக் கொண்டது. இதில் கோடிக்கணக்கான கிராம வாசிகள் இயல்பாகவே கலந்து கொண்டார்கள். அவர்களுக்குச் சுதந்திரம் என்பது, கொல்லும் பளுவிலிருந்து விடுபடுவது தான்.

இந்தியாவிலிருந்து கிடைக்கும் கொள்ளை லாபத்தைப் பிரிட்டன் நாளுக்குநாள் தனக்குச் சாதகமாக அனுபவித்துக் கொண்டு வருகிறது. இந்தியப் பொதுஜன அபிப்பிராயம் ஏகோபித்து இதை எதிர்த்தும், அது இக்காரியத்தைச் செய்து கொண்டுதான் வருகிறது. பெரிய பிரிட்டிஷ் ராஜீயக் கட்சிகளில் எதுவும் இதை விட்டுவிடத் தயாராக இல்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. என்றாலும், ஒரு தேசீய சமுதாயம் என்ற வகையில் இந்தியா உயிர் வாழ வேண்டுமானால், அதன் மக்கள் பட்டினியால் மெள்ள மெள்ளச் செத்துக் கொண்டிருப்பது நிற்க வேண்டுமாயின், உடனடி நிவாரணத்திற்கு ஏதாவது ஒரு பரிகாரத்தைக் கண்டுதான் ஆகவேண்டும். நடத்த உத்தேசித்திருக்கும் மகாநாடு, அதற்குப் பரிகாரமல்ல. விவாதத்தைக் கொண்டு நம்பும்படிச் செய்து விடும் விஷயமன்று இது. ஒன்றுக்கொன்று இணையானதான சக்திகள், ஒன்றுக்கொன்று பின்னிக் கொண்டிருக்கும் விஷயம் இது. நியாயத்தை உணர்ந்து கொண்டாலும், உணராது போனாலும், இந்தியாவுடன் தான் செய்து கொண்டிருக்கும் வர்த்தகத்தையும், இந்தியாவில் தனக்கு இருக்கும் நலன்களையும், தன்னிடமிருக்கும் முழு சக்தியையும் கொண்டு பாதுகாத்துக் கொள்ளவே பிரிட்டன் பார்க்கும். இதன் பலனாக, சாவின் அணைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளுவதற்குப் போதுமான சக்தியை இந்தியா தயாரித்துக் கொண்டுதான் ஆக வேண்டும்.

பலாத்காரக் கட்சி, என்னதான் ஒழுங்காக அமைக்கப் படாததாக இருந்தாலும், இப்போதைக்கு அது என்னதான் முக்கியமல்லாததாக இருப்பினும், அது வளர்ந்து வருகிறது; தன் பலத்தை உணரும்படிச் செய்து வருகிறது என்பது எல்லோரும் அறிந்ததே. என் லட்சியத்தைப் போன்றதுதான் அதன் லட்சியமும். ஆனால், கோடிக்கணக்கான பாமரமக்களுக்கு விரும்பத்தக்க நிவாரணத்தை அதனால் செய்து விட முடியாது என்பதை நான் நிச்சயமாக நம்புகிறேன். முறைப்படி செய்யப்பட்டு வரும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பலாத்காரத்தை, கலப்பற்ற அகிம்சையினாலன்றி வேறு எதனாலும் தடுக்க முடியாது என்ற உறுதி நாளுக்கு நாள் என்னுள் வளர்ந்து கொண்டு வருகிறது. அகிம்சை, தீவிரமாகச் செயல்படும் ஒரு சக்தி அல்ல என்று பலர் நினைக்கிறார்கள். என் அனுபவம், நிச்சயமாக ஓர் எல்லைக்கு உட்பட்டதே. என்றாலும், மிகத் தீவிரமாகச் செயலாற்றும் சக்தியாக அகிம்சை இருக்க முடியும் என்பதை என் அனுபவம் காட்டுகிறது. இந்தச் சக்தியை, முறையாகச் செய்யப்பட்டு வரும் பிரிட்டிஷ் ஆட்சியின் பலாத்கார சக்திக்கு எதிராகவும், வளர்ந்து வரும் பலாத்காரக் கட்சியின் முறைப்படியில்லாத பலாத்கார சக்திக்கு எதிராகவும் வேலை செய்யும்படி விடுவதே நான் செய்ய வேண்டிய காரியம். சும்மா இருப்பது என்பது, மேலே சொன்ன இரு சக்திகளுக்கும் ஆதிக்கமளித்து விடுவ

தாகிவிடும். அகிம்சையின் ஆற்றலில் ஆட்சேபிக்க முடியாத, அசைக்க முடியாத நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இருந்தும், என்னைப் பொறுத்த வரையில் இன்னும் காத்துக் கொண்டிருப் பது என்பது பாவமேயாகும்.

இந்த அகிம்சை, சட்ட மறுப்பின் மூலம் காட்டப்படும். இப் போதைக்கு சத்தியாக்கிரக ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் மாத் திரமே இதைச் செய்வார்கள். ஆனால், இதற்குள்ள கட்டுதிட் டங்களுக்கு உட்பட்டு இதில் சேர விரும்புகிறவர்களையெல்லாம் சேர்த்துக் கொள்ளும் வகையிலேயே இது ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. அகிம்சைப் போராட்டத்தை மேற்கொள்ளுவதில் பைத்தியக்காரத்தனமான ஆபத்துக்கு உட்பட்டுவிடக் கூடிய அபாயமும் எனக்கு இருக்கிறது என்பதையும் அறிவேன். ஆனால், அபாயங்கள் இல்லாமல், அதுவும் மோசமான ஆபத்துக்கள் இல்லாமல் சத்தியத்தின் வெற்றிகளை யாரும், என்றும் அடைந்த தில்லை. தன்னைவிட இன்னும் ஏராளமான மக்களைக் கொண்ட ஒரு நாட்டை, தன்னைவிட அதிகப் புராதனமான நாட்டை, தன்னையும்விட அதிகப் பண்பாடுள்ள மற்றொரு நாட்டை, அறிந்தோ அறியாமலோ விழுங்கிக் கொண்டிருக்கும் ஒரு நாட் டின் மக்கள் மனமாற்றமடையும்படிச் செய்வதற்கு, எந்த அபா யத்திற்கும் துணிந்து செயலாற்றுவதே தகும்.

'மனமாற்றமடையச் செய்வது' என்ற சொல்லை வேண்டு மென்றுதான் நான் உபயோகித்திருக்கிறேன். ஏனெனில், பிரிட்டிஷ் மக்களை அகிம்சையால் மனமாற்றமடையும்படி செய்து, இந்தியாவுக்கு அவர்கள் செய்துவிட்ட தவறை அதனால் காணும்படி செய்ய வேண்டும் என்பதுதான் என் ஆசை. உங்கள் மக்களுக்குத் தீங்கு செய்ய வேண்டும் என்று நான் விரும்பவில்லை. என் நாட்டு மக்களுக்குச் சேவை செய்வதைப் போன்று, அவர்களுக்கும் சேவை செய்யவே விரும்புகிறேன். எப்பொழுதும் அவர்களுக்குச் சேவை செய்து வந்திருக்கிறேன் என்றே நம்புகிறேன். 1919–ஆம் ஆண்டு வரையில் கண்மூடித் தனமாக அவர்களுக்குச் சேவை செய்து வந்தேன். ஆனால், என் கண் திறக்கப்பட்டு விட்டதும் ஒத்துழையாமையைக் கொண்டு வந்தேன். அப்பொழுதும் கூட, அவர்களுக்குச் சேவை செய்வதுதான் என் நோக்கம். என்னிடமுள்ள அதே ஆயுதத்தை முழு அடக்கத்துடன், என் குடும்பத்தில் அதிக அன்பானவர்க ளுக்கு எதிராகவே உபயோகித்து வெற்றி பெற்றேன். என் நாட்டு மக்களிடம் எனக்கு இருப்பதற்குச் சமமான அன்பு உங்கள் நாட்டு மக்களிடம் எனக்கு இருக்குமாயின், அந்த அன்பு நீண்ட காலம் மறைந்து இருந்துவிடாது. அநேக ஆண்டுகள் என்னைச் சோதித்துப் பார்த்த பிறகு, என் குடும்பத் தினர் எனக்குள்ள அன்பை ஒப்புக்கொண்டதைப் போன்றே, உங்கள் நாட்டு மக்களும் அதை ஒப்புக்கொள்ளுவார்கள். மக்கள்

என்னுடன் சேர்ந்து கொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். அப்படி அவர்கள் சேர்ந்து கொள்ளுவார்களானால், பிரிட்டிஷ் மக்கள் தங்கள் போக்கை மாற்றிக் கொண்டாலன்றி, இந்நாட்டு மக்கள் அனுபவிக்க வேண்டி வரும் துயரங்களே கல் மனத்தையும் கரைத்துவிடப் போதியவை.

உதாரணமாக நான் எடுத்துக் காட்டியிருப்பதைப் போன்ற தீமைகளை எதிர்த்துப் போராடுவதுதான் சட்ட மறுப்பின் மூலம் உள்ள திட்டம். பிரிட்டனுடன் உள்ள தொடர்பைத் துண்டித்துக் கொண்டுவிட விரும்புவது இத்தீமைகளினால்தான். இத்தீமைகள் நீக்கப்பட்டுவிடும்போது வழி எளிதானதாகிறது. பிறகு நட்புடன் சமரசமாகப் பேசி முடிவுக்கு வருவதற்கு வழி உண்டாகும். இந்தியாவுடனிருக்கும் பிரிட்டிஷ் வர்த்தகத்திலிருந்து பேராசையைப் போக்கிப் புனிதப்படுத்தி விட்டால், எங்கள் சுதந்திரத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுவதற்கு எந்தக் கஷ்டமும் இராது. எனவே, தன்னிச்சையான, சகோரத்துவத்தின் மூலம் மனித வர்க்கத்தின் பொதுவான நன்மையை வளர்ப்பதில் மாத்திரமே சிரத்தை கொள்ளும் சம அந்தஸ்துடையவர்களிடையே நடக்கும் உண்மையான மகாநாட்டுக்கு வழி இருப்பதற்காக, அத்தீமைகளையெல்லாம் உடனே நீக்குவதற்கான காரியத்தைச் செய்து, இருவருக்கும் சமத்துவமான, ஏற்றதான வர்த்தகத்தையும் அமைக்கும்படி உங்களை அழைக்கிறேன். இந்நாட்டை துர்ப்பாக்கியவசமாகப் பாதித்து வரும் வகுப்புப் பிரச்னையைக் குறித்து நீங்கள் அனாவசியமாக வற்புறுத்திக் கூறியிருக்கிறீர்கள். எந்த ஆட்சித் திட்டத்தைக் குறித்து ஆலோசிப்பதற்கும் அந்தப் பிரச்னை முக்கியமானதே என்பதில் சந்தேகமில்லை. என்றாலும், வகுப்புகளுக்கு அப்பாற்பட்டதும், எல்லோரையும் ஒரே விதமாகப் பாதித்து வருபவையுமான பெரிய பிரச்னைகள் விஷயத்தில் வகுப்புப் பிரச்னைக்குக் கொஞ்சமும் சம்பந்தமே இல்லை. ஆனால், இந்தத் தீமைகளை நீக்க வேண்டியதன் அவசியத்தை நீங்கள் உணராது போனால், என் கடிதத்தில் கண்ட நியாயத்தை உங்கள் உள்ளம் ஏற்காது போயின், இந்த மாதம் 11-ஆம் தேதி, உப்புச் சட்டத்தின் விதிகளை மீறி நடப்பதற்காக, என்னுடன் அழைத்துச் செல்லக்கூடிய ஆசிரமத்திலிருக்கும் சக ஊழியர்களுடன் நான் புறப்படுவேன். ஏழையைப் பொறுத்த வரையில், இந்த உப்பு வரிச் சட்டம் மிகவும் அக்கிரமமானது என்று நான் கருதுகிறேன். முக்கியமாக இந்நாட்டிலிருக்கும் ஏழைகளுக்காகவே சுதந்திர இயக்கம் நடத்தப்படுவதால், இத்தீமையை எதிர்ப்பதைக்கொண்டு அது ஆரம்பிக்கப்படுகிறது. இந்தக் கொடிய ஏகபோகத்திற்கு இத்தனைக் காலமாக நாங்கள் உட்பட்டிருந்ததுதான் பெரிய அதிசயம். என்னைக் கைது செய்வதன் மூலம் நான் செய்திருக்கும் ஏற்பாட்டை நீங்கள் தடுத்துவிட முடியும் என்பதை அறிவேன். எனக்குப் பின்னால் இவ்வேலையை மேற்கொண்டு செய்வதற்கும், உப்புச்

சட்டத்தை மீறுவதில், சட்ட புத்தகத்தை என்றுமே ஆபாசம் செய்திருக்கக்கூடிய ஒரு சட்டத்தின் தண்டனைகளுக்குத் தங்களை உட்படுத்திக்கொள்ளுவதற்கும் பத்தாயிரக்கணக்கானவர்கள் தயாராக இருப்பார்கள் என்று நம்புகிறேன்.

என்னுல் சாத்தியமான வரையில், அனுவசியமான சங்கடத்தையோ, எந்தச் சங்கடத்தையுமோ உங்களுக்கு உண்டாக்கும் விருப்பம் எனக்கு இல்லை. என் கடிதத்தில் ஏதோ சாரம் இருக்கிறது என்று நீங்கள் நினைத்தால், விஷயங்களை என்னுடன் விவாதிக்கும் சிரத்தை உங்களுக்கு இருந்தால், அதற்காக இந்தக் கடிதத்தைப் பிரசுரிப்பதை நான் ஒத்திவைக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினுல், இக்கடிதம் கிடைத்ததும் எனக்குத் தந்தி வந்தால், சந்தோஷத்துடன் இதைப் பிரசுரிப்பதை நான் நிறுத்திவைப்பேன். ஆனுல், இக்கடிதத்தின் சாரத்தை ஏற்றுக்கொள்ளுவதற்கான சௌகரியம் உங்களுக்கு இருந்தாலன்றி என் வழியிலிருந்து என்னைத் திருப்பி விடாதிருக்கும் தயவை மாத்திரம் நீங்கள் எனக்குச் செய்யுங்கள்.

எந்த விதத்திலும் மிரட்டும் நோக்கத்துடன் இக்கடிதம் எழுதப்படவில்லை. சட்ட மறுப்பாளர் அத்தியாவசியமாகச் செய்தாக வேண்டிய சாதாரண, தெய்விகக் கடமையே இக் கடிதம். எனவே, முக்கியமான ஒரு ஆங்கில வாலிப நண்பரைக் கொண்டு இக்கடிதத்தை உங்களிடம் சேர்க்கும்படி செய்திருக்கிறேன். இந்தியாவின் லட்சியத்தில் இவர் நம்பிக்கையுள்ளவர்; அகிம்சையில் பூரண நம்பிக்கையுள்ளவர். இக்காரியத்திற்கென்றே கடவுள் இவரை என்னிடம் அனுப்பியிருக்கிருர் என்றே தோன்றுகிறது.

—‘எங் இந்தியா’ - 12—3—1930

# 9

## ‘கேட்டது ரொட்டி, கிடைத்தது கல்’

[மேலே கண்ட காந்திஜியின் கடிதத்திற்கு வைஸ்ராய் உடனே பதில் அனுப்பிவிட்டார். நிச்சயமாகச் சட்டத்தை மீறும் காரியத்தில் முடிந்து, பொதுஜன அமைதிக்கு ஆபத்தை உண்டாக்கும் ஒரு காரியத்தை மேற்கொள்ள காந்திஜி யோசித்திருப்பதைக் குறித்து வைஸ்ராய் வருந்துகிருர் என்று மாத்திரமே அந்தப் பதில் கூறியது. இந்தப் பதிலுக்குப் பிறகு காந்திஜி எழுதிய கட்டுரையே கீழே கொடுக்கப்படுகிறது :]

ரொட்டி வேண்டும் என்று மண்டியிட்டுக் கோரினேன். ஆனல், ரொட்டிக்குப் பதிலாக எனக்குக் கல் கிடைத்திருக்கிறது. உப்பு வரி, ஏழைக்கு வருடத்திற்கு ஐந்து அணு நஷ்டத்தை உண்டாக்குகிறது, இது அவனுக்குச் சுமார் மூன்று நாட்கள் வருமானம். ஏழையின் உப்புக்கு இருக்கும் இந்த வரியை எடுத்துவிட்டு நான் எதுவும் செய்வதற்கில்லாமல் வைஸ்ராய் தாராளமாகச் செய்திருக்கலாம். ஒருவர் வருடத்தில் ரூ. 360 சம்பாதித்தால் அரசாங்கத்திற்கு 3 ரூபாயை இந்தியாவுக்கு வெளியில் யாராவது கொடுக்கிருரா என்பது எனக்குத் தெரியாது. சாதாரணமான பதிலை அனுப்புவதற்குப் பதிலாக, வைஸ்ராய் இன்னும் எத்தனையோ காரியங்களைத் தாராளமாகச் செய்திருக்கலாம். ஆனல், அதற்குக் காலம் இன்னும் வந்துவிடவில்லை. எளிதில் வருத்தந் தெரிவித்துவிடாத ஒரு நாட்டின் பிரதிநிதி அவர். பரிவுடன் வேண்டிக்கொள்ளுவது அந்த நாட்டின் மனத்தில் என்றுமே படுவதில்லை. உடல் பலத்திற்கு மாத்திரமே அது செவி கொடுக்கும். ஒரு குத்துச் சண்டைப் போட்டியைச் சளைக்காமல் மணிக்கணக்கில் மூச்சுவிடாமல் பார்த்துக்கொண்டிருப்பார்கள். எலும்பு முறிவதும் ஏற்படக் கூடிய கால்பந்து விளையாட்டுக்களைப் பார்க்க வெறிகொண்டும் அந்நாட்டு மக்கள் அலைவார்கள். ரத்தம் கொதிக்கும்படிச் செய்யும் யுத்த சமாசாரங்களைக் கேட்டுப் பரவசமடைவார்கள். மௌனமாக, எதிர்ப்பின்றி துன்பங்களை அனுபவிப்பதைக் குறித்தும் அவர்கள் கேட்டுக்கொள்ளுவார்கள். நியாயத்தை உணரும்படி செய்வதான வாதம் என்னதான் இருந்தாலும், இந்தியாவிலிருந்து வருடந்தோறும் கொண்டு போய்விடும் கோடிக்கணக்கான பணத்தை மாத்திரம் அதற்காக அந்நாடு விட்டுவிடாது. எனவே, வைஸ்ராயின் பதிலைப் பார்த்து நான் ஆச்சரியப்படவில்லை.

ஆனல், என் கடிதம் அது கூறுவதைச் செய்யத்தான் போகிறதென்ருல், உப்பு வரியும் அத்துடன் மற்றும் அநேகமும் போய்த்தான் ஆகவேண்டும். எவ்வளவு செய்யப்படும் என்பதைக் காலம் மாத்திரமே காட்டும்.

சட்டத்தை மீறி நடப்பதில் முடிந்து, பொதுஜன அமைதிக்கு ஆபத்தை உண்டாக்கும் காரியத்தைச் செய்ய நான் யோசித்து வருவதாக அந்தப் பதில் கூறுகிறது. விதிகளையும் ஒழுங்கு முறைகளையும் கொண்ட புத்தகங்கள் ஏராளமாக இருந்தும், இந்தத் தேச மக்கள் அறிந்த ஒரே ஒரு சட்டம், பிரிட்டிஷ் நிர்வாகிகளின் இஷ்டம் என்பதுதான். இம்மக்கள் அறிந்திருக்கும் ஒரே ஒரு பொதுஜன அமைதி, அரசாங்கச் சிறையின் அமைதியே. இந்தியாவே ஒரு பெரிய சிறைக்கூடமாக இருக்கிறது. இச் சட்டத்தை ஆட்சேபிக்கிறேன். தாராளமாக மூச்சுவிட முடியாதபடி நாட்டின் இருதயத்தைத் திக்குமுக்காடும்படிச் செய்வதா

யிருக்கும் கட்டாய அமைதியின் துக்ககரமான மாறுதலின் மையைத் தகர்க்கவேண்டியது என் தெய்விகக் கடமை என்றும் நான் கருதுகிறேன்.

# 10

# அரசாங்கம் என்ன செய்ய முடியும்?

[நாடெங்கும் பரபரப்பு அதிகமாக இருந்தது. உப்புச் சட்டத்தை மீறுவதற்குக் காந்திஜி செய்யப் போகும் யாத்திரை என்று ஆரம்பமாகப் போகிறது? இதற்குப் பதிலை அறியவே ஒவ்வொருவரும் ஆவலுடன் இருந்தார்கள். பிறகு காந்திஜி மார்ச் 10-ஆம் தேதியன்று 'யாத்திரை 12-ஆம் தேதி புதன்கிழமை ஆரம்பமாகப் போகிறது' என்று அறிவித்தார். ஆசிரமத்திற்கு வந்திருந்த ஏராளமான மக்களுக்கு இதை அறிவித்துக் காந்திஜி கூறியதே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]

"விஷயத்தை இப்பொழுது உங்களுக்கு விளக்கிக் காட்ட விரும்புகிறேன். இதிலிருக்கும் உண்மை நிலையை அறிந்து கொள்ளுவதற்கு நீங்கள் இதைப் பற்றி நன்றாகச் சிந்திக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னும் இரண்டு தினங்களில் போராட்டம் ஆரம்பமாவதாக இருந்தும், நீங்கள் கொஞ்சமும் அச்சமின்றி இங்கே வந்து கொண்டிருக்கிறீர்களே, அது எப்படி? துப்பாக்கி வேட்டையோ, வெடிகுண்டையோ சமாளிக்க வேண்டியிருந்தால், உங்களில் யாரும் இங்கே வந்திருக்க மாட்டீர்கள். ஆனல், துப்பாக்கி வெடி, வெடிகுண்டு பயம் உங்களுக்கு இல்லை. ஏன்? ஒரு பலாத்காரப் போராட்டத்தை-துப்பாக்கியைத் தாங்கியவர்களைக்கொண்டு என்றிருக்க வேண்டியதில்லை, தடிகளையும் கற்களையும் வைத்திருப்பவர்களைக் கொண்டு-ஆரம்பிக்கப் போகிறேன் என்று நான் அறிவித்திருந்தால், இதுவரையில் அரசாங்கம் என்னை விட்டுவைத்திருக்கும் என்று நினைக்கிறீர்களா? இங்கிலாந்திலாகட்டும் அல்லது அமெரிக்கா, ரஷ்யாவிலாகட்டும், அதிகாரத்தைப் பலாத்காரத்தைக்கொண்டு எதிர்த்ததை அரசாங்கம் ஒரு நாளைக்காவது சகித்துக்கொண்டிருந்தது என்பதற்கு ஒரே ஒரு உதாரணத்தையாவது நீங்கள் எனக்குக் கூற முடியுமா? ஆனல், இங்கோ, அரசாங்கம் திகைத்துப் போய் என்ன செய்வது என்பது தெரியாமல் திகைத்துக் கொண்டிருக்கிறது. தானே வலியச் சிறைப்படுவது என்ற கருத்து இப்பொழுதே உங்களுக்குப் பழக்கமாகிவிட்டதால் நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள்.

"இன்னும் கொஞ்சம் மேலே போய் கவனிக்கும்படியும் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களிலும், ஒவ்வொரு கிராமத்திலும் பத்துப் பேர், உப்பைத் தாங்களே தயாரிக்கவும், உப்புச் சட்டத்தை மீறவும் முன்வருகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். இந்த அரசாங்கம் அப்பொழுது என்ன செய்ய முடியும் என்று நினைக்கிறீர்கள்? அமைதியோடு இருந்து வரும் சட்ட மறுப்பாளரைப் பீரங்கியால் சுட்டுக் குவித்துவிடும் துணிச்சல், படுமோசமான சர்வாதிகாரிக்கும்கூட இருக்க முடியாது. நீங்கள் உங்களைக் கொஞ்சம் தட்டி எழுப்பிக்கொண்டு விடுவீர்களானால், சில நாட்களிலேயே அரசாங்கம் களைத்துப் போய்விடும்படிச் செய்ய நம்மால் முடியும் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். ஆகையால், இப்போராட்டத்தின் பொருளை நீங்கள் புரிந்துகொண்டு அதற்கு உங்கள் கடமையை நீங்கள் செய்யவேண்டும். என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கலாம் என்ற ஆவலினால் மாத்திரமே இத்தனை தூரம் நடந்து இங்கே நீங்கள் வந்திருப்பீர்களானால், உங்கள் நேரத்தையும் என் நேரத்தையும் நீங்கள் வீணாக்காமலிருப்பதே நல்லது. எங்களையும் எங்கள் இயக்கத்தையும் ஆசீர்வதிப்பதற்காக நீங்கள் இங்கே வந்திருப்பீர்களாயின், அந்த ஆசீர்வாதம் ஏதாவது உருப்படியான உருவில் இருக்கவேண்டும். உங்களிடமிருந்து எனக்குப் பணம் தேவையில்லை. மிகக் கொஞ்சமான பணத்தைக்கொண்டு இப்போராட்டத்தை நடத்திவிட முடியும் என்று நம்பிக்கொண்டிருக்கிறேன். எனவே, இப்போதைக்கு நீங்கள் பணவுதவி செய்ய வேண்டும் என்று நான் விரும்பவில்லை. எங்கள் கஷ்டம், நீங்கள் அனுதாபம் காட்டாமலிருக்க முடியாத ஒரு கட்டத்திற்கு வந்துவிடும்போது, நாங்கள் கேட்காமலேயே நீங்கள் பணவுதவி செய்வீர்கள். இப்போராட்டம் கடுமையானதாக இருக்கும், நாள்பட்டு நடக்கும் என்றே தோன்றுகிறது. ஆகையால், நீங்கள் தைரியத்துடன் இருந்து போராட்டத்திற்கு ஆட்களைக் கொடுத்து உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்."

[டெண்டுல்காரின் 'மகாத்மா' என்ற நூலிலிருந்து எடுத்தது]

## 11

# சில கேள்விகளுக்குப் பதில்கள்

[தினமும் காந்திஜியிடம் பலர் கேள்விகளைக் கேட்டுக் கொண்டே இருந்தார்கள். அக்கேள்விகளுக்குக் கூறும் பதில்களின் மூலம் காந்திஜி தமது வேலைத் திட்டத்தை விளக்கிக் கூறிவந்தார். அநேக பத்திரிகை நிருபர்கள்,

பிரார்த்தனைக் கூட்டத்திலும் கேள்விகள் கேட்டு வந்தார்கள். இக் கேள்விகளும் இவற்றிற்கு காந்திஜி கூறிய பதில்களுமே கீழே கொடுக்கப்படுகின்றன :]

**கேள்வி :** உங்கள் இயக்கம் பலாத்காரத்தில் கொண்டுபோய் விட்டுவிடாதா?

**பதில் :** பலாத்காரம் ஏற்பட்டுவிடாமலிருப்பதற்கு என்னுலான முயற்சிகளையெல்லாம் நான் செய்து வந்தபோதிலும், இயக்கம் பலாத்காரத்திலும் கொண்டுபோய் விட்டுவிடக்கூடும். ஆரம்பிக்க நான் யோசித்துவரும் ஓர் அகிம்சைப் போராட்டத்தின் அமைப்பில் ஆபத்தைத் தடுப்பதற்கான அம்சம் இல்லாததால், பலாத்காரம் ஏற்பட்டுவிடுவதற்கான அபாயம் இன்று அதிகமாகவே இருக்கிறது.

**கே :** சரி, பலாத்காரத்தை நிறுத்துவதற்காகவே இப் போராட்டத்தை ஆரம்பிப்பதாக நீங்கள் கூறி வருவதாக அறிகிறேனே?

**ப :** அது ஒரு வாதம். ஆனல், அதுவே முடிவான வாதம் அன்று. அகிம்சை தனது தகுதியை நிரூபித்தாக வேண்டும் என்றால், அதுதான் தனது தகுதியை நிரூபித்தாக வேண்டும் என்பது என் மற்றொரு, மிகவும் முடிவான வாதம். செயலற்ற, கையாலாகாத ஓர் ஆயுதமே இது என்று சில வட்டாரங்களில் கருதப்பட்டு வருவது போயாக வேண்டும். மிகுந்த பலனளிக்கத்தக்க வகையில் அது கையாளப்படும்போது, மோசமான வெளித் தடைகள் இருந்தாலும், அது வேலை செய்ய வேண்டும். எல்லா வெளித் தடைகளையும் செயலற்றவைகளாக்கிவிடுவதே உண்மையில் அகிம்சையின் சொந்த இயல்பு. இதற்கு மாருக, மோசடி, துவேஷம், கெட்ட எண்ணம் போன்ற உள் தடைகள் இயக்கத்திற்கு அதிக ஆபத்தை விளைவிக்கக் கூடியவை. 'பலாத்கார சக்திகளை நான் கட்டுப்படுத்த வேண்டும்' என்றுதான் இதுவரை நான் கூறிவந்திருக்கிறேன். அகிம்சையின் சக்தி வேலை செய்யும்படிச் செய்வதனுல்தான் பலாத்கார சக்திகளை நான் கட்டுப்படுத்த முடியும் என்ற எண்ணம் இப்பொழுது எனக்கு உறுதிப்பட்டு வருகிறது.

ஆனல், 'முன்னுல் சரித்திரத்தில் நடந்திருப்பதுதான் இந்தியாவில் திரும்பவும் நடக்கும்' என்று சிலர் சொல்லக் கேட்கிறேன். அது திரும்ப நடந்தே ஆகவேண்டுமென்றால், அது திரும்ப நடக்கட்டும். கோழையாகிவிடும் குற்றவாளியாக நான் ஆகிவிடாமலிருந்தாலன்றி, இந்தப் போராட்டத்தை நான் ஒத்திவைத்துவிடவே கூடாது. பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்ட

முறையை உயிரைக் கொடுத்தும் நான் போராடி, அதன் மூலம் ராஜீய பலாத்கார சக்தியை நான் அடக்கியாக வேண்டும். ஸ்தாபன ரீதியான உண்மையான அகிம்சை வேலை செய்ய ஆரம்பித்துவிடும்போது, பொது மக்களும் அதற்கு ஏற்ப ஆண்மையுடன் நடந்துகொள்ளுவார்கள்.

## ஓர் அற்புதம்

கே: ஆனால், உங்களைக் கைது செய்துவிட்ட பிறகு, இயக்கம் உங்கள் நிர்வாகத்தின் கீழ் இராதே?

ப: தென்னாப்பிரிக்காவில் போராட்டத்தின் பிற்பகுதியில் இயக்கம் என் நிர்வாகத்தின் கீழ் இல்லை. அப்பொழுது நான் எதுவும் செய்யாதிருந்தும் போராட்டம் அதிகத் தீவிரமாக நடந்து வந்தது. ஆயிரக்கணக்கானவர்கள் தாங்களாகவே இயக்கத்தில் சேர்ந்துகொண்டனர். அவர்களையெல்லாம் எனக்குத் தெரியாது என்பது மாத்திரமல்ல, அவர்கள் முகங்களை நான் பார்த்ததும் இல்லை. இயக்கத்தில் தாங்களும் சேர்ந்தாக வேண்டும் என்று அவர்கள் உணர்ந்ததால் சேர்ந்தார்கள். ஒருவேளை அவர்கள் என் பெயரைக் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனால், தங்களுடைய விடுதலைக்காக நடக்கும் போராட்டம் அது என்பதை அவர்கள் சிரமமின்றி அறிந்துகொண்டுவிட்டனர். மூன்று பவுன் வரியை எதிர்த்துப் போராட ஒருவர் தயாராக இருக்கிறார் என்பதைக் கண்டார்கள்; அவர்களும் போராட்டத்தில் குதித்துவிட்டனர். எத்தனைக் கஷ்டங்களையெல்லாம் பொருட்படுத்தாமல் இயக்கத்தில் ஈடுபட்டார்கள்? அவர்கள் சுரங்கங்களே சிறைச்சாலைகளாக மாற்றப்பட்டுவிட்டன. இவர்களை இரவு பகல் யார் அடக்கி ஒடுக்கி வந்தார்களோ, அவர்களே இவர்களுக்குச் சிறை வார்டர்களாகவும் நியமிக்கப்பட்டனர். நரக வேதனையையே தாங்கள் அனுபவிக்க நேரும் என்பது இவர்களுக்குத் தெரியும். என்றாலும், இவர்கள் தயங்கவுமில்லை, தவறிவிடவுமில்லை. அது ஒரு சரியான அற்புதமாகவே இருந்தது.

## வாழ்வில் ஒரு வாய்ப்பு

கே: இப்பொழுதே நாட்டில் எத்தனையோ பிளவுகள் இருக்கின்றன. அப்படியிருக்கும்போது, இப்போராட்டம் பிளவுகளை அதிகமாக்கிவிடாதா?

ப: அப்படிப்பட்ட பயம் எனக்கு இல்லை. பலாத்கார சக்தியை அடக்கிவைப்பதைப் போன்றே, பிளவு சக்தியையும் அடக்கி வைத்துவிட முடியும். இன்றைன்றில் பயம் இருக்கிறது என்று நீங்கள் சொல்லலாம். பலாத்காரக் கட்சி என் பேச்

சைக் கேட்காது போகலாம், பொது மக்களும் சிந்தனை யின்றி நடந்துகொண்டுவிடக்கூடும் என்று நீங்கள் சொல்ல லாம். எதிலும் நம்பிக்கை கொள்ளுபவன் நான். மனித இயல் பில் எனக்குத் திடமான நம்பிக்கை உண்டு. பலாத்காரக் கட்சியினர் என்னிடம் சரியாக நடந்துகொள்ளுவார்கள். இப்படி நான் எண்ணுவதெல்லாம் பைத்தியக்காரத்தன மானதாகவும் இருக்கக்கூடும். இது, எனக்கு வாழ்க்கை யில் கிடைத்திருக்கும் ஒரு வாய்ப்பு. நான் விரும்பி மேற் கொள்ளுவது அன்று இப்போராட்டம். நான் விரும்பாம லேயே, தவிர்க்க முடியாத வகையில் கல்கத்தாவுக்கு நான் போக வேண்டியதாயிற்று. வேறு வழியில்லாமல் ஒரு சமர சத்தில் நான் ஈடுபட்டேன். ஒழுக்கத்தைப் பற்றிய கொள்கைக்கு எந்தக் குந்தகமும் இல்லை என்பதனாலேயே, கெடுவுக் காலம் இரண்டு ஆண்டுகள் என்றிருந்ததை ஓர் ஆண்டாக மாற்றினேன். லாகூரில் அநேகமாக ஒவ்வொரு தீர்மானத்தையும் நானே சிந்தித்துத் தயாரிக்க வேண்டிய தாயிற்று. பலாத்கார சக்தியும் அகிம்சை சக்தியும் ஒன்றுக் கொன்று பக்கத்தில் இருந்துகொண்டு முழு மூச்சுடன் வேலை செய்து வந்ததை அங்கே கண்டேன். முடிவில் பலாத்காரத் திற்கு எதிராக அகிம்சையே வெற்றி பெற்றதையும் பார்த் தேன்.

## எப்படி இன்று சரியான காலம்?

கே: சட்ட மறுப்புச் செய்வதற்கான சரியான காலம் இன்னும் வரவில்லை என்று கொஞ்ச காலத்திற்கு முன்னால் கூறினீர் கள். ஆனால், நீங்கள் அந்தக் கருத்தை மாற்றிக் கொள் ளுவதற்கு, அப்போதைக்கும் இன்றைக்குமிடையே என்ன நடந்துவிட்டது ?

ப: முற்றிலும் சரியான சமயம் இது என்று நான் நிச்சயமாக எண்ணுகிறேன். இதன் காரணத்தையும் சொல்லுகிறேன். வெளிப்படையாக எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. ஆனால், என் உள்ளுக்குள் இருந்து வந்த போராட்டம்தான் தடையாக இருந்தது. அது இப்பொழுது போய்விட்டது. போராட் டத்தை இதற்கு முன்னாலேயே ஆரம்பித்திருக்க வேண்டும் என்று இப்பொழுது நான் முற்றிலும் நிச்சயமாக எண்ணுகி றேன். இதை நான் முன்பே ஆரம்பித்திருக்க வேண்டும்.

கே: உங்கள் உள்ளுக்குள் இருந்த அந்தப் போராட்டம் என்ன?

ப: அகிம்சையைக் குறித்து நான் கொண்டிருக்கும் போக்கு ஒன்றே எப்பொழுதும் எனக்கு வழிகாட்டியாக இருந்திருக்

கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால், பலாத்காரம் அதிகரித்துக்கொண்டு வரும்போது, அந்த என் போக்கை செயல் முறையில் எப்படிக் கொண்டு வருவது என்பது அப்பொழுது எனக்குத் தெரியாமலிருந்தது. நான் மேற் கொண்ட போக்கைத் தொடர்ந்து அனுசரித்துக்கொண்டு போவது, நான் உட்பட வேண்டியிருக்கும் ஆபத்தைக் குறைத்துவிடுகிறது என்பதை இப்பொழுது வெட்ட வெளிச்சமாகக் காண்கிறேன்.

கே: உப்புச் சத்தியாக்கிரகம் உங்களைச் சிறைக்குக் கொண்டு போய்விடும் என்று நிச்சயமாகக் கருதுகிறீர்களா?

ப: அது என்னைச் சிறைக்குக்கொண்டு போய்விடும் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. இதற்கு நிச்சய மாக எவ்வளவு காலமாகும் என்று என்னால் சொல்ல முடி முடியாது. ஆனால், அநேகர் எண்ணுவதைவிட இது இன் னும் அதிக சீக்கிரத்தில் இருக்கும் என்றே உணருகிறேன். சீக்கிரத்தில் ஒரு நெருக்கடி ஏற்பட்டுச் சரியான ஒரு மகா நாடு கூடுவதில் முடியும் என்று எதிர்பார்க்கிறேன். அம் மகாநாடு வட்டமேஜை மகாநாடாக இராது; சதுர மேஜை மகாநாடாக இருப்பதோடு அதற்குப் போகிறவர்களுக்கு நல்ல புத்தியும் இருக்கும். இந்த மகாநாட்டின் தன்மை இப்படித்தான் இருக்கும் என்பதை நிச்சயமாக நான் ஜோசியம் கூறிவிட முடியாது. ஆனால், சம அந்தஸ்துடன் இருப்பவர்கள், இந்தியாவுக்குச் சுதந்திர அரசியலை அமைப் பதற்கான வழி துறைகளைக் காண்பதற்காக ஒன்றுபட்டு ஆலோசிக்கக் கூடிய மகாநாடாக அது இருக்கும்.

## நடந்த பேச்சைக் குறித்து

கே: வைஸ்ராய் நடத்திய சமரசப் பேச்சு திடீரென்று நின்று போகும்படிச் செய்ததற்கு நீங்கள் பொறுப்பாளியல்லவா?

ப: சில வட்டாரங்களில் இந்த அபிப்பிராயம் இருந்து வரு கிறது என்பதை அறிவேன். கொஞ்ச காலம் பொது ஜனங் களும் என் மீது குற்றங் கூறி வந்தார்கள். இப்பொழுது உண்மையான நிலைமையை அறிந்துகொண்டுவிட்டனர்.

கே: இளைஞர்களின் செல்வாக்கிற்கு உடன்பட்டுவிட்டதே நீங் கள் மேற்கொண்ட நிலைமைக்குக் காரணமல்ல என்று நீங் கள் நிச்சயமாகக் கூற முடியுமா?

ப: இல்லை. கொஞ்சமும் இல்லை. வட்டமேஜை மகாநாடு விஷ யத்தில் நான் எப்பொழுதும் நம்பிக்கையுடன் இருந்த தில்லை. என்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு தூரத்



தண்டி யாத்திரையின்போது காராடியில் காந்திஜி தங்கியிருந்த குடிசை. —மே, 1930



தண்டி யாத்திரையின்போது மகாத்மா காந்தி காராடி முகாமில்
கடிதங்களுக்குப் பதில் எழுதிக்கொண்டிருக்கிருர். —மே, 1930

திற்கு நான் போனேன் என்பது உண்மை. ஆனால், இந்தியாவின் தேவைக்கு ஏற்றதான டொமினியன் அந்தஸ்து அரசியலைத் தயாரிப்பதாக அம்மகாநாடு இருக்க வேண்டும் என்ற முக்கியமான விஷயத்தை நான் எப்பொழுதும் வற்புறுத்திக்கொண்டு வந்தேன். இதற்கு வைஸ்ராய் 'சரி' என்று சொல்லியிருந்தால், மேற்கொண்டு மற்ற விஷயங்களைக் கவனிக்கும்படிச் சொல்லியிருப்பேன்.

**கே:** *அப்படியானால், அந்தத் திட்டம் சில ஆண்டுகளுக்குப் பிறகு அமலுக்கு வருவதைக் குறித்து உங்களுக்கு எந்த விதமான ஆட்சேபமும் இல்லையல்லவா?*

ப: எப்பொழுதோ எதிர்காலத்தில் அத்திட்டம் அமலுக்கு வருவதாக இருந்தால் அது பயனில்லை என்று நான் தள்ளியிருப்பேன். ஆனால், வைஸ்ராயுடன் நாங்கள் பேசியதைக் குறித்து நான் எதுவும் சொல்லமுடியாது. ஒரு நாளைக்கு இதைப் பற்றி பொது ஜனங்கள் அதிகமாகத் தெரிந்துகொள்ளுவார்கள். ஆனால், ஒன்று மாத்திரம் உங்களுக்கு நிச்சயமாகச் சொல்ல முடியும். உண்மையான டொமினியன் அந்தஸ்து அரசியலை அமைக்கும் பிரச்னையே அந்தப் பேச்சில் இல்லை.

## பதினொரு நிபந்தனைகள்

**கே:** *பிரபலமாகியுள்ள உங்களுடைய பதினொரு நிபந்தனைகளைக் குறித்து ஒரே ஒரு கேள்வி. இந்த நிபந்தனைகளில் சிலவற்றை ஏற்றுக்கொண்டால், பிறகு சமரசத்திற்கு ஏதாவது இடமிருக்குமா?*

ப: அவர்கள் சில நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு, மற்ற நிபந்தனைகளும் கூடியவரை சீக்கிரத்தில் ஏற்றுக்கொள்ளப்படும் என்று ஒரு வாக்குறுதியையும் அதோடு அளிப்பார்களானால், ஒரு மகாநாடு நடத்துவது என்று வரும் யோசனையைக் கவனிக்க நான் தயாராக இருக்கிறேன். ஆனால், அந்த நிபந்தனைகளெல்லாம் நியாயமானவை என்பதை ஒப்புக்கொண்டுவிட வேண்டும். அந்த நிபந்தனைகளில் புதிதானது எதுவும் இல்லை என்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள். இவற்றில் பல, தாதாபாய் நௌரோஜியின் காலத்திலிருந்து எங்களுக்கு வந்திருப்பவை.

**கே :** *ஸிவில், ராணுவச் செலவுகளைக் குறைத்து விட வேண்டும் என்ற உங்கள் நிபந்தனையை ஏற்றுக் கொண்டு விடுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அவர்கள் யோக்கியமாக நடப்பார்கள், இதுவே போதுமான ருசு என்று நீங்கள் கருதமாட்டீர்களா?*

ப: என் நிலைமையை நான் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். ஆனால், இந்தச் சலுகைகளெல்லாம் எந்த உணர்ச்சியின் பேரில் செய்யப் படுகின்றன என்பதைப் பொறுத்துத்தான் அதெல்லாம் இருக்கிறது.

—'எங் இந்தியா' - 20—3—1930

## 12

# யாத்திரைக்கு முன் முழக்கம்

[உப்புச் சத்தியாக்கிரக யாத்திரை ஆரம்பமாவதற்கு முன்னால் மகாத்மா காந்தியைக் கைது செய்து அவரை நாடு கடத்திவிடப் போகிறார்கள் என்ற வதந்தி எங்கும் பலமாக இருந்தது. இதனால் சாபர்மதி ஆசிரமத்திற்கும் காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டங்களுக்கும் ஜனங்கள் ஏராளமாக வர ஆரம்பித்து விட்டனர். மார்ச் 11-ஆம் தேதி மாலை பிரார்த்தனைக் கூட்டம் நடந்த போது அதில் பத்தாயிரம் பேருக்கு மேல் கூடியிருந்தனர். மறுநாள் காந்திஜி தமது சத்தியாக்கிரக யாத்திரையை ஆரம்பிக்க இருந்ததால் அன்று மாலை அவர் பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசியது, என்றுமே மறக்க முடியாத பிரசங்கமாகும். அதுவே கீழே கொடுக்கப்படுகிறது.]

அநேகமாக இதுவே நான் உங்களுக்குச் செய்யும் கடைசிப் பிரசங்கமாக இருக்கக் கூடும். நாளை காலை யாத்திரையை ஆரம்பித்துப் போக அரசாங்கம் என்னை அனுமதித்து விடுவதாக இருந்தாலும், சாபர்மதி நதியின் புண்ணியக் கரையிலிருந்து கொண்டு நான் செய்யும் பிரசங்கம் இதுவே கடைசியானது. என் வாழ்க்கையில் இங்கே இதுவே என் கடைசிச் சொற்களாகவும் இருக்கக் கூடும்.

நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதெல்லாம் நேற்றே சொல்லி விட்டேன். நானும் என் சகாக்களும் * கைது செய்யப்

* காந்திஜியுடன் சென்ற முதல் சத்தியாக்கிரக கோஷ்டியில் 79 பேர் இருந்தனர். இவர்கள் பஞ்சாப், குஜராத், மகாராஷ்டிரம், உத்தரப்பிரதேசம், கட்ச், சிந்து, கேரளம், ராஜபுதனம், தமிழ்நாடு, ஆந்திரா, கர்னாடகம், பம்பாய், வங்காளம், உத்கல், நேபாளம், பிஜி ஆகிய பகுதிகளைச் சேர்ந்தவர்கள். அவர்களில் இருவர் முஸ்லிம்கள், ஒருவர் கிறிஸ்தவர். மற்றவர்களெல்லோரும் ஹிந்துக்கள். அதில் இருவர் ஹரிஜன வகுப்பினர். இவர்களெல்லோருமே சாபர்மதி ஆசிரமத்தில் தீவிர உறுப்பினராக இருந்தவர்கள். இந்தச் சத்தியாக்கிரகிகள் 16 முதல் 61 வயது வரை உள்ளவர்கள்.

பட்டு விட்ட பிறகு நீங்கள் செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றி மாத்திரம் இன்று சொல்லுகிறேன். ஜலால்பூருக்குப் போய்ச் சேருவது என்ற வேலைத் திட்டம், ஆரம்பத்தில் ஏற்பாடு செய்தபடி நிறைவேறியாக வேண்டும். இதற்காகத் தொண்டர்களை குஜராத்திலிருந்து மாத்திரம் சேர்க்கவேண்டும், இரண்டு வாரங்களாக நான் பார்த்தது, கேள்விப்பட்டதிலிருந்து, சட்ட மறுப்பாளர்கள் தொடர்ந்து வந்து கொண்டே இருப்பார்கள் என்று தான் நான் நம்புகிறேன்.

ஆனால், நாங்கள் எல்லோரும் கைது செய்யப்பட்டு விட்ட பிறகு, அமைதிக்குப் பங்கம் என்பது கொஞ்சம் கூட இல்லாமலிருக்கட்டும். முற்றிலும் அகிம்சையே கொண்டதான இப்போராட்டத்தை நடத்திக் கொண்டு போவதில் எங்களுடைய முழுசக்தியையும் உபயோகிப்பது என்று தீர்மானித்திருக்கிறோம்.கோபத்தில் யாரும் தவறு செய்துவிட வேண்டாம். இதுவே என் நம்பிக்கையும் பிரார்த்தனையும். எனது இந்தச் சொற்கள் நாட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் கேட்க வேண்டும் என்று விரும்புகிறேன். நான் அழிந்தால் என் பணி செய்யப்பட வேண்டும். அப்படி என் தோழர்கள் செய்வார்கள். அதன் பிறகு உங்களுக்கு வழி காட்ட வேண்டியது காங்கிரஸ் காரியக் கமிட்டியின் வேலை. அது காட்டும் வழியில் நடக்க வேண்டியது உங்கள் கடமை. காரியக் கமிட்டியின் தீர்மானத்திற்கு இது ஒன்றே பொருள். அப்பொழுதும் இயக்கத்தின் கடிவாளம், அகிம்சை ஒன்றே வழி என்பதில் பூரணமான நம்பிக்கையுள்ளவர்களான என் சகாக்களின் கையில்தான் இருக்கும். தனக்குப் பிரியமான நடவடிக்கை முறையை வகுத்துக் கொள்ளும் சுதந்திரம் காங்கிரஸுக்கு இருக்கிறது என்பது உண்மை. நான் ஜலால்பூருக்குப் போய்ச் சேரும் வரையில், காங்கிரஸ் எனக்கு அளித்திருக்கும் அதிகாரத்தை மீறி எதுவும் நடக்காமலிருக்கட்டும். ஆனால், நான் கைது செய்யப்பட்டு விட்டதுமே, பொதுவான பொறுப்பு முழுவதும் காங்கிரஸுக்குப் போய் விடுகிறது. ஆகையால், அகிம்சையைக் கொள்கையாகக் கொண்டவர்கள் யாரும் சும்மா உட்கார்ந்திருக்க வேண்டியதில்லை. நான் கைதியானதுமே காங்கிரஸுடன் எனக்குள்ள பந்தம் தீர்ந்து விடுகிறது. அப்படி நேரும் போது, தொண்டர்களைத் திரட்டுவதில் கஷ்டம் இருக்

இவர்களில் அதிக வயதானவர் காந்திஜியே. ஆசிரமத்திலிருந்த ஆங்கிலேயர்களான மீரா பென்னும், வைஸ்ராய்க்குக் காந்திஜியின் கடிதத்தைக் கொண்டு போனவரான ரெஜினல்டு ரெய்னல்ட்ஸும் முதல் சத்தியாக்கிரக கோஷ்டியிலேயே இருக்க விரும்பினர்கள். ஆனல் காந்திஜி, "நீங்கள் கூடாது. உங்களுக்கு இதைவிட அதிகப் பெரிய, தெய்வீகமான பணி வேறு இருக்கிறது. நீங்கள் இங்கிலாந்தில் பிறந்தவர்களாதலால் உங்களிடமிருந்து இன்னும் அதிகத் தவத்தை நான் எதிர்பார்க்கிறேன். அதாவது, கஷ்டத்தை வருவித்துக் கொள்ளும் ஆசையை நீங்கள் துறந்துவிட்டு, சாத்தியமான வரையில் ஆசிரமத்தின் பல வேலைகளுக்கு உதவி செய்வதற்காக நீங்கள் இங்கேயே இருக்க வேண்டும்'' என்று அவர்களுக்குக் கூறிவிட்டார்.

காது. சாத்தியமான இடங்களிலெல்லாம் உப்புச் சட்ட மறுப்பை ஆரம்பிக்க வேண்டும். இந்தச் சட்டங்களை மூன்று வழிகளில் மீறலாம். உப்பை உற்பத்தி செய்ய வசதியிருக்கும் இடத்தில் அதைத் தயாரிப்பது ஒரு குற்றம். சட்ட விரோதமாகத் தயாரித்த உப்பை (இயற்கையான உப்பையும் உப்பு மண்ணையும் கூட) வைத்திருப்பதும், விற்பதும் குற்றம். அத்தகைய உப்பை வாங்குகிறவர்கள் அதே போல குற்றஞ் செய்தவர்களாவார்கள். கடற்கரையிலிருந்து இயற்கையான உப்பை எடுத்துக் கொண்டு போவதும், அதே போன்று சட்டத்தை மீறுவதாகும். அப்படிப்பட்ட உப்பை விலை கூறி விற்பதும் சட்ட விரோதமாகும். சுருங்கச் சொன்னால், உப்பிலுள்ள ஏக போக உரிமையை மீறுவதற்கு இவற்றில் ஏதாவது ஒன்றையோ, எல்லாவற்றையுமோ நீங்கள் செய்யலாம்.

என்றாலும், இதோடு மாத்திரம் நாம் திருப்தியடைந்து இருந்துவிடக் கூடாது. காங்கிரஸ் கமிட்டிகள் இருக்கும் இடங்களிலெல்லாம், எங்கெங்கே உள்ளூர் ஊழியர்களுக்குத் தன்னம்பிக்கை இருக்கிறதோ அங்கெல்லாம், மற்ற தக்க முறைகளையும் அனுசரிக்கலாம். இதற்கு ஒரே ஒரு நிபந்தனையை மாத்திரம் விதிக்கிறேன். சுயராஜ்யத்தை அடைவதற்கு, சத்தியமும் அகிம்சையுமே ஒரே முறை என்று நாம் கொண்டிருக்கும் பிரதிக்ஞை முற்றிலும் அனுசரிக்கப் பட வேண்டும். மற்றவைகளில் அவரவர்கள் இஷ்டம் போல் செய்து கொள்ளலாம். ஆனால், கண்டவர்களுக்கெல்லாம் தங்கள் சொந்தப் பொறுப்பில் காரியங்களைச் செய்து கொண்டு போக இதனால் அனுமதி கொடுத்துவிட்டதாக ஆகாது. தங்கள் உள்ளூர் தலைவர்கள் இருக்கும் இடங்களிலெல்லாம், அவர்கள் உத்தரவுகளுக்கு மக்கள் பணிந்து நடக்க வேண்டும். தலைவரே இல்லாத இடங்களில், இந்த வேலைத் திட்டத்தில் நம்பிக்கையுள்ள சிலர் மாத்திரமே இருக்கிறார்கள் என்றால், அவர்களுக்குப் போதுமான தன்னம்பிக்கை இருந்தால் தங்களால் முடிந்ததை அவர்கள் செய்யலாம். அப்படிச் செய்ய அவர்களுக்கு உரிமை உண்டு; அது அவர்கள் கடமை. தன்னம்பிக்கை, தைரியம், உறுதி ஆகியவைகளினால் மாத்திரமே பலர் தலைமைப் பதவிக்கு வந்திருக்கிறார்கள் என்பதற்கு உலக சரித்திரத்தில் உதாரணங்கள் நிறைய இருக்கின்றன. சுயராஜ்யத்தை அடைய மனப்பூர்வமாக நாம் ஆசைப்படுவோமாயின், அதை அடைந்தே தீர வேண்டும் என்று நாம் துடிதுடித்துக் கொண்டிருந்தால், அத்தகைய தன்னம்பிக்கை நமக்கும் இருக்க வேண்டும். அரசாங்கம் நம்மைக் கைது செய்வது அதிகரித்துக் கொண்டு போகப் போக, நம் தொகை பெருகும்; நம் உள்ளங்கள் பலப்படும்.

நான் கைதியான பிறகு உங்களை நடத்திச் செல்ல எவரும் இருக்கமாட்டார்கள் என்று யாரும் எண்ணிவிட வேண்டாம்.

உங்களுக்கு வழிகாட்டி நடத்திச் செல்லுபவர் பண்டித ஜவாஹர்லாலேயன்றி நான் அல்ல. தலைமை வகித்து நடத்திச் செல்லுவதற்கு வேண்டிய சக்தி அவருக்கு இருக்கிறது. அச்சமின்மை, தன்னைத் தானே அர்ப்பணித்து விடுவது ஆகியவற்றின் போதனையை அறிந்து கொண்டு விட்டவர்களுக்குத் தலைவர் தேவையில்லை என்பது உண்மையே. இந்த நற்குணங்கள் நம்மிடம் இல்லையென்றால், நம்முள் அவற்றை உண்டாக்கி விட ஜவாஹர்லாலினாலும் ஆகாது.

இவையல்லாமல் மற்ற வழிகளிலும் எவ்வளவோ செய்யலாம். மதுபானக் கடைகளையும் அந்நியத் துணிக் கடைகளையும் மறியல் செய்யலாம். போதுமான பலம் நமக்கு இருந்தால், வரி கொடுக்கவும் நாம் மறுத்து விடலாம். வக்கீல்கள் தங்கள் தொழிலை விட்டு விடலாம். வழக்காடுவதை விட்டு விட்டுப் பொது மக்கள், கோர்ட்டுகளைப் பகிஷ்கரிக்கலாம். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்து விடலாம். கதியற்றதோர் நிலைமையே சுற்றிலும் ஆட்கொண்டிருப்பதற்கு நடுவே, எங்கே வேலை போய் விடுமோ என்று நடுங்குகிறார்கள். அத்தகையவர்கள் சுயராஜ்யத்திற்குத் தகுதியில்லாதவர்கள். ஆனால், ஏன் இந்தக் கதியற்ற உணர்ச்சி? நாட்டிலிருக்கும் அரசாங்க சிப்பந்திகளின் தொகை சில லட்சங்களுக்கு மேல் இல்லை. மற்றவர்களின் நிலைமை என்ன? அவர்கள் எங்கே போவது? சுதந்திர இந்தியாவிலும், இன்னும் அதிகமான தொகையினருக்கு அரசாங்கத்தில் வேலை கொடுக்க முடியாது. இப்பொழுது ஒரு கலெக்டருக்கு எத்தனை வேலைக்காரர்கள் இருக்கிறார்களோ, அத்தனை பேர் சுயராஜ்யத்தில் கலெக்டருக்குத் தேவையில்லை. அவருக்கு அவரே வேலைக்காரராக இருப்பார். காகிதங்களை எடுத்துச் செல்வதற்கும், கூட்டுவதற்கும், சமைப்பதற்கும், கக்கூசைச் சுத்தம் செய்வதற்கும், கடிதங்களைக் கொண்டு போவதற்கும் ஒரு கலெக்டருக்குத் தனித்தனி வேலையாட்களுக்கு ஏற்பாடு செய்வதற்கு இந்தியாவைப் போன்ற ஒரு ஏழை நாட்டினால் எப்படி முடியும்? இந்த ஏராளமான செலவுகளைத் தாங்க, பட்டினி கிடக்கும் நம் கோடிக்கணக்கான மக்களினால் ஆகாது. ஆகையால், நமக்குப் புத்தி இருந்தால், அது நீதிபதி வேலையோ,. பியூன் வேலையோ எதுவாக இருந்தாலும், நாம் அரசாங்க உத்தியோகத்தை விட்டொழித்து விடுவோமாக. தம் வேலையை விட்டு வந்து விடுவது ஒரு நீதிபதிக்குக் கஷ்டமாக இருக்கலாம். ஆனால், ஒரு பியூனுக்கு இதில் என்ன கஷ்டமிருக்கிறது? யோக்கியமாக உடலை உழைப்பதன் மூலம் அவர் எங்கும் தம் வயிற்றுக்கு வேண்டியதை சம்பாதித்துக்கொண்டு விடலாம். சுதந்திரத்தைப் பற்றிய பிரச்னைக்கு இதுதான் எளிதான பரிகாரம். அரசாங்கத்திற்கு வரி செலுத்துவதன் மூலமோ, கௌரவப் பட்டங்களை வைத்துக்கொண்டிருப்பதன் மூலமோ, அரசாங்கத்தின் பள்ளிக்கூடங்களுக்குக் குழந்

தைகளை அனுப்புவதன் மூலமோ, ஏதாவது ஒரு வகையில் அரசாங்கத்திற்கு ஒத்துழைப்பை அளித்து வருகிறவர்கள் எல்லோரும், இவை எல்லாவற்றிலுமோ, சாத்தியமான பலவற்றிலோ ஒத்துழைக்க மறுத்துவிடட்டும். அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுப்பதற்கு ஒருவர் வேறு வழிகளையும் கண்டுபிடித்துக்கொள்ளலாம். இப்போராட்டத்தில் பெண்களும், ஆண்களோடு தோளோடு தோள் நின்று உதவி செய்யலாம்.

நீங்கள் இதை என் மரண சாசனமாக வைத்துக்கொள்ளலாம். யாத்திரையை ஆரம்பிப்பதற்கு முன்னால், அல்லது சிறைக்குப் போவதற்கு முன்பு, உங்களுக்கு நான் கூற விரும்பும் செய்தி இது ஒன்றே. நாளை காலையில், அதற்கு முன்னால் நான் கைது செய்யப்பட்டால் இன்னும் முன்னாடியே ஆரம்பமாகும் இந்தப் போரை நிறுத்தி வைப்பதோ, கைவிடுவதோ இருக்கக்கூடாது என்று நான் விரும்புகிறேன். என் கோஷ்டி கைதியானவுடனே பத்து கோஷ்டிகள் தயாராக இருக்கின்றன என்ற செய்தியை ஆவலுடன் நான் எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன். நான் இன்று ஆரம்பிக்கும் வேலையைப் பூர்த்தி செய்ய இந்தியாவில் ஆட்கள் இருக்கிறார்கள் என்பதை அறிவேன். நமது லட்சியம் நியாயமானது என்பதிலும், நமது ஆயுதங்கள் தூய்மையானவை என்பதிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. அனுசரிக்கும் முறைகள் எங்கே தூய்மையாக இருக்கின்றனவோ, அங்கே தமது ஆசீர்வாதங்களுடன் கடவுள் இருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. இந்த மூன்றும் எங்கே சேர்ந்துவிடுகின்றனவோ அங்கே தோல்வி என்பது அசாத்தியமானதாகிவிடுகிறது. ஒரு சத்தியாக்கிரகி, கைதியாகாமலிருந்தாலும், சிறைப்பட்டிருந்தாலும், என்றும் வெற்றி பெற்றவரே. சத்தியத்தையும் அகிம்சையையும் அவர் கைவிட்டுவிடும்போதுதான், அந்தராத்மா சொல்லுவதைக் கேட்டுக்கொள்ளத் தவறி விடும்போதுதான் அவர் தோல்வியடைந்துவிடுகிறார். ஆகையால், தோல்வி என்ற ஒன்று சத்தியாக்கிரகிக்கும் இருக்குமானால், அதற்கு அவரே பொறுப்பாளியாவார். உங்களையெல்லாம் கடவுள் ஆசீர்வதித்து, நாளை ஆரம்பமாகப் போகும் போராட்டத்திற்குக் குறுக்கே இருக்கும் தடைகளையெல்லாம் போக்குவாராக. இதுவே நமது பிரார்த்தனையாக இருக்கட்டும்.

— 'எங் இந்தியா' - 20—3—1930

# 13

# யாத்திரையின்போது ஆசிரம கட்டுதிட்டம்

*[1930 மார்ச் 12–ஆம் தேதி காலை 6-30 மணிக்கு மகாத்மா காந்தி தமது 78 சீடர்களுடன் சரித்திரப் புகழ் பெற்ற தண்டி யாத்திரையை ஆரம்பித்தார். பெருந் திரளான மக்கள் பின் தொடர்ந்து சென்றனர். பல மைல்கள் தூரம் வரையில் பாட்டையில் நீர் தெளித்து நெடுக தோரணங்களால் அலங்கரித்திருந்தார்கள். எங்கும் திருவிழாக் காட்சியே இருந்தது. இந்த யாத்திரையில் காந்திஜி கையில் தடி ஏந்தி முன்னால் வேகமாக நடந்தார். சீடர்கள் பின் தொடர்ந்தனர். அப்பொழுது அவருக்கு வயது 61. இருந்தும் அவருக்கு இருந்த சக்தியைக் கண்டு எல்லோரும் பிரமித்தார்கள். தினம் இரவு 9-மணிக்குப் படுக்கைக்குச் செல்வார். தூங்கும் வரையில் வருகிறவர்களிடம் பேசிக் கொண்டிருப்பார். தமது சகாக்கள் எழுவதற்கு அதிக நேரம் முன்னதாகவே காந்திஜி படுக்கையிலிருந்து எழுந்து விடுவார். எழுத வேண்டிய கடிதங்களை எழுதி முடிப்பார். ஒரு நாள் காலை 4 மணிக்கு விளக்கில் எண்ணெய் இல்லாததால் அணைந்துவிட்டது. ஆனால், அதற்காக அவர் யாரையும் எழுப்பவில்லை. நிலா வெளிச்சத்தில் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருந்தார். காலை 6 மணிக்குப் பிரார்த்தனை நடக்கும். அது முடிந்ததும் சீடர்களுக்கு யாத்திரை சம்பந்தமான உபதேசங்களைக் கூறுவார். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கும் பதில் கூறுவார். பிறகு யாத்திரை 6-30 மணிக்கு ஆரம்பமாகிவிடும். யாத்திரையின்போது தமது சகாக்கள், ஆசிரம கட்டுதிட்டங்களைக் கண்டிப்பாக அனுசரித்து நடந்தாக வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார். அதைப் பற்றிய ஒரு விவரமே கீழே கொடுக்கப்படுகிறது.]*

நடந்தே யாத்திரை செய்வது அதிகக் களைப்படையும்படிச் செய்வதாக இருந்தபோதிலும், யாத்திரிகர்கள் ஒவ்வொருவரும் வழக்கமான ஆசிரம நடைமுறையை அனுசரித்தாக வேண்டும் என்று காந்திஜி வற்புறுத்தி வந்தார். முக்கியமாகப் பிரார்த்தனை, நூற்பது, நாட்குறிப்புகளை எழுதுவது ஆகியவைகளைச் செய்தாக வேண்டும் என்றார். பிரார்த்தனை செய்யும் நேரத்தை அனுசரித்துத்தான் ஒவ்வொரு நாளும் யாத்திரைக்குக் கிளம்பும் நேரம்

இருந்தது. எனவே, பிரார்த்தனைக்குப் போய்விடுவது என்பது எளிதாயிருந்தது. ஆனால், மற்ற இரண்டையும் செய்து முடிப்பது என்பது எப்பொழுதும் கஷ்டமாகவே இருந்தது. ஒவ்வொரு வரும் மாலையில் அதிகமாகக் களைத்துப் போகின்றனர். ஆகை யால், நாட் குறிப்பை எழுதுவதற்கு முன்னாலேயே தூங்கிவிடு கிறார்கள். சில இடங்களில் ராட்டை கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. எப்படியும் எல்லோருக்கும் போதுமானதாக ராட்டைகள் கிடைப்பது கஷ்டம். மெதுவாக நூற்கும் ஒருவர் அன்றாடம் நூற்க வேண்டிய அளவான 212 கெஜம் நூலை, மூன்று மணி நேரத்திற்குக் குறையாமல் தக்ளியில் நூற்றுவிட முடியாது. ஆனால், இந்த சமாதானங்களையெல்லாம் கேட்டுக்கொள்ள காந்திஜி மறுத்துவிட்டார். அவர் கூறியதாவது :

"நமது யாத்திரை புனிதமானது. ஆகவே, நமது நேரத்தின் ஒவ்வொரு நிமிடத்தையும் சரியானபடி உபயோகித்தாக வேண் டும். செய்ய வேண்டிய இந்த வேலையை முற்றிலும் முடிக்காத வர்களோ, நூற்பதற்கும், நாட்குறிப்பை எழுதுவதற்கும் நேர மில்லை என்பவர்களோ என்னை வந்து பார்க்கட்டும். இதைக் குறித்து அவர்களுடன் விவாதிக்கிறேன். அவர்கள் வகுத்துக் கொண்டிருக்கும் கால அட்டவணையில் ஏதோ கோளாறு இருக்க வேண்டும். அதை ஒழுங்கு படுத்திக்கொள்ளுவதற்கு நான் அவர் களுக்கு உதவி செய்கிறேன். நாம் அன்றாடம் செய்தாக வேண் டிய கடமைகளுக்கு இடையூறாக இருந்து விடாத வகையில் காரி யங்களைச் செய்துகொள்ளுபவர்களாக நாம் இருக்க வேண்டும். கடுமையான கால்நடைக்கு வேண்டிய பலத்துடன் நாம் இல்லை என்பதை நானே கூறுவேன். இதனாலேயே வாரத்திற்கு ஒரு நாள் ஓய்வுக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். ஆனால், வழக்கமான ஆசிரம கட்டுதிட்டங்களின்படி நடக்க வேண்டியதில் சிலவற்றை விட்டுவிடுவது என்ற எந்த யோசனையையும் கேட்டுக்கொள்ள நான் தயாராயில்லை. நம்முடைய யாத்திரை புனிதமானது என்பதைத் திரும்பவும் கூறுகிறேன். தன்னைத் தானே சோதித் துக் கொள்ளுவதும், தன்னைத் தானே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதும் இதில் அவசியமானவை. இவற்றைச் செய்யாமல் நாம் இருக்க முடியாது. நாட் குறிப்பு எழுதுவது இவ்விஷ யத்தில் ஒரு பெரிய உதவியாகும். ஒழுங்காக நூற்பது, தினமும் நூற்ற நூல் இத்தனை கெஜம் என்று எண்ணிக் கணக் கிடுவது, நாட்குறிப்பு எழுதுவது ஆகியவைகளெல்லாம் நான் எராவ்டா சிறையிலிருந்தபோது யோசித்து முடிவு செய்யப் பட்டவை. சுயராஜ்யத்தின் பீடத்திற்கு அஸ்திவாரம் போட வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்களாகிய நமக்கு, நாம் செய்வதே புனிதமான முதல் காணிக்கையாக இருக்கு மாகையால், சாத்தியமான வரையில் இது மாசற்றதாக இருக்க வேண்டும். நாம் அனுசரித்துவரும் கடுமையான கட்டுதிட்டங் களை, நம்மைப் பின்பற்றுகிறவர்கள் கைவிட்டுவிடக்கூடும்.

ஆனல், நமக்கு இதிலிருந்து தப்புவதற்கு வழியில்லை. பக்தியுடன் மேற்கொள்ளும் இந்தச் சுய கட்டுதிட்டம், நம்முள் ஒரு சக்தியை உண்டாக்கும். அது, நாம் வெற்றி கொண்டதை நாம் வைத்துக்கொண்டிருக்கும்படி செய்யும். தீவிரமாகச் செயலாகும் அகிம்சையின் இயற்கையான பலனே இது. சுயராஜ்யம் வந்த பிறகும் நம்மை நல்ல நிலையிலிருக்கும்படி இது செய்யும். நாம் கைது செய்யப்பட்டுவிட்ட பிறகு, நாமெல்லாரும் சேர்ந்து ஓர் இடத்தில் வைக்கப்படுவோம் என்று சொல்லுவதற்கில்லை. ஆகையால், இப்பொழுதிலிருந்தே நமது வாழ்க்கை சரியாக ஒழுங்குபடுத்தப்பட்டிருக்குமானல், நமது அன்ருடக் கடமைகளைச் செய்துகொண்டு போவதில் நமக்குக் கொஞ்சங்கூட கஷ்டமிராது.''

—'எங் இந்தியா' - 20—3—1930

# 14

# விசுவாசமின்மை ஒரு கடமை

*[1930 மார்ச் 15-ம் தேதி காந்திஜி நாடியாட் போய்ச் சேர்ந்தார். அங்கே ஊழியர்களுடன் பேசிக்கொண்டிருக்கையில், ''நீங்கள் ஓர் இடத்திற்கும் மற்ருேர் இடத்திற்கும் உள்ள தூரத்தைப் பற்றித் தவருகக் கணக்குப் போட்டு விட்டீர்கள். ஆரம்பத்தில் தினம் பத்து, பன்னிரண்டு மைல்களுக்குமேல் போக நான் உத்தேசிக்கவில்லை. ஆனல், இப்பொழுது தினம் 15 மைல்கள் வீதம் போகிருேம்'' என்ருர். அதன்பேரில் திங்கட்கிழமைதோறும் ஓய்வு நாள் என்று முடிவு செய்துவிட்டார். மார்ச் 16-ஆம் தேதி ஆனந்த் போய்ச் சேர்ந்தார். மறுநாள் திங்கட்கிழமை ஓய்வு நாள். தமக்கு வந்திருந்த கடிதங்களுக்கெல்லாம் அன்று பதில் எழுதினர். 'எங் இந்தியா' பத்திரிகைக்கும் கட்டுரை எழுதினர். அக்கட்டுரையே கீழே கொடுக்கப் பட்டிருப்பதாகும்.]*

தீவிரமான விசுவாசத்திற்கும் தீவிரமான விசுவாசமின்மைக்கும் இடையே நடுவாந்தரமானது என்பது ஒன்று இல்லை. ஜனநாயக காலத்தில் ஒரு மனிதனிடம் தீவிரமான விசுவாசத்துடன் இருப்பது என்று ஒன்று இல்லை. ஆகையால், ஸ்தாபனங்களிடம் தான் விசுவாசத்துடனே, விசுவாசமின்றியோ இருந்து வருகிறீர்கள். நீங்கள் விசுவாச மில்லாதிருக்கும்போது, ஸ்தாபனங்களை அழித்துவிட நீங்கள் முற்படுவீர்களே யன்றி மனிதர்களை அல்ல. இப்பொழுது இருக்கும் அரசாங்கத்தை ஒருவர்

அறிந்திருப்பாரானால், அவருக்கு அதனிடம் விசுவாசம் ஏற்பட முடியாது. ஊழல் மிகுந்த அரசாங்கம் இது. மனிதரின் ஒழுக்கத்தைப் பாதிப்பதாக இருக்கும் அதனுடைய பல சட்டங்கள், நிச்சயமாக மனிதத் தன்மையில்லாதவையாக இருக்கின்றன. அவர்களுடைய நிர்வாகமோ மோசமாக இருக்கிறது. எப்பொழுதுமே ஒரு மனிதனின் இஷ்டம்தான் சட்டமாக இருந்து வருகிறது. இந்த நாட்டில் எத்தனை ஜில்லாக்கள் இருக்கின்றனவோ, அத்தனை பேர் ஆளுவோரும் இருக்கிறார்கள் என்று நிச்சயமாகச் சொல்லலாம். கலெக்டர்கள் என்று கூறப்படும் இவர்கள், தங்களிடமே நிர்வாக அதிகாரத்தையும், நீதி பரிபாலனத்தையும் சேர்த்து வைத்துக் கொண்டவர்களாக இருக்கிறார்கள். தம்மிடையே மிகுந்த குறைபாடுகளைக் கொண்டவையாகச் சட்டங்கள் இருக்கின்றன. இந்தச் சட்டங்களை அனுசரித்தே இவர்கள் செய்யும் காரியங்கள் இருக்கின்றன என்று சொல்லப்பட்டபோதிலும், இந்த ஆட்சியாளர்கள் மனம் போனபடியெல்லாம் நடப்பவர்களாக அநேகமாக இருந்து வருவதால், அவர்கள் விரும்பியபடியெல்லாம் காரியங்கள் செய்யப்படுகின்றன. அநேகமாக ஒரு ரகசியக் கூட்டத்திலிருந்தே வந்தவர்களான இந்த சுமார் முன்னூறு பேர், உலகத்திலேயே அதிக சக்தி வாய்ந்தவர்களாக இருக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட தொகையை வரி வருமானமாக இவர்கள் வசூலித்தாக வேண்டியிருக்கிறது. ஆகையால் எப்பொழுதும் மக்களிடத்தில் அதிக அக்கிரமமாக நடந்துகொண்டு வருகின்றனர். இந்தியாவிலிருக்கும் கோடிக்கணக்கான மக்களைக் கொஞ்சமும் இரக்கமின்றிச் சுரண்டுவதை அடிப்படையாகக் கொண்டது இந்த ஆட்சி முறை. கிராமாதிகாரிகளிலிருந்து தங்கள் சொந்த உதவியாளரான அதிகாரி வரையில், சிப்பந்திகள் வகுப்பு ஒன்றையே இந்தக் குட்டி ராஜாக்கள் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறார்கள். இந்தச் சிப்பந்திகள், தங்கள் அந்நிய எசமானர்களிடம் கெஞ்சிக் கூத்தாடிக்கொண்டிருந்த போதிலும், விடாமல் இவர்கள் மக்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டு செய்யும் காரியங்கள், மக்கள் ஒழுக்கங் கெட்டுப் போகும் அளவுக்குப் பொறுப்பில்லாமலும் கொடுமையாகவும் இருந்துவருகின்றன. அக்கிரமங்களைச் செய்யும் இவர்களின் முறை, ஊழல்களை எதிர்க்க முடியாதவர்களாக மக்களைச் செய்துவிடுகிறது. எனவே, இந்திய அரசாங்கத்தின் படுமோசமான தீய முறையை அறிந்துகொண்டு விட்டவர்கள், அதனிடம் விசுவாச மில்லாது போவதோடு, விசுவாச மின்மையைத் தீவிரமாகவும் பகிரங்கமாகவும் பிரசாரஞ் செய்யக் கடமைப்பட்டவர்களாகி விடுகிறார்கள். உண்மையில் இவ்வளவு மோசமான ஓர் ஆட்சியிடம் விசுவாசம் காட்டுவது பாவமாவதோடு, விசுவாசமில்லாதிருப்பது புண்ணியமாகிறது.

முப்பது கோடி மக்கள், முன்னூறு பேருக்குப் பயந்து நடுங்கிக்கொண்டு பணிந்து கிடக்கும் காட்சி, எதேச்சாதிகாரிகளுக்

கேயன்றி அதற்குப் பலியாகியிருப்பவர்களுக்கும் மானக்கேடானது. இந்த ஆட்சியின் சில அம்சங்களை, மொத்தத்துடன் சம்பந்தப்படுத்திப் பாராமல் தனியாகக் கவனித்தால், இது என்னதான் கவர்ச்சியானதாக இருந்தபோதிலும், இதைத் தாமதமின்றி அழித்தாக வேண்டியது இந்த முறையிலிருக்கும் தீமையின் தன்மையை அறிந்துகொண்டவர்களின் கடமை. இதைச் செய்து முடிப்பதற்கு எந்த ஆபத்தையும் ஏற்றுக்கொள்ளுவதற்கும் தயாராக இருக்கவேண்டியது அவர்களுடைய தெளிவான கடமை.

ஆனால், இதேபோல இன்னுமொரு விஷயமும் தெளிவாக இருக்கவேண்டும். இந்த ஆட்சி முறையின் சிருஷ்டி கர்த்தாக்களோ, நிர்வாகிகளோ ஆன அந்த முன்னூறு பேரை அழித்து விட முப்பது கோடி மக்கள் முற்படுவது கோழைத்தனமானதாகவே இருக்கும். இந்த நிர்வாகிகளையும், அவர்களுடைய கையாட்களையும் அழித்துவிடுவதற்கான முறையை வகுப்பது, மோசமான அறியாமையின் அறிகுறியாகும். மேலும் அவர்கள் சந்தர்ப்பத்தின் சிருஷ்டிகளேயன்றி வேறு அல்ல. இம்முறையில் பிரவேசித்துவிடும் மிகப் பரிசுத்தமானவரும் அதனால் பாதிக்கப்பட்டு விடுகிறார், அத்தீமையைப் பரப்புவதற்கு அவர் கருவியுமாகிவிடுகிறார். ஆகையால், இயற்கையாகவே இதற்கு இருக்கும் பரிகாரம், இந்த ஆட்சி முறைக்கு வலிய அளித்து வரும் எல்லா உதவிகளையும் சாத்தியமான வரையில் வாபஸ் வாங்கிக்கொண்டு ஒத்துழையாமை செய்வதோடு, அதன் நன்மைகள் என்று கூறப்படுபவை வேண்டாம் என்று விட்டுவிடுவது தானேயன்றி நிர்வாகிகள் மீது ஆத்திரமடைந்து அவர்களுக்குத் துன்பம் இழைப்பது அன்று. ஒத்துழையாமையின் அவசியமான ஒரு பகுதியே சட்ட மறுப்பு என்பது கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தாலே விளங்கும். ஒரு நிர்வாகத்தின் உத்தரவுக்கும் தீர்ப்புக்கும் பணிவதன் மூலமே அந்த நிர்வாகத்திற்கு மிகவும் சரியானபடி உதவி செய்து வருபவர்களாகிறீர்கள். அத்தகைய விசுவாசத்தைப் பெறுவதற்கு ஒரு தீய நிர்வாகத்திற்குத் தகுதியில்லை. அதனிடம் விசுவாசத்துடன் இருப்பது என்பது, அத்தீமையில் பங்கு கொள்ளுவதாகும். ஆகையால், நல்லவராக உள்ள ஒருவர், தமது முழு ஆன்மாவையும் கொண்டு அந்த முறையை, நிர்வாகத்தை எதிர்ப்பார். எனவே, தீமையான அரசாங்கத்தின் சட்டங்களுக்கு உடன்பட மறுத்துவிட வேண்டியது கடமையாகிறது. பலாத்காரத்தோடு கூடிய சட்ட மறுப்பு, ஆட்களையே தாக்குகிறது. ஆனால் ஓர் ஆள் போய்விட்டால், பதிலுக்கு இன்னுமொரு ஆளை வைத்துவிட முடியும். ஆகவே, பலாத்கார சட்ட மறுப்பு, தீய முறையை ஒன்றும் செய்துவிடாமல் விட்டு வைக்கிறது; எப்பொழுதும் அத்தீமையும் அதிகமாகிறது. ஆகையால், அகிம்சை, அதாவது சாத்விகச் சட்ட மறுப்பு ஒன்றே வெற்றிகரமான பரிகாரம். தீமையில் சம்பந்தம் கொள்

ளுவதில்லை என்று ஒதுங்கிவிடுபவருக்கு இச்சட்ட மறுப்பு கடமையாகிறது.

சாத்விகச் சட்ட மறுப்பில் ஓர் அபாயமும் இருக்கிறது. இது இன்னும் ஓர் அளவுக்கு மாத்திரம் சோதிக்கப்பட்டுள்ள பரிகார மாகவே இருக்கிறது. அதோடு, எப்பொழுதும் பலாத்காரமே மிகுந்திருப்பதான ஒரு சூழ்நிலையிலேயே இதைச் சோதிக்க வேண்டியும் இருக்கிறது. இதனால் மாத்திரமே இதில் அபாயம் இருக்கிறது. கொடுங்கோன்மை மிகுந்திருக்கும்போது, அதற்கு ஆளானவர்களிடத்தில் ஆத்திரம் உண்டாகிவிடுகிறது. அவர்க ளுடைய பலவீனத்தினால் அந்த ஆத்திரம் மறைவாக இருந்து வருகிறது; கொஞ்சம் இடங் கிடைத்ததுமே அது ஆவேசத்து டன் வெளிக் கிளம்பிவிடுகிறது. வாழ்வை நாசமாக்குவதும் கட்டுப்பாடற்றதும், மறைந்திருந்து வருவதுமான இந்தச் சக் தியை, உயிரைக் காப்பதும் கட்டுதிட்டத்தோடு கூடியதுமான சக்தியாக மாற்றுவதற்குள்ள மிகச் சிறந்த முறையே சட்ட மறுப்பு. இதன் உபயோகம் முழு வெற்றியை நிச்சயமாக்கு கிறது. இதனால் ஏற்படக்கூடியதாக இருக்கும் பலனோடு ஒப் பிட்டுப் பார்க்கும்போது, இதிலிருக்கும் ஆபத்து பிரமாதமா னதே அல்ல. இதன் உபயோகத்தில் உலகம் பழக்கப்பட்டு விடும்போது, விஞ்ஞானம் உயர்ந்த அபிவிருத்திக் கட்டத்தை அடைந்திருந்தபோதிலும், விமானப் போக்குவரத்தில் இருக் கும் ஆபத்தைவிட சட்ட மறுப்புச் செய்வதிலிருக்கும் அபாயம் மிகக் குறைவானதாகவே இருக்கும்.

— 'எங் இந்தியா' — 27—3—1930

[காந்திஜியின் மேலே கண்ட கட்டுரை நல்ல பலனை அளித்தது. இதனால் குஜராத்தில் அநேக கிராமாதிகாரி களும் போலீஸ் பட்டேல்களும் தங்கள் பதவிகளை ராஜி நாமா செய்துவிட்டார்கள்.]

# 15

# சில யோசனைகள்

அகமதாபாத்தில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானம், தண்டிக்கு நான் போய்ச் சேரும்வரை யில் என்னைக் கைது செய்துவிட மாட்டார்கள் என்ற கருத்தின் பேரில், இந்தியா முழுவதிலும் சட்ட மறுப்பை ஆரம்பிப்ப தற்கு உத்தரவிடும் பாரத்தை என் மீது சுமத்தியிருக்கிறது. இதன் காரணம் தெளிவானது. தவறு எதுவும் நடந்துவிடாத

படி நியாயமான முன்னேற்பாடுகளையெல்லாம் செய்துகொள்ள வேண்டும் என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி விரும்பு கிறது. நான் கைதியாகிவிட்டால் இயக்கத்தை நிறுத்திவிடு வது ஆபத்தானதாகிவிடும். நான் கைதியாவதற்கு முன்னல் நான் என்ன செய்வேன் என்று அ. இ. கா. கமிட்டி முன்கூட்டி எதையும் எண்ணிவிட முடியாது. இப்பொழுது நான் பார்க்கிற வரையில், ஏப்ரல் 6-ஆம் தேதி இந்தியா முழுவதிலும் இயக் கத்தை ஆரம்பித்துவிடலாம் என்று ஊழியர்கள் வைத்துக் கொள்ளலாம். தேசீய வாரம் ஆரம்பமாகும் நாள் அது. 1919-இல் அதற்கு முன்னல் என்றுமே கண்டிராத வகையில் பொது ஜன விழிப்பைச் சத்தியாக்கிரகம் கண்ட நாள் அது. அதைத் தொடர்ந்த ஏழு நாட்களில், நம்மைப் பொறுத்த வரையில், சில மோசமான காரியங்களும் நடந்துவிட்டன. பிறகு அக்கிரம மான ஜாலியன்வாலா பாக் படுகொலையில் போய் முடிந்தது. எல்லாம் சரியாகவே இருக்குமானல், ஏப்ரல் 5-ஆம் தேதி நான் தண்டிக்குப் போய்ச் சேருவேன். ஆகையால், சத்தியாக்கிர கத்தை ஆரம்பிப்பதற்கு ஏப்ரல் 6-ஆம் தேதியே மிகவும் இயற் கையான நாளாக எனக்குத் தோன்றுகிறது. ஊழியர்கள் இதற்கு வேண்டிய தயாரிப்புகளைச் செய்துகொண்டு வரலாம். ஆனல், முடிவான என் உத்தரவுக்கு அவர்கள் காத்திருக்க வேண்டும்.

இயக்கத்தை ஆரம்பிப்பதற்கு இருக்கும் தடை நீக்கப்பட்டு விட்டது என்ருல், அப்படி நீக்கியதுமே ஒவ்வொரு மாகாண மும், ஒவ்வொரு ஜில்லாவும், அது தயாராக இல்லாமலிருந்தபோதி லும், அதன் முதல் சேவகருக்கு அந்தராத்மாவிலிருந்து எழுச்சி பிறக்காமலிருந்தாலும், சட்ட மறுப்பை ஆரம்பித்தே ஆக வேண்டும் என்பதில்லை. தம்மிடத்திலோ அல்லது அடுத்துள்ள சுற்று வட்டாரத்தைக் குறித்தோ அவருக்கு நம்பிக்கை இல்லை என்ருல், அவசரப்பட்டுக் காரியத்தில் இறங்கிவிட அவர் மறுத்து விடுவார். ஒன்றும் செய்யாமலிருந்ததற்காக யாரும் குறை சொல்லமாட்டார்கள். ஆனல், சுற்றிலுமிருப்பவர்களைக் கட்டுப்படுத்தி நிர்வகிப்பதற்குப் பதிலாக அவர்கள் இஷ்டத் திற்கு இவர் உடன்பட்டுவிடுவாரானல், நிச்சயமாக பழியெல் லாம் இவர் தலையில்தான் விழும்.

பொதுஜன சாத்விகச் சட்ட மறுப்பு நடக்க வேண்டும் என்றே நாம் எல்லோரும் விரும்புகிருேம். அதை இன்னெருவர் செய்துவிட முடியாது. அதன் பெயருக்கு ஏற்ற வகையில் அது இருக்க வேண்டுமானல், அது வெற்றியடையவும் வேண்டுமா யின், அது தானே தோன்றுவதாக இருக்க வேண்டும். நிலத்தை முன்னடியே உழுது, எருவிட்டு, நீரும் பாய்ச்சியிருந்தாலன்றி அதற்குப் பொதுஜன ஆதரவு நிச்சயமாக இராது. பலாத்காரக் கலவரம் நடந்துவிடாதபடி மிக அதிக முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளையெல்லாம் செய்துகொள்ள வேண்டும். பலாத்கா

ரக் கலவரம் ஏற்பட்டுவிட்டாலும்கூட, நான் முன்பு கூறியதைப் போன்று, இந்தத் தடவை சட்ட மறுப்பு தொடர்ந்து நடக்கும் என்பது உண்மை. அதே சமயத்தில் நம்மைப் பற்றிய வரையில் பலாத்காரம் போராட்டத்திற்குத் தீமை விளைவிப்பதோடு, அதன் அபிவிருத்தியையும் தடுத்துவிடும் என்பதும் உண்மை. ஒன்றுக் கொன்று எதிரிடையான இரு சக்திகள். ஒன்றுக்கொன்று உதவி செய்யும் வகையில் என்றுமே ஒத்து வேலை செய்ய முடியாது. பலாத்காரத்தைச் சக்தியற்றதாக்கி, முடிவில் அதை முற்றிலும் போக்கிவிட்டு அது இருந்த இடத்தில் அகிம்சை இருக்கும்படிச் செய்து, துவேஷத்தைப் போக்கி அந்த இடத்தில் அன்பு ஏற்பட்டு, சச்சரவுக்குப் பதிலாக சமரசம் ஏற்படும்படி பார்ப்பதற்கென்றே சாத்விகச் சட்ட மறுப்பு இயக்கத்தின் திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது.

அப்பொழுது, பலாத்காரக் கலவரங்கள் மூண்டாலும் போராட்டம் நிறுத்தி வைக்கப்படமாட்டாது என்பதற்கு ஒரு பொருள் உண்டு. ஏதாவது தீ மூண்டுவிடுமாயின், அந்தத் தீயில் தாங்கள் சாம்பலாகிவிடுவார்கள், அதற்கு முற்படுவார்கள் என்பதே அதன் பொருள். அரசாங்கம் ஏற்பாடு செய்யும் பலாத்காரமாக இருந்தாலும் சரி, ஆத்திரமடைந்த ஒரு கோஷ்டியினரோ, நாட்டு மக்களோ திடீரென்று கிளப்பிவிடும் பலாத்காரமாக இருந்தாலும் சரி, இதை வேறு கதியற்றுப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பவர்களாக அகிம்சை வாதிகள் இருக்கமாட்டார்கள். ஆகையால், ஒவ்வொரு மாகாணத்திலும் இருக்கும் ஊழியர்கள், மனித சாத்தியமான எல்லா முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகளையும் செய்துகொண்டு, அதன் பிறகு போராட்டத்தில் இறங்க வேண்டும். அப்படிச் செயவதில் மிகப் பெரிய அபாயத்திற்கு உடன்பட நேர்ந்தாலும் கவலைப்படக்கூடாது. இதனால் இன்னுமொன்றும் அவசியமாகிறது. பூரண சுயராஜ்யத்தை அடைவதற்கு அகிம்சை ஒன்றுதான் வழி என்பதில் பூரணமான நம்பிக்கை கொண்டவர்களாக, தங்கள் சொந்த மாகாணத்தில் இருப்பவர்கள் செய்யும் முடிவுக்கு எல்லோரும் விரும்பி உடன்பட வேண்டும்.

மற்ற சட்டங்களையும் மீறுவது என்ற பேச்சு இருந்து வருகிறது. இந்த யோசனை என்னைக் கவர்ந்துவிடவில்லை. கவனம் முழுவதையும் உப்புச் சட்டங்களின் மீதே செலுத்த வேண்டும் என்று நம்புகிறேன். உப்புச் சுரங்கங்கள் அநேகமாக எல்லா இடங்களிலும் இருக்கின்றன. விற்பனைக்கு வேண்டிய அளவுக்கு உப்பைத் தயாரிக்க வேண்டும் என்பதல்ல நோக்கம். ஆனால், உப்பைத் தயாரிப்பதனாலும் மற்ற காரியங்களினாலும் வேண்டுமென்றே உப்புச் சட்டங்களைப் பகிரங்கமாக மீறிவிட வேண்டும் என்பதுதான் நோக்கம்.

சாத்தியமான சட்ட மறுப்புக்குச் சௌக்கிதாரி சட்டங்களை எடுத்துக்கொள்ளலாம் என்று யோசனை கூறப்படுகிறது. உப்பு வரிகளைப் போல இவ்வரி நமது நிபந்தனைகளைப் பூர்த்தி செய்கிறவைகளாக இல்லை என்பது என் அபிப்பிராயம். எல்லாக் காலங்களுக்குமே மோசமானவை என்று எந்தச் சட்டங்கள் இன்று பார்க்குமளவில் நமக்குத் தோன்றுகின்றனவோ, அந்தச் சட்டங்களை எதிர்த்து மீறுவது என்பது நம் நோக்கம். சுயராஜ்யத்தின் கீழும் உப்பு வரி இருக்கலாம் என்று நாம் விரும்பவில்லை. சௌக்கிதாரி வரி ஒரு வேளை அப்படிப்பட்ட வரியாக இல்லாதிருக்கலாம். சுயராஜ்யத்தின் கீழும் சௌக்கிதாரி வரி நமக்கு வேண்டியிருக்கலாம். அப்படியிருக்கும்போது, நாம், போராடுவதற்காக மற்ற வரிகளும் சட்டங்களும் இருக்கையில் சௌக்கிதாரி வரியைத் தொடாமலிருப்பதே புத்திசாலித்தனமாக இருக்கக் கூடும்.

வன சட்டங்கள் வேறு இருக்கின்றன. அவற்றைக் குறித்து நான் இன்னும் பரிசீலனை செய்யவில்லை. ஆகையால், அதைக் குறித்து நான் நிதானத்துடன் தான் எழுத வேண்டும். நமது காடுகள் அடியோடு அழிந்து விட வேண்டும் என்றோ, லாபகரமில்லாத வகையில் மரங்களெல்லாம் வெட்டப்பட்டு விட வேண்டும் என்றோ நாம் விரும்பவில்லை என்பதில் சந்தேகமில்லை. இந்தச் சட்டங்களில் திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்பதிலும் எனக்கு ஐயமில்லை. இந்தச் சட்டங்களை ஜீவகாருண்யத்தோடு நிர்வகிக்க வேண்டியதும் இன்னும் அவசியமானதாகவும் இருக்கக் கூடும். இந்தச் சீர்திருத்தங்களுக்குச் சுயராஜ்யம் கிடைக்கும் வரையில் பொறுத்திருக்கலாம். இந்தச் சட்டங்களிலோ, அவை அமலாக்கப்படுவதிலோ மக்களுக்குக் குறைகள் இருக்கின்றன என்று பொது மக்களிடையே எடுத்துக் கூறப்பட்டு வந்திருப்பதாக, நான் அறிந்த வரையில் எனக்குத் தெரியவும் இல்லை.

வனங்களுடன் நெருங்கிய சம்பந்தமுடையவை மேய்ச்சல் பகுதிகள். இவை விஷயத்தில் நியாயமான குறைகள் இருப்பதற்கு, மேய்ச்சல் இடங்களை உபயோகிப்பதில் அவை சம்பந்தமான விதிகள் எவ்விதம் சங்கடமானவையாக இருக்கின்றன என்பதும் எனக்குத் தெரியாது.

என் கொள்கையைப் பொறுத்த வரையில், கள்ளுக்கடைகள், அபின் கடைகள், அந்நியத் துணிக் கடைகள் ஆகியவற்றில் மறியல் செய்வதே இன்னும் சிறந்தது. மறியல் செய்வது, அதனளவில் சட்ட விரோதமானது அல்ல என்றாலும், சரியானபடி நடக்கும் மறியல்களையெல்லாம் அடக்கி விடவே அரசாங்கம் விரும்பும் என்பது நமது முந்திய அனுபவம். அதைப் பற்றிக் கவலை இல்லை. நம் கொள்கைக்கு ஏற்றதாக இருக்கும் வரை

யில், நம்மால் முடிந்த இடங்களிலெல்லாம் அரசாங்கத்தை எதிர்ப்பதென்றே நாம் இப்பொழுது முன் வந்திருக்கிறோம். ஆனால், எந்த அக்கிரமத்திற்கும் துணிந்து விடும் மதுபானக் கடைக்காரர்களின் போக்கையும், அந்நிய ஜவுளி வியாபாரிகளின் அறியாத்தனமான கோபத்தையும் குறித்தே அஞ்சுகிறேன். இந்த இரு தீமைகளுக்கும் எதிராகப் பொது ஜன அபிப்பிராயம் இன்னும் அதிகமாகப் பலப்படவேண்டும் என்று விரும்புகிறேன். இவற்றில் வியாபாரம் செய்கிறவர்களிடையேயும், இவற்றை உபயோகிக்கிறவர்களிடத்திலும் ஊழியர்கள் முறைப்படி அவர்களுக்கு விஷயத்தை எடுத்துக் கூறும் பிரசாரத்தை மேற்கொள்ள வேண்டும்.

இந்த இரு தீமைகளையும் என்றாவது ஒரு நாளைக்கு நாம் ஒழித்தே ஆக வேண்டும். ஆகையால், நான் குறிப்பிட்டிருக்கும் அபாயங்களுக்கு அனாவசியமாக உட்படாத வகையில் மறியலை நடத்தத் தங்களால் முடியும் என்ற நம்பிக்கை இருக்கும் ஊழியர்கள், இந்த மறியல் போராட்டத்தை ஆரம்பித்து விட வேண்டும். ஆனால், சட்ட மறுப்பை ஆரம்பிக்கும்படி வரும் போது தாங்கள் ஏதாவது செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதற்காகவோ, உப்புச் சட்டங்களை மீறும் வேலையை எடுத்துக் கொள்ள முடியவில்லை என்பதற்காகவோ மறியலை ஆரம்பித்து விடக் கூடாது. இப்போதைக்கு உப்புச் சட்டங்களை மீறும் வேலையை எடுத்துக் கொள்ளுவதுதான் பத்திரமான காரியமாக எனக்குத் தோன்றுகிறது. நான் மேலே சொன்னதெல்லாம் எச்சரிக்கை செய்வதற்காகவே. நடவடிக்கையில் இறங்குவதற்கு அந்தராத்மாவின் அழைப்பு உண்மையாகவே இருக்கிறது என்று ஊழியர்கள் நினைக்கும் இடங்களிலெல்லாம், அவர்களிடம் பலாத்காரம் இல்லாதிருக்குமாயின், அழைப்பு வந்ததுமே, அவசியமானது, விரும்பத் தக்கது என்று தாங்கள் கருதும் சட்ட மறுப்பை அவர்கள் மேற்கொள்ளலாம். ஆனால், அவர்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் ஆணைக்கு உட்பட்டு நடக்க வேண்டும்.

இதற்கு மத்தியில், இப்போதைக்கும் ஏப்ரல் 6-ஆம் தேதிக்கும் நடுவில், நேரத்தை வீணாக்காமல் மாகாணங்கள் பொது ஜன ஆதரவு பலத்தைத் திரட்டிக் கொள்ளுவதற்கான தயாரிப்புகளைச் செய்து வரவேண்டும்.

—'யங் இந்தியா' – 27—3—1930

# தண்டி யாத்திரை மார்க்கம்





1930 ஏப்ரலில், சூரத் ஜில்லாவில் புஞ்சராத் என்ற இடத்தில் உப்புச் சட்டத்தை மீறுவதை காந்திஜி ஆரம்பித்து வைக்கிறுர்.

## 16

# தன்னைத் தானே ஆராய்ந்து கொள்க

[யாத்திரையின் போது காந்திஜி, ஆங்காங்கு செய்த பிரசங்கங்களில் அரசாங்கத்தையோ, மக்களையோ கண்டிக்க வேண்டியவைகளுக்குக் கண்டிக்காமல் இருந்ததில்லை. 1930 மார்ச் 29-ஆம் தேதியன்று சூரத் ஜில்லாவில் பாத்காம் என்ற இடத்தில் அவர் செய்த பிரசங்கத்தை, 'நம்மை நாமே ஆராய்ந்து கொள்ளும் பிரசங்கம்' என்று அவரே சொன்னார். உள்ளூர் ஊழியர்கள், தண்டி யாத்திரை கோஷ்டியினருக்கு வேண்டிய பாலை சூரத்திலிருந்து லாரியில் கொண்டு வர ஏற்பாடு செய்திருந்தார்கள். சில காரியங்களுக்கு வேலைக்காரர்களை அமர்த்துவது போன்றவைகளுக்கும் பணம் செலவு செய்திருந்தார்கள். இதற்காக அவர்களைக் காந்திஜி பலமாகக் கண்டித்துப் பேசினார். குஜராத்தியில் தாம் பேசியதைக் காந்திஜியே பிறகு ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும் கொடுத்தார். அதுவே கீழே பிரசுரமாகிறது:]

நான், மனத்தில் உள்ளதை அப்படியே சொல்லிவிடுபவன். அரசாங்கம் செய்து வரும் மலை போன்ற பெரிய தவறுகளையெல்லாம், பொருத்தமான பாஷையில் எடுத்துக் காட்ட நான் தயங்கியதே இல்லை. மிக அற்பமானவை என்று நமக்குத் தோன்றினாலும், நாம் செய்துவிடும் மலைபோன்ற பெரிய தவறுகளை எடுத்துச் சொல்லிவிடவும் நான் தயங்கியது இல்லை. நாம் செய்து விடும் பெரிய தவறுகளையும், மிகச் சாதாரண சின்ன சங்கதி என்று எண்ணி விடுவதே பொதுவாக வழக்கமாக இருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். நாம் செய்துவிடும் தவறான காரியங்களை எப்படியோ நாம் உணர்ந்துகொண்டு விடும்போது, உடனே அவற்றை விசாலமான கடவுளின் தலை மீது போட்டு விடுகிறோம். அவர் பார்த்துக் கொள்ளுவார் என்று சொல்லிவிடுகிறோம். இனி ஆபத்து இல்லை என்று எண்ணிக் கொண்டு, ஒரு தவறிலிருந்து இன்னொரு தவறாகச் செய்து கொண்டே போகிறோம்.

'சட்ட மறுப்பை நாம் செய்ய வேண்டிய ஜில்லாவுக்கு இப்பொழுது வந்திருக்கிறோம். ஆகையால், இன்னும் அதிகத் தூய்மையையும் கடுமையான தியாகத்தையும் நாம் மேற்கொள்ள வேண்டும்' என்று இன்று காலை பிரார்த்தனையின் போது என் சகாக்களுக்குச் சொன்னேன். இந்த ஜில்லாவில் நமக்கு ஆதரவு

அதிக பலமாக்கப்பட்டிருக்கிறது; நெருங்கிப் பழகிய சக ஊழியர்களும் இங்கே அநேகர் இருக்கிறார்கள்; ஆகையால், நமக்கு இங்கே உபசாரங்கள் அதிகமாக இருந்துவிடக் கூடும் என்றும் அவர்களுக்கு எச்சரிக்கை செய்தேன். இந்த உபசாரங்களுக்கெல்லாம் பலியாகிவிட வேண்டாம் என்றும் எச்சரித்தேன். நாம் தேவர்கள் அல்ல. மனத் திடம் இல்லாதவர்கள்; எளிதில் மயங்கிவிடக் கூடியவர்கள். நம்மிடத்திலேயே அநேக குறைபாடுகள் இருக்கின்றன. கடவுள் பெரியவர்; இன்றுகூட நம்மிடமிருக்கும் தவறுகள் சில கண்டுபிடிக்கப் பட்டன. யாத்திரையில் வருபவர்களிடமிருக்கும் குறைபாடுகளைக் குறித்து நான் மனம் வருந்திக் கொண்டிருந்தபோது, தவறிவிட்ட ஒருவர் தாம் செய்துவிட்ட குற்றத்தை என்னிடம் ஒப்புக் கொண்டார். நான் சரியான சமயத்திலேயே எச்சரிக்கை செய்திருக்கிறேன் என்பதை அப்பொழுது கண்டுகொண்டேன். உள்ளூர் ஊழியர்கள், பாலைசூரத்திலிருந்து மோட்டார் லாரியில் கொண்டுவர ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நியாயமானவை என்று நான் சொல்ல முடியாத மற்றும் சில செலவுகளையும் அவர்கள் செய்திருக்கிறார்கள். ஆகையால், அவர்களைப் பலமாகக் கண்டித்துப்பேசினேன். ஆனால், அதனாலும் என் மன வேதனை தீரவில்லை. இதற்கு மாறாக நடந்திருக்கும் தவறுகளை எண்ண எண்ண என் மன வேதனை அதிகரித்தது.

## கண்டிக்க உரிமை

வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத்தில், அவர் வாங்கும் சம்பளம் நமது சராசரி வருமானத்தைவிட 5,000 மடங்கு அதிகமானதாக இருப்பதைக் குறித்து பலமாகக் கண்டித்தேன். நான் கண்டுகொண்டுவிட்ட நம் தவறுகளைப் பார்க்கும்போது, அப்படி வைஸ்ராயைக் கண்டிக்க எனக்கு என்ன உரிமை இருக்கிறது? அவர் வாங்கும் இந்தச் சம்பளம் நியாயம் என்று அவர் எப்படிச் சொல்ல முடியும்? நமது வருவாய்க்குக் கொஞ்சமேனும் பொருத்தமில்லாததான சம்பளத்தை அவர் வாங்கி வருவதை நாம் எவ்வாறு சகித்துக்கொண்டிருக்க முடியும்? ஆனால், இதற்காக சொந்த முறையில் அவரை நாம் குற்றஞ் சொல்ல முடியாது. இந்தச் சம்பளம் அவருக்கு அவசியமே இல்லை. கடவுள் அவரை பணக்காரராக்கியுள்ளார். தமது சம்பளம் முழுவதையுமே அவர் தருமத்திற்குச் செலவழித்து வரக்கூடும் என்றுகூட என் கடிதத்தில் சொல்லியிருந்தேன். என் கருத்து பெரும்பாலும் உண்மையாகவே இருக்கக்கூடும் என்பதைப் பிறகு தெரிந்துகொண்டேன். அப்படி இருந்தாலும், இவ்வளவு அதிகத் தொகையைச் சம்பளமாகக் கொடுப்பதை உண்மையில் நான் எதிர்த்தே ஆகவேண்டும். மாதத்திற்கு ரூ. 21,000-த்தை, மாதத்திற்கு ரூ. 2,100-ஐக்கூட நான் அங்கீகரிக்கமாட்டேன். ஆனால், எப்பொழுது நான் இத்தகைய எதிர்ப்பைச் செய்ய

முடியும்? மக்களிட மிருந்து ஏராளமான தொகையை நானே பெற்று வருவேனாயின், அப்பொழுது நான் வைஸ்ராயின் சம்பளத்தை எதிர்க்க முடியாது. என்னுடைய வாழ்க்கை, மக்களின் சராசரி வாழ்க்கைக்குக் கொஞ்சம் பொருத்தமானதாக இருந்தால் மாத்திரமே நான் எதிர்க்க முடியும். கடவுளின் பெயரால் நாம் யாத்திரை போய்க்கொண்டிருக்கிறோம். பட்டினி கிடப்பவர்கள், கட்டத் துணியில்லாதவர்கள், வேலையில்லாது திண்டாடுகிறவர்களின் சார்பாகக் காரியங்களைச் செய்து வருவதாகவும் சொல்லிக் கொள்ளுகிறோம். நமது மக்களின் சராசரி தின வருமானம் ஒன்றே முக்காலணா. இதில் ஐம்பது மடங்கு நம்மால் நாட்டிற்குச் செலவு ஏற்படுவதாக இருந்தாலும், வைஸ்ராயின் சம்பளத்தைப் பற்றிக் கண்டித்துப் பேச எனக்கு உரிமை இல்லை. செய்திருக்கும் செலவின் கணக்கை எனக்குக் கொடுக்கும்படி ஊழியர்களைக் கேட்டிருக்கிறேன். காரியங்கள் நடந்துகொண்டிருப்பதைப் பார்த்தால், ஒன்றே முக்காலணாவைப் போன்று சுமார் ஐம்பது மடங்கு நம்மில் ஒவ்வொருவருக்கும் செலவாகி வந்தால் அதைக் குறித்து நான் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. சாத்தியமான எல்லா வழிகளிலும் முயற்சி செய்து பொறுக்கியெடுத்த உயர்ந்த ஆரஞ்சுகளையும் திராட்சைப் பழங்களையும் அவர்கள் எனக்குக் கொண்டுவந்தால், எனக்கு வேண்டியது 12 ஆரஞ்சுகளாக இருக்கும்போது, 120 ஆரஞ்சுகளைக் கொண்டு வருவார்களாயின், எனக்கு ஒரு ராத்தல் பால் வேண்டியிருக்க மூன்று ராத்தல் பால் கொண்டு வருகிறார்கள் என்றால், இதன் பலன் வேறு எதுவாக இருக்க முடியும்? நீங்கள் எங்கள் முன்னால் வைக்கும் ருசியான பலகாரங்களையெல்லாம் உண்ணாவிட்டால் உங்களுக்கு மனவருத்தமாயிருக்குமோ என்ற சாக்குப்போக்கில் அவற்றையெல்லாம் நாங்கள் தின்றுகொண்டிருந்தால், இதன் பலன் வேறு எதுவாக இருக்கும்? நீங்கள் எங்களுக்குக் கொய்யாப் பழங்களையும், திராட்சைப் பழங்களையும் கொடுக்கிறீர்கள். ஒரு பணக்கார விவசாயியிடமிருந்து இனாமாக வந்தவை என்பதற்காக அவற்றைச் சாப்பிடுகிறோம். அதற்குப் பிறகு விலையுயர்ந்த பளபளப்பான காகிதத்தில், எனக்கு உதவி செய்யக்கூடிய ஒரு நண்பர் எனக்கு இனாமாக அளிக்கும் ஒரு பவுண்டன் பேனாவைக் கொண்டு, என் மனச்சாட்சி என்னைக் கொஞ்சம்கூட உறுத்தாமல் நான் வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதுவதையும் யூகித்துப் பாருங்கள்!! இது உங்களுக்கும் எனக்கும் தகுமா? அவ்வாறு எழுதப்பட்ட ஒரு கடிதத்தினால் கொஞ்சமாவது நன்மை இருக்குமா?

## மக்களின் தருமகர்த்தாக்கள்

அப்படிப்பட்ட வாழ்க்கை நடத்துவது, அகோபகத்தின் சிரஞ்சீவியான பாடலை நிரூபித்துக் காட்டுவதாகவே இருக்கும். "சுத்தம் செய்யாத பாதரசத்தைத் தின்பதைப் போன்றது

திருடிய உணவைச் சாப்பிடுவது'' என்று அவர் கூறியிருக்கிறார். ஓர் ஏழை நாட்டிற்குப் பொருத்தமானதற்கு அதிகமான வசதிகளைக்கொண்டு வாழ்க்கை நடத்துவது, திருடிய உணவைச் சாப்பிட்டு வாழ்வதே ஆகும். நமது சக்திக்கு அதிகமான வாழ்க்கையை நடத்துவதற்காகப் பேரம் பேசி இந்த யாத்திரையை நான் ஆரம்பிக்கவும் இல்லை. அழைப்பு வந்ததும் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் இப்போராட்டத்தில் ஈடுபட முன் வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். ஆடம்பரமான முறையில் அவர்களுக்குச் செலவு செய்வது என்பது முடியாத காரியம். எனக்கு இப்பொழுது வேலைகள் அதிகமாகிவிட்டன. இதனால் என்னுடனிருக்கும் எண்பது சகாக்களுடன் நெருங்கிப் பழகி அவர்கள் ஒவ்வொருவரையும் சரியாகத் தெரிந்துகொள்ளுவதற்குக்கூட எனக்கு நேரமில்லை. ஆகையால், பொது ஜனங்களிடம் பகிரங்கமாகச் சொல்லி என் மனத்திலிருக்கும் பாரத்தைத் தீர்த்துக்கொள்ளுவதைத் தவிர எனக்கு வேறு வழி இல்லை. நான் கூறியதில் கேந்திரமாகவுள்ள கருத்தை நீங்கள் புரிந்துகொண்டிருப்பீர்கள் என்றே எதிர்பார்க்கிறேன். அப்படி நீங்கள் புரிந்துகொள்ளவில்லையானால், இப்பொழுது செய்யும் முயற்சியின் மூலம் சுயராஜ்யத்தை அடைந்துவிடலாம் என்பதற்கு நம்பிக்கையே இல்லை. வாயில்லாப் பூச்சிகளாக இருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு உண்மையான தருமகர்த்தாக்களாக நாம் ஆக வேண்டும்.

நம்மிடமிருக்கும் குறைபாடுகளைப் பொது ஜனங்கள் கண்டு கொள்ளும்படி இப்பொழுது நான் அம்பலப்படுத்தி இருக்கிறேன். விவரங்களையெல்லாம் இன்னும் உங்களுக்கு நான் சொல்லிவிடவில்லை. ஆனால், வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதுவதற்கு எங்களுக்குள்ள தகுதியின்மையை நீங்கள் அறிந்துகொள்ளுவதற்குப் போதுமானதை உங்களுக்குக் கூறியிருக்கிறேன்.

எனக்கு இருக்கும் மனவேதனையை உள்ளூர் சக ஊழியர்கள் இப்பொழுது புரிந்துகொள்ளுவார்கள். நாங்கள் பலவீனமானவர்கள்; எப்பொழுதும் ஆசையில் மயங்கிவிடக்கூடியவர்கள்; என்றும் தவறு செய்துவிடக்கூடியவர்கள். எங்களுக்கு நீங்கள் ஏன் ஆசையுண்டாகும்படிச் செய்து, அதிக உபசாரங்களையும் செய்ய வேண்டும்? பிரகாசமாக வெளிச்சம் கொடுக்கும் இந்த விளக்குகளைக் கிராமங்களில் புகுத்திவிடாமலிருப்போமாக. ஒரு லட்சம் பேர், முப்பதுகோடி மக்களை வேட்டையாடிக்கொண்டிருப்பதே போதும். நாம் ஒருவரை ஒருவர் வேட்டையாடிக் கொண்டிருக்கக் கிளம்பிவிடுவோமாயின் அப்பொழுது எப்படி இருக்கும்? அப்படி நேர்ந்துவிட்டால், நம் சவங்களை நாய்கள் தின்றுகொண்டிருக்கும்.

## ஒவ்வொரு பைசாவுக்கும் கணக்கு

நான் மனத்தில் எண்ணும் ஆடம்பரத்திற்கு ஓர் உதாரணமே இந்த விளக்குகள். உங்கள் அசிரத்தையிலிருந்து உங்களைத் தட்டி எழுப்ப வேண்டும் என்பதே என் நோக்கம். செலவழிக்கும் ஒவ்வொரு தம்படிக்கும் தொண்டர்கள் கணக்கு எழுதி வைக்கட்டும். அரசாங்கத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்வதைவிட, நம்மையே எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்ய என்னால் அதிகமாக முடியும். அரசாங்கத்தை எதிர்த்துச் சட்ட மறுப்பை நான் மேற்கொள்ளுவதற்கு எனக்குப் பல ஆண்டுகள் வேண்டியிருந்தது. ஆனால், நம்மை எதிர்த்தே நான் சத்தியாக்கிரகத்தை நடத்துவதற்கு எனக்கு அதிக நாட்கள் வேண்டியது இல்லை. இந்தச் சத்தியாக்கிரகத்தை நடத்துவதைப் போன்ற ஆபத்தும் அதில் எதுவும் இல்லை.

ஆகையால், எங்களைப் போன்ற உங்கள் ஊழியர்களுக்கு நீங்கள் செய்யும் விருந்தோம்பல், அதிக தாராளமானதாக இருப்பதற்குப் பதிலாக லோபித்தனமுள்ளதாக இருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். தவிர்க்க முடியாதபடி சில சாமான்கள் இல்லாது போகுமாயின் அதற்காக நான் குறை கூறமாட்டேன். எனக்கு ஆட்டுப்பாலைக்கொண்டு வரவேண்டும் என்பதற்காக ஏழைப் பெண்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பால் இல்லாது கஷ்டப்படும்படி செய்துவிடக்கூடாது. அப்படி நீங்கள் செய்துவிடுவீர்களானால், அது எனக்கு விஷம் போன்றதாகும். பாலையும் கறிகாயையும் சூரத்திலிருந்து கொண்டுவர வேண்டியதும் இல்லை. அவசியமானால் அவை இல்லாமலே நாங்கள் இருந்துவிட முடியும். சின்ன காரியங்களுக்கெல்லாம் நீங்கள் மோட்டார்கார்களை உபயோகிக்க முற்பட்டுவிடக் கூடாது. நடக்க முடியும்போது சவாரி செய்யாதே என்பதுதான் விதி. பணத்தைக்கொண்டு நடத்தும் ஒரு போராட்டம் அன்று இது. ஒரு பொதுஜனப் போராட்டத்தைப் பணத்தைக் கொண்டு நீடித்து நடத்துவது முடியாத காரியம். எப்படியானாலும், பணத்தை ஆடம்பரமாகச் செலவழித்துக் காட்டி போராட்டத்தை நடத்துவது என்பது என்னால் ஆகாதது.

## தலை குனிய வேண்டிய காட்சி

யாரையும் தாழ்ந்தவர்கள் என்று நாம் கருதக்கூடாது. இரவு யாத்திரையின் போது, ஒரு கனமான கிட்ஸன் விளக்கை ஒரு ஸ்டூலின் மீது வைத்து அதை ஓர் ஏழைத் தொழிலாளி தலையின் மீது சுமந்துகொண்டு வரும்படிச் செய்திருக்கிறீர்கள். இது வெட்கித் தலை குனிய வேண்டிய காட்சி. அந்த ஆளை வேகமாக நடக்கும்படியும் விரட்டிக்கொண்டிருந்தீர்கள். அந்தக் காட்சியை என்னால் சகிக்க முடியவில்லை. எனவே, என் நடை

யின் வேகத்தை அதிகரித்துக்கொண்டு, கூட வந்தவர்களுக்கெல்லாம் முன்னால் போனேன். ஆனால், அதனாலும் பயனில்லை. அந்த ஆள் என் பின்னால் ஓடி வரும்படிச் செய்தீர்கள். மானக்கேடும் பூரணமாயிற்று. ஏதாவது சுமையைத் தூக்கிச் செல்ல வேண்டியிருந்தால், நம்மில் ஒருவர் அதைத் தூக்கிச் செல்லுவதையே நான் விரும்புவேன். தொழிலாளி யாரும் அந்தச் சுமையைத் தலையில் தூக்கிக்கொண்டு வரக்கூடாது. கட்டாயப்படுத்தி வேலை வாங்குவதை நாம் நியாயமாகவே ஆட்சேபிக்கிறோம். ஆனால், கட்டாயப்படுத்தி வேலை வாங்குவதைத் தவிர இது வேறு என்ன? தாழ்ந்த வகுப்பு என்று சொல்லப்படும் வகுப்பைச் சேர்ந்த ஒருவரே, இந்தியாவின் விதியை நிர்ணயிப்பதில் தலைமை தாங்க வேண்டும் என்று சுயராஜ்யத்தில் நாம் எதிர்பார்ப்போம் என்பது உங்களுக்கு நினைவிருக்கட்டும். அப்படியிருக்கும்போது, நமது போக்கை நாம் சீக்கிரமாக மாற்றிக்கொள்ளாது போனால்,நீங்களும் நானும் மக்கள் முன்பு கூறி வரும் அப்படிப்பட்ட சுயராஜ்யமே வராது.

என் மனத்திலிருக்கும் வேதனையை உங்களிடம் சொல்லுவதால், இப்போராட்டத்தை நடத்தித் தீருவது என்ற என் உறுதியில் நான் பலவீனமடைந்துவிட்டேன் என்று நீங்கள் எண்ணிவிடக் கூடாது. சக ஊழியர்களும் மற்றவர்களும் எப்படி நடந்துகொண்டாலும், அதையெல்லாம் பொருட்படுத்தாமல் போராட்டம் தொடர்ந்து நடத்து வரும். நான் ஒண்டியாகவே இருந்தாலும், அல்லது ஆயிரக்கணக்கானவர்கள் என்னுடன் சேர்ந்திருந்தாலும், என்னைப் பொறுத்த வரையில் திரும்பிப் போய்விடுவது என்பது மாத்திரம் இல்லை. அவமானகரமான நிலையில் நான் செத்து என் எலும்புகளை நாய்கள் தின்னட்டும் என்று இருப்பேனேயன்றி, மனமுடைந்தவனாக ஆசிரமத்திற்குத் திரும்ப மாத்திரம் மாட்டேன்.

பிறகு பெண்களைப் பார்த்துச் சில வார்த்தைகள் கூறி, கடைசி வாக்கியத்தை முடித்தபோது அநேகமாக நான் சோர்ந்தே விழுந்து விட்டேன்.

உங்கள் அன்பின் மிகுதியால் நீங்கள் கொடுத்த பணத்தை நான் சரியானபடி உபயோகிக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆரம்பத்தில் பாடப்பட்ட கீதத்தில் கூறப்பட்ட படுமோசமானவர்களில் நானும் ஒருவன் என்று சொல்ல உங்களுக்கு உரிமை உண்டு. என்னை நிராகரித்துவிடுங்கள்.

—'எங் இந்தியா' - 3—4—1930

# 17

# தண்டி போகும் வழியில் குறிப்புகள்

தினந்தோறும் ஏராளமான தகவல்கள் கிடைத்துக்கொண்டிருக்கின்றன. உப்பு வரிச் சட்டம் எவ்வளவு கேவலமாகக் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று அவைகளிலிருந்து தெரிகிறது. சில சமயங்களில் உப்பு வரி, உப்பின் மதிப்பைவிட பதினுன்கு மடங்குக்கும் அதிகமானதாக இருக்கிறது. அப்படிப்பட்ட வரியைச் செலுத்தாத உப்பை யாரும் உபயோகிக்க முடியாதபடிச் செய்வதற்காக, லாபகரமாகத் தான் விற்க முடியாத உப்பை அரசாங்கம் நாசம் செய்துவிடுகிறது. இவ்விதம் தேச மக்களுக்கு ஜீவாதாரமான முக்கியப் பொருளுக்கு அரசாங்கம் வரி விதிக்கிறது; பொது மக்கள் அதை தயாரித்துக் கொண்டுவிட முடியாதபடி தடுக்கிறது; இயற்கை சிரமமின்றி உற்பத்தி செய்வதை அரசாங்கம் நாசப்படுத்துகிறது. தானும் வாழவைப்பதில்லே, பிறர் தாமாக வாழவும் விடுவதில்லே என்ற இந்தக் கேவலமான கொள்கையை எவ்வளவு கடுமையான அடைமொழி கொண்டு சொன்னுலும் போதாது. தேசத்தின் சொத்தை நாட்டின் பல பகுதிகளில் வேண்டுமென்றே நாசப்படுத்தி வரும் கதையைப் பல வட்டாரங்களிலிருந்து நான் கேள்விப்படுகிறேன். டன் கணக்கில் இல்லாவிடினும் மணங்குக் கணக்கில் கொங்கணக் கடலோரங்களில் உப்பு நாசமாக்கப்படுகிறது. இதே கதைதான் தண்டி விஷயத்திலும் கூறப்படுகிறது. ஏதாவது ஒரு பகுதியில் இயற்கையாகவே உப்பு இருந்து, அப்பகுதிக்குச் சுற்றுப்புறங்களில் இருக்கும் மக்கள் தங்கள் சொந்த உபயோகத்திற்காக அந்த உப்பை எடுத்துக்கொண்டு விடக்கூடும் என்றிருக்கும் போது, அந்த உப்பை நாசம் செய்துவிடும் வேலே செய்வதற்கென்றே அங்கே உப்பு அதிகாரிகளே அரசாங்கம் வைத்துவிடுகிறது. இவ்வாறு அதிக மதிப்புள்ளதான தேசீய சொத்து தேசத்தின் செலவிலேயே அழிக்கப்படுவதோடு, மக்களின் வாயிலிருந்து உப்பும் பறிக்கப்பட்டு, வருகிறது.

அதோடு தீர்ந்துவிடவில்லே. ஓல்பாட் தாலுக்காவில் பிரவேசித்ததும் ஒன்றை அறிந்தேன். இயற்கையே தயாரித்துக் கொடுக்கும் உப்பை எடுத்துக்கொள்ள முடியாதபடி மக்கள் தடுக்கப்படுகின்றனர்; உப்பை மக்களே தயாரித்துக்கொள்ளுவதையும் தடுக்கிருர்கள். இதனல், ராட்டையில் நூற்பதோடு அவர்களுக்குப் பிழைப்புக்கு உபரியான தொழிலாயிருந்த உப்பு தயாரித்துக்கொள்ளும் தொழிலேயும் மக்களிடமிருந்து பறித்துவிட்டார்கள்.

இவ்விதம் உப்பிலிருக்கும் ஏகபோக உரிமை, நான்கு வகையில் பெரும் சாபக் கேடானதாகிறது. சிறந்த, எளிதான கிராமத் தொழிலை மக்களிடமிருந்து பறித்துவிடுகிறது. இயற்கை ஏராளமாக உற்பத்தி செய்து கொடுக்கும் சொத்தை வேண்டுமென்று நாசமாக்கி விடும்படியும் இது செய்கிறது. இவ்விதம் நாசப் படுத்துவதற்கே தேசத்திற்கு அதிகச் செலவாகிறது. நான்காவதுதான் இத்தவறுக்குச் சிகரம் போன்றது. பட்டினி கிடக்கும் மக்களிடமிருந்து 1000 சத விகிதம், எங்குமே யாரும் கேட்டறியாத வகையில் உப்பு வரி வசூலிக்கப்படுகிறது.

அந்நியத் துணியைக் கொளுத்திவிட வேண்டும் என்று நான் முதன் முதலில் சொன்னபோது எழுப்பப்பட்ட பெரும் கூக்குரலை, இச்சந்தர்ப்பத்தில் நான் நினைவுபடுத்தாமல் இருப்பதற்கில்லை. காருண்யமற்ற, பாழாக்கும் யோசனை அது என்று கருதப்பட்டது. அந்நியத் துணி மக்களுக்குத் தீமையானது என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால், உப்போ மக்களுக்கு ஜீவாதார அவசியமான பொருள். என்றாலும், கேவலமான வரியின் நன்மைக்காக உப்பு நாசமாக்கப்பட்டது, தினமும் நாசமாக்கப்பட்டு வருகிறது.

பொது மக்கள், கஷ்டத்தை உணரும் உணர்ச்சியே இல்லாமல் இருந்து விட்டதனாலேயே இந்த வரி இதுவரையில் இருந்து வருகிறது. இப்பொழுது பொது ஜனங்கள் உணர்ச்சி பெற்று விட்டதால், இந்த வரி ஒழிந்தாக வேண்டும். இந்த வரி சீக்கிரத்தில் நீக்கப்படும் என்பது, மக்களால் காட்ட முடியும் பலத்தைப் பொறுத்திருக்கிறது. சந்தோஷவசமாக இந்தப் பரீட்சை அதிகக் காலம் தாமதிக்கப்படுவதாக இராது.

## மிகைபடுத்தும் கூற்றுக்கள்

என்னுடன் யாத்திரையிலிருக்கும் சகாக்களில் 18 பேர், நோயுற்று சக்தியற்றவர்களாகிவிட்டார்கள் என்று பத்திரிகைகளில் செய்திகள் வெளியாகியிருக்கின்றன. இது முற்றிலும் மிகைபடுத்திக் கூறப்பட்டிருப்பதாகும். அந்தத் தொகையினர் பிரோச் சேவாசிரமத்தில் இரண்டு நாள் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது என்பது உண்மை. ஆனால், அவர்கள் களைப்படைந்திருந்ததாலும், கால்களில் ஏற்பட்ட பித்த வெடிப்புப் புண்ணினாலுமே அவ்விதம் நேர்ந்தது. ஒருவருக்கு அம்மை கண்டது. அதுவும் கடுமையானதாக இல்லை. இதைத் தவிர குறிப்பிடத்தக்க வகையில் வேறு யாருக்கும் எந்த நோயும் இல்லை. சகாக்களில் ஒருவருக்கு ஜுரம் கடுமையாக இருந்தது என்பது உண்மை. ஆனால், அதுவும் நடந்து போவதில் மிதமிஞ்சிய உற்சாகத்தைக் காட்டியதனால்தான் அந்த ஜுரமும் என்பது தெரிந்துவிட்டது. அவர் உடம்பு திடமானது. ஓய்வு

எடுத்துக்கொள்ளாமலேயே தாம் யாத்திரை செய்துவிட முடியும் என்று அவர் அளவுக்கு மிஞ்சி நம்பிக்கை கொண்டுவிட்டார். ஆகையால், அவர் ஓய்வு எடுத்துக்கொண்டுவிடும்படி இயற்கை முற்றிலும் கட்டாயப்படுத்திவிட்ட வரையில் அவர் ஓய்வு எடுத்துக்கொள்ளவே இல்லை. ஆனால், அவர்கள் இருவரும் பலவீனமாக இருந்தபோதிலும் நன்றாக இருக்கிறார்கள். இன்னும் சில நாட்கள் ஓய்வு எடுத்துக்கொள்ளும்படி செய்யப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் சூரத்தில் எங்களுடன் வந்து கலந்து கொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. மூன்றும் ஒருவருக்குக் காலில் இன்னும் புண் இருந்தும் நடந்துதான் வருவேன் என்று பிடிவாதஞ் செய்தார். ஆனால், அவர் அங்கலேஸ்வரில் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. மற்றவர்களெல்லோரும் நன்றாக இருப்பதோடு தினமும் நடந்து எங்களுடன் வந்து கொண்டிருக்கிறார்கள். போஷகர்களுக்கும் நண்பர்களுக்கும் கவலை ஏற்பட்டுவிடாமல் தடுப்பதற்காக இந்த அறிக்கையை வெளியிட வேண்டியது அவசியமாயிற்று. சத்தியாக்கிரகிகள் விஷயத்தில் கிராமவாசிகள் காட்டி வரும் மிகுந்த கவனத்தையும், ஆனந்திலுள்ள சாரோடார் கல்விச் சங்கம் செலுத்திய இணையில்லா கவனத்தையும், காலில் புண் இருந்தவர்களுக்குச் சேவாசிரமத்தில் டாக்டர் சாந்துலாலின் சிப்பந்திகள் அளித்த சிகிச்சையையும் இச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடாமற் போவது நன்றி கெட்டதாகும்.

இந்த விபத்துக்களிலிருந்து ஒரு படிப்பினையையும் நாம் அறிந்து கொள்ள வில்லை. இக்காலச் சந்ததியார், திடமான உடற்கட்டு இல்லாமலும், பலவீனமாகவும், அதிகச் செல்லமாக வளர்க்கப்பட்டவர்களாகவும் இருக்கின்றனர். தேசீய வேலைகளில் அவர்கள் ஈடுபட வேண்டுமானால், அவர்கள் நன்றாகத் தேகப்பயிற்சி செய்து திடமான உடலுடன் இருக்க வேண்டும். நீண்ட, தீவிரமான நடை யாத்திரையைப் போன்றே தேகப் பயிற்சியும் நல்லது; பலனுள்ளது. தண்டால் போடுவது போன்ற உடற் பயிற்சிகளும் நல்லதே; நடையுடன் இவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். உடற் பயிற்சிகளில் தலையாயது கால் நடை என்று கூறலாம் என்றாலும், மற்ற உடற்பயிற்சியிருந்தால் நடை வேண்டியதில்லை என்றாகிவிடாது. உண்மையில் எங்கள் கால் நடை யாத்திரை குழந்தை விளையாட்டைப் போன்றது. ஒரு நாளைக்கு இரண்டு கட்டமாக பன்னிரண்டு மைல்களுக்குக் குறைவாகவே எந்தச் சுமையுமின்றி நடப்பதால் களைப்பு ஏற்படுவதற்கில்லை. காலில் புண் வராமலிருந்தவர்களின் நிறை அதிகமாகி யிருக்கிறது. சூடாக வெல்லப் பாகைச் சாப்பிடுவது, குளிப்பது, ஈரத் துணியைச் சுற்றி வைப்பது போன்றவை அம்மை நோய்க்கு மிகச் சிறந்த சிகிச்சைகளாகும்.

## உண்மையான உணர்ச்சி

யாத்திரையில் மத்தியில் தங்கும் இடமான சாந்தியாருக்கு ஸ்ரீமதி கோர்ஷேத்பாய் நௌரோஜி அன்று வந்திருந்தார். அவருடன் அம்பாலால் சாராபாயின் குமாரி மிருதுளா பென், யமுனலால்ஜியின் சின்ன மகள் மதாலஸா, ஸ்ரீமதி வசுமதி பென், ஆசிரமத்தைச் சேர்ந்த ராதா பென் ஆகியவர்களும் வந்திருந்தார்கள். சாந்தியாருக்கு வருவதற்கு வண்டிக்காக அவர்கள் காத்துக்கொண்டிருக்க வேண்டியிருந்தது. அந்த நேரத்தில் ஏதாவது தேசீய சேவை செய்து கொண்டிருக்க அவர்கள் விரும்பினர்கள். அவர்களிருந்த இடத்தின் சுற்றுப்புறம் அவ்வளவாகச் சுத்தமாக இல்லாததை அவர்கள் கண்டனர். எனவே, அங்கிருந்த குப்பைக் கூளங்களைக் கூட்டிச் சுத்தம் செய்வது என்று முடிவு செய்து கொண்டனர். ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருந்த கிராமவாசிகளிடம் கேட்டு துடைப்பங்களை வாங்கிக் கொண்டார்கள். என்ன நடக்கிறது என்பதைக் கிராமவாசிகள் உணர்ந்து கொண்டதுமே, அவர்களும் இந்தத் தேசீயத் தோட்டிகளுடன் கலந்து கொண்டு சுத்தம் செய்ய ஆரம்பித்துவிட்டனர். இந்தத் தேசீயத் தோட்டிகளில் சிலர், பணக்காரக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். சாயான் என்ற அந்தக் கிராமம், இந்தச் சகோதரிகள் தங்கள் ஓய்வு நேரத்தைத் தோட்டி வேலையில் ஈடுபடுத்தியதால் இருந்த சுத்தத்தைப் போன்று என்றுமே அவ்வளவு சுத்தமாக இல்லாமலிருந்திருக்கக்கூடும். இந்த உண்மையான சேவையை, சகோதரிகளின் இந்த மௌனப் பேச்சை, நாட்டுக்குச் சேவை செய்து அது விடுதலையடையச் செய்ய வேண்டும் என்று ஆர்வங்கொண்டிருக்கும் ஏராளமான இளைஞர்களுக்குச் சிபாரிசு செய்கிறேன். பலவீனமாக இருக்கும் எல்லா இடங்களையும் ஒரே சமயத்தில் நாம் தாக்குவதன் மூலமே சுயராஜ்யம் வரமுடியும். இந்தச் சகோதரிகள் எல்லோரும் சட்ட மறுப்பாளராகப் பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள். புறப்படும்படி வரும் உத்தரவிற்காக ஆவலுடன், அவசரப்பட்டுக்கொண்டுங்கூட இவர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதன் மூலம் நடப்பதான இந்தச் சுயராஜ்யப் போராட்டத்தில், ஆண்களைப் பெண்கள் மிஞ்சி விடுவார்களானல் அதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

'எங் இந்தியா' - 3—4—1930

## 18

# ஏப்ரல் 6-ஆம் தேதி நினைவிருக்கட்டும்

இந்தக் கட்டுரை 3-ஆம் தேதி வியாழக்கிழமை வாசகர்கள் கையிலிருக்கும். முன்னடி ரத்துச் செய்யப்படாமலிருந்தால், 6-ஆம் தேதி உப்புச் சட்டங்களை எதிர்த்துப் பொதுஜன சட்ட மறுப்புச் செய்யத் தயாராயிருப்பவர்கள், இப்பொழுது ஆரம்பித்துவிட எதிர்பார்க்கப்படுகின்றனர் என்பதற்கு என்னிடமிருந்து வரும் உத்தரவாக இதைக் கொள்ளலாம்.

பல சமயங்களிலும் இப்பத்திரிகையில் சொல்லப்பட்டு வந்திருப்பதை இப்பொழுது திரட்டிச் சொல்லுகிறேன்.

அகிம்சை என்பதன் முழு அர்த்தத்தில் அதைப் பூரணமாக அனுசரித்து நடக்க வேண்டும் என்பதுதான் சட்ட மறுப்புக்கு ஒரே நிபந்தனை.

பொதுஜன சட்ட மறுப்பு என்றால், மக்களே நடவடிக்கையில் இறங்க வேண்டும். ஆரம்பக் கட்டங்களில் ஊழியர்கள் பொது ஜனங்களுக்கு வழிகாட்டிகளாக மாத்திரமே இருக்க வேண்டும். பிறகு பொது மக்கள் இயக்கத்தைத் தாங்களே ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும்.

காங்கிரஸ் தொண்டர்கள், ஏற்படும் நிலைமைகளைக் கவனித்துக் கொண்டிருப்பதோடு அவசியமான போது உதவியைச் செய்வார்கள்: அவர்கள் முன்னணியில் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவார்கள்.

வகுப்புச் சச்சரவுகள் எதிலும் தொண்டர்கள் எந்தக் கட்சியிலும் சேர்ந்துகொள்ள மாட்டார்கள்.

பலாத்காரக் கலவரங்கள் மூண்டு விடும் இடங்களில் அந்தப் பலாத்காரங்களை அடக்குவதற்குச் செய்யும் முயற்சியில் தொண்டர்கள் சாக வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவார்கள்.

கட்டுதிட்டங்களைக் கண்டிப்பாக அனுசரித்து நடப்பதும், பல பகுதிகளுக்குமிடையே பூரணமான ஒத்துழைப்பு இருப்பதும் வெற்றிக்கு இன்றியமையாதவை.

உண்மையான பொதுஜன விழிப்பு ஏற்பட்டுவிடுமாயின், சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபடாமல் இருப்பவர்கள், கதர் வேலை,

மதுபான, லாகிரி வஸ்துக்கள் மறியல், அந்நியத் துணி ஒழிப்பு, கிராம சுகாதாரம் போன்ற தேசீய சேவைகளில் ஈடுபடுவதோடு, மற்றவர்களையும் அவ்வேலையில் ஈடுபடும்படி தூண்ட வேண்டும். சட்ட மறுப்புச் செய்து சிறைப்பட்டுவிட்டவர்களின் குடும்பங் களுக்குப் பல வழிகளிலும் உதவியும் செய்ய வேண்டும்.

உப்புச் சட்டங்கள் சம்பந்தமான சட்ட மறுப்புக்கு உண் மையான பொதுஜன ஆதரவு இருக்குமானால், சரியான ஸ்தா பனங்களை அமைப்பதன் மூலம், கதரைக் கொண்டு அந்நியத் துணி பகிஷ்காரம் வெற்றி பெறச் செய்து பூரண மது விலக்கு ஏற்படும்படியும் செய்ய வேண்டும். இவற்றைச் செய்துவிட்டால் வருடத்திற்கு 91 கோடி ரூபாய் நாட்டுக்கு மிச்சமாவதுடன், வேலையில்லாது திண்டாடும் கோடிக்கணக்கானவர்களுக்கு உதவியாயிருக்கும்; வேலையும் கிடைக்கும். இவைகளையெல்லாம் நாம் அடைந்து விட்டோமாயின், நாம் சுதந்திரத்தையும் நெருங்கிவிடுவோம். இதில் எந்தக் காரியத்தைச் செய்வதும் நம் சக்திக்கு அப்பாற்பட்டது அன்று.

—'எங் இந்தியா' - 3—4—1930

# 19

# ஹிந்து - முஸ்லிம் பிரச்னை

*[1930 மார்ச் 26-ஆம் தேதி, ஹிந்து - முஸ்லிம் பிரச்னை யைக் குறித்து பிரோச்சில் காந்திஜி செய்த பிரசங்கத்தின் சாராம்சமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*

ஹிந்து-முஸ்லிம் பிரச்னையைக் குறித்து ஒரு முஸ்லிம் வாலி பர் எனக்குக் கேள்விகளை அனுப்பியிருக்கிறார். 'உங்கள் சொந்த முயற்சியினாலோ, அல்லது ஹிந்துக்களின் உதவியை மாத்திரம் கொண்டோ சுயராஜ்யத்தை அடைந்துவிட முடியும் என்று நீங் கள் எதிர்பார்க்கிறீர்களா?' என்பது அந்தக் கேள்விகளில் ஒன்று. என் சொந்த முயற்சியினாலோ, ஹிந்துக்கள் மாத்திரம் உதவி செய்வதனாலோ சுயராஜ்யத்தை அடைந்துவிட முடி யும் என்று நான் கனவு கண்டதே இல்லை. முஸ்லிம்கள், கிறிஸ் தவர்கள், சீக்கியர்கள், யூதர்கள் மற்ற எல்லா இந்தியரின் உத வியும் எனக்குத் தேவை என்றே கேட்கிறேன். ஆங்கிலேயரின் உதவியும்கூட எனக்கு வேண்டும். ஆனால், இன்னும் ஓர் உதவி மாத்திரம் எனக்கு இல்லாதிருக்குமானால், இந்த ஒன்றுபட்ட எல்லா உதவிகளும் பிரயோசனமில்லை என்பதை நான் அறி வேன். அதுதான் கடவுளிடமிருந்து கிடைக்க வேண்டிய உதவி. அவன் அருள் இல்லையானால் எல்லாம் வீணே. இந்தப் போராட்

டத்திற்கு அவன் உதவி மாத்திரம் இருக்குமானல், வேறு எந்த உதவியும் தேவை இல்லை.

ஆனல், கடவுள் கிருபை கிட்டுவதற்கும், இந்தப் போராட்டத்தில் அவன் வழி காட்டிச் செல்லுவதற்கும், எனக்கு உங்கள் ஆசீர்வாதமும், எல்லாச் சமூகங்களின் ஆசீர்வாதமும் வேண்டும். இந்த யாத்திரைக்கு, எல்லா வகுப்புகளையும் சேர்ந்த ஆயிரக் கணக்கான ஆண்களின், பெண்களின் ஆசி கிடைத்திருப்பது, இப்போராட்டத்திற்குக் கடவுளின் உதவி இருக்கிறது என்பதற்குக் கண்கூடாகத் தெரியும் அடையாளம் என்றே நான் கொள்ளுகிறேன்.

## இதுதான் சமயம்

கடவுளின் உதவியை, மக்கள் இடும் சாபத்திலிருந்து கண்டு கொள்ள வேண்டிய சமயங்களும் உண்டு என்பதையும் அறிவேன். ஆனல், அப்படிப்பட்ட ஒரு சமயமன்று இது. சென்ற பத்து ஆண்டுகளாக எதைச் செய்ய வேண்டும் என்று நாடு துடித்துக்கொண்டிருக்கிறதோ அதை நான் இன்று செய்கிறேன். சட்ட மறுப்பை தாமதித்துக்கொண்டு போவதற்காக நான் ஏளனம் செய்யப்படவில்லையா? "லட்சியத்தை அடைவதற்கு நாடு முன்னேறிக் கொண்டு இருப்பதை நிறுத்துகிறீர்கள். 'சட்ட மறுப்பு நடக்கட்டும். பாருங்கள். சுயராஜ்யம் இருக்கும்' என்று மாத்திரம் நீங்கள் சொல்லிவிட வேண்டும்" என்று நண்பர்கள் கோபமாகச் சொல்லவில்லையா? அவர்கள் கண்டித்ததில் கொஞ்சம் உண்மையும் இருக்கிறது. முழு சாத்விகச் சட்ட மறுப்பு என்ருல் சுயராஜ்யம்தான். ஆனல், நான் நிறுத்திக் கொண்டேன். என்னிடத்திலேயே எனக்கு நம்பிக்கை இல்லை. என் உள்ளுக்குள்ளிருந்து வரும் அமைதியான சிறு குரல் என்ன சொல்லுகிறது என்பதைக் கேட்பதற்காகக் காது கொடுத்து கஷ்டப்பட்டுக் கவனித்து வந்தேன். ஆனல், நேற்று வரையில் அது எந்தப் பதிலுமே சொல்லவில்லை. சட்ட மறுப்பை நடத்த வேண்டியதற்கு அடிவானத்தில் நான் எதையும் காணவில்லை என்று லாகூரில் ஒரு பத்திரிகையாளரிடம் சொன்னேன். ஆனல், திடீரென்று ஒரு ஜோதி தோன்றியதைப் போன்று ஆசிரமத்தில் ஒளியைக் கண்டேன். தன்னம்பிக்கை திரும்ப வந்துவிட்டது. இதிலிருக்கும் ஆபத்துக்களைக் குறித்து ஆங்கிலேயரும், குறை கூறும் இந்தியர் சிலரும் என்னை எச்சரிக்கை செய்தார்கள். ஆனல், என்னுள்ளிருக்கும் குரலின் ஓசை எனக்குத் தெளிவாகக் கேட்கிறது; என் முயற்சிகளையெல்லாம் நான் உபயோகித்தாக வேண்டும், அல்லது இனி எப்பொழுதும் பொது வாழ்க்கைக்குத் திரும்புவதில்லை என்று அடியோடு நான் விலகிக் கொண்டுவிட வேண்டும். இப்பொழுது சமயம் வந்துவிட்டது. அது இனி என்றும் வராது என்று உணருகிறேன்.

ஆகவே, போராட்டத்தில் இறங்கிவிட்டேன். வெள்ளைத் தாடியிலிருந்து (ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜியைச் சுட்டிக்காட்டி) சிறு பெண்கள் வரையில் எல்லாருடைய உதவியையும் முழந்தாளிட்டுக் கோருகிறேன். ஏனெனில், இந்தப் போராட்டத்தில் அவர்களும் உதவி செய்ய முடியும். கடவுள் அருளால், உதவி செய்ய அவர்களும் ஆர்வத்துடன் இருக்கிறார்கள். தங்களையும் சேர்த்துக்கொள்ளுமாறு வற்புறுத்தி அவர்களிடமிருந்து எனக்குக் கடிதங்கள் வந்துகொண்டிருக்கின்றன.

## சத்தியாக்கிரகியின் பலம்

முஸ்லிம் வாலிபரின் கேள்விக்குப் பதில் இவ்விதம் பூர்த்தியாகிறது. எல்லா நாடுகளிலிருந்தும், எல்லா இனத்தாரிடமிருந்தும் எனக்கு உதவி தேவை.

தனக்குச் சொந்தமானது என்று சொல்லிக்கொள்ளுவதற்குச் சத்தியாக்கிரகியிடம் எந்தச் சக்தியும் இல்லை. அவரிடம் இருப்பதாகத் தோன்றும் சக்திகளெல்லாம், கடவுளிடமிருந்து வரும் கடவுளின் சக்திகளே. ஆகையால், அவர் உலக அபிப்பிராயத்தைத் தன்னுடன் கொண்டு லட்சியத்தை நோக்கி முன்னேறிப் போகிறார். கடவுள் உதவி அவருக்கு இல்லையானால், அவர் நொண்டியாகி, குருடராகி, வழி தெரியாது தடவிக்கொண்டிருப்பார்.

தன்னைத்தானே தூய்மைப்படுத்திக்கொள்ளுவது, தன்னலத் தியாகம்செய்வது ஆகிய இரண்டையும் 1921-இலிருந்து திரும்பத்திரும்பச் சொல்லி வருகிறேன். இந்த இரண்டும் இல்லாத சத்தியாக்கிரகிக்குக் கடவுள் உதவமாட்டார். தியாகம் உலகத்தைக் கவர்ந்துவிடுகிறது. அப்பொழுது அந்தத் தியாகம் செய்யப்படுவதன் லட்சியம் சரியானதா என்பதை உலகம் ஆராய்ந்தறிவது இல்லை. கடவுள் அப்படியல்ல. எல்லாம் அறிந்தவர் அவர். லட்சியம் புனிதமானதாக இருக்க வேண்டும்; அதற்காகச் செய்யும் தியாகமும் போதுமானதாக இருக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்துகிறார்.

அந்தக் கேள்வியை, பலம் பொருந்திய ஒரு சமூகத்தின் பிரதிநிதியான ஒரு முஸ்லிம் கேட்டார். ஆனால், இதே கேள்வியை ஒரு சிறு பள்ளிப் பெண், லட்சம் பார்ஸிகளின் பிரதிநிதியாக என்னைக் கேட்டிருந்தாலும், அதே பதிலையே நான் சொல்லி, ‘பார்ஸிகளின் உதவியில்லாவிடில் சுயராஜ்யம் இல்லை’ என்றும் கூறியிருப்பேன். எல்லா சமூகத்தினரின் ஆசீர்வாதமும் இருக்கிறது என்பதற்கு, யாத்திரையின்போது ஏராளமான ருசுக்கள் இருக்கின்றன என்று என்னால் சொல்ல முடிவதற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். முஸ்லிம்கள், மற்றவர்க

ளுடன் சேர்ந்து எங்கள் வழி நெடுக இரு பக்கங்களிலும் இருந்தார்கள்; கூட்டங்களுக்கும் வந்தார்கள். அவர்கள் கண்களிலும் பேச்சிலும் அன்பு இருந்ததைக் கண்டேன். அவர்கள் எங்களுக்கு வேண்டிய உதவிகளேயும் செய்திருக்கிருர்கள்.

என்ருலும், அலி சகோதரர்கள் என்னுடன் இல்லே என்பதையும் அறிவேன். மௌலாஞ ஷவுகத் அலி என்னே இப்பொழுதெல்லாம் அவர் சட்டைப் பைக்குள் வைத்திருக்கவில்லே. நான் அவரை இழந்திருக்கவில்லே என்று நீங்கள் எண்ணிவிட வேண்டாம். என் உடன்பிறந்த சகோதரருக்கும் அவருக்கும் எனக்கு வித்தியாசம் இல்லே. ஆகையால், அவர் எதிர்ப்பு கொஞ்ச காலத்திற்கே இருக்கும். என்னுள் சத்தியம் இருக்குமாயின், சகோதரர்கள் பணிந்து வந்துதான் ஆக வேண்டும். போராட்டத்தில் சேர்ந்துகொள்ளாமல் அதிக காலம் அவர்கள் ஒதுங்கி இருக்க முடியாது. ஆங்கிலேயரின் உதவியும் வேண்டும் என்றும் ஆர்வங்கொள்ளுகிறேன். ஓர் ஆங்கில நண்பரின் மூலம் வைஸ்ராய்க்கு என் கடிதத்தைக் கொடுத்தனுப்பியது, ஒன்றுமில்லாத ஒரு முறைக்காகவோ அல்லது எனக்கு ஏற்பட்ட அகந்தையிஞலோ அன்று. அக்கடிதத்தைக் கொண்டுபோக ரெஜிஞல்டு ரெய்ஞல்ட்ஸை நான் தேர்ந்தெடுத்ததன் மூலம், எனக்கும் அவர்களுக்குமிடையே பந்தத்தைப் பிணேத்துக்கொண்டேன். ஏனெனில், எனக்கு இருக்கும் விரோதம், அவர்கள் ஆட்சியின் மீதேயன்றி அவர்கள் மீது அல்ல. அந்த ஆட்சிக்கு முடிவு காண்பதற்கென்று ஒரு கருவியாக நான் பிறந்திருப்பதாகவே தோன்றுகிறது. ஆஞல், ஓர் ஆங்கிலேயரின் தலேயின் ஒரு ரோமத்தை யாராவது தொட்டுவிட்டால், என் சகோதரருக்கு ஏற்பட்ட அத்தகைய கஷ்டத்திற்காக எப்படி வருந்துவேஞே அதே போன்றுதான் வருந்துவேன். நண்பன் என்ற முறையில் அவர்களுக்குச் சொல்லுகிறேன் : 'உங்கள் ஆட்சி இந்நாட்டை நாசமாக்கிக் கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் ஏன் உணர்ந்து கொள்ளக்கூடாது? எங்களே நீங்கள் தூளாக நொறுக்கிஞலும், அடியோடு மூழ்கடித்தாலும், அந்த ஆட்சி அழிக்கப்பட்டே ஆக வேண்டும். நாங்கள் உணருவதை நாங்கள் சொல்லியே ஆக வேண்டும்.'

## காங்கிரஸ் பிரதிக்ஞை

'சுயராஜ்யத்தில் சட்டசபைகளில் முஸ்லிம்களுக்கு எத்தனே ஸ்தானங்கள் இருக்கும்?' என்பது ஒரு கேள்வி. இத்தகைய ஒரு கேள்விக்கு நான் என்ன பதில் சொல்லுவது? நான் இந்தியாவின் வைஸ்ராயாக இருந்தால், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், சீக்கியர்கள், பார்ஸிகள் முதலியவர்களிடம், 'நீங்கள் விரும்புவதை எடுத்துக்கொள்ளுங்கள். மீதம் ஹிந்துக்களுக்குப் போதும்' என்று சொல்லுவேன். சஞதனி ஹிந்து, நான் வைஸ்ராய் ஆவதற்கே விடமாட்டார் என்பது உண்மை. உண்மை என்னவெனில்,

அத்தகைய கணக்கையெல்லாம் போடுவதற்கு நான் தகுதி இல்லாதவன். ஆனால், சம்பந்தப்பட்ட கட்சிகள் திருப்தியடையாத எந்த வகுப்பு ஏற்பாட்டையும் தான் ஏற்றுக்கொள்ளுவதில்லை என்று காங்கிரஸ் பிரதிக்ஞை செய்துகொண்டிருக்கிறது என்பதை அறிந்தாலே போதும். அந்தப் பிரதிக்ஞையின்படி நடக்க நானும் கடமைப்பட்டிருக்கிறேன். காங்கிரஸுக்கு எல்லா வகுப்பினரும் ஒன்றுதான். அவர்கள் எல்லோரும் இந்தியர்; ஆகையால், அவர்கள் சுதந்திரம் உத்தரவாதமளிக்கப்பட்டிருக்கிறது. எந்தச் சமூகத்தினரும் இதற்கு அதிகமாக எதிர்பார்ப்பதற்கு இல்லை.

தேச மக்கள், தங்களுக்கு வேண்டியதை வற்புறுத்துவதற்கு மாத்திரமே சாத்விகச் சட்ட மறுப்பு அவர்களுக்குச் சக்தியை அளிக்கும். ஆனால், அதை உறுதிப்படுத்துவதற்கான சமயம் வரும்போது, அந்த உறுதியைக் கொண்டதான சாசனத்தில் எல்லா சமூகத்தினரின் முத்திரையும் இருந்தாக வேண்டும். எனவே எல்லா வகுப்புக்களின் ஒத்துழைப்பும் இல்லாது போனால், சுயராஜ்யம் இல்லை.

ஆனால், இதற்கு மத்தியில் நாம் செய்ய வேண்டியது என்ன? நாம் தின்னும் உப்புக்காவது நாம் துரோகம் செய்யாமலிருக்க வேண்டும். பட்டினி கிடக்கும் இந்நாட்டின் கோடிக்கணக்கான மக்களே இந்திய பூமியின் உப்பு. அவர்களுக்கு நாம் துரோகம் செய்யாமலிருக்க வேண்டுமானால், பணக்காரர்களைப் போன்றே அதே அளவில் தாங்களும் கொடுத்தாக வேண்டியிருக்கும் வரியிலிருந்து உப்பை நாம் விடுவித்துவிட வேண்டும். நமது அறியாமையினால், இந்தக் காருண்யமில்லாத கொடிய வரியை நாம் கொடுத்துக்கொண்டு வந்திருக்கிறோம். நமது தவறை உணர்ந்து கொண்டு விட்டோம். என்றாலும், இதில் பணம் பறிக்கப்படுவதற்கு நாம் இனியும் பணிந்து வருவோமாயின், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு நாம் துரோகிகளாவோம்.

ஏழையின் இப்போராட்டத்தில் விருப்புக்கொள்ளாமல் யார் இருக்க முடியும்? இக்கொடிய வரி, ஆட்களை மதிப்பது அல்ல. ஆகையால், அது ஒழியும்படிச் செய்வது ஹிந்துக்களின் நன்மைக்கு அவசியமாவதைப் போன்றே முஸ்லிம்களின் நன்மைக்கும் அவசியம். ஆண்டவனின் பெயரால், இந்நாட்டிலிருக்கும் கோடிக்கணக்கான பரம ஏழைகளுக்காக மேற்கொள்ளப்பட்டிருப்பதே இப் போராட்டம்.

—'எங் இந்தியா' - 3—4—1930

# 20

# உப்புச் சட்டத்தை மீறிவிட்டார்

*[காந்திஜி நவசாரியை அடைந்ததும் அங்கே பொதுக் கூட்டத்தில் பேசுகையில், "நான் விரும்பியதுடன் நான் திரும்பிப் போக வேண்டும். இல்லையானால், என் சவம் கடலில் மிதக்கும்" என்றார். 1930 ஏப்ரல் 5-ஆம் தேதி காந்திஜி நமது சகாக்களுடன் தண்டியை அடைந்தார். 241 மைல் தூரத்தை இருபத்தி நான்கு நாட்களில் நடந்து வந்து சேர்ந்துவிட்டார். ஏப்ரல் 6–ஆம் தேதி காலையில் பிரார்த்தனை மிகுந்த பக்தியுடன் நடந்தது. பிறகு தமது சகாக்களுடன் கடலில் நீராடச் சென்றார். காலை 8-30 மணிக்குக் காந்திஜி கடற்கரையில் குளித்து இயற்கை உப்பை அள்ளினார். அப்பொழுது அங்கே போலீஸ்காரர்கள் யாரும் இல்லை. உடனே காந்திஜி வெளியிட்ட அறிக்கையே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]*

இப்பொழுது உப்புச் சட்டம், சட்ட ரீதியிலும், சடங்கு ரீதியிலும் மீறப்பட்டு விட்டது. ஆகையால், இனி உப்புச் சட்டத்தின்படி கைது செய்யப்படும் அபாயத்திற்கு உட்படத் தயாராயிருக்கும் ஒவ்வொருவரும், தாங்கள் விரும்பும் இடங்களில், தங்களுக்குச் சௌகரியமான இடங்களில் உப்புச் சட்டத்தை மீறலாம். சுத்தமான உப்பைத் தயாரிப்பது எப்படி என்பது தெரிந்த இடங்களிலெல்லாம், ஊழியர்கள் உப்பைத் தாங்களே தயாரித்து உபயோகித்துக் கொள்ளலாம். இவ்வாறு செய்யும்படி கிராமவாசிகளுக்கும் சொல்லிக் கொடுக்க வேண்டும். அதே சமயத்தில், இதைச் செய்வதால் கைதாகிவிடும் அபாயமும் இருப்பதையும் அவர்களுக்கு எடுத்துக் கூற வேண்டும். அதாவது, உப்புச் சட்டத்தின் அக்கிரமத்தையும், இந்த வரி ரத்தாகும்படிச் செய்வதற்காக உப்பு சம்பந்தமான வரிகளையும், விதிகளையும், எப்படி அவற்றை மீறிவிடவேண்டும் என்பதையும் கிராமவாசிகள் நன்கு அறியும்படி விளக்கிச் சொல்ல வேண்டும்.

இப்படி இச்சட்டத்தை மீறுவதைப் பகிரங்கமாகச் செய்ய வேண்டுமேயன்றித் திருட்டுத்தனமாகச் செய்யக்கூடாது என்பதையும் அவர்களுக்குத் தெளிவாக்க வேண்டும். இந்த நிபந்தனையைத் தெரிந்துகொண்டுவிட்டால், அவர்கள் உப்பு தயாரிக்கலாம். கடற்கரைக்கு அருகாமையில் குழிகளில் இயற்கையாக இருக்கும் உப்பை அவர்கள் எடுத்துப்போய், தங்களுக்கும் தங்கள் கால்நடைகளுக்கும் உபயோகித்துக்கொள்ளலாம்.

வாங்கிக்கொள்ளுவோருக்கும் அவர்கள் விற்கலாம். ஆனால், அவ்விதம் செய்வதனால் அவர்கள் உப்புச் சட்டத்தை மீறியவர்களாகிறார்கள். கைது செய்யப்படும் அபாயமிருக்கிறது; அப்படி கைது செய்யாது போனாலும், உப்பு அதிகாரிகள் எனைப்படுவோர் இழைக்கும் துன்பங்களுக்கு ஆளாக நேரும் என்பதைக் கிராமவாசிகள் நன்றாக அறிந்திருக்க வேண்டும்.

உப்பு வரிக்கு எதிரான இப்போர், தேசிய வாரத்தில், 13-ஆம் தேதி வரையில் தொடர்ந்து நடக்க வேண்டும். இந்த வேலையில் ஈடுபடாமலிருப்பவர்கள், அந்நியத் துணிகளைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்றும், கதர் உடுத்த வேண்டும் என்றும் தீவிரமாகப் பிரசாரம் செய்ய வேண்டும். எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு அதிகமாகக் கதரை உற்பத்தி செய்வதோடு, இதற்காக அவர்கள் பாடுபட வேண்டும். இதற்கும், மதுவிலக்கிற்காகவும் நான் பெண்களுக்கு ஓர் அறிக்கையைத் தயாரித்துக் கொண்டிருக்கிறேன். சுயராஜ்யத்தை அடைவதற்கு ஆண்களை விட பெண்கள் அதிக உதவியைச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை வரவர எனக்கு அதிகமாகிக்கொண்டிருக்கிறது. அவர்களே அகிம்சையைச் சரியானபடி எடுத்துக்காட்டுபவர்களாகவும் இருப்பார்கள் என்றும் உணருகிறேன். அவர்கள் பலவீனமானவர்கள் என்று ஆண்கள் அகம்பாவத்துடன் எண்ணுவதுபோல அவர்கள் பலவீனமானவர்கள் என்பதனால் அல்ல. சரியான ரகத்தைச் சேர்ந்த தைரியம் பெண்களுக்கு அதிகமாக இருப்பதோடு, தன்னலத் தியாக உணர்ச்சி அவர்களுக்கு அதிகமாக இருப்பதனாலேயே ஆண்களைவிட இதில் அவர்கள் மேல் என்கிறேன்.

## 21

# காட்டுமிராண்டித்தனமானது

[1930 ஏப்ரல் 6-ஆம் தேதி காந்திஜி தண்டியின் உப்புச் சட்டத்தை மீறியதும் நாடெங்கும் மக்கள் அச்சட்டத்தை மீற ஆரம்பித்துவிட்டார்கள். தண்டி கிராமத்தில் சட்ட விரோதமாக மக்கள் எடுத்த உப்பை அதிகாரிகள் பறித்தனர். ஆனால், பிறகு அங்கே ஏராளமான உப்பு விற்கப்பட்டது; இனமாகவும் விநியோகித்தனர். தண்டிக்குப் பக்கத்து ஊர்களிலும் சட்டத்தை மீறி மக்கள் எடுத்த உப்பை அதிகாரிகள் பலவந்தமாகப் பறித்தனர். ஆட் என்ற கிராமத்தில் தகராறு ஏற்பட்டு போலீஸார் பலரைக் கைதும் செய்தனர் என்பதை அறிந்து காந்திஜி ஏப்ரல்

7-ஆம் தேதி அங்கே சென்ருர். உடனே ஏராளமான ஜனங்கள் அங்கே திரண்டுவிட்டனர். ஆண்களும் பெண்களும் இறங்கி உப்பை வெட்டி எடுக்க முற்பட்டனர். எளிய பெண்கள், தங்கள் உப்பை எடுத்து மடியில் கட்டிக் கொண்டு போவதைக் கண்டு காந்திஜி அதிகத் திருப்தியடைந்தார். 7-ஆம் தேதி குஜராத் முழுவதிலும், பம்பாய் நகரிலும் உப்புச் சட்டத்தை மீறி உப்பு தயாரித்தனர். கைதியானவர்கள் தொகை அதிகரித்தது. "அரசாங்கம் தீவிரமாகக் கைது செய்ய ஆரம்பித்துவிட்டதைக் குறித்து அதைப் பாராட்டுகிறேன்" என்ருர் காந்திஜி.

அரசாங்கத்தின் அடக்குமுறை தீவிரமானதோடு மிருகத்தனமாகவும் இருந்தது. கோஷாப் பெண்கள் சென்ற பல்லக்குகளேக்கூட, சட்ட விரோதமாகத் தயாரித்த உப்பு போவதைத் தடுப்பதற்கு என்று சொல்லி சோதனை செய்தனர். சட்ட மறுப்பு தீவிரமாக ஆரம்பமானதும், எங்கும் துப்பாக்கிப் பிரயோகங்களும் போலீஸ் தடியடிகளும் நடந்தன. இவற்றை அறிந்ததும் காந்திஜி எழுதிய கட்டுரையே கீழே பிரசுரமாகிறது :]

மிரட்டிக் கொண்டிருந்தது கடைசியாக நடந்தும் விட்டது. குஜராத்திலாவது, உப்புச் சட்டத்தை மீறியவர்களேக் தீவிரமாகக் கைது செய்ய ஆரம்பித்து விட்டதைக் குறித்து அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். ஸ்ரீ மணிலால் கோதாரியையும் அவருடைய சகாக்கள் எல்லோரையும் கைது செய்திருக்கிருர்கள். அதே போல ஸ்ரீ அமிர்தலால் சேத்தையும் அவருடைய சகாக்களேயும், புரோச் சேவா சிரமத்தைச் சேர்ந்த டாக்டர் சந்துலால் தேசாயையும் அவருடைய சகாக்களேயும் கைது செய்திருக்கின்றனர். தர்பார் கோபால தாஸ், ஸ்ரீ பூல்சந்த், வீரமுள்ள, ஆனல் அறியாமை மிகுந்த கெடா ரஜபுத்திரர்களே அநேக தீமைகளிலிருந்து காத்தவரான வீரம் மிக்க சீர்திருத்தக்காரரான ஸ்ரீ ரவி சங்கர் ஆகியவர்களேயும் கைது செய்திருக்கிருர்கள். ராமதாஸ் காந்தி, கேசவபாய் கணேஷ்ஜி, சிமன்லால் பிராண்சங்கர் முதலியவர்களேயும் கைது செய்திருக்கின்றனர். இதையெல்லாம் செய்ய அரசாங்கத்திற்கு உரிமை உண்டு. ஆனல், தண்டிக்கு நான்கு மைல் தூரத்தில் இருக்கும் ஆட் என்ற கிராமத்தில் இன்று அவர்கள் செய்திருப்பதைப் போன்று செய்வதற்கு அரசாங்கத்திற்கு உரிமை இல்லே. சட்ட மறுப்பாளரிடமிருந்து உப்பைப் பறித்துவிட போலீஸார் பலாத்காரத்தைக் கொண்டு முயற்சி செய்தார்கள். ஒரு நாகரிகமுள்ள அரசாங்கத்தின் பிரதிநிதிகளாக அவர்கள் இருந்தால், இதைச்செய்ய அவர்களுக்கு உரிமை இல்லே. போலீஸாருக்கு ஆத்திரத்தை மூட்டிவிடக் கூடிய காரியம் எதையும் மக்கள் செய்துவிடவில்லே;

சட்ட மறுப்பாளர்கள் ஓடிப்போய்விடவும் இல்லை. அவர்கள் பெயர்களைக் கேட்டு எழுதிக் கொண்டிருக்கலாம். ஆனால், இந்த வீர மக்களையும், அவர்கள் மூலம் தேசத்தையும், காரணமில்லாமல், நியாயமான அவசியமுமில்லாமல் அவர்களுடைய புனித உடலின் மீது போலீஸார் கை வைக்க அனுமதித்திருக்கிறார்கள். பர்டோலி உகாபாய் ராமா என்ற சட்ட மறுப்பாளர், கை மணிக்கட்டில் கொஞ்சம் காயம் அடைந்தார். மக்கள் உப்பை எடுத்த இடத்திற்குப் போலீஸார் ஆயுதங்களில்லாமலேயே சென்றார்கள் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். மக்கள் உண்மையில் முற்றிலும் அமைதியாகவே இருந்ததால், அங்கே ஆயுதங்களை எடுத்துக் கொண்டு போவதற்கு எந்தவிதமான அவசியமும் இல்லை என்பதைப் போலீஸாரே ஒப்புக்கொள்ளக்கூடும். அப்படியிருந்தும், மக்கள் எடுத்துச் சென்ற உப்பை அவர்களிடமிருந்து பறிப்பதற்காகப் போலீஸார் அவர்கள் மீது கை வைத்தது ஒழுக்கத் தவறாகும். பொதுவான ஆங்கிலச் சட்டத்தின்படியும் அது தவறானது என்றே கருதுகிறேன். ஆனால், இன்னது என்று இல்லாத கோழைத்தனத்தைக் குற்றமாக்கும் ஒரு சட்டத்தினால் என்ன அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்பது எனக்குத் தெரியாது.

இங்கே முதலில் ரத்தம் சிந்தியது சிறிதே ஆயினும், அநேகமாக அந்தக் கிராமம் முழுவதையுமே அந்த இடத்திற்குக் கொண்டு வந்துவிட்டது. அதுவரையில் பெண்கள் சட்ட மறுப்புச் செய்வதில் ஈடுபடவில்லை. அதற்குள் அக்கிராமத்தின் ஆண்கள் சட்ட மறுப்பில் ஈடுபட்டுவிட வேண்டும் என்று எதிர்பார்க்கப்படவும் இல்லை. ஆனால் அவர்கள், ஆண்களும் பெண்களும் (சிலர் கையில் குழந்தைகளுடன்), உப்பு பலவந்தமாக மக்களிடமிருந்து பறிக்கப்படுகிறது என்றும், தொண்டர்களில் ஒருவர் காயமடைந்தார் என்றும் அறிந்ததுமே, எல்லோரும் வந்துவிட்டார்கள். கால்வாயின் ஒரு பக்கத்தில் ஆண்களும், மற்றொரு பக்கத்தில் பெண்களும் இறங்கி உப்பை வெட்டி எடுக்க ஆரம்பித்துவிட்டார்கள். சட்ட மறுப்பாளரின் உடம்பிலிருந்து உப்பை பலவந்தமாகப் பறிக்க முயற்சி நடக்கிறது என்பதை நான் கேள்விப்பட்டதும், அன்று திங்கட்கிழமை என் மௌன விரத தினமாகையால், ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதிக் காட்டினேன். ஸ்ரீமதி சரோஜினி தேவியும் ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜியும் அங்கே போக வேண்டும். போலீஸார் செய்து வரும் காரியத்தை நிறுத்தவில்லையானால், இவர்களும் உப்பைத் தோண்டி எடுத்து வைத்துக் கொண்டு, தங்கள் கையிலிருந்து பறித்துவிடப் பார்க்கட்டும் என்று போலீஸாருக்குச் சவால் விடவேண்டும் என்று அந்தக் குறிப்பில் எழுதிக் காட்டினேன். ஆனால், இவர்கள் அந்த இடத்திற்குப் போய்ச் சேருவதற்கு முன்னாலேயே போலீஸார், தாங்கள் செய்து விட்ட தவறை உணர்ந்துகொண்டு விட்டார்கள் என்றும், பெண்களுள்பட அந்தக் கிராமத்தைச் சேர்ந்த

எல்லா மக்களையும் தொடும் தைரியம் அவர்களுக்கு வரவில்லை என்றும், தாராள மனப்பான்மையுடனேயே நான் யூகித்துக் கொள்ளுகிறேன். என்றாலும், நான் அன்று பேச முடியாவிட்டா லும், நானும் அங்கே வந்தாலன்றி சத்தியாக்கிரகிகள் திருப்தி யடையவில்லை. தாங்கள் எவ்விதம் நடந்து கொள்ளுகிறார்கள், கிராமம் முழுவதுமே எவ்வளவு உற்சாகத்துடன் இப்போராட் டத்தில் கலந்து கொள்ளுகிறது என்பதை என் கண்ணாலேயே நான் பார்க்க வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். போலீஸாரிடமிருந்து மீட்டுவிட்ட உப்புடன் உகாபாய் ராமா வையும் என்னிடம் அழைத்து வந்தார்கள். நான் அங்கே போனேன். ஆன்மாவைப் பரவசப்படுத்தும் காட்சியாக எனக்கு அது இருந்தது. போலீஸார் பலவந்தமாக உப்பைப் பறித்ததால் நன்மையும் ஏற்பட்டது. அந்தக் கிராமம் முழுவதி லுமே அது ஜீவனை உண்டாக்கிவிட்டது என்றாலும், அரசாங்கத் தின் நன்மையை முன்னிட்டும், இந்த உப்புப் போராட்டத்தை கண்ணியமான நிலையில் வைத்திருப்பதை உத்தேசித்தும், அந்த ஆபாசமான சம்பவம் நடந்திருக்கக் கூடாது என்றே நான் விரும் புகிறேன்.

சட்டப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவது அரசாங்கத் திற்கு ஒரு கஷ்டமான வேலையாக இருக்கலாம். ஆனால், அரசாங் கம் நன்றாகவே ஆரம்பித்துவிட்டதால், அதை அவர்கள் நிறுத்தி விடாமலிருக்கட்டும். அரசாங்கத்திற்கும் மக்களுக்குமிடையே ஒரு பலப் பரீட்சையாக மாத்திரம் இது இருக்கட்டும். அரசாங் கத்தினர் கொடுமையான அடக்குமுறைகளில் இறங்கி விடுவார் களானால், நான் எண்ணுவது தவறானது அல்ல என்றால், ஆண் கள் மாத்திரமேயன்றி பெண்களும், அரசாங்கம் அவர்களுக் காகத் தயாரிக்கும் எந்தக் கஷ்டங்களையும் தாங்கிக்கொள்ளத் தயாராயிருப்பதை அரசாங்கத்தினர் கண்டு கொள்ளு வார்கள். சத்தியாக்கிரகிகளின் கையிலிருக்கும் உப்பு, தேச மக்களின் கௌரவத்தைக் காட்டுவதாகும். கைகளைச் சுக்கலாக நொறுக்கிவிடும் பலாத்காரத்தினாலன்றி அந்த உப்பை விட்டுக் கொடுத்து விட முடியாது. போலீஸார் காரியத்தை விவரிக்கை யில் உகாபாய், ‘தன்னிடம் ஒப்படைத்திருப்பதைப் பாதுகாத் துக்கொள்ளுவதற்கு வேண்டிய பலத்தைச் சத்தியாக்கிரகிக் குக் கடவுள் அளிக்கிறார்’ என்றார். கைகளிலிருந்து உப்பைப் பறிக்கப் போலீஸார் தங்கள் கைகளை உடைத்துவிடும் வரை யில், அந்த உப்பை மக்கள் விடாமல் பாதுகாக்கட்டும். ஆனால், அவர்களிடம் துவேஷமோ, கோபமோ, கோபமான சொற் களோ இருக்கக் கூடாது. இவர்களிடம் இருக்கும் உப்பை எடுத்துக்கொண்டு விடுவதற்குப் போலீஸாருக்கு எளிதான வழி இருக்கிறது. சட்ட மறுப்புச் செய்கிறவர்களை அவர்கள் கைது செய்யட்டும். பிறகு சட்ட மறுப்பாளரின் உடலே போலீஸார் வசமாகிவிடுவதால், சத்தியாக்கிரகிகளிடமிருக்கும்

உப்பை அவர்கள் எடுத்துக் கொண்டு விடலாம். ஆனல், தண்டனை கொடுத்து விட்ட பிறகு, பறிமுதல் செய்து விட்டதாக அது இருக்க முடியுமேயன்றி அதற்கு முன்னல் அல்ல.

'யங் இந்தியா' -10—4—1930

# 22

# காருண்யமில்லாக் கொடிய வரி

உப்பு வரி விதிக்கப்பட்டிருப்பதைப் பற்றி ஏற்படும் ஒவ்வொரு புது அனுபவமும், ஆரம்பத்தில் தோன்றியதைவிட அது இன்னும் அதிகக் காருண்யமில்லாக் கொடிய வரி என்பதைக் காட்டுகிறது. நான் இப்பொழுது குஜராத்தில் உப்பு உற்பத்தியாகும் பகுதியில் இருந்துகொண்டு அங்குமிங்கும் போய்க் கொண்டிருக்கிறேன். ஆகவே, கிராமவாசிகள் உப்பு தயாரிக்கக்கூடாது என்று தடுக்கப்பட்டுவிட்டதால் கிராமங்கள் பாழாகி விட்டன என்பதைக் காண்கிறேன். அந்த நிலத்தை மக்கள் ஒரே ஒரு காரியத்திற்கே உபயோகித்துக் கொள்ள முடியும். இயற்கை மாதந்தோறும் அந்த நிலத்தில் உற்பத்தி செய்யும் ஏராளமான உப்பை எடுத்துக்கொள்ளுவதுதான் அந்த ஒரே உபயோகம். இப் பகுதியில் இதுதான் ஏழை மக்களின் நிரந்தரமான கைத்தொழில். இப்பொழுது அந்நிலமெல்லாம் தரிசாகக் கிடக்கிறது. தண்டியின் சரித்திரமே ஒரு துக்ககரமான கதை. அது, அழகான கடலோர ஸ்தலம். அங்கே தீப தண்டி, அதாவது கலங்கரை விளக்கம் இருந்தது. அதைக்கொண்டே அந்த ஊருக்கு தண்டி என்ற பெயர் வந்தது. அது இப்பொழுது பாழடைந்த கிராமமாக இருக்கிறது. இந்தப் பூமியைச் சாகுபடிக்குக் கொண்டுவருதவற்காக ஓர் ஆங்கிலேயரும், பிறகு இந்தியரும், இயற்கையையும் எதிர்த்து முயன்று பார்த்திருக்கிறார்கள். மற்றவையில் அழகானதாகவும், அமைதியை அளிப்பதாகவும் இருக்கும் இக்கடற்கரையில் நான் போகும்போது, மிருதுவான அலைகளின் தெய்விகக் கீதத்தைக் கேட்கிறேன். அதே சமயத்தில், சிதைந்து கிடக்கும் வரப்புகளைக் கொண்ட வயல்கள், புல் பூண்டுகளும்கூட இல்லாமல் வெறும் தரையாகக் கிடப்பதையும், மனித முயற்சி வீணாகிவிட்டதையும் காண்கிறேன். இதே வயல்கள், வெறுக்க வேண்டியதாக இருக்கும் உப்பு ஏகபோக உரிமை போய்விட்டவுடனேயே, சிறந்த உப்பளங்களாகிவிடும். அவற்றிலிருந்து கிராமவாசிகள், புதிய, வெள்ளென்று பிரகாசிக்கும் உப்பை அதிகப் பிரயாசையின்றி எடுத்துக்கொள்ளலாம். அவர்களுடைய மூதாதைகளுக்கு இருந்ததைப் போன்று, இது அக்கிராமவாசிகளுக்குப் பிழைப்பைக் கொடுக்கும்.

அந்த உப்பு, ஆரோக்கியத்திற்குக் கெடுதலானது என்று அரசாங்க அறிக்கை கூறியிருப்பது கேவலமான பொய் என்பதை மகாதேவ தேசாய் முன்பே எடுத்துக்காட்டியிருக்கிறார். கொஞ்சமும் காருண்யமில்லாத வகையில் விதிகள் இருந்தபோதிலும், இப்பகுதிக்குச் சுற்றுப்புறத்திலுள்ள மக்கள், இங்கே இயற்கை ஏராளமாக அளிக்கும் உப்பைத் தவிர வேறு எதையும் உபயோகிப்பதில்லை. அதை உபயோகிப்பதனால் எந்தத் தீமையும் இருப்பதாக அவர்கள் அறிவதாகக் காணோம். இப்பகுதியிலிருக்கும் ஆயிரக்கணக்கானவர்கள், சென்ற ஒரு வாரமாக இந்த உப்பையே உபயோகித்து வருவதால், எந்தத் தீமையையும் அடைந்துவிடவும் இல்லை. கொங்கண மக்கள், இத்தனை ஆண்டுகளாக அரசாங்கம் வரி விதிக்கும் உப்புக்குப் பதிலாகச் சுதேசி உப்பு என அவர்கள் கருதும் இந்த உப்பையே உபயோகித்து வருகிறார்கள் என்றும் அறிகிறேன். வரி போடப்படும் உப்பை அவர்கள், 'சர்க்காரி உப்பு' அல்லது 'அந்நிய உப்பு' என்று கருதுகின்றனர். முதலாவதாக, அந்த உப்பு முதலில் இந்தியாவின் மண்ணிலும் கடலிலுமே உற்பத்தியாவதாக இருந்தும் 'அந்நிய உப்பு' என்றுதான் கருதுகிறார்கள். இந்தப் பத்திரிகையில் நான் பிரசுரித்திருக்கும் பாக முறையை, விஞ்ஞானம் படித்துப் பட்டம்பெற்ற உன்னிப்பான இருவர் தயாரித்திருக்கிறார்கள். அதன்படி ஒவ்வொரு குடும்பமும் தனக்கு வேண்டிய உப்பை எவ்வித செலவுமின்றி தயாரித்துக்கொண்டுவிடலாம். ஒரு சிறுவன், லோடா நிறைய உப்பு நீரைக் கொண்டு வந்தால் போதும். அதைத் தெளியவைத்து நன்றாக வடிகட்ட வேண்டும். பிறகு அதைப் பள்ளமாக இல்லாத ஒரு சட்டியில் ஊற்றி நெருப்படியில் வைக்க வேண்டும். பாக முறையின்படி இவ்விதம் பக்குவம் செய்தால், ஒவ்வொரு குடும்பத்திற்கும் அன்றாடத் தேவைக்குப் போதுமான உப்பு கிடைத்துவிடும். கடையில் கிடைக்கும் ஆபாசமான 'சர்க்காரி' அல்லது 'அந்நிய' உப்பைவிட இந்த உப்பு எவ்வளவோ சுத்தமானதாகவும் ஆரோக்கியமானதாகவும் இருக்கும். உப்புச் சத்தியாக்கிரகிகள் (அவர்களை இப்பொழுது பத்தாயிரக்கணக்கில் எண்ணலாம்) சுதேசி உப்பில் ஒரு துளியைக்கூட வீணாக்கிவிடக் கூடாது. சட்டமிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, கடையில் கிடைக்கும் உப்பைத் தவிர வேறு வழியில்லை என்று இப்பொழுது சாக்குப்போக்குச் சொல்ல முடியாது. உப்பளங்கள் இல்லாத இடங்களில்கூட சுதேசி உப்பைப் புகுத்திவிட வேண்டும். கொஞ்ச அளவில் அதை எளிதாக ஓர் இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குக் கொண்டு போய்விடலாம். பத்தாயிரக்கணக்கான ஆண்களையும் பெண்களையும் அரசாங்கம் கைது செய்து வழக்குத் தொடரட்டும். அல்லது அவர்களுக்குத் தைரியம் இருந்தால், அவர்களையெல்லாம் சோதனை போட்டு மிருகத்தனமாக அம்மக்களிடமிருந்து உப்பைப் பறித்துக்கொண்டு போக அதிகாரிகளை அனுப்பட்டும். 'உப்புச் சட்டம் இதை அனு

மதிக்கிறது' என்று அரசாங்கம் சொல்லட்டும். உப்பு வரியைப் போன்றே உப்பு சம்பந்தமான விதிகளும் அக்கிரமமானவை என்பதை முன்பே எடுத்துக் காட்டியிருக்கிறேன். இந்த விதிகள் செய்யப்பட்ட ஆரம்ப கால நிர்வாகத்தின் சரித்திரத்தை அறிந்தால், மக்களின் இயற்கையான தொழில்களை அவர்களிடமிருந்து பறித்துவிடுவதற்காக, ரத்தக்கறைபட்டிருப்பதான 'சர்க்காரி' உப்பை வாங்கும்படி மக்களைக் கட்டாயப்படுத்துவதற்காக இவ்விதிகள் அக்கிரமமாக அமலுக்குக் கொண்டு வரப்பட்டன என்பது தெரியும். சட்டத்தை மீறித் தயாரிக்கப்படும் உப்பை, ஒரு இடத்திலிருந்து இன்னுமொரு இடத்திற்குக் கொண்டுபோவதைத் தடுப்பதற்காக, கோஷாப் பெண்கள் போகும் பல்லக்குகளும் சோதிக்கப்பட்டன என்பதை வாசகர்கள் அறியட்டும். இந்த அக்கிரமமான வரி நீக்கப்பட வேண்டும் என்பதற்காக நாம் இன்று கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது என்றால், முன்னால் கவனிக்காமல் இருந்துவிட்டதற்கும், இந்த வரிக்கு வெட்கக்கேடான வகையில் பணிந்துவிட்டதற்கும் கொஞ்சம் பிராயச்சித்தத்தையே இப்பொழுது செய்கிறோம். இவ்வரி அதிகமானதாகவே இருந்தபோதிலும், இதில் ஆட்சேபகரமானது இந்த வரி மாத்திரம் அல்ல. அதில் நல்லதும் இருக்கிறது என்பதற்கு எதுவுமே இல்லை. நாட்டுக்கு இதனால் ஏற்படும் நஷ்டம், இந்த வரியினால் அரசாங்கத்திற்குக் கிடைக்கும் வருமானம் மாத்திரம் அன்று. இதனால் நாட்டிற்கு ஏற்படும் நஷ்டம் வருடத்திற்கு இருபது கோடி ரூபாய் இருக்கக்கூடும். அதே தொகை பெறுமானமுள்ள உப்பு, வேண்டுமென்றே நாசமாக்கப்பட்டோ, மக்கள் எடுத்துக்கொள்ள முடியாதபடி தடுக்கப்பட்டோ நஷ்டமாகிறது.

—'எங் இந்தியா' 17—4—1930

# 23

# ஒரு கண்ணோட்டம்

குஜராத்தில் ஏற்பட்டிருக்கும் எழுச்சி, எதிர்பார்த்ததையெல்லாம் மிஞ்சிவிட்டது. பம்பாயும் அதன் சுற்றுப்புறங்களும் இதில் குறைந்துவிடவில்லை. இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும், எங்கோ ஒரு முடுக்கில் நான் இருக்கும் இடத்திற்கு மெதுவாகக் கிடைத்துக் கொண்டிருக்கும் செய்திகளெல்லாம் உற்சாகத்தை அளிப்பவையாகவே இருக்கின்றன. மகாராஷ்டிரம் மீண்டும் ஒன்றுபட்டிருப்பதும், ஸ்ரீ என். ஸி. கேல்காரும் அவருடைய நண்பர்களும் போராட்டத்தில் சேர்ந்திருப்பதும் எனக்கு அதிக ஆனந்தத்தை அளிக்கும் விஷயமாகும். ஸ்ரீ கேல்காரின்,



மகாத்மா தண்டி கடற்கரையில் 1930 ஏப்ரல் 6-ஆம் தேதி இயற்கையான உப்பில் ஒரு பிடி எடுத்து உப்புச் சட்டத்தை மீறியபோது எடுத்த படம்.



ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, உப்புச் சட்ட மறுப்பில் தாமும் கலந்துகொள்ள தண்டிக்கு வந்தபோது காந்திஜி அவரை வரவேற்ருர். —3, ஏப்ரல் 1930

ஸ்ரீ ஆனேயின் ராஜிநாமாக்கள், இந்தப் போராட்டத்தில் மிக மிக முக்கியமான சம்பவங்கள். அகில இந்தியாவிலும் அதிக ஆவேசமுள்ள மாகாணம் வங்காளம். அது ஜீவனுடன் துடித்துக்கொண்டிருக்கிறது. அங்கே தகராறுகள் அதிகமாக இருப்பது, அங்கே அதிகமான விழிப்பு ஏற்பட்டிருப்பதைக் காட்டுவதாகும். சரியான வழியில் வங்காளம் மாத்திரம் காரியத்தில் இறங்கிவிடுமானால், அது மற்றெல்லா மாகாணங்களையும் மிஞ்சிவிடக்கூடும். வலிய முன்வந்து தியாகம் செய்வதில் வங்காளம் பெறக்கூடிய மதிப்பை, வேறு எந்த மாகாணமும், மகாராஷ்டிரம் கூட பெற முடியுமா என்பதை அறியேன். அதனிடமிருக்கும் உணர்ச்சி வேகமே அதன் பலவீனம் என்றால், அதுவேதான் அதனுடைய மிகப் பெரிய பலமும். பொறுப்பில்லாமல் அகிம்சையைக் கைவிடும் சக்தி, இத்தகைய பாஷையை உபயோகிக்கலாம் எனின், வங்காளத்திற்கு உண்டு. மாணவர்கள் கூட்டம் வேண்டுமென்றே தாக்கப்பட்ட தன்பேரில் ஸ்ரீ சென்குப்தா செய்திருக்கும் காரியம், மேலே சொன்ன உணர்ச்சியைத்தான் எழுப்பியிருக்கிறது. வங்காள மாணவர்களைப் பொறுத்த வரையில் அவர்கள் செய்யக்கூடிய காரியங்களும், போலீஸார் பதிலுக்குச் செய்யக்கூடிய காரியங்களும், டாக்டர் சுரேஷ் பானர்ஜியும் மற்றவர்களும் அடைந்த தண்டனைகளும் பிரமாதமல்ல என்று செய்துவிடுகின்றன. நான் இப்படி எழுதியிருப்பதைக் கல்கத்தா போலீஸ் கமிஷனர் பார்த்தால் என்ன சொல்லுவார் என்பது எனக்குத் தெரியும். ‘என் வங்காளத்தைப் பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது’ என்று அவர் சொல்லுவது எனக்குக் கேட்கிறது. அவருடைய வங்காளத்தைக் குறித்து அவர் என்றும் தெரிந்துகொள்ள முடியாதது எனக்குத் தெரியும். அவருடைய வங்காளம், அரசாங்கத்தின் சிருஷ்டி. வங்காளத்தைத் துன்புறுத்துவதையும், இந்தியா அடைய ஆர்வங்கொண்டிருக்கும் லட்சியத்தை அடைய முடியாதபடி தடுப்பதையும் அரசாங்கம் விட்டுவிடுமானால், இந்தியாவில் மிகப் பெரிய மாகாணத்தைப் போன்று வங்காளம் கண்ணியமாக இருக்கும். பலாத்கார உணர்ச்சி வங்காளத்தில் ஓங்கியிருக்கிறதென்றால், அதற்குக் காரணம், அது அனுபவிக்கும் துயரங்களே.

ஆனால், வங்காளத்திற்கு அதன் சிந்தனை உதவிக்கு வந்து, அகிம்சையே வெற்றிக்கு வழி என்பதை அது உணரும் என்று எதிர்பார்க்கிறேன். எல்லாக் கஷ்டங்களையும் அகிம்சை தேவதைக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும்.

ஜாலியன்வாலா படுகொலையிலிருந்து ஒரு நம்பிக்கையை நான் தெரிவித்து, மீண்டும் மீண்டும் அதைச் சொல்லிக்கொண்டு வருகிறேன். அடுத்த முறை இந்தியாவின் எந்தப் பகுதியிலாயினும் மக்கள் மீது துப்பாக்கித் தோட்டாக்கள் பொழியப் படுமாயின், மக்கள் ஓடலாகாது. அவர்கள் கைகளைக் கட்டிக்

கொண்டு, அஞ்சாமல் வீரத்துடன் அத்தோட்டாக்களைத் தங்கள் மார்புகளில் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுதான் நான் தெரிவித்து வரும் நம்பிக்கை. இதைச் சோதிக்க வேண்டிய நேரம், நான் எதிர்பார்த்ததைவிட சீக்கிரமாக வந்துகொண் டிருப்பதாகவே தோன்றுகிறது. துப்பாக்கித் தோட்டாக் காயங்களையும், துப்பாக்கி முனை பாய்வதால் ஏற்படும் காயங் களையும் திறந்த நம் மார்புகளில் ஏற்றுக்கொள்ளும் பயிற்சியை நாம் பெற வேண்டுமானால், குதிரைப் படையையும் தடியடி யையும் அசையாமலிருந்து ஏற்றுக்கொள்ள நம்மைப் பழக்கப் படுத்திக்கொள்ள வேண்டும். இது, சொல்லுவதைப் போன்று செய்துவிடுவது அவ்வளவு எளிதல்ல என்பதை அறிவேன். என்றாலும், பொதுஜன அகிம்சையில் நம் பயிற்சியை என்றாவது நாம் பூர்த்தி செய்தாக வேண்டுமானால், இதை நான் சொல்லித் தான் ஆகவேண்டும். பொதுஜன அகிம்சை முற்றிலும் சாத்திய மானதே என்பது, சென்ற எட்டு நாட்களாகப் போதிய அளவு செய்து காட்டப்பட்டிருக்கிறது. தோலேரா உப்பளத்தில் தொண்டர்கள் மிருகத்தனமாகத் தாக்கப்பட்டதைக் குறித்தும், தொண்டர்கள் சாந்தமான வீரத்துடன் அந்த மிருகத்தனத்தின் கஷ்டங்களை அனுபவித்து வருவதைக் குறித்தும் மகாதேவ தேசாய் விவரங்களைத் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார். பம்பாயில் போலீஸார் ஆவேசத்துடனும் கொடுமையோடும் நடந்துகொண்டபோது அங்கே, ஆயிரக்கணக்கான மக்கள் எப்படி அமைதியுடன் நடந்துகொண்டார்கள் என்பதைப் பண்டித முகுந்த மாளவியா கூறியிருக்கும் விவரத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம். தாம் நேரில் பார்த்ததைக் குறித்து சர்தார் வல்லபபாயின் குமாரர் தயாபாய் அனுப்பியிருக்கும் விவரமும் அதுவும் முக்கியமான விஷயங்களில் ஒத்திருக் கின்றன.

பெரின்பாயும் அவருடைய சகாக்களும், கமலா தேவியும் சிறந்த வீரத்துடனும் அமைதியோடும் நடந்துகொண்டிருக்கி றார்கள். ஆனால், ஆண்களின் போராட்டத்தின் நடுவில் கலந்து கொண்டுவிடாமல் அவர்கள் ஒதுங்கியிருந்தால் நன்றாக இருக்கும் என்று சொல்ல அவர்கள் என்னை அனுமதிக்க வேண்டும். ஏனெனில், அவர்கள் செய்ததைப் போன்று இத்தகைய ஆபத் தின் நடுவில் இருந்தது, வீரத்தின் விதிகளுக்கு விரோதமான தாகும். அவர்கள் ஆயிரக்கணக்கானவர்கள் உப்பைத் தயாரிக் கட்டும். ஆனால், தடியடி போன்றவை நடக்கக்கூடும் என்றிருக் கும் கூட்டத்திற்குள் அவர்கள் வேண்டுமென்றே இருக்கக் கூடாது. அவர்களுக்கு என்றே தனியான ஒரு துறையைப் பற்றி முழுப் பணிவுடன் அவர்களுக்குக் கூறியிருக்கிறேன். அதில் அவர்கள் தங்களிஷ்டப்படி செய்வதோடு தங்கள் சிறந்த ஆற்றல் களையும் காட்ட முடியும். துணிந்து செய்வதற்கும் வீரத்திற்கும் அத்துறையில் போதுமான வாய்ப்பு இருக்கிறது.

விஷயத்திற்குத் திரும்புவோம். போராட்டத்தின் முடிவான சூட்டை நாம் சமாளித்து நிற்க வேண்டுமாயின், குதிரைப் படையின் தாக்குதலுக்கும் தடியடிக்கும் அசையாமல் உறுதியுடன் நிற்க நாம் கற்றுக்கொள்ளுவதோடு, குதிரையின் கால்களில் மிதியுண்டு போவதற்கும் தடியடிக் காயங்களை அடைவதற்கும் நம்மை நாமே அனுமதித்துக்கொள்ள வேண்டும். இத்தகைய தாக்குதல்கள் நடந்தால், ஆயுதங்களுடனிருக்கும் கூட்டம் உறுதியுடன் நின்று திருப்பித் தாக்க முடியும். நாமோ, அகிம்சையின் பாடத்தை நாம் கற்றுக்கொள்ளுவதாயின், கோபமடையாமலும், திருப்பித் தாக்காமலும், நின்ற இடத்தில் உறுதியுடன் இருந்து இன்னும் அதிக தீரத்தை காட்டவேண்டும். பிறகு டயரின் அவதாரமான ஒருவர், திறந்த மார்பில் துப்பாக்கி குண்டுகளை ஏற்றுக்கொள்ள நாம் தயாராக இருக்கிறோம் என்பதைக் காண்பார்.

தங்கள் உப்பளங்களைப் பாதுகாத்துக்கொள்ள மக்கள் இப்பொழுதே ஆரம்பித்துவிட்டார்கள். அந்தப் போதிய அளவு தீரத்தை நாம் வளர்த்துக்கொண்டிருந்தால், முறைப்படியும் ஒழுங்காகவும் அதைச் செய்யவேண்டும். நம்மைத் தாக்குவதற்குப் போலீஸ் வந்து, மனிதச் சுவரைப் பிளந்துகொண்டு வந்ததுமே, போலீஸ்காரர்கள் சந்தர்ப்பமளித்தால், பெண்கள் தூரத்தில் ஒதுங்கி நின்றுகொண்டு ஆண்கள் காயப்படுவதற்கு அனுமதிக்க வேண்டும். ஆயுதம் தாங்கிய போராட்டங்களில் உலகம் எங்குமே இப்படித்தான் செய்கிறார்கள். ஒரு தரப்பினர் வேண்டுமென்றே நிராயுதபாணிகளாக இருந்துவரும் இப்போராட்டத்திலும் அவர்கள் அதையே செய்யட்டும்.

சுயேச்சையான உப்புப் போராட்டத்தில் ஈடுபட்டுப் போராடுவதற்கு ஆண்களே வெளியில் யாருமில்லை என்றிருக்கும்போது, பெண்களுக்குத் தைரியமிருந்தால், ஆண்கள் விட்டு விட்டுப் போய்விட்ட போரை அவர்கள் மேற்கொள்ளட்டும். ஆனால், ஆண்கள் இந்தப் போராட்டத்தில் தங்கள் கடமையைத் தவறாமல் செய்து தீருவார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

மக்கள், தங்களிடமிருக்கும் சட்ட விரோதமான உப்பை ஒப்படைத்துவிடாவிடில் போலீஸார் பலாத்காரத்தை உபயோகித்தே ஆகவேண்டும் என்ற வாதத்தை இப்பத்திரிகையில் மற்றோர் இடத்தில் பரிசீலனை செய்திருக்கிறேன். குறை கூறுவோருக்கு இங்கே ஒரே ஒரு விஷயத்தை மாத்திரம் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். சரியான திருடர்களிடமிருந்துகூட, அவர்களைக் கைது செய்வதற்கு முன்னால், அவர்களிடமிருக்கும் திருட்டுச் சொத்தைப் பலவந்தமாகப் பறிப்பதில்லை. திருடன் தண்டனையடைந்து, அந்தச் சொத்து அவனுடையது அல்ல என்று கோர்ட்டு தீர்ப்புக் கூறும் வரையில் அந்தச்

சொத்து திருடனின் சொத்தாகவே இருக்கிறது. கைது செய்யும் அதிகாரியாகவும், குற்றஞ்சாட்டுபவராகவும், நீதிபதியாகவும் எல்லாம் தம்மிடமே கொண்டவராக உப்பு விதிகள் போலீஸ் காரரைச் செய்கின்றன என்பது, அதிகாரிகள் அனுசரிக்கும் முறை விஷயத்தில் காட்டுமிராண்டித்தனம் நடக்கிறது என்று நான் கூறும் குற்றச்சாட்டுக்குப் பதிலாகிவிடாது.

—'எங் இந்தியா' 17—4—1930

# 24

# கொடுங்கோல் ஆட்சி

[சட்ட மறுப்பு இயக்கம் நாடெங்கும் காட்டுத் தீ போல் பரவிவிட்டது. காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவாஹர்லால் நேருவை 1930 ஏப்ரல் 14-ஆம் தேதி கைது செய்து அன்றே உப்புச் சட்டத்தின்படி அவருக்கு ஆறு மாத தண்டனையும் விதித்துவிட்டனர். அதன் பிறகு இயக்கம் இன்னும் அதிகத் தீவிரமாகிவிட்டது. நாடெங்கும் தடியடி அட்டூழியங்கள் நடந்தன. கல்கத்தா, சென்னை, கராச்சி ஆகிய இடங்களில் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடந்தன. ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் தடை செய்யப்பட்டன. பதிலுக்குப் பதில் செய்வதாக மக்கள், அந்நியத் துணிக் கடைகள், மதுபானக் கடைகளில் மறியலைத் தீவிரமாக்கினர்கள். ஸ்ரீமதி கஸ்தூரிபா காந்தியும் சாபர்மதி ஆசிரமப் பெண்களுடன் 17-ஆம் தேதி மதுபானக் கடைகளில் மறியல் செய்ய ஆரம்பித்துவிட்டார். மத்திய சட்டசபை சபா நாயகர் பதவியை ஸ்ரீ வித்தல்பாய் பட்டேல் ராஜிநாமாச் செய்தார். ஏப்ரல் 25-ஆம் தேதி அவர் வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத்தில், "ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் உயிரைவிடத் தயாராக இருக்கிறார்கள்; லட்சக்கணக்கானவர்கள் சிறைப்படத் தயாராயிருக்கின்றனர்" என்றார்.

சட்ட மறுப்பு கொஞ்ச காலம் எந்தத் தகராறுமின்றி நடந்தது. ஆனல், இரண்டாவது வாரமோ, கிடைத்த செய்திகள் காந்திஜிக்கு வருத்தம் தருவதாக இருந்தன. கல்கத்தா, கராச்சி முதலிய இடங்களில் கலவரங்கள் நடந்தன. ஏப்ரல் 18-ஆம் தேதி சிட்டகாங் போலீஸ் ஆயுத சாலையைச் சூறையாடிவிட்டனர். பிஷாவரில் புரட்சி எழுச்சி உச்சக் கட்டத்திற்கு வந்து விட்டது. ஏப்ரல் 23-ஆம் தேதி

பிரமாண்டமான பொதுஜன ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. மறுநாள், புதிதாக ஆரம்பமான செஞ்சட்டைப் படையினர் இயக்கத்தின் தலைவரான கான் அப்துல் கபார்கானைக் கைது செய்துவிட்டனர். அவர் சிறை வைக்கப்பட்டிருந்த இடத்தை ஆயிரக்கணக்கான மக்கள் சூழ்ந்துகொண்டு ஆர்ப்பாட்டம் செய்தார்கள். இம்மக்களை அடக்க ஆயுத மோட்டார்கள் அனுப்பப்பட்டன. அவற்றில் ஓர் ஆயுத மோட்டாரைக் கொளுத்திவிட்டார்கள். ஆனால், அதிலிருந்தவர்கள் தப்பிவிட்டார்கள். உடனே எங்கும் ஒரே துப்பாக்கிப் பிரயோகம். அதில் நூற்றுக்கணக்கானவர்கள் மரணமும் காயமும் அடைந்தனர். 18–வது கார்வாலி துப்பாக்கிப் படையைச் சேர்ந்த இரு பிரிவினர், முஸ்லிம் கூட்டத்தின் நடுவிலிருந்த இந்த ஹிந்து சிப்பாய்கள், கூட்டத்தின் மீது சுட மறுத்து ஒதுங்கிப் போய்விட்டனர். அவர்களில் பலர் தங்களிடமிருந்த ஆயுதங்களை அதிகாரிகளிடம் ஒப்படைத்துவிட்டனர். இது நடந்ததும் பிஷாவரிலிருந்து போலீஸும் ராணுவமும் அடியோடு வாபஸ் வாங்கப்பட்டுவிட்டன. ஏப்ரல் 25-ஆம் தேதியிலிருந்து மே 4–ஆம் தேதி வரையில் பிஷாவர் நகர், மக்கள் கையில்தான் இருந்தது. பிறகு பிஷாவரைத் திரும்பப் பிடித்துக்கொள்ளுவதற்குப் பலம் பொருந்திய பிரிட்டிஷ் படைகள் அனுப்பப்பட்டன. விமானப் படையும் உதவிக்குச் சென்றது. கார்வாலி துப்பாக்கிப் படையைச் சேர்ந்த 17 பேருக்குக் கடுமையான தண்டனை விதித்தார்கள். அந்தச் சமயத்தில் தான் காந்திஜி 'கொடுங்கோல் ஆட்சி' என்ற தலைப்பில் கீழ்க்கண்ட கட்டுரையை எழுதினர்:]

சென்ற வாரம், கலப்பற்ற சந்தோஷத்தை அளிப்பதாக இல்லை. கல்கத்தாவிலும் கராச்சியிலும் கலவரம் ஏற்பட்டிருக்கிறது. சிட்டகாங்கிலிருந்தும் இப்பொழுது துக்ககரமான செய்தி கிடைத்திருக்கிறது. நாடு முழுவதிலும் பாராட்டத்தக்க முறையில் அகிம்சை செயல்முறையில் காட்டப்பட்டிருந்த போதிலும், பலாத்காரமும் இன்னும் இருந்துகொண்டுதான் வருகிறது. அதற்கு நகரங்களே கிடங்குகளாகவும் இருக்கின்றன. கல்கத்தாவிலும் கராச்சியிலும் நடந்திருப்பது வேறு, சிட்டகாங்கில் நடந்திருப்பது வேறு. முதலிரண்டும் இயக்கத்தின் பைத்தியக்காரத்தனமான எழுச்சி என்று தோன்றுகிறது. சிட்டகாங்கிலோ, வேண்டுமென்று திட்டமிட்டுச் செய்திருக்கிறார்கள் எனத் தெரிகிறது. அவை எவையாக இருந்தாலும் சரி, மிகவும் வருந்தத்தக்கவைகளாகும். மற்ற வகையில் பிரமாதமாக உருவாகிக்கொண்டு வந்த, நாளுக்கு நாள் புதிய பலத்தைப் பெற்று

வந்த இயக்கத்தின் வளர்ச்சியில் அச்சம்பவங்கள் குறுக்கிட்டு விட்டன. அகிம்சையை நடைமுறையில் காட்டும் தாராளமான காரியத்தைக் கெடுக்க வேண்டாம் என்று, அகிம்சையில் நம் பிக்கை கொண்டிருப்போரை நான் கேட்டுக்கொள்ளவே முடியும். அவர்கள் கேட்டுக்கொண்டாலும் சரி, கேட்க மறுத்துவிட்டா லும் சரி, இந்த இயக்கம் நடந்துகொண்டுதான் போகும். சுதந்திரத்தை நோக்கி முன்னேறுவதைப் பலாத்காரம் தடுத்தே தீரும். அது எவ்விதம் தடுக்கும் என்பதைச் செய்துகாட்ட என் னல் முடியவில்லை. அது எப்படி என்பதை, இப் போராட்டத் திற்குப் பின் உயிருடன் இருப்பவர்கள் அறிந்துகொள்ளுவார்கள்.

இதற்கு மத்தியில் சத்தியாக்கிரகிகள், இன்னும் இரட்டிப்பு மடங்கு உற்சாகத்துடன் தங்களுடைய நடவடிக்கைகளைத் தொடர்ந்து செய்துகொண்டு போக வேண்டும். இரு பக்கங் களிலிருந்து நம்மை எதிர்த்து வரும் பலாத்காரத்தை நாம் சமாளிக்க வேண்டியிருக்கிறது. என்னைப் பொறுத்த வரையில், நாம் போகும் வழியில் அரசாங்கத்தின் பலாத்காரம் எவ்விதம் முட்டுக்கட்டையாக இருக்கிறதோ, அதே போல பொதுஜன பலாத்காரமும் முட்டுக்கட்டையாக இருக்கிறது. பொதுஜன பலாத்காரத்தைவிட அரசாங்கத்தின் பலாத்காரத்துடன் நான் வெற்றிகரமாகப் போராடி விட முடியும் என்பது உண்மை. இதற்கு ஒரு காரணம், அரசாங்கத்தின் பலாத்காரத்தை எதிர்த் துப் போராடுவதில் எனக்குக் கிடைக்கும் ஆதரவு, பொதுஜன பலாத்காரத்தை எதிர்த்துப் போராடுவதில் எனக்குக் கிடை யாது. மேலும், பொதுஜன பலாத்காரத்தின் ஒரு நோக்கம், சத்தியாக்கிரகியின் நோக்கத்தைப் போன்றே கௌரவமான தாக இருப்பதால், இதை எதிர்ப்பதற்கு உபயோகிக்கும் முறை, அரசாங்க பலாத்காரத்தை எதிர்ப்பதற்கு உபயோகிக்கும் முறையை விட வேறுபட்டதாக இருக்க வேண்டியதாகிறது.

கராச்சியைப் போலவே கல்கத்தாவிலும் சிட்டகாங்கிலும், பொதுஜன பலாத்காரத்தைத் தடுக்க முயற்சிக்கும் சத்தியாக் கிரகிகள் இருந்தார்கள் என்றே நம்புகிறேன். வீர வாலிபரான தத்தாத்திரேய மானே என்பவருக்குச் சத்தியாக்கிரகத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்று சொல்லப்படுகிறது. அவர் தேகப்பயிற்சி விளையாட்டுகளில் தேர்ந்தவர். அமைதியை நிலை நாட்டுவதற்கு உதவி செய்வதற்காகவே அவர் போயிருக்கிறார். துப்பாக்கி வேட்டு பட்டு அவர் மாண்டிருக்கிறார். அதே போல 18 வயதுள்ளவரான மேகராஜ் ரேவாசந்தும் துப்பாக்கி குண்டு பட்டு மாண்டு போனார். இதே போல ஏழு பேர் மாண்டிருக் கிறார்கள். இவர்களில் ஜெயராம்தாஸுக்குத் துப்பாக்கி குண்டு காயம்பட்டது. ஜெயராம்தாஸ் அடைந்த காயம் எனக்குக் கலப்பற்ற சந்தோஷத்தை அளிக்கிறது. இது, தலைவருக்குப் பட்ட, நிவாரணமளிக்கும் காயம். தியாகத்தின் நியதி, உலகம்

எங்குமே ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. தியாகம் பல னுள்ளதாக இருக்க வேண்டுமானால், அதிக வீரமுள்ளவர்களும் மாசற்றவர்களும் தியாகம் செய்ய வேண்டியது அவசியம். ஜெய ராம்தாஸ் வீரம் மிக்கவர், அதிகத் தூய்மையானவர். ஆகையால், ஜெயராம்தாஸ் காயமடைந்தார் என்று நான் கேள்விப்பட்டதும், 'தொடையில் பட்ட காயம் சிறைப்படுவதைவிட மேல்; இருதயத் தில் படும் காயம் இன்னும் அதிக மேலானது' என்று எழுதாம லிருக்க என்னால் முடியவில்லை.

ஆகையால், உயிரிழந்திருக்கும் இரு வீர இளைஞர்களின் பெற்றோருக்கு என் துக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப் பெற்றோர்கள் என் பாராட்டுகளையும் ஏற்றுக்கொள்ளுவார் களானால், தங்கள் குமாரர்கள் செய்து முடித்திருக்கும் தியாகங் களுக்காக அவர்களைப் பாராட்டவேண்டும் என்பதுதான் உள் ளூர எனக்கு இருக்கும் ஆவல். ஒரு போர் வீரரின் சாவு, அதி லும் ஒரு சத்தியாக்கிரகப் போர் வீரரின் சாவு, எப்பொழுதுமே துக்கப்பட வேண்டிய விஷயம் அன்று. சுதந்திரத்தை அடை வதற்காகப் பாடுபட்டு வரும் ஒரு நாட்டு மக்கள் கற்றுக்கொள்ள வேண்டிய ஓர் அவசியமான பாடம், பட்டங்களை இழப்பது, சொத்து, ஸ்தானங்களை இழப்பது, சிறைப்படும் பயம், காயம் பட வேண்டியிருக்கும் என்ற பயம், கடைசியாக மரண பயம் ஆகிய அநேக பயங்களை விட்டொழிக்கக் கற்றுக்கொள்ளுவது தான்.

பயமின்மை வளர்ந்துகொண்டு வருகிறது என்ற அதே கதையைத்தான் இந்தியா முழுவதிலுமிருந்தும் எனக்குக் கிடைத்துக்கொண்டிருக்கும் தகவல்கள் கூறுகின்றன. இப் பத்திரிகையில் மற்றோரிடத்தில் பிரசுரமாகி யிருக்கும் பிகார் கடிதம், உள்ளத்தைக் கிளறிவிடுவதாக இருக்கிறது.

ஒரு காரியத்தை மாத்திரம் நாம் உடனே விட்டொழித்தாக வேண்டும். சட்ட விரோதமான மனித பலாத்காரத்தை நிறுத்தியாக வேண்டும். அரசாங்கம் தனது துப்பாக்கியை உபயோகிக்கும்படி கட்டாயப்படுத்துவதன் மூலமாகவே ஆயி னும், அதை நிறுத்தியாக வேண்டும். அதை அகிம்சையைக் கொண்டே செய்துவிட முடியும்.

விராம்காமில் ஆபாசமாகத் தாக்கியது சம்பந்தமான பல உதாரணங்களில் ஒன்றை மாத்திரம் கீழே கொடுக்கிறேன்:

தட்சிணாமூர்த்தி வித்தியார்த்தி பவனின் மாணவரான அனிருத்த வியாஸ், தொண்டர் நெ. 35/3 கூறுவதாவது:

"நான், என்னுடைய பல சகாக்களுடன் மாலை 6-30 மணிக்கு வரும் மெயில் ரெயிலில், விராம்காம் ரெயில்வே ஸ்டேஷனில் உப்பு மூட்டைக

ளுடன் இறங்கினேன். அப்பொழுது 8 முதல் 10 போலீஸார் எங்களைச் சூழ்ந்துகொண்டார்கள். உப்பு மூட்டையை, பறிக்கப்பட்டுவிடாமல் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக, உப்பு மூட்டையுடன் தரையில் உட்கார்ந்துகொண்டு அதை என் முழு பலத்துடன் பற்றிக்கொண்டேன்.

"நான் எழுந்துவிடும்படிச் செய்வதற்குப் போலீஸார் செய்த எல்லா முயற்சிகளும் வீணாகிவிடவே, அவர்களில் ஒருவர் என் கால்களை அகட்டிவிட்டு, நான் எழுந்துவிடும்படி கட்டாயப்படுத்துவதற்காக என் மர்ம உறுப்புக்களைப் பிடித்துப் பிசைய ஆரம்பித்துவிட்டார். ஆனால், என் உடலின் கனத்தினாலும் சுற்றிலுமிருந்த போலீஸ்காரர்கள் என்னை இழுத்ததனாலும் தள்ளியதாலும் நான் கீழே விழுந்துவிட்டேன். பிறகு திரும்பவும் நான் மேலே தூக்கப்பட்டேன். ஆனால், மூட்டைமீது குனிந்து படுத்துக்கொண்டு இரு கைகளாலும் பலமாக அதை அணைத்துக்கொண்டேன். அதன்பேரில் ஒரு போலீஸ்காரர் என் முதுகு மீது உதைகாலால் உதைத்தார். அதனால் எனக்குத் தாங்க முடியாத வலி உண்டாயிற்று. பிறகு இரு போலீஸ்காரர்கள், பலமாக என்னை இழுத்து, அவர்கள் விரும்பியபடியெல்லாம் என் விரல்களைப் பிடித்து முறுக்கி, நான் கைகளை விட்டுவிடும்படிச் செய்து உப்பு மூட்டையைப் பறித்துக்கொண்டு விட்டார்கள். பிறகு ஒரு அதிகாரி என் பெயரையும் ஜெம்பரையும் எழுதிக் கொண்டு என்னைப் போகச் சொல்லிவிட்டார்."

இத்தகைய தாக்குதல்களெல்லாம் இப்போதைக்கு நின்று விட்டன என்று மகாதேவ தேசாய் எனக்கு அறிவிக்கிறார், ஆனால், எப்போதைக்குமே இனி இல்லை என்று நிறுத்தி விட்டார்களா என்பது தெரியவில்லை. குஜராத்தின் மற்றப் பகுதிகளிலோ, மற்ற மாகாணங்களிலோ இக்காரியங்கள் நடக்கமாட்டா என்று எண்ணுவதற்குக்கூட ஆதாரம் இல்லை என்பது நிச்சயம். பிரோச்சில் நிலைமை வர வர மோசமாகிக் கொண்டு வருகிறது. காட்டுமிராண்டித்தனமான, அனாவசியமான, ஆத்திர மூட்டப் படாத இந்தத் தாக்குதல்களைவிட ஒரு துப்பாக்கித் தோட்டாக் காயம் எப்பொழுதுமே மேலானது. ஒரு பிரஜையின் உடல் பிறரால் துன்புறுத்த முடியாததாகக் கொள்ள வேண்டும். கைது செய்வதற்கோ, பலாத்காரத்தைத் தடுப்பதற்கோதான் அதைத் தீண்டலாமேயன்றி இப்பொழுது செய்து வருவதைப் போன்று செய்யவே கூடாது. உப்புச் சட்டங்களை சாத்விகச் சட்ட மறுப்பாளர்களுக்கு எதிராக உபயோகிப்பதும் அச்சட்டங்களை ஒழுக்கக் கேடான முறையில் உபயோகிப்பதாகும். இந்தச் சட்டங்கள், அவற்றின் புதிய விதிகளைத் திருட்டுத்தனமாக மீறுவதைச் சமாளிப்பதாக (அதுவும்கூட நான் கருதுகிறபடி அநியாயமாக) கொண்டு வரப்பட்டவையே அன்றி, அச்சட்டங்களைப் பகிரங்கமாக மீறுகிறவர்களைச் சமாளிப்பதற்காகக் கொண்டு வரப்பட்டவையே அல்ல. உடலைத் தாக்கும் இந்த மிருகத்தனமான காரியத்தை அரசாங்கம் நிறுத்தாது போனால், சத்தியாக்கிரகிகள், தங்களுக்கு எதிராகத் துப்பாக்கிகளை உபயோகிக்கும்படி இப்பொழுது கட்டாயப்படுத்தி விடுவதையே அரசாங்கம்

காணும். இது நடக்க வேண்டும் என்று நான் விரும்பவில்லை. ஆனால், அப்படிச் செய்ய வேண்டும் என்று அரசாங்கம் விரும்பினால், அந்த வாய்ப்பை அதற்கு அளிப்பதற்கு நான் தயங்கவே கூடாது. உப்பைத் தயாரிக்கும், விற்கும் சத்தியாக்கிரகிகளின் உடல்கள் சம்பந்தமாக அரசாங்கம் எதுவும் செய்யக்கூடாது. அது விரும்பினால், ஒவ்வொரு ஆணையும் பெண்ணையும் குழந்தையையும் கைது செய்துகொண்டு போகட்டும். அரசாங்கம் கைதும் செய்வதில்லை, உப்புச் சட்டத்தையும் ரத்துச் செய்வதில்லை என்றால், சித்திரவதைக்கு உட்படுவதைவிட துப்பாக்கியால் சுட்டுக் கொல்லட்டும் என்று மக்கள் அணி வகுத்து வருவதையே அரசாங்கம் காணும்.

உடல் சம்பந்தமாகக் காட்டுமிராண்டித்தனமாகக் குறுக்கிடுவதும், ஆபாசமான முறையில் தாக்குவதும் பழைமையின் பிதுரார்ஜிதம் என்பது உண்மை. இந்த அரசாங்கம், இதற்கு முன்னால் அதற்கு என்றும் இருந்திராத ஒரு செலாவணியை, தன்னுடைய தாராளமான அங்கீகாரத்தினால் அளித்திருக்கிறது.

நான் இதை எழுதிக்கொண்டிருக்கையில், விஷமிடப்பட்டதாகக் கூறப்படும் உப்பை இரு தொண்டர்கள் என்னிடம் கொண்டு வந்திருக்கிறார்கள். அதிகாரிகள் இப்பொழுது வேண்டுமென்றே உப்பையும் உப்பளங்களையும் நாசப்படுத்துவதோடல்லாமல், உப்பு உற்பத்தி செய்வதற்குள்ள சாதனங்களிலும் விஷம் வைத்து விடுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. கூறப்படுவது உண்மையாக இருக்குமானால், ஆட்சியின் கொடுங்கோன்மை இன்னும் அதிகக் கொடுமையானதாகிறது. இவ்வளவும், யாருக்கும் தீங்கும் செய்யாமல் துன்பங்களைத் தாங்களே அனுபவித்துக்கொள்ளுவதன் மூலம் சுதந்திரத்தை அடையப் பாடுபட்டு வரும் மக்களுக்கு எதிராகச் செய்யப்படுகின்றன!

—'எங் இந்தியா' - 24—5—1930

# 25

# கணக்கு வைப்பதில் தூய்மை

தொண்டர்கள் உப்பு விற்கிறார்கள்; மற்றப்படி பணமும் வசூலிக்கிறார்கள். கபடமில்லாத மக்கள், தொண்டர்கள் ஏந்தும் பாத்திரங்களில் செப்புக் காசுகளையும், வெள்ளி நாணயங்களையும் நோட்டுகளையும் தூய நம்பிக்கையின் பேரில் சொரிகின்றனர். அங்கீகாரம் பெறாத தொண்டர்கள் யாரும் பணவசூல் செய்யவோ, உப்பை அதிக விலைக்கு விற்கவோ கூடாது. பணத்திற்குச் சரியான படி கணக்கு வைப்பதோடு, அதை அடிக்கடி பிரசுரிக்கவும்

வேண்டும். கணக்குப் புத்தகங்களை வாரந்தோறும் கணக்காயர்கள் சோதிக்க வேண்டும். காங்கிரஸ் தொண்டர்களுடன் முழுதும் ஒத்துழைத்து வேலை செய்யவும், பணம் வசூல் செய்வதற்கும், பணத்தை வைத்திருப்பதற்கும் யோக்கியமானவர்கள் என்று நன்ருகத் தெரிந்த பணக்காரர்களையே பொக்கிஷதார்களாக நியமிப்பது நல்லது. வேலையில் ஈடுபடும் தொண்டர்கள், அவசரத்தில் பொறுக்கி எடுக்கப்படுகின்றனர். உள்ளூர் ஸ்தாபனங்களுக்குப் பணத்தை வைத்திருப்பதும், சரியாகக் கணக்கு வைப்பதும் அதிக காலத்திற்குக் கஷ்டமானதாக இருக்கும். இப்பொழுதுள்ள நிலையில் எல்லா இடங்களிலுமே இயக்கத்திற்கு வேண்டிய செலவுக்குப் பணத்தைப் பொதுமக்கள் கொடுத்து வருகிருர்கள். இது பொறுப்புடனும், முறைப்படியும் செய்யப்படட்டும்.

—'எங் இந்தியா' 24—4—1930

# 26

# அமைதியான வீரம்

காசியிலிருந்து ஸ்ரீ ஸ்ரீபிரகாஷ் கீழே வருமாறு எழுதுகிருர் :

"ஹிராலால் என்ற தொண்டரின் கதையை உங்களுக்கு அறிவிக்க வேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன். போலீஸார் நம்மிடமிருந்து உப்பைப் பறிக்கும்போது நாம் நடந்துகொள்ள வேண்டிய விதத்தைக் குறித்து நீங்கள் கூறியிருப்பவைகளை அப்படியே அனுசரிப்பவர் அவர் என்று எனக்குத் தோன்றுகிறது. சென்ற 8–ஆம் தேதி இங்கே உப்புப் போராட்டத்தை ஆரம்பித்தோம். தினமும் 10 பேர் கோஷ்டியாகச் சென்று 24 மணி நேரம் உப்பு உற்பத்தி செய்கின்றனர். பிறகு இவர்களுக்குப் பதிலாக மற்ருேர் கோஷ்டி அனுப்பப்படுகிறது.

"மூன்ரும் நாள் சுமார் 60 போலீஸ்காரர்கள் தங்கள் அதிகாரிகளுடன் அந்த இடத்திற்குப் படையெடுத்துவந்து உப்பையும் உப்புக் காய்ச்சிய சட்டியையும் கொடுத்துவிட வேண்டும் என்றனர். நெருப்படியில் எரிந்து கொண்டிருந்த சட்டியை தொண்டர்கள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள். 20 நிமிட நேரம் விடாமல் இருந்த பிறகு போலீஸார் பலவந்தமாகத் தொண்டர்களிடமிருந்து பறித்துக்கொண்டு விட்டனர். ஹிராலால் என்ற தொண்டர், சூடாக இருந்த சட்டியின் மேல் விளிம்பைக் கெட்டியாக விடாமல் பிடித்துக்கொண்டார். இதனுல் அவருடைய வலது கை முழுவதும் வெந்து புண்ணுகிவிட்டது. தம்முடைய விரல்களை அவர் திரும்ப உபயோகித்துக் கொள்ள முடிவதற்கு அநேக வாரங்களாகும். அநேகமாக மற்ற தொண்டர்களும் காயமடைந்தனர். ஆனுல், இத்தொண்டர் நடந்துகொண்ட விதம் குறிப்பிடத்தக்கதாகும். அவருடைய பெயரை தங்களுக்குப் பெருமையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்."

ஹிராலால் போன்ற இளைஞர்களே சுயராஜ்யத்தை உண்டாக்குபவர்களாவார்கள்.

—'எங் இந்தியா' - 24—4—1930

# 27

# மகாதேவ தேசாயும் அவருக்குப் பிறகும்

அரசாங்கம் என்ற பொய்யான பெயரில் நடந்துவரும் பெருங் குழப்பத்தின் நடுவே* அதிகாரிகளைப் பொறுத்த வரையில், மகாதேவ தேசாயைக் கைது செய்தது கண்யமான, அரை மனதோடுகூடிய காரியமாகும். குஜராத் முழுவதிலும் விராம்காம், தோலேராவிலிருந்து அகமதாபாத் வரையில் எங்கும் போராட்டத் தீ பற்றி எரியும்படி மகாதேவ தேசாய் செய்திருக்கிறார். என்றாலும், அது ஜீவனை அளிக்கும் தீ என்பதை அதிகாரிகள் அறிந்திருக்கின்றனர். தங்களுடைய சொந்த ஆட்சியின் கீழிருப்பதை விட மகாதேவின் ஆட்சியில் தாம் பத்திரமாக இருக்கிறார்கள் என்பதையும் அவர்கள் அறிவார்கள். அவர் எழுப்பிவிட்ட சக்திகளைக் கட்டுப்படுத்தி நிர்வகிக்கவும் அவரால் முடியும்.

ஆனால், தம்மைச் சுதந்திரமாக விட்டு வைப்பது அதிகாரிகளுக்குச் சாத்தியமில்லாதபடி மகாதேவ் செய்துவிட்டார். தோலேராவிலிருந்து ஒரு லாரி நிறைய உப்பை 'திருட்டுத்தனமாக' உள்ளே கொண்டுவந்துவிட்டார். அதிகாரிகள் உஷாராக

---

* அரசாங்கம் நடத்தி வந்த அக்கிரமமான அடக்கு முறை ஆட்சியையே காந்திஜி இவ்விதம் குறிப்பிடுகிறார். போராட்டம் அதிகத் தீவிரமானதும் வைஸ்ராய் 1930 ஏப்ரல் 27-ஆம் தேதி, பத்திரிகைகள் அவசரச் சட்டம் ஒன்றின் மூலம் 1910 ஆம் வருட பத்திரிகைச் சட்டத்திற்கு திரும்ப உயிர் கொடுத்துவிட்டார். "நாம் அறிந்து வந்தாலும் அறியாதிருந்தாலும் சென்ற சில தினங்களாக மறைவான ஒரு ராணுவச் சட்டத்தின் கீழேயே நாம் வாழ்ந்து வருகிறோம்'' என்றார் காந்திஜி. ''பத்திரிகைக்காரர்கள் பொதுஜன அபிப்பிராயத்திற்குத் தகுதி வாய்ந்தவர்களாக இருப்பின், இந்த அவசரச் சட்டத்தைக் கண்டு பயந்துவிடமாட்டார்கள். கொடுங்கோலாட்சியின் கீழ் யோக்கியர்கள் பணக்காரர்களாக இருப்பது கஷ்டம் என்று தோரோ சொன்ன பொன் மொழியை நாம் உணருவோமாக. நமது உடல்களை எந்தவிதமான முணுமுணுப்புமின்றி அதிகாரிகளிடம் ஒப்படைத்துவிட நாம் தயாராக இருப்போமாயின், நமது ஆன்மாக்களை விற்றுவிடாமல் நமது சொத்துக்களையும் அவர்களிடம் ஒப்படைத்துவிடத் தயாராக இருப்போமாக'' என்றும் காந்திஜி கூறினார். 'எங் இந்தியா' பத்திரிகை அச்சிடப்பட்டு வந்த நவஜீவன் அச்சுக்கூடத்திற்கு ஜாமீன் கட்ட வேண்டும் என்று அரசாங்கம் உத்தரவிட்டால், அதற்கு ஜாமீன் கட்டாமல் அச்சகத்தை அரசாங்கமே பறிமுதல் செய்துகொண்டுவிட அனுமதித்துவிடும்படியும் நவஜீவன் அச்சக மானேஜருக்கு காந்திஜி அறிவித்தார்.

விழித்துக் கொண்டிருந்தார்கள். லாரியைத் தடுத்தார்கள். மகாதேவ் அதில் இருக்க மாட்டார் என்றே எதிர்பார்த்தார்கள். ஆனால், லாரியும் அதிலிருந்த அருமையான உப்பும் பிடிபட்டு விடப் போகிறது என்பதைக் கண்டதும், பின்னலேயே ஒரு மோட்டாரில் வந்து கொண்டிருந்த மகாதேவ் குதித்து லாரியில் ஏறிக்கொண்டுவிட்டார். ஆகையால், போலீஸார் லாரியைப் பிடிப்பதானல், அவரையும் கைது செய்யாமலிருக்க முடியாது. அந்த சந்தர்ப்பத்தில் மகாதேவ் லாரியில் ஏறிக்கொண்டுவிடாமல் இருப்பதற்குமில்லே. அதிலிருந்த மற்ற இளைஞர்களில் ஒருவர், மறுநாள் எல். எல். பி. கடைசிப் பரீட்சை எழுதப் போக வேண்டியவர். குஜராத் கல்லூரியைச் சேர்ந்த இரு இளைஞர்களும், பணக்காரர்களின் குமாரர்களான மற்றும் இரு இளைஞர்களும் லாரியில் இருந்தார்கள். அந்த லாரியைக் கொடுத்து உதவியவர், ஒரு மில் சொந்தக்காரரான ஸ்ரீ ரான்சோத்லால். லாரியின் கதி என்னவாகும் தெரியுமா என்று அதிகாரிகள் எச்சரித்தபோது அவர், ‘சுயராஜ்யத்திற்காக எல்லாவற்றையுமே இழந்துவிட நான் தயாராக இருக்கும் போது லாரி போய்விடுவதைப் பற்றி எனக்கு என்ன பயம்?’ என்ருர்.

மகாதேவ், தமக்கு மிகவும் அவசியமான ஓய்வைப் பெற்றிருக்கிருர். அதிகக் கஷ்டப்பட்டு வேலே செய்யும் நூற்றுக்கணக்கான ஊழியர்களுக்கு, சிறை ஓய்வெடுத்துக்கொள்ளும் இடமாயிருக்கிறது. மகாதேவ், அவர் கூறுவதைப் போன்று, ‘இன்னும் நல்ல கதியை அடைய அவர் ஆர்வம் கொண்டிருந்தார். ஆனல், அந்தத் தகுதியை இன்னும் அடைந்துவிடவில்லே என்றே தெரிகிறது.’

மகாதேவ், தமக்குப் பின்னல் இருந்து தம் ஸ்தானத்தில் வேலேகளேச் செய்வதற்காக இமாம் சாஹிப் அப்துல் காதிர் பாவாஜீரை நியமித்திருக்கிருர். இவர் ஒரு தென்னப்பிரிக்கா தோழர். ஆசிரமத்தின் கமிட்டியின் உபதலேவர், அதன் டிரஸ்டிகளில் ஒருவர். இமாம் சாஹிப் அதிக வயதானவர். ஆகையால், கஷ்டமான உழைப்பு அவரால் முடியாது. அவர் படிப்பில்லாதவர் என்றே சொல்லலாம். ஆனல், மிகத் தேர்ச்சி பெற்ற போர் வீரர். இறக்கும்வரையில் பம்பாய் ஜுமா மசூதியில் பிரார்த்தனே நேரத்தை அறிவிப்பவராக இருந்த பக்தி மிக்க ஒரு முஸ்லீமின் குமாரர். இவர் தென்னப்பிரிக்காவில் பல மசூதிகளில் சமயச் சடங்குகளேச் செய்பவராக இருந்ததால் இவரை இமாம் என்று அழைத்து வந்தனர். பிரார்த்தனே செய்வதிலோ, விரதங்கள் இருப்பதிலோ தவறுவதில்லே என்ற வகையில் இவர் ஒரு வைதிக முஸ்லிம். ஆனல், அதே சமயத்தில் அதிக தாராளமான மனப்பான்மையுள்ளவர். இல்லாவிடில், அவர் என்னேடு பலதரப்பட்டவர்களுக்கிடையில் சுமார் இருபது ஆண்டுகள் தொடர்ந்து வசித்திருக்க முடியாது.

ஆனால், என், எங்கள் கனவிலிருக்கும் சுயராஜ்யம், எந்த இன, சமய, வேறுபாடுகளையும் கவனிப்பதே இல்லை. அது, படித்த வர்களின், பணம் படைத்தவர்களின் ஏகபோகமும் அன்று. சுய ராஜ்யம், உழுபவனுள்பட எல்லோருக்குமானதாக இருக்க வேண்டும். ஆனால், நிச்சயமாக முடவர், குருடர், பட்டினி கிடக் கும் கோடிக்கணக்கானவர்களுக்கானதாகவே அது இருக்க வேண்டும். இமாம் சாஹிப் இப்பொழுது குஜராத்தில் ஆகியிருப் பதைப்போன்று, திடமான உள்ளமுள்ள, யோக்கியமான, நிதான முள்ள, படிக்காத ஒருவரே தேசமக்களுக்கு முதன்மையானவ ராக இருப்பதே சரி. இவரைவிட இன்னும் அதிகமாக யாருக் கும் தெரியாத நண்பரான அப்துல்லாபாய், வில்லே பார்லேயில் முதன்மையானவராகியிருக்கிறார். சுவாமி ஆனந்திற்குப் பதிலாக இவர் வந்திருக்கிறார். சுவாமி ஆனந்த், வற்றாத தமது ஆற்றலினா லும், பிரமிக்கத்தக்க தன்னலத் தியாகத்தினாலும், நவஜீவன் காரியாலயம் முற்றிலும் தரும ஸ்தாபனமேயாயினும் லாபகர மானதாகச் செய்திருக்கிறார். அந்த ஸ்தாபனம் குஜராத் இலக் கியத்திலிருக்கும் ரத்தினங்களை சாதாரண மக்கள் புரிந்து கொள்ளும்வகையில் குஜராத் முழுவதிலும் பரப்பி வருகிறது. ஆனால், இவையெல்லாம் எங்கோ நடந்துவிடும் அபூர்வ விஷ யங்கள் அன்று. இந்தியா முழுவதிலும் போராட்டத்தினால் ஏற்பட்டிருப்பதே இங்கும் நடந்திருக்கிறது.

—'யங் இந்தியா' 1—5—1930

# 28

# குண்டர்கள் ராஜ்யம்

இந்தியாவின் மற்றப் பகுதிகளில் என்ன நடந்துகொண்டிருக் கிறது என்பதற்கு குஜராத்தில் நடந்துவருவதே எடுத்துக் காட்டாக இருக்குமாயின், டயரின் அட்டூழியங்கள்கூட அவ்வளவு மோசமல்ல என்றே ஆகும். இது, மிகைபடுத்திக் கூறப்படுவ தாக இருக்கக் கூடும். ஆனால், உண்மை நிலையைச் சொல்லு வதற்கே இதைக் கூறுகிறேன். ஜாலியன்வாலா படுகொலை, ஒரேயடியாக நடந்து முடிந்துவிட்டது. ஏற்படுத்த விரும்பிய, விரும்பாத ஆகிய இரு வகையிலும் அது ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கியது.

குஜராத்தில் இப்பொழுது நடப்பதெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாகக் கொல்லுவது என்பதே. அது எந்த வகையிலும் ஓர் அபிப்பிராயத்தை உண்டாக்குவதாக இல்லை. கவனிக்காது போனால், அடியோடு ஒழுக்கக் கேட்டை உண்டாக்கிவிடுவதாக வும் ஆகக் கூடும். அது, தன்னிடம் சிக்கியவர்களை பலவீனப்

படுத்தலாம் ; நிச்சயமாக கொடுங்கோலர்களை ஒழுக்கத்தில் அடியோடு தாழ்த்திவிடும்.

எனக்கு நேரம் இருக்குமானால், சென்ற வாரச் சம்பவங்களை இப்பத்திரிகைக்குச் சுருக்கமாக எழுதுகிறேன். என்றாலும், சாட்சியத்தின் முழு விவரங்களையும் வாசகர்கள் தினப்பத்திரிகைகளிலிருந்து அறியலாம்.

மகாதேவ தேசாய், விராம்காமுக்கு தாமே நேரில் போய் வக்கீல் நண்பர்களையும் அனுப்பிய பிறகு, காட்டுமிராண்டித்தனமான சித்திரவதை நின்றுவிட்டது என்று நம்பிக்கொண்டிருந்தார். ஆனால், அப்படி நடந்துவிடவில்லை. ஒரு தொண்டர் சில நிமிடங்கள் அவருடன் இல்லாமல் தனியாக இருந்துவிட்டார். அத்தொண்டர் மீது பாய்வதற்கு, சட்டம், அமைதி என்பதன் பிரதிநிதிகளுக்கு இது ஒரு வாய்ப்பாகிவிட்டது. விராம்காமில் இதற்கு முன்னால் அகப்பட்டுக்கொண்டவர்கள் நடத்தப்பட்டது போன்றே, போலீஸார் இவரிடமும் நடந்துகொண்டார்கள்.

டாக்டர் நரசிங்கபாய் மேதா, ஓய்வு பெற்றிருக்கும் ஜுனைகத் பிரதம வைத்திய அதிகாரி. இந்த 66-வது வயதில் சத்தியாக்கிரக உணர்ச்சியினால் அவருக்கு உற்சாகம் ஏற்பட்டிருக்கிறது. அவர், தம் கண்ணால் பார்த்த விவரங்களைப் பின்வருமாறு கூறுகிறார் :

"120 சத்தியாக்கிரகிகளை வத்வான் முகாமிலிருந்து இன்று மாலை கொண்டுவந்தேன். அவர்களிடம் ஆளுக்கு 10 ராத்தல் சட்ட விரோதமான உப்பைக்கொண்ட பைகள் இருந்தன.

"இவர்களுக்கு முன்னாலிருந்துகொண்டு நான் அழைத்துச் சென்றபோது சோதனை கோஷ்டியை நானே முதலில் சந்தித்தேன். அதில் ஒரு ஐரோப்பிய அதிகாரியும், இரு இந்திய அதிகாரிகளும், சுமார் 4, 5 போலீஸ்காரர்களும் இருந்தனர். இவர்களல்லாமல் சுமார் 50 போலீஸ்காரர்கள் மாடிப் படிக்கட்டின் வாசலைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

"என் தோளில் தொங்கவிட்டிருந்த பையில் என்ன இருக்கிறது என்று என்னைக் கேட்டார்கள். 'சட்டத்தை மீறித் தயாரித்த உப்பு 10 ராத்தல்' என்றேன். 'சரி, கிழ டாக்டரே! நீர் போகலாம்' என்று சொல்லி விட்டனர். இதற்கு நான், '120 சத்தியாக்கிரகிகளைக் கொண்ட கோஷ்டிக்கு நான் தலைமைவகித்துச் செல்லுகிறேன். அவர்கள் ஒவ்வொருவரிடமும் இத்தகைய உப்புப் பை இருக்கிறது. ஆகவே அவர்களை நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள், மற்ற பிரயாணிகளைப் போலவே இவர்களும் தாராளமாகப் போக அனுமதிக்கப் போகிறீர்களா என்பதை நேரில் பார்க்க விரும்புகிறேன்' என்றேன். அதற்கு அந்த அதிகாரி, 'சரி, ஒதுங்கி ஒரு பக்கமாக இருந்து கொண்டு பாரும்' என்றார். சத்தியாக்கிரகிகள் ஒவ்வொருவராக மேலே சொன்ன சோதனை கோஷ்டியின் ஊடே போகும்படிச் செய்தனர். உடனே அந்த ஏழெட்டுப்பேரும், ஐரோப்பிய அதிகாரி உள்பட, ஒவ்வொரு சத்தியாக்

கிரகியையும் பிடித்துக்கொண்டு அவரிடமிருந்த பையைப் பறித்துக்கொண்டனர். சத்தியாக்கிரகிகளிடம் அதிக முரட்டுத்தனமாகவும் நடந்துகொண்டார்கள். ஒவ்வொரு சத்தியாக்கிரகியும் இதேபோல நடத்தப்பட்டார். இது மிகவும் மானக்கேடான செய்கையாக இருந்தது. என் வாழ்நாளெல்லாம் ஆங்கிலேயர்களைக் குறித்து உயர்வான அபிப்பிராயம் வைத்திருக்கிறேன். அறுபத்தாறு ஆண்டுகளில் இதுவே என் முதல் அனுபவம்.

"அவர்கள் செய்தது மேற்கொண்டும் என்னால் பொறுக்க முடியாது போய்விட்டபோது அவர்கள் நடத்தையை நான் ஆட்சேபித்தேன். அதற்கு அந்த அதிகாரி, 'இதைக் குறித்து வெளியில் பொதுஜனங்களிடையே பேசும், பத்திரிகைகளுக்கு எழுதும்!' என்றார். அவர்கள் முன்போல் செய்துகொண்டே இருந்தனர்!"

நியாயமல்ல என்று டாக்டர் மேதா எடுத்துச்சொன்னதற்கு என்ன அக்கிரமமான பதில் வந்திருக்கிறது என்பதைக் கவனியுங்கள். இளைஞர்களிடமிருந்து அவர்களுக்கு மதிப்பிற்குரியதான சொத்தைப் பறிக்கும் விளையாட்டு, பிரிட்டிஷ் அதிகாரிக்கும் அவருடனிருந்த ராஜவிசுவாசிகளுக்கும் சந்தோஷமான காரியமாக இருந்திருக்கிறது. அவர்களிடம் சிக்கியவர்கள் ஓடவில்லை, எதையும் ஒளிக்கவும் இல்லை என்பதை அவர்களுக்குச் சொல்லிப் பயனில்லை. நிர்வாகிகளைப் பொறுத்த வரையில் சட்டத்தின் காலதாமதத்திற்காகக் காத்துக் கொண்டிராமல், சட்டம் மதிக்கப்பட்டாக வேண்டும்.

ஆனால், கேடா ஜில்லாவில் செய்யப்பட்டிருக்கும் காட்சியுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இதுகூட ஒன்றுமே பிரமாதமல்ல என்றாகிறது. கேடாவின் வீர புத்திரர்களும் பெண்களும், நியாயமானதான அதிகாரிகள் பகிஷ்காரத்தை நன்றாகவும் வெற்றிகரமாகவும் நடத்தி வைத்திருக்கிறார்கள். தங்கள் இஷ்டப்படி நடக்கும்படி மக்களைச் செய்வது இனியும் அதிகாரிகளால் முடியவில்லை. ஒரு குற்றமும் செய்யாத பட்டதாரியும், குஜராத் வித்யாபீட பேராசிரியருமான ஒருவரை மிருகத்தனமாக அடித்திருக்கிறார்கள். போலீசார் அடிக்கிறார்கள் என்று கேள்விப்பட்டதும், அங்கே என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கவே அவர் சென்றார். அதே ஜில்லாவில் போர்ஸாத்திற்கு அருகில், சில போலீஸ்காரர்கள், ஒரு உள்ளூர் தாகூரின் உதவியையும் அவருடைய நீண்ட அரிவாள் தடிகளைக்கொண்ட ஆட்களையும் கொண்டு, எவ்வித முன்னெச்சரிக்கையும் இல்லாமல் பொதுக் கூட்டத்தின் விளக்குகளை அணைத்துவிட்டு கூட்டத்திலிருந்தவர்களை இரக்கமின்றி அடித்திருக்கிறார்கள். அக்கூட்டத்தில் பட்டிதாரிகளும் ரஜபுத்திரர்களுமே இருந்தார்கள். தங்களைத் தாமே பாதுகாத்துக் கொண்டுவிட அவர்களால் முற்றிலும் முடியும். என்றாலும் ஒரு கல்கூட வீசப்படவில்லை. ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. கட்டு திட்டத்துடன் இருக்க வேண்டும்

என்பதற்காக அவர்கள் துன்பங்களை அனுபவித்தார்கள். ஒருவர் தெய்வாதீனமாக உயிர் தப்பினர். ஏழு பேர் இன்னும் ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்கள். மொத்தம் முப்பத்தைந்து பேர் காயம் பட்டிருக்கிறார்கள் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இது, ஜாலியன்வாலாவின் கோழைத்தனமான ஒரு பதிப்பாகும்.

அகமதாபாத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு மதுபான வியாபாரி, தம் பெட்டி நாளுக்கு நாள் காலியாகிக் கொண்டு வருவதைக் கண்டு மிகுந்த ஆத்திரமடைந்தார். மறியல் செய்தவர்களை மிருகத்தனமாகத் தாக்கினர். இதில் ஒருவர் பிரக்ஞையற்றுப் போனர். மறியல் மிகவும் அமைதியாகவே நடந்தது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். எந்தவிதமான ஆர்ப்பாட்டங்கூட இல்லை. அக்கள்ளுக்கடைக்கு வந்தவர்களில் தங்களுக்குத் தெரிந்தவர்களாக இருப்போரின் பெயர்களை மாத்திரம் குறித்துக் கொண்டார்கள். இவ்விஷயத்தில் மறியல் வெற்றிகரமாக இருப்பதற்குக் காரணம், சாதியின் யந்திரம் இயங்கும்படி செய்யப்பட்டிருப்பதே. தொழிலாளரிடையே இது இப்பொழுதும் நன்றாக வேலை செய்து வருகிறது.

இந்த மிருகத்தனமான காரியத்தைத் தடுப்பதற்குச் சட்டத்தையும் ஒழுங்கையும் நிர்வகிப்பவர்கள் ஏதாவது செய்திருக்கிறார்களா? இல்லை. ரகசியத்தில் இதைக் குறித்து மகிழ்ச்சியடைகின்றனர். அவர்கள் தாராளமாக மகிழ்ச்சியடையட்டும். ஆனல், இதைச் சட்டமும் ஒழுங்கும் என்று மாத்திரம் சொல்லாமலிருக்கட்டும். இது குண்டர்கள் ராஜ்யம் என்றும் சொல்லட்டும்.

மக்களுக்குள்ள கடமை தெளிவானது. கட்டுப்பாடாகச் செய்யப்படும் இந்தக் காலித்தனங்களுக்கு, இன்னும் அதிகத் துன்பங்களை அனுபவித்துக் கொள்ளுவதன் மூலம் மக்கள் பதிலளிக்க வேண்டும். உறுதியும் சக்தியும் அவர்களுக்கு இருக்குமானல் சுதந்திரம் நிச்சயம். துன்பங்களை அனுபவிப்பதன் பலனே சுதந்திரம்; இஷ்டம்போல் நடந்து கொள்ளுவது என்பது பலாத்காரத்திலிருந்து பிறப்பது. சுதந்திரத்தை அடையவேண்டும் என்பதற்காகவே நாம் பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம். அது, சமூகத்தின் நன்மைக்காக நமக்குத் தங்கு தடைகளை விதிக்கிறது. இஷ்டம்போல் நடக்கலாம் என்பதற்காக, ஏகபோகமான சலுகைகளை அது அனுபவிக்க வேண்டும் என்பதற்காக, சமூகத்தின்மீது கஷ்டங்களைச் சுமத்துகிறது. இஷ்டம்போல் எதையும் செய்ய தங்கு தடையில்லா அனுமதிச் சீட்டைக் கொண்டது இந்த அரசாங்கம். ஏனெனில், அதன் ஒரே நோக்கம் என்றில்லாவிட்டாலும், அதன் முக்கியமான நோக்கம் இந்திய சமூகத்தைச் சுரண்டுவது என்பதே.

— 'எங் இந்தியா' - 1—5—1930

# 29

## தேசமக்களுக்குச் செய்தி

[காந்திஜி கைதியாகிவிடக் கூடும் என்ற வதந்திகள் பலமாக இருந்தன. அப்பொழுது அவர் 1930 ஏப்ரல் 9-ஆம் தேதி தண்டியில் தேச மக்களுக்குக் குஜராத்தியில் ஒரு செய்தியை விடுத்தார். அதன் மொழிபெயர்ப்பே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

நீண்ட காலமாக எதிர்பார்க்கப்பட்டுவந்த நேரம் வந்து விட்டதாகத் தோன்றுகிறது. நடு நிசியில் என் சகாக்களும் என்னுடனிருப்போரும் என்னை எழுப்பி, தாங்கள் செய்ய வேண்டியது என்ன என்பதைக் கூறும்படி கேட்டுக் கொண்டார்கள். ஆகையால், செய்தியை வெளியிடும் எண்ணம் எனக்குக் கொஞ்சமும் இல்லையாயினும், இச்செய்தியைக் கூறி எழுதிக் கொள்ளும் படி செய்கிறேன்.

இதற்கு முன்பே போதுமான அளவுக்குச் செய்திகளை வெளியிட்டிருக்கிறேன். இதற்கு முன்னால் வெளியிட்ட செய்திகளின்படி நடந்து கொள்ளுவதில் சரியான ஆதரவு இல்லையாயின், இந்தச் செய்தியினால்தான் என்ன பலன்? ஆனால், என் செய்தி வீணாகி விடவில்லை, மக்கள் அதை ஏற்று காரியங்களைச் செய்து வருகிறார்கள் என்று இன்று நடுநிசி வரையில் கிடைத்திருக்கும் தகவல்கள் என்னை நம்பும்படி செய்கின்றன.

குஜராத் மக்கள், ஒன்றுபட்டு எழுந்துவிட்டார்கள் என்றே தோன்றுகிறது. ஆட் என்ற இடத்திலும் பீம்ராடிலும் ஆயிரக் கணக்கான ஆண்களும், பெண்களும் அச்சமின்றி உப்புச் சட்டத்தை மீறியதை என் கண்ணாலேயே பார்த்தேன். மிகப் பெருந் திரளாக மக்கள் கூடியிருந்தபோதிலும், விஷமத்தின் சமிக்ஞையையோ, பலாத்காரத்தின் சமிக்ஞையையோ நான் காணவில்லை. அரசாங்க அதிகாரிகள் எல்லை மீறி நடந்துகொண்டிருந்த போதிலும், மக்கள் அமைதியோடும், அகிம்சையோடும் நடந்து கொண்டார்கள்.

இங்கே குஜராத்தில் எத்தனையோ தியாகங்களைச் செய்திருக்கும் பொதுஜனத் தலைவர்கள் ஒருவர்பின் ஒருவராகக் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். என்றாலும், மக்கள் கொஞ்சமும் பலாத்காரமின்றி ஒழுங்காக நடந்துகொண்டு வருகின்றனர்; பீதியடைந்துவிட மறுத்திருக்கிறார்கள். மேலும் மேலும் அதிகத் தொகையினர் சட்ட மறுப்புச் செய்வதில் ஈடுபடுவதன் மூலம்

தலைவர்கள் சிறைபட்டதை மக்கள் கொண்டாடியுமிருக்கிறார்கள். இப்படித்தான் செய்ய வேண்டும்.

நல்ல வேளையில் ஆரம்பமாகியிருக்கும் இப்போராட்டம், இதே அகிம்சை உணர்ச்சியோடு கடைசி வரையில் தொடர்ந்து நடத்தப்படுமானால், வெகு சீக்கிரத்திலேயே நாட்டில் பூரண சுயராஜ்யம் ஏற்பட்டு விடுவதை நாம் காண்பதோடு, இந்தியாவின் பெருமைக்கும் பழங்காலச் சிறப்புக்கும் ஏற்றதான சிறந்த படிப்பினையை உலகிற்கு நாம் கொடுத்தவர்களுமாவோம்.

தியாகமின்றி அடைந்த சுயராஜ்யம் நீடித்து இராது. ஆகையால், மக்கள் தங்களால் முடிந்த மிக அதிகமான தியாகத்தைச் செய்யத் தயாராக வேண்டும் என்று விரும்புகிறேன். உண்மையான தியாகத்தில் கஷ்டங்களை அனுபவிப்பதெல்லாம் ஒரே பக்கத்திலேயே இருக்கிறது. எனவே பிறரைக் கொல்லாமல் கொல்லப்படுவது, உயிரை இழப்பதால் வாழ்வை அடைவது ஆகிய கலையில் ஒருவர் தேர்ச்சி பெற்றாக வேண்டியிருக்கிறது. இந்த மந்திரத்தை அனுசரித்து இந்தியா நடந்துகொள்ளுமாக.

இப்பொழுது இந்தியாவின் சுயமதிப்பும், அதனுடைய எல்லாமுமே, சத்தியாக்கிரகியின் கையிலிருக்கும் ஒரு பிடி உப்பில் அடங்கியிருக்கிறது. ஆகையால் அந்த உப்பை வைத்திருக்கும் கை அடித்து நொறுக்கப்பட்டாலும், அந்த உப்பை தொண்டர் தானாக விட்டுக் கொடுத்துவிடுவது என்பது மாத்திரம் கூடாது.

அரசாங்கம், தான் நாகரிகமுள்ள அரசாங்கம் என்று கூறிக் கொள்ளுமாயின், தங்களுக்கு வேண்டிய உப்பைச் சட்ட விரோதமாகத் தயாரித்துக் கொள்ளுவோரைச் சிறையில் அது அடைக்கட்டும். சட்ட மறுப்பாளர்கள், தாங்கள் கைதியாகிவிட்ட பிறகு, தங்கள் உடல்களைச் சிறை அதிகாரிகளிடம் ஒப்படைத்து விடுவதால் தங்களிடமிருக்கும் உப்பையும் சந்தோஷமாக ஒப்படைத்து விடுவார்கள்.

ஆனால், ஏழைகளிடமிருந்து உப்பைப் பறிப்பதற்கும், தீமை செய்யாதவர்களான சத்தியாக்கிரகிகளின் கைகளிலிருந்து உப்பைப் பறிப்பதற்கும் பலாத்காரத்தை உபயோகிப்பது, அசல் காட்டுமிராண்டித்தனமாவதோடு இந்தியாவுக்கும் அவமதிப்பாகும். உப்பைப் பிடித்திருக்கும் கையிலிருந்து அதை விடாமல் நம் கை முறிக்கப்படுவதற்கு அனுமதிப்பதன் மூலம் இந்த அவமதிப்புக்குப் பதில் சொல்லவேண்டும். அப்பொழுதும் கூட, இத்தகைய துன்பங்களுக்கு ஆளாகிறவர்களோ, அவர்களுடைய தோழர்களோ, தவறு செய்கிறவர்கள் மீது தங்கள் உள்ளங்களில் கோபம் என்பதையே வைக்கக்கூடாது. யோக்கியமில்லாத காரியத்திற்கு யோக்கியமில்லாத காரியத்தினால் பதிலளிக்கக் கூடாது. ஆனால், கடவுளின் பெயரால் எல்லாக் கஷ்டங்

களையும் கண்ணியமாகவும், அமைதியோடும் சகித்துக் கொள்ளு வதன் மூலமே பதிலளிக்க வேண்டும்.

நான் கைது செய்யப்படுவதைக் குறித்து என் சகாக்களோ, பொது மக்களோ கவலையடைந்துவிட வேண்டாம். ஏனெனில், இந்த இயக்கத்தை நடத்திச் செல்வது கடவுளே யன்றி நான் அல்ல. அவர் என்றும் நம் உள்ளங்களிலெல்லாம் இருந்து வரு கிறார். அவரிடம் நமக்கு நம்பிக்கை மாத்திரம் இருக்குமானால், அவர் நம்மைச் சரியான வழியில் நடத்திச் செல்வார். நாம் போக வேண்டிய வழி இப்பொழுதே நமக்காக வகுக்கப்பட்டிருக் கிறது. சட்டத்தை மீறி ஒவ்வொரு கிராமமும் உப்பு எடுக்கட் டும், அல்லது தயாரிக்கட்டும். சகோதரிகள், மதுபானக் கடை களிலும், அபினிக் கடைகளிலும், அந்நியத் துணி வியாபாரிகளின் கடைகளிலும் மறியல் செய்ய வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் சிறுவர்களும் வயோதிகர்களும் தக்ளியைச் சுற்றி நூற்க வேண்டும். ஏராளமான நூலைத் தினமும் நெய்து வரவேண்டும். அந்நியத் துணிகளைக் கொளுத்திவிட வேண்டும். ஹிந்துக்கள் தீண்டாமையை ஒழித்துவிட வேண்டும். ஹிந்துக்கள், முஸ்லிம் கள், சீக்கியர்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர் ஆகிய யாவரும் ஒற்றுமை உள்ளத்தைப் பெறவேண்டும். சிறுபான்மை யோருக்குத் திருப்தியளித்து விட்டது போக மிஞ்சியதைக் கொண்டு பெரும்பான்மையினர் திருப்தியடையட்டும். அரசாங் கப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளிலிருந்து மாணவர்கள் வெளி யேறட்டும். அரசாங்க உத்தியோகஸ்தர்கள், ராஜிநாமாச் செய்துவிட்டு மக்களுக்குச் சேவை செய்வதில் ஈடுபடட்டும். அப்பொழுது பூரண சுயராஜ்யம் நம் கதவை வந்து தட்டுவதை நாம் காண்போம்.

'எங் இந்தியா' -8—5—1930

## 30

# வைஸ்ராய்க்கு இரண்டாவது கடிதம்

[நாடெங்கும் தாண்டவமாடிய அடக்குமுறை அட்டூழி யங்களைக் கண்ட காந்திஜி, தர்சனாவில் இன்னும் அதிகத் திட்டமான வகையில் உப்புச் சட்டத்தை மீறுவது என்று முடிவு செய்தார். இதற்காக வைஸ்ராய்க்கு ஒரு நோட்டீ ஸும் தயாரிக்கப்பட்டது. கைது செய்யப்படுவதற்கு முன் னால் வைஸ்ராய்க்கு அனுப்புவதற்குக் காந்திஜி தயாரித்த கடிதமே கீழே கொடுக்கப்படுகிறது:]

அன்புள்ள நண்பரவர்களுக்கு,

கடவுள் சம்மதமிருந்தால் .....ஆம் தேதி தர்சனைவுக்குப் புறப்பட்டு, என் சகாக்களுடன்......ஆம் தேதி அங்கே போய், உப்பளங்களை எங்களிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்று கேட்பது என்பதே என் நோக்கம். தர்சனை, தனிப்பட்டவரின் சொத்து என்று பொது மக்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது இது வெறும் ஏமாற்றும் தந்திரமே யாகும். வைஸ்ராயின் மாளிகையைப் போன்றே இதுவும் சரியானபடி அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருந்து வருகிறது. அதிகாரிகளிடம் முன்கூட்டி அனுமதி பெற்றாலன்றி, அங்கிருந்து ஒரு சிட்டிகை உப்பையும் எடுத்துப் போக முடியாது.

விளையாட்டாகவும், விஷமத்தனமாகவும் படையெடுப்பு என்று கூறப்படும் இதை மூன்று வகைகளில் நீங்கள் தடுத்து விட முடியும்:

1. உப்பு வரியை நீக்கிவிடுவதனால் தடுக்கலாம்.

2. கைது செய்யப்பட்டுவிடும் ஒவ்வொருவருக்கும் பதிலாக நாடு வேறு ஒருவரை வைத்துவிட முடியும் என்று நம்புகிறேன். அப்படிச் செய்ய நாட்டினால் முடியாது போனால், என்னையும் என் கோஷ்டியினரையும் கைது செய்வதனால் தடுக்கலாம்.

3. உடைக்கப்படும் ஒவ்வொரு தலைக்கும் பதிலாக வேறு தலை வந்துவிடும் என்று நம்புகிறேன். அப்படி வரவில்லையானால் குண்டர் ஆட்சியைக்கொண்டே தடுத்துவிடலாம்.

இக் காரியத்தைச் செய்வது என்று தயக்கத்துடனேயே முடிவு செய்யப்பட்டிருக்கிறது. சட்ட மறுப்பாளருடன் அரசாங்கம் நாகரிகமான முறையில் போராடும் என்று நம்பிக் கொண்டிருந்தேன். சட்ட மறுப்பாளர்கள் விஷயத்தில் சாதாரண சட்ட முறைகளை அனுசரிப்பதோடு அரசாங்கம் திருப்தியடைந்திருக்குமாயின், நான் எதுவுமே சொல்லுவதற்கில்லை. இதற்குப் பதிலாக, தலைவர்களாக இருப்பவர்கள்மீது அநேகமாக சட்ட முறையை அனுசரித்து நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கும் போது, சாதாரணமானவர்கள் மிருகத்தனமாகத் தாக்கப்பட்டிருக்கிறார்கள்; சில இடங்களில் மிகக் கேவலமாகவும் தாக்கப்பட்டிருக்கின்றனர். எங்கோ சில இடங்களில் நடந்துவிட்டவை என்று இவை இருக்குமானால், கவனிக்காமல் நான் விட்டிருக்க முடியும். ஆனால், குஜராத்தில் நடந்திருப்பவைகளுக்கு என்னிடம் போதுமான சாட்சியங்கள் இருக்கின்றன. வங்காளம், பீகார், உத்கல், ஐக்கிய மாகாணம், டில்லி, பம்பாய் ஆகிய இடங்களிலிருந்து வந்திருக்கும் தகவல்களும் இதையே ஊர்ஜிதம் செய்கின்றன. ஆத்திரமூட்டப்பட்ட காரியம் எதுவும் நடக்காமலிருந்தும் அனாவசியமாக கராச்சி, பெஷாவர், சென்னை ஆகிய இடங்

களில் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடந்திருக்கின்றன. சர்க்காருக்கு ஒரு மதிப்பும் இல்லாததும், ஆனால், தொண்டர்களுக்கு அதிக மதிப்பு வாய்ந்ததுமான உப்பைத் தொண்டர்கள் கொடுத்து விடும்படிச் செய்வதற்காக எலும்புகள் முறிக்கப்பட்டிருக்கின்றன; தொண்டர்களின் மர்ம ஸ்தானங்கள் பிசையப்பட்டிருக்கின்றன. மதுராவில் ஓர் உதவி மாஜிஸ்டிரேட், பத்து வயதுப் பையனின் கையிலிருந்து தேசீயக் கொடியைப் பறித்தார் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் சட்ட விரோதமாகப் பறித்த கொடியைத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்று கூட்டத்தினர் கேட்டபோது கொஞ்சமும் இரக்கமின்றி அவர்கள் அடிக்கப்பட்டார்களாம். அக்கொடி திரும்பக் கொடுக்கப்பட்டு விட்டதிலிருந்து குற்றமுள்ள நெஞ்சு வெளிப்பட்டுவிட்டது. வங்காளத்தில் உப்பு சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டிருப்போரும், அடிபட்டவர்களும் சிலரே என்று தெரிகிறது. ஆனால், தொண்டர்கள் கைகளிலிருந்து கொடிகளைப் பறிப்பதற்காக, எண்ணிப் பார்க்கவும் சகிக்காத கொடுமைகள் செய்யப்பட்டிருக்கின்றனவாம். நெல் வயல்கள் தீயிட்டு எரிக்கப்பட்டிருக்கின்றன; உணவுக்கானவைகளைப் பலவந்தமாக எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்கள். கறிகாய்க் கடைக்காரர்கள் அதிகாரிகளுக்குக் கறிகாய்களை விற்க மறுத்துவிட்டார்கள் என்பதற்காக, குஜராத்தில் ஒரு கறிகாய் மார்க்கெட்டின்மீது படையெடுத்துப் போய் அக்கிரமஞ் செய்திருக்கின்றனர். இக்காரியங்கள் பொது ஜனங்களின் கண் முன்னால் நடந்திருக்கின்றன. என்றாலும் அவர்கள், காங்கிரஸின் ஆக்ஞையை முன்னிட்டு எதிர்த்துத் தாக்கிவிடாமல் உடன்பட்டு இருந்திருக்கிறார்கள். சத்தியப் பிரதிக்ஞை கொண்டவர்களால் கூறப்பட்டிருக்கும் இந்த விவரங்களை நம்பும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இவை உண்மையல்ல என்று பெரிய அதிகாரிகள் கூறும் மறுப்புக்கள், பர்டோலி விஷயத்தைப் போலவே, பொய்யானவை என்பது நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. சென்ற ஐந்து வாரங்களில் கூட, பொதுஜனங்களுக்காகப் பொய்களைப் பிரசுரிக்க அதிகாரிகள் தயங்கவில்லை என்பதைக் கூற வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். குஜராத்தில் கலெக்டர் ஆபீஸ்களிலிருந்து வெளியான கீழ்க்கண்ட அறிவிப்புகளை மாதிரிக்காகக் குறிப்பிடுகிறேன்:

1. "வயது வந்தவர்கள் வருடத்திற்கு 5 ராத்தல் உப்பு உபயோகிக்கிறார்கள். இதற்கு வருடத்திற்கு 3 அணா வரி செலுத்துகிறார்கள்...அரசாங்கத்திற்கு இதில் இருக்கும் ஏகபோக உரிமையை எடுத்துவிட்டால், மக்கள் உப்புக்கு அதிக விலை கொடுக்கவேண்டியிருக்கும். அதோடு இந்த ஏகபோக உரிமையை நீக்கியதால் அரசாங்கத்திற்கு ஏற்படும் நஷ்டத்திற்கு ஈடு செய்ய வேண்டியும் இருக்கும்...கடற்கரையிலிருந்து நீங்கள் எடுக்கும் உப்பு சாப்பாட்டிற்கு உபயோகிக்கக்கூடியது அல்ல. ஆகையால், அரசாங்கம் அந்த உப்பை நாசம் செய்துவிடுகிறது."

2. "இந்நாட்டில் கையினல் நூற்பதை அரசாங்கம் அழித்துவிட்டது என்று ஸ்ரீ காந்தி கூறுகிருர். ஆனல், இது உண்மையல்ல என்பது ஒவ்வொரு வருக்கும் தெரியும். ஏனெனில், நாடு முழுவதிலும் கையினல் நூற்பது நடந்து கொண்டிராத கிராமம் ஒன்றுகூட இல்லை. மேலும், ஒவ்வொரு மாகாணத் திலும் பஞ்சு நூற்போருக்கு உயர்ந்த முறைகள் காட்டப்பட்டிருக்கின்றன. அவர்களுக்குச் சிறந்த கருவிகள், குறைந்த விலையில் கொடுக்கப்பட்டிருக் கின்றன. இவ்வாறு அரசாங்கம் உதவி செய்திருக்கிறது."

3. "அரசாங்கம் வாங்கியிருக்கும் கடனில் ஒவ்வொரு ஐந்து ரூபாய்க் கும் நான்கு ரூபாய்களைப் பொது மக்களுக்கு நன்மையான காரியங்களுக்கே செலவிட்டிருக்கிறது."

வெளியிடப்பட்டிருக்கும் வெவ்வேருன மூன்று பிரசுரங்களி லிருக்கும் இந்த மூன்று வகையான கூற்றுக்களை நான் எடுத்துக் கூறியிருக்கிறேன். இந்தக் கூற்றுக்கள் ஒவ்வொன்றும் நன்ருகத் தெரிந்த பொய்கள் என்பதைத் துணிந்து கூறுவேன். ஒவ்வொரு வரும் உபயோகிப்பதாகக் கூறப்படும் உப்பின் அளவு, கூறப்பட் டிருப்பதற்கு மூன்று மடங்கு அதிகம். ஆகையால், சந்தேகத்திற்கு இடமின்றித் தலை வரியேயான உப்பு வரி, ஒவ்வொருவருக்கும் வருடத்திற்கு 9 அணு ஆகிறது. இந்த வரி, வயதோ, உடல் நிலையோ எப்படி இருந்தாலும், ஆண், பெண், குழந்தை, வீட்டுக் கால்நடைகள் ஆகியவைகளுக்கெல்லாம் விதிக்கப்படுகிறது.

ஒவ்வொரு கிராமத்திலும் ராட்டை இருக்கிறது என்பதும், நூற்கும் இயக்கத்திற்கு எந்த முறையிலோ, உருவிலோ அரசாங் கம் ஆதரவளிக்கிறது, உதவியளிக்கிறது என்பதும் மிகக் கேவலமான புளுகு. அரசாங்கம் கடன் வாங்கும் ஒவ்வொரு ஐந்து ரூபாயிலும் நான்கு ரூபாயைப் பொது மக்களின் நன்மைக் காகவே அது செலவிடுகிறது என்ற பொய்யை நிதி நிபுணர்க ளாக இருப்போர் நன்ருக நிரூபிக்க முடியும். ஆனல், அன்ருடம் அரசாங்கத்துடன் தொடர்பு வைத்திருப்பதில் நடந்துகொண் டிருக்கும் பொய்களில் ஜனங்கள் அறிந்திருப்பதில் சில உதார ணங்களே மேலே கண்ட பொய்கள். சில தினங்களுக்கு முன்னல் ஒரு குஜராத்தி கவிஞர், வீரமுள்ளவர், அதிகாரிகளின் பொய் சாட்சியம் காரணமாகத் தண்டனையடைந்தார். வழக்கில் கூறப்படும் நேரத்தில் தாம் இன்னெரு இடத்தில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்ததாக அவர் உறுதியாகக் கூறியும் அவருக்குத் தண்டனை விதித்திருக்கிருர்கள்.

அதிகாரிகள் எந்த நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளா திருக்கும் விஷயங்களைக் குறித்து இனி கவனிப்போம். அமைதி யாகவே மறியல் செய்தனர் என்று அதிகாரிகளே ஒப்புக்கொள் ளும் மறியல் தொண்டர்களை மதுபானக் கடைக்காரர்கள் அடித் திருக்கிருர்கள். சட்ட விதிகளை மீறியும் மதுபானங்களை விற்றிருக் கின்றனர். ஆனல், தொண்டர்களை அடித்ததைக் குறித்தோ,

சட்ட விரோதமாக மதுவை விற்றதைக் குறித்தோ அதிகாரிகள் கவனிக்கவே இல்லை. அடித்ததைப் பொறுத்த வரையில், அது எல்லோருக்கும் தெரிந்திருந்த போதிலும், தங்களிடம் எந்தப் புகாரும் வரவில்லை என்று கூறி அதிகாரிகள் தப்பித்துக்கொண்டு விடப் பார்ப்பார்கள்.

இப்பொழுது நீங்கள் நாட்டின் மீது ஒரு புது பத்திரிகை அவசரச் சட்டத்தைப் புகுத்தியிருக்கிறீர்கள். இந்தியா இது வரை கண்டிருக்கும் சட்டங்களையெல்லாம் இது மிஞ்சிவிட்டது. பகவத் சிங்கையும் மற்றவர்களையும் விசாரணை செய்வதில் சாதாரண சட்ட முறையை ரத்துச் செய்துவிட்டு, சட்டத்தின் தாமதத்தின் மூலம் ஒரு குறுக்கு வழியைக் கண்டுபிடித்திருக்கிறீர்கள். இந்த அதிகார நடவடிக்கைகள், நடவடிக்கை எடுக்காமலிருந்துவிடுவது ஆகியவைகளை, முக்காடிட்டு மறைத்திருக்கும் ராணுவச் சட்டம் என்று நான் சொல்லுவதில் ஆச்சரியப்பட வேண்டியது என்ன இருக்கிறது? என்றாலும், இது போராட்டத்தின் ஐந்தாவது வாரமே!

எனவே, இப்பொழுதுதான் ஆரம்பமாகியிருக்கும் பயங்கர ஆட்சி இந்தியாவெங்கும் அதிகப்பட்டு விடுவதற்கு முன்னால், ஒரு துணிகரமான காரியத்தில் நான் இறங்கியாக வேண்டும் என்று கருதுகிறேன். சாத்தியமானால், உங்கள் கோபத்தை இன்னும் கடுமையானதாக இருந்தாலும் தூயவழியில் திருப்ப வேண்டும் என்று கருதுகிறேன். நான் இதுவரை விவரித்தவையெல்லாம் உங்களுக்குத் தெரியாமலிருக்கும். இவைகளை நீங்கள் நம்பாமலிருக்கவும் கூடும். இவைகளை நீங்கள் கட்டாயம் கவனிக்கவேண்டும் என்றுதான் உங்களுக்குச் சொல்லமுடியும்.

மக்கள் சித்திரவதையையும், தங்கள் சொத்து நாசமாக்கப்படுவதையும் அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள். அவர்களை நடவடிக்கையில் ஈடுபடும்படிச் செய்து, அரசாங்கம் தனது சுயசொரூபத்தில் வெளிப்படும்படிச் செய்ததற்கு நானே முக்கியமான காரணஸ்தனாக இருக்கக்கூடும். ஆகவே, இப்பொழுது இருக்கும் நிலைமையில் சாத்தியமான வரையில் முழுவதும் சத்தியாக்கிரக வேலைத் திட்டத்தை அமல் நடத்துவதற்கு என்னால் முடிந்ததையெல்லாம் நான் செய்தேன் என்பதை மக்கள் உணராது போகலாம். எனவே, அதிகாரத்தின் ஆவேச சொரூபம் முழுவதையும் காட்டிவிடும்படி உங்களை நான் அழைக்காதிருந்தால், என்னைப் பொறுத்த வரையில் அது கோழைத்தனமே ஆகும் என்று உணருகிறேன்.

ஏனெனில், சத்தியாக்கிரக சாஸ்திரத்தின்படி, அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் அது எவ்வளவுக்கெவ்வளவு அடக்குமுறையையும் அக்கிரமங்களையும் அதிகமாகச் செய்கிறதோ, அவ்வளவுக்கு அதிகமாக அவைகளுக்கு ஆளாகிறவர்கள் கஷ்டப்

படுவதற்கு உடன்பட வேண்டும். மிகக் கடுமையான துயரங் களுக்குத் தாங்களே உடன்படுவதற்கு நிச்சயமான பலன், வெற்றியே.

நான் அனுசரிக்கும் முறைகளினால் ஏற்படக்கூடிய ஆபத்துக் களை அறிவேன். ஆனால், நான் கூறுவதை நாடு தவறாக எண்ணிக் கொண்டு விடாது என்று கருதுகிறேன். நான் நினைப்பதை, கருதுவதைக் கூறுகிறேன். சென்ற பதினைந்து ஆண்டுகளாக நான் இந்தியாவில் ஒன்றைக் கூறி வருகிறேன். இந்தியாவுக்கு வெளியிலும் இருபது ஆண்டுகளுக்கு மேலாக அதையேதான் நான் கூறிவந்திருக்கிறேன். பலாத்காரத்தை வெல்லுவதற்கு ஒரே வழி, தூய, கலப்பில்லாத அகிம்சையே என்பதுதான் நான் சொல்லி வந்திருப்பதெல்லாம். ஒவ்வொரு பலாத்காரச் செயலும் சொல்லும், எண்ணமும், அகிம்சைச் செயலின் முன்னேற்றத்தைக் கெடுத்துவிடும் என்றும் கூறிவருகிறேன். இவ்விதம் திரும்பத் திரும்ப எச்சரிக்கை செய்திருந்தும் மக்கள் பலாத்காரத்தில் இறங்கிவிடுவார்களாயின், இன்னொரு மனிதர் செய்துவிடும் காரியங்களுக்கு ஒவ்வொரு மனிதரையும் தவிர்க்க முடியாமல் பொறுப்பாளியாக்குவதைத் தவிர, இதற்கு நான் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியாது. ஆனால், பொறுப்பைப் பற்றிய விஷயம் ஒருபுறமிருக்க, உலகத்தின் மகான்கள் சொன்னபடி அகிம்சை பெரிய சக்தியாகவே இருக்குமானால், அதைக்கொண்டு வேலை செய்வதில் எனக்கு இருக்கும் பரந்த அனுபவத்தை நானே பொய்யாக்கிக்கொண்டு விடக்கூடாது. என்றால், எந்தக் காரணத்தை முன்னிட்டும் நடவடிக்கையை ஒத்திவைக்க நான் துணியமாட்டேன்.

ஆனால், மேற்கொண்டு காரியங்களைச் செய்வதைத் தவிர்ப் பதற்கு நான் தயாராக இருப்பேன். ஆகையால், உப்பு வரியை ரத்துச் செய்துவிடுமாறு உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். உங்கள் நாட்டின் சிறந்தவர்கள், ஏகோபித்த முறையில் அவ்வரி யைக் கண்டித்திருக்கிறார்கள். சட்ட மறுப்பினால் தெரிவித்திருப் பது போல் அந்த வரி, எல்லோருடைய ஆட்சேபத்தையும் வெறுப்பையும் அடைந்திருக்கிறது என்பதையும் நீங்கள் கவனிக்கத் தவறியிருக்கமாட்டீர்கள். நீங்கள் விரும்பும் அளவுக் குச் சட்ட மறுப்பை நீங்கள் எவ்வளவு வேண்டுமானாலும் கண்டிக் கலாம். சட்ட மறுப்புக்குப் பதிலாக பலாத்காரப் புரட்சியை நீங்கள் விரும்புவீர்களா? சட்ட மறுப்பு பலாத்காரத்திலேயே போய் முடியும் என்று நீங்கள் முன்பு கூறியிருப்பதைப் போன்றே நீங்கள் சொல்லிவிடுவதாயின், சரித்திரம் ஒரு தீர்ப்பைக் கூறும். பிரிட்டிஷ் அரசாங்கம் அகிம்சையைப் புரிந்து கொள்ளாததனால், அதைச் சகிக்காதுபோய், தான் புரிந்துகொள்ளக் கூடியதும், சமாளிக்கக்கூடியதுமான பலாத்காரத்தை அனுசரிக்கும்படி மனித சுபாவத்தைக் கட்டாயப்படுத்திவிட்டது என்றே

சரித்திரம் தீர்ப்புக் கூறும். ஆனால், என்ன தான் ஆத்திரமூட்டப் பட்டாலும், பலாத்காரத்தில் இறங்கும்படிச் செய்துவிடும் எல்லாக் கவர்ச்சிகளையும், ஆத்திரமூட்டப்படும் காரியங்களையும் சமாளித்துக்கொள்ளும் புத்திசாலித்தனத்தையும் பலத்தையும் கடவுள் மக்களுக்கு அளிப்பார் என்றே நம்புகிறேன்.

ஆகையால், உப்பு வரியையும், தனிப்பட்டவர்கள் உப்பு தயாரித்துக் கொள்ளுவதற்கு இருக்கும் தடையையும் நீக்கிவிடு வதன் அவசியத்தை நீங்கள் உணராதுபோனால், என் கடிதத்தின் ஆரம்பத்தில் கூறியிருக்கும் யாத்திரையை, நான் விரும்பாவிட்டா லும், நான் ஆரம்பித்தே ஆகவேண்டும்.

உங்கள் உண்மையுள்ள நண்பன்,

**மோ. க. காந்தி,**

—'எங் இந்தியா' - 8—5—1930

# 31

# மகாத்மா கைதியானார்

*[1930 மே 12-ஆம் தேதி அதிகாலையில் மகாத்மா காந்தி, சூரத் ஜில்லாவில் காராடி முகாமில் கைதியானார். அவர் கைது செய்யப்பட்டதைக் குறித்து மீராபென் எழுதிய விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]*

நடுநிசி. அவரைத் திருடிக்கொண்டு போவதற்குத் திருடர் கள் போல் அவர்கள் வந்தார்கள். ஏனெனில், "அவரைப் பிடிக்க முற்பட்டதுமே ஏராளமான மக்களைக் குறித்து அஞ்சினார்கள். ஏனெனில், அவரை மகானாகவே கருதினார்கள்."

இரவு 12-45 மணிக்கு சூரத் ஜில்லா மாஜிஸ்டிரேட்டும், கைத்துப்பாக்கிகளுடன் இரு இந்திய போலீஸ் அதிகாரிகளும், துப்பாக்கிகளுடன் சுமார் முப்பது போலீஸ்காரர்களும் திடீரென்று, சந்தடியில்லாமல் அமைதியோடிருந்த சிறு மதில் இருந்த அந்த இடத்திற்கு வந்தார்கள். அங்கே காந்திஜியும் அவருடைய சத்தியாக்கிரகிகளும் தூங்கிக்கொண்டிருந்தனர். அவர்கள் உடனே இந்தக் கோஷ்டியினரைச் சூழ்ந்து கொண் டார்கள். ஆங்கில அதிகாரி காந்திஜியின் படுக்கைக்கு அருகில் சென்று 'டார்ச்' விளக்கு வெளிச்சம் அவர் முகத்தில் படும்படிச் செய்து, "நீங்கள் மோகன்தாஸ் கரம்சந்திர காந்தியா?" என்று கேட்டார்.

“ உங்களுக்கு நான் வேண்டுமா ?” என்று காந்திஜி அமைதியாகக் கேட்டார். “ காலைக் கடன்களை முடித்துக்கொள்ள தயவு செய்து அவகாசம் கொடுங்கள் ” என்றார்.

காந்திஜி பல் துலக்க ஆரம்பித்தார். அதிகாரிகள், கையில் கடிகாரத்துடன் அவரைப் பார்த்துக்கொண்டே நின்றனர். அப்பொழுது காந்திஜி, தம்மைக் கைது செய்ய வாரண்டு இருக்கிறதா என்று கேட்டார். உடனே மாஜிஸ்டிரேட் கீழ்க்கண்ட உத்தரவைப் படித்தார் :

“மோகனதாஸ் கரம்சந்திர காந்தியின் நடவடிக்கைகள் பயப்பட வேண்டியவைகளாக இருப்பதாக சபையோடுகூடிய கவர்னர் கருதுவதால், அந்த மோகனதாஸ் கரம்சந்திர காந்தியை 1827–ஆம் வருடம் 25–ஆம் தேதி ரெகுலேஷன்படி தடுப்புக்காவல் சிறையில் வைக்க கவர்னர் உத்தரவிடுகிறார். சர்க்கார் விரும்புகிற வரையில் அவர் சிறைத் தண்டனையை அனுபவிக்க வேண்டும். அவரை உடனே எராவ்டா மத்திய சிறைக்குக் கொண்டுபோக வேண்டும் என்றும் உத்தரவிடுகிறார்.”

காலைக் கடன்கள் முடிந்துவிட்டன. அவசியமான சில சாமான்களும் எடுத்துக்கொள்ளப்பட்டன. அவரிடமிருந்த காகிதங்கள் முதலியன, அவருடைய கோஷ்டியிலிருந்த ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்டன. பிறகு அதிகாரிகளைப் பார்த்து, “ பிரார்த்தனை செய்வதற்காக இன்னும் சில நிமிட நேரம் கொடுங்கள் ” என்றார். இது அனுமதிக்கப்பட்டது. உடனே, காந்திஜி எழுந்து நின்று தமது சகாக்களுடன் பிரார்த்தனையைச் செய்தார். அவர்களைச் சுற்றிப் போலீஸார் நின்றுகொண்டிருந்தார்கள்.

பிரார்த்தனை முடிந்ததும் அவரை அவசரமாக வெளியே அழைத்துச் சென்றனர். ஒரு மோட்டார் லாரியில் அவரை ஏற்றினார்கள். மூன்று அதிகாரிகளும் சுமார் எட்டு போலீஸ்காரர்களும் உடன் செல்ல அவரைக் கொண்டு போயினர்.

தந்தி, டெலிபோன் போக்குவரத்துக்களெல்லாம் துண்டிக்கப்பட்டுவிட்டன. பாட்டைகளிலெல்லாம் போலீஸ் காவல் இருந்தது.

வேகம், சந்தடியில்லா ரகசியம், விசாரணை இல்லை, நீதி இல்லை.

அரசாங்கம் தனக்கு இஷ்டமானதைச் சொல்லிக்கொண்டிருக்கிறது. குற்றம் சாட்டப்பட்டிருப்பவரோ, சிறை அறையின் நிசப்தத்தில் மூழ்கி இருக்கிறார்.

அவருடைய மெலிந்த உடலை அவர்கள் தூக்கிச் செல்லலாம், சிறையிலும் போட்டுவிடலாம். பலமான சிறைச் சுவர்களைக்

கொண்டு அவருடைய தூய குரல் கேட்க முடியாதபடிச் செய்து விடலாம். ஆனல், மகத்தான ஆன்மாவை அவர்கள் அலட்சியம் செய்துவிட முடியாது. அதன் பிரகாசம் இவ்வுலகத்திலுள்ள எல்லாத் தடைகளையும் ஊடுருவிச் செல்லும். அதை அடக்கிவிட அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு முயற்சிக்கிருர்களோ அவ்வள வுக்கு மேலும் மேலும் அதிக ஒளியுடன் அது பிரகாசித்தே தீரும். அதன் பிரகாசம் இந்தியாவில் மாத்திரமல்ல, உலகம் முழு வதிலும் நிறைந்திருக்கும்.

ஓ இந்தியாவே! இந்தியாவே, இது உங்களுக்குப் பெரும் சோதனை வேளை. வெற்றி, சமாதானப் பாதையில் கடவுள் உங்களை நடத்திச் செல்வாராக.

மனிதரின் எல்லாச் சொற்களாலும் விவரிக்க முடியாத அன்பினலும், அறிவினலும் அந்த மகான் உங்களை நேசிக்கிருர்; அறிந்திருக்கிருர். சத்தியமும், அகிம்சையுமே உங்களுக்கு வழி என்பதையும் அவர் உங்களுக்குக் காட்டியிருக்கிருர். தூய்மை யான அந்த வழியில் உறுதியுடனிருக்கும் பலமும் தீரமும் உங்க ளுக்கு இருந்தால், சுதந்திரம் உங்களுக்குக் கிட்டத்திலேயே இருக்கிறது என்றும் அவர் உங்களுக்குச் சொல்லியிருக்கிருர். ஆண்டவன் உங்களுக்கு அந்தப் பலத்தை அளித்து, உங்களுக்கு அந்தத் தீரம் நிறைந்திருக்கும்படியும் அருள்புரிவாராக.

—' எங் இந்தியா ' - 8—5—1930

## 32

# மகாத்மா கைதியான பிறகு

[மகாத்மா காந்தி கைதியானதும் நாடெங்கும் வேலை நிறுத் தங்களும் ஹர்த்தால்களும் நடந்தன. பம்பாயில் மாத்திரம் சுமார் ஐம்பதினையிரம் ஜவுளி மில் தொழிலாளர்கள் வேலை நிறுத் தம் செய்தனர். ரெயில்வே தொழிலாளர்களும் கலந்து கொண் டார்கள். பிரம்மாண்டமான ஊர்வலமும் நடந்தது. அது அவ்வளவு பெரிதாக இருந்ததால் போலீஸார் தலையிடாமல் ஒதுங்கி யிருந்து விட்டார்கள். ஜவுளி வியாபாரிகள் ஆறு நாட்கள் ஹர்த்தால் அனுசரித்தார்கள். மகாத்மா சிறை வைக்கப்பட்டிருந்த புனைவில், கௌரவ உத்தியோகங்களையும் அரசாங்க உத்தியோகங்களையும் பலர் ராஜினாமாச் செய்தனர். கல்கத்தாவில் போலீஸார் துப்பாக் கிப் பிரயோகம் செய்ததோடு பலரைக் கைதும் செய்தார்கள். டில்லியிலும் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. காந்திஜி கைதியான தினத்தன்று பெஷாவரை ராணுவம் வளைத்துக் கொண்டது. காங்கிரஸ் தலைவர்களைப் போலீஸார் கைது செய்தனர். இந்தியாவெங்கும் ஒரே எழுச்சி. ஷோலாப்பூர்

ஒரு வார காலம் மக்கள் கையிலேயே இருந்தது. போலீஸாருக்குப் பதிலாக அங்கே மக்கள் ஆட்சியே நடந்தது. பிறகு அங்கே ராணுவச் சட்டத்தை அமலுக்குக்கொண்டு வந்தனர். மைமின்சிங், கல்கத்தா, கராச்சி, லட்சுமணபுரி, மூல்தான், டில்லி, ராவல் பிண்டி, மார்தான், பிஷாவர் ஆகிய இடங்களில் கஷ்டங்கள் ஏற்பட்டன. துருப்புகள், விமானங்கள், டாங்கிகள் ஆகியவை உபயோகிக்கப்பட்டன. ஜூன் மாதத்தில் மாத்திரம் எல்லைப் புற பட்டாணியர் மீது 500 டன் வெடிகுண்டுகளைப் போட்டார்கள். இதனால் பட்டாணியரின் உணர்ச்சிதான் அதிகரித்தது. 200 பேராக இருந்த செஞ்சட்டையினர் 80,000 பேராயினர்!

மகாத்மா காந்திக்குப் பிறகு, பரோடாவின் முன்னாள் நீதிபதியான ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜி, தொண்டர்களுக்குத் தலைமை வகித்து உப்பு 'படையெடுப்பு'க்குத் தயாரானார். 1930 மார்ச் 11-ஆம் தேதி அவருக்கு எச்சரிக்கை செய்து அரசாங்கத்தினிடமிருந்து கடிதம் வந்தது. அடுத்த நாள் தொண்டர்கள் புறப்பட்டுச் சென்றனர். சில வயல்களைத் தாண்டுவதற்கு முன்னால் ஸ்ரீ தயாப்ஜியையும் கைது செய்துவிட்டனர்.

ஸ்ரீ தயாப்ஜிக்குப் பிறகு தலைவரான ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, 2,000 தொண்டர்களுடன் தர்சனா உப்புக் கிடங்கைப் படையெடுத்தார். புறப்படுவதற்கு முன்னால் நடந்த பிரார்த்தனைக்குப் பிறகு ஸ்ரீமதி நாயுடு பேசுகையில், "காந்திஜியின் உடல் சிறைக்குள்ளிருக்கிறது. ஆனால், அவருடைய ஆன்மா உங்களுடன் இருக்கிறது. இந்தியாவின் கௌரவம் உங்கள் கையில் இருக்கிறது. எந்த நிலைமையிலும் நீங்கள் எவ்வித பலாத்காரத்தையும் உபயோகிக்கக் கூடாது. உங்களை அடித்தால் திருப்பி நீங்கள் தாக்கக்கூடாது. விழும் அடியைத் தடுப்பதற்காகவும் நீங்கள் உங்கள் கைகளைத் தூக்கக்கூடாது" என்றார். அந்த உப்பளத்தைச் சுற்றிலும் முள் கம்பிகள் போடப்பட்டிருந்தன. அதோடு சுற்றி அகழ் வெட்டி அதில் நீரும் நிரப்பி யிருந்தார்கள். ஆறு பிரிட்டிஷ் அதிகாரிகளின் தலைமையில் 400 சூரத் போலீஸாரும் அங்கே இருந்தனர். போலீஸார் குண்டாந் தடிகளையும், இரும்புப் பூண் கட்டிய ஐந்தடி உயரத் தடிகளையும் வைத்திருந்தார்கள். உள்ளே இருபத்தைந்து பேர் துப்பாக்கிகளுடன் தயாரா யிருந்தனர். படை யெடுத்த தொண்டர்களின் முன்னணியில் ஸ்ரீ மணிலால் காந்தி சென்றார்.

## சகிக்க முடியாத கொடுமைகள்

பின்னர் தொண்டர்கள் அகழிகளைத் தாண்டி முள் கம்பிகள் போட்டிருந்த இடத்தை அடைந்தனர். கலைந்து போய்விடும்படி போலீஸ் அதிகாரிகள் அவர்களிடம் சொன்னார்கள். ஆனால், அதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. மெள்ள முன்னேறிச் சென்றனர். பின்னால் அங்கே நடந்ததைக் குறித்துப் பிரபலமான அமெரிக்கப் பத்திரிகையாளர் ஸ்ரீ மில்லர் வருமாறு எழுதினார்: "உத்தர

விட்டதும் சுதேசிப் போலீஸ்காரர்கள், முன்னேறிக்கொண்டிருந்த தொண்டர்கள் மீது திடீரெனப் பாய்ந்தனர்; இரும்புப் பூண் கட்டிய தடிகளினால் தொண்டர்களின் தலைகள் மீது அடிகளைப் பொழிந்தார்கள். தொண்டர்களில் ஒருவர்கூட, அடியைத் தட்டிவிடுவதற்குக் கூட தம் கையை மேலே தூக்கவில்லை. அவர்கள் கீழே சாய்ந்தனர். அவர்கள் மண்டைகளில் பட்ட அடியின் சப்தம் நான் இருந்த இடத்திற்குக்கூட நன்றாகக் கேட்டது... அடிபட்டவர்களில் பலர் பிரக்ஞையற்றுக் கிடந்தனர். மண்டை ஓடுகள் உடைந்து, தோள்கள் முறிந்துவிட்டவர்கள் வலி தாங்காது முனகிக்கொண்டிருந்தார்கள். இரண்டு, மூன்று நிமிடங்களில் தரை முழுதும் மனித உடல்கள் கிடந்தன...அடிபட்டு விழாதவர்கள், அடிபட்டு விழும் வரையில் முன்னேறிக்கொண்டே இருந்தார்கள். சில நிமிடங்களில் அடிபட்டு விழ நேரும், சாகவும் நேரலாம் என்று நன்றாகத் தெரிந்தும் தொண்டர்களிடம் பயத்திற்கும், தயக்கத்திற்குமான அறிகுறியே இல்லை. தலை நிமிர்ந்து உறுதியுடனேயே முன்னேறிச் சென்றார்கள். இரண்டாவது கோஷ்டியினரையும் போலீஸார் இரக்கமின்றி அடித்து வீழ்த்தினார்கள். சண்டையில்லை; போராட்டமில்லை. அடிபட்டு விழும் வரையில் தொண்டர்கள் முன்னேறிக்கொண்டே இருந்தனர். காயமடைந்தவர்களைத் தூக்கிச் செல்வதற்குப் போதுமான வசதிகள் இல்லை. காயமடைந்தோரில் பதினெட்டுப் பேர் ஒரே சமயத்தில் தூக்கிச் செல்லப்பட்டபோது, காயம்பட்டு ரத்தம் வழிந்து கொண்டிருந்த நாற்பத்திரண்டு பேர் தூக்கிச் செல்லப்படுவதற்கு அங்கே கிடந்ததைப் பார்த்தேன்.

''கொஞ்ச நேரத்திற்கெல்லாம் தொண்டர்கள் தங்கள் முறையை மாற்றிக் கொண்டனர். இருபத்தைந்து பேர் முன்னேறிப் போய் உட்கார்ந்துகொண்டு காத்துக் கொண்டிருப்பார்கள். போலீஸார் வந்து அவர்களைத் தடியால் அடித்தார்கள். தலையில் ரத்தம் பீறிட்டு ஓட, ஒன்றின் மீது ஒன்றாக மூன்று நான்கு உடல்கள் வீதம் கிடந்ததைக் கண்டேன். கோஷ்டி கோஷ்டியாக முன்னால் வந்து உட்கார்ந்து, உணர்ச்சியே இல்லாதவர்களாக அடிபடுவதற்குத் தங்களை உட்படுத்திக்கொண்டனர். அடிகளைத் தடுப்பதற்கு அவர்கள் கைகளையும் உயர்த்துவதில்லை. இந்த எதிர்ப்பின்மையைக் கண்டு கடைசியாகப் போலீஸாருக்குக் கோபம் மூண்டுவிட்டது. திருப்பி அடிக்காமல் தொண்டர்கள் அடிபட்டு வந்ததைக் கண்டு நானும்தான் எதுவும் செய்வதற்கில்லாத கோபமடைந்திருந்தேன். போலீஸார், மிருகத்தனமாகத் தொண்டர்களின் வயிற்றிலும் மர்ம ஸ்தானத்திலும் உதைக்க ஆரம்பித்தார்கள்...பிறகு போலீஸார், உட்கார்ந்திருந்த தொண்டர்களின் கைகளையும் கால்களையும் பிடித்து இழுத்துச் சென்றனர். சில சமயங்களில் நூறு கெஜ தூரமும் இழுத்துச் சென்றார்கள். பிறகு அவர்களை அகழிகளில் தூக்கிப் போட்டார்கள். நான் இருந்த பக்கத்திற்கு ஒருவரை இழுத்து அகழி

யில் போட்டார்கள். அதனால் மேலே கிளம்பிய கலங்கலான நீர் என்னை நனைத்து விட்டது. இன்னுமொரு போலீஸ்காரர், காந்தி ஆள் ஒருவரை அகழிக்கு இழுத்து வந்தார். அவரை அகழிக்குள் எறிந்துவிட்டுப் பிறகு அவர் தலையில் தடியாலும் அடித்தார்......"

அன்று காலை 11 மணிக்கு நிழலிலேயே 116 டிகிரி உஷ்ணம் இருந்தது. ஸ்ரீ மில்லர், தாற்காலிகமாக அமைத்திருந்த ஆஸ்பத்திரியைப் போய்ப் பார்த்தபோது காயமடைந்தவர்கள் 320 பேர் அங்கே கிடந்ததாகவும், பலர் மண்டை உடைந்து பிரக்ஞை யில்லாமல் இருந்ததாகவும் கூறினர். காயமடைந்தவர்களில் பலருக்கு மணிக்கணக்கில் எந்தச் சிகிச்சையும் இல்லை. இருவர் இறந்துவிட்டனர். அன்று தாம் கண்டதைக் குறித்து ஸ்ரீ மில்லர் எழுதுகையில், "இருபது நாடுகளிலிருந்து பத்திரிகைகளுக்குச் செய்திகளை அனுப்புவதில் சென்ற பதினெட்டு ஆண்டுகளாக எனக்குள்ள அனுபவத்தில், அநேக உள்நாட்டுக் கலவரங்கள், கலகங்கள், தெருச் சண்டைகள், புரட்சிகள் ஆகியவற்றை பார்த்திருக்கிறேன். ஆனல், தர்சனவில் நான் கண்டதைப் போன்ற கோரமான காட்சிகளை நான் எங்குமே கண்டதில்லை" என்றார்.

## வாடலா 'படையெடுப்பு'

இதைத் தொடர்ந்து பம்பாய்க்குப் பக்கத்திலிருக்கும் வாடலா உப்பளத்திலும் 'படையெடுப்பு' நடந்தது. 1930 மே 18-ஆம் தேதி 'படையெடுத்து'ச் சென்ற 470 சத்தியாக்கிரகிகளைக் கைது செய்தனர். மூன்று நாட்களுக்குப் பிறகு அந்த உப்பளத்தில் பல தொண்டர்கள் காயமடைந்ததோடு, 250பேர் கைதியாயினர். மே 25-ஆம் தேதி நூறு தொண்டர்கள் சென்றனர். என்ன நடக்கிறது என்பதைப்பார்ப்பதற்காக 2,000 பேரடங்கிய கூட்டத்தினரும் போனார்கள். போலீஸார் அவர்களை இரக்கமின்றித் தாக்கினர்கள்; துப்பாக்கியாலும் சுட்டார்கள். வாடலாவில் பல 'படையெடுப்புகள்' நடந்தபோதிலும் ஜூன் 1-ஆம் தேதி நடந்ததுதான் மிகவும் முக்கியமானதாகும். 15,000 தொண்டர்களும், வேடிக்கை பார்ப்போரும் இதில் ஈடுபட்டனர். சட்ட மறுப்பாளர்கள் அடிக்கடி போலீஸ் அணியைத் தாண்டி உப்பளத்திற்குள் சென்று கை நிறையவும், சாக்கு நிறையவும் உப்பை எடுத்துக்கொண்டு வந்தார்கள்; நிலைமையைச் சமாளிக்கப் போலீஸாரால் முடியவில்லை. குதிரைப் போலீஸார் ஜனங்கள் மீது பாய்ந்து தடிகளால் மண்டைகளில் அடித்தார்கள். இதே போன்ற படையெடுப்புகள் கர்னாடகத்தில் சனிகட்டா உப்பளத்தில் நடந்தது. தடியடிகளுக்கும் துப்பாக்கி வேட்டுகளுக்குமிடையே மக்கள் ஆயிரக்கணக்கான மணங்கு உப்பை எடுத்துக்கொண்டு போய்விட்டனர்.

இவ்விதம் நாடு முழுவதிலும் சத்தியாக்கிரகம் தீவிரமாக நடந்து வந்தது. நிலைமையின் நெருக்கடியை அரசாங்கமும் நன்கு உணர்ந்தது. மிதவாதத் தலைவர்கள் வைஸ்ராய் லார்டு இர்வினைச் சந்தித்து, இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தை அளிப்பதைக் குறித்து விவாதிக்க சீக்கிரத்தில் வட்ட மேஜை மாநாட்டைக் கூட்டுமாறு கேட்டுக்கொண்டனர். 1930 மே 12–ஆம் தேதி வைஸ்ராய் வெளியிட்ட அறிக்கையில், அக்டோபர் 20–ஆம் தேதி வாக்கில் அந்த மகாநாட்டை லண்டனில் நடத்துவதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன என்றார்.

## நாடெங்கும் சத்தியாக்கிரகம்

ஜூன் மாதத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டி அலகாபாத்தில் கூடியது. சட்ட மறுப்பில் தனக்குள்ள திடமான உறுதியை அது தெரிவித்துக் கொண்டது. வரும் வாரங்களில் செய்ய வேண்டிய வேலைகளுக்கு ஒரு திட்டமும் வகுத்தது. அது நிறைவேற்றிய தீர்மானத்தில் கீழ்க் கண்ட காரியங்களைச் செய்யுமாறு சிபாரிசு செய்தது. சட்ட மறுப்பைத் தொடர்ந்து நடத்துவது, அந்நியத் துணியை அடியோடு பகிஷ்காரம் செய்வது, வரி மறுப்பு இயக்கத்தை ஆரம்பிப்பது, வாரந்தோறும் உப்புச் சட்டத்தை மீறுவது, பிரிட்டிஷ் பாங்கிகள், இன்ஷூரன்ஸ் கம்பெனிகள், கப்பல்கள் முதலியவைகளைப் பகிஷ்கரிப்பது, கள்ளுக்கடைகள் மறியல் ஆகியவற்றைச் செய்யும்படி சிபாரிசு செய்தனர். தேச மக்கள் பொதுவாகக் காட்டியிருக்கும் அகிம்சை உணர்ச்சிக்காகவும் தீரத்திற்காகவும் பாராட்டுவதாகவும், அரசாங்கத்தின் அக்கிரமமான அடக்கு முறைகளைக் கண்டிப்பதாகவும் காரியக் கமிட்டித் தீர்மானம் கூறியது.

## அநேக அவசரச் சட்டங்கள்

மறியலையும், வரி மறுப்பையும், அரசாங்க உத்தியோகஸ்தர்களின் விசுவாசத்தைக் கெடுப்பதையும் சமாளிப்பதற்காக வைஸ்ராய் அதிகக் கடுமையான அவசரச் சட்டங்கள் இரண்டை வெளியிட்டார். 1930–ஆம் ஆண்டு முடிவிற்குள் சுமார் பன்னிரண்டு அவசரச் சட்டங்கள் வெளிவந்தன. அவசரச் சட்டங்களும், தடைகளும் வளர வளர, அவை எக்காரியங்களைத் தடுப்பதற்காகக் கொண்டு வரப்பட்டனவோ அக்காரியங்களைச் செய்வதன் மூலம் சட்டத்தை மீறுவதற்கான வாய்ப்புகளும் மக்களுக்கு அதிகமாயின. எல்லா இடங்களிலிருந்தும் பரபரப்பான செய்திகள் வெளிவந்து கொண்டிருந்தன. தடியடியும், போலீஸார் சுடுவதும், மக்கள் அடிக்கடி ஹர்த்தால் செய்வதும் வழக்கமாகிவிட்டன.

## பகிஷ்காரத்தின் பலன்கள்

அந்நியத் துணி, மதுபானம், பிரிட்டிஷ் சரக்கு பகிஷ்காரம் அநேகமாகப் பூரணமானதாக இருந்தது. 1930-இல் அந்நியத் துணி இறக்குமதி அதிகமாகக் குறைந்துவிட்டது. முந்திய வருடத்தில் இதே மாதங்களில் இறக்குமதியான ஜவுளிகளில் மூன்றில் ஒரு பங்கும் கால்வாசியுமே அச்சமயம் இறக்குமதியாயின. சிகரெட்டுகள் இறக்குமதி, முன்னல் இருந்ததில் ஆறில் ஒரு பங்காகக் குறைந்துவிட்டது. பம்பாயிலிருந்த பிரிட்டிஷாருக்குச் சொந்தமான மில்களில் பதினறு மூடப்பட்டுவிட்டன. இதற்கு மாருக, அந்நியத் துணி பகிஷ்கார சம்பந்தமான காங்கிரஸின் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டிருந்த இந்திய மில்கள் இரவு பகல் வேலை செய்து வந்தன. மில் துணி, கதருடன் போட்டி போடுவது இல்லை. 18-ஆம் நெம்பருக்குக் குறைவான நூலை உற்பத்தி செய்வதில்லை என்ற பிரதிக்ஞையில் 113 மில்கள் கையெழுத்திட்டிருந்தன. கதருக்கு எங்கும் கிராக்கி அதிகமாயிற்று. தேங்கிக் கிடந்த கதரெல்லாம் விற்பனையாகி விட்டன. உற்பத்தியும் 70 சதவிகிதம் அதிகமாயிற்று. அந்த ஆண்டில் 6,494 கிராமங்களில் கதர் உற்பத்தி நடந்ததோடு, 1,39,969 நூற்போர், 11,426 நெசவாளர்கள், 1,000 பஞ்சு பட்டை போடுவோர் முதலியோருக்கு வேலை கிடைத்தது. மறியல் செய்து நூற்றுக்கணக்கில் சிறை சென்றுகொண்டிருந்தனர். சமூகத்தில் எல்லாப் பகுதிகளையும் சேர்ந்த பெண்கள் இதில் ஈடுபட்டது குறிப்பிடத்தக்கதாகும். வயது முதிர்ந்த கஸ்தூரிபா காந்தியும் ஸ்ரீமதி மோதிலால் நேருவும் மறியல் செய்தார்கள். மறியல் வெற்றி பெற்றதால் அரசாங்கத்தின் வருவாய் 70 சதவிகிதம் குறைந்துவிட்டது. மத்திய மாகாணத்தில் மக்கள் காடுகள் சட்டத்தை மீறியதால், அந்த அரசாங்கத்திற்குச் சுமார் பதினறு லட்ச ரூபாய் நஷ்டம் ஏற்பட்டது.

## பத்திரிகைகளுக்கும் வாய்ப்பூட்டு

1930 ஜூன் 30-ஆம் தேதி காங்கிரஸ் அக்கிராசனர் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்குப் பதிலாக அக்கிராசனராக இருந்த பண்டித மோதிலால் நேருவைக் கைது செய்தார்கள். காரியக் கமிட்டி சட்ட விரோதமான சபை என்றும் பிரகடனம் செய்துவிட்டனர். ஆயிரக்கணக்கானவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். சட்ட மறுப்புக் கைதிகளுக்குச் சிறையில் இடம் இருக்கும்படிச் செய்வதற்காகச் சிறையிலிருந்த குற்றவாளிகளை விடுதலை செய்தனர். அப்பொழுதும் சிறைகளில் இடம் போதவில்லை. திறந்த வெளியில் சுற்றிலும் முள் கம்பி வேலியைப் போட்டு அதற்குள் சத்தியாக்கிரகிகளை அடைத்து வைத்திருந்தார்கள். அரசாங்கத்தின் அவசரச் சட்ட ஆட்சி தீவிரமாக நடந்து வந்தது. 1930 ஜூலை மாதத்திற்

குள் பத்திரிகை அவசரச் சட்டத்தைக்கொண்டு 67 தேசீயப் பத்திரிகைகளும், 55 அச்சுக்கூடங்களும் மூடப்பட்டன. மகாத்மாவின் 'எங் இந்தியா' பத்திரிகை அச்சாகி வந்த நவஜீவன் அச்சகத்தை அரசாங்கம் கைப்பற்றிக்கொண்டது.

## தமிழ்நாட்டின் உப்புச் சத்தியாக்கிரகப் போர்

மகாத்மா காந்தியின் ஆணைக்கு உட்பட்டு நாடெங்கும் சத்தியாக்கிரகப் போரில் ஈடுபட்டதைப் போன்றே தமிழ்நாடும் இதில் ஈடுபட்டு இந்தியாவில் முன்னணியில் நின்றது. இப்போரில் உப்புச் சத்தியாக்கிரகிகள் முதன் முதலில் தடியடிபட்ட பாக்கியம் தமிழ்நாட்டிற்குத்தான் உரியது. சென்னையில் ஆரம்பமான போலீஸ் தடியடிதான் அதன் பிறகு இந்தியாவெங்கும் பரவியது என்று சொல்லலாம். தண்டிக்கு மகாத்மா உப்புச் சத்தியாக்கிரக யாத்திரை செய்ததைப் போன்ற உப்புச் சத்தியாக்கிரக யாத்திரை நடந்ததும் தமிழ்நாட்டில்தான். திருச்சியிலிருந்து ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியாரின் தலைமையில் தொண்டர்கள் புறப்பட்டு, பெரிய உப்பளங்களைக் கொண்ட ஊரான வேதாரண்யத்திற்கு யாத்திரையாகச் சென்றனர். இத்தொண்டர் படைக்கு அதிகாரிகள் வழியில் இழைத்த துன்பங்கள் கொஞ்சமல்ல. இவர்களுக்கு யாரும் உணவளிக்கக்கூடாது என்றும் மிரட்டினார்கள். அம்மிரட்டலுக்கு அஞ்சாமல் தொண்டர்களுக்கு உணவும், இருக்க இடமும் அளித்த குற்றத்திற்காகத் திருத்துறைப்பூண்டியை அடுத்த தென்பாதி ஸ்ரீ ராமச்சந்திர நாயுடு என்ற பிரபல காங்கிரஸ் அனுதாபி சிறைத் தண்டனையும் அடைந்தார். வேதாரண்யம் போய்ச் சேர்ந்ததும் தொண்டர் படையை நடத்திச் சென்ற ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரை அதிகாரிகள் கைது செய்துவிட்டனர். அதன் பின்னர் அடக்குமுறை அட்டூழியங்கள் முழு ஆவேசத்துடன் தலைதூக்கிவிட்டன. அங்கே உப்புச் சத்தியாக்கிரகம் நடப்பதற்கு உறுதுணையாக இருந்த சர்தார் அ. வேதரத்தினம் பிள்ளை, அடக்குமுறைக்கு இலக்காகி அடைந்த கஷ்ட நஷ்டங்கள் கொஞ்சமல்ல. அவருக்குச் சொந்தமான உப்பளங்களையும் அரசாங்கம் பறிமுதல் செய்துகொண்டுவிட்டது. எனினும், அவற்றிற்கெல்லாம் ஸ்ரீ பிள்ளை அஞ்சிவிடவுமில்லை; அயர்ந்துவிடவுமில்லை. தாம் சிறைப்படும் வரையில் சத்தியாக்கிரகம் சிறப்புடன் நடக்கவேண்டியதற்கான எல்லாக் காரியங்களையும் செய்தார். தாம் கைதியான பின்னரும் சத்தியாக்கிரகம் தங்கு தடையின்றி நடப்பதற்கு வேண்டிய எல்லா முன்னேற்பாடுகளையும் சிறை புகுவதற்கு முன்பே அவர் செய்துவிட்டுத்தான் போனார். இந்தச் சத்தியாக்கிரகத்தில் போலீஸார் தடியடியோடு நிற்கவில்லை. புளிய மிலாறுகளைக் கொண்டு தொண்டர்களை அடித்த அக்கிரமம், எந்த சுதந்திரப் போராட்டத்தின் சரித்திரத்திலும் என்றென்றும் நடக்க முடியாததாகும். இவ்வளவு அடக்குமுறை அட்டூழியங்கள் நடந்தும்

வேதாரண்யம் உப்புச் சத்தியாக்கிரகம், மத்தியில் நின்று விடாமல், சத்தியாக்கிரகப் போர் நிறுத்தக் கடைசி நாள் வரையில் நடந்தது; அப்போரில் பெரும் புகழுக்கான கட்ட மாகிவிட்டது.

இந்தச் சத்தியாக்கிரகத்தின் மற்ருேர் அம்சமான கள்ளுக் கடை, அந்நிய ஜவுளிக் கடை மறியலிலும் தமிழ்நாடு முன்னணி யில் நின்றது. இதில் தமிழ்நாட்டுப் பெண்கள் செய்திருக்கும் அரும்பணியும், காட்டிய வீரமும் இந்நாடே வீறுகொள்ளும்படிச் செய்தன எனலாம். மறியல் தொண்டர்கள் மீது போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்தது மாத்திரமல்ல, தீயணைக்கும் யந்திரத்தைக்கொண்டு சென்னையில் சாக்கடைத் தண்ணீரையும் பெண்கள் மீது இறைத்து அவர்களை விரட்டிவிட முயன்ருர்கள். தடியடி, துப்பாக்கிப் பிரயோகம் ஆகியவை அன்ருடச் சம்பவங் களாக அக்காலத்தில் இருந்தன. ஆயிரக்கணக்கானவர்கள் சிறைப்பட்டார்கள்; துப்பாக்கிக் குண்டுக்குப் பலியானவர்களும், தடியடிபட்டுக் காயமடைந்து கிடந்தவர்களும் பலர். திருப்பூர் குமரன், கையில் தாங்கியிருந்த தாயின் மணிக்கொடியைப் பறித்துவிட போலீஸார் முயன்ருர்கள். பலங்கொண்ட வரையில் அடித்தும் கையில் பிடித்த கொடியை விடாமல் கடைசி வரையில் பற்றியிருந்து உயிர் நீத்த குமரனின் வீரச்செயல் நடந்ததும், தமிழ்நாட்டில் நடந்த அந்த உப்புச் சத்தியாக்கிரகத்தின் போதுதான்.

## சமரசப் பேச்சு ஆரம்பம்

1930 ஜூனில் சைமன் கமிஷன் அறிக்கை வெளிவந்தது. டொமினியன் அந்தஸ்து என்று வைஸ்ராய் திட்டவட்டமில்லா மல் சொன்ன வாக்குறுதியும்கூட அதில் இல்லை. எனவே, இவ்வறிக்கை எல்லா ராஜீயக் கட்சிகளுக்கும் பெரிய ஏமாற்ற மாகிவிட்டது. பண்டித மாளவியா, ஸ்ரீ ஆனே போன்றவர்களும் காங்கிரஸின் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்ருர்கள். அரசாங்கம் எதிர்பார்த்ததையும்விட போராட்டம் அதிக தீவிரமானதாகிவிட்டது.

ஜூலை 9-ஆம் தேதி வைஸ்ராய் சட்டசபை கூட்டுக் கூட் டத்தில் பேசினர். மகாநாட்டின் மூலம் இரு நாடுகளும், எல்லாக் கட்சிகளும், அவற்றில் நலனுடையவர்களும் கௌரவமாக ஏற்றுக் கொள்ளக்கூடியதான முடிவுகளைப் பெறுவது சாத்தியம் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் நம்புகிறது என்ருர். அப்படி வரும் ஏற்பாடு பிறகு பார்லிமெண்டுக்குச் சமர்ப்பிக்கப்படும் என்ருர். டொமினியன் அந்தஸ்தை அடைவதே இந்தியாவின் லட்சியம் என்ற வாக்குறுதி அப்படியே இருந்து வருகிறது என்றும் சொன்னர். வைஸ்ராய் இவ்வாறு அறிவித்ததற்கு ஒரு வாரத்

திற்குப் பிறகு, மத்திய சட்ட சபையைச் சேர்ந்த தேசீய, சுயேச்சை உறுப்பினர்கள் 40 பேரும், ராஜாங்க சபையைச் சேர்ந்த சிலரும்கூடி, அரசாங்கத்திற்கும் காங்கிரஸுக்குமிடையே சமரசப்பேச்சை நடத்த ஸ்ரீ எம். ஆர். ஜெயகரை ஏகமனதாக நியமித்தார்கள். ஸ்ரீ ஜெயகரும், ஸர் தேஜ்பகதூர் சாப்ருவும் சிறையில் மகாத்மா காந்தி, பண்டித மோதிலால் நேரு, பண்டித ஜவாஹர்லால் நேரு ஆகியவர்களைச் சந்தித்துப் பேச வைஸ்ராயும் ஒப்புக்கொண்டார்.

சமரசத் தூதினர் மகாத்மா காந்தியுடன் பேசுவதற்காக எராவ்டா சிறைக்குச் சென்றார்கள். ஜூலை 23-ஆம் தேதியும் மறுநாளும் காந்திஜியுடன் பேசினர். நைனி சிறையிலிருந்த ஜவா ஹருக்கும், பண்டித மோதிலால் நேருவுக்கும் காந்திஜி ஒரு குறிப் பையும் கடிதத்தையும் கொடுத்தனுப்பினார். அதில் காந்திஜி இதையும் முக்கியமாகக் குறிப்பிட்டிருந்தார்: "இடைக்காலத்தில் ஏற்படும் சுயாட்சி சம்பந்தமாக அவசியமாகும் பாதுகாப்புகளைக் குறித்து மாத்திரமே மகாநாடு விவாதிப்பதாக இருக்க வேண்டும். இரண்டாவதாக, சட்ட மறுப்பை நிறுத்தியதுமே எல்லாச் சட்ட மறுப்புக் கைதிகளையும் ராஜீயக் கைதிகளையும் விடுதலை செய்து விடவேண்டும்." மேலும், தாம் வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத் தில் கண்ட பதினோரு அம்சங்களையும் திருப்தி செய்வதாகச் சுயராஜ்யத் திட்டம் இருக்கிறதா என்பதைப் பரிசோதித்துப் பார்க்கும் உரிமையைத் தாம் ஒதுக்கிவைத்துக்கொள்ளுவதாக வும் அக்குறிப்பில் கூறியிருந்தார். பண்டித மோதிலால் நேருவுக்கு எழுதிய கடிதத்தில், 'ஜவாஹர்லால் கூறுவதே முடி வானதாக இருக்க வேண்டும்' என்றார்.

ஜூலை 27-ஆம் தேதி ஸர் சாப்ருவும் ஸ்ரீ ஜெயகரும், நைனி சிறையிலிருந்த பண்டித மோதிலாலுடனும் ஸ்ரீ ஜவாஹர்லாலுட னும் பேசினார்கள். பேச்சு இரண்டு நாட்கள் நடந்தன. காங்கிரஸ் காரியக் கமிட்டி சகாக்களையும் முக்கியமாக மகாத்மா காந்தியையும் கலந்துகொள்ளாமல் தாங்கள் எந்த யோசனை யையும் கூறுவதற்கில்லை என்று அவர்கள் சொல்லிவிட்டனர். மகாநாட்டைப் பற்றிக் காந்திஜி சொன்ன முதல் நிபந்தனை அவர் களுக்குத் திருப்திகரமாக இல்லை. அதன் பேரில் காந்திஜி, தமது நிபந்தனைகளைத் திருத்தி எழுதி ஆகஸ்டு 1-ஆம் தேதி ஸ்ரீ ஜெயகரிடம் கொடுத்தார். இந்தியா விரும்பும்போது சாம் ராஜ்யத்திலிருந்து விலகிக்கொள்ளும் உரிமையை அளிக்கும் விதி அடங்கியிராத எந்த அரசியல் திட்டத்தையும் தாம் ஏற்றுக் கொள்ள முடியாது என்றும், தமது பதினோரு அம்சங்களைத் திருப்திகரமான வகையில் செய்துகொள்ள இந்தியாவுக்கு உரிமை இருக்கவேண்டும் என்றும் காந்திஜி அதில் கூறியிருந் தார். பிரிட்டிஷ் நலன்களுக்கு முன்னால் அளிக்கப்பட்டிருக்கும் சலுகைகள், பிரிட்டிஷ் உரிமைகள் ஆகியவற்றைக் குறித்துச்

சுயேச்சையான நீதிச் சபை பரிசீலனை செய்யும்படி கேட்கும் உரிமையை மகாநாட்டில் தாம் வற்புறுத்தப் போவதாகவும் கூறியிருந்தார்.

## தலைவர்களின் நிபந்தனைகள்

பண்டித மோதிலால் நேருவையும் ஸ்ரீ ஜவாஹர்லாலையும் எராவ்டா சிறைக்குக் கொண்டு வந்தனர். இவர்களும் ஸ்ரீ ஜெயகர், ஸர் சாப்ருவும் காந்திஜியுடன் ஆகஸ்டு 13, 14, 15-ஆம் தேதிகளில் பேசினர். இதன் பலனைக் காந்திஜியும் இரு நேருக்களும் ஒரு கடிதத்தில் கையெழுத்திட்டனர். அதில் அவர்கள் கூறியிருந்ததாவது:

"உங்கள் கடிதத்திற்கு, மகாநாட்டைக் குறித்து வைஸ்ராய் அளித்திருக்கும் பதிலின் பாஷை தெளிவில்லாததாக இருக்கிறது. ஆகையால், அதன் மதிப்பை நாங்கள் அறிந்துகொள்ள முடியவில்லை. முறைப்படியான காங்கிரஸ் காரியக் கமிட்டியையும், அவசியமானல் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியையும் கலந்துகொள்ளாமல் அதிகார பூர்வமாக எதையும் சொல்லும் நிலைமையில் நாங்கள் இல்லை. ஆனல், தனிப்பட்ட முறையில் எங்களைப் பொறுத்தவரையில், கீழ்க்கண்டவை இல்லாத எந்த ஏற்பாடுகளும் திருப்திகரமானதாக ஆகாது: (அ) இந்தியா விரும்பினல் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து விலகிவிடும் உரிமை இந்தியாவுக்கு அதில் இருக்கவேண்டும்: (ஆ) பாதுகாப்புப் படைகள், நிதி நிர்வாகம், வைஸ்ராய்க்குக் காந்திஜி எழுதிய கடிதத்தில் கண்ட பதினேரு அம்சங்களும் அடங்கியதாக மக்களுக்குப் பூரண பொறுப்பு வாய்ந்ததான தேசீய அரசாங்கத்தை இந்தியாவுக்கு அளிப்பதாக அது இருக்கவேண்டும். அநியாயமானவை, இந்திய மக்களின் நன்மைக்கானவை அன்று என்று இந்திய தேசீய அரசாங்கம் கருதும் பிரிட்டிஷ் உரிமைகள், சலுகைகள் ஆகியவற்றையும் இந்திய அரசாங்கம் வாங்கியிருக்கும் கடன்களையும் பாரபட்சமற்ற நீதிச் சபையின் பரிசீலனைக்கு விடும் அதிகாரம் அந்த ஏற்பாட்டில் இந்தியாவுக்கு இருக்க வேண்டும்......"

சமரசத் தூதர்கள் பிறகு வைஸ்ராயைக் கண்டு பேசினர். ஆனல், தலைவர்களின் கடிதத்தில் கண்டவற்றின் அடிப்படையில் விவாதிப்பது சாத்தியமில்லை என்று வைஸ்ராய் சொல்லிவிட்டார். அச்சமயம் ஸ்ரீ சர்சசில் கூறுகையில், "இந்திய அரசாங்கம் ஸ்ரீ காந்திஜியைச் சிறையில் அடைத்துவிட்டு அவருடைய சிறை அறைக்கு வெளியில் உட்கார்ந்துகொண்டு தங்கள் கஷ்டங்களைப் போக்க உதவும்படி ஸ்ரீ காந்தியைக் கெஞ்சிக்கொண்டுமிருக்கிறது" என்ருர்.

## வைஸ்ராயும் உணர்ந்தார்

இதற்கு மத்தியில் அரசாங்கத்தின் அடக்குமுறை தீவிர மாகவே நடந்துகொண்டு போயிற்று. இந்தியா முழுவதிலும் எல்லாக் காங்கிரஸ் கமிட்டிகளும் சட்டவிரோதமானவை என்று அரசாங்கம் செய்துவிட்டது. காங்கிரஸ் கூட்டங்களெல்லாம் தடுக்கப்பட்டன; காங்கிரஸ் கமிட்டிகளின் சொத்துக்களைப்பறி முதல் செய்துவிட்டனர். இதனால், காங்கிரஸ்காரர்கள் தலைமறை வாக இருந்து வேலை செய்ய ஆரம்பித்தனர். காங்கிரஸ் அறிக்கை கள் ரகசியமாக அச்சிடப்பட்டு பகிரங்கமாக வினியோகிக்கப்பட் டன. பம்பாய் போன்ற நகரங்களில் இரண்டு அரசாங்கங்களே ஆட்சி புரிந்து வந்தன. ராஜ விசுவாசிகள் சிலர், அரசாங்கத் தின் ஆணைக்கு உடன்பட்டு நடந்தார்கள். பெரும்பாலான மக்கள் காங்கிரஸின் ஆக்ஞைப்படியே நடந்துவந்தனர். வரி கொடாமை யும் சட்ட மறுப்பில் ஓர் அம்சமாக இருந்தது. விடுதலையான சர்தார் பட்டேல் திரும்பவும் பர்டோலியில் வரிகொடா இயக்கத்தை ஆரம்பித்தார். அரசாங்கத்தின் அடக்குமுறை தாங்க முடியாததாகிவிட்டது. இதனால் அங்கே இருந்த மக்க ளெல்லாம் பிரிட்டிஷ் பிரதேசத்திலிருந்து வெளியேறி அடுத்துள்ள பரோடா சமஸ்தானத்திற்குள் குடியேறினர். வரிகொடா இயக்கம் குஜராத்தில் வெற்றிகரமாக நடந்தது. அது பிறகு ஐக்கிய மாகாணத்திற்கும் மற்றப் பகுதிகளுக்கும் பரவிவிட்டது.

அரசாங்கம் இன்னும் அதிகக் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று இந்தியாவிலிருந்த ஐரோப் பியர்கள் கூறிவந்தனர். டிசம்பர் மாதம் கல்கத்தாவில் பேசிய வைஸ்ராய் லார்டு இர்வின், அடக்குமுறை பயனில்லை என்று கூறிவிட்டு சொன்னதாவது: "சட்டமறுப்பு இயக்கத்தை நாம் என்னதான் பலமாகக் கண்டித்தாலும், இந்திய மக்களில் அதிக மானவர்களின் உள்ளங்களில் இன்று எழுந்திருக்கும் தேசீய உணர்ச்சியின் உண்மையான பலமுள்ள பொருளை நாம் அலட் சியம் செய்து விடுவோமானால், நாம் மிகப் பெரிய தவறைச் செய்துவிட்டவர்களாவோம் என்பது எனது உறுதியான எண்ண மாகும். இதற்கு அரசாங்கத்தின் கடுமையான நடவடிக்கை, பூரணமான, நிரந்தரமான பரிகாரமாகாது; ஆக முடியாது."

## வட்டமேஜை மகாநாடு

வட்டமேஜை மகாநாட்டை நடத்தும் வேலையை, காங்கிர ஸின் போக்கு எதுவானாலும், நடத்திக்கொண்டு போவது என்று அரசாங்கம் முடிவு செய்தது. 1930 நவம்பர் 12-ஆம் தேதி மகா நாடு ஆரம்பமாயிற்று. மக்களின் சபையான காங்கிரஸின் பிரதி நிதிகள் அதில் இல்லை. ஆனால், இந்திய மன்னர்கள், பல ஜமீன் தார்கள், பெரிய முதலாளிகள், வகுப்புவாதிகள், சில மிதவாதி

கள் ஆகியோர் அம்மகாநாட்டு உறுப்பினர்கள். அவர்களெல்லாம் வைஸ்ராயினுல் நியமனம் பெற்றவர்கள். 10 வாரங்களுக்குப் பிறகு அந்த மகாநாடு முடிந்தது; ஆனல், வேலை முடியவில்லை. அப்பொழுது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த ஸ்ரீ மாக்டொனல்டு பேசுகையில், "இதற்கு மத்தியில், இப்பொழுது சட்ட மறுப்புச் செய்வதில் ஈடுபட்டிருப்பவர்களின் ஆதரவு வைஸ்ராயின் கோரிக்கைக்கு ஏற்படுமானல், இந்தப் பிரகடனத்தின் மீது பொதுவான முறையில் ஒத்துழைக்கும் விருப்பமும் அவர்களுக்கு இருக்குமாயின், அவர்களுடைய சேவையையும் பெறுவதற்கான காரியங்கள் செய்யப்படும்" என்று குறிப்பிட்டார்.

## மகாத்மா காந்தி விடுதலை

மகாத்மா காந்தியையும் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களையும் தாமதமின்றி விடுதலை செய்வதாக லார்டு இர்வின் 1930 ஜனவரி 25-ஆம் தேதி ஓர் அறிக்கை வெளியிட்டார். இவர்கள் கூடுவதற்கு இருந்த தடைகளும், காரியக் கமிட்டி சட்ட விரோதமானது என்றிருந்த உத்தரவும் ரத்துசெய்யப்பட்டன. வைஸ்ராய் மேலும் கூறியதாவது: "சம்பந்தப்பட்டவர்கள், நிபந்தனையில்லாத விடுதலை என்ற நிலையில் விவாதத்தை நடத்துவதனுலேயே அமைதியான நிலைமையை உண்டாக்க முடியும் என்று நாங்கள் நம்புவதால், இந்தத் தலைவர்களுக்கு எந்த நிபந்தனையையும் என் அரசாங்கம் விதிக்காது."

இந்த அறிவிப்பு வெளியானதும் காந்திஜி விடுதலையடைந்தார். உடனே அவர் கூறியதாவது: "முற்றிலும் திறந்த மனத்துடனேயே நான் சிறையிலிருந்து வருகிறேன். எந்த விதமான துவேஷமும், விவாதத்தில் பாரபட்சமும் எனக்கு இல்லை. நிலைமையை, எல்லாக் கருத்துக்களையும் கொண்டு பரிசீலனை செய்யத் தயாராயிருக்கிறேன். லண்டனிலிருந்து வட்டமேஜை மகாநாட்டுப் பிரதிநிதிகள் சிலரிடமிருந்து வந்திருக்கும் அவசரத் தந்தியை முன்னிட்டே இதை நான் கூறுகிறேன்." பிறகு பம்பாயில் பத்திரிகையாளர்களிடம் தமது நிலைமையை மேலும் விளக்கிக் கூறுகையில் காந்திஜி சொன்னதாவது:

"காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களை மாத்திரம் விடுதலை செய்திருப்பது, கஷ்டமான நிலைமையில், நிச்சயமாக அதிகக் கஷ்டத்தை உண்டாக்குவதோடு, முற்றிலும் என்றில்லாவிடிலும் அநேகமாக, காரியக் கமிட்டி உறுப்பினர்கள் எந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதையும் கஷ்டமானதாக்குகிறது என்றே என்னைப் பொறுத்தவரையில் கருதுகிறேன். இயக்கம் பொதுமக்களின் மனத்தை அதிகமாகக் கவர்ந்திருக்கிறது என்பதை அதிகாரிகள் உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. தலைவர்கள், எவ்வளவுதான் பெரியவர்களாக இருந்தபோதிலும்,

பொதுமக்களுக்கு அவர்கள் இப்படித்தான் செய்யவேண்டும் என்று ஆக்ஞையிட கொஞ்சமும் முடியாதவர்களாக இருக்கிருர் கள்." பிறகு மறியல் செய்வதற்கும், உப்பு உற்பத்தீ செய்வதற் கும் உரிமை இருக்க வேண்டியதை வற்புறுத்தி அவர் கூறிய தாவது:

"ஒரு விஷயத்தைத் தெளிவாகக் கூறிவிட வேண்டும் என்று நான் ஆர்வத்துடன் இருக்கிறேன். வட்டமேஜை மகாநாட்டுக் குப் போய்விட்டுத் திரும்பும் நண்பர்களுடன் கலந்தாலோசித்த பிறகு, காங்கிரஸ் ஒத்துழைப்பை அளிப்பதற்குப் போதுமான ஆதாரத்தைப் பிரதம மந்திரியின் அறிக்கை அளிக்கிறது என்று கண்டாலும், மறியல் செய்வதற்கு இருக்கும் உரிமையையும், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு உப்பு தயா ரித்துக் கொள்ளுவதற்கு இருக்கும் உரிமையையும் விட்டுக் கொடுத்துவிட முடியாது. இந்த சாதாரண உரிமைகளை ஒப்புக் கொள்ளுவதாலுல், அநேக அவசரச் சட்டங்களையும் இயற்கை யாகவே ரத்துச் செய்தாக வேண்டும். ஆகையால், பொது ஜனங்களும், அரசாங்கமும், காங்கிரஸின் அடிப்படையான நிலைமையைப் புரிந்துகொள்ள வேண்டியது அவசியம். அன்னி யத் துணி பகிஷ்காரமும், மது பகிஷ்காரமும் எப்பொழு தும் இருந்தாக வேண்டும் என்பதற்காகவேயன்றி இப்பொழுது இருக்கும் தவருன ஆட்சியை மக்கள் எதிர்ப்பதற்காக அல்ல. முக்கியமாக பிரிட்டனுக்கும் இந்தியாவுக்குமிடையே எவ்வளவு தான் நல்லெண்ணமிருந்தாலும், குடித் தீமையையோ, அந்நியத் துணித் தீமையையோ, உப்பு தயாரித்துக்கொள்ளுவதற்கு இருக் கும் தடையையோ நியாயம் என்று மக்கள் ஏற்றுக்கொண்டுவிட முடியாது.

"என்னைப் பொறுத்தவரையில் சமாதானம் ஏற்பட வேண் டும் என்பதற்காக நான் ஆர்வத்துடன் இருக்கிறேன். ஆனல், அந்த சமாதானம் கௌரவமான வகையில் கிடைப்பதாக இருக்க வேண்டும். என்றுலும், அந்த சமாதானம் நான் குறிப்பிட்டிருக் கும் அம்மூன்று காரியங்களையும் திருப்தி செய்வதாக இல்லாது போகுமானல், நான் தன்னந் தனியே நிற்க நேர்ந்தாலும், எந்த சமாதானத்தையும் ஏற்றுக்கொள்ளவே மாட்டேன். நடை முறையிலிருக்கும் மூன்று சோதனைகளை நான் கொடுத்திருக் கிறேன். நான் விரும்பும் காரியங்கள் இன்னும் எட்டு இருக் கின்றன என்பதைப் பொதுஜனங்கள் அறிவார்கள். ஒரு வைத்தி யர், சரியானபடி பரிசீலனை செய்த பிறகே நோய் இன்னது என்று கூறுவதைப் போன்று, சாதாரண மக்களின் நன்மையை முன்னிட்டு நான் கூறிய பதினேரு அம்சங்களையும் கொண்டு வட்டமேஜை மகாநாடாகிய பழத்தை நான் பரிசீலனை செய்த பிறகே, சுதந்திரத்தின் சாரமேயன்றி வெறும் நிழல் அல்ல என்று நான் அதற்குப் பெயரிடுவேன்."

ராஜீய நிலைமை காந்திஜியின் மனக்கஷ்டத்தைப் போக்குவதாக இல்லை. அவர் கூறியதாவது: "பிரிட்டனிலிருந்து சமாதான முயற்சிகள் வந்து கொண்டிருந்த போதிலும், ஒரு பாவமும் அறியாதவர்களை அனுவசியமாக அடிப்பது இன்னும் தொடர்ந்து நடந்துகொண்டுதான் வருகிறது. வெறும் நிர்வாக உத்தரவுகளின் பேரில், கௌரவமானவர்களின் ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் பறிக்கப்படுகின்றன. பெண்களின் ஓர் ஊர்வலம் பலாத்காரமாகக் கலைக்கப்பட்டது: அவர்களுடைய கூந்தலைப் பிடித்துக்கொணடு பூட்ஸ் கால்களால் உதைத்திருக்கிறார்கள். மற்றக் கஷ்டங்களை யெல்லாம் சமாளித்து விட்டாலும், இத்தகைய அடக்குமுறை தொடர்ந்து நடந்து வருவது காங்கிரஸின் ஒத்துழைப்பை அசாத்தியமானதாக்கிவிடும். அடக்குமுறை சூழ்நிலையை மணிக்கு மணி அதிக துர்நாற்றமுள்ளதாக்கிவரும் இச்சமயத்தில், சமாதானத்திற்குப்பேச்சு நடத்துவது சாத்தியம் என்று நான் நினைக்கவில்லை. ஏராளமான மக்களும் உணரக் கூடியதான சமரச நம்பிக்கை இருந்தாலன்றி, முடிவான சமரசம் ஏற்பட்டு விடும் என்பதற்குச் சரியான நம்பிக்கை இருந்தாலல்லாமல், இப்பொழுது நடந்து வருவதைப் போன்ற ஒரு பொதுஜன இயக்கத்தை நிறுத்திவிடுவது என்பது முடியாது. அதிகத் தீவிரமான வகையில் அடக்குமுறை நடந்துகொண்டே போகும் போது போராட்டம் நிற்காது."

## காந்திஜி - வைஸ்ராய் பேச்சு

லண்டனிலிருந்து திரும்பிய கனம் சீனிவாச சாஸ்திரியார், ஸர் சாப்ரு, ஸ்ரீ ஜெயகர் ஆகிய மூவரும் அலகாபாத்திற்குப் போய் 1931 பிப்ரவரி 8-ஆம் தேதியிலிருந்து 14-ஆம் தேதி வரையில் காந்திஜியுடன் பேசினர். காங்கிரஸ் காரியக் கமிட்டி விரும்பியதன் பேரில், லார்டு இர்வினுடன் சமரசப் பேச்சை நடத்த காந்திஜி ஒப்புக்கொண்டார்.

ராஜீய நிலைமையைக் குறித்து விவாதிப்பதற்காக தாம் லார்டு இர்வினைக் கண்டு பேச விரும்புவதாக அவருக்கு காந்திஜி நீண்ட கடிதமொன்று எழுதினர். அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் ஏதாவது மனமாற்றம் இருக்கிறதா என்பதைக் கண்டு பிடிப்பதற்காக, போலீஸாரின் அக்கிரமச் செயல்களைக் குறித்து விசாரிப்பதற்காக ஒரு விசாரணைக் கமிஷனை நியமிக்க வேண்டும் என்று அக்கடிதத்தில் காந்திஜி முக்கியமாக லார்டு இர்வினை வற்புறுத்தினர். சந்தித்துப் பேச வைஸ்ராய் ஒப்புக்கொண்டு விடவே, 1931 பிப்ரவரி 16-ஆம் தேதி காந்திஜி டில்லிக்குப் புறப்பட்டார்.

பிப்ரவரி 17-ஆம் தேதி பகல் 2-30 மணிக்கு காந்தி-இர்வின் பேச்சு ஆரம்பமாயிற்று. மாலை 6 மணி வரை பேசினர்கள்.

சமரசப் பேச்சை ஆரம்பிப்பதற்குக் குறைந்த பட்சமாக காந்திஜி கூறிய ஆறு நிபந்தனைகளாவன : ராஜீயக் கைதிகளையெல்லாம் விடுதலை செய்ய வேண்டும்; அடக்குமுறையை உடனே நிறுத்த வேண்டும்; பறிமுதல் செய்த சொத்துக்களையெல்லாம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்; ராஜீய காரணங்களுக்காக தண்டிக்கப்பட்ட அரசாங்க சிப்பந்திகளையெல்லாம் திரும்ப வேலைக்கு எடுத்துக்கொண்டுவிட வேண்டும்; உப்பு தயாரிக்கவும் அந்நியத் துணிக் கடைகளிலும் மதுபானக் கடைகளிலும் மறியல் செய்வதற்கும் உரிமை அளிக்க வேண்டும்; போலீஸார் செய்த அக்கிரமங்களைக் குறித்து விசாரணை நடத்த வேண்டும்.

## சர்ச்சிலின் ஆத்திரம்

அடுத்த நாள் காந்திஜியும் வைஸ்ராயும் சந்தித்து சிறிது நேரமே பேசினார்கள். பிரிட்டிஷ் பிரதம மந்திரியையும் இந்தியா மந்திரியையும் வைஸ்ராய் கலந்தாலோசிக்க வேண்டியிருந்ததாலும், காரியக் கமிட்டி உறுப்பினர்களை காந்திஜி கலந்தாலோசிக்க வேண்டியிருந்ததாலும் கொஞ்ச காலத்திற்குப் பேச்சை நிறுத்தி வைப்பதென்று இருவரும் ஒப்புக்கொண்டார்கள்.

இதற்கு மத்தியில் அடக்கு முறை நடந்துகொண்டே வந்தது. சட்டமறுப்புப் போராட்டமும், அவ்வளவு தீவிரமாக இல்லாவிட்டாலும் நடந்து வந்தது. இது சர்ச்சிலால் பொறுக்க முடியவில்லை. "ஸ்ரீ காந்தி, ராஜநிந்தனை செய்பவரான ஒரு பாரிஸ்டர். கிழக்கிற்கு நன்ருகத் தெரிந்ததான ஒரு பக்கிரியின் வேஷத்தில் இப்பொழுது இருப்பவர், எதிர்ப்பு இயக்கமான சட்ட மறுப்பை இன்னும் நடத்திக்கொண்டு வரும்போதே, சக்கரவர்த்தியின் பிரதிநிதியுடன் சமமான நிலையில் இருந்து கொண்டு பேசுவதற்காக, அரை நிர்வாணத்துடன் வைஸ்ராய் மாளிகையின் படிக்கட்டுகளில் ஏறிக் கொண்டிருப்பது, பயங்கரமானதாகவும் ஆபாசமானதாகவும் இருக்கிறது" என்று அதிக ஆத்திரத்துடன் ஸ்ரீ சர்ச்சில் கூறினர்.

## மீண்டும் பேச்சுக்கள்

பிப்ரவரி 19-ஆம் தேதி காந்திஜி திரும்பவும் வைஸ்ராய் மாளிகைக்குச் சென்று அரை மணி நேரம் லார்டு இர்வினுடன் பேசிக்கொண்டிருந்தார். பிறகு பல நாட்கள் வரையில் காந்திஜியை வைஸ்ராய் அழைக்கவில்லை. பேச்சு முறிந்துவிட்டது என்றே தோன்றியது. காரியக் கமிட்டி உறுப்பினர்கள், தங்கள் எதிர்காலத் திட்டத்தைக் குறித்துக் கலந்தாலோசித்தனர். அவரவர்களுடைய மாகாணங்களுக்குப் போகவும் தயாராயினர். சமரசப் பேச்சு முறிந்தது என்று திட்டமாக அறிவிக்கப்பட்ட

தும் தங்களை மீண்டும் கைது செய்துவிடுவார்கள் என்பதும் அவர்களுக்குத் தெரியும். அப்பொழுது திடீரென்று வைஸ்ராயிடமிருந்து காந்திஜிக்கு அழைப்பு வந்தது. இருவரும் 3 மணி நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். சமரசப் பேச்சு முறிந்து விடக் கூடாது என்பதில் லார்டு இர்வின் அதிகக் கவலையுடனிருந்தார். ஆனால், அன்று திட்டமான சமரசம் எதுவும் ஏற்படவில்லை. லார்டு இர்வின் அதிகக் களைப்பாக இருந்ததால், பிறகு சந்தித்துப் பேசலாம் என்று அவர் சொன்னதன் பேரில் காந்திஜி வந்து விட்டார்.

மறுநாள் காந்திஜி, மறியலைக் குறித்து வைஸ்ராய்க்கு ஒரு குறிப்பு அனுப்பினார். சமரச ஒப்பந்தம் சம்பந்தமாக சில குறிப்புகளை வைஸ்ராய் அனுப்பியிருந்தார். மார்ச் 1–ஆம் தேதி பகல் 2-30 மணிக்கு வைஸ்ராயைப் பார்க்க காந்திஜி சென்றார். மத்தியில் கடந்தாக வேண்டிய சங்கடங்கள் எத்தனையோ இருந்தன. புது டில்லிக்கும் லண்டனுக்கும் அபிப்பிராய பேதம் பலமாக இருந்தது. இப்பேச்சை முறித்துவிட வேண்டும் என்று அதிகார வர்க்கத்தினரும் சதி செய்துவந்தார்கள். இங்கிலாந்திலிருந்த தீவிர பிற்போக்கு வாதிகள், சமரச ஒப்பந்தம் ஏற்படுவதை விரும்பவில்லை. ஸ்ரீ சர்ச்சில், "இந்தியாவை இழப்பது நமக்கு முடிவானதாகவும் ஆபத்தானதாகவும் இருக்கும். நம்மை ஒரு சின்ன வல்லரசாக்கிவிடும் காரியத்தின் ஒரு பகுதியாக இது இல்லாமல் போகாது" என்றார். போலீஸார் நடத்தையைக் குறித்து விசாரணை நடத்த லார்டு இர்வின் மறுத்துவிட்டார். சில சம்பவங்களைக் குறித்து உள்ளூர் அதிகாரிகள் விசாரிக்கலாம் என்பதற்கு மாத்திரமே சம்மதித்தார். அன்று நம்பிக்கையே இல்லாத நிலைமையே இருந்தது. வைஸ்ராய் மாளிகையிலிருந்து காந்திஜி மாலை 6 மணிக்குத் திரும்பினார்.

காரியக் கமிட்டியோ, விட்டு கொடுக்கத் தயாராயில்லை. காந்திஜி கூறுவதை அவர்கள் மரியாதையோடு கேட்டுக்கொண்டாலும், சமரச நிபந்தனைகளை தளர்த்திக் கொடுத்து விட அவர்கள் விரும்பவில்லை. மார்ச் 2–ஆம் தேதி நடுநிசியில் காந்திஜி திரும்பவும் வைஸ்ராயைப் பார்த்தார். கவலை தருவதாக இருந்த நிலைமையில் சிறிது அபிவிருத்தி ஏற்பட்டது. காந்திஜி இரவு ஒரு மணிக்குத் திரும்பி வந்து, காரியக் கமிட்டி உறுப்பினர்களிடம் தாம் வைஸ்ராயுடன் பேசிய விவரங்களைக் கூறினார். பிறகு இரவு 2 மணிக்கு, தாம் அன்றாடம் நூற்கவேண்டிய 220 கஜம் நூலை நூற்று முடித்தார். மறுநாள் திங்கட்கிழமையாகையால், தமது 24 மணி நேரம் மௌன விரதத்தையும் ஆரம்பித்து விட்டார். அன்று இரவு காந்திஜி ஒன்றரை மணி நேரமே தூங்கினார். காலைப் பிரார்த்தனைக்காக 4 மணிக்கு எழுந்துவிட்டார்.

## காந்திஜி - இர்வின் ஒப்பந்தம்

உப்பு சம்பந்தமாக சலுகை அளிக்க மார்ச் 3-ஆம் தேதி வைஸ்ராய் ஒப்புக் கொண்டுவிட்டார். ஆனல், பர்டோலியில் பறிமுதல் செய்து விட்ட நிலங்களைத் திருப்பிக் கொடுப்பது சம்பந்தமாகவே தகராறு பலமாக இருந்தது. சமரசப் பேச்சு முறிந்துவிடுமோ என்று மீண்டும் தோன்றியது. நிலம், மூன்றுமவருக்குப் போய் விட்ட விஷயத்தில் தாம் தலையிடுவதற்கில்லை என்று வைஸ்ராய் கூறிவிட்டார். 2 மணிக்குக் காந்திஜி திரும்பி வந்தார். மறியல் சம்பந்தமாக ஒரு முறை முன்பே ஒப்புக் கொள்ளப்பட்டுவிட்டது. ராஜீயக் கைதிகளை விடுதலை செய்து விடுவதாகவும் வைஸ்ராய் வாக்களித்தார். பறிமுதலான நிலங்கள் சம்பந்தமாக பம்பாய் அரசாங்கத்துடன் காந்திஜி பேசி ஒரு முடிவுக்கு வருவதை முன்னிட்டு பம்பாய் அரசாங்கத்திற்கு தாம் ஒரு குறிப்பைத் தருவதாகக் கடைசியில் வைஸ்ராய் ஒப்புக் கொண்டார். மக்கள் கையிலிருக்கும் ஒரே ஆயுதம் சட்டமறுப் பேயாகையால் சட்ட மறுப்பை முடிவாக நிறுத்திவிடுவதோ, விட்டுவிடுவதோ இல்லை என்று காந்திஜி எப்பொழுதும் கூறி வந்திருக்கிறார். ஆனல், அதை நிறுத்திவைக்கலாம் என்பதை வைஸ்ராய் ஆட்சேபித்தார். முடிவாக நிறுத்திவிடுவது என்றிருக்க வேண்டும் என்ருர். கடைசியாக சமரச ஒப்பந்தத்தில் "நிறுத்திவிடுவது" என்ற சொல்லே உபயோகிக்கப்பட்டது. காரியக் கமிட்டிக்கு ஒப்பந்தத்தின் ஷரத்துக்கள் பிடிக்காது போயினும், திருப்தியில்லாமலேயே அதை ஏற்றுக் கொண்டது.

மார்ச் 4-ஆம் தேதி ராத்திரி திரும்பவும் காந்திஜி வைஸ்ராயுடன் பேசினர். இரவு 1-30 மணிக்கு திரும்பி வந்து சமரச ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டதாகக் காரியக் கமிட்டி உறுப்பினர்களிடம் சொன்னர். மார்ச் 5-ஆம் தேதி மத்தியானம் வைஸ்ராய் மாளிகையில் காந்திஜியும் லார்டு இர்வினும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

பிறகு லார்டு இர்வின், ஒருவர் இன்னொருவரின் ஆரோக்கியத்திற்காகச் சேர்ந்து தேநீர் பருகலாம் என்ருர். இதற்குக் காந்திஜி ஒப்புக்கொண்டார். ஆனல், தேநீருக்குப் பதிலாக தண்ணீரும் சிட்டிகை உப்பும் கலந்த நீரைப் பருகுவதாக காந்திஜி சொன்னர். காந்திஜியை "அரை நிர்வாண பக்கிரி" என்று ஸ்ரீ சர்ச்சில் வருணித்ததைக் குறித்து இருவரும் சிரித்து தமாஷாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு காந்திஜி புறப்படுகையில் அவருடைய துப்பட்டியை வைத்து மறந்துவிட்டுக் கிளம்பினர். லார்டு இர்வின் அந்த துப்பட்டியைக் கையில் எடுத்துகொண்டு சிரித்த வண்ணம், 'காந்திஜி, உங்கள் உடம்பிலோ அதிக ஆடை எதுவும் இல்லை என்பது உங்களுக்குத் தெரியும். அப்படியிருக்க இதை

யும் நீங்கள் விட்டுப்போக எப்படி உங்களால் முடியும்?" என்ருர்.

இரண்டு வாரப் பேச்சின் பலனே காந்தி—இர்வின் ஒப்பந்தம். அப்பொழுது காந்திஜி எட்டு முறை வைஸ்ராய் மாளிகைக்கு சென்ருர். மொத்தம் இருபத்து நான்கு மணி நேரம் அங்கே இருந்திருக்கிருர்.

இந்த ஒப்பந்தம் சம்பந்தமான அரசாங்க அறிக்கை வெளியானதும், காரியக் கமிட்டி அதை அங்கீகரித்து தீர்மானம் நிறைவேற்றியதோடு, அதன்படி எல்லா காங்கிரஸ் கமிட்டிகளும் உடனே நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது.

# 33

# இழந்தது எதுவும் இல்லை

காந்தி - இர்வின் ஒப்பந்தம் வெளியானதும் பத்திரிகை நிருபர்களிடம் காந்திஜி பேசிக் கொண்டிருந்தார். 90 நிமிஷ நேரம் எந்தக் குறிப்பும் இன்றி பேசினர். அவர் கூறியதாவது :

"இந்த ஒப்பந்தத்தில் முக்கியமானது எதையும் இழந்துவிடவில்லை; கொள்கை எதையும் விட்டுக்கொடுத்துவிடவும் இல்லை. இது போன்ற ஒப்பந்தத்தில் வெற்றியடைந்திருப்பது எந்தக் கட்சி என்பதைச் சொல்லிவிடுவது சாத்தியமும் இல்லை. அது புத்திசாலித்தனமும் அன்று. வெற்றி என்பது ஏதாவது இருக்குமானல், அது இரு தரப்பாரையும் சேர்ந்ததே ஆகும். பிரிட்டிஷார் ஒரு விஷயத்தை உணர வேண்டும். எந்த சுதந்திரத்தை அடைவதற்காக பிரிட்டிஷார் தங்கள் உயிரையும் கொடுக்கத் தயாராக இருப்பார்களோ, அதே சுதந்திரப் பிரகாசத்தை இந்தியாவும் அனுபவிப்பதற்கு அவர்கள் அனுமதிக்க வேண்டும். ஒப்பந்தத்தில் பூரண சுயராஜ்யம் என்ற மனதைக் கவரும் சொல் இல்லையே என்று சொல்லப்படுகிறது. மற்ற நாட்டினருக்கு இருப்பதைப் போன்றே சுதந்திரம் இந்தியரின் பிறப்புரிமை. அதற்குக் குறைந்த எதைக்கொண்டும் இந்தியா திருப்தி அடைந்துவிட முடியாது."

முடிவாக காந்திஜி கூறியதாவது: "தாற்காலிகமானதே என்ருலும், வேண்டும் என்று விரும்பியே காங்கிரஸ் ஒத்துழைப்பு

வேலையை மேற்கொண்டிருக்கிறது. ஒப்பந்தத்தில் தங்களுக்குள்ள பகுதியை காங்கிரஸ்காரர்கள் கௌரவமாகவும், பூரணமாகவும் நிறைவேற்றி வைப்பார்களானால், யாரும் எதிர்த்துவிட முடியாத ஒரு கௌரவத்தைக் காங்கிரஸ் அடையும். சட்டமறுப்பு இயக்கத்தை நடத்துவதில் தனக்குள்ள ஆற்றலை காங்கிரஸ் நிரூபித்துக் காட்டியிருக்கிறது என்று நான் நம்புகிறேன். ஒப்பந்தத்தை அது சரிவர நிறைவேற்றிவருமானால், சமாதானம் நிலைக்கும்படிச் செய்வதில் காங்கிரஸுக்குள்ள ஆற்றலில் அரசாங்கத்திற்கு நம்பிக்கை ஏற்பட்டுவிடும்படிச் செய்ததாகவும் ஆகும்."

பலாத்காரவாதிகளுக்கு காந்திஜி விடுத்த கோரிக்கையாவது: "பொறுமையுடன் இருக்கும்படி அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். காங்கிரஸுக்கு, அவர்கள் விரும்பினால் எனக்கு, ஒரு வாய்ப்பைக் கொடுத்துப் பார்க்கும்படி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தண்டி யாத்திரை ஆரம்பமாகி இப்பொழுது ஒரு வருடம்தான் ஆகிறது. இன்னும் கொஞ்ச காலத்திற்கு அவர்கள் பொறுத்துப் பார்க்கட்டும். தேச சேவைக்கு முன் வரும்படி எல்லோரும் அழைக்கப்படுவார்கள். ஆகவே, அவர்களுடைய அருமையான உயிரை தேச சேவைக்காகப் பாதுகாத்து வைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். ராஜீயக் கைதிகளையும், கொலைக் குற்றத்திற்காக தூக்கு தண்டனை அடைந்திருப்போரை தூக்குமேடையிலிருந்தும் விடுவிக்கும்படிச் செய்வதற்கான சந்தர்ப்பத்தை அவர்கள் காங்கிரஸுக்குக் கொடுக்கட்டும்.* ஆனால், அனாவசியமாக எந்த நம்பிக்கையும் ஏற்பட்டுவிடும்படிச் செய்ய நான் விரும்பவில்லை. என் மனத்திலிருக்கும் ஆசையையும், காங்கிரஸின் ஆசையையும் மாத்திரமே நான் பகிரங்கமாகச் சொல்ல முடியும். முயற்சி செய்ய வேண்டியது நம் கடமை. ஆனால், பலன் கடவுளின் அருளைப் பொறுத்திருக்கிறது."

---

*காந்திஜி, வைஸ்ராய் லார்டு இர்வினுடன் பேசிக்கொண்டிருந்தபோது, சட்ட மறுப்புக் கைதிகள் 90,000 பேரை விடுதலை செய்வதோடு சிறையிலிருந்த மற்ற ராஜீயக் கைதிகளையும் விடுதலை செய்யும்படிக் கேட்டுக்கொண்டார். காந்தி—இர்வின் ஒப்பந்தத்தை முன்னிட்டு சட்ட மறுப்புக் கைதிகள் அப்பொழுது விடுதலை செய்யப்பட்டுவிடுவார்கள். ஆனால், விசாரணைக்குப் பிறகு தண்டனை அடைந்தவர்களும், முக்கியமாக வங்காளத்தில் விசாரணையின்றி சிறைவைக்கப்பட்டவர்களும், நூற்றுக்கணக்கில் சிறையில் கிடந்து வாடினர். இவர்களெல்லோரும் பலாத்காரப் புரட்சி இயக்கத்தினர் என்று அரசாங்கம் கூறிவந்தது. ஒப்பந்தத்தை முன்னிட்டு இல்லாவிட்டாலும், நாட்டிலிருந்துவரும் ராஜீயக் கொதிப்பைத் தணிப்பதற்காகவாவது இவர்களை விடுதலை செய்யவேண்டும் என்று காந்திஜி கேட்டுக்கொண்டார். மத்திய அசெம்பிளியில் வெடிகுண்டு வீசிய வழக்கில் தூக்கு தண்டனை யடைந்தவர்களான பகவத்சிங், சுகதேவ், ராஜகுரு ஆகியவர்களின் தண்டனையை ஆயுள் சிறைத் தண்டனையாக மாற்றிவிடுமாறும் காந்திஜி கேட்டுக்கொண்டார். ஆனால், வைஸ்ராய் பிடிவாதமாக இருந்தார். இந்த நிலைமையையும், காங்கிரஸின் முயற்சியையுமே காந்திஜி மேலே குறிப்பிடுகிறார்.

மார்ச் 6-ஆம் தேதி நடந்த பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் காந்தியை சரமாரியாகக் கேள்விகள் கேட்டனர். "சமரச ஒப்பந்தம், லாகூர் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்திற்குப் பொருத்தமானதா?" என்று ஒரு நிருபர் கேட்டார். இதற்கு காந்திஜி கூறியதாவது: "நிச்சயமாகப் பொருத்தமானது அல்ல தான். ஆனால், கராச்சி காங்கிரஸில் காங்கிரஸ்காரர்கள் லாகூர் தீர்மானத்தைத் திரும்பவும் உறுதிப்படுத்திக் கொள்ளுவதற்குத் தடையாக எதுவும் இல்லை. வட்டமேஜை மகாநாட்டிலும் இதே நிலைமையை காங்கிரஸ்காரர்கள் வற்புறுத்துவதையும் எதுவும் தடுத்துவிடாது. சமரசம் செய்து கொள்ளுவது என்பதற்கு வரும் முன்னால் இந்த நிலைமையைத் தெளிவு படுத்திக்கொள்ளுவதிலும், காங்கிரஸின் நிலைமையைத் தெளிவாகக் கூறிவிடுவதிலும் நான் அதிக உஷாராகவே இருந்தேன். இதை இப்பொழுது நான் வெளியிடுவது எந்த ரகசியத்தையும் வெளியிட்டுவிட்டதாகிவிடும் என்று நான் நினைக்கவில்லை. அந்த மகாநாட்டில் பூரண சுயராஜ்யத்தை வற்புறுத்தவே கடமைப்பட்டிருக்கிறோம் என்றுதான் கருதுவேன். அதை வற்புறுத்தாதுபோனால், நாம் எதற்காக இருக்கிறோமோ அதையே மறுத்துக்கொண்டு விட்டதாகும்."

இன்னுமொரு நிருபர், "லாகூரில் பூரண சுயராஜ்யத்தை வற்புறுத்திய அந்த நிலைக்கும், இப்பொழுது சமரச ஒப்பந்தத்திற்காக நடந்த பேச்சிற்குமிடையே அதிக வித்தியாசம் இருப்பதாக தோன்றுகிறது" என்றார். இதற்குக் காந்திஜி கூறியதாவது: "லாகூர் தீர்மானத்தை நான் கொண்டுவந்த போதுகூட, பிரிட்டிஷ் தொடர்பை அடியோடு துண்டித்துக்கொண்டு விடுவதுதான் சுயராஜ்யம் என்பதற்குப் பொருளாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை என்பதை அப்பொழுதே நான் வற்புறுத்திக் கூறியிருக்கிறேன். பலாத்காரப் போரை நாம் நடத்தியிருந்தால், நம் கட்சிக்கோ அல்லது எதிர்க் கட்சிக்கோ நாசங்கள் ஏற்பட்டிருக்கக் கூடும். ஆனால், நம்முடைய போராட்டமோ, சமரசம் ஏற்படும் என்பதை முன்கூட்டியே எண்ணி நடத்தப்பட்ட அகிம்சைப் போராட்டம். நெடுகவும் இதையே கருதியிருக்கிறோம்; விரும்பியும் இருக்கிறோம். அந்த உணர்ச்சியின் பேரில் எழுதப்பட்டதே லார்டு இர்வினுக்கு நான் எழுதிய கடிதம். தாற்காலிகமான சமரசம், அங்கே போய், நமக்கு வேண்டியதைக் கேட்பதற்கு வாய்ப்பை அளிக்கிறது. அத்தகைய வாய்ப்புக்கு வழிதேட வேண்டியது, சத்தியாக்கிரகி என்ற முறையில் என் கடமையாகும்."

"பூரண சுயராஜ்யம் என்பதைப் பற்றி உங்கள் கருத்து என்ன? பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் அது சாத்தியமா?" என்று மற்றோர் நிருபர் கேட்டார். இதற்கு காந்திஜி கூறியதாவது: "பூரண சுயராஜ்யம் என்பது பிரிந்துவிடுவது. அந்த விதமாகவே பொதுஜன எண்ணமும் இருந்து வருகிறது. ஆனால்,

பூரண சமத்துவம் என்ற அடிப்படையில் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக நாம் இருப்போமாயின், சாம்ராஜ்யத்தின் கேந்திர மாக லண்டன் இருப்பதற்குப் பதிலாக டில்லியே கேந்திர ஸ்தானமாக இருக்க வேண்டும். இந்தியாவில் முப்பதுகோடி மக்கள் இருக்கிறார்கள். இந்த முக்கியத்தை அலட்சியம் செய்து விடமுடியாது. இத்தகைய நிலைமைக்குச் சம்மதிக்க இங்கிலாந்து ஒரு நாளும் ஒப்புக்கொள்ளாது என்று நண்பர்கள் கூறுகிறார் கள். ஆனால், நான் மனச் சோர்வை அடைந்து விடவில்லை."

இன்னுமொரு நிருபர், வருங்கால இந்திய அரசாங்கத்திற் குப் பிரதம மந்திரியாக இருக்க காந்திஜி சம்மதிப்பாரா என்று கேட்டார். இதற்கு காந்திஜி, "நான் சம்மதிக்க மாட்டேன். அது இளம் உள்ள மிருப்போருக்கும், பலமான கைகள் இருப் போருக்கும் ஒதுக்கி வைக்கப்படும்." என்றார். "ஆனால், காந் திஜியே பிரதம மந்திரியாக வேண்டும் என்று மக்கள் விரும்பி னால் என்ன செய்வீர்கள் ?" என்று அந்நிருபர் மேலும் கேட்டார். உடனே எல்லோரும் சிரித்துவிட்டார்கள். காந்திஜியும் சிரித் துக்கொண்டே, "உங்களைப் போன்ற பத்திரிகையாளருக்குப் பின்னால் ஒளிந்துகொள்ள முயற்சிப்பேன்" என்றார்.

[டெண்டுல்காரின் 'மகாத்மா' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

# 34

# மீண்டும் ஒப்பந்தத்தைக் குறித்து

[காந்தி - இர்வின் ஒப்பந்தத்திற்குப் பிறகு காந்திஜி 1931 மார்ச் 17-ஆம் தேதி பம்பாய்க்குச் சென்றார். அங்கே மிகப் பிரமாதமான ஒரு பொதுக்கூட்டத்தில் மக்கள் அவருக்குக் குதூகலமான வரவேற்பு அளித்தனர். பம்பாயில் காந்திஜி இருந்த இரு நாட்களிலும் இரவு பகல் அவருக்கு ஓயாமல் வேலை இருந்தது. தமது சகாக்களு டன் கலந்தாலோசிப்பதற்காகவே அவர் பம்பாய் வந்தார். திங்கட்கிழமை அவருக்கு மௌன விரத தினமாக இருந் தும் அன்றும் அவருக்கு ஓய்வெடுத்துக் கொள்ளவும் தூங் கவும் அவகாசமில்லை. அன்று இரவு 8 மணிக்கே மௌன விரதத்தை நிறுத்திவிட்டார். ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸு டன் அன்று இரவு 2-30 மணி வரையில் பேசிக்கொண் டிருந்தார். பிறகு அரைமணி நேரம் தூங்கினார். பின்னர் காலைப் பிரார்த்தனைக்காக எழுந்துவிட்டார். இவ்விதம்

**அன்று 24 மணி நேரத்தில் 22 மணி நேரம் அவர் வேலை செய்தார். பிரார்த்தனை முடிந்ததுமே மீண்டும் முக்கியஸ்தர்களுடன் பேசுவது ஆரம்பமாகிவிட்டது. பல பொதுக் கூட்டங்களிலும் பேசினர். முக்கியமான பொதுக் கூட்டத்தில் அவர் பேசியதே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]**

"நான் விடுதலையாகி உங்கள் முன்னல் தோன்றியதிலிருந்து இப்போதைக்கு ஒரு சகாப்தமே முடிந்துவிட்டது. புதிய சகாப்தம் இப்பொழுது ஆரம்பமாகி விட்டது. என்னுடைய செய்தியை உங்களுக்கு எடுத்துக் கூறுவதற்காக இன்று மாலை உங்கள் முன்னல் வந்திருக்கிறேன். ஆனல், முன்னல் நான் உங்களுக்கு அறிவித்ததற்கும் இதற்கும் அதிக வித்தியாசம் உண்டு. அன்று உங்களுக்கு நான் சொன்னது எளிதானது; இன்று நான் சொல்லப் போவதோ அதிகச் சிக்கலானது. சென்ற பன்னிரண்டு மாதங்களிலும் போர் மனப்பான்மையை நாம் வளர்த்துக்கொண்டு விட்டோம். போராட்டத்தைக் குறித்தே எண்ணினேம்; அதைப் பற்றியே பேசிவந்தோம்; எல்லாமே போராட்டத்தைக் குறித்தேயன்றி வேறு எதுவும் இல்லை. இப்பொழுதோ, நாம் முற்றிலும் மாறுபட்டதான புதிய பாட்டைப் பாடவேண்டியவர்களாக இருக்கிறோம். சமரச ஒப்பந்தத்தின் கீழ் நாம் இப்பொழுது இருந்து வருகிறோம். 'சமரச ஒப்பந்தம்' என்று சொன்னதுமே நம்மில் சிலருடைய உடல்கள் நடுங்க ஆரம்பித்துவிடுகின்றன என்பதை அறிவேன். போராட்டத்தைக் குறித்து வேறு எதையுமே நாம் எண்ணமல் இருந்துவிட்டதனலும், இதில் சமரசமே ஏற்பட முடியாது என்று நம்பிவிட்டதாலுமே இந்த நிலைமை. ஆனல், ஒரு சத்தியாக்கிரகிக்கு உகந்த நிலைமை அன்று அது. சத்தியாக்கிரகி, போராடுவதற்குத் தயாராக இருப்பதைப் போன்றே சமாதானத்திலும் ஆர்வமுள்ளவராக இருக்கவேண்டும். சமாதானத்திற்கான கௌரவமான வாய்ப்பை அவர் வரவேற்கவேண்டும். அத்தகையதோர் வாய்ப்பு இருப்பதைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி கண்டது; அதை உபயோகித்துக் கொண்டது. அவமானப்படுத்துவதாக எதுவும் இருக்கக்கூடாது, அதனல் திகில் ஏற்படுவதாக இருக்கக் கூடாது என்பதுதான் ஒரு சமரசத்தின் அத்தியாவசியமான நிபந்தனைகள். எதைத் தியாகஞ் செய்தாயினும் சமரசத்திற்கு வந்துவிடுமாறு எனக்கு ஏராளமான தந்திகள் வந்து குவிந்தன. என்றலும், அவைகளையெல்லாம் பார்த்து நான் கொஞ்சமும் அசைந்து கொடுத்துவிடவில்லை என்பதை நீங்கள் நிச்சயமாக அறியவேண்டும். இத்தகையவைகளெல்லாம் என்னை எதுவும் செய்துவிட முடியாது. என் அந்தராத்மா எனக்குக் கூறும் முடிவிலிருந்து நான் கொஞ்சமும் தவறிப் போய்விடும்படி அந்தத் தந்திகளெல்லாம் என்னைச் செய்துவிடக்கூடாது என்பதில் நான் மிகுந்த உறுதியுடன் இருந்தேன். ஒரு சத்தியாக்கிரகி

திகிலுக்கோ, தயக்கத்திற்கோ என்றும் விட்டுக்கொடுத்துவிடுவதில்லை. என்றாலும், எதிர்க்கட்சியினரை அவமானப்படுத்த வேண்டும் என்றோ, எதிராளி அடியோடு சரணகதி அடையும்படிச் செய்ய வேண்டும் என்றோ சத்தியாக்கிரகி எண்ணுவதும் இல்லை. நீதியின் வழியிலிருந்து சத்தியாக்கிரகி தவறிவிடமாட்டார்; எதிராளிக்கு அசாத்தியமானதான நிபந்தனைகளைப் போடவும் மாட்டார். தம்முடைய கோரிக்கைகளை உச்சத்திற்கு உயர்த்திவிடவும் மாட்டார்; அதிகத் தாழ்விற்குக் கொண்டுபோய் விடவும் மாட்டார். இந்த நிபந்தனைகளுக்கெல்லாம், இப்பொழுது ஏற்பட்டிருக்கும் சமரச ஒப்பந்தம் திருப்தியளிப்பதாக இருக்கிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஒப்பந்தத்தின் ஒரு விதி, சில வட்டாரங்களில் ஏமாற்றத்தை உண்டாக்கியிருக்கிறது. அதனால் இந்த ஒப்பந்தத்தைக் கண்டிக்க சிலர் கிளம்பியிருக்கிறார்கள். எல்லா ராஜீயக் கைதிகளையும் விடுதலை செய்யும்படிச் செய்த பிறகே நாம் ஒப்பந்தத்திற்கு வந்திருக்க வேண்டும் என்று அவர்கள் புகார் சொல்லுகிறார்கள். நியாயமாகப் பார்த்தால், இதை நாம் வற்புறுத்த முடியாது என்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம்மைப் பொறுத்தவரையில் இதில் நமக்கு உறுதியில்லை என்பதனால் அல்ல; நமது இந்தக் கோரிக்கையை எதிர்க்க முடியாததாகச் செய்யும் சக்தி நமக்கு இல்லாததனாலேயே இதைச் சொல்லுகிறேன். ஒப்பந்தப்படி நாம் செய்ய வேண்டியிருக்கும் காரியங்களையெல்லாம் நாம் சரிவர நிறைவேற்றிவிடும்போது, இந்தச் சக்தி நமக்கு வந்துவிடும்.

"மாகாண அரசாங்கங்கள், ஒப்பந்தத்தில் அவர்கள் சம்பந்தப்பட்ட காரியங்களை நிறைவேற்றிவைப்பதில் கொஞ்சமும் சிரத்தையில்லாமலிருக்கின்றன என்பதை உங்களுக்கு அறிவித்துக்கொள்ளுகிறேன். இதற்குள் விடுதலை செய்யப்பட்டிருக்க வேண்டிய கைதிகளை இன்னும் விடுதலை செய்யவில்லை. வாபஸ் வாங்கியிருக்கவேண்டிய சிர்னல் துப்பாக்கிப் பிரயோக வழக்கு போன்றவைகளை இன்னும் வாபஸ் வாங்கவும் இல்லை. இவ்வழக்குகள் இன்னும் நடந்துகொண்டு வருகின்றன. இது விசனிக்க வேண்டிய விஷயம். இவ்விதம் செய்யப்படும் அசிரத்தைகளோ, தவறுகளோ வேண்டுமென்றே செய்யப்படுவனவாக இருக்குமாயின், இவை திட்டமிட்டுச் செய்யப்படுபவையாகும். ஆனால், இக்காரியங்களெல்லாம் நமது பலத்தைத்தான் அதிகரிக்கும்; சுயராஜ்யத்தைப் பற்றிய நம் கட்சியை மேலும் எதிர்க்க முடியாததாகவும் செய்யும். அரசாங்கத்தின் அதிசயிக்கத்தக்க பிரமாதமான யந்திரத்தை எண்ணிப் பார்க்கும்போது, இத்தகைய அசிரத்தைகளெல்லாம் வேண்டுமென்றே செய்யப்படும் காரியங்களாக இல்லாதுமிருக்கலாம் என்றும் நினைக்க சிலர் விரும்பக்கூடும். இத்தகைய காரியங்கள், விரும்பிச் செய்யப்படாத தாமதங்களாகவோ, சரியாகக் கவனிக்காதவைக

ளாகவோ இருக்கவும் கூடும். ஆனல், இவை வேண்டுமென்றே செய்யப்படும் நம்பிக்கைத் துரோகச் செயல்களாக இருக்கு மானல், இதற்குத் தலைசிறந்த பரிகாரம் நம்மிடம் இருக்கிறது. ஒப்பந்தத்தைக் கவனியுங்கள். அதன் கடைசி விதி, ஒப்பந்தப் படி நடந்துகொள்ள காங்கிரஸ் தவறிவிடுமானல், சட்டம், அமைதி சம்பந்தமான யந்திரத்தை அமலுக்குக்கொண்டுவந்து விட அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கிறது. அரசாங்கம் தனது கடமையை நிறைவேற்றத் தவறிவிடுமானல், நமக்கும் அதே விதி நமது நடவடிக்கையை மேற்கொள்ளும் அதிகாரத்தை அளிப்பதுமாகிறது என்பதை நான் சொல்லத் தேவையில்லை. அரசாங்கத்திற்கு அதனுடைய யந்திரத்தை அமலுக்குக் கொண்டு வர அதிகாரம் அளிப்பதைப் போன்றே, அரசாங்கத்தின் தரப்பில் ஒப்பந்தம் வேண்டுமென்றே நீக்கப்படுகிறது என்பதை நாம் கண்டால், என்றும் தோல்வியையே அடையாததான நம் ஆயுதத்தை நாம் மேற்கொள்ளுவதற்கு நமக்கும் உரிமை இருக்கிறது.

"என்றாலும், இப்பொழுதுள்ள தாமதங்கள், உங்களுக்குப் பரபரப்பை உண்டாக்கவோ, ஆத்திரத்தை மூட்டவோ வேண் டியதில்லை. ஏனெனில், அதற்கு வேண்டிய அவசியம் இப் பொழுது இல்லை. ஒரு சத்தியாக்கிரகிக்கு, நிச்சயமான பொறு மையும், மற்றவர்களிடம் மிகுந்த நம்பிக்கையும், போதுமான தன் னம்பிக்கையும் இருக்கின்றன.

"எச்சரிக்கை செய்வதற்காக இப்பொழுது ஒன்று கூற விரும்புகிறேன். இந்த ஒப்பந்தம் உண்மையாகவே தாற்காலிக மானது. ஆனல், நமது வேலை முறையில் மாறுதல் ஏற்படுவதை இது அவசியமாக்குகிறது. ஒப்பந்தத்திற்கு முன்னல், சட்ட மறுப்புச் செய்வதோ, சிறை செல்லுவதோ அல்லது நேரடி நட வடிக்கையோ அனுசரிக்க வேண்டிய முறையாக இருந்தபோதி லும், அதற்குப் பதிலாக விவாதிப்பது, சமரசமாகப் பேசி முடி வுக்கு வருவது என்பன இப்பொழுது நாம் அனுசரிக்க வேண்டிய வேலை முறைகளாகி யிருக்கின்றன. ஆனல், சமரச ஒப்பந்தம் தாற்காலிகமானது, எந்த நேரத்திலும் முறிந்துவிடக்கூடும் என் பதை யாரும் மறந்துவிட வேண்டாம். ஆகையால், போராட் டத்திற்கு நாம் என்றும் தயாராக இருந்து வரவேண்டும்; ஆயத் தமும் அவசியம். ஒப்பந்தம் முறிந்துவிடும்போது, நாம் தூங்கிக் கொண்டிருந்துவிட்டோம் என்று இருக்கக்கூடாது; முதல் உத் தரவு வந்ததுமே நாம் படையைத் திரட்டிக்கொண்டுவிட தயா ராக இருந்தாக வேண்டும். இதற்கு மத்தியில், நாம் நாளுக்கு நாள் அதிக பலத்தைப் பெறுவதை முன்னிட்டு இன்னும் அதிகத் தீவிரமாகவும், இன்னும் அதிக நம்பிக்கையுடனும் நம்மை நாமே மேலும் தூய்மைப்படுத்திக்கொண்டு வருவோமாக.

"விஷயத்தை விளக்குவதற்காக இன்னுமொன்றும் கூற விரும்புகிறேன். இந்த ஒப்பந்தம், லாகூர் தீர்மானத்திற்குக் குறைந்ததான ஒரு நிலைமைக்குக் கட்டுப்படும்படி நம்மைச் செய்து விட வில்லை. லாகூரில் நாம் மேற்கொண்ட நிலைமையை மாற்றிக் கொள்ளுவது நம் இஷ்டத்தைப் பொறுத்தது. ஆனால், ஒப்பந்தத்தில் கண்ட எதுவும் அப்படி நாம் செய்துகொள்ள வேண்டும் என்று நம்மைக் கட்டாயப்படுத்தவில்லை. பூரண சுதந்திரத்திற்குக் குறைந்த எதையும் நாம் கேட்கப் போவதில்லை. இதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். அது நமக்குக் கிடைக்கப் போகிறதா என்பது வேறு விஷயம். இந்தியாவின் கட்சிப் பிரதிநிதிகளிடத்தில் நாம் என்ன சக்தியை உபயோகிக்கப் போகிறோம், அவர்கள் திருப்தியடையும்படி நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதையே அது பொறுத்திருக்கிறது. ஆனால், நாம் விரும்புவது முழுவதையும் நாம் வற்புறுத்த முடியும், நம்மை தடுத்துவிடக்கூடியது எதுவும் ஒப்பந்தத்தில் இல்லை என்பதே உண்மை. அதிகமாகப் பேசப்பட்டுவரும் பாதுகாப்புகளைப் பற்றிய விஷயம் வேறு இருக்கிறது. ஸ்ரீ மாக்டொனல்டு கூறியிருக்கும் யோசனைகளில் அடங்கிய பாதுகாப்புகள் முழுவதையும் அடியோடு மாற்றிவிட வேண்டும் என்று நாம் கேட்க முடியும் என்பதே நான் இன்றிருக்கும் நிலைமை. இதில் நாம் எவ்வளவு தூரம் வெற்றி பெறுவோம் என்பது, தனது மூன்று தூண்களைக் கொண்டதான நம் ஆக்க வேலைத் திட்டத்தை நாம் எந்த அளவுக்கு நிறைவேற்றிவிடுகிறோம் என்பதைப் பொறுத்திருக்கிறது. உள்ளத்தில் சமூக ஒற்றுமை, பூரணமான அந்நியத் துணி பகிஷ்காரம், மது விலக்கு, போதை வஸ்துக்கள் விலக்கு ஆகியவையே ஆக்க வேலையின் அந்த மூன்று தூண்கள். நமது வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான எல்லா முயற்சிகளையும் நாம் செய்து, நமது கோரிக்கையை எதிர்க்கமுடியாததாகச் செய்வோமாக."

## கம்யூனிஸ்டுகளுக்குப் பதில்

அன்றே பம்பாயில் தொழிலாளர் வசிக்கும் பகுதியிலும் மற்றோர் பொதுக்கூட்டம் நடந்தது. கம்யூனிஸ்டுகள் கூட்டத்திற்குள் புகுந்து தங்கள் சிவப்புக் கொடியை மேடை மீதும் நட்டு விட்டனர். காங்கிரஸ் கொடிக்கும் சிவப்புக் கொடிக்கும் நடுவிலேயே காந்திஜி மேடை மீது அமர்ந்திருந்தார். காந்தி, மோசமான உறவைச் செய்து கொண்டிருக்கிறார் என்றும், ராஜாக்கள், மகாராஜாக்கள், முதலாளிகளுக்குப் பலமளிக்கும் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டிருக்கிறார் என்றும் ஒரு கம்யூனிஸ்டு தலைவர் கூறினார். "உங்கள் பதினோரு நிபந்தனைகள் எங்கே?" என்றும் அவர் கேட்டார். "பகவத் சிங், மீரத் கைதிகளின் கதி என்ன? அவர்கள் விடுதலையில்லாத சமாதானத்தினால் என்ன பயன்?" என்றும் அவர் கேட்டார். காந்திஜி அக்கூட்டத்தில் பேசியதாவது:

"இந்தியாவில் கம்யூனிஸ்டுகள் இருக்கிறார்கள் என்பதை அறிவேன். மீரத் சிறைக்கு வெளியில் நான் அவர்களைப் பார்த்ததுமில்லை; அவர்கள் பிரசங்கங்களை நான் கேட்டதும் இல்லை. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நான் ஐக்கிய மாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது மீரத் கைதிகளைச் சந்திப்பதென்று தீர்மானித்துப் போய்ப் பார்த்தேன். அவர்களைக் குறித்துக் கொஞ்சம் தெரிந்துகொள்ள எனக்கு முடிந்தது. அவர்களில் ஒருவர் பேசியதை இன்று மாலை கேட்டேன். தொழிலாளருக்காகச் சுயராஜ்யத்தை வாங்கப் போவதாக அவர்கள் பிரமாதமாகச் சொல்லுகிறார்கள். ஆனால், அதை அடைவதில் அவர்களுக்குள்ள ஆற்றலைப் பற்றி எனக்கு அதிக சந்தேகங்கள் இருக்கின்றன என்பதை அவர்களுக்குச் சொல்லிக்கொள்ளுகிறேன். இங்கே இருக்கும் வாலிபக் கம்யூனிஸ்டுகளில் அநேகர் பிறப்பதற்கு வெகு காலத்திற்கு முன்னாலேயே, தொழிலாளர் நன்மையையே எனது வாழ்க்கையின் லட்சியமாக நான் கொண்டிருந்தேன். தென்னாப்பிரிக்காவில் என் வாழ்நாளின் முக்கிய பகுதியை அவர்களுக்காகச் செலவிட்டிருக்கிறேன். அவர்களுடன் இருந்து வாழ்ந்திருக்கிறேன்; அவர்களுடைய சுகதுக்கங்களை அவர்களுடனிருந்து அனுபவித்திருக்கிறேன், தொழிலாளருக்காகவே நான் பேசுகிறேன் என்று ஏன் கூறிக்கொள்ளுகிறேன் என்பதை இப்பொழுது நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். வேறு எதையும் இல்லாவிட்டாலும் மரியாதையையாவது உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேன். என்னிடம் வந்து, உங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு மனம்விட்டு என்னுடன் விஷயங்களை விவாதிக்க வருமாறு உங்களை அழைக்கிறேன். நீங்கள் கம்யூனிஸ்டுகள் என்று சொல்லிக்கொள்ளுகிறீர்கள். ஆனால், கம்யூனிஸ்டு வாழ்க்கையை நீங்கள் நடத்துவதாகத் தெரியவில்லை. கம்யூனிஸம் என்பதன் சிறந்த பொருளுக்கு ஏற்ற வகையில் வாழ்வதற்கு என்னாலானதையெல்லாம் நான் செய்து வருகிறேன் என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். மரியாதையைக் கம்யூனிஸம் ஒதுக்கித் தள்ளிவிடவில்லை. இன்று நான் உங்களுடன் இருக்கிறேன்; சில நிமிஷங்களில் உங்களை விட்டுப் போய்விடப் போகிறேன். நாட்டு மக்கள் உங்களுடனிருக்கும்படிச் செய்ய நீங்கள் விரும்புவீர்களாயின், அவர்களுக்கு உங்கள் நியாயத்தை எடுத்துக் கூறி அதன்படி அவர்கள் நடந்துகொள்ளுமாறு நீங்கள் செய்ய வேண்டும். அவர்களை நிர்ப்பந்தம் செய்வதனால் நீங்கள் இதைச் செய்து விடமுடியாது. நாடு உங்கள் கருத்தை ஏற்றுக்கொள்ளும்படிச் செய்வதற்காக நீங்கள் நாசத்தைக் கையாளலாம். ஆனால், எத்தனை பேரை நீங்கள் அழித்துவிடமுடியும்? கோடிக்கணக்கானவர்களை அழித்துவிட முடியாது. கோடிக்கணக்கானவர்கள் உங்களுடன் இருந்தால், சில ஆயிரம் பேரை நீங்கள் கொன்றுவிடக் கூடும். ஆனால், இன்று நீங்கள் மிகச் சிலரே இருக்கிறீர்கள். உங்களால் முடிந்தால் காங்கிரஸை உங்கள் கருத்துக்கு மாற்றி, அதன் நிர்

வாகத்தை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால், மரியாதை யின் சாதாரண விதிகளும் வேண்டாம் என்று சொல்லிவிட்டு நீங்கள் காங்கிரஸை உங்கள் வழிக்குத் திருப்பிவிட முடியாது. பொருத்தமான வகையில் யார் பேசினாலும் கேட்டுக்கொள்ளும் சகிப்புத் தன்மை இந்தியாவுக்கு இருக்கிறது. ஆகையால், உங் கள் கருத்துக்களை நீங்கள் தாராளமாகத் தெரிவித்துக்கொள்ள லாம். அப்படியிருக்கும்போது மரியாதைக் குறைவாக நீங்கள் நடந்துகொள்ளுவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை.

"சமரச ஒப்பந்தம், தொழிலாளருக்கு எந்தவிதத் தீமையை யும் செய்துவிடவில்லை. என்னுடைய நடவடிக்கைகளில் எதுவும் தொழிலாளருக்குத் தீமை செய்துவிடவில்லை, செய்துவிடாது என்று கூறிக்கொள்ளுகிறேன். மகாநாட்டுக்கு (வட்ட மேஜை மகாநாட்டுக்கு) காங்கிரஸ் தனது பிரதிநிதிகளை அனுப்பினால், தொழிலாளர், விவசாயிகளுக்கு வேண்டிய சுயராஜ்யத்தைத் தவிர வேறு எதையும் அவர்கள் அங்கே வற்புறுத்தமாட்டார்கள். தொழிலாளருக்கும் விவசாயிகளுக்கும் சுயராஜ்யமாக இல்லாத எதுவும் சுயராஜ்யமே ஆகாது என்று, கம்யூனிஸ்டு கட்சி பிறப் பதற்கு வெகு காலத்திற்கு முன்பே காங்கிரஸ் வற்புறுத்தி வந் திருக்கிறது. மாதம் ரூ. 20-க்குக் குறைவாக ஊதியம் பெறும் தொழிலாளர்கள் யாரும் இங்கே இருக்கமாட்டார்கள். ஆனால், உங்களுக்காகச் சுயராஜ்யத்தை அடைவதற்காக மாத்திரம் நான் பாடுபட்டுக்கொண்டிருக்கவில்லை. உழைத்துப் பாடுபட்டும் வேலை கிடைக்காமல் திண்டாடும் கோடிக்கணக்கானவர்களுக் கும், ஒரு வேளைச் சாப்பாடுமில்லாமல் தவிப்பவர்களுக்கும், வெறும் கஞ்சியையும் ஒரு சிட்டிகை உப்பையும்கொண்டு வாழ்ந்து வருகிறவர்களுக்கும் சுயராஜ்யத்தைத் தேடுவதற் காகவும் நான் பாடுபடுகிறேன். ஆனால், உங்களை ஏமாற்ற நான் விரும்பவில்லை. முதலாளியிடம் எனக்குக் கெட்ட எண்ணம் எதுவும் இல்லை என்பதையும் நான் உங்களுக்கு எச்சரிக்கை செய்யவேண்டும். அவர்களுக்கு எந்தத் தீங்கும் செய்ய நான் நினைக்க முடியாது. ஆனால், துன்பத்தை நானே அனுபவித்துக்கொள்ளுவதன் மூலம், அவர்கள் தங்கள் கடமையைச் செய்தாக வேண்டியதில் விழிப் படையும்படிச் செய்யவே விரும்புகிறேன். அவர்களுடைய மனம் உருகி, கஷ்டத்திலிருக்கும் தங்கள் சகோதரர்களுக்கு நியாயத்தை அவர்கள் செய்யப் பார்க்க வேண்டும் என்றே விரும்புகிறேன். அவர்களும் மனிதர்களே. ஆகையால், அவர் களுக்கு நான் விடும் கோரிக்கை வீண் போகாது. தன்னலத் தியாகம் செய்த பல முதலாளிகளின் விவரங்களை ஜப்பானிய சரித்திரம் வெளிப்படுத்துகிறது. சென்ற சத்தியாக்கிரகத்தின் போது பல முதலாளிகள் அதிகத் தியாகங்களைச் செய்திருக்கி றார்கள். சிறைக்குச் சென்றும் அவர்கள் கஷ்டங்களை அனுபவித் தனர். இவர்களையெல்லாம் விரோதப்படுத்திக் கொள்ள நீங்கள்

விரும்புகிறீர்களா? பொதுவான நன்மையை முன்னிட்டு இவர்களும் உங்களுடனிருந்து வேலை செய்வதை நீங்கள் விரும்ப வில்லையா ?

"மீரத் கைதிகளைக் குறித்து நீங்கள் கேட்டீர்கள். எனக்கு அதிகாரம் மாத்திரம் இருக்குமாயின், நம் சிறையிலிருக்கும் எல்லாக் கைதிகளையுமே நான் விடுதலை செய்துவிடுவேன் என்பதை நீங்கள் அறிய வேண்டும் என்று விரும்புகிறேன். ஆனால், சமரசத்திற்கு இதை ஒரு நிபந்தனையாக நியாயத்தோடு நான் செய்யவே முடியாது. அவர்கள் விடுதலையாகும்படிச் செய்வதற்கு என்னாலான முயற்சிகளையெல்லாம் நான் செய்து கொண்டிருக்கிறேன் என்பதையும் உங்களுக்குச் சொல்லு கிறேன்.* அமைதியான சூழ்நிலையை உண்டாக்குவதில் நீங்கள் என்னுடன் ஒத்துழைப்பீர்களானால், கார்வாலிகள் உள்பட எல்லாக் கைதிகளும் விடுதலையாகும்படிச் செய்ய நம்மால் முடியலாம். பூரண சுதந்திரத்தைப் பற்றி நீங்கள் பேசுகிறீர்கள். நீங்கள் விரும்புவதைப் போன்று நானும் அதை விரும்ப

---

* பகவத் சிங் முதலியவர்களின் தூக்குத்தண்டனையை ரத்துச் செய்து மீரத் சதி வழக்குக் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும் என்றே கம்யூனிஸ்டுகள் காந்திஜி சென்ற இடங்களிலெல்லாம் ஆர்ப்பாட்டம் செய்து வந்தார்கள். 'இதற்காக என்னாலான முயற்சிகளையெல்லாம் செய்வேன்' என்று காந்திஜி கூறியபடியே இதற்காக எல்லா முயற்சிகளையும் செய்துவந்தார். 1931 மார்ச் 19-ஆம் தேதி வைஸ்ராயைக் கண்டு பேசு வதற்காகக் காந்திஜி டில்லிக்குப் போனார். ராஜீயக் கைதிகள் விடுதலை முதலிய அவசரமான விஷயங்களைக் குறித்து வைஸ்ராயுடன் பேசினார். பகவத் சிங்கிற்கும் அவர் தோழர்களுக்கும் விதித்திருந்த தூக்குத்தண்டனையை மாற்றும்படியும் கேட்டுக் கொண்டார். ஆனால், இதற்கு உடன்பட வைஸ்ராய் பிடிவாதமாக மறுத்துவிட்டார். லார்டு இர்வின் தயாளம் காட்ட வேண்டும் என்று கோரி காந்திஜி மீண்டும் மார்ச் 29-ஆம் தேதி வைஸ்ராய்க்கு ஒரு கடிதம் எழுதினார். ஆனால், பகவத் சிங், சுகதேவ், ராஜகுரு ஆகிய மூவரையும் மார்ச் 23-ஆம் தேதியே லாகூர் சிறையில் தூக்கிலிட்டு விட்டார்கள். அவசர அவசரமாக அவர்கள் உடல்களை சட்லஜ் நதிக்கரையில் தகனம் செய்து அஸ்தியை ஆற்று நீரில் விட்டுவிட்டனர். இதைக் குறித்து காந்திஜி கூறுகையில், காந்தி-இர்வின் ஒப்பந்தத்திற்கு இது சம்பந்தமில்லாத விஷயமாக இருந்த போதிலும், இவ்விதம் அவசரப்பட்டு அவர்களைத் தூக்கிலிட்டுவிட்டது தம் கால்களுக்குக் கீழேயே குழி பறிப்பதைப் போன்றதாகும் என்றார். இந்நிலையில் தேசத்தின் கடமையைப் பற்றி அவர் கூறியதாவது :

"தனக்கென வகுத்துக்கொண்டிருக்கும் பாதையிலிருந்து காங்கிரஸ் தவறிவிடக் கூடாது. அதிக ஆத்திரத்தை மூட்டிவிடக்கூடிய காரியம் நடந்திருந்த போதிலும், ஒப்பந்தத்தைக் காங்கிரஸ் அங்கீகரிப்பதோடு, எதிர்பார்க்கப்பட்ட பலன் கிடைக்கும் படிச் செய்வதில் தனது ஆற்றலை அது சோதித்துக்கொள்ள வேண்டும். கோபம் அடைவதன் மூலம் நாம் நம்மைத் தவறு செய்துவிட்டவர்களாக்கிக்கொள்ளக் கூடாது. தூக்குத் தண்டனையை மாற்றுவது என்பது ஒப்பந்தத்தில் அடங்கியது அல்ல என்பதை நாம் உணரவேண்டும். காலித்தனமாக அரசாங்கம் நடந்துவிட்டது என்று நாம் அதன்மீது குற்றஞ்சாட்டலாம். ஆனால், ஒப்பந்தத்தை மீறி அரசாங்கம் நடந்துவிட்டது என்று அதன் மீது நாம் குற்றஞ்சாட்ட முடியாது."

வில்லையா? ('பூரண சுதந்திரத்தின் சாரத்தை' என்ற கூச்சல்) ஆம்; நான் சாரத்தைத்தான் விரும்புகிறேனேயன்றி வெறும் நிழலை அல்ல. இப்போதைக்குக் கொஞ்சம் பொறுமையாக இருங்கள்; சமயம் வரும்போது காங்கிரஸ், தனது குறைந்த பட்சக் கோரிக்கையாக எதைக் கேட்கிறது என்பதைப் பொறுத்திருந்து பாருங்கள் என்றுதான் நான் உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். லாகூர் தீர்மானத்தையே கராச்சியிலும் திரும்ப நிறைவேற்றுவோம் என்பதை உங்களுக்கு உறுதி கூறுகிறேன். வட்டமேஜை மகாநாட்டுக்குப் போகும் வாய்ப்பு இருந்தால், ஒன்று நாம் விரும்புவதைப் பெற்றுக்கொண்டு திரும்புவோம்; இல்லையானால், ஒன்றுமே இல்லாமல் திரும்புவோம்.

''என் பதினோரு நிபந்தனைகள்' என்னவாயின என்று என்னைக் கேட்கிறீர்கள். என் மனத்திலிருக்கும் சுதந்திரத்தில் அவை அடங்கியிருக்கின்றன. அவற்றின் கீழ் விவசாயிகளும் தொழிலாளரும் சரியானபடி பாதுகாக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், இந்த நிபந்தனைகளை ஒப்பந்த காலத்தில் நான் திரும்பவும் சொல்லுவதற்கில்லை. இதற்கு ஒரே காரணம், சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு மாற்றாகவே அந்த நிபந்தனைகள் கூறப்பட்டன என்பதுதான். நாம் இப்பொழுது சட்ட மறுப்பைச் செய்து முடித்திருக்கிறோம். நாம் அழைக்கப்பட்டால், வட்டமேஜை மகாநாட்டுக்குப் போய் நமது தேசீயக் கோரிக்கைகளை அங்கே வற்புறுத்தப் போகிறோம். அங்கே நாம் வெற்றி பெற்றுவிடுவோமாயின், நமது பதினோரு நிபந்தனைகளையும் அடைந்துவிட்டவர்களாவோம். இந்தப் பதினோரு நிபந்தனைகளையும் திருப்தி செய்வதாக இல்லாத எந்தச் சுயராஜ்யத்தையும் நான் ஏற்றுக் கொள்ளப்போவதில்லை என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.

''கடவுள் உங்களுக்கு அறிவையும் திறமையையும் அளித்திருக்கிறார். அவை சரியாக வேலை செய்யும்படி பாருங்கள். உங்கள் பகுத்தறிவுக்குத் தடை விதித்துவிட வேண்டாம் என்று உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். கடவுள் உங்களுக்கு உதவி புரிவாராக."

# 35

## காங்கிரஸ் மகாசபை

இன்னும் சில நாட்களில் காங்கிரஸ் மகாசபை கூடப் போகிறது.* சிதறுண்டுபோன ஸ்தாபனங்கள் அதற்குள் சீர்பட்டுவிடாது. அம்மகாநாட்டுக்கு வரும் பிரதிநிதிகளில் பாதிப் பேர், முன்னாள் கைதிகளாகவே இருப்பார்கள். கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொண்டு வந்து சேருவதற்குக்கூட இவர்களுக்கு அவகாசம் இல்லை. என்றாலும், இதற்கு முன்னாலிருந்ததையெல்லாம்விட அதிகக் கௌரவத்துடனேயே காங்கிரஸ் மகாசபை இப்பொழுது கூடுகிறது. பத்தாயிரக்கணக்கான ஆண்கள், பெண்கள், குழந்தைகள் அனுபவித்திருக்கும் கஷ்டங்களை அறிந்திருப்பதிலிருந்து பிறந்துள்ள புதிய பலத்தைப் பற்றிய உணர்ச்சியுடன் இந்த மகாசபை கூடப் போகிறது. எதிர்ப்பு என்பதே இல்லாமல் இவர்கள் அனுபவித்திருக்கும் கஷ்டங்களுக்குச் சரித்திரத்தில் வேறு உவமை எதுவுமே இல்லாமலும் இருக்கக்கூடும்.

ஆனால், அனுபவித்த துன்பங்களைப் பற்றியே எண்ணிக்கொண்டிருப்பதோ, அவற்றை மிகைபடுத்திக்கொள்ளுவதோ, அல்லது பெருமைப்பட்டுக்கொண்டுவிடுவதோ தவறாகும். உண்மையாகவே துன்பப்படுவது, தன்னைத்தானே அறிந்து கொள்ளுவதுமில்லை; கணக்குப் போடுவதும் இல்லை. அதற்குரிய இன்பத்தை அது அளிக்கிறது. அந்த இன்பம், எல்லா இன்பங்களுக்கும் மேலானது. ஆகையால், சென்ற பன்னிரண்டு மாதங்களில் நாம் திரட்டிக்கொண்டிருக்கும் மூலதனத்தைக்கொண்டு இனி வாழ்வது என்று நாம் முற்பட்டுவிடுவோமாயின், தற்கொலை செய்துகொள்ளும் குற்றத்தை நாம் செய்துவிட்டவர்களாவோம். வேண்டாத துன்பங்கள் ஏற்படக்கூடிய சந்தர்ப்பங்களைத் தவிர்ப்பதற்கே நாம் முயற்சி செய்துவரவேண்டும் என்றாலும், அத்துன்பங்களை அனுபவிப்பதற்கும் நாம் தயாராக இருக்கவேண்டும். சரியான வழியிலேயே நடக்கிறவர்கள், துன்பத்தைத் தவிர்க்கவே முயற்சிப்பதாக இருந்தாலும், எப்படியோ துன்பத்தை அனுபவிக்காமல் இருக்க முடிவதில்லை. அப்படி அனுபவிப்பது, தேசபக்தரின், சீர்திருத்தக்காரனின், இன்னும் முக்கியமாக சத்தியாக்கிரகியின் பாக்கியமாகும்.

---

* 1931 மார்ச் 29-ஆம் தேதி கராச்சியில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார். இக்கூட்ட சம்பந்தமான விவரங்களும் மகாத்மா காந்தி கராச்சி காங்கிரஸில் பேசிய விவரமும் பின்னால்வரும் அத்தியாயங்களில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

சமரச ஒப்பந்தம் தாற்காலிகமானதேயெனினும், கடவுளின் அருளால் வந்ததாகும். சமரசப் பேச்சு நடந்தபோது, நிச்சயமாகப் பேச்சு முறிந்துவிடக் கூடும் என்பதற்கான சமயங்கள் பல இருந்தன. அப்படி பேச்சு முறிந்திருக்குமானல், அனுபவிக்க வேண்டிய துன்பங்கள் பத்து மடங்காகப் பெருகியிருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. என்றாலும், கௌரவமான சமரசத்திற்கு வருவது சாத்தியமில்லாது போயிருக்குமானல், அத்துன்பங்களை அனுபவிக்கும்படி தேச மக்களை நான் கேட்டுக்கொள்ள வேண்டியே இருந்திருக்கும். ஆனல், இன்னும் அதிக, பலமான, ஆழ்ந்த துன்பங்களுக்கு ஆளாகாமல் லட்சியத்தை அடைந்துவிடுவது சாத்தியம் என்று நான் நிச்சயமாகச் சொல்ல முடியாது. தூய்மையை அடைவதற்கு நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கை, நாம் பெற்றாக வேண்டியிருக்கும் பரிசுக்குத் தகுந்ததாக இல்லை என்றே தோன்றுகிறது. நாம், தேச மக்கள் முழுமைக்கும் என்ற அளவில் தீண்டாமைச் சாபக்கேட்டை இன்னும் ஒழித்தபாடில்லை. ஒருவர்மீது இன்னொருவர் கொள்ளும் அவநம்பிக்கையையும் நாம் இன்னும் போக்கிக்கொண்டு விடவில்லை. பணக்காரர்களிடையே ஏற்பட்டிருக்கும் விழிப்பு அதிகமே என்றாலும், ஏழைகளின் கஷ்டங்களை அவர்கள் இன்னும் தங்களுடைய கஷ்டங்களாக எண்ணி விடவில்லை. அவர்களுடைய வாழ்க்கை ஏழைகளின் வாழ்க்கைக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாததாக இருந்துவருகிறது. மது பானங்கள், போதை வஸ்துக்கள் ஒழிப்பு சம்பந்தமாக அதிக அபிவிருத்தி ஏற்பட்டிருந்தபோதிலும், இன்னும் செய்ய வேண்டியவை எவ்வளவோ பாக்கியாக இருந்து வருகின்றன. அடைந்த அபிவிருத்தி, இன்னும் நிச்சயமற்றதாக இருக்கிறது. குடிகாரன், பொதுஜன அபிப்பிராயத்தின் நிர்ப்பந்தத்திற்கு உடன்பட்டிருக்கிறான். தன் பழக்கத்தை அவன் திட்டமாக இன்னும் விட்டுவிடவில்லை. குடிப்பதிலுள்ள தீமையை அவன் அறிவான். ஆனல், மதுவை விஷமாகக் க்ருதி வெறுத்துத் தள்ளிவிட அவனுக்கு இன்னும் போதிக்கவில்லை. போதிக்கவில்லை என்ற சொல்லை காரணத்தோடுதான் உபயோகிக்கிறேன். ஊழியர்கள், மது பானக் கடைகள், போதை வஸ்துக்கடைகள் சம்பந்தமாக மாத்திரமே தங்கள் முழு கவனத்தையும் செலுத்தி இருந்துவிட்டார்கள். அவைகளைச் சாப்பிட்டுப் பழக்கப்பட்டுவிட்டவர்களின் உள்ளங்களைத் தொடுவதற்கான முயற்சிகளை அவர்கள் தீவிரமாகச் செய்யவில்லை. அந்நியத் துணிகளிலும், நயமான உடைகளிலும் கொள்ளும் மோகத்தை நாம் விட்டுவிடவில்லை. அந்நியத் துணி வர்த்தகர்கள், தங்களுடைய வர்த்தகத்திஞல் நாட்டிற்கு எவ்வளவு பெருந் தீங்கைச் செய்து வருகிறார்கள் என்பதை இன்னும் முழுவதும் உணர்ந்துகொள்ளவுமில்லை. இவர்களில் இன்னும் பலர், தனிப்பட்டவர் சுதந்திரம் என்பதை இப்பொழுதும் சொல்லிக்கொண்டுதான் திரிகிறார்கள். எளிதில் எண்ணிப் பார்க்கக்கூடியவைகளான இவைகளும்,

இன்னும் அநேக தீமைகளும், சுயத்தூய்மை பற்றிய விஷயத்தில் இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியிருக்கின்றன என்பதையே காட்டுகின்றன. எனவே, நம்மைச் சுற்றிலும் பூரண சுயராஜ்யச் சூழ்நிலையை நாம் காணவில்லையானால் அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஆகையால், கலந்தாலோசிப்பது, மகாநாடு முறை எவ்வளவு தூரம் வெற்றி தரும் என்பதைக் குறித்து இப்பொழுதே கூறிவிடுவது கஷ்டம். வாதத்தினால் மாத்திரம் அவர்கள் வழிக்கு வந்துவிடப் போவது இல்லை என்பது மாத்திரம் நிச்சயம். நமது பலத்தை நாம் எவ்வளவு விருத்தி செய்து கொள்ளுகிறோமோ அந்த அளவுக்குத்தான் பிரிட்டிஷாரின் மனம் மாறுவதும் இருக்கும். சுயத்தூய்மையை அடைவதன் மூலமே பலத்தை நாம் அடைவது என்ற முடிவுக்கு நாடு வந்துவிட்டதால், மத்தியில் நமக்கு வாய்த்த இந்த நல்ல மாதங்களில் நாம் புத்திசாலித்தனத்தை அடைந்து, நான் மேலே எடுத்துக்காட்டிய தீமைகளையெல்லாம் நாம் போக்கிக்கொண்டுவிடவில்லை என்றால், இதற்கு முன்னால் நாம் அனுபவித்ததையெல்லாம்விட இன்னும் அதிகக் கடுமையான துன்பங்களையெல்லாம் நாம் அனுபவித்துத்தான் ஆக வேண்டும். ஆகையால், பணிவான உணர்ச்சியுடனும், நம்மிடையே உள்ள ஒவ்வொரு பலவீனத்தின் உருவையும் அகற்றியே தீருவது என்ற உறுதியுடனும் நாம் காங்கிரஸை அணுகுவோமாக. மகாநாடு போன்றவைகள் சம்பந்தமாக நாம் அனாவசியமாக முக்கியத்துவத்தைக் கொடுத்துவிடக் கூடாது. சுயராஜ்யம், அது வரும்போது, உள்ளிருந்து, உள்ளுக்குள் நாம் செய்யும் முயற்சியிலிருந்து வருமேயன்றி, மேலேயிருந்து இனாமாகவோ அல்லது சாதாரண விவாதத்தினாலோ வந்துவிடாது. இந்த உண்மையை முந்திய பன்னிரண்டு மாதங்களும் நமக்குத் தெளிவாகக் காட்டிவிட்டன.

—'எங் இந்தியா' · 19—3—1931

## 36

# கொதிப்படைந்தோருக்குப் பதில்

[*1931 மார்ச் 29-ஆம் தேதி கராச்சி காங்கிரஸ் நடந்தது. பகவத் சிங் முதலியவர்களைத் தூக்கிலிட்டுவிட்டதால் மக்களிடையே, அதிலும் இளைஞர்களிடையே கொதிப்பு மிகுந்திருந்தது. காந்தி - இர்வின் ஒப்பந்தத்தின் மீதும் வெறுப்பு ஏற்பட்டிருந்தது. இந்நிலையில் கராச்சி காங்கிரஸிற்காகக் காந்திஜி கராச்சி ஸ்டேஷனில் இறங்கியபோது, நவஜவான் சபையைச் சேர்ந்தவர்கள் சிவப்பு சட்டை அணிந்துகொண்டு, 'காந்தி திரும்*

*பிப் போ', 'காந்தீயம் ஒழிக', 'காந்தி சமரசம் பகவத் சிங்கைத் தூக்கில் போட்டுவிட்டது' என்று கோஷித்தனர். எங்கும் ஆத்திரம் மிகுந்திருந்ததால் காங்கிரஸ் அமைதியாக நடக்க முடியுமா என்பதும் சந்தேமாக இருந்தது. இந்நிலையில் மார்ச் 26-ஆம் தேதி காங்கிரஸ் மைதானத்தில் நடந்த கூட்டத்தில் காந்திஜி செய்த பிரசங்கமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :]*

"ஆண்டவன் ஆட்சி சுவர்க்கத்திலேயே நடக்கிறது என்று வழக்கமாக எண்ணி வருகிறோம். மேலேயிருந்தே அவர் தமது உபதேசங்களையும் ஆக்ஞைகளையும் அனுப்பிவருகிறார். இவ்விதம் அவருடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறோம் என்றும் யூகித்துக்கொள்ளுகிறோம். நமக்கும் கடவுளுக்குமிடையே இதுவரையில் திரை இருந்தது. காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டியார், அத்திரையைக் கிழித்து எறிந்துவிட்டுக் கடவுளுடன் நேரடித் தொடர்பில் நம்மை வைத்துவிட்டதற்காக அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன். புதிய திரையாகிவிடுவதற்கு ஆபாசங்கள் வந்து புகுந்துவிட நாம் அனுமதிக்காமலிருப்போமாக. இந்தத் தொடர்பை நமக்குக் கிடைத்திருக்கும் சிறந்த லாபமாகக் கொண்டு நமது வேலைகளைத் தொடங்குவோமாக. சுதந்திரத்தை நோக்கிச் செல்லுவதற்கு நமது புராதனமான பாதையான சத்தியத்தையும் அகிம்சையையும் நாம் தேர்ந்தெடுத்துக்கொண்டிருக்கிறோம். நேரான, குறுகலான வழியில் போகிறவர்கள் என்றும் வருந்த வேண்டியிருக்காது; கடவுளும் அவர்களுக்கு உற்சாகத்தையும் நம்பிக்கையையும் அளிப்பார்.

"பகவத் சிங்கையும் அவருடைய தோழர்களையும் தூக்கிலிட்டதன் மூலம் நாட்டு மக்களுக்கு மோசமான வகையில் கோபத்தை மூட்டும் காரியத்தை அரசாங்கம் செய்துவிட்டது. பகவத் சிங்கும், ராஜகுருவும், சுகதேவும் காப்பாற்றப்பட்டுவிடுவார்கள் என்ற நம்பிக்கையை நான் நடத்திய சமரசப் பேச்சுக்களும் பிறவும் எனக்கு உண்டாக்கியிருந்ததால், அவர்களைத் தூக்கிலிட்டுவிட்டது எனக்கும் அதிர்ச்சியை உண்டாக்கிவிட்டது. அவர்களைக் காப்பாற்ற என்னால் முடியாமற் போனதைக் குறித்து இளைஞர்கள் என் மீது ஆத்திரப்படுவதைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. ஆனால், அவர்களிடம் நான் கோபப்படுவதற்கு எந்த நியாயமும் இல்லை. இது போன்று நடப்பது, என் வாழ்க்கையில் இது முதல் சம்பவம் அல்ல. தன் எஜமானர்களிடம் கோபம் கொள்ளாமலிருக்க வேண்டியது ஊழியனின் கடமை. அவருக்குக் கோபம் என்பதே இருக்கக் கூடாது. கோபப்படாமல் தன்னால் இருக்க முடியவில்லையானால், மனித வர்க்கத்தின் ஊழியன் என்று தான் மேற்கொண்டிருக்கும்

வேலையிலிருந்து அவர் நீங்கிவிடவேண்டும். அவ்வாறு செய்துவிட நான் விரும்பவில்லை. இதனுலேயே, கோபப்பட அவர்களுக்கு உரிமை உண்டு, எனக்கு அந்த உரிமை இல்லை என்று கூறினேன். ஆனால், அவர்கள் பிறப்பதற்கு வெகு நாட்கள் முன்னுலிருந்தே விவசாயிகளுக்கும் தொழிலாளருக்கும் நான் சேவைசெய்து வருகிறேன் என்பதை நான் அவர்களுக்குச் சொல்லவே வேண்டும். அவர்களுடன் இருந்து நான் வாழ்ந்திருக்கிறேன். அவர்கள் கதிக்கே என் கதியையும் உட்படுத்திக் கொண்டிருக்கிறேன். சேவை செய்வதென்ற பிரதிக்ஞையை நான் செய்து கொண்டதிலிருந்து மனித வர்க்கத்திற்கு என் தலையை அர்ப்பணித்து விட்டேன். என் தலையைச் சீவி விடுவதே உலகத்தில் மிக எளிதான காரியம். அதற்கு எந்தவிதமான தயாரிப்புகளோ, ஏற்பாடுகளோ அவசியமே இல்லை. வெளிப்பாதுகாப்பை நான் என்றுமே நாடியது இல்லை. கடவுள் ஒருவரே பாதுகாப்பவர் என்பதை நான் அறிவேனுகையால், என்னைப் பாதுகாத்துக் கொள்ளுவவதைப் பற்றி நான் எண்ணுவது வீண் வேலை. இதையெல்லாம் சொன்னதால் இன்னுமொன்றையும் நான் கூறவேண்டும். நேற்று எனக்கு எதிராக நடந்த ஆர்ப்பாட்டம், மரியாதைக் குறைவாக அதில் எதுவும் இல்லாததால், அதைக் கண்டு கோபம் ஏற்படுவதற்குப் பதிலாக எனக்குச் சந்தோஷமே உண்டாயிற்று. அவர்கள் என்னை அடித்துமிருக்கலாம். ஆனால், அதற்குப் பதிலாக எனக்கு மெய்காப்பாளராக அவர்கள் இருந்து கொண்டு மோட்டாருக்கு என்னைப் பத்திரமாக அழைத்தும் சென்றனர். அவர்களை நான் பார்த்ததுமே, தென்னுப்பிரிக்காவில் கூட்டத்தினர் என்னைத் தாக்கி அடித்ததைப் போன்ற அனுபவமே இங்கும் ஏற்படப் போகிறது என்று எண்ணி விட்டேன் என்பதையும் உங்களிடம் ஒப்புக்கொள்ளுகிறேன்.

"ஆனால், அதைக் கொண்டு பயந்து விடுவதற்கில்லை. இளைஞர்கள், 'காந்தி திரும்பிப் போ', 'காந்தியம் ஒழிக' என்றுதான் கோஷித்துக் கொண்டிருந்தார்கள். பகவத் சிங்கைக் காப்பாற்றுவதற்கு என்னுல் செய்ய முடிந்ததையெல்லாம் நான் செய்யவில்லை என்றோ, அகிம்சையில் நான் பக்தியுள்ள தொண்டனுகையால் பகவத் சிங் விஷயத்தில் நான் அலட்சியமாக இருந்து விட்டேன் என்றோ அவர்கள் நினைத்து விட்டதால், அவ்விதம் செய்ய அவர்களுக்கு எல்லா உரிமைகளும் உண்டு. ஆனால், என்னையோ, வேறு யாரையுமோ தாக்கும் நோக்கம் அவர்களுக்கு இல்லை. எல்லோரும் தாராளமாகப் போக அனுமதித்தார்கள். பிறகு ஓர் இளைஞர் கருப்புத் துணியினுல் செய்த பூக்களை என்னிடம் கொடுத்தார். அவற்றை அவர்கள் என்மீது எறிந்திருக்கக் கூடும்; என்னை அவமதித்திருக்கக் கூடும். ஆனால், அப்படிச் செய்யும் நோக்கம் அவர்களுக்கு இல்லை. எல்லா இடங்களிலும் எனக்கு மலர்களை அளிக்கிருர்கள், அன்புக்குரிய சகோதரிகள் மலர்களைக் கொடுக்கும்போதுகூட அவற்றை நான் பொருட்

படுத்துவது இல்லை. எனக்காக மலர்களை வாங்குவதில் பணத்தை வீணாக்குவதைக் குறித்துச் சில சமயங்களில்அவர்களை நான் கடிந்துகொள்கிறேன். ஆனால் இங்கோ, அம்மலர்களை இளைஞரின் கரங்களிலிருந்து நான் பறித்துக்கொண்டதோடு, அவற்றை முக்கியமானவையாகவும் எண்ணுகிறேன். அவர்கள் என்னிடம் வந்து, 'நாங்கள் கோபமடைந்திருக்கக் கூடாது; உங்களைக் குறித்து நாங்கள் கொண்ட சந்தேகங்களெல்லாம் தவறானவை. ஆகையால், அந்தப் பூக்களை எங்களுக்குத்திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்' என்று கேட்பார்களானால், நான் மகிழ்சியுடன் அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன். அவ்விதம் அவர்கள் வந்து வாங்கிக் கொள்ளவில்லையானால், அவைகளை ஆசிரமத்திற்கு அனுப்பி அங்கே அவை நினைவுச் சின்னங்களாக வைக்கப்படும்.

"'மகாத்மா' என்னதான் பெரியவராக இருந்த போதிலும், அவர் இந்தியாவுக்குத் தீமை செய்கிறார் என்று தாங்கள் நிச்சயமாகக் கருதுவதாக உலகத்திற்குத் தெரிவித்துவிட வேண்டும் என்று இளைஞர்கள் கருதியிருக்கிறார்கள். நாட்டிற்கு நான் துரோகம் செய்வதாக அவர்கள் உணர்ந்தால், என்னை அம்பலப் படுத்திவிட அவர்களுக்கு உரிமை உண்டு என்று கருதுகிறேன். என் போக்கை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். இந்த இளைஞர்களை அன்பினாலேயே வென்றாக வேண்டும் என்று நான் விரும்புவதால், அவர்களிடம் நான் வேறுவிதமாக நடந்து கொள்ளுவதற்கில்லை. வாளை ஏந்துவதில்லை என்று அதை எறிந்து விட்ட பிறகு, என்னை எதிர்க்கும் இந்த இளைஞர்களுக்கு அளிப்பதற்கு அன்பு நிறைந்த கிண்ணத்தைத் தவிர என்னிடம் வேறு எதுவும் இல்லை. அக்கிண்ணத்தை அளிப்பதன் மூலமே அவர்களை என் அருகில் சேர்த்துக் கொள்ள எதிர் பார்க்கிறேன். மனிதனுக்கு மனிதன் நிரந்தரமாக விரோதம் இருக்க முடியும் என்று நான் எண்ணவில்லை. மறு பிறப்பு உண்டு என்ற தத்துவத்திலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆகையால், இந்தப் பிறப்பில்லாவிட்டாலும் இன்னும் எந்தப் பிறப்பிலாவது மனித வர்க்கம் முழுவதையுமே அன்பினால் தழுவி அணைத்துக் கொண்டுவிட முடியும் என்ற நம்பிக்கையிலேயே இருந்துவருகிறேன்.

"அச்சிறு சம்பவத்தைக் குறித்து அதிகம் பேசிவிட்டேன். இளைஞர்களிடம் நீங்கள் துவேஷங் கொண்டுவிடக் கூடாது என்பதற்காகவே இவ்வளவு சொன்னேன். என்னைப் பாதுகாப்பதற்கென்று நீங்கள் எம்முயற்சியும் செய்ய வேண்டாம். நம் எல்லோரையும் பாதுகாப்பதற்கு எல்லாவற்றிற்கும் மேலான ஒன்று இருக்கிறது. என் காலம் தீர்ந்து விடும் போது, உலகத்தில் மிகப் பிரபலமான வைத்தியர்கூட, எனக்கும் கடவுளுக்கும் மத்தியில் நின்றுவிட முடியாது என்பதை நீங்கள் நிச்சயமாக நம்ப வேண்டும்.

"இப்பொழுது இளைஞர்களுக்கு ஒன்று கூற விரும்புகிறேன். என் சேவை உங்களுக்குத் தேவையானால், என்னை வெறுத்து ஒதுக்காதீர்கள். என்னிடம் வந்து எல்லாவற்றையும் புரிந்து கொள்ளுங்கள், கொலை செய்தவன், திருடன் அல்லது கொள்ளைக்காரனைக்கூட தண்டிப்பது என்பது என் தருமத்திற்கு விரோதமானது என்பதை நீங்கள் அறிய வேண்டும். ஆகையால் பகவத் சிங்கைக் காப்பாற்ற நான் விரும்பவில்லை என்று சந்தேகிப்பதற்கு நியாயமே இல்லை. பகவத் சிங்குடனும், அவருடைய தோழர்களுடனும் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருந்தால், அவர்கள் மேற்கொண்ட வழி தவறானது, ஒரு பலனுமில்லாதது என்று அவர்களுக்குக் கூறியிருப்பேன். ஏழ்மையில் தவிக்கும் நம் கோடிக்கணக்கான மக்களுக்கும், நம் செவிடர், ஊமையருக்கும், நொண்டி முடங்களுக்கும் வாளின் வழியைக் கொண்டு நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிட முடியாது என்பதை உறுதியாகக் கூறுகிறேன். வாளின் வழி நம்மை நாசத்திற்குத்தான் கொண்டு போகுமேயன்றி, நமக்குச் சுயராஜ்யத்தைக் கொண்டு வராது. கடவுளை சாட்சியாக வைத்து இந்த உண்மையை உங்களுக்கு உறுதியுடன் கூறுகிறேன். பலாத்கார வழி நிரந்தரமான அழிவில்தான் கொண்டு போய் விடும். ஒரு தந்தைக்குத் தனது குழந்தைகளிடம் எந்த உரிமையுண்டோ அதே உரிமையுடன் இதை இளைஞர்களுக்கு நான் கூறுகிறேன். அது ஏன் என்பதையும் உங்களுக்கு விளக்குகிறேன். சென்ற நம் போராட்டத்தின் போது எவ்வளவோ பெருமைகளைப் பெற்ற எல்லாப் பெண்களும் குழந்தைகளும் பலாத்கார வழியைப் பின்பற்றியிருந்தால் அப்பெருமைகளைப் பெற்றிருக்க முடியும் என்று நினைக்கிறீர்களா? அவர்கள் இன்று இங்கே வந்திருப்பார்களா? உலகிலேயே மிகப் பணிவானவர்கள் என்று கருதப்படும் நம் பெண்கள், நம்மிடம் பலாத்காரம் இருந்திருந்ததால், அவர்கள் செய்திருக்கும் இணையில்லாச் சேவைகளைச் செய்திருக்க முடியுமா? நமது குழந்தைகளை, வானர சேனையைச் சேர்ந்தவர்களை* எடுத்துக் கொள்ளுங்கள். ஒன்றுமே அறியாத இச்சிறு குழந்தைகளை, தங்கள் விளையாட்டுப் பொம்மைகளையும், பறக்கும் பட்டங்களையும், பட்டாசு வெடிகளையும் துறந்துவிட்டு வந்த இக்குழந்தைகளை, பலாத்காரப் போர் ஒன்றில் நீங்கள் எப்படிச் சேர்த்திருக்க முடியும்? லட்சக்கணக்கான ஆண்களையும் பெண்களையும் குழந்தைகளையும் நாம் சிப்பாய்களாகச் சேர்க்க முடிந்தது. ஏனெனில், நாம் அகிம்சை பிரதிக்ஞை கொண்டிருந்தோம். பொறுமையும் தன்னடக்கமும் வேண்டும் என்று நம் இளைஞர்களுக்குக் கூறுகிறேன். கோபம் நம்மை முன்னுக்குக் கொண்டுபோய்விடாது. ஆங்கி

---

* வானர சேனை என்பது உப்புச் சத்தியாக்கிரக காலத்தில் பம்பாயிலும் மற்றும் பல இடங்களிலும் நடந்த சிறுவர்கள் இயக்கம். இந்த இயக்கத்தினரும் சட்டத்தையும் அரசாங்க உத்தரவுகளையும் வீரத்துடன் மீறி அருஞ்சேவை செய்தனர்.

லேயரை நமக்கு விரோதிகள் என்று கருத வேண்டியதே இல்லை. அவர்கள் மனமாற்றமடைந்துவிடும்படிச் செய்ய நான் விரும்பு கிறேன். அதற்கு அன்பு ஒன்றே வழி. காலித்தனமான ஆர்ப்பாட்டங்கள் நமக்கு ஒருநாளும் உதவி செய்துவிடா. பகவத் சிங் திரும்ப உயிர் பெற்று வந்துவிடச் செய்ய அவைகளால் முடியுமா? சுயராஜ்யம் வருவதைத்தான் அவற்றால் தடைப்படுத்த முடியும். ஆத்திரமூட்டுவதற்குப் போதுமான காரியத்தை அரசாங்கம் செய்துவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், அகிம்சைப் போராட்டத்தில் முழு மனத்துடன் இறங்கிவிடுமாறு, பொறுமையிழந்து போயிருக்கும் இளைஞர்களை, கடவுளின் பேராலும் நாட்டின் பேராலும் கேட்டுக்கொள்ளுகிறேன். அகிம்சையை அனுசரிப்பதில் இடைவிடாது நாற்பது வருட காலம் நான் பெற்றிருக்கும் அனுபவத்தில் நம்பிக்கை வைக்கும்படி, நான் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

"ஆனால், அப்படி அவர்கள் நம்பிக்கை வைக்கவில்லையானல், அவர்கள் என்னைக் கொன்றுவிடலாம். என்றாலும், காந்தீயத்தைக் கொன்றுவிட முடியாது. சத்தியத்தைக் கொன்றுவிடலாம் என்றால் காந்தீயத்தையும் கொன்றுவிடலாம். ஏனெனில், சத்தியத்தையும் அகிம்சையையும் கொண்டு சுயராஜ்யத்தை அடைய வேண்டும் என்பதைத் தவிர காந்தீயம் வேறு என்ன? சத்தியத்தினாலும் அகிம்சையினாலும் அடையும் சுயராஜ்யத்தை ஏற்றுக்கொள்ள இளைஞர்கள் மறுப்பார்களா? சிந்து ஊழியர்கள் செய்திருக்கும் அற்புதமான வேலைகளைக் கெடுத்துவிட வேண்டாம் என்று அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஊழியர்கள் மூன்றே வாரங்களில் இந்தக் காங்கிரஸ் நகரை அமைத்திருக்கிறார்கள். குடிசைகளடங்கிய இந்நகரை அமைத்திருப்பவர்களான எல்லோரும், நொண்டிகள், குருடர்கள், பட்டினி கிடப்போர், வயிறாரத் தின்றிருப்போர், கஷ்டப்படுவோர், ஏழைகள், சீக்கிரத்தில் ஜீவ உண்மைகளாக இருக்கும் வகையில் அமைத்திருக்கிறார்கள். இவர்கள் செய்திருக்கும் அழகான வேலையைக் கெடுத்துவிட வேண்டாம் என்று உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"இது, கான்பூரில் நடந்த துக்ககரமான சம்பவங்களுக்கு என்னைக் கொண்டுபோகிறது. அங்கே படுகொலைக் காட்சியே நடந்திருக்கிறது. நம் மனத்தில் ஒருவர் மீது மற்றொருவர் கொண்டிருந்த பலாத்காரமே இதற்குக் காரணம். அது சுவரின் மேல் எழுத்துப் போலத் தெளிவானதாகும். ஒரு குறிப்பிட்ட அளவு அகிம்சையைக் கையாள நம்மால் முடியும் என்பதை நாம் காட்டிக்கொண்டிருந்தபோதிலும், நம் உள்ளங்களில் பலாத்காரத்தை வைத்துக்கொண்டு இருந்திருக்கிறோம்; நிர்ப்பந்தத்தை உபயோகிக்கும் குற்றத்தையும் செய்திருக்கிறோம். பகவத்

சிங் தூக்கிலிடப்பட்டுவிட்டது சம்பந்தமாகக் கான்பூர் ஹிந்துக்கள் வெறி பிடித்தவர்களாகிவிட்டார்கள் என்றும், பகவத்சிங்கிற்கு மரியாதை செலுத்துவதற்காகக் கடைகளை மூடாத முஸ்லிம்களைப் பலவந்தப்படுத்த ஆரம்பித்துவிட்டார்கள் என்றும் பத்திரிகைகள் கூறுகின்றன. இதன் விளைவு என்ன என்பதை நீங்கள் அறிவீர்கள். கான்பூரில் நடந்து வருவது என்ன என்பதைப் பகவத் சிங்கின் ஆன்மா பார்த்துக்கொண்டிருக்குமாயின், தாம் அதிகமாக அவமதிக்கப்பட்டதாகவும் வெட்கப்படுத்தப் பட்டதாகவுமே அவர் கருதுவார் என்று நிச்சயமாகக் கூறுவேன். அவர் மிகவும் கௌரவமான மனமுடையவர் என்று நான் சொல்லக் கேட்டிருப்பதனாலேயே இதைக் கூறுகிறேன். எவ்வளவு தீமைகளை நாம் செய்திருக்கிறோம்? பெண்கள் மானபங்கம் செய்யப்பட்டிருக்கின்றனர்; குழந்தைகள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் மதி கெட்டுப் போய் நடந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். இவர்கள் யாவரும் இந்த மண்ணின் குழந்தைகள்; பொதுவான இத்தாய்நாட்டின் குழந்தைகள்.

"ரத்தஞ் சிந்திய இக்காரியங்களினால் அதிக வெட்கப்படுகிறேன். என் குரல் எட்டக் கூடியவர்களுக்கெல்லாம் ஒன்று சொல்ல விரும்புகிறேன். இத்தகைய காரியங்கள் என்னால் தாங்க முடியாதவையாகிவிடும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரையொருவர் வெட்டிக் கொன்றுகொண்டிருக்கும்போது, அகிம்சையோடு இருக்கிறோம் என்று நாம் எப்படி தொடர்ந்து சொல்லிக்கொண்டு வர முடியும்? சத்தியத்தை அனுசரிப்பவனாகிய நான், விஷமம் பரவிக்கொண்டிருக்குமாயின், ஒரு தேசத்தின் மக்கள் என்ற வகையில் நாம் அகிம்சையோடிருப்பவர்களே என்று எப்படி நம்பிக்கொண்டே இருக்க முடியும்? அப்படி நான் நம்பிக்கொண்டிருந்தால், கடவுளுக்கும் எனக்கும் நான் பொய்யனே ஆவேன். என்னைச் சுற்றிலும் படுகொலைகள் நடந்து வரும்போது அதைப் பற்றிக் கவலைப்படாமல் சகித்துக்கொண்டு நான் உயிர் வாழ முடியாது. ஒன்று சொல்ல விரும்புகிறேன். உயிர் வாழ்வது சகிக்க முடியாதது என்று நான் உணர்ந்ததுமே, இந்த ரத்தக்களரிகளை பார்த்துக்கொண்டிருப்பதைவிட உண்ணாவிரதமிருந்து சாகும் தைரியம் எனக்கு இருக்க வேண்டும் என்று நம்புகிறேன். பக்தியுடன் வலிய மேற்கொள்ளும் பிரதிக்ஞைகளை மீறுவதை என்னால் சகிக்க முடியாது என்பதை அறிவீர்கள். வர்த்தகர்கள் தாங்கள் அளித்த வாக்குறுதிகளை மீறி நடப்பதையும், காங்கிரஸ்காரர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறவர்கள், காங்கிரஸின் கொள்கைகளைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொண்டு தங்கள் உள்ளங்களுக்குள்ளோ, பகிரங்கமாகவோ அவற்றை மீறி நடப்பதையும் பார்த்துக்கொண்டிருப்பதைவிட நான் சீக்கிரத்தில் செத்துவிடுவதையே விரும்புவேன். முரண்பாடான இக்காரியங்களை மன நிம்மதியுடன் நான் பார்த்துக்கொண்டிருக்க

முடியும் என்றால், நான் எந்த முகத்தோடு உலகத்தின் முன்பும், என்னைப் படைத்தவர் முன்னாலும் நிற்க முடியும்? பொய் யான வாழ்க்கையை, கேவலமான, மோசடியான வாழ்க்கையை நான் வாழ்ந்திருக்கிறேன் என்றே அவர் என்னைக் கூறுவார். என்னை நானே, உலகத்தையே, ஏமாற்றாமலாவது நான் இருக்க வேண்டும். நான் உயிர் வாழ்வதன் ஒவ்வொரு கணமும், சத் தியத்தையும் அகிம்சையையும் கொண்டு சுயராஜ்யத்தை அடை வதற்கென்றே அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது.

"இத்தகைய காரியங்கள் நெடுகவும் நடந்துகொண்டு வந் திருக்கின்றன. அதைத் தடுக்க நான் இதுவரையில் எதுவுமே செய்துவிடவில்லை என்று நீங்கள் சொல்லுவீர்கள் என்பதை அறிவேன். என்னைப் பொறுத்த வரையில் தவங்கள் வெறும் யந்திரம் போன்றவை அல்ல. என் அந்தராத்மாவின் ஆக்ஞைக்கு உட்பட்டே அவை செய்யப்படுகின்றன. இத்தனை நாட்களாக என்னுள் நடந்திருப்பவைகளையே உங்களுக்குக் கூறுகிறேன். நான் அனாவசியமாகப் பரபரப்பு அடைந்து விடுவதனாலோ, உண்மை நிலையைச் சமாளிக்கும் தைரியம் எனக்கு இல்லாது போவதனாலோ, நெருக்கடி வராமலேயே இருக்கலாம். நான் ஆண்டவனிடம் உண்மையோடு நடந்து கொள்ள வேண்டும். வாழ்க்கை எனக்கு உதவியற்றதாக இருக்கிறது என்று எனக்குத் தோன்றும்போது, நான் செய்ய வேண்டியதைச் செய்யத் தவறி விடமாட்டேன் என்றே நம்புகிறேன். உடன்படுவதற்கு இணங் காது இருந்துவிடும் இவ்வுடலை, உண்மையான வழியைக் கண்டு பிடிப்பதற்கு இடையூறாக இருக்கும் இச்சடலத்தை, விரும்பிச் சரணாகதி செய்துவிடுவதைத் தவிர சிறந்த பிராயச்சித்தம் வேறு என்ன இருக்க முடியும்?"

காந்திஜி தமது பேச்சை முடிக்கப் போன சமயத்தில், பக வத் சிங்கைக் காப்பாற்ற அவர் என்ன செய்தார் என்று ஒருவர் கேட்டார். அதற்குக் காந்திஜி கூறியதாவது: "தவறு செய்து விடவில்லை என்று நான் இங்கே எதிர் வழக்காடிக் கொண்டிருக்க வில்லை. ஆகையால், பகவத் சிங்கையும் அவருடைய தோழர் களையும் காப்பதற்காக நான் என்ன செய்தேன் என்ற விவரங் களையெல்லாம் சொல்லி உங்களை நான் சங்கடப்படுத்தவில்லை. என்னாலியன்ற மட்டும் வைஸ்ராயை நான் வேண்டிக்கொண் டேன். என் கோரிக்கைக்கு அவர் உடன்படும்படிச் செய்ய என் முழு சக்தியையும் அவரிடம் உபயோகித்தேன். பகவத் சிங்கை அவருடைய உறவினர்கள் முடிவாகச் சந்தித்துப் பேசு வதற்குக் குறிப்பிட்டிருந்த நாளன்று, 23-ஆம் தேதியன்று காலை, வைஸ்ராய்க்கு ஒரு கடிதம் எழுதினேன். என் ஆன்மா முழு வதையும் அதில் சொரிந்தேன். பயன்படவில்லை. இன்னும் ஒரு காரியத்தையும் நான் செய்திருக்கலாம் என்று நீங்கள் கூறு கிறீர்கள். தூக்குதண்டனையை மாற்றுவதை ஒப்பந்தத்தின் ஒரு

விதியாக நான் சேர்த்திருக்கலாம் என்கிறீர்கள். அப்படிச் செய்வதற்கே இல்லை. ஒப்பந்தத்திலிருந்து விலகிக்கொண்டு விடுவதாக மிரட்டுவது நம்பிக்கைத் துரோகம் செய்வதாகும். சமரசத்திற்கு முன்னால், தூக்குத்தண்டனையை மாற்றுவதை ஒப்பந்தத்தில் ஒரு விதியாகச் செய்யாமலிருப்பது என்பதற்குக் காங்கிரஸ் காரியக் கமிட்டியும் ஒப்புக்கொண்டது. ஒப்பந்தத்திற்கு அப்பாற்பட்டுத்தான் அதைப் பற்றி நான் சொல்ல முடியும். பெருந்தன்மை இருக்கும் என்று நம்பினேன். என் நம்பிக்கை நிறைவேறவில்லை. ஆனால், ஒப்பந்தத்தை ரத்துச் செய்து விடுவதற்கு இது ஆதாரமாகிவிடாது.

"மனித சாத்தியமானதையெல்லாம் செய்து பார்த்தது நான் மாத்திரம் அல்ல. பண்டித மாளவியாவும் டாக்டர் சாப்ரூவும் தங்களாலான வரையில் முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனால், அடைந்த தோல்வி நமக்கு ஏன் கவலையை அளிக்க வேண்டும்? வெற்றி கடவுளின் கரங்களில் இருக்கிறது. நமது தோல்வி, இன்னும் அதிக முயற்சிக்கு நம்மை உற்சாகப்படுத்த வேண்டும். நமக்கு நாமே உண்மையுடன் நடந்துகொள்ளுவதிலும், உள்ளத்தில் ஒன்றுபட்டு ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சகோதரர்களாக வாழ்வதிலும், மற்றவர்கள் தங்கள் பிரதிக்ஞைப்படி நடந்துகொள்ளுவதிலும், ஊழியர்கள் மனத்திலும், செயலிலும், சொல்லிலுமிருந்து பலாத்காரத்தைப் போக்கிக்கொள்ளுவதிலுமே அம்முயற்சி இருக்கிறது. நமக்கு நாமும், கடவுளிடத்திலும் உண்மையோடு நடந்துகொள்ளுவதற்கான பலத்தைக் கடவுள் நமக்கு அருள்வாராக."

# 37

# கராச்சி காங்கிரஸில் காந்திஜி பிரசங்கம்

கராச்சி காங்கிரஸில் காந்திஜி ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும் பேசினார். ஆங்கிலத்தில் பேசுகையில் அவர் கூறியதாவது:

உங்கள் முன்னாலிருக்கும் தீர்மானம்* சுருக்கமானதாகவே இருந்தாலும், அது மிகவும் விரிவானதாகவும், பூரண சுதந்திரத்தை நம்பும் ஒருவருக்குச் சரியான சோதனையை அளித்து

* காந்திஜி குறிப்பிடும் கீழ்க்கண்ட தீர்மானமே கராச்சி காங்கிரஸில் கொண்டு வரப்பட்டு நிறைவேறியது:

" காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கும் இந்திய அரசாங்கத்திற்குமிடையே ஏற்பட்ட தாற்காலிக ஒப்பந்தத்தை இந்தக் காங்கிரஸ் கவனித்து அதை அங்கீகரிக்கிறது.

விடுவதாகவும் அது இருக்கிறது என்று துணிந்து கூறுவேன். மகாநாட்டின் நடவடிக்கைகளில் கலந்துகொள்ளும் பிரதிநிதிகள் கோஷ்டி, காங்கிரஸின் லட்சியத்தை அதாவது லாகூர் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தில் கண்டபடி பூரண சுயராஜ்ய நோக்கத்தை மனத்தில் வைத்திருக்க வேண்டும் என்பதை இந்தத் தீர்மானம் கடமையாக்குகிறது. இந்த லட்சியம் லாகூர் காங்கிரஸ் தீர்மானத்தின்படியுள்ள பூரண சுயராஜ்யமேயன்றிச் சென்னை காங்கிரஸின் தீர்மானத்தில் கண்ட பூரண சுயராஜ்யம் அன்று. ஏனெனில், சென்னை தீர்மானத்திலிருப்பது வெறும் விருப்பம் மாத்திரமே. பூரண சுயராஜ்யம் இன்று வெறும் விருப்பமாக மாத்திரம் இல்லை. அடைந்தே தீர வேண்டும் என்று தேச மக்களின் ஆன்மா இன்று இடைவிடாது ஏங்கிக்கொண்டிருப்பதே பூரண சுயராஜ்யம். அதை அடைந்துவிட வேண்டும் என்று துடித்துக்கொண்டும் இருக்கிறார்கள். அந்தத் துடிதுடிப்பு சென்ற பன்னிரண்டு மாதங்களிலும் எடுத்துக்காட்டப்பட்டது. ஆகையால், அம்மகாநாட்டில் நடக்கும் எதையும் ஏற்றுக்கொள்ளுவதற்கு முன்னால், காங்கிரஸ்பிரதிநிதிகள் இதை உடனடி நோக்கமாக மனத்தில் வைத்திருக்க வேண்டியிருக்கிறது. அது மாத்திரம் அல்ல. சுதந்திரம் இங்கே அத்தியாவசியமானதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே, ராணுவம் போன்றவைகளிலும் ஆதிக்கத்தைப் பெற்றாக வேண்டியது பிரதிநிதிகளின் கடமையாகிறது.

ஆனால், வலை - நீங்கள் அதைக் கொடுக்கு என்றும் சொல்லுவீர்கள்-தீர்மானத்தின் கடைசியில் இருக்கிறது. "என்றாலும், இந்தியாவின் நன்மைக்கு அவசியமானதாக இருக்கும் சில விஷயங்களை ஏற்றுக்கொண்டு விடவும் காங்கிரஸ் பிரதிநிதி கோஷ்

---

காங்கிரஸின் லட்சியம் பூரண சுயராஜ்யமே என்பது இன்னும் அப்படியே இருந்து வருகிறது என்பதையும் தெளிவாகத் தெரிவித்துக் கொள்ள இந்தக் காங்கிரஸ் விரும்புகிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதிகளுடன் ஏதாவது மகாநாட்டில் காங்கிரஸின் பிரதிநிதிகளும் கலந்துகொள்ளுவது சாத்தியமாக இருக்குமானால், காங்கிரஸ் கோஷ்டி இதே நோக்கத்திற்காகவே அதில் வேலை செய்யும். முக்கியமாக, ராணுவம், வெளி விவகாரம், நிதி, வரிக் கொள்கை, பொருளாதாரக் கொள்கை ஆகியவைகளில் நாட்டு மக்களுக்கு அதிகாரம் அளிக்கும் வகையிலும், பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கு மிடையே உள்ள நிதி தொடுக்கல் வாங்கலையும், இந்தியாவோ, பிரிட்டனோ வாங்கியிருக்கும் கடனையும் பாராபட்சமற்ற நீதிச் சபையைக் கொண்டு பரிசீலனை செய்யவும் உரிமை வேண்டும் என்று வற்புறுத்தும். அதோடு இரு தரப்பாரும் விரும்பும்போது பிரிந்துவிட உரிமை வேண்டும் என்றும் காங்கிரஸ் கோஷ்டி அம்மகாநாட்டில் வற்புறுத்தும். என்றாலும், இந்தியாவின் நன்மைக்கு அவசியமானதாக இருக்கும் சில விஷயங்களைக் காங்கிரஸ் பிரதிநிதி கோஷ்டி ஏற்றுக்கொண்டு விடவும் அதிகாரம் உண்டு."

அதே தீர்மானம் கீழ் வருமாறும் கூறியது: "அம் மகாநாட்டில் காங்கிரஸின் பிரதிநிதியாக இருக்க மகாத்மா காந்தியை இந்தக் காங்கிரஸ் அங்கீகரிக்கிறது. அதோடு அவர் தலைமையிலிருந்து வேலை செய்வதற்குக் காரியக் கமிட்டி விரும்பும் மற்ற பிரதிநிதிகளையும் அது நியமிக்கலாம்."

டிக்கு அதிகாரம் இருக்கிறது" என்பதே அது. இப்பொழுது இதில் ஒரு பொறியும் இருக்கிறது; பொறி இல்லாமலும் இருக்கிறது. உங்கள் பிரதிநிதிகளை நீங்கள் சரியானபடி தேர்ந்தெடுத்து, அவர்களை நீங்கள் நம்புவீர்களானால், அதில் பொறி எதுவும் இல்லை. சமரசத்திற்குச் 'சில விஷயங்களை' என்பது பாதுகாப்புக்களையேயாகையால், 'பாதுகாப்புக்களை'ப் போன்றதே அதுவாகையால் அது ஒரு பொறியே ஆகும். பாதுகாப்பு என்ற கொள்கை ஒப்பந்தத்தை ஒட்டி ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால், ஏற்றுக்கொள்ளக்கூடிய பாதுகாப்புகள் இந்தியாவின் நன்மைக்கானதாக இருக்க வேண்டும். அவசியமானவை என்று நன்றாகத் தெரியக்கூடியவையாகவும் அவை இருக்க வேண்டும்.

இதைச் சொன்னதால், யோசனை கூறப்படும் மற்றோர் திருத்தத்தைக் குறித்தும் கூற விரும்புகிறேன். பிரதிநிதிகளின் நடவடிக்கை எதுவானாலும், காங்கிரஸின் விசேஷ மகாநாடு அல்லது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அங்கீகாரத்திற்கு உட்பட்டதாகவே அது இருக்க வேண்டும் என்பது அந்த யோசனை. இது அனாவசியமானது என்பது மாத்திரமல்ல, சென்ற நாற்பத்தைந்து ஆண்டுகளாக அபிவிருத்தியுடன் வாழ்ந்து அதனால் இப்பொழுது உலகம் எங்குமே ஒரு புதிய கௌரவத்தையும் பெற்றிருக்கும் காங்கிரஸுக்கு, இது கௌரவமானதும் அல்ல. என்னிடமுள்ள முழு சக்தியையும் கொண்டு இதைக் கூறுகிறேன். எந்த மகாநாட்டிலும், கூட்டங்களிலும், காங்கிரஸிற்கு முற்றிலும் பிரதிநிதியாக இருக்கக்கூடிய பிரதிநிதிகளை நியமிக்க முடியாத அளவுக்குக் காங்கிரஸ் ஏழ்மை அடைந்துவிடவில்லை என்பதும் நிச்சயம். ஆகையால் ,நீங்கள் உங்கள் பிரதிநிதிகளை அனுப்பினால், காங்கிரஸ் முழுவதையுமே அம்மகாநாட்டுக்கு அனுப்பிவிட்டதைப் போன்று, அதே அதிகாரம் உங்கள் பிரதிநிதிகளுக்கு இருக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், நம் முன்னிருக்கும் விஷயங்களை நாம் சமாளித்துக்கொண்டுவிட முடியாது. பல கட்சிகளில் ஒன்றாகவே நாமும் இருப்போம். மகாநாட்டுக்குப் போகிறவர்களுக்கு, தங்களை அனுப்பியவர்களைக் கட்டுப்படுத்தக்கூடியதான முழு அதிகாரமும் அத்தாட்சியும் இருக்க வேண்டும். ஆனால், அவர்கள் அங்கே போய், 'நாங்கள் இங்கே வந்திருக்கிறோம்; நாங்கள் விவாதிப்போம். எங்களை அனுப்பியவர்களை நாங்கள் கட்டுப்படுத்த முடியாது; விஷயத்தை அவர்களுக்கு அறிவித்து அவர்கள் முடிவைக் கேட்க வேண்டியிருக்கிறது' என்று சொல்லுவார்களானால், நடைமுறையே முடிவற்றதாகவும் தெளிவு இல்லாததாகவும் ஆகிவிடும். ஆகையால், யோசனை கூறப்படுகிறபடி எந்தவிதமான நிபந்தனையும் பிரதிநிதிகளுக்கு இல்லாமல் முழு அதிகாரமும் இருக்க வேண்டியது அவசியம்.

காங்கிரஸின் நிலைமை என்ன? நடுவாந்திர ஸ்தாபனங்களான அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, காரியக் கமிட்டி ஆகி

யுவைகள் விஷயத்தில் காங்கிரஸின் நிலைமை யாது? காங்கிரஸின் சார்பில் காரியங்களைச் செய்ய இக்கமிட்டிகளுக்கு அதிகாரம் கொடுத்திருந்தபோதிலும், இக்கமிட்டிகள் செய்யும் காரியங்களை நிராகரித்துவிட காங்கிரஸுக்கு இருக்கும் அதிகாரத்தை அது என்றுமே விட்டுக் கொடுத்துவிட முடியாது. எந்த ஸ்தாபனமும், எந்த முக்கியஸ்தரும், இந்த அதிகாரத்தை விட்டுவிட முடியாது. உங்கள் பிரதிநிதிகளுக்கு நீங்கள், இந்தத் தீர்மானத்திற்குட்பட்டுக் காரியங்களைச் செய்யவே அதிகாரம் கொடுத்திருக்கிறீர்கள். தங்களுக்கு அளித்திருக்கும் அதிகாரத்திற்கு உட்பட்டுப் பிரதிநிதிகள் நடந்துகொண்டால், அவர்கள் செய்வதை நீங்கள் நிராகரித்துவிட முடியாது. இத்தீர்மானத்திற்குப் புறம்பான காரியம் எதையாவது அவர்கள் செய்துவிடுவார்களானல், அவர்கள் செய்ததை ஏற்றுக்கொள்ள முடியாது என்று நிராகரித்துவிட உங்களுக்கு எல்லா உரிமைகளும் உண்டு. இது ஒரு விஷயம். ஆனல், பிரதிநிதிகள் துரோகிகளாக மாறிவிட்டால், உங்கள் லட்சியத்தை அவர்கள் விற்றுவிட்டால், அவர்களுக்காக விவரிக்கப்பட்டிருந்த பல பொறிகளையும் தெரிந்துகொள்ள முடியாத முட்டாள்களாகி அவற்றில் அவர்கள் சிக்கிக்கொண்டுவிட்டால், அவர்கள் செய்ததைச் சரியானபடி நிராகரித்துவிட வேண்டிய நிலைமை வருகிறது. அப்பொழுதும் அவர்கள் தீர்மானத்தில் அடங்கியதற்குப் புறம்பாகப் போய்விட்டவர்களாவார்கள். அந்த நிலைமையில் அவர்கள் செய்ததை நிராகரித்துவிட உங்களுக்கு அதிகாரம் இருக்கிறது. அந்தச் சக்தி ஒன்றே போதுமானது. நீங்கள் கொடுத்த அதிகாரத்தை மிஞ்சி பிரதிநிதிகள் காரியஞ் செய்துவிடுவார்களாயின், அக்காரியத்தை நிராகரித்துவிடும் அதிகாரம் பூரணமானது. இதுவே சட்ட சம்மதமான நிலைமை என்பதையும் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். எனவே, அவர்கள் வரும் முடிவுக்கு உங்கள் அங்கீகாரம் வேண்டும் என்று நிபந்தனை போடுவது அனாவசியமானது, உங்கள் கௌரவத்திற்கு ஏற்றதும் அல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்களோ அதற்கு இது முட்டுக்கட்டையாகிவிடும். ஆகவே, மேற்கொண்டும் எந்த விவாதமும் இல்லாமல் இது சம்பந்தமான திருத்தத்தை வாபஸ் வாங்கிக்கொள்ளுவீர்கள் என நம்புகிறேன்.........

சமீபத்தில் தூக்கிலிடப்பட்ட சம்பவங்கள், உங்களுக்கு மனச்சோர்வை உண்டாக்கிவிடுவனவாக இல்லாதிருக்கட்டும். லட்சியத்தை நோக்கிப் போவதிலும், மகாநாட்டை நோக்கிச் செல்லுவதிலும் ஆத்திரத்தை மூட்டிவிடக் கூடிய காரியங்கள் நமக்கு ஏற்படக் கூடும். ஆத்திரமூட்டும் காரியங்கள், உங்களைச் சரியான பாதையிலிருந்து மாற்றிவிடாமலிருக்க வேண்டும். அத்தகைய செயல்கள் உங்கள் பகுத்தறிவைக் குருடாக்கிவிடாமலிருக்கட்டும். கொஞ்சமேனும் விருப்பு வெறுப்பற்ற வகையில்

உங்கள் புத்தியை நீங்கள் உபயோகியுங்கள். சமரச ஒப்பந் தத்தை அதன் தன்மையைக்கொண்டு கவனியுங்கள். போராட்ட நிறுத்தத்தில் அல்லது தாற்காலிக ஒப்பந்தத்தில் காணும் எல் லாக் கைதிகளும் விடுதலை செய்யப்படவில்லை என்பதைக் கொண்டு ஆத்திரமடைந்து விடாதீர்கள். அந்தக் கவலை உங்க ளுக்கு வேண்டாம். ஒப்பந்தத்தில் கூறப்பட்டிருப்பவர்கள் யாவரும் விடுதலையாகும்படிப் பார்க்க வேண்டியது காரியக் கமிட்டியின் வேலை. போராட்ட நிறுத்த நிபந்தனையில் சேர்ந்த ஒரே ஒரு கைதி விடுதலை செய்யப்படாவிட்டாலும், இந்தச் சம ரசத்தை நிராகரித்து விடுவது கமிட்டியின் கௌரவத்திற்கான தாக இருக்க வேண்டும். ஆகையால், முக்கியமில்லாத விஷயங் களில் நீங்கள் வீணாகக் கவனத்தைச் செலுத்தி விடக் கூடாது. நீங்கள் உங்கள் கவனத்தையெல்லாம் இவைகளில்தான் செலுத்த வேண்டும்: சமரச ஒப்பந்தத்தின் தன்மை என்ன ? தான் விரும்புவதை காங்கிரஸ் வற்புறுத்த சமரச ஒப்பந்தம் என்ன வாய்ப்பை அளித்திருக்கிறது? மகாநாட்டிற்குச் செல்லும் பிரதிநிதிகள், தங்களையும் அறியாமலேயே தங்களுக்கு அளிக்கப் பட்டிருக்கும் அதிகாரத்தையும் மீறி நடந்துகொண்டு விட்டா லும் இத்தீர்மானத்தில் அவர்களுக்கு என்ன வாய்ப்பு இருக் கிறது? அது எவ்வளவுதான் தந்திரமானதாக இருந்தாலும், பிரதிநிதிகளின் கைகளைக் கட்டிவிடுவதற்குப் போதுமான அளவு விரிவானதாகத் தீர்மானம் இல்லை என்று நீங்கள் கண்டால், அதை நிராகரித்துவிட உங்களுக்கு முழு உரிமையும் உண்டு"

பிறகு காந்திஜி ஹிந்தியில் பேசுகையில், எதிர்ப்பாளர் களின் சில ஆட்சேபங்களுக்குக் கூறிய பதிலாவது :

"வட்டமேஜை மகாநாட்டின் விஷயத்தில் இதுவரை அவ நம்பிக்கை கொண்டிருந்த நாம், அம்மகாநாட்டுக்குப் போக இப்பொழுது ஏன் முடிவு செய்ய வேண்டும் என்று கேட்க நியாய மாகவே உங்களுக்கு உரிமை உண்டு. நமது போக்கை மாற்றிக் கொண்டுவிட இப்பொழுது என்ன அற்புதம் நிகழ்ந்து விட்டது? அப்படி எந்த அற்புதமும் நிகழ்ந்து விடவில்லை. வட்டமேஜை மகாநாட்டில் நாம் கேட்பது கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை யும் எனக்கு இல்லை. நாம் விரும்புவதற்கும், கொடுப்பதாகச் சொல்லப்படுவதற்குமிடையே இவ்வளவு அதிக வித்தியாசம் இருக்கும் போது, அம்மகாநாட்டில் என்ன செய்யப் போகிறோம் என்று நானே ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறேன். ஆனால், சத்தியாக்கிரகியின் கடைமையைப் பற்றிய எண்ணம்தான் என்னை இம்முடிவுக்குக் கொண்டு வந்தது. தனது எதிராளியுடன் சமரசம் பேசுவதற்கு மேற்கொண்டும் மறுக்க முடியாத ஒரு கட்டம் சத்தியாக்கிரகிக்கு வருகிறது. அன்பினால் எதிராளி மாறுபடும்படிச் செய்வதே எப்பொழுதும் அவர் நோக்கம்.

பிரதம மந்திரியின் பிரகடனத்திற்குப் பிறகு காரியக் கமிட்டி உறுப்பினர்கள் விடுதலையானதும், சமரசம் பேசும் கட்டம் வந்தது. போராட்டத்தை நிறுத்திவிட்டு நமக்கு என்ன வேண்டும் என்பதைச் சொல்லும்படி வைஸ்ராயும் வேண்டுகோள் விடுத்தார். நாம் விடுதலையானதுமே சட்ட மறுப்புக் காரியங்கள் ஏதையாவது செய்து, நாம் விரும்பினால் திரும்பவும் சிறைக்குப் போகலாம், அல்லது சமாதான கோரிக்கையை அனுசரித்து ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். முந்திய காரியத்தை நாம் செய்திருப்போமானால், உலகத்தின் கண்ணில் நாம் தவறு செய்தவர்களாக இருப்போம்.

"இன்னும் ஓர் ஆண்டுக்குப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த நாம் தயாராயிருக்கும்போது நாம் சமரச ஒப்பந்தத்திற்கு வந்திருக்க வேண்டியதில்லை என்று கோவிந்தானந்தர் கூறுவது கொஞ்சமும் சரியல்ல. சரி, இருபது ஆண்டுகளுக்குப் போராட்டத்தை நடத்திக் கொண்டு போக நம்மால் முடியும் என்றிருக்கலாம்; மற்றவர்கள் எல்லோரும் களைத்துப் போய் பணிந்துவிட்டாலும் சத்தியாக்கிரகி கடைசி வரையில் போராடலாம். ஆனால், நாட்டு மக்கள் களைத்துப் போய்விட்டனர் என்பதற்காகக் காரியக் கமிட்டி சமரசத்திற்கு வந்துவிடவில்லை; தனக்குக் களைத்துப் போய்விட்டது என்பதற்காகப் போராட்டத்தை நிறுத்திவிடும் சத்தியாக்கிரகி, தன்னுடைய லட்சியத்திற்கும் கடவுளுக்கும் பொய்யனாகிறான். ஆனால், நாம் களைத்துப் போய்விட்டோம் என்பதற்காகச் சமரசத்திற்கு நாம் வந்துவிடவில்லை. அது தவிர்க்க முடியாதது என்பதற்காகவே சமரசத்திற்கு வந்தோம். தன்னால் போராடிக் கொண்டிருக்க முடியும் என்பதற்காகப் போராடிக்கொண்டே இருப்பவன் சத்தியாக்கிரகியாக மாட்டான். ஆனால், அவன் கிறுக்கன்; கடவுள் முன்னால் குற்றவாளியுமாவான்.

"நாங்கள் வெறுங் கையுடன் வந்தால் எங்களை வெளியேற்றிவிடுவதாகப் பயமுறுத்துகிறீர்கள். நீங்கள் அவ்வாறு செய்து விடமுடியாது. ஏனெனில், பூரண சுயராஜ்யத்துடன் திரும்புவேன் என்று உங்களுக்கு நான் எந்த வாக்குறுதியும் அளிக்கவில்லை. உங்களுடைய ஆக்ஞையினால் நான் உறுதியுடன் இருக்கத்தான் முடியும். இன்று எங்களை வெளியேற்றிவிடுவதும், வேறு ஓர் அக்கிராசனரையும் காரியக் கமிட்டியையும் வைத்துக் கொள்ளுவதும் உங்கள் இஷ்டத்தைப் பொறுத்தது. நாங்கள் உங்கள் ஊழியர்கள். எங்களைவிடச் சிறந்தவர்கள் வருவதற்கு நாங்கள் விரும்பி இடம் கொடுப்போம். ஆனால், 'மகாத்மா' இல்லாமல் உங்களால் முடியாது என்பதற்காகச் சமரச ஒப்பந்தத்தை அங்கீகரிக்காதீர்கள். 'மகாத்மா' இல்லாமல் சுயராஜ்யத்தை நீங்கள் அடைய முடியாது என்றால், இதை நீங்கள் வைத்துக் கொண்டிருக்கவும் முடியாது. 'மகாத்மா'

இல்லாமல் எதுவும் முடியாது என்று நினைப்பது தவருனது. நான் இல்லாதபோது போராட்டத்தை நடத்தியது யார்? நான் போய்விட்ட பிறகும், முக்கியமான ஊழியர்களெல்லோரும் கைது செய்யப்பட்டுவிட்ட பிறகும், நீங்கள் போராட்டத்தை நடத்திக் கொண்டு போவீர்கள். ஆகையால் 'மகாத்மா' இன்றியமையாதவர் என்று யூகித்துக் கொண்டு அதற்காக உங்கள் எதிர்ப்பை வாபஸ் வாங்கிக் கொள்ளாதீர்கள்.

''நான் சமரச ஒப்பந்தம் செய்து கொண்டது சரி, உங்கள் ஆதரவுக்கு நான் ஏற்றவன் என்று நீங்கள் உணர்ந்தால், அரை மனதானதல்ல, முழு மனத்தோடும் கூடிய ஆதரவை எனக்கு அளிக்குமாறு உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நாட்டு மக்கள் செய்திருக்கும் தியாகங்களையும் அனுபவித்திருக்கும் துயரங்களையும் மறந்துவிடும் அளவுக்கு உங்கள் பிரதிநிதிகள் அவ்வளவு முட்டாள்தனமாக இருந்துவிட் மாட்டார்கள் என்பதை நீங்கள் அறிய வேண்டும். உங்கள் நாட்டை அவர்கள் விற்று விடமாட்டார்கள் என்பதை நிச்சயமாக நம்புங்கள்.''

[ஸ்ரீ டெண்டுல்காரின் 'மகாத்மா' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

# 38

# செய்த தவறுக்கு வருந்துவோம்

''ஆனல், உண்டாக்கப்பட்டிருக்கும் துவேஷம், சொற்களிலும் காரியத்திலும் காட்டப்பட்டு வருவது மிகவும் சகிக்க முடியாததாக இருந்து வருகிறது. ஆகையால், துவேஷத்தின் இத்தகைய பலமான சக்தியைக் கட்டவிழ்த்து விட்டிருப்பது நல்லதா என்பதை ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டியதாகிறது. விடிந்ததிலிருந்து நடுநிசி வரையில் பேச்சுக்கள், பாட்டுக்கள், கோஷங்கள் ஆகியவைகளிலெல்லாம் துவேஷத்தின் பலமான பொழிவையே கேட்டுக்கொண்டிருக்கிறோம். பொது மக்களில் பெரும் பகுதியினரிடையே இத்தகைய கேவல நிலைமை ஏற்பட்டிருப்பது மனக்கஷ்டத்தையே உண்டாக்குகிறது. 'கேவல நிலைமை' என்ற சொல்லை முழுப் பொறுப்புடனேயே இங்கே உபயோகிக்கிறேன். பொய் பேசுவது, முழு அனுமதியையும் பெற்றுள்ள விஷயம் போலவும் அது சுதந்திரமானதாகவும் தோன்றுகிறது. முற்றிலும் உண்மையில்லாத விஷயத்திற்காக, நடந்தேயிராத காரியத்திற்காக அரசாங்க உத்தியோகஸ்தர்கள், போலீஸ் அதிகாரிகள், தங்கள் கருத்துக்கு மாறுபட்டவர்கள் ஆகியவர்களைத் தாக்கிப் பேசுவது என்பது தெருக்களிலும் எல்லா இடங்களிலும் அன்றாடம் நடக்கும் சாதாரண நிகழ்ச்சிகளாக இருந்துவருகின்றன. முக்கியமாக பிரிட்டிஷ் சரக்குகள் வியாபாரிகள் மீதும், மற்ற அந்நியச் சரக்கு வர்த்தகர்கள்மீதும் செய்யப்பட்டிருக்கும் கொடுமைகளையும் அநீதிகளையும் சொற்களால் விவரிக்கவே முடியாது. இது கேவலமானதாகவும், சகிக்க

முடியாததாகவும், தாங்க முடியாததாகவும் இருந்து வருகிறது. ஒரு சரக்கை வியாபாரம் செய்ய வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுவதும், இன்னொருவரை ஒரு குறிப்பிட்ட சாமானை வாங்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுவதும் வேறு விஷயம். ஆனால், ஒருவரைத் திட்டியும், தடை செய்தும், எல்லா வழிகளிலும் எல்லாக் காரியங்களிலும் அவர் வாழ்க்கையையே கஷ்டமானதாக்கியும் எல்லா வகையிலும் ஒருவரைக் கட்டாயப்படுத்துவது என்றால், விசனிக்கத்தக்க வகையில் அகிம்சை தோல்வியடைந்திருக்கிறது என்றுதான் நான் ஒப்புக்கொள்ள வேண்டும். உண்டாக்கப்பட்டிருக்கும் துவேஷம், செய்யப்பட்டிருக்கும் கொடுமைகள், அகிம்சைக்கும் மகாத்மாஜியின் கொள்கைகளுக்கும் உபதேசங்களுக்கும் விரோதமானவை என்று நான் உறுதியாகக் கருதுகிறேன். பொதுவான இயக்க விஷயத்தில் ஒருவர் மாறுபட்ட கருத்தைக் கொண்டிருப்பாரானால், அவருடைய வாழ்க்கையையே கஷ்டமானதாக்கி விடுவதற்குத் தடைகளையும் எல்லாவித தந்திரங்களையும் உபயோகிப்பது சாதாரண வழக்கமாகிவிட்டது. ஒவ்வொரு மாகாணத்திலும் வெவ்வேறு விதமான நடவடிக்கைகள் இருந்து வருகின்றன. யாரோ ஒருவர் இடும் கட்டளையை ஒப்புக் கொண்டாக வேண்டும்; இல்லையானால், சிறிய அல்லது பெரியதான ஒரு குழந்தைகளின் கூட்டமோ, பெண்களின் கூட்டமோ, அல்லது ஆண்களின் கூட்டமோ கொடுக்கும் தொந்தரவுகளுக்கு ஒருவர் உடன்பட்டுத் தீர வேண்டும். அவர்கள் கருத்தில், தங்கள் இஷ்டத்திற்கு மாறுபடுகிறவர்கள் யாவரும், பிரிட்டிஷாருக்குச் சாதகமானவர்கள், அரசாங்கத்திற்கு உடந்தையானவர்கள், நாட்டினிடம் விசுவாசமில்லாதவர்கள் ஆவர். இத்தகைய துவேஷ சக்திகளுக்குப் பலியானவர்கள் பலரை இன்று அநேக வீடுகளிலும் காண முடியும்.

"ஆனால், இதைவிட இன்னும் அதிகமாக இதில் ஆபத்து இருக்கிறது. சட்டத்தை மீறுவதில் கொண்டுவிட்ட ருசி, அதிகக் கவர்ச்சியானதாகிச் சத்தியாக்கிரகம் என்ற பேச்சு ஒவ்வொருவர் உதட்டிலும் இருந்து வருவதை இன்று காணலாம். எங்காவது ஒருவர் கருத்துக்கு மாறுபட்டுவிட்டால், பள்ளிக்கூடமாகட்டும், வீடாகட்டும், ஒரு கோஷ்டியிலாகட்டும், நண்பர்கள் குழாத்திலாகட்டும், வர்த்தகத்திலாகட்டும், காரியாலயங்களிலாகட்டும், சத்தியாக்கிரகம் செய்யப்படும் என்று உடனே நீங்கள் மிரட்டப்படுகிறீர்கள். முதலாளிகள் தொழிலாளருக்கிடையே, நிலச்சுவான்தாருக்கும் குடியானவருக்கும் மத்தியில், பெற்றோர் பிள்ளைகளுக்கிடையே, உபாத்தியாயர்கள் மாணவருக்கு மத்தியில், சகோதரர்கள் நண்பர்களுக்கும் மத்தியிலும்கூட, சத்தியாக்கிரகம் என்ற கூரிய துப்பாக்கி முனை உபயோகிப்பதற்குத் தயாராக இருந்து வருகிறது. சமூகத்தின், அரசாங்கத்தின் விதிகளையோ சட்டங்களையோ மீறிவிடுவது எளிதானதாகவும், நினைத்ததும் செய்துவிடக் கூடியதாகவும் இருந்துவருகிறது. கட்டுதிட்டம் இருக்க வேண்டும் என்று ஒரு கல்லூரிப் பேராசிரியர் சொன்னால், அதிக வரி விதிக்க வேண்டும் என்று ஒரு முனிசிபல் அதிகாரி யோசனை கூறினால், சப்தம் போட வேண்டாம் என்று குழந்தைகளிடம் சொன்னால், பாட்டையில் தடை செய்ய வேண்டாம் என்று அங்காடிக் கடைக்காரர்களிடம் கூறினால், மாறுதல்களையோ, மாற்றங்களையோ ஏற்பாடு செய்தால், யாரோ ஒருவருக்கு வசதியாக இல்லாத ஒரு காரியத்தைச் செய்துவிட்டால், சத்தியாக்கிரகம் செய்யப்படும் என்று மிரட்டும்

அபாயம் உடனே வந்துவிடுகிறது. பகுத்தறிந்து செய்வதை எங்கே, எப்படி உபயோகிப்பது என்பதே தேச மக்களிடமிருந்து போய்விட்டதாகவே தோன்றுகிறது. எந்த மக்களுக்கும் நாட்டுக்கும் இது ஆபத்தைக் காட்டும் அறிகுறியாகும். ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்கு வேகமாகப் போய்ச்சேர உபயோகிக்கும் ஆகாய விமானத்தை, வெடிகுண்டு வீசுவதற்கும் உபயோகிப்பதைப் போன்றிருக்கிறது இது. வெளிச்சத்தை அளிக்கும் தீக்குச்சியை வீட்டைக் கொளுத்திவிடுவதற்கும் உபயோகிப்பதையே இது முற்றிலும் ஒத்திருக்கிறது. அதே ஆபத்தின் அடையாளத்தைச் சத்தியாக்கிரக ஆயுதத்திலும் ஒருவர் காணலாம். நல்ல பலனை அடைவதற்குச் சத்தியாக்கிரகத்தை உபயோகிக்கலாம்; முழு நாசத்திற்கான வழியிலும் அதைத் தவறான வழியில் உபயோகிக்கலாம். பரந்த உலகிற்குச் சத்தியாக்கிரகமே சிறந்த ஆயுதம் என்று கூறி வருகிறவர்கள், இவ்விஷயத்தில் தங்கள் பொறுப்பை உணராது போவார்களாயின், தங்களுக்கு எதிராக மாத்திரமேயன்றி நாடு முழுமைக்குமே தீமையாகக் காரியங்கள் நடந்துவிடுவதைச் சீக்கிரத்தில் அவர்கள் காண நேரும் என்று கருதுகிறேன். ஒரு யோசனையைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். துவேஷம் என்பதே இல்லாத, கடுமையான பயிற்சியைப் பெற்ற சில தலைவர்கள், இப்பொழுது வேறு எதுவும் செய்யாமல் தங்கள் வாழ்க்கையில் சில ஆண்டுகளை ஒவ்வொரு மாகாணத்திலும், ஒவ்வொரு நகரிலும், ஒவ்வொரு கிராமத்திலும் கழிக்க வேண்டும். உண்மையான சத்தியாக்கிரகமோ, உண்மையான அகிம்சையோ இன்னதென்பதை மக்கள் சரியானபடி புரிந்துகொள்ளும்படிச் செய்ய வேண்டும். அதை எப்படி, எப்பொழுது நடவடிக்கையில் கொண்டுவர வேண்டும் என்பதையும் அம் மக்களுக்கு எடுத்துக் கூற வேண்டும். இன்னுமொரு யோசனையையும் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு மாகாணத்திலும் அகிம்சையைப் போதிப்பதற்கு என்றே பள்ளிக்கூடம் இருக்க வேண்டும். இவ்விஷயத்தை விஞ்ஞான ரீதியிலும் கடுமையாகவும் பயின்ற உயர்குணம் படைத்தவர்கள் அங்கே ஆசிரியர்களாக இருந்து ராஜீய மாணவர்களுக்குப் போதிக்க வேண்டும். அத்தகைய மாணவர்கள் முழு நேர ஊழியர்களாக வைக்கப்படுவதோடு, அவர்கள் நாடு முழுதும் போய் உபதேசிப்பதோடு அகிம்சை என்பது உண்மையில் என்ன என்பதையும் எடுத்துக் கூறும்படியும் செய்ய வேண்டும். நாட்டைக் காப்பாற்றுவதற்கு இது ஒன்றுதான் வழி என்பது என் கருத்து.''

கராச்சி மேயரான ஜாம்ஷேத் மேத்தா, தூய ரகத்தைச் சேர்ந்த தேச பக்தர். தம்மால் இயன்ற வகையில் காங்கிரஸுடன் அவர் தொடர்பு கொண்டிராது போனால், முனிசிபாலிடியின் வசதிகளையெல்லாம் காங்கிரஸின் வரவேற்புக் கமிட்டியின் சௌகரியத்திற்கு அவர் பயன்படும்படி செய்யாவிடில், மிகக் குறுகிய காலமான இருபத்தைந்து நாட்களுக்குள் அற்புதமான காங்கிரஸ் நகரம் உருவாகியிருக்க முடியாது. போராட்டம் நடந்துகொண்டிருந்தபோது சத்தியாக்கிரகிகளிடம் அவர் காட்டிய அனுதாபம் எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்தது. ஆகையால், அப்படிப்பட்டவர் ஏதாவது குறை கூறுகிறார் என்றால் அதை உடனே கவனிக்க வேண்டும். நான் மேலே கொடுத்

திருப்பது, 'பார்ஸி சன்ஸார் – லோக சேவக்' என்ற கராச்சி ஆங்கில – குஜராத்தி வாரப் பத்திரிகையில் ஸ்ரீ ஜாம்ஷேத் மேத்தா எழுதியிருக்கும் கட்டுரையிலிருந்து எடுத்ததாகும். நான் எடுத்துக் கொடுத்திருக்கும் குறை கூறும் பகுதிக்குப் பின்னல், திருப்பித் தாக்காமல் துன்பங்களை அனுபவித்துக் கொண்ட சத்தியாக்கிரகிகளின் பெருமையை அதிகமாகப் புகழ்ந்தும் எழுதியிருக்கிறார். ஆனல், பாராட்டுகளைக் கேட்டு நாம் பெருமைகொண்டு விடுவதற்கு எந்தக் காரணமும் இல்லை. அகிம்சையை அனுசரிப்பதைப் பொறுத்த வரையில் நாம் நமது கடமையையே செய்திருக்கிறோம்.

எனவே, மனித வர்க்கத்தின், நமது நாட்டின் உண்மை யான நண்பரான இவர் செய்திருக்கும் எச்சரிக்கையையே நாம் முக்கியமானதாகக்கொண்டு, அதனல் நாம் பலனை அடைய வேண்டும். கராச்சியைப் பற்றி அவர் கூறியிருப்பதே ஏறக் குறைய மற்ற இடங்களைப் பொறுத்த வரையிலும் உண்மையாக இருக்கக்கூடும்.

அகிம்சை, பலமுள்ள சக்தியாக இருக்கவேண்டுமானல், அது மனத்திலிருந்து ஆரம்பமாக வேண்டும். மனத்தின் ஒத் துழைப்பில்லாமல் அகிம்சை வெறும் உடலைப் பற்றியதாக மாத் திரம் இருக்குமாயின், அது பலவீனர்களின், கோழைகளின் அகிம்சையே ஆகும். அதற்குச் சக்தியும் இராது. ஜாம்ஷேத்ஜி கூறுவது போல, அது மிகக் கேவலமான காரியமே ஆகும். உள்ளத்தில் பகைமையையும் துவேஷத்தையும் வைத்துக் கொண்டு திருப்பித் தாக்கவில்லை என்று பாசாங்கு செய்வோ மாயின், அது நம்மீதே திருப்பிக்கொண்டு நாசத்தில் கொண்டு போய் விட்டுவிடும். தீவிரமான அன்பை வளர்த்துக்கொண்டு விடுவது நம்மால் முடியாது போனலும், துவேஷத்தை மனத் தில் கொள்ளாமலிருப்பதாவது, வெறும் உடல் அகிம்சையோடு இல்லாதிருப்பதற்கு அதாவது தீமையில்லாதிருப்பதற்கு அவசி யம். துவேஷத்தை மூட்டிவிடும் எல்லாப் பாட்டுக்களையும் கோஷங்களையும் நீக்கிவிட வேண்டும்.

தராதரமின்றி அதிகாரத்தை எதிர்ப்பதென்பது, கலவரத் தையும் கட்டுதிட்டமின்மையையும் மூட்டிவிடுவதோடு அதன் பல ஞக நாசத்தையே உண்டாக்கிவிடும் என்பதும் உண்மைதான்.

ஜாம்ஷேத்ஜி குறை கூறியிருப்பதைவிட அவர் கூறியிருக் கும் பாராட்டே அதிகமானதாக இல்லாதிருக்குமானல், அதா வது மொத்தத்தில் பொய்யான அகிம்சையைவிட மெய்யான அகிம்சை அதிகமாக இல்லாதிருக்குமாயின், இந்தியா இப்பொ ழுது முன்னேறியிருப்பதைப் போன்று அது முன்னேறியிருக்க முடியாது. கிராமவாசிகள் இயல்பாகவே இதற்கு முன்னல்

என்றுமே எண்ணியிராத வகையில் அகிம்சையை அனுசரித்திருப்பதைப் பற்றி சந்தேகத்திற்கிடமில்லாத உண்மை, கராச்சி மேயரின் பாராட்டையும்விடச் சிறந்ததாகும். அவர்களுடைய அகிம்சையே, தேச மக்களின் உணர்ச்சி வளர்வதற்கு உதவியாக இருந்திருக்கிறது.

அகிம்சையின் ஆச்சரியமான பலனை, வெளியில் தெரிவதாயுள்ள பலனைக் கொண்டு அளந்துவிட முடியாது. ஆயினும் துவேஷமாகிய விஷயமும் சமூகத்திற்குள் புகுந்துவிட அனுமதிக்கப்பட்டிருக்கும் விஷயத்தில் நாம் திருப்தியுடன் ஓய்ந்திருந்துவிட முடியாது. மனமாற்றம் ஏற்படும்படிச் செய்வதற்கான பிரமாதமான முயற்சியே இந்தப் போராட்டம். ஆங்கிலேயருக்கு மனமாற்றம் ஏற்படும்படிச் செய்ய வேண்டும் என்பதையே நாம் நோக்கமாகக் கொண்டிருக்கிறோம். உள்ளத்தில் கெட்ட எண்ணத்தை வைத்துக்கொண்டு, அதே சமயத்தில் அகிம்சையைப் பின்பற்றுவதாகப் பாசாங்கு செய்வதால் அவ்வாறு மனமாற்றம் ஏற்படும்படிச் செய்துவிடவே முடியாது. ஆகையால், அகிம்சை வழியைப் பின்பற்ற விரும்புகிறவர்கள் மனத்தில் துவேஷத்தையும் வைத்துக்கொண்டிருப்பார்களாயின், அத்தகையவர்கள் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ளட்டும். தங்களுக்கும் நாட்டுக்கும் இதனால் தாங்கள் செய்துவிட்ட தவறுக்காக அவர்கள் வருந்தட்டும்.

—'எங் இந்தியா' - 2—4—1931

# 39

# அகிம்சையின் சக்தி

ஒருவர் குஜராத்தியில் கடிதம் எழுதியிருக்கிறார். அதன் மொழிபெயர்ப்பைக் கீழே கொடுக்கிறேன்:

"பார்க்கக் கூடிய அளவில், இப்பொழுது நடந்த போராட்டத்தில் இந்தியாவுக்குக் கிடைத்திருக்கும் உலக அபிப்பிராய ஆதரவு அரைகுறையானதும் மிகக் கொஞ்சமுமேயாகும். இப்படி இருக்கும்போது உலக அபிப்பிராயத்தின் முழு ஆதரவும் நமக்குக் கிடைத்திருக்கிறது என்று காந்திஜி சொல்லிக் கொள்ளுவதைக் கண்டு ஆச்சரியமாக இல்லையா? நிராயுதபாணிகளான ஒரு நாட்டு மக்கள், உலகத்திலேயே மிகக் கொடியதும், மிகுந்த ஆயுத பலத்தைக் கொண்டதுமான ஓர் ஏகாதிபத்திய வல்லரசிடமிருந்து தாம் இழந்த சுதந்திரத்தைப் பெறப் போராடுவதை, ஒரு திக்கற்ற பெண் எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையே ஒரு முரடனிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ளப் பாடுபடுவதற்கே சமமான தாகும். இந்தப் பெண், இரக்கமற்ற அந்த முரடனால் திரும்பத் திரும்ப மிருகத்தனமாகத் தடியால் அடிக்கப்படுகிறாள்

என்பதையும் யூகித்தும் பாருங்கள். இதைக் காணும் எந்த மனிதனும் ஆத்திரமடைந்து அவன் ரத்தம் கொதித்துப் போகாதா? அப்படியிருந்தும் இந்தியாவில் செய்யப்படுவதைக் கண்டு உலகத்தில் ஒழுக்க வெறுப்பு ஏற்பட்டிருப்பதை நாம் இன்று காண்கிறோமா? இத்தகைய ஒழுக்க வெறுப்பு இல்லாதது, உலகத்தில் அசிரத்தையில்லாத ஜீவகாருண்ய உணர்ச்சி வளர்ந்திருப்பதைக் காட்டவில்லையா? இதை ஒப்புக்கொள்ளுவதாக இருந்தால், இப்படிப்பட்ட வகையில் ஜீவகாருண்ய உணர்ச்சி வளர்ந்திருக்கும் இந்த உலகத்தில் அகிம்சை பலனுள்ள ஆயுதமாக இருக்க முடியுமா என்ற கேள்வி எழுகிறதல்லவா? நிராயுதபாணியான இந்தியா சிந்தியிருக்கும் ரத்தத்தைக் கண்டு, சத்தியமும் அகிம்சையும் வெற்றியடைவதற்கு அத்தியாவசியமான அளவுக்கு உலகத்தின் ஒழுக்க வெறுப்பு எழத் தவறிவிட்டது என்பதைக் காந்திஜி ஏன் காணக் கூடாது?"

உலக அபிப்பிராயத்தின் முழு ஆதரவையும் இந்தியா அடைந்திருக்கிறது என்று நான் எங்கேயாவது கூறியிருந்தால், என்னையும் அறியாமலேயே நான் மிகைபடுத்திக் கூறிவிட்டேன் என்றே அதைக்கொள்ள வேண்டும். அப்படி நான் சொல்லியிருந்தால், அதை எங்கே சொல்லியிருக்கிறேன் என்பதை எனக்குக் காட்ட வேண்டும் என்றும் விரும்புகிறேன். ஏனெனில், அப்படி நான் சொல்லியிருப்பதாக எனக்குக் கொஞ்சம் கூட நினைவு இல்லை.

இக்கடிதத்தை எழுதியிருப்பவர், பிரிட்டிஷ் ராணுவ பலத்துடன் போராடிக்கொண்டிருக்கும் நிராயுதபாணியான இந்தியாவை, பாதுகாப்பற்ற ஒரு பெண் முரடன் கையில் அவதிப்படுவதற்கு ஒப்பிட்டிருக்கிறார். இவ்விதம் அவர் ஒப்பிட்டுக் கூறியிருப்பதன் மூலம், பெண்ணின் பலத்திற்கு மாத்திரமேயன்றி அவளுடைய அகிம்சைக்கும் அநீதியையே செய்திருக்கிறார். ஆண், தன்னுடைய குருட்டுத்தனமான சுயநலத்தினால் பெண்ணின் ஆன்மா சிதைந்து போகும்படி அவன் செய்யாதிருந்தால், 'சுகபோகம்' என்பதற்கு அவள் தன்னைப் பலியிட்டுக் கொள்ளாதிருப்பாளாயின், அவளிடம் இயல்பாகவே உள்ள பலத்தை அவள் உலகிற்குக் காட்டிக்கொண்டிருப்பாள். சென்ற போராட்டத்தில் அவள் காட்டியிருக்கும் பெண்ணின் பலமெல்லாம், சிதறிய, அரைகுறையான ஒரு சிறு பகுதியே. ஆணுடன் சமத்துவமான வாய்ப்பைப் பெண் அடைந்துவிடும்போதுதான், பரஸ்பர உதவி, ஒன்றுபடுதல் ஆகியவைகளில் அவள் முற்றிலும் வளர்ச்சியடைந்துவிடும்போதுதான், பெண்ணின் பலத்தின் முழு மகிமையையும் கீர்த்தியையும் உலகம் காணும்.

அகிம்சையை ஆயுதமாகக்கொண்டிருப்பவர், வேறு ஆயுதம் எதுவும் இல்லாமலிருக்கிறார் என்பதற்காக அவர் பலவீனமாக இருப்பதாகக் கருதுவதும் தவறானதாகும். அகிம்சையின் உண்மையான உபயோகம், அதற்கிருக்கும் அபாரமான சக்தி

ஆகியவைகளைக் குறித்து ஒன்றும் அறியாதவரே இக்கடிதம் எழுதியிருப்பவர் என்றும் தோன்றுகிறது. அவரும் அகிம்சை ஆயுதத்தை உபயோகித்திருப்பதாகவே இருந்தாலும், யந்திரம் போலவும், வேறு சிறந்த ஆயுதம் கிடைக்காததால் சமயத்திற்குக் கிடைத்ததாகவுமே அவர் அதை உபயோகித்திருக்க வேண்டும். அகிம்சை உணர்ச்சியில் அவர் முற்றிலும் ஊறிப் போயிருப்பாராளுல், கொடிய காட்டுமிருகத்தையும், நிச்சயமாக மிகக் கொடியனை மனிதனையும் சாந்தமாக்கிப் பழக்கிவிட முடியும் என்பதை அவர் அறிந்திருப்பார்.

ஆகையால், சென்ற ஆண்டு நடந்த மிருகத்தனமான செய்கைகளைக் கண்டு உலகத்தின் ரத்தம் கொதிக்கவில்லை என்றால், அதற்குக் காரணம் உலகம் மிருகத்தனமாகவோ, இரக்கமின்றியோ இருக்கிறது என்பது அல்ல. ஆனால், நமது அகிம்சை எங்கும் பிரபலமானதாக இருந்தபோதிலும், எதற்காக உபயோகிக்கப்பட்டதோ அதில் சிறந்ததாகவே இருந்தாலும், பலமுள்ளவர்களின், அறிந்தவர்களின் அகிம்சையாக அது இல்லாததுதான் அதற்குக் காரணம். ஜீவநம்பிக்கையிலிருந்து அது எழவில்லை. அது ஒரு கொள்கையாகவும், சந்தர்ப்பத்திற்கு உகந்ததாகவும் மாத்திரமே அது இருந்தது. அடித்தவர்களை நான் திருப்பி அடிக்கவில்லையென்றாலும் நம் உள்ளங்களில் கோபத்தை வைத்துக்கொண்டிருந்தோம். நம் பேச்சில் பலாத்காரம் இல்லாது போகவில்லை; நம் எண்ணத்திலும் அது இருந்து கொண்டுதான் வந்தது. நாம் கட்டுதிட்டத்திற்கு உட்பட்டிருந்ததால் பொதுவாக பலாத்காரச் செயல்களில் ஈடுபடாமலிருந்தோம். குறிப்பிட்ட அளவே செய்து காட்டப்பட்ட இந்த அகிம்சையைக் கண்டு உலகம் அதிசயித்தது. எந்தப் பிரசாரமும் இல்லாமலேயே நமக்குரிய, அவசியமான அனுதாபத்தையும் ஆதரவையும் உலகம் காட்டியது. ஓர் எல்லைக்குட்பட்டதும் யந்திரம் போன்றதுமான அகிம்சையைச் சமீபத்தில் நடந்த போராட்டத்தில் நாம் அனுசரித்ததற்கே நமக்கு இவ்வளவு ஆதரவு கிடைத்தது என்றால், அகிம்சையின் முழு உயர்வையும் நாம் அடைந்துவிடும்போது இன்னும் எவ்வளவு அதிக ஆதரவு நமக்கு இருக்கும்? அப்பொழுது உலகத்தின் ரத்தம் நிச்சயமாகக் கொதிக்கும். அந்தத் தெய்வீகமான சம்பவத்திற்கு நாம் இன்னும் வெகு தொலைவிலேயே இருக்கிறோம் என்பதை அறிவோம். கான்பூரிலும், காசியிலும், மிர்ஜாப்பூரிலும் நமது பலவீனத்தைத் தெரிந்துகொண்டோம். அகிம்சையில் நாம் முற்றிலும் ஊறிப் போய்விடும்போது, அதிகாரவர்க்கத்துடன் போராடும்போது நாம் பலாத்காரமில்லாமலும் நமக்குள்ளேயே பலாத்காரத்துடனும் நாம் இருக்க முடியாது. பலாத்காரமின்மையில் நமக்கு ஜீவ நம்பிக்கை ஏற்பட்டுவிடுமானால், நாளுக்குநாள் அது வளர்ந்து உலகம் முழுவதிலும் அது வியாபித்துவிடும். அதுவே உலகம் காணும் மிகப் பிரமாதமான பிரசாரமாகவும் இருக்கும். ஜீவனை

அகிம்சையை நாம் அடைந்தே தீருவோம் என்ற நம்பிக்கையி லேயே நான் வாழ்கிறேன்.

—'எங் இந்தியா' 7—5—1931

# 40

# காங்கிரஸிற்குள் காலித்தனம்

காங்கிரஸ் மிகப் பெரிய ஜனநாயக ஸ்தாபனமாகிவிட் டது. சென்ற பன்னிரண்டு மாதங்களில் அது உச்ச கட்டத்தை எட்டிவிட்டது. காங்கிரஸ் உறுப்பினர் பட்டியலில் இல்லாம லேயே லட்சக்கணக்கானவர்கள் அதில் ஈடுபட்டு அதற்கு மேலும் அதிகப் பிரகாசத்தை அளித்திருக்கிறார்கள். ஆனால், இதற்கு முன்னால் இருந்ததையெல்லாம்விட அதிக அளவுக்குக் காலித் தனமும் காங்கிரஸிற்குள் புகுந்து விட்டது. இது தவிர்க்க முடி யாததாயிற்று. போராட்டத்தின் கடைசிக் கட்டத்தில், தொண் டர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு என்றிருந்த சாதாரண விதிகள் கைவிடப்பட்டு விட்டன. இதன் பலனாகச் சில இடங்களில் காலித்தனம் ஏற்பட்டுவிட்டது. கேட்கும் பணத்தைக் கொடுக்கா விட்டால் ஆபத்து நேரும் என்றுகூட சில காங்கிரஸ்காரர்கள் மிரட்டப்பட்டிருக்கிறார்கள். உண்மையில் காலித்தனத்தையே தொழிலாகக் கொண்டவர்கள், சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தங்கள் தொழிலை நடத்த முற்பட்டிருக்கக்கூடும்.

இதில் அதிசயம் என்னவென்றால், ஏற்பட்டிருக்கும் பொது ஜன விழிப்போடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, என் மனத்தில் இருக்கும் அச்சம்பவங்கள், இருக்க வேண்டியதைவிடக் குறை வாக இருப்பதேயாகும். இத்தகைய மகிழ்ச்சிக்குரிய நிலைமைக் குக் காரணம், காங்கிரஸின் கொள்கையான அகிம்சையை நாம் ஒழுங்காகப் பின்பற்றாது போயிருந்தாலும் அக்கொள்கைதான் காரணம் என்பது என் திடமான அபிப்பிராயம். ஆனால், நாம் முன்கூட்டியே உஷாராகி, தடுப்பதற்கான முன்னெச்சரிக்கை செய்வதற்குப் போதிய அளவுக்குக் காலித்தனம் தன்னை வெளிப் படுத்திக்கொண்டிருக்கிறது.

இதற்கு எனக்கு இயல்பாகவும் நிச்சயமாகவும் தோன்றும் பரிகாரம், அகிம்சையை அதிக ஒழுங்கான ரீதியிலும், அதிக புத்திசாலித்தனத்தோடும், கட்டு திட்டங்களோடும் அனுசரிப் பதுதான். முதலாவதாக, நாம் காட்டிக்கொண்டதைவிட அகிம்சையில் இன்னும் அதிக உறுதியான நம்பிக்கை நமக்கு இருந்திருக்குமானால், தொண்டர்களாகச் சேர்த்துக்கொள்ளு வதற்கிருக்கும் விதிகளுக்குப் பொருந்தாத ஒரு ஆணை, ஒரு

பெண்ணே தொண்டர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்க மாட்டார்கள். அப்படிச் செய்திருந்தால், கடைசிக் கட்டத்தில் தொண்டர்களே இருந்திருக்கமாட்டார்கள். அதனல், போராட்டம் முற்றிலும் நடக்க முடியாது போயிருக்கும் என்பது அதற்குப் பதிலாகிவிடாது. என் அனுபவம், இதற்கு நேர்மாருனதையே எனக்குப் போதிக்கிறது. ஒரே ஒரு சத்தியாக்கிரகியைக் கொண்டும் அகிம்சைப் போராட்டத்தை நடத்துவது சாத்தியமே. ஆனல், அதை அதாவது அகிம்சைப் போராட்டத்தை, பத்து லட்சம் சத்தியாக்கிரகிகள் அல்லாதாரைக் கொண்டு நடத்திவிட முடியாது. இரட்டை வெற்றியைப் பெறுவதற்காக மயிரிழை அகிம்சையிலிருந்து தவறிவிடுவதைவிட, கலப்பில்லாத அகிம்சையின் மூலம் தோல்வியடைந்து விடுவதையே நான் விரும்புவேன். அகிம்சை சம்பந்தப்பட்ட வரையில் விட்டுக் கொடுத்துவிடுவதில்லை என்ற போக்கை அனுசரிக்காததனல் முடிவில் நாசம் தான் ஏற்படும் என்பதைத் தவிர வேறு எதையும் நான் காண முடியவில்லை. ஏனெனில், நெருக்கடியான சமயம் வரும்போது அகிம்சைத் தராசில் நிறுக்கையில் நாம் குறையுள்ளவர்களாக இருப்பதோடு, நமக்கு எதிராகக் திடீரென ஒன்று சேர்ந்துவிடும் நாச சக்திகளைச் சமாளிப்பதற்குக் கொஞ்சமும் தயாராக இல்லாதவர்களாகவும் நாம் ஆகிவிடுவோம்.

ஆனல், சீர்தூக்கிப் பாராமல் கண்டபடியெல்லாம் தொண்டர்களைச் சேர்த்துவிட்ட பிறகு, நேர்ந்துவிட்ட இந்த விஷயத்தை அகிம்சை முறையில் நாம் எப்படி சீர்ப்படுத்திக்கொள்ளுவது? மிக உயர்ந்த தீரமும், அதன் மூலம் துன்பங்களை அனுபவிக்கத் தயாராக இருப்பது என்பதுமே அகிம்சை என்பதன் பொருள். ஆகையால், சில சிறந்த உயிர்களை இழக்க வேண்டி நேர்ந்தாலும் கூட, முரட்டுத்தனத்திற்கும் மிரட்டல்களுக்கும் மாத்திரம் விட்டு கொடுத்துவிடக்கூடாது. மிரட்டல்களுக்குச் செவி சாய்த்து விடப் போவதில்லை என்பதை மிரட்டல் கடிதம் எழுதுவோர் அறிந்துகொண்டு விடும்படிச் செய்ய வேண்டும். ஆனல், அதே சமயத்தில் அவர்கள் நோயின் காரணத்தை அறிந்து, அதற்கு ஏற்ற சிகிச்சையும் செய்ய வேண்டும். காலிகளும்கூட நம்மில் ஒரு பகுதியினரே. ஆகையால், அவர்களைக் கண்ணியமாகவும் அனுதாபத்துடனும் நடத்த வேண்டும். காலிகளாக இருக்க வேண்டும் என்று விரும்பி பொதுவாக யாரும் காலிகளாகிவிடுவதில்லை. சமூகத்தின் ஆழத்தில் இருந்து வரும் ஒரு நோயின் அடையாளமே அது. அரசாங்கத்தின் முறையிலுள்ள காலித்தனம் சம்பந்தமாக என்ன விதி முறையை அனுசரிக்கிறோமோ, அதையே உள்ளுக்குள்ளிருக்கும் காலித்தனத்தின் விஷயத்திலும் அனுசரிக்க வேண்டும். உயர்ந்த பலம் பெற்றிருக்கும் அந்தக் காலித்தனத்தை அகிம்சை வழியில் சமாளித்துக்கொள்ளும் ஆற்றல் நமக்கு இருந்தது என்று நாம் உணர்ந்திருப்போமாயின், அதே முறையைக்கொண்டே உள்ளுக்குள்ளிருக்கும் காலித்தனத்

தைச் சமாளிக்கும் ஆற்றல் நமக்கு உண்டென்று நாம் இன்னும் எவ்வளவு அதிகமாக உணர வேண்டும்?

சமரச ஒப்பந்த காலத்தில் சாதாரண பிரஜை எவ்விதம் போலீஸ் உதவியை நாடுவாரோ அதே போல எந்தக் காங்கிரஸ் காரரும் போலீஸ் உதவியை நாடலாமென்ருலும், இந்நோயைச் சமாளிப்பதற்கு நாம் போலீஸ் உதவியை நாடக்கூடாது. நான் யோசனை கூறியிருக்கும் வழி, சீர்திருத்தும், மனத்தை மாற்றும், அன்பு வழியாகும். போலீஸ் உதவியை நாடுவது, தண்டனை, பயம், வெறுப்பு வழி அல்லவாயினும் அன்புக் குறைவு வழியேயாகும். ஆகையால், இந்த இரண்டு முறைகளும் ஒரே மாதிரியானதாக இருக்க முடியாது. சீர்திருத்தும் வழி, ஏதோ சில கட்டங்களில் கஷ்டமானதாக இருக்கும். என்ருலும், உண்மையில் இதுவே எளிதான வழி.

—'எங் இந்தியா' - 7—5—1931

# 41

# உடலின் மீது வெற்றி

சத்தியாக்கிரகி எந்தக் கொடியனை எதிர்க்க முற்படுகிருரோ, அந்தக் கொடியனுக்கு அவருடைய உடலின் மீதும், சொத்தின் மீதும்தான் அதிகாரம் இருக்குமேயன்றி அவருடைய ஆன்மா வின் மீது அவனுக்கு அதிகாரம் இருக்க முடியாது என்பது சத்தி யாக்கிரகத்தின் அடிப்படையான கொள்கை. உடலைச் சிறைப் படுத்தி விட்டாலும், ஆன்மா வெல்லப்படாததாகவும் வெற்றி கொண்டுவிட முடியாததாகவும் இருக்க முடியும். இந்த அடிப் படையான உண்மையிலிருந்து பிறந்திருப்பதுதான் சத்தியாக் கிரகத்தின் முழு சாஸ்திரமும். மிகத் தூய முறையிலான சத்தி யாக்கிரகத்திற்கு வாகன வசதிகளோ, வண்டிச் சத்தமோ, சொந்த ஊரை விட்டு வெளியே போய்விடுவதோ அவசியமில்லை. சொந்த ஊரைவிட்டு வெளியே போய்விடுவதாலுல் நடந்தே போக வேண்டும். அப்படி வெளியேறிப் போகிறவர்கள் தங்க ளுக்கு என்ன கஷ்டங்கள் நேர்ந்தாலும் திருப்தியுடன் இருப்ப தோடு சிரித்துக்கொண்டே இருக்க வேண்டும். எதற்கும் கவ லைப்படுவதில்லை என்ற மனப்போக்கை நாம் வளர்த்துக்கொண்டு விடுவோமாயின், எத்தனையோ சங்கடங்கள், கஷ்டங்களிலிருந்து நாம் விடுபட்டவர்களாவதோடு சுயேச்சையும் நம்மிடம் குடி கொண்டுவிடும். 'எதற்கும் கவலைப்படுவதில்லை' என்றிருப்ப வர், எப்பொழுதும் பட்டினி கிடக்கத்தான் நேரும் என்று

எண்ணிவிட வேண்டாம். எறும்புக்கு அதற்கு வேண்டிய கொஞ்ச உணவையும், யானைக்குத் தினமும் வேண்டியிருக்கும் ஒரு மணங்குக் கவள ஆகாரத்தையும் அளித்து வரும் ஆண்டவன், மனிதனுக்கு அன்றாடம் வேண்டிய சாப்பாட்டை அளிக்காதிருந்துவிட மாட்டான். இயற்கையின் சிருஷ்டிகள், நாளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அஞ்சிப் பரபரப்பு அடைவதில்லை. அன்றாட ஜீவனத்திற்கு மறுநாளையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. மனிதனே, அவனுடைய மித மிஞ்சிய அகந்தையினாலும், தானே பெரியவன் என்ற மமதையினாலும், உலகத்திற்குத் தானே எஜமான் என்று எண்ணிக்கொண்டு அழிந்துவிடக் கூடியதான பொருள்களைத் தனக்கென்று குவித்துவைத்துக் கொள்ளுகிறான். கடுமையான அதிர்ச்சிகளின் மூலம் இந்த அகம் பாவத்திலிருந்து மனிதனை மீட்க இயற்கை தினமும் முயன்று வருகிறது. ஆனால் அவனோ, அந்த அகந்தையை விட்டொழிக்க மறுக்கிறான். அடக்கத்தின் போதனையை ஒருவர் உணரும்படிச் செய்வதற்கான மருந்தே சத்தியாக்கிரகம். சென்ற ஆண்டில் நாம் எவ்வளவோ தூரம் கடந்திருக்கிறோம்; எவ்வளவோ துன்பங்களை அனுபவித்திருக்கிறோம்; எவ்வளவோ சிறந்த அனுபவங்களையும் பெற்றிருக்கிறோம். ஆகையால், எந்தச் சந்தேகமும் பயமும் இல்லாமல் எல்லாம் கடவுள் கிருபையின்படி நடக்கும் என்று அவன் மீது பாரத்தைப் போட்டுவிட்டு இருந்துவிட வேண்டுமென்று உணருவதற்கு வேண்டிய நம்பிக்கை நமக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படி இருந்தால் எல்லாம் நமக்கு நன்மையாகவே முடியும்.

—'எங் இந்தியா' - 21—5—1931

பகுதி பன்னிரண்டு

# இந்திய சமஸ்தானங்களில் சத்தியாக்கிரகம்

*[1938-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் காங்கிரஸ் காரியக் கமிட்டி வர்தாவில் கூடி, முக்கியப் பிரச்னைகள் பற்றி ஆலோசித்தது. இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தமாகக் காங்கிரசின் கொள்கை என்ன என்பதும் அப்போது நிர்ணயமாயிற்று. அவ்விஷயமாகக் காரியக் கமிட்டியில் நிறைவேறிய தீர்மானத்தைக் காந்திஜியே தயாரித்தார்.*

*மக்களிடையே ஏற்பட்டுள்ள விழிப்பை இந்திய சமஸ்தானாதிபதிகளில் சிலர் உணர்ந்து, அதற்குகந்தவாறு மக்களின் ஒத்துழைப்பை நாடி வருவதைக் காரியக் கமிட்டி பாராட்டியதுடன், மற்ற சமஸ்தானாதிபதிகள் ராஜீய இயக்கங்களை நசுக்க முற்பட்டிருப்பதைக் கடுமையாகக் கண்டித்தது. எனினும், சமஸ்தானங்களில் நடைபெறும் அரசியல் போராட்டங்களில் காங்கிரஸ் ஸ்தாபனமோ, வெளியிலுள்ளவர்களோ நேரடியாகத் தலையிடக்கூடாதென்றும், சமஸ்தான மக்களே அவ்விஷயத்தில் அக்கறை எடுத்துக்கொண்டு, பொறுப்பாட்சி பெறப் பாடுபட வேண்டுமென்றும், அவர்கள்பால் காங்கிரஸ் பூரண அனுதாபம் கொண்டுளதென்றும் காரியக் கமிட்டியின் தீர்மானம் கூறியது.*

*1939 ஜனவரி 2-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் காந்திஜி எழுதிய தலையங்கம் ஒன்றில், ராஜ்கோட் சமஸ்தானத்தில் நடந்த போராட்டம் வெற்றிகரமாக முடிந்ததைப் பற்றி அவர் குறிப்பிட்டிருந்தார். ராஜ்கோட் போராட்டத்தைச் சித்திரிக்கும் அக்கட்டுரையின் விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]*



*ராஜ்கோட்டில் காந்திஜி ரெயிலிலிருந்து இறங்குகிருர். —28, பிப்ரவரி, 1939*

# 1

# ராஜ்கோட் மக்களின் வெற்றி

எவ்வளவு சிறப்புடன் ஆரம்பமாயிற்றோ, அவ்வளவு சிறப்புடன் முடிவடைந்துள்ள ராஜ்கோட் போராட்டத்தைப் பற்றி இதுவரையில் நான் எதுவுமே கூறவில்லை. அதில் எனக்கு உள்ள அக்கறைக் குறைவுதான் மௌனத்திற்குக் காரணம் என்று கூறிவிட முடியாது. ராஜ்கோட்டுடன் எனக்கு மிகவும் நெருங்கிய தொடர்பும் உண்டு. எனவே, அச்சமஸ்தான விஷயத்தில் எனக்குச் சிரத்தை குறைவதென்பது முடியாத காரியம். அந்தச் சமஸ்தானத்தில் என் தந்தை திவானாக இருந்திருப்பதுடன், காலஞ் சென்ற தாகூர் சாகேப் என்னை ஒரு தந்தையைப் போல் நேசித்து வந்தார். ராஜ்கோட் இயக்கத்திற்குச் சர்தார் வல்லபாய் பட்டேல் உயிர்நாடியாக இருந்து வருகிறார் என்ற உண்மையே எனது மௌனத்திற்குக் காரணம். அவரையோ அல்லது அவரது தொண்டையோ புகழ்வது, என்னை நானே புகழ்ந்து கொள்ளுவதாகும்.

போதிய அளவு மக்களின் நேரடியான ஆதரவு இருந்தால், சாத்விக ஒத்துழையாமை என்ன செய்ய முடியும் என்பதை ராஜ்கோட் போராட்டம் காட்டியிருக்கிறது. மக்கள் இவ்வளவு ஒற்றுமையும், உறுதியும், தியாகம் செய்யும் ஆற்றலும் வாய்ந்தவர்களாக இருப்பார்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. அவர்கள், தாங்கள் சமஸ்தானாதிபதியையும்விட மேலானவர்கள் என்பதைக் காட்டிவிட்டார்கள். ஒற்றுமையுடன் சாத்விக நடவடிக்கைகளில் ஈடுபடும் ஜனங்களின் முன்னிலையில், ஓர் ஆங்கிலேயரான திவான்கூட சக்தியற்றவராகிவிட்டார்.

ஆங்கில திவானின் ஆலோசனையையும், எல்லோருமறிந்த ரெசிடெண்டின் விருப்பத்தையும் புறக்கணித்துவிட்டு, சமஸ்தானாதிபதி தாகூர் சாகேப், அதிகாரத்தைத் தாம் மேற்கொண்டதற்காக, நமது வாழ்த்துக்களுக்கு உரியவராகியிருக்கிறார்.

என் கைவசமுள்ள தஸ்தாவேஜுகளிலிருந்து, ரெசிடெண்டால் ஆதரிக்கப்பட்ட சர் பாட்ரிக் காடெல்லின் நிலைமை, தாகூர் சாகேபின் ஊழியர் என்ற முறையில் பரிதாபகரமாகி விட்டதென அறிகிறேன். அவர் தாமே எஜமானர் என்ற ரீதியில் நடந்துகொண்டார், தாம் ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவர் என்றும், தம்முடைய திவான் பதவி இந்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு உட்பட்ட விஷயம் என்றும் அவர் இறுமாந்திருந்தார். அவர் தமது இஷ்டப்படி நடந்துகொள்ளலாம் என்றும் எண்ணினார். நான் இதை எழுதிக்கொண்டிருக்கும்



ராஜ்கோட்டில் காந்திஜி உண்ணுவிரதத்தை ஆரம்பிக்கு முன்பு
கடைசியாக சாப்பிடுகிருர். —3, மார்ச், 1939

போது, அவர் புத்திசாலித்தனமாகப் பதவியிலிருந்து விலகிவிட்டாரா அல்லது அவருக்கு என்ன நேர்ந்தது என்பது பற்றி எனக்கு எதுவும் தெரியவில்லை. ஐரோப்பியர்களைத் தங்களுடைய திவான்களாக வைத்துக் கொள்ளுவது விவேகமாகுமா என்று சமஸ்தானாதிபதிகள் தங்களைத் தாங்களே கேட்டுக் கொள்ளத் தொடங்கியிருக்கிறார்கள். என் வசமுள்ள கடிதப் போக்குவரத்திலிருந்து இது தெரிகிறது.

ரெசிடெண்டுகளைக் கண்டு திகில் கொள்ளும் சமஸ்தானாதிபதிகள், ராஜ்கோட் உதாரணத்திலிருந்து ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன்; அதாவது அவர்கள் நேர்மையுடன் நடந்து கொண்டால், அவர்கள் மக்களை உண்மையிலேயே தங்களுக்குப் பக்கபலமாக வைத்துக் கொண்டால், ரெசிடெண்டைக் கண்டு தாங்கள் சிறிதும் பயப்படுவதற்கில்லை என்பதுதான். மகோன்னத அதிகாரம் சிம்லாவில் இல்லை, ஒயிட்ஹாலிலும் இல்லை, தங்களுடைய மக்களிடமே இருக்கிறது என்பதைச் சமஸ்தானாதிபதிகள் உணர்ந்துகொள்ள வேண்டும். தங்களுடைய சாத்விக பலத்தில் நம்பிக்கை வைக்கும் விழிப்படைந்துள்ள மக்கள், ஒருமித்த எத்தகைய ஆயுத சக்திகளின் முன்னிலையிலும் சுதந்திரமாக இருக்க முடியும். ராஜ்கோட் மக்கள் காட்டிய சிறப்பான ஆற்றல்களை மற்ற ஜனங்களும் காட்டுவார்களாயின், மூன்று மாதங்களில் ராஜ்கோட் என்ன செய்ய முடிந்ததோ அதை ஒவ்வொரு சமஸ்தானமும் செய்ய முடியும்.

"எனினும், எல்லா அசாதாரண நிலைகளிலும் உறுதியாக இருக்கக் கூடிய அபூர்வ ரகமான அகிம்சையை, ராஜ்கோட் மக்கள் அபிவிருத்தி செய்து கொண்டிருக்கிறார்கள் என்று நான் கூறவில்லை; ஆனால், ஒரு ஸ்தாபனத்தில் உள்ள எல்லோரும் சாதாரண அகிம்சை முறையை மேற்கொண்டால்கூட என்ன செய்ய முடியும் என்பதை ராஜ்கோட் மக்கள் காட்டியுள்ளனர்.

ராஜ்கோட் மக்கள் செய்த காரியம் மகத்தானது. எனினும் சாத்விக எதிர்ப்பாளர் என்ற முறையில், இனிமேல் தான் அவர்கள் உண்மையான சோதனையைச் சமாளித்தாக வேண்டும். தாங்கள் எந்தக் குணாதிசயங்களால் வெற்றி பெற்றார்களோ, அதே குணாதிசயங்கள் அவர்களிடம் நீடித்து வரவில்லையாயின், அவர்களின் நிலை சீர்குலைந்து விடும். இந்தியா முழுவதும் உள்ள காங்கிரஸ்வாதிகள் நீண்ட காலப் பயிற்சியின் மூலம், சாத்விக சட்ட மறுப்பு செய்வதில் தங்களுக்குள்ள திறமையைக் காட்டியிருக்கிறார்கள். எனினும், ஆக்க வேலைகளில் அவர்கள் அகிம்சையின் திறமையை இனிமேல் தான் காட்ட வேண்டும். பலாத்-

காரம் கலந்த சாத்விக சட்ட மறுப்பு, சாத்விக சட்ட மறுப்பு என்ற பெயரில் நடைபெறலாம். ஆனால், ஆக்க வேலைகளில் அகிம்சையைக் கைக்கொள்ளுவது கடினம். அதில் ஹிம்சையைக் கண்டு பிடிப்பது எளிதாகும். அதில் பலாத்காரம் இருப்பது வெற்றியைக் கூட, நம்மைச் சிக்கவைக்கும் ஒரு பொறியாக வீண் பிரமையாக மாற்றி விடலாம். எனவே, ஜனங்கள் தேவையான அளவுக்குச் சுயநலமின்மையையும், சுயநலத்தியாகத்தையும் காட்டுவார்களா? தங்களுக்கும் தங்களை அண்டியிருப்பவர்களுக்கும் மாத்திரம் உதவி புரிந்து கொள்ளும் ஆசையை அவர்கள் எதிர்த்து நிற்பார்களா? மக்கள் ஆட்சேபணையின்றியும் விருப்பத்துடனும் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்யும் ஆற்றல் வாய்ந்த விவேகமும் உறுதியும் உள்ள தலைவர்களால் மக்கள் உண்மையில் என்ன பலன் பெற முடியுமோ, அந்தப் பலனை அதிகாரத்திற்குப் போட்டா போட்டி போடுவோர் மக்களுக்குக் கிடைக்காமல் செய்துவிடுவார்கள்.

கத்தியவாட் சூழ்ச்சிகளுக்குப் பெயர் போன இடமாகும். அதில் ராஜீயவாதிகளின் ஓர் இனத்தினர் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் சுயநல முன்னேற்றத்தையே வாழ்க்கையின் ஒரே லட்சியமாகக் கொண்டிருக்கிறார்கள். அதே சமயம் அவர்களில் வீரர்களாக வரக்கூடிய பண்பு உள்ளவர்களும் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. அங்கே ராஜீயவாதிகளின் கை ஓங்குமாயின், பின்னர் ராஜ்கோட்டில் ராமராஜ்யத்திற்கு இடமில்லை. ராம ராஜ்யம் என்பதற்கு எல்லாவற்றையும் துறந்து விடுவது என்பதே பொருள்; அதாவது மக்களால் வகுக்கப்பட்ட ஒழுங்கு என்பதே அதன் கருத்தாகும். எனவே, ராஜ்கோட் உதாரணத்தை மற்ற இடங்களும் பின்பற்றும்படியாக ராஜ்கோட் ஒளி வீசித் திகழ்வது சாத்தியமே.

எனவே, நாம் அடைந்துள்ள வெற்றியைக் குறித்துக் குதூகலமடைந்து வீண் களியாட்டங்களில் நேரத்தைக் கழிக்காமல், நாம் அடக்கத்துடன் நமது உள்ளத்தைச் சோதித்துக் கொள்ளுவதிலும் பிரார்த்தனையிலும் நேரத்தைச் செலவிடுவோமாக.

## 2

# சமஸ்தானாதிபதிக்குக் கடிதம்

[ராஜ்கோட், கத்தியவாட் சமஸ்தானங்களில் ஒன்று. மற்ற சமஸ்தானங்களில் உள்ள மக்களைப் போல் ராஜ்கோட் சமஸ்தான மக்களும் அரசியல் சீர்திருத்தங்களை

அமலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று கோரினர். ஆனால், அவர்களுடைய கோரிக்கைகளுக்குச் சமஸ்தானுதிபதி இணங்காததுடன், பிரிட்டிஷாரின் ஆதரவு பெற்று அடக்குமுறைகளையும் கைக்கொள்ளத் தொடங்கினுர்.

1939 பிப்ரவரி 28-ஆம் தேதி காந்திஜி ராஜ்கோட்டிற்குச் சென்ருர். அங்கே சிறைகளுக்குச் சென்று சிறைப்பட்டிருப்பவர்களைக் கண்டு பேசினுர். சமஸ்தான அதிகாரிகளின் அடக்குமுறைகள் கடுமையாக இருந்து வருவதை நேரில் பார்த்தார். பிறகு அதிகாரிகளையும் கண்டு பேசினுர்.

காந்திஜி, தமது குழந்தைப் பருவத்தை கழித்தது, ராஜ்கோட் சமஸ்தானத்தில்தான். அவருக்குச் சமஸ்தானுதிபதி தாகூர் சாகேபுடன் பலவிதத்திலும் நெருங்கிய தொடர்பு உண்டு. எனவே, ஒரு சமரசம் செய்வதற்காக அவர் ராஜ்கோட்டிற்குச் சென்ருர். சமஸ்தானுதிபதிக்கும் மக்கள் தலைவர்களுக்கும் ஏற்கனவே ஏற்பட்ட உடன்படிக்கை அமலுக்கு வரவேண்டும் என்பதே காந்திஜியின் நோக்கமாகும். அதற்காகக் காந்திஜி ராஜ்கோட்டில் உண்ணுவிரதம் இருக்க நேர்ந்தது. அவ்விஷயமாக காந்திஜி வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதவே, வைஸ்ராய் அவ்விஷயத்தில் தலையிட்டு மத்தியஸ்தத்திற்கு ஏற்பாடு செய்தார். இந்தியா பிரதம நீதிபதி சர் மாரிஸ் குவையரின் தீர்ப்பு காந்திஜிக்கு சாதகமாக இருந்தும்கூட, காந்திஜி தமது உண்ணுவிரதத்தில் ஓரளவு பலாத்கார அம்சம் சம்பந்தப்பட்டிருந்ததென்று கூறி, அந்தத் தீர்ப்பின் பலனை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார். இவ்விவரங்கள் இந்த அத்தியாயத்திலும் அடுத்துள்ள அத்தியாயங்களிலும் கொடுக்கப்பட்டுள்ளன.

மார்ச் மாதம் 2-ம் தேதி காந்திஜி, தாகூர் சாகேபுக்கு எழுதிய கடிதத்தின் சுருக்கமான விவரங்களைக் கீழே காணலாம்.]

மிகுந்த தயக்கத்துடனேயே இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். எனினும், இதை எழுதும்படி கடமை வற்புறுத்துகிறது. நான் இங்கு வந்திருப்பதற்குக் காரணத்தை நீங்கள் அறிவீர்கள்; மூன்று நாட்கள் வரையில் நான் தர்பார் வீரவாலாவுடன் பேசிக்கொண்டிருந்தேன். அவரது கூற்று எனக்கு மிகுந்த அதிருப்தியைக் கொடுத்திருக்கிறது. அவர் நிமிஷத்துக்கு நிமிஷம் தமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்பவர் என்று தோன்று

கிறது. அவர் காட்டியுள்ள வழி சமஸ்தானத்திற்குத் தீங்கை விளைவித்திருக்கிறது.

"இப்போது நான் இக்கடிதத்தின் நோக்கத்தை விவரிக்கிறேன். வர்தாவை விட்டு நான் புறப்பட்ட போது, உங்களுடைய உறுதி மொழியை நீங்கள் நிறைவேற்றும்படி செய்யாமல் ராஜ்கோட்டிலிருந்து திரும்புவதில்லை என்று உறுதி செய்து கொண்டிருந்தேன். எனினும், ஒன்று அல்லது இரண்டு நாட்களுக்கு மேல் இங்கு தங்கும்படி நேரும் என்றும், இங்கு ஏற்பட்ட இவ்வளவு வேதனையை நான் அனுபவிக்க நேரும் என்றும் நான் நினைக்கவே இல்லை.

"என் பொறுமை கடந்து விட்டது. சாத்தியமாயின் நான் திரிபுரிக்கு அவசரமாகச் செல்ல வேண்டும். நான் அங்கு செல்லாவிடில், ஆயிரத்திற்கு மேற்பட்ட சக ஊழியர்கள் ஏமாற்றம் அடைவார்கள். லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் மனம் சோர்ந்து வருந்துவார்கள். எனவே, நான் கூறும் கீழ்க்கண்ட யோசனைகளை நீங்கள் மனப்பூர்வமாக ஏற்று, அவசரமாக நாளையே நான் புறப்படும்படி செய்து என் கவலையைத் தீர்த்து வையுங்கள்.

"சென்ற டிசம்பர் 26-ஆம் தேதி நீங்கள் விடுத்த அறிக்கை அமலில் இருந்து வருகிறதென நீங்கள் சமஸ்தான மக்களுக்கு அறிவிக்க வேண்டும். அரசியல் சீர்திருத்தக் கமிட்டியில் ராஜ்கோட் ராஜ்கீய பிரஜா பரிஷத்தின் சார்பில் உள்ள அங்கத்தினர்களே பெரும்பான்மையோராக இருக்க வேண்டும். அந்த அங்கத்தினர்களில் ஒருவரான ஸ்ரீ யூ. என். தேபரே கமிட்டியின் தலைவராக இருக்க வேண்டும். மூன்று அல்லது மூன்றுக்குக் குறைவான அதிகாரிகளை நீங்கள் கமிட்டியின் வழிகாட்டிகளாகவும் ஆலோசகர்களாகவும் நியமிக்க வேண்டும். அவர்கள், பரிஷத்தின் சார்பில் நான் ஒப்புக்கொள்ளக்கூடியவர்களாக இருக்க வேண்டும். கமிட்டியின் நடவடிக்கைகளில் அவர்களுக்கு வாக்குரிமை இல்லை. கமிட்டிக்குத் தேவையான உதவி அளிக்கும்படியும் கமிட்டி கோரும் தஸ்தாவேஜுகள், புள்ளி விவரங்கள் முதலியன அதற்குக் கிடைக்கும்படி செய்யவும் பல்வேறு இலாக்காத் தலைவர்களுக்கும் நீங்கள் உத்தரவு பிறப்பிக்க வேண்டும். கமிட்டியின் உபயோகத்திற்காக அரசாங்கக் காரியாலயத்தில் தகுந்த இடமும் கொடுக்க வேண்டும். கமிட்டியின் நடவடிக்கைகள் 9-ஆம் தேதி ஆரம்பமாகி 22-ஆம் தேதி முடிவடைந்துவிட வேண்டும். கமிட்டியின் சிபாரிசுகள் உங்கள் கைக்குக் கிடைத்த ஏழு நாட்களுக்குள் அவை அமலுக்கு வந்துவிட வேண்டும். சத்தியாக்கிரகிகளான கைதிகள் நாளை விடுதலை செய்யப்பட வேண்டும். அபராதங்கள் விதிப்பது போன்ற முறைகளை நிறுத்துவதுடன், வசூலான அபராதங்களையும் பறிமுதல் செய்



*ராஜ்கோட்டில் உண்ணுவிரதம் இருந்தபோது காந்திஜி அயர்ந்து படுத்திருக்கிறுர்.–மார்ச், 1939*



ராஜ்கோட்டில் இருந்த உண்ணாவிரதத்தை காந்திஜி நிறுத்தியதும் எடுத்த படம்.
—7, மார்ச், 1939

யப்பட்ட சொத்துக்களையும் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். டிசம்பர் 26-ஆம் தேதி அறிக்கை சம்பந்தமாக நீங்கள் என்ன செய்தாலும் அதில் ஸ்ரீ கிப்சன் தலையிடமாட்டார் என்பதை, அவருடன் பேசியதிலிருந்து நான் தெரிந்துகொண்டேன். எனது யோசனைகளை நாளை மத்தியானத்திற்குள் தாங்கள் ஒப்புக் கொள்ளாவிடில், அதிலிருந்து எனது உண்ணாவிரதம் ஆரம்ப மாகி, நீங்கள் அதை அங்கீகரிக்கும் வரையில் தொடர்ந்து நீடிக்கும்.

"என் கடிதத்தின் தொனி கண்டிப்பாக இருப்பதாக நீங்கள் கருதமாட்டீர்கள் என்று நம்புகிறேன். என் கடிதமோ அல்லது எனது நடவடிக்கையோ கண்டிப்பாக இருப்பதாய்த் தோன்றினால், உங்கள் விஷயத்தில் அவ்விதம் கண்டிப்பாக இருக்கும் உரிமை எனக்கு உண்டென்று கூறுகிறேன். உங்கள் பாட்டனார் சமஸ்தானாதிபதியாக இருந்தபோது, இங்கே தொண்டு செய்யும் பாக்கியம் என் தந்தைக்குக் கிடைத்தது. உங்கள் தந்தை என்னைத் தமது தந்தையாகவே கருதினார். ஒரு பொதுக்கூட்டத்தில் அவர் என்னைத் தமது குரு என்றுகூடக் குறிப்பிட்டார். எனினும், நான் யாருக்கும் குரு அல்ல; நான் எவரையும், எக்காலத்திலும் எனது சீடராகக் கருதியதில்லை. எனவே, நீங்கள் என் குமாரர் போன்றவர். எனவே, என்னை நீங்கள் உங்களுடைய விரோதியாகவோ, அல்லது சமஸ்தானத்தின் விரோதியாகவோ தயவு செய்து கருத வேண்டாம். நான் ஒருபோதும் எவருடைய விரோதியாகவும் இருந்ததில்லை. நான் கூறியுள்ள யோசனைகளை நீங்கள் அங்கீகரிப்பதே உங்களுக்கு நன்மையாகும், உங்கள் கௌரவத்திற்கு உகந்ததாகும், உங்களுடைய கடமையுமாகும்.

"முடிவாக நான் கூறுவது என்னவெனில், நான் உயிருடன் இருந்தால், சீர்திருத்தக் கமிட்டியின் அறிக்கையை நான் மிகவும் கவனத்துடன் பரிசீலனை செய்வேன் என்று உறுதி கூறுகிறேன். நான் உயிருடன் இராவிடில், சர்தார் வல்லபாய் பட்டேல் அதை நன்கு பரிசீலனை செய்யலாம். அப்பரிசீலனை உங்களுக்கோ, உங்கள் சமஸ்தானத்துக்கோ அல்லது உங்கள் மக்களுக்கோ எவ்வித இழுக்கையும் உண்டுபண்ணாத வகையில் இருக்கும்.

"உங்களுக்குக் கடவுள் அருள் புரிந்து நல்வழி காட்டுவாராக. மோகனதாஸிடமிருந்து ஆசிகள்."

3

# உண்ணுவிரதத்தைத் துஷ்பிரயோகம் செய்யவேண்டாம்

*[ராஜ்கோட் சமஸ்தானுதிபதி தமது உறுதிமொழியை நிறைவேற்றினுலன்றி, காந்திஜி இறக்கும்' வரையில் உண்ணுவிரதம் இருக்கப் போவது நிச்சயம் என்பது மார்ச் 3-ஆம் தேதி பகிரங்கமாகிவிட்டது. தாகூர் சாகேபிற்கு எழுதிய கடிதம் அன்று வரையில் ரகசியமாகவே இருந்தது. உண்ணுவிரதம் ஆரம்பமானபோதுதான் காந்திஜி அக்கடிதத்தைப் பிரசுரிப்பதற்காகப் பத்திரிகைகளுக்கு அனுப்பினுர். தமது உண்ணுவிரதத்தைப் பற்றிக் காந்திஜி பத்திரிகைகளுக்கும் கீழ் வருமாறு ஓர் அறிக்கை அனுப்பினுர் :]*

எனக்காக ஒரு நாள்கூட அனுதாப உண்ணுவிரதம் இருக்க வேண்டாமென என் அனுதாபிகளேயும் நண்பர்களேயும் நான் கண்டிப்பாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்போதெல்லாம் சத்தியாக்கிரகத்தைப் போல் உண்ணுவிரதமும் மிகவும் துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது. மிகவும் அற்ப காரணத்துக்காகவும் மக்கள் உண்ணுவிரதம் இருக்க ஆரம்பித்துவிடுகிருர்கள். பெரும்பாலும் அத்தகைய உண்ணுவிரதத்தின் நோக்கம் பலாத்காரத்தையே அடிப்படையாகக்கொண்டிருக்கிறது. வேறு எந்தக் காரணத்திற்காக இராவிடினும், பலரும் முன் பின் யோசனேயின்றி 'காப்பி'யடிக்கும் முறையைத் தடுப்பதற்காகவாவது, நான் உண்ணுவிரதத்தை ஆரம்பிக்கச் சிறிதும் விரும்பவில்லே. எனினும், அந்தராத்மா வற்புறுத்துவதற்கு இணங்க மறுக்க முடியாதல்லவா? ஆகையால், இனி உண்மையான அல்லது கற்பனேயான குறைகளுக்குப் பரிகாரம் தேடுவதற்காக உண்ணுவிரதம் இருக்க விரும்புவோர், என்னே 'காப்பி'யடிக்க வேண்டாமென எச்சரிப்பதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்? மிகவும் சக்தி வாய்ந்த சில மருந்துகளேப் போல் உண்ணுவிரதத்தையும், அபூர்வமான சந்தர்ப்பங்களில் நிபுணரின் மேற்பார்வையின் கீழ் மாத்திரமே கைக்கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தம்மை ஒரு நிபுணராகக் கருதுவது தவருகும், பாவமுமாகும்.

மிகச் சிறு வயதிலேயே, சுயத் தூய்மைக்காக நான் உண்ணுவிரதத்தை ஆரம்பித்தேன் என்பதைப் பொது மக்கள் அறிந்துகொள்ளட்டும். அப்போது தவறிழைத்த என் மகனுக்காக நான்

நீண்ட காலம் உண்ணாவிரதம் இருந்தேன். அதைத் தொடர்ந்து, மிகவும் அன்பார்ந்த என் நண்பர் ஒருவரின் மகள் தவறு செய்த தற்காக அதைக் காட்டிலும் அதிக நாட்கள் உண்ணாவிரதம் இருந்தேன். அந்த இரண்டு சந்தர்ப்பங்களிலும் கிடைத்த பலன்கள், எனது உண்ணாவிரதங்கள் நியாயமானவை என் பதைக் காட்டின. தென்னப்பிரிக்காவில் நடந்த சத்தியாக்கிர கப் போராட்டத்தில் கலந்துகொண்ட ஒப்பந்தத் தொழிலாள ரின் கஷ்டங்களையொட்டியே, நான் முதன் முதலாகப் பகிரங்க மாக உண்ணாவிரதம் இருந்தேன். உண்ணாவிரதத்தில் நான் மேற்கொண்ட ஒரு பரிசோதனைகூட வீண் முயற்சியாக முடிந்த தில்லை. இதற்கு மேலாக, அந்த உண்ணாவிரதங்களை அனுஷ் டித்தபோது மதிப்பிட முடியாத மன அமைதியும், முடிவற்ற மகிழ்ச்சியுமே நான் பெற்ற அனுபவமாகும். கடவுள் அருளின் பலனாக இருந்தாலன்றி, உண்ணாவிரதம் வீணாகப் பட்டினி கிடப் பதேயாகும்.

நான் கூற விரும்பும் இரண்டாவது விஷயம் என்னவெனில், தாகூர் சாகேபையோ, அவரது ஆலோசகர்களையோ அல்லது ரெசிடண்டையோ தாக்கி மனக்கசப்பைக் காட்டும் பிரசங்கங் களோ அல்லது அறிக்கைகளோ இருக்கக்கூடாது என்பதே. ரெசிடெண்ட் சம்பந்தமாகவும், சமஸ்தான அதிகாரிகளின் நட வடிக்கைகள் பற்றியும் நான் கடுமையான வார்த்தைகளை உபயோகித்திருக்கிறேன். அவர்களுக்கு நான் எவ்விதத்திலாவது தவறு செய்திருந்தால், அதற்கு எப்படி ஈடுசெய்வது என்பது எனக்குத் தெரியும். தாகூர் சாகேப் சம்பந்தமாகவோ அல்லது இந்தத் துக்ககரமான நாடகத்தில் ஈடுபட்ட மற்ற அதிகாரிகள் சம்பந்தமாகவோ உபயோகிக்கும் எத்தகைய கடினமான வார்த்தைகளும், உண்ணாவிரதத்தினால் உத்தேசிக்கப்பட்டுள்ள பலனையே வீணாக்கிவிடும்.

மனமாரச் செய்துகொண்ட உடன்படிக்கையை மீறுவது பெரும் குற்றமாகும். எனவே, அத்தகைய ஓர் அக்கிரமத்தை விளக்க கடுமையான வார்த்தைகளை உபயோகிக்க வேண்டிய அவசியமில்லை. இங்கிலையில், பொது மக்களும் பத்திரிகை களும் பலன்தரத்தக்க விதத்தில் செய்யக் கூடியது என்ன வெனில், தாகூர் சாகேபின் நடவடிக்கையைக் கண்ணியமாக ஆட்சேபிப்பதேயாகும். விஷயமறிந்த பொது மக்களுடைய அபிப்பிராயத்தின் வேகத்தை அவர் உணரும்படிச் செய்ய வேண்டும்.

எல்லா சத்தியாக்கிரகமும், உண்ணாவிரதமும் ஒரு வகையான தியாகமேயாகும். உண்ணாவிரதத்தினால் கோரிய பலன் ஏற்பட வேண்டும் என்பதற்காக யாரும் பொறுமையிழந்துவிட வேண் டாம். உண்ணாவிரதத்தை மேற்கொள்ளும்படி என்னை வற்புறுத்

திய கடவுள், அதைப் பூர்த்தி செய்வதற்கான பலத்தையும் கொடுப்பார். மானிட வர்க்கத்திற்குத் தொண்டு புரிய வேண்டு மென நானுகை மேற்கொண்டுள்ள பணியை நிறைவேற்ற இந்த உலகில் நான் இன்னும் சிறிது காலம் இருக்க வேண்டும் என்பது அவரது கட்டளையாயின், எவ்வளவு நீண்ட காலம் உண்ணுவிரதம் இருந்தாலும் என் உடலை அழித்துவிடாது.

வகுப்புப் பிரச்னை சம்பந்தமாகக் காலஞ் சென்ற ஸ்ரீ மெக் டொனல்டின் தீர்ப்பைக் கண்டித்து நான் முன்னர் உண்ணுவிர தம் இருந்தேன் அல்லவா? அப்போது பலர் தங்கள் கருத்துக்கு விரோதமாகவே சமரசத்திற்கு இணங்கினார்கள். இந்த உண்ணு விரதத்தையொட்டி அத்தகைய சம்பவம் எதுவும் நேராதென்றே நம்புகிறேன். ஜனவரி 26-ஆம் தேதி தாகூர் சாகேப் விடுத்த அறிக்கை, டிசம்பர் 26-ஆம் தேதி அறிக்கையின் மூலம் அளித்த உறுதிமொழியை மீறியதாகும் என நான் கருதுவது தவறென்று யாராவது எண்ணுவார்களாயின், அவர்கள் என் கருத்தையும் உண்ணுவிரதத்தையும் கண்டிக்க முன்வர வேண்டும். அவ்விதம் கண்டிப்பது, சிநேகபாவமான நடவடிக்கையாகவே இருக்கும். நிச்சயமாக எனது உண்ணுவிரதம், தாகூர் சாகேபின் உள்ளத்தை உருக்குவதற்காகவே மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக் கிறது. தாகூர் சாகேபை வற்புறுத்தும் நோக்கத்துடன் பொது ஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதற்காக உண்ணுவிரதம் உத் தேசிக்கப்படவில்லை.

ஒன்றரைத் தலைமுறைக்கு மேலாக நான் கத்தியவாடி லிருந்து 'அஞ்ஞாத வாசம்' செய்து வந்துள்ளேன் என்றாலும், கத்தியவாட் அரசியல் எவ்வளவு சேறும் சகதியுமாக இருக்கிற தென்பதை நான் அறிவேன். துர்ப்பாக்கியமுள்ள இந்த உப மாகாணம் சூழ்ச்சிகளுக்குப் பெயர் போனது. இந்த நான்கு நாட்களில்கூட அதன் நாசகரமான செல்வாக்கை நான் உணர்ந் துள்ளேன். எனது உண்ணுவிரதம், கத்தியவாட் அரசியலைச் சிறிதளவாவது தூய்மையாக்க வேண்டும் என்பதே என் விருப் பம். விஷத்தன்மை பொருந்திய நாசகரமான செல்வாக்கு, கத் தியவாடில் மக்களின் ஆரோக்கிய வாழ்வுக்கே வகையில்லாமல் செய்து வருகிறது. அந்தச் செல்வாக்கை ஒழிக்க எனது உண்ணு விரதத்தை உபயோகித்துக்கொள்ளும்படி கத்தியவாட் மன்னர்களையும் அரசியல்வாதிகளையும் கேட்டுக்கொள்ளு கிறேன்.

# 4

# எரிகிற நெருப்பில் எண்ணெய்!

[காந்திஜியின் கடிதத்திற்குத் தாகூர் சாகேப் அனுப்பியிருந்த பதில் சிறிதும் திருப்தியளிக்கவில்லை. அந்தக் கடிதத்தைக் காந்திஜி ஒரு முறை வாசித்துவிட்டு, மறுபடியும் நிதானமாக வாசித்தார். 'தாகூர் சாகேபின் பதில் எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றுவது போல் இருக்கிறது' என்றார் காந்திஜி. சமஸ்தானாதிபதியின் பதிலைக் குறித்து, காந்திஜி பத்திரிகையாளர்களுக்கு விடுத்த இரண்டாவது அறிக்கை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

"தாகூர் சாகேபின் பதிலைக் கண்டு நான் வருந்துகிறேன். அவரது ஆலோசகர்கள் அவருக்குச் சரியான யோசனை கூறவில்லை. சீர்திருத்தக் கமிட்டி அமைப்பு சம்பந்தமாகச் சர்தார் பட்டேலுக்கு அளித்த வாக்குறுதியைத் தாகூர் சாகேப் நிறைவேற்றத் தவறிவிட்டார். கமிட்டி அமைப்பு சம்பந்தமாகத் தாகூர் சாகேப் கூறியிருப்பதை அங்கீகரிப்பது முடியாத காரியம். தாகூர் சாகேபின் பதில் அவ்விஷயமாகக் கடைசி வார்த்தையாக இருக்குமாயின், எனது உண்ணாவிரதம் இந்த உலகில் என் காலம் முடியும் வரையில் நீடிக்க வேண்டியதுதான். குதூகலமான உள்ளத்துடன் இந்தச் சோதனையை நான் அனுபவித்து வருவேன் என்று நம்புகிறேன். என் வாழ்நாளில் நடைபெறாத காரியம், நான் உயிரைத் தியாகம் செய்த பின் நிச்சயமாக நடைபெறும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை."

தாகூர் சாகேபிற்குக் காந்திஜி எழுதிய பதில் கடிதத்தின் விவரம் வருமாறு:

தங்கள் கடிதம் வேதனையைக் கொடுக்கிறது. வாக்குறுதிக்கு நீங்கள் யாதொரு மதிப்பும் வைக்கவில்லை என்று தோன்றுகிறது. நன்கொடை அளிப்பதாக உறுதி கூறிவிட்டு, பின்னர் அந்த உறுதியை நிறைவேற்றாத ஒருவரைப் போல் நீங்கள் நடந்து கொள்ளுகிறீர்கள். டிசம்பர் 26-ஆம் தேதி நீங்கள் வெளியிட்ட அறிக்கையின் மூலம் நீங்கள் அதிகமாகக் கொடுத்துவிடவில்லையா? நன்கொடை அளிப்பது மன்னரின் குணங்களில் ஒன்று. அது மன்னரின் அணிகலனும் ஆகும். அந்த அறிக்கையின் மூலம் நீங்கள் ஒரு பெரிய நன்கொடை அளிப்பதாக வாக்களித்தீர்கள். சீர்திருத்தக் கமிட்டி அங்கத்தினர்களை நியமிக்கும் உரிமையை நீங்கள் விட்டுக் கொடுத்தீர்கள். சர்தார் பட்டேல் பரிஷத்தின் பிரதிநிதி என்ற முறையில்,

நீங்கள் அவருக்கு எழுதிய கடிதத்தில் அவ்விதம் உங்கள் உரிமையை விட்டுக் கொடுத்திருக்கிறீர்கள். ஆனால், உங்களுடைய இன்றையக் கடிதம், நீங்கள் கொடுத்த வாக்குறுதியை ரத்து செய்திருக்கிறது. உங்களுடைய இந்த நடவடிக்கை உங்களுக்குத் தகுதியல்ல. நான் நேற்று தங்களுக்கு எழுதிய கடிதத்தில் எனது யோசனைகளைக் கூறியிருக்கிறேன். உங்கள் வாக்குறுதி நிறைவேறுவதற்கு, நீங்கள் என் யோசனைகளுக்கு இணங்க வேண்டியது அவசியமாகும். கடவுள் உங்களை, நீங்கள் அதற்கு இணங்கும்படி செய்வாராக. சாத்விக சட்ட மறுப்பு இப்போது நிச்சயமாக நிறுத்தப்பட்டு விட்டதால், சாத்விக சட்ட மறுப்புக் கைதிகளை விடுதலை செய்ய வேண்டியது உங்களுடைய தெளிவான கடமையாகியிருக்கிறது.

## 5

# உண்ணாவிரதத்தின் வெற்றி

*[ஐக்கிய மாகாணம், பிகார், ஒரிஸா, மத்திய மாகாணம் இவற்றின் முதல் மந்திரிகள் மார்ச் 4-ஆம் தேதி வைஸ்ராய்க்கு அவசரத் தந்திகள் கொடுத்தனர். ராஜ்கோட் பிரச்னை சம்பந்தமாக மகாத்மா காந்தி உண்ணாவிரதம் ஆரம்பித்திருப்பதால் ஏற்பட்டுள்ள நெருக்கடியைத் தீர்க்க வைஸ்ராய் முற்பட வேண்டுமென்று அவர்கள் கேட்டுக் கொண்டனர். காந்திஜி உண்ணாவிரதம் ஆரம்பித்த மூன்றாவது நாள் பம்பாய், பிகார், மத்திய மாகாண முதல் மந்திரிகள் தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்தார்கள். காந்திஜியின் உண்ணாவிரதம் நீடிப்பதைத் தடுக்க, தகுந்த நடவடிக்கை எடுக்காவிட்டால் தாங்களும் ராஜிநாமா செய்துவிடுவதாக மற்ற மாகாண முதல் மந்திரிகளும் எச்சரிக்கை செய்தனர்.*

*உண்ணாவிரதத்தினால் காந்திஜியின் பலவீனம் அதிகமாயிற்று. மார்ச் 5-ஆம் தேதி அன்னை கஸ்தூரிபாயைச் சிறையிலிருந்து அழைத்து வந்தார்கள். சிறை வைக்கப் பட்டிருந்த மற்றப் பெண்கள் விடுதலையானார்களா என்று காந்திஜி கஸ்தூரிபாயைக் கேட்டார். அவர்கள் விடுதலை செய்யப்படவில்லை என்று அன்னை கூறவே காந்திஜி, அவரை மீண்டும் சிறைக்குச் செல்லும்படி திருப்பி அனுப்பி விட்டார். 6-ஆம் தேதி காந்திஜியின் நிலைமை மேலும்*

மோசமாகியது. அவருக்குக் குமட்டலும் வாந்தியும் உண்டாயின.

காந்திஜியின் நிலையை அறிந்த வைஸ்ராய் லார்டு லின்லித்கோ, தமது ராஜபுதன யாத்திரையை அவசரம் அவசரமாக முடித்துக்கொண்டு 6-ஆம் தேதி டில்லிக்குச் சென்றார். ராஜ்கோட் ரெசிடெண்ட் மூலம் காந்திஜிக்கு ஒரு செய்தி அனுப்பினர். காந்திஜிக்கும் தாகூர் சாகேபிற்கும் ஏற்பட்டுள்ள கருத்து வேற்றுமையை இந்தியா பிரதம நீதிபதி சர் மாரிஸ் குவையரின் மத்தியஸ்தத்திற்குவிட தாம் உத்தேசித்திருப்பதாயும், அவ்விஷயமாகப் பிரதம நீதிபதி கூறுவதே இறுதியான தீர்ப்பாக இருக்குமென்றும், காந்திஜியைக் கண்டு விவாதிக்கத் தாம் ஆர்வத்துடன் இருப்பதாயும் வைஸ்ராய் அச்செய்தியில் குறிப்பிட்டிருந்தார். வைஸ்ராய்க்குக் காந்திஜி அனுப்பிய பதிலில், வைஸ்ராயின் முயற்சிக்குத் தமது நன்றியைத் தெரிவித்ததுடன், அவரது யோசனைக்குத் தாம் இணங்குவதாக அறிவித்தார். பிரயாணம் செய்ய டாக்டர்கள் அனுமதித்த உடனே தாம் டில்லிக்கு வந்து வைஸ்ராயைப் பார்ப்பதாயும் காந்திஜி குறிப்பிட்டார். இவ்விஷயமாகக் காந்திஜி மார்ச் 7-ஆம் தேதி தமது உண்ணாவிரதத்தைக் கைவிட்டார். அச்செய்தியைக் கேட்டு கோடிக்கணக்கான இந்திய மக்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.

உண்ணாவிரதத்தைத் தாம் கைவிட்டதன் காரணத்தை விளக்கிக் காந்திஜி பத்திரிகையாளர்களுக்கு விடுத்த அறிக்கையின் விவரத்தைக் கீழே காணலாம்:]

கோடிக்கணக்கான மக்களின் பிரார்த்தனைகளுக்குப் பதிலாகவே, இந்த நல்ல முடிவு ஏற்பட்டிருக்கிறது என்பது எனது அபிப்பிராயம். கோடிக்கணக்கான என் மக்களை நான் நன்கு அறிவேன். இருபத்து நான்கு மணி நேரமும் நான் அவர்களுடனேயே இருக்கிறேன். முதலாவதாகவும் கடைசியாகவும் நான் கவலைப்படுவது அவர்களுக்காகத்தான். ஏனெனில், வாயில்லாத கோடிக்கணக்கான பாமர மக்களின் உள்ளத்தில் இருக்கும் கடவுளைத் தவிர, வேறு எந்தக் கடவுளையும் நான் அறியேன். தங்கள் உள்ளத்தில் கடவுள் இருப்பதை அவர்கள் அறியார்கள், ஆனால், நான் அறிவேன். சத்தியம் என்ற கடவுளையே நான் பூஜிக்கிறேன்; அல்லது கோடிக்கணக்கான மக்களுக்குத் தொண்டு செய்வதன் மூலம் கடவுள் என்ற சத்தியத்தையே நான் வணங்குகிறேன்.

உலகம் முழுவதும் மற்றவர்களும் எனக்காக அனுதாபம் கொண்டு பிரார்த்தனை செய்தார்கள் என்பதையும் நான் அறிவேன். கௌரவமான உடன்படிக்கை ஏற்பட்டு, எனது உண்ணா விரதத்தை விரைவில் முடிப்பதற்காகப் படித்தவர்களும் இடைவிடாது முயற்சி செய்தார்கள். இவ்விஷயமாக இந்தியர்களைப் போல் ஆங்கிலேயர்களும் ஒத்துழைத்தார்கள். எனினும், ராஜீய ரீதியில் பேசுவதாயின், சமரச ஒப்பந்தத்திற்குப் பொறுப்பாளி வைஸ்ராயே ஆவார்.

உண்ணாவிரத முறையை, அதிலும் முற்றிலும் ராஜீயப் பிரச்னை என்று தோன்றும் ஒரு விஷயத்திற்காக உண்ணாவிரதம் இருப்பதை ஆங்கிலேயர்கள் அறிந்து கொள்ள முடியாது என்பதை நான் அறிவேன். பெரும்பாலும் அத்தகைய முறைகள் அவர்களுக்கு வெறுப்பையே உண்டாக்குகின்றன. உண்ணாவிரத முறையை உணர முடியாத இந்தியர்களும் இருக்கிறார்கள். எனக்குப் பலம் ஏற்பட்டதும், உண்ணாவிரத முறையைப் பற்றி எழுதலாமென நம்புகிறேன். ஏனெனில், சத்தியாக்கிரக திட்டத்தில் உண்ணாவிரத முறைக்கு நிச்சயமான ஓர் இடம் உண்டு என்பதை ஐம்பது ஆண்டுகளுக்கு மேற்பட்ட என் அனுபவமானது எனக்கு உறுதியாகக் காட்டியிருக்கிறது.

இங்கே நான் உண்ணாவிரதப் பிரச்னையைக் கொண்டு வருவதற்குக் காரணம், வைஸ்ராயின் சமிக்ஞைக்கு நான் பூரண மதிப்புக் கொடுக்க விரும்புவதேயாகும். அவரது நடவடிக்கை, ஆங்கிலேயரின் உள்ளத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. வைஸ்ராய் கீழ் வருமாறு கூறியிருந்தால், அவரது நடவடிக்கை நியாயமானதென்றே நான் சொல்லியிருப்பேன்: 'இந்த மனிதரின் நடவடிக்கைகளை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை; அவரது உண்ணாவிரதங்களுக்கு முடிவே இல்லை போல் தோன்றுகிறது. இதுதான் அவரது கடைசி உண்ணாவிரதமென்று அவர் உத்தரவாதமும் அளிக்கமாட்டார். அவர் உண்ணாவிரதத்தை முடிக்கும் வரையில், இந்தத் தடவைகூட அவருடன் நாங்கள் சமரசப் பேச்சு நடத்த உத்தேசிக்கவில்லை.'

தார்மிக ரீதியாகப் பார்க்கும் போது, வைஸ்ராயின் அத்தகைய போக்கு தவறாக இருக்கும். எனினும், ராஜீய ரீதியாகப் பார்க்கும் போது, வைஸ்ராய் மேற்கண்ட விதமாகக் கூறியிருந்தால், அவரது போக்கு நியாயமானதென்றே நான் கூறியிருப்பேன். ஆங்கிலேயர்கள் புரிந்து கொள்ள முடியாத ஒரு விஷயத்தையொட்டிக் கூட, அத்தகைய நல்ல முடிவு ஏற்படும்படி செய்தது, தெளிவான சூழ்நிலையை உண்டு பண்ணுவதுடன், அரசாங்கப் பிரச்னை பொதுவாகத் தீருவதற்கும் உதவியாக இருக்கும்.

ராஜ்கோட்டின் முன் உதாரணத்தை எல்லா சமஸ்தானங்களும் பின்பற்ற வேண்டுமென்று நான் கூறவில்லை. ராஜ்கோட்டை, ஒரு தனிப் பிரச்னையாகக் கருத வேண்டும். அந்தந்தச் சமஸ்தானங்களில் உள்ள பிரச்னைகளை, ஆங்காங்குள்ள நிலைமைக்குத் தகுந்தவாறு கவனித்துச் சமாளிக்க வேண்டும்.

ராஜ்கோட்டிற்கு நான், சமஸ்தானாதிபதிகளின் நண்பன் என்ற முறையிலும், நூறு சத விகிதம் சமாதான தூதன் என்ற முறையிலுமே வந்திருக்கிறேன். ராஜ்கோட்டிலுள்ள சாத்விக சட்ட மறுப்பாளர்கள் விட்டுக் கொடுப்பதென்பது முடியாத காரியம். ஏனெனில், அவர்களுடைய கௌரவத்திற்குக் கேடு ஏற்பட்டிருக்கிறது.

இந்திய மன்னர்களைச் சீர்திருத்துவது முடியாத காரியம் என்றும், பண்டைய காட்டுமிராண்டித்தனமான இந்தச் சின்னத்தை (இந்திய மன்னர்களின் ஆட்சி முறையை) ஒழித்தாலன்றிச் சுதந்திர இந்தியாவிற்கு இடமில்லையென்றும் கருதுபவர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. ஆனால், அந்த அபிப்பிராயத்தை நான் ஒத்துக்கொள்ள முடியாது. அகிம்சையில், அதாவது மனித சுபாவத்தின் உயர்வில் நம்பிக்கையுடையவன் என்ற முறையில், நான் அக்கருத்தை ஒப்புக்கொள்ளுவதென்பது முடியாத காரியம். இந்தியாவில் மன்னர்களுக்கு இடம் உண்டு. ஆனால், அவர்கள் மக்களுக்கு உண்மையான, உருவான உரிமைகளும் அதிகாரங்களும் அளிக்க வேண்டும்.

ராஜ்கோட், கத்தியவாடின் உயிர் ஸ்தானமாகும். ராஜ்கோட் பொறுப்பாட்சி அளித்தால், மற்ற சமஸ்தானங்களும், சாத்விக சட்ட மறுப்பின்றித் தாமதமாகவே பொறுப் பாட்சி அளிக்க முற்பட்டுவிடும்.

## 6

# உண்ணாவிரத விளக்கம்

உண்ணாவிரதம் மிகப் புராதனமானது. சுயத் தூய்மைக்காகவோ, வேறு உயர்ந்த அல்லது கீழ்த்தரமான நோக்கங்களுக்காகவோ உண்ணாவிரதம் மேற்கொள்ளப்படுகிறது. புத்தர், ஏசுநாதர், முகமது நபி முதலியோர் கடவுளை நேருக்கு நேர் பார்ப்பதற்காக உண்ணாவிரதம் இருந்தனர். ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி, தம்முடைய வானரப் படைகளுக்குச் சமுத்திரம் இடம் கொடுப்பதற்காக உண்ணாவிரதம் இருந்தார். சிவபிரானைக் கணவராக அடைவதற்காகப் பார்வதி தேவி உண்ணா

விரதம் இருந்தாள். நானும் அத்தகைய மகத்தான உதாரணங்களையே பின்பற்றியுள்ளேன். ஆனால், அவர்களுடைய லட்சியங்களைப் போல் எனது லட்சியம் உயர்ந்ததல்ல.

சமீபத்தில் நான் மேற்கொண்ட உண்ணாவிரதத்தின் தகுதிகளைப் பற்றி நான் இங்கே விவாதிக்க உத்தேசிக்கவில்லை. நான் உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்ற உத்தேசத்துடன் நான் சேவா கிராமத்திலிருந்து புறப்பட்டேனா என்ற கேள்விக்கு மாத்திரம் பதில் அளிக்க உத்தேசித்திருக்கிறேன். இப்போதெல்லாம் உண்ணாவிரத சம்பந்தமாக நான் கோழையாகி வருகிறேன். *1933*-இல் நான் மேற்கொண்ட உண்ணாவிரதம் சீக்கிரமாக முடிந்து விட்டதெனினும், அது எனக்கு ஒரு சித்திரவதையாக இருந்தது. நான் விடுதலையான அதே தினத்திலேயே நான் மரணத்திற்குத் தயாராக இருந்தேன். அதற்கிணங்க, என்னிடமிருந்த மருந்து சாமான்களில் பலவற்றையும் அங்கே மேற்பார்வையிட்டு வந்த நர்ஸிடம் கொடுத்து விட்டேன். அதிலிருந்து உண்ணாவிரதம் என்றாலே எனக்கு நடுக்கமாக இருக்கிறது. *6*-ஆம் தேதியும் *13*-ஆம் தேதியும் நான் அனுஷ்டித்த உபவாசங்கள், நீண்ட கால உண்ணாவிரதம் என் உடல் நிலைக்கு ஏற்றதல்லவென்பதைக் காட்டியிருக்கின்றன. எனவே, சேவா கிராமத்திலிருந்து நான் புறப்பட்ட போது, ராஜ்கோட்டில் உண்ணாவிரதம் இருக்க நேரலாமென்ற யோசனையே என் மனத்தில் எழுந்திருக்க முடியாது. அவ்விதம் நான் தீர்மானம் செய்திருந்தால், நான் உண்ணாவிரதத்தைப் பற்றிப் போதிய முன்னெச்சரிக்கை கொடுப்பதாக நண்பர்களுக்கு அளித்துள்ள வாக்குறுதியை நிறைவேற்றியிருக்க வேண்டும். எனவே, உண்ணாவிரதம் இருக்கும்படி நேரலாம் என்ற யோசனையே முதலில் இல்லை. என் ஆன்மாவின் தீவிர வேதனைகளிலிருந்தே திடீரென்று உண்ணாவிரத யோசனை எழுந்தது. உண்ணாவிரதத்திற்கு முந்திய நாட்கள் ஆழ்ந்த பிரார்த்தனைகளில் கழிந்தன. உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்று தீர்மானிப்பதற்கு முன் இரவில் எனது நிலை என்னைத் திக்குமுக்காடும்படி செய்துவிட்டது. என்ன செய்வதென்றே எனக்குத் தெரியவில்லை; என்ன நேர்ந்தாலும் நான் உண்ணாவிரதம் இருந்தே தீர வேண்டும் என்ற உறுதி மறுநாட் காலையில் எனக்கு ஏற்பட்டது. நான் உண்ணாவிரதம் இருக்கவேண்டும் என்பது கடவுளின் விருப்பம் என்ற நம்பிக்கை எனக்கு இராவிடில், நான் அத்தீர்மானத்தைக் கைக்கொண்டிருக்க முடியாது.

- 'ஹரிஜன்' - 13—3—1939

# 7

# பிரதம நீதிபதியின் தீர்ப்பைத் துறந்ததேன்?

*[1939 மார்ச் 15-ஆம் தேதி டில்லிக்குச் சென்ற காந்திஜி அங்கே பல நாட்கள் வரையில் தங்கி, வைஸ்ராயைப் பல தடவை பேட்டி கண்டு பேசினர். ஏப்ரல் 3-ஆம் தேதி மாரிஸ் குவையரின் தீர்ப்பு வெளியாயிற்று. தாகூர் சாகேபின் அறிக்கை பற்றி காந்திஜியும் சர்தார் பட்டேலும் கூறிய விளக்கத்தைப் பிரதம நீதிபதி மாரிஸ் குவையர் முற்றிலும் அங்கீகரித்திருந்தார். ஏப்ரல் 9-ஆம் தேதி டில்லியிலிருந்து ராஜ்கோட்டிற்குத் திரும்பிய காந்திஜி, தாகூர் சாகேபிற்கு எழுதிய கடிதத்தில், மாரிஸ் குவையரின் தீர்ப்பிற்கிணங்க அரசியல் சீர்திருத்தக் கமிட்டியை அமைக்க வேண்டியது அவசியமென்று குறிப்பிட்டிருந்தார். கமிட்டியில் முஸ்லிம்களுக்குப் பிரதிநிதித்துவம் இல்லையென்று கூறி, அக்கமிட்டியை முஸ்லிம்கள் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று ஜனுப் ஜின்ன முஸ்லிம்களுக்கு யோசனை கூறினர். அதில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு பிரதிநிதியைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று டாக்டர் அம்பேத்கார் வற்புறுத்தினர். பின்னர் கமிட்டி அமைப்பு பற்றிக் காந்திஜிக்கும் ராஜ்கோட் சமஸ்தானப் பிரதிநிதிக்கும் நடந்த பேச்சு வார்த்தைகள் முறிந்தன. இறுதியில் சமஸ்தான அதிகாரிகளை வற்புறுத்திச் சலுகைகள் பெறுவதற்கு, குவையர் தீர்ப்பை ஒரு கருவியாக உபயோகிக்கத் தாம் விரும்பவில்லையென்று கூறி, காந்திஜி அத்தீர்ப்பைத் துறந்துவிட்டார். அதாவது அந்தத் தீர்ப்பினுல் ஏற்படக் கூடிய பலன் எதையும் தாம் விரும்பவில்லை என்று கூறிவிட்டார்.*

*குவையர் தீர்ப்பைத் துறந்து மே 17-ஆம் தேதி காந்திஜி விடுத்த அறிக்கையின் விவரம் கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது :]*

நான் இங்கிருந்து கல்கத்தாவுக்குப் புறப்பட்டபோது, ராஜ்கோட் எனக்கு ஓர் ஆராய்ச்சிசாலையாக அமைந்துள்ளது என்று கூறினேன். என்னுடைய சக ஊழியர்களுடன் நீண்ட நேரம் விவாதித்த பின், இன்று மாலை ஒரு முடிவிற்கு வந்தேன்.

பிரதம நீதிபதியின் தீர்ப்பைத் துறந்துவிடுவது என்பதே அந்த முடிவாகும்.

எனது தவறை நான் உணருகிறேன். நான் உண்ணாவிரதத்தை முடித்தபோது, இதைப்போல் இதற்கு முன் எந்த உண்ணாவிரதமும் இவ்வளவு வெற்றிபெற்றதில்லை யென்று கூறிக் கொண்டேன். ஆனால், அது இம்சையால் களங்கப்பட்டிருந்தது என்பதை நான் இப்போதுதான் காண்கிறேன். உண்ணாவிரதத்தை நான் மேற்கொண்டபோது, தாகூர் சாகேப் தாம் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றும்படிச் செய்வதற்காக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உடனடியான தலையீட்டை நாடினேன். ஆனால், அது அகிம்சை அல்லது மனத்தை மாற்றும் வழியல்ல; அது இம்சை அல்லது பலாத்கார முறையாகும். எனது உண்ணாவிரதம் பரிசுத்தமானதாக இருக்க வேண்டுமாயின், அது தாகூர் சாகேபிற்கு எதிராகவே கைக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். அவரது உள்ளத்தையோ, முக்கியமாக அவரது ஆலோசகரான தர்பார் ஸ்ரீ வீரவாலாவின் உள்ளத்தையோ உருக்கும் சக்தி எனது உண்ணாவிரதத்திற்கு இல்லையாயின், நான் திருப்தியுடன் மரணத்தை நாடியிருக்க வேண்டும். என் முயற்சிக்கு இடையூறாக எதிர்பாராத தடைகள் ஏற்படவில்லையாயின், என் கண்கள் திறக்கப்பட்டிரா. தர்பார் ஸ்ரீ வீரவாலா தாமாக விரும்பி குவையர் தீர்ப்பை ஆதரிக்கவில்லை. அத்தீர்ப்பு அமலுக்கு வருவதைத் தாமதப்படுத்த அவர் தமக்குக் கிடைத்த ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் உபயோகப்படுத்திக்கொண்டார். அதன் காரணமாக, தீர்ப்பு எனது முயற்சி எளிதாகும்படி செய்வதற்குப் பதிலாக ராஜ்கோட் முஸ்லிம்களும் மற்ற சமூகத்தினரும் என் மீது கோபம் கொள்ளும்படி செய்துவிட்டது.

அனாவசியமாக வைஸ்ராய்க்கு நான் தொந்தரவு கொடுத்ததற்காக அவரிடம் மன்னிப்புக் கோருகிறேன். முதலிலேயே நான் அறிந்திருந்தால், பிரதம நீதிபதிக்குக் கஷ்டத்தைக் கொடுத்திருக்கமாட்டேன். எனவே, அவரிடமும் நான் மன்னிப்புக்கோருகிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக, தாகூர் சாகேப், தர்பார் வீரவாலா இவர்களையும் என்னை மன்னிக்கும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். தர்பார் வீரவாலா விஷயத்தில், என் சக ஊழியர்களைப் போல் என் மனத்திலும் தீய எண்ணங்களே ஏற்பட்டிருந்தன என்பதை நான் ஒப்புக்கொண்டு தீர வேண்டும். அவருக்கு விரோதமாகக் கூறப்பட்ட புகார்கள் உண்மையா, அல்லவா என்பது பற்றி யோசிக்க நான் முற்படவில்லை. அவற்றைப் பற்றி விவாதிக்க இது சந்தர்ப்பமல்ல. அவர் விஷயத்தில் அகிம்சை முறை கையாளப்படவில்லை என்று நான் சொல்லுவதே போதுமானது.

பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன் என்றபடி நான் குற்றவாளியாகி இருக்கிறேன். அதாவது தர்பார் வீரவாலாவின்

தலைக்கு மேலே தீர்ப்பு என்ற கத்தியைத் தொங்கவிட்டு மிரட்டிக் கொண்டிருந்த அதே சமயத்தில், தாராளமாக அரசியல் சீர் திருத்தம் வழங்கும்படி தாகூர் சாகேபிற்கு யோசனை கூறுமாறு அவரை நயமாக வேண்டிக்கொண்டேன். இந்த முறை, அகிம் சைக்கு முற்றிலும் முரணானது என்பதை நான் ஒப்புக்கொள்ளு கிறேன்.

எனக்கும் குவையர் தீர்ப்புக்கும் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள நான் விரும்பவில்லை என்று கூறும் தைரியம் எனக்கில்லை. அதற்குப் பதிலாக நான் தர்பார் வீரவாலாவிடம் கீழ்வருமாறு கூறினேன்: "தாகூர் சாகேப் அவர் இஷ்டப்படி கமிட்டியை நியமிக்கட்டும். பிறகு பரிஷத் பிரதிநிதிகள் குவைய ரின் தீர்ப்பை அடிப்படையாகக்கொண்டு அக்கமிட்டியின் அறிக் கையைப் பரிசீலனை செய்வார்கள். அதில் குறையிருப்பதாகத் தெரிந்தால், அது பிரதம நீதிபதியின் தீர்ப்பிற்கு விடப்படும்."

நான் இவ்விதம் கூறியதற்குத் தர்பார் வீரவாலா இணங்க வில்லை. "நீங்கள் இன்னும் தீர்ப்பையே சுட்டிக்காட்டி மிரட்டு கிறீர்கள். தாகூர் சாகேபின் கமிட்டிக்கு மேலாக நீங்கள் ஓர் அப்பீல் கோர்ட்டைப் போல் இருக்க விரும்புகிறீர்கள். அப்படி யாயின், நீங்கள் கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை என்ற உங்களுடைய போக்கை விட்டுவிட வேண்டும்" என்றார் அவர். தர்பார் வீரவாலாவின் ஆட்சேபணையில் நியாயம் இருப்பதை நான் கண்டேன். தீர்ப்பை உதறித் தள்ளிவிட எனக்குத் தைரியம் இல்லை என்றும், எனினும் தீர்ப்பு இராதது போலவும், நானும் சர்தாரும் இதிலிருந்து வாபசாகிவிட்டதாகவும் நினைத் துக்கொண்டு ராஜ்கோட் மக்களுடன் ஒரு சமரசத்திற்கு வரும்படி அவரை நான் வேண்டிக்கொள்ளுவதாகவும் அவரிடம் கூறினேன். அவ்விதமே முயற்சிப்பதாக அவர் வாக்களித்தார். அவரும் அவருக்கு உகந்த முறையில் முயற்சி செய்தார். ஆனால், பரந்த உள்ளத்துடன் முயற்சி செய்யவில்லை. எனினும், நான் அவரைக் குறை கூறவில்லை. தீர்ப்பைத் தொத்திக்கொண் டிருக்கும் எனது கோழைத்தனத்தை அவர் அறிந்திருக்கும் போது, அவரிடம் பரந்த உள்ளத்தை நான் எப்படி எதிர்பார்க்க முடியும்?

நம்பிக்கையினால்தான் நம்பிக்கை ஏற்பட முடியும். அந்த நம்பிக்கை எனக்கே இல்லை. எனினும், நான் இழந்த தைரி யத்தை இறுதியில் மறுபடியும் அடைந்தேன். செய்த தவறுக் காக வருந்தி இவ்விதம் நான் ஒப்புக்கொண்டதால், சர்வ ரோக ஔஷதமான அகிம்சையில் எனக்கு உள்ள நம்பிக்கை முன்ன ரைக் காட்டிலும் அதிகப் பிரகாசத்துடன் சுடர்விட்டு எரிகிறது.

எனது சக ஊழியர்களுக்கு நான் எவ்வித அநீதியும் செய்து விடக்கூடாது. அவர்களில் பலர் முற்றிலும் அவநம்பிக்கை

கொண்டிருக்கிறார்கள். அகிம்சையைப் பற்றிய எனது விளக்கம் அவர்களுக்குப் புதுமையாக இருக்கிறது. வருந்துவதற்கு யாதொரு காரணமும் இல்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். தீர்ப்பின் மூலம் கிடைத்த மகத்தான ஒரு சந்தர்ப்பத்தை நான் கைவிடுவதாக அவர்கள் எண்ணுகிறார்கள். 75,000 மக்கள் விஷயத்தில்,—சத்தியவாடிலேயே உள்ள எல்லா மக்கள் விஷயத்திலும் இருக்கலாம்—சொல்லுவதொன்றும், செய்வதொன்றுமாக விளையாட எனக்கு உரிமையில்லை. அவர்களுடைய பீதிக்கு ஆதாரமே இல்லையென்றும், தூய்மைக்கான ஒவ்வொரு நடவடிக்கையும் சத்தியாக்கிரக இயக்கத்தில் சம்பந்தப்பட்ட மக்களின் பலத்தை அதிகமாக்குகிறதென்றும் அவர்களிடம் கூறினேன். என்னை அவர்களுடைய தளபதியாகவும் சத்தியாக்கிரகத்தில் நிபுணனாகவும் அவர்கள் கருதுவார்களாயின், அடிக்கடி மாறுவதாகத் தோன்றும் விந்தையான என் மனப்போக்கை அவர்கள் சகித்துக்கொள்ள வேண்டும்.

இப்போது நான் தாகூர் சாகேபையும் அவரது ஆலோசகரையும் தீர்ப்பின் கொடுமையிலிருந்து விடுதலை செய்துவிட்டதால், ராஜ்கோட் மக்களின் கோரிக்கைகளை நிறைவேற்றி, அவர்களுடைய அவநம்பிக்கையை அகற்றும்படியும், அவர்களுக்கு மனச்சமாதானம் ஏற்படுமாறு செய்யும்படியும் நான் அவ்விருவரையும் வேண்டிக்கொள்ளுகிறேன்.

## 8

# ராஜ்கோட் ஊழியர்களின் கடமை

[குவையரின் தீர்ப்பைக் காந்திஜி துறந்த இரண்டு நாட்களுக்குப் பிறகு தாகூர் சாகேபின் விசேஷ அழைப்பிற்கிணங்க அவர் தர்பார் வைபவத்திற்குச் சென்றார். அப்போது தாகூர் சாகேப் தாம் அது வரையில் விடுத்த எல்லா அறிக்கைகளையும் ரத்து செய்ததுடன், விதித்த அபராதங்களையும் பறி முதல் செய்த சொத்துக்களையும் திருப்பிக் கொடுத்து விடும்படி உத்தரவு பிறப்பிப்பதாயும் உறுதி கூறினர். மற்றும் தாகூர் சாகேப், தமது பிரஜைகளுக்குச் சாதாரண சட்டத்தின் கீழ் உள்ள எல்லா உரிமைகளையும் அளித்ததுடன், அரசியல் சீர்திருத்தங்கள் அடங்கிய அறிக்கையைத் தயாரிப்பதற்காக ஒரு கமிட்டி நியமித்திருப்பதாயும் அறிவித்தார். குவையரின் தீர்ப்பைத் தாம் துறந்ததால், கிடைத்த சிறந்த பலன்களை விளக்கிக் காந்திஜி கூறிய விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:]

"இப்போது ராஜ்கோட் மக்களுக்குத் தாகூர் சாகேபுடன் சமரசம் செய்து கொள்ளுவதற்கு வழி ஏற்பட்டிருக்கிறது. சமரசத்தைப் பற்றி நீங்கள் நினைக்க முடியாவிடில், போராட்டத்தைத் தொடங்கவும் உங்களுக்கு வழி இருக்கிறது. உண்மையில் நான் தீர்ப்பை உதறித் தள்ளியிராவிடில், போராட்டம் நீண்ட காலத்திற்குத் தாமதப்படுத்தப்பட்டிருக்கும். சத்தியாக்கிரக நோக்குடன் பார்த்தால், என் தீர்மானத்தின் பலனை நன்மையைத் தவிர வேறெதுவும் ஏற்படுவதிற்கில்லை. ஒரு தளபதி தமது பலவீனத்தை உணர்ந்து கொள்ளுவதாலும், தாம் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளுவதாலும் தீங்கு எதுவும் ஏற்பட்டுவிடாது. உண்மையில் பாவம், அறியாமை, பலவீனம் எல்லாம் ஒன்றுதான். வைஸ்ராயின் தலையீட்டை நான் கோரியதாலும், தீர்ப்பை இறுகப் பற்றிக் கொண்டிருந்ததாலும் அந்த மூன்று குற்றங்களுக்கும் நான் ஆளாகியிருக்கிறேன். நான் செய்தது போல் ஒரு தளபதி தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுவாராயின், அவரது படைகளுக்குப் பலவீனம் ஏற்படாது; அதற்கு மாறாக அவற்றிற்கு மகத்தான பலமே ஏற்படும்."

"மேலே செய்வதென்ன ?" என்ற கேள்விக்குப் பதிலாகக் காந்திஜி ராஜ்கோட் ஊழியர்களுக்குத் தமது திட்டத்தை விளக்கினார். அதன் விவரம் வருமாறு :

ராஜ்கோட் ஊழியர்கள் எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் அகிம்சையைப் பயிற்சி செய்து கொள்ள வேண்டும். நான்கு அம்சங்கள் அடங்கிய ஆக்க வேலைத் திட்டத்தில் அவர்கள் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும்; 'அதிக பட்ச வேலை, குறைந்த பட்சப் பேச்சு' என்பது அவர்களுடைய கொள்கையாக இருக்க வேண்டும். இத்திட்டத்தின் நடுநாயகமாக இருப்பது ராட்டினம்தான். அரைகுறை மனத்துடன் செய்யாமல் ராட்டினத்தின் நுணுக்கங்களைச் சந்தேகத்திற்கு இடமின்றி நன்கு அறிந்துகொண்டு நூற்க வேண்டும். பஞ்சு வகைகளையும் நன்கு ஆராய்ச்சி செய்ய வேண்டும். அடுத்தபடியாக, மக்களுக்கு எழுதவும் படிக்கவும் கற்பிக்கும் திட்டம் இருக்கிறது. அதில் நீங்கள் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும்; வேறு எதைப் பற்றியும் பேசக் கூடாது. அவ்வேலை, அட்டவணைப்படி ஒழுங்காக நடைபெற வேண்டும். அரசியல்பற்றியோ, அகிம்சை பற்றியோகூட நீங்கள் பேசக் கூடாது. எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளுவதால் ஏற்படக் கூடிய பலனைப் பற்றியே அவர்களுடன் பேச வேண்டும். மது விலக்கு, சூதாட்டத் தடை முதலிய அலுவல்களும் இருக்கின்றன. எளிய சுகாதார ஆரோக்கிய விதிகளைப் பிரசாரம் செய்வதன் மூலம், மக்களுக்கு வைத்திய உதவி கிடைக்கும்படியும் செய்ய வேண்டும். நோய் வரா

மல் தடுப்பதற்கான எளிய முறைகளையும் பிரசாரம் செய்ய வேண்டும்.

தூய்மையான தொண்டின் மூலம் நீங்கள் தொடர்பு வைத்துக் கொள்ளாத ஒரு வீடுகூட ராஜ்கோட்டில் இருக்கக்கூடாது. முஸ்லிம்கள், ஹரிஜனங்கள் முதலிய எல்லாப் பிரிவினருடனும் நீங்கள் நட்பும் நெருங்கிய தொடர்பும் கொள்ள வேண்டும்.

இத்தகைய ஆக்க வேலைகள், சாத்விகப் பொறுப்பாட்சிக்குத் தேவையான குணங்களை வளர்ப்பதற்கு உதவியாக இருக்கும் என்பது நிச்சயம். நான் தென்னாப்பிரிக்காவில் அவ்விதம்தான் எனது வேலையை ஆரம்பித்தேன். நான் மக்களுக்குத் தொண்டு செய்யத் தொடங்கினேன். அதன் மூலம் நான் அவர்களைச் சாத்விக சட்ட மறுப்பிற்குப் பயிற்சி செய்து வருகிறேன் என்பதை நான் அறியவில்லை. நானே அதில் பயிற்சி பெற்று வருகிறேன் என்பதையும் நான் அறியவில்லை. ஆனால், இறுதியில் என்ன நேர்ந்தது என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும்.

இந்த ஆக்கத் திட்டத்திற்கு முடிவே இல்லை. எனினும், அதைக் குறித்து நீங்கள் ஏன் சோர்வு அடைய வேண்டும்? இங்கிலாந்தில் நடந்த நூறு வருட யுத்தத்தை நீங்கள் அறிவீர்களா ? அவர்கள் நூறு வருடங்கள் போராடினார்கள் எனில், நாம் ஆயிரம் வருடங்கள் போராடுவதற்குத் தயாராக இருக்க வேண்டும். ஏனெனில், நமது தேசம் பிரம்மாண்டமான ஒரு தேசம் அல்லவா? விடுதலைப் போராட்டத்தில் நமது பங்கைச் செய்தோம் என்பதே நாம் அடையும் வெகுமதியாகும்.

## 9

# ஏமாற்றத்திற்கு இடமேயில்லை

சத்தியாக்கிரகத்தில் ஏமாற்றத்திற்கோ அல்லது மனக் கொதிப்பிற்கோ இடமேயில்லை. லட்சியத்தை அடையும் வரையில் போராட்டம் ஏதாவது ஓர் உருவத்தில் எப்போதும் நடந்து கொண்டேயிருக்கும். அது சாத்விக சட்ட மறுப்பாயினும் அல்லது போராட்டத்தின் வேறு அம்சமாயினும் ஒரு சத்தியாக்கிரகி அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. சட்ட மறுப்பு நடந்து கொண்டிருக்கும் போது, மத்தியில் அதை நிறுத்தி விட்டு வேறு ஏதாவது செய்யும்படி கட்டளையிடப்பட்டாலும் அவர் கவலைப்படுவதில்லை. அதெல்லாம் நன்மைக்காகத்தான் என்ற நம்பிக்கை அவருக்கு இருக்க வேண்டும். சட்ட

மறுப்பை நிறுத்தியபோதெல்லாம் ஒவ்வொரு தடவையும் மக்கள் போராட்டத்தை நடத்தவும், பலாத்கார சக்திகளைக் கட்டுப்படுத்தவும் அதிகத் தகுதி பெற்றனர் என்பதே எனது அனுபவமாகும். எனவே, சட்ட மறுப்பை நிறுத்தும்படி நான் கூறும்போது, சத்தியாக்கிரகிகள் இயக்கத்தைக் கைவிட்டு விடுவார்கள் என்றோ, அவர்களுக்கு அவநம்பிக்கை ஏற்பட்டுவிடும் என்றோ என் மனத்தில் பீதி ஏற்பட நான் இடம் கொடுப்பதில்லை. அவ்விதம் நேர்ந்தாலும் நான் அதற்காக வருந்தமாட்டேன். ஏனெனில், இயக்கத்தை விட்டுச் செல்லுவது, சத்தியாக்கிரகம் என்றால் என்ன என்பதை அவர்கள் அறியார் என்பதற்கு ஓர் அடையாளமாகும். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை அறியாதவர்கள் வெளியேறி விடுவது இயக்கத்திற்கு மிகவும் நன்மையேயாகும்.

—'ஹரிஜன்' —1—4—1939

# 10

# சத்தியாக்கிரகம் பலம் குன்றியதேன்?

ராஜ்கோட் சத்தியாக்கிரகத்தில், கத்தியவாடைச் சேர்ந்த எல்லா மக்களையும் கலந்துகொள்ள அனுமதித்தது முதல் தவறாகுமென நினைக்கிறேன். இந்த முறையானது, போராட்டத்தில் ஓரளவு பலவீனத்தை உண்டாக்கிவிட்டது. அதன் காரணமாக, நாம் அதிகத் தொகையில் நம்பிக்கை வைத்துவிட்டோம். ஆனால், ஒரு சத்தியாக்கிரகி, உதவியற்றவர்களுக்கு உதவியளிக்கும் கடவுள் ஒருவரையே முற்றிலும் நம்புகிறார். 'யாருடைய பெயரில் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்படுகிறதோ, அவர் சத்தியாக்கிரகம் வெற்றி பெற உதவி புரிவார்' என்று ஒரு சத்தியாக்கிரகி எப்போதும் தனக்குத் தானே கூறிக்கொள்ளுகிறார். ராஜ்கோட் மக்களின் சிந்தனை இவ்விதமெல்லாம் இருந்திருக்குமாயின், பெரிய ஊர்வலங்களையும் பாமர மக்களின் ஆர்ப்பாட்டங்களையும் நடத்தும் ஆசையை அவர்கள் கட்டுப்படுத்திக்கொண்டிருப்பார்கள். ராஜ்கோட் அனுபவிக்க நேர்ந்த அக்கிரமங்களும் ஒருவேளை தவிர்க்கப்பட்டிருக்கலாம். ஓர் உண்மையான சத்தியாக்கிரகியின் நடவடிக்கை, எதிராளிக்குத் தொந்தரவு கொடுப்பதாக இராது. அவரது நடவடிக்கை ஒருபோதும், 'பகைவரி'ன் உள்ளத்தில் திகிலை உண்டாக்காது. சத்தியாக்கிரகிகள், விதிகளைக் கண்டிப்பாக அமல் நடத்தியதன் பலனை ராஜ்கோட் சத்தியாக்கிரகத்தை ஒரு சில நூறு பேர்களோ அல்லது பலரோ மாத்திரம் மேற்கொண்டதாகவும், அவர்கள் கடைசி மூச்சு உள்ள வரையிலும் நேர்மையான வழியில் சத்தியாக்கிரகத்தை நிறைவேற்றுவதாகவும் வைத்துக்கொள்ளுவோம். அப்படியாயின்,

அவர்களின் நடவடிக்கை வீரத்தன்மை வாய்ந்த சிறந்த உதாரண மாகத் திகழ்ந்திருக்கும்.

—'ஹரிஜன்' - 20—5—1939

## 11

# கோழைத்தனத்திற்குக் காரணமாகியது

குவையரின் தீர்ப்பு என்னைக் கோழையாக்கியிருக்கிறது. அதை நான் வைத்துக்கொண்டிருந்தால், அது உங்களையும் (ராஜ் கோட் மக்களையும்) கோழைகளாகச் செய்திருக்கும். ஒரு சத்தி யாக்கிரகி தன்னுடைய பலத்திற்கு வெளிச் சாதனங்களை நம்புவ தில்லை. அவரது பலம் உள்ளேயிருந்து, அவரது தெய்வ நம்பிக் கையிலிருந்து வருகிறது. அவர் தம்முடைய ஸ்தூல ஆயுதங்களை யெல்லாம் உதறியெறிந்துவிட்டால், கடவுளே அவருக்குக் கவச மாகிவிடுகிறார். அவர் தமது சட்டைப் பைக்குள் ஒரு துப்பாக் கியை மறைத்துவைத்துக்கொண்டால், அவரது உள்ளத்திலுள்ள பலம் போய்விடுகிறது; தம்மை யாரும் தாக்க முடியாதென்ற உணர்ச்சியையும் அவர் இழந்துவிடுகிறார். ராஜ்கோட் தீர்ப்பு, என் போன்ற ஓர் அகிம்சைத் தொண்டனின் சட்டைப் பையில் உள்ள ஒரு துப்பாக்கியைப் போல் இருந்தது. அது எனக்கும் என் ஆண்டவனுக்கும் இடையே ஒரு சுவர் போல் இருந்தது. அது என்னை வெட்கமடையவும் ஒரு கோழையாகவும் செய்துவிட் டது. ஒரு கிறிஸ்தவர் தமது பாவ மூட்டையைத் தூக்கியெறிவது போல், நான் அந்தத் தீர்ப்பைத் தூக்கியெறிந்துள்ளேன். அதன் பலனாக நான் மீண்டும் சுதந்திரனாகவும், எதிராளியால் எதிர்க்க முடியாதவனாகவும், எனது சிருஷ்டிகர்த்தாவுடன் ஒன்றித்தவ னாகவும் உணர்கிறேன்.

— 'ஹரிஜன்' - 3—6—1939

## 12

# சத்தியாக்கிரகத்தில் சோர்வுக்கு இடமில்லை

[காந்திஜி, திருவாங்கூரிலிருந்து வந்த நண்பர்களுடன் பேசிக்கொண்டிருந்தார். காலவரையறையின்றிச் சாத் விக சட்ட மறுப்பை நிறுத்திவைப்பதால், மனச்சோர்வு ஏற்பட்டுவிடுமென்றும், அதிலிருந்து மக்கள் மீள்வது கஷ்ட

மாக இருக்குமென்றும் திருவாங்கூர் நண்பர்கள் அஞ்சினர். அதை, மனக்கலக்கத்தைக் கொடுக்கும் ஓர் அறிகுறியென்று காந்திஜி கருதினர்; அதுவரையில் மக்கள் கையாண்டு வந்தது உண்மையான சத்தியாக்கிரகம் அல்ல என்பதை அது காட்டுவதாகவும் குறிப்பிட்டார். அவ் விஷயமாகக் காந்திஜி கூறியதாவது :]

ஒரு சத்தியாக்கிரகப் போராட்டத்தில், அதை நிறுத்தி வைப்பதால் மனச் சோர்வும் பலவீனமும் எக்காலத்திலும் ஏற்படக்கூடாது. சத்தியாக்கிரகத்திற்கு மக்கள் தயாராக இருக்கலாம். அவர்கள் அகிம்சையைக் கைக்கொள்ளுவார்கள் என்பதும் நிச்சயமாக இருக்கலாம். அப்படியிருந்தும்கூட, தளபதியின் தவருன கணக்கினுல் சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டாலும், அது இயக்கத்தின் எதிர்காலத்தை அபாயத்திற்கு உள்ளாக்கிவிட முடியாது. துன்பத்திற்கு உள்ளாகத் தயாராக இருக்க வேண்டும்; நிரபராதிகளும் தூய்மையானவர்களும் எவ்வளவு துன்பத்திற்கு உள்ளாகிருர்களோ, அவ்வளவுக்கு அதன் சக்தியும் அதனுல் ஏற்படும் பலனும் அதிகமாக இருக்கும் என்ற நம்பிக்கையும் இருக்க வேண்டும். சத்தியாக்கிரகத்தின் பொருள் இதுதான். எனவே, சத்தியாக்கிரகத்தில் திக்கற்ற நிலே ஏற்படுவதற்கு இடமே இல்லே. சட்ட மறுப்பை நிறுத்திய தன் பலனை அடக்குமுறை அதிகமாகி விடுமாயின், சத்தியாக்கிரகத்தில் நாம் அடைய விரும்பும் உயர்ந்த நிலே அதுவாகவே இருக்கும்.

இன்று உங்களுடைய எதிராளி உங்கள் தொகையைக் கண்டு அஞ்சுகிருர். அவரது மனத்தில் திகில் நிறைந்திருக்கிறது. இந்நிலேயில் அவருக்கு மனமாற்றம் ஏற்படுமென நீங்கள் எதிர்பார்க்க முடியாது. உங்களுடைய நடவடிக்கையில், அடிக்கு அடி கொடுக்கும் எதிர்த் தாக்குதல் உணர்ச்சியை அவர் காண்கிருர். அதனுல் அவருக்கு அதிக எரிச்சல் உண்டாகிறது. எனவே, அதற்குக் காரணமாக சத்தியாக்கிரகம் ஒருவித இம்சையாகிவிடுகிறது.

உங்களுடைய போராட்டம் இனிமேல் ஒரு சிலர் வரையில் மாத்திரமே கட்டுப்படுத்தப்பட்டிருக்கும். எனினும் அந்த ஒரு சிலரின் சத்தியாக்கிரகத்தினுல் பலன் உண்டாவது நிச்சயம். அந்தரங்க சுத்தியின்றி நாம் அகிம்சை நாடகத்தை நடத்துவோமாயின், திருவாங்கூர் அரசாங்கம் மனிதனிடத்தில் உள்ள மிருகத் தனத்தை உருவாக்குவதற்கு ஒரு சந்தர்ப்பம் அளித்தவர்களாவோம். நாம் அத்தகைய சந்தர்ப்பத்தை அளிக்கக்கூடாது.

[அடுத்தபடியாக, ஜெயப்பூர் சமஸ்தான ஊழியர்கள் காந்திஜியைக் கண்டு பேசுவதற்கு வந்தார்கள். அவர்க

ளிடம் காந்திஜி, சத்தியாக்கிரகக் கொள்கையை மேலும் விளக்கிக் கூறினர்:]

அதிகாரிகள் தடியடியில் இறங்கும்படி அவர்களுக்குக் கோபமூட்டுவதோ அல்லது வீண் வீம்புக்காக தடியடிகளை உங்கள் உடலில் தாங்குவதோ சத்தியாக்கிரகம் அல்ல. சத்தியாக்கிரகி தமது கடமையைச் செய்யும்போது அதிகாரிகள் தடியடியில் ஈடுபட்டால், அந்த அடிகளைத் தாங்கிக்கொள்ளத் தயாராக இருப்பதே உண்மையான சத்தியாக்கிரகமாகும். இன்று நாட்டின் சூழ்நிலை பலாத்காரமயமாக இருந்து வருகிறது. இதற்குத் திரிபுரியே* உதாரணமாகும். பலாத்காரம் என்று நான் கூறும்போது ஊழல், பொய், நயவஞ்சகம், மோசடி முதலியவற்றையும் சேர்த்தே குறிப்பிடுகிறேன். நமது சத்தியாக்கிரகம் இந்தச் சூழ்நிலையிலிருந்து தப்பிப் பிழைக்க வேண்டுமாயின், அகிம்சைவாதிகளான நாம் நம் விஷயத்தில் இன்னும் அதிகக் கண்டிப்பாக இருக்கவேண்டும். மிக மிகத் தூய்மையுள்ளவர்களும் மிகவும் நிரபராதிகளும் மாத்திரமே சிறைக்குச் செல்ல வேண்டும். அவர்கள் தங்கள் ஆயுட்காலம் முழுவதும் சிறையிலே அடைபட்டுக் கிடப்பதாக இருந்தால்கூட கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுடைய தியாகத்தின் இனிய நறுமணம் சிறை முழுவதும் நிறைந்து நிற்கும். அதன் செல்வாக்கு சிறைக்கு வெளியிலும் வியாபித்து, எவரும் அறியாமலே சூழ்நிலையை அடியோடு மாற்றிவிடும். தங்களுக்குச் சிறையிலிருந்து விடுதலை கிடைக்க வேண்டுமென அவர்கள் ஒருபோதும் ஏங்கமாட்டார்கள். தங்களுடைய தியாகம் 'வீணுகி' வருகிறதென்ற சந்தேகமும் அவர்களுக்கு ஏற்படாது. வெறும் ஸ்தூல நடவடிக்கையைக் காட்டிலும், பரிசுத்த உள்ளத்திலிருந்து எழும் புனித தீர்மானம் அதிக சக்தி வாய்ந்தது என்பதை அவர்கள் உணர்ந்துகொள்ளுவார்கள். சிறையில் அவர்கள் பெறும் கட்டுதிட்டம், வெளியில் உள்ள மக்களின் சாத்விக ஸ்தாபனத்திற்கு உதவியாக இருப்பதுடன், அவர்களிடையே அஞ்சாமையையும் வளர்க்கும்.

சிறையில் உள்ளவர்களின் கடமையைப் பற்றி இவ்வளவு தூரம் சொல்லியாகிவிட்டது. ஆனல், வெளியில் உள்ளவர்கள் செய்யவேண்டியது என்ன? அவர்கள் ஆக்க வேலையில் ஈடுபட வேண்டும். ஆக்க வேலைகள், தீவிர அகிம்சைக் கொள்கையின்

---

*திரிபுரி காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் ஸ்ரீஜத் சுபாஷ்சந்திர போஸ், காரியக்கமிட்டி அங்கத்தினர்களின் நியமனம் சம்பந்தமாக எழுந்த தகராறை யொட்டி அக்கிராசனர் பதவியை ராஜிநாமா செய்தார். தமது ராஜிநாமாவை அறிவித்து ஸ்ரீ ஜத் போஸ் பேசிய பின், சபையில் பெரும் அமளி ஏற்பட்டது. பாபு ராஜேந்திரப் பிரசாத், ஜவாஹர்லால் நேரு உன்பட பல காங்கிரஸ் தலைவர்களும் கோபம் கொண்ட சிலரால் அவமதிக்கப்பட்டார்கள். இறுதியில் குழப்பம் அதிகமாகிக் கூட்டம் கலைந்தது. இந்தச் சம்பவத்தையே காந்திஜி உதாரணமாகக் காட்டியுள்ளார்:

உருவமேயாகும். அவை அவர்களுடைய மனத்திற்கு உகந்ததாக இல்லையாயின், அவர்களுக்கு அகிம்சையில் நம்பிக்கை இல்லை என்றே ஏற்படும்.

மற்றொரு விஷயம் உள்ளத்தைப் பொறுத்தது. அவர்கள் கடவுளிடம் ஜீவ நம்பிக்கையை வளர்த்துக்கொள்ள வேண்டும், அதாவது எள்ளளவும் வெளி உதவியை நாடாமல் முற்றிலும் கடவுளையே நம்பும் ஒரு நிலை ஏற்பட வேண்டும். அத்தகைய நம்பிக்கை கொண்ட ஒரே ஒரு சத்தியாக்கிரகிகூட தம்முடைய உதாரணத்தினால் நாட்டு மக்கள் யாவருக்கும் உத்வேகம் ஏற்படும்படி செய்வார். அவர், எதிராளிக்கும்கூட, மனமாற்றம் உண்டாகும்படி செய்வார். எதிராளி பயம் நீங்கி, சத்தியாக்கிரகியின் களங்கமற்ற நம்பிக்கையைப் பாராட்டி, அதற்கு மரியாதை காட்டுவார்.

— 'ஹரிஜன்' - 3—6—1939

# 13

# களங்கமற்ற அகிம்சை கைக்கொள்ளப்படவில்லை

என் வாழ்க்கையில் தீவிரமாகச் சம்பந்தப்பட்ட ராஜ்கோட் அத்தியாயம், 1920-இலிருந்து நடைமுறையில் இருந்து வரும் அகிம்சை அற்புதமானதெனினும் களங்கமற்றதல்ல என்பதை வெளிப்படுத்தியிருக்கிறது. அதனால் நாம் அடைந்துள்ள பலன்கள் பிரமாதமானவை. என்றாலும், நமது அகிம்சை குறையின்றி நிறைவானதாக இருந்திருக்குமாயின், இன்னும் அதிக மகத்தான பலன்கள் கிடைத்திருக்கும். எண்ணத்திலும் பேச்சிலும் அகிம்சையுடன் கூடிய பலாத்காரமற்ற நடவடிக்கையை நாம் கைக்கொண்டிருந்தால், அது எதிராளியின் மனத்தில் ஒரு போதும் பலாத்காரமான போக்கை உண்டாக்கியிராது. ஆனால், சமஸ்தானங்களில் நடைபெற்ற இயக்கம் சமஸ்தானாதிபதிகளிடையேயும் அவர்களுடைய ஆலோசகர்களிடையேயும் பலாத்காரமான போக்கை உண்டாக்கியிருப்பதை நான் காண்கிறேன். அவர்களுக்குக் காங்கிரஸ் மீது மிகுந்த அவநம்பிக்கை உண்டாகியிருக்கிறது. அவர்கள் பிரச்னையில் காங்கிரஸ் தலையிடுவதாக அவர்கள் கூறுகிறார்கள். அதை அவர்கள் விரும்பவில்லை. சிலருக்குக் காங்கிரஸ் என்ற பெயரைக் கேட்டாலே வேப்பங்காயாக இருக்கிறது. அத்தகைய நிலைமை இருக்கக் கூடாது.

நாம் மேற்கொண்ட அகிம்சை களங்கமற்றதாக இல்லை என்பதை நான் கண்டுபிடித்ததன் பலனுக, என்னிடமும் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. அதாவது எதிர்கால சத்தியாக்கிரகிகள் விஷயத்தில் நான் மிகவும் கண்டிப்பான விதிகளை வகுத்துள்ளேன். எனது கண்டிப்பின் காரணமாகச் சத்தியாக்கிரகிகளின் தொகை மிகவும் குறைந்துவிடுமாயின், அதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. சத்தியாக்கிரகம் சகல இடங்களிலும் நடைமுறையில் வரக்கூடிய சர்வ ஜனக் கொள்கையாக இருக்குமாயின், வெகு சிலரின் மூலம் பலன் தரத்தக்க நடவடிக்கை முறையை நாம் கண்டுபிடித்தாக வேண்டும். புதிய ஒளி என் கண்களுக்கு மங்கலாகவே தெரிகிறது. இவ்விதம் நான் கூறுவதன் பொருள் என்னவெனில், வெகு சிலர் நிச்சயமாகப் பலனளிக்கும் விதத்தில் எவ்விதம் நடந்து கொள்ளுவதென்பதை நான் இன்னும் கண்டுபிடிக்க வில்லை என்பதேயாகும். என் வாழ்க்கை நெடுக நிகழ்ந்திருப் பதைப் போல், முதல் படியில் காலடி வைத்த பிறகுதான், இரண்டாவது படியை நான் அறிந்துகொள்ளுவது சாத்தியமாக இருக்கலாம். எனினும், நடவடிக்கையில் இறங்க வேண்டிய நேரம் வரும்போது, திட்டம் தயாராகிவிடும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

“நடவடிக்கை நேரம் எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கிறது. நீங்கள் தயாராக இல்லை” என்று ஆட்சேபவாதி கூறலாம். ஆனல், அந்தக் குற்றச்சாட்டை நான் ஒப்புக்கொள்ள முடியாது. நான் அறிந்த வரையில், நிலைமை அதற்கு மாருகும். சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க எவ்விதக் காரணமும் இல்லை என்று நான் சில வருடங்களாகவே கூறி வருகிறேன்.

அதற்குத் தெளிவான காரணங்கள் இருக்கின்றன.

தேசம் முழுவதும் பரந்த முறையில் சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவதற்கான பலன் தரத்தக்க சாதனமாக இப்போது காங்கிரஸ் இல்லை. அது நிர்வகிக்க முடியாதவாறு பெரிதாகி விட்டது; காங்கிரஸ்வாதிகளிடையே ஊழலும் ஒழுங்கின்மையும் நிலவுகின்றன. போட்டிக் கோஷ்டிகளும் உருவாகியுள்ளன. அந்தக் கோஷ்டிகளுக்குப் பெரும்பான்மையான ஸ்தானங்கள் கிடைத்துவிட்டால், அவை காங்கிரஸ் திட்டத்தையே அடியோடு மாற்றிவிடும். இதுவரையில் பெரும்பான்மையான ஸ்தானங்கள் பெற அவை தவறிவிட்டன என்பது எனக்கு ஆறுதல் அளித்து விடவில்லை. பெரும்பான்மையோருக்குத் தங்கள் சொந்தத் திட்டத்தில் ஜீவநம்பிக்கை இல்லை. எப்படியாயினும், பெரும்பான்மை யோர் மூலம் சத்தியாக்கிரகம் செய்வது என்பது சாத்திய மில்லாத ஒரு யோசனையாகும். தேசம் முழுவதும் சத்தியாக்

கிரகம் நடைபெறுவதற்குக் காங்கிரசின் முழு ஆதரவும் அவசியம்.

அடுத்தபடியாக, நாளுக்கு நாள் வளர்ந்து வரும் வகுப்புப் பிணக்கைச் சமாளித்தாக வேண்டும். இந்தியாவில் உள்ள பல சமூகங்களுக்குள்ளும் கௌரவமான சமரசம் ஏற்பட்டாலன்றி, இறுதியான சத்தியாக்கிரகத்தை நினைப்பதற்கில்லை.

கடைசியாக, மாகாண சுயாட்சி இருக்கிறது. அவ்விஷய மாக காங்கிரஸ் மேற்கொண்ட கடமையை நிறைவேற்றுவதில் நாம் நீதி வழங்கவில்லை என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். மொத்தத்தில் கவர்னர்கள் அவர்களுடைய கடமையைச் செய்துள்ளனர் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அவர்கள் மந்திரிகளின் நடவடிக்கைகளில் தலையிடவே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். தலையீடு, சிற்சில சமயங்களில் எரிச்சலை உண்டாக்கும் தலையீடு, காங்கிரஸ் வாதிகளிடமிருந்தும் காங்கிரஸ் ஸ்தாபனங்களிடமிருந்தும்தான் வந்திருக்கிறது. காங்கிரஸ்வாதிகள் பதவியிலிருந்தபோது, பொது மக்களின் பலாத்கார நடவடிக்கைகள் ஏற்பட்டிருக்கக் கூடாது. காங்கிரஸ்வாதிகளின் கோரிக்கைகளையும் எதிர்ப் பையும் சமாளிக்கவே, மந்திரிகளின் சக்தியில் பெரும் பகுதி செலவழிந்திருக்கிறது. மந்திரிகள் பொது மக்களின் செல் வாக்கை இழந்துவிட்டால், அவர்களைப் பதவியிலிருந்து விலக்க முடியும், விலக்கவும் வேண்டும். ஆனால், அதற்குப் பதிலாக, பல காங்கிரஸ்வாதிகளின் தீவிர ஒத்துழைப்பு இல்லாமலேயே, அவர்கள் தங்கள் அலுவல்களைச் செய்து வர அனுமதிக்கப்பட் டிருக்கிறார்கள்.

மற்ற எல்லா முறைகளையும் நடைமுறையில் கைக்கொண்டு பார்த்த பிறகுதான், இறுதியான தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அவசரப்பட்டு தீவிர நடவடிக்கையைக் கைக்கொள்ளுவது, சத்தியாக்கிரக விதிக்கு முரணாகும்.

நான் குறிப்பிட்டுள்ள எல்லா நிபந்தனைகளும் வற்புறுத் தப்பட்டால், சாத்விக சட்ட மறுப்பு சாத்தியமில்லாமல் போய் விடும் என்று எனக்குப் பதில் கூறலாம். அவ்விதம் கூறுவதில் சிறிது நியாயமும் இருக்கும். ஆனால், அவ்விதம் கூறுவது செல்லத்தக்க ஆட்சேபணையா? பொதுவாக, ஒவ்வொரு முறை யையும் கைக்கொள்ள நிபந்தனைகள் உண்டு. அந்தப் பொது விதிக்குச் சத்தியாக்கிரகம் விலக்கு அல்ல. ஒரு மோசமான நிலைமைக்கு முற்றுப் புள்ளி வைப்பதற்கு ஏதாவது ஒருவிதமான தீவிர சத்தியாக்கிரக முறை,—சாத்விக சட்ட மறுப்பு என்ற அவசியமில்லை,—இருந்துதான் தீரவேண்டும் என்று என் உள் உணர்வு கூறுகிறது. இந்தியாவில் இப்போது ஒரு மோசமான

நிலைமையே ஏற்பட்டிருக்கிறது. அளவிற்கு உட்பட்ட ஒரு காலத்திற்குள், இந்தியாவில் ஒன்று பலன்தரத்தக்க சாத்விக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்; அல்லது பலாத்கார மும் அராஜகமும் ஏற்பட வேண்டும். இந்த நிலைமையை நான் மற்றொரு சந்தர்ப்பத்தில் பரிசீலனை செய்ய வேண்டும்.

— 'ஹரிஜன்' - 24—6—1939

# 14

# பலாத்காரமயமான சூழ்நிலை

ராஜ்கோட் பிரச்னையின் நுணுக்கங்களைப் பற்றிய வாதத்தைச் சென்ற வாரத்திற்கு முன் எங்கே நிறுத்தினேனோ, அங்கிருந்து மீண்டும் நான் தொடங்க வேண்டும்.

ஒரே ஒரு நபர் அகிம்சையைக் கொள்கையளவில் போதிய அளவு அபிவிருத்தி செய்துகொண்டால்கூட, அவரது அதிகார எல்லைக்குள் பலாத்காரம் எவ்வளவு பரவலாக அல்லது கடுமையாக இருப்பினும், அதை எதிர்த்துச் சமாளிப்பதற்கான முறையை அவர் கண்டுகொள்ள முடியும். எனது குறைகளை நான் அடிக்கடி ஒப்புக்கொண்டுள்ளேன். முற்றிலும் அப்பழுக்கற்ற அகிம்சைக்கு நான் உதாரணம் அல்ல. எனது அகிம்சை இன்னும் மலர்ச்சி பெற்று வருகிறது. என்னிடத்தில் இதுவரை வளர்ச்சி பெற்றுள்ள அகிம்சை, இதுவரையில் எழுந்த நிலைமைகளைச் சமாளிப்பதற்குப் போதுமானதாக இருந்து வந்திருக்கிறது. ஆனால், இன்று சூழ்ந்துகொண்டுள்ள பலாத்காரத்திற்கு எதிரில் நான் திக்கற்றவனாக இருக்கிறேன். ராஜ்கோட் போராட்டத்தைப் பற்றி நான் விடுத்த அறிக்கையை அலசி ஆராய்ந்து 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையில் ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. ஆங்கிலேயர்கள் நமது இயக்கத்தை ஒரு போதும் உண்மையான சத்தியாக்கிரகமாகக் கருதவில்லை என்று அப்பத்திரிகையின் ஆசிரியர் கூறியிருந்தார். அந்த இயக்கம் ஒரு பலாத்காரப் புரட்சி என்பதை அவர்கள் அறிவர்; எனினும், அந்தக் கூத்து தொடர்ந்து நடைபெற்று வருவதை அவர்கள் தடுக்க விரும்பவில்லை என்றும் அப்பத்திரிகாசிரியர் குறிப்பிட்டிருந்தார். 'கலகக்காரர்'களான நம்மிடம் ஆயுதங்கள் இராவிட்டாலும் அது பலாத்காரப் புரட்சியே என்று அவர் கருதினர். ஞாபகத்தில் இருந்த வரையில் அக்கட்டுரையின் சாரத்தையே மேலே குறிப்பிட்டிருக்கிறேன். அந்தக் கட்டுரையை நான் வாசித்தபோது, அந்த வாதத்தின் பலத்தை நான் உணர்ந்தேன்.

இந்த இயக்கம் முற்றிலும் பலாத்காரமற்ற எதிர்ப்பாகவே இருக்கவேண்டுமென நான் உத்தேசித்திருந்தேன். ஆனல், அந்த நாட்களில் நிகழ்ந்த சம்பவங்களை நான் ஞாபகப்படுத்திக் கொண்டால், எதிர்ப்பாளர்களிடையே பலாத்காரம் நிலவியது என்பதில் சந்தேகமில்லை. அகிம்சை சங்கீதத்தில் நான் குற்றம் குறையின்றி நன்கு பயிற்சி பெற்றிருந்தால், அதிலிருந்து அணுவளவு பிறழ்வதையும் அறிந்து கொண்டிருப்பேன். அதில் எத்தகைய முரணை ஸ்வரத்தையும் எதிர்த்து எழுந்திருப்பேன்.

பலருடைய உள்ளத்திலும் பலாத்காரம் மறைந்துகொண்டிருந்தது. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஐக்கிய நடவடிக்கையில் ஈடுபட்டது, என் கண்களை மறைத்துவிட்டதென்று தோன்றுகிறது. ஆங்கிலேயர்கள் பயிற்சி பெற்ற ராஜதந்திரிகளும் நிர்வாகிகளும் ஆவர். குறைந்த பட்ச எதிர்ப்பு என்ற முறையில் அவர்கள் பழக்கப்பட்டவர்கள். எனவே, ஒரு பெரிய ஸ்தாபனத்தைப் பரவலான பயங்கர முறைகளைக்கொண்டு நசுக்குவதை விட, அதனுடன் சமரசமாகப் போவதே அதிக லாபகரமானது என்பதை அவர்கள் கண்டபொழுது, எவ்வளவுக்கு அவசியமென அவர்களுக்குத் தோன்றியதோ அவ்வளவுக்கு அவர்கள் விட்டுக் கொடுத்தார்கள். ஆயினும், நமது எதிர்ப்பு பெரிதும் சாத்விக எதிர்ப்பே என்பதும், எதிர்கால சரித்திராசிரியர்கள் அதை அவ்விதமே ஒத்துக்கொள்ளுவார்கள் என்பதும் எனது உறுதியான அபிப்பிராயம்.

எனினும், சத்தியத்தையும் அகிம்சையையும் நாடுபவன் என்ற முறையில், உள்ளத்திலிருந்து வராத வெறும் நடவடிக்கையைக்கொண்டு மாத்திரம் நான் திருப்தி அடைந்துவிடக்கூடாது. அந்த நாட்களில் நாம் மேற்கொண்ட அகிம்சை, நான் அடிக்கடி விவரித்துள்ள அகிம்சையின் தரத்தைக் காட்டிலும் மிகவும் குறைந்துவிட்டது என்பதை நான் கூரை மீதிருந்து பிரகடனம் செய்வேன். அறிவு, உள்ளம் இவ்விரண்டின் ஒத்துழைப்புமில்லாத பலாத்காரமற்ற நடவடிக்கை, உத்தேசித்த பலனைக் கொடுக்க முடியாது. குற்றம் குறையுள்ள நமது அகிம்சையின் தோல்வி நமது ஸ்தூலக் கண்களுக்கே தென்படுகிறது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே நடந்துவரும் சண்டைகளைப் பாருங்கள். ஒவ்வொருவரும் மற்ற சமூகத்தினருடன் போராடுவதற்காக கச்சை கட்டி வருகிறார்கள். ஒத்துழையாமை நாட்களில் நமது உள்ளத்தில் நாம் தேக்கி வைத்திருந்த பலாத்காரம், இப்போது நம் மீதே பாய்ந்து வருகிறது. பாமர மக்களிடையே உற்பத்தி செய்யப்பட்ட சக்தி, ஒரு பொதுவான நோக்கத்தையொட்டி கட்டுப்படுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதை இப்போது கட்டு அவிழ்த்து விட்டுவிட்டார்கள். அது இன்று நம்மிடையேயும் நமக்கு எதிராகவும் வேலை செய்து வருகிறது.

காங்கிரஸ்வாதிகளிடையே ஏற்பட்டுள்ள பகையிலும், தங்கள் மேற்பார்வையில் உள்ள நிர்வாகத்தை நடத்த காங்கிரஸ் மந்திரிகளும் பலாத்கார முறைகளை உபயோகிக்கும்படி நேர்ந்திருப்பதிலும் அதே அசாதாரண நிலையைக் காண்கிறோம்.

இவ்விவரங்கள், இன்றைய சூழ்நிலை பலாத்கார மயமாக இருக்கிறது என்பதையே தெளிவாகக் காட்டுகின்றன. இந்தச் சூழ்நிலை அடியோடு மாறினாலன்றி, சாத்விக மக்கள் இயக்கம் சாத்தியமில்லாதது என்பதையும் அது காட்டுகிறது. நம்மைச் சுற்றி நிகழ்ந்து வரும் சம்பவங்களைப் பாராமல் கண்களை மூடிக் கொள்ளுவது, ஆபத்தை வருந்தி அழைப்பதாகும். நான் மக்கள் சாத்விக சட்ட மறுப்புப் பிரகடனம் செய்தால் எல்லா உள் நாட்டுப் பகையும் தீர்ந்துவிடும் என்றும், ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தங்கள் வேற்றுமைகளை அகற்றிச் சமரசம் செய்து கொள்ளுவார்கள் என்றும், பரஸ்பரம் உள்ள பொறாமைகளையும் புதவிகளுக்கான போராட்டங்களையும் காங்கிரஸ்வாதிகள் மறந்துவிடுவார்கள் என்றும் எனக்கு யோசனை கூறப்படுகிறது. நான் அறிந்துகொண்ட வரையில் நிலைமை முற்றிலும் வேறாகும். அகிம்சையின் பெயரில் தற்போது எந்தப் பொதுஜன இயக்கம் ஆரம்பித்தாலும் அது பெரிதும் கட்டுக்கோப்பில்லாத, ஓரளவு கட்டுக் கோப்புடன் கூடிய பலாத்காரத்தில் வந்து முடியும். அது காங்கிரசுக்குக் கெட்ட பெயரை உண்டாக்கும்; காங்கிரசின் சுதந்திரப் போராட்டத்திற்குப் பேராபத்தை விளைவிக்கும்; பல குடும்பங்களுக்கும் அழிவு ஏற்படக் காரணமாகிவிடும். இது, என் பலவீனத்திலிருந்து தோன்றிய, முற்றிலும் உண்மையில்லாத சித்திரமாக இருக்கலாம்; அப்படியாயின், நான் எனது பலவீனத்தைக் களைந்துகொண்டாலன்றி, மகத்தான பலமும், உறுதியும் தேவையான ஓர் இயக்கத்தை நடத்திச் செல்ல முடியாது.

—'ஹரிஜன்' - 8—7—1939

பகுதி பதின்மூன்று

# யுத்தத்தை எதிர்த்துத் தனிப்பட்டவர் சத்தியாக்கிரகம்

[1939-இல் ஆரம்பமான ஐரோப்பியப் போரில் இந்தியாவைக் கலந்தாலோசிக்காமலேயே பிரிட்டன் தன்னிஷ்டப்படி இந்தியாவையும் அப்போரில் ஈடுபடுத்திவிட்டது. இதனால் இந்தியப் பொது மக்களிடையே ஆத்திரம் அதிகமாயிற்று. இந்தியாவுக்குச் சுதந்திரம் அளிக்கப்படும் என்ற வாக்குறுதியை அளிக்கவும் பிரிட்டன் விரும்பவில்லை. ஆகையால், பிரிட்டன் நடத்தும் யுத்தம், பிரிட்டனின் சொந்த ஏகாதிபத்தியத்தைப் பத்திரப்படுத்திக்கொள்ளுவதற்காகவேயன்றி, ஒடுக்கப்பட்டிருக்கும் நாடுகளின் சுதந்திரத்திற்காக என்பதெல்லாம் பொய் என்று இந்திய மக்கள் கருதினார்கள். இதனால் இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராகச் சட்ட மறுப்புப் பிரகடனம் செய்ய வேண்டும் என்றும் ஆர்வத்துடன் இருந்தார்கள். பிரிட்டிஷார் நெருக்கடியான நிலைமையில் இருக்கும்போது அவர்களுக்கு இன்னும் சங்கடத்தை உண்டாக்குவது சரியல்ல என்று மகாத்மா காந்திஜி கருதினார். அதோடு நம் மக்களும் போதிய அளவுக்குப் பலாத்காரமில்லாதவர்களாக ஆகிவிடவில்லை என்றும் எண்ணினார். ஆகவே, சட்ட மறுப்புச் செய்ய வேண்டும் என்று துடித்தவர்களைச் சமாதானப்படுத்தித் தடுத்துவைக்க காந்திஜி தம்மால் இயன்ற முயற்சிகளையெல்லாம் செய்தார். ஓர் ஆண்டு முழுதும் இவ்விதம் மக்களை அடக்கிவைத்திருந்த பிறகு, மக்கள் பிடிவாதமாக இருக்கிறார்கள் என்பதைக் காந்திஜி கண்டதும், தனிப்பட்டவர் சத்தியாக்கிரகம் நடப்பதற்கு அனுமதி அளித்தார். பேச்சு சுதந்திரத்தை வற்புறுத்துவதே இந்தத் தனிப்பட்ட சத்தியாக்கிரகத்தின் நோக்கம். ஒழுக்கம், பொது சேவை, அகிம்சையில் நம்பிக்கை ஆகியவற்றில் தேர்ந்தவர்களிலிருந்து தாம் தேர்ந்தெடுப்பவர்களே இந்தச் சத்தியாக்கிரகத்தைச் செய்ய

*லாம் என்றும் காந்திஜி அறிவித்தார். யுத்தத்திற்கு எதிராகப் பிரசாரம் செய்து சிறைப்படுவதே இந்தச் சத்தியாக்கிரகத்தின் முறை. காந்திஜி இந்தச் சத்தியாக்கிரகத்தில் தாமே ஈடுபடவில்லை. ஆனால், தமக்குப் பிரதிநிதியாகவும் இதில் முதல் சத்தியாக்கிரகியாகவும் ஸ்ரீ வினோபா பாவேயை அனுப்பினார். ஓர் எல்லைக்குட்பட்டதான இந்தச் சத்தியாக்கிரகம், 1940, 1941-ஆம் ஆண்டுகளில் நடந்தது. இதில் நாடெங்கும் காங்கிரஸ் பிரமுகர்கள், சட்டசபை உறுப்பினர்கள், ஸ்தல ஸ்தாபனங்களில் காங்கிரஸ் பிரதிநிதிகளாக இருந்தவர்கள் ஆகியவர்களும் இன்னும் ஏராளமானவர்களும் சிறைப்பட்டார்கள். பிறகு 1942-இல் பிரிட்டிஷ் அரசாங்கம் ஸ்ரீ ஸ்டாபோர்டு கிரிப்ஸைச் சமரசம் பேச, தூதுவராக இந்தியாவுக்கு அனுப்பியது. சமரசப் பேச்சு பயன்படாமல் முறிந்துவிடவே காந்திஜி, 'பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டு வெளியேற வேண்டும்' என்ற கோஷத்தை எழுப்பினார். அதை அடுத்து 1942 ஆகஸ்டில் காந்திஜியையும் காங்கிரஸ் தலைவர்களெல்லோரையும் அரசாங்கம் கைது செய்து சிறையிலடைத்துவிட்டது. அதன் பிறகு 'ஹரிஜன்' பத்திரிகையையும் தடுத்துவிட்டது. திரும்ப 'ஹரிஜன்' 1946 பிப்ரவரியில் தான் வெளிவந்தது. சிறைப்படுவதற்கு முன்னால் காந்திஜி யுத்தத்தைக் குறித்தும் தனிப்பட்டவர் சத்தியாக்கிரக சம்பந்தமாகவும் எழுதிய கட்டுரைகள் பல 'மகாத்மா காந்தி நூல்கள்' இரண்டாம் தொகுப்பில் வெளிவந்திருக்கின்றன. அதில் வராத கட்டுரைகள் மாத்திரமே இங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]*

## 1

## ஒடுக்குவதாக ஆகாது

இந்த வாரத்தில் ஒரு வங்காளி நண்பர் என்னிடம் வந்திருந்தார். போருக்கு வங்காளம் தயாராக இருந்தபோதிலும், காரியக் கமிட்டி, முக்கியமாக நான், அதை ஒடுக்கிவைக்கிறோம் என்றும், அதனால் நாட்டின் நன்மைக்கே கெடுதல் செய்கிறோம் என்றும் அவர் என்னிடம் கூறுகிறார். இது மிகக் கடுமையான குற்றச்சாட்டு. இதில், காரியக் கமிட்டியைப் பொறுத்தவரையில் அது பதில் சொல்லிக்கொள்ளும். எனக்குத் தெரிந்தவரையில், அது எந்த மாகாணத்தையும் எவரையும் அடக்கி

ஒடுக்கி வைக்கவில்லே. ஆனல், நான் எந்த ஸ்தாபனத்தையும் எவரையும் அடக்கி ஒடுக்கி வைத்ததில்லே என்று சத்தியாக்கிரகத்தின் ஏக அதிகாரி என்ற முறையில் நான் கூறுகிறேன். அப்படி அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டுவிடுவதையும் சத்தியாக்கிரகம் ஏற்றுக்கொண்டு விடுவதில்லே. இவ்விதம் ராஜ்கோட் மக்களே அடக்கி வைத்துவிட்டேன் என்று அறியாத்தனத்தினல் என் மீது குற்றஞ்சாட்டப்பட்ட போதிலும், அப்படி அம்மக்களே நான் அடக்கவே இல்லே. அதிகாரிகளேச் சாத்விக முறையில் எதிர்ப்பதற்கு அவர்களுக்கு இப்பொழுது சுதந்திரம் இருப்பதைப் போன்றே, அப்பொழுதும் அவர்களுக்குச் சுதந்திரம் இருந்தது. தனி ஒருவருக்கு மாத்திரமே அதில் உறுதியான நம்பிக்கை இருந்தாலும் அவர் அப்படியே செய்யலாம். அவர் தவறைச் செய்துவிடுவாராளுல், தனக்குத்தான் அவர் தீமையைச் செய்து கொள்ளுவாரேயன்றி எதிராளிக்கு அல்ல. இதனுலேயே கொஞ்சமேனும் தீமையற்றது, தவறுகளுக்கெல்லாம் மிகச் சிறந்த பரிகாரம் என்று சத்தியாக்கிரகத்தைக் குறித்து நான் கூறி வருகிறேன்.

ராஜ்கோட்டில் நான் செய்ததெல்லாம், ராஜ்கோட் சத்தியாக்கிரகிகள் எனக்குக் கொடுத்திருந்த அதிகாரத்தை சாத்விகச் சட்ட மறுப்பை நிறுத்திவிடுவதற்கு உபயோகித்ததுதான். அவர்கள் விரும்பினல், என் ஆலோசனேயை அவர்கள் நிராகரித்திருக்கலாம். ஆக்ஞை என்ற பெயரில் அது கௌரவமானதாக இருந்திருக்காது. அப்படி என்பேச்சை அவர்கள் நிராகரித்திருந்து பொறுப்பாட்சியை அடைந்திருப்பார்களாளுல், என்னுடைய வாழ்த்துக்கள் அவர்களுக்குக் கிடைத்திருக்கும்.

சிராளா பெராளாவில் சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு அனுமதி கொடுக்கக் காங்கிரஸ் காரியக் கமிட்டி மறுத்துவிட்டது, வாசகர்களில் சிலருக்கு நிஃனவிருக்கலாம். ஆனல், தங்கள் சொந்தப் பொறுப்பில் சட்ட மறுப்புப் பிரகடனம் செய்து கொள்ள சிராளா மக்களே அது விட்டுவிட்டது அதே போல வங்காளமோ அல்லது வேறு எந்த மாகாணமோ, சொந்தப் பொறுப்பில் சட்ட மறுப்பை ஆரம்பித்துக்கொள்ளலாம்; ஆனல், அவற்றிற்குக் கிடைக்காமற் போவது என் அங்கீகாரமும் ஆதரவும்தான். காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு உள்ள அதிகாரத்தை, வங்காள காங்கிரஸ் கமிட்டி அடியோடு நிராகரித்து விடுவதாயிருந்தால், அதிக பலத்துடனும் அதிக தகுதியுடனும் அதைச் செய்துகொள்ளலாம்; அது வெற்றி பெற்று விடுமாளுல், தனக்குப் பெரும் புகழைத் தேடிக்கொண்டதாகும். அதோடு இப்பொழுது இருக்கும் தலேமையைப் போக்கிவிட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனத்தையும் அதற்குரிய முறையில் ஆட்சி செய்து வரும். சட்ட மறுப்பு வெற்றிகரமாக நடப்பதற்குச் சில நிபந்தனேகள் கூறியிருக்கிறேன். ஆனல், முஸ்லிம் பொது மக்கள்

க்ாங்கிரஸுக்கு ஆதரவாக இருக்கிருர்கள் என்று வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டி கருதுமானுல், ஹிந்துக்கள், முஸ் லிம்கள் ஆகிய இருவரும் போராட்டத்திற்குத் தயாராக இருக் கிருர்கள் என்று அது நினைக்குமாயின், அகிம்சையோ, ராட் டையோ அவசியமில்லை என்று அது எண்ணுமாயின், போர்ப் பிரகடனம் செய்யத்தவறிவிட்டால், அந்த வங்காள காங்கிரஸ் கமிட்டி தனக்கும் நாட்டுக்கும் உண்மையுடன் நடந்துகொண்ட தாக ஆகாது. நான் சொல்லும், அங்கிலையில் இது, ஒவ் வொரு மாகாணத்திற்கும், இந்தியாவின் ஒவ்வொரு பகுதிக்கும் பொருந்தும். ஆனுல், அதிக அனுபவம் பெற்ற சத்தியாக்கிரகி என்ற முறையில் சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓர் எச்சரிக்கையைச் செய்ய என்னை அனுமதிக்க வேண்டும். சரியான பயிற்சியில்லா மலும், சத்தியாக்கிரகத்தைப் பற்றிய நிபந்தனைகளை ஒழுங்காகப் புரிந்துகொள்ளாமலும் சாத்விகச் சட்ட மறுப்பை ஆரம்பித்து விடுகிறவர் யாராக இருந்தாலும் அவர், தாம் ஆதரிக்க விரும்பும் லட்சியத்திற்கு நாசத்தை விளைவித்துவிட்டவரே ஆவார் என்பது தான் என் எச்சரிக்கை.

—'ஹரிஜன்' - 20—1—1940

# 2

# ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும் ஒரு சத்தியாக்கிரகக் கமிட்டி

வரப் போகும் போராட்டத்தில், அது வந்துதான் ஆக வேண்டும் என்ருல், அரைகுறை மனத்தோடுகூடிய விசுவாசம் எது வும் பயன்படாது. சந்தேகப்படும், சரியானபடி தயாரில்லாத சிப் பாய்களுடன் போருக்குப் போகும் ஒரு தளபதியின் நிலைமையை எண்ணிப் பாருங்கள். அவர் நிச்சயமாகத் தோல்வியடைவதற் காகப் போரில் இறங்கியவரே ஆவார். மனமறிந்து அத்தகைய ஆபத்தான பரீட்சை எதையும் நான் செய்யமாட்டேன். காங் கிரஸ்காரர்களைப் பயமுறுத்துவதற்காக நான் இதைச் சொல்ல வில்லை. அவர்களுக்கு மன உறுதி மாத்திரம் இருக்குமானுல், நான் கூறுகிறபடி நடப்பது அவர்களுக்குக் கஷ்டமாகவே இருக் காது. அவர்களுக்கு என்னிடமோ, ராட்டையிலோ நம்பிக்கை இல்லாவிட்டாலும், கட்டுதிட்டத்தை முன்னிட்டு ராட்டையை அவர்கள் சுழற்றுகிருர்கள் என்று எனக்குக் கடிதம் எழுதியிருப் போர் கூறுகின்றனர். இந்தப் பாஷை எனக்குப் புரியவில்லை. தனது சிப்பாய்களுக்குத் தன்னிடம் நம்பிக்கை இல்லை என்பதை ஒரு தளபதி அறிந்திருந்தும், அந்தச் சிப்பாய்களின் பலத்தைக் கொண்டு ஒரு தளபதி போராட முடியுமா? அந்தப் பாஷையின்

பட்டவர்த்தனமான பொருள் இதுதான்: கடிதம் எழுதியிருப் போருக்குப் பொதுஜனப் போராட்டத்தில் நம்பிக்கை இருக் கிறது; ஆனால், போராட்டம் பலாத்காரமற்றதாக இருக்க வேண் டுமானால் அதற்கும் ராட்டை முதலியவற்றிற்கும் தொடர்பு உண்டு என்று நான் எண்ணுவதில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. பொதுமக்களிடையே எனக்கு இருக்கும் செல்வாக்கில் அவர்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால், அந்தச் செல் வாக்கை எனக்கு அளித்திருப்பவை என்று நான் எவற்றை நம்பு கிறேனோ அவற்றில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. என்னைப் பயன்படுத்திக்கொள்ள மாத்திரமே அவர்கள் விரும்புகிறார்கள். அதற்காக, அவர்கள் கருதுகிறபடி எனக்கிருக்கும் அறியாமை அல்லது பிடிவாதத்திற்கு அவசியமான விலையைக் கொடுத்துவிட அவர்கள் தயாராயிருக்கிறார்கள். இதைக் கட்டுதிட்டம் என்று நான் சொல்லமாட்டேன். உண்மையான கட்டுதிட்டமாக இருக்குமானால், கூறப்படும் யோசனைகள் பகுத்தறிவுக்குப் பொருந்தாதவையாக இருந்தபோதிலும், அவற்றிற்கு உற்சாகத் துடன் பணிந்து நடக்க வேண்டும். தன்னுடைய தளபதியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்போதுதான் ஒரு தொண்டர் தம் முடைய பகுத்தறிவை உபயோகிக்கிறார். ஆனால், தளபதியைத் தேர்ந்தெடுத்துக்கொண்டுவிட்ட பிறகு, தளபதி இடும் கட்டளை களை ஏற்று நடப்பதற்கு முன்னால் அந்தக் கட்டளைகள் ஒவ் வொன்றையும் எடுத்துக்கொண்டு பரிசீலனை செய்து தன்னுடைய பகுத்தறிவைக்கொண்டு சோதித்துக்கொண்டிருப்பதில் அத் தொண்டர் தமது நேரத்தையும் பலத்தையும் வீணாக்கிக்கொண் டிருப்பதில்லை. 'அது ஏன்?' என்று ஆராய்ந்து கொண்டிருப்ப தல்ல அவர் வேலை.

நான் கூறும் யோசனைகளை இப்பொழுது பார்ப்போம்: ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும் சத்தியாக்கிரகக் கமிட்டி ஆகி விட வேண்டும். எல்லோரிடத்திலும் நல்லெண்ணத்தை வளர்த் துக்கொள்ளுவதில் நம்பிக்கையுள்ள, தம்மிடம் எந்த வகையிலும் ரூபத்திலும் தீண்டாமை என்பது இல்லாத, ஒழுங்காக நூற்றுக் கொண்டு வருகிற, மற்றத் துணிகளையெல்லாம் விலக்கிவிட்டுக் கதரையே அணிகிறவர்களாகவும் இருக்கிற காங்கிரஸ்காரர்க ளைப்பதிவு செய்து கொள்ள வேண்டும். கமிட்டிகளிடம் இவ்விதம் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருப்பவர்கள், தங்களுக்கு இருக்கும் ஓய்வு நேரம் முழுவதையும் நிர்மாண வேலைத் திட்ட காரியங்களிலேயே செலவிட வேண்டும் என்றும் எதிர்பார்ப்பேன். ஆதரவு மனப்பூர்வமானதாக இருக்குமானால், இந்தச் சத்தியாக்கிரகக் கமிட்டிகள் சுறுசுறுப்பாக நூல் நூற்றுக் கொண்டிருக்கும் கிடங்குகளாகிவிடும். இந்தக் கமிட்டிகளின் வட்டாரங்களிலிருக்கும் காங்கிரஸ்காரர்களில் கதரை மாத்திரமே உடுத்துபவர்களாக இல்லாதவர்கள் எவரும் இல்லை என்றாகும் விதத்தில் இக்கமிட்டிகள் அகில இந்திய நூற்போர் சங்கக் கிளை

களுடன் நல்ல முறையில் ஒத்துழைத்தும், அவர்கள் காட்டும் வழியிலும் காரியங்களைச் செய்து வரும். சத்தியாக்கிரகக் கமிட்டிகள் செய்து வரும் வேலைகளின் அபிவிருத்தியைக் குறித்து மாகாணத் தலைமைக் காரியாலயத்திலிருந்து அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு ஒழுங்காக அனுப்பிக்கொண்டிருக்க வேண்டும் என்றும் எதிர்பார்ப்பேன். பெயர்களைப் பதிவு செய்துகொள்ளுவது, தாமே முன் வந்து பதிவு செய்பவைகளாக இருக்க வேண்டும். அனுப்பப்படும் அறிக்கைகளில், பதிவு செய்வதற்குப் பெயர்களைக் கொடுத்தவர்களின் தொகையும், அப்படி பெயர்களைக் கொடுக்காதவர்களின் தொகையும் இருக்க வேண்டும்.

அவ்விதம் பெயர்களைப் பதிவு செய்துகொண்டிருக்கும் சத்தியாக்கிரகிகள், தாங்கள் அன்றாடம் செய்து வரும் வேலைகளுக்கு ஒரு தினக்குறிப்பு எழுதி வர வேண்டும். தாங்கள் நூற்க வேண்டியதை நூற்பதோடு, ஆரம்ப உறுப்பினர்களிடம் போய், அவர்கள் கதரை அணியும்படியும், நூற்கும்படியும், தங்களையும் பதிவு செய்யும்படி தூண்டுவதும் இவர்களுடைய வேலையாக இருக்க வேண்டும். ஆரம்ப உறுப்பினர்கள் அப்படியே செய்தாலும் செய்யாது போனாலும், அவர்களுடன் இவர்கள் தொடர்ந்து தொடர்பு வைத்துக்கொண்டு வர வேண்டும்.

ஹரிஜனங்களின் வீடுகளுக்குப் போய், சாத்தியமான வரையில் அவர்களுக்கு இருக்கும் கஷ்டங்களைப் போக்க வேண்டும்.

விரும்புகிறவர்களையும், சிறைத் தண்டனையை அனுபவிக்க முடிந்தவர்களையும் மாத்திரமே பதிவு செய்துகொள்ள வேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

சத்தியாக்கிரகக் கைதிகள், தங்களுக்கோ அல்லது தங்களை நம்பி வாழ்கிறவர்களாக இருப்பவர்களுக்கோ எந்தவிதமான பண உதவியையும் எதிர்பார்க்கக்கூடாது.

இதுவரை சொன்னவையெல்லாம் தீவிரமாகச் செயலில் ஈடுபடும் சத்தியாக்கிரகிகளைப் பற்றியவை. ஆனால், இவர்களல்லாமல் இன்னும் ஏராளமான ஆண்களும், பெண்களும் இருக்கிறார்கள். அவர்கள் நூற்பதில்லை, சிறைப்பட முன் வருவதில்லையென்றாலும், சத்தியாக்கிரகத்தின் இரு முக்கியமான கொள்கைகளில் அவர்களுக்கு நம்பிக்கை இருக்கிறது; இப்போராட்டத்தை வரவேற்று, இது வெற்றி பெற வேண்டும் என்றும் அவர்கள் விரும்புகிறார்கள். இவர்களைச் சாத்விக சத்தியாக்கிரகிகள் என்பேன். இவர்கள் தாங்களும் சிறைப்பட முன் வந்து சத்தியாக்கிரகத்தின் போக்கில் தலையிடாமல் இருப்பார்களாயின், தொழிலாளர்கள், மாணவர்களின் வேலை நிறுத்தங்களுக்கு



வைஸ்ராயுடன் பேசுவதற்கு காந்திஜி வைஸ்ராய் மாளிகைக்குப்
போகும் வழியில்—4, ஏப்ரல், 1939



டில்லியில் நடந்த காங்கிரஸ் காரியக்கமிட்டி கூட்டத்திற்கு
காந்திஜி ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவுடன் போகிருர். —ஜுலை, 1940

உதவி செய்து, அவை ஏற்படும்படிச் செய்யாமலிருப்பார்களாஞல், இவர்களும் தீவிர சத்தியாக்கிரகிகளுக்கு உதவி செய்ய முடியும். மிகைபட்ட உற்சாகத்திஞலோ அல்லது வேறு எந்தக் காரணத்திஞலோ, நான் கூறியிருக்கும் இந்த யோசனைகளுக்கு மாருன வகையில் நடப்பவர்கள், போராட்டத்திற்குத் தீமை விளைவிப்பதோடு, இப்போராட்டத்தை நிறுத்திவிடும்படி என்னைக் கட்டாயப்படுத்திவிட்டவர்களும் ஆவர். பலாத்காரத்தின் சக்திகள் உலகமெங்கும் கட்டவிழ்த்துவிடப்பட்டிருக்கும் போது, அதிக நாகரிகமானவை என்று பெயர் பெற்ற நாடுகளெல்லாம் தகராறைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு ஆயுத பலத்தைத் தவிர வேறு எந்தப் பலத்தையும் எண்ண முடியாமலிருக்கும்போது, இந்தியா தன்னுடைய சுதந்திரப் போராட்டத்தைச் சமாதான முறையில் மாத்திரமே நடத்தி வெற்றி பெற்றது என்று இந்தியாவைக் குறித்துச் சொல்லுவது சாத்தியமாக இருக்க வேண்டும் என்று நம்புகிறேன்.

ஒரு விஷயத்தில் நான் தெளிவான கருத்துடன் இருக்கிறேன்: ராஜீய விஷயங்களை அறிந்தவர்களாக இருக்கும் இந்தியர் மாத்திரம் ஒத்துழைப்பை அளிப்பார்களாஞல், கலப்பற்ற அகிம்சையைக் கொண்டு இந்தியா சுதந்திரத்தை அடைந்துவிடுவது முற்றிலும் சாத்தியமே. அகிம்சை என்று நாம் பாசாங்கு செய்வதை உலகம் நம்பவில்லை. உலகம் இருக்கட்டும், தளபதி என்று என்னைக் கூறிக்கொள்ளுபவஞகிய நான்கூட, நம் உள்ளங்களில் பலாத்காரம் இருக்கிறது, பரஸ்பரம் ஒருவருக்கொருவர் சொந்த விஷயங்களில் அடிக்கடி பலாத்காரத்துடன்தான் நடந்து கொண்டு வருகிரோம் என்று பல தடவைகளில் ஒப்புக் கொண்டிருக்கிறேன். நம் மத்தியில் நாம் பலாத்காரத்தை வைத்துக்கொண்டிருக்கும் வரையில் போராட என்ஞல் முடியாது என்பதை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். ஆஞல், சத்தியாக்கிரகிகளைப் பதிவு செய்வது யோக்கியமானதாக இருந்து, சேராமல் தைரியமாக ஒதுங்கியிருந்து விடுகிறவர்கள் போராட்டத்தின் ஒழுங்கான போக்கைக் குழப்பிவிடாமலிருந்தால், நான் போராடுவேன்.

—'ஹரிஜன்' - 30-3-1940

# 3

# ராட்டையும் சத்தியாக்கிரகமும்

காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் பேசியவர்களில் ஒருவர், ராட்டை விஷயத்தில் தமக்கு எந்தத் தகராறும் இல்லை என்றும், ஆஞல், சத்தியாக்கிரகத்திலிருந்து ராட்டையை அடி

யோடு நீக்கிவிட வேண்டும் என்றே தாம் விரும்புவதாகவும் கூறினர். இந்த இருபது ஆண்டுகளாக நான் கூறி வந்திருப்பதைப் போன்றே இப்பொழுதும் சொல்லுகிறேன்: சத்தியாக்கிரகத்திற்கும் ராட்டைக்கும் ஜீவனை தொடர்பு இருக்கிறது. இந்த நம்பிக்கை எதிர்க்கப்படுவதை நான் காணக் காண, அந்த நம்பிக்கையில் எனக்கு அதிக உறுதி ஏற்பட்டு வருகிறது. அப்படியில்லாதிருந்தால், நாள்தோறும், வீட்டிலும் ரெயிலிலும் கூட, வைத்தியர்களின் யோசனையைக்கூட பொருட்படுத்தாமல் விடாப்பிடியாக ராட்டையை நான் சுற்றிக் கொண்டே இருப்பதற்கு நான் முட்டாள் அல்ல. அதே நம்பிக்கையுடன் நீங்களும் ராட்டையைச் சுற்றி வரவேண்டும் என்று விரும்புகிறேன். இதை நீங்கள் செய்யாத வரையில், வழக்கமாக நீங்கள் கதரை உடுத்தி வராத வரையில், நீங்கள் என்னையும் ஏமாற்றி உலகத்தையும் ஏமாற்றுபவர்கள் ஆவீர்கள்.

நான் உங்களுடன் இருந்தாலன்றி நீங்கள் போராடமாட்டீர்கள் என்பதை அறிவேன். அப்படியானல் நான் இங்கே இருக்கிறேன் என்பதையும், நான் யாருக்காக வாழ்கிறேனே, யாருக்காக நான் சாகவும் வேண்டும் 'என்று விரும்புகிறேனே அந்த வாயில்லாப்பூச்சிகளான கோடிக்கணக்கான மக்களின் பிரதிநிதியாக மாத்திரமே நான் போராட முடியும் என்பதையும் நீங்கள் அறிய வேண்டும். மற்றெல்லா விசுவாசத்தையும்விட அவர்களிடம் எனக்கு இருக்கும் விசுவாசம் அதிகமானது. என்னை வேண்டாம் என்று நீங்கள் கைவிட்டு விட்டாலும், என்னை நீங்கள் கொன்ருலும், அம்மக்களை முன்னிட்டு ராட்டையை மாத்திரம் நான் கைவிடமாட்டேன். ஏனெனில் ராட்டையைப் பற்றிய நிபந்தனையை நான் தளர்த்திவிடுவேனாயின், அந்த வாயில்லாதவர்களான கோடிக்கணக்கான மக்களுக்கு நான் நாசத்தை விளைவித்துவிட்டவனாகிவிடுவேன் என்பதை அறிவேன். இதற்கு நான் கடவுளின் சன்னிதானத்தில் பதில் சொல்லியாக வேண்டும். ஆகையால், எந்தக் கருத்தில் நான் ராட்டையில் நம்பிக்கை வைத்திருக்கிறேனே, அதே கருத்தில் அதன் மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லையாயின், என்னை விட்டுவிடும்படி உங்களை வேண்டிக் கொள்ளுகிறேன். சத்தியத்தின்,அகிம்சையின் வெளிப்படையான சின்னமே ராட்டை. ஆகவே, அவை இரண்டும் உங்கள் உள்ளத்தில் இல்லாது போனல், நீங்கள் ராட்டையையும் கைக்கொள்ள முடியாது. ஆகையால், உள் நிபந்தனை, வெளி நிபந்தனை ஆகிய இரண்டையும் நீங்கள் நிறைவேற்றியாக வேண்டியிருக்கிறது என்பது உங்களுக்கு நினைவிருக்கட்டும். உள் நிபந்தனையை நிறைவேற்றிவிடுவீர்களானல், உங்கள் எதிராளியிடம் துவேஷம் வைப்பதை நீங்கள் விட்டுவிடுவீர்கள்; எதிராளியின் அழிவை நாடவோ அதற்காக வேலை செய்யவோ மாட்டீர்கள். ஆனல், அதற்குப் பதிலாக அந்த எதிராளிக்குக் கருணை பாலிக்குமாறு கடவுளிடம் பிரார்த்திப்பீர்கள். ஆகவே அரசாங்

கத்தின் குற்றங்களைக் கவனித்துக் கொண்டிருப்பதிலேயே காலத்தைக் கடத்திக் கொண்டிருக்க வேண்டாம். ஏனெனில், அந்த அரசாங்கத்தை நடத்திக் கொண்டிருப்பவர்கள் மனமாற்றமடையும்படிச் செய்து நமக்கு நண்பர்களாகும்படி நாம் செய்ய வேண்டியிருக்கிறது. பார்க்கப் போனால், யாரும் இயல்பாகவே கெட்டவர்கள் அல்ல. மற்றவர்கள் கெட்டவர்களாக இருக்கிறார்கள் என்றால், நாம் மாத்திரம் அதில் குறைந்தவர்களாக இருக்கிறோமா? அந்த மனப்போக்கு சத்தியாக்கிரகத்தில் இயல்பாகவே இருக்கிறது. இதை நீங்கள் ஒப்புக்கொள்ளவில்லையானால், அப்பொழுதும் என்னை விட்டுவிடும்படியே உங்களைக் கேட்பேன். ஏனெனில், என்னுடைய வேலைத் திட்டத்தில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையானால், என் நிபந்தனையை நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லையாயின், நீங்கள் என்னை நாசப்படுத்திவிடுவீர்கள், உங்களையும் நாசமாக்கிக் கொள்ளுவீர்கள், லட்சியத்தையும் பாழாக்கி விடுவீர்கள்.

- 'ஹரிஜன்' - 30—3—1940

# 4

# சட்ட மறுப்பு

சாத்விகச் சட்ட மறுப்பு, உண்மையாகவே சாத்விகமானதாக இருக்குமானால், அப்படி சாத்விகமானதாக இருக்கிறது என்பது எதிராளிக்குங்கூடத் தோன்ற வேண்டும். எதிர்ப்பு, தனக்குத் தீமை செய்வதற்காக அன்று என்று எதிராளி உணர வேண்டும். ஆனால், இச்சமயத்திலோ, அகிம்சை என்பது வெறும் வேஷமே என்று தான் சாதாரண ஆங்கிலேயர் எண்ணுகிறார். முஸ்லிம் லீகர்களோ, ஆங்கிலேயரைவிட முக்கியமாகத் தங்களுக்கு எதிராக என்ற நோக்கத்திலேயே சட்ட மறுப்பு கொண்டு வரப்படுகிறது என்று நினைக்கிறார்கள். இந்த எண்ணத்தை என்னுடைய முழு சக்தியையும் கொண்டு ஆட்சேபிக்கிறேன். முக்கியமாக சாவா, வாழ்வா என்ற பிரச்னை பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில், அவர்களுக்குச் சங்கடம் உண்டாக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்குக் கொஞ்சங் கூட இல்லை. சட்ட மறுப்பின் மூலம் காங்கிரஸ் செய்ய வேண்டும் என்று நான் விரும்புவதெல்லாம், காங்கிரஸ் ஒத்துழைப்பை அளிக்குமானால் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு என்ன தார்மிகச் செல்வாக்கு கிடைக்குமோ அந்தச் செல்வாக்கை மறுத்துவிட வேண்டும் என்பதே. இந்தியாவின் மற்ற வசதிகளையும், ஆள் பலத்தையும் பொறுத்த வரையிலோ, இந்த உப கண்டத்தின் மீது தனக்குள்ள ஆதிக்கத்தின் காரணமாக இப்பொழுதே

பிரிட்டிஷ் அரசாங்கம் அவற்றைத் தன் நன்மைக்கான வழிகளில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது.

சட்ட மறுப்பைக் கொண்டு பிரிட்டிஷ் மக்களுக்குச் சங்கடத்தை உண்டாக்கக் காங்கிரஸ் விரும்பவில்லை என்றால், முஸ்லிம் லீகுக்குச் சங்கடத்தை உண்டாக்க வேண்டும் என்றும் காங்கிரஸ் கொஞ்சமும் விரும்பவில்லை. பிரிட்டிஷார் சார்பில் கூறுவதை விட இன்னும் அதிக உறுதியாக இதைக் காங்கிரஸின் சார்பாக நான் கூற முடியும். ஒரு பக்கத்தில் சந்தேகத்தின் நடுவிலும் படுமோசமாகத் திரித்துக் கூறப்படுவதற்கு நடுவிலும் இருந்து வேலை செய்ய வேண்டியிருக்கிறது. மற்றோர் புறத்தில் காங்கிரசுக்கு உள்ளேயும் வெளியேயும் குழப்பங்கள் இருந்து வருகின்றன. எனவே சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு முன்னால் நான் ஆயிரம் தடவைகள் ஆழ்ந்து சிந்தித்தாக வேண்டியிருக்கிறது.

நான் பார்க்குமளவில், இப்பொழுது பொதுஜன சட்ட மறுப்பு நடப்பதற்கில்லை. பெரிய அளவில் தனிப்பட்டவர் சாத்விகச் சட்ட மறுப்பைச் செய்வதா, அல்லது மிகுந்த எல்லைக்குட்பட்ட அல்லது நான் ஒருவனோடு நின்றுவிடக் கூடிய சட்ட மறுப்பை நடத்துவதா? இந்த இரண்டில் ஒன்றையே செய்ய வேண்டியிருக்கிறது. இதில் எதைச் செய்வதாக இருந்தாலும் காங்கிரஸ் ஸ்தாபனம் முழுமையின் ஆதரவும் இதற்கு இருந்தாக வேண்டும். கோடிக்கணக்கானவர்கள், காங்கிரஸ் பட்டியலில் இல்லாது போயினும், மௌனமாக, ஆனால் மிகுந்த பலனுள்ள வகையில் காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கு ஆதரவளித்து வந்திருக்கிறார்கள். இவர்களுடைய ஆதரவும் வேண்டும்.

காங்கிரஸ்காரர்களும், மௌனமான கோடிக்கணக்கான மக்களும், சரியான வகையிலும், நன்றாகப் புலனாகும்படியும் செய்யக்கூடிய ஒத்துழைப்பு, சட்ட மறுப்பு மேற்கொள்ளும் போக்கில் குறுக்கிடாமல், தாங்களே நூற்க ஆரம்பித்து விடுவதும், கதரைத் தவிர வேறு எதையும் உபயோகிக்காமலிருப்பதும்தான். இதை இப்பத்திரிகையில் அடிக்கடி நான் எடுத்துக் கூறியிருக்கிறேன். பிரிம்ரோஸ் தினத்தில், பிரிம்ரோஸ் மலரை மக்கள் அணிந்து கொள்ளுவதில் * ஒரு பொருள் இருக்கிறது என்று ஒப்புக் கொள்ளுவதாக இருந்தால், மக்கள் ஒரு குறிப்பிட்ட ரகத் துணியை உபயோகிப்பதிலும், தங்கள் மனத்திற்கு

* லார்டு பீகான்பீல்டின் (டிஸ்ரேலியின்) இந்த தினமான ஏப்ரல் 19-ஆம் தேதி பிரிம்ரோஸ் தினம் என்று கூறப்பட்டுக் கொண்டாடப்பட்டு வந்தது. ஏனெனில். அவருடைய ராஜீய வேலைகளையும் அவருடைய கொள்கைகளையும் நினைவுபடுத்திப் பரப்புவதற்கென்று 1883—இல் பிரிம்ரோஸ் லீக் என்ற ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டது. அந்நாளைக் கொண்டாடும் பிரிட்டிஷ் மக்கள் அத்தினத்தில் பிரிம்ரோஸ் மலரை அணிவார்கள்.

மிகவும் உகந்தது என்று மக்கள் கொள்ளும் ஒரு லட்சியத்திற்காக ஒரு வகையான உழைப்பை அளிப்பது என்பதிலும் நிச்சயமாக இன்னும் அதிகமான பொருளே இருக்கிறது. கதர் சம்பந்தமான சோதனைக்கு அவர்கள் உடன்படுவதைக் கொண்டு, அவர்கள் தீண்டாமையைப் போக்கிக் கொண்டுவிட்டார்கள், இனம், நிறம், சாதி என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோரிடத்திலும் சகோதர உணர்ச்சி கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்று நான் தெரிந்து கொள்ளுவேன். இதைச் செய்கிறவர்கள், சட்ட மறுப்புச் செய்வதற்கு என்று குறிப்பிடப்படுகிறவர்களைப் போன்றே சத்தியாக்கிரகிகளே ஆவார்கள்.

- 'ஹரிஜன்' 27—4—1940

## 5

# இன்னும் இல்லை

அகிம்சை சம்பந்தமாக அநேக காங்கிரஸ்காரர்கள் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். சட்ட மறுப்பு என்றால் சிறைகளை நிரப்புவதுதான் என்று எப்படியோ அவர்கள் எண்ணி வருகின்றனர்; மிகப் பெரிய சக்தியான சட்ட மறுப்பைக் குறித்து இவ்விதம் எண்ணுவது சிறு பிள்ளைத்தனமான வியாக்கியானமே ஆகும். நாங்கள் சொல்லுவது அவர்களுக்கு அருவருப்பை உண்டாக்குவதாகவே இருந்தாலும், யோக்கியமான ஆக்க வேலை முயற்சி பலமும், தவறு செய்கிறவரிடத்தும் உள்ளத்தில் நல்லெண்ணமும் இல்லாதிருக்குமானால், அது பலாத்காரமே ஆகையால், அது சத்தியாக்கிரகத்தில் ஒதுக்கப்படுகிறது. அகிம்சையின் மூலம் விருத்தியாகும் சக்தி, மனிதனுடைய புத்திசாலித்தனத்தினால் தயாரிக்கப்படும் ஆயுதங்களின் சக்தியைவிட நிச்சயமாக அதிகப் பெரியதே. ஆகையால், சாத்விகச் சட்ட மறுப்பில் முக்கியமான அம்சம் அகிம்சை. மக்கள் திடீரென்று அகிம்சையை அனுசரிப்பவர்களாகிவிட முடியாது என்று எனக்குச் சொல்லுகிறார்கள். அவர்களால் முடியும் என்று நான் வாதாடியதே இல்லை. ஆனால், அவர்களுக்கு மனம் மாத்திரம் இருக்குமானால், சரியான பயிற்சியின் மூலம் அகிம்சையை அனுசரிப்பவர்களாகிவிட முடியும் என்று நான் கருதுகிறேன். சாத்விகச் சட்ட மறுப்பு செய்கிறவர்களுக்கு, செயல்படும் அகிம்சை இருக்க வேண்டியது அவசியம். ஆனால், சாத்விகச் சட்ட மறுப்புக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்களுடன் ஒத்துழைக்க மக்களுக்கு மன உறுதியும் சரியான பயிற்சியும் இருந்தால் போதும். காங்கிரஸ் விதித்திருக்கும் நிர்மாண வேலையே சரியான பயிற்சி. ஆகையால், அகிம்சையின் மூலம்

இந்தியா அதன் லட்சியத்தை அடைந்துவிடப் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறவர்கள், சட்ட மறுப்பைப் பற்றிய எண்ணம் எதுவுமே இல்லாமல், ஆக்க வேலைத் திட்டத்தை உடனே நிறைவேற்றிவைப்பதிலேயே தங்கள் சக்தி முழுவதையும் செலவிட வேண்டும்.

—'ஹரிஜன்' - 1—6—1940

# 6

# வாசகர்களுக்கு

'ஹரிஜனும்' மற்ற இரு வாரப் பத்திரிகைகளும் * பிரசுரமாவது நிறுத்திவைக்கப்பட்டிருக்கின்றது என்பதைப் பத்திரிகைகளுக்கு நான் விடுத்த அறிவிப்பிலிருந்து நீங்கள் அறிந்திருப்பீர்கள். அவ்விதம் நிறுத்திவைப்பது ஒரு வாரத்திற்கு என்றே இருக்கும் என்ற நம்பிக்கையையும் அதில் தெரிவித்திருக்கிறேன். ஆனால், நான் நம்பியதற்கு உண்மையான ஆதாரம் எதுவும் இல்லை என்று காண்கிறேன். நான் வாரந்தோறும் பேசுவதை நீங்கள் இழந்துவிட நேரும் என்று நீங்கள் எதிர்பார்ப்பதைப் போன்றே, நானும் உங்களுடன் வாரந்தோறும் பேசுவதை இழந்துவிடுகிறேன். என் ஆழ்ந்த கருத்துக்களை அப்படியே பதித்துவைப்பதுதான் இந்த வாரப் பேச்சுக்களினால் ஏற்படும் பலன். புழுக்கமான சூழ்நிலையில் அவ்விதம் கருத்தை எடுத்துக்கூறுவது சாத்தியமில்லை. சட்ட மறுப்புச் செய்யும் விருப்பம் எனக்கு இல்லாததால் நான் தாராளமாக எழுத முடியாது. சத்தியாக்கிரகத்தின் கர்த்தா நான். அப்படி இருக்கும்போது ஆக்க வேலைத்திட்டம் போன்ற அனுமதிக்கப்படும் விஷயங்களைக் குறித்து எழுதிக்கொண்டிருப்பது சாத்தியமாக வேண்டும் என்பதற்காக என் வாழ்வின் முக்கியமான விஷயங்களைப் பற்றிச் சொல்லாமல் என்னை அடக்கிக்கொண்டு விடுவது, நான் கூறி வரும் கொள்கைகளுக்குப் பொருத்தமானதாகாது. அப்படிச் செய்வது தலையில்லா உடல் விஷயத்தில் கவனம் செலுத்துவதாகும். ஆக்க வேலைத் திட்டம் முழுவதுமே, அகிம்சையை வெளிக்காட்டுவது தான் என்று எனக்குத் தோன்றுகிறது. அகிம்சையைப் பிரசாரம் செய்ய என்னால் முடியவில்லை என்றால், என்னை நானே மறுத்துக்கொள்ளுவதாகும். ஏனெனில், அதுவே சமீபத்தில் வந்திருக்கும்

*ஆங்கில 'ஹரிஜன்' பத்திரிகைக்கு மொழிபெயர்ப்புப் பத்திரிகைகளாக ஹிந்தியில் 'ஹரிஜன் சேவக்' என்ற பத்திரிகையும், குஜராத்தில் 'ஹரிஜன்பந்து' என்ற பத்திரிகையும் நடத்தப்பட்டு வந்தன. இவற்றையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார்.

அவசரச் சட்டத்திற்குப் பணிந்துவிடுவதற்குப் பொருளாகி விடும். ஆகவே, இந்த வாய்ப் பூட்டுச் சட்டம் அமலில் இருக்கும் வரையில் பத்திரிகைகளின் நிறுத்தமும் தொடர்ந்து இருந்து வர வேண்டும். இதுவே ஒரு சத்தியாக்கிரகியின் மரியாதை யான ஆட்சேபமாகும். சத்தியாக்கிரகம், தவறு செய்கிறவர் ஓர் அங்குலம் கேட்டால் ஒரு கெஜம் அவருக்குக் கொடுத்துவிடு வதாகவும், மேல் சட்டை மாத்திரம் கேட்பவருக்கு போர்வையை யும் சேர்த்துக் கொடுத்துவிடுவதாகவும் ஆகாதா? சாதாரண முறையை இவ்விதம் மாற்றுவானேன் என்றும் கேட்கலாம். சாதாரண முறை பலாத்காரத்தை அடிப்படையாகக்கொண் டது. வேறு வழியே இல்லாமல் என் வாழ்க்கை பலர்த்காரத்தி னலேயே ஒழுங்குபடுத்தப்பட்டதாக இருக்குமானால், ஒரு கெஜம் போர்வையையும் சேர்த்துக் கேட்டுவிடுவாரோ என்பதற்காக ஓர் அங்குலம்கூட கொடுக்க மறுத்துவிடுவேன். வேறுவிதமாக நான் செய்தால் நான் முட்டாளாக இருக்க வேண்டும். ஆனால், என் வாழ்க்கை அகிம்சையைக்கொண்டு ஒழுங்கு படுத்தப்பட்டதாக இருக்குமாயின், என்னை ஓர் அங்குலம் கொடுக்கும்படிக் கேட்கும்போது ஒரு கெஜமும் கொடுக்க நான் தயாராக இருக்க வேண்டும். இப்படி நான் செய்யும் போது, தவறான முறையில் பறித்துக்கொண்டிருப்பவருக்கு விசித்திரமான, ஆனந்தமான ஓர் உணர்ச்சியைக்கூட நான் உண் டாக்குகிறேன். அவரும் வெட்கப்பட்டுப் போவதோடு, என்னை என்ன செய்வது என்பதும் அவருக்குத் தெரியாமற் போகிறது. ‘எதிரி’யைப் பற்றியவரையில் இதுதான் விஷயம். முக்கிய மில்லாததையெல்லாம் விட்டுக் கொடுத்துவிடுவது என்ற முடி வுக்கு நான் வந்துவிடுவதால், அவசியமானவை என்று நான் உறுதியாகக் கொண்டிருப்பவைகளைப் பாதுகாத்துக்கொள்ளவும் பத்திரப்படுத்தவும் சாவதற்கு முன்பு இருந்ததையெல்லாம்விட அதிக பலத்தை நான் பெறுகிறேன். ஆகையால், வெளி ஆயுதங் களையெல்லாம் போட்டு விடுமாறும், நாஜிகளுக்குத் துணிச்சல் இருந்தால் பிரிட்டனை அவர்கள் பிடித்துக்கொண்டு விட விட்டு விடும் படியும், ஆனால், தங்களையே நாஜிகளுக்கு விற்றுவிட மறுக் கும் உள் பலத்தைப் பலப்படுத்திக்கொள்ளும்படியும் ஆங்கிலேய ருக்கு நான் யோசனை சொன்னபோது, கோழைத்தனமான சர ணாகதி யோசனையை நான் கூறியிருப்பதாக, குறை கூறுவோர் என்னைத் தவறாகக் கண்டித்தார்கள். முக்கியமானவற்றைக் காப்பதற்காகச் சாவதற்கு வேண்டிய உள் பலத்தை அடை வதற்கு முன்னால் செய்ய வேண்டியது, அவசியமானவையாக இருப்பவைகளைக் கொடுத்துவிடுவதேயாகும்.

ஆனால், ஆங்கிலேயரை என் கருத்துக்கு மாற்றுவதற்காக நான் இதை எழுதவில்லை. வாய்ப் பூட்டுச் சட்டத்தைக்கொண்டு வந்திருப்பவர்களுக்கு என்னுடைய சரணாகதி, வாசகர்களாகிய உங்களுக்குச் சத்தியாக்கிரகத்தில் முக்கியமான ஒரு படிப்பினை

யாக இருக்க வேண்டும் என்பதற்காகவே இதை எழுதுகிறேன். இந்தப் பாடத்தின் கருத்தை உங்கள் வாழ்க்கையில் பேசாமல் அனுசரித்துக்கொண்டே போவீர்களானால்,'ஹரிஜ'னில் எழுத்துக்களாக இருக்கும் சொற்களின் உதவி பிறகு உங்களுக்குத் தேவையில்லை. அங்குலம் இடம் கேட்டவருக்கு ஒரு கெஜ இடத்தைக் கொடுத்துவிடுவதிலுள்ள தத்துவத்தை நானே எப்படி வேலை செய்கிறேன் என்பதை 'ஹரிஜன்' வாரப் பத்திரிகை இல்லாமலேயே நீங்கள் தெரிந்துகொள்ளுவீர்கள். எனக்குக் கடிதம் எழுதியிருக்கும் ஒருவர், 'என்னவானாலும் 'ஹரிஜன்' பத்திரிகையை நிறுத்திவிட வேண்டாம்' என்று என்னைக் கேட்டுக்கொள்ளுகிறார். ஏனெனில், 'ஹரிஜனி'லிருந்து வாரந்தோறும் அவர் பெறும் உணவே, அவரிடம் தொடர்ந்து அகிம்சை இருந்து வரும்படிச் செய்கிறது என்றும் அவர் கூறுகிறார். அப்படித்தான் அவருக்கு இருந்து வந்திருக்கிறது என்றால், அரைகுறையான வகையில் 'ஹரிஜனை'த் தொடர்ந்து நடத்திக் கொண்டு போவதைவிட, நாமே விதித்துக்கொண்டதாக இருக்கும் இத்தடை, அவருக்கு இன்னும் அதிகமாகப் போதிக்கும்.

—'ஹரிஜன்' - 10—11—1940

பகுதி பதினான்கு

# சத்தியாக்கிரகத்தில் உண்ணாவிரத தவம்

## 1

## பிராயச்சித்தப் பட்டினி

அந்த நாட்களில் நான் ஜோகன்னஸ்பர்க்கிற்கும் போனிக்ஸுக்கும் போய் வந்தவண்ணம் இருக்க வேண்டியதாயிற்று. ஒரு சமயம் நான் ஜோகன்னஸ்பர்க்கில் இருந்த போது, ஆசிரம வாசிகளில் இருவர் ஒழுக்கம் தவறி நடந்துவிட்டார்கள், என்ற செய்தி எனக்கு எட்டியது. சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஒரு தவறு அல்லது ஒரு தோல்வி போன்ற செய்திகூட எனக்கு அவ்வளவு அதிர்ச்சியை உண்டாக்கியிராது. ஆனால், இச் செய்தியோ, எனக்கு இடி விழுந்தது போல் ஆயிற்று. அன்றே போனிக்ஸுக்குப் போக ரெயிலில் புறப்பட்டேன். ஸ்ரீ காலென் பாக்கும் என்னுடன் வருவதாகப் பிடிவாதமாகக் கூறினார். அப்பொழுது நான் எந்தவிதமான நிலைமையில் இருந்தேன் என்பதை அவர் கவனித்தார். எனக்கு இவ்வளவு கலக்கத்தை உண்டாக்கிவிட்ட செய்தியைக் கொண்டு வந்தவர் அவரேயாகை யால், நான் தனியாக அங்கே போவது என்பதை எண்ணவும் அவரால் முடியவில்லை.

என் கடமை என்ன என்பது பிரயாணத்தின் போது எனக்குத் தெளிவாகத் தோன்றியது. தமது பாதுகாப்பில் இருப்பவர்கள் அல்லது தம்மிடம் மாணவர்களாக இருப்பவர்கள் செய்து விடும் தவறுக்குப் பாதுகாப்பாளர் அல்லது உபாத்தியாயர், ஓரளவுக்காவது பொறுப்பாளியாவார் என்பதை உணர்ந்தேன். எனவே, சம்பந்தப்பட்ட சம்பவம் சம்பந்தமாக என் பொறுப்பு இன்னதென்பது எனக்குப் பட்டப் பகல் போல் தெளிவாயிற்று. இவ்விஷயத்தில் என் மனைவி எனக்கு முன்பே எச்சரிக்கை செய்திருந்தாள். ஆனால், நான் எல்லோரையும் நம்பிவிடும் சுபாவமுள்ளவனாகையால், அந்த எச்சரிக்கையை அலட்சியம் செய்து விட்டேன். குற்றம் செய்துவிட்டவர்கள், என் மனவேதனையையும், தாங்கள் செய்துவிட்டது எவ்வளவு பெரிய குற்றம் என்பதையும் உணரும்படி செய்வதற்குள்ள ஒரே

வழி, பிராயச்சித்தத் தவத்தை நான் மேற்கொள்ளுவதுதான் என்பதை அறிந்தேன். ஆகையால், ஏழு நாட்களுக்கு உண்ணு விரதம் இருப்பது, நாலரை மாத காலத்திற்குத் தினம் ஒரு வேளையே சாப்பிடுவது என்று விரதம் எடுத்துக் கொண்டேன். நான் இவ்விதம் செய்யாதிருக்கும்படி என் மனத்தை மாற்ற ஸ்ரீ காலென்பாக் முயன்றும் பயன்படவில்லை. என்னுடைய இப்பிராயச்சித்தத் தவம் சரியானதே என்பதை அவர் முடிவில் ஒப்புக்கொண்டார். தாமும் அவ்விரதத்தை மேற்கொள்ளப் போவதாகப் பிடிவாதம் செய்தார். அவருடைய தெள்ளத் தெளிவான அன்பை எதிர்க்க என்னால் ஆகவில்லை.

நான் செய்து கொண்ட இத்தீர்மானம் என் மனத்திலிருந்து பெரும் பாரத்தை நீக்கியதால் நான் அதிக மன ஆறுதலை அடைந்தேன்; குற்றம் செய்துவிட்டவர்கள் மீது இருந்தகோபம் குறைந்தது. அதற்குப் பதிலாக அவர்கள் மீது எனக்குப் பரிசுத்தமான இரக்கமே உண்டாயிற்று. இவ்வாறு எவ்வளவோ மன ஆறுதல் அடைந்தவனாக நான் போனிக்ஸ் போய்ச் சேர்ந்தேன். அச்சம்பவத்தைக் குறித்து மேற்கொண்டும் விசாரித்தேன். நான் அறிய வேண்டிய மற்றும் பல விவரங்களையும் தெரிந்து கொண்டேன்.

எனது பிராயச்சித்தத் தவம் எல்லோருக்கும் மனக்கஷ்டத்தை உண்டாக்கியது. ஆனால், அதனால் நிலைமை தெளிவடைந்தது. பாவம் செய்துவிடுவது எவ்வளவு பயங்கரமான காரியம் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொண்டார்கள். பையன்கள், பெண்கள் ஆகியோருக்கும் எனக்கும் இருந்த பந்தமும் பலன்தரத்தக்கதாகவும் உண்மையானதாகவும் ஆயிற்று. இச்சம்பவத்தில் ஏற்பட்ட ஒரு நிலைமையின் காரணமாகக் கொஞ்ச காலத்திற்குப் பிறகு பதினான்கு நாட்கள் உண்ணாவிரதத்தை நான் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. அதன் பலன்கள் நான் எதிர்பார்த்ததையும்விட அதிகமாகவே இருந்தன.

மாணவர்கள் ஏதாவது தகாத காரியத்தைச் செய்துவிட்டால், அதற்காக உண்ணாவிரதம் இருக்க வேண்டியது உபாத்தியாயரின் கடமை என்பதை இச்சம்பவங்களிலிருந்து எடுத்துக் காட்டுவது அல்ல என் நோக்கம்; என்றாலும், சில சமயங்களில் இவ்விதக் கடுமையான பரிகாரம் அவசியமாகிறது என்று நான் கருதுகிறேன். ஆனால், இப்பரிகாரத்தை மேற்கொள்ளுவதற்குத் தெளிவான நோக்கமும் ஆன்மிகத் தகுதியும் இருக்க வேண்டியது அவசியம். உபாத்தியாயருக்கும் மாணவருக்குமிடையே உண்மையான அன்பு இல்லாத போது, மாணவர் செய்துவிட்ட தவறைக் குறித்து மனப்பூர்வமான துயரம் உபாத்தியாயருக்கு ஏற்படாத போது, உபவாசம் பொருந்தாது. அது தீமையானதாகவும் ஆகக்கூடும். இத்தகைய விஷயங்களில் உண்ணாவிரதம்

இருப்பது என்பது சரிதானா என்பதைச் சந்தேகிக்க இடமிருந்த போதிலும், மாணவர்களின் தவறுக்கு உபாத்தியாயர்கள் பொறுப்பாளிகளாவார்கள் என்பதில் மாத்திரம் சந்தேகமே இல்லை.

['மகாத்மா காந்தியின் சுயசரிதை' என்ற நூலிலிருந்து எடுத்தது]

## 2

## சிறுவர், சிறுமிகளின் தவறு

[ஒரு சமயம் காந்திஜியின் ஆசிரமத்தைச் சேர்ந்த குழந்தைகள் ஏதோ தவறு செய்து விட்டனர். அதற்குப் பிராயச்சித்தமாகக் காந்திஜி ஏழு நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார். தமது அந்த உண்ணாவிரதத்தை விளக்கிக் காந்திஜி எழுதிய கட்டுரையைக் கீழே காணலாம்.]

சிறுவர்களிடையேயும், ஓரளவு சிறுமிகளிடையேயும் தவறுகள் நடப்பதை நான் கண்டுபிடித்தேன். நான் குறிப்பிடும் தவறுகளிலிருந்து எந்தக் கல்விச்சாலையும் அல்லது வேறு எந்த ஸ்தாபனமும் விடுதலை பெற்றிருக்கவில்லை என்பதை நான் அறிவேன். ஆசிரமம் அத்தகைய தவறுகளிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்பதே என் கவலையாகும். அத்தவறுகள் தேசத்தின் ஆண்மையையே சீரழித்து வருகிறது; யுவர்களின் ஒழுக்கத்தைக் கெடுத்து வருகிறது. சிறுவர்களைத் தண்டிப்பது அனுமதிக்கப் படுவதில்லை. எனது கட்டுப்பாட்டில் உள்ள இரண்டு பள்ளிக் கூடங்களில் நான் பெற்ற அனுபவமானது, தண்டனை தூய்மையாக்குவதில்லை என்பதை எனக்குக் கற்பித்திருக்கிறது. அதற்கு மாறாக, அது குழந்தைகளின் மனத்தைக் கல்லாக்கி விடுகிறது.

தென்னாப்பிரிக்காவில் அத்தகைய சந்தர்ப்பங்களில் நான் உண்ணாவிரதம் இருந்தேன். அதனால் சிறந்த பலன் ஏற்பட்டது என்பதே எனது அபிப்பிராயம். அதே நடவடிக்கையை இங்கும் நான் கைக்கொண்டுள்ளேன். அந்த நடவடிக்கையின் அடிப்படை பரஸ்பரம் உள்ள அன்பேயாகும். சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் என் மீது அன்பு உண்டென்பதை நான் அறிவேன். என் உயிரைக் கொடுப்பது, அவர்களை அப்பழுக்கு அற்றவர்களாகச் செய்யுமாயின், அவ்விதம் கொடுப்பதைக் காட்டிலும் எனக்குப் பெருமகிழ்ச்சியை அளிக்கக்கூடிய விஷயம் வேறு எதுவும் இல்லை. எனவே, இளைஞர்களைத் தங்களுடைய தவறுகளை உணரும்படி செய்வதற்கு நான் இதைக் காட்டிலும்

குறைவாக எதுவும் செய்ய முடியாது. இதுவரையில் உண்ணு விரதத்தின் மூலம் கிடைத்துள்ள பலன்கள் நம்பிக்கை அளிப்ப தாகவே இருக்கின்றன.

பலனை நான் பார்க்க முடியாவிட்டால்தான் என்ன? எனக்கு எது கடவுளின் சித்தம் என்று தோன்றுகிறதோ அதை நான் செய்கிறேன். பலன் அவரது கையில் இருக்கிறது. பெரிய விஷ யங்களுக்காகவும் சிறிய விஷயங்களுக்காகவும் துன்பத்திற்கு உள்ளாவதுதான் சத்தியாக்கிரகத்தின் முக்கிய தத்துவ மாகும்.

ஆனால், பள்ளிக்கூடக் குழந்தைகள் செய்யும் தவறுகளுக்கு ஏன் உபாத்தியாயர்கள் பிராயச்சித்தம் செய்யக் கூடாது? நான் பிரதம தலைவனாக இருக்கும் வரையில் அவர்கள் பிராயச் சித்தம் செய்ய முடியாது. என்னுடன் அவர்கள் உண்ணுவிரத மிருந்தால், எல்லா அலுவல்களும் ஸ்தம்பித்து நின்றுவிடும். பெரிய ஸ்தாபனங்களுக்கு எதுவோ அது சிறிய ஸ்தாபனங்களுக் கும் பொருந்தும். ஒரு மன்னன் தமது பிரஜைகளின் சிறப்புகளை யெல்லாம் தம்முடையவை என்று பெருமையடித்துக் கொள்ளு வது போல், தமது பிரஜைகளின் பாவங்களிலும் பங்கு எடுத்துக் கொள்ளவேண்டும், அதுபோலவே, சிறிய ஆசிரமத்தின் குட்டி மன்னனை நான், ஆசிரமக் குழந்தைகளிடையே உயர்வான நடத்தையுள்ள பலர் இருப்பதற்கு நானே பொறுப்பாளி என்று பெருமையுடன் கூறிக் கொள்ளுவதாயின், அவர்களில் மிகத் தாழ்ந்தவர்கள் செய்யும் பாவங்களுக்கு நானே பிராயச்சித்தம் செய்துகொள்ளவும் வேண்டும். இந்தியாவில் உள்ள மிகத் தாழ்ந்தவர்களின், எனக்குச் சக்தியிருக்குமாயின் உலகத்தில் உள்ள மிகத் தாழ்ந்தவர்களின் துக்கத்தில் நான் பங்கு எடுத் துக்கொள்ள வேண்டுமாயின், என் பாதுகாப்பில் உள்ள சின்னஞ் சிறுவர்களின் பாவங்களிலும் நான் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும். அவ்விதம் மிகவும் அடக்கத்துடன் செய்த வண்ணம் நான் என்றைக்காவது கடவுளை-சத்தியத்தை நேருக்கு நேர் காண முடியும் என்று நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 3—12—1925

# 3

# சொந்த நலனுக்காகச் சத்தியாக்கிரகம் கூடாது

சத்தியாக்கிரகத்தில் பல வகைகள் உண்டு. அந்தந்தச் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவாறு உண்ணுவிரதம் சத்தியாக்கிரகமாக இருக்கலாம்; சத்தியாக்கிரகம் அல்லாமலும் இருக்கலாம். இவ்விஷயமாக ஒரு நண்பர் கீழ்க்கண்டவாறு கேள்வி கேட்டுள்ளார்:

"மற்றொருவர் கொடுக்க வேண்டிய கடன் தொகையைத் திரும்பப் பெற ஒருவர் விரும்புகிறார். அவர் ஓர் ஒத்துழையாதவர். எனவே, அவர் கோர்ட்டுக்குச் சென்று சட்டத்தின் உதவியை நாட முடியாது. கடன் வாங்கியவர் தமக்குள்ள செல்வத்தின் மமதையால், கடன் கொடுத்தவரின் கோரிக்கையை லட்சியம் செய்வதில்லை; மத்தியஸ்தத்திற்கு இணங்கவும் மறுக்கிறார். இந்த நிலையில், கடன் கொடுத்தவர் கடன்காரரின் வீட்டு வாசற்படியில் உட்கார்ந்து கொண்டு உண்ணுவிரதம் இருந்தால், அது சத்தியாக்கிரகமாகுமா? பணம் கொடுத்தவர் தம்முடைய உண்ணுவிரதத்தினால் யாருக்கும் தீங்கு விளைவிக்க விரும்பவில்லை. ராமபிரானின் தரும ராஜ்ய காலத்திலிருந்து இம்முறையை நாம் அனுஷ்டித்து வருகிறோம். ஆனால், நீங்கள் இதை மிரட்டல் என்று கருதுகிறீர்கள் என என்னிடம் கூறுகிறார்கள். இவ்விஷயமாக உங்கள் நிலையை விளக்குவீர்களா?"

இந்தக் கேள்வி கேட்டிருப்பவரை நான் அறிவேன். பரிசுத்தமான நோக்கத்துடனேயே அவர் இதை எழுதியிருக்கிறார். ஆனால், சத்தியாக்கிரகத்தைப் பற்றி அவர் கூறியுள்ள விளக்கம் தவறானது என்பதில் சந்தேகமில்லை. ஒரு காலத்திலும் சொந்த லாபத்திற்காகச் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ள முடியாது. பணத்தைத் திரும்பப் பெறுவதற்காக உண்ணுவிரதம் இருப்பதை ஆதரிப்பதாயின், அயோக்கியர்கள் உண்ணுவிரதத்தை மேற்கொண்டு மக்களை மிரட்டிப் பணியும்படி செய்வதற்கு முடிவே இல்லாமற் போய்விடும். தேசத்தில் அத்தகையோர் பலர் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். உண்ணுவிரத முறையைச் சிலர் துஷ்பிரயோகம் செய்கிறார்கள் என்பதற்காக, நியாயமாக உண்ணுவிரதம் இருப்போரைக் கண்டிக்க வேண்டிய அவசியமில்லை என்று வாதிப்பது சரியல்ல. உண்ணுவிரதம் என்பது சத்தியாக்கிரகமே. உண்மையான உண்ணுவிரதத்திற்கும் போலி உண்ணுவிரதத்திற்கும் உள்ள வேற்றுமையை எல்லோரும் அறிந்துகொண்டுவிட முடியாது. உண்மையான சத்தியாக்கிரகம் என்று ஒருவர் கருதுவது அதற்கு நேர்மாறாக இருக்கலாம். ஆகையால், சொந்த லாபத்திற்காகச் சத்தியாக்கிரகத்தை

மேற்கொள்ளக் கூடாது; பிறரின் நன்மைக்காக மாத்திரமே சத்தியாக்கிரகத்தைக் கைக்கொள்ள வேண்டும். ஒரு சத்தியாக் கிரகி எப்போதும் துன்பத்தையும், பண நஷ்டத்தையும் அனுப விக்கத் தயாராக இருக்க வேண்டும்.

நல்ல மனிதர்கள் கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்வதன் விளைவாக நியாயமற்ற முறையில் லாபம் பெற அயோக்கியர்கள் இருந்துகொண்டுதான் இருப்பார்கள். ஒத்துழையாமையின் ஆரம் பத்தில் அதெல்லாம் எதிர்பார்க்கப்பட்டதேயாகும். அத்தகைய அபாயங்கள் இருப்பது தெரிந்தும்கூட, தைரியமாக ஒத்துழை யாமையைக் கைக்கொள்ளுவதே சிறந்ததென்று தோன்றியது.

ஆனால், ஓர் எதிராளிக்கு விரோதமாக உண்ணாவிரத உருவத்தில் சத்தியாக்கிரகத்தைக் கைக்கொள்ளுவது கூடாது. மிகவும் நெருங்கிய உறவினர் அல்லது நண்பர் விஷயத்தில், அதுவும் அவர்களுடைய நன்மைக்காக மாத்திரமே உண்ணாவிர தத்தை மேற்கொள்ள வேண்டும்.

தரும அல்லது இரக்க உணர்ச்சி மலிந்து கிடக்கும் இந்தி யாவைப் போன்ற ஒரு தேசத்தில், கொடுத்த பணத்தைத் திரும்பப் பெறுவதற்காக உண்ணாவிரதத்தைக் கைக்கொள்ளு வது அக்கிரமமாகும். தங்கள் விருப்பத்திற்கு விரோதமாக, ஆனால் அர்த்தமற்ற இரக்க உணர்ச்சி காரணமாகப் பணத்தைக் கொடுத்துவிடும் ஜனங்களை நான் பார்த்திருக்கிறேன். எனவே, நம் தேசத்தைப் போன்ற ஓரிடத்தில் சத்தியாக்கிரகி மிகவும் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும். சிலர், உண்ணா விரதத்தைக் கொண்டு தமக்கு வரவேண்டிய தொகையைத் திரும்பப் பெறுவதில் வெற்றி பெறலாம். ஆனால், அதை நான் சத்தியாக்கிரகத்தின் வெற்றி என்று கூறமாட்டேன்; துராக் கிரகத்தின் அல்லது பலாத்காரத்தின் வெற்றி என்றே கூறுவேன். சத்தியத்தை உறுதிப்படுத்துவதற்காக மரணத்தை வரவேற்பதிலேயே சத்தியாக்கிரகத்தின் வெற்றி அடங்கியிருக் கிறது. ஒரு சத்தியாக்கிரகி எப்போதும், சத்தியாக்கிரகத்தின் பலனை அடைவதில் பற்றற்றவராகவே இருப்பார். கொடுத்த பணத்தைத் திரும்பப் பெற முயற்சிப்போர் அவ்விதம் பற்றற்றவராக இருக்க முடியாது. எனவே, சொந்த லாபத்திற் காக உண்ணாவிரதம் இருப்பதும், மிரட்டுவதும் அறியாமையினால் ஏற்பட்ட விளைவேயாகும் என்பது எனது தெளிவான அபிப் பிராயம்.

—'எங் இந்தியா' - 30—9—1926

# 4

# உண்ணுவிரதம் நிர்ப்பந்தமாகுமா ?

'உங்களுடைய உண்ணுவிரதம் பிறரை நிர்ப்பந்தப்படுத்துவதாகாதா?' இவ்விதம் ஒரு கேள்வி கேட்ட ரெவரன்ட் ஸ்டான்லி ஜோன்ஸ் என்ற அமெரிக்கப் பிரமுகருக்குப் பதிலாகக் காந்திஜி கூறியதாவது :

எனது உண்ணுவிரதம் அன்பிலிருந்து எழுகின்றது என்பது ஒப்புக்கொள்ளப்படுமாயின், குழந்தைகளிடம் பெற்றோர்களுக்கு உள்ள அன்போ அல்லது பெற்றோர்களிடம் குழந்தைகளுக்கு உள்ள அன்போ, மனைவியிடம் கணவனுக்கு உள்ள அன்போ அல்லது கணவனிடம் மனைவிக்கு உள்ள அன்போ, இன்னும் பொதுவான பெரும் உதாரணம் கூறுவதாயின், தங்களுக்கு எல்லாமாக இருக்கும் ஏசுநாதரிடம் கிறிஸ்தவர்களுக்கு உள்ள அன்போ நிர்ப்பந்தப்படுத்துவதாகும் என்று கூறுவதாயின், எனது உண்ணுவிரதமும் நிர்ப்பந்தப்படுத்துவதேயாகும். ஏசுநாதரின் அன்பானது, ஆயிரக்கணக்கான அவரது பக்தர்களின் அறிவையும் உணர்ச்சியையும் தன் வசப்படுத்திக்கொண்டது. என்னுடைய குழந்தைப் பருவத்தில், என் பெற்றோர்கள் மீது எனக்கிருந்த அன்பு, நான் பாவம் செய்துவிடாமல் என்னைத் தடுத்து வந்தது. எனக்கு ஐம்பது வயதான பிறகுகூட, என் குழந்தைகளிடமும் நண்பர்களிடமும் எனக்குள்ள அன்பானது நிச்சயமாக என்னை அழிவுப் பாதையிலிருந்து தடுத்ததெனலாம். அந்த அன்பின் மகத்தான செல்வாக்கு இராவிடில், நான் அப் பாதையில் நிச்சயமாகச் சென்றிருப்பேன். இத்தகைய அன்பையெல்லாம் நிர்ப்பந்தப்படுத்தும் செய்கை என்று கூறுவதாயின் எனது உண்ணு விரதமும் நிர்ப்பந்தப் படுத்துவதேயாகும்; எனினும், வேறு எவ்விதத்திலும் அது நிர்ப்பந்தப்படுத்துவதாகாது.

ஹிந்து மதத்திலேயே உண்ணுவிரதம் ஒரு மாபெரும் தருமமாகும்; வேறு எந்த மதத்திலும் அவ்விதம் இல்லை எனலாம். உண்ணுவிரதம் இருக்க உரிமையில்லாதவர்களால் அது துஷ்பிரயோகம் செய்யப்பட்டுளதெனினும், மொத்தத்தில் அதனால் ஹிந்து மதத்திற்கு மிகவும் அதிகமான நன்மையே ஏற்பட்டிருக்கிறது. உண்ணுவிரதமின்றி பிரார்த்தனையில்லை, பிரார்த்தனையின்றி உண்மையான உண்ணுவிரதம் இல்லை என்பதே எனது நம்பிக்கையாகும். எனது உண்ணுவிரதம் வேதனை அடைந்துள்ள ஓர் ஆன்மாவின் பிரார்த்தனையாகும்.

—' ஹரிஜன் ' - 11—2—1933

# 5

# இறுதியான ஆயுதம்

ஒரு சாத்விக நபரின் கையில், தன் உயிரையே தியாகம் செய்வதுதான் இறுதியான ஆயுதமாகும். அதைக் காட்டிலும் அதிகமாக எதையும் தியாகம் செய்யும் சக்தி மனிதனுக்கு இல்லை. ஆகையால், இந்தச் சக ஊழியருக்கும் மற்றவர்களுக்கும் நான் கூறும் யோசனை என்னவெனில், தீண்டாமையை எதிர்த்து நடைபெற்று வரும் மதப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்போருக்கு அவசர அழைப்பு வருமாயின், அவர்கள் இறக்கும் வரையில் உண்ணுவிரதம் இருக்க மகிழ்ச்சியுடன் தயாராக இருக்க வேண்டும் என்பதே.

கஷ்டத்தில் சிக்கிக் கொண்ட மக்கள் தங்கள் கஷ்டம் தீருவதற்காகப் பிரார்த்தனை செய்வதாகவும், கடவுளின் நெஞ்சம் கரையாதது போல் தோன்றிய போது, தங்களுடைய பிரார்த்தனைக்கு அவர் செவி கொடுக்கும் வரையில் கால வரையறையின்றி உண்ணுவிரதம் இருக்கத் தீர்மானித்ததாகவும் சாஸ்திரங்கள் நமக்குக் கூறுகின்றன. இறுதியில் அவர்களுடைய பிரார்த்தனைக்கு இரங்கிக் கடவுள் அருள் செய்ததால், அவர்கள் உண்ணுவிரதத்தைக் கைவிட்டு உயிர் பிழைத்தனர் என்றுதான் மத சரித்திரம் நமக்குக் கூறுகிறது; ஆனால், பிரார்த்தனையைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் செவிடாக இருந்த கடவுளிடமிருந்து பதிலைப் பெறும் முயற்சியில் மௌனமாகவும் வீரமாகவும் உயிர்நீத்தவர்களைப் பற்றி அச்சரித்திரம் எதுவும் கூறவில்லை. பலர் அவ்வாறு வீரமரணம் அடைந்துள்ளனர் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். எனினும், இறுதி வரையில் அவர்களுக்குக் கடவுளிடமும் அகிம்சையிலும் உள்ள நம்பிக்கை அணுவளவும் குறையவில்லை. நமது பிரார்த்தனைகளுக்குக் கடவுள் எப்போதும் நாம் விரும்பும் விதத்தில் பதில் அளிப்பதில்லை. அவருக்கு வாழ்வு, மரணம் எல்லாம் ஒன்றுதான். பெயர் தெரியாத ஆயிரக்கணக்கான வீரர்கள், வீராங்கனைகளின் மௌனமான மரணத்தினல்தான், இந்த உலகில் தூய்மையானவையும் சிறந்தவையும் அழியாமல் இருக்கின்றன என்பதை யார் மறுக்க முடியும்?

— 'ஹரிஜன்' - 4—3—1933

# 6

# கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட ஆயுதம்

சத்தியாக்கிரக ஆயுதசாலையில் உண்ணாவிரதம் சக்தி பொருந்திய ஓர் ஆயுதமாகும். அந்த ஆயுதத்தை எல்லோரும் கையாள முடியாது. உண்ணாவிரதம் இருப்பதற்கு உடலில் சக்தி இருந்தால் மாத்திரம் போதாது. கடவுளிடம் ஜீவநம்பிக்கையின்றேல், அத்தகைய உண்ணாவிரதத்தினால் பலனில்லை. அது யந்திரம் போல் உணர்ச்சியின்றி செய்யக்கூடிய விஷயமும் அல்ல; அது பிறரைப் பார்த்து வெறும் 'காப்பி' யடிக்கும் காரியமும் அல்ல. ஒருவரது ஆன்மாவின் ஆழத்திலிருந்து அது வர வேண்டும். எனவே, அத்தகைய உண்ணாவிரதம் அபூர்வமாக இருக்கும். நான் அதற்காகவே பிறந்தவன் என்று தோன்றுகிறது. ராஜீயத்துறையில் உள்ள என் சகாக்களில் ஒருவருக்குக் கூட உண்ணாவிரதம் இருக்கும் உள் உணர்வு கட்டளையிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். எனது உண்ணாவிரதங்களைக் குறித்து அவர்கள் கோபம் கொள்ளாததற்காக நான் அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன். அபூர்வமான சந்தர்ப்பங்களில், ஆசிரமத்தில் உள்ள என் சக ஊழியர்களுக்கு உண்ணாவிரதம் இருக்கும்படி அந்தராத்மா கட்டளையிட்டது உண்டு. அந்தராத்மாவின் கட்டளை எவ்வளவு அவசரமானதாக இருப்பினும், என் அனுமதியின்றி உண்ணாவிரதங்கள் இருக்கக்கூடாதென்ற கட்டுப்பாட்டைக்கூட அவர்கள் ஒப்புக்கொண்டனர்.

இவ்விதமாக, உண்ணாவிரதம் மிகவும் சக்தி வாய்ந்த ஓர் ஆயுதமாயினும், அது மிகவும் கண்டிப்பான கட்டுப்பாடுகளுடன் இருக்க வேண்டியது அவசியமாகிறது. முன்கூட்டியே பயிற்சி பெற்றவர்கள் மாத்திரமே அதை மேற்கொள்ள முடியும். நான் குறிப்பிட்டுள்ள தரத்தின்படி அதைத் தீர்மானிப்பதாயின், பெரும்பாலான உண்ணாவிரதங்களும் சத்தியாக்கிரக உண்ணாவிரதங்கள் என்ற பிரிவின் கீழ் வருவதில்லை. அவை எல்லோராலும் பட்டினி கிடப்பது என்றே கூறப்படுகின்றன. அத்தகைய பட்டினிகள் போதிய யோசனையின்றியும் முன்னேற்பாடு இல்லாமலும் மேற்கொள்ளப்படுகின்றன. அந்த முறை அடிக்கடி கைக்கொள்ளப்படுமாயின், ஒரு வேளை அதில் இருக்கக் கூடிய கொஞ்ச நஞ்ச சக்தியும் போய், அது பிறர் கேலி செய்வதற்குக் காரணமான நடவடிக்கையாகி விடும்.

— 'ஹரிஜன்' 18—3—1939

# 7

# தூய்மையே உண்ணாவிரதத்தின் அடிப்படை

இப்போதெல்லாம் சத்தியாக்கிரகத்தின் பெயரால் ஏராளமான உண்ணாவிரதங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. நமக்குத் தெரிந்த பல உண்ணாவிரதங்களும் பொருளற்றவையாக இருக்கின்றன. பல தூய்மையற்றவையாக இருக்கின்றன எனலாம். உண்ணாவிரதம் நெருப்பைப் போன்ற ஓர் ஆயுதமாகும். அதற்கென ஒரு சாஸ்திரமே இருக்கிறது. எனக்குத் தெரிந்த வரையில், அதைப் பூரணமாக அறிந்தவர் யாருமே இல்லை. சாஸ்திரத்திற்கு முரணான விதத்தில் அதைப் பரிசோதனை செய்வது, உண்ணாவிரதம் இருப்போருக்கு அபாயகரமானது; உண்ணாவிரதத்தின் நோக்கத்திற்கும்கூட பாதகம் விளைவிக்கக்கூடியது. எனவே, அவ்விதம் செய்வதற்கான உரிமையைச் சம்பாதித்துக் கொள்ளாத எவரும் இந்த ஆயுதத்தை உபயோகிக்கக்கூடாது. ஒருவர் யாருக்கு எதிராக உண்ணாவிரதத்தைக் கைக்கொள்ளுகிறாரோ அவருடன், உண்ணாவிரதம் இருப்பவருக்குத் தொடர்பு இருந்தால் மாத்திரமே அவ்விதம் செய்யலாம். எந்த நோக்கத்துடன் உண்ணாவிரதம் இருக்கிறாரோ அந்த நோக்கத்துடன் அவருக்கு நேரடியான சம்பந்தம் இருக்க வேண்டும். பகத் புல்சிங் சமீபத்தில் மேற்கொண்ட உண்ணாவிரதம் அத்தகையதொன்றாகும். மாத் கிராமத்திலுள்ள மக்களுடன் அவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்; அந்த இடத்தில் உள்ள ஹரிஜனங்களுக்கும் அவர் தொண்டு செய்துள்ளார். அந்தக் கிராமவாசிகள் ஹரிஜனங்களுக்குத் தவறு இழைத்து வந்தனர். அவர்களுக்கு நீதி கிடைக்கும்படி செய்வதற்கான எல்லாமுறைகளையும் கைக்கொண்டு தோல்வி அடைந்த பிறகே, புல்சிங்ஜி உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். அங்கிலையில் புல்சிங்ஜியைப் போன்ற ஒருவருக்கு உண்ணாவிரதம் இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. அவர் உண்ணாவிரதம் இருந்து, அதில் வெற்றியும் பெற்றார். வெற்றியோ அல்லது தோல்வியோ முற்றிலும் கடவுளின் அருளைப் பொறுத்ததாகும்.

பொதுப் பிரச்னைகளுக்காக நான் மேற்கொண்ட உண்ணாவிரதங்களெல்லாம் இந்த ரகத்தைச் சேர்ந்தவையே. அவையெல்லாவற்றிலும் ராஜ்கோட் உண்ணாவிரதத்திலிருந்து கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது. அது பலராலும் முற்றிலும் கண்டிக்கப்பட்டுளது. உண்ணாவிரதத்தை மேற்கொண்ட போது, அது தூய்மையாகவும் அவசியமாகவுமே இருந்தது. ராஜ்கோட் பிரச்னையில் தலையிடும்படி நான் வைஸ்ராயைக்

கேட்டபோதுதான், உண்ணாவிரதத்திற்கு மாசு ஏற்பட்டது. வைஸ்ராயை நான் கேட்டிராவிடில், அதன் பலன் ஆச்சரியமாக இருந்திருக்கும் என்பது எனது உறுதியான அபிப்பிராயம். அவ்விதம் மாசு ஏற்பட்டும்கூட, உண்ணாவிரதத்தினால் நாம் கொண்ட லட்சியத்திற்கு வெற்றியே கிடைத்தது. ஏனென்றால், கடவுள் என் கண்களைத் திறக்க விரும்பினார். அவர் என்னைப் பட்டினி கிடக்கும்படி செய்தார். எனவே, ராஜ்கோட் உண்ணாவிரதம் சத்தியாக்கிரகிக்குப் பயன் அளிக்கத்தக்க ஆராய்ச்சியாக இருக்கிறது. உண்ணாவிரத சம்பந்தமாக நான் விதித்துள்ள கொள்கைகள் அங்கீகரிக்கப்படுவதாக வைத்துக்கொண்டால், ராஜ்கோட் உண்ணாவிரதம் அவசியமானது என்பதில் சந்தேகமில்லை. தூய்மையான ஒரு நடவடிக்கையில் ஈடுபடுவோர் கண்காணிப்புடன் இராவிடில், அது எவ்விதம் களங்கம் அடைந்துவிடக்கூடும் என்பதுதான் கவனிக்க வேண்டிய முக்கிய விஷயமாகும். சுயநலம், கோபம், நம்பிக்கைக்குறைவு அல்லது பொறுமையின்மை முதலியவற்றிற்குத் தூய்மையான உண்ணாவிரதத்தில் இடமில்லை. இந்தக் குறைகளெல்லாம் எனது ராஜ்கோட் உண்ணாவிரதத்தில் படர்ந்துவிட்டன என்பது மிகைபடக் கூறுவதல்ல.

நான் உண்ணாவிரதத்தைக் கைவிடுவது, காலஞ் சென்ற தாகூர் சாகேப் சில நிபந்தனைகளைநிறைவேற்றுவதையே பொறுத்திருந்தது. இந்த நிலை என் சுயநலத்தையே காட்டுகிறது. அதாவது, எனது முயற்சியின் பலனை அடைய வேண்டுமென்ற சுயநல ஆசை எனக்கு இருந்தது. என் மனத்தில் கோபம் இல்லாவிடில், அப்பிரச்னையைத் தீர்ப்பதற்கு வைஸ்ராயின் உதவியை நான் நாடியிருக்கமாட்டேன். எனது அன்பு, அவ்விதம் செய்வதிலிருந்து என்னைத் தடுத்திருக்கவேண்டும். ஏனெனில், தாகூர் சாகேபை உண்மையில் எனது புதல்வனைப் போல் நான் எண்ணியிருந்தால், அவ்ரைப்பற்றி அவரது எஜமானரிடம் ஏன் புகார் கூற வேண்டும்? அவ்விதம் நான் புகார் கூறியதில், எனது நம்பிக்கையின்மையையே நான் வெளிப்படுத்திக்கொண்டேன். எனது அன்பினால், தாகூர் சாகேபின் மனம் உருகிவிடாதென்று நான் நினைத்தேன். என் உண்ணாவிரதத்தை முடித்துவிடவும் நான் அவசரப்பட்டேன். இந்தக் குறைகளெல்லாம், என் உண்ணாவிரதத்தைத் தூய்மையற்றதாகச் செய்துவிட்டன. ராஜ்கோட் உண்ணாவிரதத்தினால் ஏற்பட்ட பல பலன்களையும் பற்றிச் சிந்திப்பது இங்கே பொருத்தமற்றதாகும். எனவே, நான் அவ்விதம் செய்ய முற்சிக்கவில்லை. உண்ணாவிரதம் இருப்போர், எல்லையின்றி எவ்வளவு விழிப்புடனும், கடவுளைப் பிரார்த்தனை செய்துகொண்டும் இருக்க வேண்டும் என்பதை நாம் தெரிந்து கொண்டுள்ளோம். சிறிதளவு கவனமின்மைகூட, ஒரு நல்ல லட்சியத்திற்குக் கேடு விளைவித்துவிடும் என்பதற்கும் இந்த உண்ணாவிரதம் ஒரு படிப்பினையாகும். ஒரு சத்தியாக்கிரகி

சத்தியத்தையும் சாத்விகத்தையும் கடைப்பிடிக்க வேண்டும். அவற்றுடன், கடவுள் தனக்கு சக்தியைக் கொடுப்பார் என்ற நம்பிக்கையும் அவருக்கு இருக்கவேண்டும். உண்ணுவிரதத்தில் சிறிதளவு களங்கம் ஏற்பட்டாலும், உண்ணுவிரதத்தைக் கைவிட்டுவிட அவர் தயங்கக்கூடாது. எல்லையற்ற பொறுமை, உறுதியான தீர்மானம், நோக்கத்தில் முழுக் கவனம், குற்றம் குறையற்ற மன அமைதி, கோபமின்மை இவையெல்லாம் சத்தியாக்கிரகியிடம் அவசியம் இருந்து தீர வேண்டும். இந்தக் குணங்களையெல்லாம் உடனடியாக அபிவிருத்தி செய்து கொள்ளுவது எவருக்கும் அசாத்தியமாகும். எனவே, அகிம்சை விதிகளைப் பின்பற்றுவதில் தங்களையே அர்ப்பணம் செய்து கொள்ளாத எவரும், ஒரு சத்தியாக்கிரகியின் உண்ணுவிரதத்தை மேற்கொள்ளக்கூடாது. இங்கே வாசகர்கள் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும் என்பதே என் விருப்பம். அதாவது உடல் சம்பந்தமான அல்லது ஆன்ம பரிசுத்தத்திற்காக உண்ணுவிரதங் களைக் கைக்கொள்ளுவது பற்றி நான் எதுவும் கூறவில்லை. உடல் தூய்மை சம்பந்தமாக இயற்கை வைத்திய டாக்டர் களிடம் கலந்து ஆலோசிக்க வேண்டும். மகாபாவிகள்கூட உடல் பரிசுத்தத்திற்கான உண்ணுவிரதத்தை மேற்கொள்ள முடியும். இந்தவிதமான உண்ணுவிரதத்தைப் பற்றி நம்மிடம் உண்மையான ஓர் இலக்கியச் சுரங்கமே இருக்கிறது. ஆன்ம பரிசுத்தத்திற்கான உண்ணுவிரதங்களை நம் காலத்தில் மறந்து விட்டார்கள். ஒரு வேளை எப்போதாவது அவை மேற்கொள்ளப் பட்டாலும், அது பிறரைப் போல் நாமும் செய்யவேண்டும் என்ற நோக்கத்தையோ அல்லது வெறும் சம்பிரதாயத்தையோ அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எனவே, அவற்றிலிருந்து நாம் அடையவேண்டிய பலனை அடைய முடிவதில்லை. ஒரு சத்தியாக்கிரகியின் உண்ணுவிரதத்தை மேற்கொள்ள விரும்பு வோர், ஆன்ம பரிசுத்தத்திற்காக மேற்கொள்ளப்படும் உண்ணு விரதங்களில் சொந்த அனுபவம் இருக்க வேண்டியது அத்தியா வசியமாகும். உடலுக்குள் இருக்கும் அசுத்தங்களைக் களைவ தற்காக இருக்கும் உண்ணுவிரதங்களும் பலனை அளிக்கக் கூடியவை. இறுதியாக, உண்ணுவிரதக் கொள்கை முழுவதற் குமே ஒரே ஒரு அடிப்படைதான் உண்டு. அதுதான் பரிசுத்தம் என்பதாகும்.

—'ஹரிஜன்' - 13—10—1940

# 8

# கடைசி முறையே உண்ணாவிரதம்

சத்தியாக்கிரக ஆயுதசாலையில், உண்ணாவிரதம்தான் குறி தவறாத ஓர் ஆயுதம் என்று கூறும் துணிச்சல் எனக்கு இருக்கிறது. சத்தியாக்கிரகத்தின் கர்த்தா என்ற முறையில், நானே அதை உபயோகித்துள்ளேன். சத்தியாக்கிரக சம்பந்தமாக உண்ணாவிரதம் இருக்கும் எவரும், முதலில் என்னுடைய அனுமதியை நாட வேண்டும். அதை மேற்கொள்ளுமுன் எழுத்து மூலம் என்னிடமிருந்து அனுமதி பெற வேண்டும். இந்த யோசனை பின்பற்றப்படுமாயின், என் வாழ்நாள் வரையிலாவது அவ்விஷயமாக விதிகளை வகுக்க வேண்டிய அவசியம் இராது.

என்றாலும், அதன் சம்பந்தமாகப் பொதுவான ஒரு கொள்கையைப் பிரகடனம் செய்ய விரும்புகிறேன். அதாவது ஒரு சத்தியாக்கிரகி, கடைசியான முறையாக மாத்திரமே உண்ணாவிரதத்தைக் கைக்கொள்ள வேண்டும். மற்ற எல்லா முறைகளையும் கைக்கொண்டும் பலனில்லாமல் போனால்தான், உண்ணாவிரதத்தை மேற்கொள்ள வேண்டும். உண்ணாவிரதங்களில், பிறரைக் 'காப்பி' அடிக்கும் வேலைக்கு இடமே இல்லை. மனோ பலம் இராத எவரும், உண்ணாவிரதத்தைப் பற்றிக் கனவிலும் கருதக்கூடாது; வெற்றியில் பற்றுதலுடன் அதை எக்காலத்திலும் மேற்கொள்ளக்கூடாது. ஆனால், ஒரு சத்தியாக்கிரகி உறுதியான கொள்கை காரணமாக உண்ணாவிரதத்தை மேற்கொண்டு விட்டால், தமது நடவடிக்கையால் பலன் கிடைக்க சந்தர்ப்பம் இருந்தாலும் இராவிட்டாலும், தமது தீர்மானத்தில் விடாப்பிடியாக நிற்க வேண்டும். உண்ணாவிரதத்தால் பலன் ஏற்பட முடியாது அல்லது பலன் ஏற்படும் என்பது இதன் அர்த்தமல்ல. பலனை எதிர்பார்த்தவண்ணம் உண்ணாவிரதம் இருப்பவர், பொதுவாகத் தோல்வியே அடைவார். அவர் தோல்வியடைந்ததாகத் தோன்றாவிடினும், உண்மையான உண்ணாவிரதம் அளிக்கும் உள்ளத்தின் ஆனந்தத்தை அவர் இழந்துவிடுகிறார்.

உண்ணாவிரதம் இருக்கும் ஒருவர் பழரசம் அருந்த வேண்டுமா அல்லது வேண்டாமா என்பது, உண்ணாவிரதத்தைத் தாங்கும் அவரது உடல் வலுவைப் பொறுத்திருக்கிறது. ஆனால், உடலுக்கு அத்தியாவசியமாக வேண்டிய அளவுக்கு அதிகமாகப் பழரசம் அருந்தக்கூடாது. தண்ணீர் மாத்திரம் அருந்துபவர்தான், மகத்தான மனோ பலம் உடையவராக இருக்கிறார்.

சுயநல நோக்கத்துடன், உதாரணமாகத் தனது சம்பளம் அதிகமாக வேண்டும் என்பதற்காக ஒருவர் உண்ணுவிரதம் இருப்பது தவருகும். எனினும், சில சந்தர்ப்பங்களில், சம்பளம் அதிகமாவதற்காக ஒரு கோஷ்டியின் சார்பில் உண்ணுவிரதம் இருப்பது அனுமதிக்கத்தக்கதே.

பிளேக் நோயைப் போல், வெட்கக்கேடான உண்ணுவிர தங்கள் பரவி வருகின்றன. அவை அபாயகரமானவையாகும். எனினும், உண்ணுவிரதம் ஒரு கடமையாகிவிடும்போது, அதைக் கைவிடுவது முடியாத காரியம். எனவே, அவசியமானது என்று நான் கருதும்போது நான் உண்ணுவிரதம் இருக்கிறேன்; எக் காரணம் கொண்டும் அதை நான் கைவிட முடியாது. நான் என்ன செய்கிறேனே அதையே, அது போன்ற சந்தர்ப்பங்களில் மற்றவர்களும் செய்வதை நான் தடுக்க முடியாது. மிகச் சிறந்த காரியங்கள்கூட துஷ்பிரயோகம் செய்யப்படுகின்றன என்பது பொதுவாக எல்லோரும் அறிந்ததே. ஒவ்வொரு நாளும் அவ் விதம் நேருவதை நாம் காண்கிறோம்.

—'ஹரிஜன்' - 21—4—1946

# 9

# ஆடவர்களின் பங்கு

*[1930 ஏப்ரல் 13-ஆம் தேதி தண்டியில் நடந்த பெண்கள் மகாநாட்டிற்குப் பிறகு ஆண்கள் அடங்கிய கூட்டமொன்று நடந்தது. அப்போது காந்திஜி நிகழ்த்திய அரும் பிரசங்கம் இங்கே தரப்பட்டிருக்கிறது:]*

நான் இப்போதுதான் பெண்கள் மகாநாட்டை முடித்து விட்டு வந்துள்ளேன். பெண்களின் இயக்கத்தில் ஆடவர்களா கிய நாம் என்ன பங்கு எடுத்துக்கொள்ளலாம் என்பதை அறிய நீங்கள் ஆர்வம் கொள்ளுவீர்கள். முதலாவதாக, கள்ளுக்கடை களையும் அந்நிய ஜவுளிக் கடைகளையும் பெண்கள் செய்து வரும் மறியலில் நாம் தலையிடக்கூடாது. நாம் தலையிட்டால், 1921-இல் நாம் செய்தது போல், அதைக் குழப்பிவிடுவோம். அவர்களுக்குப் பலவிதத்திலும் நாம் உதவி செய்ய முடியும். ஒரு விசேஷ மான, தனித் துறையில் அவர்கள் தொண்டு புரிவதற்கென்றே அந்த இரண்டுவித மறியல்களும் உருவாக்கப்பட்டுள்ளன. கள், சாராய வியாபாரிகளை நாம் அறிமுகப்படுத்திக் கொள்ள லாம். அவர்களை நேரில் பேட்டி காணலாம். இப்போது நாடு ஒரு புதிய வாழ்வைச் சிருஷ்டிக்கும் பிரசவ வேதனையில் இருந்து வருவதால், கள், சாராய விற்பனையை விட்டுவிட

வேண்டுமென்று நாம் கேட்டுக்கொள்ளலாம். நமது பெண்களிடம் அதிக மென்மையுடனும் மரியாதையுடனும் நடந்து கொள்ளுவதன் மூலம் நாம் உதவி புரிய முடியும். அத்தகைய சிறந்த சூழ்நிலை, சாராய வியாபாரி, அந்நிய ஜவுளி வியாபாரி, அவற்றை வாங்குவோர், குடிகாரர் முதலியோரின் மனத்தைக்கூட மாற்றத் தொடங்கும். இயற்கையிலேயே சாந்த சுபாவமுள்ள, உள்ளத்தைத் தொடும் பெண்களின் வேண்டுகோளை அவர்கள் அலட்சியம் செய்ய முடியாது. இந்தக் குணங்களில் பெண்கள் ஆடவர்களை வென்றுவிடுகிறார்கள் என்பதே எனது அபிப்பிராயம். அக்குணங்களில் அகிம்சை சிறப்பானதொன்றாகும். மனிதன் மிகவும் கஷ்டத்துடன் கூடிய ஆராய்ச்சி முறையின் மூலமே அந்தக் குணத்தைப் பெறுகிறான். ஆனால், இயற்கையாகவும் எடுத்த எடுப்பிலும் பெண்கள் அகிம்சையைக் கையாளுகிறார்கள். பெண்களுக்குத் தேவையானபோது யோசனை கூறியும் வழி காட்டியும் நாம் அவர்களுக்கு உதவி செய்யலாம். ஆனால், பெண்கள் செய்யும் மறியலில் நாம் தலையிடுவதைக் காட்டிலும், அவர்கள் தன்னிச்சையாகத் தொண்டு செய்யும்படி விட்டுவிட்டால். அதிக சீக்கிரத்தில் அவர்கள் லட்சியத்தை அடையக்கூடும். அந்தக் கடமையைத்தான் முன்னரேயே டாக்டர் சுமந்த் மேத்தாவும், ஸ்ரீஜத் காஞ்சிபாயும் ஏற்றுக்கொண்டுள்ளனர்.

பெண்கள் செய்ய வேண்டிய ஆக்க வேலையும் இருக்கிறது. அதுதான் கதர் உற்பத்தியாகும். ஒவ்வொரு ஆடவர், பெண், குழந்தைகளின் உதவி இந்த வேலைக்குத் தேவையாக இருக்கிறது. பருத்தி எடுப்பது, அடிப்பது, சுத்தம் செய்வது, நூற்பது முதலிய எல்லா வேலைகளையும் நாம் கற்றுக்கொள்ள வேண்டும். இவையெல்லாம் மிகவும் சுலபமான வேலைகள்; ஆர்வம் இருந்தால் எளிதாகக் கற்றுக்கொண்டு விடவும் முடியும். சமைக்கவும் நீந்தவும் கற்றுக்கொள்ளுவதைவிட இது கஷ்டமல்ல. நம் வீடுகளில் கதரை உற்பத்தி செய்ய நாம் கற்றுக்கொள்ளாவிடில், அந்நிய ஜவுளி பகிஷ்காரம் என்பதே இராது என்று நான் கூறுவதை நம்புங்கள். கதர் உற்பத்திப் பிரச்னை என்பது, ஒவ்வொரு பெண்ணும் ஆடவரும் தம் சொந்தத்தில் நூற்க வேண்டிய பிரச்னையே ஆகும். இயற்கையான, பொது மக்கள் யாவரும் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடிய சர்வசாதாரணமான இந்த ஒரே ஒரு நடவடிக்கை, மாபெரும் உடை விநியோகப் பிரச்னையையே தீர்த்துவிடுவதாக இருக்கிறது. நம் தேசத்தில் போதிய நெசவாளர்கள் இருக்கின்றனர்; ஆனால், போதிய நூற்போர் இல்லை. தினந்தோறும் லட்சக்கணக்கானவர்கள் நூற்கும் நூல் நம்மிடம் இருக்கும்போது, நாம் நெசவாளர்களை அணுகி, அந்த நூலை நெய்யும்படி செய்ய வேண்டும். ஆரம்பத்தில் சிறிதளவு செயல் திறன் இதற்குத் தேவையாகும். எனினும், உப்பு வரியையொட்டி நாம் மன உறுதி கொண்டது போல, இவ்விஷயத்திலும் உறுதி கொண்டால் இதைச் செய்துவிட முடியும்.

நாம் என்ன செய்யலாம், என்ன செய்யக் கடமைப்பட்டுள்ளோம் என்பதைப் பற்றி இவ்வளவு தூரம் சொல்லியாகிவிட்டது. நாம் என்ன செய்யக்கூடாது.என்பதைப் பற்றி இப்போது கூறுகிறேன். 1921-இல் நிகழ்ந்தது போல், மற்றவர்களுடைய தலைகளிலிருந்து அந்நிய நாட்டுக் குல்லாய்களைப் பலாத்கார்மாகக் கைப்பற்றும் வழக்கம் ஆரம்பமாகியிருப்பதாகப் பம்பாயில் உள்ளவர்களிடமிருந்து எனக்குப் புகார்கள் கிடைத்துள்ளன. அது எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்குத் தெரியாது. அது எவ்வளவு தூரம் உண்மையாக இருந்தாலும், அது மறுபடியும் நடைபெற வேண்டாம். நல்ல காரியத்தைச் செய்யும் விஷயத்தில்கூட, நாம் நிர்ப்பந்தத்தைப் உபயோகிக்க முடியாது. எவ்வித நிர்ப்பந்தமும் நமது லட்சியத்தைப் பாழாக்கிவிடும். நாம் லட்சியத்திற்கு அருகில் வந்திருப்பதாக நான் உணருகிறேன். நிர்ப்பந்தத்தைப் புகுத்துவதன் மூலம் இயக்கம் சீர்கெட்டு விடுமாயின், சுயத்தூய்மை வாரத்தின்போது நாம் செய்த அற்புதமான வேலைகள் எல்லாம் பாழாகிவிடும். கொடியவர்களைக்கூட நிர்ப்பந்தப்படுத்துவதல்ல, அவர்களுடைய மனம் மாறும்படி செய்வதே இந்த இயக்கமாகும். நாம் அறிந்த நண்பர்களும் சகாக்களும் ஒரு நல்ல காரியத்தைச் செய்ய மறுத்தாலோ அல்லது கொடுத்த வாக்குறுதியை மீறினலோ, அவர்களுக்கு எதிராக நாம் சத்தியாக்கிரகம் செய்யலாம். உங்களுடைய சகாக்கள் ஒரு நல்ல காரியத்திற்குச் செவி சாய்க்காவிடில், உங்களிடம் சக்தியும் தூய்மையும் இருக்குமாயின், நீங்கள் அவர்களுக்கு எதிராகச் சத்தியாக்கிரகம் செய்யலாம், அதாவது உண்ணுவிரதம் இருக்கலாம். எனக்குச் சக்தியும் தூய்மையும் இருக்குமாயின், இன்று நம் நாட்டிற்கு எதிராக நான் அவ்விதம் செய்வேன். எனினும், தேவையான அளவுக்குச் சக்தியையும் தூய்மையையும் நான் அபிவிருத்தி செய்துகொள்ளவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். சத்தியாக்கிரகம், யந்திரம் போல் தானுக இயங்கும் ஒரு கலை அல்ல. உங்கள் உள்ளத்தில் உள்ள ஏதோ ஒன்று, அவ்விதம் செய்யுமாறு உங்களைத் தூண்ட வேண்டும். அவ்விதம் தூண்டினல், பிறகு பூமியில் உள்ள எவரும் உங்களைத் தடுக்க முடியாது. அத்தகைய தூண்டும் சக்தி இன்னும் எனக்கு ஏற்படவில்லை. உங்களுக்கு ஏற்பட்டிருந்தால், நீங்கள் அவ்வாறு செய்ய முடியும். 1921-இல் பம்பாய் வெறிகொண்டபோது, நான் அவ்விதம் செய்தேன். 1917-இல் மில் தொழிலாளர்கள் கடவுள் பெயரால் வாக்குறுதி அளித்துவிட்டு, மன உறுதி குன்றியதும் அதை மீறுவதற்கு இருந்தார்கள். அப்போதும் நான் உண்ணுவிரதம் இருந்தேன். அந்த ஒவ்வொரு தடவையிலும் என்னை அறியாமலேயே அது தன்னிச்சையாக ஏற்பட்டது. அதன் பலன் மின்சாரம் பாய்வது போல் பிரமாதமாக இருந்தது.

ஆனல், இது பிறர் மனத்தை மாற்றும் ஒரு நடவடிக்கையாகும். நமது ஆடவர்கள் மேற்கொள்ளும் நிர்ப்பந்த முறை

என்னைத் தைரியத்தை இழக்கும்படியும் தொண்டு செய்வதற்குத் தகுதியற்றுப் போகும்படியும் செய்துவிடுகிறது. இந்தத் தடவை என்ன நேர்ந்தாலும், போராட்டம் தொடர்ந்தே தீர வேண்டும்; பின் தங்குவதற்கில்லை. எனினும், அது ஒரு விஷயம், தொண்டு செய்வதில் எனக்குள்ள திறமை வேறு விஷயமாகும். இயக்கத்தை நிறுத்திவைப்பதில்லை என்று நான் வாக்குறுதி அளிக்க முடியும். எனினும், போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் நோய் காரணமாகவோ அல்லது பலவீனம் காரணமாகவோ நான் இறந்துவிட மாட்டேன், அல்லது சோர்வுற்று விழுந்துவிட மாட்டேன் என்று உறுதிமொழி கூறும் சக்தி எனக்கு இல்லை. நமது பக்கத்தில் ஏதாவது பலாத்காரம் நிகழ்ந்துவிட்டால், நான் முற்றிலும் பலம் குன்றிவிடுகிறேன் என்பதை ஒத்துக்கொள்ளுகிறேன். அத்தகைய பலாத்காரம் பற்றிய செய்தியை நான் கேள்விப்படும்போது ஒரு டாக்டர் எனது நாடியைப் பரிசோதனை செய்தால், எனது இருதயத் துடிப்பில் ஏற்படும் சீர்குலைவை அவர் உடனே கண்டு கொள்ளுவார். அத்தகைய சந்தர்ப்பங்களில் நான் கடவுளைக் குறித்து ஏங்குகிறேன். பின்னர் எனது இருதயத் துடிப்பு சாதாரண நிலைக்கு வர உண்மையில் சிறிது நேரமாகிறது. எனது இந்தப் பலவீனத்தை என்னால் தவிர்க்க முடியவில்லை. மாறாக, அதை நான் பேணி வளர்க்கிறேன். ஏனெனில், இந்தப் பலவீனம் தொண்டு புரிவதற்கு என்னைத் தகுதியுள்ளவனாகச் செய்வதுடன், உண்மையான வழிகாட்டியாகவும் இருக்கிறது. என்னை அடக்கம் உள்ளவனாகவும் எப்போதும் கடவுள் மீது நம்பிக்கை கொண்டிருப்பவனாகவும் செய்கிறது. நான் அவ்விதம் நிலைகுலைந்துவிடலாம்; நாம் செய்யும் ஏதாவதொரு பலாத்கார நடவடிக்கையால் நான் பதறி விடலாம்; அதன் காரணமாக நீடித்த அல்லது தாற்காலிகமான உண்ணாவிரதத்தை நான் மேற்கொள்ளலாம்; ஆனால், அத்தகைய காலம் எப்போது வரும் என்பதைக் கடவுள் மாத்திரமே அறிவர். அன்புடன் தான் நேசிப்பவர்களுக்கு எதிராக ஒரு சத்தியாக்கிரகி உபயோகிக்கும் இறுதி ஆயுதம் அதுதான். அகிம்சை, கதர், தீண்டாமை, வகுப்பு ஒற்றுமை முதலிய பல விஷயங்களையொட்டியும் இந்தியா இடைவிடாது கடவுளின் பெயரால் தீர்மானங்கள் செய்து கொள்ளுமாயின், செய்துகொண்ட தீர்மானங்களை மீறி அடிக்கடி கடவுளை நிராகரிக்குமாயின், கண்மூடித்தனமான அன்பு காரணமாக என்னை மகாத்மாவாகச் செய்துள்ள இந்தியா அப்படிச் செய்யுமாயின், என் உள்ளே இருக்கும் கடவுள் இறுதி சத்தியாக்கிரகம் செய்யும்படி என்னை எப்போது தூண்டுவார் என்பதை நான் அறியேன். என்னை மிகவும் புத்திசாலித்தனமாக அல்ல, மிகவும் தீவிரமாக நேசிக்கும் இந்தியாவுக்கு எதிராகவே நான் அத்தகைய இறுதி சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுவேன். எனினும், அத்தகைய சந்தர்ப்பம் ஒரு போதும் எழாமல் இருக்குமாக. ஆனால், அது எழுமாயின், அந்த இறுதித் தியா

கத்தை மேற்கொள்ளுவதற்கான பலத்தையும் தூய்மையையும் எனக்கு இறைவன் அளித்து அருள் புரிவாராக.

—'எங் இந்தியா' - 17—4—1930

# 10

# பலாத்காரம், விடுதலைக்கு வழி அல்ல

நான் தண்டிக்கு அணிவகுத்துச் சென்றபோது, எனக்கு உதவியாக இருப்பதற்காகச் சில தொண்டர்களை அனுப்ப எல்லைப்புற மாகாணங்களிலுள்ள நண்பர்கள் முன்வந்தனர். அவர்களுடைய முயற்சியைப் பாராட்டி அவர்களுக்கு எனது வந்தனத்தைத் தெரிவித்தேன். எனினும், அவர்களுடைய உதவியை நான் பயன்படுத்திக்கொள்ளவில்லை. அவர்கள் இயக்கத்தில் தீவிரமாகக் கலந்து கொண்டிராவிடில் எவ்வளவு நேர்த்தியாக இருந்திருக்கும். பூரண அகிம்சை செயல்பட முடியாதென்று நிச்சயமாகக் கருதுவோர் போராட்டத்தில் தீவிர பங்கு எடுத்துக் கொள்ளாததன் மூலம், அதற்கு ஐயமின்றி உதவியே புரிகிறார்கள். ஆனால், போராட்டத்தில் ஈடுபட்டுத் தொண்டு செய்ய விரும்புவோர் அதில் சேருவதன் மூலம், பிஷாவரில் ஏற்பட்டது போல் பலாத்காரத்தில் முடியுமாயின், அத்தகையோர் இயக்கத்திற்கு நிச்சயமாகப் பாதகம் செய்தவர்களேயாவர். பிஷாவர் மக்களுக்குக் கெட்ட எண்ணம் எதுவும் கிடையாது என்பதில் எனக்கு ஐயமில்லை. விடுதலை பெறுவதில் ஒருவேளை என்னைக் காட்டிலும் அவர்கள் அதிக அவசரப்படுபவர்களாக (அவசரப்படுவது சாத்தியமாயின்) இருக்கலாம். இன்று இந்த நாட்டில் அகிம்சை முறையைத் தவிர வேறு எதனாலும் யாரும் விடுதலை பெற்றுவிட முடியாது. பலாத்கார முறையினால் நாம் இந்தியாவின் சுதந்திரத்தைப் பெற முடியாது. இறுதி வரையில் நாம் அகிம்சையிலிருந்து வழுவாதிருந்தால், சுதந்திரம் கைக்கு எட்டும் நிலையில் நாம் இருப்போம். கவச மோட்டார்களை எரிப்பதும், அரசாங்க நிர்வாகிகளின் உயிர்களைப் போக்குவதும் சுதந்திரத்திற்கு வழியல்ல; ஒழுங்காகவும் கட்டுக் கோப்பாகவும் துன்பத்தை அனுபவிப்பதே அதற்கு வழியாகும். பிஷாவரில் நடந்த சம்பவங்களைக் குறித்து நான் மிகவும் வருந்துகிறேன். லட்சியத்திற்கு எவ்வித உதவியுமின்றி, தைரியசாலிகளின் உயிர்கள் வீணாக்கப்பட்டுள்ளன.

## பகிஷ்காரமும் மறியலும்

நம்மிடையே பேரம் செய்யும் வழக்கம் மிகவும் அதிகமாக இருந்து வருகிறது. அந்நிய ஜவுளி வியாபாரிகளின் நிலை, அத்-

தகைய பேர உணர்ச்சியின் ஓர் அடையாளமேயாகும். தங்களுக்கு எவ்வித நஷ்டமும் ஏற்படாமல் தாங்கள் அந்நிய ஜவுளி வியாபாரத்தைக் கைவிட முடியுமானால் மாத்திரமே, அதைக் கைவிட அவர்கள் விரும்புகிறார்கள். ஆனால், தேச பக்தி பேர உணர்ச்சிக்கு இடம் கொடுப்பதில்லை. தத்தாத்ரேயரைப் போல் மரணத்தையும், தென்னாப்பிரிக்காவில் கச்சேலியாவைப் போல் கட்டாய ஏழ்மையையும், புகழை அறியாத காலஞ் சென்ற கோபபந்து தாஸையும் மற்றவர்களையும் போல் வறுமையையும், அம்பேதியைச் சேர்ந்த காலஞ் சென்ற வித்தல் பாயின் மனைவியைப் போல் உற்றார் உறவினரின் மரணத்தையும் ஏற்க வேண்டுமென மக்கள் எதிர்பார்க்கப்படுகிறார்கள். எனவே, நஷ்டங்களை அனுபவிக்க அந்நிய ஜவுளி வியாபாரிகளுக்கு விருப்பம் இராதது அவர்களுக்கு உண்மையான தேச பக்தி இல்லை என்பதையே வெளிப்படுத்துகிறது.

சில நிபந்தனைகளின் கீழ் மறியலை நிறுத்திவிட ஸ்தல காங்கிரஸ் கமிட்டி கடமைப்பட்டிருக்கிறது என்று டில்லி வியாபாரிகள் வாதாடுகிறார்கள். அது அப்படியாயின், என்ன நேர்ந்தாலும் அந்த வாக்குறுதி நிறைவேற்றப்பட வேண்டும். ஒரு காங்கிரஸ் வாதியின் அல்லது காங்கிரஸ் ஸ்தாபனத்தின் வார்த்தையை நம்ப முடியாதெனில், போராட்டத்தில் நாம் இறுதியில் தோல்வி அடைய வேண்டியதுதான். சத்தியாக்கிரகம் என்பதற்குச் சத்தியத்தை வற்புறுத்துவது என்பதே பொருள். வாக்குறுதியை மீறுவது, இழிவான முறையில் சத்தியத்தைக் கைவிடுவதேயாகும். ஆகையால், வாக்குறுதி ஏதாவது இருந்து அதன் வாசக சம்பந்தமாக அவர்களுக்குள் உடன்பாடு ஏற்பட இயலவில்லையெனில், அவ்விஷயத்தை மத்தியஸ்தத்திற்கு விடும்படி சம்பந்தப்பட்ட கட்சியினருக்கு நான் ஆலோசனை கூறியிருக்கிறேன்.

டில்லியில் ஆண்களும் பெண்களும் மறியலில் ஈடுபட்டிருப்பதாக நான் அறிகிறேன். அந்த மறியலில் பெண்கள் மாத்திரமே ஈடுபட வேண்டுமென நான் ஆலோசனை கூறியிருக்கிறேன். மறியல் செய்வதற்குப் போதிய பெண்கள் இல்லையெனில், மறியலை நிறுத்திவிட்டால்கூட பாதகமில்லை; ஆனால், பலாத்காரம் ஏற்படக்கூடிய ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் தவிர்க்க வேண்டும். கவனத்துடன் செய்யும் பிரசாரத்தினாலும் கதர் உற்பத்தியினாலும் யாரும் தடை செய்ய முடியாத அந்நிய ஜவுளி பகிஷ்காரத்திற்கான சூழ்நிலையை ஆடவர்கள் உண்டாக்க முடியும். எனினும், எங்கு மறியல் நிகழ்ந்தாலும் அது பெண்களுக்கென்றே ஒதுக்கப்பட்டிருக்க வேண்டும்.

— 'எங் இந்தியா' - 1—5—1930

## 11

# ஒரு கடுமையான கண்டனம்

[நவசாரியில் சில அந்நிய ஜவுளி வியாபாரிகள் காந்திஜிக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்த துடன், ஒரு பண முடிப்பும் அளித்தனர். அப்போது காந்திஜி அந்த வியாபாரிகளின் விபரீதப் போக்கைக் கண்டித்துப் பேசினார். அந்தப் பிரசங்கத்தின் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:]

இந்தக் கூட்டம் அனுவசியமானதாகவும் சிறிதும்பொருத்த மற்றதாகவும் எனக்குத் தோன்றுகிறது. வியாபாரிகள் அடங்கிய இக்குழுவினர் அந்நிய ஜவுளி விற்பனையில் ஈடுபட்டுள்ளனர். எனவே, இவர்கள் எனக்கோ அல்லது சர்தாருக்கோ உபசாரப் பத்திரம் வாசித்தளிக்க வேண்டுமென்ற எண்ணமே கொண்டிருக்கக் கூடாது. உபசாரப் பத்திரம் வாசித்தளிக்க வேண்டுமாயின், இனி எதிர்காலத்தில் தங்களுக்கும் அந்நிய ஜவுளிக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்கப் போவதில்லை என்ற பிரதிக்ஞையுடன் அது அளிக்கப்பட்டிருக்க வேண்டும். மற்றும் அவர்கள் தங்களிடம் தற்போதுள்ள ஜவுளிகளை எரித்துவிட்டதாகவோ அல்லது மூட்டைகளை முத்திரையிட்டு அப்பால் வைத்துவிட்டதாகவோ அறிவித்திருக்க வேண்டும்.

அந்நிய ஜவுளி வர்த்தகம் அடியோடு அழிந்து மறைந்துவிட வேண்டும் என்பதே எங்களுடைய தினசரிப் பிரார்த்தனையாகும். அப்படியிருக்க, அந்த ஜவுளி வியாபாரிகளிடமிருந்து எப்படி உபசாரப் பத்திரத்தையும் பணமுடிப்பையும் நாங்கள் அங்கீகரிக்க முடியும்? ஆகையால், அவர்களுடைய பணமுடிப்பையும் உபசாரப் பத்திரத்தையும் திருப்பி எடுத்துக்கொண்டுவிடும்படியே இந்த நண்பர்களை நான் வேண்டிக்கொள்ளுகிறேன். உபசாரப் பத்திரத்தில் வியாபாரிகளின் குழுவைப் பற்றி எவ்வித தகவலும் குறிப்பிடப்படவில்லை. அது ஏதோ இந்நகரப் பிரஜைகள் வாசித்தளித்துள்ள பத்திரத்தைப் போல் இருக்கிறது. இது ஓரளவு போலி மாருட்டத் தன்மையுள்ளதாகவே இருக்கிறது. இதை நான் சர்தாரிடமும் கூறினேன்.

எத்தகைய வெளிப்பகட்டையும் சத்தியாக்கிரகம் தவிர்க்கிறது. மக்கள் எனக்கு அளித்துள்ள மகாத்மா என்ற பட்டம் எனக்குப் பிடிக்கவில்லை. இதற்கு ஒரே காரணம், நான் அதற்குத் தகுதியற்றவன் என்பதேயாகும். ஆனால், எனக்கு நானே ஒரு பட்டம் கொடுத்திருக்கிறேன். அந்தப் பட்டத்தைக் குறித்து

நான் பெருமை அடைகிறேன். என்னை நான் ஒரு சத்தியாக்கிரகி என்று கூறிக்கொள்ளுகிறேன். எனவே, அந்தப் பட்டத்திற்கு மாசு ஏற்படாவண்ணம் நான் வாழவேண்டும் .எனவே, சந்தர்ப்பம் நேர்ந்த போதெல்லாம் கசப்பான உண்மையை அப்பட்டமாகக் கூறுமலிருக்க என்னல் முடியாது. பத்திரமும் பணமுடிப்பும் அளித்திருப்பது உங்களுக்குக் கசப்பாக் இருந்திருக்க வேண்டும். அதுபோல் அவற்றை ஏற்றுக்கொள்ளுவது எனக்குக் கசப்பாக இருக்கிறது. எனவே, உங்களுக்குத் திருப்தி ஏற்படும்படி நான் செய்ய முடியாவிடில், அவ்விரண்டையும் திருப்பி எடுத்துக் கொள்ளும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ள வேண்டும். எனது சகோதரருக்கும், என் மனைவிக்கும் எதிராகச் சத்தியாக் கிரகத்தை மேற்கொள்ளும்படியான சந்தர்ப்பங்கள் என் வாழ்க் கையில் ஏற்பட்டது உண்டு. இன்றைய சந்தர்ப்பம் அதற்கு விலக்கு அல்ல. அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுக்கும் நான், அதனிடமிருந்து பெற்ற பட்டத்தையும், ஒரு சாராயக் கடைக் காரரிடமிருந்து பெறும் கொடையையும் நான் திருப்பிக் கொடுத்துவிடுவது போல, உங்களுடைய உபசாரப் பத்திரத்தை யும் பணமுடிப்பையும் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியிருக்கும். உங்களுடைய உபசாரப் பத்திரத்தை நான் ஏற்றுக்கொள்ள இசைந்தால், எனது லட்சியத்தை நானே விட்டுக் கொடுத்தவன் ஆவேன் என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன். எனினும், உங்களுக்குத் திடீர் அதிர்ச்சி உண் டாகும்படி செய்ய நான் விரும்பவில்லை. எனவே, உங்கள் சார்பில் பத்திரத்தையும் பணத்தையும் நிறுத்தி வைத்துக் கொள்ளு கிறேன். நான் கூறியதை நீங்கள் நன்கு ஆலோசித்து, எனது நிபந்தனைகளின் மீது நீங்கள் அவற்றை எனக்கு அளிக்கக் கூடுமா அல்லது நீங்கள் அந்நிய ஜவுளி வியாபாரத்தை விட முடியாது என்று அவற்றைத் திருப்பி எடுத்துக்கொண்டுவிடப் போகிறீர்களா என்பதை முடிவு செய்யுங்கள்.

—'எங் இந்தியா'. 19—3—1931

## 12

# மறியலும் அன்பும்

பத்திரிகைகளுக்கு எழுதும் ஒருவர் கோபத்துடன் கீழ் வருமாறு கேள்விகள் கேட்டுள்ளார்:

"உங்களுடைய அன்புச் சித்தாந்தத்துக்கும் மறியலுக்கும் ஒன்றுக் கொன்று எப்படிப் பொருந்தும்? மறியல், ஒருவித பலாத்கார முறை அல்லவா? அல்லது அது மிதமிஞ்சி கட்டாயப்படுத்துவதாகாதா?"

நிச்சயமாக அது கட்டாயப்படுத்துவதாகலாம். பல தடவைகளில் அது அவ்விதமே ஆகியிருக்கிறது என்பதை வருத்தத்துடன் கூறுகிறேன். எனினும், அது ஓர் அன்பு நடவடிக்கை என்பதையும் நான் அறிவேன். மாசற்ற அன்பு காரணமாகப் பல சகோதரிகளும் இளம் பையன்களும் மறியல் செய்தவண்ணம் இருந்திருக்கிறார்கள். மார்வாடிகள் மீது நான் துவேஷம் கொண்டிருப்பதாக யாரும் என்மீது குற்றம் சாட்டியதில்லை. சேத் ஜம்னாலால்ஜிக்கு அவரது சொந்த சாதி மனிதர்களும் சக வியாபாரிகளுமான மார்வாடிகள் மீது துவேஷம் இருப்பதாக யாரும் குற்றம் சாட்ட முடியாது. அப்படியிருந்தும், அந்நிய ஜவுளி வியாபாரிகளான மார்வாடிக் கடைகளில் மறியல் நடப்பதை அவரும் நானும் ஆதரித்து வருகிறோம். தவறாக நடந்து கொள்ளும் தன் தந்தையை ஒரு மகன் கண்காணித்து வருகிறான் எனில், அவன் முற்றிலும் அன்பு காரணமாகவே அவ்விதம் செய்கிறான். உண்மை என்னவெனில், ஆடவர்களில் எல்லாப் பிரிவினருக்கும் பொதுவான சில நடவடிக்கைகள் இருக்கின்றன. அவை தம் மட்டில் ஆட்சேபகரமானவை அல்ல என்றாலும் அவை ஆட்சேபகரமானவையா, அல்லவா என்பது அவற்றைக் கைக்கொள்ளுவோருடைய நோக்கத்தைப் பொறுத்ததாகும்.

—'எங் இந்தியா' - 22—9—1921

பகுதி பதினைந்து

# சமூகத்தைச் சீர்திருத்த சத்தியாக்கிரகம்

## 1

## மாணவர்களின் முன்னுதாரணம்

சத்தியாக்கிரகம் எல்லாத்துறைகளிலும் செயல்படக் கூடியது என்று நான் குறிப்பிட்டிருக்கிறேன். ராஜீயத்துறையைப்போல் சமூகத்துறையிலும் உபயோகிப்பதற்கு அது தகுதி வாய்ந்தது என்று இந்தப் பத்திரிகையில் நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். அரசாங்கம், சமூகம், ஒருவருடைய சொந்தக் குடும்பம், தந்தை, தாய், கணவன் அல்லது மனைவி எவருக்கும் எதிராகச் சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளலாம். சத்தியாக்கிரகம் எள்ளளவும் இம்சைக் களங்கமின்றி இருக்குமாயின், முற்றிலும் மாசற்ற அன்பினால் அது தூண்டப்பட்டிருக்குமாயின், எச்சந்தர்ப்பத்திலும் எவ்விஷயமாகவும் யாதொரு விபரீதமுமின்றி அதை உபயோகிக்கலாம். இதுதான் ஆன்மிக ஆயுதத்தின் அழகு. ஒரு சமூகத் தீமையை எதிர்த்து இத்தகைய சத்தியாக்கிரக முறை உபயோகிக்கப்பட்டுள்ள உருவான உதாரணம் இப்போது கிடைத்திருக்கிறது. சில நாட்களுக்கு முன் கேடா ஜில்லாவைச் சேர்ந்த தர்மாஜ் என்ற ஊரில் பொறுப்பும், உற்சாகமும் வாய்ந்த மாணவர்களின் நடவடிக்கையே அந்த உதாரணமாகும். அச்சம்பவத்தைப் பற்றி எனக்குக் கிடைத்த பல்வேறு செய்திகளிலிருந்தே கீழ்க்கண்ட உண்மைகள் தெரிய வந்தன :

சில தினங்களுக்கு முன் தமது தாயாரின் 12-வது தின மரணச் சடங்கையொட்டி தர்மாஜில் உள்ள ஒரு கனவான் சாதி விருந்தொன்று அளித்தார். விருந்து நடப்பதற்கு முன்பே அவ்விஷயமாக அந்த ஊரைச் சேர்ந்த இளைஞர்களிடையே கடுமையான வாக்குவாதம் உண்டாயிற்று. அவ்வழக்கத்தை அந்த இளைஞர்களைப் போல் அந்த ஊரிலுள்ள மற்றும் பலரும் அறவே வெறுத்தனர். அவ்விஷயமாக இந்தத் தடவை ஏதாவது செய்து தீர வேண்டுமென்று அவர்கள் கருதினர். அதற்கிணங்க, அவர்களில் பெரும்பாலோர், கீழ்க்கண்ட மூன்று பிரதிக்ஞைகளில்

எல்லாவற்றையுமோ அல்லது சிலவற்றையோ மேற்கொண்டனர். அவையாவன :

1. அந்த விருந்தில் பெரியோர்களுடன் தாங்கள் கலந்துகொள்ளுவதில்லை; அன்று பரிமாறப்படும் உணவை அருந்துவதில்லை.

2. விருந்து நடக்கும் தினத்தில், அந்த வழக்கத்தைக் கடுமையாக எதிர்த்து உபவாசம் இருக்க வேண்டும்.

3. இம்முறையைக் கைக்கொள்ளுவதற்காகத் தங்களுடைய பெரியோர்களால் விதிக்கப்படும் எந்தக் கடுமையான தண்டனையையும், சாந்தமாகவும் சந்தோஷத்துடனும் சகித்துக்கொள்ள வேண்டும்.

இந்தத் தீர்மானத்திற்கிணங்க, இளம் வயதுக் குழந்தைகள் உள்பட ஏராளமான இளைஞர்கள் விருந்து நடந்த தினத்தில் உபவாசம் இருந்து, தங்கள் 'மூத்தோரின்' கடுமையான கோபத்திற்குப் பாத்திரரானார்கள். அந்த நடவடிக்கை, மாணவர்களுக்குப் பணக் கஷ்ட அபாயத்திலிருந்தும் விலக்கு அளிக்கவில்லை. 'மூத்தோர்' தங்கள் பையன்களுக்குக் கொடுத்து வரும் படிச் செலவுத் தொகைகளை நிறுத்திவிடுவதாகவும் பயமுறுத்தினர். அந்த ஊரில் உள்ள ஸ்தாபனங்களுக்கு அளித்து வரும் பண உதவியையும் அவர்கள் நிறுத்திவிடப் போவதாகக் கூறினர். ஆனால், மாணவர்கள் எந்த மிரட்டலுக்கும் அசைந்து கொடுக்காது, உறுதியுடனிருந்தனர். 285 மாணவர்கள் வரையில் அந்த விருந்தில் கலந்துகொள்ள மறுத்துவிட்டார்கள். அவர்களில் பெரும்பாலோர் அன்று உண்ணாவிரதமும் இருந்தனர்.

அந்தப் பையன்களுக்கு நான் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஒவ்வோரிடத்திலும் சமூக சீர்திருத்தத்தை அமலுக்குக் கொண்டு வருவதில் மாணவர்கள் முக்கிய பங்கு எடுத்துக்கொள்ளுவார்களென நான் நம்புகிறேன். சுயராஜ்யத்திற்கு மாணவர்களிடமே சாவி இருக்கிறது. தங்களுடைய அலட்சிய புத்தியினாலோ அல்லது சிரத்தையின்மையினாலோ மாணவர்கள் அந்த உண்மையை உணராமலிருக்கலாம். அதுபோலவே, சமூக சீர்திருத்தத்தின் சாவியையும், மதத்திற்குப் பாதுகாப்பு அளிக்கும் சாவியையும் மாணவர்கள் தங்களுடைய சட்டைப் பைகளில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். தர்மாஜ் மாணவர்களின் உதாரணம், பொதுவாக மாணவர்கள் விழிப்படைந்து தங்களுடைய சக்தியை உணர்ந்துகொள்ளும்படி செய்யுமென்று நம்புகிறேன். அன்று இந்த இளைஞர்கள் உண்ணாவிரதம் இருந்தார்கள் அல்லவா? காலஞ் சென்ற சீமாட்டிக்கு இவர்களின் உபவாசம்தான் உண்மையான சிரார்த்தம் என்பது எனது அபிப்பிராயமாகும். இதற்கு மாறாக, அன்று விருந்து அளித்தவர்கள் அருமையான பணத்தை வீணாகச் செலவு செய்ததுடன், ஏழைகளுக்கு ஒரு கெட்ட உதாரணத்

தையும் காட்டியிருக்கிறார்கள். பணக்காரர்கள் தங்களுக்கு இறைவன் அளித்துள்ள செல்வத்தைப் பொதுஜன உபகாரமான காரியங்களில் உபயோகிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். கல்யாணத்தை யொட்டியோ அல்லது ஈமச்சடங்குகள் சம்பந்தமாகவோ ஏழைகள் சாதி விருந்து அளிப்பது முடியாத காரியம் என்பதைப் பணக்காரர்கள் அறிந்துகொள்ள வேண்டும். இந்தக் கெட்ட வழக்கங்கள் பல ஏழைகளையும் அழிந்து போகும் படி செய்திருக்கின்றன. சாதி விருந்துக்காக தர்மாஜில் செல வான தொகை, ஏழை மாணவர்கள் அல்லது ஏழை விதவை களுக்கு உதவியளித்தல், கதர் அபிவிருத்தி, பசுப் பாதுகாப்பு அல்லது தீண்டாதார் கஷ்ட நிவாரணம் முதலியவற்றிற்கு உபயோகிக்கப்பட்டிருந்தால், பலன் ஏற்பட்டிருக்கும். இந்த உலகை நீத்த ஆன்மா சாந்தி அடைந்திருக்கும். அந்த விருந்தை அதற்குள் எல்லோரும் மறந்துவிட்டனர். அதனால் லாபமடைந் தவர் யாருமில்லை. அது தர்மாஜில் உள்ள மாணவர்களுக்கும் பொது மக்களில் விவேகமுள்ள பிரிவினருக்கும் மனவேதனையைக் கொடுத்திருக்கிறது.

எனினும், அந்த விருந்து நடைபெறாமல் தடுப்பதில் மாண வர்கள் வெற்றி பெறவில்லை என்பதற்காக, அவர்களுடைய சத்தியாக்கிரகம் வீணாகிவிட்டதாக எவரும் கற்பனை செய்து கொள்ள வேண்டாம். தங்களுடைய சத்தியாக்கிரகத்திற்கு உடனடியான பலனைக் கொடுப்பது சிறிதும் சாத்தியமல்ல என்பதை மாணவர்கள் அறிவர். இருந்தாலும், அவர்கள் எதிர் காலத்தில் தூங்கிவிடாமல் கண்காணிப்புடன் இருந்தால், அங்கே இனி எவரும் ஈமச் சடங்கு விருந்து அளிக்கத் துணிய மாட்டார்கள் என்று நாம் நம்பலாம். வேரூன்றி வெகு காலமாக இருந்து வரும் சமூகத் தீமையை உடனடியாக ஒழித்துவிட முடியாது; அதை ஒழிக்க எப்போதும் பொறுமையும் விடா முயற்சியும் தேவையாகும்.

காலப் போக்கை உணர்ந்துகொண்டு நடக்க நமது சமூகத்தில் உள்ள மூத்தோர் எப்போது கற்றுக்கொள்ளப் போகிறார்கள்? வழக்கத்திற்கு எவ்வளவு காலம் அவர்கள் அடிமைகளாக இருந்து வரப் போகிறார்கள்? தங்கள் குழந்தைகள் அறிவைச் சம்பாதித்துக்கொள்ளவே மூத்தோர் உதவி புரிந்து வருகின்றனர். ஆனால், தங்கள் குழந்தைகள் பெற்ற அறிவைச் செயலில் காட்டுவதிலிருந்து அவர்களை எவ்வளவு காலம் மூத்தோர் பிரித்து வைத்திருக்கப் போகிறார்கள்? நியாய, அநியா யங்களை உணர்ந்துகொள்ளும் தங்களுடைய பகுத்தறிவைத் தற்போதைய மயக்க நிலையிலிருந்து அவர்கள் எப்போது மீட்கப் போகிறார்கள்? அவர்கள் எப்போது விழிப்படைந்து உண்மை யான மகாஜனங்களாக விளங்கப் போகிறார்கள்?

— 'எங் இந்தியா' · 1—3—1928

# 2

# எப்போது சத்தியாக்கிரகம் கடமையாகிறது?

[*1926–ஆம் ஆண்டில் தென்னாப்பிரிக்காவில் நிறைவேற இருந்த நிறத்தடை மசோதாவைப் பற்றி காந்திஜி எழுதிய ஒரு கட்டுரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:*]

இந்நிலையில் தென்னாப்பிரிக்காவில் உள்ள நமது தேச மக்கள் செய்யப் போவதென்ன? இவ்வுலகில் சுய உதவியைப் போன்றது வேறு எதுவும் இல்லை. தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ளுவோருக்குத்தான், உலகம் உதவி செய்கிறது. இந்த இடத்தைப்போல் எந்த இடத்திலும், சுய உதவி என்பது சுயமாகத் துன்பத்தை அனுபவிப்பதேயாகும். சுயமாகத் துன்பத்தை அனுபவித்தல் என்பது சத்தியாக்கிரகமே. அவர்களுடைய மானத்திற்குக் கேடு விளையும்போது, அவர்களுடைய உரிமைகள் பறிக்கப்படும்போது, அவர்களுடைய ஜீவனத்திற்கு ஆபத்து ஏற்படும்போது, சத்தியாக்கிரகம் செய்ய அவர்களுக்கு உரிமை உண்டு; அப்போது சத்தியாக்கிரகம் செய்வது அவர்களுடைய கடமையும் ஆகிவிடுகிறது. அவர்கள் 1907–இலும் 1914–இலும் சத்தியாக்கிரகம் செய்தார்கள். அதற்கு இந்திய அரசாங்கத்தின் ஆதரவும் கிடைத்தது. அதன் பெருமையை ஐரோப்பியர்களும் தென்னாப்பிரிக்கா அரசாங்கமும் உணர்ந்து கொண்டனர். பொது நன்மைக்காகத் தாங்கள் துன்பத்திற்குள்ளாவதில் விருப்பமும் தைரியமும் அவர்களுக்கு இருக்குமாயின், அவர்கள் முன் போல் மறுபடியும் சத்தியாக்கிரகம் செய்யலாம்.

அதற்கான காலம் இன்னும் வரவில்லை. இப்போது அவர்கள் செய்து வருவது போல், ராஜதந்திர பரிகார முறைகளையெல்லாம் கைக்கொண்டு பார்த்துவிட வேண்டும். இந்திய அரசாங்கத்திற்கும் தென்னாப்பிரிக்க யூனியன் அரசாங்கத்திற்கும் நடந்து வரும் சமரசப் பேச்சுக்களின் பலன் என்ன என்று தெரியும் வரையில் அவர்கள் காத்திருக்க வேண்டும். அவர்கள் மற்ற எல்லா முறைகளையும் நுட்பமாகப் பரிசீலனை செய்து முயற்சித்துப் பார்க்க வேண்டும். அந்த முறைகளெல்லாம் தோல்வியடைந்த பின்தான், சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளுவதற்கான நிலை பூர்த்தியாகிறது. அந்த நிலை ஏற்படும்போது சத்தியாக்கிரகத்திலிருந்து பின்வாங்குவது கோழைத்தனமாகும். அப்போது சத்தியாக்கிரகம் வெற்றி பெறுவது நிச்சயம்தான்.

எவரையும் அவரது விருப்பத்திற்கு விரோதமாக ஒரு காரியத்தைச் செய்யும்படி உலகிலுள்ள எந்தச் சக்தியும் வற்புறுத்த முடியாது. இந்த மாபெரும் நியதியை அங்கீகரிப்பதன் நேரடியான பலன்தான் சத்தியாக்கிரகமாகும். சத்தியாக்கிரகத்தின் சக்தி, அதில் பங்கு எடுத்துக் கொள்ளுவோரின் தொகையைப் பொறுத்ததல்ல.

—'எங் இந்தியா' - 18—2—1926

# 3

# சத்தியாக்கிரகத்தின் எல்லைகள்

வயோதிகர்கள் இளம் பெண்களைக் கல்யாணம் செய்து கொள்ளும் அக்கிரமத்தைத் தடுப்பதற்குத் துடிக்கும் ஒருவர் பின்வருமாறு எழுதுகிருர்:

"இந்தத் தீமைக்குக் கடுமையான பரிகார முறைகள் தேவையாக இருக்கின்றன. ஒழுக்கமுள்ள இருபத்தைந்து இளைஞர்கள் ஒரு சத்தியாக்கிரக கோஷ்டியாகச் சேர்ந்துகொள்ளவேண்டும். திருமணம் நடைபெறுவதற்கு எட்டு அல்லது பத்து நாட்களுக்கு முன் அந்த இடத்திற்குச் சென்று, இரு சாரரையும், சாதி ஸ்தாபனத் தலைவர்களையும், சம்பந்தப்பட்ட எல்லோரையும் அந்தச் சத்தியாக்கிரகிகள் வேண்டிக்கொள்ள வேண்டும். அத்தகைய திருமணங்களைக் கண்டித்து எழுதப்பட்ட தகுதியான அட்டைகளுடன் அவர்கள் தெருக்களில் அணிவகுத்துச் சென்று, உத்தேசிக்கப்பட்டுள்ள திருமணத்தை எதிர்ப்பதற்கான ஒரு சூழ்நிலையை உண்டாக்க வேண்டும். திருமணத்தில் சம்பந்தப்பட்டவர்களுக்கு எதிராக அமைதியான முறையில் பகிஷ்காரப் பிரகடனம் செய்யும்படி அந்தச் சத்தியாக்கிரகிகள் நகர அல்லது கிராம ஜனங்களின் மனத்தை மாற்ற வேண்டும். அம்முயற்சியில் தாங்கள் கைதியாவதையோ, அல்லது தங்களுக்கு விதிக்கப்படும் வேறு எந்தவிதமான தண்டனையையோ வரவேற்க வேண்டும்.

"இவ்விதமாக, அந்தச் சத்தியாக்கிரகிகள் அந்த வட்டத்தில் ஒரு சக்தி வாய்ந்த கோஷ்டியாகிவிடுவார்கள். அதன் பின் அத்தகைய திருமணங்கள் பழங்கதையாகிவிடும்."

இந்த யோசனை கவர்ச்சியாகவே தோன்றுகிறது. எனினும், ஒரு தடவைக்கு மேல் அதை உபயோகிக்க முடியாதென்று அஞ்சுகிறேன். காமமும் பண ஆசையும் ஒன்று சேரும்போது, நிரபராதிகள் பலியாவதைத் தவிர்ப்பது பெரிதும் அசாத்தியமாகி விடுகிறது. காம இச்சையுள்ள கிழட்டு மாப்பிள்ளைகளும் பெண்களின் பண ஆசை பிடித்த பெற்ருேரும் சத்தியாக்கிரகிகள் கோஷ்டியின் படையெடுப்பை அறிந்ததும், அவர்கள் அக்

கோஷ்டியைத் தவிர்ப்பதற்காக ரகசியமாகத் திருமணத்தை முடித்துக்கொண்டு விடுவார்கள். அந்த ரகசியச் சடங்கை நடத்திவைப்பதில் உதவி புரிவதற்கு, அவர்களுக்குப் போதிய புரோகிதர்களும் கல்யாண விருந்தாளிகளும் கிடைத்துவிடு வார்கள்.

சிறிது காலத்திற்கு முன் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை 'நவஜீவன்' வாசகர்கள் அறிந்திருக்கலாம். அதாவது ஒரு கிழவர் தாம் பச்சாத்தாபப்படுவது போல் பாசாங்கு செய்தார். வாயள வில் பகிரங்கமாக மன்னிப்புக் கோரி எல்லோர் கண்களிலும் மண்ணைத் தூவுவதில் வெற்றி பெற்ருர். அவர் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுவதைக் கண்டு சீர்திருத்தக்காரர்கள் பெரு மகிழ்ச்சியடைந்தார்கள். தங்களுடைய வெற்றியைக் குறித்து சீர்திருத்தவாதிகள் தங்களுக்குத் தாங்களே வாழ்த்துக் கூறி முடியுமுன், அந்தக் கிழவர் குறிப்பிட்ட இளம் பெண்ணை ரகசியமாக விவாகம் செய்துகொண்டுவிட்டார்! ஓரிடத்தில் என்ன நடந்ததோ அது பலவிடங்களிலும் நடக்கலாம் அல்லவா? எனவே, அந்தத் தீமையைச் சமாளிக்க நாம் வேறு முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

காம இச்சைக்கு அடிமையாக இருப்பவரைக் காட்டிலும் மணப்பெண்ணின் பண ஆசை பிடித்த தந்தையை அணுகுவது எளிதாக இருக்கலாம். இவ்விஷயத்தில் பொதுஜன அபிப்பிரா யத்தை உருவாக்குவதும் அத்தியாவசியமாகும். பண ஆசை காரணமாகத் தங்களுடைய பெண்களை மனமொப்பி விற்கும் பெற்ருேர்களை நாடி, அவர்களை மன்ருடிக் கேட்டுக்கொள்ளவேண் டும். அத்தகைய திருமணங்களைக் கண்டித்துத் தீர்மானங்களை நிறைவேற்றும்படி சாதி ஸ்தாபனங்களை அமைதியாகத் தூண்ட வேண்டும். ஒரே கோஷ்டியினர் பரவலான பிரதேசங்களில் அத்தகைய சீர்திருத்தங்களை உடனடியாக நிறைவேற்றிவிட முடியாது என்பது தெளிவாகும். அவர்களுடைய நடவடிக்கை ஒரு குறுகிய எல்லைக்கு உட்பட்டே இருக்கமுடியும். காஷ்மீரில் நடைபெறும் அரக்கத்தனமான ஒரு திருமணத்தை, கன்னியா குமரியில் உள்ள ஒரு சத்தியாக்கிரகக் கோஷ்டியினர் தடுக்க முடியாதென்பது நிச்சயம். எனவே, தங்களுக்குள்ள எல்லை களைச் சீர்திருத்தவாதிகள் உணரவேண்டும். அசாத்தியமானதை நாம் முயற்சிக்கக் கூடாது.

பலனை அளிப்பதில் அன்பும் அகிம்சையும் இணையற்றவை. ஆனல், அவற்றைக் கையாளுவதில் பரபரப்பு, பகட்டு, கூக்குரல் அல்லது விளம்பர அட்டைகள் எதற்கும் இடமில்லை. அன்புக்கும் அகிம்சைக்கும் முன்கூட்டியே சுயநம்பிக்கை வேண்டும்; சுய நம்பிக்கைக்கு முன்கூட்டியே சுயத்தூய்மை வேண்டும். மாசு மறுவற்ற ஒழுக்கமும் சுயத்தூய்மையும் உள்ள மனிதர்களே

வெகு எளிதில் தங்கள்மீது நம்பிக்கை ஏற்படும்படி செய்யமுடியும்; சுயமுயற்சியே இல்லாமல் தங்களைச் சுற்றியுள்ள சூழ்நிலையைத் தூய்மையாக்க முடியும். அரசியல் சீர்திருத்தத்தைக் காட்டிலும் சமூக சீர்திருத்தமே கஷ்டமான வேலை என நான் நீண்ட காலமாக நம்பி வந்திருக்கிறேன். அரசியல் சீர்திருத்தத்திற்கான சூழ்நிலை தயாராக இருந்து வருகிறது. அதில் மக்கள் அக்கறை கொண்டிருக்கிறார்கள். சுயத்தூய்மையின்றியே அரசியல் சீர்திருத்தம் சாத்தியம் என்ற எண்ணமும் நிலவி வருகின்றது. மற்றொருபுறம், சமூக சீர்திருத்தத்தில் மக்களுக்குச் சொற்பமான அக்கறையே இருந்து வருகிறது. அதன் சம்பந்தமான கிளர்ச்சியின் பலன் குறிப்பிடத்தக்கதாகத் தோன்றவில்லை. அதில் வாழ்த்துக்களுக்கோ, உபசாரப் பத்திரங்களுக்கோ இடமில்லை. எனவே, சீர்திருத்தவாதிகள் சிறிது காலத்திற்கு ஓயாமல் உழைத்து வரவேண்டும்; வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும்; அற்பமான பலன்களைக்கொண்டும் திருப்தியடைய வேண்டும்.

நடைமுறையில் சாத்தியமான ஒரு யோசனையை நான் இங்கே கூறலாம். வயோதிகர்களுக்கும் இளம் பெண்களுக்கும் நடக்கும் திருமணங்களுக்கு விரோதமான சூழ்நிலையை உண்டாக்குவதற்கான மிகவும் பலன்தரத்தக்க வழி என்னவெனில், குறிப்பிட்ட திருமணத்தை எதிர்ப்பதற்கான பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதுதான். அத்துடன், கிழட்டு மணமகனுக்கும், பெண்ணின் பண ஆசை பிடித்த தந்தைக்கும் எதிராக அமைதியான சமூக பகிஷ்காரமும் செயல்படும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஒரே ஒரு இடத்தில் பகிஷ்காரத்தை வெற்றிகரமாக நடத்திவிட்டால்கூட, பின்னர் பெற்றோர்கள் தங்கள் பெண்களை விற்கத் தயங்குவார்கள்; கிழவர்களும் இளம் பெண்களைத் திருமணம் செய்துகொள்வதற்காக விரட்டிச் செல்லத் தயங்குவார்கள்.

காம இச்சையுள்ள கிழவர்களை அந்த இச்சையிலிருந்து தடுப்பது எளிதல்ல. எனவே, அவர்கள் கல்யாணம் செய்து கொண்டுதான் தீரவேண்டும் எனில், வயோதிக விதவைகளை அவர்கள் விவாகம் செய்துகொள்ளுமாறு தூண்டலாம். ஐரோப்பாவில் கிழவர்கள் வெகு எளிதாக வயோதிக விதவைகளைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு விடுகிறார்கள்.

இறுதியாக, இத்தகைய திருமணங்களை எதிர்ப்பதில் நமது நோக்கம் தெளிவாக இருக்கவேண்டும். கிழவர்களை, அவர்களுடைய காம இச்சையிலிருந்து தடுப்பது நமது நோக்கமாக இருக்க முடியாது. அது நமது நோக்கமாக இருக்குமாயின், காம இச்சையுள்ள இளைஞர்களை முதலில் நாம் சமாளிக்கவேண்டி

யிருக்கும். அது சாத்தியமற்ற ஒரு காரியமாகும். எனவே, காம இச்சையுள்ள கிழவர்களுடைய பிடியிலிருந்தும், பெற்றோர்களுடைய பண ஆசையிலிருந்தும் பெண்களைப் பாதுகாப்பது மாத்திரமே நமது நோக்கமாக இருக்கமுடியும். ஆகையால், மணப்பெண்களின் விற்பனையை எதிர்த்து ஒரு தார்மிகப் போராட்டத்தை நடத்தும் விஷயத்தில் சீர்திருத்தவாதி தமது மனத்தைச் செலுத்தவேண்டும். முக்கியமாக, மணப்பெண்களின் பெற்றோர்களையே அணுகவேண்டும். எனவே, அவ்விஷயமாகத் தாம் கைக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை ஒரு சத்தியாக்கிரகி வகுத்துக்கொள்ள வேண்டும்; தமது பிரதேசத்தில் மணமாக வேண்டிய எல்லாப் பெண்களையும் கணக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்; அந்தப் பெண்களின் பெற்றோர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும்; அவர்கள் விழிப்படைந்து தங்கள் பெண்களுக்குச் செய்யவேண்டிய கடமையை உணரும்படிச் செய்யவேண்டும்.

சீர்திருத்தவாதி, தாம் வெற்றிபெற விரும்பினால் இந்த எல்லைகளுக்கு அப்பால் போகக்கூடாது. ஆனால், எனக்குக் கடிதம் எழுதியிருப்பவரின் திட்டம் எளிதில் இந்த எல்லைகளை மீறிச் செல்லுவதாக இருக்கிறது.

—எங் இந்தியா - 6—9—1928

# 4

# மாபெரும் சக்தி

அபேதவாதக் கொள்கையில் சத்தியமும் அகிம்சையும் இரண்டறக் கலந்திருக்க வேண்டும். அவ்விதம் கலந்திருப்பது சாத்தியமாவதற்காக, அபேதவாதி கடவுளிடம் ஜீவநம்பிக்கையுடையவராக இருக்கவேண்டும். சத்தியத்தையும் அகிம்சையையும் வெறும் யந்திரம்போல் பற்றிக்கொண்டிருப்பதால் பலனில்லை. ஏனெனில், நெருக்கடி ஏற்படும்போது அவை சீர்குலைந்துவிடும். அதனால்தான், சத்தியம்தான் கடவுள் என்று நான் கூறி வந்துள்ளேன். இந்தக் கடவுள்தான் ஜீவசக்தியாகும். அந்தச் சக்திதான் நமது உயிர். ஆனால், நமது உடல் அந்தச் சக்தி அல்ல; நம்முள் இருப்பதுதான் அந்தச் சக்தியாகும். அந்த மகத்தான சக்தி இருப்பதை யார் மறுக்கிறாரோ அவர், வற்றாத அந்தச் சக்தியின் உபயோகத்தையே மறுப்பவராகி, ஆண்மையற்று விடுகிறார். அவரது நிலை, சுக்கான் இல்லாத கப்பலைப்போல் இங்குமங்கும் அலைக்கப்பட்டு முன்னேற்றம் எதுவுமின்றி அழிந்துவிடுகிறது. அத்தகையோரின் அபேதவாதம் அவரை ஓரிடத்திற்கும் கொண்டு செல்லுவதில்லை.

அவரது நிலையே அவ்விதமாயின், அவர் வாழும் சமூகத்தைப் பற்றி என்ன சொல்ல இருக்கிறது ?

உண்மை என்னவெனில், இந்த மகத்தான சக்தியையும் அதில் மறைந்துள்ள சாத்தியக் கூறுகளையும் அறிவதற்கு, இடை விடாத ஆராய்ச்சி வேண்டும்.

அத்தகைய ஆராய்ச்சியின் மூலமே சத்தியாக்கிரகத்தைக் காண முடியும். சத்தியாக்கிரகத்தின் எல்லா விதிகளும் நிர்ண யிக்கப்பட்டிருப்பதாகவோ அல்லது கண்டுபிடிக்கப்பட்டிருப் பதாகவோ யாரும் கூறவில்லை. ஆனால், அச்சமின்றியும் உறுதி யுடனும் இது மாத்திரம் நான் கூறுகிறேன். அதாவது, தகுதி வாய்ந்த எந்த நோக்கத்தையும் சத்தியாக்கிரகத்தின் மூலம் நிறைவேற்றிக்கொள்ளலாம் என்பதுதான். அது மகோன்னத மான, எக்காலத்திலும் தவறாத ஒரு வழியாகும், ஒரு மாபெரும் சக்தியாகும். வேறு எந்த முறையைக்கொண்டும் அபேத வாதத்தை அடைய முடியாது. சமூகத்தில் உள்ள ராஜீய, பொருளாதார, ஒழுக்க சம்பந்தமான எல்லாத் தீமைகளையும் சத்தியாக்கிரகத்தின் மூலம் களைந்துவிட முடியும்.

—'ஹரிஜன்' - 20—7—1947

பகுதி பதினாறு

# கேள்விகளும் பதில்களும்

## 1

## அவசரமும் ரகசியமும் கூடாது

*[1930-ஆம் ஆண்டில் சட்ட மறுப்பு தொடங்குவதற்கான ஏற்பாடுகளெல்லாம் மும்முரமாக நடந்துகொண்டிருந்தன. அவ்விஷயமாகப் பலருக்கும் ஏராளமான சந்தேகங்கள் எழுந்தன. அப்போது நண்பர்களும் ஆட்சேபவாதிகளும் காந்திஜியைச் சரமாரியாகக் கேள்விகள் கேட்டனர். அவற்றில் முக்கியமான கேள்விகளும் அவற்றிற்குக் காந்திஜி அளித்த பதில்களும் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.]*

**கேள்வி:** *சட்ட மறுப்பு சம்பந்தமாக உங்களுடைய திட்டங்களை அதிகாரிகள் அறிந்துகொள்ள வேண்டாமா? உங்களுடன் கலந்து பேசவும், பின்னரே உங்களைக் கைது செய்யவும் அவர்களுக்கு நீங்கள் ஒரு சந்தர்ப்பம் அளிக்க வேண்டாமா?*

**பதில்:** ரகசியமாகவோ அல்லது அவசரப்பட்டோ எதுவும் செய்வது சத்தியாக்கிரகத்திற்கு முரணாகும் என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். எனது சென்ற கால நடவடிக்கைகளை அறிந்தோருக்கு இது தெரிந்திருக்க வேண்டும். எத்தகைய திட்டமான நடவடிக்கையையும் நான் கைக்கொள்ளுமுன், எனது திட்டங்கள் வைஸ்ராய்க்கு நிச்சயமாக அனுப்பப்படும். தமது எதிராளியிடமிருந்தோ அல்லது பகைவர் என்று கூறப்படுவோரிடமிருந்தோ மறைத்துவைக்க வேண்டிய ரகசியங்கள் எதுவும் ஒரு சத்தியாக்கிரகிக்கு இல்லை.

**கே:** *சட்ட மறுப்பிற்கு, அதிலும் குறிப்பாகப் பொது மக்கள் கலந்து கொள்ளக்கூடிய வரி கொடா இயக்கத்திற்குத் தேசம் தயாராக இல்லை என்று நீங்கள் லாகூரில்கூட கூறவில்லையா?*

**ப:** நாடு அதற்குத் தயாராக இருக்கிறதென்று இப்போதுகூட நிச்சயமாக நான் கூற முடியாது. எனினும், இதற்கு முன்

என்றும் இராதவாறு இப்போது ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகியிருக்கிறது. அதாவது தேசம் அதற்குத் தயாராக இல்லை என்பதற்கு அகிம்சை சூழ்நிலை பூரணமாக ஏற்பட வில்லை என்பதே பொருளாகும். ஆனால், சென்ற பல வருடங் களாக அந்தச் சூழ்நிலை அதிகமாகப் பரவி வந்திருக்கிறது. காலம் செல்லச் செல்ல அது மேலும் அதிகமாகும். இளைஞர்கள் பொறுமையிழந்து வருகிறார்கள். 1921-இல் சட்ட மறுப்பு செய்ய காங்கிரஸ் தீர்மானித்ததால்தான் இளைஞர்களில் பலர் தங்களுடைய பலாத்கார திட்டங்களை நிறுத்திக்கொண்டார்கள் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். சட்ட மறுப்புக்கு நாடு தயாராக இல்லை என்று நான் அடிக்கடி பிரகடனம் செய்து வருவதால், அந்த இளைஞர்களுடைய நடவடிக்கைகள் முன்னரைவிட இப் போது தீவிரமாகியிருக்கின்றன. அகிம்சை ஒரு தீவிரமான சக்தியாக இருக்குமாயின்,—அது தீவிரமான சக்தியே என்பதை நான் அறிவேன்—மிகக் கடுமையான பலாத்கார சூழ்நிலையிலும் அது (அகிம்சை) செயல்பட வேண்டும் என்பதே எனது கருத்தாகும்.

இதில் ஒரு கஷ்டம் இருக்கிறது. தேசம் முழுவதற்கும் பிரதிநிதி ஸ்தாபனம் என்று கூறிக்கொள்ளும் காங்கிரஸ் சாத்விக சட்ட மறுப்பு செய்யும் அதே சமயத்தில் பலாத் காரத்திற்கு, அதிலும் முக்கியமாகக் காங்கிரஸ்வாதிகளின் பலாத்காரத்திற்குத் தான் பொறுப்பாளி அல்ல என்று தட்டிக் கழித்துவிட முடியாது. அந்தப் பொறுப்பிலிருந்து நான் விடுதலை வாங்கிக்கொண்டுள்ளேன். அதாவது சாத்விக சட்ட மறுப்பு செய்யும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண் டுள்ளேன். நான் வேறு எவருக்கும் பிரதிநிதி அல்ல, எனக்கு மாத்திரமே பிரதிநிதி. அதிகமாகப் போனால், இந்த இயக்கத்தில் யாரைச் சேர்த்துக்கொள்ளுகிறேனோ, அவர் களுக்கு மாத்திரமே நான் பிரதிநிதியாக இருப்பேன். ஆசிரமக் கட்டுதிட்டங்களுக்கு இணங்கி, சிறிது கால மாவது அவற்றிற்கு அடங்கி நடந்து கொண்டவர்களை மாத்திரமே தற்போது சாத்விக சட்ட மறுப்பில் சேர்த்துக் கொள்ள நான் உத்தேசித்துள்ளேன். சாத்விக சட்ட மறுப்பு இயக்கம் நடந்துகொண்டிருக்கையில், தேசத்தில் பலாத்கார நடவடிக்கைகள் பீறிட்டெழலாம். அவ்விதம் ஏதாவது நேர்ந்தால், அதற்கு மறைமுகமான பொறுப்பை நான் தட்டிக் கழித்துக்கொள்ளக்கூடாது என்பது உண்மையே. எப்போதும் அத்தகைய பொறுப்பு இருக்கத்தான் செய்யும். தேசத்திற்கு எதிராகப் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் செய்யும் பாவங்களில் எனக்கும் பங்கு உண்டு. அதுபோல் தேசத்தில் எழும் பலாத்கார நடவடிக்கைகள் சம்பந்தப்பட்ட வரையில் அவர்களுக்கு உள்ள பொறுப்பைக் காட்டிலும் எனக்குள்ள

பொறுப்பு சிறிது அதிகமாகும். ஏனெனில், விருப்பமின்றியும் அற்பமாகவும் இருப்பினும், நான் அவர்களுடன் ஒத்துழைக்கிறேன் அல்லவா? உதாரணமாக, நேரடியான அல்லது மறைமுகமான வரிகளைச் செலுத்துவதன் மூலம் நான் அவர்களுடன் ஒத்துழைக்கிறேன். நான் சாப்பிடும் உப்பே, என்னை அவர்களுடன் ஒத்துழைக்கும்படி கட்டாயப் படுத்துகிறது. இதற்கு முன் ஒருபோதும் இராதவாறு இப் போது என் மனத்தில் ஒரு விஷயம் தெளிவாக உதயமாகி யிருக்கிறது. அது என்னவெனில், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சி பலாத்காரத்தின் ஒரு மகத்தான அவதாரமேயாகும். அத்தகைய மகத்தான பலாத்காரத்தையே எனது அகிம்சை பொறுத்துக்கொண்டு வந்திருக்கும்போது, அவசரப்படும் தேச பக்தர்களின் ஒழுங்கற்ற, பலனற்ற பலாத்காரத்தை அது சகித்துக்கொள்ளத்தான் வேண்டும். தங்களுடைய பலனற்ற பலாத்காரத்திஞல் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சிக்கு உதவி புரிந்து வருகிருர்கள்; எந்த ஆட்சியை அழிக்க வேண்டுமென விரும்புகிருர்களோ அந்த ஆட்சியைப் பலப்படுத்தி வருகிருர்கள் என்பதைத் தேச பக்தர்கள் அறியவில்லை. பிரிட்டிஷாரின் நியாயமற்ற ஆட்சிக்கு எதிராக வேலை செய்து வரும் எனது அகிம்சை, அந்த ஆட்சியை ஓரளவு ஆட்டம் காணும்படி செய்திருக் கிறது என்பது பகல் வெளிச்சத்தைப்போல் எனக்கு இப் போது தெளிவாகத் தெரிகிறது. எனவே, நான் தைரியத் துடன் தீவிர அகிம்சையை அதாவது சாத்விக சட்ட மறுப் பைக் கைக்கொண்டால், தேச பக்தர்களின் எதிர் பலாத் காரத்தையும்கூட அது ஆட்டம் காணும்படி செய்துவிடும். சாத்விக சட்ட மறுப்பு இயக்கத்தை முற்றிலும் எனது மேற்பார்வையில் நான் எடுத்துக்கொள்ளுவதன் மூலம், தேச பக்தர்களின் பலாத்காரம் மிகக் குறைந்த அளவுக்கு மேலே போகாமல் இருக்கும்படி செய்கிறேன்.

எனது யோசனை சம்பந்தமாக 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையின் வர்ணனை உண்மையானதென்பதே எனது கருத்தாகும். அப்பத்திரிகை குறிப்பிட்டுள்ளபடி எனது யோசனை, 'ஒரு சூதாட்டக்காரரின் கடைசி ஆட்டமேயாகும். என் வாழ்க்கை முழுவதும் நான் ஒரு 'சூதாட்டக்காரஞ'கவே இருந்திருக்கிறேன். உண்மையைக் கண்டுபிடிப்பதில் எனக் குள்ள ஆர்வத்திலும், அகிம்சையில் எனக்கு உள்ள நம்பிக் கையைத் தயவு தாட்சண்யமின்றிப் பின்பற்றுவதிலும், நான் வேறு எதையும் துறக்கத் தயங்கவில்லை.

**கே:** *ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமை சம்பந்தப்பட்ட வரையில், நீங்கள் மிகவும் பெருமையடித்துக்கொள்ளும் நம்பிக்கை என்னவாயிற்று? அந்த ஒற்றுமை இல்லையேல் சுதந்திரத்தி ஞல்கூட என்ன பலன் ஏற்பட முடியும்?*

ப: அந்த ஒற்றுமையில் எனக்கு உள்ள நம்பிக்கை எப்போதும் போல் பிரகாசமாகவே இருந்து வருகிறது. சக்தி வாய்ந்த முஸ்லிம்களுடனும், சீக்கியர்களுடனும் மாத்திரம் நான் ஒற்றுமையை நாடவில்லை; மிகவும் பலவீனமான சிறுபான் மையோரைக்கூடப் புறக்கணித்துவிட்டு நான் சுதந்தி ரத்தை விரும்பவில்லை. வகுப்பு ஒற்றுமை சம்பந்தமாகக் காங்கிரசின் முந்திய முயற்சிகளையெல்லாம் ஒன்று திரட் டியே லாகூர் காங்கிரசில் அவ்விஷயமாகத் தீர்மானம் நிறை வேறியிருக்கிறது. வகுப்புவாத அடிப்படையில் கூறப்படும் யோசனைகளையெல்லாம் காங்கிரஸ் நிராகரிக்கிறது. எனி னும், அத்தகைய ஒரு யோசனையை ஆலோசிக்கும் நிர்ப்பந் தம் எப்போதாவது ஏற்படுமாயின், சம்பந்தப்பட்ட எல் லாக் கட்சியினருக்கும் நீதி வழங்குவது மாத்திரமல்ல. திருப்தியும் அளிக்கும் யோசனையையே காங்கிரஸ் பரி சீலனை செய்யும்; எனவே, தான் கொடுத்த வாக்குறுதி யைக் காப்பாற்ற வேண்டுமாயின், வகுப்பு உரிமைகள் சம் பந்தப்பட்ட வரையில் சம்பந்தப்பட்ட கட்சிகளுக்குத் திருப்தி அளிக்காத எந்தச் சுதந்திர திட்டத்தையும் காங் கிரஸ் அங்கீகரிக்க முடியாது. தேசம் முழுவதும் சுதந்தி ரம் அடைவதற்கான சக்தியை உண்டாக்கும் நோக்கத்து டனேயே, இப்பொழுது ஆரம்பமாகப் போகும் இயக்கம் வகுக்கப்பட்டிருக்கிறது. எல்லாக் கட்சிகளும் ஒன்று சேர்ந் தாலன்றி, தேசம் உண்மையில் சுதந்திரமுள்ளதாக இருக்க முடியாது.

சாத்வீக சட்ட மறுப்பிற்கும் வகுப்புவாதத்திற்கும் சம்பந்தமில்லை. வகுப்புவாதம் தீரும் வரையில் சட்ட மறுப்பை ஒத்திப் போடுவது, எல்லோரும் மேற்கொள்ள வேண்டிய இறுதி லட்சியமே தோல்வியுறும்படி செய்வதா கும். வகுப்புவாத மயக்கத்திலிருந்து காங்கிரஸ் விடுதலை பெற்றிருப்பதால், அது தேசத்தினிடம் உண்மையாக நடந்து கொள்ளுவதாயின், மிகவும் பலவீனமான சிறுபான்மை யோரின் உரிமைகளைக்கூட மிகுந்த அக்கறையுடன் பாது காக்கும் பலம் பொருந்திய மத்தியக் கட்சியாகக் காங்கிரஸ் விளங்க வேண்டும். அத்தகைய ஒரு காங்கிரசில் தேசத்தின் ஊழியர்கள் மாத்திரமே இருப்பார்கள்; பதவிகளை நாடு வோர் இருக்கமாட்டார்கள். சுதந்திரம் பெறும் வரையில் அல்லது ஒற்றுமை ஏற்படும் வரையில், அரசாங்கத்திட மிருந்து எந்தச் சலுகைகளையோ, எந்த உத்தியோகங்க ளையோ சிறுபான்மையினருக்குப் போட்டியாகக் காங்கிரஸ் எதிர்பார்க்காது. இப்போது சட்டசபைகளுடன் காங்கிரஸ் அதிருஷ்டவசமாக எவ்விதத் தொடர்பும்வைத்துக் கொள்ள வில்லை. மற்றெதையும் காட்டிலும் சட்டசபைகள் தான் வகுப் புத் துவேஷத்தை அதிகமாக்கியிருக்கின்றன. தற்போது

காங்கிரசில் துரதிருஷ்டவசமாக ஹிந்துக்கள்தான் அதிக மாக இருக்கிருர்கள் என்பதில் சந்தேகமில்லே. எனவே, வகுப்பு வாதத்தை அடிப்படையாகக்கொண்டு எண்ணுவ தைக் காங்கிரஸ் ஹிந்துக்கள் விட்டுவிட வேண்டும். மற்ற எல்லா சமூகங்களும் பூரணமாக அனுபவிக்க முடியாததை, காங்கிரஸ் ஹிந்துக்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோ கப்படுத்திக்கொள்ளக் கூடாது. இவ்விதமாக நடந்து கொள்ளுவார்களாயின், பிறரின் சந்தேகங்களேயெல்லாம் போக்கி, முஸ்லிம்கள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள், யூதர் கள், இந்தியாவைச் சேர்ந்த மற்றவர்கள் முதலியோரி டையே உள்ள சிறந்தவர்களேக் காங்கிரசில் சேரும்படி காங்கிரஸ் ஹிந்துக்கள் வசீகரித்தவர்களாவர். இந்த உன்ன தமான லட்சியத்தைக் காங்கிரஸ் அணுகிஞலும், அணுகா விட்டாலும், நான் செல்ல வேண்டிய பாதை எப்போ தும் போல் முற்றிலும் தெளிவாக இருக்கிறது. எல்லோரி டையும் இவ்விதம் ஒற்றுமை இருக்க வேண்டும் என்பதில், எனக்குத் திடீரென்று புதிதாகப் பிரேமை ஏற்பட்டுவிட வில்லே. எனது இளமைப் பருவத்திலிருந்து அதை நான் பொக்கிஷம் போல் பேணி வந்திருக்கிறேன்; அதை அனு சரித்தும் வந்திருக்கிறேன்.

*1889*–இல் நான் ஒரு சிறு பையனுக லண்டனுக்குச் சென்றபோதே, இன்றிருப்பதைப் போல அன்றும் அத்த கைய ஒற்றுமையில் எனக்கு மிகுந்த நம்பிக்கை இருந்தது. *1893*–இல் நான் தென்னுப்பிரிக்காவுக்குச் சென்றபோது, என் வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் அதை நான் அனுசரிக்க முற்பட்டேன். உலக சாம்ராஜ்யம் முழுவதுமே எனக்குக் கிடைப்பதாக இருந்தாலும்கூட, என் மனத்தில் அவ்வளவு ஆழ்ந்து வேரூன்றியுள்ள அன்பை நான் பலி கொடுத்துவிடமாட்டேன். வகுப்புப் பிரச்னேயில் தேசத் திற்கு உள்ள கவனத்தை அப்பால் திருப்பி, இந்த இயக் கம் சாதி அல்லது இன வேற்றுமை எதுவுமின்றி எல்லா இந்தியர்களுக்கும் பொதுவான விஷயங்களில் தேசத்தின் கவனம் பதியும்படி செய்ய வேண்டும்.

கே: பிறகு உங்களால் கூடுமாயின், இறுதியில் பிரிட்டிஷாருக்கு விரோதமான ஒரு சக்தி எழும்படி நீங்கள் செய்வீர்கள்.

ப: ஒரு போதும் அப்படி ஏற்படாது. அகிம்சையில் எனக் குள்ள பாசம் உலக சம்பந்தமான எந்தப் பொருளேயும் காட்டிலும் மேலானது. சத்தியத்தில் எனக்குள்ள பாசமும் அப்படித்தான். சத்தியம், அகிம்சை இரண்டும் எனக்கு ஒன்றுதான். அகிம்சையினல் மாத்திரமே நான் சத்தியத் தைக் காணவும், அதை அடையவும் முடியும். நான் வகுக்கும்

வாழ்க்கைத் திட்டத்தில், இந்தியாவில் உள்ள பல்வேறு மதத்தினருக்குள்ளும் வேற்றுமை இராததுபோல, பல்வேறு நாட்டினரிடையும் வேற்றுமை இல்லை. எனக்கு மனிதர் யாவரும் ஒன்றுதான். இந்தியர் மீது எனக்கு எவ்வளவு அன்பு உண்டோ, அவ்வளவு அன்பு ஆங்கிலேயர் மீதும் எனக்கு உண்டு. இந்தியரைப் போல் ஆங்கிலேயர் மீதும் எனக்குள்ள அன்பினால்தான் நான் இந்த இயக்கத்தை மேற்கொள்ளுகிறேன். நானே துன்பத்தை அனுபவிப்பதன் மூலம் அவரது மனத்தை மாற்ற விரும்புகிறேனேயன்றி, அவரை அழித்துவிட விரும்பவில்லை.

கே: நாம் கண்ணால் காணும் இந்த உலகத்தில், நீங்கள் கூறுவதெல்லாம் ஒரு போதும் நடைமுறையில் வர முடியாத உங்கள் மனப்பிரமையாக இருக்கலாம் அல்லவா?

ப: அப்படியும் இருக்கலாம். இந்தக் குற்றச்சாட்டு நான் முற்றிலும் அறியாத ஒரு விஷயமல்ல. ஏற்கெனவே எனது மனப்பிரமைகளால் எனக்குப் பலன் ஏற்பட்டிருக்கிறது. இப்போது ஏற்பட்டுள்ள இந்த மனப்பிரமையும் என்னைக் கைவிட்டுவிடாதென எதிர்பார்க்கிறேன். ஒருவேளை இது தோல்வியுற்றால், எனக்கும் அதன் செல்வாக்கிற்கு உட்பட்ட மற்றவர்களுக்கும் மாத்திரமே தீங்கு நேரும். எனது மனப்பிரமை சக்தி வாய்ந்ததென்று அதிகாரிகள் கருதினால் அவர்கள் எந்தச் சமயத்திலும் என் உடலைக் கைது செய்யலாம். நான் உத்தேசித்துள்ள நடவடிக்கையால், இப்போதிருப்பதைக் காட்டிலும் எந்த ஆங்கிலேயரின் உயிருக்காவது அதிக ஆபத்து ஏற்படுமாயின், காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரையிலோ அல்லது கராச்சியிலிருந்து திப்ருகார் வரையிலோ, உண்டாகும் எவ்வித எழுச்சியையும் அடக்கும் வல்லமை ஆங்கில அதிகார வர்க்கத்திற்கு இருக்கிறது. கடைசியாக, எல்லா ராஜீயவாதிகளும், பத்திரிகாசிரியர்களும் எனக்குப் புத்திமதி கூறுவதற்குப் பதிலாக அதிகாரிகளுக்குப் புத்திமதி கூறுவார்களாயின், இந்தப் பத்திரிகையில் நான் அரைகுறையாகக் குறிப்பிட்டுள்ள தவறுகளைத் தொடர்ந்து செய்யாமல் இருக்கும்படி அதிகாரிகளைக் கேட்டுக்கொள்ளுவார்களாயின், இந்த இயக்கத்தை நடத்த வேண்டிய அவசியமே இராது.

— ‘ எங் இந்தியா ’ — 20—2—1930

# 2

# அடிப்படையான யோசனைகள்

மதிப்பு வாய்ந்த ஒருவர் தெளிவான வாதத்துடன் சில சந்தேகங்களைத் தெரிவித்து எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். காங்கிரசின் சாத்விக நடவடிக்கையை அவர் ஒரு மாணவர் என்ற முறையில் பல வருடங்களாகத் தொடர்ந்து கவனித்து வந்துள்ளார். இறுதியில் அவர் காங்கிரசிலும் சேர்ந்தார். அவர் கூறியுள்ள வாதம் எனக்கு உதவியாக இருக்கிறதென்றாலும், அதை இங்கே குறிப்பிடுவது அனாவசியம். அவர் மூன்று அடிப்படையான யோசனைகளைக் குறிப்பிட்டுவிட்டு, அவற்றையொட்டி இந்தியா திருப்தி அளிக்கக்கூடிய நிலையில் இல்லை என்று வாதிக்கிறார்.

அவரது அடிப்படையான யோசனைகளாவன:

1. "விடுதலை ஆர்வத்திலும் விடுதலைக் கோரிக்கையிலும் ஜனங்களிடையே பூரண ஒற்றுமை.

2. "அகிம்சைச் சித்தாந்தத்தையும், அதில் அடங்கியுள்ள எல்லா விஷயங்களையும் மக்கள் யாவரும் நன்கு உணர்ந்து, மனத்தில் பதியவைத்துக் கொள்ள வேண்டும். அதைத் தொடர்ந்து, வஞ்சம் தீர்த்துக்கொள்ளவோ அல்லது தற்காப்பு முறையாகவோ பலாத்காரத்தில் ஈடுபடும் இயற்கையான உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த வேண்டும்.

(எல்லாவற்றிலும் இதுதான் மிகவும் முக்கியமாகும்.)

3. "கூட்டத்திலுள்ள ஜனங்கள் துன்பத்திற்கு உள்ளாகும் காட்சி, தாக்குவோரின் உள்ளத்தை உருக்கி, பலாத்காரப் பாதையிலிருந்து அவரைத் தடுத்துவிடும் என்பதில் தளராத நம்பிக்கை இருக்க வேண்டும்."

பரிகார முறையாக அகிம்சையை உபயோகிப்பதற்கு, பூரண ஒற்றுமை இன்றியமையாத ஒரு நிபந்தனையல்ல. அவ்விதம் இருக்குமாயின், அதற்கு விசேஷ மகத்துவம் எதுவும் இராமற் போய்விடும். ஏனெனில், தேச மக்களிடையே பூரண ஒற்றுமை இருந்துவிட்டால், விடுதலை தானாகவே வந்துவிடும். நமக்கு விடுதலை கிடைப்பதற்கு ஒரு சில உண்மையான சத்தியாக்கிரகிகளே போதும் என்று நான் திரும்பத் திரும்ப 'எங் இந்தியா'வில் குறிப்பிடவில்லையா? நவீன யுத்த முறையில் பயிற்சி பெற்ற சிப்பாய்கள் அடங்கிய ராணுவத்தைக் காட்டிலும், சத்தியாக்கிரகிகள் அடங்கிய ஒரு சிறிய படை போதும் என்று நான் கூறியிருக்கிறேன். உலக நாடுகள் போர்த் தளவாடங்களுக்குச் செலவு செய்யும் நம்ப முடியாத தொகையுடன்

ஒப்பிடும்போது, சத்தியாக்கிரகப் படையினர் செலவுக்கு மிகவும் அற்பத் தொகையே போதுமானது.

இரண்டாவது யோசனையும் அவசியமில்லாதது. சத்தியாக்கிரக சித்தாந்தத்தையும் அதில் அடங்கியுள்ள எல்லா விஷயங்களேயும் மக்கள் யாவரும் நன்கு அறிந்து மனத்தில் இறுத்திக் கொள்ளுவதாயின், பின்னர் பொதுமக்கள் சத்தியாக்கிரகம் செய்வதே சாத்தியமற்றதாகிவிடும். நானே அதில் அடங்கியுள்ள எல்லா விஷயங்களேயும் அறிந்து கொண்டிருப்பதாகக் கூடக் கூறமுடியாது. ஒரு படையைச் சேர்ந்த சிப்பாய் ராணுவ சாஸ்திரம் முழுவதையும் அறிந்துகொள்ளுவதில்லே. அது போலவே, சத்தியாக்கிரக சாஸ்திரம் முழுவதையும் ஒரு சத்தியாக்கிரகி அறிந்துகொள்ளுவதில்லே. அவர் தமது தளபதியை நம்புவதும், அவரது கட்டளேகளே யோக்கியப் பொறுப்புடன் பின்பற்றுவதும், பகைவர் என்று கூறப்படுவோர் விஷயத்தில் துவேஷமின்றி மரணத்தை வரவேற்கத் தயாராக இருப்பதுமே போதுமானவை.

மூன்ருவது யோசனே நிறைவேற்றப்பட வேண்டும். அதையே நான் வேறுவிதமாகக் கூறியிருப்பேன். எனினும், பலன் ஒரே விதமாகவே இருக்கும்.

மூன்ருவது யோசனேக்குச் சரித்திர ஆதாரம் எதுவும் இல்லே என்று எனது நண்பர் கூறுகிருர். அதற்கு விலக்காக அவர் அசோகரின் உதாரணத்தைக் குறிப்பிடுகிருர். எனது நோக்கத்திற்கு அசோகரின் உதாரணம் அநாவசியமானது. எனக்குத் தெரிந்த வரையில், மூன்ருவது யோசனேக்குச் சரித்திரத்தில் உதாரணம் இல்லே என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். அதனலேயே எனது பரிசோதனே தனிப் பெருமை வாய்ந்ததென்று கூறவேண்டியவனுக இருக்கிறேன்.

குடும்பங்களிலோ அல்லது காட்டுமிராண்டி சாதியினரிடையோகூட நாம் என்ன செய்கிருேம் என்ற உதாரணத்தைக் கொண்டே நான் வாதித்துள்ளேன். மானிட வர்க்கம் ஒரு பெரிய குடும்பம்தானே. நாம் காட்டும் அன்பு மிகத் தீவிரமாக இருக்குமாயின், அது மானிட வர்க்கம் முழுவதற்குமே பொருந்தும். தனி நபர்கள் காட்டுமிராண்டிகளிடத்தில்கூட வெற்றி பெற்றிருக்கையில், தனி நபர்கள் அடங்கிய ஒரு கோஷ்டியினர், காட்டுமிராண்டிகள் அடங்கிய ஒரு கோஷ்டியினரிடம் ஏன் வெற்றி பெற முடியாது? நான் ஆங்கிலேயர்கள் விஷயத்தில் வெற்றி பெற்ருல், அவர்களேக் காட்டிலும் குறைந்த அளவு பண்போ அல்லது குறைந்த அளவு தாராள மனமோ உள்ள மற்றவர்களிடமும் வெற்றி பெறுவது சாத்தியமே. அது நம்பிக்கையின் எல்லேயை விஸ்தரிப்பதைத் தவிர வேறு எதுவுமில்லே. கலப்

பற்ற அகிம்சை முயற்சியைக்கொண்டு நாம் ஆங்கிலேயர்களிடம் வெற்றிபெற்ருல், அதே முயற்சியில் நாம் மற்றவர்களிடமும் வெற்றி பெற்றுத் தீரவேண்டும். அதையே மற்ருெருவிதமாகச் சொல்லலாம். அகிம்சையின் மூலம் நாம் சுதந்திரம் பெற்ருல், அதே ஆயுதத்தைக்கொண்டு பெற்ற சுதந்திரத்தை நாம் பாது காத்து வரவும் முடியும். அந்த நம்பிக்கையை நாம் பெருவிடில், நம்முடைய அகிம்சையைத் தாற்காலிகமான வெறும் உபாயம் என்றும், பூரண மாற்றுள்ள தங்கம் அல்ல, கலப்பு உலோகமே என்றும்தான் கூறவேண்டும்.

—'ஹரிஜன்' - 22—10—1938

# 3

# குடும்பத் தகராறு

**கேள்வி :** *தீண்டாமையை எல்லாவிதத்திலும் எல்லா உருவத்திலும் ஒழித்துவிடாத ஒருவர், சத்தியாக்கிரகத்தில் பங்கு எடுத்துக்கொள்ள முடியாது என்று நீங்கள் கூறியிருப்பது நியாயமாகும். இவ்விஷயத்தில் ஒரு காங்கிரஸ்வாதியின் மனைவி தமது கணவரின் கொள்கையை ஆதரிக்கவில்லை. ஹரிஜனங்களை அவர் தமது வீட்டிற்கு அழைத்துவர அவள் அனுமதிப்பதில்லை என்று வைத்துக்கொள்ளுவோம். அந் நிலையில் அந்தக் காங்கிரஸ்வாதி என்ன செய்யவேண்டும்? தமது கருத்துக்களை ஒப்புக்கொள்ளும்படி மனைவியை அவர் கட்டாயப்படுத்த வேண்டுமா, அவளைத் துறந்துவிட வேண்டுமா, அல்லது சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் துறந்துவிட வேண்டுமா?*

**பதில் :** அத்தகைய நிலையில், உங்கள் மனைவியை நீங்கள் கட்டாயப்படுத்த வேண்டியதில்லை. அவள் வழியில் அவளைப் போகவிட வேண்டும்; நீங்கள் உங்கள் வழியில் செல்ல வேண்டும். அவ்விதம் செல்லுவதாயின், மனைவி தனக்கென்று தனி சமையல் அறையை வைத்துக்கொள்ளும்படி இருக்கும்; அவள் விரும்பினல் தனி அறையிலும் இருக்கலாம். எனவே, போராட்டத்தைத் துறப்பதென்ற கேள்விக்கே இடமில்லை.

## அதிக முக்கியமான தேவை

**கே :** *சாத்விக சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு எது அதிக முக்கியமான தேவை என்று நீங்கள் கருதுகிறீர்கள்? உங்களுடைய உள்ளத்திலிருந்து வரும் கட்டளையா? உங்களை, நீங்கள் ஒருவராகவே நின்றுகூடப் போராடும்படி இது*

செய்யலாம். அல்லது உங்களுடைய நிபந்தனைகளைக் காங்கிரஸ்வாதிகள் நிறைவேற்றுவதா? காங்கிரஸ்வாதிகள் உங்களுடைய நிபந்தனைகளை நிறைவேற்றத் தயாராக இருந்து, உங்கள் உள்ளத்திலிருந்து கட்டளை பிறக்கவில்லையாயின் என்ன செய்வது?

ப: எனது நிபந்தனைகள் நிறைவேற்றப்படாவிடில், என் உள்ளத்திலிருந்து கட்டளை பிறக்க முடியாது. நிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டிருப்பது போல் தோன்றலாம்; ஆனால், என் உள்ளத்திலிருந்து கட்டளை பிறக்காமல் இருக்கலாம். இவ்விதம் நிகழ்வது சாத்தியமே. ஆனால், அத்தகைய சந்தர்ப்பங்களில் நான் சாத்விக சட்ட மறுப்பைப் பிரகடனம் செய்ய முடியாது. எனினும், அப்போது என்னை நிராகரித்துவிட்டு, என் சம்பந்தம் இல்லாமலேயே சாத்விக சட்ட மறுப்புப் பிரகடனம் செய்ய காங்கிரசுக்கு உரிமை உண்டு.

## ரகசியம் கூடாது

கே: ரகசிய நடவடிக்கை பற்றி நீங்கள் உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெளிவாகக் கூறவேண்டும். சென்ற போராட்டத்தின்போது, அதிகாரிகளை ஏமாற்றுவதற்காக ஏராளமான ரகசிய நடவடிக்கைகள் கைக்கொள்ளப்பட்டன அல்லவா?

ப: நமது லட்சியத்திற்கு ரகசியத்தினால் நன்மை எதுவும் ஏற்படாது என்பதே எனது தெளிவான அபிப்பிராயம். போலீசாரை வெற்றிகரமாக ஏமாற்ற முடிந்தவர்களுக்கு அது ஆனந்தத்தைக் கொடுத்தது என்பது உண்மைதான். அவர்களுடைய கெட்டிக்காரத்தனத்தைச் சந்தேகிப்பதற்கில்லை. ஆனால், கெட்டிக்காரத்தனத்தைக் காட்டிலும் சத்தியாக்கிரகம் மேலானது. ரகசிய நடவடிக்கைகளால் சத்தியாக்கிரகம் கண்ணியத்தை இழந்துவிடுகிறது. ரகசியப் புத்தகங்களையோ அல்லது ரகசிய நிதிகளையோ சத்தியாக்கிரகிகள் வைத்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் இல்லை. இவ்விஷயமாக எனது அபிப்பிராயத்தை என் சக ஊழியர்களில் பலர் ஆதரிக்கவில்லை என்பதை நான் அறிவேன். எனினும், அதற்காக என் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள யாதொரு காரணத்தையும் நான் காணவில்லை. முன்னர் அவ்விஷயமாக நான் அசட்டையாக இருந்துவிட்டேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். நான் உறுதியுடன் இருந்திருக்க வேண்டும் என்பதை அனுபவம் எனக்குக் கற்பித்திருக்கிறது.

## சொத்துக்களைச் சேதப்படுத்தலாமா?

கே: சொத்துக்களைச் சேதப்படுத்துவதில், அதாவது ரெயில் தண்டவாளங்களை அழித்தல், போலீஸ் ஸ்டேஷன்களுக்கு

அவற்றில் யாரும் இராதபோது தீ வைத்தல், தந்திக் கம்பங்களை நொறுக்குதல், தபால் பெட்டிகளை எரித்தல் போன்ற நடவடிக்கைகள் பலாத்காரமாகா என்று பல காங்கிரஸ் வாதிகள் பகிரங்கமாக உபதேசம் செய்து வருவதை நீங்கள் அறிவீர்கள் அல்லவா ?

ப: இந்த வாதத்தை ஒருபோதும் என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவ்விதமெல்லாம் செய்வது கலப்பற்ற பலாத்காரமே. சுயமாகத் துன்பத்தை அனுபவிப்பதே சத்தியாக்கிரகமாகும். பிறருக்குத் துன்பத்தை விளைவிப்பது சத்தியாக்கிரகமல்ல. ஒரு மனிதரின் உடலில் காயம் ஏற்படும்படி செய்வதைக் காட்டிலும், அவரது சொத்துக்களை எரிப்பது அதிக பலாத்காரமாகும் என்பது நிச்சயம். அபராதங்கள் செலுத்துவதையோ, சொத்துக்கள் பறிமுதல் செய்யப்படுவதையோவிட சிறைக்குச் செல்லுவதே மேலானதென்று சத்தியாக்கிரகிகள் என்று கூறப்படுவோர் கருதவில்லையா ? சத்தியாக்கிரகிகள் படுப்பதற்குச் சிறையில் இடம் தேடிக் கொடுக்கும் வரையில் பலாத்கார சட்ட மறுப்பைக் கற்பிப்பதில் நான் வெற்றி பெற்றிருக்கிறேன்; ஆனால், மிகவும் கஷ்டமான அகிம்சைக் கலையை மக்களுக்குக் கற்பிப்பதில் குறிப்பிடத்தக்கவாறு தோல்வியே அடைந்திருக்கிறேன், என்று என்னைக் கண்டிப்பவர்களில் ஒருவர் கூறியது சரிதான். மற்றும், என் அவசரத்தில் நான் குதிரைக்கு முன்புறமாக வண்டியை வைத்து இயற்கைக்கு விரோதமாக நடந்துகொள்ளுவதாயும், எனவே சாத்விக சட்ட மறுப்பு என்று நான் கூறுவதெல்லாம் மோசமல்லவாயினும் மடத்தனமாகும் என்றும்கூட அவர் கூறியிருக்கிறார். இந்தக் கண்டனத்திற்குத் திருப்திகரமான பதில் அளிக்க நான் இயலாதவனாக இருக்கிறேன். நான் ஒரு சாதாரண மனிதனே. எனது பரிசோதனையிலும் மிகத் தீவிரமான எனது அந்தரங்க சுத்தியிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. எனது மரணத்திற்குப் பிறகு, ''அவர் முயற்சி செய்தார். ஆனால், குறிப்பிடத்தக்கவாறு தோல்வியடைந்தார்'' என்பது என் சமாதி மீது பொறிக்கப்படும் தகுதியான வாக்கியமாக இருக்கலாம்.

—'ஹரிஜன்' - 13—4—1940

4

# நூற்கவேண்டிய கடமை

**கே :** 'ஒழுங்காக நூற்க வேண்டும்' என்று நீங்கள் கூறுவதன் பொருள் என்ன? ஒருவர் மாதந்தோறும் இரண்டு மணி நேரம் நூற்ருல், அல்லது வாரத்தில் ஒரு தடவையோ, இரண்டு தடவையோ அரை மணி நேரம் நூற்ருல், ஒழுங் காக நூற்பது என்ற நிபந்தனையை அவர் நிறைவேற்றியவர் ஆவாரா?

**ப :** 'தினந்தோறும்' என்ற வார்த்தையின் ஸ்தானத் திலேயே 'ஒழுங்காக' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அகஸ்மாத்தாகவோ அல்லது தவிர்க்க முடியாத வகை யிலோ நூற்க முடியாமற் போகலாம். அத்தகைய சந்தர்ப் பத்தில் விலக்கு அளிக்க வேண்டும் என்பதற்காகவே 'ஒழுங்காக' என்ற வார்த்தை உபயோகிக்கப்பட்டுள்ளது. எனவே, ஒவ்வொரு வாரத்திலோ அல்லது குறிப்பிட்ட தினங்களிலோ மாத்திரம் நூற்பது போதாது. தினந் தோறும் ஒரு சத்தியாக்கிரகி நூற்க வேண்டுமென்று எதிர் பார்க்கப்படுகிருர். நோய், பிரயாணம் போன்ற முக்கிய காரணங்களையொட்டி மாத்திரமே நூற்பதிலிருந்து சத்தி யாக்கிரகிக்கு விலக்கு உண்டு.

## சத்தியாக்கிரகியின் தகுதி

**கே :** தேசம் முழுவதும் தொண்டர்களைப் பயிற்சி செய்வதற் காகச் சத்தியாக்கிரக முகாம்கள் அமைக்கப்பட்டு வருகின் றன. ஆனல், எந்த விதத்திலும் எந்த உருவத்திலும் தீண்டாமையை ஒழித்துவிட வேண்டுமென்ற கொள்கை முகாம்களில் கண்டிப்பாக வற்புறுத்தப்படுவதில்லை. ஹரிஜனங்களைத் தொட்டால் தீட்டாகிவிடுவதாகக் கருது வோரையும், அவர்களுடன் மனம் விட்டுப் பழகாதவர்களை யும் சத்தியாக்கிரக முகாம்களில் அனுமதிக்கக்கூடாது என்று கண்டிப்பான விதி இருக்க வேண்டுமென்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள் அல்லவா?

**ப :** ஒருவரிடம் அணுவளவு தீண்டாமை உணர்ச்சி இருந்தாலும், அவர் சத்தியாக்கிரக சேனையில் சேருவதற்கு முற்றிலும் தகுதியற்றவர் என்றுகூற நான் எவ்விதத்திலும் தயங்க வில்லை. நமது வீழ்ச்சிக்கும், ஹிந்து—முஸ்லிம் வேற்றுமைக் கும் தீண்டாமைதான் மூல காரணம் என்று நான் கருது கிறேன். தீண்டாமை, ஹிந்து மதத்தின் சாபத்தீடாகும்; எனவே, அது இந்தியாவின் சாபத் தீடுமாகும். ஒரு மனிதன்

வேறு மதத்திற்கு மாறிய பிறகுகூட அவன் அமைதியாக இருக்க முடியாதவாறு தீண்டாமை அவனுள் அவ்வளவு தூரம் வியாபித்துக்கொண்டிருக்கிறது!

## வக்கீல்களும் சத்தியாக்கிரகமும்

கே: இந்தத் தேசத்தில் பொய்யும் மோசடியுமே வக்கீல் தொழில் செய்வோரின் சரக்குகளாக இருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியும். எனவே, தொழில் புரிந்து வரும் வக்கீல்கள் தீவிர சத்தியாக்கிரகிகளாகச் சேருவதை நீங்கள் அனுமதிப்பீர்களா ?

ப: ஒரேயடியாக நீங்கள் கண்டித்திருப்பதை ஆதரிக்க நான் இயலாதவனுகை இருக்கிறேன். ஒரு வக்கீல் சத்தியாக்கிரகியாக விரும்புகிருர் என்ற உண்மையே, அவர் ஓரளவு தூய்மையுள்ளவர் என்பதைக் குறிக்கிறது. காங்கிரசில் நிச்சயமாகக் கருங்காலிகள் இருக்கலாம், எனக்குத் தெரிந்த வரையில் இருக்கவும் செய்கிருர்கள். எந்தப் பெரிய ஸ்தாபனத்திலும் இது தவிர்க்க முடியாதது. எனினும், ஒருவர் குறிப்பிட்ட ஒரு தொழிலில் ஈடுபட்டிருக்கிருர் என்பதற்காக அவரைக் கண்டிப்பது, ஒரு சத்தியாக்கிரகிக்கு ஏற்றதல்ல.

## முட்டுக்கட்டை முறை

கே: முட்டுக்கட்டை போடும் கொள்கைக்கும் சத்தியாக்கிரகத்திற்கும் பொருத்தம் இருக்க முடியுமா? கட்சியைக் காட்டிலும் கொள்கைகளே ஒரு சத்தியாக்கிரகிக்கு முக்கியமானவை என்று கருதப்படுகிறது. எனவே, தமது கட்சி ஒரு முறையைக்கொண்டு வரும்போது ஒருவிதமாகவும், அதே முறையை எதிர்க்கட்சி கொண்டு வரும்போது வேறு விதமாகவும் ஒரு சத்தியாக்கிரகியின் போக்கு இருக்கலாமா? முனிசிபாலிடிகளிலும் ஜில்லா போர்டுகளிலும் இந்தக் கொள்கை கையாளப்படுவதை நீங்கள் அங்கீகரிக்கிறீர்களா? தற்போது சில காங்கிரஸ்வாதிகள் அவ்விதம் தான் செய்து வருகிருர்கள்.

ப: முட்டுக்கட்டை போடுவது சத்தியாக்கிரகத்திற்கு முரணுகும். இதை நான் எப்போதுமே எதிர்த்து வந்திருக்கிறேன். காங்கிரஸ்வாதிகளின் நடத்தை நியாயமாக இருப்பதாயின், தங்களுடைய எதிர்க்கட்சியினர் பெரும்பான்மையோராக இருக்கும்போதும், அவர்கள் புத்திசாலித்தனமான தீர்மானம் கொண்டு வரும்போதும் அவர்களுடன் காங்கிரஸ்வாதிகள் ஒத்துழைக்க வேண்டும். காங்கிரஸ்வாதிகளின் நோக்கம், தொண்டு புரிவதற்காகவே அதிகாரத்தை

ஏற்பதாக இருக்க வேண்டும்; அதிகாரத்திற்காகவே அதிகாரத்தை ஏற்பதாக இருக்கக்கூடாது. அவ்விதம் பகுத்தறிவுடன் ஒத்துழைப்பதால் காங்கிரசின் கௌரவம் அதிகமாவதுடன், அதற்குப் பெரும்பான்மையான ஸ்தானங்களும் கிடைக்கலாம்.

— 'ஹரிஜன்' - 25—5—1940

# 5

# ஐந்து கேள்விகள்

1. சத்தியாக்கிரகிகள் (அதாவது சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டுள்ளவர்கள்) கைது செய்யப்பட்டால், அவர்கள் எதிர் வழக்காடலாமா ?

2. சிறைகளில் மேல் வகுப்புகளில் அதாவது ஏ அல்லது பி வகுப்பில் தங்களை வைக்கும்படி கேட்டுக்கொள்ள ஒரு சத்தியாக்கிரகி முயற்சிக்கலாமா ?

3. சிறையில் தம்மீது சுமத்தப்படும் நிபந்தனைகளை ஒப்புக்கொள்ள வேண்டியது ஒரு சத்தியாக்கிரகியின் கடமையா ? அல்லது தாம் கருதும் விதம் அதிக ஜீவகாருண்யத்துடனும், திருப்திகரமான விதத்திலும் தம்மைச் சிறை அதிகாரிகள் நடத்தும்படி செய்ய அவர் முயற்சிக்க வேண்டுமா ?

4. ஒரு சத்தியாக்கிரகி நூற்க வேண்டிய குறைந்தபட்ச நேரம் என்ன? அல்லது அவர் நூற்க வேண்டிய குறைந்தபட்ச அளவு என்ன ?

5. நீங்கள் சாத்விக சட்ட மறுப்புப் பிரகடனம் செய்த உடனடியாக ஒரு மனிதர் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டுவிட்டு, தாம் கைதியாவதை நாடிச் செல்லலாமா? அல்லது சாத்விக சட்ட மறுப்பு இயக்கத்தில் பங்கு எடுத்துக்கொள்ளத் தம்மைத் தகுதியாக்கிக்கொள்ளுவதற்காக ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அவர் சத்தியாக்கிரகியாக இருந்துவர வேண்டுமா?

## அவற்றிற்கு விடைகள்

1. எதிர் வழக்காடுவதில் ஆட்சேபணை இல்லை. ஆஜ்மீர் வழக்கைப் போன்று சில வழக்குகளில் எதிர் வழக்காட வேண்டியது கடமையும் ஆகும்.

2. சிறையில் தமக்கு அளிக்கப்பட்ட வகுப்பை மாற்றிக் கொள்ள அவர் முயற்சிக்கக் கூடாது என்பதே எனது அபிப்பிராயம். என் சம்பந்தப்பட்ட வரையில் சிறையில் அவ்விதம் பிரிப்பதையே நான் எதிர்க்கிறேன்.

3. சிறை நிபந்தனைகளை ஜீவகாருண்யமுள்ளவையாக மாற்றுவதற்குள்ள நியாயமான எல்லா முயற்சிகளையும் செய்ய ஒரு சத்தியாக்கிரகிக்கு உரிமையுண்டு.

4. சத்தியாக்கிரகி நூற்கவேண்டிய குறைந்தபட்ச நேரம் ஒரு நாளைக்கு ஒரு மணி விகிதம் இருக்க வேண்டும். ஒரு மணிக்கு 300 சுற்றுகள் நூற்பது நியாயமான வேகமேயாகும். பொது வேலைகளில் ஈடுபட்டுள்ளவர்கள் குறைவாக நூற்கலாம்.

5. நிபந்தனைகளை நிறைவேற்றுமல் தவிர்ப்பதற்காக பிரதிக்ஞையில் கையெழுத்திடுவதிலிருந்து வேண்டுமென்றே நழுவும் ஒருவர் ஒரு மோசக்காரராவார். ஒரு சத்தியாக்கிரகியாக இருக்க அவர் தகுதியற்றவர். ஒரு யோக்கியமான மனிதர் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டுவிட்டு, உடனே நேராகச் சிறைக்குச் செல்லுவதை நான் கற்பனை செய்துகொள்ள முடியும். ஏற்கெனவே பிரதிக்ஞை எடுத்துக்கொண்டுள்ளவர்களையும், எதிர்காலத்தில் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளக்கூடியவர்களையும் நான் இழந்துவிடுவதாக இருப்பினும், சாத்விக சட்ட மறுப்பு செய்யும்படி உடனடியாக நான் அழைப்பு விடுக்கப் போவதில்லை என்பதைச் சொல்லிவைக்கிறேன்.

—'ஹரிஜன்' - 25—5—1940

# 6

# மலை உபதேசம்

கே: ஏசுநாதரின் மலை உபதேசத்தைப் * பற்றி நீங்கள் அடிக்கடி குறிப்பிடுகிறீர்கள். "எந்த மனிதராவது உன் சட்டையை எடுத்துக்கொண்டுவிட்டால், அவனுக்கு நீ உன் போர்வையையும் கொடுத்துவிடு." இந்த வாக்கியத்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா? அகிம்சைக் கொள்கையிலிருந்து அது தொடருகிறதல்லவா? அப்படியாயின், ஜமீன்தார்கள் ஏழைக் குடிகளின் நிலங்களையோ அல்லது குடிவார உரிமைகளையோ பலாத்காரமாக ஆக்கிரமித்துக்கொள்ளும்போது, அதற்குப் பலவீனர்களான ஏழைக் குடிகள் சந்தோஷத்துடன் பணிந்துவிட்டுக் கொடுத்துவிட வேண்டுமென நீங்கள் யோசனை கூறுகிறீர்களா? இப்போதெல்லாம் கிராமங்

---

* 'மலை உபதேசம்' என்பது ஏசுநாதர் மலை மீதிருந்து மக்களுக்குச் செய்த உபதேச மொழிகளாகும். அவை, பைபிளில் மூன்று அத்தியாயங்கள் உள்ளன. 'சொர்க்கம் ஏழைகளுக்குச் சொந்தமாகும்,' 'அடக்கம் உள்ளவர்களே பூமியை ஆட்சி புரிவார்கள்', 'உள்ளத்தில் தூய்மை உள்ளவர்களே கடவுளைக் காண்பார்கள்' என்பன போன்ற ஏராளமான அருள்மொழிகள் அந்த அத்தியாயங்களில் அடங்கியுள்ளன.

களில் அவ்விதம் ஆக்கிரமித்துக்கொள்ளும் சம்பவங்கள் நிகழ்கின்றன.

ப: ஆமாம். ஒரு கொடியவனுக்குச் சொந்தமான நிலத்தைக் காலி செய்து வெளியேறிவிடும்படியே சிறிதும் தயக்கமின்றி நான் குடிகளுக்கு யோசனை கூறுவேன். சட்டையை மாத்திரம் கேட்கும்போது, போர்வையையும் சேர்த்துக்கொடுத்துவிடுவது போலவேதான் அதுவும். தேவையானதை எடுத்துக்கொள்ளுவது லாபமாக இருக்கலாம். தேவையைக்காட்டிலும் அதிகமாகப் பெறுவது ஒரு பெரும் சுமையாகிவிடக்கூடும். மிதமிஞ்சி வயிற்றை நிரப்புவது, சிறிது சிறிதாக மரணத்தை வரவேற்பதாகும். ஒரு ஜமீன்தார் அவரது குத்தகைப் பணத்தையே விரும்புகிறார், அவரது நிலத்தை அவர் விரும்பவில்லை. நிலத்தை அவர் விரும்பாத போது அதை அவரிடம் கொடுத்துவிடுவது, அவருக்கு ஓர் சுமையாகிவிடும். ஒரு கொள்ளைக்காரனுக்கு அவன் கேட்டதைக் காட்டிலும் அதிகமாக நீங்கள் கொடுத்துவிட்டால், அவனை நீங்கள் ஆச்சரியத்தில் ஆழ்த்திவிடுகிறீர்கள். அது அவன் மனத்திற்கு இதமாக இருப்பினும் அவனுக்கு அது அதிர்ச்சியையே உண்டாக்குகிறது. ஏனெனில், அத்தகைய வழக்கத்தை அவன் கண்டதில்லை. அவ்வித சாத்விக நடவடிக்கை துஷ்டர்களின் கொடிய சித்தத்தை மாற்றியதற்கு, சரித்திரத்தில் உதாரணங்கள் உள்ளன. ஆனால், இவ்வித காரியங்களை யந்திரம் போல் செய்துவிட முடியாது. உறுதியான கொள்கை காரணமாக, மற்றவர் மீதுள்ள அன்பு அல்லது இரக்கம் காரணமாக ஏற்பட வேண்டும். எனது விடையில் உள்ள நுணுக்கங்களையெல்லாம் நீங்கள் ஆராய வேண்டிய அவசியமில்லை. அவ்விதம் ஆராய முற்பட்டால், நீங்கள் வழி தெரியாமல் குழப்பம் அடைய நேரும். மகத்தான சாத்விக ஒத்துழையாமைக் கொள்கையை அழகாகவும் மனத்தில் பதியும்படியும் ஏசுநாதர் நீங்கள் எடுத்துக்காட்டியுள்ள வாக்கியத்தில் குறிப்பிட்டுள்ளார் என்று மாத்திரம் சொல்லுவது போதுமானது. ஓர் அடிக்குப் பதிலாக நீங்களும் ஓர் அடி கொடுத்துவிட்டால், எதிரியிடம் உங்களுடைய ஒத்துழையாமை பலாத்காரமாகி விடுகிறது; நாளாவட்டத்தில் அது பலனற்றும் போய்விடுகிறது. உங்களுடைய எதிரிக்குத் தேவையானதை மாத்திரம் கொடுப்பதற்குப் பதிலாக நீங்கள் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டால், உங்களுடைய ஒத்துழையாமை அகிம்சையாகிறது. நீங்கள் ஒத்துழைப்பது போல் தோன்றும் அச்செய்கையால், உங்கள் எதிரி உங்களைத் தாக்க முடியாதபடி செய்துவிடுகிறீர்கள். உண்மையில் அது பூரண ஒத்துழையாமையே ஆகும்.

—'ஹரிஜன்' - 13—7—1940

# 7

# தனி சத்தியாக்கிரகி என்ன செய்ய முடியும்?

**கே:** எங்களுடைய கிராமங்கள் ஒன்றில் ஒரே ஒரு சத்தியாக்கிரகி மாத்திரமே இருக்கிறார். இம்சையைப் பற்றியோ அல்லது அகிம்சையைப் பற்றியோ மற்றவர்கள் கவலைப்படவில்லை. எனவே, தனிமையான அந்தச் சத்தியாக்கிரகி என்ன கட்டுதிட்டத்திற்கு உட்பட வேண்டும்?

**ப:** உங்கள் கேள்வி ஒரு நல்ல கேள்வியாகும். தனிமையான அந்தச் சத்தியாக்கிரகி தன்னைத் தானே பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். அவருக்கு எல்லோரிடத்திலும் அன்பு இருக்குமாயின், அத்தகைய நிலையில் அடங்கியுள்ள நிபந்தனைகளை அவர் நிறைவேற்றி வருபவராயின், அவரது தினசரி நடவடிக்கையிலேயே அது வெளியாக வேண்டும். அதாவது அவர், கிராமத்திலுள்ள பரம ஏழைகளுக்குத் தொண்டு செய்வதையே தமது கடமையாகக்கொண்டிருப்பார். அவர் தோட்டியாகவும், நர்ஸாகவும், சச்சரவுகளைத் தீர்த்துவைக்கும் மத்தியஸ்தராகவும், கிராமக் குழந்தைகளின் உபாத்தியாயராகவும் இருந்து வருவார். கிராமத்திலுள்ள இளைஞர், வயோதிகர் எல்லோரும் அந்தச் சத்தியாக்கிரகியை அறிந்தவர்களாக இருப்பார்கள். அந்தச் சத்தியாக்கிரகி குடும்பஸ்தராயினும், அவர் பிரம்மச்சரிய வாழ்க்கையே நடத்தி வருவார். தமது குழந்தைகள் என்றும் அண்டை வீட்டுக்காரரின் குழந்தைகள் என்றும் அவர் வேற்றுமை பாராட்டமாட்டார். அவர் சொந்தமாக சொத்து எதுவும் வைத்துக்கொள்ள மாட்டார். ஆனால், அவருக்குள்ள சொத்தை, மற்றவர்களுக்காகத் தம்மை அந்தச் சொத்துக்களின் தருமகர்த்தாவாக எண்ணிப் பராமரித்து வருவார். அதிலிருந்து தமக்கு அத்தியாவசியமான தேவைகளுக்கு மாத்திரம் போதுமானதை எடுத்துச் செலவழிப்பார். ஏழைகளின் தேவைகளைப்போல் அவருக்குள்ள தேவைகளும் மிகக் குறைவாகவே இருக்கும். அவரது மனத்தில் தீண்டாமை உணர்ச்சி இராது. எனவே, சாதி, மத பேதமின்றி அவர் எல்லோருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமாகி, எல்லோரும் தம்மை அணுகும்படி நடந்து கொள்ளுவார்.

அத்தகைய அம்சங்கள் உள்ள ஒருவர் தான் அப்பழுக்கற்ற சத்தியாக்கிரகியாவார். எனவே, உங்கள் கிராமத்தில்

உள்ள நமது நண்பர் இந்த அம்சங்களில் ஏதாவது தம்மிடம் குறைகள் இருந்தால், அவற்றைக் களைந்துகொண்டு அப்பழுக் கற்ற சத்தியாக்கிரகியாக விளங்க எப்போதும் முயற்சிக்க வேண்டும். ஒரு விநாடிகூடத் தமது நேரத்தை அவர் வீணுக் கக்கூடாது. எப்போதும் அவரது வீட்டில் பலன் தரத்தக்க அலுவல்கள் நடந்துகொண்டிருக்கும். அவற்றில் நூற்பதே முக்கிய ஸ்தானம் வகிக்கும். எல்லா அலுவல்களும் ஒழுங் காக நடைபெறும் நல்ல குடும்பமாக அவருடையது இருக் கும். அதிக காலம் தனிமையான நிலையில் அந்தச் சத்தி யாக்கிரகி இருக்கமாட்டார். கிராம மக்கள் தங்களை அறியா மலேயே அவரைப் பின்தொடருவார்கள். அவர்கள் பின் தொடர்ந்தாலும் தொடராவிட்டாலும், நெருக்கடியான காலத்தில், அந்தச் சத்தியாக்கிரகி தனியாகவே அதைச் சமாளிப்பதில் வெற்றி பெறுவார், அல்லது அம்முயற்சியில் தமது உயிரைத் தியாகம் செய்வார். எனினும், அவர் பல ருடைய மனத்தையும் மாற்றிவிடுவார் என்பதே எனது உறுதியான அபிப்பிராயம். இச்சந்தர்ப்பத்தில் நான் இன்னும் ஒன்று கூறலாம். அதாவது சேவா கிராமத்திற்கு நான் ஒரு தனிமையான சத்தியாக்கிரகியாகவே வந்தேன். அதிருஷ்டவசமாகவோ அல்லது துரதிருஷ்டவசமாகவோ நான் தனியாக இருக்க முடியவில்லை. வெளியிலிருந்து பலரும் வந்து என்னுடன் தங்கிவிட்டார்கள். அக்கிராமத்தி லுள்ள எவரையாவது ஒரு சத்தியாக்கிரகியாகக் கருத முடியுமா என்பது எனக்குத் தெரியாது. எனினும், கிராம வாசிகளில் சிலர் தாங்கள் அறியாமலேயே சத்தியாக்கிரகி களாக உருவாகி வருகிறார்கள் என்றே நம்புகிறேன்.

மேலே குறிப்பிட்டுள்ள எல்லா நிபந்தனைகளையும் நான் நிறைவேற்றிவிடவில்லை என்று கூற விரும்புகிறேன். எனினும், அவையெல்லாவற்றையும் செயலில் கொண்டுவர நான் முயற்சித்து வராவிடில், அந்த நிபந்தனைகளையெல்லாம் நான் குறிப்பிட்டிருக்க மாட்டேன். சேவாகிராமத்தை ஒரு தலைசிறந்த கிராமமாகச் செய்யவேண்டும் என்பதே நிச்சய மாக என்னுடைய தற்போதைய ஆசையாகும். இந்தியாவை ஒரு தலைசிறந்த தேசமாகச் செய்வது எவ்வளவு கஷ்ட மாகுமோ, அவ்வளவு சேவாகிராமத்தை ஒரு தலைசிறந்த கிராமமாகச் செய்வதும் கஷ்டமாகும். ஒரே ஒரு கிராமத் தைத் தலைசிறந்த கிராமமாகச் செய்ய வேண்டுமென்ற தமக்குள்ள ஆசையை, ஒரு மனிதர் எப்போதாவது ஒரு நாள் நிறைவேற்றுவது சாத்தியமாகும். ஆனால், இந்தியா முழுவதையும் அவ்விதம் செய்வதற்கு ஒரு மனிதரின் ஆயுட் காலம் முழுவதும்கூட மிகக் குறைவாகும். எனினும், ஒரு மனிதர் ஒரு தலைசிறந்த கிராமத்தை உருவாக்க முடியு மெனில், ஒரு தேசம் முழுவதும் அல்ல, உலகம் முழுவதுமே

கூட பின்பற்றக்கூடிய ஓர் சிறந்த உதாரணத்தை அவர் காட்டியவராவார். இதற்குமேல் ஒரு சத்தியாக்கிரகி ஆசைப்படக்கூடாது.

— 'ஹரிஜன்' - 4—8—1940

# 8

# அந்நியர் படையெடுத்தால்...

**கேள்வி:** *யாராவது அந்நியர் இந்தியாமீது படையெடுத்தால், அப்போது அனுசரிக்க வேண்டிய சாத்விக ஒத்துழையாமை பற்றி 'ஹரிஜனி'ல் ஒரு கட்டுரை வெளியாகியிருக்கிறதென்றும், அவ்விஷயமாக ஏதோ ஒரு புதிய திட்டத்தைப்பற்றி நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள் என்றும் ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது. அதைப்பற்றி நீங்கள் எங்களுக்குக் கூற முடியுமா?*

**பதில்:** அச்செய்தி தவறாகும். என் மனத்தில் அத்தகைய திட்டம் எதுவும் இல்லை. அவ்விதம் ஏதாவது இருந்தால், அதை நான் உங்களுக்குக் கூறியிருப்பேன். சிறிதும் கலப்பற்ற சாத்விக ஒத்துழையாமைக்கு இந்தியா முழுவதும் இணங்கி ஒருமித்து அதை மேற்கொள்ளுமாயின், ஒரு துளி ரத்தம்கூடச் சிந்தாமல் ஜப்பானின் ஆயுத பலத்தையோ அல்லது மற்ற நாடுகளின் ஒருமித்த ஆயுத பலத்தையோ பலனற்றுப் போகும்படி செய்துவிட முடியுமென்பதை நான் காட்டக்கூடும். அவ்விஷயமாக இதைக் காட்டிலும் அதிகமாக எதுவும் சொல்லத் தேவையில்லை. அத்தகைய நிலைமையில், இந்தியா எந்த விஷயத்திலும் சிறிதும் விட்டுக்கொடுப்பதில்லை என்று உறுதிகொள்ள வேண்டும்; பல லட்சக்கணக்கானவர்கள் உயிரைத் தியாகம் செய்யவும் தயாராக இருக்கவேண்டும். ஆனால், அத்தகைய தியாகத்தைக்கூட நான் அற்பமாகவே கருதுவேன்; அந்தத் தியாகம் செய்து பெற்ற வெற்றியையே நான் மகத்துவம் வாய்ந்ததாகக் கருதுவேன். இந்தியா அந்த விலை கொடுக்கத் தயாராக இல்லாமல் இருக்கலாம் என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால், அது உண்மையல்ல என்றே நம்புகிறேன். அது எப்படியாயினும், சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள எந்த நாடாயினும் அத்தகைய விலை ஏதாவது கொடுத்துத்தான் தீரவேண்டும். ருஷ்யர்களும் சீனர்களும் செய்துள்ள தியாகம் மகத்தானது. அவர்கள் எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறார்கள். மற்ற நாடுகளும், படையெடுத்துள்ள நாடுகளும் சரி, தற்காப்பிற்

காகப் போராடி வரும் நாடுகளும் சரி, அவ்விதமே தியாகம் செய்யத் தயாராக இருக்கின்றன. அவற்றின் தியாகம் மகத்தானது. எனவே, சாத்விக முறையில், மற்ற நாடுகளை விட இந்தியா அதிக தியாகம் எதுவும் செய்ய வேண்டுமென்று நான் கேட்கவில்லை. இந்தியா ஆயுத எதிர்ப்பைக் கைக்கொண்டாலும்கூட, அது அவ்வளவு தியாகம் செய்துதான் தீர வேண்டியிருக்கும்.

—'ஹரிஜன்' - 24—5—1942

# 9

# சத்தியாக்கிரகப் பயிற்சியின் அவசியம்

குண்டர்கள் கொள்ளையடிப்பதைத் தடுக்க ஒரு சத்தியாக்கிரகி என்ன செய்யவேண்டும் என்று ஒரு நண்பர் சாந்தமாக ஒரு கேள்வி கேட்டுள்ளார். சத்தியாக்கிரகத்தின் ரகசியத்தை அறிந்திருந்தால், அவர் அந்தக் கேள்வி கேட்டிருக்கமாட்டார்.

நியாயம் என்று தாம் கருதுவதற்காக ஒருவர், தாம் தனியாக இருந்தால்கூட உயிரைத் தியாகம் செய்வதே சத்தியாக்கிரகத்தின் சாரமாகும். அதைக் காட்டிலும் அதிகமாக எந்த மனிதரும் தியாகம் செய்யமுடியாது. ஓர் உடைவாளுடன் இருக்கும் ஒரு மனிதன் ஒரு சிலரின் கைகளை வெட்டலாம். எனினும், இறுதியில் அவன் தன்னைக் காட்டிலும் அதிக சக்திக்குப் பணிந்து தீர்வேண்டும் அல்லது போராடிக்கொண்டே இறக்க வேண்டும். அன்பும், அதிலிருந்து எழும் அசைக்க முடியாத உறுதியும்தான் சத்தியாக்கிரகியின் வாளாகும். அவரை எதிர்க்கும் நூற்றுக்கணக்கான குண்டர்களைச் சகோதரர்களைப் போலவே சத்தியாக்கிரகி கருதுவார்; அவர்களைக் கொல்லுவதற்குப் பதிலாக, அவர்களின் கையினால் இறப்பதையே அவர் விரும்புவார்; அதன் பலனை என்றென்றும் வாழ்வார்.

சாதாரணமான நேர் வழி இதுதான். ஆனால், பெரும் ஜனக் கூட்டத்தினிடையே ஒரு தனி சத்தியாக்கிரகி எவ்விதம் வெற்றி பெற முடியும்? பம்பாயில் தீ வைத்தலிலும் கொள்ளையிலும் நூற்றுக்கணக்கான போக்கிரிகள் ஈடுபட்டார்கள். அங்கே ஒரு தனி சத்தியாக்கிரகி, சமுத்திரத்தில் ஒரு துளி போன்ற நிலையில் இருப்பார். இவ்விதம் வாதிக்கிறார் கடிதம் எழுதியுள்ள நண்பர்.

ஒரு சத்தியாக்கிரகி தனியாக இருந்தாலும் அல்லது பலருடன்கூட இருந்தாலும், ஆபத்திலிருந்து அவர் ஒரு போதும் ஓடிவிடக்கூடாது என்பதே எனது பதிலாகும். அவர் போரிட்ட

வண்ணம் மாண்டால், அவர் தமது கடமையை முற்றிலும் பூரணமாகச் செய்தவராவார். ஆயுதப் போரிலும் அதே பொருந்தும். சத்தியாக்கிரகத்தில் அது இன்னும் அதிக விசேஷமாகப் பொருந்தும். தவிர, ஒருவருடைய தியாகம் பலரையும் தியாகம் செய்யும்படி தூண்டி, மகத்தான பலன்கள் ஏற்படும்படி செய்யலாம். இது எப்போதுமே சாத்தியமாகும். எனினும், பலன்களில் ஆசை ஏற்படும் கவர்ச்சியைச் சத்தியாக்கிரகி மிகவும் ஜாக்கிரதையாகத் தவிர்க்க வேண்டும்.

இந்தக் காலத்தில் ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் தற்காப்புக் கலையைக் கற்றுக்கொள்ள வேண்டும். மேனுடுகளில் ஆயுதங்களின் மூலம் இது கற்பிக்கப்படுகிறது. அங்கு வயது வந்த ஒவ்வொரு ஆடவருக்கும் குறிப்பிட்ட காலத்திற்கு ராணுவப் பயிற்சி அளிக்கிருர்கள். ஆனல், வயது, ஆண், பெண் என்ற வேற்றுமையின்றிச் சத்தியாக்கிரகப் பயிற்சி எல்லோருக்கும் அளிக்கலாம். இங்கே சத்தியாக்கிரகப் பயிற்சியின் அதிக முக்கிய அம்சம் உள்ளத்தைப் பொறுத்தது, உடலைப் பொறுத்ததல்ல. உள்ளப் பயிற்சியில் கட்டாயம் என்று எதுவும் இருக்க முடியாது. சுற்றியுள்ள சூழ்நிலை மன நிலையை உருவாக்குகிறது என்பதில் ஐயமில்லை. எனினும், அதற்காகக் கட்டாயப்படுத்துவதை நியாயமென்று கூற முடியாது.

அதைத் தொடர்ந்து கடைக்காரர்கள், வர்த்தகர்கள், மில் சிப்பந்திகள், தொழிலாளர்கள், குடியானவர்கள், குமாஸ்தாக்கள், சுருங்கக் கூறின் ஒவ்வொரு ஆடவரும் பெண்ணும் சத்தியாக்கிரகத்தில் பயிற்சி பெறுவதைத் தனது கடமையாகக் கருத வேண்டும்.

எப்போதுமே சத்தியாக்கிரகம் ஆயுத எதிர்ப்பைவிட மேலானதாகும். வாதத்தின் மூலம் அல்ல, நேர் உதாரணத்தின் மூலம்தான் இதன் சக்தியை நிரூபிக்க முடியும். இது பலம் வாய்ந்தவர்களை அலங்கரிக்கும் ஆயுதமாகும். பலவீனமானவர்களை இது ஒரு போதும் அலங்கரிக்க முடியாது. பலவீனமானவர்கள் எனில், உடலில் அல்ல, உள்ளத்திலும் உணர்ச்சியிலும் பலவீனமானவர்களையே குறிப்பிடுகிறேன். சத்தியாக்கிரகத்தில் உள்ள இந்தக் கட்டுப்பாடு, ஒரு பொக்கிஷத்தைப் போல் போற்றத்தக்கது, ஒரு குறைபாட்டைப் போல் வருந்தத்தக்கதல்ல.

அதன் மற்றக் கட்டுப்பாடுகளில் ஒன்றையும் அறிந்துகொள்ள வேண்டியது கடமையாகும். ஒரு தவருன நோக்கத்தை ஆதரிப்பதற்காக அதை ஒரு போதும் உபயோகிக்கக்கூடாது. ஒவ்வொரு கிராமத்திலும், நகரங்களின் ஒவ்வொரு பிரிவிலும் சத்தியாக்கிரகப் படைகளை அமைக்க முடியும். அத்தகைய

ஒவ்வொரு படைப் பிரிவிலும், அமைப்பாளர்களுக்கு நன்கு தெரிந்தவர்களையே சேர்த்துக்கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் ஆயுத எதிர்ப்பிலிருந்து சத்தியாக்கிரகம் வேறுபடுகிறது. ஆயுத எதிர்ப்பிற்கு ஒவ்வொருவருடைய ஊழியத்தையும் அரசாங்கம் வற்புறுத்திப் பெறுகிறது. அகிம்சையிலும் சத்தியத்திலும் நம்பிக்கையுள்ளவர்கள் மாத்திரமே சத்தியாக்கிரகப் படையில் சேரத் தகுதியுள்ளவர்களாவர். ஆகையால், அப்படையில் சேருவோரைப் பற்றிய எல்லா விவரங்களையும் அமைப்பாளர்கள் அறிந்திருக்க வேண்டும்.

—'ஹரிஜன்'—17—3—1946

## 10

# வெற்றிக்கு நிபந்தனைகள்

**கே:** *ஏழைகளுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமையைப் பணக்காரர்கள் உணரும்படி செய்வதில், சத்தியாக்கிரகத்தின் ஸ்தானம் என்ன?*

**ப:** அந்நியர் ஆதிக்கத்தை எதிர்ப்பதில் சத்தியாக்கிரகத்தின் ஸ்தானம் எதுவோ, அதுவேதான். சத்தியாக்கிரகம் எல்லா இடங்களிலும் அனுசரிக்கக்கூடிய ஒரு விதியாகும். குடும்பத்தில் தொடங்கி அதன் உபயோகத்தை எல்லா இடங்களிலும் விஸ்தரிக்க முடியும். நிலச்சுவான்தார் ஒருவர் தனது குடிகளைச் சுரண்டி, அவர்களுடைய உழைப்பின் பலனைத் தான் கைப்பற்றிக்கொண்டு அனுபவிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அவர்கள் நிலச்சுவான்தாரிடம் நியாயத்தை எடுத்துக் கூறினல், அவர் அதற்குச் செவி சாய்ப்பதில்லை; தமது மனைவிக்கு அவ்வளவும், குழந்தைகளுக்கு அவ்வளவும், வேறு செலவுக்கும் வேண்டும் என்று கூறிவிடுவார். குடிகளோ அல்லது அவர்கள் சார்பில் பரிந்து பேசியவர்களும் செல்வாக்குள்ளவர்களுமான சிலரோ, தன் கணவருக்கு நியாயத்தை எடுத்துக் கூறும்படி நிலச்சுவான்தாரின் மனைவியைக் கேட்டுக்கொள்ளுவார்கள். குடிகளிடமிருந்து தன் கணவர் சுரண்டும் பணம் தனக்குத் தேவையில்லையென்று அப்பெண் சொல்லிவிடலாம். அவரது குழந்தைகளும் அப்படியே சொல்லலாம். தங்களுக்குத் தேவையானதைத் தாங்களே சம்பாதித்துக் கொள்ளுவதாக அவர்கள் கூறலாம்.

மேலும், நிலச்சுவான்தார் யார் கூறுவதையும் கேட்கவில்லை என்றாே அல்லது அவரது மனைவியும் குழந்தைகளும்

குடிகளுக்கு எதிராக ஒன்று சேர்ந்து விடுவதாகவோ வைத்துக்கொள்ளுவோம். அப்போதும் குடிகள் பணிந்து விடக்கூடாது. அவர்கள் நிலத்திலிருந்து வெளியேறிவிட வேண்டுமென நிலச்சுவான்தார் கூறினல், அவர்கள் வெளியேறிவிட வேண்டும். எனினும், நிலத்தில் யார் உழுது, பயிரிட்டுப் பாடுபடுகிறார்களோ அவர்களுக்கே நிலம் சொந்தமானது என்று அவர்கள் தெளிவாகக் கூறிவிட வேண்டும். நிலச்சுவான்தார் தமக்குள்ள எல்லா நிலங்களையும் தாமே உழுது, பண்படுத்திவிட முடியாது. எனவே, அவர் குடிகளின் நியாயமான கோரிக்கைகளுக்கு இறுதியில் இணங்கும்படியே நேரும். அவ்விதம் வெளியேறும் குடிகளின் ஸ்தானத்தில் வேறு குடிகள் நியமிக்கப்படலாம். புதிய குடிகள் தங்களுடைய தவறை உணர்ந்து, வெளியேற்றப்பட்ட குடிகளுடன் ஒன்று சேர்ந்துகொள்ளும் வரையில், பலாத்காரமற்ற கிளர்ச்சி தொடர்ந்து நடைபெறலாம். இவ்விதமாக, சத்தியாக்கிரகம் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் ஒரு நடவடிக்கையேயாகும். அது சமூகத்தின் எல்லா அம்சங்களிலும் வியாபித்துக்கொண்டு, இறுதியில் எதிர்க்க முடியாததாகிவிடுகிறது. அத்தகைய நடவடிக்கைக்குப் பலாத்காரம் ஒரு முட்டுக்கட்டையாகி, சமூக அமைப்பில் உண்மையான புரட்சி ஏற்படும் காலத்தை ஒத்திவைத்துவிடுகிறது.

சத்தியாக்கிரகம் வெற்றி பெறுவதற்கு அவசியமான நிபந்தனைகளாவன :

1. எதிராளியிடம் சத்தியாக்கிரகிக்குத் தமது உள்ளத்தில் யாதொரு துவேஷமும் இருக்கக்கூடாது.

2. சத்தியாக்கிரகி ஈடுபடும் பிரச்னை உண்மையானதாகவும், வலுவும் சாரமும் உள்ளதாகவும், முக்கியமானதாகவும் இருக்கவேண்டும்.

3. தம்முடைய லட்சியத்திற்காக இறுதி வரையில் துன்பத்தை அனுபவிக்க சத்தியாக்கிரகி தயாராக இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 31—3—1946

பகுதி பதினேழு

# முடிவுரை

## 1

## அகிம்சையில் எனது நம்பிக்கை

*[1931-ம் வருடம் காந்திஜி லண்டன் வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றபோது ஒரு நாள் கப்பலில் மாலைப் பிரார்த்தனை நடந்தபின் அவர் பேசிய விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன:]*

அழிவிற்கு மத்தியில் வாழ்வு உறுதியுடன் நிலைத்திருப்பதை நான் கண்டுள்ளேன். எனவே, அழிவைக் காட்டிலும் உயர்ந்த நியதி ஒன்று இருக்க வேண்டும். அந்த நியதிக்கு உட்பட்டு மாத்திரமே நன்கு ஒழுங்குபடுத்தப்பட்ட சமுதாயம் இயங்குவதை அறிந்துகொள்ள முடிகிறது; வாழ்க்கையும் வாழத் தகுதி வாய்ந்ததாகிறது. அது வாழ்க்கையின் நியதியாக இருக்குமாயின், தினசரி வாழ்க்கையில் நாம் அதைப் பரிசீலனை செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம். தகராறுகள் ஏற்படும் போதெல்லாம், நீங்கள் ஓர் எதிரியைச் சமாளிக்க நேரும் போதெல்லாம், அன்பினால் அவரை வெல்ல வேண்டும். என் வாழ்க்கையில் அந்தப் பிரச்னையை நான் கரடுமுரடான முறையில் தீர்த்திருக்கிறேன். எனினும், அதனால் என் கஷ்டங்களெல்லாம் தீர்ந்துவிட்டன என்று அர்த்தமல்ல. இருந்தாலும், அழிவு முறை ஒரு காலத்திலும் பலனளிக்காத வகையில் இந்த அன்பு முறை பலனளித்திருப்பதை நான் கண்டுள்ளேன். இந்தியாவில், சாத்தியமான அளவு பரந்த முறையில் இந்த நியதி செயல்படுவதை நாம் கண்ணாரக் கண்டிருக்கிறோம். எனினும், முப்பது கோடி மக்களின் மனத்திலும் அகிம்சை ஊடுருவியிருக்கிறது என்று நான் கூறவில்லை. ஆனால், நம்ப முடியாதவாறு மிகக் குறுகிய காலத்திற்குள் வேறு எந்தத் தத்துவத்தையும்விட அகிம்சைத் தத்துவமே அதிக ஆழமாக மக்களின் மனத்தில் பதிந்திருக்கிறது என்றே நான் கூறுகிறேன். நாம் எல்லோரும் ஒரேவிதமாக அகிம்சையைக் கைக்கொள்ளவில்லை; பெரும்பாலான மக்களும் கொள்கையளவில் மாத்திரமே அகிம்சையை மேற்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருந்தும் கூட, அகிம்சையின் பாதுகாக்கும் சக்தியின் கீழ் தேசம் அற்புதமாக முன்னேற்றம் அடையவில்லையா என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமென விரும்புகிறேன்.

மனத்தில் அகிம்சை ஊடுருவி நிலைப்பதற்கு உறுதியுடனும் ஊக்கத்துடனும் பெருமுயற்சியுடனும் பயிற்சி பெற வேண்டியது அவசியமாகும். அதை ஒருவர் விரும்பாவிடினும், ஒரு சிப்பாயைப் போல அது தினசரி வாழ்க்கையில் ஒரு கட்டுதிட்டப் பயிற்சியாக இருந்தாக வேண்டும். எனினும், அந்தப் பயிற்சிக்கு உள்ளத்தின் பரிபூரணமான ஒத்துழைப்பு இருந்தாலன்றி, வெறும் வெளிச்சடங்கு போலி வேஷமேயாகும். அது வேஷம் போடுவோருக்கும், பிறருக்கும் தீமையாகும். உள்ளம், உடல், பேச்சு எல்லாம் ஒழுங்கான முறையில் ஒன்று சேரும்போதுதான், குற்றம் குறையற்ற நிறைவு நிலையை அடைய முடிகிறது. எப்போதும் உள்ளத்தின் தீவிரமான போராட்டத்திற்குப் பின்தான் அத்தகைய நிலையை அடைய முடியும். உதாரணமாக, எனக்குக் கோபமே உண்டாகாது என்று கூறுவதற்கில்லை. ஆனல், எனது உணர்ச்சிகளைக் கட்டுப்பாட்டிற்குள் அடக்குவதில் நான் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் வெற்றி பெற்றிருக்கிறேன். பலன் எவ்விதமாயினும், மனப்பூர்வமாகவும் இடைவிடாமலும் அகிம்சை நியதியைப் பின்பற்ற வேண்டும் என்ற மனமறிந்த போராட்டம் என்னுள் எப்போதும் நிகழ்ந்தவண்ணமாக இருக்கிறது. அத்தகைய போராட்டம் எவரையும் பலவீனப்படுத்துவதில்லை, அதிக பலம் உள்ளவராகவே செய்கிறது. அகிம்சை, பலசாலியின் ஆயுதமாகும். பலமற்றவர்களுக்கு அது எளிதில் போலி வேஷமாகிவிடலாம். பீதியும் அன்பும் முரண்பாடானவை. அன்பு முன்பின் யோசியாமல் எதையும் துறந்துவிடுகிறது. தன் தியாகத்திற்குப் பதிலாக என்ன கிடைக்கப் போகிறது என்பது பற்றி அது லட்சியம் செய்வதில்லை. அன்பு உள்ளத்துடன் போராடுவது போல், உலகத்துடனும் போராடுகிறது; இறுதியில் அது மற்ற எல்லா உணர்ச்சிகளையும் அடக்கித் தானே முதன்மையான ஸ்தானத்தை அடைகிறது. சத்திய நியதியையும் அகிம்சை நியதியையும் நாம் வாழ்க்கையின் விதியாகக் கொள்ளுவதில் உறுதியுடன் இருப்போமாயின், எந்தப் பிரச்னையையும் தீர்க்க முடியும். நானும், என்னுடன் வேலை செய்துகொண்டிருப்பவர்களும் கண்ட அனுபவம் இதுதான். சத்தியத்தையும் அகிம்சையையும் ஒரே நாணயத்தின் இறபுறங்களாகவே நான்கருதுகிறேன்.

•

நாம் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் பூமியின் ஆகர்ஷண சக்தி நியதியைப் போல் அன்பின் நியதியும் இயங்கியே தீரும். இயற்கையின் நியதியைப் பல்வேறு விதங்களிலும் ஒரு விஞ்ஞானி கையாண்டு அற்புதங்களைச் செய்வது போல், அன்பு நியதியையும் விஞ்ஞான ரீதியில் அணுவளவும் பிழையின்றி ஒருவர் உபயோகிப்பாராயின் அவர் இன்னும் அதிக ஆச்சரியகரமான அற்புதங்களைச் செய்ய முடியும். உதாரணமாக, மின்சாரத்தைப் போன்ற இயற்கையின் ஸ்தூலமான சக்திகளைவிட, அகிம்சையின் சக்தி பன்மடங்கு அதிக அற்புதமானது, அதிக நுணுக்கமானது. நமக்காக அன்பு நியதியைக்

கண்டுபிடித்தவர்கள், நமது நவீன விஞ்ஞானிகளைக் காட்டிலும் மேலான விஞ்ஞானிகளாவர். அத்துறையில் நமது பரிசோதனைகள் வெகு தூரம் செல்லவில்லை. அதனாலேயே, அது இயங்குவதில் உள்ள அற்புதங்களையெல்லாம் எல்லோரும் பார்ப்பது சாத்தியமாக இல்லை. இந்த நியதியை நான் பரிசீலனை செய்யச் செய்ய, வாழ்க்கையில் எனக்கு அதிக ஆனந்தம் ஏற்படுகிறது. அது, இந்த உலகம் இயங்கும் அற்புதத்தைக் கண்டு உண்டாகும் ஆனந்தமேயாகும். அது எனக்குச் சாந்தியைக் கொடுக்கிறது; இயற்கையின் மர்மங்களில் உள்ள பொருளை உணரும்படி செய்கிறது. அந்த மர்மங்களை வருணிப்பதற்கு எனக்குச் சக்தியில்லை.

—'நேஷன்ஸ் வாய்ஸ்' - 2—ஆம் பாகம்

# 2

# எதிர் காலம்

அமெரிக்காவிலிருந்து ஒரு நண்பர் கீழ்க்கண்ட இரண்டு கேள்விகளை எனது ஆலோசனைக்கு அனுப்பியிருக்கிறார்:

1. "இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைக்கும்படி செய்வதில் வெற்றி பெறும் சக்தி சத்தியாக்கிரகத்திற்கு இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும், சுதந்திர இந்தியாவில் அதை அரசாங்கத்தின் கொள்கையாக அங்கீகரிப்பதற்கு வாய்ப்புகள் இருக்கின்றனவா? வேறு விதமாகக் கூறுவதாயின், பலம் பொருந்திய ஒரு சுதந்திர இந்தியா தற்காப்பு முறையாகச் சத்தியாக்கிரகத்தை நம்பியிருக்க முடியுமா? அல்லது வெகு காலமாக இருந்துகொண்டிருக்கும் யுத்த முறையை, அது எவ்வளவு தற்காப்பிற்காக இருப்பினும், மீண்டும் தஞ்சமடையுமா? முற்றிலும் பேச்சுக் கட்டத்தில் உள்ள பிரச்னையை அடிப்படையாகக் கொண்டு இக்கேள்வியை வேறுவிதமாகக் கேட்கலாம்: அதாவது, அரசாங்கத்தை எதிர்த்து உயிர்த் தியாகம் புரிந்து புகழ்பெறும் சந்தர்ப்பமளிக்கும் கஷ்டமான போராட்டத்தின்போது மாத்திரமே சத்தியாக்கிரகம் அங்கீகரிக்கப்படுமா? அல்லது ஓர் அரசாங்கத்தின் போர்க் கருவியாகவே அது கைக்கொள்ளப்படுமா? அது அரசாங்கத்தின் கருவியாக இருக்கும்போது, உயிர்த் தியாகம் செய்து புகழ் பெறும் கொள்கைக்கு அவசியமோ அல்லது வாய்ப்போ இருக்க இடமில்லை அல்லவா?

2. சத்தியாக்கிரகத்தை அரசாங்கக் கொள்கையாகச் சுதந்திர இந்தியா மேற்கொள்ளுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்போது பூரண அதிகாரமுள்ள மற்றொரு அரசாங்கம் இந்தியாவைத் தாக்குவதாக வைத்துக்கொள்ளுவோம். அப்போது இந்தியா தன்னைத்தானே எப்படித் தற்காப்பு செய்துகொள்ளும்? இந்தக் கேள்வியையும் முற்றிலும் பேச்சுக் கட்டத்தை அடிப்படையாகக்கொண்டு வேறுவிதமாகக் கேட்கலாம்.

இந்தியாவின் எல்லைப்புறத்தில் படையெடுத்துவரும் படைகளைச் சமாளிக்க சத்தியாக்கிரக முறையில் என்ன செய்ய வேண்டும்? தற்போது இந்தியாவில் இந்திய தேசீயவாதிகளுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் பொதுவான நடவடிக்கை அரங்கம் ஒன்று இருக்கிறது. அதுபோன்ற ஓர் அரங்கம் ஏற்படும் வரையில், படையெடுத்துவரும் எதிரிகளை எவ்விதமாக எதிர்ப்பது? அல்லது எதிரிகள் தேசத்தை ஆக்கிரமித்துக்கொள்ளும் வரையில், சத்தியாக்கிரகிகள் நடவடிக்கை எதுவும் எடுத்துக்கொள்ளாமல் இருந்துவிடுவதா?

இந்தக் கேள்விகள் இன்னும் விவாத கட்டத்தில் இருப்பனவே என்பதில் சந்தேகமில்லை. தவிர, அவற்றைப் பரிசீலனை செய்ய வேண்டிய நேரம் இன்னும் வரவில்லை. ஏனெனில், அகிம்சையின் நுணுக்கங்களையெல்லாம் இன்னும் நான் பூரணமாக அறிந்துகொண்டு விடவில்லை. எனது பரிசோதனை இன்னும் உருவாகிக்கொண்டிருக்கிறது. அது மிகவும் முன்னேற்றமான ஒரு கட்டத்தைக்கூட இன்னும் அடையவில்லை. ஒரு சமயத்தில் ஒரு படியுடன் திருப்தி அடைய வேண்டும். இதுதான் இந்தப் பரிசோதனையின் இயல்பாகும். தொலைவில் உள்ள காட்சியை இதற்குள் பார்க்க முற்படக்கூடாது. எனவே, எனது விடைகள் சிந்தனைக் கட்டத்தில் உள்ளவையாகவே இருக்க முடியும்.

சுதந்திரத்தைப் பெற நாம் நடத்தி வரும் போராட்டத்தில் கூட உண்மையில் நாம் கலப்பற்ற அகிம்சையை மேற்கொள்ளவில்லை. இதை நான் முன்பே கூறியிருக்கிறேன்.

முதல் கேள்வி சம்பந்தப்பட்ட வரையில், அரசாங்கத்தின் கொள்கையாக அகிம்சையை அங்கீகரிக்கும் வாய்ப்புகள் எனக்குத் தெரிந்தவரை மிகவும் குறைவாகும். சுதந்திரம் அடைந்த பிறகு அகிம்சையைத் தனது கொள்கையாக இந்தியா ஒப்புக் கொள்ளாவிடில், இரண்டாவது கேள்விக்கு இடமேயில்லை.

ஆனால், அகிம்சையின் சக்தியைப் பற்றி என் சொந்த அபிப்பிராயத்தை நான் கூறலாம். பெரும்பாலான மக்கள் சாத்விகமாக இருப்பார்களாயின், அகிம்சையின் அடிப்படையில் ஓர் அரசாங்கத்தை நிர்வாகம் செய்ய முடியும் என்றே நான் நம்புகிறேன். எனக்குத் தெரிந்த வரையில், உலகத்தில் உள்ள தேசங்களுள் இந்தியாவில் மாத்திரமே அவ்விதம் நிகழ்வதற்குச் சாத்தியம் உண்டு. அந்த நம்பிக்கையுடனேயே நான் எனது பரிசோதனையை நடத்தி வருகிறேன். எனவே, அப்பழுக்கற்ற அகிம்சையின் மூலம் இந்தியா சுதந்திரம் பெறுவதாக வைத்துக் கொள்ளுவோம். அப்படியாயின், அதே முறையின் மூலம் இந்தியா பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாத்து வரவும் முடியும். பலாத்காரமற்ற ஒரு மனிதனோ அல்லது சமூகமோ, வெளியிலிருந்து தாக்குதல்களை எதிர்பார்ப்பதில்லை, அத்தகைய தாக்குதல்களைச் சமாளிப்பதற்கான முறைகளையும் கைக்கொள்ளுவ

தில்லை. அதற்கு மாருக, அத்தகைய ஒரு நபரோ அல்லது சமூகத்தினரோ தங்களுக்கு எவரும் கஷ்டத்தைக் கொடுக்கமாட்டார் என்பதில் உறுதியான நம்பிக்கையுடையவர்களாக இருப்பார்கள். படுமோசமான நிலைமை ஏற்படுமாயின், அதைச் சமாளிக்க அகிம்சைவாதிக்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. ஒன்று தேசத்தை விட்டுக் கொடுப்பது, ஆனல் படையெடுத்தவரிடம் ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுவதாகும். உதாரணமாக, ஒரு நவீன நீரோ * இந்தியா மீது படையெடுப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதிகள் அவனை உள்ளே விட்டு விடுவார்கள்; ஆனல் மக்களிடமிருந்து அவனுக்கு எவ்வித உதவியும் கிடைக்காதென்று கூறி விடுவார்கள். அவனிடம் அடிபணிவதைக் காட்டிலும், மரணத்தையே மக்கள் விரும்புவார்கள்.

இரண்டாவது வழி என்னவெனில், அகிம்சை வழியில் பயிற்சி பெற்றுள்ள மக்கள் சாத்விகமாக எதிர்ப்பதேயாகும். அவர்கள் நிராயுதபாணிகளாக நின்று, தாக்குவோரின் பீரங்கிகளுக்கு இரையாவார்கள். ஒரு நீரோவிற்குக்கூட இருதயம் உண்டு என்ற நம்பிக்கையே அந்த இரண்டு வழிகளின் அடிப்படையாகும். ஆடவர்களும் பெண்களும் முடிவின்றி வரிசை வரிசையாக நின்று, தாக்குவோரின் இஷ்டத்திற்குப் பணிவதை விட இறப்பதே மேல் என்று மரணத்தை வரவேற்கும் எதிர் பாராத காட்சி, தாக்குபவர், அவரது சிப்பாய்கள் முதலியோரின் உள்ளத்தை இறுதியில் உருக்கிவிடும். பலாத்கார எதிர்ப்பைக் கைக்கொள்ளுவதால், எவ்வளவு மனிதர்கள் உயிரிழப்பார்களோ, அதைக் காட்டிலும் அதிகமாக சாத்விக எதிர்ப்பினல் உயிர்ச்சேதம் ஏற்பட்டு விடாது. போர்த்தளவாடங்கள், அரண் பாதுகாப்புகள் முதலியவற்றிற்கான செலவுகளும் இரா. மக்கள் பெற்றுள்ள அகிம்சைப் பயிற்சி, அவர்களுடைய தார்மிக உயர்வையும் மனத்துக்கு எட்டாத வகையில் அதிகமாக்கும். அத்தகைய ஆடவர்களும் பெண்களும், ஆயுதப் போரில் காட்டப்படும் தைரியத்தைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு மேலான தைரியத்தைக் காட்டுபவர் ஆவார்கள். ஆயுதப் போரிலும் சரி, சாத்விகப் போரிலும் சரி, இறப்பதில்தான் தைரியம் இருக்கிறது, கொல்லுவதில் அல்ல. கடைசியாக, சாத்விக எதிர்ப்பில் தோல்வி என்பதே கிடையாது.

அத்தகைய சம்பவம் இதற்கு முன் நேர்ந்ததே இல்லை என்பது, நான் மேலே கூறியிருப்பதற்குப் பதிலாகிவிடாது.

---

* கிளாடியஸ் ஸீஸர் நீரோ 1900 ஆண்டுகளுக்கு முன் ரோம் சக்கரவர்த்தியாக இருந்தவன். கொடுங்கோலன் என்று உலகத்தின் கண்டனத்திற்கு ஆளானவன். அவனது பதினன்கு வருட ஆட்சியில் அவன் புரிந்த கொடுமைகளும் துன்மார்க்கச் செயல்களும் கணக்கில் அடங்கா. அந்த நீரோவைப் போன்ற ஒரு கொடுங்கோலன் என்பதையே காந்திஜி, நவீன நீரோ என்று குறிப்பிட்டுள்ளார்.

இங்கே நான் சாத்தியமில்லாத எதையும் சித்திரித்துவிடவில்லை. நான் குறிப்பிட்ட ரகமான தனி நபர் சாத்விகத்திற்கு, சரித்திரத்தில் நிறைய உதாரணங்கள் இருக்கின்றன. ஆடவர்களும் பெண்களும் அடங்கிய கோஷ்டியினர் போதிய பயிற்சி பெற்று ஒரு கோஷ்டியாகவோ அல்லது தேசீய இனமாகவோ சாத்விக நடவடிக்கையில் ஈடுபட முடியாது என்று கூறுவதற்கோ அல்லது நினைப்பதற்கோ யாதொரு காரணமும் இல்லை.

மனிதர்கள் எப்படியோ வாழ்கிறார்கள் என்பதுதான் மொத்தத்தில் மனித வர்க்கத்தின் அனுபவமாகும். இந்த உண்மையிலிருந்தே அன்பு நியதிதான் மனித வர்க்கத்தை ஆட்சி புரிகிறது என்று நான் ஊகிக்கிறேன். பலாத்காரம், அதாவது துவேஷம் மனித வர்க்கத்தை ஆட்சி புரிந்திருக்குமாயின், வெகு காலத்திற்கு முன்பே நாம் அழிந்து போயிருக்க வேண்டும். அப்படியிருந்தும்கூட, நாகரிக மனிதர் என்று சொல்லப்படுவோரும் தேசங்களும், பலாத்காரம்தான் மானிட சமுதாயத்தின் அடிப்படை என்பது போல் நடந்துகொண்டு வருவது மிகவும் துக்ககரமான விஷயமாகும். அன்புதான் வாழ்க்கையின் மகோன்னதமான ஒரே நியதி என்பதை நிரூபிப்பதற்கான பரிசோதனைகளைச் செய்வதில் எனக்குச் சொல்லி முடியாத ஆனந்தம் ஏற்படுகிறது. அதற்கு எதிராக எவ்வளவு சாட்சியம் இருந்தாலும் எனது நம்பிக்கையை அசைக்க முடியாது. இன்று இந்தியா அனுசரித்து வரும் கலப்புள்ள அகிம்சைகூட, அந்த நம்பிக்கையை ஆதரிப்பதாக இருக்கிறது. நம்பிக்கையில்லாதவரைச் சமாதானப்படுத்த அது போதாதென்றாலும், நட்பு உணர்ச்சியுள்ள ஓர் ஆட்சேபவாதியின் ஆதரவைப் பெறுவதற்கு அது போதுமானது.

'ஹரிஜன்' 13—4—1940

# 1

# சம்பாரணில் காந்திஜி எழுதிய கடிதங்கள்

[சம்பாரண் போராட்டத்தின்போது காந்திஜி, அதிகாரிகளுடன் சமரசமாகவே இருந்து விவசாயிகளின் கஷ்டங்களைப் போக்குவதற்கு முயற்சி செய்து வந்தார். ஆகவே, அடிக்கடி அதிகாரிகளுக்கும் அவுரித் தொழிற்சாலை முதலாளிகளுக்கும் கடிதம் எழுதி வந்தார். அக்கடிதங்களில் சில கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன:]

## (1)

## மோதிஹரி ஜில்லா மாஜிஸ்டிரேட்டுக்கு

*மோதிஹரி, 16 ஏப்., 1917*

*ஐயா,*

*கிரிமினல் புரொஸிஜர் சட்டம் 144-வது பிரிவின்படி ஓர் உத்தரவு இப்பொழுது எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப் பிறப்பிக்க வேண்டியது அவசியம் என்று நீங்கள் கருதிவிட்டதற்காக வருந்துகிறேன். இந்த டிவிஷனின் கமிஷனர், என் நிலைமையை முற்றிலும் தவறாகத் திரித்துக் கூறிவிட்டதற்காக மேலும் நான் வருந்துகிறேன். பொதுஜனப் பொறுப்பு உணர்ச்சியை முன்னிட்டு, இந்த ஜில்லாவைவிட்டு வெளியேறிவிட என்னால் முடியவில்லை என்பதை அறிவித்துவிட வேண்டியது என் கடமையாகிறது. ஆனால், அதிகாரிகள் விரும்பினால், இந்த உத்தரவுக்கு உடன்பட மறுத்துவிட்டதற்கான தண்டனையை அனுபவிக்கத் தயாராயிருக்கிறேன்.*

*'கிளர்ச்சி செய்வதே என் நோக்கமாக இருக்கக்கூடும்' என்று கமிஷனர் கூறுவதை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன். விஷயங்களை ஆராய்ந்து தெரிந்து கொள்ளுவது என்பது மாத்திரமே என்னுடைய உண்மையான நோக்கம். நான் இங்கே இருக்க அனுமதிக்கப்படும் வரையில், இதில் தொடர்ந்து திருப்தி ஏற்படும்படிச் செய்வேன்.*

*உங்கள் பணிவுள்ள,*

**மோ. க. காந்தி.**

## (2)

## மற்றோர் கடிதம்

*மோதிஹரி, 17 ஏப்., 1917*

ஐயா,

அதிகாரிகள் அறியாத வகையில் எதையும் செய்யும் விருப்பம் எனக்கு இல்லை. எனவே, நாளை கோர்ட்டில் ஆஜராக வேண்டும் என்று எனக்குச் சம்மன் வராது என்ற எண்ணத்தின் பேரில், நாளை காலை ஷோன்பூருக்கும் சுற்றுப்புற கிராமங்களுக்கும் போகிறேன். எங்கள் கோஷ்டி அதிகாலை 3 மணிக்குப் புறப்படலாம் என்று இருக்கிறது.

வழி முழுதும் எங்களுடன் ஒரு போலீஸ் அதிகாரி தொடர்ந்து வந்து கொண்டிருந்ததை நேற்று கவனித்தேன். முழு விளம்பரத்தையும் நாங்கள் ஏற்றுக்கொள்ளுகிறோம். ஆகையால், எங்கள் வேலைக்குப் போலீஸ் உதவி கிடைக்காதிருக்கலாம். எங்களிடையே போலீஸ்காரர் இருப்பதை நாங்கள் வரவேற்போம் என்பதை, என் சார்பிலும் என் தோழர்களின் சார்பிலும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

உங்கள் பணிவுள்ள,
**மோ. க. காந்தி.**

## (3)

## அடித்ததாகப் புகார்

*மோதிஹரி, 25 மே, 1917*

அன்புள்ள ஸ்ரீ ஹேகாக்,

ராம்சிங் சடாருனியிலிருந்து வந்துள்ளவர்கள் இப்பொழுது என் முன்னால் இருக்கிறார்கள். தங்களை ஞாயிற்றுக்கிழமையன்று இரவு ஸ்ரீ இர்வின் அடித்தார் என்று அவர்கள் கூறுகிறார்கள். இன்னொருவரை அடித்ததையும் பார்த்தவர்கள் இருக்கிறார்கள் என்றும், அவரையும் தங்களையும் தொழிற்சாலை ஆட்களே அடித்தனர் என்றும் சொல்லுகிறார்கள். ஐம்பது பிகாஸுக்கு மேற்பட்ட தங்கள் சொந்த நிலத்தை, இன்னொரு நிலத்திற்குப் பரிவர்த்தனையாக கோதி எடுத்துக் கொண்டுவிட்டார் என்றும், கொடுத்திருக்கும் நிலம் தங்களுக்குத் தேவையில்லை என்றும், இப்பொழுதும் அது தங்களுக்கு வேண்டாம் என்றும் இன்னொருவர் என்னிடம் கூறுகிறார்.

இவ்விதம் கூறப்படுவது உண்மையாக இருக்குமானால், அவை மோசமானவையாகும். கொஞ்சம் பரபரப்பு இருப்ப

தாகக் தோன்றுவதால் கிராமங்களுக்குப் போவதைச் சாத்தியமான வரையில் இப்போதைக்குத் தவிர்க்க விரும்புகிறேன். ஆனால், சடாருனிக்கு இன்று மாலை போக வேண்டும் என்றிருக்கிறேன். நான் வேறு வழியை மேற்கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்பினாலன்றி, மாலை 5-30 மணிக்கு நாங்கள் புறப்படுவோம்.

உங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

## (4)

## மற்றோர் கடிதம்

*மோதிஹரி, 25 ஜூலை, 1917*

அன்புள்ள ஸ்ரீ ஹேகாக்,

நீங்கள் 25-ஆம் தேதியிட்டு அனுப்பிய அந்தரங்கக் குறிப்பு இப்பொழுது கிடைத்தது. அதற்காக என் நன்றி. உங்கள் மௌனத்தைத் தவறாக எண்ணிவிடும் நோக்கம் எனக்கு இல்லை. ஆனால், உங்கள் எச்சரிக்கையின் முழு நியாயத்தையும் பாராட்டுகிறேன். இப்பிரச்னை தீர்ந்த பிறகு, நான் மேற்கொள்ள நினைக்கும் காரியத்திற்கு முழு வாய்ப்பும் இருக்கிறது என்பதை அறிவேன். அரசாங்கத்திற்கு முழு விவரங்களையும் அளிக்காமல், ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் மதிப்புக் கொடுக்காமல் எதுவும் செய்யப்பட்டுவிடாது என்பதைக் குறித்தும் உங்களுக்கு வாக்குறுதி அளிக்க விரும்புகிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

## (5)

## பள்ளிக்கூடங்கள் ஆரம்பம்

*மோதிஹரி, 14 நவ., 1917*

அன்புள்ள ஸ்ரீ மெர்ரிமான்,

நான் செய்துகொண்டிருப்பவைகளைக் குறித்து உங்களுக்கு அப்போதைக்கப்போது அறிவித்து வர வேண்டும் என்று எண்ணுகிறேன். காம் என்ற கிராமத்தில் பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதற்குக் கட்டிடம் தயாராக இருக்கிறது என்றும், அதை நான் ஆரம்பித்துவைக்க வேண்டும் என்றும் அழைப்பு வந்ததன் பேரில் பாதர்வா லகாம்செனில், டாகாவுக்கு அருகில், ஒரு பள்ளிக்கூடத்தை அன்று ஆரம்பித்துவைத்தேன். சேவை செய்ய முன் வந்திருப்போரில் சிறந்தவர்களான தொண்டர் ஆசிரியர்களை நான் அப்பள்ளிக்கூடத்திற்கு நியமித்திருக்கிறேன். பம்பாயி

லிருந்து வந்திருக்கும் கோகலே தம்பதிகளே அவர்கள். ஸ்ரீமதி கோகலே பம்பாயில் கல்வித்துறையில் வேலை செய்து வந்தவர். இவர்கள் அங்கே செய்யப்போகும் வேலையின் தன்மை இன்னது என்பதை முன்பே உங்களுக்கு விவரித்திருக்கிறேன். சம்பந்தப்பட்ட ஸ்தாபனங்களின் தலைவர்கள் பீப்ரா வட்டத்தில் ஒரு பள்ளிக்கூடத்தையும், தர்க்காலியா வட்டத்தில் ஒரு பள்ளிக்கூடத்தையும் ஆரம்பித்து உதவி செய்வார்களானால், பேல்வா வட்டத்தில் ஒரு பள்ளிக்கூடத்தை நான் ஆரம்பிக்கலாம் என்றிருக்கிறேன். இந்த முயற்சி ஒரு பரீட்சார்த்த முறையிலே இருந்து வருகிறது. ஆகையால், நிச்சயமான பலன் இருக்கிறது என்று தெரிந்தாலன்றி நான்கு, ஐந்து பள்ளிக்கூடங்களுக்கு அதிகமாக ஆரம்பிக்க நான் விரும்பவில்லை. இந்தப் பரீட்சையில் நிறைய கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை அறிவேன். ஆனால், வெற்றி ஏற்பட்டுவிடுமானால் இதனால் மிக முக்கியமான நன்மைகள் உண்டு. எனக்கு உள்ளூர் அதிகாரிகளின் ஒத்துழைப்பு இருக்கும் என்றே நம்புகிறேன்.

உங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## (6)

## பத்திரத்தில் கைரேகை

*மோதிஹரி, 17 நவ, 1917*

அன்புள்ள ஸ்ரீ மெர்ரிமான்,

நேற்று கோரிக்குப் போயிருந்தேன். அங்கே சிவரதம் முதலியவர்களைச் சந்தித்தேன். என்றாலும், நீங்கள் உத்தர விட்ட விசாரணையின் முடிவு, சம்பந்தப்பட்டவர்களுக்கு 23-ஆம் தேதி அறிவிக்கப்படும் என்று அறிகிறேன். ஆகவே, அந்த முடிவு தெரியும் வரையில் நான் கண்டிருப்பதைக் கூறுவதை ஒத்தி வைத்துக் கொள்ளுகிறேன்.

சிராகா வட்டத்தைச் சேர்ந்த விவசாயிகள், அந்தத் தொழிற் சாலையினர் தங்களிடம் ஏதோ ஒரு பத்திரத்தில் கைரேகை வாங்குகிறார்கள் என்று புகார் கூறுகின்றனர். அந்தப் பத்திரத்தின் நகலை நான் பார்ப்பதற்கு முன்னால் அவர்கள் இது சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறித்து அவர்களுக்கு எந்த யோசனையும் கூற முடியாத நிலைமையில் இருக்கிறேன். அவர்கள் என் ஆலோசனையின் பேரில் நடக்க விரும்புவார்களானால், பத்திரத்தின் நகலை நான் பார்ப்பதற்கு முன்னால் எதிலும் கையெழுத்துப் போடவேண்டாம் என்று அவர்களுக்குச் சொல்லியிருக்கிறேன். அப்படிப் பார்க்காமல் அவர்களுக்கு எந்த ஆலோசனையும் என்னால் கூற முடியாது என்று கருதுகி

றேன். இந்தத் தகவலை உங்களுக்கும் அறிவிக்க வேண்டும் என்று எண்ணினேன். நிலச்சுவான்தார்களுக்கும் விவசாயி களுக்குமிடையே உறவு சுமுகமானதாக இருக்க வேண்டுமானல், விவசாயிகளிடம் வாங்கும் ஒப்பந்தங்களை நிலச்சுவான்தார்கள் முன்கூட்டியே உங்களிடம் காட்டுவது நல்லது என்பதையும் தெரி வித்துக் கொள்ளுகிறேன். இன்னதென்று தங்களுக்குப் புரி யாத தஸ்தாவேஜிகளில் தங்களை அடிக்கடி கையெழுத்துப் போடும்படிச் செய்கின்றனர் என்று விவசாயிகள் அடிக்கடி புகார் கூறி வருகிருர்கள் என்பதை நீங்களும் அறி வீர்கள்.

உங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## (7)

## வைத்திய வசதி ஏற்பாடுகள்

*மோதிஹரி, 22 நவ., 1917*

அன்புள்ள ஸ்ரீ மெர்ரிமான்,

சென்ற செவ்வாய்க்கிழமை மிதிகாராவுக்கு நான் போய் ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பித்து வைத்தேன். ஸ்ரீ சோமான் என் பவர் பெல்காமைச் சேர்ந்த பொதுஜன ஊழியர்; பி.ஏ. எல். எல் பி. படித்திருக்கிருர். அவருடைய நிர்வாகத்தில் அப்பள்ளிக் கூடம் இருந்துவரும். குஜராத்தைச் சேர்ந்த வாலிபரான ஸ்ரீ பாலகிருஷ்ண அவருக்கு உதவியாக இருப்பார். ஸ்ரீமதி காந்தி யும் 24-ஆம் தேதி போய் அவர்களுடன் சேர்ந்து கொள்ளுவாள். பெண்களுடன் பழகுவதே இவளுடைய முக்கியமான வேலையாக இருக்கும்.

நேற்று பாதர்வாவுக்குப் போயிருந்தேன். ஸ்ரீமதி கோகலே யும் என் மகனும், சாகக் கிடக்கும் ஒருவரைப் பார்த்துவிட்டு அப்பொழுதுதான் வந்தார்கள். அப்பகுதியிலிருக்கும் மக்கள், நோயுற்றிருப்போருக்குச் சிகிச்சை செய்வதில் விசனிக்கத்தக்க வகையில் அசிரத்தையுடன் இருக்கிருர்கள் என்று இவர்கள் என்னிடம் கூறினர். மிகச் சாதாரண சுகாதாரத்தைக் கவனிக் காததனல் பலர் சாகின்றனர் என்றும், அவைகளைக் கவனித் தால் அநேக சாவுகளைத் தடுத்து விடலாம் என்றும் இவர்கள் நம்புகின்றனர். இது உங்களுக்குப் புதிய சமாசாரமாகவே இராது என்பதை அறிவேன். ஏனெனில், ஸ்ரீமதி கோகலே வேலை செய்யும் ஜில்லாவிலும் சம்பாரணிலும் மாத்திரம் விசேஷ மாக இருந்துவரும் நிலைமை அல்ல இது; இந்திய விவசாயிக ளிடையே தீராத நிலைமை இது.

நான் செய்து வரும் பரீட்சையில் இன்னும் கொஞ்சம் முன்னேறியவுடன், நாம் எல்லோருமே சந்தேகத்திற்கு இடமின்றி ஒன்றுபட்டு வேலை செய்வதற்கான ஒரு துறைக்கு உங்களுடைய தீவிரமான அனுதாபத்தையும் உதவியையும் அடைவதற்காகவே இந்தச் சம்பவங்களையெல்லாம் உங்களுக்கு அறிவிக்கிறேன்.

டாக்டர் தேவ், அதிக அனுபவமுள்ள சர்ஜன், வைத்தியர். இவர், இந்திய ஊழியர் சங்கத்தின் காரியதரிசி. செவ்வாய்க்கிழமையன்று இங்கே வந்து சேர்ந்தார். அச்சங்கம் இந்தச் சேவைக்காக அவரை நமக்கு அனுப்பியிருக்கிறது. இன்னும் மூன்று தொண்டர்களுடன் அவர் வந்திருக்கிறார். அவர்களில் ஒருவர், பேராசிரியர் கார்வேயின் விதவைகள் விடுதியைச்சேர்ந்த ஒரு பெண். நடந்து வரும் வேலையின் வைத்தியப் பகுதியை டாக்டர் தேவ் மேற்பார்வை பார்த்துவருவார்.

இரு வாரங்களுக்கு நான் சம்பாரணில் இருக்கமாட்டேன் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நான் இல்லாத போது எனக்குப் பதிலாகப் பாபு பிரிஜ்கிஷோர் பிரஸாத் என் வேலைகளைக் கவனித்து வருவார்.

உங்கள் உண்மையுள்ள,

மோ. க. காந்தி

## 2

# ஒத்துழையாமை இயக்க வரலாறு

**(ஸ்ரீ ராஜேந்திரப் பிரஸாத் எழுதியது)**

இந்திய தேசீய காங்கிரஸும் கிலாபத் மகாநாடும் ஒத்துழையாமை இயக்கத்தை நடத்துவது என்று முடிவு செய்தன. இந்த இயக்கத்தின் முக்கியத்தையும் காரணங்களையும் புரிந்து கொள்ளுவதற்கு, இந்த இயக்கத்தை உடனடி அவசியமாக்கிய சம்பவங்களுக்கு, இன்னும் முன்னால் போய் கவனிக்க வேண்டும், இங்கிலாந்துக்கும் ஜெர்மனிக்கும் 1914 ஆகஸ்டில் பெரிய ஐரோப்பிய யுத்தம் மூண்டபோது, இந்தியா ஒன்று திரண்டு பிரிட்டனுக்கு உதவி செய்தது. நாட்டில் எல்லா ராஜீய இயக்கங்களையும் ஆரம்பித்து அவற்றில் கலந்து கொண்டதற்காக அரசாங்கத்தின் எதிரிகள் என்று கருதப்பட்ட படித்தவகுப்பினரான அதே இந்தியரே, ஜெர்மன் ஆபத்து எவ்வளவு கடுமையானது என்பதை முதலில் உணர்ந்தார்கள். தங்கள் செல்வாக்கு முழுவதையும் அரசாங்கத்திற்கு உதவியாக அளித்தார்கள். சாம்ராஜ்யத்திற்கு அவசியம் ஏற்பட்டுவிட்ட சமயத்தில் இந்திய நாடு முழுதும் அதற்கு முழு உதவியையும் செய்தது. இந்தியா,

தனது புத்திரர்களைப் போர்க்களத்திற்கு அனுப்பியது; பண உதவியையும் செய்தது. சிறந்த சேவையை இந்தியா செய்திருக்கிறது என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. இதைப் பாராட்டி வைஸ்ராயும் இந்தியாவிலிருக்கும் அதிகாரிகளும் புகழ்ந்ததோடு, இங்கிலாந்திலிருந்த பிரதம மந்திரிகளும் ராஜதந்திரிகளும் போற்றினர்கள். ஜனநாயகத்திற்கு ஆபத்து இல்லாததாக உலகத்தைச் செய்யவேண்டும். பலவீனமான தேச மக்களைப் பாதுகாக்க வேண்டும், எல்லா நாட்டு மக்களுக்கும் சுயநிர்ணய உரிமை உண்டு என்பதை உறுதிப்படுத்த வேண்டும் என்பதே பிரிட்டனின் யுத்த நோக்கம் என்று அறிவிக்கப்பட்டது. இதனல், இயற்கையாகவே இந்திய மக்களின் உள்ளத்திலும் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. உலகத்தை நாசப்படுத்துவதாக இருந்த யுத்தத்தின் காரணமாக, அடிமைப்பட்ட நாட்டு மக்கள் என்ற மானக்கேடான நிலைமையில் மாறுதல் ஏற்பட்டு பிரிட்டிஷ் காமன்வெல்தில் இந்தியாவும் ஒரு பங்காளி என்ற ஓர் அந்தஸ்தை அடைய முடியும் என்ற நம்பிக்கை இந்தியருக்கு ஏற்பட்டது.

## மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை

இந்தியா மந்திரியாக இருந்த ஸ்ரீ ஈ. எஸ். மாண்டேகு, 1916-இல் வெளியிட்ட ஓர் அறிக்கை, இந்தியரின் நம்பிக்கையை மேலும் அதிகரித்துவிட்டது. இந்தியப் பொது மக்களுக்குப் படிப்படியாக அதிகாரத்தை மாற்றுவதன் மூலம் இந்தியாவுக்கு முழுப் பொறுப்பு வாய்ந்த ஆட்சியைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் அளிக்கப்படும் என்ருர். நாட்டின் நிர்வாகத்தில் இந்தியருக்கு அதிகப் பங்கு இருக்கும் என்ருர். ஆனல், பூரண பொறுப்பாட்சியை நோக்கி ஏற்படும் இந்த அபிவிருத்தியின் கட்டம் எப்படி இருப்பது என்பதை நிர்ணயிருக்கும் அதிகாரம் மாத்திரம் பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு இருக்கும் என்றும் இந்தியா மந்திரி அந்த அறிக்கையில் கூறினர். 1917-இல் தாம் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்கான அரசியல் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதைக் குறித்து இந்தியப் பொது மக்களுடன் கலந்தாலோசிப்பதற்கு என்று ஸ்ரீ மாண்டேகு பிறகு இந்தியாவுக்கும் வந்தார். இந்தியா முழுவதிலும் பிரயாணம் செய்தார்; அநேகரைக் கண்டு பேசினர். பல தூது கோஷ்டிகளும் அவரைச் சந்தித்தன. பிறகு ஸ்ரீ மாண்டேகுவும் வைஸ்ராய் லார்டு செம்ஸ்போர்டும், அரசியல் சீர்திருத்தத்தைக் குறித்து 1918 ஜூலை 8-ஆம் தேதி தங்கள் அறிக்கையை வெளியிட்டனர்.

## டில்லி யுத்த மகாநாடு

1918 ஆரம்பத்தில் யுத்தம், நேச நாடுகளுக்கு அதிக ஆபத்தான கட்டத்தில் போய்க்கொண்டிருந்தது. ஜெர்மனியின்

பெருந்தாக்குதல் தீவிரமாக இருந்தது. இன்னும் அதிகமான ஆதரவைப் பெறுவதற்காகவும், யுத்த முயற்சியில் இன்னும் அதிகக் கவனஞ் செலுத்தும்படிச் செய்வதற்காகவும், அப்பொழுது பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் 1918 ஏப்ரல் 2-ஆம் தேதி இந்தியாவுக்கு ஒரு செய்தியை அனுப்பினார். "ஐரோப்பாவின் மீது மாத்திரமல்ல, ஆசியாவின் மீதும்கூட தன்னுடைய கொடுங்கோன்மையை நிலைநாட்டி விடுவதே ஜெர்மனியை ஆளுவோரின் நோக்கம்'' என்பதை ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் இந்தியாவுக்கு நினைவூட்டினார், ''சுதந்திரத்தையும் சட்டத்தையும் நேசிக்கும் ஒவ்வொருவரும், இந்த ஆபத்து ஆசியாவில் பரவி நாளாவட்டத்தில் உலகத்தையே கவிந்துகொண்டு விடாதபடி தடுப்பதில் ஒவ்வொருவரும் முக்கியமான பங்கு வகிக்க வேண்டும்'' என்றார். ''இந்தியா இதுவரையில் அடைந்திருக்கும் கீர்த்தியை இன்னும் அதிகரித்துக்கொள்ளுவதோடு, நசுக்குவதும் குழப்பமுமே எதிரி அடைய விரும்பும் நோக்கமாகையால், அதிலிருந்து ஆசியாவைக் காப்பதற்கு இந்தியா முன்னணியில் இருக்கும் என்றும் நம்புகிறேன்" என்றும் பிரிட்டிஷ் பிரதம மந்திரி அச்செய்தியில் கூறியிருந்தார். இச்செய்திக்கு வைஸ்ராய் விடுத்த பதிலில், "கொடிய, அக்கிரமமான எதிரியின் முயற்சியிலிருந்து தாய்நாட்டின் பூமியைப் பாதுகாப்பதற்கும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் பாடுபடும் உயர்ந்த லட்சியமான நீதியும் கௌரவமும் முடிவில் வெற்றி பெறும்படிச் செய்வதற்கும் முழு முயற்சியையும், முழு தியாகத்தையும் செய்வதாக இந்திய மக்களின் சார்பாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்" என்றார். இதைத் தொடர்ந்து 1918 ஏப்ரல் 28-ஆம் தேதி டில்லியில் யுத்த மகாநாடு நடந்தது. இதற்குப் பிரிட்டிஷ் மன்னர் அனுப்பியிருந்த செய்தியில், ''சாம்ராஜ்யத்தின் தேவை, இந்தியாவுக்குக் கிடைத்திருக்கும் ஒரு வாய்ப்பு'' என்று கூறியிருந்தார். இம்மகாநாட்டைப் போன்றே மாகாண மகாநாடுகளும் கூட்டப்பட்டன.

டில்லியில் நடந்த யுத்த மகாநாட்டில் மகாத்மா காந்தி கலந்துகொண்டார். ராஜவிசுவாசத்தைப் பற்றிய தீர்மானத்தையும் ஆதரித்தார். இதன் பலனாக, ஆளினாலும் பணத்தினாலும் இந்தியா செய்த உதவி பெருமளவு அதிகரித்தது. படைக்கு ஆள் திரட்டுவதும் அதிகமாயிற்று. நேச தேசத்தினரின் வெற்றிக்கு இந்தியா என்ன உதவியைச் செய்திருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுவதற்கு, அதிகாரிகளே ஒப்புக்கொண்டிருப்பதிலிருந்து எடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கும் கீழ்க்கண்ட விவரங்களே போதுமானவை: இந்தியா, மொத்தம் 9,85,000 பேரை யுத்தத்திற்கு உதவியது. இவர்களில் 5,52,000 பேர் கடல் கடந்து வெளிநாடுகளுக்குச் சென்றனர். யுத்தத்தின்போது 7,91,000 பேருக்குக் குறையாமல் ராணுவத்தில் சேர்ந்தனர். யுத்தத்தில் சேராத 4,72,000 பேர் மற்ற சேவைகளுக்குச் சென்றனர். இவர்களில் 3,91,000 பேர் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டனர்.

இவர்களில் 4,27,000 பேர் யுத்த காலத்தில் சேர்ந்தவர்கள். யுத்த சேவைக்கு என்று இந்தியா மொத்தம் 14,57,000 பேரை அளித்திருக்கிறது. இவர்களில் 9,43,000 பேர் வெளிநாடுகளுக்குப் போய் சேவை செய்தனர். காயமடைந்தவர்கள், இறந்தவர்களின் தொகை 1,06,594. அனுப்பப்பட்ட மிருகங்களின் தொகை 1,75,000. யுத்த காலத்தில் 1,855 மைல்கள் ரெயில் பாதைக்கு வேண்டிய சாதனங்கள், 299 ரெயில்வே இன்ஜின்கள், 5,989 ரெயில் வண்டிகள் வெளியே அனுப்பப்பட்டன. நதிகள், கடல்களில் செல்லக்கூடிய கப்பல்கள், படகுகள் முதலியவை 940-ஐ இந்தியா யுத்த சேவையில் ஈடுபடுத்தியது. பண சம்பந்தமாக இந்தியா செய்திருக்கும் உதவியைச் சரியானபடி கணக்கிடுவது கஷ்டம். என்றாலும், இந்த உதவி 13 கோடி பவுன், அதாவது 200 கோடி ரூபாய்க்குக் குறைவாக இராது.

## ரௌலட் சட்ட அறிக்கையும், பிறகும்

"சாம்ராஜ்யத்தின் தேவை, இந்தியாவுக்குக் கிடைத்திருக்கும் வாய்ப்பு" என்று பிரிட்டிஷ் மன்னர் சொன்ன சொல்லில் நம்பிக்கை வைத்து சாம்ராஜ்யத்திற்காக இந்தியா ஏராளமான தியாகங்களைச் செய்து வந்த போதிலும், உன்னிப்பாகக் கவனிப்பவர்களுக்கு உண்மை நிலையைப் புரிந்து கொள்ளுவதற்கு வேண்டிய அறிகுறிகளும் தென்படாது போகவில்லை. நீதியை நிலை நாட்டுவதற்காக நடக்கும் யுத்தம் என்று தீவிரமாக விளம்பரப் படுத்தியதெல்லாம், இந்தியாவின் ஆதரவைப் பெறுவதற்காகச் சொல்லப்பட்டவைகளே. இதற்கு முன்னால் அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் அடைந்த கதியையே இந்த வாக்குறுதியும் அடையும் என்பதற்கான அறிகுறிகளும் தோன்றின. ஸ்ரீமதி பெஸண்டை சிறை வைத்தது, நாடு முழுவதுமே பெருத்த அதிர்ச்சியை உண்டாக்கிவிட்டது. இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி, ஆபத்தானவர்கள் என்று கருதப்பட்ட அநேகரைச் சிறையில் அடைத்துக் கொடுமையாகவும் நடத்தினார்கள். இவர்களைக் கோர்ட்டு முன்னால் விசாரிக்காமலேயே இவ்விதம் செய்தனர். இந்தச் சட்டம் நிறைவேறுவதற்குச் சம்மதமளித்தது பெருந் தவறு என்பதை நாடு உணரலாயிற்று. எதிரியின் தந்திரங்களிலிருந்து நாட்டைக் காப்பாற்றுவதற்கு என்று செய்யப்பட்ட இச்சட்டம், ராஜீய நோக்கத்தின் பேரில் பயன்படுத்தப்படுகிறது என்பதையும் தேச மக்கள் தெரிந்து கொண்டார்கள். இதெல்லாம் போதாதென்று, நாட்டில் புரட்சி இயக்கம் வளர்ந்திருப்பதைக் குறித்தும், அதற்கான பரிகாரங்களைக் குறித்தும் யோசனை கூறுவதற்கு என்று ஸர் சிட்னி ரௌலட்டின் தலைமையில் நியமிக்கப்பட்டிருந்த கமிட்டியின் அறிக்கையும் வெளிவந்தது.

இந்த அறிக்கை 1918 ஜுலை 19-ஆம் தேதி வெளியாயிற்று. அதன் சிபாரிசு, இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை அநேகமாக

நிரந்தரமாக்கி விடுவதாக இருந்தது. செஷன்ஸ் வழக்குகளில் ஜூரிகள், அசெஸர்களைக் கொண்டு விசாரிப்பது என்பதை நீக்கிவிட இந்த அறிக்கை சிபாரிசு செய்தது. ஆரம்ப விசாரணை நடத்தி, செஷன்ஸ் விசாரணைக்கு வழக்குகளை அனுப்புவது என்ற முறையை இந்த அறிக்கை ரத்து செய்தது. தண்டனைக்குப் பிறகு மேல் கோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ளும் உரிமையையும் ரத்து செய்தது. விசாரணையை ரகசியமாக நடத்துவதை ரௌலட் அறிக்கை அங்கீகரித்தது. சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்யும் உரிமையும் இல்லை. குறுக்கு விசாரணை செய்தாலும் அப்படி கூறப்படும் சாட்சியத்தை விசாரிக்கும் அதிகாரி பதிவு செய்து கொள்ள வேண்டியதில்லை. இவை போதாதென்று, தனிப்பட்டவர்களின் சுதந்திரத்தை ஜாமீன் வாங்குவதன் மூலமோ, அது இல்லாமலோ கட்டுப்படுத்த இந்த அறிக்கை அதிகாரிகளுக்கு அதிகாரம் அளித்தது. ஒருவர் இன்ன இடத்தில்தான் வசிக்க வேண்டும் என்று கட்டுப்படுத்தலாம். இடம் மாறினல் முன்கூட்டி அறிவிக்க வேண்டும் என்று உத்தரவிடலாம். பத்திரிகைத் தொழிலில் ஈடுபடுவது, துண்டுப் பிரசுரங்களை வினியோகிப்பது, பொதுக்கூட்டங்களுக்குப் போவது ஆகியவைகளைச் செய்யக்கூடாது என்றும் ஒருவரை அதிகாரி கட்டுப்படுத்தலாம். அவரைக் கைது செய்து சிறையிலடைத்து அதிகாரிகள் அவருடைய உரிமையையும் பறித்துவிடலாம். இந்தியப் பாதுகாப்புச் சட்டத்திலிருக்கும் இதே போன்ற விதிகளும், அவற்றின்படி அதிகாரிகளுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களும் எவ்விதம் துஷ்பிரயோகம் செய்யப்பட்டன என்பதை நாடு நன்கு அறியும். ஆகையால், இவைகளின் பொருள் என்ன என்பதைத் தேச மக்கள் புரிந்து கொண்டார்கள். இதனல் இயற்கையாகவே இந்தியாவில் வெறுப்பு அதிகமாயிற்று. அதிலும் 1918 பிற்பகுதியில் யுத்த நிறுத்தப் பிரகடனம் செய்யப்பட்ட சமயத்தில் இந்தியாவெங்கும் அதிருப்தியே நிலவியது. 'சாம்ராஜ்யத்தின் தேவை' தீர்ந்ததும் இந்தியாவுக்குத் துரோகம் செய்கிருர்கள் என்று இந்தியர் நியாயமாகவே எண்ணினர்கள். நாட்டில் புரட்சி சதி இருந்து வருகிறது என்ற சாக்குப்போக்கின் பேரில், வாக்களித்த அரசியல் சீர்திருத்தம் ஒத்திவைக்கப்பட்டுவிடும், சுயேச்சையாக நடமாடுவதற்கும், இஷ்டப்படி வசித்து வாழ்க்கை நடத்துவதற்கும் தனிப்பட்டவர்களுக்கு இருக்கும் உரிமையும் பறிக்கப்பட்டு விடும் என்ற சந்தேகம் இயற்கையாகவே வளர்ந்தது. கடைசியாக, 1919 பிப்ரவரி 6-ஆம் தேதி ரௌலட் கமிட்டியின் அறிக்கைகளில் கண்டவைகளைக் கொண்டதான ரௌலட் மசோதாவை ஸர் வில்லியம் வின்சென்ட் டில்லி இம்பீரியல் சட்டசபையில் கொண்டு வந்தார். சுயேச்சையான பிரஜைகளின் சாதாரண உரிமைகளில் அனவசியமாகக் குறுக்கிடுவதான இந்த மசோதாவை இந்திய மக்கள் ஒன்றுபட்டு வெறுத்தனர். இதற்கு முன்னல் நாடு என்றும் அறிந்திராத வகையில் ஒரு கிளர்ச்சி ஏற்படுவதற்கு அதுவே ஆரம்பமாயிற்று.

இந்த விசாலமான தீபகற்பம் முழுவதிலும், எல்லாப் பகுதிகளிலும் இம்மசோதாவைக் கண்டிக்க ஏராளமான பொதுக்கூட்டங்கள் நடந்தன. இம்பீரியல் கவுன்ஸிலில் ஓர் இந்தியர்கூட, தனது மௌனமான வோட்டின் மூலம் இக்கடுமையான விதிகளடங்கிய மசோதாவை ஆதரிக்கவில்லை. ஆனால், இதனையெல்லாம் ஒரு பயனும் இல்லை. அரசாங்கம், தனது உத்தியோக மெம்பர்களின் பலத்தைக் கொண்டு இம்மசோதாக்களில் ஒன்றை 1919 மார்ச் மூன்றாவது வாரத்தில் சட்டமாக நிறைவேற்றிவிட்டது.

## ஹர்த்தாலும் கலவரங்களும்

இந்தச் சட்டத்தைப் பலவந்தமாகக் கொண்டு வந்ததால் இம்பீரியல் சட்டசபை உறுப்பினர்களில் சிலர், அரசாங்கத்தின் அக்கிரமமான போக்கைக் கண்டிப்பதற்காகத் தங்கள் ஸ்தானங்களை ராஜிநாமாச் செய்துவிட்டனர். அச்சமயத்தில் மகாத்மா காந்தி, சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்துவது என்ற தமது நோக்கத்தை அறிவித்தார். இந்தியாவுக்குச் செய்யப்பட்ட இந்த அவமானத்திற்கும் அவமதிப்புக்கும் இந்தியா உரியதல்ல; பிரிட்டிஷ் அரசாங்கம் இவ்விதம் செய்தது, அதன் கௌரவத்திற்கு உகந்ததாகாததோடு நன்றி கெட்டதனமுமாகும். இந்த அவமதிப்பினாலும், பட்ட அவமானத்தினாலும் கொதித்துக் கொண்டிருந்த இந்திய மக்களின் உணர்ச்சியையே மகாத்மா காந்தி வெளியிட்டார். சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் ஏராளமானவர்களின் கையெழுத்தை வாங்குவது என்று முடிவு செய்யப்பட்டது. அதில் கையெழுத்திடுகிறவர்கள் இந்தச் சட்டங்களுக்கும், பின்னால் இதற்கென்று நியமிக்கப்படும் கமிட்டி எந்தச் சட்டங்களைக் குறிப்பிடுகிறதோ அந்தச் சட்டங்களுக்கும் உடன்பட சாத்விக முறையில் மறுத்துவிடுவது என்று பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும். "இந்தப் போராட்டத்தில் நாங்கள் சத்தியத்தை விசுவாசத்துடன் பின்பற்றுவதோடு, உயிருக்கும் ஆட்களுக்கும் சொத்துக்களுக்கும் எவ்விதத் தீங்கும் விளைவிப்பதில்லை; பலாத்காரத்தையும் உபயோகிப்பதில்லை" என்பதும் சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கூறப்பட்டிருந்தது. ஏப்ரல் 6-ஆம் தேதி இந்தியா முழுவதிலும் ஹர்த்தாலை அனுசரிக்க வேண்டும் என்று மார்ச்சு 23-ஆம் தேதி மகாத்மா காந்தி ஓர் அறிக்கையை வெளியிட்டார். அந்த நாளை. பட்டினி விரத, பிரார்த்தனை, தவ நாளாகக் கொண்டாடுமாறு தேச மக்களை அவர் கேட்டுக்கொண்டார். ஏதோ தவறினால் டில்லியில் மார்ச் 30-ஆம் தேதியே ஹர்த்தால் நடத்தினர். ஆர்ப்பாட்டம் செய்தவர்களுக்கும் ரெயில்வே ஸ்டேஷன் கடைக்காரருக்கும் ஏற்பட்ட சச்சரவினால் அங்கே கலவரம் மூண்டது. உடனே அதிகாரிகள், ராணுவப் போலீஸாரையும் சிறு ராணுவப் படையையும் கொண்டு வந்து விட்டனர். சிலரைச் சுட்டும் விட்டார்கள். ஆனால், ஏப்ரல் 6-ஆம் தேதி இந்தியாவில் மற்ற

இடங்களிலெல்லாம் எந்தவிதமான அசம்பாவிதமும் இல்லாமல் ஹர்த்தால் அமைதியாக நடைபெற்றது. ஏழைகளும் பணக்காரர்களும், படித்தவர்களும் படிக்காதவர்களும், உயர்ந்தோரும் தாழ்ந்தோரும், கிராம மக்களும் பட்டணவாசிகளும், எல்லா மக்களுமே கலந்துகொண்ட முதல் கிளர்ச்சி இதுவேயாகும். பல நூற்றாண்டுகளாக இருந்து வந்த தூக்கத்திலிருந்து இந்திய மக்கள் எழுந்து விட்டதாகவே தோன்றியது. தங்களிடம் மறைந்திருந்த சக்தி விழித்துக்கொண்டுவிட்டது என்ற ஓர் உணர்ச்சியையும் பெற்றார்கள். ஒரே வார்த்தையில் சொல்லுவதானால், தங்கள் ஆன்மாவை மக்கள் திரும்பவும் கண்டுகொண்டு விட்டனர்.

டில்லி மக்களுக்கு அவர்களுடைய துயரங்களுக்குப் பரிகாரமளித்து, புண்பட்டுப் போன அவர்களுடைய உள்ளங்களுக்குப் புண்ணையாற்றும் மருந்தை அளிப்பதற்காக, மகாத்மா காந்தி ஏப்ரல் 8-ஆம் தேதி டில்லிக்குப் போய்க்கொண்டிருந்தார். என்றாலும், பஞ்சாபிலோ, டில்லியிலோ பிரவேசிக்கக்கூடாது என்று அவருக்குத் தடை உத்தரவைக் கொடுத்தனர். அந்த உத்தரவுக்குப் பணிந்து நடக்க அவர் மறுத்துவிடவே, அவரைக் கைது செய்தார்கள். பக்கத்து ஸ்டேஷன் ஒன்றில் அவரை ரெயிலிலிருந்து இறக்கி தனி ரெயிலில் பம்பாய்க்குக் கொண்டு போனார்கள். இச்செய்தி, நாடு முழுவதிலும் ஆத்திரத்தை உண்டாக்கியது. பஞ்சாபில்தான் ஆத்திரம் இன்னும் அதிகமாயிற்று. அங்கே நடந்து வந்த ஸர் மைக்கேல் ஓட்வியரின் அதிக பிற்போக்கான ஆட்சியினால் மக்கள் இதற்கு முன்னாலேயே அதிகக் கொதிப்படைந்திருந்தார்கள். எரிகிற நெருப்பில் எண்ணெயையும் ஊற்றினாற் போல, அமிர்தசரஸின் இரு பிரபல தலைவர்களான டாக்டர்கள் கிச்சுலுவையும் சத்தியபாலையும் ஏப்ரல் 10-ஆம் தேதி ஸர் மைக்கேல் ஓட்வியர் கைது செய்தார். அவர்களை நாடு கடத்தியும் விட்டார். மக்களிடையே கொதிப்பு மிகுந்திருந்தது. தங்கள் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று கோரி டிபுடி கமிஷனரின் வீட்டுக்குப் பெருங் கூட்டத்தினர் சென்றனர். அவர்கள் மீது போலீஸார் சுட்டனர். அக்கூட்டத்தினர் திரும்பி வந்தபோது வழியில் பெரும் கலவரமே மூண்டுவிட்டது. பாங்கிகள், தபாலாபீஸ், மற்றுஞ் சில அரசாங்கக் காரியாலயங்கள் ஆகியவைகளைக் கொள்ளையிட்டுத் தீயும்வைத்து விட்டனர். சில ஐரோப்பியர்களைக் கொன்றுவிட்டதோடு, இரு ஐரோப்பியப் பெண்களையும் தாக்கிவிட்டனர். ஆனால், சீக்கிரத்தில் அமைதி ஏற்பட்டு விட்டது. எனினும், எங்கும் திகில் நிறைந்திருந்தது.

## ஜாலியன்வாலா படுகொலை

ஜெனரல் டயர், 11-ஆம் தேதி இரவு அமிர்தசரஸுக்கு வந்து அந்த நகரில் தமது ஆதிக்கத்தை மேற்கொண்டார். 11-ஆம்

தேதியும் 12-ஆம் தேதியும் எந்தவிதமான சம்பவமும் இல்லை. ஜாலியன்வாலா பாக் என்ற மைதானத்தில் ஒரு பொதுக்கூட்டம் 13-ஆம் தேதி நடக்கும் என்று மாத்திரம் விளம்பரப்படுத்தப்பட்டிருந்தது. எந்தக் கூட்டத்தையும் நடத்தினால் தூக்கு தண்டனை தான் என்று ஜெனரல் டயர் பொதுக் கூட்டங்களைத் தடுத்திருந்தார். ஆனால், ஜாலியன்வாலா பாக்கில் பொதுக்கூட்டம் [நடக்கப் போகிறது என்று கேள்விப்பட்டதும் தமது துருப்புகளுடனும் பீரங்கிகளோடும் அவர் அங்கே போனார். அன்று முக்கியமான ஹிந்து பண்டிகை நாளானதால் அங்கே ஏராளமான ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் கூடியிருந்தார்கள். ஜெனரல் டயர் அங்கே வந்து சேர்ந்த 30 விநாடிகளுக்கெல்லாம் கூட்டத்தின் மீது சுட ஆரம்பித்துவிட்டார். எங்கே ஜன நெருக்கம் அதிகமிருந்ததோ, அப்பக்கத்தை நோக்கி அதிகமாகச் சுடும்படி உத்தரவிட்டார். 10 நிமிஷ நேரம் இவ்விதம் தொடர்ந்து மக்கள் சுடப்பட்டனர். கைவசமிருந்த தோட்டாக்கள் தீரும் வரையில் சுட்டார்கள். ஐந்நூறு, அறுநூறு பேர் அங்கேயே மாண்டார்கள். இதைவிட மும்மடங்கினர் காயமடைந்தார்கள். அந்த இடம், நாற்புறங்களிலும் உயரமான மதில்களால் சூழப்பட்டதாகையால் யாரும் தப்பி ஓடிவிட முடியவில்லை. சுடுவதற்கு முன்னால் எந்த எச்சரிக்கையும் செய்யப்படவில்லை. சுட்ட பிறகு, இறந்தவர்கள், காயமடைந்தவர்கள் சம்பந்தமாக எந்தவிதமான சிரத்தையும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. அதற்குப் பிறகு அமிர்தசரஸ், லாகூர், குஜரத், லயால்பூர் ஜில்லாக்களில் ராணுவ ஆட்சி அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. பயங்கர ஆட்சியே அங்கே நடந்து வந்தது என்று சொல்லுவதே பொருந்தும். ஏராளமானவர்களைக் கைது செய்து ராணுவச் சட்டத்தின்படி தண்டித்தார்கள். மதிப்பிற்குரியவர்களும் கைது செய்யப்பட்டனர். சிலருக்குச் சவுக்கடி தண்டனை கொடுத்தார்கள். மற்றவர்களையோ வயிற்றினாலேயே ஊர்ந்து செல்லும்படிச் செய்தனர். நிராயுதபாணிகளான மக்கள் மீது விமானங்களிலிருந்து வெடிகுண்டுகளை வீசியதுள்பட சகிக்க வொண்ணாத கொடுமைகளையெல்லாம் செய்தார்கள்.

மகாத்மா காந்தியைக் கைது செய்துவிட்டார்கள் என்ற செய்தியை அறிந்ததும், அகமதாபாத்திலும் மற்ற இடங்களிலும் கலவரங்கள் மூண்டன. ஆனால், அங்கே ராணுவ ஆட்சியைச் சில தினங்களுக்கெல்லாம் ரத்து செய்துவிட்டார்கள்.

## ஹண்டர் கமிட்டி

வெளிநாடுகளுக்குச் செய்திகள் போகும் விஷயத்தில் கடுமையான தணிக்கை முறைகளை அனுசரித்தார்கள். இதனால் பஞ்சாப் கொடுமைகளைப்பற்றிய செய்திகள் வெளிநாடுகளுக்குப் போகவில்லை. என்றாலும், சில மாதங்களுக்குப் பிறகு ராணுவ

ஆட்சியை வாபஸ் வாங்கிக்கொண்டு விட்டார்கள். இதன் பிறகு, நடந்த அட்டூழியங்களைப் பற்றிய செய்தி நாடெங்கும் பரவிவிட்டதால், தேசம் முழுவதிலும் மக்களிடையே கொதிப்பு ஏற்பட்டது. அச்சம்பவங்களைக் குறித்து விசாரிக்க ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும் என்று எங்கும் வற்புறுத்தினர். அதன் பேரில் இந்திய அரசாங்கம், லார்டு ஹண்டரின் தலைமையில் ஒரு கமிட்டியை நியமித்தது. இக்கமிட்டி வேலையைத் தொடங்குவதற்கு முன்னாலேயே, தவறு செய்த அதிகாரிகள் மீது யாரும் வழக்குத் தொடுத்துவிட முடியாதபடி அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் சட்டத்தை இந்திய அரசாங்கம் நிறைவேற்றி விட்டது. இம்பீரியல் கவுன்ஸிலில் இச்சட்டத்திற்கு எதிர்ப்பு பலமாக இருந்தது. ஆனால், மகாத்மா காந்தியோ, பதிலுக்குப் பதில் செய்வதில்லை என்ற தமது கொள்கையை அனுசரித்து அச்சட்டத்தை ஆதரித்தார். ஹண்டர் கமிட்டி விசாரணை நடந்தபோது, நடந்திருந்த பயங்கரமான காரியங்களும், அக்கிரமங்களும் வெளியாயின. ஹண்டர் கமிட்டி முன்பு சாட்சியமளிப்பதற்காக காங்கிரசும் ஓர் உப கமிட்டியை நியமித்திருந்தது. சிறைத் தண்டனையை அனுபவித்து வந்த பஞ்சாப் தலைவர்கள் அவசியமான சாட்சியங்களைச் சேகரிப்பதற்காக, அவர்களைத் தாற்காலிகமாக விடுதலை செய்யும்படி கோரப்பட்டது. அவ்விதம் தாற்காலிகமாக விடுதலை செய்யும்படி செய்ய முடியாதென்று ஹண்டர் கமிட்டித் தலைவர் மறுத்துவிட்டதால், அக்கமிட்டி முன்னால் காங்கிரஸ் கமிட்டி சாட்சியங்களை அனுப்புவதில்லை என்று முடிவு செய்துவிட்டார்கள். தனியாக விசாரணையை நடத்தி அறிக்கை வெளியிடுவது என்றும் முடிவு செய்தனர். காங்கிரஸ் உப கமிட்டி தனது அறிக்கையை, 1920 மார்ச் 26-ஆம் தேதி வெளியிட்டது. இக்கமிட்டி செய்திருந்த சிபாரிசுகள் அதிக தாராளமானவை என்று கருதப்பட்டது. ஹண்டர் கமிட்டி அறிக்கையோ, ஏகமனதான அறிக்கை அல்ல; அதிலிருந்த இந்திய உறுப்பினர்கள், ஐரோப்பிய சகாக்கள் கொண்ட கருத்துக்கு மாறுபட்ட தனிக் குறிப்பை எழுதியிருந்தார்கள். பாஞ்சாலத்தில் ராணுவ ஆட்சியை அமலுக்குக் கொண்டு வந்ததற்குக் கொஞ்சமும் நியாயமில்லை என்று இந்த இந்திய உறுப்பினர் தங்கள் குறிப்பில் கூறியிருந்தனர். ஹண்டர் கமிட்டியின் சிபாரிசுகளும், அதன் மீது அரசாங்கம் பிறப்பித்த உத்தரவும் மக்களுக்குத்திருப்தி அளிக்கவில்லை. இவையும், பின்னால் கூறப்படும் விஷயங்களும் உடனே ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டிய நிலைமையை உண்டாக்கிவிட்டன.

## கிலாபத் பிரச்னை

இந்திய மக்களின் மனத்தில் அதிகக் கிளர்ச்சியை உண்டாக்கிய விஷயம் கிலாபத் பிரச்னை. இங்கிலாந்துக்கும் துருக்கிக்குமிடையே யுத்தம் மூண்டதும், யாரை ஆதரிப்பது என்பது தெரியாமல் இந்திய முஸ்லிம்கள் குழப்பத்தில் இருந்தனர். துருக்

கியரும் சுல்தானும் இஸ்லாமின் பிரதிநிதிகள், மதத்தின் பாது காவலர். இந்திய முஸ்லிம்கள் இவர்களை ஆதரிப்பதா? அல்லது தாங்கள் ஒரு நூற்றாண்டாக எந்தப் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருக்கிறார்களோ அந்தப் பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஆதரிப் பதா? இஸ்லாமிய ஸ்தலங்கள் முஸ்லிம்களின் நிர்வாகத்தின் கீழ் வைக்கப்படும். சமாதான ஒப்பந்தத்தில் தங்கள் மதத்தின ரான துருக்கியருக்குச் சாதகங்களைப் பெற முடியும் என்ற நம்பிக் கையின் பேரில் இந்திய முஸ்லிம்கள் அப்போரில் பிரிட்டிஷ் அர சாங்கத்தையே ஆதரிப்பது என்ற முடிவுக்கு வந்தார்கள். இந்திய வைஸ்ராயும், பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஸ்ரீ லாயிட் ஜார்ஜும் சொன்னதில் நம்பிக்கை வைத்தே இந்திய முஸ்லிம்கள் இந்த முடிவுக்கு வந்தார்கள். அரேபியா, மெஸபடோமியா, ஜெட்டா ஆகிய இடங்களிலுள்ள முஸ்லிம்களின் புனித ஸ்தலங்கள் சம்பந்தமாக எந்த மாறுதல்களும் செய்யப்படமாட்டா என்று வைஸ்ராய் கூறினார். "துருக்கியின் தலைநகரத்தையோ, ஆசியா மைனரில் உள்ள செழிப்பான, பிரபலமான ஸ்தலங்களையோ, துருக்கி இனத்தினரையே முக்கியமாகக் கொண்ட திரேஸையோ பறித்துவிடுவதற்காக நாங்கள் போர் நடத்திவர வில்லை" என்று ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் சொன்னார்.

யுத்தம் முடிந்ததும், துருக்கிக்குக் கடுமையான சமாதான நிபந்தனைகள் கூறப்பட்டிருக்கின்றன என்ற வதந்தி எழுந்தது. இதை அறிந்ததும் இயற்கையாகவே முஸ்லிம்கள் திகிலடைந்தார்கள். அதிகாரிகளிடம் முறையிட்டுக்கொண்டனர். பிரதம மந்திரி ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் அளித்த வாக்குறுதிகளை அப் படியே நிறைவேற்றி வைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண் டார்கள். அகில இந்திய முதல் கிலாபத் மகாநாடு 1919 நவம் பர் 23-ஆம் தேதி நடந்தது. மகாத்மா காந்தியும் ஹிந்து தலைவர் களும் கிலாபத் பிரச்னையில் எடுத்துக்கொண்டிருக்கும் சிரத்தைக் காக அம்மகாநாடு நன்றி தெரிவித்தது. வெற்றி விழாக் கொண் டாட்டங்களில் கலந்து கொள்ள வேண்டாம் என்று முஸ்லிம் களைக் கேட்டுக் கொள்ளுவதாகவும் தீர்மானம் நிறைவேறியது. துருக்கி விஷயமாகத் திருப்திகரமான முடிவு ஏற்படாது போனால், பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதை நாளாவட்டத்தில் நிறுத்திவிடுவதோடு, பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்கரிப்பது என்றும் அந்த மகாநாடு முடிவு செய்தது. துருக்கி சமரசம் சம்பந்தமாகவும், கிலாபத் பிரச்னையைக் குறித்தும் இந்திய முஸ்லிம்களுக்கு இருந்து வரும் உண்மையான உணர்ச்சியைப் பிரிட்டிஷ் மந்திரிகளுக்கும் மற்றவர்களுக்கும் எடுத்துக் கூறு வதற்காக இங்கிலாந்திற்கு ஒரு தூது கோஷ்டியை அனுப்புவது என்றும் அம்மகாநாடு தீர்மானித்தது. இரண்டாவது கிலாபத் மகாநாடு காங்கிரஸ் வாரத்தில் அமிர்தசரஸில் நடந்தது. இங்கி லாந்துக்கும் அமெரிக்காவுக்கும் தூது கோஷ்டிகளை அனுப்புவ தென்பதை இம்மகாநாடு மீண்டும் ஊர்ஜிதம் செய்ததோடு, ஒரு

தூது கோஷ்டியை வைஸ்ராயிடமும், மற்ருேர் தூது கோஷ்டியை இங்கிலாந்துக்கும் அனுப்பி முஸ்லிம்களின் கோரிக்கைகளைத் திரும்பவும் வற்புறுத்துவது என்று அம்மகாநாடு தீர்மானித்தது. இதற்காக நிதி வசூலிக்குமாறு மத்திய கிலாபத் கமிட்டிக்கு அறிவித்தது. ஆககானும், சையத் அமீர் அலியும், மற்றும் பல இந்திய, ஐரோப்பியப் பிரமுகர்களும் கையெழுத்திட்டு ஒரு விண்ணப்பத்தைப் பிரிட்டிஷ் பிரதம மந்திரியிடம் 1919 டிசம்பரில் சமர்ப்பித்தார்கள். சிறை வைக்கப்பட்டதிலிருந்து மௌலான ஷவுகத் அலியும், மௌலான முகமது அலியும் 1919 டிசம்பரில் விடுதலையானதும் கிலாபத் விஷயம் இன்னும் அதிக முக்கியமானதாயிற்று.

## கிலாபத் தூது கோஷ்டிகள்

கிலாபத் மகாநாடு செய்த தீர்மானத்தை அனுசரித்து டாக்டர் அன்சாரியின் தலைமையில் ஒரு தூது கோஷ்டி வைஸ்ராயை 1920 ஜனவரி 19–ஆம் தேதி சந்தித்தது. வைஸ்ராய், தூது கோஷ்டிக்கு அளித்த பதில் ஓரளவுக்கு ஏமாற்றத்தை அளிப்பதாக இருந்தது. முஸ்லிம் தலைவர்கள் பிறகு வெளியிட்ட அறிக்கையில், ''சமாதான ஒப்பந்த ஷரத்துக்கள் இஸ்லாம் மதத்திற்கும் இஸ்லாமிய மத உணர்ச்சிக்கும் விரோதமாக இருக்குமானல், முஸ்லிம்களின் விசுவாசத்திற்கு அனவசியமான இடையூறை உண்டாக்கியவர்களாவார்கள்'' என்றனர். ''அரேபியா முஸ்லிம் அதிகாரத்தின் கீழ் இருப்பதோடு, முஸ்லிம் புண்ணிய ஸ்தலங்கள் கலீபாவின் நிர்வாகத்திலும் இருக்க வேண்டும்'' என்ருர்கள். ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் அளித்த வாக்குறுதி நிறைவேற்றப்படவேண்டும் என்றும் வற்புறுத்தினர். 1920 பிப்ரவரியில் மூன்ருவது கிலாபத் மகாநாடு பம்பாயில் நடந்தது. தூது கோஷ்டி இங்கிலாந்துக்குப் போவதில் இம்மகாநாடு தனது நம்பிக்கையைத் தெரிவித்துக் கொண்டது. இம்மகாநாடு வெளியிட்ட முக்கியமான அறிக்கையில் அது கூறியதாவது: ''எங்கள் கோரிக்கையில் எதையும் குறைப்பது, முஸ்லிம்களின் ஆழ்ந்த மத உணர்ச்சியை மீறி நடப்பதாவதோடு, பொறுப்பு வாய்ந்த ராஜதந்திரிகள், முஸ்லிம் மக்களின், சிப்பாய்களின் உதவி அவசியமாக இருந்தபோது நேச தேசத்தினரின் சார்பில் கடவுள் சாட்சியாக அளித்த வாக்குறுதிகளை அடியோடு மீறிவிட்டதாகவும் ஆகும். இந்தக் கோரிக்கைகள் சம்பந்தமாக முஸ்லிம்கள் மாத்திரமேயன்றி ஹிந்துக்கள் எல்லோருமே ஒன்றுபட்டிருக்கும் சமயத்தில், தவருன முடிவைச் செய்து விடுவதால் மோசமான விளைவுகள் ஏற்படும் என்பதையும் அரசாங்கத்திற்கு எச்சரிக்கை செய்கிருேம்'' என்றும் அந்த அறிக்கையில் கூறினர்.

## முயற்சி வீணயிற்று

மௌலான முகமது அலியின் தலைமையில் இங்கிலாந்துக்குச் சென்ற தூது கோஷ்டியுடன், இந்தியா மந்திரியின் சார்பில்

ஸ்ரீ பிஷர் பேசினர். அத்தூது கோஷ்டியினர் பிரிட்டிஷ் பிரதம மந்திரியையும் கண்டு பேசினர்கள். தங்கள் கருத்தைச் சமாதான மகாநாட்டின் சுப்ரீம் கவுன்ஸில் முன்பு தெரிவித்துக் கொள்ளுவதற்கு அனுமதி வேண்டும் என்று கோரினர்கள். ஆனல், அனுமதி கொடுக்க மறுத்து விட்டனர். இந்தத் தூது கோஷ்டி ஐரோப்பாவில் இருந்த போதே, துருக்கியுடன் ஏற்பட்ட சமாதான ஒப்பந்த ஷரத்துக்கள் 1920 மே 14-ஆம் தேதி இங்கிலாந்திலும் இந்தியாவிலும் வெளியிடப்பட்டன. இந்த ஷரத்துக்களை விளக்கி இந்திய முஸ்லிம்களுக்கு வைஸ்ராய் ஓர் அறிக்கையும் வெளியிட்டார். இந்த ஒப்பந்தம், இந்தியாவிலிருக்கும் முஸ்லிம்களுக்கு மனக்கஷ்டத்தை உண்டாக்குவதாக இருக்கிறது என்பதை வைஸ்ராயே ஒப்புக்கொண்டார். ஆனல், தங்கள் மதத்தினரான துருக்கியருக்கு ஏற்பட்டிருக்கும் துரதிருஷ்டத்தை, இந்திய முஸ்லிம்கள் பொறுமையுடனும் கவலைப்படாமலும் சகித்துக் கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். இந்த ஒப்பந்த ஷரத்துக்கள் வெளியானதும், ஹண்டர் கமிட்டி அறிக்கை வெளியானதும் ஒரே சமயத்தில் இருந்ததால், நாடு முழுவதுமே ஒரே கொதிப்பு மூண்டது. மகாத்மா காந்தியின் ஒத்துழையாமைத் திட்டத்தைக் குறித்து ஆலோசிப்பதற்காகக் கிலாபத் கமிட்டி 1920 மே 28-ஆம் தேதி பம்பாயில் கூடியது. முஸ்லிம்களுக்கு வேறு வழி எதுவும் இல்லாததால் ஒத்துழையாமைத் திட்டத்தை அனுசரிப்பது என்று அக்கமிட்டி முடிவு செய்தது. ஹண்டர் கமிட்டி அறிக்கை, துருக்கி சமாதான ஒப்பந்தம் ஆகியவைகளைக் குறித்து ஆலோசிப்பதற்கு 1920 மே 30-ஆம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி காசியில் கூடியது. நீண்ட விவாதத்திற்குப் பிறகு, ஒத்துழையாமை விஷயத்தை ஆலோசிப்பதற்காகக் காங்கிரஸின் விசேஷ மகாநாட்டைக் கூட்டுவது என்ற முடிவுக்கு வந்தார்கள்.

## ஒத்துழையாமை அங்கீகாரம்

1920 ஜூன் 30-ஆம் தேதி, கிலாபத் பிரச்னை சம்பந்தமாக ஹிந்து-முஸ்லிம் கூட்டு மகாநாடு அலகாபாத்தில் நடந்தது. வைஸ்ராய்க்கு ஒரு மாத நோட்டீஸ் கொடுத்துவிட்டு ஒத்துழையாமையை மேற்கொள்ளுவது என்று ஏகமனதாகத் தீர்மானித்தார்கள். எல்லாக் கட்சியினரையும் கொண்ட ஏராளமான பொதுக்கூட்டங்கள் நாட்டின் பல பகுதிகளிலும் நடந்தன. ஹண்டர் கமிட்டி அறிக்கையைக் கண்டித்தும், பஞ்சாப், கிலாபத் அநீதிக்குப் பரிகாரம் வேண்டும் என்றும் கோரி தீர்மானங்கள் நிறைவேற்றினர். ஜூன் 22-ஆம் தேதி ஏராளமான முஸ்லிம் தலைவர்கள் கையெழுத்திட்டு வைஸ்ராய்க்கு ஒரு செய்தியை அனுப்பினர்கள். துருக்கி சமாதான ஒப்பந்தத்தை மாற்றும்படி வைஸ்ராய் செய்ய வேண்டும்; முஸ்லிம்களின் விருப்பத்தை நிறை

வேற்றி வைக்க பிரிட்டிஷ் மந்திரி சபை தவறிவிடுமானல், இந்திய முஸ்லிம்களுடன் வைஸ்ராயும் சேர்ந்து கொண்டு பாடு பட வேண்டும் என்று அச்செய்தியில் வைஸ்ராயைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இந்த யோசனையின்படி நடக்க வைஸ்ராய் தவறிவிடுவாரானல், ஆகஸ்டு 1-ஆம் தேதியிலிருந்து அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதைத் தாங்கள் வாபஸ் பெற நேருவதோடு, அதே மாதிரி செய்யும்படி மற்ற முஸ்லிம்களையும் ஹிந்துக்களையும் கேட்டுக் கொள்ளுவோம் என்றும் எச்சரிக்கை செய்திருந்தனர். மகாத்மா காந்தியும் வைஸ்ராய்க்கு ஒரு கடிதம் எழுதினர். கிலாபத் விஷயத்தில் தமக்கு இருக்கும் சம்பந்தத்தை அதில் விளக்கினர். முஸ்லிம்களுக்குக் கவலை அதிகரித்துக் கொண்டே போவதையும், பிரிட்டிஷாரின் நோக்கத்தில் அவர்களுக்கு அவநம்பிக்கை அதிகமாகி வருகிறது என்பதையும் தாம் கவனித்து வருவதாகவும், மனம் தளர்ந்துவிட வேண்டாம் என்று தாம் அவர்களுக்குக் கூறி வருவதாகவும் காந்திஜி அக்கடிதத்தில் வைஸ்ராய்க்கு அறிவித்தார். அவர் மேலும் கூறியதாவது : "அந்த ஒப்பந்தம் மந்திரிகளின் வாக்குறுதிகளை மீறுவனவாக இருப்பதோடு, முஸ்லிம்களின் உணர்ச்சியையும் அலட்சியம் செய்வதாக இருக்கிறது. எனது முஸ்லிம் சகோதரர்களுடன் நெருங்கிய நட்புடன் வாழ வேண்டும் என்று விரும்புகிற தீவிர ஹிந்து என்ற வகையில், அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் சோதனைக் காலத்தில் அவர்களுக்குப் பக்க பலமாக நான் நிற்கத் தவறி விடுவேனயின், நான் இந்தியாவின் தகுதியற்ற மகனே ஆவேன் என்று கருதுகிறேன். ஹண்டர் கமிட்டியின் பெரும்பான்மையினர் அறிக்கையும், அதன் மீது நீங்கள் பிறப்பித்திருக்கும் உத்தரவும் அவநம்பிக்கையை இன்னும் அதிகமாக்கிவிட்டன. இந்த நிலைமையில் என்னைப் போன்ற ஒருவர் செய்யக்கூடியதெல்லாம் ஒன்றுதான் உண்டு. அதாவது, மனமுடைந்து போய் பிரிட்டிஷ் ஆட்சியுடனிருக்கும் தொடர்பையெல்லாம் ரத்து செய்துகொண்டு விடவேண்டும். இல்லையானல், இப்பொழுதுள்ள அரசியல்களையெல்லாம்விட பிரிட்டிஷ் அரசியல் உயர்வானது என்பதில் நான் இன்னும் நம்பிக்கை வைத்திருப்பதாக இருந்தால், தவறுகளுக்கெல்லாம் பரிகாரம் தேடி அதனல் நம்பிக்கை திரும்பவும் ஏற்படும்படிச் செய்வதற்கான முறைகளை நான் அனுசரிக்க வேண்டும். பிரிட்டிஷ் அரசியலின் அத்தகைய உயர்வில் நான் இன்னும் நம்பிக்கையை இழந்துவிட வில்லை. துன்பத்தை அனுபவிப்பதற்கு வேண்டிய தகுதியை மாத்திரம் நாம் காட்டுவதாயிருந்தால் எப்படியோ நீதி செய்யப்பட்டுவிடும் என்ற நம்பிக்கை இன்னும் எனக்கு இருக்கிறது. பிரிட்டிஷ் அரசியலில் எனக்கு நம்பிக்கை இருப்பதனலேயே, உங்கள் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பை வாபஸ் வாங்கிக் கொள்ளுமாறு முஸ்லிம் நண்பர்களுக்கு நான் யோசனை கூறியிருப்பதோடு, அவர்களுடன் சேர்ந்து கொள்ளும்படி ஹிந்துக்களுக்கும் யோசனை சொல்லியுள்ளேன்."

ஆகஸ்டு 31-ஆம் தேதியை கிலாபத் தினமாகக் கொண்டாடினர். எங்கும் பொது ஹர்த்தால் அனுசரிக்கப்பட்டது. ஒத்துழையாமைத் தீர்மானத்தையும் அமலுக்குக் கொண்டு வந்தனர். மகாத்மா காந்தி, தமக்கு முன்னால் அளிக்கப்பட்டிருந்த பதக்கங்களை, அத்தீர்மானத்தை அனுசரித்து வைஸ்ராய்க்குத் திருப்பி அனுப்பிவிட்டார். முஸ்லிம்களின் உணர்ச்சியை மதிக்காமல் அரசாங்கம் மேலும் மேலும் பிடிவாதப் போக்கிலேயே இருந்து வந்தது. இங்கிலாந்தில் லார்டுகள் சபையும், இந்தியாவில் வசித்து வந்த ஆங்கிலோ-இந்தியரும், ஜாலியன்வாலா பாக்கில் படுகொலைகளைச் செய்த ஜெனரல் டயரை மேலும் மேலும் ஆதரிக்க முற்பட்டனர். இதனால் இந்திய மக்களிடையே உணர்ச்சி மேலும் மேலும் மோசமாகிக் கொண்டுவந்தது. இந்தியாவிலிருந்த ஐரோப்பியர்கள், டயர் பாராட்டு நிதி ஒன்றை ஆரம்பித்து ஏராளமான தொகையை அதற்காக வசூலிக்கும் அளவுக்கும் போய்விட்டார்கள். ஐரோப்பியர் சங்கங்களும், ஆங்கிலோ - இந்தியர் சங்கங்களும், போட்டி போட்டுக் கொண்டு ஜெனரல் டயரின் சேவைகளைப் பாராட்டின.

## கல்கத்தா விசேஷ காங்கிரஸ்

காங்கிரஸின் கல்கத்தா விசேஷ மகாநாடு செப்டம்பர் ஆரம்பத்தில் லாலா லஜபதிராயின் தலைமையின் கீழ் நடந்தது. அதற்கு முன்னால் மகாத்மா காந்தியும் மௌலானா ஷவுகத் அலியும் இந்தியாவின் பல பாகங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். காங்கிரஸ் மகாநாட்டில் நீண்ட விவாதத்திற்குப் பிறகு ஒத்துழையாமைத் தீர்மானம் பெரும்பான்மை ஆதரவைப் பெற்று நிறைவேறியது. கிலாபத் விஷயத்தில் இந்திய, ஏகாதிபத்திய அரசாங்கங்கள், இந்திய முஸ்லிம்களுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமையில் தவறியிருப்பதோடு பிரதம மந்திரி தாம் அளித்திருந்த வாக்குறுதியை வேண்டுமென்றே மீறியிருக்கிறார் என்று அத்தீர்மானம் கூறியது. 1919 ஏப்ரலில் நடந்த சம்பவங்கள் சம்பந்தமாக அந்த இரண்டு அரசாங்கங்களும், ஒரு பாவமும் அறியாத பாஞ்சால மக்களைப் பாதுகாக்கவும், அவர்களிடம் வீரத்தனமில்லாத, காட்டுமிராண்டித்தனமான குற்றங்களைச் செய்திருப்பவர்களைத் தண்டிப்பதிலும் அக்கிரமமாக அலட்சியம் செய்தோ அல்லது தவறியோ இருக்கின்றன என்பதையும் அத்தீர்மானம் திரும்பவும் குறிப்பிட்டது. ஸர் மைக்கேல் ஓட்வியர் தவறு செய்துவிடவில்லை என்று அரசாங்கம் கூறியிருக்கிறது; இந்திய மக்கள் விஷயத்தில் வருந்தத்தக்க வகையில் நம்பிக்கைத் துரோகமும் செய்திருக்கிறது; பஞ்சாபில் நடந்த கொடுமைகளையும் பயங்கரமான காரியங்களையும் உண்மையில் ஆதரித்தும் வருகிறது என்பதும் லார்டு சபை விவாதத்திலிருந்து தெரிகிறது என்பதையும் காங்கிரஸ் தீர்மானம் சுட்டிக் காட்டியது. "மேலே சொன்ன

இந்த இரண்டு தவறுகளுக்கும் பரிகாரங்களைச் செய்தாலன்றி இந்தியாவில் அமைதி நிலவ முடியாது என்றும், தேசீய கௌரவத்தைக் காத்துக்கொள்ளுவதற்கும், இது போன்ற தவறுகள் இனி ஏற்படாதபடி தடுப்பதற்கும் சரியான வழி சுயராஜ்யத்தை அமைப்பதுதான் என்றும் காங்கிரஸ் கருதுகிறது" என்றும் அத் தீர்மானம் கூறியது.

மேலே சொன்ன தவறுகளுக்கு நீதி கிடைத்து சுயராஜ்யம் ஏற்படும் வரையில், பலாத்காரமற்ற ஒத்துழையாமையை அனுசரிப்பதைத் தவிர இந்திய மக்களுக்கு வேறு வழி இல்லை என்றும் அக்காங்கிரஸ் தீர்மானம் சுட்டிக்காட்டிற்று. அதன்படி கீழ்க்கண்டவற்றை மக்கள் செய்ய வேண்டும் என்றும் யோசனை கூறியது: (1) கௌரவப் பட்டங்களையும் கௌரவ உத்தியோகங்களையும் விட்டுவிட வேண்டும். ஸ்தல ஸ்தாபனங்களில் நியமன ஸ்தானங்களிலிருப்போர் ராஜிநாமாச் செய்துவிட வேண்டும். (2) அரசாங்கம் நடத்தும் விழாக்கள், தர்பார்களுக்குப் போக மறுத்துவிட வேண்டும். (3) சர்க்காருக்குச் சொந்தமான, சர்க்கார் உதவியைப் பெறும், சர்க்கார் ஆதிக்கத்திலிருக்கும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளுக்குக் குழந்தைகளை அனுப்புவதை நாளாவட்டத்தில் நிறுத்திக்கொண்டுவிட வேண்டும். அவற்றிற்குப் பதிலாகத் தேசீய பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் ஆரம்பிக்க வேண்டும். (4) வக்கீல்களும் கட்சிக்காரர்களும் பிரிட்டிஷ் கோர்ட்டுகளுக்குப் போவதை நாளாவட்டத்தில் பகிஷ்கரித்துவிட வேண்டும். சொந்தத் தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு, தனிப்பட்ட சமரச கோர்ட்டுகளை நியமித்துக்கொள்ள வேண்டும். (5) மெஸபடோமியாவில் ராணுவம், குமாஸ்தா உத்தியோகம், தொழிலாளர் வேலை ஆகியவைகளுக்குப் போக மறுத்துவிட வேண்டும். (6) சீர்திருத்தப்பட்டிருக்கும் கவுன்ஸில்களுக்கு அபேட்சகர்களாக நிற்பவர்கள் தங்கள் அபேட்சையை வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டும். வாக்காளர்கள் எந்த அபேட்சகருக்கும் வோட்டளிக்கக்கூடாது. (7) அந்நிய சாமான்களைப் பகிஷ்கரித்துவிட வேண்டும். சுதேசித் துணிகளையே அதிக அளவில் இந்திய மக்கள் உபயோகித்துக்கொள்ளும்படியும் காங்கிரஸ் சிபாரிசு செய்தது. இந்திய மக்களின் தேவைக்குப் போதுமான துணியை இந்திய மில்கள் உற்பத்தி செய்ய முடியாதாகையால், ஒவ்வொரு வீட்டிலும் ராட்டினத்தில் நூற்பதைத் திரும்பவும் அனுசரித்து, கைத்தறியில் நெய்து அந்தத் துணியை உபயோகித்துக் கொள்ளுமாறும் காங்கிரஸ் சிபாரிசு செய்தது. இதனால் தங்கள் புராதனத் தொழிலைக் கைவிட்டிருக்கும் லட்சக்கணக்கான நெசவாளருக்குக் கௌரவமான பிழைப்புக் கிடைக்க வழி ஏற்படும் என்றும் தீர்மானம் கூறியது.

இத்தீர்மானத்திற்கு ஸ்ரீ விபின சந்திரபால் ஒரு திருத்தம் கொண்டு வந்தார். இந்தியரின் குறைகளடங்கிய ஓர் அறிக்

கையைப் பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் முன்னல் சமர்ப்பிப்ப தற்கு ஒரு தூது கோஷ்டியை இங்கிலாந்துக்கு அனுப்பி உடனே சுயாட்சி வேண்டும் என்று கேட்கவேண்டும் என அத்திருத்தம் கூறியது. தூது கோஷ்டியைப் பார்க்கப் பிரதம மந்திரி மறுத்து விட்டாலோ, 1919-ஆம் வருட அரசியல் சட்டத்திற்குப் பதிலாக சுயாட்சியை அளிக்க மறுத்தாலோ, அதன் பிறகு தீவிர ஒத்துழை யாமையை அனுசரிப்பது என்றும், அதற்கு மத்தியில் மகாத்மா வின் வேலைத் திட்டத்தை அனுசரிப்பதற்கு வேண்டிய தயாரிப்பு களைச் செய்துகொள்ளலாம் என்றும் ஸ்ரீ பாலின் திருத்தம் கூறி யது. ஆனல், பெரும்பான்மை வாக்குகளால் இத்திருத்தத்தைக் காங்கிரஸ் நிராகரித்துவிட்டது.

## ஒத்துழையாமைப் போராட்டம்

காங்கிரஸில் ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேறியது, ஒத்துழையாமை இயக்கத்திற்கு அதிக ஊக்கத்தை அளித்தது. அத்தீர்மானத்தை நடைமுறையில் கொண்டு வருவதற்கு வேண்டிய அறிவிப்பு நகலைத் தயாரிப்பதற்கு கல்கத்தாவில் ஓர் உப கமிட்டியை நியமித்தார்கள். இந்த உப கமிட்டியின் அறிக்கையை அக்டோபர் 2-ஆம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடி ஆலோசித்தது. மக்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிய விவரங்கள் அறிவிக்கப்பட்டன. ஆனல், கல்கத்தாவில் காங்கிரஸ் விசேஷ மகாநாடு செய்த ஒத்துழை யாமைத் தீர்மானத்தை, டிசம்பரில் நடக்கவேண்டிய நாகபுரி காங்கிரஸ் நிராகரித்துவிடக்கூடும் என்ற சந்தேகம் இருந்தது. மகாத்மா காந்தி நாடெங்கும் சுற்றுப்பிரயாணம் செய்தார். எங் கும் பிரமாதமான உற்சாகம் இருந்தது.

அக்டோபர் முதல் வாரத்தில் மௌலாஞ முகமது அலி ஐரோப்பாவிலிருந்து திரும்பினர். அவருடன் மகாத்மா காந்தி அக்டோபர் 12-ஆம் தேதி அலிகாருக்குச் சென்ருர். அரசாங்கத் தின் ஆதிக்கத்திலிருந்த கல்வி ஸ்தாபனங்களுக்கு எதிரான போராட்டம் அந்த விஜயத்திலிருந்தே ஆரம்பமாயிற்று. நான்கு, ஐந்து மாதங்கள் இது அதிகத் தீவிரமாக நடந்தது. எம்.ஏ.ஓ. கல்லூரியைத் தேசீய மயமாக்கிவிடுவதற்கு ஒரு முயற்சி நடந் தது. அந்தக் கல்லூரியின் டிரஸ்டிகளாவும் இருந்த சில ஒத்துழை யாமைத் தலைவர்கள், அந்தக் கல்லூரியைத் தேசீய மயமாக்கி விட வேண்டியதன் அவசியத்தைக் குறித்து மற்ற டிரஸ்டி களுக்கு எழுதினர்கள். 1920 அக்டோபர் 20-ஆம் தேதி டிரஸ்டி களின் கூட்டம் நடந்தது. அவர்களுக்கு மகாத்மா காந்தியும் ஒரு கடிதம் எழுதியிருந்தார். ஆனல், அக்கல்லூரியைப் பழைய முறையிலேயே நடத்திக்கொண்டு போவதென்று டிரஸ்டிகள் முடிவு செய்துவிட்டனர். பிறகு ஒரு தேசீய முஸ்லிம் பல்கலைக் கழகம் ஆரம்பிக்கப்பட்டது. மௌலாஞ முகமது அலியைத்

தலைமைப் பேராசிரியராகவும், ஷேக்-உல்-ஹிந்த் மௌலானா முகமது-உல்-ஹாஸன் சாஹிபை தலைவராகவும் கொண்ட அப்பல்கலைக் கழகம் அக்டோபர் 29-ஆம் தேதி ஆரம்பமாயிற்று. மகாத்மா காந்தியின் பஞ்சாப் விஜயம், அங்கே மாணவர்களிடையே பரபரப்பை உண்டாக்கிவிட்டது. பெருமளவில் வேலை நிறுத்தங்கள் நடந்தன. லாகூர் கல்லூரி, கல்சா கல்லூரி முதலிய கல்வி ஸ்தாபனங்களைத் தேசீய மாயமாக்கிவிட வேண்டும் என்று கிளர்ச்சி செய்தார்கள். நவம்பர் 15-ஆம் தேதி குஜராத் தேசீயக் கல்லூரியை காந்திஜி ஆரம்பித்துவைத்தார். அங்கே ஆரம்பிக்கப்பட்ட வித்தியா பீடத்திற்கு அவரை அத்தியட்சகராகவும் நியமித்தார்கள். 500 மாணவருடன் ஆரம்பமான கல்லூரிக்கு ஸ்ரீ கித்வானியைத் தலைமைப் பேராசிரியராக நியமித்தனர். காசி பல்கலைக் கழக மாணவர்களிடையே வேலை நிறுத்தம் நடந்தது. டிசம்பர் ஆரம்பத்தில் மகாத்மா காந்தி பீகாருக்குப் போயிருந்தார். ஒரு தேசீயக் கல்லூரியை ஆரம்பிக்கும்படி யோசனை கூறினார். 1921 ஜனவரியில் பாட்னாவில் தேசீயக் கல்லூரி ஆரம்பமாயிற்று. புனாவில் டிசம்பர் 11-ஆம் தேதி திலகர் வித்தியாலயம் ஆரம்பமாயிற்று.

## நாகபுரி காங்கிரஸ்

காரியங்கள் இவ்விதம் நடந்துகொண்டு வந்தபோது, காங்கிரஸின் வருட மகாநாடு ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரின் தலைமையில் நாகபுரியில் நடந்தது. "அமைதியான, நியாயமான முறையைக் கொண்டு, இந்திய மக்கள் சுயராஜ்யத்தை அடைவது" என்று காங்கிரசின் லட்சியம் மாற்றப்பட்டது. கல்கத்தாவில் நிறைவேறிய பலாத்காரமற்ற ஒத்துழையாமையையும் நாகபுரி காங்கிரஸ் ஊர்ஜிதம் செய்தது. இப்பொழுது இருக்கும் அரசாங்கத்துடன் தாமே கொண்டிருக்கும் உறவைத் துறந்துவிடுவது முதல் வரி கொடாமை வரையிலுள்ள ஒத்துழையாமைத் திட்டம் முழுவதையுமோ அல்லது அதன் எந்தப் பகுதியையோ காங்கிரஸோ, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியோ முடிவுசெய்யும் வகையில் அமலுக்குக்கொண்டு வருவது என்றும் காங்கிரஸ் முடிவுசெய்தது. இதற்கு மத்தியில் சரியான நடவடிக்கைகளைத் தொடர்ந்து எடுத்துக்கொள்ளுவதற்கு நாட்டைத் தயார் செய்வதை முன்னிட்டு கீழ்க்கண்டவாறு தேச மக்களைக் கேட்டுக் கொண்டது: 16 வயதிற்கு உட்பட்ட குழந்தைகளின் பெற்றோர்களும் போஷகர்களும் தங்கள் குழந்தைகளைச் சர்க்காரின் ஆதிக்கத்திற்குட்பட்ட பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப வேண்டாம் என்றும், அத்தகைய பள்ளிக்கூடங்களுக்குப் போக வேண்டாம் என்று 16 வயதுக்கு மேற்பட்ட மாணவர்களையும் கேட்டுக்கொள்ளுகிறது. வக்கீல்கள், தங்கள் தொழில்களை நிறுத்திவைப்பதற்கு அதிக முயற்சி எடுத்துக்கொள்ளுவதோடு, தங்கள் சகோதர வக்கீல்களும் கட்சிக்

காரர்களும் கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்யும்படி செய்வதுள்பட தேசீய சேவையில் அதிக கவனம் செலுத்தும்படி கேட்டுக்கொள்ளுகிறது. கையினால் நூற்பதற்கும் கையினால் நெய்வதற்கும் அதிக ஊக்கமளிப்பதன் மூலம் நாளாவட்டத்தில் நமது அந்நிய வர்த்தக உறவைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறது. பொதுவாக, தேசத்திலுள்ள ஒவ்வொரு பகுதியினரும், ஒவ்வொரு ஆணும் பெண்ணும், முடிந்த வரையில் அதிகமாக தன்னலத்தியாகம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறது. மாகாண, மத்திய ஸ்தாபனத்துடன் ஒவ்வொரு கிராமத்திலும், வட்டத்திலும் கமிட்டிகளை அமைக்கவேண்டும். இந்திய தேசீய சேவையாளர் என்ற தேசீய ஊழியர் கோஷ்டியை அமைத்து, அகில இந்திய திலகர் சுயராஜ்ய நிதி என்ற நிதியிலிருந்து அவர்களுக்குப் பண உதவி செய்து வர வேண்டும். மிகப் பெரும்பான்மையான தொகுதிகளில் வாக்காளர்கள் வேண்டுமென்றே வோட்டுப் போடாமலிருந்தும் புதிய சட்டசபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பவர்கள், தங்கள் ஸ்தானங்களை ராஜினாமா செய்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறது. அவ்விதம் அவர்கள் ராஜினாமா செய்யாமலிருப்பார்களாயின், அத்தகைய சட்டசபை உறுப்பினர்களிடம் எந்த ராஜீய சேவையையும் மக்கள் கேட்காமலிருந்துவிட வேண்டும். போலீஸாருக்கும் ராணுவத்தினருக்கும் பொது மக்களுக்குமிடையே நட்பு வளர்ந்துகொண்டு வருவதை உணரும் காங்கிரஸ், எல்லா அரசாங்க உத்தியோகஸ்தர்களும் தங்கள் பதவிகளை ராஜினாமாச் செய்துவிட வேண்டும் என்று தேசத்தின் அழைப்பு வரும் வரையில், மக்களிடம் தாங்கள் நடந்துகொள்ளுவதில் அதிக அன்புடனும் கண்டிப்பான யோக்கியப் பொறுப்புடனும் நடந்துகொள்ளுவதோடு, பொதுக்கூட்டங்கள் முதலியவைகளில் தீவிரமான பங்கு எடுத்துக்கொள்ளாமல் கூட்டங்களுக்குப் பயமின்றியும் பகிரங்கமாகவும் வருமாறும் எல்லா அரசாங்க உத்தியோகஸ்தர்களையும் காங்கிரஸ் கேட்டுக் கொள்ளுகிறது. அத்துடன் தேசீய இயக்கத்திற்குப் பகிரங்கமாகப் பண உதவி செய்யுமாறும் அவர்களைக் காங்கிரஸ் கேட்டுக் கொள்ளுகிறது. அகிம்சை, ஒத்துழையாமையுடன் இணைந்த ஒரு பகுதியாக இருக்க வேண்டும் என்று காங்கிரஸ் வற்புறுத்தியதோடு, ஹிந்து – முஸ்லிம் ஒற்றுமையை உண்டாக்கி, பிராமணருக்கும் பிராமணரல்லாதாருக்குமிடையே தகராறு இருக்கும் இடங்களில் சமரசம் ஏற்படும்படிச் செய்யும்படியும் காங்கிரஸ் மக்களைக் கேட்டுக்கொண்டது. ஹிந்துக்கள், தீண்டாமையை ஹிந்து சமயத்திலிருந்து ஒழிப்பதோடு, ஒடுக்கப்பட்டிருக்கும் மக்களை நடத்தும் விஷயத்தில் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும் என்று வளர்ந்து வரும் ஆர்வத்திற்கு உதவுமாறும் மதத் தலைவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறது. இந்தத் தீர்மானம் காங்கிரஸில் ஏகமனதாக நிறைவேறியது.

இந்திய மக்கள் நீண்டகாலமாக ஒடுக்கப்பட்டு அவமதிப்பின் கீழ் வாழ்ந்து வந்தார்கள். இவையெல்லாம் பஞ்சாபில் நடந்த அக்கிரமங்களிலும், கிலாபத் விஷயத்தில் செய்த பெரும் துரோகத்திலும் முடிந்திருந்தது. இந்நிலைமையில் நடந்திருக்கும் தவறுகளுக்குப் பரிகாரம் காண முடியாது தவித்துக்கொண்டிருந்த மக்களுக்கு ஒரு வழி பிறந்ததுமே அதை ஆனந்தத்துடன் பற்றிக்கொண்டார்கள். எனவே, இவ்விதம் ஒத்துழையாமை இயக்கத்தின் முதல் கட்டம் ஆனந்தமான காட்சிகளுக்கிடையே முடிந்தது. துன்பங்களை அனுபவிப்பதன் மூலம் சுயராஜ்யத்தை அடைவது என்று இந்திய மக்கள் உறுதி கொண்டனர். நாகபுரி காங்கிரஸில் ஏற்பட்ட முக்கியமான முடிவிற்குப் பிறகு, தியாகம் செய்வதில் மக்கள் ஒரு சிறிதும் பின்வாங்கவில்லை என்பதைப் பின்னல் ஏற்பட்ட சம்பவங்கள் தெளிவாகக் காட்டின.

## இயக்கத்தின் முன்னேற்றம்

நாகபுரி காங்கிரஸிற்குப் பிறகுள்ள காலம், அதிகக் கஷ்டப்பட்டு வேலை செய்தாக வேண்டிய மாதங்களாக இருந்தன. இந்தியாவுக்குப் பிரிட்டிஷாருடன் தொடர்பு ஏற்பட்ட பிறகு, இச்சமயத்தில் மக்களிடையே இருந்த உற்சாகத்தைப் போல இதற்கு முன்னல் அதிகமான உற்சாகத்தை இந்திய சரித்திரம் கண்டதே இல்லை. இந்தியப் புதல்வர்கள் இத்தனை பேரின் சேவையை அதற்கு முன்னல் இந்திய மக்கள் பெற்றதும் கிடையாது. தங்களிடமும், தங்களுடைய கஷ்டங்களைத் தீர்த்து விடத் தங்களால் முடியும் என்பதிலும் மக்களின் நம்பிக்கை அப்பொழுது அதிகரித்திருந்தது. காங்கிரஸ் செய்த முடிவை அனுசரித்து நாடெங்கும் நூற்றுக்கணக்கான வக்கீல்கள், கோர்ட்டுக்குப் போய் தொழில் நடத்துவதை நிறுத்திவைத்து தேச சேவையில் ஈடுபட ஆரம்பித்தார்கள். மக்கள், பஞ்சாயத்துக்களை அமைத்துக்கொண்டு, கோர்ட்டுக்குப் போவதைத் தவிர்த்தார்கள். கோர்ட்டுகளில் தொடரும் வழக்குகள் குறைந்துவிடவே நாடெங்கும் அரசாங்கத்திற்குக் கிடைத்து வந்த ஸ்டாம்புக் கட்டண வருவாய் அதிகமாகக் குறைந்தது. கல்வி வேலைத் திட்டத்தைப் பொறுத்தவரையில், அரசாங்கத்தின் ஆதிக்கத்தின் கீழிருந்த பள்ளிக்கூடங்களுக்கும், கல்லூரிகளுக்கும் அனுப்பி வந்த ஆயிரக்கணக்கான மாணவர்களை, அவர்களின் பெற்றோர்களும் போஷகர்களும் வாபஸ் வாங்கிக்கொண்டுவிட்டார்கள். பல பள்ளிக்கூடங்களில் மாணவரே இல்லாது போயிற்று. இளைஞர்களிடமிருக்கும் ஆண்மையைக் கொன்றுவிடுவதற்காகவே, நடத்தப்பட்டு வரும் பள்ளிக்கூடங்களுக்குப் போவதை நிறுத்திவிட்டுத் தேச சேவையில் ஈடுபடும்படி மாணவர்களை மகாத்மா காந்தி கேட்டுக்கொண்டார். அதன்படி செய்ய அநேக மாணவர்கள் உற்சாகத்துடன் முன்வந்தார்கள். நாட்டின் பல பகுதிகளிலும் தேசீயப் பல்கலைக் கழகங்களும், தேசீயக் கல்லூரிகளும்

பள்ளிக்கூடங்களும் ஆரம்பமாயின. ஐக்கிய மாகாணம், பஞ்சாப், பம்பாய் மாகாணங்களில் மாணவர் இயக்கங்கள் தீவிரமாக நடந்துவந்தன. வங்காளமும் பின்வாங்கிவிடவில்லை. சென்ற ஒன்றரை ஆண்டு காலமாக நாட்டின் பல பகுதிகளில் நடந்திருக்கும் உள்ளத்தை அள்ளும் சில காட்சிகளில் ஒன்றைக் கல்கத்தாவும் கண்டது. ஜனவரி மத்தியில் தேசபந்து ஸி. ஆர். தாஸ் வெளியிட்ட கோரிக்கையைக் கண்டு ஆயிரக்கணக்கான மாணவர்கள் கல்லூரிகளையும், பரீட்சைகளையும் விட்டு வெளியேறிவிட்டனர். மகாத்மா காந்தி கல்கத்தாவுக்கு விஜயம் செய்து, பிப்ரவரி 4-ஆம் தேதி தேசீயக் கல்லூரியை ஆரம்பித்து வைத்தார். இரண்டாவது தடவையாக பாட்னுவுக்கும் போனார். அங்கே தேசீயக் கல்லூரியைத் திறந்துவைத்து பீகார் வித்தியா பீடத்தையும் ஆரம்பித்துவைத்தார். இவ்வாறு நான்கு மாத காலத்திற்குள் அலிகார் தேசீய முஸ்லிம் பல்கலைக் கழகம், குஜராத் வித்தியா பீடம், பீகார் வித்தியா பீடம், காசி வித்தியா பீடம், வங்காள தேசீயப் பல்கலைக் கழகம், திலகர் மகாராஷ்டிர வித்தியா பீடம் ஆகியவை ஆரம்பமாகிவிட்டன. அநேக தேசீயப் பள்ளிக்கூடங்களும் ஆரம்பமாயின. அவற்றில் நாடு முழுவதிலும் ஆயிரக்கணக்கான மாணவர்கள் படிக்கலாயினர். இவ்விதம் தேசீயக் கல்விக்கு அதிக ஊக்கம் உண்டாயிற்று.

சுதேசி ஏற்பாடு சம்பந்தமாக ராட்டையையும் கதர் உபயோகிப்பதையும் பரப்புவதற்குச் செய்த முயற்சியிலும் அற்புதமான அபிவிருத்தி ஏற்பட்டது. ராட்டை என்ற பெயரைக்கூட அடியோடு மறந்து போயிருந்த வீடுகளிலெல்லாம் ராட்டையின் இனிய கீதம் கேட்கலாயிற்று. இது நாட்டில் லட்சக்கணக்கான ஏழைப் பெண்களுக்குப் பிழைப்பைக் கொடுத்ததோடு, பணக்காரர்கள் வீடுகளிலும் ராட்டை புகுந்துவிட்டது. கௌரவப் பட்டங்களைத் துறந்தவர்கள் மிகச் சிலரே. பட்டம் பெற்றிருந்தவர்கள் தனியான தன்மையுடையவர்கள். ஆகையால், அவர்களிடமிருந்து இதைவிட அதிகமாக எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனால், ஒரு விஷயம் மாத்திரம் சந்தேகத்திற்கு இடமில்லாதது. இந்தக் கௌரவப் பட்டங்களைத் துச்சமாக நினைக்கும்படி இந்த இயக்கம் செய்ததைப் போன்று வேறு எதுவும் செய்ததில்லை. காங்கிரஸ் தீர்மானத்தில் கூறப்படாத ஒரு விஷயத்தை மக்கள் தாங்களாகவே செய்தனர். மது பானத் தீமையை எதிர்த்துக் கிளர்ச்சியை ஆரம்பித்துவிட்டார்கள். இதில் நாடு முழுவதிலும் ஆச்சரியப்படத்தக்க அபிவிருத்தி ஏற்பட்டது. இதனால் அரசாங்கத்தின் கலால் வருமானம் அதிகமாகக் குறைந்து போயிற்று. சீர்திருத்தப்பட்ட அரசியலின்படி, இதற்கு மத்தியில் சட்டசபைகளுக்குத் தேர்தல்கள் நடந்தன. கானட்டுக் கோமகன் ஜனவரி 8-ஆம் தேதி சென்னையில் வந்திறங்கினர். அங்கே 12-ஆம் தேதி சட்டசபையை ஆரம்பித்து வைத்தார். காங்கிரஸ் தீர்மானத்தின்படி கானட்டுக் கோமகனைப் பகிஷ்

கரிக்குமாறு மக்களுக்கு மகாத்மா காந்தி ஆலோசனை கூறினர். அந்தப் பகிஷ்காரத்தை, அக்கோமகனை அவமதிக்கும் முறையில் செய்யாமல், மக்களின் கோரிக்கைக்குச் செவிசாய்க்க அரசாங்கம் விடாப்பிடியாக மறுத்து வருவதைக் குறித்து தங்கள் ஆட்சேபத்தைத் தெரிவிக்கும் முறையில் செய்யும்படியும் மகாத்மா கேட்டுக்கொண்டார். அக்கோமகன் சென்ற இடங்களிலெல்லாம் பொதுவாக பொதுமக்களும், அரசாங்கத்துடன் நேரடியாகத் தொடர்பில்லாத மத்தியதர வகுப்பினரும் ஹர்த்தால் அனுசரித்தார்கள். கோமகன், சில மாகாண சட்டசபைகளையும், டில்லியில் மத்திய சட்டசபையையும் ஆரம்பித்துவிட்டு இங்கிலாந்திற்குத் திரும்பிவிட்டார்.

## அகிம்சை

அகிம்சையை, இந்த இயக்கத்தின் முக்கியாம்சமாக மகாத்மா காந்தி வற்புறுத்தி வந்தார். பொது ஜனங்களிடையே எழுச்சியும் ஆத்திரமும் இருந்து வந்த போதிலும், பலாத்காரமான செயல் எதிலும் அவர்கள் இறங்காமலிருந்ததற்கு மகாத்மாவின் இந்த வற்புறுத்தலே காரணம். என்றாலும், சில சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன. ஒத்துழையாமை இயக்கத்திற்கும் அதற்கும் நேரடியான தொடர்பு இல்லாவிட்டாலும், இந்த இயக்கம் மக்களிடையே கிளப்பிவிட்ட எழுச்சியும், விழிப்புமே அவைகளுக்குக் காரணம் என்று கூறப்பட்டன. இவைகளில் ஆரம்பத்தில் நடந்தது ஐக்கிய மாகாண விவசாயிகளின் பெரும் கிளர்ச்சி. சட்ட விரோதமாகவும், அக்கிரமமாகவும் ஜமீன்தார்கள் விதித்திருந்த தீர்வைகளைச் செலுத்த விவசாயிகள் மறுத்துவிட்டனர். அதன் மீது ஜமீன்தார்களுக்கும் விவசாயிகளுக்கும் ஏற்பட்ட தகராறிலிருந்து கிளம்பியதே அக்கிளர்ச்சி. பல இடங்களில் ஏராளமானவர்கள் ஒன்றுகூடினர். பல இடங்களில் கலவரங்கள் நடந்தன. சில இடங்களில் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்து கூட்டத்தைக் கலைத்தார்கள். கலவரங்களை அடக்கி அமைதியை உண்டாக்குவதற்கு ஒரு மாதத்திற்கு மேலாயிற்று. ஒத்துழையாமை இயக்கத்திற்குச் சம்பந்தமில்லாமல் ஆரம்பமான மற்றோர் கிளர்ச்சி, சீக்கியரின் அகாலி இயக்கக் கிளர்ச்சி யாகும். சீக்கிய குருத்துவாரங்களின் சீர்திருத்தத்திற்கென்று ஆரம்பமான மத சம்பந்தமான இக்கிளர்ச்சி, அரசாங்கத்தின் நடத்தையினல், மேலும் மேலும் ஒத்துழையாமைக் கொள்கையை அனுசரிக்கும் இயக்கமாக மாறிவிட்டது. பிப்ரவரியில் நான்கானு துக்க சம்பவம் என்பது நிகழ்ந்தது. வருணிக்க முடியாத பயங்கரக் காட்சிகளுக்கிடையே சுமார் இருநூறு சீக்கியர்கள் அதில் மாண்டார்கள்; இச்செய்தி நாடெங்கும் சீக்கியர்களிடையேயும் மற்றவர்களிடையேயும் பெருங்கொதிப்பை உண்டாக்கியது. மார்ச் மாத ஆரம்பத்தில் மகாத்மா காந்தி பாஞ்சாலத்திற்குப் போக வேண்டியதாயிற்று.

## இயக்கத்தினுல் அரசாங்கத்தின் போக்கு

இயக்கத்தின் வளர்ச்சியை அரசாங்கம் கவனித்துக் கொண்டு வந்தது. ஆரம்பத்தில் இதைப் பற்றி கேவலமாகப் பரிகாசம் செய்து வந்தார்கள். 1920 ஆகஸ்டில் வைஸ்ராய் செம்ஸ்போர்டு, "எல்லாப் பைத்தியக்காரத் திட்டங்களிலும் அதிகப் பைத்தியக்காரத்தனமானது" என்று ஒத்துழையாமையை வருணித்தார். பிறகு 1920 நவம்பர் 6-ஆம் தேதி அரசாங்கம் ஓர் அறிக்கையை வெளியிட்டது. ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்தவர்கள், ஒத்துழையாமையோடு பலாத்காரமில்லாதிருக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டிருந்ததால், அரசாங்கம் இது வரையில் யாரையும் கைது செய்து வழக்குத் தொடராமல் இருந்தது என்று அந்த அறிக்கை கூறியது. "இயக்கத்தை ஆரம்பித்தவர்கள் ஆரம்பத்தில் கூறிய எல்லையைத் தாண்டிப் போய் இயக்கத்தைப் பலப்படுத்த முற்படுகிறவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி மாகாண அரசாங்கங்களுக்கு அறிவித்திருந்தோம். அதாவது பேச்சு, எழுத்து ஆகியவைகளின் மூலம் பலாத்காரத்திற்கு மக்களைத் தூண்டிவிடுபவர்கள் மீதும், ராணுவம் அல்லது போலீஸின் விசுவாசத்தில் குறுக்கிடுவோர் மீதும் நடவடிக்கை எடுக்குமாறு கூறியிருந்தோம்" என்று அந்த அறிக்கை கூறியது. ஆனால், இது நடைமுறையில் அனுசரிக்கப்படவில்லை. மார்ச்சு மாதத்திற்கு மேல் நாடெங்கும் அடக்குமுறை ஆவேசத்துடன் தாண்டவமாடியது. நவம்பர், டிசம்பர் மாதங்களில் தொண்டர் ஸ்தாபனங்களையும் நசுக்க முற்பட்டுவிட்டனர். ராஜ நிந்தனைக் கூட்டங்கள் சட்டத்தைக் கொண்டு வந்து, ஆயிரக்கணக்கான இந்தியரைக் கைது செய்து சிறையிலடைத்தார்கள். மது பான எதிர்ப்புக் கிளர்ச்சியின் மீதுதான் முதலில் அடக்குமுறை ஆரம்பிக்கப்பட்டது. கள்ளுக்கடைகளில் மறியல் செய்த குற்றத்திற்காக ஏராளமான தொண்டர்களைக் கைது செய்து சிறைத் தண்டனை விதித்தார்கள், மற்றவர்கள் மீது கிரிமினல் சட்டத்தின் 107-வது பிரிவு, 108-வது பிரிவின் கீழ் வழக்குத் தொடுத்தார்கள். நன்னடத்தை ஜாமீன் கட்ட மறுத்தவர்களைச் சிறைக்கு அனுப்பினர். 144-வது தடையுத்தரவுப் பிரிவைக் கடுமையாக உபயோகித்தார்கள், ஆனால், பொதுக்கூட்டங்களுக்கும், தனிப்பட்டவர்கள் பேசுவதற்கும் தடை விதிப்பது சட்ட சம்மதமானதே என்பதே சந்தேகத்திற்குரியது. அடக்குமுறையை அதிக அளவில் காண நேர்ந்தது பீகார் மாகாணமே. புரட்சிகரமானது, அராஜகமானது என்று ஒத்துழையாமை இயக்கத்தைக் கூறி, இதை அடக்குவதற்கு அதிகாரிகள் தங்கள் இஷ்டம் போல எந்த நடவடிக்கையையும் எடுத்துக்கொள்ளலாம் என்று அதிகாரிகளுக்குச் சர்வாதிகாரத்தை அரசாங்க அறிக்கையொன்று அளித்துவிட்டது. இந்த இயக்கத்தை அடக்குவதில் ஐக்கிய மாகாண, பஞ்சாப் அரசாங்கங்களும் மெதுவாக இருந்துவிடவில்லை. ராஜநிந்தனைப் பொதுக்

கூட்டங்கள் சட்டத்தையும், மற்ற சாதாரண சட்டங்களையும், அவற்றை உபயோகிப்பதற்கு எந்தவிதமான நியாயமுமில்லாத விஷயங்களில்கூட தாராளமாக உபயோகித்தார்கள். ஒத்துழையாமை இயக்கக் கூட்டங்களை நடத்தக் கூடாது என்று மலபார் ஜில்லாவில் தடையுத்தரவைப் பிறப்பித்து, அத்தடையை மீறி விட்டார்கள் என்ற குற்றத்திற்காக, முஸ்லிம் தலைவர்களில் அதிக மதிப்பு வாய்ந்தவரான ஸ்ரீ யாகுப் ஹாசனையும் மற்றவர்களையும் கைது செய்தது குறிப்பிடத்தக்க முக்கியமான சம்பவமாகும்.

## பெஜவாடா வேலைத் திட்டம்

காங்கிரஸ் பிரசாரம் அதிக வேகமாக அபிவிருத்தியடைந்து கொண்டிருந்தது. நாடும் அடக்குமுறையின் முதல் வேகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தது. அச்சமயத்தில் 1921 மார்ச் கடைசி வாரத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பெஜவாடாவில் கூடியது. மூன்று மாதங்களுக்கான ஒரு வேலைத்திட்டத்தை அக்கூட்டம் உருவாக்கியது. 1921 ஜூன் 30-ஆம் தேதிக்குள் திலகர் சுயராஜ்ய நிதிக்குக் காங்கிரஸ் ஒரு கோடி ரூபாய் வசூலித்தாக வேண்டும்; காங்கிரஸில் ஒரு கோடி உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும்; 20 லட்சம் ராட்டைகள் நாட்டில் வேலை செய்யும்படிப் பார்க்க வேண்டும் என்பனவே அந்த வேலைத்திட்டம். அரசாங்கம் ஆரம்பித்திருக்கும் அடக்குமுறை, நாட்டில் இருக்கும் நிலைமைக்குக் கொஞ்சமும் அவசியமில்லாதது என்று காங்கிரஸ் கமிட்டி கருதியது. ஆகவே, சட்ட மறுப்பை ஆரம்பித்து விட வேண்டும் என்று அநேகர் விரும்பினார்கள். ஆனால், சட்ட மறுப்பை உடனே ஆரம்பிப்பதற்கு அவசியமான அளவுக்கு நாடு இன்னும் கட்டுதிட்டத்தை அடைந்துவிடவில்லை, ஏற்பாடுகளைச் செய்துகொண்டு விடவில்லை என்று கமிட்டி கருதியது. ஆனால், மக்களுக்கு ஒரு யோசனை கூறியது. தடையுத்தரவு பிறப்பிக்கப் பட்டவர்கள், அதன் மூலம் அவர்கள் ஒன்றும் செய்ய முடியாதபடி அரசாங்கம் செய்துவிட்டால் அவர்களுக்குப் பதிலாக மற்றவர்கள் முன்வந்து அந்த வேலையை மேற்கொள்ளுவார்கள் என்று நம்பி, அவர்களே வலிய உத்தரவுப்படி நடந்துவிட வேண்டும் என்று கமிட்டி கூறியது. சாதாரணமாகப் பொது மக்கள், அடக்குமுறையைக் கண்டு மனச்சோர்வு அடைந்துவிடாமல், அமைதியான ஸ்தாபன வேலைகளையும், ஆக்க வேலைகளையும் தொடர்ந்து செய்து வர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது. அதற்குப் பிறகு நாடெங்கும் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் பெஜவாடா திட்டத்தை நிறைவேற்றுவதற்காக மிகுந்த தீவிரத்துடன் வேலை செய்தார்கள். ஜூன் 30-ஆம் தேதி மகாத்மா, விதித்திருந்தபடி ஒரு கோடி ரூபாய் வசூலாகி விட்டது என்று அறிவித்தார். உறுப்பினர்களைச் சேர்க்கும் விஷயமும், ராட்டை சம்பந்தமாகவும் திட்டம் பூர்த்தியாக நிறை

வேறிவிட்டதா என்பது இன்னும் சரியாகத் தெரியாவிட்டாலும் கிட்டத்தட்ட நிறைவேற்றப்பட்டிருக்கும் என்றே தாம் நம்புவதாகவும் காந்திஜி சொன்னர். மகாத்மா காந்தியும் கொஞ்சமும் ஓய்வின்றி எப்பொழுதும் போல வேலை செய்து வந்தார். ஜில்லாதோறும் அவர் சென்ற இடங்களிலெல்லாம் ஒத்துழையாமை, அகிம்சைத் தத்துவத்தை உபதேசித்தார். இம்மகா வீரரைக் காண்பதற்காக பல்லாயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் கூடினர். ரெயில் பாதை நெடுகவும், ஸ்டேஷன்களிலும் ஏராளமான மக்கள் அவரைத் தரிசிப்பதற்காகக் கூடியிருந்தார்கள். மலர்களையும் பணத்தையும் கொண்டு தங்கள் அன்பை அவர் மீது சொரிந்தனர்.

## மலேகானும் மற்ற கலவரங்களும்

நாடு இவ்விதம் ஆக்க வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதில் ஈடுபட்டிருந்தபோது, நாஸிக் ஜில்லாவில் மலேகான் என்ற இடத்தில் கலவரம் நடந்துவிட்டது. இதனல் போலீஸாரில் பலரும், கூட்டத்தினரில் சிலரும் மாண்டதோடு தீயிட்டுக் கொளுத்துவதும் நிகழ்ந்துவிட்டன. பீகாரில் கிரிதிஹ் என்ற இடத்திலும் கலவரம் நடந்தது. ஆனல், அங்கே உயிர்ச் சேதம் எதுவும் இல்லை. 1921 மே மாத ஆரம்பத்தில் தேயிலை அதிகமாகப் பயிராகும் அஸ்ஸாமில், தொழிலாளருக்குக் கொடுக்கப்பட்டு வந்த மிகக் குறைந்த கூலியின் காரணமாகத் தொழிலாளர் கிளர்ச்சி நடந்தது. 12,000 தொழிலாளர், படாத கஷ்டங்களையெல்லாம் அனுபவித்து மிகப் பரிதாப நிலையில் வெளியேறிச் சென்றனர். இத்தொழிலாளர்களில் ஏராளமானவர்கள் சாந்தப்பூரில் சேர்ந்திருந்தபோது, அங்கே அரசாங்கம் நியமித்திருந்த கூர்க்காக்கள் அத்தொழிலாளரைத் தாக்கினர். இந்த அக்கிரமம் நாட்டில் அதிகக் கொதிப்பை உண்டாக்கியது. இதனல் கிழக்கு வங்காள ரெயில்வே, கப்பல் தொழிலாளர்கள் அனுதாப வேலை நிறுத்தஞ் செய்தனர். இதனல் இரண்டு மாதங்களுக்குப் போக்குவரத்து வசதியே இல்லாமல் அடியோடு நின்று போயிற்று.

## காந்தி-ரீடிங் சந்திப்பு

மகாத்மா காந்தியும் வைஸ்ராய் லார்டு ரீடிங்கும் சந்தித்துப் பேசியது குறிப்பிடத்தக்க மற்ருேர் சம்பவம். இவர்களிருவரும் பல மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். இவர்கள் எது சம்பந்தமாகப் பேசியிருப்பார்கள் என்பதைக் குறித்து யூகங்கள் கிளம்பின. பண்டித மதனமோகன மாளவியாவும், லாலா லஜபதிராயும் வைஸ்ராயுடன் அதே போலப் பேசினர். இந்தச் சம்பாஷணைகளைப் பற்றிய விவரம் வெளியிடப்படவே இல்லை. ஆனல், அலி சகோதரர்கள் மன்னிப்புக் கேட்டுக்

கொண்டதைப் பற்றிய ஒரு சம்பவம் மாத்திரம் பிரசுரமாயிற்று. அவர்கள் பிரசங்கங்களில் சில பகுதிகளில் அுவசியமான ஆத்திரம் இருந்ததோடு பலாத்காரத்தைத் தூண்டிவிடுவதாகவும் இருந்தது என்று சிலர் கருதினர்கள். இதை முன்னிட்டே அலி சகோதரர்கள் மன்னிப்புத் தெரிவித்துக் கொண்டார்கள். அதோடு தாங்கள் ஒத்துழையாமை இயக்கத்துடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கும் வரையில், நேரிடையாகவோ, மறைமுகமாகவோ பலாத்காரம் வேண்டும் என்று சொல்லுவதில்லை என்றும் வாக்குறுதி அளித்தார்கள். அலி சகோதரர்கள் மன்னிப்புக் கோரி வாக்குறுதியையும் அளித்திருப்பதை முன்னிட்டு அவர்கள்மீது நடவடிக்கை எடுப்பது ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது என்று மே 30-ஆம் தேதி இந்திய அரசாங்கம் ஓர் அறிக்கையை வெளியிட்டது. செம்ஸ்போர்டு கிளப்பில் லார்டு ரீடிங் பேசியபோது இச்சம்பவத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில், தாம் மகாத்மா காந்தியைக் கண்டு பேசியதன் பலனுகவே அலி சகோதரர்கள் மன்னிப்புத் தெரிவித்தார்கள் என்றூர். நண்பர்கள், எதிரிகள் ஆகிய இரு தரப்பாரும் இதைக் குறித்து அபிப்பிராயங்களைத் தெரிவிக்க ஆரம்பித்துவிட்டனர். அலி சகோதரர்கள் செய்தது, ஒத்துழையாமையின் உயர்ந்த லட்சியத்திலிருந்து வழுவிவிட்டதாகும் என்று ஒத்துழையாதார் கூறினர். எதிரிகளோ, வீர அலி சகோதரர்களை இதை வைத்துக்கொண்டு இழிவுபடுத்தத் தலைப்பட்டனர். தாங்கள் தப்பித்துக்கொள்ளச் செய்த முயற்சியிலேயே அவர்கள் வைஸ்ராய்க்கு உறுதிமொழி அளித்திருக்கின்றனர் என்றூர்கள். உடனே மகாத்மா காந்தி, வைஸ்ராயின் சம்மதத்தின் பேரில், அவரைத் தாம் கண்டு பேசிய விவரத்தை வெளியிட்டார். அப்பொழுது தான் காந்திஜி நிலையைத் தெளிவுபடுத்தினர். அலி சகோதரர்களின் பேச்சில் பலாத்காரத்தைத் தூண்டுவதாக இருந்த சில பகுதிகள் சம்பந்தமாக அவர்களிடமிருந்து மன்னிப்பைப் பெறுவதாக லார்டு ரீடிங்கிற்குத் தாம் வாக்குறுதி அளித்ததன் பிறகே, வழக்குத் தொடருவதாக இருந்த யோசனையைக் குறித்து வைஸ்ராய் குறிப்பிட்டார் என்று காந்திஜி விளக்கினர். பிறகு இதைப் பற்றிய விவாதம் நின்றது.

## கராச்சி கிலாபத் மகாநாடு

ஜூலை 8-ஆம் தேதி அகில இந்திய கிலாபத் மகாநாடு கராச்சியில் மௌலானு முகமது அலி தலைமையில் நடந்தது. அம்மகாநாட்டில் பின்னுல் அலி சகோதரர்கள், டாக்டர் கிச்சுலு, சாரதா பீட ஜெகத் குரு ஸ்ரீ சங்கராச்சாரியார், மௌலானு நிஸார் அகமது, பீர் குலாம் முஜாதிக், மௌல்வி ஹுஸேன் அகமது ஆகியவர்கள் மீது தொடரப்பட்ட வழக்குகளைப் பற்றியே முக்கியமாக விவாதம் நடந்தது. இம்மகாநாடு முஸ்லிம்களின் கோரிக்கையைத் திரும்ப வற்புறுத்தியதோடு, "மத பக்தியுள்ள முஸ்லிம் யாரும், ராணுவத்தில் சேவை செய்வதோ, ராணுவத்

திற்கு ஆள் சேர்ப்பதற்கு உதவுவதோ, உடந்தையாக இருப்பதோ இன்றிலிருந்து சட்ட விரோதமாகும்'' என்று ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அங்கோரா அரசாங்கத்துடன் பிரிட்டிஷ் அரசாங்கம் போரை நடத்துமானல், இந்திய முஸ்லிம்கள் சட்ட மறுப்பை ஆரம்பித்துப் பூரண சுயேச்சையை ஸ்தாபித்து, அகமதாபாத்தில் நடக்கும் இந்திய தேசீய காங்கிரஸ் மகாநாட்டில் இந்தியக் குடியரசுக் கொடியை ஏற்றிவிடும் என்றும் அம்மகாநாடு அறிவித்தது,

## அகில இந்திய காங்கிரஸ் கூட்டம்

ஜூலை 28-ஆம் தேதி பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடந்தது. நாகபுரி காங்கிரஸ் செய்த காங்கிரஸ் விதிகளின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முதல் கூட்டம் இதுவே. எல்லா உறுப்பினர்களும் தூய வெள்ளைக் கதர் ஆடை உடுத்தி வந்திருந்தார்கள். மகாத்மாவின் எளிய வாழ்க்கையின் மூலம் அவர் நாட்டிற்கு எடுத்துக்காட்டிய தூய வாழ்விற்குப் பொருத்தமானதாக அக்காட்சி இருந்தது. கல்கத்தா விசேஷ காங்கிரஸில் நிறைவேறி, நாகபுரி காங்கிரஸ் ஊர்ஜிதம் செய்திருக்கும் ஒத்துழையாமைத் தீர்மானத்தை அனுசரித்து, வேல்ஸ் இளவரசரின் வரவேற்பில் கலந்துகொள்ளாதிருப்பதும், அந்த வரவேற்புக்கு உதவி செய்யாமலிருப்பதும் ஒவ்வொருவரின் கடமை என்று எல்லோரையும் கேட்டுக்கொள்ளுவதாக அ. இ. கா. கமிட்டி ஒரு தீர்மானம் செய்தது. இந்த ஆலோசனையை தேச மக்களுக்குக் கூறிய அக் கமிட்டி, அத் தீர்மானத்தில் மேலும் கூறியதாவது: ''இளவரசரின் விஜய சம்பந்தமாக அவரைப் பொறுத்தவரையில் எந்தவித கெட்ட எண்ணமும் நமக்குக் கிடையாது. ஆனல், முஸ்லிம்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து, இந்தியர்களுக்கு அக்கிரமமான அநீதிகளைச் செய்வதில் முடிந்திருக்கும் ஓர் ஆட்சி முறையைப் பலப்படுத்தி ஆதரிப்பதற்காகவும், பிறப்புரிமையான சுயராஜ்யத்தை, எவ்வளவு காலத்திற்கு முடியுமோ அவ்வளவு காலத்திற்கு இந்தியா அடையமுடியாதபடிச் செய்வதற்குமே இந்த விஜயம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.'' பெஜவாடா வேலைத் திட்டத்தை மக்கள் நிறைவேற்றி வைத்திருப்பதைக் குறித்து இக் கமிட்டி மக்களைப் பாராட்டியது. செப்டம்பர் 30-ஆம் தேதிக்குள் அந்நியத் துணி பகிஷ்காரத்தைப் பூரணமாக்கிவிடுவதில் முழு கவனத்தையும் செலுத்தும்படியும் கேட்டுக்கொண்டது. கையினல் நூற்பதற்கும் நெய்வதற்கும் ஊக்கமளித்து கதர் உற்பத்தியைப் பெருக்கும்படி வேண்டிக்கொண்டது. ஆகஸ்டு முதல் தேதியுடன் காங்கிரஸ்காரர்கள் ஒவ்வொருவரும் அந்நியத் துணி உடுத்துவதை ஒழித்துவிட வேண்டும் என்றும், அழிப்பதற்கு, அல்லது வெளிநாட்டில் உபயோகிக்க அனுப்பிவிடுவதற்கு, எல்லோரிடமிருக்கும் அந்நி

யத் துணிகளையெல்லாம் எல்லா காங்கிரஸ் ஸ்தாபனங்களும் சேகரிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டது. இந்திய மில் ஏஜண்டுகள், பரம ஏழைகளும் வாங்கி உடுத்துவதாக இந்திய மில் துணி இருக்கும் வகையில் தங்கள் உற்பத்திச் செலவு களைக் குறைத்து தேசத்தின் முயற்சிக்கு ஆதரவு அளிக்குமாறு வேண்டியது. வெளிநாட்டுத் துணிகளையும் நூலையும் தருவித்து விற்றுக்கொண்டிருப்பவர்கள், இனி தருவிப்பதை நிறுத்தி, கையிலிருக்கும் சரக்கை வெளிநாடுகளில் விற்றுவிட முயற்சி செய்து தேச மக்களுடன் ஒத்துழைக்கும்படியும் கேட்டுக்கொண் டது. நிறைவேறிய மூன்றாவது தீர்மானம், மதுபானங்கள், போதை வஸ்துக்களை உபயோகிப்பதற்கு எதிராகப் பொதுஜன அபிப்பிராயம் வளர்ந்து வருவதைக் குறித்தும், அமைதியான மறியலின் மூலம் அவற்றை எதிர்த்துப் போராடி வருவது பற்றி யும் காங்கிரஸின் திருப்தியைத் தெரிவித்துக்கொண்டது. அமைதியான முறையில் நடந்து வரும் மறியல் விஷயத்தில் அரசாங்கம் அக்கிரமமாகக் குறுக்கிடுமானால், அரசாங்கத்தின் உத்தரவை மீறி மறியல் செய்யுமாறு காங்கிரஸ் ஆலோசனை கூற நேரும் என்றும் அரசாங்கத்திற்கு எச்சரிக்கை செய்தது. மறியல் சம்பந்தமாகத் தீர்மானம் செய்ததில் தானா ஜில்லா போர்டு காட்டியிருக்கும் வழியை மற்ற போர்டுகளும், முனிசி பாலிடிகளும் பின்பற்றும்படி கேட்டுக்கொண்டது. மதுபானக் கடைகளை வைத்திருப்போர், விற்பனையைக் கைவிட்டுவிடும்படி கேட்டுக் கொண்டது. நான்காவது தீர்மானம், மலேகானிலும் அலிகாரிலும் அதிக ஆத்திரமூட்டப்பட்டதால் ஏற்பட்டதாயி னும் அங்கே நடந்துவிட்ட மிதமிஞ்சிய செயல்களுக்காக வருந்தி யது. ஒத்துழையாமைக்கு அத்தியாவசியமான பகுதியாக அகிம்சையை மக்கள் உணரும்படிச் செய்ய வேண்டும் என்று எல்லா காங்கிரஸ் ஸ்தாபனங்களையும் கேட்டுக்கொண்டது. தார்வார், மாதியாரி, குண்டூர் முதலிய இடங்களில் மக்களுக்கு ஆத்திரத்தை மூட்டக்கூடிய அக்கிரமங்கள் நடந்திருந்த போதி லும் அங்கே மக்கள் பூரணமான தன்னடக்கத்துடன் இருந்த தைக் குறித்து அம் மக்களை அ. இ. கா. கமிட்டி பாராட்டியது. அதிகாரிகள் அனாவசியமாகப் பல இடங்களிலும் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததால், இறந்தோரின் குடும்பங்களையும், காய மடைந்த, சிறையில் கஷ்டப்படும் குற்றமற்ற, வீரப் பிரஜைகளை யும் பாராட்டியும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. சர்க்காரின் அடக்குமுறையையும், சட்ட மறுப்பை ஆரம்பித்துவிட வேண் டும் என்று ஊழியர்களிடையே நியாயமான ஆர்வம் இருப்பதை யும் அ. இ. கா. கமிட்டி கவனித்தபோதிலும், காங்கிரஸுக்கு மக்களிடையே இருக்கும் செல்வாக்கிற்குச் சுதேசி வேலைத் திட் டமே ஒரு பரீட்சையாக இருந்து வருவதால் அது பூரணமாக நிறைவேறும் வரையில், அகிம்சைச் சூழ்நிலை ஏற்பட்டுவிட் டது என்பது நிச்சயமாகும் வரையில், சட்ட மறுப்பை நடத்து வதற்கில்லை என்றும் தீர்மானித்தது. என்றாலும், எந்த இடத்தி

லாவது, மாகாணத்திலாவது சட்ட மறுப்பு ஆரம்பமாவதை அனுமதிக்க இக்கூட்டம் கமிட்டிக்கு அதிகாரம் அளித்தது.

## முஸ்லிம் தலைவர்கள் கைது

ஜுலை 31-ஆம் தேதி பம்பாயில் மகாத்மா காந்தி, அந்நியத் துணிகளை ஏராளமாகக் குவித்துத் தீயிட்டதைப் பம்பாய் மக்கள் கண்டு களித்தனர். மறுநாள் லோகமான்ய திலகர் இறந்த வருட தினம். அந்நாளை நாடெங்கும் மக்கள் கொண்டாடினர். மகாத்மா காந்தியும் மௌலானா முகமது அலியும் பீகார், அஸ்ஸாம், சென்னை சுற்றுப் பிரயாணத்திற்குப் புறப்பட்டார்கள். ஆகஸ்டு மாதத்தில் மலையாளத்தில் மாப்பிள்ளை கலவரங்கள் ஆரம்பமாயின. அது பல மாதகாலம் வரையில் அடக்கப்படவில்லை. அக் கலகக்காரர்களைச் சாந்தப்படுத்துவதற்காக மகாத்மா காந்தியும் மௌலானா முகமது அலியும் கல்கத்தாவிலிருந்து மலையாளத்திற்குப் போய்க்கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்கள் அவ்விதம் போக அனுமதிக்கப்படவில்லை. 1921 செப்டம்பர் 14-ஆம் தேதி, விசாகப்பட்டணம் ஜில்லா மாஜிஸ்டிரேட் பிறப்பித்திருந்த வாரண்டின் பேரில் வால்டேர் ஸ்டேஷனில் மௌலானா முகமது அலியைக் கைது செய்துவிட்டனர். அமைதியை நிலைநாட்டுவதற்காக அவரை ஏன் சிறை வைக்கக்கூடாது என்பதற்குக் காரணம் காட்டுமாறு 107, 108-வது பிரிவுகளின் கீழ் அவருக்கு உத்தரவும் பிறப்பிக்கப்பட்டிருந்தது. ஆனால், 17-ஆம் தேதி ஒரு கராச்சி வாரண்டின் மீது அவரைத் திரும்பவும் கைது செய்தனர். தனி ரெயிலில் அவரைக் கொண்டுபோய்விட்டனர். மௌலானா ஷவுகத் அலியைப் பம்பாயிலும், டாக்டர் கிச்சுலுவைச் சிம்லாவிலும், பீர்குலாம் முஜாதிக்கைச் சிந்துவிலும் கைது செய்தனர். மௌலானா நாஜிர் அகமது, ஹாஸன் அகமது, ஸ்ரீ சங்கராச்சாரியார் ஆகியவர்களையும் கைது செய்தார்கள். அதிக மதிப்பு வாய்ந்த ஐந்நூறு முஸ்லிம் பக்தர்கள் விடுத்த பத்வாவை அடிப்படையாகக் கொண்டு முஸ்லிம்கள் ராணுவத்தில் சேவை செய்ய வேண்டாம் என்று முஸ்லிம்களைக் கேட்டுக்கொண்டு கராச்சி கிலாபத் மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானத்தின் காரணமாகவே இவர்களைக் கைது செய்தார்கள் என்று தெரிந்தது. செப்டம்பர் 21-ஆம் தேதி மத்திய கிலாபத் கமிட்டியும், ஜெமியத் உல்-உலேமாவும் டில்லியில் ஹக்கீம் அஜ்மல்கானின் தலைமையில் நடந்தது. முஸ்லிம்களிடையே வினியோகிப்பதற்கு அந்தப் பத்வாவைத் திரும்பவும் அச்சிடுவது என்றும், கராச்சி தீர்மானத்தைத் திரும்பவும் கூறுவது என்றும் முடிவு செய்தனர். நாடு முழுவதும் நூற்றுக்கணக்கான பொதுக்கூட்டங்கள் நடந்தன. அக்கூட்டங்களிலிருந்த ஒவ்வொருவரும் கராச்சித் தீர்மானத்தின் ஒவ்வோர் சொல்லையும் கூறினர். அக்டோபர் 4-ஆம் தேதி மகாத்மா காந்தியும், ஐம்பது பிரபல காங்கிரஸ் தலைவர்களும்

ஓர் அறிக்கையை வெளியிட்டனர். அரசாங்கத்தின் ஸிவில், ராணுவ உத்தியோகங்களில் இருப்பது சரியா, இல்லையா என்பதைக் குறித்து அபிப்பிராயம் கூற ஒவ்வொரு பிரஜைக்கும் உரிமை உண்டு என்பதை அந்த அறிக்கை வற்புறுத்தியது. அரசாங்க ஆட்சி முறை, இந்தியாவின் பொருளாதாரத்தையும் ஒழுக்கத்தையும் நாசப்படுத்தியிருக்கிறது; ராஜீய அவமதிப்பை உண்டாக்கியிருக்கிறது; உள்நாட்டில் மக்களின் தேசீய அபிலாஷைகளை நசுக்கவும், இந்தியாவுக்கு ஒரு தீங்கையும் செய்யாத மற்ற நாடுகளின் சுதந்திரத்தைப் பறிக்கவும் இந்த ஆட்சி முறை தனது போலீஸையும் ராணுவத்தையும் உபயோகிக்கிறது; ஆகையால், இத்தகைய ஆட்சி முறையின் கீழ் ஸிவில், ராணுவத்தில் உத்தியோகம் வகிப்பது இந்தியரின் கௌரவத்திற்குக் குறைவானது என்பதே தங்கள் அபிப்பிராயம் என்றும் அந்த அறிக்கையில் மேலும் கூறியிருந்தார்கள். அரசாங்கத்துடன் கொண்டிருக்கும் தொடர்பை ஒவ்வொரு இந்திய சிப்பாயும், ஸிவில் சிப்பந்தியும் துண்டித்துக் கொண்டு வேறு ஏதாவது ஜீவனோபாயத்தைத் தேடிக்கொள்ள வேண்டியது அவர்கள் கடமை என்பதே தங்கள் அபிப்பிராயம் என்றும் அறிக்கை கூறியது.

## விசாரணையும் பிறகும்

அலி சகோதரர்கள், மற்றவர்கள்மீது வழக்கு விசாரணை கராச்சியில் நடந்தது. இதில் ஸ்ரீ சங்கராச்சாரியார் விடுதலையானார். மற்றவர்களுக்கு இரண்டு வருட கடுங்காவல் தண்டனை விதித்தார்கள். மதக்கோட்பாட்டுக்கு விரோதமாக நடக்கும் ஓர் அரசாங்கத்தின் கீழ் வேலை பார்ப்பது தங்கள் மதப்படி தடுக்கப்படுகிறது என்றும், எனவே அரசாங்கத்தில் ஊழியம் செய்யாதிருக்கும்படி தங்கள் மதத்தினரைக் கேட்டுக்கொள்ள வேண்டியது தங்கள் கடமை என்றும், விசாரணையின்போது இத்தலைவர்கள் கூறினர். இதற்கு மாறாக, மத சம்பந்தமில்லாத சட்டங்கள் எதுவாக இருந்தபோதிலும் அவ்விதம் பிரசாரம் செய்ய வேண்டியது தங்களுடைய மத தருமம் என்றும் கூறினார்கள்.

காங்கிரஸ் காரியக்கமிட்டி அக்டோபர் 5-ஆம் தேதி பம்பாயில் நடந்தது. முன்னாள் மாலை மகாத்மா காந்தியும் மற்ற தலைவர்களும் வெளியிட்டிருந்த அறிக்கையையே காரியக் கமிட்டியும் ஊர்ஜிதம் செய்தது. வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்து இறங்கும் நாளன்று ஹர்த்தாலை அனுசரிக்குமாறும், இந்தியாவில் அவர் போகும் பல இடங்களிலும் நடக்கும் பொது வரவேற்புகளைப் பகிஷ்கரித்துவிடுமாறும் காரியக் கமிட்டி பொது மக்களைக் கேட்டுக்கொண்டது.

## டில்லியில் அ. இ. கா. கமிட்டி கூட்டம்

நவம்பர் 4-ஆம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி டில்லியில் கூடியது. ஸிவில் ராணுவ அரசாங்க உத்தியோகத்தி லிருப்போரின் கடமையைக் குறித்து காரியக் கமிட்டி செய்த தீர்மானம் அங்கீகரிக்கப்பட்டது. ஒவ்வொரு மாகாணமும் அதன் சொந்தப் பொறுப்பில் வரி கொடாமை உள்ளிட்ட சட்ட மறுப்பை ஆரம்பிக்க இக்கமிட்டி அதிகாரமளித்தது. ஆனால், இதற்குச் சில நிபந்தனைகளையும் விதித்தது. தனிப்பட்டவரின் சட்ட மறுப்பாக இருந்தால், அப்படிச் செய்யும் தனிப்பட்டவர்களுக்குக் கையி னால் நூற்பது தெரிந்திருக்க வேண்டும்; வேலைத்திட்டத்தில் தமக்குள்ள பகுதியை அவர் நிறைவேற்றியிருக்க வேண்டும்; சமூக ஒற்றுமையில் நம்பிக்கையுள்ளவராக அவர் இருக்க வேண் டும்; அகிம்சையை முற்றிலும் அத்தியாவசியமானதாகக் கொண் டிருக்க வேண்டும்; அவர் ஹிந்துவாக இருந்தால், தீண்டாமை தேசீயத்திற்கு இழுக்கு என்பதை தமது சொந்த நடத்தையின் மூலம் காட்டிக்கொள்ளுபவராக இருக்க வேண்டும். பொதுஜன சட்ட மறுப்பை நடத்துவதாக இருந்தால், எந்தப் பகுதியில் அது ஆரம்பிக்கப்படுகிறதோ அப்பகுதியின் பெரும்பாலான மக்கள், பூரண சுதேசியை மேற்கொண்டவர்களாகவும், ஒத் துழையாமையின் மற்ற முறைகளையெல்லாம் நம்பி அனுசரிப்ப வர்களாகவும் இருக்க வேண்டும். சட்ட மறுப்புச் செய்கிறவர் களும் அவர்களுடைய குடும்பத்தினரும், பொதுஜன நிதியி லிருந்து உதவி கிடைக்கும் என்று எதிர்பார்க்கக் கூடாது. ஆனால் சிலர் விஷயத்தில் இதில் விதிவிலக்குச் செய்ய காரியக் கமிட்டிக்கு அ. இ. கா. கமிட்டி அதிகாரம் அளித்தது.

## இளவரசர் விஜயமும் ஹர்த்தாலும்

*1921* நவம்பர் *17*-ஆம் தேதி வேல்ஸ் இளவரசர் பம்பாயில் வந்திறங்கினர். சுதேச மன்னர்கள், அதிகாரிகள், ஐரோப்பியர் கள், ஆங்கிலோ-இந்தியர்கள், பார்ஸிகள், மற்ற பணக்காரர் கள் எல்லோரும் அவரை வரவேற்றனர். ஆனால், மத்தியதர வகுப்பினரும் ஏழைகளும் அவர் விஜய வரவேற்பைப் பகிஷ்கரித் தார்கள். பொதுஜனக் கூட்டத்தினர் கட்டுக்கடங்காதவர்களாகி வரவேற்புக்குச் சென்றவர்களைத் தாக்கத் தலைப்பட்டனர். சில்லரைச் சச்சரவாக ஆரம்பமானது பெருங் கலவரமாக முடிந்து விட்டது. கூட்டத்தினர், டிராம் வண்டிகள், மதுபானக் கடை கள் ஆகியவைகளைக் கொளுத்திவிட்டனர். சில பார்ஸிப் பெண் களையும் தாக்கிவிட்டார்கள். அச்சமயம் மகாத்மா பம்பாயில் இருந்தார். நகரின் வேறு ஒரு பகுதியில் பொதுக்கூட்டத்தில் அப்பொழுது பேசிக் கொண்டிருந்தார். கலவரம் மூண்டதை அறிந்ததும் மக்களைச் சாந்தப்படுத்த அங்கே ஓடோடியும் வந் தார். கலவரங்களைக் கண்டு அதிக மனவேதனை அடைந்தார்.

கலவரம் நிற்கும் வரையில் உண்ணுவிரதம் இருப்பதென்றும் உறுதி கொண்டார். கலவரம் பல நாட்கள் நடந்தது. பலர் காயமடைந்தும், பலர் மாண்டும் போயினர். அப்பொழுது சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு இல்லை என்று மகாத்மா திட்டமான முடிவுக்கு வந்துவிட்டார். ஏனெனில், அதற்கு வேண்டிய சூழ்நிலை இல்லை. அகிம்சா தருமம் மக்கள் மனதில் போதிய அளவுக்கு இடம் பெறவில்லை. மற்ற நகரங்களிலும் கிராமங்களிலும் நடந்த ஹர்த்தால் எந்தவிதமான சம்பவங்களுமில்லாமல் நடந்தது. அன்று ஒரு கடையையும் திறக்கவில்லை; வாடகை வண்டிகள் எவையுமே அன்று இல்லை; வண்டிப் போக்குவரத்து இல்லாததனால் அதிகாரிகளும் சிப்பந்திகளும் வர முடியாததால் சில அரசாங்கக் காரியாலயங்களைக்கூட அன்று மூடிவிட வேண்டியதாயிற்று.

## அதன் வெற்றியும் பலன்களும்

இந்த ஹர்த்தாலின் வெற்றி, பலதரப்பட்ட ஐரோப்பியர்களிடையேயும் பெருந் திகிலை உண்டாக்கிவிட்டது. அரசாங்கம் உடனே தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வங்காள ஐரோப்பிய வர்த்தகர் சங்கம் தீர்மானம் நிறைவேற்றியது. இளவரசரின் விஜய சம்பந்தமாக எதிர்ப்பும் ஆட்சேபமும் பலமாக இருந்தும் பிடிவாதமாக அவர் வரும்படி செய்த லார்டு ரீடிங்கின் இந்திய அரசாங்கம், அதிக ஏமாற்றம் அடைந்து துப்பாக்கி முனையைக் கொண்டு இளவரசருக்கு வரவேற்பு கிடைக்கும்படிச் செய்துவிட முயன்றது. கிலாபத், காங்கிரஸ் தொண்டர் படைகளும், அது போன்ற ஸ்தாபனங்களும் 1908-ஆம் வருட கிரிமினல் சட்டத் திருத்த மசோதாவின்படி சட்ட விரோதமானவை என்று வங்காள சர்க்கார் நவம்பர் 19-ஆம் தேதி உத்தரவு பிறப்பித்தது. இச்சட்டம் அராஜக ஸ்தாபனங்களையும் ரகசிய சங்கங்களையும் அடக்குவதற்கு என்று கொண்டு வரப்பட்டதாகும். ஒத்துழையாமைத் தலைவர்கள் ஓர் அறிக்கையை வெளியிட்டார்கள். தொண்டர்கள் ஸ்தாபனங்கள், சட்டத்தையும் அமைதியையும் காப்பதில் குறுக்கிடாமலிருந்ததும் அவை சட்ட விரோதமானவைகளாக்கப்பட்டிருப்பதால், அரசாங்கத்திற்கு ஒரு சவால் விடுவதை முன்னிட்டு தாங்களே அத்தொண்டர்கள் ஸ்தாபனங்களின் உறுப்பினர்களாகப் பதிவு செய்து கொள்ளுவதாக அந்த அறிக்கையில் தலைவர்கள் கூறினர். அத்தகைய சட்ட மறுப்பாளர்களின் பெயர்களைக் கொண்டு ஒரு பெரிய பட்டியல் பிரசுரிக்கப்பட்டது. இளவரசரின் விஜயத்தை முன்னிட்டு டிசம்பர் 25-ஆம் தேதி பூரண ஹர்த்தால் தினமாக அனுசரிக்கும்படியும் கோரிக்கையை வெளியிட்டார்கள். தொண்டர்கள் ஸ்தாபனங்கள் சட்ட விரோதமானவை என்று டில்லி, பஞ்சாப், ஐக்கிய மாகாணம், அஸ்ஸாம், பீகார் ஆகிய மாகாணங்களிலும் அரசாங்கங்கள் உத்தரவு பிறப்

பித்தன. அங்கேயும் தலைவர்கள் சவாலை ஏற்றுக்கொண்டனர். பல இடங்களில் ராஜநிந்தனைக் கூட்டச் சட்டம் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. 22, 23-ஆம் தேதிகளில் காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டம் பம்பாயில் நடந்தது. இப்பொழுது இருக்கும் தொண்டர் படைகளையெல்லாம் ஒரேவிதமான கட்டுதிட்டங்களின் கீழ் கொண்டு வருவதை முன்னிட்டு ஒவ்வொரு மாகாணத்திலும் தொண்டர்கள் போர்டை அமைக்கும்படி மாகாண காங்கிரஸ் கமிட்டிகளைக் கேட்டுக்கொண்டு காரியக் கமிட்டி தீர்மானம் செய்தது. இதன் சம்பந்தமாக நகல் விதிகளையும் அறிவித்தது. ஒரே மாதிரியான பிரதிக்ஞைப் பத்திரத்திலும் தொண்டர்களிடமிருந்து கையெழுத்து வாங்க வேண்டும் என்றும் காரியக் கமிட்டி கூறியது. அதில் அகிம்சை முக்கியமாக வற்புறுத்தப்பட்டதோடு, மேலிருப்பவர்களின் உத்தரவுகளுக்குப் பணிந்து நடப்பதாக உறுதிமொழியளிக்க வேண்டும்; கடமையை நிறைவேற்றுவதில் எந்த அபாயம் வந்தாலும், அதற்கும் தயாராக இருப்பதாகவும் தொண்டர்கள் பிரதிக்ஞை செய்ய வேண்டும் என்றும் யோசனை கூறியது.

## சாதாரண உரிமைகளுக்கும் ஆபத்து

டிசம்பர் முதல் வாரத்தில் அடக்கு முறை தீவிரமாக ஆரம்பமாயிற்று. பண்டித மோதிலால் நேரு, ஸ்ரீ ஸி. ஆர். தாஸ், லாலா லஜபதி ராய், மௌலானா அபுல் கலாம் ஆஜாத், ஸ்ரீ எஸ். ஈ. ஸ்டோக்ஸ் முதலிய பல தலைவர்களும் ஏராளமான தொண்டர்களும், அரசாங்க உத்தரவை மீறியதாகக் கூறிக் கைது செய்யப்பட்டனர். நாடு முழுவதிலும் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் தங்களைக் கைது செய்யும்படி முன்வந்தனர். அவர்களைக் கைது செய்து சிறைத் தண்டனையும் விதித்தார்கள். மிதவாத வட்டாரங்களில்கூட அதிகப் பரபரப்பு ஏற்பட்டது. முக்கியமான மிதவாதத் தலைவர்களும், ஸ்தாபனங்களும் அரசாங்கத்திற்கு ஆட்சேபணையை அனுப்பினார்கள். பண்டித மதன மோகன மாளவியா, வைஸ்ராயிடம் தூது சென்றார். நிலைமையைச் சரியான வகையில் சமாளிக்க வேண்டும் என்றும், இதற்கான வழிகளையும், சாத்தியமான யோசனைகளையும் கூறுவதற்காக மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய வட்டமேஜை மகாநாடு ஒன்றை நடத்த வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார். கிரிமினல் சட்டத் திருத்தச் சட்டத்தின்படி பிறப்பித்திருக்கும் உத்தரவையும், ராஜ நிந்தனைக் கூட்டச் சட்டத்தையும் ரத்து செய்து, இச்சட்டங்களின்படி கைதியாகியிருப்போரையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும் தூது கோஷ்டி வைஸ்ராயைக் கேட்டுக் கொண்டது. ஆனால், இந்த யோசனைகளை ஏற்றுக் கொள்ள வைஸ்ராய் மறுத்து விட்டார். அடக்குமுறை தொடர்ந்து நடந்துகொண்டே போயிற்று. இவைகளுக்கு நடுவே சுற்றுப்பிரயாணம் செய்து வந்த இளவரசர், எங்கும் பொதுஜன

வரவேற்பு இல்லாத நிலைமையில் டிசம்பர் 24-ஆம் தேதி கல்கத்தா வந்தார். அப்பொழுது அந்நகர் பூரணமான ஹர்த்தாலை அனுசரித்தது. அதே வாரத்தில் அகமதாபாத்தில் காங்கிரஸ், கிலாபத், முஸ்லிம் லீக் ஆகிய மூன்றும் கூடின.

## அகமதாபாத் காங்கிரஸ்

அகமதாபாத்தில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த ஸ்ரீ ஸி. ஆர். தாஸ் சிறையிலடைபட்டுவிட்டதால் அவருக்குப் பதிலாக ஹக்கீம் அஜ்மல் கானை தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். இந்த மகாநாடு அதிக நேரம் நடக்கவில்லை. ஒரே ஒரு தீர்மானமே அதில் நிறைவேறியது. பல மகாநாடுகளிலும் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருந்த ஒத்துழையாமைத் தீர்மானத்தை இந்தக் காங்கிரசும் திரும்ப ஊர்ஜிதம் செய்ததோடு, அரசாங்கம் அடக்குமுறைக் கொள்கையைத் தீவிரமாக அனுசரித்து வருவதால், தொண்டர் ஸ்தாபனங்களில் சேர்ந்து கொள்ளுவதன் மூலம் அமைதியாகவும் ஆர்ப்பாட்டம் எதுவுமில்லாமலும் கைதியாவதற்குத் தயாராகும்படியும் எல்லோரையும் கேட்டுக்கொண்டது. தடை விதித்திருந்தாலும் சில கட்டுதிட்டங்களுடன் கமிட்டிக் கூட்டங்களையும் பொதுக் கூட்டங்களையும்கூட நடத்தும்படியும் காங்கிரஸ் தீர்மானம் கேட்டுக்கொண்டது. ஆயுதப் புரட்சிக்குப் பதிலான நாகரிகமான ஒரே ஒரு முறை சட்ட மறுப்புத்தான் என்றும் காங்கிரஸ் கூறியது.* அகிம்சை முறைகளில் பொது மக்கள் போதிய அளவு பயிற்சி பெற்றிருப்பார்களானால், தனிப்பட்டவர்கள், பொதுஜன சட்ட மறுப்புக்கு ஏற்பாடுகளைச் செய்யும்படியும் காங்கிரஸ் ஊழியர்களை மகாநாடு கேட்டுக்கொண்டது. தேசீய கல்வி ஸ்தாபனங்களைச் சேர்ந்த மாணவர்களும் ஆசிரியர்களும் தேசீயத் தொண்டர் படையில் சேரும்படியும் அறிவித்தது. இன்னும் ஏராளமான காங்கிரஸ் ஊழியர்கள் கைது செய்யப்பட்டு விடுவார்களாகையால், சாதாரண காங்கிரஸ் யந்திரம் அப்படியே இருந்து வர வேண்டுமாகையால், மகாத்மா காந்தியை ஏக நிர்வாக அதி

* 'காந்தியின் வாழ்க்கை' என்று ஸ்ரீ டோக் எழுதிய நூலுக்கு லார்டு ஆம்தில் எழுதிய முன்னுரையில் வருமாறு குறிப்பிட்டார்: "தவிர்க்க முடியாததாக ஆகும்போது ராஜீய பிற்போக்காளரும்கூட இம்முறையை அங்கீகரித்தே ஆக வேண்டும். ஓர் உரிமையைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகவும், மானக்கேட்டைப் போக்கிக் கொள்ளுவதற்காகவும் இந்திய சமூகம் போராடிக்கொண்டிருக்கிறது. ஆங்கிலேயர்களாகிய நாம், அதற்காக அவர்கள் மீது குறைகூற முடியுமா? இவர்களுக்கு வாக்குரிமையோ, பிரதிநிதித்துவமோ இல்லை. பலாத்காரத்தையும் குழப்பத்தையும் தவிர இவர்களுக்குள்ள ஒரே முறை சாத்விக எதிர்ப்புதான். இதற்காக அவர்கள்மீது நாம் குறை சொல்ல முடியுமா? அவர்களைக் குறை கூறுகிறவர்கள், இதே நிலைமையில் தாங்கள் இருந்தால் என்ன செய்வார்கள் என்பதைச் சொல்லட்டும். சட்டத்தை மதிக்கவேண்டும் என்பதற்காக, உரிமைகள் பறிக்கப்படுவதற்கும் சமூக அவமதிப்புக்கும் நம்மில் ஒருவராவது எதிர்க்காமல் பணிவுடன் உடன்பட்டுக் கொண்டிருப்போமா?"

காரியாகவும் காங்கிரஸ் நியமித்தது; அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முழு அதிகாரத்தையும் அவருக்கே காங்கிரஸ் அளித்தது. அவசர நிலைமை ஏற்படும்போது தமக்குப் பின்னல் தலைவராக இருக்கவேண்டியவரையும் மகாத்மா காந்தியே, நியமித்துக்கொள்ளலாம். ஆனல், மகாத்மா காந்தியோ அவருக்குப் பின்னல் வருகிறவரோ, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முன் அனுமதி இல்லாமல் அரசாங்கத்துடன் சமரசத்திற்கு வரக்கூடாது. காங்கிரஸின் லட்சியத்தை மாற்றி விடக்கூடாது என்றும் தீர்மானம் கூறியது. பூரண சுயேச்சையே காங்கிரஸின் லட்சியம் என்று மாற்றிவிட வேண்டும் என மௌலானு ஹஸரத் மோஹானி ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். ஆனல், அது பெரும்பான்மை வாக்குகளால் நிராகரிக்கப் பட்டுவிட்டது.

## தீவிரமான அடக்குமுறை

அதற்குப் பிறகு அரசாங்கத்தின் அடக்குமுறை மேலும் அதிக ஆவேசத்துடன் நடந்து வந்தது. ஆயிரக்கணக்கான தொண்டர்கள் சிறைக்கு அனுப்பப்பட்டனர். பல மாகாணங்களிலும் அநேக தலைவர்களும் சிறைத் தண்டனை அடைந்து சிறையில் இருந்தார்கள். இந்த மாதங்களின் சரித்திரம், ஒரு பக்கத்தில் தங்குதடையின்றிக் கைது செய்து சிறையிலடைப்பதையும், மற்ருேர் பக்கத்தில் வீரமுள்ள அஞ்சாத தேச பக்தர்கள், அந்த சவாலை ஏற்றுக்கொண்டதையும் பற்றிய சரித்திரமே ஆகும். நாட்டு மக்கள் சளைக்காமல் நின்று போராடினர்கள் என்றே சொல்ல வேண்டும். 25,000 ஆண்களின், பெண்களின் தியாகத்தின் பலன் இன்னும் கண்ணுக்குப் புலனகாமலிருந்த போதிலும், இந்திய மக்களின் இப்போராட்டம் எவரும் பெருமைப் பட்டுக் கொள்ள வேண்டியதாகும்.

## சட்ட மறுப்பும் சௌரி சௌராவும்

பிப்ரவரி மாதத்தில் கோரக்பூர் ஜில்லாவில் சௌரி சௌரா என்ற இடத்தில் மோசமான கலவரங்கள் நடந்தன. மகாத்மா காந்தி அச்சமயத்தில் பொதுஜன சட்ட மறுப்பை நடத்துவதற்காக பர்டோலிக்குப் போய்க் கொண்டிருந்தார். பொதுஜன சட்ட மறுப்பை ஆரம்பிக்கப் போவதைக் குறித்து வைஸ்ராய்க்கும் அரசாங்கத்திற்கும் மகாத்மா கடிதமும் எழுதிவிட்டார். ஆனல், சௌரி சௌரா சம்பவத்தின் காரணமாக சட்ட மறுப்பை நிறுத்தி விட்டார். பிப்ரவரி 11-ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி பர்டோலியில் கூடியது. சட்ட மறுப்பையும் நிறுத்தி வைத்தது. அகிம்சைச் சூழ்நிலையை உண்டாக்குவதிலேயே அதிக கவனஞ் செலுத்துமாறு எல்லா காங்கிரஸ் ஸ்தாபனங்களையும் காரியக் கமிட்டி கேட்டுக்கொண்டது. பஞ்சா

யத்துக்களை அபிவிருத்தி செய்து, தேசீயக் கல்வி ஸ்தாபனங்களைக் காங்கிரஸின் கீழ் அமைத்து, காங்கிரஸுக்கு அங்கத்தினர்களைச் சேர்த்து, ராட்டையை அதிகமாக எல்லோரும் உபயோகிக்கும்படிச் செய்து கதர் உற்பத்தியை அதிகரித்து, தீண்டாமையைப் போக்கி ஒடுக்கப்பட்டவர்களை உயர்த்தி, காங்கிரஸ் வேலைகளைச் செய்வதற்காகத் திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பண வசூல் செய்து காங்கிரஸைப் பலப்படுத்தும்படியும் எல்லோரையும் காரியக் கமிட்டி கேட்டுக்கொண்டது. சௌரி சௌரா சம்பவத்திற்குப் பிராயச்சித்தமாக மகாத்மா காந்தி ஐந்து நாள் உண்ணாவிரதம் இருந்தார். பிப்ரவரி 24-ஆம் தேதி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி டில்லியில் நடந்தது. பர்டோலியில் காரியக் கமிட்டி செய்த தீர்மானத்தை அங்கீகரித்தது. இக்கூட்டம் சட்ட மறுப்பை நிறுத்தி வைத்து விட்டதால், ஒத்துழையாமைக்காரர்களிடையே அபிப்பிராயபேதம் அதிகமாயிற்று. பர்டோலி தீர்மானத்திற்காகக் காரியக் கமிட்டி மீது கண்டனத் தீர்மானம் ஒன்றை மகாராஷ்டிர கோஷ்டியினர் கொண்டு வந்தார்கள். ஆனால், அத்தீர்மானம் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தோற்றுவிட்டது. சட்ட மறுப்பை ஒத்தி வைத்துவிட்டதால், அநேக ஊழியர்கள் அதிருப்தியடைந்தார்கள். ஆக்க வேலைத் திட்டத்தை மாத்திரம் நிறைவேற்றிக் கொண்டுபோவது என்பது, மக்களின் உறுதியையும், உற்சாகத்தையும் சீர்குலைத்து வருவதாகும் என்றும் அவர்கள் கருதினர்.

## மகாத்மா கைதியானதும் அதன் பிறகும்

நிலைமை இவ்வாறு இருந்துகொண்டிருக்கையில் அரசாங்கம், மார்ச் 10-ஆம் தேதி மகாத்மா காந்தியைக் கைது செய்தது. அவர்மீது ராஜநிந்தனைக் குற்றம் சாட்டி ஆறு வருட தண்டனையும் விதித்தார்கள். கோடிக்கணக்கான மக்களை நடத்திச் சென்ற மகாத்மாவை மக்களிடமிருந்து நீக்கி விட்டதால், இந்தியாவுக்கு வழி காட்டுவதற்கு உலகத் தலைவரின் சேவை கிடைக்காது போயிற்று. பர்டோலியில் வகுத்த ஆக்க வேலைத் திட்டத்தை நடத்திக்கொண்டு போக காங்கிரஸ் கமிட்டிகள் முயற்சி செய்து வந்தன. பிறகு ஜூன் 7-ஆம் தேதி லட்சுமணபுரியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடந்த போது, அப்பொழுதிருந்த காங்கிரஸ் திட்டத்தைக் குறித்துப் பலர் தங்கள் அதிருப்தியைத் தெரிவித்துக் கொண்டனர். சட்ட மறுப்பை ஆரம்பித்துவிட வேண்டும் என்றார்கள். ஆனால், ஆக்க வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதில் முழு கவனத்தையும் செலுத்துமாறு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தேச மக்களைக் கேட்டுக்கொண்டது. சட்ட மறுப்பு ஆரம்பிப்பதற்கு நாடு தயாராக இருக்கிறதா என்பதைக் குறித்துப் பரிசீலனை செய்து அடுத்த கூட்டத்தில் அறிவிப்பதற்காக ஒரு கமிட்டியைத் தலைவர் நியமிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டது.

அந்த இரண்டு ஆண்டுகளைப் பற்றிய சரித்திரத்தை எண்ணிப் பார்த்தால், பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்ட பிறகு என்றுமே ஏற்பட்டறியாத வகையில், நாடு முழுவதிலுமே ஓர் எழுச்சி ஏற்பட்டது என்பதைக் காணலாம். நாகபுரி காங்கிரஸ் நடந்த சில மாதங்களுக்கெல்லாம், சுயராஜ்யத்தின் செய்தி பரவாத கிராமமோ, குக்கிராமமோ இந்நாட்டில் இல்லை என்றே சொல்லலாம். மக்களிடையே இருந்த திக்கற்ற, மன முடைந்து போயிருந்த உணர்ச்சிக்குப் பதிலாக, நாட்டின் கதியில் புதிய நம்பிக்கை எல்லோர் உள்ளத்திலும் தோன்றியது. பொது ஜனங்கள் தங்கள் பலத்தை உணர ஆரம்பித்தார்கள். ஆயுத பலத்தின் காரணமாக அதிக பலமுள்ளதாக அரசாங்கம் தோன்றியபோதிலும், விடுதலை அடைந்தே தீருவது என்று உறுதி கொண்டுவிட்ட, சுதந்திரத்திற்காகத் துன்பங்களையும் அனுபவிக்கத் துணிந்துவிட்ட மக்களின் காலில் அரசாங்கம் பணிந்து விழாமல் இருக்கவே முடியாது என்பதையும் கண்டு கொண்டு விட்டனர். தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் கஷ்டங்களும் அவமதிப்புகளும் தாங்களாகத் தேடிக்கொண்டவையே என்பதை மக்கள் அறிந்தார்கள். தாங்கள் ஒன்றுபட்டு உறுதியுடன் நின்ற மாத்திரத்தில் அரசாங்கம் அடி பணிந்தே ஆகவேண்டும் என்பதையும் அறிந்தார்கள். இதற்கு ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள், யூதர்கள் முதலிய எல்லா சமூகத்தினரும் ஒன்றுபட வேண்டியது அத்தியாவசியமான காரியம். கிராமத்தையும் கிராமத்தையும், ஜில்லாவையும் ஜில்லாவையும், மாகாணத்தையும் மாகாணத்தையும், எல்லாவற்றையுமே ஐக்கியமாக இணைப்பதற்கு பஞ்சாயத்துக்களை அமைக்க வேண்டியதன் முக்கியத்தை உணரும்படி இந்த இயக்கம் செய்தது. வாழ்க்கையின் அத்தியாவசியமான ஒரு தேவையான உடை விஷயத்தில் இருந்து வரும் அடிமைத்தனத்திலிருந்து நாட்டை விடுவிப்பதற்குக் கதரை உற்பத்தி செய்வதையும் கதர்ப் பிரசாரம் செய்வதையும் இந்த இயக்கம் மிக முக்கியமாக்கியது. மதுபானத் தீமை, தீண்டாமைப் பாவம் ஆகியவைகளைப் போக்கி, மக்களில் ஏராளமானவர்களை மிருகங்களிலும் கேவலமாக நடத்தும் அக்கிரமத்தைப் போக்குவதற்கு இந்த இயக்கம் செய்த சேவையும் கொஞ்சம் அல்ல. முக்கியமாக இந்த இயக்கம், இந்திய மக்களைப் பலப்படுத்தித் தூய்மைப்படுத்தும் இயக்கமாகும். மக்களின் ஒழுக்க பலத்தையும், இந்திய மக்களின் உயர்வையுமே இந்த இயக்கம் மேலும் மேலும் நம்பியது. இயல்பாகவே பலவீனமானதான ஆயுத பலத்தைவிட, மக்கள் நோக்கத்தின் தூய்மையினுலும், முறைகளின் தூய்மையினுலும் அதிக பலமானதும் உயர்வானதும் இதுவே. ஆகையால், இந்த இயக்கமே இந்திய மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தது.........

31 ஆகஸ்டு, 1922. —ராஜேந்திரப் பிரஸாத்

# 3

# காந்திஜியின் 'ஹோம் ரூல்' அறிக்கை

''வெளிப்படையாகவும் முற்றிலும் ராஜீய நோக்கத்துடனும் உள்ள ஒரு ஸ்தாபனத்தில் நான் சேர்ந்திருப்பது, ஒரே சீரான எனது வாழ்க்கையிலிருந்து மாறுபட்ட ஒரு நிலையேயாகும். எனினும், நண்பர்களுடன் நான் கலந்து தீர்க்காலோசனை செய்த பின்னரே, அகில இந்திய ஹோம் ரூல் லீகில் நான் சேர்ந்து, அதன் தலைவர் பதவியையும் ஏற்றுக்கொண்டுள்ளேன். நான் எந்த ராஜீய ஸ்தாபனத்திலும் சேரக் கூடாதென்றும், அவ்விதம் சேர்ந்தால் எனக்குள்ள தனிப்பெருமையின் சிறப்பை நான் இழந்துவிட நேருமென்றும், நான் கலந்தாலோசித்த சில நண்பர்கள் கூறினர்கள். அந்த எச்சரிக்கை எனக்கு மிகவும் முக்கியமானதாகத் தோன்றியது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதே சமயம், என்னை ஹோம் ரூல் லீக் அங்கீகரித்தால், அச்சங்கத்துடன் கலந்துகொள்ளாமல் இருப்பது தவருகுமென்று எனக்குத் தோன்றியது. ஏனெனில், நான் விசேஷ அனுபவம் பெற்றுள்ள ஒரு துறையின் முன்னேற்றத்திற்காக அந்த ஸ்தாபனத்தை நான் உபயோகப்படுத்திக்கொள்ள முடியும். சாதாரணமாகக் கைக்கொள்ளும் மற்ற முறைகளைவிட எனது முறைகள், சீக்கிரமாகச் சிறந்த பலன்களைக் கொடுக்கும் என்பதையும் அனுபவத்திலிருந்து நான் தெரிந்துகொண்டிருந்தேன். ஹோம் ரூல் லீகில் சேருமுன், மாகாணத்திற்கு வெளியில் உள்ளவர்களின் அபிப்பிராயத்தை அறிந்துகொள்ள நான் முயற்சித்தேன். பம்பாய் மாகாணத்தில் உள்ள சக ஊழியர்களுடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது போல், வெளியில் உள்ளவர்களுடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்படும் வாய்ப்பு கிடைக்கவில்லை. சுதேசி, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, ஹிந்துஸ்தானியை நாட்டின் பொது பாஷையாக அங்கீகரித்தல், மொழிவாரியாக மாகாணங்களைப் பிரித்தல் ஆகியவையே நான் மேலே குறிப்பிட்ட துறைகளாகும். லீகின் உறுப்பினர்கள் என்னை ஆதரிக்கும்படி நான் செய்ய முடியுமாயின், அந்த நடவடிக்கைகளில் லீக் ஈடுபடும்படி செய்வேன். அதன் பயனுக, தேசத்தின் காலம், கவனம் இவற்றின் பெரும் பகுதி அந்த நடவடிக்கைகளுக்கே அர்ப்பணம் செய்யப்படும்.

''தேசீயப் புனருத்தாரணத்தின் எத்திட்டத்திலும், அரசியல் சீர்திருத்தங்கள் இரண்டாவது ஸ்தானத்தையே வகிக்கின்றன என்பதை நான் ஒளிவு மறைவின்றி ஒப்புக்கொள்ளுகிறேன். என்னுல் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகள் தேச மக்க

ளின் சக்தியைக் கவர்ந்துகொள்ளுமாயின், மிகத் தீவிர ராஜீய வாதிகள் விரும்பக்கூடிய எல்லா அரசியல் சீர்திருத்தங்களையும் அவை கொண்டுவந்துவிடும். நான் குறிப்பிட்டுள்ள நடவடிக்கைகள் வளர்ச்சி பெறுவதன் மூலம், பூரண சுயாட்சி பெறும் காலம் வரைவில் வரும். அந்த நடவடிக்கைகளை நான் நமது தேசீயத் திட்டத்தின் முன்னிலையில் வைத்துள்ளேன். அகில இந்திய ஹோம் ரூல் லீகை, எவ்விதத்திலும் ஒரு கட்சி ஸ்தாபனமாக நான் கருதவில்லை. நான் எந்தக் கட்சியையும் சேர்ந்தவனல்ல; இனியும் நான் எந்தக் கட்சியிலும் சேரமாட்டேன். லீகின் அமைப்புத் திட்டம் காங்கிரசுக்கு உதவி புரிவதாகவே இருக்கிறது என்பதை நான் அறிந்துள்ளேன். காங்கிரசை ஒரு கட்சி ஸ்தாபனமாக நான் கருதவில்லை. காங்கிரஸ், பிரிட்டிஷ் பார்லிமெண்டைப் போன்றது. பிரிட்டிஷ் பார்லிமெண்டில் எல்லாக் கட்சிகளும் இருக்கின்றன. சில சமயங்களில் ஒரு கட்சியோ அல்லது மற்றொரு கட்சியோ அதில் ஆதிக்கம் செலுத்துகிறதெனினும், அது ஒரு கட்சி ஸ்தாபனமல்ல. எல்லாக் கட்சியினரும் காங்கிரசை ஒரு தேசீய ஸ்தாபனமாகக் கொள்ளுவார்கள் என்று நான் நம்பத் துணிகிறேன். தேசத்தின் கொள்கையை உருவாக்குவதற்காக, எல்லாக் கட்சிகளும் தேசத்திற்கு வேண்டுகோள் விடுக்கலாம். அவர்கள் அவ்விதம் வேண்டுகோள் விடுப்பதற்கு, காங்கிரஸ், ஒரு மேடையாக அமையும். காங்கிரஸ் எந்தக் கட்சியிலும் சேராமல் தேசீய ஸ்தாபனமாக விளங்கும்படி செய்யும் வகையில், நான் ஹோம் ரூல் லீகின் கொள்கையை உருவாக்க முயற்சிப்பேன்.

"இங்கேதான்," நான் கைக்கொள்ளப் போகும் முறைகளைக் குறிப்பிட வேண்டியதாகிறது. தேசத்தின் அரசியல் வாழ்க்கையில் தயவு தாட்சண்யமின்றிச் சத்தியத்திற்கும் யோக்கியப் பொறுப்பிற்கும் இடம் அளிப்பது சாத்தியம் என்பதே எனது நம்பிக்கையாகும். எனது சட்ட மறுப்பு முறைகளை ஹோம் ரூல் லீக் பின்பற்ற வேண்டுமென நான் எதிர்பார்க்கமாட்டேன். என்றாலும், நம்முடைய சகல தேசீய நடவடிக்கைகளிலும் சத்தியத்தையும் அகிம்சையையும் அங்கீகரிக்கும்படி செய்ய என் சக்தி முழுவதையும் உபயோகிப்பேன். அப்போதுதான் அரசாங்கத்தினிடமும் அதன் முறைகளிடமும் நமக்குள்ள பீதியோ அல்லது சந்தேகமோ ஒழியும். இவ்விஷயத்தை இதற்கு மேல் விவரித்துக்கொண்டிருக்க நான் விரும்பவில்லை. நான் வெளியிட்டுள்ள துணிகரமான இந்த அறிக்கையிலிருந்து எழும் பல பிரச்னைகளையும் காலம் தீர்த்து வைக்கட்டும் என்று நான் விட்டுவிடுகிறேன். எனது நடவடிக்கையின் நியாயத்தையோ அல்லது நான் மேலெழுந்தவாரியாகக் குறிப்பிட்டுள்ள கொள்கையில் அடங்கியுள்ள உண்மையையோ நிரூபிப்பது இங்கே எனது நோக்கமல்ல. லீக் உறுப்பினர்களுக்கு எனது அந்தரங்க எண்ணத்தை அறிவிக்கவேண்டும் என்பதும், அத்திட்டத்தையொட்டி அவர்

களுடைய ஆட்சேபணைகளையும், லீகின் முன்னேற்றத்திற்காகவும் நலனுக்காகவும் அவர்கள் கூற விரும்பும் யோசனைகளையும் வரவேற்கவேண்டும் என்பதுமே எனது நோக்கமாகும்.''

## 4

## மனச்சாட்சிக்காகத் துன்பத்தை அனுபவித்தல்

''மனச்சாட்சி காரணமாக நானும் துன்பத்திற்கு உள்ளாக வேண்டும்'' என்ற தலைப்பின் கீழ் 'எங் இந்தியா' 21-1-1920 இதழில் வெளியாகியிருந்த கட்டுரை பின்வருமாறு:

சர் சிமன்லால் செதல்வாட்டிற்கும் காந்திஜிக்கும் அன்றொரு நாள் நடந்த விவாதம் வெறும் தர்க்கரீதியான பரிசீலனை அல்ல; சர் சிமன்லாலின் கேள்விகளும், அவர் அவற்றிற்கு எதிர்பார்த்த விடைகளும் முற்றிலும் மாறுபட்ட அவரது மனப்போக்கையே வெளிப்படுத்துகின்றன. சத்தியத்தை எப்படித் தீர்மானிப்பது? ஒருவருக்கு, சத்தியத்தைத் தீர்மானிப்பதற்கு அவசியமான என்ன தகுதிகள் இருக்க வேண்டும்? சர் சிமன்லாலின் கேள்விகள் இவையே. தனக்குத்தானே சத்தியத்தைத் தீர்மானித்துக் கொள்ளுவதற்குரிய உரிமை ஒவ்வொரு மனிதருக்கும் உண்டு என்பதை மாத்திரமல்ல, அவ்விதம் தீர்மானிக்கும் திறமை ஒவ்வொருவருக்கும் இருப்பதைக்கூட அவர் மறுத்தார். அவரது அபிப்பிராயங்களை ராவ்பகதூர் ரமண்பாயும் ஆதரித்தார். பலவீனமான, உறுதியற்ற அத்தகைய மனநிலையுள்ளவர்கள், மனித இயற்கையையோ அல்லது மானிட சரித்திரத்தையோ கணக்கில் எடுத்துக்கொள்ளுவதில்லை. ஒவ்வொரு தலைமுறையிலும், ஒவ்வொரு தேசத்திலும், தங்களுடைய மனச்சாட்சிக்காகத் துன்பத்திற்கு உள்ளாகாதவர்கள் இராமல் இருந்ததில்லை. வருஷக்கணக்கில் சொல்லொணாத் துன்பத்திற்குள்ளான ஆயிரக் கணக்கான டௌகோபார்கள் அறிவிலோ, ஒழுக்கத்திலோ சிறந்தவர்கள் அல்ல. அப்படியிருந்தும், ராணுவத் தொண்டு ஒரு குற்றமாகும் என்பதை அவர்களால் தீர்மானிக்க முடிந்தது. தாம் சிறைப்படுத்தியுள்ள சாத்விக எதிர்ப்பாளர்கள், தங்களுடைய மனச்சாட்சிக்கு விரோதமாக நடந்துகொள்ள முடியாததற்காகத் துன்பத்தை அனுபவித்து வருகிறார்கள் என்பதை ஜெனரல் ஸ்மட்ஸ்கூட ஒரு சமயம் பட்டவர்த்தனமாக ஒப்புக் கொண்டார்.

எனவே, தனக்குத்தானே உண்மையைத் தீர்மானித்துக் கொள்ளும் திறமை மனிதருக்கு உண்டு. இதுதான் மனிதருக்கும்

மிருகத்திற்கும் உள்ள வேற்றுமையாகும். மனிதரிடமுள்ள இந்த முக்கியமான பெருமையை நீங்கள் ஒப்புக்கொள்ளவில்லையெனில், நீங்கள் மனித வர்க்கத்தின் முன்னேற்றத்தையே மறுப்பவர்களாகிறீர்கள். நமது தேசீயத் தலைவர்களுக்குத் தேசத்தின் முன்னேற்றத்தில் ஏதாவது நம்பிக்கையிருக்குமாயின், அந்த மூலாதாரமான கொள்கையை அலட்சியம் செய்ய முடியாது. 1911-இல் நிகழ்ந்த காந்திஜி-ஜெனரல் ஸ்மட்ஸ் பேட்டியின் போது ஜெனரல் ஸ்மட்ஸ் கூறிய கீழ்க்கண்ட வார்த்தைகளை நமது தலைவர்கள் கவனிக்க வேண்டும்.

**ஜெனரல் ஸ்மட்ஸ் :** ஜோகன்னஸ்பர்க்கில் நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?

**காந்திஜி :** சாத்விக எதிர்ப்பாளர்களின் குடும்பங்களைப் பராமரித்து வருகிறேன்.

**ஜெ. ஸ்மட்ஸ் :** இந்த மக்களைச் சிறைப்படுத்துவதால், உங்களைக் காட்டிலும் என் மனமே அதிகமாகப் புண்ணாகியிருக்கிறது. தங்களுடைய மனச்சாட்சிக்காகத் துன்பத்திற்கு உள்ளாவோரைச் சிறைப்படுத்த நேர்ந்திருப்பது, என் வாழ்க்கையிலேயே மிகுந்த அதிருப்தியைக் கொடுத்துள்ள ஒரு கட்டமாகும். **மனச்சாட்சிக்காக, நானும் அவர்களைப் போலவே துன்பத்திற்கு உள்ளாவதை வரவேற்றிருப்பேன்.**

மேற்கண்ட விவாதத்தைத் தொடர்ந்து 4-2-1920 'எங் இந்தியா'வில் வெளியான ஒரு கட்டுரையின் விவரம் பின் வருமாறு:

சத்தியத்தை அறிந்துகொள்ளுவதற்கு, உயர்ந்த அறிவும் ஒழுக்கமும் இருக்க வேண்டியது அவசியமல்லவா என்று ஹண்டர் கமிட்டி விசாரணையின்போது சர் சிமன்லால் செதல்வாட் காந்திஜியை ஒரு கேள்வி கேட்டார். இந்தக் கேள்விக்கு 'இந்தியன் ஸோஷல் ரிபார்மர்' பத்திரிகை நேரடியாகப் பதில் அளித்திருக்கிறது. 'சத்தியாக்கிரகம்' என்ற தலைப்பில் அது எழுதியுள்ள குறிப்பில் அப்பத்திரிகை கூறுவதாவது:

"சத்தியம் என்றால் என்ன என்பது பற்றிய விசித்திரமான அறியாமையையே அக்கேள்வி வெளிப்படுத்துகிறது. சத்தியத்திற்குச் சோதனையும் ஆதாரமும் என்னவெனில், அது எல்லோராலும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடியது என்பதேயாகும்."

சர் சிமன்லால் கேட்ட மற்றொரு கேள்வியும் குறிப்பிடத் தக்கது. அவர் கேட்டதாவது :

“ஒவ்வொருவரும் யோக்கியப் பொறுப்புடன் சத்தியத்தை நாடுவது வெவ்வேறுவிதமாக இருக்கிறது. எனவே, அதனால் குழப்பத்திற்கு இடம் ஏற்படாதா?”

அதற்கு காந்திஜி அளித்த பதில் பின்வருமாறு: “அதனால் தான் அகிம்சை, சத்தியத்தின் ஒரு முக்கிய அம்சமாக இருக்கிறது. அஃதின்றி, குழப்பமும் அதைவிட மோசமான நிலையும் ஏற்படும்.”

இந்தப் பதில்கள் எல்லாம் சத்தியாக்கிரகத்தின் அடிப்படையைத் தெளிவாக்குகின்றன. இவ்விஷயமாக ‘இந்தியன் ஸோஷல் ரிபார்மர்’ பத்திரிகை கூறுவதாவது:

“காந்திஜி அறிந்துகொண்டுள்ள வகையில் பொது மக்கள் சத்தியாக்கிரகத்தை அறிந்துகொள்ளுவார்களாயின், நாடு கதி மோட்சம் அடைய அதைக் காட்டிலும் அபாயமற்ற, மிகச் சிறந்த வழி வேறு எதுவும் இருக்க முடியாது.”

மதுராவில் ஒரு ஸ்நானச் சடங்கையொட்டி ஔரங்கசீப்பிற்கு எதிராக மக்கள் சத்தியாக்கிரகத்தைக் கையாண்டதாக வட இந்தியாவில் ஒரு வரலாறு கூறப்பட்டு வருகிறது. காந்திஜி கூறும் சத்தியாக்கிரகத்தை அக்காலத்திலேயே மக்கள் அறிந்திருந்தார்கள் என்பதற்கு அது ஓர் உதாரணமாகும். ஆனால், அந்த வரலாறு துரதிருஷ்டவசமாக சரித்திரத்தில் இடம் பெறவில்லை. எனவே, அது புராணக் கதைகளின் கோஷ்டியில் சேர்க்கப்பட்டுளது. தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் சத்தியாக்கிரகம் செய்ததற்கு, சில விசேஷ சந்தர்ப்பங்களே காரணமென்றும், அங்கே பாமர மக்கள் சத்தியாக்கிரகத்தின் தத்துவத்தை அறிந்து சத்தியாக்கிரகத்தைக் கையாண்டார்கள் என்று கூறமுடியாதென்றும் சொல்லிவிடுகிறார்கள். சமீபத்தில் நிகழ்ந்த அமைதியான ஹர்த்தால்களை உதாரணமாகக் கூறினால், ராணுவப் படைகளின் திறமையினாலேயே ஹர்த்தால் அமைதியாக நடந்ததாகக் கூறுகிறார்கள். ருஷ்யாவில் விவசாயிகள் அடங்கிய ஒரு கோஷ்டியினரான டௌகோபார்களின் உருக்கமான சரித்திரத்தைச் சத்தியாக்கிரகத்திற்குச் சிறந்த உதாரணமாகக் கூறலாம். இந்திய மக்களைக் காட்டிலும் டௌகோபார்கள் அதிக நாகரிகமும் பண்பாடும் உடையவர்கள் அல்ல. மிக்க தைரியசாலிகளான அந்த ருஷ்ய சத்தியாக்கிரகிகளின் சந்ததிகள் தற்போது கனடாவில் வாழ்ந்து வருகின்றனர். சத்தியத்திற்காகத் துன்பத்திற்கு உள்ளாகும் விஷயத்தில் பாமர மக்களுக்குள்ள சக்தி, சில சந்தர்ப்பங்களில் ஓர் எல்லைக்கு உட்பட்டிருக்கலாம். எனினும், அவர்களுக்கு அத்தகைய சக்தி உண்டு என்ற உண்மைக்கு அது எவ்விதத்திலும் கேடு விளைவிக்க முடியாது.

# 5

# பம்பாயில் நடந்த கூட்டம்

தேசீய வாரத்தைக் கொண்டாடுவதற்காக நடந்த கூட்டங்களில் மூன்ருவதும் கடைசியுமான கூட்டம் 1920 ஏப்ரல் மாதம் 13–ஆம் தேதி பம்பாயில் பிரெஞ்சு பாலத்திற்கு அருகில் உள்ள திறந்த வெளியில் நடந்தது. ஸ்ரீ எம். ஏ. ஜின்ஞ தலைமை வகித்தார். ஹோம் ரூல் லீக், நாஷனல் யூனியன் இவற்றின் பம்பாய் கிளை ஸ்தாபனங்களின் ஆதரவிலேயே அக்கூட்டம் நடந்தது.

கூட்டத்திற்கு ரவீந்திரநாத டாகுர் வர இயலாததால், அவர் ஒரு செய்தி அனுப்பியுள்ளாரென்றும், அச்செய்தியை ஸ்ரீ ஸி. எப். ஆண்ட்ரூஸ் வாசிப்பார் என்றும் தலைவர் கூட்டத்தின் ஆரம்பத்தில் அறிவித்தார்.

பிறகு கவி டாகுரின் செய்தியை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் வாசித்தார். அந்தச் செய்தியில் கவி டாகுர் குறிப்பிட்டிருந்ததாவது:

"பஞ்சாபில் சட்டத்தின் பெயரால் ஒரு மாபெரும் குற்றம் இழைக்கப் பட்டிருக்கிறது. தீமையின் அத்தகைய பயங்கரமான குமுறல்களும் வெடிகளும், எய்த விரும்பும் உயர்ந்த கொள்கைகளைத் தகர்த்துத் தூளாக்கிவிடுகின்றன. ஜாலியன்வாலா பாக்கில் நிகழ்ந்தது, அரக்கத்தனமான மகாயுத்தத்தின் அரக்கத்தன்மை வாய்ந்த ஒரு வாரிசேயாகும். கடவுள் சிருஷ்டித்த உலகத்தை அந்த யுத்தம் நான்கு ஆண்டுகள் வரையில் தீயையும் விஷத்தையும் கக்கி கறைப்படுத்திவிட்டது; வெளிப்படையாக மாத்திரமல்ல, உள்ளத்தையும் ஒழுக்கத்தையுங்கூட அவ்விதமே களங்கப்படுத்திவிட்டது. மானிட வர்க்கம் தட்டுத் தடுமாறிக் கடந்து செல்ல வேண்டியிருந்த எல்லையற்ற அந்தப் பாவமானது, யார் கையில் அதிகாரம் இருக்கிறதோ அவர்களுடைய மனத்தைப் பாறையாகச் செய்திருக்கிறது; தாங்கள் செய்யும் கொடுமைகளுக்குத் தடையாக இருக்கும் அனுதாபமும் அவர்களுடைய உள்ளத்தில் இல்லை; வெளியில் எதிர்ப்பு பயமும் இல்லை. நிராயுதபாணிகளான, எச்சரிக்கப்படாத கிராமவாசிகள் மீது அவர்கள் தங்களுடைய பயங்கரக் கருவிகளையெல்லாம் உபயோகித்து வருகிருர்கள்; நீதி என்று கூறப்படும் ஓர் ஆபாசமான கேலிக் கூத்தைப் போர்வையாகக் கொண்டு, தங்களைப் போன்ற சக மனிதர்களுக்குச் சொல்லத்தகாத அவமதிப்புகளை இழைத்து வருகிருர்கள். இவ்விதமெல்லாம் அட்டூழியங்கள் செய்வதில் கோழைகளான, ஆனல் சக்தி வாய்ந்த அவர்களுக்குச் சிறிதும் வெட்கம் இல்லை. அத்தகைய செய்கைகள் தங்களுடைய ஆண்மையையே மிகக் கேவலமான முறையில் அவமதிப்பதாகும் என்பதை அவர்கள் சிறிதும் உணரவில்லை. தங்களுடைய உயர்ந்த

இயல்பை அடியோடு இழந்து, சத்தியத்தையும் கௌரவததை யும் காலால் மிதித்துவிட்டு எது வேண்டுமாயினும் செய்யும் சந் தர்ப்பத்தைச் சென்ற மகாயுத்தமே மனிதருக்கு அளித்திருக் கிறது. இவ்விதமாக நாகரிகத்தின் அடிப்படையே சீர்குலேந்து விட்டதால், இதன் விளேவாக ஒழுக்கத்தைக் கெடுக்கும் பூகம் பங்கள் தொடர்ந்து ஏற்பட்டே தீரும். எனவே, மனிதர்கள் மேற்கொண்டு துன்பங்களே அனுபவிக்கத் தயாராக இருக்க வேண்டும். யுத்த சமாதான ஆலோசனேகளின் பயஞக ஏற்பட் டுள்ள சூழ்நிலேயை, தற்கொலேக்கு ஒப்பான வஞ்சம் தீர்க்கும் கொடுமை ரத்தக்கறை படிந்ததாகச் செய்து வருவதிலிருந்து, நிலேமை சீர்பெற இன்னும் நீண்ட காலம் செல்லும் என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம்.

"வெற்றி பெற்ற வல்லரசுகளின் வெறியாட்டங்கள் உலகத் தையே தூள் தூளாகத் தகர்த்து வருகின்றன். இவற்றில் நமக் குச் சம்பந்தம் இல்லே. எனினும், இதஞல் ஏற்படும் ஒழுக்கக் கேடே நமக்கு மிகுந்த கவலேயைக் கொடுப்பதாக இருக்கிறது. திக்கற்றவர்களான மக்கள் மீது அவமதிப்புகளேச் சுமத்தும் அக்கிரமக்காரர்களே மாத்திரமல்ல, அந்த அவமதிப்புகளுக்கு இலக்காகும் மக்களேயும் இந்த ஒழுக்கக் கேடு பின்தொடரு கிறது. இதுதான் மிகவும் கவலேயைக் கொடுப்பதாகும். கொடிய அநீதியை இழைக்கும் இழிகுணம் படைத்தோர், தாங்கள் தண்டனேக்கு உள்ளாகும்படி நேராது என்ற நம்பிக் கையுடனிருப்பது வெறுக்கத்தக்க அற்பத்தனமாகும். அது போலவே, அவர்களின் அட்டூழியங்கள் பலவீனர்களான மக் களின் மனத்தில் வளர்க்கும் பீதியும், ஆண்மையற்ற கோபமும் கூட இழிவானவையே.

"சகோதரர்களே! மமதையும் நம்பிக்கையும் கொண்ட உடல் பலாத்காரமானது, மனிதனின் உணர்ச்சியை நசுக்க முற்படும்போதுதான், தனது ஆன்மா அழிக்க முடியாதது என்று மனிதன் வீறுகொண்டு எழும் காலம் வருகிறது. எனவே, அட்டூழியங்களேயெல்லாம் கண்டு பீதியடைய மறுத்துவிட வேண்டும்; ஆன்மிகமான தோல்வி நமக்கு ஏற்பட்டுவிடவில்லே என்பதை உணர வேண்டும். நம்மைத் துன்பத்திற்கு உள்ளாக்கி யவர்கள் மீது வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற தீய கனவுகளே நம் மனத்திலிருந்து ஒழித்துவிடுவதே அதற்கு வழியாகும். தோல்வியடைந்தவர்கள், தார்மிகத் துறையில் வெற்றி பெற்றவர் களாகத் திகழும் காலம் வந்துளது.

"சகோதரர் தமது சகோதரரின் ரத்தத்தைச் சிந்திவிட்டு, தாம் செய்த பாவத்திற்குத் தடபுடலான ஒரு பெயரைக் கொடுத்துச் சந்தோஷ ஆரவாரம் செய்யும்போது, அவர் தமது கோபத்தின் ஞாபகார்த்தமாகப் பூமியில் சிந்தியுள்ள ரத்தக்

கறைகள் காய்ந்துவிடாமல் இருக்க முயற்சிக்கும்போது, கடவுளே வெட்கமடைந்து அவரது பாவச் செயல்களைப் பசும்புற்களைப் படரச் செய்தும், இனிய புஷ்பங்களின் பரிசுத்தத்தினுலும் மறைத்துவிடுகிருர். எனவே, நாமும் நமக்கு அருகில் நிகழ்ந்த நிரபராதிகளின் ஏகோபித்த படுகொலையை, அந்த அட்டூழிய ரத்தக்கறைகளைக் கடவுள் காட்டிய வழியைப் பின்தொடர்ந்து, கீழ்க்கண்ட நமது பிரார்த்தனையால் மறைப்போமாக;

'ருத்ர யத் தே தக்ஷிணம் முகம் தேன மாம் பாஹி நித்யம்.'

'ஓ, பயங்கர மூர்த்தியே, உங்களுடைய அருள் முகத்தினுல் என்னை எப்போதும் பாதுகாத்துக் கருணை புரியுங்கள்.'

"பயங்கர மூர்த்தியிடமிருந்துதான் உண்மையான அருள் கிடைக்கிறது. பயங்கரத்திலிருந்தும், தண்டனை பயம் எதுவுமின்றி வஞ்சம் தீர்ப்போரிடமிருந்தும், துன்ப பயத்திலிருந்தும் நமது ஆன்மாக்களை வேறு யார் பாதுகாக்க முடியும்? கடவுளிடமிருந்து நாம் தெரிந்து கொள்ளும் பாடம் இதுதான். அவமானத்திலும் வேதனையிலும் மனம் துடிக்கும் போதுகூட, எதிரியின் எல்லா இழிகுணங்களையும், கொடுமைகளையும், அசத்தியங்களையும் மறந்து, உயர்வையும், சத்தியத்தையும் மாத்திரம் என்றென்றும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுவோமாக. இதுதான் நாம் தெரிந்து கொள்ளவேண்டிய பாடமாகும். விரும்புவோர், எதிர்கால சந்ததிகளின் உள்ளங்களைக் கற்களால் நிரப்ப முயற்சி செய்யட்டும்; தங்களுக்கு இழைக்கப்பட்ட தவறுகளும் தங்களுடைய கோபமும் அவர்களுடைய ஞாபகத்தில் எப்போதும் இருந்துவரச் செய்யட்டும்; ஆனுல், நாம் வணங்கி மரியாதை செலுத்தும் ஞாபகச் சின்னங்களை மாத்திரமே நாம் நமது சந்ததிகளுக்கு விட்டுச் செல்லுவோம். நமது மூதாதையர்களுக்கு நாம் நன்றி செலுத்துவோம். ஏனெனில், நமக்கு புத்தரின் பிரதிபிம்பமான விக்கிரகத்தை அவர்கள் விட்டுச் சென்றிருக்கிருர்கள். தன்னை வெற்றி கொண்டவரும், குற்றம் செய்தவரை மன்னிக்க வேண்டுமென்று உபதேசித்தவரும் இடம், காலம் என்ற வேற்றுமையின்றித் தமது அன்பு வெகு தூரத்துக்குப் பரவும்படி செய்தவரும் நமது புத்தர்பிரான் அல்லவா?"

கவி டாகுரின் செய்தி வாசிக்கப்பட்ட பின், காந்திஜி கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானத்தைப் பிரேரேபித்தார்:

"அமிருதசரஸில் மக்கள் மிகவும் ஆத்திரமூட்டப்பட்டார்கள் என்ருலும், அவர்கள் செய்த அத்து மீறிய காரியங்கள் கண்டனத்திற்கு உரியவை என்று பம்பாயில் நகரவாசிகள் அடங்கிய இக்கூட்டம் அபிப்பிராயப்படுகிறது.

ஜாலியன்வாலா பாக்கில் கூடிய நிரபராதிகளான, நிராயுதபாணிகளான, தற்காப்பற்ற ஆடவர்களை எச்சரிக்கையின்றி ஜெனரல் டயர் படுகொலை செய்த காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கைக்கு உவமையே இல்லை. அத்தகைய காட்டுமிராண்டித்தனமும், பஞ்சாபில் ராணுவச் சட்டம் அமலில் இருந்தபோது பொறுப்புள்ள அதிகாரிகள் செய்த அதுபோன்ற மற்ற மிருகத்தனமான நடவடிக்கைகளும் இனிமேலும் நடப்பது சாத்தியமற்றதாகச் செய்வதற்கான தகுந்த நடவடிக்கைகளை இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசாங்கமும் கைக்கொள்ளுமென இக்கூட்டம் நம்புகிறது. இந்திய தேசீய காங்கிரசின் பஞ்சாப் உப கமிட்டி செய்துள்ள சிபாரிசுகளை அந்த அரசாங்கங்கள் நிறைவேற்றுமென்றும் இக்கூட்டம் நம்புகிறது.''

காந்திஜியின் தீர்மானம் நிறைவேறியதும் கூட்டம் கலைந்தது.

# 6

# பட்டதாரிகளின் கடமை

லக்ஷ்மணபுரியிலுள்ள 'இந்தியன் விட்னஸ்' என்ற பத்திரிகையில் வெளியாகியிருந்த கீழ்க்கண்ட பேட்டி விவரங்கள் 1920 பிப்ரவரி 25–ஆம் தேதி 'எங் இந்தியா'வில் வெளியாயின :

நான் காந்திஜியுடன் பேசிக்கொண்டிருந்தபோது, அவரது எளிய உடை என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அவர் கரடு முரடான ஒரு வெள்ளைத் துணியை உடுத்தியிருந்தார். குளிரிலிருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்காக ஒரு கம்பளத்தைப் போர்த்துக்கொண்டிருந்தார். தலையில் ஒரு சிறு வெள்ளைக் குல்லாய் மாத்திரமே இருந்தது. ஒட்டிய முகமும், வெளியே பிதுங்கிக்கொண்டிருக்கும் பெரிய காதுகளும், சாந்தமான கண்களும் உள்ள இந்தச் சிறு மனிதர் புகழ்பெற்ற பெரிய காந்தியாக எப்படி இருக்க முடியும்? இவரைப் பற்றியா நான் வெகுவாகக் கேள்விப்பட்டுள்ளேன்? அவர் என்னைப் பார்த்துத் தரையில் உட்கார்ந்துகொண்டிருந்தபோது, என்னை நானே இந்தக் கேள்விகள் கேட்டுக்கொண்டேன். ஆனால், நாங்கள் பேச ஆரம்பித்தபோது, என் சந்தேகங்களெல்லாம் பறந்தோடிவிட்டன. விரும்பும் லட்சியத்தை அடைவதற்காகக் காந்திஜி கையாளும் முறைகள் எல்லாவற்றையும் நான் ஒத்துக் கொள்ளவில்லை. ஆனால், நான் நேரில் பார்த்த வரையில் அவரைப் பற்றி ஒன்று மாத்திரம் கூற விரும்புகிறேன். அதாவது ஸ்ரீ காந்தி ஆன்மிகப் பெருமை வாய்ந்த ஒரு மனிதர். அவர் ஒரு சிந்தனையாளர். நான் சிறிது நேரமே அவரைப் பேட்டி கண்டு பேசினேன். கடவுளின் அருள் பெற்ற முனிவர்களுடன் எனக்குப் பல தடவைகளில்

உள்ளத் தொடர்பு ஏற்பட்டது உண்டு; ஸ்ரீ காந்தியிடமும் எனக்கு அத்தகைய உள்ள நட்பு ஏற்பட்டது. இந்த மனிதர் கிறிஸ்தவ மதத்தின் ஊற்றை ஊடுருவிப் பரிசீலனை செய்துள்ளார் என்பதையும், மகத்துவம் வாய்ந்த ஏசுநாதரின் உபதேசங்களிலிருந்து கற்றுக்கொண்டுள்ளார் என்பதையும் அறிந்துகொண்டேன்.

"காந்தி அவர்களே, கீழ்த்திசை நாடுகள், குறிப்பாக இந்தியா எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தி அடைவதற்கு உதவியாக மேற்கத்தி நாடுகள் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டேன்.

இதற்கு அவர் நேரடியாகப் பதில் கூறவில்லை. அவர் இவ்விதம் விடையளித்தார். "இந்தியா தான் கற்றுக்கொண்டதை மறந்துவிட வேண்டிய நிலையில் இப்போது இருந்து வருகிறது, உபயோகமற்ற, லாபமில்லாத ஏராளமான விஷயங்களை இந்தியா கற்றுக்கொண்டிருக்கிறது. மேற்கத்திய நாடுகளை, குறிப்பாக உங்கள் சொந்த நாட்டை நான் உற்றுக் கவனித்ததிலிருந்து இரண்டு தலை சிறந்த உண்மைகளைக் கற்றுக்கொண்டிருக்கிறேன். முதலாவது, சுத்தம்; இரண்டாவது, சுறுசுறுப்பு. பரிசுத்தம் அடைந்தாலன்றி என் மக்கள் ஆன்மிகத் துறையில் முன்னேற்றம் அடைய முடியாது என்பது எனது உறுதியான அபிப்பிராயமாகும். உங்கள் நாட்டு மக்களின் சுறுசுறுப்பு ஆச்சரியமானது. ஆனல், பெரிதும் அவர்கள் ஸ்தூல விஷயங்களிலேயே சுறுசுறுப்பாக இருந்துவருகிறார்கள். இந்திய மக்கள் அதே சுறுசுறுப்பைச் சரியான வழியில் காட்டுவார்களாயின், மகத்தான நன்மையைப் பெறுவார்கள்."

**கேள்வி:** "இந்தியா முழுவதும் தேசீய உணர்ச்சி பரவி வரும் இச்சமயத்தில், இந்நாட்டிற்குக் கிறிஸ்தவ சமயம் எவ்விதம் சிறந்த முறையில் உதவி புரியக் கூடும் என்பதைத் தாங்கள் அன்பு கூர்ந்து கூறுவீர்களா?"

**பதில்:** "எல்லாவற்றையும்விட அதிகமாக எங்களுக்குத் தேவையாக இருப்பது அனுதாபம்தான். நான் ஆப்பிரிக்காவில் இருந்தபோது, இதைக் கண்டுகொண்டேன். குழாய் மூலம் தண்ணீர் வரும் சில பாதாளக் கிணறுகளைத் தோண்ட வேண்டியிருந்தது. சுத்தமான நீரோட்டத்தைக் கண்டு பிடிப்பதற்காக, நான் ஆழமாகத் தோண்டும்படி நேர்ந்தது. என் மக்களை ஆராய்ச்சி செய்வதற்காக இந்த நாட்டுக்கு வருவோரில் பலரும் மேல்புறத்தை மாத்திரமே சுரண்டுகிறார்கள். அனுதாபத்தைக்கொண்டு அவர்கள் ஆழ்ந்து தோண்டிப் பார்ப்பார்களாயின், சுத்தமான, தெளிவான வாழ்க்கை நீரோட்டத்தை அவர்கள் காண்பார்கள்."

கே: “உங்கள் மனத்தில் ஆழ்ந்த உணர்ச்சியை உண்டாக்கியது எந்த நூல் அல்லது எந்த மனிதர் என்பதைத் தாங்கள் தயவு செய்து எனக்குக் கூறுவீர்களா?”

இயல்பாகவே ஸ்ரீ காந்தி, கிறிஸ்தவர்கள் அறிந்த வேதங்களைப் பற்றியும், மற்றும் பல இந்திய நூல்களைப் பற்றியும் ஏதாவது கூறுவார் என்று நினைத்தேன்; அவ்விதம் கூறுவதைக் கேட்கவே நான் தயாராக இருந்தேன். தமது வாழ்க்கையையும் சிந்தனையையும் உருவாக்கிய மூன்று ஆங்கிலப் புத்தகங்களை அவர் குறிப்பிடுவார் என்று நான் எண்ணவே இல்லை. தாம் இடைவிடாது புத்தகங்களை வாசித்துக் கொண்டிருப்பவர் அல்ல என்பதையும், ஆனால், மிகச் சிறந்த புத்தகங்களையே தாம் மிகவும் கவனத்துடன் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவது வழக்கம் என்பதையும் அவர் வெளிப்படையாக ஒப்புக்கொண்டார். தமது வாழ்க்கையை உருவாக்கிய புத்தகங்களை அவர் கீழ்க்கண்ட வரிசையில் குறிப்பிட்டார்: பைபிள், ரஸ்கின், டால்ஸ்டாய்.

பைபிளைப் பற்றி அவர் கூறியதாவது: “நான் செல்ல வேண்டிய வழி எது என்பதை அறிய முடியாத சந்தர்ப்பங்கள் பல என் வாழ்க்கையில் ஏற்பட்டன. அப்போது நான் பைபிளின், குறிப்பாகப் புதிய ஏற்பாட்டின் (New Testament) உதவியையே நாடினேன்; அதில் அடங்கியுள்ள உபதேச மொழிகள் எனக்குச் சக்தியைக் கொடுத்தன.”

மீரத் பட்டதாரிகள் சங்கத்தில் நகரிலேயே கல்வியறிவில் மிகச் சிறந்த பலர் உள்ளனர். அவர்கள் நகரின் நலன் அபிவிருத்தி அடைவதற்கு என்ன செய்ய முடியும் என்பதை அறிந்து கொள்ள ஆர்வமுடையவனாக இருந்தேன். இவ்விஷயமாக நான் கேட்ட கேள்விக்கு, ஸ்ரீ காந்தி ஒரே சொல்லில் பதில் கூறிவிட்டார். “தோட்டி” என்பதுதான் அந்தச் சொல் ஆகும். அவர் கூறியதாவது:

“அந்தச் சொல்லை நான் எல்லா அர்த்தத்திலும் உபயோகித்துள்ளேன். அச்சங்க உறுப்பினர்கள் வெளியே வந்து, நகரில் வெளிப்படையாக உள்ள குப்பைகளையும் அசுத்தங்களையும் மாத்திரமல்ல, மக்களின் உள்ளத்தில் உள்ள ஒழுக்கக் கேடுகளையும் சுத்தம் செய்வதற்கு உதவி புரிய முன் வருவார்களாயின், அவர்கள் மகத்தான ஊழியம் செய்தவராவார்கள்.”

மீரத். எஸ். டபிள்யூ. கிளமெஸ்.

# 7

# கல்கத்தா காங்கிரசின் விசேஷக் கூட்டம்

1920-ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் நிகழ்ந்த குஜராத் ராஜீய மகாநாட்டில் காந்திஜி ஒத்துழையாமைத் தீர்மானத்தைக்கொண்டு வந்தார். அத்தீர்மானம் அம்மகாநாட்டில் நிறைவேறியதெனினும், அது மிகவும் முக்கியமான விஷயமாதலால், காங்கிரசின் விசேஷக் கூட்டமொன்றில் அதைப் பற்றி ஆலோசிக்க வேண்டுமென்று பலரும் கருதினர். எனவே, முக்கியமாக ஒத்துழையாமைத் தீர்மானத்தை ஆலோசிப்பதற்கென்றே காங்கிரசின் விசேஷக் கூட்டம் 1920 செப்டம்பர் 4-ஆம் தேதியிலிருந்து 9-ஆம் தேதி வரையில் கல்கத்தாவில் நடந்தது. ஹண்டர் கமிட்டி சிபாரிசுகள் பற்றியும் அக்கூட்டத்தில் ஆலோசித்தனர். எல்லா மாகாணங்களிலிருந்தும் 5,000 பிரதிநிதிகள் உள்பட 20, 000 பேர் அக்கூட்டத்திற்கு வந்திருந்தனர். ஏராளமான முஸ்லிம் பிரதிநிதிகளும் வந்திருந்தார்கள். அப்போது அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்திருந்த லாலா லஜபதிராய் முக்கியமான அக்கூட்டத்தின் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஷவுகத் அலியின் வேண்டுகோளுக்கிணங்க காந்திஜி ரெயிலில் வந்து கொண்டிருந்தபோதே ஒத்துழையாமைத் தீர்மானத்தின் நகலைத் தயாரித்தார். அத்தீர்மானத்தை யார் ஆதரிப்பார்கள், யார் எதிர்ப்பார்கள் என்பதைக் காந்திஜியினால் அறிந்து கொள்ள முடியவில்லை. பெசண்டம்மை, பண்டித மாளவியா, ஸ்ரீ விஜயராகவாச்சாரியார், பண்டித மோதிலால் நேரு, சித்த ரஞ்சன் தாஸ், ஸ்ரீ ஜின்னா முதலிய தலைவர்கள் விவாதப் போராட்டத்தில் ஈடுபடத் தயாராக இருந்தார்கள்.

காந்திஜி ஒத்துழையாமைத் தீர்மானத்தைப் பிரேரேபித்துப் பேசியதாவது:

"இந்த மாபெரும் கூட்டத்தில் இத்தீர்மானத்தைப் பிரேரேபிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. எனினும், இதன் விளைவாக என் தலையில் மகத்தான பொறுப்பு சுமந்துளது என்பதை நான் முற்றிலும் உணர்ந்திருக்கிறேன். இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றும் சக்தி உங்களுக்கு இருந்தால், என்னுடைய கஷ்டங்களும் உங்களுடைய கஷ்டங்களும்கூட அதிகமாகும் என்பதையும் உணர்ந்திருக்கிறேன். தேசத்தின் உரிமைகளையும் கௌரவத்தையும் பாதுகாப்பதற்காக இது வரையில் கைக்கொண்ட கொள்கையில், நாம் நிறைவேற்றும் எந்தத் தீர்மான

மும் நிச்சயமான மாறுதலை உண்டாக்கும் என்பதையும் நான் உணர்ந்துள்ளேன். தாய் நாட்டின் விஷயங்களில் நமது தலைவர்களில் பெரும்பாலோர் தங்கள் நேரத்தையும் கவனத்தையும் செலுத்தி வந்திருக்கிறார்கள். நான் அவ்விதம் செய்ய இயலவில்லை. அத்தகைய தலைவர்கள் இப்போது எனக்கு எதிராக அணிவகுத்து நிற்கிறார்கள் என்பதையும் அறிந்திருக்கிறேன். அரசாங்கத்தின் கொள்கையைப் புரட்சிகரமாக மாற்றக்கூடிய முறையை எதிர்ப்பது தங்களுடைய கடமை என்று அவர்கள் கருதுகிறார்கள். இதையெல்லாம் அறிந்தே நான் கடவுளிடம் பயத்துடனும் கடமை உணர்ச்சியுடனும், இத்தீர்மானத்தை உங்களுடைய அங்கீகாரத்திற்காகச் சமர்ப்பிக்க உங்கள் முன்னிலையில் நிற்கிறேன்.

''என்னை நீங்கள் தாற்காலிகமாக உங்களுடைய சிந்தனையிலிருந்து விலக்கிவிடுங்கள். நான் ஒரு முனிவர் என்றும், சர்வாதிகாரத்தில் ஆசை உள்ளவன் என்றும் என் மீது குற்றம் சாட்டியிருக்கிறார்கள். ஆனால், நான் ஒரு முனிவராகவோ, சர்வாதிகாரத்தில் ஆசை கொண்டவனாகவோ உங்கள் முன்னிலையில் நிற்கவில்லை. ஒத்துழையாமையில் எனக்குள்ள பல வருட அனுபவத்தின் பலன்களையே உங்களிடம் சமர்ப்பிப்பதற்காக நான் உங்கள்முன் நிற்கிறேன். தேசத்திற்கு அது ஒரு புதிய விஷயம் என்ற குற்றச்சாட்டை நான் ஒப்புக்கொள்ள முடியாது. ஆயிரக்கணக்கான மக்கள் ஆஜராகியிருந்த நூற்றுக்கணக்கான கூட்டங்களில் அது ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. சென்ற ஆகஸ்டு மாதம் முதல் தேதியிலிருந்து முஸ்லிம்களால் அது ஒழுங்கான முறையில் வகுக்கப்பட்டும் இருக்கிறது. அத்திட்டத்தில் உள்ள பல விஷயங்கள் தீவிரமான முறையில் அமலுக்கும் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இந்த முக்கிய விஷயத்தைப் பற்றி ஆலோசிக்கும்போது நீங்கள் நபர்களை மறந்துவிடவேண்டுமென்றும், அதை உங்கள் அறிவை உபயோகித்து அமைதியாக ஆலோசிக்க வேண்டுமென்றும் நான் மறுபடியும் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தீர்மானத்தை வாயளவில் ஆதரிப்பதால் மாத்திரம் நம்முடைய வேலை முடிந்துவிடாது. ஒவ்வொரு நபரும், தீர்மானத்தில் உள்ள விஷயங்களை தம் சம்பந்தப்பட்டவரை அமலுக்குக் கொண்டுவர வேண்டியவராக இருக்கிறார். நான் கூறுவதைச் சாந்தமாகக் கேட்கும்படி உங்களை வேண்டிக் கொள்ளுகிறேன். கைகளைத் தட்டாமல் இருக்கும்படியும் சீழ்க்கையடிக்காமல் இருக்கும்படியும் உங்களை நான் வேண்டிக்கொள்ளுகிறேன். என் சம்பந்தப்பட்ட வரையில், அவ்விதம் செய்வதை நான் பொருட்படுத்துவதில்லை; ஆனால், கரகோஷத்தினால் சிந்தனையின் ஓட்டம் தடைப்படுகிறது. கரகோஷத்தினாலும் சீழ்க்கையடிப்பதாலும், ஒரு பிரசங்கிக்கும் அவரது பிரசங்கத்தைக் கேட்கும் மக்களுக்கும் உள்ள மனத்தொடர்பு தடைப்படுகிறது. நீங்கள் சீழ்க்கையடித்து ஒரு பிரசங்கியைக்

கூட மேடையைவிட்டு இறங்கி அப்பால் போகும்படி செய்து விடக்கூடாது. ஏனெனில், ஒத்துழையாமை, ஒழுக்கமும் தியாக மும் உள்ள ஒரு முறையாகும். நமக்கு மாறுன அபிப்பிராயம் கொண்டுள்ளவர்களுக்கும் நாம் மரியாதை காட்ட வேண்டும். நமக்கு நேர் மாறுன கருத்துக்கள் உடையவர்களிடத்திலும் நாம் சகிப்புத்தன்மையுடன் நடந்துகொள்ளும் ஆற்றலை வளர்த்துக் கொண்டாலொழிய, ஒத்துழையாமை சாத்தியமல்ல. கோபம் தாண்டவமாடும் சூழ்நிலையில் ஒத்துழையாமை அசாத்தியமே யாகும். எனது கோபத்தை அடக்கிக்கொள்ள வேண்டும் என்ற ஒரு பாடத்தை நான் கசப்பான அனுபவத்தின் மூலம் கற்றுக் கொண்டுள்ளேன். தேக்கிவைக்கப்பட்ட உஷ்ணமானது சக்தி யாக மாற்றப்படுவதுபோல, அடக்கப்பட்ட நமது கோபத்தைக் கூட ஒரு சக்தியாக உருவாக்கிவிட முடியும். அதன் மூலம் நாம் உலகத்தையே இயக்க முடியும். சகோதரர்களைப் போல் காங் கிரஸ் கூட்டத்தில் கலந்துகொள்ளுவோருக்கு, நாம் பரஸ்பரம் அனுசரிக்கக்கூடிய சிறந்த ஒழுங்கு முறை, இதைக் காட்டிலும் வேறு என்ன இருக்க முடியும்?

"நான் அழிவு நடவடிக்கைகளிலேயே ஈடுபட்டிருப்பதாயும், இந்த நாட்டின் ராஜீய வாழ்க்கையையே நான் தகர்த்து வருவ தாயும் கூறுகிறுர்கள். காங்கிரஸ் ஒரு கட்சி ஸ்தாபனம் அல்ல. எல்லாவிதமான அபிப்பிராயங்கள் உள்ளவர்களுக்கும் அது ஒரு மேடையாக விளங்க வேண்டும். ஒரு சிறுபான்மையோர் இந்த ஸ்தாபனத்திலிருந்து விலக வேண்டிய அவசியமில்லை; அவர் களின் அபிப்பிராயத்தை நாடு ஒப்புக்கொள்ளும்படி செய்தால், அவர்களே காலப்போக்கில் பெரும்பான்மையோராக மாறிவிட லாம். ஆனுல், காங்கிரஸினுல் கண்டிக்கப்பட்ட எந்தக் கொள் கையையும் காங்கிரசின் பெயரால் எவரும் சிபாரிசு செய்ய முன் வரக்கூடாது. நீங்கள் என் கொள்கையைக் கண்டித்தால், நான் காங்கிரசிலிருந்து விலகிவிடமாட்டேன்; எனக்கு ஆதரவளிக்கும் சிறுபான்மையோரைப் பெரும்பாலோராக மாற்றுவதற்காக வாதிக்க முற்படுவேன்.

"கிலாபத் தவறைக் குறித்து கருத்து வேற்றுமை இல்லை. பஞ்சாப், கொடுமையாகவும் மிருகத்தனமாகவும் நடத்தப்பட் டிருக்கிறது. வயிற்றினுல் ஊர்ந்து செல்லும்படி ஒரு மனிதர் வற்புறுத்தப்பட்டதால், இந்தியா முழுதுமே அவ்விதம் ஊர்ந்து செல்லும்படி வற்புறுத்தப்பட்டதாகிறது. நாம் இந்தியாவின் சிறந்த புதல்வர்களாகவும் புதல்விகளாகவும் இருந்தால், அந்தத் தவறுகளை ஒழிக்கப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள வேண்டும். அந்தத் தவறுகள் இனி நடைபெருமல் செய்யவே, தேசம் கிளர்ச்சி செய்துவருகிறது. நமது விருப்பத்திற்கு அரசாங்கம் இணங்கும்படி செய்ய நம்மால் முடியவில்லை. நமது கோப உணர்ச்சியைக் காட்டுவதன் மூலம் மாத்திரம் நாம் திருப்தி

அடைந்துவிடக்கூடாது. பஞ்சாபிற்கு இழைக்கப்பட்டுள்ள தவறுகளைப் பற்றி அக்கிராசனர் பிரசங்கத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காட்டிலும் அதிக உருக்கமாக யாரும் குறிப்பிட முடியாது. விருப்பமிராதவர்களிடமிருந்து நாம் நீதியை வற்புறுத்திப் பெற முடியவில்லையாயின், காங்கிரஸ் எப்படி வாழ முடியும்? காங்கிரஸ் தன் மானத்தை எப்படிக் காப்பாற்றிக்கொள்ள முடியும்? ரத்தக்கறை படிந்த கைகளிலிருந்து ஒரு வெகுமதியைக் கூட, அது எவ்வளவு விலை மதிக்க முடியாததாக இருப்பினும், அரசாங்கம் தன் தவறுகளுக்காக வருந்தும்படி வற்புறுத்தினலன்றி, எப்படி வாங்கிக்கொள்ள முடியும்?

இந்த நோக்கம் நிறைவேறுவதற்காகவே, நான் உங்கள் முன்னிலையில் எனது ஒத்துழையாமைத் திட்டத்தைச் சமர்ப்பித்துள்ளேன். எனது திட்டத்தைக் காட்டிலும் சிறந்தது என்ற திட்டமான முடிவிற்கு நீங்கள் வந்தாலொழிய, மற்ற எந்தத் திட்டத்தையும் நீங்கள் நிராகரித்துவிட வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். எனது திட்டத்திற்குப் போதிய அளவு ஆதரவு ஏற்படுமாயின், நீங்கள் ஒரு வருடத்தில் சுயராஜ்யம் பெற முடியுமென்று கூறத் துணிகிறேன். தீர்மானம் நிறைவேறுவது சுயராஜ்யத்தைக் கொண்டுவந்துவிடாது. தீர்மானத்தை அமலுக்குக்கொண்டு வருவதால் மாத்திரமே சுயராஜ்யத்தைப் பெற முடியும். தேசத்தின்முன் மற்றொரு பரிகார முறையும் இருக்கிறது. அதுதான் கத்தியை உருவுவதாகும். அது சாத்தியமாயின், ஒத்துழையாமைச் சித்தாந்தத்திற்கு இந்தியா செவி கொடுத்திராது. பலாத்காரத்தின் மூலம் அநீதியைத் தடுக்க நீங்கள் விரும்பினலும்கூட, ஒழுங்கும் ஆன்மத் தியாகமும் அவசியம் என்பதை உங்களுக்குக் கூற விரும்புகிறேன். ஒழுங்கில்லாத கலகக் கூட்டத்தினர் எந்த யுத்தத்திலும் வெற்றி பெற்றதாக நான் கேள்விப்பட்டதில்லை. ஆனல், கட்டுதிட்டமுள்ள படைகளே யுத்தங்களில் வெற்றி பெற்றுள்ளன. பிரிட்டிஷ் அரசாங்கத்தையும் ஏகோபித்த ஐரோப்பிய நாடுகளின் பலத்தையும் எதிர்த்து நாம் போராட விரும்பினல், கட்டுதிட்டத்திலும் ஆன்மத் தியாகத்திலும் நாம் பயிற்சி பெற வேண்டும். நான் பொறுமையிழந்து வருகிறேன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இன்றே சுயராஜ்யம் பெற நாம் தகுதியுடையவர்களாக இருக்கிறோம். ஆனல், தியாக உணர்ச்சியை நாம் பெற்றிருக்கவில்லை. குடும்ப விஷயங்களில் நாம் அந்த உணர்ச்சியை வளர்த்துக்கொண்டிருக்கிறோம். மற்ற விஷயங்களிலும் அத்தகைய தியாக உணர்ச்சி நமக்கு ஏற்பட வேண்டும். நம் நாடு தேசீய உணர்ச்சியை வளர்த்துக்கொண்டிருக்கிறதா? நாட்டின் பலி பீடத்தில் மக்கள் தங்களுடைய பொக்கிஷங்கள், குழந்தைகள் முதலிய தங்களுக்குச் சொந்தமான எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்யத் தயாராக இருக்கிறார்களா? தேசம் தயாராக இருக்கிறதா? பட்டங்களைச் சூட்டிக்

கொண்டிருப்போர் அவற்றைத் துறந்துவிடத் தயாராக இருக்கிறார்களா? நாட்டின் நன்மைக்காகத் தங்களுடைய குழந்தைகளின் இலக்கியக் கல்வியைத் தியாகம் செய்யப் பெற்றோர்கள் தயாராக இருக்கிறார்களா? இவற்றையெல்லாம் நேரில் கண்டறிவதற்காக நான் தேசம் முழுவதும், ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையிலும் யாத்திரை செய்து வருகிறேன்.

"கல்விச்சாலைகளும் கலாசாலைகளும் அரசாங்கத்திற்கு குமாஸ்தாக்களைத் தயாரித்துக் கொடுக்கும் தொழிற்சாலைகளாக இருந்து வருகின்றன. பெற்றோர்களும், பட்டதாரிகளும் தியாகங்கள் செய்யத் தயாராக இல்லாவிடில், சுயராஜ்யம் பெறுவது சாத்தியமேயல்ல. ஒரு தேசத்தினுடைய ஆதிக்கத்தின் கீழ் உள்ள மற்றொரு தேசம், ஆதிக்கம் செலுத்தும் நாட்டினிடமிருந்து வெகுமதிகளையும், அவற்றுடன் இணைக்கப்பட்டுள்ள உதைகளையும் ஒப்புக்கொள்ளக்கூடாது, வெற்றி பெற்றுள்ள நாட்டினிடமிருந்து வரும் வெகுமதி தங்களுடைய நன்மைக்காக அல்ல என்பதையும், வெற்றி பெற்ற நாட்டின் நன்மைக்காகவே என்பதையும் அதன் ஆதிக்கத்தின் கீழ் உள்ள மக்கள் அறிந்து கொண்ட அந்த விநாடியிலேயே அவர்கள் வெற்றி பெற்ற நாட்டிற்கு எந்தவிதமான உதவியும் அளிக்க மறுத்துவிட வேண்டும். சாம்ராஜ்யத்திற்கு உள்ளேயோ அல்லது வெளியிலோ சுதந்திரப் போராட்டத்தில் வெற்றி பெற அவைதான் மூலாதாரமான தேவைகளாகும். பிரிட்டிஷ் தொடர்பைக் காட்டிலும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையையே நான் பன்மடங்கு பெரிதாகவும் உயர்ந்ததாகவும் கருதுகிறேன். அவ்விரண்டில் எது வேண்டும் என்று என்னைக் கேட்டால். நான் பிரிட்டிஷ் தொடர்பை நிராகரித்துவிட்டு, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையையே நாடுவேன். பிரிட்டிஷ் தொடர்பைக் காட்டிலும் பஞ்சாபின் கௌரவத்தையே, அராஜகத்தையும்கூட நான் சிறிதும் தயக்கமின்றி மேலாகக் கருதுவேன்.

"என்னைப் போல் உங்கள் மனத்திலும் அதே உணர்ச்சி சுடர்விட்டுக் கொண்டிருக்குமாயின், நீங்கள் யாதொரு நிபந்தனையுமின்றி எனது தீர்மானத்தை அங்கீகரிப்பீர்கள்.

"எல்லோருடைய மனத்தையும் ஆட்கொண்டுள்ள சட்டசபைகள் பகிஷ்கார விஷயத்திற்கு இப்போது வருகிறேன். இவ்விஷயமாக மிகவும் கடுமையான அபிப்பிராயபேதம் இருந்து வருகிறது. இதைக் குறித்து வாக்குகள் எடுக்க வேண்டுமாயின், நாம் சுயராஜ்யம் பெறுவது சட்டசபைகளின் மூலமா அல்லது சட்டசபைக்கு வெளியிலிருந்தா என்பதை நீங்கள் ஆலோசிக்க வேண்டும். தான் இந்தியாவுக்கு இழைத்துள்ள தவறுகளைக் குறித்து, பிரிட்டிஷ் அரசாங்கம் எள்ளளவும் வருந்தவில்லை என்பதை நாம் அறிவோம். நமக்கு பிரிட்டிஷ் அரசாங்

கத்தின் மீது சிறிதும் நம்பிக்கை இல்லையாயின், சட்டசபைகள் நம்மை சுயராஜ்யத்திற்குக் கொண்டு செல்லும் என்று நீங்கள் எப்படி நம்ப முடியும்? அது இந்தியாவில் பிரிட்டிஷாருக்கு உள்ள பிடி இன்னும் அதிகமாக இறுகும்படி செய்யாதென்று நீங்கள் எவ்வாறு நம்பமுடியும்?

“இப்போது சுதேசி விஷயத்திற்கு நான் வருகிறேன். இந்தத் தீர்மானத்தில் அந்நிய ஜவுளி பகிஷ்காரமும் சேர்க்கப் பட்டிருக்கிறது. சுதேசி என்றால், அந்நிய சாமான்களை நிரந் தரமாகப் பகிஷ்காரம் செய்வதேயாகும்.

“நபரின் செல்வாக்கை மனத்திற்கொண்டு நீங்கள் எது வும் செய்ய வேண்டாமென்று உங்களை நான் கேட்டுக்கொள் ளுகிறேன். நான் செய்துள்ள எத்தகைய தொண்டையும் உங் கள் மனத்திலிருந்து அகற்றிவிடுங்கள். சலியா உழைப்பு, தீர்க் காலோசனை, திட்டத்தை அமலுக்குக் கொண்டு வருவதில் ஒரு போதும் பின் வாங்காத உறுதி இவைதான் முக்கியம். இவற்றை மாத்திரமே நீங்கள் என்னிடமிருந்து எதிர்பார்க்கலாம்.”

காந்திஜியின் தீர்மானத்தைக் கடுமையாக எதிர்த்து விபின சந்திரபால் ஒரு திருத்தம் கொண்டு வந்தார். அதை சித்த ரஞ் சன் தாஸ் ஆதரித்தார். காங்கிரசின் கோரிக்கைகளைப் பிரிட் டிஷ் அரசாங்கத்தினிடம் சமர்ப்பிப்பதற்காக இங்கிலாந்துக்குச் செல்ல வேண்டும்; அதன் மத்தியில் தேசீயக் கல்விச்சாலைகள், மத்தியஸ்த கோர்ட்டுகள் முதலியவற்றை நிறுவ வேண்டும்; சட்டசபைகளைப் பகிஷ்காரம் செய்யக்கூடாது என்பதுதான் திருத்தத்தின் விவரமாகும். மற்றும் சட்டசபைகளுக்குச் சென்று முட்டுக்கட்டை முறைகளைக் கையாள வேண்டும் என்பதும் அந் தத் திருத்தத்தின் கருத்து.

பஞ்சாப், கிலாபத் தவறுகளுக்குப் பரிகாரம் பெற வேண் டும் என்பதே காந்திஜி பிரேரேபித்த ஒத்துழையாமைத் தீர் மானத்தின் நோக்கமாகும். இது ஸ்ரீ விஜயராகவாச்சாரியார், பண்டித மோதிலால் நேரு முதலியோரின் மனத்தைக் கவர வில்லை. தீர்மானத்தில் சுயராஜ்யக் கோரிக்கையையும் சேர்க்க வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். அந்த யோசனையைக் காந்திஜி யாதொரு ஆட்சேபணையுமின்றி ஏற்றுக்கொண்டு, தமது தீர்மானத்தில் சுயராஜ்யக் கோரிக்கையையும் சேர்த்துக்கொண் டார். “ஒத்துழையாமைத் திட்டத்திற்குப் போதிய ஆதரவு கிடைக்குமாயின், சுயராஜ்யம் ஒரு வருடத்தில் கிடைத்துவிடும்” என்று கூறினர் காந்திஜி.

செப்டம்பர் 9-ஆம் தேதி மிகவும் நுணுக்கமாக வாக்குகள் எடுக்கப்பட்டன. வாக்குகள் எடுப்பதை லஜபதி ராய் தாமே நேரில் கவனித்தார். வாக்குகள் எடுக்க ஆறு மணி நேர

மாயிற்று. ஒத்துழையாமைத் தீர்மானத்திற்குச் சாதகமாக 1855 வாக்குகளும் பாதகமாக 873 வாக்குகளும் கிடைத்தன. ஜின்னவைத் தவிர விஷயாலோசனைக் கமிட்டியைச் சேர்ந்த எல்லா முஸ்லிம் உறுப்பினர்களும் காந்திஜியை ஆதரித்து வோட்டுக் கொடுத்தனர். முஸ்லிம் அல்லாத பல பிரபல தேசீய வாதிகள் சித்தரஞ்சன் தாஸை ஆதரித்தனர்.

தமது வெற்றியைக் குறித்து காந்திஜி 'எங் இந்தியா'வில் எழுதியதாவது :

"வாக்குகளின் புள்ளி விவரங்கள், ஒத்துழையாமையைத் தேசம் விரும்புகிறது என்பதையே காட்டுகின்றன. சட்டசபைகள், கல்விச்சாலைகள், கோர்ட்டுகள் எல்லாவற்றையும் பகிஷ்காரம்செய்ய வேண்டுமென்று நான் கூறியுள்ள வாதங்களைத் தேச மக்கள் அறிவர். எனினும், நான் பெரும்பான்மையோருக்கும் சிறுபான்மையோருக்கும் பணிவுடன் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். பெரும்பான்மையோருக்கு நான் கூறுவதாவது : மகத்தான வெற்றி கிடைக்கும் சமயம் என்பது மகத்தான அடக்கத்துடன் நடந்து கொள்ளும் சமயமேயாகும். பெரும்பான்மையோர் மாபெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். எனது யோசனையை ஆதரித்துள்ள ஒவ்வொரு வாக்காளரும், அவர் ஒரு பெற்றோராக இருப்பவராயின், அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் உள்ள கல்விச்சாலைகள் அல்லது கலாசாலைகளிலிருந்து தமது குழந்தைகளை வாபஸ் செய்துகொள்ள நிச்சயமாகக் கடமைப்பட்டுள்ளார். வக்கீலாக இருக்கும் ஒவ்வொரு வாக்காளரும் தமது வக்கீல் தொழிலை விட்டுவிடவும், மத்தியஸ்தத்தின் மூலம் தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளும் முறையை வளர்க்கவும் கடமைப்பட்டுள்ளார். இங்கே பெரும்பான்மையோருடன் சேர்ந்து வாக்கு அளித்த சட்டசபை அபேட்சகர் ஒவ்வொருவரும் தமது அபேட்சையை வாபஸ் செய்துகொள்ளவும், சட்டசபை வாக்காளர் ஒவ்வொருவரும் தேர்தலில் தமது வாக்கை கொடுக்காமல் இருந்து விடவும் கடமைப்பட்டிருக்கிறார்கள். மேலும், இந்தக் கூட்டத்தில் பெரும்பான்மையோருடன் சேர்ந்து வாக்கு அளித்த ஒவ்வொரு பிரதிநிதியும் கையால் நூற்பதும், கை நெசவும் முன்னேற்றம் அடைவதற்கு உதவி புரியக் கடமைப்பட்டுள்ளார். அத்துடன் ஒவ்வொரு பிரதிநிதியும் சொந்தத்திலும் கையால் நூற்ற, கையால் நெசவு செய்த துணிகளையே உபயோகிக்க வேண்டும். ஒத்துழையாமை சம்பந்தமாக அகிம்சை, ஆன்மத் தியாகம், ஒழுங்கு ஆகிய கொள்கைகளை ஒவ்வொருவரும் ஒப்புக்கொண்டு வாக்கு கொடுத்திருப்பதால், சிறுபான்மையோரை மரியாதையுடனும் நேர்மையுடனும் நடத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு எதிராக நாம் உடல் பலாத்காரத்தையோ அல்லது பலாத்காரமான வார்த்தைகளையோ உபயோகிக்கக் கூடாது. நமது அபிப்பிரா

யங்களை ஆதரிக்கும்படி சிறுபான்மையோரின் மனத்தை மாற்ற அப்பழுக்கற்ற கௌரவமான முறைகளைக் கைக்கொள்ளப் பெரு முயற்சி செய்ய வேண்டும். சிறுபான்மையோருடன் சேர்ந்து வாக்கு அளித்தவர்கள் ஒன்று பலவீனர்களாக இருக்க வேண்டும் அல்லது ஒத்துழையாமைக்குத் தயாராக இல்லாதவர்களாக இருக்க வேண்டும். உதாரணமாக, கல்விச்சாலைகளிலிருந்து குழந்தைகளை வாபஸ் செய்து கொள்ளுவது நியாயமா என்ற சந்தேகம் சிலருக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆனால், குழந்தைகள் வெளியேறி கல்விச்சாலைகள் காலியாகி வருவதையும், அவற்றின் ஸ்தானத்தில் தேசீயக் கல்விச்சாலைகள் ஏற்படுவதையும், வக்கீல்கள் தொழில்களை விட்டுவிடுவதையும் அதே சமயம் அவர்கள் பட்டினி கிடக்கும்படி நேராமல் இருப்பதையும், சிறந்த தேசீயத் தலைவர்களின்றி சட்டசபைகள் காலியாகக் காட்சியளிப்பதையும் சிறுபான்மையோர் பார்க்கும்போது அவர்களுக்கு ஒத்துழையாமைத் திட்டத்தில் நம்பிக்கை ஏற்பட்டுவிடும்; அவர்களுடைய பலவீனம் மறைந்துவிடும்; அவர்கள் பிறகு அத்திட்டத்தைத் தாங்களே ஏற்றுக்கொள்ளத் தயாராகிவிடுவார்கள். எனவே, நம் கருத்துக்களை ஆதரிக்கவில்லை என்பதற்காக நாம் சிறுபான்மையோர் விஷயத்தில் பொறுமையை இழக்கவேண்டிய அவசியமில்லை.

“சிறுபான்மையோருக்கு நான் கூறுவது இதுதான்: நீங்கள் நேர்மையான ஒரு போராட்டத்தில் தோல்வியடைந்திருக்கிறீர்கள். எனவே, உங்களுடைய நிலை மனச்சாட்சியைப் பொறுத்த விஷயமாக இருந்தாலொழிய, ஒத்துழையாமைத் திட்டத்தை அதிதீவிரமாக நிறைவேற்றுவதற்கு நீங்கள் முன்வர வேண்டும். பெரும்பான்மையோர் செய்த தீர்மானம் பெரும் தவறு என்று கருதுவோருக்கு, தங்கள் அபிப்பிராயத்தை ஆதரிக்கும்படி பெரும்பான்மையோரின் மனத்தை மாற்றுவதற்காக ஓர் இயக்கத்தை நடத்த உரிமை உண்டு என்பதில் ஐயமில்லை. சிறுபான்மையோரைச் சேர்ந்தவர்களில் ஏராளமானவர்கள் மத்தியஸ்த கோர்ட்டுகள், தேசீயக் கல்விச்சாலைகள் ஆகியவற்றை அமைக்க வேண்டுமென்ற கொள்கையை அங்கீகரித்துள்ளனர். சட்டசபைகளைப் பகிஷ்கரிக்கும் யோசனையை ஒத்திவைக்க வேண்டுமென்றே அவர்கள் விரும்பினர். எனினும் துரிதமாகச் செல்ல வேண்டும் என்பதை ஆதரித்துப் பெரும்பான்மையோர் இப்போது தீர்மானித்துவிட்டதால், சிறுபான்மையோர் அந்தக் தீர்ப்பை அங்கீகரிப்பதுடன், ஒத்துழையாமைத் திட்டம் வெற்றி பெற உதவியளிக்க வேண்டும்.”

திட்டத்தை விவரித்துப் பேசியபோது காந்திஜி குறிப்பிட்டதாவது :

“ஒத்துழையாமையின் எல்லாக் கட்டங்களையும் நிறைவேற்ற நான் வக்கீல்களையோ அல்லது உயர்தரக் கல்வி கற்றவர்

களையோ மாத்திரம் நம்பிக் கொண்டிருக்கவில்லை. ஒத்துழை யாமையின் பிந்திய கட்டங்கள் சம்பந்தப்பட்ட வரை யில், பாமர மக்களையே நான் அதிகமாக நம்பிக்கொண்டிருக் கிறேன்.''

இந்தியா சுயராஜ்யம் பெறவும், கிலாபத் தவறுகளுக்குப் பரிகாரம் ஏற்படவும் ஒத்துழையாமைத் திட்டமே சரியான வழி என்று கருதி காங்கிரஸ் விசேஷக் கூட்டம் ஒத்துழையாமைத் தீர்மானத்தை நிறைவேற்றியது. அப்போது தேசீய இயக்கத் தில் முஸ்லிம் லீகும் கலந்து கொண்டது. சில ஆண்டுகளாக முஸ்லிம் லீகின் வருடாந்தரக் கூட்டம், காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நடக்கும் இடத்தில், அதே சமயத்தில் நிகழ்ந்து வந்தது. செப்டம்பர் 7-ஆம் தேதி கல்கத்தாவில் காங்கிரஸ் விசேஷக் கூட்டம் நடந்த இடத்தில் முஸ்லிம் லீகின் விசேஷக் கூட்டமும் நடந்தது. அப்போது லீக் தலைவரான ஜனுப் ஜின்னு கூறியதாவது : "ஒத்துழையாமைக் கொள்கையை அமலுக்குக் கொண்டு வருவதைத் தவிர மக்களுக்கு வேறு வழி எதுவும் இல்லை.''

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண் - பக்கத்தைக் குறிக்கும்)